# கார்கடல் - 1

**தோற்றுவாய்**



வேசரநாட்டில் கருநீல நீரோடும் கிருஷ்ணை நதிக்கரையில் புஷ்கரவனத்தில் நாகர்குலத்து மூதன்னையான நித்யை அந்தியில் குடில் முன்பு மண் அகலை ஏற்றிவைத்து, தன் குலத்து மகள் விஷஹாரியின் வயிற்றில் பிறந்த சிறுமகள் மானசாதேவியை மடியில் வைத்துக்கொண்டு கதைசொல்ல அமர்ந்தாள். இளமகள் நித்யையின் கைகளைப்பற்றி தன் வயிற்றின்மேல் வைத்துக்கொண்டு “உம்” என்றாள். நித்யை ‘ம்ம்ம்’ ‘ம்ம்ம்’ என முனகிக்கொண்டு முன்னும்பின்னும் ஆடிக்கொண்டிருந்தாள். அந்த முனகலோசை அலையடித்துச் சுழன்றது. அதனூடாக முதுமகள் வேறெங்கோ சென்றுகொண்டிருந்தாள்.

நித்யை அந்த முரலலோசையை தூண்டிலாக்கி சொற்களை ஆழத்திலிருந்து கோத்தெடுத்தாள். அதை சரடாக்கி அச்சொற்களை தொடுத்தாள். அவர்களுக்குப் பின்னால் மீன்நெய் விளக்கின் சுடர் அசைந்தது. நித்யை தன் குழலை சுருட்டி கொண்டையாக்கி அதன்மேல் ஏழு தாழம்பூக்களால் ஆன நாகபடத்தை சூடியிருந்தாள். நாகநிழல் முன்னால் முற்றத்தில் உருபெருகி விழுந்துகிடந்தது. மானசாதேவி அந்நிழலில் எழுந்த கரிய பெருநாகத்தை நோக்கிக்கொண்டிருந்தாள். அவள் சற்றே முன்னகர்ந்தபோது மாநாகத்தின் உடலில் இருந்து அவள் எழுவதாகத் தோன்றியது.

அவள் தன் இரு கைகளையும் தலைமேல் வைத்து சற்றே முகம்திருப்பினாள். மூன்று நாகபடங்களாக அவள் தலையின் நிழல் எழுந்தது. அவள் களிப்புடன் கால்களை ஆட்டிக்கொண்டு எழுந்தமைந்தாள்.

தன் இளமகளின் புன்மயிர்த்தலையை எலும்பெழுந்த முதிய கையால் வருடியபடி மூதன்னை சொன்னாள். “இந்தக் கதையை உன் அன்னை விஷஹாரிக்கு நூற்றெட்டு முறை சொன்னேன். முதல்முறையாக உனக்குச் சொல்கிறேன். கதைகள் நமக்கு வழித்துணையாகவேண்டும். நாம் வளர்கையில் கதைகள் வளரவேண்டும். நம் பாதைகள் நீள்கையில் கதைகளும் நீளவேண்டும். நம்மை உதிர்த்துவிட்டு கதைகள் மேலும் முன்செல்லவேண்டும். இப்புவி கதைகள் திகழும்பொருட்டு அன்னைநாகங்களால் படைக்கப்பட்டது. ஏனென்றால் தேனில் தேனீக்கள் என தெய்வங்கள் கதைகளில் பிறந்து கதைகளில் திளைத்து கதைகளில் பெருகுகிறார்கள். கதைகளுக்கு நாவும் செவியும் உள்ளமும் என ஆகும்பொருட்டே மானுடரை அவர்கள் ஈன்றனர். இந்தக் கதை உன் அன்னையென்றாகுக! உன் தோழியும் தலைவனும் ஆகுக! நீ சென்றடையும் இறுதியில் கைவிரித்து கண்பெருக்கி தெய்வமென்று எழுந்து உன்னை ஆட்கொள்க! ஆம், அவ்வாறே ஆகுக!”

நித்யை சொன்னாள். “மகளே கேள், இந்த கிருஷ்ணை நதி ஒரு நாகம். கன்னங்கரியது. ஓசையின்றி நெளிந்தோடுவது. வெயிலில் மின்னுவது, இருளில் தன்னொளிகொண்டு துலங்குவது. இது சீறிப் படமெடுக்கும்போது அதை அருவி என்கிறார்கள். வேட்கைகொண்டு பிறிதொரு நதியுடன் பிணையும்போது பிரயாகை என்கிறார்கள். தன் மைந்தர் பிரிந்து

கைவழிகளாக விடைகொண்டு அகல்கையில் மெலிகிறாள். சோர்ந்து நடைதளர்ந்து சென்றடைகிறாள்.” மானசாதேவி இருளுக்கு அப்பால் கேட்டுக்கொண்டிருந்த நதியின் ஒழுக்கோசையின் வழியாக நதிப்பெருக்கை அருகெனக் கண்டு “ம்” என்றாள்.

“அங்கே அத்தனை நதிகளும் சென்றடையும் பெருவெளி ஒன்றுள்ளது. அதை பல்லாயிரம் படங்களும் பல்லாயிரம்கோடி நாவுகளும் கொண்ட அரவரசன் என்று அறிக! கன்னங்கரியோன். அலைச்செதில் ஒளிர, விரிந்த முடிவிலாச் சுருள்மேனியன். அணையாப் பெருஞ்சீற்றம் கொண்டவன். ஆயிரம் தலைகளால் தரைவிளிம்பை ஓங்கி ஓங்கி அறைந்து கூவிக்கொண்டிருப்பவன். அவன் நாக்கு வெண்ணிற அனல். மண்ணிலுள்ள அரவாறுகள் அனைத்தும் அவன் துணைவியரே. ஏழு கருஞ்சுருள்களாக அவன் இப்புவியை சுற்றியிருக்கிறான். விண்ணில் கார்வடிவென எழுவது அவன் பெரும்படமென்று அறிக! அவன் கனிந்து பொழியும் அமுதை உண்டு இங்கு எழுகின்றன புல்லும் செடியும் மரங்களும். அவனால் பேணப்படுகின்றன உயிர்க்குலங்கள். அவனை வாழ்த்துக!”

நித்யை சொன்னாள். “இது கதைகள் தோன்றிய காலத்தில் நிகழ்ந்தது. அன்று மண்ணுக்குமேல் எந்நாவாலும் பேசப்படாத சொற்கள் ஓசையில்லாமல் நிறைந்திருந்தன. பொருட்களில் அமையாத சொற்கள் மாற்றமில்லாமல் காலத்தை கடந்துசென்றுகொண்டிருந்தன. அரவரசனின் ஓயாத பேரோசை வந்து மலைமுடிகளிலும் பள்ளத்தாக்குகளிலும் மரக்கூட்டங்களிலும் மோதிச்சிதறி ஒலித்துளிகளாக ஆகியது. அச்சொற்களின்மீது ஒலித்துளிகள் வந்து அறைந்தன. என்னை தூக்கிக்கொள் என்னை எடுத்துக்கொள் என அன்னையின்

ஆடைபற்றி அடம்பிடிக்கும் குழவிகள் போலிருந்தன அந்த ஒலிகள். பூச்சிகளோ பறவைகளோ விலங்குகளோ நாகங்களோ அன்று உருவாகியிருக்கவில்லை. இனியவளே, அன்னைநாகத் தெய்வங்கள் எதையும் அப்போது முடிவெடுத்திருக்கவில்லை.”

அரவரசனில் சுருண்டெழுந்த ஒவ்வொரு அலைபடமும் அவன் கொண்ட திரளா விழைவே. கரையணைந்து சுழன்றறைந்து ஓலமிட்டு உருவழிந்து மீண்டு பிறிதொன்றென உருக்கொண்டு மீண்டும் எழுந்து வந்தது அது. கணம் ஆயிரமென திரண்டு சொடுக்கி உயர்ந்த அந்த படங்களில் ஒன்று வானை வருடும்படி எழுந்து ஒளியுடன் வளைந்து கரைநோக்கி வந்தது. அது பிரம்மகணம். பிரம்மன் தான் படைத்த புவியை நினைவுகொள்ளும் தருணம். படைத்தோன் மகிழ்ந்து “மைந்தா, என்ன வேண்டும் உனக்கு?” என்று கேட்டான். “எந்தையே, என் விழைவு உருக்கொள்க! தன்னை நிகழ்த்தி நிறைவடைக!” என்றான் அரவரசன். “ஆம், அவ்வாறே ஆகுக!” என்று பிறப்புமுதலோன் சொன்னான்.

பறப்பதற்கான நீரின் விழைவே அலை. அவ்விழைவு மூன்று பறவைகளாக மாறியது. தெறித்து முன்னெழுந்த வெண்நுரை சிறகுவிரித்து செம்பருந்தாகியது. தொடர்ந்தெழுந்த கருமை காகமென்றாகியது. வளைவின் ஒளிர்ந்த நெளிவு கரிய நாகமென்றாகியது. மூன்று உயிர்களும் வானில் பறந்தன. ஒவ்வொன்றும் இன்மையைத் தொடும் வெளியே வானம். எடையின்மை, திசையின்மை, முடிவின்மை, நிலையின்மை, பொருளின்மை. வானில் அவை மூன்றும் பறந்து பறந்து திளைத்தன. நான் நான் என்று ஒருகணமும் அது அது என மறுகணமும் இங்கே இங்கே என ஒருகணமும் இல்லை இல்லை என மறுகணமும் திகழ காலமறியாது அங்கிருந்தன.

செம்பருந்து விண்ணிலேயே வட்டமிட்டுக்கொண்டிருந்தது. அது தன்னை விண்ணாளும் கதிரவனின் மைந்தன் என்றும், செந்தழலை சிறகாகக் கொண்டவன் என்றும் எண்ணிக்கொண்டது. கதிரொளியால் அது செந்நிறம் பெற்றது. ஒளிரும் முகில்களுடனும், மலையுச்சியின் வெண்பனியுடனும், மரங்களின் தளிர்களுடனும் தன்னை உறவென கருதிக்கொண்டது. காகம் மரங்களின் இலைகளுடன் கலந்தது. காட்டின் இருளுக்குள் ஊடுருவியது. மண்ணில் இறங்கி நடந்தது. பாறைகளையும் அடிமரங்களையும் கரிய மண்ணையும் தன் உறவென்று எண்ணிக்கொண்டது. நாகம் மண்ணுக்குள்ளும் சென்றது. வேர்களையும் அறிந்தது. நீரலைகளுடன் இணைந்து நெளிந்தது. ஆழத்து இருளுக்குள் நிறைந்திருந்த ஓசையின்மையை உணர்ந்தது.

செம்பருந்திலிருந்தும் காகங்களிலிருந்தும் நாகங்களிலிருந்தும் உயிர்க்குலங்கள் பெருகின. அவற்றின் ஒவ்வொரு கனவிலிருந்தும் ஒவ்வொரு உயிர் உடல்கொண்டு எழுந்தது. செம்பருந்தின் சினம்கொண்ட கனவிலிருந்து தழல்பிடரியுடன் சிம்மமும், தழல்வரிகளாடும் உடல்கொண்ட புலியும் பிறந்தன. அவற்றின் பசிகொண்ட கனவிலிருந்து தழலெனத் தாவும் மான்களும் ஆடுகளும் பிறந்தன. மேலும் மேலுமென விரைவை விழைந்த மான்களின் கனவிலிருந்து எழுந்தன புரவிகள்.

இமையாவிழி கொண்டவளே, காகத்தின் பெருவிழைவே யானை. யானையின் பொருந்தா விழைவே கட்டெறும்பு. யானையென்றான காகம் மரங்களை கடைபுழக்கி தூக்கி வீசி பிளிறியது. கட்டெறும்பான வேழம் மணலுடன் மணலாகி விழியிலிருந்து மறைந்தது. அனைத்து சிறுவழிகளினூடும்

தடையிலாது ஊர்ந்தது. பன்றிகளும் எருமைகளும் குரங்குகளும் காகத்தின் உருவிரிவே என்று அறிக! பேருருக்கொண்ட காகமே யானை என்பதை தொலைவில் கேட்கும் யானைப்பிளிறல் காகத்தின் குரலென ஒலிப்பதைக் கொண்டு உணர்க!

நீரிலாடிய நாகங்களின் விழிகளும் நெளிவால்களும் உடல்வளைவுகளுமே மீன்களாயின. பெருகிப்பரந்த மீன்திரள் நீர்ப்பரப்பின் விளிம்புவரை வந்து இமையாவிழிகளால் கரையை நோக்கியது. எழுந்து நிலத்தில் நடக்க விழைந்து அவை நண்டுகளாயின. மரமேறுவதாக எண்ணி பல்லிகளாயின. மண்ணுக்குள் ஆழ்ந்திறங்கி புழுக்கூட்டங்களாயின. தன் நாவால் கூடுகட்டி அதற்குள் சுருண்டு சிறகுகளை தவம்செய்து பூச்சிகளாயின. இசைமீட்டி காற்றை நிறைத்தன. ஒளியை சிறகுகளால் அள்ளிக்கொண்டன. கதிரொளித் துளி சூடி இரவுகளில் மின்மினிகளாயின. பறக்க விழைந்து நீர்ப்பரப்பில் துள்ளித்துள்ளி எழுந்த மீன்களின் விழைவு சிறகு கொண்டு பறவைகளாயிற்று. சிட்டுக்களாகி தேன் தேர்ந்தன. குருவிகளாகி நெல்மணி உண்டன. அவற்றுள் உறைந்த நாகத்தின் விழைவால் நெளிகழுத்து பெற்று நாரைகளாயின.

அனைத்துமான பின்னர் தன்னுள் நிறைந்து தன்னுடலை உள்ளிழுத்துக்கொண்டு ஆமைகளாயின. நீரின் அடியில் ஆயிரமாண்டுகள் அமைந்த கற்களின் சொல்லடங்கிய அமைதியை அடைந்தன. அசைவற்றவற்றின்மேல் படர்ந்தேறும் பாசிபடிந்த வண்ணத்தை கொண்டன. ஆமை வளைக்குள் நூறுமுறை சுருள்கொண்ட நாகம். அதன் பொறுமைக்குமேல் அமைந்துள்ளன ஏழுலகங்களும்.

இப்புவி உயிர்க்குலங்களால் இடைவெளியின்றி நிறைந்தது. காற்றில் செறிந்திருந்த சொற்பொருட்கள் அவற்றின் நாவிலெழுந்த ஒலித்துளி ஒன்றை கண்டடைந்து அவற்றில் தாவி ஏறிக்கொண்டன. செம்பருந்து சிறகுகளை ஒடுக்கி தலைதூக்கி தன் கூரலகைத் திறந்து "ஏக!" என்று கூவியது. காகம் "கா?" என வினவுச்சொல்லை அடைந்தது. நாகங்கள் "ஸ்ரீ!" என்ற மங்கலச் சொல்லை முதல் ஒலியெனக் கொண்டன. சொல்பெருகி மொழிகளாயிற்று. மொழிகள் நதிகள்போல் ஒன்றுடன் ஒன்று இணைந்தும் வளர்ந்தபின் பலவாகப் பிரிந்தும் பெருகின. மரக்கூட்டங்களின் மேல் பறவைகள்போல சொற்பொருட்கள் மொழிகளின் மேல் எழுந்தும் அமர்ந்தும் களியாடின.

அந்த ஆடல் சலித்தபோது பொருட்கள் சொற்களுடன் ஒளிந்தாடத் தொடங்கின. ஒவ்வொரு சொல்லும் பொருட்திரிபு கொண்டது. ஒன்று என ஒரு மொழியில் ஒலித்த சொல் பல என்று பிறிதொன்றில் எழுந்தது. இன்று என்று ஒருவர் கூறியதை அன்று என்று இன்னொருவர் புரிந்துகொண்டார். செம்பருந்தின் குலங்களும் காகங்களின் குலங்களும் நாகங்களின் குலங்களும் தீராப் பெரும்போர் ஒன்றில் இறங்கின. நாகங்கள் நஞ்சுகொண்டன. காகங்கள் பெரும்பசி கொண்டன. செம்பருந்துகள் கூர்விழியும் உகிரும் கொண்டன. இக்கணம் வரை ஓயாது நிகழ்கிறது அப்பெரும்போர்.

குழவியின் உடல் தொய்ந்து நித்யையின் கைகளில் மெல்லிய ஆடைபோல தழைந்துகிடந்தது. மூதன்னை குனிந்து புன்னகையுடன் மானசாதேவியின் அழகிய சிறுமுகத்தை நோக்கிக்கொண்டிருந்தாள்.

பாரதவர்ஷத்திற்கு வடக்கே உசிநாரர்களின் சிறுநகரமான சிருங்கபுரிக்கு அருகேயிருந்த கிருஷ்ணசிலை என்னும் மலைச்சிற்றூரில் அரக்கர்குலத்து ஊஷரகுடியின் மூதன்னையாகிய யமி தன் மைந்தன் தூமனுக்குப் பிறந்த மைந்தனாகிய பகனின் தலைமயிரை வருடியபடி முதுமையால் பழுத்த விழிகளால் இருளை நோக்கிக்கொண்டிருந்தாள். “மூதன்னையே, நீ பார்ப்பது எதை?” என்று பகன் கேட்டான். “ஒரு யானையை. பேருடல்கொண்டது. விழிநிறைக்கும் கருமையென்றானது. இடியோசை எனப் பிளிறுவது. விண்மீன்கள் என சிறுவிழிகள் மின்னுவது” என யமி சொன்னாள்.

“அந்த யானையின் கதையை சொல்” என நரம்புகள் புடைத்த அவள் கைகளை பற்றிக்கொண்டு மைந்தன் கேட்டான். “ஆற்றல்மிக்க மூதாதையின் பெயர்கொண்டவனே, என்றுமழியா பெருங்குலத்தின் முளைகதிரே, என் குருதியின் விதையே, ஊஷரர்களின் அரசே, இனியவனே!” என யமி முதிய குரலில் பாடினாள். உடலை மெல்ல அசைத்தபடி “இருள் இனியது. பேரழகு கொண்டது. தன்னுள் அனைத்தையும் ஏந்தும் விரிவுகொண்டது. இருளால் உருவாக்கப்பட்டவர்கள் நாம். இருளே ஒளியின் பீடம். அழகனே, இருள் என்றுமிருக்கும்” என்றாள். அந்தப் பாடல் அவனுக்கும் முன்னரே தெரிந்திருந்தமையால் அவனும் உடன் சேர்ந்து பாடினான். “இருளுருவானவர்களே, வாழ்க! பறக்கும் இருளான காகங்களே, பிளிறும் இருளான யானைகளே, உலகுநிறைக்கும் இருளான கட்டெறும்புகளே, நீங்கள் வாழ்க!”

யமி சொன்னாள். கேள், மைந்தா. உலகைப் படைத்த பிரம்மனின் மைந்தனான மரீசிக்கு மைந்தனாக காசியபர் என்னும் சூதர் பிறந்தார். அவரே மானுடருக்கும் விலங்குகளுக்கும் பிரஜாபதி என்று அறிக! காசியபர் அதிதி, திதி, தனு, காளிகை, தாம்ரை, குரோதவஸை, மனு, அனலை ஆகிய மனைவியரை அடைந்தார். அவர்களில் திதியில் பிறந்த தைத்யர்களே அசுரர்கள். தனுவில் பிறந்த தானவர்களே அரக்கர்கள். நம் குடிகள் மண்ணின் உப்பென எழுந்தவர்கள். காசியபருக்கு குரோதவஸையில் பிறந்தனர் மிருகி, மிருகமந்தை, ஹரி, ஃபத்ரமதை, மாதங்கி, சார்த்தூலி, ஸ்வேதை, சுரபி, சுரஸை, கத்ரு என்னும் பத்து மூதன்னையர்.

மாதங்கி கரிய பேருடல் கொண்டிருந்தாள். எடைமிக்க காலடிகளுடன் அவள் காடுகளில் நடந்து தன் தந்தை பூசனையும் வேள்வியும் இயற்றுவதற்குரிய மலர்களையும் கனிகளையும் தேனையும் விறகையும் சேர்த்துக்கொண்டுவந்தாள். ஒருநாள் அவள் தன் இரு கைகளிலும் நெய்க்கலமும் தேன்கலமுமாக தந்தையை அணுகினாள். அவற்றை நிலத்தில் வைக்காமல் வேள்விக்களத்திற்கு கொண்டுசெல்ல வேண்டுமென்பது நெறி. மறைச்சொல்லில் ஒன்றி வேள்வி செய்துகொண்டிருந்த தந்தை திரும்பி நோக்காமல் “நெய்க்கரண்டியை எடு” என்று கைநீட்டினார். அக்கணத்தில் எழுந்த அகவிசையால் மாதங்கியின் மூக்கு நீண்டு ஒரு கையாகியது. அவள் கரண்டியை எடுத்து தந்தையிடம் அளித்தாள்.

நெய்யூற்றி சொல்லோதியபடி திரும்பி நோக்கிய காசியபர் இரு கைகளாலும் நெய்யும் தேனும் ஏந்திநின்ற மாதங்கியை நோக்கி “நீ அவற்றை நிலத்தில் வைத்தாயா? மண்ணில் வைக்கப்பட்ட

வேள்விப்பொருட்கள் புவிமகளுக்கு முன்னரே அளிக்கப்பட்டவை, ஒரு துளி ததும்பினாலும் உண்ணப்பட்ட மிச்சில் போன்றவை" என்று சினந்தார். மாதங்கி அவற்றை அவரிடம் அளித்துவிட்டு கைகளைக் கூப்பியபடி "நான் அவற்றை தரையில் வைக்கவில்லை, தந்தையே" என்றாள். "ஒருதுளியும் சிந்தாமல் எப்படி கரண்டியை எடுத்தாய்?" என்றார் காசியபர். மாதங்கி அதை எப்படி எடுத்தேன் என மீண்டும் செய்துகாட்டினாள்.

உளம்மகிழ்ந்த தந்தை "இப்புவியிலேயே ஆற்றல்மிக்க உயிர்களின் அன்னையென ஆகுக! உன் குருதிவழியிலெழும் உயிர் அனைத்து மங்கலங்களும் கொண்டதாக ஆகும். எங்கும் எந்நிலையிலும் விலக்கு கொள்ளாதது. தெய்வங்களும் அரசர்களும் வீரர்களும் ஊர்வது. ஒவ்வொரு உயிரிலிருந்தும் ஆற்றல்மிக்கவையும் அழகியவையும் இணைந்து அவ்வுயிர் தோன்றுக!" என வாழ்த்தினார். மாதங்கியிலிருந்து யானை பிறந்தது. நாகம் அதன் துதிக்கை. பருந்தின் சிறகு அதன் செவி. பொன்வண்டு அதன் விழி. நூறு சிம்மங்களின் ஓசை அதன் பிளிறல். விலங்குகளில் தெய்வ உருக்கொண்டது யானை.

நீண்ட துதிக்கையும் துருத்தியென ஒலிக்கும் மூச்சும் கொண்டது உயர்ந்த வேழம். பொறுமையே அதன் இயல்பு. அரக்கர்குலத்து தெய்வங்களின் நகைப்புபோல நிரையாக அமைந்த பதினெட்டு அல்லது இருபது நகங்கள் கொண்டதும், குளிர்காலத்தில் மலையூற்றென மதம்பெருகுவதும், வலதுகொம்பு சற்றே நீண்டு உயர்ந்திருப்பதும், வெயிற்காலத்து இடியோசை என முழக்கமிடுவதும், அகன்று கிழிந்து ஆடும் செவிகள் கொண்டதும், வேங்கைமலர் நிரப்புபோல் முகத்திலும்

துதிக்கையிலும் செம்புள்ளிகள் கொண்டதுமான கரி தெய்வத்தின் விழிதொடு வடிவம்.

“யானையை வணங்குக, மைந்தா! யானைவடிவமென நம்மைச் சூழ்ந்துள்ள மூதாதையரின் வாழ்த்துக்களை ஏற்றுக்கொள்க!” என்று யமி சொன்னாள். பகன் எழுந்து தன்முன் நிறைந்திருந்த இருளை மும்முறை உடல்வளைத்து நிலம் நெற்றிதொட வணங்கினான்.

கௌதமவனம் என்று அழைக்கப்பட்ட காட்டில் அந்திவேள்விக்குப் பின் அனலவிந்த எரிகுளத்தைச் சூழ்ந்து அமர்ந்திருந்த ஏழு இளமாணவர்களின் நடுவே அமர்ந்து கௌதம ஏகபர்ணர் கதை சொன்னார். வேள்விச்சாலையில் மூன்றுசுடர் கொண்ட ஒற்றை விளக்கு மட்டுமே எரிந்தது. வெளியே நாணல்களின் வழியாக காற்று ஓசையிட்டபடி சென்றுகொண்டிருந்தது. மிக அப்பால் முதற் கூகை சிறகடித்து சங்கொலிபோல் குரலெழுப்பியது. மாணவர்கள் கௌதமரின் சொற்களை விழிகளால் கேட்பவர்கள் போலிருந்தனர்.

“தளராத செவிகொண்டவர்களே, பிரம்மனின் மைந்தர் காசியபருக்கு தட்சனின் மகள்களான அதிதி, திதி, தனு, காளிகை, தாம்ரை, குரோதவஸை, மனு, அனலை என்னும் எட்டு அன்னையர் துணைவியராயினர். அவர்களில் சுகி கருவுற்று நதையை ஈன்றாள். நதையின் மகளெனப் பிறந்தவள் வினதை. வினதையின் மைந்தன் எனப் பிறந்தவன் கருடன். செம்பருந்துகளில் குலமுதல்வன். தழலே சிறகாகக் கொண்டவன். ஒளியென விரைவுள்ளவன். சொல்லாளும் அந்தணருக்கும் புவியாளும் ஷத்ரியர்களுக்கும்

காவல்தெய்வமென விண்திகழ்பவன். அவனை வாழ்த்துக!” என்றார் கௌதமர். மாணவர்கள் கைகூப்பி “ஆம்! ஆம்! ஆம்!” என வாழ்த்தினர்.

கௌதமர் சொன்னார். அழிவற்றவராகிய காசியபர் தன்னை மீண்டும் மீண்டும் பிறப்பித்துக்கொண்டு தன் குருதியிலேயே தன்னைப் பெருக்கி உலகை நிறைத்தார். அவர் அன்னை நாகங்களான கத்ருவையும் வினதையையும் மணந்தார். இருவரும் கணவரை மகிழ்வித்தனர். “உங்களுக்கு நான் அளிக்கவேண்டியதென்ன என்று சொல்லுங்கள்!” என்றார் “ஆயிரம் மைந்தர், உலகை நிறைப்பவர், அழிவற்றவர்” என்று கத்ரு கேட்டாள். “உலகை நிறைத்து அழியாதிருப்பது சினமும் வஞ்சமும் விழைவுமே. அவையே உன் மைந்தர் ஆயிரவர் ஆகுக” என்றார் காசியபர்.

இளையவளாகிய வினதையிடம் “உன் கோரிக்கை என்ன?” என்றார். வினதை வணங்கி “எனக்கும் மைந்தரே வேண்டும். வெல்லற்கரியவர், எழுமிடம் துலங்குவோர்” என்றாள். “வெல்லற்கரியது அனல். எழுமிடம் துலங்குவதும் அதுவே” என்றார் காசியபர். ஆனால் “அனல் இரண்டே. விண்தழலும் மண்தழலும். அவை உனக்கு மைந்தர் என்றாகுக!” வினதை மகிழ்ந்து வணங்கினாள். “ஆனால் கருதுக, அனல் எழும் கணத்தை அனலே முடிவுசெய்கிறது! மண்பொருள் விண்பொருள் அனைத்திலும் உறையும் அனலை எழுப்ப வல்லது தவம் மட்டுமே” என்றார் காசியபர்.

அவ்வண்ணம் இரு அன்னையரும் கருவுற்றனர். கத்ரு ஆயிரம் முட்டைகளை ஈன்றாள். இருளெழுந்ததுபோல் ஆயிரம் கருநாகங்கள் அவற்றிலிருந்து வெளிவந்து மண்ணை நிறைத்தன. ஒன்று பிறிதொன்றுடன் புணர்ந்து பெருகி

அழிவின்மை கொண்டன. அனைத்துக்கும் அடியில் நிறைந்தன. அனைத்துக்குள்ளும் நிறைந்து ஆட்டுவித்தன. அனைத்துக்கும் நிழலென்றாகி உடனுறைந்தன. அனைத்து கூர்களிலும் நஞ்சென்று எழுந்து அச்சுறுத்தின.

வினதை இரு முட்டைகளை இட்டாள். வெண்நிறமான ஒன்று. செந்நிறமான பிறிதொன்று. ஆயிரமாண்டுகாலம் இரு முட்டைகளையும் அவள் அடைகாத்தாள். அதற்குள் கத்ருவின் மைந்தர் ஆயிரம் மடங்கெனப் பெருகி உலகாள்வதைக் கண்டாள். பொறுமையிழந்து வெண்முட்டையை கொத்தி உடைத்தாள். உள்ளிருந்து சிறகுகள் முழுமையடையாத பறவைக்குழவி ஒன்று வெளிவந்தது. தீட்டிய வாள்போல் சுடரும் அலகும் வைரமணிக் கண்களும் கொண்டிருந்தது. துயருடன் அன்னையை நோக்கி “அன்னையரின் முதன்மை இயல்பு பொறுமையே. நீ பொறுமை இழந்தாய். வளராச் சிறகுகள் கொண்டவனாக என்னை ஈன்றாய். எனவே நீ ஆயிரமாண்டுகாலம் அடிமையென்றாகி துயர்கொள்வாய். அங்கே பொறுமையை கற்றுக்கொள்வாய்” என்றது. விண்நெருப்பாகிய அப்பறவை எழுந்து பறந்து சென்று கதிரவனை அடைந்து அவன் தேர்ப்பாகனாகியது. ஒளிர்பவனாகிய அவனை அருணன் என நாம் வணங்குகிறோம். அவன் வாழ்க!

துயர்கொண்ட வினதை மேலும் ஆயிரமாண்டுகள் அடைகாத்தாள். காய் கனிவதுபோல் முட்டை உயிர்நிறைந்து ஓடு விரிசலிட்டது. விறகிலிருந்து செந்தழல் எழுவதுபோல் அதிலிருந்து செந்நிறமான பெருஞ்சிறகுகள் கொண்ட கருடன் வெளிவந்தான். வேதியரின் எரிகுளத்தில் எழும் அனலோனுக்கு நிகரான தூய்மையும் ஆற்றலும் கொண்டவன். மண்ணிலிருந்து

வேதச்சொற்களை அவியுடன் விண்ணுக்குக் கொண்டுசெல்லும் அருள்கொண்டவன். அழிவற்றவனாகிய செம்பருந்தை வணங்குக! அவன் சொல் இங்கே திகழ்க!

கௌதமர் சொல்லி நிறைந்து கைகூப்பியதும் சூழ்ந்திருந்த மாணவர்கள் கைகூப்பி "ஆம்! ஆம்! ஆம்!" என வணங்கினர்.

# கார்கடல் - 2

புஷ்கரவனத்தில் நாகர்குலத்து மூதன்னையான நித்யை சொன்னாள். "அழகிய விழிகள் கொண்டவளே, புவியைப் படைத்த பிரம்மன் விண்ணின் உயரத்திலிருந்து அதை நோக்கியபோது அது புல்நுனிப் பனித்துளி என நடுங்கிக்கொண்டிருப்பதை பார்த்தார். அது ஏன் என்று அறிந்துவர தன் மைந்தர்களான மரீசி, புலகர், புலஸ்தியர், அங்கிரஸ், அத்ரி ஆகிய ஐவரையும் மண்ணுக்கு அனுப்பினார். அவர்கள் மண்ணுலகில் அலைந்து திரிந்த பின்னர் திரும்பிவந்து வணங்கினர். ஒவ்வொருவரும் தாங்கள் கண்டதை சொன்னார்கள்."

மரீசி சொன்னார். "தந்தையே, மண்ணுலகில் கடல்கள் பெருங்காற்றுகளால் கொந்தளித்துக்கொண்டே இருக்கின்றன. புயல்கள் காடுகளை அலையடிக்கச் செய்கின்றன. உச்சிமலைப் பாறைகள்கூட மழையால் அறைபட்டும் காற்றால் அரிக்கப்பட்டும் உருகிக்கொண்டிருக்கின்றன. பெரும்பசி கொண்டு அனைத்தையும் உண்கிறது தழல். நிலம் பிளந்தெழுகிறது அனல். இடி விழுந்து எரிகின்றன காடுகள். மழை பொழிந்து மீண்டும் அவை முளைத்தெழுகின்றன.

ஐம்பெரும் பருக்களும் அங்கே அமைதியிழந்துள்ளன. அவை ஒன்றையொன்று அறைந்தும் தழுவியும் போரிட்டுக்கொண்டே இருக்கின்றன. அங்கே அமைதி என்பதே இல்லை.”

பிரம்மனை வணங்கி புலகர் சொன்னார். “அரசே, அங்கு வாழும் உயிர்களனைத்தையும் ஆட்டுவிக்கின்றது பெரும்பசி. தீப்பற்றிக்கொண்டவைபோல பசியால் அலறியபடி விலங்குகளும் பறவைகளும் பூச்சிகளும் புழுக்களும் அலைமோதுகின்றன. ஒன்றை ஒன்று கொன்று உண்கின்றன. ஒன்றை ஒன்று துரத்துகின்றன. ஒன்றிலிருந்து ஒன்று தப்பி ஓடுகின்றன. ஒன்றிடம் ஒன்று அடைக்கலம் புகுகின்றன. ஒன்றை ஒன்று காக்கின்றன. அங்கு நிகழ்ந்துகொண்டிருப்பது ஒருகணமும் ஒழியாத பெரும்போர்.”

புலஸ்தியர் சொன்னார். “தந்தையே, நான் அங்கே கண்டது எந்த உயிராலும் இன்னொன்றை புரிந்துகொள்ள இயலவில்லை என்பதையே. ஏனென்றால் ஒவ்வொரு உயிருக்கும் ஒவ்வொரு ஒலியே மொழியென்றுள்ளது. ஓர் உயிருக்குள்ளேயே மொழிகள் பல. மொழிகளுக்குள்ளேயே சொற்பொருட்கள் பல. சொற்பொருட்களை ஒவ்வொருவரும் அவரவர் பட்டறிவும் உய்த்தறிவும் கொண்டு உருவாக்கிக்கொள்கிறார்கள். ஆகவே எவரும் எவரையும் அங்கே புரிந்துகொள்வது இயல்வதுமல்ல. அதன் விளைவாக ஒவ்வொருவரும் பிற அனைவரையும் அஞ்சுகிறார்கள், ஐயம்கொள்கிறார்கள், அருவருக்கிறார்கள். அந்த அமைதியின்மையே எங்கும் கொந்தளிக்கிறது.”

அங்கிரஸ் சொன்னார். “மண்ணில் ஒவ்வொரு உயிரும் தன் மகிழ்ச்சியும் நிறைவும் வேறெங்கோ இருப்பதாக எண்ணுகிறது. ஆகவே எங்கிருந்தாலும் அது எங்கோ சென்றுகொண்டிருக்கிறது. எதையோ நாடிக்கொண்டிருக்கிறது.

மானுடர் இடம்பெயர்கிறார்கள். விலங்குகளும் பறவைகளும் தடம்மாறுகின்றன. சின்னஞ்சிறு புழு ஒன்று உடலையே விரலென்றாக்கி உந்தி உந்தி நெளிவதை கண்டேன். நீ விழைவதென்ன என்றேன். நான் அங்கே செல்ல விழைகிறேன். எப்பாடுபட்டேனும் அங்கே சென்றால் மீண்டுவிடுவேன் என்றது. நான் அதை சுட்டுவிரலால் தூக்கி அது எண்ணிய இடத்தில் கொண்டுசென்று விட்டேன். ஒருகணம் அங்கே திளைத்துவிட்டு இங்கல்ல அங்கே என சுட்டி மீண்டும் நெளியத்தொடங்கியது. ஒவ்வொரு உயிரும் கொண்டிருக்கும் இந்த நிறைவின்மையிலிருந்தே அனைத்து அலைகளும் எழுகின்றன.”

அத்ரி இறுதியாகச் சொன்னார். “நான் ஒவ்வொரு உயிரின் விழிகளையும் அணுகி நோக்கினேன். தந்தையே, ஒவ்வொரு உயிரும் தான் எவ்வண்ணம் இருக்கிறோமோ அதுவல்ல தான் என்று எண்ணுகின்றது. அவை தங்களுக்குள் தங்களை வேவுபார்க்கின்றன. தங்களால் தங்களை உந்தி நகர்த்தவும் தூக்கி மேலெடுக்கவும் முயன்றுகொண்டே இருக்கின்றன. தங்களைத் தாங்களே நோக்கி ஏமாற்றம் அடைகின்றன. தங்களை தாங்களே நோக்கிச் சினம்கொள்கின்றன. தங்களை எண்ணி துயர்கொள்கின்றன. ஒருகணம்கூட தங்களுக்குள் அமைந்து அவை நிறைவுகொள்வதில்லை. அந்நிறைவின்மையே இப்புவியை அலைக்கழியச் செய்கிறது.”

பிரம்மன் ஐந்து மைந்தர்களையும் நோக்கி “நீங்கள் ஐவரும் சொன்னது ஒன்றே. ஆனால் முதல் விதையிலிருந்தே பெருங்காடு எழுகிறது” என்றார். தன் மைந்தனாகிய யமனை அழைத்து “செல்க, தன்னில் தான் நிறைந்து அகம் அசையாது அமைந்துள்ள ஓர் உயிரை கண்டுவருக!” என்று அனுப்பினார். புவியெங்கும் ஏழாயிரம் முறை சுற்றிவந்த யமன் இறுதியில்

கிருஷ்ணை ஆற்றின் நீராழத்தில் பாசிபடிந்த பாறைகளுக்கு நடுவே பிறிதொரு குளிர்ந்த பாறையென அமைந்திருந்த ஆமை ஒன்றை கண்டான். அது தன்னைத்தான் சுற்றி இறுக்கிக்கொண்ட நாகம். தன் உடலனைத்தையும் உள்ளிழுத்துக்கொண்டு பல்லாயிரமாண்டுகளாக தவமிருந்தது. “நீ நிலைபேறு கொண்டது எங்ஙனம்?” என்று யமன் கேட்டான். “இந்த ஓட்டுக்குள் என் உடல் இடையின்றி நிறைந்து செறிவுகொண்டுள்ளது” என்றது ஆமை. “உள்ளே சிற்றசைவுக்கும் இடமில்லை.”

அந்த ஆமையின் பெயர் அகூபாரன். அகூபாரன் முன் ஒரு தாமரை மலராகத் தோன்றிய படைத்தோன் சொன்னான் “மைந்தா, சுழலும் கதவு நிலைபெற்றமைவது அசையாக் குடுமிக்குமிழியிலேயே. இப்புவியில் ஒருவன் நிலைபேறுகொண்டான் எனில் அவனில் ஊன்றி சீராக நிகழும் இச்சுழற்சி. நீ இப்புவியை தாங்குக!” அகூபாரன் பேருருக்கொண்டு வானிலெழுந்து சென்று புவியை தன் ஓட்டின்மேல் ஏந்திக்கொண்டது. யுகயுகங்களாக அதன் நிறைநிலைமேல் அமைந்துள்ளது புவிச்சுழற்சி.

நித்யை தன் சிறுமகள் மானசாதேவியிடம் சொன்னாள். “நாகர்களின் முதன்மைத்தெய்வமாகிய அகூபாரனை வணங்குக! சொற்களில் பொருள் நிலைப்பதும், பொருட்களில் சுவை நிலைப்பதும், நன்றுதீதுகள் உருமாறாதமைவதும், நிகழ்வனவும் எண்ணுவனவும் எல்லைகொள்வதும் அவனாலேயே. நிலைபேறுகள் அனைத்தும் அவனே. ஆகவே நிலையின்மைகள் அனைத்தும் அவனால்தான் அளவிடப்படுகின்றன. அவன் நம்மையும் நம் குடியையும் காத்தருள்க!”

கிருஷ்ணசிலை என்னும் சிற்றூரில் ஊஷரகுடியின் மூதன்னையாகிய யமி தன் சிறுமைந்தன் பகனிடம் சொன்னாள். "அழகிய தோள்கள் கொண்டவனே, என் நெஞ்சுக்கு இனியவனே, கேள்! இப்புவி அகூபாரன் என்னும் ஆமையின் வளைந்த முதுகின்மேல் அமைந்திருந்தது. ஆமை அசைவற்றதென்றாலும் அதன் முதுகின் வளைவின்மேல் புவிக்கோளம் பதிந்தமைய முடியவில்லை. அசைந்தாடும் புவியால் முதுகு சோர்ந்த ஆமை அவ்வப்போது தன் கால்களை எடுத்துவைத்து அலுப்பை தீர்த்துக்கொண்டது. அந்த அசைவில் புவி திடுக்கிட்டு அசைந்தது. அந்த அசைவு புவியின் ஒவ்வொன்றிலும் வெளிப்பட்டது. மலைஉச்சியின் பெரும்பாறைகள் இடம் மாறின. நதிகள் தடம் விலகி ஒழுகின. குளங்கள் ஆடும் கலத்து நீர் என கொந்தளித்தன. ஒவ்வொரு உயிரும் தன்னுள் நீர்மை நலுங்குவதை உணர்ந்தது. ஒவ்வொரு எண்ணமும் தத்தளித்தது. ஒவ்வொரு விழியும் அலைபாய்ந்தது."

அப்போது சகூடம் என்னும் காட்டில் சதபாகம் என்னும் பேராலமரத்தின் கிளை ஒன்றில் காளகி என்னும் காகம் கூடுகட்டி ஆறு முட்டைகளை இட்டு அதன்மேல் அமர்ந்து அடைகாத்தது. தன் உடல்சூட்டில் ஒடுங்கிய முட்டைக்குள் கருநீர் நடுங்கி அதிர்ந்ததை காளகி உணர்ந்தாள். முதலில் அவள் முட்டைகளை மென்பஞ்சு படுக்கையமைத்து சீரமைத்தாள். பின்னர் தன் கூடு அசைகிறதோ என எண்ணி அதை கிளைமுடுக்கில் நன்கமைத்தாள். அக்கிளை அசைகிறதா என நோக்கினாள். அந்த மரமே அசைகிறது என்று கண்டு சீற்றத்துடன் "அசைவிலாத வேர்கொண்ட பெருமரம் என

உன்னை நம்பிவந்தேன். என்னை ஏமாற்றிவிட்டாய். உன்மேல் தீச்சொல்லிடுவேன்” என்றாள்.

சதபாகம் துயருடன் “நான் என்ன செய்வேன்? மரங்களின் நிலைக்கோள் மலையிலிருந்து பெறப்படுவது. நோக்குக! இந்த மலையே நடுங்கிக்கொண்டிருக்கிறது” என்றது. காளகி அருகிருந்த மரங்களை பார்த்தாள். அப்பால் எழுந்து நின்றிருந்த மகாகூடம் என்னும் மலைமுடியை பார்த்தாள். அதுவும் நடுங்கிக்கொண்டிருந்தது. “அசலம் என்று உனக்குப் பெயர். நீ அசைவுறுவதனால் இனி உனக்கு அப்பெயரில்லை. அலைகொள்வதனால் நீ தரங்கம் என்றே அழைக்கப்படுக!” என்றாள். மகாகூடம் அவளை நோக்கி குனிந்து “மலைகளின் அசைவின்மை மண்ணுக்குரியது. மண் அசைவதை நீ அறிக!” என்றது.

மண்ணில் இறங்கி அதன் அசைவை உணர்ந்த காளகி “அனைத்துப் புவிநிகழ்வுகளும் மண்ணின் நிலைபெயராமையால்தான் ஒப்பப்படுகின்றன. அனைத்தையும் தாங்குவதனால் தரித்ரி என பெயர்பெற்றவள் நீ. அன்னையே, உன் பொறுமை எங்கு சென்றது?” என்றாள். புவிமகள் அவளை நோக்கி “நான் என்னைத் தாங்கும் பேராமை மீது நன்கமையவில்லை. அது இளைப்பாறும்பொருட்டு என்னை இடம் மாற்றிக்கொள்கிறது. என்ன செய்வதென்று நான் அறியேன். என்னைப் படைத்த பிரம்மனிடமே அதை நீ கேட்கவேண்டும்” என்றாள். மும்முறை நிலத்தைக் கொத்திய காளகி “படைத்தவனே, இங்கு வருக! எளிய கரியோளின் சொல்லுக்கு மறுமொழி தருக! நீ நிறுத்தியது நிலைபெயரும் என்றால் உன் சொல் பொருளிழக்கிறது என்றே பொருள்” என்றாள்.

அவள் முன் நான்முகம் கொண்டு, மின்படையும் தாமரையும் ஏடும் ஒருமைக்குறியுமென கைகள் திகழ தோன்றிய படைப்பிறை சொன்னார். “நான் இப்புவியை நிலைபெயரா ஆமைமேல் நிறுத்தினேன். ஆனால் இப்புவியில் ஒவ்வொரு கணமும் உயிர்கள் பிறந்து உயிர்கள் இறந்தாகவேண்டும். பொருள்கள் எழுந்து பொருள்கள் மறைந்தாகவேண்டும். மோதலும் முயக்கமும், வெல்லலும் வீழ்தலும், உண்ணலும் உண்ணப்படுதலும் நிகழ்ந்தாகவேண்டும். அந்த முடிவிலாக்கோடி நிகழ்வுகள் கொண்ட இப்புவி துள்ளித்திமிறிக்கொண்டுதான் இருக்கமுடியும். அசைவு அசைவின்மைமேல் அமர்வதெங்ஙனம் என்று நானும் அறியேன்.”

“அச்சொல்லை நான் ஏற்க மாட்டேன். படைப்பவனைவிட பெரியது படைப்பு. படைத்தல் முழுமையடைந்ததுமே அது ஆசிரியன் என அமர்ந்து படைத்தவனுக்கு கற்பிக்கத் தொடங்குகிறது. முழுமைகொண்ட படைப்பு என்பது எவ்வினாவுக்கும் எங்கோ விடையை வைத்திருக்கும்” என்றாள் காளகி. “ஆம், ஆனால் அது உன் வினா என்பதனால் விடைதேடவேண்டியவள் நீ. சென்று நோக்குக, மேலே அலைதிகழ்கையில் அடியில் அசைவின்மை கொண்ட ஒன்றை! அதன்மேல் நிறுத்துவேன் இப்புவியை” என்றார் பிரம்மன்.

காளகி தன் ஊழ்கத்தால் இமைக்கணத்தை ஏழாயிரம் ஆண்டுகளாக ஆக்கி ஏழுமுறை புவியை சுற்றிவந்தாள். அப்போது கண்டகவனம் என்னும் யானை ஒன்றை கண்டாள். அது மிதக்கும் படுமரம் ஒன்றின்மேல் நின்று மேலே படர்ந்திருந்த மூங்கில்தளிர்களை கொய்துகொண்டிருந்தது. நீர்த்துளிபோல் அதன் கரிய பேருடல் ததும்பியது. அதன்

காதுகள் விசிறின. துதிக்கை சுழன்றது. ஆனால் அது நின்றிருந்த படுமரமோ உளைசேற்றில் மிதந்து கிடந்தது. அதன் உடலின் அலைகள் கால்களை சென்றடையவில்லை. அசைவிலாத கால்களினால் படுமரத்தை அது அழுந்த நிறுத்தியிருந்தது.

அதன்பின்னரே காளிகை உணர்ந்தாள் யானைகள் அனைத்துமே அவ்வியல்பு கொண்டவை என. காற்றிலாடும் கிளை என உடல் உலைய நின்றிருக்கையில் அவற்றின் கால்கள் அசைவற்று மண்ணில் நிலைகொண்டிருந்தன. "எந்தையே!" என அவள் பிரம்மனை அழைத்தாள். "யானைகளால் தாங்கப்படட்டும் இப்புவி. அசைவிலாத ஆமைமேல் நின்று இதை தாங்கும் ஆற்றல்கொண்டவை அவை." பிரம்மன் புன்னகைத்து "ஆம், அந்த விடையை நானும் சென்றடைகிறேன். அவ்வாறே ஆகுக!" என்றார்.

பிரம்மனின் ஆணைப்படி எட்டு திசையானைகள் அகூபாரனின் மேல் நின்று தங்கள் தோள்களில் புவியை தாங்கலாயின. அவற்றின் உடல் அசைந்துகொண்டிருக்கும் புவியை ஏந்தியிருக்க அசைவில்லாத கால்கள் ஆழத்துப்பாறைபோல் தன்னில் நிறைவடைந்து அமைந்த ஆமையின்மேல் ஊன்றியிருந்தன. ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்ரதீகம் என்னும் எட்டு திசையானைகளை நம் குடியின் தெய்வங்களென்று வணங்கினர் மூத்தோர். புவிதாங்கும் முடிவிலாக் காலத்தின் தனிமையில் அவை துயருற்றன. அவற்றின் நிழல்கள் துணைவியராகுக என பிரம்மன் ஆணையிட்டார். குஞ்சரி, மாதங்கி, கஜை, கரிணி, சாமஜை, ஹஸ்தினி, பத்மை, விதந்தை என்னும் எட்டு பிடியானைகள் உருவாகின. அவை நமக்கு

அருள்புரியும் அன்னையர் என்று வணங்குக!” என்று யமி சொன்னாள்.

அவளை விழியிமைக்காமல் நோக்கி அமர்ந்திருந்த பகனை இழுத்து தன் வறுமுலைகளோடு சேர்த்தணைத்து முத்தமிட்டு “இருளும் இருவகை என்று அறிக, மைந்தா! வெம்மைகொண்ட இருள் களிறு. குளிர்பரவிய இருள் பிடி. இருவகை இருள்களால் வாழ்த்தப்பட்டவர்கள் அரக்கர் குடியினர்” என்றாள்.

கௌதமவனத்தில் வேள்விச்சாலையில் இளமாணவர்களிடம் கௌதம ஏகபர்ணர் சொன்னார். “முதல் மைந்தனின் தீச்சொல்லால் வினதை தன் தமக்கையான கத்ருவின் அடிமையானாள். அவளும் தமக்கையும் வான்நோக்கி நின்று விண்ணிலூரும் அமரர்தலைவனை வாழ்த்துகையில் அவன் புரவியாகிய உச்சைசிரவஸின் வால் வெண்ணிறமானது என்று வினதை சொன்னாள். கரியதென்று கத்ரு சொன்னாள். தோற்பவர் வெல்பவருக்கு ஆயிரமாண்டுகாலம் அடிமையாகவேண்டும் என்று அவர்கள் பந்தயம் வைத்தனர். மறுநாள் இந்திரன் தன் பொற்புரவியில் விண்ணில் பறக்கையில் கத்ருவின் மைந்தர்களான ஆயிரம் கருநாகங்கள் எழுந்துசென்று அதன் வால் என கவ்வித்தொங்கிக்கிடந்தன. கீழிருந்து நோக்கியபோது குதிரையின் வால் கருமையாகத் தெரிந்ததைக் கண்டு வினதை கத்ருவிடம் தோற்றதாக ஒப்புக்கொண்டாள். ஆயிரம் ஆண்டுகள் தன் தமக்கையிடம் அடிமையாக இருப்பதாக அவள் சொல்லளித்தாள்.”

தன் அன்னையின் அடிமைவாழ்வை முடித்துவைப்பதற்காக கருடன் கத்ருவிடமும் அவள் மைந்தரிடமும் பேசினான். விண்ணவர் உண்ணும் அமுதை கொண்டுவந்து அளித்தால் வினதையை விடுவிப்பதாக கத்ரு சொன்னாள். அழிவின்மையை அளிக்கும் அமுதை உண்டால் தன் மைந்தரால் புவிநிறையும் என கத்ரு எண்ணினாள். கருடன் தன் அன்னையிடம் வந்து வணங்கி விண்ணுலகை நோக்கி பறக்கவிருப்பதாகச் சொல்லி வாழ்த்து கோரினான். அன்னை அவன் தலைதொட்டு வாழ்த்தினாள். "விண்ணை எட்டும்வரை பறப்பதற்குரிய ஆற்றலை எவ்வண்ணம் பெறுவாய்?" என்று வினதை கேட்டாள். கருடன் "ஆயிரம் உயிர்களை உண்டால் ஆயிரம்நாள் பசியற்றிருப்பேன்" என்றான்.

"கடல்நடுவே நிஷாதர்கள் வாழும் நிஷாதாலயம் என்னும் தீவுள்ளது. அங்கே சென்று பன்னிரண்டு லட்சம் நிஷாதர்களை உண்டு உன் சிறகுகளை வலுப்படுத்திவிட்டு மேலே எழுக! பன்னிரண்டு லட்சம் நாட்கள் நீ செல்லவேண்டியிருக்கும். காணும் நிஷாதர்களை எல்லாம் உண்க! ஆயின் ஒன்று கருதுக, அறியாமல்கூட அந்தணரை நீ உண்ணலாகாது!" என்றாள் வினதை. "அந்தணரை எவ்வண்ணம் அறிவது?" என்றான் கருடன். "உன் அலகால் அவர்களை கொத்தியதுமே அனலென அவர்கள் சுடுவதை உணர்வாய். அவர்களில் எரியும் வேதத்தின் வெம்மை அது" என்று அன்னை சொன்னாள். "அவ்வண்ணமே ஆகுக!" என்று சொல்லி விடைபெற்று கருடன் விண்ணுக்குக் கிளம்பினான்.

பன்னிரண்டாயிரம் ஆண்டுகள் விண்ணில் பறந்து சென்று இனியில்லை என சிறகுகள் ஓய்ந்து மண்ணுக்கு விழப்போகும்போது தொலைவில் ஒரு வாயிலை அவன்

கண்டான். அது முனிவர்கள் வாழும் வானுலகின் நுழைவுமுகம். அங்கே சென்று நின்று “காசியப முனிவரின் குடிவழியில் வந்தவனாகிய பறவைக்கரசன் நான். என்னை உள்ளே வந்து இளைப்பாற ஒப்புக!” என்றான். நுழைவுக் காவலனாகிய கந்தர்வன் “அவர் உன்னை தன் மைந்தன் என்று ஒப்புவாரென்றால் உள்ளே நுழைக!” என்றான். கருடன் தன் சிறகிலிருந்து இறகொன்றை எடுத்து அவனிடம் அளித்து “இதை எந்தையிடம் காட்டுக!” என்றான்.

அந்தத் தூவலைப் பார்த்ததுமே “மைந்தா!” என அழைத்தபடி காசியபர் நுழைவாயிலுக்கே ஓடிவந்தார். அவனை அள்ளி நெஞ்சோடணைத்து தன் தவச்சாலைக்கு அழைத்துச்சென்றார். “உன்னை பார்ப்பதனால் நூறாண்டுகள் தவம் செய்து பயனீட்டிய உவகையை அடைந்தேன். மைந்தரே தந்தையருக்கு தெய்வவடிவம் என்பதை இன்று உணர்ந்தேன்” என்றார். “தந்தையே, நான் பசித்தும் களைத்தும் இருக்கிறேன். மண்ணில் பன்னிரண்டு லட்சம் நிஷாதர்களை உண்டு பசியடங்கியே விண்ணிலெழுந்தேன். ஆனால் என் ஆற்றல் தீர்ந்துவிட்டிருக்கிறது” என்றான் கருடன்.

காசியபர் புன்னகைத்து “மைந்தா, மண்ணிலிருந்து விண்ணிலெழுந்தோறும் நீ பேருருக்கொண்டபடியே இருக்கிறாய். இப்போது நீ அங்குள்ள இமையப்பெருமலைத் தொடரைவிட பெரிய சிறகுகள் கொண்டிருக்கிறாய். உன் இறகுகள் ஒவ்வொன்றும் தென்பெருங்கடலின் அலைகளைவிட நூறுமடங்கு பெரியவை என்று உணர்க! அங்கு உண்ட உணவு இங்கு ஒரு துளியென்றாகிவிட்டிருக்கிறது” என்றார். “இங்கு என் பசியை ஆற்ற நான் செய்யவேண்டியதென்ன?” என்றான் கருடன்.

“இங்கே குடிகளால் அன்னமும் நீரும் அளித்து விண்ணிலேற்றப்படும் மூதாதையர் வாழும் மூச்சுலகம் ஒன்றுள்ளது. மண்ணில் இருந்த உணர்வுகள் எஞ்சியிருப்பதனால் விண்ணில்நிறைந்து தெய்வங்களாக ஆகாது அமைபவர்கள் அவர்கள். அங்கே வியோமசரஸ் என்னும் வாவி ஒன்றுள்ளது. அதில் விஃபாவசு என்னும் ஆமையும் சுப்ரதீபன் என்னும் யானையும் வாழ்கின்றன. அவை இங்கும் தீராத பெரும்பூசலுடன் உள்ளன” என்றார் காசியபர்.

“அவர்களின் கதையை சொல்கிறேன் கேள்” என காசியபர் தொடர்ந்தார். “விஃபாவசு நாகர்களின் குடிமூதாதை. மண்ணைத்தாங்கும் அகூபாரன் என்னும் பேராமையின் கொடிவழி வந்தவன். அவன் முதுகின்மேல் கோட்டை ஒன்றைக் கட்டி வாழ்ந்தனர் நாகர். தன்னுள் அடங்கி இல்லையென்றே ஆகி வாழ்ந்தான் விஃபாவசு. சுப்ரதீபன் திசையானையாகிய சுப்ரதீகத்தின் மைந்தர்மரபில் வந்தவன். அரக்கர்களாலும் அசுரர்களாலும் வணங்கப்படுபவன்.”

நாகர்களுக்கும் அரக்கர்களுக்கும் போர் நிகழ்ந்துகொண்டிருந்த காலம் அது. அரக்கர்கள் தங்கள் குலமூத்தவராகிய சுப்ரதீபனின் மேல் ஏறி விற்களையும் வேல்களையும் கொண்டு நாகர்கள்மேல் படைஎடுத்து வந்தனர். நாகர்கள் விஃபாவசுவின் மேல் ஏறி கோட்டைக்குள் ஒளிந்துகொண்டனர். அங்கிருந்து நச்சு அம்புகளை ஏவி அரக்கர்களை தாக்கினர். அரக்கர்கள் அவர்களைச் சூழ்ந்து தீயிட்டனர். அப்போதுதான் நாகர்களின் அந்த மலை என்பது ஒரு பெரும் ஆமை என அவர்களுக்குத் தெரிந்தது. அவர்கள் சுப்ரதீபனை விஃபாவசுமேல் ஏற்றி அதை புரட்டிப்போட முயன்றனர்.

யானையும் ஆமையும் போரிட்டன. இரண்டு மலைகள் முட்டிக்கொள்வதுபோல அப்போர் நிகழ்ந்தது. ஆமையின் ஓடுகள் மேல் முட்டி யானையின் தந்தங்கள் முறிந்தன. இறுதியில் ஆமை யானையைக் கவ்வி கீழே போட்டு அதன்மேல் ஏறிக்கொண்டது. அந்த எடையால் யானை உடல்திறந்து இறந்தது. யானையின் தந்தங்களால் அடிவயிற்றில் குத்துபட்டு ஆமையும் உயிர்விட்டது. இரு உடல்களையும் புதைப்பதற்குரிய குழிகளை வெட்ட நாகர்களும் அரக்கர்களும் முயன்றனர். அத்தனை பெரிய குழியை வெட்ட அவர்களால் இயலவில்லை. ஆகவே அருகிருந்த ஒரு பிலத்தில் இரு உடல்களையும் போட்டு இறுதிக்கடன்களை முடித்தனர்.

“விண்ணுக்கு வந்த ஆமையும் யானையும் இங்கே வியோமசரஸில் வாழ்கின்றன. இங்கே அவை ஒன்றையொன்று கொல்லமுடியாது. அவற்றின் ஆற்றல் அங்கே மண்ணில் அவர்களின் குலங்கள் அளிக்கும் பலிக்கொடைகளால் ஆனது. ஆகவே முடிவில்லாமல் அவர்கள் இங்கே போரிட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்களை நீ உண்பாயாக! உன் பெரும்பசி அடங்கும். இங்கிருந்து மீண்டும் பன்னிரண்டுலட்சம் ஆண்டுகள் பறந்துசென்றால்தான் நீ தேவருலகை அடைய முடியும். அதற்கான ஆற்றலை நீ அவ்வுணவால் அடைவாய்” என்றார் காசியபர்.

“எந்தையே, அவர்களும் பேருருவர்கள் அல்லவா? அவர்களை வென்று உண்ணும் ஆற்றலை நான் எவ்வாறு அடைவேன்?” என்று கருடன் கேட்டான். “நீ அந்தணருக்கும் ஷத்ரியர்களுக்கும் உகந்தவன். அவர்கள் செய்யும் வேள்விகள் அனைத்திலும் ஒரு பகுதி உனக்கு அவியென்றாகுக! நீ

அதனால் ஆற்றல்பெற்றவன் ஆவாய்" என்றார் காசியபர். காசியபரின் ஆணைப்படி மண்ணில் ஆயிரம்கோடி அந்தணர் செய்துகொண்டிருந்த வேள்விகள் அனைத்திலிருந்தும் அவிப்பயன் கருடனை வந்தடைந்தது. செஞ்சிறகு காலைமுகில் என ஒளிவிட அவன் வானுருக்கொண்டு எழுந்து வியோமசரஸ் நோக்கி சென்றான்.

கருடன் பறந்துசென்று வியோமசரஸை அடைந்தான். அங்கே யானையும் ஆமையும் இரு கடல்கள் அலைகளால் அறைந்துகொள்வதுபோல் போரிட்டுக்கொண்டிருந்தன. கருடன் அவர்கள்மேல் பாய்ந்து தன் உகிர்களாலும் அலகாலும் தாக்கினான். நாகரும் அரக்கரும் அந்தணரும் அளிக்கும் அவிகள் நடுவே என அப்போர் நிகழ்ந்தது. ஒருகணம் ஒருவர் என அவர்கள் முன்னெழுந்தனர். மறுகணம் இன்னொருவர் வென்றுவந்தனர். பன்னிரண்டு ஆண்டுகள் அந்தப் போர் நிகழ்ந்தது. மண்ணில் அது பன்னிரண்டாயிரம் ஆண்டுகளாக நீண்டது. நாள் செல்லச்செல்ல நாகர்களின் அவி குறைந்தது. அரக்கர்களின் அவியும் குறைந்தது. குறையாத அந்தணரின் அவியால் ஆற்றல்பெற்ற கருடன் ஆமையையும் யானையையும் வென்றான்.

அவற்றை தன் இரு கால்களால் கவ்வி எடுத்துக்கொண்டு விண்ணிலெழுந்த கருடன் சேக்கேறி அமர்ந்து அவற்றை உண்ண ஓர் இடத்தைத் தேடி அலைந்தான். அப்போது அந்தணர் நாவிலெழுந்த வேதம் சுபத்ரம் என்னும் பேராலமரமாக விண்ணில் எழுந்து நின்றது. அதன் தெற்குக்கிளையில் அமர்ந்து அந்த ஆமையையும் யானையையும் கொன்று கிழித்துண்டு பசியடங்கினான். ஆமையின் பொறுமையையும் யானையின் விசையையும் ஒருங்கே அடைந்தான். மேலும்

பன்னிரண்டாயிரம் மடங்கு பேருருக்கொண்டு விண்ணிலெழுந்து தேவருலகை அடைந்தான். அங்கே தேவர்தலைவனை வென்று அமுதைக் கவர்ந்துவந்து தன் அன்னையை விடுவித்தான்.

கௌதம ஏகபர்ணர் சொன்னார். “வேதச்சொல்லால் வாழ்த்தப்பட்டவனை, அனலை சிறகென்றும், மின்படையை அலகென்றும், எரிமீன்களை விழிகளென்றும் கொண்டவனை வணங்குக! நம் குலத்திற்கு மூதாதையை, நம் குடிகளுக்கு தெய்வத்தை, நம் சொற்களுக்குக் காவலை வழுத்துக! அவன் நமக்கு என்றும் அருள்க!” அவர்முன் அமர்ந்திருந்த மாணவர்கள் “ஆம்! ஆம்! ஆம்!” என்று உரைத்து கைகூப்பினர்.

# கார்கடல் - 3

வெள்ளி எழுந்துவிட்ட முதறற்காலைப் பொழுதில் அஸ்தினபுரியின் தெற்குக் கோட்டைவாயிலுக்கு வெளியே காவலர் தலைவனாகிய நிகும்பன் மூன்று வீரர்களுடன் காத்து நின்றிருந்தான். கோட்டை மேல் எரிந்த மீன்நெய் விளக்குகளின் மங்கிய செவ்வெளிச்சம் கீழே விழுந்து புதர்களின் இலைகளை மெருகு கொள்ளச் செய்திருந்தது. ஆனால் எதையும் பிரித்தறிய முடியாதபடி அனைத்து பொருட்களையும் ஒன்றுடன் ஒன்று கலந்து ஒற்றைப் பரப்பென ஆக்கியது அந்த வெளிச்சம்.

காவல்வீரர்கள் கால் மாற்றி நின்றனர். ஒருவன் மெல்ல இருமினான். அப்பால் கோட்டைக்குள் மையப்பாதையில் ஒற்றைப் புரவி இழுக்கும் கூண்டு வண்டி ஒன்று ஒருங்கி நின்றிருந்தது. அகன்ற உடல்கொண்ட அந்த வண்டிக்குதிரை

தலையை சிலுப்பி மணியோசை எழுப்பியபடியும், குளம்பால் தரையைத் தட்டி பெருமூச்சுவிட்டபடியும் காத்து நின்றது. அவர்கள் அங்கு நிற்கத் தொடங்கி மூன்று நாழிகைக்கு மேல் ஆகிவிட்டிருந்தது. பின்னிரவுக்கு மேல் எப்போது வேண்டுமென்றாலும் ஏகாக்ஷர் வரக்கூடும் என்று சொல்லப்பட்டிருந்தது.

அவனை ஆணையிட்டு அனுப்பிய கனகரிடம் "அவரை எப்படி அறிவது?" என்று நிகும்பன் கேட்டான். கனகர் "அவரே தன்னை அறிமுகம் செய்துகொள்வார்" என்றார். நிகும்பன் சற்று தயங்கி உதடுகளை அசைப்பதற்கு முன்னரே "அவருக்கு அடையாளங்கள் எதுவும் தேவையில்லை. அவரைப் பார்த்தாலே தெரியும், அவரைப்போல் பிறிதொருவர் இப்புவியில் இல்லை என்கிறார்கள்" என்றார் கனகர். நிகும்பன் தலைவணங்கினான்.

அங்கு வரும்வரை அவன் உள்ளம் கிளர்ச்சி கொண்டு உடலில் நடுக்கு இருந்தது. தன்னைப்போல் பிறிதொருவர் புவியில் இல்லாத மனிதர் எப்படி இருப்பார்? அப்படி ஒருவர் இருக்க வாய்ப்புண்டா என்ன? இறையுரு என்று வழங்கப்படும் இளைய யாதவருக்கேகூட அவரைப்போன்றே தோற்றமளிக்கும் பௌண்டரீக வாசுதேவர் இருந்திருக்கிறார். படைவீரர்களுக்கு அங்கு எவர் வருவார் என்று தெரிந்திருக்கவில்லை. அவர்களுக்கு அது வழக்கமான காவல்பணிகளில் ஒன்று. அங்கு வந்து நின்றபின்னர் ஏதோ உளவுப்பணி என்று புரிந்துகொண்டார்கள். இருளுக்குள் அசைவும் ஓசையும் இன்றி இருப்பதற்கான பயிற்சி அவர்களுக்கு இருந்தது.

மிகத் தொலைவில் நரியின் குரலொன்று கேட்டது. தெற்குக் காடுகளுக்குள் நரிகள் மிகுதி என்று நிகும்பன்

அறிந்திருந்தாலும் அக்குரல் அவனை மெய்ப்பு கொள்ளச்செய்தது. மீண்டும் நரிக்குரல்கள் எழுந்தன. குரல்கள் ஒன்றுடன் ஒன்று கலந்து பெரிய நரிக்கூட்டம் ஒன்று அணுகி வருவதுபோல தோன்றியது. அந்தப் புலரிப்பொழுதில் நரிக்கூட்டம் கோட்டையை நோக்கி வருவதை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. அவன் கேட்டுப் பழகிய கதைகள் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. தன் உடல் குளிர்வதுபோல நடுக்கு கொள்வதை, கையின் மயிர்கள் மயிர்க்கோள் கொண்டு எழுந்து நிற்பதை உணர்ந்தான்.

தன்னை ஆற்றிக்கொள்ள வேண்டும் என்று தனக்குத்தானே ஆணையிட்டுக்கொண்டான். வருபவர் ஒரு தனிமனிதர், முதியவர், முனிவர் என்றார்கள். அவர் எத்தனை ஆற்றல் கொண்டவராக இருப்பாரென்றாலும் தனித்து வரும் மானுடர் மட்டுமே. மானுடரின் ஆற்றல்களுக்கு எல்லை உண்டு. வீரன் ஒருவனுக்கு அவன் வாள் அளிக்கும் பாதுகாப்பு போதும். அதற்கு அப்பால் உள்ள விசைகளுடன் அவன் எந்நிலையிலும் போரிட இயலாது. அவற்றுக்கு முன் தன்னை முற்றளிப்பதே அவன் செய்யக்கூடுவது. பணிவது அல்லது இறப்பது. இரண்டுமே அளித்தல்தான். அவன் மீண்டும் நீள்மூச்சுவிட்டான்.

புதருக்குள் மெல்லிய அசைவொன்று தெரிந்தது. அவர்கள் நால்வருமே அவ்வசைவை ஒரே கணத்தில் பார்த்தார்கள். மிகத் தொலைவில் மிக மெல்லிய அசைவு. அதிலிருந்தே அது மானுட அசைவென்று எப்படி விழியும் செவியும் உணர்ந்ததென்று அவன் வியந்தான். புலன்களை கருவியாகக் கொண்டு அறியும் ஆழ்புலனுக்கு எண்ணும் எல்லைக்கு அப்பால் செல்லும் திறனுள்ளது போலும். அவன் அது உளமயக்கா என்று எண்ணி மேலும் கூர்ந்து பார்த்தான். மானுட

அசைவேதான். ஆனால் அப்போதும் அது புதர்களுக்கிடையே எழுந்த சலசலப்பாகவே இருந்தது. உருவென எதுவும் தெளியவில்லை. அவன் “வருகிறார்” என்றான். “ஆம்” என்றான் காவல்வீரன்.

அவர்களின் குரல் அவர்களின் அச்சத்தை குறைத்தது. அவர்கள் இருளுக்குள் விழிகூர்ந்து நின்றனர். வெளிச்சமென எதுவும் உடன்கொண்டு செல்லக்கூடாதென்று அவனுக்கு ஆணை இருந்தது. அது ஏன் என்று அவனுக்குப் புரியவில்லை. கனகர் அதை சொன்னபோது மாற்று உசாவவும் அவனால் இயலவில்லை. அவன் கை தன் இடையிலிருந்த குறுவாளை தொட்டுக்கொண்டிருந்தது. “வேல்கள் ஒருங்கியிருக்கட்டும்” என்று அவன் சொன்னான். “ஆம்” என்று காவல்வீரர்கள் உரைத்தனர். ஆனால் அது வெறுமனே குரல்களை கேட்டுக்கொள்வதற்காகத்தான்.

இருளுக்குள் மெல்லிய மானுட நிழற்கோட்டுருவம் தோன்றியது. ஆனால் அது அங்கே ஒரு நிழலசைவாக நின்றுகொண்டிருப்பதுபோல இருந்தது. அல்லது மானுட உரு ஒன்று அலைகளில் நீர்ப்பாவை என நெளிவதுபோல். அல்லது அது மானுட உருவே அல்ல. துணியில் உருவாக்கிய வடிவொன்று அங்கே கட்டிப்போடப்பட்டு காற்றில் நெளிகிறது. ஆனால் அது பெரிதாகி அணுகி வந்துகொண்டிருந்தது. அவன் மேலும் எண்ணுவதற்குள் அருகிலிருந்த வீரன் “உடற்குறை கொண்ட மனிதர்” என்றான். “ஆம்” என நிகும்பன் பெருமூச்செறிந்தான்.

மானுட அசைவை உருவாக்குவது கால்கள் தான் என்று அவனுக்கு அப்போதுதான் புரிந்தது. கால்களில் இசைவிலோ வளைவிலோ சிறு பிழையிருந்தால்கூட கைகளும்

கோணலாகிவிடுகின்றன. உடலசைவே முற்றாக மாறிவிடுகிறது. மானுடனின் உடலில் அவனை மண்ணில் நிலைநிறுத்தும் நடுத்தூண் ஒன்று உள்ளது, விழிக்குத் தெரியாதது. அவ்வுடலில் அது சரிந்திருக்கிறது. உடற்பிழை நிழலசைவில் பல மடங்காக பெருகித் தெரிகிறது. தொலைவில் நோக்குகையில் அது மானுட அசைவு அல்ல என்றே தோன்ற வைத்துவிடுகிறது.

மேலும் அணுகியபோது அவர் உடலை அவன் தெளிவாகவே பார்த்தான். இரு கால்களும் நாணிழுத்து கட்டப்பட்ட வில்கள்போல வெளிப்பக்கமாக நன்கு வளைந்திருந்தன. ஆகவே முதுகு நன்றாக தாழ்ந்து இரு கால்களில் எழுந்து வரும் தவளைபோல் தோன்றினார். காற்றில் நீந்துபவர்போல கைகளைத் துழாவி தலையை முன்னால் நீட்டி நடந்துவந்தார். ஆனால் உடற்குறை கொண்டவர்கள் நடப்பதற்கு கொள்ளும் இடரை அவர் அடைந்ததாகத் தெரியவில்லை. மிக இயல்பாக நீரில் தவளை என நீந்தி அருகணைந்தார். சற்று அப்பால் நின்றபின் "நான் ஏகாக்ஷன். உங்கள் அரசின் அழைப்பிற்கேற்ப வந்தவன். கூர்ம முனிவரின் வழி வந்த ஹடயோகி" என்றார்.

அவர் குரல் இளமைந்தர்களுக்குரியது என்பதே அவனை மெய்ப்புகொள்ளச் செய்தது. மிக இனியது. அவனிடம் மட்டுமே இனிய நற்சொல் ஒன்றை உரைப்பதுபோல் ஒலித்தது. அவன் தலைவணங்கி தொண்டையைத் தீட்டி "வணங்குகிறேன், முனிவரே. தங்களுக்காகவே இங்கு காத்து நின்றிருக்கிறோம்" என்று சொன்னான். "நன்று" என்றபடி அவர் மேலும் அணுகி வந்தார். அவர்களுக்குப் பின்னாலிருந்து வந்த நெய்விளக்குகளின் வெளிச்சத்தில் அவருடைய தோற்றம் தெளிந்தது. கால்களின் வளைவு அவர் உடலின் அனைத்து

தசைகளையும் விந்தையான முறையில் இழுத்து முறுக்கி கட்டியிருந்தது. நாணேற்றப்பட்ட பல்வேறு வில்களை சேர்த்து வைத்தது போலிருக்கிறது அவர் உடல் என்று அவன் எண்ணினான். அருகில் வந்தபோது நெடுந்தொலைவு நடந்ததற்கான மூச்சிளைப்பு சற்றும் அவரில் இல்லையென்பதை கண்டான்.

“நான் அஸ்வகடகத்திலிருந்து வருகிறேன்” என்றார் ஏகாக்ஷர். “அது நெடுந்தொலைவாயிற்றே?” என்றான் நிகும்பன். “ஆம், அங்குதான் எவரையும் காணாமல் கங்கையை கடக்க முடிகிறது” என்றார் ஏகாக்ஷர். நிகும்பன் “அது கைவிடப்பட்ட துறை. இப்பொழுதில் அங்கு படகுகள் இருக்காது” என்றான். “நான் படகுகளில் ஏறுவதில்லை” என்றார் ஏகாக்ஷர். “நீந்தியா வந்தீர்கள்?” என்று அவன் கேட்டான். அவர் மறுமொழி சொல்லாமல் “செல்வோமா?” என்றார்.

அப்போதுதான் அவர் தலை சற்றே திரும்ப அவன் அவருடைய முகத்தை பார்த்தான். ஒருகணம் எந்த எண்ணமும் இல்லாமலேயே அவன் அஞ்சி கைகள் நடுங்கலானான். அதன்பின்னரே அந்த விந்தை அவன் எண்ணத்தை சென்றடைந்தது. அவர் முகத்தில் ஒற்றைவிழிதான் இருந்தது. நெற்றிக்கு ஏறத்தாழ நடுவே அந்த விழி இமை திறந்து அவனை பார்த்தது. அவன் அது ஏதேனும் ஒப்பனையா என்று அகம் பதறினான். ஆனால் அந்த விழி உயிரின் நுண்ணசைவும் ஒளியும் கொண்டிருந்தது.

அப்படி ஒரு முகம் புவியில் இயல்வதே அல்ல. இரு விழிகளில் ஒன்று வெறும் குழியாக இருப்பதையோ, இமையால் மூடப்பட்டிருப்பதையோ, சுருங்கி சிறு தடமாக இருப்பதையோ அவன் பார்த்திருக்கிறான். இன்னொரு

விழியின் தடமே இன்றி முகத்தின் நடுவே ஒற்றை விழி இருக்கக்கூடும் என அவன் எண்ணியதே இல்லை. அவனை உணர்ந்த அவர் புன்னகையுடன் "எனது விழி அவ்வாறுதான். என்னை ஏகாக்ஷன் என்று அழைப்பார்கள். எனது மைந்தர்களும் இவ்வியல்பு கொண்டவர்களே" என்றார். நிகும்பன் "வணங்குகிறேன், முனிவரே. தங்களுக்காக அமைச்சர் காத்திருக்கிறார். வருக!" என்று சொன்னான்.

அவரை அழைத்து வண்டி அருகே கொண்டுசென்றான். அவர் கோட்டைக்குள் நுழைந்தபோது "தங்கள் காலடிகளால் இந்நகர் நிறைவடைக!" என முகமன் உரைத்தான். வண்டியின் அருகே சென்று அதன் திரையை விலக்கி "தங்களுக்காக" என்று அவன் சொன்னதும் அவர் அதன் படிகளில் காலூன்றி ஏறி அமர்ந்து திரையை மூடிக்கொண்டார். வண்டியோட்டியிடம் செல்க என்று கையசைத்துவிட்டு நிகும்பன் தன் புரவியில் ஏறிகொண்டான்.

அரண்மனை முகப்பில் கனகர் அவர்களுக்காக காத்து நின்றிருந்தார். வண்டி புஷ்பகோஷ்டத்தின் பெரிய முற்றத்தில் கல்பாவிய தரையில் சகடங்கள் கடகடத்து ஒலிக்க நின்று திரும்பியதும் படிகளில் நின்றிருந்த கனகர் காற்றில் பறந்த சால்வையை அள்ளி தோளில் சுற்றிக்கொண்டு உடல்குலுங்க அவர்களை நோக்கி வந்தார். நிகும்பன் முன்னால் சென்று தலைவணங்கி "வந்திருக்கிறார், அமைச்சரே" என்றான். முகத்திலிருந்தே அவனது உணர்வுகளை அவர் புரிந்துகொண்டு தானும் முகமாற்றம் அடைந்தார். "உள்ளிருக்கிறாரா?" என்று மெல்லிய குரலில் கேட்டார். "ஆம்" என்றான். சொற்கள் வெறுமனே ஒலியென பொருள்கொள்ளும் தருணம் அது என உணர்ந்தான்.

கனகர் அந்த வண்டியின் அருகே சென்று தலைவணங்கி “ஏகாக்ஷரே, நான் அஸ்தினபுரியின் கௌரவ அரசரின் தலைமை அமைச்சன் கனகன். தங்களை இவ்வரண்மனைக்கு வரவேற்கிறேன். தங்கள் வரவு நலம் கூட்டுக!” என்றார். திரையை விலக்கி வண்டியிலிருந்து வளைந்த கால்களை வெளியே எடுத்துவைத்து இறங்கிய ஏகாக்ஷர் கைகளை இருபுறத்திலிருந்தும் வீசி எடுத்துக் கொண்டுவந்து சேர்த்து குவித்து “நலம் பெருகுக!” என்றார். “தாங்கள் அரண்மனையில் சற்றே இளைப்பாறலாம்” என்றார் கனகர். “நான் இளைப்பாறுவதில்லை, என் விழி மூடுவதில்லை” என்று ஏகாக்ஷர் சொன்னார். “ஆம், கேட்டிருக்கிறேன்” என்றார் கனகர்.

“எனக்கு இன்நீர் மட்டும் கொடுங்கள். இப்போதே அரசியை சந்திக்கிறேன்” என்றார் ஏகாக்ஷர். “வருக!” என்று கனகர் அவரை அழைத்துச் சென்றார். பின்னர் திரும்பி நிகும்பனிடம் “நீயும் வா” என்றார். “நானா?” என்றான் நிகும்பன். “இங்கு ஏவலர்கள் குறைவாகவே இருக்கிறார்கள்” என்று கனகர் சொன்னார். பெரும்பாலானோர்களை கோட்டைக்காவலுக்கே அனுப்பிவிட்டதும் அரண்மனையில் உண்மையில் காவல் என்றே எதுவும் இல்லை என்றும் நிகும்பன் அறிந்திருந்தான். குருக்ஷேத்ரத்திலிருந்து மேலும் படைகளைத் திரட்டி அனுப்பும்படி ஆணை வந்திருந்தது. படைபயின்ற அனைவருமே சென்றுகொண்டிருந்தார்கள்.

நிகும்பன் பிற காவலர்களை அங்கே நிற்கும்படி கையசைவால் சொல்லிவிட்டு கனகரின் பின்னால் சென்றான். நீண்ட இடைநாழியில் சென்றபோது நண்டு அசைவதுபோல ஏகாக்ஷர் நடந்தார். அவருடைய உடலசைவின் ஒருமையை சற்று கழித்துதான் அவன் புரிந்துகொண்டான். பெரும்பாலும்

உடற்குறை உள்ளவர்கள் அவ்வுடற்குறையை நிரப்பும்பொருட்டு பிற உறுப்புகளை பயன்படுத்துவார்கள். அதில் உடல்ஒருமை கூடாமையால் அவர்களின் ஆற்றல் பெரும்பகுதி அலைவுகளில் வீணாகும். ஏகாக்ஷர் தன் உடலை அதன் அமைப்புக்கேற்ப நன்கு பழக்கியிருந்தார். முதற்பார்வையில் அவர் அசைவுகள் தேவையற்ற அலைவுகளாகத் தோன்றினாலும் அழகிய நடனம்போல் ஒத்திசைவு கொண்டிருந்தன. எடையிலாது நீரில் மிதக்கும் தவளை பின்னங்கால்களின் மிகச் சிறிய உந்தலிலேயே நெடுந்தொலைவுக்கு பறப்பதுபோல் செல்லக்கூடியது. நீரிலென காற்றிலும் அதனால் மிதந்து முன்செல்ல இயலும்.

பேரரசியின் மாளிகை முகப்பை அடைந்ததும் கனகர் "அரசி நேற்று மாலை முதலே தங்களுக்காக காத்திருக்கிறார், முனிவரே" என்றார். ஏகாக்ஷர் ஒன்றும் சொல்லவில்லை. கனகர் இங்கு நில் என்று நிகும்பனிடம் கைகாட்டிவிட்டு விரைந்த காலடிகளுடன் அகத்தளத்தின் படிகளிலேறி உள்ளே சென்றார். ஏகாக்ஷர் அவ்வரண்மனையின் பெரிய மரத்தூண்களையும் அவை இணைந்து உருவாக்கிய குவைமாடத்தையும் நோக்கியபடி நின்றார். அவன் அவருடைய ஒற்றை விழியை பார்த்துக்கொண்டிருந்தான். மானுட விழிகளைவிட இருமடங்கு பெரியது அது. எருமைவிழி. விலங்கு விழிகளுக்குரிய வெறிப்பு கொண்டது. கரிய வைரம்போல் உள்ளொளி நிறைந்தது. அவன் அவ்விழி தன்னை பார்க்கலாகாதென்று எண்ணினான். ஒருகணம் அது சுழன்று அவனைத் தொட்டு மீண்டபோது மெய்ப்பு கொண்டான்.

கனகர் உள்ளிருந்து வந்து தலைவணங்கினார். "அரசி அவையமர்ந்துவிட்டார். தங்களை பார்க்க விழைகிறார்" என்றார்.

“நன்று” என்றபடி ஏகாக்ஷர் படிகளில் ஏறி அகத்தளத்தின் முதன்மைக் கூடத்திற்குள் நுழைந்தார். தானும் தொடர்வதா என்று நிகும்பன் தயங்க விழிகளால் தொடரும்படி காட்டிவிட்டு கனகர் முன்னால் சென்றார். தன் பணி என்ன என்பதை நிகும்பன் புரிந்துகொண்டான். ஏகாக்ஷரின் அருகே நிற்பது. தேவையென்றால் வாளை உருவி அவர் கழுத்தை வெட்டும் வாய்ப்புடன்.

அகத்தளத்தில் சேடியரன்றி காவலென்று எதுவுமிருக்கவில்லை. பெருங்கூடத்தை ஒட்டிய சிற்றறைக்குள் கனகர் அவரை அழைத்துச்சென்றார். அங்கே தாழ்வான பெரிய பீடத்தில் பட்டு விரிக்கப்பட்ட மெத்தை மேல் காந்தாரி அமர்ந்திருந்தாள். பெரிய வெண்ணிற உடலில் இளஞ்செந்நிற ஆடை அணிந்திருந்தாள். விழிமூடி நீலப்பட்டாடை கட்டப்பட்ட அவள் முகமும் உடலும் குருதி இன்றி வெளிறி இருந்தன. நிகும்பன் அதற்கு முன் சில விழாக்களில் மட்டுமே பேரரசியை பார்த்திருந்தான். அப்போது மின்னும் அருமணிகளும் பொற்பூண்களுமாக அவள் ஆலயக்கருவறையிலிருந்து எழுந்த தாய்த்தெய்வம் போலிருந்தாள். இப்போது குட்டிகளை ஈன்றுசலித்த ஏதோ அறியாக் குகைவிலங்குபோல் தோன்றினாள்.

மூச்சு இளைக்க, அணிகள் ஒலிக்க காந்தாரி மெல்லிய குரலில் “அமர்க, முனிவரே! தாங்கள் இவ்வரண்மனைக்கு வந்தது நல்லூழ் என அமைக! என் குலமும் கொடிவழியினரும் நலம் பெறுக! என் தலை தங்கள் காலடிகளில் அமைக!” என்றாள். இடக்கையை தூக்கி அவளை வாழ்த்தியபின் கனகர் காட்டிய பட்டு விரிக்கப்பட்ட சிறிய பீடத்தில் உடலை வளைத்து ஏகாக்ஷர் அமர்ந்தார். ஒன்பது உடன்பிறந்தவர்களும்

ஒவ்வொருவராக வந்து அவளுக்குப் பின்னால் நின்றனர். பானுமதியும் அசலையும் வந்து அறையின் சாளரத்தோரமாக நின்றார்கள். பானுமதி விழிகாட்ட அசலை பக்கத்து அறையின் கதவை திறந்தாள். அதற்கப்பால் இருந்த இருண்ட அறையில் கௌரவர்களின் அரசியர்கள் செறிந்திருக்கிறார்கள் என்று நிகும்பனுக்கு புரிந்தது.

இன்னீர் குடுவையுடன் சேடி வந்து பணிந்தாள். ஏகாக்ஷர் அதை வாங்கி ஓசையில்லாமல் அருந்தினார். மலரில் தேனுண்ணும் சிட்டுபோல என நிகும்பன் எண்ணினான். நோக்க நோக்க அவர் உடலின் அத்தனை அசைவும் விழிக்கு இனிதாவதன் விந்தையை அவன் உணர்ந்தான். காந்தாரி வணங்கி “தாங்கள் அறிந்திருப்பீர்கள், முனிவரே. அங்கு பெரும்போர் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. எங்கள் மைந்தர்கள் களம்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் இறப்புச்செய்திகளுடன் பொழுது விடிகிறது. நேற்று பகல் போரில் என் குடியின் தலைமகன் பீஷ்ம பிதாமகர் வீழ்ந்திருக்கிறார். எங்கள் படைகள் அங்கே திகைத்து சோர்ந்து நின்றிருக்கின்றன. இனி என்ன ஆகும் என்று எவராலும் சொல்ல இயலவில்லை” என்றாள்.

இன்நீர் குடுவையை திரும்ப அளித்து, ஏவல்பெண்டு நீட்டிய பட்டுத்துணியால் வாயையும் தாடியையும் துடைத்துவிட்டு ஏகாக்ஷர் மெல்லிய கனைப்பொலி எழுப்பினார். தளர்ந்த குரலில் “நான் அந்தப் போரை பார்க்க விழைகிறேன், முனிவரே” என்று காந்தாரி சொன்னாள். ஏகாக்ஷர் புன்னகைத்து “நான் இதை எதிர்பார்த்தேன்” என்றார். “பேரழிவு அங்கு நிகழ்கிறது. அதைப்பற்றி எதுவும் எண்ணாமல், ஒரு சொல்லும் செவிகொள்ளாமல், இங்கு அறைகளில் மூடி

இருந்துவிடவேண்டுமென்றுதான் நேற்று வரை எண்ணிக்கொண்டிருந்தேன். பிதாமகர் நேற்று களத்தில் விழுந்த செய்தி வந்ததும் என் எண்ணம் மாறிவிட்டது. இனி இவ்வாறு எதையுமறியாமல் இங்கிருப்பதில் எப்பொருளுமில்லை. எத்தனை வாயில்களை மூடினாலும் எப்படி உள்ளத்தை சுருட்டி அடக்கிக்கொண்டாலும் இந்தப் போர் என்னை வந்து சேர்ந்துகொண்டுதான் இருக்கும்.”

“போரிலிருந்து விலகியிருக்கையில் அது பேய்களைப்போல் பேருருக்கொள்கிறது. ஒன்று நூறு ஆயிரம் கோடி என பெருகி என்னைச் சூழ்ந்து துயரளிக்கிறது. போரை எதிர்கொள்ள ஒரே வழி போரில் ஈடுபடுவதே. அப்போரை நேரிலென காண விழைகிறேன். நானும் என் மைந்தருடன் அக்களத்தில் நின்று உடனாட எண்ணுகிறேன்” என்றாள் காந்தாரி. “அக்களத்தில் நின்றிருத்தலே இங்கே இருந்து அடையும் பெருந்துயரை வெல்வதற்கான ஒரே வழி. இங்கிருந்தால் நான் அடைவது வினாக்களின் துயர். அங்கு நின்றிருந்தால் அடைவது விடைகளின் துயர். இது பேய்களால் அளிக்கப்படுவது, அது தெய்வங்களின் கொடை.”

ஏகாக்ஷர் புன்னகைத்து “ஆம்” என்றார். காந்தாரி “அதற்கேதேனும் வழியுண்டா என்று அமைச்சரிடம் கேட்டேன். அவர் நிமித்திகரிடம் உசாவியபோது தங்கள் பெயரை சொன்னார். ஆகவேதான் தங்களை அழைத்து வரும்படி செய்தி அனுப்பினேன். அஸ்தினபுரிக்கு இத்தனை அருகே தாங்கள் இருப்பது இப்போதுதான் தெரிந்தது” என்றாள். “நான் இங்கிருந்தது தற்செயலே” என்றார் ஏகாக்ஷர். “எங்கிருக்கிறேன் என்பதை எவரேனும் சொல்லியே நான் அறிகிறேன்.” காந்தாரி “எனக்கு போரை காட்ட தங்களால் இயலுமா?” என்றாள்.

இனிய மென்குரலில் “ஆம், போரை நான் உங்களுக்கு காட்டமுடியும்” என்றார் ஏகாக்ஷர். பானுமதி “அதற்கு முன் நான் ஒன்று கேட்க விழைகிறேன், முனிவரே. இந்தப் போரை இவ்வண்ணம் நேரிலென காண்பது எங்களுக்கு மெய்யாகவே நலம் பயக்குமா?” என்றாள். ஏகாக்ஷர் அவளை நோக்கி “சிறுதுயர்கள் அழிப்பவை. பெருந்துயர்கள் விடுதலை செய்பவை. இருவகை விடுதலை. இறப்பு அல்லது மெய்மை. இவ்விரண்டும் நன்றே” என்றார். காந்தாரி கைநீட்டி “ஆம், அதுவே நான் எண்ணியது. நான் உங்கள் சொற்களினூடாக அப்போரை பார்க்கிறேன். அது என்னை விடுதலை செய்யட்டும்” என்றாள்.

“அரசி, அங்கே இருக்கும் கௌரவ அரசிகளில் எவர் இந்த பத்து நாட்களில் ஒருமுறையேனும் ஒரு துண்டேனும் இனிப்பு உண்டார்களோ அவர்கள் உடனே விலகிச்செல்ல வேண்டும்” என்றார் ஏகாக்ஷர். பானுமதி அசலையை பார்க்க அவள் உள்ளே சென்றாள். அங்கிருந்து பெரும்பாலான கௌரவ அரசிகள் கிளம்பிச்செல்லும் அணியோசைகளும் ஆடையொலிகளும் கேட்டன. அசலை வெளியே வந்து பானுமதியிடம் உதடசையாமல் அவர்கள் சென்றுவிட்டார்கள் என்றாள். பானுமதி தலையசைத்தாள். “சொல்க, முனிவரே” என்றாள் காந்தாரி.

ஏகாக்ஷர் “அரசி, என்னால் இப்பருப்பொருள்வெளியில் பிறர் பார்ப்பதை மட்டுமே பார்க்கமுடியும். ஆனால் என் ஊழ்கத்தால் பிறருடைய உள்ளங்களுக்குள் புகுந்து அவர்கள் பார்ப்பதை நானும் பார்க்க முடியும். இந்தப் போரை முழுதாக பார்க்கும் ஒருவரின் உள்ளத்திற்குள் புகுந்து அவர் பார்ப்பதை உங்களுக்கு சொல்கிறேன். அது உங்கள் இளையவர் சகுனியோ மைந்தனோ

அல்லது பிறரோ ஆக இருக்கலாம். எவரென தெரிவு செய்யவேண்டியவர் நீங்கள்தான்” என்றார்.

பானுமதி ஏதோ சொல்வதற்குள் காந்தாரி கை நீட்டி “சஞ்சயனின் விழிகள்! அவ்விழிகளை தாங்கள் கொள்க!” என்றாள். “அவருடைய ஆடையோ அவர் புழங்கும் பொருளோ ஒன்று எனக்கு வேண்டும்” என்றார் ஏகாக்ஷர். கனகர் “ஒருகணம்” என்று சொல்லிவிட்டு வெளியே பாய்ந்தார். அங்கு அவர் சேடிப்பெண்ணுக்கு ஆணையிடும் ஓசை கேட்டது.

ஏகாக்ஷர் “இதை திருஷ்டிகல்பம் எனும் கலை என்பர். இக்கலை முற்காலத்தில் முனிவர்களால் உயிர் அகலும் நிலையிலிருக்கும் பேரறிஞன் ஒருவனின் கல்வி அவன் உடலுடன் முற்றழியாமல் பிறரால் பெற்றுக்கொள்ளும்பொருட்டு உருவாக்கப்பட்டது. அந்த உள்ளத்தின் அடுக்குகளில் இருக்கும் அனைத்து அறிதல்களையும் இளைய மாணவன் ஒருவன் பெற்றுக்கொண்டு அதை தொடர்ந்து எடுத்துச்செல்வான். இக்கலையைப் பயில ஒன்றுநோக்கும் விழி தேவை. அதன் பொருட்டு விழிகளிலொன்றை குருடாக்கிக் கொள்ள வேண்டுமென்று நெறியிருந்தது” என்றார்.

“தொன்றுதொட்டே இக்கலை பயிலப்பட்டுள்ளது. வேதங்கள் இம்மண்ணில் அழியாதிருந்தது இவ்வாறுதான். என் குடியில் நூறு தலைமுறைகளாக மூதாதையர் இக்கலையை பயின்றிருந்தனர். அவர்களின் நெடுநாள் இறைவேண்டலின் விளைவாக என் முதுதந்தை ஒற்றை விழியுடன் பிறந்தார். பன்னிரு தலைமுறைகளாக எங்கள் குடியில் மூத்த மைந்தர் ஒற்றைவிழியுடனேயே பிறக்கிறார்கள். ஏகாக்ஷ குலம் என்று நாங்கள் அழைக்கப்படுகிறோம்.”

“இக்கலையை உலகியலின் பொருட்டு நாங்கள் பயன்படுத்தலாகாது. ஆனால் இதன் விளைவாக இப்புவியில் முன்னர் நிகழாத ஒன்று நிகழ்கிறது. பெரும்போர் ஒன்று பெண்டிரால் முற்றறியப்படுகிறது. அரசி, இன்றுவரை வேறெந்தப் பெண்ணும் இப்படி ஒரு பெரும்போரை அணுகியிருந்து முழுதறியவில்லை என்று உணர்க! இன்றுவரை ஷத்ரியப் பெண்களில் மெய்யறிதலில் பெருங்குறைபாடென இருந்தது இதுவே. அவர்களின் வாழ்க்கையின் அனைத்துமே போரால் முடிவாகின்றன. போரை அவர்கள் அறிவதே இல்லை.”

“இன்று அறியும் இந்த மெய்மை உங்கள் குலத்தில் என்றும் திகழ்க!” என்றார் ஏகாக்ஷர். “உங்கள் குடியிலிருந்து பெண்கொள்வோரிடம் இம்மெய்யறிதல் கடந்து செல்லட்டும். ஷத்ரியப் பெண்கள் அனைவரிடமும் இது நிலைத்து வளர்க! பாரதவர்ஷத்தில் என்றும் இனி அன்னையர் குரலும் போர்முடிவுகளில் ஒலிக்கட்டும். இனி இப்படியொரு பெரும்போர் இம்மண்ணில் நிகழாதொழிக! அரசி, அதன்பொருட்டே என் தவப்பயனை இழந்தும் இதற்கு துணிகிறேன்.”

கனகர் உள்ளே வந்து சிறிய மரப்பேழை ஒன்றை அருகே வைத்தார். ஏகாக்ஷர் அதைத் திறந்து அதிலிருந்து பருத்திச் சால்வை ஒன்றை வெளியே எடுத்தார். அதை தன் கைகளில் மடித்து வைத்துக்கொண்டு ஒற்றைவிழி திறந்திருக்க நோக்கிக்கொண்டிருந்தார். “நான் சஞ்சயனை பார்க்கிறேன். அவன் தன் அரசர் திருதராஷ்டிரருடன் அமர்ந்திருக்கிறான்” என்றார். மெல்ல முனகியபடி முன்னும்பின்னும் அசைந்தார்.

“அவர்கள் மலைச்சரிவில் அமர்ந்திருக்கிறார்கள். பந்தங்களின் ஒளியில் நிழல்கள் நீண்டு விழுந்துள்ளன. நான் அவன் நிழல் என அருகே தோன்றுகிறேன். நிழலென அவன் என்னை எண்ணுகிறான். ஆனால் பந்தங்கள் இருக்கும் திசையிலேயே நிழல் எப்படி விழமுடியுமென அவனுடைய கலங்கிய உள்ளம் உணரவில்லை. நான் மெல்ல குறுகி அவனை அடைகிறேன். அவன் உடலுடன் பொருந்திக்கொள்கிறேன்” என்று ஏகாக்ஷர் சொல்லத்தொடங்கினார்.

# கார்கடல் - 4

நீலப்பட்டுத் துணியால் மூடிக் கட்டப்பட்டிருந்த காந்தாரியின் விழிகளை தன் இமையா ஒற்றைவிழியால் நிலைகொண்டு நோக்கியபடி ஏகாக்ஷர் சொன்னார். “அரசி, இப்போது பின்னிரவு. மலையடிவாரத்தில் தன் குடில்முற்றத்தில் நிலத்தில் விரிக்கப்பட்ட ஈச்சையிலை முடைந்த படுக்கையில் திருதராஷ்டிரர் புரண்டு புரண்டு படுத்தபடி முனகிக்கொண்டிருக்கிறார். அவர் அருகே காலடியில் நான் அமர்ந்திருக்கிறேன். அவருடைய துன்பத்தின் ஒலி மட்டும் அந்த இருளில் நிறைந்திருக்கிறது.”

திருதராஷ்டிரரின் விம்மல் இருமலாகியது. நெஞ்சைப் பற்றியபடி மூச்செறிந்து பின் செறிகுரலில் சொன்னார். அவர் உடலில் பாய்ந்த அம்புகள் ஒன்றொழியாமல் என்னுடலிலும் பாய்ந்ததென்ன, சஞ்சயா? முதிரா இளமையில் அவருடன் மற்போருக்கு எழுந்தவன் நான். அந்த நாளை இன்றென அருகே உணர்கிறேன். அன்று என்னைத் தூக்கி நிலத்தில் அறைந்தார். கொல் கொல் என முழங்கியது களம். நான் தோற்றுவிட்டேன்

என உணர்ந்தேன். “கொல்லுங்கள்... கொல்லுங்கள்!” என்று கூவி நிலத்தை கையால் அறைந்தேன். என் முகத்தை மண்ணில் உருட்டிக்கொண்டேன். “கொல் பீஷ்மா, அதுதான் மற்போரின் விதி. அந்த விதி இல்லையேல் பலமுள்ளவர்கள் மாறிமாறிப் போரிட்டு காயமடைவார்கள். நாட்டில் பலமற்றவர்களே எஞ்சுவார்கள். ஆகவே போர் தொடங்கினால் ஒருவரின் இறப்பில்தான் முடிந்தாகவேண்டும்” என்றார் போர்நடுவராகிய பலாஹஹாஸ்வர். அன்று நான் இறந்தேன்.

ஆனால் எந்தை என் உடல்மேல் இருந்த தன் காலை எடுத்துவிட்டு குனிந்து “முழு ஆயுளுடன் இரு, மகனே” என்றபின் வெளியேறினார். கீழே கிடந்த நான் கையை ஊன்றி எழுந்தேன். இரு கைகளாலும் மண்ணை ஓங்கி ஓங்கி அறைந்தபடி ஓலமிடத் தொடங்கினேன். வாழ்க்கையை மாற்றியமைக்கும் எந்த முதன்மை அறிதலும் பேருவகையாகவோ பெருந்துயராகவோ நம்மை அடைகிறது. பெருந்துயரென அடைவதே மேலும் சிறந்த மெய்யறிதல். கூரிய அம்பு என நம்மை தைத்து உள்நுழைகிறது அது. சஞ்சயா, என் எடையும் வெறியும் ஒரு பொருட்டே அல்ல என்றும் தசைகளை ஆள்வது உள்ளே நிலைகொண்ட தெய்வமே என்றும் அதுவே போரை நிகழ்த்துகிறது என்றும் அன்று அறிந்தேன். நான் என்னை அறிந்த முதற்தருணம் அது. அன்று மீண்டும் பிறந்தேன்.

அன்று இரு கைகளையும் விரித்தபடி சென்று அவர் காலடியில் விழுந்து அழுதேன். “ஞானமற்ற குருடன், பிதாமகரே... எளியவன்... எனக்கு அறிவை புகட்டுங்கள். என்னை உங்கள் மாணவனாக ஏற்றுக்கொள்ளுங்கள். உங்கள் பாதங்களே என் தெய்வங்கள்” என்றேன். அவர் என் தோளைத் தழுவி தன்னுடன்

இறுக்கிக் கொண்டார். “மூடா, எளியவன் என்று என் முன் வந்து எப்படிச் சொல்வாய் நீ?” என்றார். “நீ அஸ்தினபுரியின் பேரரசன். உன் பாதங்களில் பாரதவர்ஷம் வந்து பணியும். என் வில்மேல் ஆணை” என்று சொன்ன அவர் குரல் என்றும் என்னுடன் இருந்தது. மூதாதையர் உடனிருப்பதுபோல. யயாதியும் ஹஸ்தியும் குருவும் சந்தனுவும் விசித்திரவீரியனும் அருகமைவதுபோல. “நான் என்றும் உன்னுடன் இருப்பேன். என் வாழ்வின் இறுதிக்கணம் வரை” என்றார் எந்தை.

அன்று உணர்ந்த அவர் உடல்மணத்தை ஒருநாளும் என் மூக்கு மறந்ததில்லை. கங்கையின் நீர்ப்பாசியின் இன்மணம் அது. சஞ்சயா, அன்றுமுதல் இன்றுவரை ஆலமரநிழலில் நின்றிருக்கும் தண்மையிலேயே இவ்வாழ்க்கையை கழித்தேன். இதோ இன்று, விரும்புவதற்கும் அடிபணிவதற்கும் தந்தையில்லாதானேன். அதைவிட ஊடிச்சினந்து விலகுவதற்கும் என் பிழைகளை எடுத்துச் சுமத்தி வசைபாடுவதற்கும்கூட இப்புவியில் எவருமிலாதவனானேன்.

நெஞ்சில் அறைந்து வானை நோக்கி கூவுபவர் என “தெய்வங்களே, மூதாதையரே, இன்று இத்தருணத்தில் முற்றிலும் விழியிலாதானேன். இருளன்றி வேறேதும் சூழ்ந்து இல்லை எனக்கு” என்றார் திருதராஷ்டிரர். நான் அவர் கொள்ளும் துயரை வெறித்து நோக்கியபடி அமர்ந்திருந்தேன். விழிகள் நிறைந்து வழிய இரு கைகளையும் படுக்கையில் அடித்தபடி திருதராஷ்டிரர் கேவலோசையும் கமறலோசையுமாக அழுதார். பின்னர் மெல்ல தேம்பி உளம் சோர்ந்து துயிலில் ஆழ்ந்தார். அவருடைய திறந்த வாயில் மூச்சு தடைபட்டு சிறிய கொப்புளங்கள்போல் ஓசையிட்டு வெளிவந்தது.

நான் எழுந்து என் மஞ்சம் நோக்கி செல்வதற்காக உடலை அசைத்த கணம் அவர் “தந்தையே! தந்தையே!” என்று பெருங்குரலில் அலறியபடி எழுந்தமர்ந்தார். தன் இரு கைகளாலும் விரிந்த கரிய நெஞ்சில் வெடிப்போசை எழ ஓங்கி ஓங்கி அறைந்தபடி குரலெழுப்பி கதறி அழுதார். சூழ்ந்திருந்த இருளில் அவ்வோசை முட்டி எதிரொலித்தது. தொலைவில் நிழலெனச் சூழ்ந்திருந்த மரங்களும் மலைப்பாறை மடிப்புகளும் அவ்வொலி கேட்டு அதிர்வதுபோல் தோன்றியது. அவர் எழுந்து நின்றார். இரு கைகளையும் வானோக்கி நீட்டி “இனி ஒன்றுமில்லை! இனி எதுவும் எஞ்சுவதில்லை!” என்றபடி காலடி வைத்து நடந்தார். அவருடைய திசை உணர்வு அழிந்திருப்பதை உணர்ந்த நான் அவர் கையைப்பற்றி நிறுத்தினேன்.

என் தோளைப்பற்றி உலுக்கியபடி “சொல்க! சொல்க!” என்று அவர் சொன்னார். “அதெல்லாம் உனது உளமயக்குதானே? உன் நெஞ்சு கொண்ட வீண்கற்பனைதானே? இப்போது ஒரு செய்திப்புறா வந்தமைந்த ஓசையை கேட்டேன். அதில் ஒன்றும் நிகழவில்லை என்றுதானே உள்ளது? ஆம், சில தருணங்களில் அவ்வாறு ஆவதுண்டு. எதிரிகள் நம்மை குழப்பும் ஓலைகளை அனுப்புவதுண்டு.” பற்கள் தெரிய நகைத்து “பிதாமகரை எவர் வெல்ல இயலும்? இப்புவியில் அவர் தோற்கடிக்கப்படுவாரெனில் ஐம்பெரும் பருக்களையும் ஒருவன் அடக்கி எழுகிறான் என்றுதானே பொருள்? மூவிழியனும் பாலாழியில் படுத்தவனும் அன்றி வேறெவரால் அது இயலும்? இல்லை, எனக்கு உறுதியாகத் தெரிகிறது. அது பிழைச் செய்தியே” என்றார்.

அவருடைய கொந்தளிப்பு எழுந்து அடங்குவதற்காக நான் காத்து நின்றிருந்தேன். “அங்கிருந்து செய்தி ஏதும் வந்ததா?”

என்று அவர் ஒருகணம் முன்பு பேசியதை மறந்தவராக மீண்டும் கேட்டார். திருதராஷ்டிரரின் உள்ளம் தனித்தனி துண்டுகளாக சிதறிவிட்டிருப்பதுபோல் உணர்ந்தேன். ஒவ்வொரு துண்டிலும் ஒவ்வொரு காலம் திகழ்ந்தது. ஒவ்வொரு காலமும் பிறிதொன்றை அறியாத தனியுலகை கொண்டிருந்தது. "என்ன ஆயிற்று? போரில் என்ன நிகழ்ந்துகொண்டிருக்கிறது?" என்று அவர் என்னை நோக்கி உரக்க கூவினார். "என் மைந்தர்கள் அங்கு என்ன செய்கிறார்கள்? போர் எதை நோக்கி செல்கிறது?" என்றார்.

"அரசே, பத்தாம்நாள் போர் முடிந்துவிட்டது" என்று நான் சொன்னேன். "பிதாமகர் பீஷ்மர் எங்கே? அவரை சூழ்ந்துகொண்டார்களல்லவா?" என்றார். "அவர் களத்தில் வீழ்ந்திருக்கிறார். அம்புப்படுக்கையில் அவரை படுக்க வைத்திருக்கிறார்கள்" என்று நான் சொன்னேன். "ஆம்" என்றபின் மீண்டும் "எங்கிருக்கிறார் பிதாமகர்? அவரை அர்ஜுனன் எதிர்கொள்கிறான் அல்லவா?" என்றார். "அஞ்சிவிட்டிருப்பான். அவரை மானுடர் எவரும் எதிர்கொள்ள முடியாது... அஞ்சி ஓடியிருப்பான் சிறுவன்... ஆம்!" என்றார். நான் சலிப்புற்றாலும் மீண்டும் மீண்டும் நிகழ்ந்ததையே சொல்லிக்கொண்டிருந்தேன்.

திருதராஷ்டிரர் எங்கெங்கோ சென்று மீண்டு வந்தார். "என் மைந்தர்கள் அங்கே கானாடிக்கொண்டிருக்கிறார்கள். நூற்றுவர் மைந்தர்! ஆம், நூற்றுவர்! உன்னால் எண்ணிப்பார்க்க இயல்வதா அது?" என்று மலர்ந்த முகத்துடன் அவர் கேட்டார். "இப்புவியில் பெருந்தந்தையான தீர்க்கதமஸ்கூட நூறு மைந்தரை பெற்றதில்லை. என்னைவிட மிகுதியாக மைந்தரைப் பெற்ற தந்தையரென எவருமில்லை" என்றார். பின்னர் இரு கைகளையும் விரித்து தலைதூக்கி வானை பார்த்தார். கரிய

முகத்தில் பற்கள் தெரிந்தன. விழிக்குமிழ்கள் உருள “அறிக, விழியிழந்தோனால் மட்டுமே அத்தனை மைந்தரை பெற முடியும்! தீர்க்கதமஸ் தன் வாணாள் இறுதியில் உணர்ந்ததை நான் இப்போது உணர்கிறேன். குருட்டுக் காமம். பெருங்களிற்றின் வெண்குருதி... அதுவே அத்தனை மைந்தரை எழுப்ப முடியும்!” என்றார்.

தலையை உருட்டியபடி “என்னிடம் பிரம்மன் வந்து உனக்கு விழியளிக்கிறேன், ஆனால் நூறு மைந்தருக்கு தந்தையாகும் நல்லூழை அளித்துவிடு என்றால் இன்னும் ஏழு பிறவிகள் எனக்கு விழியின்மையை அளியுங்கள், நிகராக இன்னும் நூறு மைந்தரை எனக்கு அளியுங்கள் என்றே கேட்பேன். மைந்தரை தழுவித் தழுவிச் சலிக்காத தோள்களோடு இந்த அரண்மனையில் அமர்ந்திருக்கிறேன். என்னைப் பார்த்து தெய்வங்கள் பொறாமை கொள்கின்றன” என்றார். அவர் புன்னகை பெரிதாகிக்கொண்டே இருந்தது. கண்குமிழிகளை அலைபாய விட்டபடி “என் மைந்தர் ஒருவரும் ஒன்றுக்கொன்று குறைவற்றவர்கள். நிறைந்த பெருந்தோள்கள், நிகரற்ற ஆற்றல். அன்பெனும் சரடால் பிணைந்த சுற்றம் அவர்கள்” என்றார்.

“சஞ்சயா, மைந்தரைப் பெற்றிருந்தால் நீ இதை அறிவாய். தன் மைந்தர் கல்வி, புகழ், செல்வம், அரசு என எத்தனை மேன்மையடைந்தாலும் கைக்கு தொட்டு நெஞ்சோடு சேரும் பேருடல் கொண்டிருப்பதையே தந்தையர் மேலும் மகிழ்வென உணர்வார்கள். ஏனெனில் பிற அனைத்தையும் உணர்வது உள்ளம். தொட்டுத் தொட்டு அறிவது உடல். உள்ளம் மயக்குகொள்வது. தெய்வங்களின் மாயக்களம். உடல் மாற்றிலாதது. பிறிதொன்று அறியாத பெற்றி கொண்டது.

மைந்தரென்பது உடலின் நீட்சியல்லவா? அவர்களுக்கு நான் அளித்தது அந்த உடலை அல்லவா?”

வெடித்து நகைத்து “முன்பொரு சூதன் வந்து என்னிடம் சொன்னான். அவர்கள் என்னுடைய ஆடிப்பாவைகள் என. ஆம், அவர்கள் நானேதான். மூதாதையின் சொல் ஒன்று உள்ளதல்லவா, மகன் என்னும் நீ நானே என. அதை உணராத தந்தை எவன்? நான் ஒவ்வொரு நாளும் என்னை நானே தழுவிக்கொண்டிருந்தேன். மைந்தர் மைந்தர் மைந்தரென்று பெருகி நானே என்னைச் சூழ்ந்திருந்தேன். இப்புவியில் என்றேனும் பிரம்மன் மானுடனாக பிறக்க விழைந்தால் விழியின்மை கொண்டு என்னைப்போல் ஒரு பெருந்தந்தையாகவே பிறப்பான். மைந்தரால் நிறைவுறுவான். ஆம், ஐயமே இல்லை” என்றார்.

நான் “உண்மைதான், அரசே. நான்முகனை முதற்பிரஜாபதி என்பதல்லவா வழக்கம்?” என்றேன். எதிர்பாராத அறை ஒன்று விழுந்ததுபோல் திரும்பி “என்ன நிகழ்ந்தது? எங்கே என் மைந்தர்? போர்க்களச் செய்திகள் வந்துகொண்டிருந்தனவே?” என்றார். “அரசே, பத்தாம்நாள் போர் முடிந்து நாம் குடிலுக்கு திரும்பிவிட்டோம். இப்போது நள்ளிரவாகிறது” என்றேன். “பீஷ்ம பிதாமகர் என்ன ஆனார்?” என்று திருதராஷ்டிரர் உரத்த குரலில் கேட்டார். “அரசே, அவர் களத்தில் வீழ்ந்துவிட்டார்” என்றேன். “யார்?” என்றார் திகைப்புடன். “பிதாமகர் பீஷ்மர்” என்றேன். “எவர் சொன்னது? எந்த அறிவிலியின் சொல் அது? கீழ்மகனே, பிதாமகர் எப்படி களம்பட முடியும்? அவரை வெல்லும் மானுடன் எவன்?” என அவர் கூவினார்.

நான் மீண்டும் பொறுமையை வரவழைத்து “அரசே, நமது கைகளில் எதுவும் இல்லை. நாம் முற்றறியக்கூடுவதும்

ஏதுமில்லை. பிதாமகரை வீழ்த்தும் பெருவலி ஒன்றுள்ளது. அதை ஊழ் என்கின்றனர் தொல்முனிவர்” என்றேன். அவர் இரு கைகளும் தளர்ந்து உடலில் உரசி விழ தரையில் அமர்ந்து “ஆம்!” என்றார். “ஆம், அவர் ஊழால் வீழ்த்தப்பட்டார். மானுடரால் வீழ்த்தப்படாதவற்றை வீழ்த்தும் பொருட்டு தெய்வங்களால் உருவாக்கப்பட்டது ஊழ்.” இரு கைகளையும் மார்போடு சேர்த்து வணங்கியபடி விசும்பினார். “தெய்வங்களே, பெருங்கோபுரங்களை நீங்கள் எழுப்புவது காலால் தட்டிக்கலைத்து விளையாடுவதற்காகத்தானா?”

நான் ஆழ்ந்த உளநடுக்கொன்றை அடைந்து மூச்சு நின்று மீண்டும் எழப்பெற்றேன். அங்கிருந்து எழுந்து உடனே விலகிவிடவேண்டுமென்று தோன்றியது. எவரிடம் என்றோ எத்திசை நோக்கியோ என்றிலாத அந்த கைகூப்பல் என் உள்ளத்தில் சொல்குலையச் செய்தது. அப்போது எவரும் உடனிருக்கலாகாது. அது மானுடரும் அவர்களுடன் விளையாடும் தெய்வங்களும் மட்டும் தனித்திருக்கும் தருணம். இயற்கையென உருக்கொண்டு சூழ்ந்திருக்கும் பருவெளிகூட தன் பொருந்தாமையை உணர்ந்து அகன்றுவிட வேண்டும். எந்த விழியும் செவியும் அதை வெளிநின்று அறியக்கூடாது.

ஆனால் அவர் எப்போதும் அப்படித்தான் இருக்கிறார். முழுமுற்றான தனிமையில். அவர் எவரையும் பார்க்கவில்லை என்பதனால் எவராலும் பார்க்கப்படாதவராக இருக்கிறார். எவரையும் பார்க்காத ஒருவரின் முன் அத்தனை ஆண்டுகள் இருந்தமையாலேயே இன்மையென ஆகும் பயிற்சியை நான் அடைந்திருந்தேன். அங்கிலாதவன், அவரை முற்றறியாதவன். அவர் கைகளைப் பற்றித் தாழ்த்தி மடியில் அழுத்திக்கொள்ள வேண்டும் என்று தோன்றியது. எவரை வணங்குகிறீர்?

சூழ்ந்திருப்பது வெறும் இருள், பிறிதொன்றும் அல்ல என்று சொல்லவேண்டுமென்று தோன்றியது. எந்த வினாக்களுக்கும் விடையளிக்காத வெறுமை. இரக்கமில்லாத விழியின்மை கொண்டது.

திருதராஷ்டிரர் நடுங்கிக்கொண்டிருந்தார். அவர் தன்னுள் நிறைந்து நிறைந்து விம்முவதாகப் பட்டது. நான் என்னுள் திரண்ட பெருமூச்சை அடக்கி மேலும் அடக்கி பின்னர் நீளொலியுடன் விடுத்தேன். அதைக் கேட்டு தொடப்பட்ட மரக்கிளை உலுக்கிக்கொண்டு நீர்த்துளிகளை உதிர்ப்பதுபோல அவர் அழத்தொடங்கினார். உதடுகள் விம்மலில் வெடித்தன. தோள்கள் குலுங்கி அதிர்ந்தன. விழிநீர் வழிந்து மார்பில் சொட்டியது. ஒரு சொல்லும் இலாத தூய அழுகை. ஒலிகூட இல்லாதது. அவ்வழுகையை அறிபவர் மிக அண்மையில் இருக்கிறார் எனும் உணர்வில் எழும் அழுகை அது.

நான் அவருடைய அழுகையை நோக்கிக்கொண்டிருந்தேன். நெஞ்சில் கூப்பிய கைகளை விரித்து முகத்தை இரு கைகளாலும் அழுந்தத் துடைத்தபின் திருதராஷ்டிரர் வலக்கையை ஊன்றி எடை மிக்க உடலைச் சரித்து ஈச்சைப் பாயில் படுத்தார். எழுந்து சென்றுவிடவேண்டுமென்று எண்ணினேன். அதற்குள் திருதராஷ்டிரர் "சஞ்சயா பார், அதோ நம் முன் குருக்ஷேத்ரம் நிகழ்கிறது. நோக்கு. அங்கே என்ன நிகழ்கிறது என்று சொல்" என்றார். "அரசே, இது இரவு. இங்கு ஆடிகளுமில்லை" என்றேன். "உன்னால் பார்க்க இயலும். பார்த்துச் சொல்" என்றார். நான் "ஆனால்..." என்று மீண்டும் சொல்ல அவர் உரக்க "பார்த்துச் சொல்! பார்த்துச் சொல்!" என்று கூவினார்.

“அங்கே அவர் தன்னந்தனிமையில்தான் படுத்திருக்கிறாரா? மருத்துவர்கள் உடனிருக்கிறார்களா? அந்த அம்புகளில் ஏதாவது அவரது உயிரை தொட்டிருக்கிறதா?” நான் சில கணங்களுக்குப் பின் “பார்க்கிறேன், அரசே” என்றேன். “ஒளியைப்போலவே இருளைக்கொண்டும் பார்க்க முடியும். அதை நான் அறிவேன். ஆனால் என் அகவிழி அடைந்து கிடக்கிறது. நீ அகன்றிருக்கிறாய், துயரற்றிருக்கிறாய். ஆகவே உன்னால் பார்க்க முடியும். துயரற்றவர்கள் மட்டுமே இக்களத்தை முழுமையாக பார்க்க முடியும். இக்களத்தில் ஒருவரையேனும் உள்ளத்தாலேனும் கொன்ற எவரும் பின்னர் இதை பார்க்க இயலாது” என்றார் திருதராஷ்டிரர்.

நான் பெருமூச்சுடன் “ஆம். முயல்கிறேன், அரசே!” என்றபின் என் இரு கைகளையும் ஒன்றின் மேல் ஒன்றென வைத்து மடியில் அமைத்து மூச்சை சீராக இழுத்துவிட்டு மூக்கு நுனியில் விழிமணிகளை நிறுத்தி ஊழ்கத்திலாழ்ந்தேன். அவர் மூச்சு துயிலிலென ஒலிக்கத்தொடங்கியது. என் தோள்கள் சற்று தொய்ந்து அகம் அமைதி கொண்டது. பின்னர் தாழ்ந்த குரலில் “குருகுலத்து அரசே, கேள்” என்றேன். திருதராஷ்டிரர் நெஞ்சில் கை வைத்து படுத்தபடியே சற்று தலைவணங்கினார். “நான் ஒற்றைவிழியனாகிய ஏகாக்ஷன். உன்பொருட்டு எழுந்தவன். என் சொற்களைக் கேள்” என்றேன். திருதராஷ்டிரர் கைகூப்பினார்.

“அங்கு குருக்ஷேத்ரப் போர்க்களத்தின் வடமேற்கு எல்லையில் அமைந்த படுகளத்தை தீயாலான வேலியொன்று பாதுகாக்கிறது. அதற்குள் செம்பட்டு விரித்ததுபோல் பந்தங்களின் ஒளி நிறைந்திருக்கிறது. காற்றில் பந்தங்களின் சுடர்கள் அசைகையில் அங்கு விழுந்து கிடக்கும் சிவந்த

பட்டுத் திரைச்சீலையொன்று அதில் வரையப்பட்டிருக்கும் ஓவியங்களுடன் அசைவதுபோல் தெரிகிறது. அதன் வேலிக்குள் ஏழு மருத்துவ உதவியாளர்கள் இருக்கிறார்கள். மூவர் துயில் கொண்டிருக்க இருவர் விழித்திருக்கிறார்கள். விழித்திருப்போர் இருவரும் தங்கள் விரல்களை கட்டைவிரலால் தொட்டு ஊழ்க நுண்சொல்லொன்றை மீள மீள உள்ளத்தில் ஓடவிட்டுக்கொண்டிருக்கிறார்கள். இருவர்களின் உதடுகளும் மெல்ல அசைந்துகொண்டிருக்கின்றன. இமைகள் தாழ்ந்து விழிகள் அரைமூடி இருக்கின்றன.”

“அவர்களின் ஆசிரியர் அப்பால் மரவுரி விரித்து அதன் மேல் படுத்து துயில்கொண்டிருக்கிறார். அவருடைய காலடியில் சற்று முன்பு வரை அவர் படித்துக்கொண்டிருந்த ஏடுகள் அடங்கிய ஆமாடப்பெட்டி வைக்கப்பட்டுள்ளது. நடுவே அம்புப்படுக்கை மேல் பீஷ்மர் படுத்திருக்கிறார். அந்தப் படுக்கை அவரை நீர்ப்படலம் பூச்சிகளை என ஏந்தியிருக்கிறது. தன் வாழ்நாளில் எப்போதும் அத்தகைய எடையின்மையை அவர் உணர்ந்ததில்லை. அவர் உடலில் இருந்து குருதி ஒழுக்கு முழுக்க தடுக்கப்பட்டுவிட்டது. சீரான இடைவெளியில் அவருக்கு பழச்சாறும் தேனும் அளிக்கப்படுகிறது. ஆகவே நீண்ட நற்துயிலுக்குப் பின் உளம் தெளிந்து விழிப்பு கொண்டிருக்கிறார்.”

“திருதராஷ்டிர மாமன்னனே, இப்போது அங்கே படுத்திருப்பவர் குருகுலத்தின் பிதாமகரல்ல. உங்கள் எவருக்கும் தந்தையல்ல. நோன்புகளை தலைசூடி நகர்வெளிகளில் அயலவனாகவும் காடுகளில் மேலும் அயலவனாகவும் அலைந்த தனியனும் அல்ல. எட்டு மைந்தரில் கடையோனாகிய காங்கேயன் அல்ல. எட்டு வசுக்களில் ஒருவனுமல்ல. முற்றிலும் பிறிதொருவன்.

தசைகளால் ஏந்தப்படாதவன். சொற்களால் தன்னை வெளிப்படுத்திக்கொள்ளாதவன். புலன்களால் அறியும்போதும் புலன்களுக்கு அப்பாலிருப்பவன். அம்புகளால் தொடப்படாதவன். துயரும் வலியும் அற்றவன். தானென உணர்கையில் துளியென்றும் கடலென்றும் ஒரே தருணம் இருப்பவன். அரசே, அவன் அழிவற்றவன்."

"அந்த எல்லைக்கு வெளியே பிறிதொரு உயிர் வேலியாக கூர்வேல் ஏந்திய வில்லவர்கள் நின்றிருக்கிறார்கள். அவர்கள் சொல்லின்றி ஒருவரோடொருவர் பேசிக்கொள்ளும் பொருட்டு நுண்ணிய ஒளிக்கற்களை கையில் வைத்திருக்கிறார்கள். குறடுகள் மீது மரவுரி சுற்றியிருப்பதனால் ஓசையின்றி நிழல்கள்போல் நடமாடுகிறார்கள். படுகளத்திற்கு நெடுந்தொலைவில் கௌரவப் படையினர் மெல்ல மெல்ல உளக்கொந்தளிப்பு அடங்கி துயிலுக்கு தங்களை அளித்துவிட்டிருக்கிறார்கள். அவர்களின் மூச்சொலிகள் எழுந்து இணைந்து காற்றின் ஓசையென ஒலிக்கின்றன. அவ்வப்போது எழும் மென்காற்றில் கொடிகளும் பந்தச் சுடர்களும் அசைந்துகொண்டிருக்கின்றன."

"யானைகள் கருங்கல் கந்துகளில் உடலெடை சாய்த்து ஒற்றைக்கால் தூக்கி ஓய்வெடுத்து துயில் கொண்டிருக்கின்றன. குளம்புக்கால் ஒன்றைத் தூக்கி, பிடரி சிலிர்த்து குலைய, தலை மிகத் தாழ்த்தி புரவிகள் துயில்கின்றன. அவ்வப்போது விழித்துக்கொண்டு குளம்பொலிகளுடன் கால் மாற்றிக்கொண்டு நீள்மூச்செறிகின்றன. எதிரில் பாண்டவப் படையும் துயின்றுவிட்டிருக்கிறது. அவர்கள் முதலில் துயர்கொண்டனர். பின்னர் ஆறுதலும் அதன் நீட்சியென களிப்பும் அடைந்தனர். களிப்பின் உச்சியில் இழப்புணர்வை எய்தினர். அது துயரென்று

மாறிற்று. தொடங்கிய இடத்திற்கே வந்ததும் அனைத்தையும் உதறிவிட்டு அன்னை மடியில் முகம் புதைக்கும் குழவியர்போல் துயிலை சென்றடைந்தனர். அன்றன்று இறந்து பிறக்காவிடில் இங்கு மனிதர் வாழ்வதெப்படி?"

"அரசே, கேள். அந்த வேல் வளையத்திற்கு மிக அப்பால் தெற்குக் காட்டின் எல்லையில் சிகண்டி ஸாமி மரத்தின் அடியில் கைகட்டி சாய்ந்து நின்றபடி அவரை பார்த்துக்கொண்டிருக்கிறான். முற்றிலும் இலையிலாது முள் மட்டுமேயான மரம் அது. காற்று செல்கையில் ஆயிரம் நாகக்குழவிகள்போல அது சீறிக்கொண்டிருந்தது. அவன் அங்கு நிற்பதை அவன் உடலில் சென்று முட்டிக்கொள்வது வரை பிறர் அறிய இயலாது. மூச்சும் உளதோ என்று தோன்றும் முற்றமைவு. அவன் விழிகள் மட்டும் இரு நீர்த்துளிகள்போல் மின்னிக்கொண்டிருக்கின்றன."

"அங்கிருந்து வடக்காகச் சென்றால் பாண்டவர்களின் பாடிவீட்டின் நிரைகள் தென்படுகின்றன. அதில் வடகாட்டின் எல்லையில் அமைந்தது அர்ஜுனனின் யானைத்தோல் குடில். அவன் காவலர்களும் அணுக்கர்களும் துயில்கொண்டிருக்கிறார்கள். வெளியே வந்து அங்கு நிற்கும் மகிழ மரத்தடியில் சாய்ந்து ஒரு காலை தூக்கி அடிமரத்தில் மடித்து வைத்து கைகளை மார்பில் கட்டியபடி அவன் பீஷ்மரின் படுகளத்தை பார்த்துக்கொண்டிருக்கிறான். அங்கிருந்து பார்க்கையில் விண்ணில் தோன்றிய ஒரு தழல்போல் அது தெரிகிறது. சற்று அப்பாலிருக்கும் பந்தங்களின் ஒளியில் அவனுடைய தாடி அனலென சுடர்ந்துகொண்டிருக்கிறது. இளங்காற்றில் அவன் குழல் கற்றைகள் அசைகின்றன. பந்தங்கள் தழலாடுகையில் அவன்

இமைகளின் நிழல் நெற்றிமேல் நீண்டு சென்று மீண்டமைகிறது.”

“அரசே, இப்பால் கௌரவப் படைகளின் நடுவே தன் பாடிவீட்டின் முகப்பில் சிறிய மேடை ஒன்றை இழுத்திட்டு அதில் கால் மடித்தமர்ந்து தொலைவில் தெரியும் பாடிவீட்டை பார்த்துக்கொண்டிருக்கிறான் கௌரவர்களின் அரசன். அவனுடைய இளையோனாகிய துச்சாதனன் சற்று அப்பால் நிலத்தில் அமர்ந்து முழங்கால்களின் மேல் கைகள் கோத்து தன் தமையனையே விழியசைக்காது நோக்கிக்கொண்டிருக்கிறான். தன்னளிப்பு கொண்ட நாய்களுக்கே உரிய விலகா நல்நோக்கு அது. அவன் உள்ளத்தில் ஒரு சொல்லும் இல்லை.”

“அவர்களுக்குப் பின்னால் காந்தாரர்களின் படைநிலையில் தன் பாடிவீட்டின் முகப்பில் நின்று சகுனியும் பீஷ்ம பிதாமகரை பார்க்கிறான். அவனுக்கு அருகே ஏவலன் கொண்டு வைத்த இன்நீர் தொடப்படாமலிருக்கிறது. புண்பட்ட காலை நன்கு நீட்டி அதன் மேல் ஒரு மெல்லிய துணியை போட்டிருக்கிறான். எதையோ சொல்வது போலவோ வாய்க்குள்ளிட்டு எதையோ மெல்வது போலவோ உதடுகள் அசைந்துகொண்டிருக்கின்றன. விழிகள் நிலைகொளாது உருண்டாலும் நோக்கு அங்கிருந்து நோக்கவியலாத பீஷ்ம பிதாமகரிலேயே பதிந்திருக்கிறது.”

“அரசே, கேள். அங்கு அந்தப் படைகளில் மேலும் பல்லாயிரவர் துயிலாது பீஷ்ம பிதாமகரை நோக்கிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் துயின்றவர்களோ அவருக்கு மிக அண்மையில் இருக்கிறார்கள். சிலர் அவர் மடியில் மகவுகளாக ஏறி விளையாடுகிறார்கள். அவர் தோளில் அமர்ந்து தலை முடியைப்பற்றி உலுக்கியும் கால்களால் அவர் மார்பை

அடித்தும், கை நீட்டி அங்கு செல்க அதை கொணர்க என்று கூச்சலிட்டும் களியாடுகிறார்கள். அவருடைய மேலாடையை எடுத்து தன்னுடலில் சுற்றிக்கொண்டும் அவருடலில் தங்களுடலை பதித்துக்கொண்டும் விளையாடுகிறார்கள். அவர் கைகளையும் கால்களையும் பற்றிக்கொண்டு உடலில் தொற்றி ஏற முயல்கிறார்கள். பல்லாயிரம் சிதல்களால் மொய்க்கப்படும் தொன்மையான மரம்போல் அவர் அங்கு படுத்திருக்கிறார்.”

“விழி கொண்டவனே, அறிக! அங்கு மிக அப்பால் யாதவர்களின் சிறிய படை நடுவே அமைந்த எளிய ஈச்சைஓலைக் குடிசைக்குள் மரவுரி விரித்து மல்லாந்து படுத்து அவர் துயில் கொண்டிருக்கிறார். ஆழ்துயில். ஆயினும் எத்துயிலிலும் விழித்திருக்கும் பீலி அவர் தலையில் அனைத்தையும் நோக்கிக்கொண்டிருக்கிறது.”

# கார்கடல் - 5

கங்கையின் கரையில் இடும்பவனத்தில் அமைந்த இடும்பபுரியின் அருகே காட்டுக்குள் எழுந்த சிறுகுன்றின்மேல் தொல்லிடும்பர்களின் இடுகாட்டில் கிளையிலா அடிமரம்போல் ஓங்கி நின்றிருந்த பெரிய நடுகற்களின் நிழல்களை நெளிந்தாடச் செய்யும் பந்தங்கள் எரிந்த ஒளிப்பரப்பிற்குள் எழுவர் அமர்ந்திருந்தனர். காவலர் மூவர் வேல்களுடன் அப்பால் நின்றனர். அவர்களில் நால்வர் முதியவர்கள். மூவர் முதிரா இளையோர். அவர்களில் ஒருவன் இடும்பவனத்தின் இளவரசனாகிய மேகவர்ணன். பேருடலனான அவன் அமர்ந்திருக்கையிலேயே நின்றிருந்த வேலவர்களின் தோளுயரம் இருந்தான்.

அருகே மூதாதையாகிய இறுதி இடும்பரின் பெருங்கல்லுக்கு முன்னால் விரிக்கப்பட்ட ஏழு தலைவாழை இலைகளில் குருதியூனும், சோற்றுருளைகளும் பரிமாறப்பட்டு அருகே செந்நிற மலர்கள் படைக்கப்பட்டிருந்தன. ஏழு மண்மொந்தைகளில் நுரைஎழுந்து நின்ற புதுக் கள் வைக்கப்பட்டிருந்தது. தரைதொட நீண்ட எருக்குமணி மாலை சூடி நின்றிருந்த இடும்பரின் பெருங்கல் மீது மஞ்சளும் சுண்ணமும் கலந்த செங்குருதிக் குழம்பு பூசப்பட்டிருந்தது. அப்பெருங்கல் மண்ணுக்குள்ளிருந்து எழுந்த பசி கொண்ட ஒரு நாக்குபோல நின்றிருந்தது. அதனருகே சற்று முன்புவரை பூசகர்கள் மீட்டிய குடமுழவும் கலவீணையும் நந்துனியும் வைக்கப்பட்டிருந்தன.

குலப்பூசகரான குடாரர் எரிபந்தத்தின் கீழ் பசுஞ்சாணி மெழுகிய தரையில் செங்களம் வரைந்துகொண்டிருந்தார். செந்நிற மண்பொடியும் சுண்ணப்பொடியும் கரிப்பொடியும் அவருடைய கையருகே கொப்பரைகளில் காத்திருந்தன. அவர் கைகளிலிருந்து பொழிந்து கோடுகளும் அலைகளுமாக களமாகி விரிந்தன வண்ணப்பொடிகள். மேகவர்ணன் அந்த நடுகல்லையே பார்த்துக்கொண்டிருந்தான். தழல் அசைவிழந்து கல்லென்றானது எவ்வண்ணம் என்று எண்ணிக்கொண்டான். அவனுடைய எண்ணங்களை பகிர்ந்துகொள்பவர்கள் அல்ல அங்கிருந்தவர்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்குரிய தனியுலகில் இருந்தனர். அவனுக்கு நேர்முன்னால் இருந்த முதிய இடும்பரான கன்மதர் அரைத்துயிலில் என ஆடிக்கொண்டிருந்தார். சற்றுமுன்புவரை அவர் மீட்டிய முழவின் தாளம் அவருடைய குருதியில் அப்போதும் எஞ்சியிருந்தது.

குடாரர் சற்று தள்ளி அதன் முழுவுருவை நோக்கினார். இரு முக்கோணங்கள் ஒன்றையொன்று வெட்டின. அந்த மையத்திலிருந்து எழுந்த கோடுகள் மடிந்து மடிந்து ஒன்றையொன்று வெட்டி நூற்றுக்கணக்கான முக்கோணங்களாக மாறிக்கொண்டிருந்தன. முக்கோணங்கள் இணைந்து ஒரு வட்டமாயின. மலர்போல் இதழ் கொண்டன. முழுமை நோக்கில் வட்டமாகவும் ஒவ்வொன்றாக பார்க்கையில் முக்கோணங்களின் தொகையாகவும் அந்தக் களம் நிறைவடைந்துகொண்டிருந்தது. அதை நோக்க நோக்க ஒவ்வொன்றும் பிறிதொன்றுடன் இசைவுகொள்ளத்தக்கதாகவே இங்கு அமைந்துள்ளன என்னும் எண்ணம் எழுந்தது. அந்த ஒழுங்கு இங்கே அனைத்தும் எளிதே என எண்ணச் செய்தது. ஆனால் நோக்க நோக்க அப்பின்னல்வெளியின் விரிவு உள்ளத்தை மலைக்கச் செய்தது.

இடும்பகுலத்து முதிய பூசகராகிய பூதர் கையில் உடும்புத்தோல் இழுத்துக்கட்டிய உடுக்குடன் அமர்ந்திருந்தார். அவருடைய சுட்டுவிரல் கற்பரப்புபோல கடினமாகத் தோன்றிய தோல்வட்டத்தை நிலையழிந்ததுபோல மெல்ல வருடிக்கொண்டிருந்தது. அவருடைய உள்ளத்தையே அவருடைய விரலாக பார்ப்பதுபோல் இருந்தது. இடும்பகுடியின் முதுபூசகராகிய ஊர்த்துவர் “ம்?” என்றார். களம் வரைந்துகொண்டிருந்த குடாரர் “ம்” என மறுமொழி சொல்லிய பின் களம் முடித்து ஒரு கூர்கல்லை அக்களத்தின் நடுவே அழுத்தி நிறுத்தினார்.

குடாரர் திரும்பிப்பார்த்து “உம்” எனும் ஒலியை எழுப்பினார். கனவிலிருந்து விழித்ததுபோல் உடலில் அசைவு தோன்ற எழுந்த பூதர் தன் இரு விரல்களாலும் மெல்ல உடும்புத்தோல்

உடுக்கையை மீட்டத்தொடங்கினார். நன்கறிந்த ஆனால் உடலில்லாத விலங்கொன்றின் உறுமல்போல் அதன் ஓசை எழுந்து சூழ்ந்திருந்த இருளில் எதிரொலித்தது. ஊன்நெய் பூசிய துணி சுருட்டிக் கட்டிய பந்தம் ஒன்றை கொளுத்தி கொண்டுவந்து அக்களத்தின் தெற்கு மூலையில் நட்டார் குடாரர். பந்தத்தின் ஒளியும் உடுக்கின் ஓசையும் ஒன்றுடன் ஒன்று கலந்தன. ஓசைக்கேற்ப தழல் நடமிட்டது. தழல்நடனம் உள்ளத்தின் தாளமென விழிகளினூடாக நுழைந்தது.

மேகவர்ணன் மெல்ல மெல்ல தன் தசைகள் இறுகுவதை விரல்கள் சுருண்டு உள்ளங்கைக்குள் அழுந்துவதை உணர்ந்தான். கிட்டித்த பற்களின் ஓசை காதில் கேட்டது. குடாரர் களம் நடுவே நடப்பட்ட சிறு கல்லுக்கு மூன்று அன்னப்பருக்கைகளை எடுத்து படையலிட்டார். மூன்று சிறு தெச்சி மலர்களை வைத்து வணங்கினார். பின்னர் தன் சிறுகத்தியை எடுத்து சுட்டுவிரல் முனையை அறுத்து மூன்று சொட்டுக் குருதியை அந்தக் கல்லின் முன்னால் அமைக்கப்பட்ட சிறிய பலிபீடக் கல்மேல் விட்டார். கைகூப்பியபடி அச்சிறுகல்லையே பார்த்துக்கொண்டிருந்தார்.

மேகவர்ணன் திரும்பி அப்பால் நின்ற இடும்பரின் பெருஞ்சிலையை மீண்டும் பார்த்தான். அவனுடைய முதுமூதாதை அவர். அன்று இக்காடுகளில் அவன் குடி நிலம் தொடாது வானிலென வாழ்ந்துகொண்டிருந்தது. காடுகளுக்கு அப்பாலிருந்து வந்த பெருந்தோளராகிய பீமசேனரின் முன் தோற்று அம்மூதாதை நிலம்பதிந்தார். அவன் மூதன்னை பீமசேனருக்கு மனைவியாகி அவன் தந்தையை ஈன்றாள். நிலமைந்தரின் குருதி அவர்களின் குடியில் கலந்தது. அவர்களின் காட்டுச்சிற்றூர் நகராகியது. அவர்கள் நிலத்தில்

நடமாடத் தொடங்கினர். அவர்களின் கால்கள் மண்ணுக்கு பழகியபோது கைகள் மரக்கிளைகளை மறக்கத் தொடங்கின.

அவன் குடியில் பலர் தங்கள் தந்தையர் காட்டு மரக்கிளைகளுக்குள் பறந்து செல்வதை பார்த்திருந்தார்கள். அவன் தந்தை மரங்களின்மேல் பறக்கும் ஆற்றல்கொண்டவர் என்றாலும் நிலத்தில் கால்வைத்து எடை கொண்ட உடலை அசைத்து நடந்தார். அவனுக்கு கால் சற்று தரையிலிருந்து மேலெழுந்தாலே கைகள் பதறத்தொடங்கின. உடலுக்குள் திரவம் ஒன்று அதிர்ந்தது. தந்தை கடோத்கஜர் மரங்களுக்கிடையே பாய்ந்துசெல்கையில் கீழே சரிந்த மரங்களில் ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவி அவன் அவரைத் தொடர்ந்தோடினான். மேலே பார்த்து "என்னை மேலே தூக்குங்கள்! என்னை மேலே தூக்குங்கள்!" என்று அவன் கூவினான். எதிர்பாராத கணம் மரக்கிளைகளினூடாக பாய்ந்திறங்கி வந்து அவன் இரு கைகளையும் பற்றி அவர் மேலே கொண்டு சென்றார். கிளைகளின் செறிவுக்குள் இலையடர்வுக்குள் ஊடுருவி மேலே சென்று நீர்பிளந்து மேலே துள்ளும் மீன்போல் ஒளி நிறைந்த வானில் தலைதூக்குவது அவன் இளமையின் பேருவகைகளில் ஒன்றாக இருந்தது.

அந்தப் பெருங்கல்லே இடும்ப குடியின் இறுதி நடுகல். அதை அவர்கள் தலைக்கல் என்றனர். அதன்பின் அத்தகைய பெருங்கல் எவருக்கும் நடவேண்டியதில்லை என்று குடி முடிவெடுத்தது. ஒரு முழம் உயரமுள்ள சிறிய நடுகற்களே பின்னர் களம் மாண்டவர்களுக்கு நடப்பட்டன. ஏழு ஆண்டுகள் அன்னமும் குருதியும் மலரும் அளித்த பின்னர் அவர்கள் மண்ணில் கலந்துவிட்டார்கள் என்று கொள்ளப்பட்டது. ஆனால் தலைக்கற்களுக்குரியவர்கள் மண்ணில் உருகலப்பதே இல்லை.

அவர்கள் தங்கள் குடியினரை விழியிலா நோக்கால் கண்காணித்தபடி மலைக்குமேல் செறிந்து நின்றிருந்தனர். தளிர்க்காத, பூக்காத, காய்க்காத கல்மரக்காடு என்றனர் குலப்பாடகர்.

இடும்பகிரியின் உயரமற்ற சரிவுகளில் ஒன்றின் நிழல் ஒன்றின் மேல் விழ, நிழல் பின்னித் தைத்த நெடுவிரிப்பின் மேல் என நின்றிருந்த அனைத்து பெருங்கற்களுக்கும் ஒவ்வொரு ஆண்டும் அன்னமும் நீரும் அளிக்கப்பட்டது. அது இடும்பர் குலத்தின் பெருநிகழ்வு. அன்று சிவமூலிப் புகை இழுத்தும், மூக்கு வார கள்ளருந்தியும், துடிதாளம் கேட்டு உளம் நிறைந்தும் கூவி ஆர்த்து நடனமிடும் இடும்பர்கள் அங்கிருந்த மரவீடுகளை, தெருக்களை, சூழ்ந்திருந்த கோட்டையை, அங்காடியை, அவர்களை புற உலகுடன் இணைத்த பெருஞ்சாலைகளை, நீர்வழிகளை முற்றாக உதறி தங்கள் தொல்காடுகளின் ஆழங்களுக்குச் சென்றனர். இலைகளுக்குள் அமிழ்ந்து அமிழ்ந்து சென்று அவ்விருளுக்குள் பேருருவென நின்ற மூதாதையரை கண்டனர்.

பூசகர்களின் உடலில் தசைநடுக்குகொள்ள, கால்கள் துள்ளித்துள்ளி எழ, பற்கள் பெருகி முன்னெழ தோன்றிய தொல்லிடும்பர்கள் தங்கள் மைந்தர்களைக் கண்டு கைவிரித்து கூவி நகைத்தனர். விழிநீர் வார்த்து "மைந்தர்களே!" என்று கூவினர். "தந்தையரே!" என்று கூவி அழுதபடி அவர்களின் கால்களில் விழுந்தனர் இடும்பர். மண்ணில் புரண்டு கதறினர். நிலத்தில் கையாலும் தலையாலும் அறைந்தபடி அரற்றினர். அவர்களின் அழுகையை வெறித்த பொருளிலா விழிகளால் நோக்கிய மூதாதையர் மைந்தர்களை தலைதொட்டு

வாழ்த்தினர். அவர்கள் அளித்த கள்ளையும் அன்னத்தையும் ஊனையும் உண்டு மீண்டும் மண் புகுந்தனர்.

இடும்பகுடியிலிருந்து ஏதோ ஒன்று விலகிச்சென்றுவிட்டிருப்பதை அனைவருமே உணர்ந்திருந்தனர். முதியவர்கள் அனைவரும் அதை சொன்னார்கள். ஆனால் அது என்ன என்று எவராலும் வகுத்துரைக்க முடியவில்லை. ஒவ்வொருவரும் அவ்வப்போது அவர்கள் இழந்தவை என உணர்வது எதையோ அதை சொன்னார்கள். ஆண்களின் அச்சமின்மை என்றனர் பெண்கள். இளையோரின் கவலையின்மை என்றனர் மூத்தோர். முதியோர் இல்லத்திண்ணையிலிருந்து முற்றத்திற்கு இறங்குவதுபோல் இறப்பை நோக்கிச் செல்லும் இயல்பை என்றனர். ஏதோ ஒரு கணத்தில் அதை உணர்ந்து நெஞ்சு நெகிழ விழிகசிந்து விம்மத் தொடங்கினர்.

“இந்நகரம், இந்த மாளிகைகள், இச்செல்வம், நாம் அவைகளில் கொண்டுள்ள முதன்மை அனைத்தும் அதை கொடுத்து நாம் பெற்றுக்கொண்டதே” என்று கள்மயக்கில் அழுதபடி பூதர் அவனிடம் சொன்னார். “விலைகொடுக்காமல் எதையும் தெய்வங்கள் அளிப்பதில்லை. சிறகுகளை கொடுத்த பின்னரே யானை துதிக்கையை பெற்றது என்பது நம் குலக்கதை. நாம் பெற்றது இவை என்றால் கொடுத்தது என்ன? தெய்வங்களின் ஆடலில் ஒரு நெறி உண்டு. தெய்வங்கள் அளித்ததில் நிறைவுகொள்ளாமலேயே நாம் புதியது கோருகிறோம். எனவே அரியதை கொடுத்தே சிறியதை பெறுவோம்.” அவன் அவர்கள் சொல்வதென்ன என்று நன்றாகவே உணர்ந்திருந்தான். அத்துயரில் இணைந்து அவன் பெருமூச்சுவிட்டான்.

பின்பொருநாள் அவனே அதை உணர்ந்தான். இடும்பபுரி உருவாகத் தொடங்கியதுமே ஊரிலிருந்து விலகி காட்டுக்குள் சென்று இடும்பர்களுடன் எவ்வுறவும் இன்றி வாழ்ந்திருந்த கண்டகர் என்னும் முதியவரை அவன் கண்டான். காட்டுக்குள் வேட்டைக்குச் சென்றபோது தலைக்குமேல் இலைச்சலசலப்பு எழ அவன் ஏறிட்டுப் பார்த்து வில்கூர்ந்தான். அங்கே எரியும் விழிகளுடன் அவனை நோக்கியபடி அவர் தெரிந்தார். அவன் வில்தாழ்த்தினான். அவர் இன்னொரு சலசலப்பில் இலைப்பரப்பில் கரைந்து மறைந்தார். அவன் அன்றிரவு தன் மூத்தவனிடம் அவரைப் பற்றி கேட்டான். "இங்கிருந்த ஒன்றை அவர் எஞ்சவைத்துக்கொண்டார். நாம் அடைந்த அனைத்தையும் துறந்தே அவரால் அதை தக்கவைக்க முடிகிறது" என்றான் பார்பாரிகன். "அவரில் நம் மூதாதையரில் ஒருவர் குடிகொள்கிறார் என்கிறார்கள்" என்று அவன் அன்னை சொன்னாள்.

அவ்விழிகளை அவன் மறக்கவில்லை. பித்தனின் விழிகள். "அது பித்துதான். ஆனால் அனைத்து பித்துக்களும் நம்மால் புரிந்துகொள்ள முடியாத பிற மட்டுமே" என்று கடோத்கஜர் சொன்னார். அவன் மீண்டுமொருமுறை அவரை பார்த்தான். உள்காட்டில் சென்றுகொண்டிருக்கையில் அவன் அரசநாகம் ஒன்றால் துரத்தப்பட்டான். அதன் கடியிலிருந்து தப்ப அவன் அருகிருந்த வாவியில் பாய்ந்தான். அது கரையில் ஓங்கிய கை என பத்தி விரித்து நின்றுவிட்டு ஒழுகிச்சென்றது. அவனால் கரைநோக்கி வரமுடியவில்லை. அச்சுனை ஆழ்ந்த சேறுநிறைந்ததாக இருந்தது. அவன் உடல் அதில் அமிழ்ந்துகொண்டிருந்தது. கைகளையும் கால்களையும் சேற்றின் கைகள் இறுகப் பற்றியிருந்தன. அவன் அலற

எண்ணினான். ஆனால் தொண்டையிலிருந்தும் குரலெழவில்லை.

அப்போது அவர் தோன்றினார். கிளைகளின் வழியாக வந்து மேலிருந்தே கொடிவள்ளி ஒன்றை அவனை நோக்கி வீசினார். அவன் உடலை எம்பி அதை கடித்துப்பற்றிக்கொண்டான். அவர் அவனை இழுத்து கரைக்கு கொண்டுவந்தார். அவன் சேற்றில் புரண்டு எழுந்தபோது மரத்திலிருந்து இறங்கி வந்து நிலம் தொடாமல் தலைகீழாகத் தொங்கி சிவந்த விழிகளால் அவனை பார்த்தார். கைநீட்டி அவன் தலையை தொட்ட பின்னர் எழுந்து மறைந்தார். அந்தத் தொடுகை அவன் உடலில் நினைவென எஞ்சியிருந்தது. பின்னர் அவன் உணர்ந்தான் இடும்பர்களில் எவரிடமும் அந்தத் தொடுகை இல்லை என. தமையனும் தந்தையும் அந்தத் தொடுகையிலிருந்த ஒன்று இல்லாதவர்கள். அதை அவன் எவரிடமும் சொல்லவில்லை.

அவன் அதன்பின் உள்ளூரத் தனித்தவனானான். அவையில் அமர்ந்து அயலகத்து நிமித்திகர் அவன் குடி அடையப்போகும் பெருமையை சொல்லிக்கொண்டிருந்தார். மூராக்களின் குடி பெருகி பாரதவர்ஷத்தை ஆளும். தென்குமரி முதல் வடமலை வரை மௌரியர்களின் கொடிபறக்கும். அவன் சலிப்புடன் எழுந்து அகன்றான். அதை அவையே திரும்பி நோக்கியது. நிமித்திகரும் அதை பார்த்தார். பின்னர் புன்னகையுடன் “நீங்கள் அடைந்தவற்றுக்கு நிகராக எவரும் மூதாதையரிடமிருந்து அடையவில்லை, அரசே. மௌரியர்களின் பெயரின்றி இந்நிலத்தில் எவரும் இறந்தகாலத்தை எண்ணமுடியாதென்று உணர்க!” என்று தொடர்ந்தார்.

குடாரரின் ஓலம் கேட்டு மேகவர்ணன் திரும்பிப்பார்த்தான். அவர் தன் கையை நீட்டி சுட்டு விரலால் கள மையத்தில் அமைந்த சிறு தெய்வக்கல்லை காட்டிக்கொண்டிருந்தார். அவ்விரல் சிற்றுருக்கொண்ட தெய்வம் ஒன்று அதில் மட்டும் குடியேறியதுபோல துடித்தது. மெல்ல அந்த நடுக்கு பரவி அவர் உடல் துள்ளி அதிர்ந்தது. கழுத்துத் தசைகள் இழுபட்டிருக்க, பற்கள் நெரித்து உதடுகளை கடிக்க, விம்மலோசையும் உறுமலோசையும் அவரிடமிருந்து எழுந்தது. பூதர் "மூத்தவரே! மூதாதையே! தாங்கள் யார்?" என்றார். "உம்ம்ம் உம்ம்ம்" என காற்று கடந்துசெல்லும் பனைமுடி என உறுமினார் குடாரர். பூதர் "கூறுக, மூதாதையே! உங்கள் மைந்தருக்கு அளிகூர்க! தாங்கள் யார்?" என்றார்.

"நான் இடும்ப குலத்து மூதாதை ஹடன். என் மைந்தர் நீங்கள் கோரியதற்கேற்ப இங்கு வந்தேன்" என்றார் குடாரர். "என் மைந்தரின் சொல் கேட்டு வந்தேன். அவர்கள் விழைவென்னவோ அதை நிகழ்த்த வந்தேன்" என்றார் குடாரர். பூதரின் விரல்கள் உடுக்கின்மேல் வெறிகொண்டு நடனமிட்டன. ஓசை விசைகொண்டு மேலும் விசைகொண்டு செவிகளாலோ சிந்தையாலோ தொடரமுடியாத அளவுக்கு விரைவை அடைந்தது. முன்னும் பின்னும் ஊசலாடிய உடலுடன் பூதர் கேட்டார் "அங்கே என்ன நிகழ்கிறதென்று அறிய விரும்புகிறோம், தந்தையே. எங்கள் குடியினர் அங்கிருக்கிறார்கள். எங்கள் அரசர் அங்கிருக்கிறார். அவர்களுக்கு என்ன ஆயிற்று என்று அறிய விரும்புகிறோம்."

"உம்ம்ம்ம் உம்ம்ம்" என குடாரர் உறுமியபடி உடல் துள்ள ஆடினார். அவர் விழிகள் மேலேறி கண்கள் வெண்ணிறமாகத்

தெரிந்தன. நாக்கு உள்நோக்கி மடிந்துவிட்டிருந்தது. உடலெங்கும் தசைகள் தனித்தனியாக இழுபட்டு அதிர்ந்தன. “சொல்க! நாங்கள் அப்போரில் இங்கிருந்தே உளம் கலக்க விழைகிறோம்” என்றார் பூதர். “அந்தப் போரிலிருந்து எங்கள் குலம் எங்ஙனம் மீண்டெழும்? எந்தையே, நேற்றுவரை அதை பிறிதொரு போர் என்றே எண்ணியிருந்தோம். எங்கள் குடிவீரர் முற்றாக அழியக்கூடுமென இப்போது அறிகிறோம். அதிலிருந்து எஞ்சுபவர்களால்தான் நாங்கள் வாழவேண்டும்.”

மேகவர்ணன் “அந்தப் போரில் நான் கலந்துகொள்ளலாகாதென்பது எந்தையின் ஆணை. என் குடி அங்கே உயிர்துறந்துகொண்டிருக்கையில் இங்கே வாளாவிருக்கிறேன்” என்றான். “அங்கு நிகழ்வதென்ன என்றாவது நான் அறிந்தாகவேண்டும். எந்தையால் எனக்கு அனுப்பப்படுவன மெய்யான செய்திகள் அல்ல என்று தெரிந்துகொண்டேன். நான் அங்கு சென்றாகவேண்டும்.” குடாரர் “உம்ம்ம் உம்ம்ம்” என ஆடிக்கொண்டிருந்தார். அவருடைய நாவு மடிந்திருப்பதனால் பேச்சு எழவில்லை என்று மேகவர்ணன் எண்ணினான். அவரிடம் அவ்வினாக்களைக் கேட்பதில் என்ன பொருள் என உள்ளம் மயங்கியது. ஆனால் எண்ணியிராக் கணத்தில் அவர் குரல் எழுந்தது. “நான் காலத்தை கடந்துள்ளேன். இடத்தை அறியாதோன் ஆனேன். காலத்தில், இடத்தில் என்னை நிறுத்துவது பிழை என்று உணர்கிறேன்.”

அந்தக் குரல் எங்கிருந்து வருகிறது என மேகவர்ணன் திகைத்தான். குடாரரின் வாய் திறந்திருக்க நாக்கு மடிந்தேயிருந்தது. தொண்டையின் தசைகள் மட்டும் அசைந்துகொண்டிருந்தன. “உங்கள் குலத்து இளவரசன் அங்கு அனைத்தையும் பார்த்தவனாக அமர்ந்திருக்கிறான். மேடையில்

அமர்ந்து பகலிரவில், துயில்விழிப்பில், இன்றுநேற்றில் என்றிலாது நோக்கிக்கொண்டிருக்கிறான். எனக்கினியவன் என் குருதியாகிய பார்பாரிகன். அவனை இதோ அணுக்கமாக உணர்கிறேன். அவனருகே என் மூச்சு அவனைத் தொடும் அளவுக்கு சென்று அமர்ந்திருக்கிறேன். அவனது இனிய மென் தலைமயிரை என் கைகளால் வருடுகிறேன். பெருந்தோள்களை தொட்டு ஒழிகிறேன். விழிவிடாய் அடங்காது அவனை மீண்டும் மீண்டும் பார்த்துக்கொண்டிருக்கிறேன்” என்றார்.

பூதர் “மூதாதையே, அவன் விழிகளை சூடுக! அவ்விழிகள் அறிந்தவற்றை இங்கு சொல்க! இங்கிருந்து நாங்கள் அக்களத்தை பார்க்க விழைகிறோம். அங்கு நிகழ்வன அனைத்தையும் நாங்கள் உணர்ந்தாக வேண்டும்” என்று சொன்னார். குடாரரின் உடல் விதிர்த்துக்கொண்டிருந்தது. “நான் இரு ஒளித்துளிகளாக மாறுகிறேன். அவன் முன் கணையாழியின் அருமணியிலிருந்து விழுந்த ஒளிப்பொட்டுபோல் நிலத்தில் கிடக்கிறேன். அவன் திரும்பி நோக்குகையில் என்னை கண்டான். இது என்ன என்று கூர்ந்து பார்க்கிறான். அக்கணம் எழுந்து அவன் கருமணிகளுக்குள் புகுந்துகொள்கிறேன். மைந்தரே, அங்கு நின்று அவன் நோக்கும் அனைத்தையும் நானும் நோக்குகிறேன். அவன் உணர்ந்தவற்றை அவனுள் நோக்கி நானும் அறிகிறேன். அங்கு அவனுடன் நானும் இருக்கிறேன்” என்றார்.

பூதர் “சொல்க, மூதாதையே! அவனாகி நின்று அங்கு நிகழ்வதென்ன என்று சொல்க! எங்கள் குடி அங்கு போரில் அழிந்துகொண்டிருக்கிறது என்கிறார்கள். ஆற்றல் மிக்கவர்களாகிய இடும்பர்கள் ஒவ்வொருவராக துரியோதனராலும் தோள்பெருத்த அவர் தம்பியராலும்

வெல்லற்கரிய பகதத்தராலும் மூதாதை வடிவென எழுந்த பால்ஹிகரின் பெருங்கதையாலும் கொல்லப்படுகிறார்கள் என்கிறார்கள். சொல்க, எங்களுக்கு இனி எஞ்சுவதென்ன? நாங்கள் இனி எதிர்பார்க்க வேண்டியதென்ன?” என்றார். “அதை எவரும் அறியவியலாது. அங்கே திகைத்த விழிகள் சூடிய பல்லாயிரம் மூதாதையரும் தெய்வங்களும் காற்றில் நிறைந்துள்ளனர்” என்றார் குடாரர்.

மேகவர்ணன் “அவருடைய விழிகள் கண்டவை இங்கே திகழட்டும். நாங்கள் அங்குமிருக்கவேண்டும். எங்கள் அச்சத்தால், விழைவால் எங்கள் ஊழை அறிகிறோம்” என்றான். குடாரர் கைகள் நடுநடுங்க முன்னும் பின்னும் அசைந்தாடிக்கொண்டிருந்தார். நெடுநேரம் அவரிடமிருந்து சொற்களேதும் எழவில்லை. சூழ்ந்து நின்றவர்கள் அவர் உதடுகளை நோக்கிக்கொண்டிருந்தனர். பூதரின் விரல்கள் மெல்ல தணிந்து சீரான தாளத்தை எழுப்பத் தொடங்கின. குன்றுக்குக் கீழே இடும்பபுரியின் கோட்டையில் சங்கொலி எழுந்தது. முதற்சாமம் தொடங்குவதை மேகவர்ணன் உணர்ந்தான். காவலர்கள் அணி மாறும் ஓசைகள் கேட்டன. அங்காடியில் ஒரு நாய் விழித்துக்கொண்டு ஊளையிட்டது. மீன்கொழுப்பு விளக்குகள் எரிய இடும்பபுரியின் ஈரடுக்கு மரமாளிகைகள் துயில்கொண்டவைபோல் தெரிந்தன. அவன் பெருமூச்சுவிட்டு உடலை எளிதாக்கி அமர்ந்தான்.

குடாரர் இருமுறை தொண்டையை கனைத்தார். அவர்கள் ஓசையில் பறைத்தோல் என மெல்லதிர்வு கொண்டனர். “நான் இக்களத்தில் தனித்திருக்கிறேன்” என்றார் குடாரர். அவனுக்கு மெல்லிய மெய்ப்பு ஏற்பட்டது. அது அவன் மூத்தவனின் குரல். “போர்க்களத்தில் முற்றிலும் அசையாது ஒரு மேடையிலேயே

அமர்ந்திருப்பதென்பது எளிதல்ல. அது கடுந்துயர். துயர் அளிப்பது எதுவும் தவமே. தவம் எதுவாயினும் விளைவது மெய்மை என்கிறார்கள்” என்றார் குடாரர். அறியாமல் மேகவர்ணன் கைகூப்பினான். அங்கிருந்தோர் அனைவரும் கைகூப்பிக்கொண்டிருப்பதை கண்டான்.

“தவம் எனது விழிகள்கொண்டது. இந்தப் போரை இங்கிருந்து ஒவ்வொரு கணமென காலத்தை பகுத்து, ஒவ்வொரு நிகழ்வென காட்சியை பகுத்து, ஒவ்வொரு பொருளென துணித்து நான் பார்த்துக்கொண்டிருக்கிறேன். பல்லாயிரம் பலகோடி போர்கள். முடிவிலா இறப்புகள். முடிவிலாத சொற்கள். இங்கிருந்து நான் எண்ணத்தால் அள்ளிக்கொள்பவை அதில் ஒரு சில துளிகள். அக்கடலிலிருந்து என் மொழி சொற்களென திரட்டிக்கொள்பவை மேலும் சில துளிகள். என் நா உரைப்பவை மேலும் சிலவே. அப்பெருக்கில் பொருள்சூடியவையோ அரிதான சில மட்டுமே. அவை இங்கே திகழ்க! அவ்வாறே ஆகுக!” என்று பார்பாரிகன் சொன்னான்.

[வெண்முரசு விவாதங்கள்]

# கார்கடல் - 6

இந்தப் போர்க்களம் இப்போது துயிலால் முற்றிலும் நிரம்பியிருக்கிறது. ஓய்ந்த உடல்களின் மீது மூதாதையரின் நெடுமூச்சுபோல புழுதி மணமும் தழை மணமும் கலந்து வீசிச் செல்கிறது. பந்தங்களின் சுடர்களுடனும் கூடாரங்களின் கூரைப்பரப்புகளுடனும், கொடிகளுடனும் அது விளையாடிச் செல்கிறது. இங்கே என்னைச் சூழ்ந்து களத்தின் ஒலிகள்

நிறைந்திருக்கின்றன. இக்களம் ஒருபோதும் ஒலியிலாமல் ஆவதில்லை. போர் நிகழ்கையில் இது கோல் விழும் முரசுபோல் ஒலி கொப்பளிக்கிறது. போரிலாதபோது காற்று புகுந்து கார்வையென்றாகும் முரசின் உட்புறம் போலுள்ளது.

மூச்சொலிகள், பந்தங்களின் சுடர்கள் படபடக்கும் ஒலிகள், விலங்குகளின் குளம்பொலிகள், காவலர்களின் குறடொலிகள். அவ்வப்போது கடந்து செல்லும் பறவைகளின் ஒலிகள். அரிதாக குளம்படி ஓசையுடன் மரப்பலகைகளின்மீது ஓடிச்செல்லும் தூதர்களின் புரவியொலிகள் என இது நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. இவ்விரவில் நான் அறிந்துகொண்டிருப்பது இக்களம் முழுக்க நிறைந்திருக்கும் வலியை. புண்பட்டோரின் வலிக்கு நிகரானது புண்படாதோரின் வலி. நோய்கொண்டவர்கள் போலவே நோயற்றவர்களும் துயிலில் புரண்டு புரண்டு படுத்துக்கொண்டிருக்கிறார்கள். முனகியபடியும் புலம்பியபடியும் அவ்வப்போது கொடுங்கனவு ஏதோ கண்டு எழுந்தபடியும் அவர்கள் தவிக்கிறார்கள்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஊரிலிருந்து ஒவ்வொரு இல்லத்திலிருந்து கிளம்பி இங்கு வந்தவர்கள். எங்கிருந்து வந்தார்கள் என்றும், எவரென்றும் இன்று அவர்களுக்கு தெரியவில்லை. அனைவரும் இங்கேயே பிறந்து இங்கு நிகழ்வனவற்றிலேயே முற்றிலும் ஈடுபட்டு இங்கிருப்பவர்கள் போலிருக்கிறார்கள். அழுகலில் பிறந்து அதை உண்டு அங்கு திளைத்து அதிலேயே மறையும் புழுக்கள். குருக்ஷேத்ரப் புண்நிலத்தை இடைவெளியிலாது உடலால் நிறைத்திருக்கிறார்கள். மானுடரும் புரவிகளும் யானைகளும் அத்திரிகளும் கழுதைகளும் எருதுகளும் ஒன்றாகிவிட்டிருக்கின்றனர். ஒருவர் மூச்சை ஒருவர்

இழுக்கிறார்கள். அனைவருக்குள்ளும் புகுந்து புறப்பட்டு அனைவரையும் கோத்து ஒன்றாக்கியிருக்கிறது காற்று.

இந்த மண் மேலும் மேலும் குருதி விழுந்து கரிய கதுப்பாக மாறிவிட்டிருக்கிறது. அதில் பலகோடி நுண்ணுயிர்கள் பிறந்து செறிந்துள்ளன. சிறிய வண்டுகள், வெவ்வேறு வண்ணங்களில் புழுக்கள், சிற்றெறும்புகள். அவை சிறுதுளைகள் வழியாக ஆழ்ந்திறங்கி மண்ணுக்கு அடியில் ஒரு மண்பரப்பாகவே ஆகிவிட்டிருக்கின்றன. ஒருகணமும் சலியாமல் அவை நெரித்து, கொப்பளித்துக் கொண்டிருக்கின்றன. ஒன்றையொன்று உண்கின்றன. பலநூறு குருக்ஷேத்ரங்கள். இருளில் அவை வெளியே வந்து பரவியிருக்கின்றன. விழிகூர்ந்து அந்த மண்ணை நோக்கினால் அது அசைந்துகொண்டிருப்பதை காணமுடிகிறது. அவற்றின் ரீங்காரத்தை கேட்கமுடிகிறது. அவற்றில் சிறகுகொண்டவை எழுந்து புகை என பரவி அலைகொள்கின்றன. நான் குனிந்து நோக்குகிறேன். அவை அந்தக் களத்தை ஒவ்வொரு கண்ணியென்றாகி தங்கள் உடலால் நெய்துகொண்டிருக்கின்றன.

இங்கு என் விழிகளால் நான் எங்கும் செல்ல முடியும். அதோ நெடுந்தொலைவில் நின்றிருக்கும் காவலனின் அருகே சென்று அவன் விழிகளை நோக்கி அவன் எண்ணமென்ன என்று அறியமுடியும். அப்பாலிருக்கும் குடிலுக்குள் துயின்றுகொண்டிருக்கும் படைத்தலைவனை அணுகி அவன் காணும் கனவென்ன என்று உணர முடியும். இங்கிருக்கும் அத்தனை படைவீரர்களுடனும் என்னால் ஆழ்ந்து உரையாட முடியும். விலகியிருப்பவரின் வாய்ப்புகள் எல்லையற்றவை. விலகியிருப்பவர்களால் உருவாக்கப்படுவதே இந்தப்

புவிநாடகம். இங்குள அனைத்தும் விலகி இருந்தவர்களின் கனவுகளும் தயக்கங்களும் அச்சங்களுமே.

இக்கணத்தில் எங்கெங்கு எவரெவர் விலகியிருக்கிறார் என்று எண்ணிக்கொள்கிறேன். அடர் காடுகளில் பல்லாயிரம் முனிவர்கள் இங்கு ஒரு போர் நிகழ்வதையே இன்னும் அறியவில்லை. தொலைதூர நகரங்களில் இனிய கனவுகளில் ஆழ்ந்திருக்கும் கவிஞர் பிறிதொரு போரை அறிந்துகொண்டிருக்கிறார்கள். தனித்த பாதைகளில் கைமுழவொன்றையே துணைகொண்டு செல்லும் சூதர்கள் இப்போரை இனி என்றோ அறியப்போகிறவர்கள். மொழியெட்டாத நெடுந்தொலைவுகளில் வாழும் மக்களுக்கு அவர்களை சென்றடையும்வரை இப்போர் நிகழவேயில்லை. இன்னும் பிறக்காமல் கருவறை காத்து வெளியில் நின்றிருக்கும் குழந்தைகளுக்கு இனிமேல்தான் இது நிகழவிருக்கிறது. நான் இங்கு அவர்களில் ஒருவன்.

மேகவர்ணன் குடாரரில் எழுந்த தன் மூத்தவனின் குரலை கூப்பிய கைகளுடன் கேட்டுக்கொண்டிருந்தான். பார்பாரிகன் சொன்னான் "இந்த தனித்த குளிர்ந்த பின்னிரவில் நான் விரிந்துகிடக்கும் குருக்ஷேத்ரத்தை பார்த்துக்கொண்டிருக்கிறேன். நோக்குந்தோறும் மடிப்புகள் விரிந்து இது பெருகுவது எப்போதும் தீராத விந்தை. பெருகுந்தோறும் இது வெறுமை கொள்வது எண்ணிச் சென்றடைய முடியாத பிறிதொரு விந்தை. துயில் நீத்தவர்களால் இயக்கப்படுகிறது இது. அடைவதற்கு ஏதேனும் உள்ளவர்கள் விழித்திருக்கிறார்கள். இழப்பதற்கு ஏதுமற்றவர்கள் இன்மையென்றாகி துயில்கிறார்கள். அவர்களின் நடுவே நான் செல்கிறேன். மெல்லிய காற்றுபோல.

இவ்விரவில் காந்தாரராகிய சகுனியின் பாடிவீட்டிற்கு முன்னால் கௌரவர் தலைவர் துரியோதனரும் தம்பியரும் கூடியிருக்கிறார்கள். பூரிசிரவஸும் ஜயத்ரதரும் உடனிருக்கிறார்கள். சகுனி அந்த அவைக்கூடுதலின் மையமாக தானிருப்பதை உணர்ந்தமையால் அங்கிலாதது போன்ற பாவனை காட்டி தன் கையிலிருக்கும் ஏடுகளை ஒவ்வொன்றாக புரட்டி விழியோட்டிக்கொண்டிருக்கிறார். அவருக்குப் பின்னால் மூங்கில்தூணில் தொங்கி நின்றிருக்கும் பீதர்நாட்டு பளிங்கு விளக்கிலிருந்து செவ்வொளி விழுந்து அவர் தலை கம்பிச்சுருளாலான மணிமுடி சூடியிருப்பதுபோல தெரிகிறது. அவருடைய நிழல் நீண்டு அவர் முன் விழுந்து கிடக்கிறது.

தலைதாழ்த்தி நிலம்நோக்கி அமர்ந்திருக்கிறார் அஸ்தினபுரியின் அரசர். பூரிசிரவஸும் ஜயத்ரதரும் மார்பில் கைகளைக் கட்டி மரப்பெட்டிப் பீடங்களில் அமர்ந்திருக்கிறார்கள். ஒவ்வொருவரும் அங்கு ஓர் உரையாடல் இயல்பாக தொடங்குவதற்காக காத்திருக்கிறார்கள். ஏனெனில் ஓர் உரையாடலை எண்ணித் தொடங்கினால் எப்படி சொல்கூட்டினாலும் அது அவர்கள் அப்போது சந்தித்துக்கொண்டிருக்கும் இக்கட்டின் மையத்திலிருந்தே எழும். அந்த விசையை அவர்களால் தாள இயலாது. அவர்கள் அதை பேச விழைந்தனர், பேச அஞ்சினர்.

சகுனி சுவடிக்கட்டை அடுக்கி பட்டு நூலால் சுற்றி அருகிருந்த ஆமாடப்பெட்டியைத் திறந்து உள்ளே வைத்துவிட்டு நிமிர்ந்தார். துச்சகன் பிறிதொரு பெட்டி மேல் வைக்கப்பட்டிருந்த இன்நீர் குவளையை எடுத்து அவருக்கு நீட்டினான். அதை வாங்கி மும்முறை உறிஞ்சி குடித்து திருப்பி அளித்துவிட்டு

மேலாடையால் மீசையையும் உதடுகளையும் துடைத்தபடி சகுனி கனைத்தார். உரையாடல் தொடங்கிவிட்டது போன்ற விதிர்ப்பை அவர்கள் அனைவரும் அடைந்தனர். சகுனி “நன்று. நாளைய படைசூழ்கையை நாம் முடிவு செய்யவேண்டியிருக்கிறது” என்றார். அது மிகச் சிறந்த தொடக்கமென்பதை பூரிசிரவஸ் உணர்ந்தான். சென்று நிகழ்ந்ததை சொல்லி தொடங்கியிருந்தால், வரவிருக்கும் இடர்களை எண்ணி சொல்லெடுத்திருந்தால், சிக்கியிருக்கும் இக்கட்டைப்பற்றிப் பேசியிருந்தால் அத்தருணம் சிதைந்திருக்கும்.

“நாளைய சூழ்கையை நான் ஓரளவு வகுத்திருக்கிறேன், காந்தாரரே. முறையாக வரைந்தும் கொண்டுவந்திருக்கிறேன்” என தன் கையிலிருந்த மூங்கில் குழாயை சகுனியிடம் நீட்டினான். சகுனி அதை வாங்கி அதற்குள்ளிருந்த தோற்சுருளை உருவி எடுத்து விரித்து விழியோட்டினார். மீண்டும் உள்ளே வைத்துவிட்டு “நன்று” என்றார். துரியோதனனை நோக்கிவிட்டு “இதில் எந்தெந்த வீரர்கள் எங்கெங்கு நிலை கொள்கிறார்கள் என்பதை நாம் பேச வேண்டியிருக்கிறது” என்றார். அதுவும் மிக இயல்பான ஒரு நுழைவென தோன்ற பூரிசிரவஸ் ஜயத்ரதனை பார்த்தான். ஜயத்ரதன் “நாம் இதில் அங்கநாட்டரசர் வசுஷேணரை சேர்த்துக்கொள்ளப்போகிறோமா என்பதுதான் இப்போது முதன்மையாக பேசப்படவேண்டியது” என்றான்.

துரியோதனன் நிமிர்ந்து சகுனியை பார்த்தான். அக்கணமே அங்கிருந்த அனைவரும் அவன் நோக்கை உணர்ந்தனர். ஜயத்ரதன் “நாம் உடனடியாக நாடுவது ஓர் அழுத்தமான பெருவெற்றி. ஐயத்திற்கு இடமில்லாத ஒன்று. நம் வீரர்கள்

அனைவருக்கும் அது குலதெய்வம் காவலுக்கு எழுந்தது போன்ற நம்பிக்கையை அளிக்கும். ஆகவே இனி நம்மில் எஞ்சும் ஒரு துளி ஆற்றலைக்கூட விட்டுவைக்கக்கூடாது. நமது அனைத்துப் படைக்கலங்களும் போர்க்களத்திற்கு வந்தாகவேண்டும். நம் அனைத்துச் சொற்களும் குவிந்தாகவேண்டும்” என்றான். “நமது பெரும்படைக்கலம் அங்கர். இதுவரை இப்பெருங்களத்திற்கு அவரை கொண்டுவராதது போன்ற பெரும்பிழை ஏதுமில்லை.”

பூரிசிரவஸ் “ஆனால்…” என்று சொல்லெடுக்க “ஆம், பிதாமகரின் பொருட்டே இதுவரை காத்தோம். இன்று அவர் இல்லை. நமது வாய்ப்புகள் திறந்துள்ளன” என்றார் சகுனி. பூரிசிரவஸ் “காந்தாரரே, நாம் இங்கு கூடியிருப்பதே இந்த முடிவை ஆசிரியர் துரோணர் ஏற்பாரா என்று அறியும் பொருட்டுதான்” என்றான். சகுனி “ஆம், ஆனால் அவர் இதற்கு ஒப்புக்கொண்டே ஆகவேண்டும். ஏனெனில் இனி ஆணவத்தையோ சூளுரைகளையோ எண்ணிக்கொண்டிருக்க நமக்கு பொழுதில்லை. நாம் முழு வெற்றி ஒன்றிலன்றி வேறெதிலும் நின்றிருக்க இயலாத நிலையை வந்தடைந்திருக்கிறோம்” என்றார்.

துச்சாதனன் “ஆசிரியருக்கு மூத்தவர் கர்ணன் மேலுள்ள கசப்பு அனைவரும் அறிந்தது. அவரது கல்விநிலையிலிருந்து துரத்தப்பட்டவர் அங்கர். அங்கிருந்து சென்று மேலும் சிறந்த ஆசிரியரிடம் கற்று, முதன்மை வீரர் என்று ஆகி திரும்பி வந்திருக்கிறார். இந்தப் படைக்களத்தில் அவர் நின்றிருப்பதே ஆசிரியரின் தோல்வி என கருதப்படும். இக்களத்தில் அங்கர் அர்ஜுனனை கொல்வாரென்றால் என்றென்றும் வரலாற்றில் இழிசொல்லாகவே ஆசிரியரின் பெயர் நின்றிருக்கும். அங்கரின்

புகழ் வரலாறு பின்னாளில் எழுதப்படுகையில் அதில் ஒரு கறையென அவர் இருப்பார். நம் எவரைவிடவும் அதை அவரே அறிந்திருப்பார்” என்றான்.

சுபாகு “இந்தப் போரில் அங்கர் கலந்துகொள்ளக்கூடாதென்று பிதாமகர் பீஷ்மர் எண்ணியதுகூட அங்கரை வரலாற்றிலிருந்து நீக்கிவிடவேண்டும் என்பதற்காகத்தான் என்று மூத்தவர் முன்பொருமுறை சொன்னார். இப்போர்க்களத்தின் வரலாறே சூதர்நாவில் நின்றிருக்கும். இதில் கலந்துகொள்ளாத அத்தனை வீரர்களும் இல்லையென்றே கருதப்படுவார்கள்” என்றான். ஜயத்ரதன் “மெய்தான். இந்தப் பத்து நாட்களில் நாம் மிக அரிதாகவே அங்கநாட்டாரைப்பற்றி எண்ணியிருக்கிறோம். அவர் அனைவர் சொல்லிலிருந்தும் அகன்றுவிட்டிருக்கிறார். அவரில்லாது இப்போர் முடியுமெனில் போருக்குப் பின் அவரது பெயரே சூதர் நாவில் இருக்காது. இப்போர் உருவாக்கும் பல்லாயிரம் கதைகளை சொல்லிச் சொல்லி பெருக்கி பரப்பி அவரிலாத வெளியொன்றை சமைத்துவிடுவார்கள்” என்றான்.

பூரிசிரவஸ் “ஆனால் இந்தப் போர் விசைகொண்ட பெருஞ்சுழிபோல. பாரதவர்ஷத்தில் எவரையும் இது வெளியே விட்டுவிடாது” என்றான். சகுனி “ஆம், அவன் பெருவீரன் என்பதனாலேயே இங்கு வந்தாகவேண்டும். பிதாமகர் பீஷ்மர் எதன் பொருட்டு அவனை வரவேண்டாம் என்று சொன்னார் என்று எனக்கு இன்னமும்கூட தெளிவில்லை. மருகன் சொன்னதுபோல் ஆசிரியரின் அறப்பிறழ்வை வரலாற்றிலிருந்து மறைக்கும்பொருட்டாக இருக்கலாம். அல்லது நாமறியாத எவையோ இங்கு திகழக்கூடாது என்பற்காக இருக்கலாம். எதுவாயினும் அங்கன் விலக்கப்பட்டமையில் முதன்மை மகிழ்ச்சி கொண்டவர் துரோணரே” என்றார்.

துச்சாதனன் “மெய், ஆனால் இன்று துரோணர் நம் அரசரின் கூற்றுக்கு செவி சாய்த்தாகவேண்டும். அவர் நமக்களித்த சொல் பாண்டவர்களை வென்று, தன் முதல்மாணவன் அர்ஜுனனை தன் கைகளால் கொன்று, வெற்றியை நமக்களிப்பேன் என்று. அதை அவர் காத்தாக வேண்டும்” என்றான். தாழ்ந்த குரலில் துரியோதனன் “நான் அவருக்கு ஆணையிட இயலாது. அவர் என் ஆசிரியர். அந்நிலையிலிருந்து அவரை நான் ஒருபோதும் விலக்கமாட்டேன்” என்றான். “அவர் உங்கள் குடி” என்றார் சகுனி. “ஆம், ஆனால் நான் அவர் மாணவன்” என்றான் துரியோதனன்.

“ஆணையிட வேண்டாம், கோரிக்கை வைக்கலாம்” என்று சகுனி சொன்னார். “வேண்டுமென்றால் நான் மன்றாடுகிறேன். என் பொருட்டு அங்கநாட்டரசன் களம் நிற்க அவர் ஒப்பவேண்டுமென்று கோருகிறேன்” என்றான் துரியோதனன். சகுனி “அக்கோரிக்கையையும் அவர் விலக்கக்கூடும். அவ்வாறு செய்யக்கூடியவரல்ல என்பதற்கான சான்றுகள் எதுவும் அவரிடம் இன்று வரை இல்லை” என்றார். “ஒவ்வொருவரையும் ஒரு மையஉணர்வு ஆட்டுவிக்கிறது. சிலரை விழைவு. சிலரை அச்சம். சிலரை விலக்கம். கல்வி மேம்பட்டவர்கள் எளிய ஆணவத்தால் இயக்கப்படுபவர்கள். அவர்களின் கல்வி மிகுந்தோறும் ஆணவம் சிறுமைகொள்கிறது. ஆசிரியர் துரோணரும் அவ்வாறே.”

“மெய்தான்” என்று பூரிசிரவஸ் சொன்னான். “அரசர் சென்று கோரினால் பாண்டவர்களை வெல்வேன் என்று தான் அளித்த சொல்லில் உறுதியாக இருப்பதாகவும் ஆனால் ஒருபோதும் அங்கநாட்டரசரிடம் இணைநின்றோ தலைமைகொண்டோ

போரிட இயலாதென்றும் அவர் கூறக்கூடும். நாம் வற்புறுத்தினால் தன்னை விலக்கி அங்கரை முன்னிறுத்தி போர்செய்யும்படி அவர் சொல்வார். அவர் பொருட்டு அங்கநாட்டரசரை நாம் விலக்கினோம் எனில் அங்கரைவிட அவர் சிறந்த வில்லவர் என்று நாமே இப்படைகளிடம் சொன்னதாக ஆகும் என்று கணக்கிடுவார். ஆகவே நேரிடையாக இப்போது சென்று சொல்வதில் எப்பயனுமில்லை."

ஜயத்ரதன் "அவருடைய எண்ணமெல்லாம் இத்தருணத்தில் ஷத்ரிய அரசர்கள் தன்னைப்பற்றி எண்ணப்போவது என்ன என்றே இருக்கும்" என்றான். சுபாகு "ஆம், அவர் இன்றுவரை இயற்றிய அனைத்துமே ஷத்ரியர் அவையில் ஓர் இடத்திற்காக மட்டுமே" என்றான். ஒவ்வொருவரும் துரோணர்மேல் அவர்கள் கொண்டிருந்த ஐயமும் காழ்ப்பும் வெளிக்கிளம்புவதை கண்டனர். "அவர் பாண்டவர்களுக்காகவே மூத்தவர் கர்ணனை குருநிலையிலிருந்து வெளியேற்றினார் என்பதை நாம் மறக்கவேண்டியதில்லை. அங்கர் அர்ஜுனனைக் கொன்றால் அது ஆசிரியர் துரோணரின் தோல்வியாகவே கருதப்படும்" என்றான் துச்சாதனன்.

சகுனி அங்கு திகழ்ந்த அமைதியில் தன் இருக்கை கிறீச்சிட அசைந்தமர்ந்து "நான் ஒன்று சொல்ல முடியும்" என்றார். அவரை அனைவரும் நோக்க "ஒருவரை இயக்கும் மையவிசைக்கு இணையான எதிர்விசை ஒன்றும் அவருக்குள் இருக்கிறது. தெய்வங்கள் எந்த விசையையும் இணைவிசையின்றி இப்புவியில் நிகழ விடுவதில்லை" என்றார். "விழைவு கொண்டோர் சினத்தாலும், அச்சம் கொண்டோர் தனிமையாலும் நிகர் செய்யப்பட்டிருப்பார்கள். ஆணவம்

கொண்டவரிடம் அதை நிகர் செய்வது பற்று. ஆசிரியர் துரோணரிடம் அது மைந்தன் மீது கொண்ட பேரன்பு.”

சகுனி சொல்லி முடித்ததுமே அனைவருமே முகம் மலர்ந்தனர். ஜயத்ரதன் “மெய். இதை அஸ்வத்தாமர் அவரிடம் சொல்லட்டும். அவர் தன் தந்தைக்கு ஆணையும் இட இயலும்” என்றான். “ஆனால் அஸ்வத்தாமர் ஒருபோதும் தன் தந்தையின் தன்னிலையை சிறிதாக்கும் எதையும் செய்ய ஒப்பமாட்டார்” என்று பூரிசிரவஸ் சொன்னான். “ஆயினும் அவர் தந்தையிடம் பேச முடியும். அவருடைய எண்ணமென்ன என்று அணுகிச்சென்று தெரிந்துகொள்ள முடியும். அதை அறிந்தால் நாம் அதற்கேற்ப சொல்லுறுதிகளை அளிக்க இயலும்” என்று சகுனி சொன்னார். “ஆகவேதான் அவரை இங்கு அழைத்து வருவதற்கு துர்மதனை அனுப்பியிருக்கிறேன்.”

“அஸ்வத்தாமர் இங்கு வருகிறாரா?” என்று பூரிசிரவஸ் கேட்டான். “ஆம், இங்கு நாம் பேசி ஒரு முடிவெடுத்த பின்னர் அவர் இங்கு வருவது நன்று என்று எண்ணினேன். அவரிடம் அரசர் சொல்லட்டும், தன் விழைவென்ன என்று. அங்கனை துரோணரின் ஒப்புதலுடன் இப்போருக்கு அழைத்து வந்து படைமுன் நிறுத்துவது அஸ்வத்தாமரின் கடமை. நம் படைகள் களம்வெல்ல வேறுவழியே இல்லை” என்றார் சகுனி. “அஸ்வத்தாமர் குருகுல மன்னரிடம் கொண்டிருக்கும் பற்று நாம் அறிந்ததே. இதை அவர் ஏற்பாரென்றுதான் எண்ணுகிறேன்.”

அத்துடன் அங்கு சொல்லமைவு உருவாகியது. ஒவ்வொருவரும் தங்கள் உள்ளத்திற்குள் சென்று திசையழிந்து அலைந்துகொண்டிருந்தார்கள். சற்று நேரத்திற்குப் பின் தொலைவில் இரு புரவிகளின் குளம்படிகள்

கேட்கத்தொடங்கியதும் மீண்டும் உயிர்கொண்டு அவ்விடத்திற்கு வந்தனர். பூரிசிரவஸ் எழுந்து “நான் அவர்களை வரவேற்று அழைத்துவருகிறேன்” என்று சொல்லி குடில்முற்றத்தின் விளிம்பிற்குச் சென்றான். துர்மதனும் அஸ்வத்தாமனும் இரு புரவிகளில் வந்தனர். இறங்கி அவர்கள் அருகணைந்ததும் பூரிசிரவஸ் தலைவணங்கி முகமன் உரைத்து அவர்களை அழைத்து வந்தான்.

துரியோதனனை நோக்கி அஸ்வத்தாமன் தலைவணங்க பீடத்தில் அமரும்படி அவன் கைகாட்டினான். அங்கு அமர்ந்திருந்தவர்களை ஒருமுறை விழியோட்டியதுமே என்ன நிகழ்கிறது என்பதை புரிந்துகொண்டு அஸ்வத்தாமன் அமர்ந்தான். துரோணரே அங்கு வந்து அமர்ந்திருப்பதுபோல் பூரிசிரவஸுக்கு தோன்றியது. மைந்தர்கள் தந்தையின் தோற்றத்தை எப்படி பெறுகிறார்கள் என்று அவன் வியந்துகொண்டான். முதுமை அடையும்தோறும் மைந்தரின் முகம் தந்தையரைப் போலாகிறது. களைப்பு என்பது ஒருவகை முதுமை.

சகுனி “உத்தர பாஞ்சாலரே, இங்கு நாங்கள் பேசி எடுத்த ஒரு முடிவை தங்களிடம் உரைக்க கடமைப்பட்டிருக்கிறேன். இந்த குருக்ஷேத்ரத்தில் நாளை நிகழும் போரில் நாம் உறுதியான வெற்றி ஒன்றை பெற்றாகவேண்டும். இல்லையேல் நாளையுடன் போர் முடியும். குருகுலம் முற்றழியும். குருகுலம் அழிந்தால் தட்சிண பாஞ்சாலம் எழுந்து உத்தர பாஞ்சாலத்தை வெல்லும். உங்கள் கொடிவழிகளை அழிக்கும். அத்துடன் பாரதவர்ஷத்தில் ஷத்ரிய மேலாண்மை மறையும். தொல்வேதம் சொல்லிழக்கும். அசுரவேதமும் நாகவேதமும்

இங்கு நிலை கொள்ளும். இவையனைத்தையும் தடுக்கும் ஒரு வாய்ப்பு இன்று நமக்குள்ளது” என்றார்.

அஸ்வத்தாமன் சுருங்கிய விழிகளுடன் நோக்கி அமர்ந்திருந்தான். “இன்று பாரதவர்ஷத்தில் எஞ்சியிருக்கும் மூன்று பெருவில்லவர்களில் இருவர் நம்மிடம் இருக்கிறார்கள். பார்த்தன் நம் எதிரி. அங்கநாட்டரசன் கர்ணனும் தங்கள் தந்தையும் எஞ்சிய இருவர். அவர்கள் இருவரும் இணைந்து படைநிற்பார்கள் என்றால் நாம் வெல்ல முடியாதவர்களாகிறோம்” என்றார் சகுனி. அஸ்வத்தாமன் தலையசைத்தான். “ஆனால் பீஷ்ம பிதாமகர் அங்கநாட்டரசர் கர்ணன் இப்போரில் எவ்வகையிலும் ஈடுபடக்கூடாதென்று சொல்லி தடுத்து வைத்திருந்தார். அங்கநாட்டு இளவரசர்கள்கூட இப்போரில் படைத்தலைமை கொள்ள ஒப்பப்படவில்லை. அவர்கள் தங்கள் படைப்பிரிவுகளுடன் சூதர்களின் அடையாளம் தாங்கி தேர்வலர்களாகவே பின்னணியில் நின்றிருக்கிறார்கள்.”

அஸ்வத்தாமன் “ஆம்” என்றான். சகுனி மேலும் சற்று குனிந்து ஒளிரும் தாடியும் அனல்துளி மின்னிய விழிகளுமாக “நமக்கு இன்று வேறு வழியேதும் இல்லை. தங்கள் தந்தை அங்கநாட்டரசன் மீது கொண்ட உணர்வுகள் ஏதென்று அனைவருக்கும் தெரியும். அவர் கையிலிருந்து தவறி வெளியே விழுந்து முளைத்து அவரளவுக்கே எழுந்த பெருமரம் அங்கநாட்டரசன். அந்த உண்மையை இன்று வரை உங்கள் தந்தையால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆனால் இத்தருணத்தில் அவர் அத்தகைய தனியுணர்வுகளை வென்று எங்களுக்கு அருளியே ஆகவேண்டும்” என்றார். அனைத்தும் புரிந்து அஸ்வத்தாமன் சற்று நிமிர்ந்து பெருமூச்சுவிட்டான்.

அவன் புரிந்துகொண்டதை உணர்ந்தமையால் சகுனி எளிதானார். “நாங்கள் நேரடியாகச் சென்று அவரிடம் இதை சொல்வதில் பல தடைகள் உள்ளன. அவர் முதல் உணர்வெழுச்சியில் எங்கள் கோரிக்கையை மறுத்துவிட்டாரெனில் அவ்வாறு மறுத்த சொல்லிலேயே இறுதிவரை நின்றாகவேண்டிய நிலை ஏற்படும். ஆகவே இதை தாங்கள் அவரிடம் சொல்ல வேண்டும். தங்களை இங்கு அழைத்தது அதன் பொருட்டே.” அஸ்வத்தாமன் “மெய்தான். நான் அவரிடம் பேசுகிறேன்” என்றான்.

துரியோதனன் எழுந்து அஸ்வத்தாமனின் கைகளை பற்றிக்கொண்டு “பாஞ்சாலரே, என் பொருட்டு இதை செய்க!” என்று தணிந்த குரலில் சொன்னான். அஸ்வத்தாமன் பதறி எழுந்து “என்ன இது, அரசே! தங்கள் சொல்லை தலைசூடவேண்டியவன் நான். எனக்கு நீங்கள் ஆணையிடவேண்டுமேயொழிய ஒரு தருணத்திலும் மன்றாட்டென ஒரு சொல் உங்கள் நாவில் எழலாகாது. உங்கள் பொருட்டு என் வாழ்வை மட்டுமல்ல என் வீடுபேற்றையேகூட அளிக்கும் உறுதிகொண்டவன் நான். இது என் கடமை” என்றான்.

சகுனி “இதை எப்படி அவரிடம் சொல்லவேண்டுமென்று நான் வகுத்திருக்கிறேன். எந்நிலைமையிலும் கர்ணன் படைத்தலைமை ஏற்க அவனுக்குக் கீழே ஆசிரியர் போரிடும் நிலை வராதென்று அவரிடம் சொல்லுங்கள்” என்றார். அஸ்வத்தாமன் முகம் தெளிந்து “ஆம், நான் அதைப்பற்றியே எண்ணிக்கொண்டிருந்தேன். அது ஒன்றே அவரால் ஏற்கப்பட இயலாதது” என்றான். “இனி கௌரவப் படைகளின் தலைமை துரோணாசிரியருக்குரியது. அவர் பாண்டவர்கள் மீது

வெற்றியை ஈட்டி எங்களுக்கு அளிக்கட்டும். குருக்ஷேத்ரம் வென்றவர் என்ற பெயர் படைவரலாறுகளில், சூதர்சொல்லில், நம் வருந்தலைமுறைகளில், கனவுகளில் நிலைகொள்ளட்டும். அவருக்குக் கீழே அவருடைய மாணவர்களில் ஒருவராக அவர் தாள் பணிந்து வில்லெடுத்து களம் நிற்பவராகவே அங்கர் அங்கு வருவார்” என்றான் துரியோதனன்.

அஸ்வத்தாமன் “அது போதும்” என்றான். “போர் தொடங்குவதற்கு முன்பு அங்கர் அங்கு வந்து, படைமுகப்பில் வைத்து ஆசிரியரின் தாள்முன் வில்தாழ்த்தியே போருக்கெழுவார், இது என் சொல்” என்றான் துரியோதனன். அஸ்வத்தாமன் “நாம் என்ன சொன்னாலும் அங்கர் களம் வந்து நின்றாலே போர்வெற்றியின் புகழ் அவரை நோக்கியே செல்லும் என்பதை தந்தை அறிவார்” என்றான். சகுனி “அல்ல, அங்கன் சூதன். அவனிடம் புகழ்செல்ல ஷத்ரியர் ஒப்பமாட்டார்கள்” என்றார். ஜயத்ரதன் “ஆம், அதோடு துரோணர் அந்தணர். அவருடைய வெற்றியைக் கொண்டாடவே அந்தணரும் விழைவார்கள்” என்றான்.

அஸ்வத்தாமன் புன்னகைத்து “ஷத்ரியர்களோ அந்தணரோ அல்ல, சூதர்களும் அவர்களின் சொற்களை செவிகொள்ளும் எளிய குடியினருமே இங்கே வரலாற்றை சமைக்கிறார்கள். அவர்கள் உளம்சூடி கொண்டாடிச் சொல்லிப்பெருக்குவது ஒன்றுள்ளது. அங்கர் பேரழகர், என் தந்தை அழகற்றவர். இன்றுவரை நம்மை வந்தடைந்த கதைகளை பாருங்கள், அறிவுக்கும் ஆற்றலுக்கும் நிகராகவோ ஒரு படி மேலாகவோ அழகு போற்றப்பட்டிருப்பதை காண்பீர்கள்” என்றான். அவன் சொன்னதுமே அது உண்மை என அனைவரும் உணர்ந்தனர். “கதிர்முடியும் மணிக்குண்டலங்களும் மார்பில்

வெஞ்சுடர்கவசமும் அணிந்து அங்கர் வந்து களமுகப்பில் நிற்கும்போதே இப்போர் அவருடையதென்றாகிவிடும். அனைத்து விழிகளும் பிற எவரையும் அறியாதவையாக மாறும்” என்றான் அஸ்வத்தாமன்.

சகுனி “அது மெய். ஆனால் அந்தப் பகலொளி போன்ற உண்மையைக்கூட காணமுடியாமலாக்கும் விழித்திரை ஒன்று உண்டு” என்றார். புன்னகையுடன் முன்னால் சாய்ந்து “அதன் பெயர் ஆணவம். உங்கள் தந்தையிடம் சொல்லுங்கள், அவர் வில்லுடன் களம்வந்து நின்றால் அங்கன் ஒளிகுன்றி எளிய மாணவனாகவே தெரிவான் என்று. விழிகளிலும் சொற்களிலும் வெளிப்படையான ஏளனத்துடன் நீங்கள் அதை சொன்னாலும்கூட உங்கள் தந்தை அவ்வண்ணமே நேர்ப்பொருளென ஏற்பதை, ஆம் என்று பெருமிதம் கொண்டு மறுமொழி உரைப்பதை காண்பீர்கள். நான் சற்றுமுன் சொன்னேன், கல்விகொண்டோர் ஆணவம் மிக்கவர். பெருங்கல்வியாளர் பேராணவம் கொண்டவர். கல்வி அளித்த அனைத்தையும் ஆணவம் முற்றழிக்க துலாமுள் நிலைகொண்டிருக்கும்” என்றார்.

அஸ்வத்தாமன் வெண்ணிறப் பற்கள் ஒளிவிட வாய்விட்டுச் சிரித்துவிட்டான். பின்னர் தலையசைத்து “ஆம், நான் அவரிடம் பேசுகிறேன்” என்றான். “நீங்கள் அவரிடம் பேசத்தொடங்குகையிலேயே துரோணாச்சாரியரே கௌரவப் படைகளின் முதன்மைபடைத்தலைவராக இருக்க வேண்டுமென்று நாங்கள் விழைவதை சொல்லுங்கள். அவர் அதை ஏற்றுக்கொண்ட பின்னர் அவருக்குக் கீழ் ஒரு வில்லவனாக கர்ணன் நிலைகொள்வான் என்று கூறுங்கள்.

அவர் மறுக்கமுடியாது' என்று சகுனி சொன்னார். "ஆம், அவ்வாறே" என்று அஸ்வத்தாமன் தலைவணங்கினான்.

அவர்கள் மெல்ல முகம் மலர்ந்து இயல்பானார்கள். துரியோதனன் "இனி இப்போர் வெல்லும். அந்த நம்பிக்கையை இதோ அடைந்தேன்" என்றான். "கர்ணன் வெல்ல முடியாதவன்" என்று சகுனி சொன்னார். "இதுவரை அனைத்து களங்களிலும் அவன் தன் தலைதாழ்த்தி மீளநேர்ந்தது. அனைத்துச் சிறுமைகளையும் இங்கே வெல்வதன் வழியாக அவன் நிகர்செய்தாகவேண்டும்." துரியோதனன் "ஆம், இந்தக் களத்தில் எழுவதற்காகவே அவன் அத்தனை அவைச்சிறுமைகளை சந்தித்தான்" என்றான்.

"பீஷ்ம பிதாமகரை வீழ்த்தியது அவர் பெருந்தந்தை என்னும் இயல்பு. எங்கோ ஓரிடத்தில் தன் உடலை மைந்தர் உண்ணக்கொடுப்பது தந்தையரின் வழக்கம். மாந்தாதா தன்னையே அளித்ததுபோல்" என்று சகுனி சொன்னார். அஸ்வத்தாமன் "ஆம், அதை நானும் எண்ணினேன். இன்று அவர் உடலில் பாய்ந்திருக்கும் அம்புகள் அனைத்தும் அவர் மைந்தரின் நாவுகள். அவர் குருதியை அவை சுவைக்கின்றன. உடலெங்கும் முலைக்கண்கள் திறந்த பெரும்பன்றி என அவர் அங்கே கிடக்கிறார்" என்றார்.

சகுனி அதை கைவீசி தவிர்த்து "ஆனால் வெற்றி ஒன்றுக்கு மாறாத பிறிதொன்றில் அமையாத உறுதி கொண்டவன் அங்கன்" என்றார். "இக்களத்தில் எவர் மேலும் எவ்வகையிலும் அவன் கனிவுகொள்ள வேண்டிய தேவை இல்லை. எவருக்கும் எதையும் அளிக்கவேண்டியதும் இல்லை. இங்கிருக்கும் ஒவ்வொருவரும் அவனிடம் எவ்வகையிலோ நீ வேறு என்று சொல்லியிருக்கிறார்கள். இங்குள்ள ஒவ்வொருவரும்

அவனுக்கு எவ்வகையிலோ கடன்பட்டிருக்கிறார்கள். இந்தக் களத்தில் எது செய்தாலும் பிழையில்லை. ஆகவே அனைத்து எல்லைகளையும் கடந்து அவன் வெல்ல முடியும்.”

“அர்ஜுனன் அவன் முன் நின்றிருக்க இயலாதென்பது பல முறை நிறுவப்பட்டுள்ளது. துரோணரும் கர்ணனும் இணைந்து வரும் நாளிலேயே அர்ஜுனனை கொன்றொழிப்பார்களெனில் இந்தப் போர் நிறைவுறும்” என்றான் ஜயத்ரதன். “பீமனை நான் கொல்வேன்” என்று துரியோதனன் தணிந்த குரலில் சொன்னான். துச்சாதனன் “கடோத்கஜனை நான் கொல்ல விழைகிறேன்” என்று சொன்னான். “அது நிகழ்க!” என்று சகுனி கூறினார். பின்னர் “அங்கநாட்டுக்கு தூதர் செல்லவேண்டும். கர்ணன் நாளை காலையிலேயே நமது படைமுகப்பில் தோன்ற வேண்டும்” என்றார்.

“இக்களத்திற்கு மிக அருகே யமுனைக்கரையில் சிபிரம் என்னும் சிற்றூரில் எவருமறியாது கர்ணன் தங்கியிருக்கிறான். ஒவ்வொரு நாளும் இங்கு நிகழும் போர்ச்செய்திகள் பறவைகள் வழியாக தன்னை வந்து அடையும்பொருட்டு அங்கு வந்துள்ளான். இப்போது சென்றால் இரு நாழிகையில் சென்றடையலாம்” என்றான் துரியோதனன். “நானே செல்கிறேன்” என்று துச்சாதனன் எழுந்தான். “கௌரவர் ஒருவர் சென்றால்போதும். உடன் சொல்லாடல் கற்ற ஒருவர் செல்லவேண்டும். பால்ஹிகர் செல்லட்டும்” என்றார் சகுனி. “ஆம் அரசே, நான் செல்கிறேன். நீங்கள் துயில்கொள்க!” என்றான் பூரிசிரவஸ். “கர்ணன் வருகிறான் என்னும் செய்திபோல் நற்துயிலளிப்பது பிறிதொன்றில்லை” என்றான் துரியோதனன்.

# கார்கடல் - 7

குருக்ஷேத்ரத்திற்குத் தென்கிழக்கே அமைந்திருந்த சிறிய எல்லைக்காவல் கோட்டையாகிய சிபிரம் அங்கநாட்டுப் படைகளின் தலைமையிடமாக மாறியிருந்தது. மண்குழைத்து கட்டப்பட்ட உயரமற்ற கோட்டையைச் சூழ்ந்திருந்த குறுங்காட்டில் படைகள் பாடிவீடுகளை அமைத்து பதினேழு நாட்களாக தங்கியிருந்தன. அவ்விரவில் படையினர் எவருமே துயில்கொண்டிருக்கவில்லை. பீஷ்ம பிதாமகர் களம்பட்ட செய்தி முந்தைய நாள் உச்சிப்பொழுதிலேயே அவர்களை வந்தடைந்துவிட்டிருந்தது. அஸ்தினபுரியின் அரசரிடமிருந்து போருக்கான அழைப்பு வரக்கூடுமென்று படையெங்கும் பேச்சு பரவியது. படைவீரர்கள் சிறு குழுக்களாக அமர்ந்து உளஎழுச்சியுடன் அதையே பேசிக்கொண்டிருந்தார்கள்.

பதினேழு நாட்களாக ஒவ்வொரு நாளுமென போருக்கெழுவதை எதிர்பார்த்து அவர்கள் அங்கே தங்கியிருந்தார்கள். அங்கநாட்டிலிருந்து கிளம்புகையில் குருக்ஷேத்ரத்தில் அவர்கள் கலந்துகொள்ள வாய்ப்பில்லை என்ற எண்ணமே இருந்தது. ஒருவேளை கௌரவ அரசர் படைத்துணை கோரினார் என்றால் மூன்று நாழிகை பொழுதுக்குள் களத்திற்குள் சென்றுநின்றிருக்கும் பொருட்டு அவ்வூர் தேர்ந்தெடுக்கப்பட்டு அங்கு படைநிலை அமைக்கப்பட்டது. சம்பாபுரியிலிருந்து கிளம்பி படகுப்பாலம் வழியாக கங்கையைக் கடந்து அங்கே வந்து சேர்ந்து நிலைகொண்டார்கள். அருகே குருக்ஷேத்ரம் இருக்கும்

உணர்வே அவர்களை போரையன்றி வேறெதையும் எண்ணமுடியாதவர்களாக ஆக்கியது.

போருக்குச் செல்ல வாய்ப்பில்லை என ஆழம் நம்ப போருக்கெழவேண்டும் என உள்ளம் பொங்க அவர்கள் இரு நிலையில் தவித்தனர். ஆணை கிடைத்ததுமே போருக்குக் கிளம்பிவிடப்போவதாக அவர்கள் ஒருவரோடு ஒருவர் சொல்லிக்கொண்டார்கள். சொல்லச்சொல்ல அதை உள்ளம் நம்பியது. ஆழம் மேலும் அழுந்தியது. ஒவ்வொருநாளும் போர்ச்செய்திகள் வந்துகொண்டிருந்தன. அவை மிகக் குறைவாகவே படைகளை வந்தடைந்தன. ஆகவே அவர்கள் அதை பெருக்கிக்கொண்டார்கள். படைகளில் கதைசொல்லிகள் மிக விரும்பப்பட்டார்கள். இரவுகளில் இருண்ட வானின் விண்மீன்களை நோக்கி படுத்தபடி அவர்கள் சொற்களில் வாழ்ந்தார்கள்.

“படை என்பது ஒரு குழியாடிபோல. அண்மிக்கும் அனைத்தையும் ஆயிரம் மடங்காக்குகிறது” என்று படைத்தலைவன் வஜ்ரசீர்ஷன் சொன்னான். “படையில் சென்றுவிழும் செய்தி பாற்கடலில் உறைமோர் விழுந்ததுபோல” என்றார் அருகிருந்த அமைச்சர் சுமார்க்கர். பெருகிப்பெருகி நுரைத்த கதைகளில் அவர்கள் வாழ்ந்தனர். அங்கே அருஞ்செயலாற்றினர். ஆயிரம் முறை இறந்தனர். நடுகற்களென நின்று படையல் கொண்டனர். அதனூடாக வாழ்ந்து நிறைந்த சலிப்பை அடைந்தனர். அச்சமும் தயக்கமும் அழிய போரை விழைந்தனர். “நமது விற்களிலும் வேல்களிலும் குடியேறிய தெய்வங்கள் குருதி நாடுகின்றன” என்றார் முதிய வீரர் ஒருவர். “என் கனவில் நேற்று புலியின் நாவெனச் சிவந்த

உடல்கொண்ட போர்த்தெய்வத்தை கண்டேன். அதன் விழிகள் அனல்கொண்டிருந்தன.”

ஆனால் பத்து நாட்களாகியும் அழைப்பு வரவில்லை. அது அவர்களை முதலில் பொறுமையிழக்கச் செய்தது. பின்னர் சிறுமையென உணரச்செய்தது. “அங்கர்கள் இன்றி இப்போர் வெல்லப்படுமென்றால் அதற்குப்பின் நாம் மலைநிஷாதர்களாகவே அறியப்படுவோம்” என்றான் ஒரு வீரன். இன்னொருவன் தாழ்ந்த குரலில் “சூதர்களாக” என்றான். அனைவரும் அமைதியடைந்தனர். மூத்த வீரர் ஒருவர் “அழைப்பு வரும். நம் அரசரின் வில்லே போரை முடித்துவைக்கும். ஐயமே வேண்டியதில்லை” என்றார். “இங்கே போரிடுவது வில் அல்ல, குலம்” என்றார் இன்னொருவர். “ஆம், ஆனால் குலங்களை உருவாக்குவது வில்லே. நோக்குக, அங்கம் பாரதவர்ஷத்தை ஆளும் நாள் வரும்!” என்றார் முதிய வீரர்.

சம்பாபுரிக்கு அஸ்தினபுரியின் படைநகர்வின் செய்திகள் வந்துகொண்டே இருந்தன. கௌரவ அரசர் எந்தப் பொழுதிலும் உதவி கோரி செய்தியை அனுப்பக்கூடும் என்று அங்கநாட்டுப் படைத்தலைவர்கள் எண்ணினார்கள். சம்பாபுரியின் சொல்சூழ்அவையில் மூத்த அமைச்சரான ஹரிதர் “களம்எழுவது வரைக்கும் மட்டுமே எளிய தயக்கங்களும் ஆணவங்களும் நீடிக்கும். இழப்புகளும் வஞ்சங்களும் பேருருக்கொண்டெழுந்து முன்நிற்கையில், விஞ்சியிருப்பதொன்றே. முதல்தேவை என்றாகுகையில் எரியும் இல்லத்தின் மீது எதை எடுத்து வீசுவதென்று தவிக்கும் நிலை ஏற்படுகிறது” என்றார். “அஸ்தினபுரியின் அரசர் உறுதியாக தங்களை அழைப்பார், அரசே. ஏனென்றால் மறுபக்கம் நின்றிருப்பவர் பார்த்தர். பீஷ்மர் ஒருபோதும் பார்த்தரை

கொல்லமாட்டார். பார்த்தர் களம்படாமல் இப்போர் முடியாது” என்று படைத்தலைவன் உக்ரகண்டன் கர்ணனிடம் சொன்னான்.

கர்ணன் அவர்கள் சொல்வன அனைத்திற்கும் செவிகொடுத்தான். ஆனால் அவனில் ஓடுவதென்ன என்று அவர்கள் உணரமுடியவில்லை. தன் நீண்ட உடலை அரியணையில் சற்றே சரித்தமைத்து, கைகளை கைப்பிடிமேல் தொய்ந்து அமையவிட்டு, விழிகளைத் தாழ்த்தி, சற்றே தலைகுனிந்தவன்போல் அவன் அமர்ந்திருந்தான். ஏதேனும் எண்ணம் எழுகையில் அவன் இடக்கை எழுந்து மீசையை நீவி சுழற்றுவது வழக்கம். அவன் முகத்தை நோக்கிக்கொண்டிருந்த படைத்தலைவர்கள் பொறுமையிழந்தனர். பேருடலர்களுக்கே உரிய தயங்கிய அசைவுகள் கர்ணனிடம் இருந்தன. அவை அவன் உளம்தயங்குகிறான் என எண்ணச்செய்தன. படைத்தலைவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டார்கள். வெளியே கேட்டுக்கொண்டிருந்த படைகளின் முழக்கம் ஓர் அறைகூவலாகவே அவர்களுக்கு கேட்டது.

“நாம் அஸ்தினபுரியின் அணுக்கர். எவ்வகையிலும் நாம் ஒதுங்கியிருக்க இயலாது. அவர்கள் அழைக்காமலேயே நாம் படைமுகம் கொள்ளலாம்” என்றார் சிற்றமைச்சரான சாலர். “ஆம், அதுவே நாங்கள் சொல்வது” என்று வஜ்ரசீர்ஷன் சொன்னான். படைத்தலைவர்கள் “ஆம், அதை நாங்களும் ஒப்புகிறோம்” என்றனர். ஒவ்வாமையை முகத்தில் காட்டியபடி எழுந்த ஹரிதர் “அரசே, அங்கம் அஸ்தினபுரியின் தோழமை நாடு. நாம் இன்றுவரை அவர்களுக்கு கப்பம் கட்டியதில்லை. சென்ற இருபதாண்டுகளில் அங்கநாட்டில் நிகழ்ந்த ஒவ்வொரு மணிமுடி விழாவிலும் தீர்க்கதமஸின் குருதிவழியில் எழுந்து அங்கத்தின் அரியணையில் அமர்ந்த தொல்லரசர் நிரையையும்,

அங்கத்தின் மணிமுடியையும் செங்கோலையும் வாழ்த்தி மட்டுமே விழா எடுத்திருக்கிறோம்” என்றார்.

அவர் பேசுவது அங்கிருந்த படைத்தலைவர்களிடம் என்றாலும் கர்ணனை நோக்கியே சொல்லெடுத்தார். “கப்பம் கட்டும் நாடு ஒவ்வொரு மணிமுடிபெருக்கும் விழாவிலும் கப்பம் பெறும் அரசனின் மணிமுடியையும் கோலையும் குலநிரையையும் வாழ்த்தி வணங்கிய பின்னரே தனது அரசநிரையையும் முடியையும் கோலையும் வாழ்த்த வேண்டும் என்று நெறி உள்ளது. அஸ்தினபுரியின் மணிமுடியை வாழ்த்தி, அங்கிருந்து அனுப்பப்படும் உடைவாளை அரியணையில் வைத்து வணங்கி, ஒவ்வொரு ஆண்டும் தங்கள் பணிவுறுதியை மீள அறிவித்த பின்னரே கப்பம் கட்டும் பிற நாடுகள் தங்கள் குடிநிரையையும் முடிகோலையும் வாழ்த்துகின்றன என்று நீங்கள் அறிந்திருப்பீர்கள். ஒருமுறை கூட நாம் அதை செய்ததில்லை. நாம் என்ன செய்கிறோம் என்பதை சூழ்ந்திருக்கும் ஒவ்வொரு அரசும் ஒற்றர்களின் கண்கள் வழியாக நோக்கிக்கொண்டிருந்தன. அங்கம் ஒருமுறையும் தலைவணங்கியதில்லை.”

“ஆகவே இந்தப் போர்முனையில் அதை மீண்டும் ஒரு முறை உறுதி செய்ய வேண்டியிருக்கிறது” என்றார் ஹரிதர். “அஸ்தினபுரியிலிருந்து அரசரின் முறையான ஓலை வந்த பின்னரே நாம் போருக்கெழ வேண்டும். அந்த ஓலையில் நாம் உதவிக்கென அழைக்கப்பட்டிருக்கிறோம் எனும் வரி இருக்கவேண்டும். தோழமை நாட்டின் தோள்கொடை என்றே அமையவேண்டும் நமது படையெழுச்சி. அஸ்தினபுரி நமக்கு ஆணையிடலாகாது. அழைக்கப்படாமல் நாம் செல்வதும் தகாது.” கர்ணன் மீசையைச் சுழற்றியபடி இமைசரிந்த

விழிகளுடன் நோக்கிக்கொண்டிருந்தான். சாலர் ஏதோ சொல்ல நாவெடுக்க “அங்கம் அடைந்த சிறுமை போதும். இனியில்லை!” என்றார் ஹரிதர்.

படைத்தலைவர்கள் கலைந்து ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டனர். அமைச்சர் திரும்பி கைதூக்கியபோது ஓசை அடங்கியது. “இதை நான் சொல்வதற்கான பிறிதொரு சூழலும் உள்ளது. நாம் இந்தப் போரில் தவிர்க்கப்பட்டிருக்கிறோம். அங்கநாட்டின் அரசர் அஸ்தினபுரி அரசரின் தோள்தோழர் என்பதை எவரும் அறிவார். இன்று அங்கு அரியணை இருந்து ஆளும் அரசியை கவர்ந்து வந்தவரே நம் அரசர் என்பதை கதைகள் பாரதவர்ஷம் முழுக்க சொல்லி நிலைநிறுத்தியிருக்கின்றன. இப்போரில் நாம் விலகி நின்றிருக்கவில்லை, விலக்கப்பட்டிருக்கிறோம் என்பதை அறியாத எவரும் பாரதவர்ஷத்தில் இல்லை. அது நம் அரசரின் குடிப்பிறப்பினால்தான் என்பதை ஒவ்வொரு அவையிலும் அடுமனையிலும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். அந்த உண்மையை நாம் விழிமூடி மறைத்துவிடமுடியாது.”

“அவர்கள் வந்து வணங்கி நம்மிடம் உதவி கோருவதொன்றே அந்த அலரை நாம் வென்று செல்வதற்கான வழியாகும். நமது அரசர் களமெழுந்து, ஷத்ரியர்களுக்கு தலைமைதாங்கி, படைமுகப்பில் நின்று, இப்போரை வென்று அவர்களுக்கு அளிக்கவேண்டும். மும்முடி சூடி அமரும் அஸ்தினபுரியின் அரசருக்கு வலப்பக்கம் வாளுடன் நின்று புகழ் கொள்ளவேண்டும். அது ஒன்றே அங்கம் இன்று கொண்டுள்ள இப்பழியை வென்று கடப்பதற்கான வழி” என்றார் ஹரிதர். அவையிலிருந்த படைத்தலைவர்கள் “ஆம்! மெய்!” என்றனர். குடித்தலைவர் சம்பூகர் “அவர்கள் அழைக்கட்டும். அஸ்தினபுரி

அழைக்கட்டும்... நாம் கொடுப்பவர்கள். பெறுபவர் கைநீட்டாமல் கொடுக்க இயலாது” என்றார். “ஆம்! ஆம்!” என அவை முழக்கமிட்டது.

ஹரிதர் “நிமித்திகர்களிடம் கேட்டேன், அங்கநாட்டு அரசர் இப்போரில் பங்கெடுப்பது உறுதி என்றனர். ஆகவே நாம் எப்படியும் படைத்துணைக்கு எழவேண்டும். அங்கநாட்டிலிருந்து குருக்ஷேத்ரம்வரை செல்வது நெடுந்தொலைவு. ஆகவே குருக்ஷேத்ரத்தின் அருகிலேயே நாம் பாடிகொள்ளவேண்டும். ஆனால் நாம் போருக்கெழுவதென்று அது அமையலாகாது. அஸ்தினபுரியின் எல்லையில் அமைந்த சிபிரம் என்னும் சிறு காவல்கோட்டை நாம் பாடிவீடு அமைக்க உகந்தது. அங்கே செல்வோம். அங்கு அரசர் தங்குவதற்கு காவலர்தலைவரின் மாளிகையும் உள்ளது. நாம் படைகொண்டு செல்கிறோம், ஆனால் படைநகர்வாக அல்ல. அரசர் அங்கே இறைவழிபாட்டுக்கும் வேட்டைக்குமே செல்கிறார்” என்றார்.

“சிபிரத்தின் அருகே கதிரவனுக்கான தொன்மையான ஆலயம் ஒன்றுள்ளது. பாரதவர்ஷத்தின் முதல் கதிரவன் ஆலயம் அது என்று சொல்வார்கள். தொல்காலத்தில் நிமித்தநூலைப் படைத்த சூரியதேவர் நிறுவியது. பன்னிரண்டு கோள்நிலைகளும் பன்னிரண்டு கருவறைகளாக பிறைவடிவில் அமைந்தது. அங்கே சென்று வழிபட அங்கநாட்டரசர் இங்கொரு நோன்புறுதி கொண்டு கையில் நூல் கட்டிக்கொள்ளட்டும். அங்கு வழிபடச் செல்லும் செய்தியை அங்கநாட்டுக் குடிகளுக்கு தெரிவித்து இங்கு ஒரு பூசை நிகழட்டும். குடித்தலைவர்கள் வாழ்த்த, நோன்பிருந்து, எளிய ஆடை அணிந்து, அரசர் சிபிரத்திற்கு செல்லட்டும். சூரியதேவரின் ஆலயத்தில் பன்னிரண்டு நாட்கள் அரசர் பூசை செய்து நோன்பு

அறுத்து திரும்புவதாக திட்டமிடுவோம். ஒன்று உறுதி, அந்நோன்பு முடிவதற்குள் குருக்ஷேத்ரக் களத்திலிருந்து அரசருக்கு அழைப்பு வரும்” என்றார் ஹரிதர்.

அனைவரும் கர்ணன் சொல்லப்போவதென்ன என்பதை கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தனர். அவன் விழிகள் தாழ்ந்திருக்க கைகள் மீசையை சுருட்டிக்கொண்டிருந்தன. அவையில் எவரோ இருமினார்கள். எவருடைய அணிகளோ ஒலித்தன. வெளிக்காற்று வந்து திரைச்சீலைகளை படபடக்கச் செய்தது. அமைச்சர் நெஞ்சில் கைகளைக் கட்டியபடி அரசரின் ஆணைக்காக கூர்ந்திருந்தார். கர்ணன் அவர்கள் அங்கிருப்பதையே முற்றாக மறந்துவிட்டவன் போலிருந்தான். அவனை மீட்கும் பொருட்டென ஹரிதர் சற்று ஓசையெழுப்பி இருமினார். திடுக்கிட்டதுபோல் விழிப்பு கொண்ட கர்ணன் வேறெங்கோ நோக்கு சென்றுவிட்டிருந்த ஒளிமங்கிய விழிகளால் அவையை நோக்கினான்.

“அரசர் தன் முடிவை அறிவிக்க வேண்டும்” என்று ஹரிதர் சொன்னார். கர்ணன் தன் இரு கைகளாலும் அரியணையின் பிடியை மெல்லத் தட்டிவிட்டு எழுந்து “ஆம், அமைச்சர் உரைத்தபடியே ஆகுக!” என்று கூறி கைகூப்பினான்.

கர்ணன் அரசவையிலிருந்து வெளியே செல்கையில் அவனுடன் நடந்த சிவதர் தாழ்ந்த குரலில் “அமைச்சர் கூறுவது நன்று. நோன்புக்கு என நாம் அங்கே செல்வோம். அங்கு காத்திருப்போம். இத்தருணத்தில் நாம் அவ்வாறு செல்வதை பெரிதாக எவரும் நோக்கப் போவதில்லை. அனைத்து விழிகளும் இந்திரப்பிரஸ்தத்தையும் அஸ்தினபுரியையுமே

நோக்கிக்கொண்டிருக்கின்றன” என்றார். கர்ணன் தலையசைத்தபடி மெல்ல நடந்தான். சிவதர் அவனுடைய நீள் காலடிகளுடன் இணைசெல்வதற்காக மூச்சு சற்றே இரைக்க சிற்றோட்டமாகச் சென்றபடி “ஆனால் முற்றாக நாம் ஒதுங்கியிருப்பதும் முறையானதல்ல. நமது மைந்தர்களில் ஒருவர் இங்கிருக்கட்டும். பிறர் அஸ்தினபுரிக்கு படையுடன் செல்லட்டும். அவர்களுக்கு உங்களுக்கிருக்கும் விலக்குகள் ஏதுமில்லை” என்றார்.

கர்ணன் நின்று இயல்பாக திரும்பிப்பார்த்தான். இடக்கை எழுந்து மீசையை நாடிச் சென்றது. சிவதர் சற்றே தலைவணங்கி “அதுவே முறை. அவர்களின் மைந்தர் போரில் இறங்குகையில் நமது மைந்தர் இங்கிருப்பது எவ்வகையிலும் சரியானதல்ல” என்றார். “ஏன்?” என்று அவன் கேட்டான். சிவதர் அசையாமல் நின்றார். மீண்டும் “ஏன்?” என்றான் கர்ணன். “ஒருவேளை அவர்கள் உளம்திரிபடையக்கூடும்” என்று சிவதர் சொன்னார். புரியாமல் விழிகள் இடுங்க கர்ணன் பார்த்தான். “அரசே, போரில் கௌரவ மைந்தர்கள் களம்படக்கூடும்” என்று சிவதர் சொன்னார். “அதனால் என்ன?” என்று கர்ணன் கேட்டான். சிவதர் “அதைக் கண்டபின் நமது மைந்தர் களம் செல்வதைத் தவிர்க்க நாம் எண்ணக்கூடும்” என்றார்.

மெல்லிய சினம் எழுந்த விழிகளுடன் கர்ணன் பார்த்தான். சிவதர் அஞ்சாமல் அவன் விழிகளை எதிர்கொண்டு “ஆம், அவ்வாறுதான் நிகழும். நாம் அரசர்கள், வீரர்கள், அறமறிந்தோர் என்பது உண்மை. அனைத்திற்கும் அடியில் தந்தையர் என்பதும் உண்மையே. இறுதிக்கணத்தில் எழுந்து நிற்பவர் தந்தையாகவே இருப்பார்” என்றார். கர்ணன் பெருமூச்சுவிட்டான். “ஆகவே முன்னரே நம் மைந்தரை குருக்ஷேத்ரத்திற்கு

அனுப்புவதொன்றே வழி. இல்லையேல் நாமே வெறுக்கும் ஒரு பழி நம்மீது படிய நேரும்" என்றார் சிவதர். கர்ணனின் கை மீசையிலிருந்து விழ தலைதிருப்பி சாளரத்தினூடாக வந்த ஒளியை சற்று நேரம் நோக்கி திரும்பாமலேயே "ஆம், மெய்தான். மைந்தர் செல்லட்டும்" என்றான். சிவதர் "இன்றே ஆவன செய்கிறேன்" என்றபடி உடன் நடந்தார்.

அன்று மாலை கர்ணனின் மைந்தர்களான விருஷசேனனும் விருஷகேதுவும் சத்ருஞ்சயனும், சுதமனும், சத்யசேனனும் சித்ரசேனனும் சுஷேணனும் திவிபதனும் பாணசேனனும் அஸ்தினபுரிக்கு தங்கள் வில்லவர் துணைவர்களுடன் கிளம்பிச்சென்றனர். இறுதிமைந்தனாகிய பிரசேனன் மட்டும் சம்பாபுரியில் இருந்தான். மேலும் ஏழு நாட்களுக்குப் பின்னர் கர்ணன் அங்கநாட்டுக் காவல்படையுடன் சிபிரம் நோக்கி சென்றான். சூரியதேவன் ஆலயத்தில் நோன்பு முடி கட்டி வணங்கி, வெண்ணிற ஆடை மட்டும் அணிந்து, அணிகள் ஏதுமின்றி கைகூப்பியபடி அவன் சம்பாபுரியிலிருந்து கிளம்பியபோது கோட்டைவாயிலில் கூடி நின்றிருந்த மக்கள் அரிமலர் தூவி வாழ்த்து கூவினர்.

அரசன் நோன்பிருந்து இறைவழிபாட்டுக்குச் செல்வதாக பலமுறை முரசறையப்பட்டிருந்தமையால் "இறையருள் எழுக! கதிரருள் பெருகுக! குலம் சிறக்கட்டும்! கோல் வெல்லட்டும்! அங்கம் வெல்க! சம்பாபுரி வெல்க!" என்றே வாழ்த்துரைகள் எழுந்தன. ஆனால் கர்ணன் கோட்டைக்கு வெளியே சென்று அங்கு நின்றிருந்த பயணத்தேரை அடைந்ததும் எவர் முடிவு செய்ததென்று அறியவொண்ணாது அங்கநாட்டின் குடிகள் அனைவரும் ஒற்றைக்குரலில் வெடித்தெழுந்து "வெற்றி கொள்க! பெருந்திறல் வீரர் புகழ் கொள்க! அங்கநாட்டரசர்

வசுசேஷணர் வெல்க! வெற்றிவேல்! வீரவேல்!” என்று குரலெழுப்பினர். சம்பாபுரியிலிருந்த அனைத்துப் படைவீரர்களும் வில்களையும் வாள்களையும் வேல்களையும் தலைக்கு மேல் தூக்கி “வெற்றிவேல்! வீரவேல்!” என்று போர்க்குரல் எழுப்பினார்கள்.

திகைத்ததுபோல் திரும்பிப்பார்த்த கர்ணன் தன் அருகே நின்றிருந்த படைத்தலைவனிடம் திரும்பி “என்ன?” என்றான். வஜ்ரசீர்ஷன் “அரசே, அவர்கள் உண்மை அறிவார்கள். அதை எவரும் மறைக்க முடியாது” என்று சொன்னான். தலையசைத்துவிட்டு கர்ணன் தேரிலேறிக்கொண்டான். அவனுடன் சென்ற சிறிய வில்லவர் படை முற்றாக விழிமுன்னிருந்து மறைந்து புழுதி அடங்குவது வரை சம்பாபுரியில் போர்க்குரல் எழுந்துகொண்டிருந்தது. அந்தப் படை அங்கநாட்டின் எல்லை கடப்பது வரை சாலையின் இருமருங்கும் கூடிய குடிகள் இரு கைகளையும் தூக்கி எம்பிக்குதித்தும் நெஞ்சில் ஓங்கி அறைந்தும் வெறிகொண்டு போர்க்குரல் எழுப்பிக்கொண்டிருந்தனர்.

அங்கநாட்டின் படை ஒவ்வொரு நாளும் ஒரு படைப்பிரிவென சிறுகச் சிறுக சிபிரத்திற்கு வந்தடைந்தது. அச்சிற்றூரின் படைத்தலைவன் தங்கியிருந்த மாளிகையில் கர்ணன் தங்கினான். அங்கு சுற்றிலுமிருந்த இல்லங்கள் அனைத்தும் படைத்தலைவர்களுக்கு உரியதாயின. வந்துகொண்டிருந்த அங்கநாட்டுப் படைகளால் கோட்டையைச் சூழ்ந்திருந்த குறுங்காடும் அதற்கு அப்பால் இருண்டிருந்த செறிகாடும் நிறைந்தன. ஈச்சை ஓலைகளும் மரப்பட்டைகளும் கொண்டு கட்டப்பட்ட பாடிவீடுகளில் படைவீரர்கள் தங்கினர். யானைகளும் புரவிகளும் வந்து நிறைந்தன. அவற்றிற்கு

தழையும் புல்லும் கொண்டுவரும் நிஷாதர்கள் காடுகளுக்குள்ளிருந்து நிரை நிரையாக எழுந்து வரத்தொடங்கினர். அவர்கள் உலர்ந்த கிழங்குகளையும் காய்களையும் புல்லையும் தழையையும் கொண்டுவந்து விற்கும் சந்தைகள் இரண்டு இருபக்கமும் உருவாகி வந்தன.

அஸ்தினபுரியின் படை குருக்ஷேத்ரத்தை நோக்கி சென்றுகொண்டிருக்கும் செய்திகளை அங்கிருந்து கர்ணன் கேட்டுக்கொண்டிருந்தான். “மிக மெல்ல நகர்கிறது படை. பெரிதாகும்தோறும் விரைவழிகிறது” என்றார் சிவதர். சம்பாபுரியிலிருந்து ஹரிதரின் செய்திகள் வந்தன. “இளையவர் விரைவாக ஆட்சிப்பணியை கற்றுக்கொள்கிறார்.” கர்ணன் முதல்நாள் ஆலயவழிபாடு முடிந்தபின் பெரும்பாலும் அறையிலேயே முடங்கிக்கிடந்தான். குருக்ஷேத்ரத்தை அஸ்தினபுரியின் படைகள் சென்று அடைந்தபோது சோர்வூட்டும் செய்தி ஒன்று வந்தது. அங்கநாட்டு இளவரசர்களை படைக்கலமேந்தி போர்முகப்பில் நிற்கலாகாது என்று பீஷ்மர் ஆணையிட்டிருந்தார். ஆகவே அவர்கள் புரவிகளுக்குப் பொறுப்பாக பின்னணியில் நிறுத்தப்பட்டிருந்தனர்.

சிவதர் கொதிப்புடன் கர்ணன் முன்வந்து “இது இழிவு! தங்களுக்கு மட்டுமல்ல அங்க நாட்டுக்கும் சிறுமை. குதிரைச்சூதர் என அங்கநாட்டு இளவரசர்களை வகுப்பதற்கு அஸ்தினபுரிக்கு என்றல்ல விண்ணாளும் தெய்வங்களுக்கும் உரிமையில்லை” என்றார். “படையில் சேர்ந்த பின்னர் அவர்கள் ஆணையிடப்படுவதை செய்ய வேண்டியவர்கள்” என்று மட்டும் கர்ணன் சொன்னான். “எவர் ஆணையிட்டவர்? ஆணையிடுபவர்களின் வஞ்சத்திற்கு வீரர் பலியாக

வேண்டுமா?" என்றார் சிவதர். "அவர்கள் என்ன செய்திருக்க வேண்டும்?" என்றான் கர்ணன். சிவதர் செயலற்று நின்றார். "ஆணையை மீறுவதற்கு படைவீரனுக்கு உரிமையில்லை. அவன் செய்யக்கூடுவது ஒன்றுதான். தன் கழுத்தை தானே வெட்டி களம் விழவேண்டும்" என்று கர்ணன் சொன்னான்.

சிவதர் தளர்ந்து "இப்பெரிய இழிவை சுமத்தும் அளவுக்கு நாம் என்ன பிழை செய்தோம்? நம்மிடமிருந்து ஒவ்வொன்றையும் பெற்றுக்கொள்ளவே பிறர் அணுகுகிறார்கள். அளிப்பதில் ஒருகணமும் பிந்தியதில்லை. பெற்றுக்கொள்ளும் ஒவ்வொருவரும் பழியையும் நஞ்சையுமே திருப்பி அளிப்பார்கள் எனில் இக்கொடைகளுக்கு என்னதான் பொருள்?" என்றார். கர்ணன் புன்னகைத்தான். "உங்கள் புன்னகை என்னை கொல்கிறது. நான் அஸ்தினபுரியின் அரசருக்கு என் சார்பில் ஒரு ஓலையை அனுப்பலாம் என்று எண்ணுகிறேன். நான் என் இளவரசர்களின் தந்தையின் இடத்தில் இருப்பவன்" என்றார் சிவதர். "அவரால் எதுவும் செய்ய இயலாது" என்று கர்ணன் சொன்னான்.

சிவதர் நிலையழிந்தவராக சிற்றறைக்குள் அலைந்தார். பின்னர் "குலத்தலைவர்கள் இணைந்து ஓர் ஓலை அனுப்பட்டும் பீஷ்மருக்கு. இது அவர் அங்கநாட்டுக்குச் செய்த பெரும்பிழை என்று அவர் உணரட்டும்" என்றார். பற்களைக் கடித்தபடி "இதற்கு நாம் பழிசூழ்ந்தால் அவருடைய குருதிவழியை அரசநாகம் என அது தொடரும் என அவர் அறிக!" என்றார். கர்ணன் வெற்றுநகைப்புடன் "அவர் அதையும் உணர்வதற்கு வாய்ப்பில்லை" என்று சொன்னான். "ஆம்!" என்று பெருமூச்சுடன் சொன்னபடி சிவதர் பீடத்தில் அமர்ந்தார்.

பின்னர் உளம் பொங்கி சிறிய விம்மலுடன் எழுந்த கண்ணீரை இரு விரல்களால் அழுத்தியபடி தலைகுனிந்தார்.

“அனைத்து வகையான இறப்புகளினூடாகவும் கடந்து செல்வது வீரனுக்கு நன்று என்பார்கள். அவர்கள் என் மைந்தர். அவர்கள் உணர்வார்கள் இதுவும் கல்வியே என” என்று கர்ணன் சொன்னான். சிவதர் விழிநீர் பிசிர்கள் இருந்த இமைகளுடன் நிமிர்ந்து கர்ணனை பார்த்தார். “நாம் காத்திருப்போம். நமக்கு உரிய நாள் வரும். நம்முடைய தெய்வங்கள் அதை நமக்கென அமைக்கும்” என்று கர்ணன் சொன்னான்.

சிவதர் சீற்றத்துடன் எழுந்து “இதற்கு நாம் செய்ய வேண்டிய பழியீடு ஒன்றே. நாம் வெல்லவேண்டும். பாண்டவர்களை அழித்து அஸ்தினபுரியின் மணிமுடியை உங்கள் கையால் எடுத்து துரியோதனர் தலையில் சூட்டவேண்டும். அஸ்தினபுரியின் கொடிவழியினர் அதை சூடும்போதெல்லாம் அந்த மணிமுடி உங்களால் அளிக்கப்பட்ட கொடை என்பதை உணரவேண்டும். கொடைகொண்டவரின் சிறுமை அஸ்தினபுரியில் என்றென்றும் நிலைகொள்ளவேண்டும். கொடுத்தவனின் பெருமையுடன் அங்கநாடு ஓங்கி நிற்கவேண்டும். அது நிகழவேண்டும்!” என்றார். கர்ணன் எங்கோ நோக்கி அமர்ந்திருந்தான்.

சிவதர் பீஷ்மர் களம்பட்ட செய்தியுடன் கர்ணனின் அறைக்குள் நுழைந்தபோது முகம் மலர்ந்து பற்கள் தெரிய சிரித்துக்கொண்டிருந்தார். கர்ணன் அச்செய்தியை முன்னரே அறிந்திருந்தான். ஆகவே சற்றே சினத்துடன் அவரை திரும்பிப்பார்த்தான். “இதோ தங்களுக்குரிய நாளை தெய்வங்கள் வகுத்துள்ளன, அரசே. பிதாமகர் பீஷ்மர் களம்பட்டார். அங்கே அம்புமுனையில் படுத்திருக்கிறார். இனி

அஸ்தினபுரிக்கு வேறு வழியில்லை. உங்களை போருக்கு அழைத்தே தீரவேண்டும்” என்றார் சிவதர். சலிப்பு தோன்ற “ஆம்!” என்று கர்ணன் சொன்னான்.

“பத்து நாட்கள் தனி ஒருவராக போரை அவரே நிகழ்த்தியிருக்கிறார். இன்று களம்பட்டாலும்கூட பாரதவர்ஷத்தின் நிகரற்ற வீரர் என்று நிறுவியிருக்கிறார். இப்போது அவரை புரிந்துகொள்ள முடிகிறது. அவர் தங்களை விலக்கியது இந்தப் புகழுக்கு நீங்கள் தடையாக அமைந்துவிடக்கூடாது என்பதற்காகவே. நீங்கள் களம் சென்றிருந்தால் அவருக்கு நிகராகவோ மேலாகவோ நின்றிருப்பீர்கள். இந்தப் பத்து நாள் போரின் முதற்தலைவன் எனும் பெருமையை அவர் அடைந்திருக்க மாட்டார். உங்களை நன்கறிந்தவர் அவர்” என்றார் சிவதர்.

கர்ணன் பெருமூச்சுடன் “ஆம்” என்றபின் “என்னை மெய்யாகவே நன்கறிந்திருந்தார் என்று தெரிகிறது. அவர் அறிந்திருந்ததென்ன என்பதுதான் எனக்குப் புரியவில்லை” என்றான். சிவதர் அவன் விழிகளை நேருக்கு நேர் பார்த்தார். சில கணங்கள் அமைதிக்குப் பின் “தாங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை” என்றார். கர்ணன் “என்னைக் கடந்து பிறிதொன்றை அவர் பார்த்திருக்கிறார். என்னை விலக்கியது அதன் பொருட்டே போலும். நன்று! எதுவாயினும் நன்று!” என்று சொன்னான்.

“இன்றே அஸ்தினபுரியின் தூதர் அங்கிருந்து கிளம்பக்கூடும். அவர்கள் மன்று கூடியிருக்கிறார்கள். முடிவெடுத்தபின் சற்றுநேரத்திலேயே இங்கு தூதுப்புறா வரும். அதைத் தொடர்ந்து அரசரின் நேர்தூதர்கள் வருவார்கள். பெரும்பாலும் கௌரவர்களில் ஒருவர் தானே வருவார். தங்களிடம் போர்த்துணைக்கு அழைப்புவிடுப்பார். ஹரிதர் கூறியபடி அது

அரசன் அரசனிடம் கோரும் முறையான அழைப்பாக இருக்கவேண்டும். வென்றபின் அங்கம் படைக்கூட்டில் எந்நிலையிலிருக்குமென்று ஒரு சொல் அவர்களால் உரைக்கப்படவேண்டும்" என்றார் சிவதர்.

"நான் அதை விழையவில்லை" என்று கர்ணன் சொன்னான். சிவதர் சீற்றத்துடன் "அங்கநாட்டின் பொருட்டு நான் விழைகிறேன்" என்று உரக்கச் சொன்னார். "அங்கநாடு இனி வெறும் பார்வையாளாக இருக்காது. வருபவர் எவராயினும் அவர்களிடம் நான் அதை கேட்பேன். இதில் மாற்றமில்லை" என மூச்சிரைத்தார். "சிவதரே!" என்று துயருடன் கர்ணன் சொல்ல "இதில் நீங்கள் மாற்றுச்சொல் உரைக்கலாகாது, அரசே. இது அங்கநாட்டின் உரிமை" என்றபின் சிவதர் தலைவணங்கி வெளியே சென்றார்.

கர்ணன் பெருமூச்சுடன் பீடத்தில் உடல் தளர்த்தி கால் நீட்டி அமர்ந்தான். பின் தலையை அண்ணாந்து பீடத்தின் சாய்வில் வைத்துக்கொண்டு கண்களை மூடினான். அவன் தசைகள் ஒவ்வொன்றாக தொய்வதை நான் பார்த்துக்கொண்டிருந்தேன். மெல்லிய விம்மல் போலொன்று எழ அவன் நெஞ்சு அசைந்தது. விழிகளில் இருந்து ஊறிய நீர் இருபுறமும் கன்னங்களில் வழிந்தது. நாகரே, கேளுங்கள்! பிறர் அறியாத ஆண்மகனின் துயர் தன்னந்தனி மதவேழத்தின் நோய் போன்றது. தெய்வங்கள் அன்றி பிறர் அதை அறியப்போவதில்லை. தெய்வங்களிடமும் அது முறையிடப்போவதில்லை.

அரவான் சொன்னான் "அவ்வறையில் பீடக்காலின் நிழல் நீண்டு சுவர்மடிப்பில் விழுந்து நாகத்தின் பத்தியென வளைந்து

நின்றது. அதில் குடியேறி விழிகள் ஒளிர நா பறக்க மெல்ல படமசைத்தாடியபடி நான் அவனை பார்த்துக்கொண்டிருந்தேன்.”

# கார்கடல் - 8

சிவதர் கதவை ஓசையின்றி திறந்து உள்ளே வந்து தலைவணங்கினார். கர்ணன் அத்தனை பொழுதும் தான் அசைவில்லாமல் அமர்ந்திருந்ததை அப்போதுதான் உணர்ந்தான். நெடும்பொழுது அசைவற்றிருந்ததனால் உடற்தசைகளில் எடை கூடி மெல்லிய உளைச்சல் ஏற்பட்டது. விழிகளைத் தூக்கி முகத்தால் என்ன என்று வினவினான். “அஸ்தினபுரியின் அரசதூதர்கள்” என்று சிவதர் சொன்னார். கர்ணன் தலையசைத்தான். “அவர்களின் அரசகுடியிலிருந்து சுபாகுவும் உடன் பூரிசிரவஸும் வந்திருக்கிறார்கள்” என்று சிவதர் சொன்னார்.

பின்னர் இரு எட்டு எடுத்துவைத்து அருகணைந்து “அவர்கள் வந்தது நன்று. அரசகுடியிலிருந்து ஒருவர் வருவார் என்று நான் எண்ணினேன். உடன் அமைச்சர் ஒருவரும் இருக்கக்கூடும் என்றும். பால்ஹிகர் வந்திருப்பது நன்று. நமக்கு அவரிடம் அணுக்கமும் கூடவே அரசருக்கு அரசர் என்ற விலக்கமும் உள்ளது. அமைச்சர்களின் பணிவும் முறைச்சொற்களும் மிகப் பெரிய கவசங்கள் அவர்களுக்கு. பால்ஹிகரிடம் நாம் விழிநோக்கி நேரடியாக பேச முடியும். நாம் பேசுவதன் பொருளும் பொருளுக்கு அப்பாலுள்ள கருதலும் அவருக்கு புரியும்” என்றார்.

கர்ணன் தலையசைக்க “நான் சென்று அவர்களை அழைத்துவருகிறேன். தாங்கள் அரசணி கோலத்தில் அவர்களை எதிர்கொள்ள வேண்டும்” என்றார். கர்ணன் “அது எதற்கு?” என்றான். “தாங்கள் அணிகொள்ள இன்னும் பொழுதில்லை… ஆனால் அரசணிக்கோலமே முறைமை. முறைமையே ஓர் அறிவிப்புதான்” என்றபின் “நான் ஏவலனிடம் தங்களுக்கொரு அணிச்சால்வையை மட்டும் கொண்டு வரச்சொல்கிறேன், அதை அணிந்துகொள்க! இப்போது அது போதும்” என்றபின் மேலும் குரல் தாழ்த்தி “பிற சொற்களை நானே உரைக்கிறேன், அரசே. தாங்கள் என்னை தடுக்கவோ திருப்பவோ மட்டும் செய்யாமல் இருந்தால் போதும்” என்றார்.

கர்ணன் தலையசைத்தபடி விழிதாழ்த்தி இடக்கை சுட்டுவிரலால் மீசையை சுழற்றிக்கொண்டு அமர்ந்திருந்தான். சிவதர் இரண்டு பின்னடி எடுத்து வைத்து கதவைத் திறந்து வெளியே சென்றார். நீர்ப்பாளம் விலகி மூடுவதுபோல கதவு மூடியது. கர்ணன் மீண்டும் அந்த அறைக்குள் தனிமையை உணர்ந்தான். தனிமையை உணரும்போதே மெல்லிய எச்சரிக்கையென அவ்வறைக்குள் பிறிதொரு விழியின் இருப்பை அவன் உணரத் தொடங்குவான். இமையா விழி அது என்று பல கனவுகளில் பார்த்திருந்தான். அறையின் நிழல்களில் கரைந்ததாக அது அங்கிருக்கிறது. அனைத்தையும் அறிந்து ஒரு சொல்லும் இன்றி நோற்றிருக்கிறது.

கர்ணன் எழுந்து நின்று கைகளைத் தூக்கி உடலை நீட்டி சோம்பல்முறித்தான். விரல்களை ஒவ்வொன்றாக விரித்து தசைகளை இறுக்கி நெகிழ்த்தி எளிதாக்கி பெருமூச்சுவிட்டான். கதவை மெல்லத் திறந்து உள்ளே வந்த ஏவலன் தலைவணங்கினான். அவன் கொண்டுவந்த தாலத்தில்

பொன்னூல் பின்னப்பட்ட கலிங்கப் பட்டுச் சால்வையும் தலையணியும் இருந்தன. கர்ணன் சால்வையை எடுத்து தன் தோளில் அணிந்து கொண்டான். செம்பருந்தின் இறகு பொருத்தப்பட்ட பட்டுத் தலைப்பாகை அருமணிச் சரங்கள் சுற்றப்பட்டு சூரிய முத்திரையுடன் இருந்தது. அவன் அதை தலையில் அணிந்துகொண்டபின் அறைக்குள் ஆடி ஏதேனும் இருக்கிறதா என்று சுற்றும் பார்த்தான்.

ஏவலன் கதவை சற்றே திறக்க இன்னொரு ஏவலன் உள்ளே வந்து தன் கையிலிருந்த உலோக ஆடியை அவனை நோக்கி காட்டினான். கர்ணன் அருகணைந்து தன் தலைப்பாகையை சீரமைத்து சால்வை மடிப்புகளை நீவிக்கொண்டான். அணிகொண்டதும் நல்லதே என்று தோன்றியது. நெடும்பொழுதாக உறைந்து நின்றிருந்த உள்ளம் சொல்கொண்டது. முகத்தசைகள் விரிசல்விடுவதுபோல உயிர்ப்படைந்தன. ஏவலர் இருவரும் தலைவணங்கி வெளியே சென்றனர். கதவு மெல்லிய ஓசையுடன் மூடியது. தான் பிறிதொருவனாக மாறிவிட்டதாக அவனுக்குத் தோன்றியது. அதுவரை இருந்த உளநிலை முற்றாக மாறியது. ஆடையும் தலைப்பாகையும் எப்படி அகத்தை மாற்ற முடியும்? ஆனால் எப்போதும் அவ்வாறு வெளியிலிருந்து ஒன்று உள்ளிருப்பவற்றை முற்றாக திசை மாற்றி வைக்கத்தான் செய்கிறது.

அவன் பீடத்தில் சென்று அமர்ந்து கைகளை மார்பில் கட்டிக்கொண்டான். வெளியே காலடி ஓசை கேட்கிறதா என்று செவி கொண்டபடி அமர்ந்திருந்தான். மெல்லிய நாடித்துடிப்புபோல் காலடிகளின் ஓசை கேட்டது. கதவை மெல்லத் திறந்து உள்ளே வந்த சிவதர் தலைவணங்கினார்.

பின்னர் கதவைத் திறந்து வெளியே நின்றிருந்த சுபாகுவையும் பூரிசிரவஸையும் உள்ளே வரும்படி கைகாட்டினார். இருவரும் உள்ளே வந்தனர். பூரிசிரவஸ் முறைப்படி ஏழு அடி எடுத்து முன்னால் வந்து உடல்வளைத்து “அங்கநாட்டு அரசருக்கு பால்ஹிக நாட்டு இளவரசனின் வணக்கம். என் குலம் உங்கள் வாழ்த்துகளால் சிறப்புறுக! அஸ்தினபுரியின் அரசரின் ஆணைக்கேற்ப தங்களிடம் தூது சொல்லும் பொருட்டு வந்துள்ளேன்” என்றான். கர்ணன் வலக்கை தூக்கி அவனை வாழ்த்தி “நலம் சூழ்க! வெற்றி எழுக!” என்று வாழ்த்தினான்.

சுபாகு அதேபோல முறைப்படி தலைவணங்கி “அங்கநாட்டு அரசருக்கு கௌரவ இளவரசனும் அஸ்தினபுரியின் அரசர் துரியோதனனின் இளையோனும் தார்த்தராஷ்டிரனுமாகிய சுபாகுவின் வணக்கம். என் தமையனின் ஆணைப்படி தங்களிடம் தனிச்சொல்லொன்று உரைக்கும்படி பணிக்கப்பட்டுள்ளேன்” என்றான். “சிறப்புறுக! புகழ் கொள்க!” என்று கர்ணன் அவனை வாழ்த்தினான். அமரும்படி அவன் கைகாட்ட இருவரும் பீடங்களில் அமர்ந்தனர். சிவதர் கதவை மூடிவிட்டு அப்பால் நெஞ்சில் கைகட்டி நின்றார்.

கர்ணன் சிவதரிடம் “இவர்களுக்கு இன்நீர்…” என்றான். சுபாகு “வேண்டியதில்லை. நாங்கள் புரவியில் ஒரேவிசையென விரைந்து வந்தோம். ஆகவே வந்து இறங்கியதுமே இன்நீர் அருந்தி இளைப்பாறிவிட்டோம்” என்றான். “நன்று” என்றான் கர்ணன். அவர்கள் சிலகணங்கள் சொற்களில்லாமல் அமர்ந்திருந்தனர். சிவதர் பூரிசிரவஸின் முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தார். பூரிசிரவஸ் அவர் நோக்கைத் தவிர்த்து கர்ணன் மேல் விழிநாட்டினான். கர்ணன் புன்னகைத்து “கூறுக!” என்றான்.

பூரிசிரவஸ் “இனி முறைமைகள் ஏதுமில்லை, மூத்தவரே. நேரடியாகவே சொல்லெடுக்கிறேன். அஸ்தினபுரி இன்று தங்களை பணிந்து எதிர்பார்த்திருக்கிறது. தங்களால் காக்கப்படும்பொருட்டு தவித்திருக்கிறது. கைவிடலாகாதென்ற மன்றாட்டுடன் இங்கு வந்திருக்கிறேன். அஸ்தினபுரி எங்கள் நாடும் கொடியும் என்பதுபோல் உங்களுடையதும் கூட. நாங்கள் கோராமலேயே தந்தையென்றும் தெய்வமென்றும் வந்து நின்றிருக்கவேண்டியவர் நீங்கள். அதற்கு நாங்கள் எந்த முறைமை சார்ந்த கோரிக்கையையும் வைக்கவேண்டியதில்லை” என்றான்.

“ஆயினும் இத்தூது ஏன் தேவைப்படுகிறதென்றால் நாங்கள் பெரும்பிழை ஒன்று இழைத்துவிட்டோம். பாரதவர்ஷத்தின் மாவீரராகிய தங்களை அகற்றிநிறுத்திவிட்டு இப்போரில் இறங்கினோம். அது எவ்வகையிலும் தங்கள் மேல் கொண்ட உளவிலக்கினாலோ தங்களை சிறுமை செய்யவேண்டுமென்ற எண்ணத்தாலோ அல்ல என்பதை நீங்கள் அறிவீர்கள். எங்கள் குலத்திற்கு பிதாமகராகிய பீஷ்மரின் ஆணைப்படியே அது நிகழ்ந்தது. வீரத்தால் நீங்களிருவரும் நிகரானவர்கள் என்றாலும் பீஷ்ம பிதாமகர் அகவையால் மூத்தவர், நோன்பால் பெரியவர். அனைத்தையும்விட கௌரவக் குடி அனைத்திற்கும் பெருந்தந்தை. இழிவோ, பழியோ, அழிவோ பெறினும்கூட தந்தையர் சொல்லை மீறாமல் இருப்பதே தகைமை என்று நூல்கள் கூறுகின்றன.”

“அஸ்தினபுரியின் அரசர் எந்நிலையிலும் தந்தை சொல் மீறியவர் அல்ல. குலநெறிகளுக்கு அப்பால் ஒரு நிலையிலும் சென்றவரல்ல. ஆகவேதான் தாங்கள் போரிலிருந்து தவிர்க்கப்பட்டீர்கள். அது பிழையென்று பிற அனைவரும்

அறிந்திருக்கிறோம். பலமுறை அதை சொல்லவும் செய்துள்ளோம். எங்கள் அனைவரையும்விட அரசர் அறிவார். அந்தப் பிழையின் பொருட்டு தங்கள் கால்களில் தலைவைத்து இளையோரை பொறுத்தருள்க என்று கோரவே நான் வந்துள்ளேன். மூத்தவரே, தந்தையரை மைந்தர் பழிப்பது உலக இயல்பு. ஆனால் தந்தையரை அன்றி எவரைப் பழிக்க நமக்கு உரிமை உள்ளது?" என்றான்.

கர்ணன் விழிகளைத் தாழ்த்தி கைகள் மீசையில் சுழன்றுகொண்டிருக்க அசைவில்லாது அமர்ந்திருந்தான். சுபாகு பூரிசிரவஸின் சொற்களால் உளம் நெகிழ்ந்து கண்களில் நீர்ப்படலத்துடன் மெல்லிய நடுக்கு கொண்டிருந்தான். பூரிசிரவஸ் "இந்தப் படைத்தலைமை தங்களுக்குரியது. அஸ்தினபுரியின் நிலமும் கொடியும் உங்கள் ஆணைக்கு அடிபணியும். அதற்கப்பால் ஒரு சொல்லும் நான் சொல்வதற்கில்லை" என்றான். கர்ணன் விழிதூக்கி சுபாகுவை பார்த்தான். சொல்லெடுக்க முயன்றபோது மெல்லிய கனைப்பொலி எழுந்தது. அவன் உதடுகள் அசைந்தன.

அவன் பேசுவதற்குள் சுபாகு நடுங்கிய குரலில் "மூத்தவரே!" என்று அழைத்தான். கைகளை விரித்து "மூத்தவரே! என் மைந்தன் களம்பட்டான். சுஜயன் இன்றில்லை. எத்தனை சொற்களை அள்ளி இறைத்தாலும் இனி என் விழி அவனை பார்க்காது என்ற உண்மையிலிருந்து என்னால் வெளிவர இயலவில்லை. இனி இங்கே வெற்றியையோ புகழையோ அல்ல, வீழ்ந்துபட்டு என் மைந்தனுடன் செல்வதையன்றி நான் வேறெதையும் விழையவில்லை" என்றான். பூரிசிரவஸ் திகைப்புடன் திரும்பி ஏதோ சொல்வதற்குள் சுபாகு விரைந்த அசைவுகளுடன் எழுந்து முழந்தாள் மண்ணிலறைய விழுந்து

கர்ணனின் இரு முழங்கால்களையும் பற்றிக்கொண்டு “தங்களை சந்தித்து மடியில் தலை வைத்து கதறி அழவேண்டுமென்று நூறுமுறை எண்ணியிருப்பேன், மூத்தவரே. எனக்கு யாருமில்லை. பெரும்படை சூழ்ந்த களத்தில் தன்னந்தனியாக என் மைந்தனை எண்ணி அழுதுகொண்டிருக்கிறேன்” என்றான்.

கர்ணன் அவன் தலைமேல் கைவைத்தான். சுபாகு கர்ணனின் மடியில் தலைவைத்து உடல் குலுங்க உரத்த விசும்பல்களும் விம்மல்களுமாக அழுதான். கர்ணனின் கை நடுக்கத்துடன் அவன் தலையை, குழல்கற்றைகளை அளைந்துகொண்டிருந்தது. பூரிசிரவஸ் தன் கைகளை கோத்து மடியில் வைத்து விழி நிறைந்துவழிய உதடுகளை உள் மடித்து இறுக்கியபடி அதை பார்த்துக்கொண்டிருந்தான். சிவதர் அவர்களை மாறி மாறி பார்த்தார். அந்தத் தருணத்திற்குள் ஊடுருவி அதை திசைமாற்றி செலுத்த விரும்பினார். ஆனால் என்ன செய்ய வேண்டுமென்று அவருக்குத் தெரியவில்லை. இருமுறை பேச விரும்பியதுபோல் மெல்லிய ததும்பல் அவர் உடலில் வந்தது.

கர்ணன் நிமிர்ந்து பூரிசிரவஸை நோக்க அவன் விசும்பல் ஒலியுடன் எழுந்து கர்ணனின் இன்னொரு தொடைமேல் தலைவைத்து அமர்ந்து அழத்தொடங்கினான். இருவரையும் அணைத்தபடி கர்ணன் தலைகுனிந்து அமர்ந்திருந்தான். பூரிசிரவஸ் உடைந்த குரலில் “மூத்தவரே, எம் மைந்தரும் களம்பட்டனர். ஒவ்வொரு நாளும் உடல் சலிக்க, உள்ளம் சோர்ந்து, அகம் இன்மையென்றாகும் வரை எதையேனும் செய்து அதை ஆற்றிக்கொள்கிறேன். இறப்புக்கு நிகராக துயில்கிறேன். எங்கோ அவர்கள் இருக்கக்கூடும் எனும் நம்பிக்கையுடன் விழித்தெழுகிறேன். தந்தை வடிவென இங்கு

தங்களை பார்க்கையில் நானும் எம் மைந்தரைப்பற்றித்தான் எண்ணினேன்” என்றான்.

கர்ணன் ஒரு சொல்லும் உரைக்கவில்லை. அவன் கைகள் இருவரின் தலைகளுக்குமேல் ஓடிக்கொண்டிருந்தன. சிவதர் பெருமூச்சுவிட்டார். பூரிசிரவஸ் தன் மேலாடையால் கண்களையும் முகத்தையும் அழுந்தத் துடைத்தான். பின்னர் குரல்வளை அசைய உமிழ்நீர் விழுங்கி நெஞ்சத்தின் எடையை ஆற்றுபவன் என நீள்மூச்சுகள் எழுப்பி விடுபட்டான். சால்வையை திருத்தியபோது அவன் உள்ளமும் மீண்டது. அவன் திரும்பி சிவதரை பார்த்தான். சிவதர் “நீங்கள் இருவரும் இங்கு வந்தது நன்று. அரசர் அங்கு வந்திருந்தால் இத்தருணம் அங்கே நிகழ்ந்திருக்காது” என்றார்.

பூரிசிரவஸ் அந்த முறைமைச்சொல்லால் முற்றாக மீண்டு கர்ணனிடம் “நாளை புலரியில் தாங்கள் அங்கே களம் நிற்கவேண்டுமென்பது அரசரின் விருப்பம். பீஷ்ம பிதாமகர் களம்பட்ட பின்னர் அங்கே அனைவரும் உளச்சோர்விலிருக்கின்றனர். இளங்கதிரவனென நீங்கள் தேரிலெழுந்தால் அனைவரும் புத்துயிர் கொள்வார்கள். இல்லையேல் நாளை காலையிலேயே அஸ்தினபுரி பாண்டவருக்கு முன் தோற்றுவிடும்” என்றான். சிவதர் தனக்கான தருணத்தை கண்டுகொண்டு “ஆனால் வெல்ல முடியாதவர் என்று நூல்களில் புகழப்படும் துரோணர் அங்கிருக்கிறார் அல்லவா?” என்றார்.

அவர் சொல்லவருவதை புரிந்துகொண்டு பூரிசிரவஸ் திரும்பிப் பார்த்தான். எழுந்து தன் மேலாடையை சீரமைத்துக்கொண்டு “ஆம், துரோணர் இருக்கிறார். பார்த்தரால் அவரை வெல்ல இயலாது. அஸ்வத்தாமரும் ஜயத்ரதரும் இருக்கிறார்கள்.

சல்யர் இருக்கிறார். ஆனால் பிதாமகர் பீஷ்மரின் இடத்தை அவர்கள் நிரப்ப இயலாது. அவர்கள் மாவீரர்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் அதற்கேற்ற ஒளிரும்தோற்றம் கொண்டவர்கள் அல்ல. போர்க்களத்தில் ஒளிர்ந்தெரிந்து முன்செல்பவரையே அனைவரும் உளம்தொடர்கிறார்கள். பீஷ்ம பிதாமகர் தேரிலெழுகையில் அங்கிருக்கும் அனைத்து மானுடருக்கும் மேலாக விண்ணிலிருந்து தேவன் ஒருவன் இறங்கியதுபோல தோன்றுவார். அத்தோற்றப்பொலிவு பாரதவர்ஷத்தில் இனி மூத்தவருக்கு மட்டுமே உள்ளது” என்றான்.

சிவதர் “அங்கநாட்டரசர் அங்கு வந்து படைத்தலைமை கொள்வதைப்பற்றி சொல்லுறுதி எதையேனும் கௌரவ அரசர் அளித்துள்ளாரா?” என்றார். பூரிசிரவஸின் விழிகள் மாறுபட்டன. சில கணங்களுக்குப் பின் “இல்லை. படைத்தலைமை துரோணருக்குரியது. அரசரென வந்து போரில் கலந்துகொள்ளும் பொருட்டே அங்கநாட்டரசரை அழைக்க வந்தோம்” என்றான். “துரோணர் தனக்கிணையான ஷத்ரிய வீரராக அங்கநாட்டரசர் களம் நிற்பதை ஏற்கிறாரா?” என்று சிவதர் கேட்டார் . “சிவதரே, பிதாமகர் அரசருக்கு ஆணையிடும் இடத்தில் இருந்தவர். துரோணர் அரசரின் ஆணை பெறும் குடிகளில் ஒருவர்” என்று பூரிசிரவஸ் சொன்னான்.

“ஆம், அதை அறிவேன். ஆனால் அரசர் அங்கு வந்தபின் அவரது இடமென்ன என்றும் களத்தில் அவர் எங்கு நிற்பாரென்றும் முன்னரே அறிந்தபின் அவர் இங்கிருந்து கிளம்புவதே நன்று. அன்றி அங்கு வந்தபின் துரோணர் படைத்தலைமை கொள்ள அவர் படைநிரையில் ஓர் எளிய வீரனாக நிற்பாரென்றால் அது அங்கநாட்டுக்கு பெருமை அல்ல.

துரோணரின் படைத்தலைமையை அங்கநாடு ஏற்கவேண்டுமென்றில்லை. அவர் நிகரற்ற வில்லவர் என்பதில் ஐயமில்லை. ஆனால் எவ்வண்ணம் அவரால் படை வகுக்க முடியும், எவ்வகையில் முதற்பறவையென வழி செலுத்தக்கூடும் என்பதில் எங்களுக்கு ஐயமிருக்கிறது. படைமுதல்வராக முதன்மைத்தகுதி கொண்ட எங்கள் அரசர் இருக்கையில் அந்தணரா ஷத்ரியரா என்றறியாத பிறப்புள்ள ஒருவர் படைமுகப்பில் நிற்பது அத்தனை சிறப்பும் அல்ல" என்றார் சிவதர்.

பூரிசிரவஸ் "எங்கள் அரசரின் செய்தியைச் சொல்ல மட்டுமே எங்களுக்கு உரிமையுள்ளது. பிற சொல்லுறுதிகள் அனைத்தையும் நீங்கள் அரசரிடமிருந்தே பெறவேண்டும்" என்றான். சிவதர் "பால்ஹிகரே, வீரத்தில் எங்கள் அரசருக்கு நிகரான மைந்தர்களை உங்கள் களத்திற்கு அனுப்பினோம். அவர்கள் அங்கு குதிரைச்சூதர்களாக பணிபுரிகிறார்கள்" என்றார். பூரிசிரவஸ் ஒருகணம் குன்றினாலும் தன்னை மீட்டுக்கொண்டு "ஆம், அவர்களை அங்கே நிறுத்தியது பீஷ்ம பிதாமகரின் ஆணை" என்றான். சுபாகு "அது எங்கள் கீழ்மையென்றே கொள்க!" என்றான். "தந்தையரின் பெருமை மட்டுமல்ல கீழ்மைகளும் மைந்தர்க்குரியவைதான்."

"இங்கு நாங்கள் சில சொல்லுறுதிகளை விரும்புகிறோம் என்பதாவது அஸ்தினபுரியின் அரசருக்கு தெரியவேண்டும். ஒரு சொல்லுமில்லாது வந்து படையில் இணைந்து எளிய வில்தாங்கி என்று அணியில் நிற்க அங்கநாட்டு அரசர் எழ மாட்டார்" என்றார் சிவதர். "ஆனால் இனிமேல் இச்சொல்லாடலை நிகழ்த்துவதற்கு பொழுதில்லை. இப்போது நள்ளிரவு கடந்துவிட்டது. இன்னும் சற்றுப் பொழுதில் படைகள்

கிளம்பினால்தான் வெள்ளி முளைப்பதற்குள் குருக்ஷேத்ரத்தை சென்றடைய முடியும்” என்று பூரிசிரவஸ் சொன்னான்.

“படைகளுடன் அங்கநாட்டு அரசர் கிளம்பட்டும். அவருக்கு சற்று முன்னால் நீங்கள் கிளம்புங்கள். குருக்ஷேத்ரப் படைநிலத்திற்கு வெளியே அங்கநாட்டுப் படைகள் நிலைகொள்ளும். நீங்கள் சென்று எங்கள் சொல்லை அஸ்தினபுரியின் அரசருக்கு சொல்லுங்கள். அவர் அளிக்கும் உறுதிப்பாட்டுடன் மீண்டு வந்து எங்களை அழையுங்கள். படையுடன் அங்கநாட்டு அரசர் வருவார்” என்று சிவதர் சொன்னார். பூரிசிரவஸ் சற்றுநேரம் சிவதரின் முகத்தை நோக்கிக்கொண்டிருந்தான். அவர் உறுதிகொண்டிருக்கிறார் என்பதையும் அதை கர்ணனிடம் முன்னரே பேசியிருக்கிறார் என்பதையும் அவன் உணர்ந்தான்.

சுபாகு மெல்லிய எரிச்சலுடன் “நீங்கள் கோருவதென்ன, சிவதரே?” என்றான். “கோருவது நான் அல்ல. அங்கநாட்டின் குடி. எங்களுக்கும் ஒரு சொல் இதில் உள்ளது. பீஷ்மரின் ஆணைப்படியோ அன்றி பிறிதொரு சொல்லின்படியோ சிறுமை செய்யப்பட்டது அங்கநாட்டுக் குலப்பெருமை. நாளை அதை சூடவிருப்பவர் எங்கள் கொடிவழியினர். எனவே அது ஈடுசெய்யப்பட வேண்டும்” என்றார் சிவதர். “மூன்று கோரிக்கைகள் உண்டு. சென்று அவற்றை சொல்க! அவற்றுக்கு அஸ்தினபுரி உடன்பட்டாகவேண்டும்” ஓங்கிய குரலில் அவர் தொடர்ந்தார்.

“அங்கநாட்டரசர் எப்போதும் தனிக்கொடியுடன் படைப்பிரிவுகளின் தலைவராகவே இருப்பார். துரோணர் தவிர்த்த பிற அனைவருமே அவருக்குக் கீழ்தான் படை திரண்டிருக்க வேண்டும். அங்கநாட்டு அரசருக்கு துரோணர்

உட்பட எவரும் ஆணைகளை இடலாகாது. அங்கநாட்டரசர் எந்நிலையிலும், எந்த அவையிலும், அஸ்தினபுரியின் அரசர் உட்பட எவர் முன்னிலும் முடி தாழ்த்த மாட்டார். அவர் அவரை நட்பு நாட்டரசர் எனக் கருதி போர்த்துணை கோரி அஸ்தினபுரியின் அரசாணை ஒன்று ஓலையில் எழுதப்பட்டு அங்குள்ள அனைத்து ஷத்ரிய அரசர்களுக்கும் அனுப்பப்படவேண்டும்.”

பூரிசிரவஸ் “இதில் அஸ்தினபுரியின் அரசர் இயற்ற வேண்டிய எதற்கும் மறுசொல்லிருக்க வாய்ப்பில்லை. ஆனால் துரோணர் என்ன எண்ணுகிறார் என்பதை அங்கு சென்ற பின்னர்தான் சொல்லமுடியும்” என்றான். சிவதர் “நாங்கள் காத்திருக்கிறோம்” என்றார். சுபாகு “நாங்கள் மூத்தவரிடம் சொல்கிறோம். எங்களால் முடிந்தவரை துரோணரிடம் மன்றாடுகிறோம்” என்றான். பூரிசிரவஸ் “எங்கள் அரசரின் சொல்லை முன்வைப்பதொன்றே எங்கள் நோக்கம். அதை செய்துவிட்டோம்” என்றான். “எங்கள் சொல்லை அங்கே முன்வைக்கவும்தான் நீங்கள் வந்துள்ளீர்கள்” என்றார் சிவதர்.

கர்ணன் இரு கைகளாலும் பீடத்தின் கைப்பிடியை தட்டியபடி எழுந்து “எதுவும் வேண்டியதில்லை. நான் வருகிறேன். இப்போரை வென்று துரியோதனனை அஸ்தினபுரியின் அரியணையில் அமரச்செய்கிறேன். படைத்தலைவன் என்றால் தலைவனாக, வெறும் வீரனென்றால் வீரனாக, சூதன் என்றால் அவ்வாறாக படைநிற்க நான் ஒருக்கமே. எங்கு நின்றிருந்தாலும் போர் என்னை முன்னிறுத்தியே நிகழும். வெற்றி என்னிலிருந்தே எழும். அஸ்தினபுரியிடமிருந்து ஒரு சொல்லும் நான் கோரவில்லை. இங்குள்ள எவரிடமும் நான் கோரிப்பெறுவதற்கு ஒன்றுமில்லை” என்றான்.

சிவதர் ஏதோ சொல்ல நாவெடுக்க “இதைப் பற்றி நாம் மீண்டும் பேசவேண்டியதில்லை. படை கிளம்ப ஆணையிடுக!” என்று கர்ணன் சொன்னான். சிவதர் சில கணங்கள் உறைந்த முகத்துடன் நின்றுவிட்டு “ஆணை” என தலைவணங்கி அறையிலிருந்து வெளியே சென்றார்.

பூரிசிரவஸ் முகம் மலர்ந்து தலைவணங்கி “பிறிதொரு சொல் உங்கள் நாவில் எழாதென்று நானும் அறிவேன். மூத்தவரே, பிறந்த நாள் முதல் கொடுப்பதை அன்றி பிறிதை அறியாதவர் நீங்கள். இதையும் நீங்கள் எங்களுக்கு அளிக்கும் கொடை என்றே கொள்கிறோம். இளையோரென இதற்கு கடன்பட்டிருக்கிறோம்” என்றான். சுபாகு “நாங்கள் உங்கள் இளையோர். பிறிதொன்றும் சொல்வதற்கில்லை” என்றான்.

கர்ணன் அருகணைந்து தன் நீண்ட கையை சுபாகுவின் தோளைச் சுற்றி செலுத்தி அவனை அணைத்துக்கொண்டு “சுஜயன் என் மைந்தன். என்னுடைய கண்ணீரும் அவனுக்கு செல்லட்டும். அதற்கப்பால் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை” என்றான். “ஆம்” என்று சுபாகு பெருமூச்சுடன் சொன்னான்.

நாகரே, கேளுங்கள். அந்த அறைக்குள் நான் கண்டது என்ன? பேருருக்கொண்ட நாகம் ஒன்றை. அது வாழும் வெளி பிறிதொன்று. எனவே அங்கிருந்த பருவெளியை அது எடுத்துக்கொள்ளவில்லை. கரிய நீர்ச்சுழிபோல் அது அவர்களை சுற்றிக்கொண்டிருந்தது. அதன் மாபெரும் படம் அவர்களின் தலைக்குமேல் எழுந்து நின்றிருந்தது. அதன் விழிமணிகள் இரு விண்மீன்கள் என மின்னுவதை கண்டேன். அந்த அறைக்குள் இருளென நிறைந்து அவர்களை தன்னுள் வளைத்து அன்னைமடியின் இளவெம்மையை அளித்து வைத்திருந்தது அது.

# கார்கடல் - 9

நீராட்டறையிலிருந்து திரும்புகையில் அங்கநாட்டுப் படைகள் குருக்ஷேத்ரத்தை நோக்கி கிளம்புவதற்கான போர்முரசு மிக அண்மையிலென ஒலிக்கக் கேட்டு கர்ணன் திடுக்கிட்டான். மாளிகைக்கு நேர் கீழே முற்றத்தில் அவ்வோசை எழுவதாகத் தோன்றி அவன் சாளரக்கட்டையைப் பற்றி எட்டிப் பார்த்தான். கீழே இரண்டு தேர்கள் புரவிகள் கட்டப்பட்டு காத்து நின்றிருந்தன. பொறுமையிழந்த புரவிகள் காலுதைத்து உடல்மாற்றிக்கொள்வதனால் தேர்கள் குலுங்கி மணியோசை எழுந்தது. ஏவலர்கள் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்க சிற்றமைச்சர் பார்த்திபர் கைகளை வீசியபடி ஆணைகளை இட்டுக்கொண்டிருந்தார். அப்பால் இரு ஏவலர் ஏதோ பொருட்களுடன் வந்தனர். அவற்றை தேர்களில் ஏற்றிவைக்கும்போது “ஏற்று! உம்!” என்று கூவினர்.

சிவதர் அவனுக்குப் பின்னால் நின்று “கோட்டைமுகப்பில்தான் முரசு ஒலிக்கிறது. ஆனால் கோட்டை மிகச் சிறிது” என்றார். கர்ணன் திரும்பிப்பார்த்து தலையசைத்தான். “நமது படையினர் அனைவரும் அந்தியிலிருந்தே ஒருங்கி ஆணைக்காக காத்திருக்கிறார்கள். இன்றிரவு கிளம்ப வேண்டியிருக்கும் என்பதில் எவருக்கும் ஐயமிருக்கவில்லை. நான் மாலையில் படைமுகப்பிற்குச் சென்றபோது பெரும்பாலானவர்கள் கவசங்களை அணிந்து கால்குறடுகளைக் கட்டி கையில் படைக்கலங்களுடன் இருப்பதை பார்த்தேன். எதற்காகக் காத்திருந்தாலும் அது நிகழ்கையில் நிறைவே எழுகிறது” என்றார்.

கர்ணன் தன் கூந்தலை கையால் அறைந்து பின்னாலிட்டான். “நானும் கிளம்பவேண்டும்” என்றான். “பால்ஹிகரும் கௌரவரும் சற்று ஓய்வெடுத்தனர். அவர்கள் புரவிகளிலேயே வந்திருக்கிறார்கள். திரும்பிச்செல்ல விரைவுத்தேரை ஒருக்க ஆணையிட்டிருக்கிறேன்.” கர்ணன் தலையசைத்தான். “நீங்கள் செல்வதற்கும் விரைவுத்தேர்...” என்று சொன்ன சிவதர் நிறுத்தி தயங்கி “ஜைத்ரத்திலேயே செல்லவிருக்கிறீர்களா?” என்றார். “ஆம்” என்றான் கர்ணன். சிவதர் கூர்ந்து நோக்கிவிட்டு “ஆம், நன்று” என்றார். கர்ணன் “நான் அங்கே நுழைவது எந்தையின் மைந்தனாக” என்றான். சிவதர் உளம் பொங்க “ஆம்” என்றார்.

கர்ணன் “நீங்கள் அங்கநாட்டுக்கே திரும்பிச்செல்லுங்கள், சிவதரே. என் மைந்தனுடன் இருங்கள்” என்றான். சிவதர் ஒன்றும் சொல்லவில்லை. கர்ணன் அவரை நோக்காமல் திரும்பிக்கொண்டு “எதுவும் நம்மிடையே எஞ்சவில்லை என்று எண்ணுகிறேன். சென்ற பிறப்பின் கடனை இன்று தீர்த்துவிட்டோம்” என்றான். சிவதர் மெல்ல முனகினார். கர்ணன் பெருமூச்சுவிட்டு உடலில் ஒரு மெல்லிய நிலையின்மை அசைவென வெளிப்பட நின்றான். “தங்கள் கவசங்களும் படைக்கலங்களும் எடுத்து வைக்கப்பட்டுள்ளன” என்று சிவதர் சொன்னார். அச்சொற்களினூடாக நிலைமீண்டு “இங்கிருந்து கிளம்பி நேராகவே படைமுகப்பிற்குச் செல்வது போலிருக்கும் என்று எண்ணுகின்றேன்” என்றார்.

கர்ணனும் மீண்டு “விரைவுத்தேரில் நான் அவர்களுடன் முன்னால் செல்கிறேன். நமது படைகள் பின்னால் வந்து சேர்ந்துகொள்ளட்டும்” என்றான். “ஆம், அதற்குத்தான் தேர்களை ஒருக்கி நிறுத்தியிருக்கிறேன்” என்று சிவதர் சொன்னார். கர்ணன் தன் சால்வையை எடுத்து நன்றாகச் சுற்றியபடி சிறிய

கதவைத் திறந்து உடலை மிகவும் குறுக்கி அப்பால் சென்று அங்கு காத்து நின்றிருந்த அணிச்சேவகர்களிடம் “உம்” என்று கைவீசி ஆணையிட்டான். அவர்கள் சிறிய பீடத்தை இழுத்துப் போட்டனர். அவன் அதில் அமர்ந்த பின்னர் பெருமூச்சுடன் கால்களை நீட்டிக்கொண்டான். அவர்கள் மெல்லிய குரலில் தங்களுக்குள் பேசிக்கொண்டு பணியை தொடங்கினர்.

சிபிரத்தின் காவலர்தலைவனின் மாளிகை சிற்றுடலர்களுக்காகவே கட்டப்பட்டது போலிருந்தது. அறைகளும் வாசல்களும் தூண்களும் அனைத்துமே சிறியவை. சில அறைகளில் இரு கைகளையும் விரித்து இருபக்கச் சுவர்களையும் அவனால் தொடமுடிந்தது. அவன் முன்னிருந்த ஆடி கூட மிகச் சிறியது. அவன் முகமும் மார்பும் மட்டுமே அதில் தெரிந்தன. பொருட்களை எடுத்துப் பரப்பிய பின் அணியர்கள் விரைவாக அவனை ஒருக்கத்தொடங்கினர். கொம்புச்சீப்பால் அவன் குழலைக் கோதி பின்னால் எடுத்து மூன்று பட்டைகளாக்கி ஒன்றுடன் ஒன்று முடைந்து சுருட்டி கொண்டையாக்கினர். அதன் மீது செம்பட்டு ஒன்றைக் கட்டி நாடாவால் இறுக்கினர். அவன் கைகளுக்கு கடகங்களும் முழங்கைக்காப்பும் தோள்வளையும் அணிவித்தனர்.

தன் விரல்களில் அரசக்கணையாழிகளை ஒவ்வொன்றாக அணிவிப்பதை அவன் பார்த்துக்கொண்டிருந்தான். அவர்கள் கூறுவதற்குள்ளாக அவன் எழுந்து நிற்க இருவர் பட்டுக் கச்சையை அவன் இடையில் சுற்றிக் கட்டினர். இடையாடையை மடித்து தற்றுடுத்து பின்னால் செருகிக் கட்டி அதன் மீது சல்லடத்தை அணிவித்து அதன் கொக்கிகளை இறுக்கினர். அவர்கள் பேழையிலிருந்து திறந்து எடுத்து இட்ட இரும்புக்குறடுகளின் மேல் கால்களை வைத்து ஏறி நின்றான்.

அதன் தோல் பட்டைகளை அவர்கள் இழுத்துக் கட்டினார்கள். குறடுகள் அவனை மேலும் உயரமாக்கின. அணி முடிந்ததும் அவர்கள் தலைவணங்கி விலகினர். அவன் ஆடியில் தன்னை நோக்கினான். அங்கே கதிரவனின் மைந்தன் தோன்றினான்.

சிவதர் அறைவாயிலில் நின்று "படைக்கல அறையில் விஜயம் தங்களுக்காகக் காத்திருக்கிறது, அரசே" என்றார். கர்ணன் அவரை சொல்லமையா விழிகளுடன் திரும்பி நோக்கினான். அணியர் இறுதியாக எடுத்து அணிவித்த பொற்பட்டு மேலாடையை தோளில் சுற்றி கைகளில் பற்றிக்கொண்டு சிறுவாயிலினூடாக உடலை தணித்து மறுபக்கம் சென்றான். சிவதர் அவனைத் தொடர்ந்து வந்தார். இடைநாழியில் நடக்கையில் மரத்தரையில் அவனது இரும்புக்குறடுகள் எழுப்பிய ஒலி அக்கட்டடத்தின் அனைத்துச் சுவர்களையும் அதிரவைத்தது. படிகளில் அவன் இறங்கியபோது மரப்பலகைகள் விரிசலிட்டு முனகின.

கூடத்தில் அவனுக்காக அங்கநாட்டின் படைத்தலைவர்கள் எழுவரும் காத்து நின்றிருந்தனர். அவனைக் கண்டதும் தலைவணங்கினர். கர்ணன் அவர்கள் ஒவ்வொருவரையாக பார்த்துவிட்டு வஜ்ரசீர்ஷனிடம் "நமது படைகள் குருக்ஷேத்ரத்திற்குச் சென்று காந்தாரர் சகுனியிடம் வருகையறிவிப்பு செய்யவேண்டும். அவரது ஆணை தலைகொள்ளப்படட்டும்" என்றான். "ஆணை" என்றான் வஜ்ரசீர்ஷன். அவர்கள் தலைவணங்கி நிரையாக வெளியே சென்றனர்.

சிவதர் சற்று முன்னால் சென்று அவனுக்காக காத்திருந்தார். அவன் நடந்து அவரை அணுகியதும் "இவ்வழி, அரசே" என்று முன்னால் சென்றார். இடைநாழிகள் ஒடுங்கலானவை.

படைக்கலப் புரை மிகச் சிறிதாக இருந்தது. அந்த மாளிகை முன்பு எப்போதோ சிறிய வேட்டைக்குடிலாக கட்டப்பட்டிருந்தது. பின்னர் அது காவல்மாளிகையாக மாற்றப்பட்டபோதுகூட அதன் அடிப்படைக் கட்டடத்தை அப்படியே தக்கவைத்திருந்தார்கள். சேறு குழைத்துக் கட்டப்பட்ட பருமனான யானைப்பள்ளைச் சுவர்களால் அதன் கீழ்நிலையின் தென்மேற்கு மூலையில் அமைந்திருந்த படைக்கலப் புரையின் நுழைவாயில் சிறிய பெட்டியொன்றின் மூடி போலிருந்தது. சிவதர் அதை இழுத்துத் திறந்து உள்ளே கைகாட்டி விலகி நின்றார்.

உள்ளே எரிந்த நெய்ச்சுடரின் வெளிச்சம் செம்புகைபோல தெரிந்தது. கர்ணன் அந்நிலை வாயிலின் படியைத் தொட்டு சென்னிசூடிய பின் முழந்தாளிட்டு அவ்வறைக்குள் நுழைந்தான். அங்கே அவனால் எழுந்து நிற்க முடியாதென்று தெரிந்தது. அறைக்குள் ஒவ்வொரு படைக்கலத்திலும் ஒன்று வீதம் படைக்கலங்கள் அனைத்தும் பூசெய்கைக்கு வைக்கப்பட்டிருந்தன. செம்பட்டு விரித்த உயரமற்ற பீடங்களில் செந்தூரமும் குங்குமமும் பூசப்பட்ட கொம்புப்பிடிகொண்ட குத்துவாளும், நீள்வாளும், கதையும் அங்குசமும் கோடரியும் பாசமும் காலையில் பூசெய்கைக்கு இட்ட செம்மலர்கள் சூடி பந்த ஒளிகொண்டு அமைந்திருந்தன. எறிவேலும் குத்துவேலும் மாலைசூடி நின்றிருந்தன.

அவற்றுக்கு அப்பால் சுவருக்கு இணையாக அவனுடைய பெருவில்லான விஜயம் இருந்தது. அது அந்த அறையை விடவும் நீளம் கொண்டிருந்தது. ஆகவே சற்றே வளைத்து இரு சுவர்களிலும் நுனிகள் முட்ட அதை நிறுத்தியிருந்தனர். படகுபோல அதன் வளைவு தெரிந்தது. அதற்கப்பால் பலாமரக்

குடத்தில் கடைந்த துர்க்கையின் சிறிய சிலை மரப்பீடத்தின்மேல் பதிட்டை செய்யப்பட்டிருந்தது. தொன்மையால் கருமைகொண்டு மெழுகென மின்னிய முகத்தின் வளைவுகளிலும் விழிகளிலும் பந்தங்களின் ஒளித்துளிகள் இருந்தன. அன்னை பதினாறு கரங்களிலும் படைக்கலங்களுடன் அஞ்சலும் அருளலும் காட்டி அமர்ந்திருந்தாள். அவள் காலடியில் செம்மலர்கள் குவிக்கப்பட்டிருந்தன. இருபுறத்திலும் எரிந்த நெய்விளக்கின் சுடர்கள் அங்கிருந்த காற்றசைவின்மையால் இரு மலரிதழ்கள்போல் நிலைகொண்டிருந்தன.

கர்ணன் துர்க்கையை சில கணங்கள் நோக்கிக்கொண்டிருந்தான். பின்னர் கைகூப்பி வணங்கி நெற்றி நிலம்தொட தொழுதான். மலர்களில் ஒன்றை எடுத்து தன் கொண்டையில் பட்டுத் துணிச்சுற்றுக்கு மேல் செருகினான். இடையிலிருந்து குறுவாளை எடுத்து இடக்கை கட்டைவிரலை கிழித்து மூன்று சொட்டுக் குருதியை அன்னையின் காலடியில் இருந்த சிறிய பலிபீடத்தில் சொட்டி வணங்கிவிட்டு சிறு சிமிழில் இருந்த குங்குமக் குழம்பை நாகவிரலால் தொட்டு தன் நெற்றியிலணிந்தான். விஜயத்தை மும்முறை தொட்டு வணங்கி கையில் எடுத்துக்கொண்டு தவழ்வதுபோல அந்தச் சிறிய வாயில் வழியாக வெளிவந்து நிமிர்ந்து நின்றான்.

பெருநாகம் புற்றில் இருந்து வருவதுபோல் விஜயம் முதலில் வந்தது. சிவதர் அறியாது பின்னடைந்தார். கர்ணன் வெளிவந்து உடல் நீட்டி நின்று வில்லை நிலைநிறுத்தி அதைப் பற்றி சற்று வளைத்தான். சிவதர் “தாங்கள் அதை எடுத்துச் சிலகாலமாகிறது, அரசே” என்றார். கர்ணன் அப்போதுதான் அவ்வெண்ணத்தை அடைந்தவன்போல அந்த வில்லை

பார்த்தான். பரசுராமர் அவனுக்கு அளித்தது அது. எரிவிழித்தெய்வம் முன்பு முப்புரத்தை எரிக்க எழுந்தபோது அவருக்காக தேவசிற்பி விஸ்வகர்மன் படைத்தது. மெய்முனிவர் நெற்றிவிழி திறந்து அவனை நோக்கிய கணத்தில் கண்டது. அவர்கள் அதை சொல்லென்றாக்கினர். பிருகுவிலிருந்து ஜமதக்னியினூடாக அது பரசுராமருக்கு வந்தது. பரசுராமர்களில் திகழ்ந்தது. பதினெட்டு வரிகள் கொண்ட ஒரு பாடலாக அவர் அந்த வில்லை அவனுக்கு அளித்தார்.

அன்று கோதையின் நீர்ப்பரப்பு தொலைவில் அந்திஒளியில் அனல் கொண்டிருந்தது. தலைக்குமேல் இருந்த இலைத்தழைப்பில் பறவைகளின் முழக்கம் நிறைந்திருந்தது. கண்கூசவைத்த ஒளிவழிவின்மீது வணிகப்படகுகள் பாய்களை விரித்து எழுந்தமைந்து நிரையாக சென்றுகொண்டிருந்தன. கர்ணன் ஆசிரியரின் கால்களை அழுத்தி வருடிக்கொண்டிருந்தான். நீர்வெளியை நோக்கிக்கொண்டிருந்த அவர் தன் கையை அவன் தலையில் வைத்து “வெல்க! புகழ் கொள்க!” என்று வாழ்த்தினார். அவன் அதை புரிந்துகொள்ளாமல் திகைப்புடன் நோக்க அவர் தன்னிலை மீண்டு “நீ விடைபெறும் காலம் வந்துவிட்டது” என்றார். அவன் தலைவணங்கினான். “இன்னும் சில நாட்கள்… நீ கிளம்பும் தருணம் அமையும்…” என்றார் பரசுராமர்.

முந்தைய பதினைந்து நாட்களாக அவன் இரவிலும் பகலிலும் அவருடனே இருந்தான். வழக்கத்திற்கு மாறாக அவர் ஒரு சொல்லும் உரைக்கவில்லை. முந்தைய நாள் அந்தியில் கோதையின் கரையில் வழக்கமாக அவர் துயிலும் மரத்தடியில் அவன் இலைப்படுக்கை விரித்து காத்து

நின்றபோது எவரிடமென்றில்லாமல் “நாளை மறுநாள் சித்திரை முழுநிலவு. ஆசிரியரிடமிருந்து மாணவர்கள் இறுதிச் சொல்லை பெற்றுக்கொள்ள உகந்தது” என்றார். அவன் அவர் சொல்வதை புரிந்துகொள்ள முயன்றான். அவர் மேலும் ஒரு சொல்லும் உரைக்காமல் இலைப்படுக்கையில் படுத்து மூச்சொலியுடன் தசைகளை எளிதாக்கிக்கொண்டார். வில்லை மடியில் வைத்தபடி அவன் சற்று அப்பால் வேர் மடிப்பில் அமர்ந்து இருளென ஓடிக்கொண்டிருந்த கோதையை பார்த்தான்.

அப்போதுகூட அங்கிருந்து அஸ்தினபுரிக்கு திரும்பிச்செல்லும் எண்ணம் அவனுக்கு எழவில்லை. தனக்கொரு ஊரும் குடியும் இருப்பதையே அவன் மறந்துவிட்டிருந்தான். எண்ணம் ஓட ஓட சில நாட்களுக்குப் பின் அங்கிருக்கப் போவதில்லை என்ற எண்ணம் மட்டுமே அவனிடம் எஞ்சியிருந்தது. கோதையை பார்த்துக்கொண்டிருந்தபோது இந்த நதியை எத்தனை ஆண்டுகளாக இப்படி பார்க்கிறோம் என்றுதான் உளம் ஓடியது. அது நோக்க நோக்க பொருள் பெருகும் ஒன்றாக இருக்கவில்லை. புவியிலுள்ள அனைத்துப் பொருள்களும் நோக்குபவனின் எண்ணங்களையும் உணர்வுகளையும் தாங்கள் பெற்றுக்கொண்டு பொருட்செறிவு கொள்கின்றன. இல்லங்கள் நோக்கு கொள்கின்றன. மரங்கள் உரையாடத் தொடங்குகின்றன. மலைகள் சொல்லின்மையாலேயே உளம் நிறைக்கின்றன. ஆனால் நதிமட்டும் அது கொண்டிருந்த அனைத்து உட்பொருட்களையும் ஒவ்வொரு நாளுமென இழந்துகொண்டிருந்தது.

தெற்கே வந்து முதன்முறையாக அதை பார்த்தபோது உளம் பொங்கி கைகூப்பி அதை வணங்கினான். குனிந்து அதன் நீர்த்துளிகளை எடுத்து தன் தலைமேல் விட்டுகொண்டான்.

பெருங்கவிஞர் பாடிப் பரவிய நதி. முனிவர்கள் ஊழ்கத்தில் அறிந்தது. வேதத்தில் வாழ்வது. ஆனால் அப்போது வெறும் கிழக்கு நோக்கிய பெருக்காக மட்டுமே இருந்தது. ஓடுநீரல்ல, படகுநிரைகள் செல்லும் பெரும்பாதை அல்ல, உணவளிக்கும் அன்னையும் அல்ல, வெறும் விசை. தன்னை மீறி தன்னில் நிகழும் விசையொன்றுக்கு ஆட்பட்டது. இரவெல்லாம் அவன் அதை பார்த்துக்கொண்டிருந்தான். இருளுக்குள்ளும் நீர் ஒழுகிச்செல்லும் அசைவு தெரிந்தது. வணிகப்படகுகளின் செவ்விளக்குத் தொகைகளின் மேல் காற்று கடந்துவருவதன் அலைவு. படகுகளின் பாய்கள் புடைத்து கட்டுகளை இழுத்து விம்மி படபடக்கும் ஓசை.

புலரியில் முதலில் பாய்களின் வெண்பரப்புகள் மீதுதான் வெளிச்சம் எழும். இருட்பரப்பில் அவை வெண்தீற்றல்களென துலங்கி தெரியும். பின்னர் நீருக்குள் அகவெளிச்சம் ஊறத் தொடங்கும். கோதை தெளிந்துகொண்டிருந்தபோது “ஓம்!” எனும் ஒலியுடன் பரசுராமர் விழித்தெழுந்தார். இரு கைகளையும் கூப்பி எழுந்தமர்ந்து விழிகளை மூடி ஊழ்கத்திலிருந்தார். எழுந்து நேராகச் சென்று கோதையை அணுகி நீரை அள்ளி மும்முறை தலைக்கு மேல் விட்டபின் விழிகளைத் திறந்து அதை பார்த்தார். அன்று முழுக்க அவனிடம் அவர் ஒரு சொல்லையும் சொல்லவில்லை. எப்போது அவர் தன்னிடம் இறுதிச் சொல்லை உரைக்கப் போகிறார் என்று காலையில் இருந்தே அவன் எதிர்பார்த்தான். வழக்கம்போல அவர் காட்டுக்குள் சென்று பறவைகளை வீழ்த்தி சமைத்துத் தரும்படி அவனிடம் அளித்தார். உச்சிப்பொழுதில் பேராலமரத்தினடியில் ஓய்வெடுத்தார். பின்னர் மாலை நீராடி பூசெய்கையையும் ஊழ்கத்தையும் முடித்தார். அவன் இருப்பதையே மறந்துவிட்டிருந்தார்.

மீண்டும் கோதையின் கரைக்கு வந்தபோது அவர் கைசுட்டி நீர்வெளிக்கு மேலெழுந்த வெற்று வானத்தில் முழுநிலவு தோன்றியிருப்பதை காட்டினார். மாலை வெளியில் இளம் பாளைக்குருத்தில் வெட்டப்பட்ட தாலம்போல அது தெரிந்தது. அவர் கூறுவதை புரிந்துகொண்டு அவன் வணங்கி எழுந்ததும் கிழக்கு நோக்கி அமர்க என்று பரசுராமர் கையசைவால் சொன்னார். அவன் முழந்தாளிட்டு கிழக்கு நோக்கி அமர்ந்ததும் "உன் தந்தையை எண்ணிக்கொள்க!" என்றார். அவன் மறுநாள் அத்திசையில் பொற்கரங்களுடன் மணிமுடி சூடி அருணன் தெளிக்கும் ஏழுபுரவித் தேரில் தோன்றும் நாளவனை விழிகளுக்குள் நிறுத்தி இமை மூடினான். பரசுராமர் முழந்தாளிட்டு அமர்ந்து தன் இரு கைகளாலும் வாய் மூடி அவன் காதருகே உதடு கொண்டுவந்து அந்தப் பாடலை சொன்னார். இருமுறை அதை திரும்பச்சொல்லி "மூவகையில் பாடம் செய்து கொள்க!" என்றார். அவன் அதை ஜட, த்வஜ, கன முறையில் சொல்லிக்கொண்டான்.

"இது முக்கண்ணன் வில். முப்புரம் எரித்த பேராற்றல். இதுவே உன் வில்லென்றாகுக! பாதாளத்தின் அரசனாகிய வாசுகியின் மைந்தன் மணிகர்ணன் இதன் பருவடிவென்றெழுவான். என்றும் உன் முதற்துணைவனாக அவனே அமைவான். அறிக, அறத்தின் பொருட்டு நிலைகொள்கையிலேயே வீரனின் வில் பொருள் கொள்கிறது! எளியோர்க்கு அருள்வதாக, அறிவர்க்கு பணிவதாக, பெண்டிருக்கு அரணாக இது நிலைகொள்ளட்டும். அச்சத்தால் வில்லெடுக்கையில் நீ முன்னரே தோற்றுவிட்டாய், ஆணவத்தால் வில்லெடுத்தால் பழி சூடிவிட்டாய், விழைவுக்கென வில்லெடுத்தால் துயரை ஈட்டிவிட்டாய், அழியாத அறத்தின் பொருட்டு மட்டும் வில்லெடுப்பாய் என்றால் தெய்வங்களுக்கு இனியவனாவாய். நலம் பெறுக!"

என்றபின் அவர் எழுந்து சென்று தன் இலைப்படுக்கையில் படுத்துக்கொண்டார். மேலும் மூன்று நாட்களுக்குப் பின் அவன் அவரிடமிருந்து பிரிந்தான்.

அவன் அங்கநாட்டுக்கு அரசனாக வந்த பின்னர் முதல் முடிசூட்டு விழாவின்போது அந்த வில்லை வார்க்க விழைந்தான். சொல்லில் இருந்து பொருளை வார்க்கும் தச்சர்கள் கலிங்கத்திலேயே உண்டு என்றனர் அமைச்சர். ஹரிதர் கலிங்கச் சிற்பியாகிய காத்யகுலத்துக் காளிகரை அழைத்துவர சிவதரை அனுப்பினார். காளிகர் அகவை முதிர்ந்து, விழிநோக்கு மறைந்து, செவிப்புலனும் அணைந்து கொண்டிருக்கும் நிலையிலிருந்தார். சிவதருடன் அவரும் அவருடைய ஏழு மாணவர்களும் வந்தனர். கர்ணன் அவரைப் பார்த்ததுமே புலன்கள் அணையுந்தோறும் உட்புலன் கூர்கொள்ளும் கலைஞர் அவரென உணர்ந்துகொண்டான். ஆனால் அவருடைய கைகள் நடுங்கிக்கொண்டிருந்தன. எந்த வினாவையும் உளம்கொண்டு உரிய மறுமொழி அளிக்க அவரால் இயலவில்லை.

பெயரை மட்டுமே அறிந்து கலிங்க நாட்டுக்குச் சென்று அவரை சந்தித்தபோது பெருத்த ஏமாற்றமடைந்த சிவதர் தேடிச்சென்றமையால் வேறுவழியில்லாமல் பரிசுப்பொருட்கள் அளித்து அரசரின் கோரிக்கையை உரைத்து அழைத்து வந்திருந்தார். காளிகரை அவையில் கொண்டுவந்து நிறுத்துவதில் அவருக்கு தயக்கமிருந்தது. ஆகவே அரண்மனைக்கு தெற்கே குறுங்காட்டுக்குள் இருந்த தனி மாளிகையில் எவருக்கும் தெரியாமல் தங்க வைத்து நேராக கர்ணனின் தனியறைக்குள் கூட்டிச்சென்று சந்திக்கச்செய்து அவர் புலன்களை இழந்திருப்பதை உணர்த்திய பின்னர் மேலும்

பரிசுகளை அளித்து கலிங்க நாட்டுக்கு திருப்பி அனுப்பிவிடலாம் என்றே எண்ணம் கொண்டிருந்தார்.

ஆனால் அவர் அதை சென்று உரைத்தபோது கர்ணன் "தனியறையிலா? அது அவருக்கு நாமிழைக்கும் சிறுமையென்றாகிவிடும். தொல்நூல்களில் குறிப்பிடப்படும் காத்ய பெருங்குலத்தைச் சார்ந்தவர் அவர். சூதர் நாவில் திகழும் பெருங்கலைஞர். அவரை அங்கநாட்டு அவையில் குடித்தலைவர் முன்னிலையில் மட்டுமே நான் எதிர்கொள்ளவேண்டும். மணிமுடியும் செங்கோலும் கொண்டு அவரை வரவேற்று அவையமர்த்தி வணங்கி சிறப்பு செய்யவேண்டும். காணிக்கை அளித்த பின்னரே கோரிக்கையை முன்வைக்கவேண்டும். பெருங்கலைஞர்கள் அரசர்களுக்கு மேலான அவைமுறைமைக்கு உரியவர்கள் என்கின்றன நூல்கள். அவர்கள் மயன் அளித்த செங்கோலை முழக்கோல் என கொண்டவர்கள்" என்றான். தன் தயக்கத்தை சொல்ல சிவதரால் இயலவில்லை. அவ்வாறே என்று தலைவணங்கி வெளியேறினார்.

அங்கநாட்டின் பேரவையில் காளிகர் அவை புகுவதை நிமித்திகன் அறிவித்து வாழ்த்தொலிகள் எழுந்தபோது பேரவைக்கு அணுக்கமாக இருந்த சிற்றறைக்குள் நின்றிருந்த சிவதர் வளைந்த உடலை ஒடுக்கி வாயை இறுக்கி தலைநடுங்க அமர்ந்திருந்த காளிகரை அணுகி மெல்ல தொட்டார். காளிகர் எழுந்து "அவை ஒருங்கிவிட்டதா?" என்றபின் தன் சால்வையை சுற்றிக்கொண்டு முழக்கோலை கையிலெடுத்துக்கொண்டார். "மகதமன்னர் ஜெயபாலர்தானே நாம் சந்திக்கப்போகிறவர்?" சிவதர் ஒருகணம் தன்னை கட்டுப்படுத்திக்கொண்ட பின் "அங்கநாட்டரசர் வசுஷேணர்"

என்றார். “ஆம், ஆம்” என்றபடி காளிகர் நடுங்கும் காலடிகளுடன் நடந்தார். சிவதர் “அவர் கதிரவனின் மைந்தர். தீர்க்கதமஸின் குடிவழியிலமைந்த முடியைச் சூடியவர்” என்றபடி பின்னால் சென்றார்.

காளிகர் “தீர்க்கதமஸின் குருதி என எவரும் தன்னை சொல்லிக்கொள்ள முடியும்” என்றார். “பாரதவர்ஷத்தின் நிகரற்ற வீரர் அவர் என்கிறார்கள். பரசுராமரின் மாணவர்” என்றார் சிவதர். “அனல்குலத்து அரசர் என்றும் எவரும் தன்னை சொல்லிக்கொள்ள முடியும். அதன்பொருள் அவர் ஷத்ரியர் அல்ல என்று மட்டுமே” என்றார் காளிகர். “ஆனால் நான் வந்தது அவர் அளித்த அந்தக் கணையாழியாலேயே. அதிலிருந்த அருமணியை என்னால் பார்க்கமுடிந்தது. அது மும்முடி சூடிய சக்ரவர்த்திகளும் விழையும் ஒளிகொண்டது…”

சிவதர் அவரை சம்பாபுரியின் பேரவைக்குள் இட்டுச்சென்றார். அவரது தோற்றத்தைக் கண்டதுமே அவையில் வியப்பொலிகளும் கலைந்த சொற்களின் முழக்கமும் எழுந்தன. வளைந்த உடலை காற்றில் மிதக்கவிட்டு காகம்போல் காலடிவைத்து முன்னால் சென்ற காளிகர் ஓசையிலிருந்து அரியணை இருக்கும் திசையை உய்த்துணர்ந்தார். சற்றே தலைவணங்கி “அரசரை வணங்குகிறேன். காத்யகுலத்தைச் சார்ந்த பெருந்தச்சனாகிய காளிகன் நான். அரசரின் அழைப்பின் பேரில் இங்கு வந்தேன்” என்றார். கர்ணன் எழுந்து மூன்று அடி முன்னால் வந்து தன் செங்கோலை சற்றே தாழ்த்தி தலைவணங்கி “சம்பாபுரியின் அரசவைக்கு நல்வரவு, பெருந்தச்சரே. தங்கள் கைத்திறன் இந்நகரை பொலிவுறச் செய்க!” என்றான்.

காளிகர் நோக்கு இழந்திருக்கிறார் என்பதை அவர் உடலிலிருந்து உணர்ந்துகொண்ட அவையினர் அவர் சொற்களைச் செவிகூர்ந்து அமைதியடைந்தனர். கர்ணன் “எங்கள் அவையையும் முடியையும் குடிகளையும் வாழ்த்துக, விஸ்வகர்மரே! எங்கள் காணிக்கைகளைப்பெற்றுக்கொள்க!” என்றான். “காணிக்கைகளைப் பெறுகையில் கொள்ளும் தகுதி தனக்குண்டா என்று முதலிலும் கொடுக்கும் தகுதி மற்றவருக்குண்டா என்று பின்னரும் கருதவேண்டும் என்பது விஸ்வகர்மக் குலவழக்கம்” என்றார் காளிகர். “முதலில் உங்கள் விழைவு என்ன, எதன்பொருட்டு இங்கே என்னை அழைத்துவந்தீர்கள் என்று சொல்லுங்கள்.”

கர்ணன் அருகணைந்து அவர் முன் குனிந்து “மூத்த தச்சரே, எனக்கு என் ஆசிரியர் அளித்த வில்லொன்று சொல் வடிவில் உள்ளது. அதை தாங்கள் பருப்பொருளில் யாத்து எனக்கு அளிக்கவேண்டும்” என்றான். “ஆம், வில் வார்க்கவேண்டும் என்று சொன்னார்கள். அதன்பொருட்டே இங்கு வந்தேன்” என்றார். விழிநோக்கு மங்கியவர்களுக்கே உரியமுறையில் கைகளை மிகையாக அசைத்தபடி “அரசனே, விற்கள் வழக்கமாக ஆறு வகையானவை. மரத்தாலான தார்வம். எலும்புகளாலான அஸ்திகம். ஆமையோடுகளை வகிர்ந்துசெய்யும் குரோதகம். கொம்புகளாலான ஷிர்கம். உலோகங்களாலான லோகிதம். இவற்றைக் கலந்து செய்த மிஸ்ரிதம். அந்த ஆறு விற்களுக்கும் அப்பால் உள்ளவை தெய்வங்களுக்குரியவை. அவற்றை மானுடர் ஏந்தலாகாது” என்று அவர் சொன்னார்.

கர்ணன் “தெய்வ வில்லை ஏந்திய மானுடர் உண்டு” என்றான். “உண்மை, இந்திரப்பிரஸ்தத்தின் அர்ஜுனன் காண்டீபத்தை

ஏந்தியிருக்கிறான். முன்பு ராகவராமன் மூவிழியனின் வில்லை ஏந்தினான். பரசுராமர் ஏந்தியது பிறிதொரு சிவக்கோடு. தெய்வவில்லை ஏந்துபவன் தெய்வத்தின் மைந்தன். அவனை தெய்வப்பிறவி என்று கண்டறிந்த ஆசிரியன் ஒருவனால் அந்த வில் அளிக்கப்பட்டிருக்க வேண்டும். நீங்கள் தெய்வத்தின் மைந்தன் என்று முனிவர்கள் அறுதியிட்டுள்ளனரா?" என்றார் காளிகர். கர்ணன் "தெய்வவில்லொன்றை ஏந்தும் ஆணையை எனக்கு நீங்கள் நன்கு அறிந்த ஆசிரியர் ஒருவர் அளித்துள்ளார்" என்றான்.

காளிகர் தலையை கோணலாகத் திருப்பியபடி "அந்தச் செய்யுளை நீங்கள் ஒட்டுக்கேட்டு அறியவில்லை என்பதற்கோ, மாயத்தால் உளம்புகுந்து உணரவில்லை என்பதற்கோ என்ன சான்று உள்ளது?" என்றார். கர்ணன் தலைவணங்கி "சான்றாண்மைக்கு சான்று அளிக்கவியலாது, தச்சரே. அது விழிக்கூடெனத் துலங்கவேண்டும். சொல்லின்றி அறியப்படவேண்டும். நன்று, நீங்கள் உங்கள் விருப்பம்போல் நாளையே இங்கிருந்து கிளம்பலாம்" என்றான். காளிகர் "நன்று" என்று சொல்லி தலைவணங்கி அவையையும் வணங்கிவிட்டு திரும்பிச்சென்றார். கர்ணன் ஹரிதரிடம் தலையசைக்க அவர் வெளியே சென்று சிவதரிடம் காளிகரை உரிய முறையில் தங்கவைத்து இளைப்பாற்றி உடன்வந்தவர்களுக்கு பரிசிலும் அளித்து திரும்பிச்செல்ல உகந்ததை இயற்றும்படி ஆணையிட்டார்.

மறுநாள் காலை கர்ணன் வழக்கப்படி முற்புலரியில் கங்கைநீராடி கதிரோன் ஆலயத்தில் வழிபட்டு படிகளில் இறங்கி வருகையில் கீழிருந்து இரு மாணவர்களால் கைபிடித்து கொண்டுவரப்பட்ட காளிகர் ஏறிக்கொண்டிருந்தார்.

அரசனின் வருகையை அறிவிக்கும் சங்கொலியைக் கேட்டு அவரை மாணவர்கள் ஒதுக்கி நிறுத்தினர். காளிகர் மேலே நோக்கியதுமே அதிர்ச்சி அடைந்து “யார் அது? மேலே யார்?” என்றார். மூத்த மாணவனாகிய சந்தீபன் “ஆசிரியரே, அங்கே அரசர் தன் அகம்படியினருடன் வருகிறார்!” என்றான். “செம்மணிக் கவசம் அணிந்திருக்கிறான். மணிக்குண்டலங்கள் ஒளிகொண்டிருக்கின்றன. இளங்கதிரோன் போலிருக்கிறான்!” என்று காளிகர் கூவினார். பின்னர் அவர் உடலுக்கு ஒவ்வாத விசையுடன் “கதிரோனே! விண்ணவனே!” என்று கூவியபடி படிகளில் ஏறி கர்ணனை நோக்கி ஓடினார்.

# கார்கடல் - 10

காளிகர் நடுங்கிக்கொண்டிருந்தார். கர்ணன் அவர் தோளைப்பற்றி “பெருந்தச்சரே, நான் அங்கநாட்டரசனாகிய கர்ணன்” என்றான். அவர் அவன் நெஞ்சை வருடி “பொற்கவசம்… மணிக்குண்டலங்கள். நான் அவற்றை பார்த்தேன்” என்றார். அவருக்குப் பின்னால் மூச்சிரைக்க ஓடிவந்த மாணவர்கள் “நிலையழிந்துவிட்டார், அரசே…” என்றார்கள். கர்ணன் “தாழ்வில்லை… அவர் சற்றே ஓய்வெடுக்கட்டும்” என்றான். “நீங்கள் தெய்வமைந்தன். கதிரவன் எனக்கு இன்று அதை காட்டித்தந்தான். அரசே, சொல்க! அடியவன் ஆற்றவேண்டிய பணி என்ன?” என்றார் காளிகர்.

கர்ணன் சொல்லெடுப்பதற்குள் மறித்த காளிகர் “நீங்கள் எவரென்று நான் கேட்கப்போவதில்லை. உங்கள் ஆசிரியர் எவரென்றும் கூறவேண்டியதில்லை. அச்செய்யுளை கூறுங்கள்”

என்றார். கர்ணன் அவர் காதில் அந்தச் செய்யுளை உரைத்தான். அவர் மும்முறை அதை கேட்டபின் கைகூப்பி சற்று நேரம் அமர்ந்திருந்தார். அவர் முகம் அச்சமோ பெருவியப்போ கொண்டதுபோல மாறியது. "ஆம், இது விண்கதிரின் மைந்தனுக்கு சொல்லப்பட்டது. இந்த வில்லை ஏந்துபவன் வானாளும் மண்நிகழும் தேவன் என வெல்லற்கரியவன்" என்றார். கர்ணன் "அதை எழுப்புக, பெருந்தச்சரே! நான் ஆவன செய்கிறேன்" என்றான்.

"அனைத்தையும் நான் சொல்லியாகவேண்டும்" என்றார் காளிகர். "அரசே, மானுடர் இயற்றும் பெருஞ்செயல்கள் அனைத்துமே தேவர்களுக்கான அறைகூவல்களே. ஏனென்றால் பெருஞ்செயலாற்றுபவர்கள் அதனூடாக தேவர்களாகிறார்கள். ஆகவே தேவர்கள் பெருஞ்செயல்களை பெருந்தடைகளென ஆக்குகிறார்கள்." அவர் விழிகள் நிலையழிந்து உருண்டன. சிவதர் "ஆனால் பெரியவர்கள் பெருஞ்செயல்களை ஆற்றாதொழியலாகாது" என்றார். காளிகர் அதை கேளாதவராக "பெருவேள்விகள், அரிய கலைப்பொருட்கள், மெய்மைசூடிய நூல்கள் கோடி கைகளைப் பெற்று வானுக்கும் பாதாளங்களுக்கும் விரிகின்றன. அங்கே துயிலும் தெய்வங்களை தொட்டெழுப்புகின்றன. ஒளியின் தெய்வங்களை மட்டுமல்ல இருளின் தெய்வங்களையும்தான். அருளுடன் எழுகின்றன சில. பெருவஞ்சம் கொண்டு அணைகின்றன சில" என்றார்.

"அறிக, அவற்றின்மேல் நமக்கு எந்தக் கட்டுப்பாடும் இல்லை! நாம் இயற்றும் பெருஞ்செயல்களால் விளைவது ஆக்கமா அழிவா என்றுகூட நம்மால் சொல்லிவிட இயலாது" என்றார் காளிகர். "இச்செய்யுள் விண்ணில் இருந்து எரிகல் என

அடியிலாத ஆழத்திற்கு பாயும். அங்கு யுகங்களாக துயின்று கிடக்கும் மணிகர்ணன் என்னும் தொல்நாகத்தை தொட்டெழுப்பும். ஒரு தெய்வத்தை தொட்டெழுப்புவதென்பது எளிய நிகழ்வு அல்ல. எழுப்பிய தெய்வத்தை மீண்டும் அங்கு சென்று அமைய வைப்பதுவரை இங்கு நிகழும் அனைத்திற்கும் பொறுப்பேற்பதுதான் அது."

கர்ணன் "பெருந்தச்சரே, இது என் ஆசிரியர் எனக்களித்த ஆணை. அதை நான் மறுநோக்கு செய்யும் தகுதி கொண்டவனல்ல" என்றான். காளிகர் "ஆம், அவர் இதை எண்ணியிருப்பார் எனில் நாம் மேலும் சொல்சூழ்வதில் பொருளில்லை" என்றார். கர்ணன் "இந்த வில் மண்ணில் நிகழட்டும். தன் தருணத்திற்காக இது எங்கோ காத்திருக்கிறது" என்றான். "நானும் அதையே உணர்கிறேன். ஏழாம் உலகில் சின்னஞ்சிறு கணையாழி என சுருண்டுறங்கும் மணிகர்ணனின் கனவிலிருந்து எழுந்த அதன் நிழல்வடிவம் இங்கே புவியில் இருந்துகொண்டிக்கிறது. ஓர் இடத்தை செயல்சென்று தொடுவதற்கு முன்னரே அதற்கான விழைவு சென்று சேர்ந்துவிடுகிறது. நீங்கள் பிறந்தநாள் முதல் அந்த நிழல்நாகம் உங்களுடன் உள்ளது" என்றார் காளிகர்.

கர்ணன் சற்று திகைத்தபின் "இளமையில் என்னைத் தொடர்ந்து ஓர் அரசநாகம் வந்ததாகவும் எப்போதும் என்னைச் சூழ்ந்து அது இருந்துகொண்டிருந்ததாகவும் என் அன்னையும் தந்தையும் சொன்னதுண்டு. இளமையில் நானும் பலமுறை ஒரு பெருநாகத்தை கண்டிருக்கிறேன். அதனுடன் இயல்பாக விளையாடியிருக்கிறேன். என் கனவுகளில் அதை அணுக்கமாக நோக்கியிருக்கிறேன். அது எப்போதும் என்னுடன் உள்ளது என்று உணர்ந்துகொண்டிருக்கிறேன்" என்றான். "அது

மணிகர்ணனேதான். அவனை நாம் எழுப்பவிருக்கிறோம்” என்றார் காளிகர். கர்ணன் “அவன் எழுக!” என்றான். காளிகர் “மானுடர் அனைவருமே தெய்வங்களின் கருவிகள். நீங்கள் இயற்றவேண்டியவை சில உள்ளன போலும்” என்றார்.

காளிகர் தன் மாணவர்களுடன் சம்பாபுரிக்குத் தெற்கே கங்கைக்கரையில் அமைந்த சிறுகுடிலில் தங்கி அந்த வில்லின் வடிவத்தை உருவாக்கத் தொடங்கினார். அதன் ஒவ்வொரு வரியையும் அவர்கள் ஒருங்கமைந்து தொன்மையான அனுஷ்டுப் சந்தத்தில் பாடினர். அவர்கள் குரல்களில் ஒத்திசைவு உருவாகவில்லை. எவரோ ஒருவரின் குரல் உந்தி எழுந்தது. எவரோ ஒருவர் ஒருகணம் பிந்தினார். சொல்லிச்சொல்லி ஒற்றைக்குரலென அது ஆயிற்று. பின்னர் சீவிடுகளின் ரீங்காரம்போல் ஒற்றை ஒலியென்று அது மாறியது. அவர்கள் அனைவருக்கும் பொதுவான உள்ளமொன்று அங்கே எழுந்து வந்தது. அதில் மானுடர் உளம் திரள்கையிலெல்லாம் தோன்றும் சொல்லரசி எழுந்தருளினாள். ஒருவர் பிறிதொருவரிடம் சொல்லாமலேயே அச்சொற்கள் என எழுந்த பொருளை, அப்பொருளென வெளிப்படும் பிறிதொன்றை, அப்பிறிதொன்று தொகையான முழுதொன்றை கண்டுகொண்டனர்.

பதினெட்டு நாட்களில் அந்த வில்லின் வடிவை அசையா, அழியா பொதுக்கனவென அவர்கள் எண்மரும் ஒரே தருணத்தில் கண்டனர். குடிலுக்கு தென்மேற்கே கொட்டகை அமைத்து அங்கே களிமண் இறுக்கி சுண்ணம் பூசி உருவாக்கப்பட்ட களத்தில் முழு வடிவில் அதை வரைந்தனர். பன்னிரு நாட்கள் ஒவ்வொரு பகுதியையாக வரைந்து அதை முழுமை செய்தனர். அந்தப் பன்னிரு நாட்களும் அவர்கள்

ஒருவேளை உணவுண்டு இருநாழிகை விழிதுயின்று ஒருசொல்லும் உரையாடாமல் நோன்பிருந்தனர். வரைந்து முடித்தபின் தங்கள் கைகளினூடாக எழுந்த அவ்வடிவை நோக்கியபடி அவர்கள் திகைத்து நின்றனர். காளிகர் அதை அகவிழியால் கண்டு "தெய்வங்களே!" என்று கைகூப்பினார். தன் கைவிரலைக் கிழித்து ஏழு சொட்டு குருதியை அந்த மண்டலவரைவின்மேல் சொட்டி மானுடர் உளம்குவியுமிடத்தில் எல்லாம் குருதிகோரி வந்து காத்திருக்கும் இருட்தெய்வங்களை விடாய்நிறைவு செய்து திருப்பி அனுப்பினார்.

வில்லுக்கான வாஸ்துமண்டலம் வரைந்து முழுமையாக்கப்பட்ட செய்தியை காளிகரின் கடைமாணவன் வித்யுதன் வந்து அரசவையில் அமர்ந்திருந்த கர்ணனிடம் சொன்னான். "அரசே, இது தெய்வக்காட்சி என்று சொல்கிறார்கள். புலரியில் அணியிலிக் காட்சி என தெய்வத்தை வணங்கச் செல்கையில் கடைபிடிக்கப்படும் அனைத்து முறைமைகளும் கடைபிடிக்கப்பட்டாகவேண்டும். முதற்புலரியில் நீராடி, ஒற்றை உடையணிந்து, ஈரம் விலகாத உடலுடன் நீராடிய இடத்திலிருந்தே கூப்பிய கைகளுடன் தாங்கள் அதை பார்க்க வரவேண்டும். மலர்களும் நீரும் அன்னமும் படைத்து அதை வணங்கவேண்டும்" என்றான். "எந்தத் தெய்வத்தையும் போலவே அதுவும் உங்களை ஏற்று உங்கள் கையில் வந்தமையவேண்டும்."

"பொருள்களில் தெய்வங்கள் எழுவது அரிதாகவே நிகழ்கிறது. பொருள்களில் திகழும் தெய்வம் தன்னை எல்லையின்மையை ஒடுக்கி ஓர் எல்லைக்குள் நிறுத்திக்கொள்ளும் பெருங்கனிவை நமக்கென அடைகிறது. அக்கனிவு அது நமக்களிக்கும் அருள்.

அதற்கென நாம் அதை வழிபட்டாகவேண்டும். வில்லில் எழுந்துள்ள அத்தெய்வம் உங்கள் கையில் அமர்ந்து உங்கள் எண்ணத்திற்கேற்ப செயல்படும். உங்கள் எதிரிகளை வெல்லும். அணுக்கர்களை காக்கும். உங்கள் தன்னறம் துலங்க வைக்கும். விழிப்பிலும் துயிலிலும் ஒழியாத் துணையென உடனிருக்கும். உங்கள் உடலின் ஒரு நீட்சியென்றாகும். நீங்கள் உங்களை அதுவென உணரும் தருணமும் அமையும்" என்று வித்யுதன் சொன்னான்.

"ஆயினும் அது தெய்வமென உங்களை ஆண்டு, அதுவே நீங்கள் என உணரவைத்து முழுமையளித்து அழைத்துச் செல்லும்பொருட்டு மண் திகழ்வதென்றும் நீங்கள் உணர்ந்தாகவேண்டும். அதுவே உங்களுக்கு நிறைவளிப்பது" என்றான் வித்யுதன்.

கர்ணன் புலரியில் கங்கையில் நீராடி சிவதரும் ஹரிதரும் இருபுறமும் வர காளிகரின் ஈச்சஓலைக் குடிலுக்குள் சென்றான். நீள்வடிவில் போடப்பட்டிருந்த ஓலைக்குடிலுக்குள் நீள்சதுர களத்தில் வெண்சுண்ணத்தால் அவ்வில்லின் வடிவம் வரையப்பட்டிருந்தது. அதன்மேல் கரி படிந்த நூல் அடித்து இழுத்து உருவாக்கப்பட்ட நேர்கோடுகள் மெல்லிய வலையென பரவியிருந்தன. அவற்றில் அவ்வில்லின் ஒவ்வொரு பகுதியின் விசைக்கணக்குகளும் வளைவுக் கணக்குகளும் எடைக் கணக்குகளும் சிவந்த மையால் குறிக்கப்பட்டிருந்தன. அது ஒரு கட்டட வரைபடம் என்று தோன்றியது. அதை வில் என உளம்கொள்ள இயலவில்லை.

குடில்முற்றத்திலிருந்து அவனை வரவேற்று அழைத்துச் சென்ற காளிகர் அதைக் காட்டி "உருவம் காட்டியுள்ளது. இனி பருப்பொருளில் எழவேண்டும்" என்றார். கர்ணன் அதனருகே

சென்று கைகூப்பி நின்றான். “மலரீடு செய்க, அரசே!” என்று காளிகரின் மாணவன் நிமிஷன் சொன்னான். அவன் நீட்டிய தாலத்தில் இருந்து குருதிப்பூக்களை அள்ளி அதன் மேலிட்டு எட்டுறுப்பும் நிலம்தொட விழுந்து வணங்கினான். “இறைவடிவே, என் மூதாதையர் இயற்றிய தவப்பயன் என்றாகுக! என் குலதெய்வமென்று எழுக! இங்கே என் கொடிவழியினருக்கு அருளி அமர்க!” என வேண்டிக்கொண்டான்.

திரும்பிச் செல்கையில் நீர்ப்பாவையென அவ்வில்லின் தோற்றம் அவன் உள்ளே அலையடித்தது. நினைவிலிருந்தும் விழித்திரையிலிருந்தும் கலைந்து கலைந்து விலகியது. சிவதரிடம் “அதை ஒரு கட்டடம் என்றோ நகரம் என்றோதான் உளம்கொள்ளத் தோன்றுகிறது. வில்லென்று எண்ணவே தோன்றவில்லை” என்றான். அவர் “வில்லை இவ்வாறு வரைபடமாக இதற்குமுன் பார்த்ததில்லை” என்றார். கர்ணன் “அந்த வில்லை நான் அறியேன். அப்பாடலின் பொருளைக்கூட உணர்ந்ததில்லை. சொல் சொல்லென அதை நினைவு வைத்திருந்தேன், அவ்வளவுதான்” என்றான். “அன்று என் ஆசிரியரிடம் சொன்னேன். அதை எவ்வாறு நான் கையாள இயலும், அதைப் பயில்வதற்கு கற்றுக்கொடுப்பவர் எவர் என்று. ஆசிரியர் என்னிடம் அதில் தெய்வமெழுந்துள்ளதென்றால் அதுவே உன் ஆசிரியனும் ஆகுக என்றார்.”

காளிகரும் அவர் மாணவர்களும் அந்த வில்லை உரிய உலோகக் கலவையில் வார்க்கத் தொடங்கினார்கள். அவர்கள் கோரிய உயர்நிலை இரும்பு தென்னிலமாகிய எருமைநாட்டிலிருந்து அங்கு கொண்டு செல்லப்பட்டது. கலிங்கத்து ஈயமும் அகழ்ந்தெடுத்த கரியும் வந்துசேர்ந்தன. ஈயமும் கரியும் சேர்த்து இரும்பை உறையடுப்பிலிட்டு

உருக்கினார்கள். உறையடுப்பு செய்யும் குயவர்கள் சம்பாபுரிக்கு அப்பால் விதிஷாவிலிருந்து கொண்டு வரப்பட்டனர். அவர்கள் மண்ணுக்கடியில் செங்கல்லடுக்கி உருவாக்கிய உறையடுப்புக்குள் இரும்பும் கரியும் சேர்த்து உருக்கி குழம்பாக்கி அதில் ஈயம் சேர்த்தனர். வெள்ளீயமும் காரீயமும் நிலவெள்ளியும் அதில் கலக்கப்பட்டன.

அங்கிருந்து வந்த ஹரிதர் "தெய்வங்கள் உண்ணும் எதையோ அவர்கள் சமைப்பது போலிருக்கிறது. உருகிய இரும்பு அனற்குழம்பென்றாகிறது. அதில் தூய கரி சேர்க்கப்படும்போது கரியும் ஒளியாவதை பார்க்க முடிகிறது. செங்குழம்பில் ஈயம் உருக்கி சேர்க்கப்படுகையில் விந்தையானதோர் மணம் எழுகிறது" என்றார். சிவதர் "ஒவ்வொரு உலோகமும் விடாய் கொண்டதென்று தோன்றுகிறது. உருகுகையில் அவை நீர் நீர் என கூச்சலிடுகின்றன" என்றார். கர்ணன் சென்று நோக்கியபோது முதல் உறையடுப்பின் விளிம்புகள் பளிங்கென ஆகிவிட்டிருப்பதை கண்டான். "மிகைவெம்மை ஒரு தவம். அவற்றை மாசகற்றி ஒளிகொள்ளச் செய்துவிட்டது" என்றான் காளிகரின் மாணவனாகிய சம்விரதன்.

"அரசே, ஒவ்வொரு உலோகமும் ஒவ்வொரு இயல்பு கொண்டது. இரும்பு உறுதியும் நெகிழ்வும் கொண்டது. கரி முற்றிலும் நெகிழ்வற்றது. ஈயம் முற்றிலும் நெகிழ்வானது. இரும்பின் நெகிழ்வை ஈயம் பெருக்குகிறது. அதன் உறுதியை கரி பெருக்குகிறது. அவையிரண்டும் இரும்பை இரு திசைகளிலாக நெருக்குகின்றன. எங்கோ ஓர் இடத்தில் இரும்பு தன் உச்சநிலையை கண்டடைகிறது. இங்கு உருவாக்கப்பட்டுள்ள அனைத்து உருக்குப் பொருட்களும் அந்நிலையின் முன்பின் என அமைந்த ஏதோ தருணத்தில்

நின்றுவிட்டவை. அந்த உச்சதருணத்தில் எழும் இரும்பே எங்கள் தேடல். அதை முன்பு நாங்கள் ஓரிரு முறை கண்டிருக்கிறோம். அதை மீண்டும் அடைவதென்பது ஊழ்க உச்சத்தை சென்றடைவது போலத்தான். அதற்கான வேண்டுதலையும் முயற்சியையும் மட்டுமே நாம் செய்ய முடியும். தெய்வங்கள் அதை நிகழ்த்தவேண்டும்" என்றார் காளிகர்.

இரும்பின் உச்சம் நிகழ்ந்துவிட்டதென்பதை சம்விரதன் வந்து அவனிடம் சொன்னான். "பதினெட்டு நாட்களாக உலோகக்கூட்டு கொதித்து கலவைநிலை மாறிக்கொண்டே இருந்தது. இன்று அமைந்துவிட்டது." கொட்டகைக்குச் சென்று அங்கிருந்த காளிகரை வணங்கி கர்ணன் "எவ்வண்ணம் இரும்பு முழுமைகொண்டதை அறிந்தீர்?" என்று கேட்டான். "அதில் பொன் எழுந்தது" என்று காளிகர் சொன்னார். "அரசே, மண்ணில் பொன்னே அனைத்து உலோகங்களுக்கும் உச்சம். இங்குள்ள ஒவ்வொரு உலோகமும் வெவ்வேறு நிலையில் பொன்னை நோக்கி சென்று நின்றுவிட்டவை. எனவே இங்குள்ள ஒவ்வொன்றையும் ஏதோ ஓர் வழியில் பொன்னென்றாக்க முடியும். அதையே ரசக்கலை என்கின்றனர் முன்னோர்."

"மானுடரில் முனிவர்போல், விலங்குகளில் சிம்மம்போல், பறவைகளில் கருடனைப்போல் இங்குள்ள ஒவ்வொரு பொருளிலும் ஒளி உறைகிறது. இருளே வடிவான கரியில் கூட ஏதோ ஒரு வெப்பத்தில் ஒளியெழுகிறது. இங்குள்ள அனைத்துமே ஊழிப்பொழுதில் ஒளி மட்டுமே என ஆகிவிடுகின்றன. நேற்று எங்கள் கலவையில் பொன் எழுந்தது. இருளில் கதிர் எழுவதுபோல. எங்கள் உலோக உலைக்கூடம் புலரியில் நிறைந்தது. எங்கள் ஒவ்வொருவரின் உடல்களும்

பொன்னென்றானதுபோல் தழல் சுடர்விட்டன. ஐயமே இன்றி அனைவரும் அறிந்தோம் எங்கள் உலோகம் முழுநிலையில் எழுந்துவிட்டதென்று.”

“இங்குள்ள ஒவ்வொரு மானுடரும் உளமெழுந்து தேவர்களாகிவிட முடியும் என்பதுபோல் ஒவ்வொரு பொருளும் பொன்னென்றாகி விடக்கூடும். பின்னர் அங்கிருந்து இறங்கி வந்து இங்குள நிலையில் ஒன்றை தனக்கென தெரிவு செய்து அமையவேண்டும். நேற்று அந்த வில்லை வார்த்துவிட்டோம். இன்று அதை குளிர வைத்துக்கொண்டிருக்கிறோம்” என்றார் காளிகர். “எப்போது அது குளிர்ந்து உருக்கொள்ளும்?” என்று கர்ணன் கேட்டான். “அது அந்த உலோகத்தால் முடிவெடுக்கப்படுவது. ஒவ்வொரு அணுவிடையாக அதன் வெப்பத்தை குறைத்துக்கொண்டிருப்போம். இன்று முழுக்க அது கொதிக்கும் உலையிலேயே இருக்கும். நாளை முதல் ஒவ்வொரு நாழிகைக்கும் மிகச்சற்று என அதன் எரியை குறைப்போம். தொடும்படி குளிர்வதற்கு நூற்றெட்டு நாட்களாகும். அதற்கு மேலும் ஆகக்கூடும்” என்றார் காளிகர்.

ஒவ்வொரு நாளும் அவ்வில்லைப்பற்றிய செய்திகளை கேட்டுக்கொண்டிருந்தான் கர்ணன். “குளிர்ந்தமைகிறது. கருமை கூடுகிறது” என்று காளிகர் சொன்னார். “பிறந்த குழந்தை விழி திறந்து இவ்வுலகை நோக்கி அறிவதுபோல் காற்றையும் தண்மையையும் உணர்கிறது. இங்குளோம் இவ்வாறுளோம் என்று அறிந்துகொண்டிருக்கிறது.” பின்னர் அவரே மாணவர் சூழ அவைக்கு வந்து சொன்னார் “அரசே, வில் ஒருங்கிவிட்டது. நீங்கள் அதை வந்து பார்க்கலாம்.” கர்ணன் “அதற்கான முறைமைகள் என்ன?” என்றான். “இம்முறை நீங்கள் அதை

பீடத்தில் முழுதுருக்கொண்டு கொலுவீற்றிருக்கும் தெய்வத்தை பார்க்க வருவதுபோல் அணுக வேண்டும்” என்றார் காளிகர்.

“மணிமுடி சூடி செங்கோலேந்தி அரசணி கோலத்தில் செல்க! அரசியரும் அமைச்சரும் அகம்படியினரும் உடனெழுக! முழவுகளும் கொம்புகளும் சங்கும் மணியும் இலைத்தாளமும் முழங்கட்டும். நூறுவகை படையல்கள், ஐவகை பூசனை முறைகள் நிகழ்க! இக்குடியின் பெருந்தெய்வம் ஒன்று சிலை கொண்டுவிட்டது என்று குடிகள் அறியட்டும்” என்றார் ஹரிதர். கர்ணன் கைகூப்பியபடி எழுந்து காளிகரின் கால்களைத் தொட்டு வணங்கி “அடியவன் அளிக்கவேண்டியதென்ன என்று சொல்லுங்கள்” என்றான். “என் குடியினர் நூற்றெண்மர் கலிங்கத்திலுள்ளனர். அவர்கள் அனைவருக்கும் இல்லங்களும் ஆண்டுக்கு நூறுகலம் நெல்லும் நாளுக்கு நாழி நெய் என வந்தமையும் ஆநிரைச் செல்வமும்” என்றார் காளிகர். மீண்டும் வணங்கி “கோரியதற்கு பத்துமடங்கு அளிக்கிறேன். வாழ்த்துக!” என்றான் கர்ணன்.

அரசனின் ஆணைப்படி சம்பாபுரி விழவுக்கோலம் பூண்டது. காளிகர் வகுத்தளித்த நற்பொழுதில் கர்ணன் கங்கையில் நீராடி அரசணிக்கோலம் பூண்டு தன் அரசியரும் அமைச்சரும் படைத்தலைவர்களும் குடித்தலைவர்களும் அகம்படியினருமாக அரண்மனையிலிருந்து அணியூர்வலமாக கிளம்பினான். சம்பாபுரியின் அரசத்தெருக்களினூடாக தென்மேற்கு எல்லையில் அமைந்த காளிகரின் சோலையை அணுகினான். அங்கே அந்த வில் புதிதாக கூரை மாற்றப்பட்ட கொட்டகையில் மரப்பீடத்தின் எட்டு பிடிகளின்மேல் பொத்தி மேல்நோக்கி வளைத்து வைக்கப்பட்டிருந்தது.

முந்தையநாள் இரவிலேயே காளிகரும் அவரது மாணவர்களும் கலிங்கத்து முறைப்படி இடமுறைப் பூசனைகளை முடித்து திமில் பெருத்த வெண்எருதொன்றை பலியிட்டு அக்குருதியால் அதை ஏழு முறை நீராட்டியிருந்தனர். செம்மலர் மாலைகள் சூடி அது பீடத்தில் காத்திருந்தது. கர்ணன் தன் இரு அரசியருடனும் மைந்தருடனும் கைகூப்பி கொட்டகையின் முகப்பில் வந்து நின்றான். காளிகர் அருகே வந்து அவன் முன் தலைவணங்கி "விஜயம் தங்கள் வருகைக்காக ஒருங்கியிருக்கிறது. அதன் அருள் தங்கள் தோள்களுக்கும் குடிகளுக்கும் முடிக்கும் அமைக!" என்று வாழ்த்தினார். தலைவணங்கி கர்ணன் அந்த வில் முன் சென்று நின்றான். அவனுக்கு எழுந்த முதல் எண்ணம் அவன் அறிந்த அனைத்து விற்களையும் போலத்தான் அது இருக்கிறது என்பதுதான். அத்துடன் அதன் பருமனையும் நீளத்தையும் பார்த்தபோது அதன் எடை எண்ணியதைவிட மிக அதிகமாக இருக்கக்கூடுமென்றும் தோன்றியது. அதை நடுவளைவைப்பற்றி நிலை அமையச்செய்து நாணேற்றி அம்பு தொடுப்பதென்பது பெரும் தோள்வல்லமையுடன் இயற்றப்படவேண்டியது. அவனால் அது இயலுமென்றாலும்கூட மிக விரைவில் அவன் கைகள் சலித்துவிடக்கூடும்.

காளிகர் அவன் அருகே நின்றார். அவன் அவரிடம் "மூங்கில் போன்ற வடிவிலேயே இதை அமைப்பீர்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை" என்றான். தன் மெய்யான ஐயத்தை கேட்கத் தயங்கினான். "அரசே, தொல்காலத்து மானுடர் மூங்கிலையே வில்லென்று பயன்படுத்தினார்கள். அவ்வடிவிலிருந்தே எழுந்தவை அனைத்து விற்களும். நமது மூதாதையர் கைகளில் நினைவென படிந்த மூங்கில்வில்லே நம் கனவுகளில் வாழ்கிறது. ஆகவே மூங்கில் வடிவிலன்றி

வேறெந்த வடிவிலும் வில்லை வார்க்க இயலாது” என்றார் காளிகர். கர்ணன் “நன்று…” என்றான். ஆனால் மூங்கில் எடையற்றது என்று தன்னுள் சொல்லிக்கொண்டான்.

பூசகர்கள் மலர்த்தாலங்களுடன் வந்தனர். சம்பாபுரியின் குடிவழக்கப்படி அந்த வில்லுக்கு முறைப்படி பூசெய்கை நிகழ்ந்தது. கர்ணன் மலரிட்டு அதை வணங்கினான். பல்லியங்கள் ஆர்த்தன. சூழ்ந்திருந்தோர் வாழ்த்துக் குரலெழுப்பினர். பெருமுரசின் ஒலிகேட்டு சம்பாபுரியெங்கும் வாழ்த்தொலி முழங்கியது. மக்கள் களிவெறி கொண்டு கூச்சலிட்டார்கள். பெருந்திரளாக நகரிலிருந்து கிளம்பி வில்லை வழிபடுவதற்காக அரிமலர் கனிநிறைத் தாலங்களுடன் வந்துகொண்டிருந்தனர். அரசன் வழிபட்டு அகன்றதும் ஏழு நிரைகளாக அவர்கள் உள்ளே அனுப்பப்பட்டனர். பகலெல்லாம் அங்கே வழிபாட்டுக்கான முரசொலி எழுந்துகொண்டே இருந்தது.

அன்று திரும்பிவருகையில் கர்ணன் சிவதரிடம் சொன்னான் “எனது ஐயமும் தயக்கமும் மேலும் பெருகியிருக்கிறது, சிவதரே. இந்தப் பெருவில்லை என்னால் கையாள இயலுமா என்று தெரியவில்லை. போர்க்களத்தில் அம்புக்கு விசையாகும் நிமிர்வும் எடையும் வில்லுக்குத் தேவை. ஆனால் உடன்நிற்பது அறியாமல் கையில் அமையும் எடையின்மையும் அதற்கு இன்றியமையாதது. இவர்கள் தங்கள் ஆணவ நிறைவுக்கென ஓர் அணிவில்லை படைத்துள்ளார்களோ என்று தோன்றுகிறது.” சிவதர் “நானும் அதையே எண்ணினேன். ஆயினும் என்ன? இத்தகையதோர் வில் இங்கு சமைக்கப்பட்டிருப்பதே வெற்றிதான். சம்பாபுரியில் எழும் புத்தெழுச்சியை

பார்க்கையில் ஒருமுறைகூட இது போருக்கென எழவில்லையெனினும் நன்றே என்று தோன்றுகிறது” என்றார்.

உடன் வந்துகொண்டிருந்த ஹரிதர் “ஆம், இங்கு நம் குடியின் போர்த்தெய்வமாக படைக்கலப் புரையில் இது அமையட்டும்” என்றார். “ஒவ்வொரு நாளும் நமது மலரும் நீரும் பெற்று நம் வெற்றிக்கும் திறலுக்கும் அடையாளமாக இங்கு துலங்கட்டும். நமக்கென்று போர்த்தெய்வம் எழுந்தது நன்றே. ஒருவேளை பரசுராமர் தங்களுக்கு அருளியதே அதுதான் போலும்” என்றார். கர்ணன் அவர்கள் இருவரையும் பார்த்த பின் “வில் என்பது களத்திலேயே பொருள்கொள்கிறது” என்றான். சிவதர் “இது சிவதனுஸ். இது முடிவெடுக்கட்டும் எந்தக் களத்தில் எப்படி எழுவதென்று” என்றார்.

விஜயம் அமைந்திருந்த கொட்டகையை மரத்தாலான ஆலயமாக மாற்றிக் கட்டுவதற்கு கர்ணன் ஆணையிட்டான். ஒவ்வொருநாளும் இருமுறை அதற்கு மலரிட்டு நீர் காட்டி பூசனை செய்வதற்குரிய அந்தணரையும் அமைத்தான். பரசுராமர் அமைத்த அந்த நுண்மொழிச்செய்யுள் பதினெட்டு வரிகளாக பிரிக்கப்பட்டு பதினெட்டு அந்தணர்குடிக்கு பயிற்றுவிக்கப்பட்டது. காளிகரின் ஆணைப்படி பதினெட்டு சொற்களுக்கு ஒன்று வீதம் எடுத்து அவ்வரிகள் அமைக்கப்பட்டன. பதினெட்டு அந்தணர்களும் ஒருவருக்கொருவர் எந்த உறவும் கொள்ளலாகாதென்றும் ஒருமுறையேனும் நுண்சொல் பெற்ற அந்தணர் இன்னொரு நுண்சொல் பெற்ற அந்தணரை காணலாகாதென்றும் வகுக்கப்பட்டது. ஒரு அந்தணர் குடி அந்த வில்லுக்கு மூன்று மாதம் பூசனை செய்யவேண்டும். அதன்பின் அடுத்த அந்தணர் குடி பூசனைக்கு எழும். அந்த நுண்சொற்களைக் கோத்து

மீண்டும் முதற்செய்யுளாக ஆக்கும் கணக்கு ஒரு செய்யுளென யாக்கப்பட்டு சம்பாபுரியின் அரசகுடிக்கும் அதை உருவாக்கிய சிற்பியர் குடிக்கும் மட்டும் தெரியும்படி அமைக்கப்பட்டது.

விடைபெற்றுச்செல்கையில் காளிகர் சொன்னார் "அரசே, ஓராண்டு அந்த வில் தொடப்படாது அங்கிருக்கட்டும். அதன் பின் ஒருநாள் நீங்கள் அதை கையில் எடுக்கலாம். அதற்கான ஆணையை அதுவே அளிக்கும். அதற்காக உளம் தீட்டி காத்திருங்கள்." வழிப்பரிசில்கள் பெற்று காளிகரும் மாணவர்களும் கலிங்கத்திற்கு கிளம்பிச்சென்ற பின்னர் கர்ணன் அவ்வில்லையே பலநாட்கள் எண்ணிக்கொண்டிருந்தான். பின்னர் அஸ்தினபுரிக்குச் சென்று துரியோதனனிடம் அவைகூடினான். தென்மகதத்திற்கு படையெடுத்துச் சென்றான். மீண்டு வந்தபோது அந்த வில்லை முற்றாகவே மறந்துவிட்டிருந்தான். சம்பாபுரி அதற்கு வகுக்கப்பட்ட மாறா திசைவழியில் சென்று கொண்டிருந்தது. அதன் பலநூறு தெய்வங்களில் ஒன்றென அந்த வில் மலரும் நீரும் பெற்று ஆண்டுக்கொரு பலிகொண்டு அமர்ந்திருந்தது.

# கார்கடல் - 11

நெடுங்காலம் கழித்து கர்ணன் அந்த வில்லைப்பற்றி நினைவுகூர்ந்தான். அப்போது அவன் தன்னிலையில் இருக்கவில்லை. அஸ்தினபுரியில் வேள்விச்சாலையிலிருந்து வெளியேற்றப்பட்டு தன் மாளிகைக்குத் திரும்பிய கணம் முதல் வெறிகொண்டு மது அருந்திக்கொண்டிருந்தான். வயிறு மதுவை தாளாமல் அதிர்ந்து உடல் எழுந்து வாயுமிழ்ந்தான். உடனே "கொண்டு வருக! எரியும் பீதர்நாட்டு மது வருக!" என்று

கூவினான். ஏவலர் தயங்கியபோது “கொண்டு வா மூடா! உன் சங்கை அரிந்திடுவேன். கொண்டு வா!” என உடைவாளை உருவியபடி எழுந்தான். எழமுடியாமல் பீடத்திலேயே விழுந்தான்.

ஏவலர் மீண்டும் மீண்டும் மது கொண்டுவந்தனர். அவன் வாயுமிழ்ந்தபோது புளித்த மதுவுடன் குருதியின் படலமும் இருந்தது. “போதும், அரசே!” என்று ஏவலன் சொன்னபோது அவன் முகத்தை நோக்கி துப்பி “மது அருந்தி செத்துவிடுவேன் என நினைத்தாயா? நான் கர்ணன்! சூரியன் மைந்தன். பரசுராமனின் மாணவன். அவ்வாறு சாகமாட்டேன். சாவதென்றால் போர்க்களத்தில் சாவேன். இளைய யாதவன் கையால். ஆம், அவனை அன்றி எவரும் என்னை கொல்லமுடியாது” என்று கூவினான். சினம்கொண்டு தன் பீடத்தின் கையை ஓங்கி அறைந்து “நான் நாகபாசன். என்னை அந்தப் பாண்டவ அறிவிலி கொல்ல முடியாது. அவன் வில் என் நோக்கிலேயே உருகும்… பார்க்கிறாயா? அடேய், எவரேனும் பார்க்க விழைகிறீர்களா?” என்று குரலெழுப்பினான்.

அவன் அறை முழுக்க சூதர்கள் நிறைந்திருந்தார்கள். “ஆடுக! மதுநடனம்! ஆம் மதுநடனம்!” என்றான். “பாற்கடலைக் கடைந்து நஞ்சை எடுத்து அசுரர்களுக்கு அளிக்கிறான் விண்ணவன். மோகினியாக வந்து உளம் மயக்குகிறான். ஆடுக நடனம்! எங்கே என் மோகினி? எங்கே அவள்? மோகினி வருக! எனக்கு நஞ்சு அவர்களுக்கு அமுது… ஆ! இனிய நஞ்சு. தித்திக்கும் நஞ்சு. பித்தேற்றி இங்குள்ள அனைத்தையும் இனிதாக்குவது. நெஞ்சை கசப்பாக்கினால் என்ன? நாவை இனிதாக்கும் அது… வருக!” விறலி அருகிருந்த சூதனிடமிருந்து மதுக்குவளையை எடுத்துக்கொண்டு மோகினியாக நடமிட்டு

அவர்கள் நடுவே நடந்தாள். கர்ணன் உரக்க நகைத்து “அது நஞ்சேதான்... ஏனென்றால் அவள் அசைவுகளும் சிரிப்பும் அதை அமுதெனக் காட்டுகின்றன! நன்று!” என்றான்.

கர்ணன் தாழ்வான மஞ்சத்தில் தலையணைமேல் ஒருக்களித்துச் சாய்ந்து தலைதொங்க அமர்ந்திருந்தான். அவன் முன் அறைமுழுக்க உணவுப்பொருட்களும் மதுக்குடுவைகளும் சிதறிக்கிடந்தன. காலடியில் ஒரு சூதன் குப்புற விழுந்து துயின்றுகொண்டிருந்தான். அப்பால் ஒருவன் பீடத்தில் நன்றாகக் கால்நீட்டி சாய்ந்திருந்தான். ஒருவன் மகரயாழை மடியில் வைத்து தடுமாறும் விரல்களுடன் அதை மீட்டினான். அதிலிருந்து துளித்துளியாக பொருளற்ற ஓசை எழுந்தது. விறலியால் நடனமாட இயலவில்லை. அவளுடைய கால்கள் தடுமாறின. அவளும் முழுக் களி கொண்டிருந்தாள். “டேய், என்ன செய்கிறாய்? மூடா, முழவெழுப்புக!” என்று கர்ணன் சொன்னான். சூதன் விழித்தெழுந்து முழவை விரல்களால் தட்டினான்.

விறலி இரு கோப்பைகளை எடுத்துக்கொண்டாள். அவற்றை இயல்பாக இரு கைகளுக்கும் மாற்றிக்கொண்டு அமுதநடனத்தை ஆடினாள். “அதோ அது! அந்தக் கோப்பை. அதுதான் நஞ்சு!” என்று கர்ணன் கூவினான். “நீ அமுதை அளிப்பதாக இருந்தாலும் எனக்குத் தேவையில்லை. நான் நாடுவது நஞ்சை! ஆஹாஹாஹாஹா!” என்று கைகளை அறைந்து கூவிநகைத்தான். விறலி இரு கோப்பைகளையும் அவன் முன் மாறிமாறி நீட்டினாள். அவன் அவற்றை பற்றுவதற்காக எழுந்து விழுந்தான். அவளுடைய கைகள் இரு நாகங்களாக நெளிந்து நெளிந்து அவனிடம் விளையாடின.

“நாகங்கள்! ஆனால் நாகங்களை நான் நன்கறிவேன்!” என்று கர்ணன் சிரித்தான்.

கதவு மெல்ல திறந்து வாயிற்காவலன் உள்ளே வந்தான். “இவன் மண்ணுலகிலிருந்து வரும் மானுடன்… தேவி மோகினி, அவனுக்கு சற்று மது அளியுங்கள்!” என்றான் கர்ணன். ஏவலன் மெல்ல பின்னடைந்து கதவை மூடினான். மீண்டும் கதவு திறந்து சுப்ரியை உள்ளே வந்தாள். அவள் சீற்றம்கொண்டவள் போலிருந்தாள். கர்ணன் அவளை அடையாளம் காணவில்லை. “இதோ இவள்! இவள் அமுதுடன் எழுந்த திருமகள். ஆனால் அமுதை இவள் நமக்கு தரப்போவதில்லை. திருமகளே, வருக!” என்றான். கோப்பைகளுடன் நின்றிருந்த விறலி அவளைக் கண்டதும் பின்னால் விலகிச்சென்று சுவரோடு ஒட்டிக்கொண்டாள். இரு சூதர்கள் விழித்துக்கொண்டு ஏளனத்துடன் அவளை நோக்கினர். ஒருவன் அவளுடைய நடைக்கேற்ப முழவை மீட்டினான்.

“அரசரிடம் பேசவந்திருக்கிறேன்” என்றாள் சுப்ரியை. கர்ணன் “ஆடுக நடனம்!” என்றான். ஒரு எடைமிக்க திரைபோல அவன் மேல் துயில் வந்து விழுந்து மூடிக்கொண்டது. இசைச்சூதனாகிய கோகர்ணன் கர்ணனின் காலைப்பற்றி உலுக்கி “அரசே, அரசே” என்றான். வாய் வழிய தலைசரித்துக்கொண்டிருந்த கர்ணன் “என்ன?” என்று திடுக்கிட்டு விழித்தான். “ஏன் பாட்டு நின்றுவிட்டது? பாடுக… எங்கே என் நாகம்? என் நச்சுக் குவளை எங்கே?” கோகர்ணன் “அரசே, அரசி வந்துள்ளார்” என்றான். “எந்த அரசி?” என்று கர்ணன் கையூன்றி எழுந்து திரும்பி நோக்கினான். “ஆ! இவள்…” என்று சுட்டிக்காட்டினான்.

சுட்டுவிரல் அப்படியே நிற்க அவன் முகத்தில் ஏளனப் புன்னகை பரவியது. இதழ்கள் இளிப்பில் இழுபட "இவள்..." என்றான். மீண்டும் ஒருமுறை சிரித்து திரும்பி கோகர்ணனை நோக்கி "இவள் யார் தெரியுமா?" என்றான். "சம்பாபுரியின் அரசி!" என்றான் கோகர்ணன். "அல்ல, அல்ல மூடா" என கர்ணன் நகைத்தான். "சொல்" என்று கோப்பை ஒன்றை எடுத்து இன்னொரு சூதனாகிய சுபர்ணன் மேல் எறிந்தான். சுபர்ணன் "கலிங்க அரசி" என்றான். "இல்லை" என்று கர்ணன் உரக்க நகைத்தான். எழுந்து அமர முயன்றபோது உடல் ஒரு பக்கமாக சரிந்தது. கையூன்றி அமர்ந்து "இவள் சிந்துநாட்டின் அரசி. சைந்தவராகிய ஜயத்ரதரை உளம்கொண்டவள்..." என்றான்.

சூதர்கள் திகைப்புடன் அவளை நோக்க சுப்ரியை சீற்றத்துடன் "அரசே" என்றாள். "இன்று வேள்விநிலையில் சைந்தவ அரசியாக காமிகை அவையமர்ந்தபோது நிலையழிந்து துயர்கொண்டவள்... இவள்... ஆனால்..." கர்ணன் இளித்தபடி சொல்லக்கூடாது என்பதுபோல விரலை அசைத்தான். அவ்விரலை வாய்மேல் வைத்து மூடிக்கொண்டு தலையை ஆட்டினான். ஊன்றியிருந்த இன்னொரு கையை இயல்பாக தூக்க மீண்டும் நிலையழிந்து மஞ்சத்தில் விழுந்தான். சுப்ரியை திரும்பி கதவைத் திறந்து வெளியே சென்றாள்.

கர்ணன் சிரித்துக்கொண்டு "அவள் சினம்கொண்டு செல்கிறாள். ஒற்றைக்காலில் தவம் செய்து அவனை அவள் அடைவாள்!" என்றான். "எங்கே? விறலியர் எங்கே? ஒற்றைக்காலில் தாட்சாயணி தவம் செய்ததை ஆடுக!" என்றான். "நான் நஞ்சுண்டன்... ஆலகாலம் உண்டு நின்று ஆடுவேன்" என்றபடி எழுந்தான். கால்கள் நிலையழிய தன்னை நிலைநிறுத்திக்கொண்டு "நான் ஆலவாயன். எங்கே என் நாகம்?

என் கழுத்தில் அதை நான் சூடவேண்டும்! எங்கே வாசுகி?” என்றான்.

கோகர்ணன் “அரசே, வாசுகிக்கு நிகரான நஞ்சு உங்கள் நாவில் உள்ளது” என்றான். கர்ணன் கண்களைச் சுருக்கி “என்ன சொல்கிறாய்?” என்றான். “இப்போது நீங்கள் அரசிமேல் உமிழ்ந்தது மானுட உள்ளம் உருவாக்கிக்கொள்வதிலேயே ஆற்றல் மிக்க நஞ்சு” என்றான் கோகர்ணன். “என்ன?” என்று கர்ணன் மீண்டும் கேட்டான். “களிமயக்கில்லையேல் உங்கள் அறம் அதைச் சொல்ல ஒப்புக்கொண்டிருக்காது. களிமயக்கு என்பது ஒரு நுட்பமான நடிப்பு மட்டுமே. எந்தக் களிமகனும் அவனுக்குள் இல்லாத ஒன்றை சொல்லிவிடுவதில்லை” என்றான் கோகர்ணன். கர்ணன் ஆடியபடி அவனை நோக்கி நின்றான். அவன் கை கோகர்ணனைச் சுட்டுவதுபோல நீண்டது. பின்னர் மெல்ல பின்னடைந்து பீடத்தில் அமர்ந்துகொண்டான்.

கோகர்ணன் “அவர் இங்கே வந்தது ஏன் என்று நீங்கள் அறிவீர்கள், அரசே” என்றான். “அவர் உங்கள் காலடியில் விழுவதற்காக வந்தார். இதுகாறும் கொண்டிருந்த அனைத்துக் கவசங்களையும் களைந்துவிட்டு வந்திருந்தார். அதை நன்கறிந்தமையால்தான் நீங்கள் அந்த நச்சு அம்பை உங்கள் நாணில் பூட்டினீர்கள்.” கர்ணன் போதும் என்பதுபோல கையை காட்டினான். “இத்தனை நாட்கள் நீங்கள் அவரை பொறுத்தருளினீர்கள். அத்தகைய பெரும்பொறை மானுடர்களுக்கு இயல்வதல்ல. பாறைக்குள் நீர்த்துளி என ஒரு சொட்டு நஞ்சு உள்ளே எங்கோ சென்று சேர்ந்துகொண்டே இருந்திருக்கிறது.” கர்ணன் “நிறுத்து!” என்று கூவினான். “செல்க… அனைவரும் செல்க!”

கோகர்ணன் எழுந்தான். “மது!” என்று கர்ணன் ஏவலனை நோக்கி கூச்சலிட்டான். “மேலும் மது!” என்று இருக்கையின் கைப்பிடியை அறைந்தான். ஏவலர் இருவர் மதுவுடன் வர சூதர்கள் வெளியேறினர். அவன் குடித்துக்கொண்டே இருந்தான். பின்னர் நினைவழிந்து அவன் எப்போதுமே வெறுக்கும் அந்தப் புதைசேற்றில் ஆழ்ந்தான். அவன் சென்றுகொண்டிருந்த தேரின் சகடம் அதில் புதைந்தது. நிலையழிந்த தேரிலிருந்து அவன் இறங்கி கால்கள் புதைய நடந்துசென்று அந்தத் தேரின் சகடத்தை தூக்க முயன்றான். அது மேலும் மேலுமெனப் புதைந்தது. உடன் அவனும் புதைந்துகொண்டிருந்தான். இனிய மென்மைகொண்ட சேறு. ஊன்கதுப்புபோல் உயிர்கொண்டது. இளவெம்மையாகச் சூழ்ந்துகொள்வது.

அவன் விழித்துக்கொண்டபோது சிவதர் உடனிருந்தார். மஞ்சத்தில் தலை இரும்புக்குண்டு என அழுந்தியிருந்தது. மஞ்சம் முழுக்க அவன் வாயுமிழ்ந்த மது உலர்ந்து படிந்திருந்தது. கர்ணன் சொல்லில்லாமல் அவரை பார்த்தான். “அரசே, அரசி இன்று தன் அரண்மனை அறையிலிருந்து மறைந்துவிட்டார்” என்றார். கர்ணன் “ம்?” என்றான். அவர் அதை மீண்டும் சொன்னார். கர்ணன் எழுந்தமர்ந்து “எங்கே சென்றாள்? அரசருக்கு அறிவித்தீர்களா? தேடிப்பார்க்க எவர் சென்றனர்?” என்றான். சிவதர் “அரசே, அரசியை இனி நாம் பார்க்க முடியாதென எண்ணுகிறேன்” என்றார். கர்ணன் பெருமூச்சுவிட்டான். “ம்” என்றான்.

“காலையில் அரசியின் முதன்மைச்சேடி சபரி வந்து என்னிடம் அரசி மறைந்துவிட்டதை சொன்னாள். நான் அவளிடம் முழுமையாக உசாவினேன். சூக்ஷ்மை என்னும் நாகினி அரசியை வந்து சந்தித்ததை சொன்னாள். அரசி நேற்று உங்கள்

அறையிலிருந்து சென்றபோது அரசியின் அறையில் அவருக்காக சூக்ஷ்மை காத்திருந்திருக்கிறாள்” என்றார் சிவதர். கர்ணன் “ம்” என்றான். “அவ்வாறென்றால் அது நாகமாயை. அதற்குள் சென்றவர் மீள்வதில்லை. மண்ணுக்கு அடியிலுள்ளது அவர்களின் உலகம். அது நம் நனவின் அடியிருள். எப்போதேனும் அவர்களே அங்கிருந்து இங்கு வந்து நஞ்சுமிழ்ந்தோ மணியை கொடையளித்தோ மீள்வார்கள். நாம் அவர்களை தொடரவியலாது.” கர்ணன் எழுந்து நின்று கைகளை விரித்து உடலை நிமிர்த்திக்கொண்டான்.

“நாம் இனிமேல் இங்கிருப்பதில் பொருளில்லை, அரசே” என்றார் சிவதர். “இங்கிருக்கும்தோறும் கேலிப்பொருளாகிறோம். நாம் கிளம்புவதே முறை.” கர்ணன் வெறுஞ்சுவரை வெறித்தபடி சற்றுநேரம் நின்றான். பின்னர் “அவள் என்ன எண்ணியிருப்பாள்?” என்றான். “அதற்கென்ன?” என்று சிவதர் கேட்டார். “ஒன்றுமில்லை” என்றான். “அதை நம்மால் உணரவே முடியாது” என்றார் சிவதர். “சிவதரே, நான் பிழைசெய்துவிட்டேனா?” என்றான். சிவதர் மறுமொழி சொல்லவில்லை. “சொல்லுங்கள்” என்றான். “நமக்கிழைக்கப்பட்ட பிழைகளை நாம் பிறருக்கு இழைத்து ஆறுதல் கொள்கிறோம்” என்றார் சிவதர். கர்ணன் திரும்பி நோக்கிவிட்டு அறையிலிருந்து வெளியே சென்றான்.

மறுநாள் புலரியிலேயே அவர்கள் அஸ்தினபுரியிலிருந்து சம்பாபுரிக்கு கிளம்பினர். செல்லும் வழி முழுக்க கர்ணன் மதுவருந்திக்கொண்டே இருந்தான். தேரில் அவனுடன் இருந்த சிவதர் அவனை எவ்வகையிலும் கட்டுப்படுத்தவில்லை. படகில் கங்கையைக் கடந்து அங்கநாட்டின் எல்லைக்குள் நுழைந்தபோது கர்ணன் நிலையழிந்து பொருள்கூடா

ஒலிகளென பேசிக்கொண்டிருந்தான். அவர் மெல்ல துயில்கொண்டுவிட்டிருந்தார். அவன் அவரை உலுக்கி “எழுக! எழுக!” என்றான். அவர் எழுந்துகொண்டு “என்ன?” என்றார். “சிவதரே, நான் அந்தப் பெருநாகத்தை கண்டேன்” என்றான். “எதை?” என்றார். “மணிகர்ணனை… இளமைமுதலே என்னைத் தொடர்வதை” என்றான் கர்ணன்.

அவன் கண்கள் சிவந்திருந்தன. சிவதர் அவனை வெறுமனே நோக்கினார். “நம் தேர் ஒரு படகாக மாறி ஆற்றுப்பெருக்கில் சென்றுகொண்டிருப்பதாக உணர்ந்தேன். கன்னங்கரிய ஆறு. பின்னர் அந்த ஆறு ஒரு மாபெரும் பாம்பு என்று கண்டேன். விழித்துக்கொண்டேன்” என்றான் கர்ணன். “அந்த நாகம் எப்போதும் என்னுடன் உள்ளது. என்னை ஆற்றுப்படுத்துகிறது. சிவதரே, நான் எப்போதும் அதன் வழியில்தான் ஒழுகிக்கொண்டிருக்கிறேன்.” சிவதர் சற்றுநேரம் அவனை நோக்கிக்கொண்டிருந்துவிட்டு “நீங்கள் என்னை அழைக்கும்போது நானும் நாகத்தையே கனவு கண்டுகொண்டிருந்தேன்” என்றார். “நாம் போருக்குச் செல்வதாக. தேரில் நான் பின்னால் அமர்ந்திருக்கிறேன். நீங்கள் வில்லுடன் என் முன் நின்றிருக்கிறீர்கள். அந்த வில் ஒரு நாகம்!”

கர்ணன் “ஆம், அதுதான்… நம் ஆலயத்தில் அமர்ந்துள்ளது. அதை மறந்துவிட்டிருக்கிறேன்” என்றான். “தேர் விரைந்து செல்லட்டும்… உடனடியாக நான் அதை பார்த்தாகவேண்டும்… இப்போதே” என்று தேர்ப்பாகனை நோக்கி கூவினான். தேர் செல்லச் செல்ல அவன் களிமயக்கு அழிந்து நிலைமீண்டான். பாகனை நோக்கி “விரைக! விரைக!” என்று கூச்சலிட்டான். தேர் சம்பாபுரிக்குள் நுழைந்ததும் வழக்கம்போல குடிகளின் வாழ்த்துக்களைப் பெற தேர்த்தட்டின்மேல் எழாமல் “நேராக

விஜயத்தின் ஆலயத்திற்குச் செல்க!” என்றான். சிவதர் அவனிடம் எழுந்த அந்த விசையை நோக்கிக்கொண்டிருந்தார். அவன் மீண்டுவந்தது அவருக்கு உளநிறைவை அளித்தது.

ஆலயம் காலைப்பூசனைக்குப் பின் பூட்டப்பட்டிருந்தது. அவனுடைய தேர் நுழைந்தபோது முன்னரே புரவியில் வந்த வீரன் பூசகனை அழைத்து வந்துவிட்டிருந்தான். கர்ணன் தேரிலிருந்து இறங்கி ஆலயத்திற்குள் சென்று அரைமண்டபத்தில் நின்று கருவறைக்குள் நோக்கினான். முதற்கணம் அது பெருநாகம்போல் தோன்ற திகைத்தான். “விளக்கை ஏற்றுக!” என்றான். கருவறையின் இருளுக்குள் நெய்விளக்குகள் சுடர் ஏந்தின. வில்லின் வடிவம் துலங்கியெழுந்தது. கர்ணன் மூச்சுத்திணறலுடன் திரும்பி “நாகம்! மணிகர்ணன்!” என்றான். “இதை என்னால் கையில் எடுக்க முடியும் என்று தோன்றவில்லை, சிவதரே. இத்தனை பருமனுடன் இரும்பாலான வடிவம் கைக்கு உகந்தது அல்ல” என்றான். “நாகமென அது உடனிருக்கட்டும்” என்றார் சிவதர்.

அன்றிரவு அவன் ஒரு கனவு கண்டான். கோதையின் கரையில் அவன் ஆசிரியருக்கு காலிளைப்பாற்றிக்கொண்டிருந்தான். அவர் துயில்கொண்டதும் மெல்ல எழுந்து அவர் விழித்ததும் அருந்துவதற்காக நீர் அள்ளும்பொருட்டு ஆற்றை நோக்கி சென்றான். கொப்பரையில் நீருடன் திரும்பிநோக்கியபோது ஆசிரியர் துயின்றுகொண்டிருந்த இலைப்படுக்கையில் கரிய நாகம் ஒன்று கிடப்பதை கண்டான். காளிகர் அதை அங்கு கொண்டு வைத்துவிட்டார் போலும் என எண்ணி அதை ஆசிரியர் பார்ப்பதற்குள் எடுத்து அகற்றிவிடவேண்டுமென்று உளவிசை கொண்டு விரைந்து அணுகி வந்தான். கலத்தை அருகே வைத்துவிட்டு அதை குனிந்து எடுத்தான்.

அது நிழல்போல, முற்றிலும் இன்மை என்றாகும் அளவுக்கு எடையற்றிருந்தது. கையில் எடுத்து அதை அசைத்து மெய்யாகவே கையில் அது இருக்கிறதா என்று நோக்கினான். அதை நாணேற்ற வேண்டுமென்று எண்ணி நாணுக்காக சூழ நோக்கியபோது கையில் ஓர் அசைவை உணர்ந்து குனிந்து பார்த்தான். அது ஒரு கருநாகமாக மாறிவிட்டிருந்தது. நாகத்தின் செதில்தோலின் வழவழப்பை உணர்ந்தான். நாகத்தலை மேலே வளைந்தெழுந்திருந்தது. கீழ் நுனியில் வால் நெளிந்தது. அவன் திகைத்து கையை விட முயன்றபோது விரல்கள் அகலவில்லை. அதன் இமையா மணிகள் அவனை நோக்கியிருந்தன. சீறல் என குரல் எழுந்தது.

"என் பெயர் மணிகர்ணன். அறிக, எனது மண் வடிவம் இந்த வில்!" என்று அது கூறியது. "நீ பிறந்தபோது நான் உடனிருந்தேன். உன்னை தொடர்ந்து வந்தேன். நீ சென்ற இடமெங்கும் உன்னுடனிருந்தேன். உன் கனவுகளில் மெய்நிகர் நோக்குகளில் பலமுறை என்னை நீ அறிந்திருக்கிறாய்" என்றது. கர்ணன் "ஆம், அறிகிறேன்" என்றான். "என்னை நாணேற்றுக! நான் உன்னுடன் இருப்பேன்." கர்ணன் நாணுக்காக சுற்றும் பார்க்க கையிலிருந்த வில்லின் நிழல் தரையில் விழுந்துகிடந்தது. அது நெளிந்து தலை தூக்கியது. "அவள் என் துணைவி. மணிகர்ணிகை என்று அவளுக்குப் பெயர். அவளை என் நாணாக்குக! போர்நிகழ்கையில் உன் கையில் இருந்து நாங்கள் தழுவி கலவிகொள்வோம். எங்கள் சீறல்கள் அனைத்தும் அம்புகளென்று எழும்" என்று மணிகர்ணன் சொன்னான்.

கர்ணன் குனிந்து அந்த நிழல் நாகத்தை எடுக்கப்போனான். அது நெளிந்தோடியது. அவன் துரத்திச்சென்றபோது வெளியே

ஒழுகிச்சென்று அங்கு நின்ற ஒருவனின் கூடைக்குள் புகுந்துகொண்டது. அதனருகே நின்றிருந்த முதிய பீதவணிகன் சுருக்கங்கள் நிறைந்த கண்கள் மேலும் இடுங்க சிரித்து இடைவளைத்து வணங்கினான். “இதற்குள் உள்ளது என் வில்லின் நாண்” என்று கர்ணன் சொன்னான். பீதன் தலைவணங்கி அதை திறந்து காட்டினான். உள்ளே மென்மையான வெண்ணிற முடியாலான கயிறு இருந்தது. கர்ணன் திகைப்புடன் அதை கையால் வருடினான்.

கனவு கலைந்து எழுந்து அவன் உடல் நடுங்கினான். மஞ்சத்தறையின் கதவைத் திறந்து வெளியே வந்து “சிவதரே!” என்று கூவினான். சிவதர் அருகிருந்த அறையிலிருந்து எழுந்து வந்தார். “அந்த வில் எடையற்றது… என் கையில் அது மலர்மாலைபோல் இருக்கும். அதை நாணேற்றுவதெப்படி என நான் அறிவேன்… வருக!” சிவதர் “பொழுது விடியட்டும்” என்றார். “இல்லை, இதுவே பொழுது. இது அவன் எழுவதற்கான அறிவிப்பு. கிளம்புக, இப்போதே!” என்றான் கர்ணன். சிவதரின் தோளைப்பற்றி உலுக்கியபடி “சிவதரே, பல ஆண்டுகளுக்கு முன் பீதர்நாட்டு வணிகன் ஒருவன் இங்கே வந்தான். அவர்கள் நாட்டிலுள்ள பனிமுயல் ஒன்றின் முடியைப் பின்னிச் சமைத்த சரடு ஒன்றை காட்டினான். அதைக் கொண்டு யானைகளை கட்டி நிறுத்தமுடியும் என்று சொன்னான். நினைவிருக்கிறதா?” என்றான்.

“ஆம், விந்தையானவன். பட்டுவணிகன். ஆனால் பட்டுச்சரடுகளைவிட இருமடங்கு உறுதியானது அந்த முயல்முடிச் சரடு என்றான். அவனை உங்கள் அவைக்கு கொண்டுவந்தேன். பாண்டவர்களின் கானேகலின்போது நீங்கள் மதுவிலாடி வாழ்ந்த நாட்கள் அவை. அந்தச் சரடை நீங்கள்

பார்க்கக்கூட இல்லை... அவனுக்குப் பரிசில் அளித்து அனுப்பும்படி சொல்லிவிட்டீர்கள்." கர்ணன் "இல்லை, நான் பார்த்தேன். நான் தொட்டுப் பார்த்திருக்கிறேன். அவனை என் கனவில் மிகத் தெளிவாகவே கண்டேன். கனவில் அந்தச் சரடை தொட்டு அறிந்தேன்" என்றான். சிவதர் "விந்தைதான்" என்றார். "அந்தச் சரடுதான் விஜயத்தின் நாண்" என்றான். "அவனை எங்கிருந்தாவது கூட்டிவாருங்கள்... பீதர்களிடம் உசாவுங்கள். அந்த முயல்முடிச் சரடு உடனடியாகத் தேவை."

"அரசே, அன்று நான் அளித்த கொடையை அவன் ஏற்கவில்லை. ஆகவே நான் நூறுபொன்னுக்கு அச்சரடை வாங்கினேன். அதை அப்போதே நம் அரும்பொருள் கருவூலத்திற்கு அனுப்பினேன். அங்கே பீதர்நாட்டுப் பொருள்நிரையில் அது இருக்கும்" என்றார் சிவதர். "அதுதான்... சென்று பாருங்கள். அது ஒரு நாகம். அது அங்கே சுருண்டிருக்கும்" என்றான் கர்ணன். "இல்லை, நானே வருகிறேன். வருக!" என முன்னால் சென்றான். கருவூலநாயகத்தை அவர் மாளிகையிலிருந்து வரவழைத்து பூட்டுக்களைத் திறந்து உள்ளே சென்றனர். கர்ணன் "நான் இங்கே பலமுறை வந்துள்ளேன் என்று தோன்றுகிறது. அந்தப் பெட்டி இருக்குமிடம்கூட எனக்குத் தெரியும்" என்றான்.

கருவூலநாயகம் சொல்வதற்கு முன்னரே அந்த பீதர்நாட்டுப் பெட்டியை அவன் கண்டடைந்தான். "இதுதான்... " என்று கூவியபடி அதை எடுத்தான். அதை திறப்பதற்கு சற்று தயங்கினான். உள்ளே நாகம் இருக்கும் என அவன் அஞ்சுவதுபோலத் தோன்றியது. கைகள் சற்று நடுங்க அவன் அதை திறந்தான். உள்ளே வெண்ணிற நாகம்போல அந்தச் சரடு சுருண்டு அமைந்திருந்தது. மென்மயிரை சிறிய நூல்களாகத்

திரித்து அந்நூல்களைத் திரித்து திரிகளாக்கி அத்திரிகளைத் திரித்து சரடுகளாக்கி அச்சரடுகளைத் திரித்து முறுக்கி கயிறாக்கியிருந்தனர். திரிகளின் பின்னல் நாகத்தின் உடலின் செதில்பரப்பு போலவே தோன்றியது.

கர்ணன் அதை கையில் எடுத்து நீட்டினான். இரண்டு மாறு நீளமிருந்தது அது. யானைக்கொம்பில் நுணுக்கமாகச் செதுக்கியது போலிருப்பதாக சிவதர் எண்ணிக்கொண்டார். அதை வாங்கி மெல்ல கைகளால் உருட்டிப் பார்த்தார். கருவூலநாயகம் அதை கையில் வாங்கி "வெறும் மென்மயிரால் ஆனது அல்ல. இளஞ்சூட்டில் மயிரை குழையச்செய்து ஏதோ பசைசேர்த்து உருக்கியதுபோலாக்கி இதை முறுக்கியிருக்கிறார்கள். உலோகம்போல் மாறிவிட்டிருக்கிறது" என்றார். "ஆனால் மென்மயிரானதனால் எடையற்றதாகவும் உள்ளது." கர்ணன் "இதுதான்... எக்கணமும் இது உயிர்கொண்டுவிடும்" என்றான். பின்னர் சிரித்தபடி "கரியவனின் வெண்ணிறத் தோழி!" என்றான். "வருக!" என்றபடி வெளியே விரைந்தான்.

பின்னிரவில் விஜயம் இருந்த ஆலயத்திற்கு சென்றான். அவன் செல்லும் செய்தி அறிவிக்கப்பட்டு பூசகர் ஓடிவந்து கதவைத் திறந்து விளக்குகளை ஏற்றினார். கர்ணன் அருகிருந்த சிறுசுனையில் நீராடி ஈர ஆடையுடன் கருவறைக்குள் நுழைந்தான். பூசகர் அருகே வந்து "குருதியிட்டு தொட்டெடுப்பதே முறை" என்றார். கர்ணன் "எக்குருதி?" என்றான். "குருதிகளில் தூயது தற்குருதி" என்றார் பூசகர். கர்ணன் தன் கட்டைவிரலைக் கிழித்து மூன்றுசொட்டுக் குருதியை அதன்மேல் வீழ்த்திவிட்டு அதை கையில்

எடுத்தான். மூங்கில் போலவே எடையற்றிருந்தது. அவன் அதை வெளியே கொண்டுவந்தான்.

“எடையற்றிருக்கிறது” என்று அவன் சொன்னான். “விந்தைதான். உலோகம் எப்படி இத்தனை எடையற்றதாக இருக்கவியலும்?” சிவதர் “எதுவும் நுரையாகும்போது எடையிழக்கும்” என்றார். அப்போதுதான் அதன் நுட்பம் அவனுக்கு புரிந்தது. வியப்புடன் அந்த வில்லை புரட்டிப் புரட்டி பார்த்தான். அதை தன்முன் நிறுத்தி நுனிபற்றி வளைத்தான். எதிர்விசை களிற்றுக்கு நிகரெனத் தோன்றியது. அத்தனை எடையற்ற ஒன்றில் அவ்வளவு விசை எப்படி கூடுகிறது என அவன் உள்ளம் வியந்தது. “மலையிறங்கும் காட்டாற்றின் ஆற்றல்கொண்டுள்ளது, சிவதரே” என்றான். “பெருங்களிறை கட்டிநிறுத்துவது அந்தச் சரடு என்றான் பீதன்” என்றார் சிவதர்.

அதை தன்னருகே தோழன் என நிறுத்தினான். கைநீட்டி அதன் மேல்நுனி பற்றி இழுத்தான். இளம்புரவி என அது துள்ளித்திமிற ஒரே வீச்சில் வளைத்து மென்மயிர்ச் சரடை எடுத்து அதில் பூட்டினான். முகம்மலர அதன் நாணைச் சுண்டி இழுமோசை எழுப்பினான். சிவதர் மெய்ப்புகொண்டு கைகூப்பினார். கர்ணன் புது யாழ் பெற்ற பாணன்போல அந்த நாணை மீட்டிக்கொண்டே இருந்தான். உளம்விம்மச் செய்யும் அந்த இசை அவனை பிறிதொருவனாக்குவதை சிவதர் பார்த்துக்கொண்டே நின்றார்.

# கார்கடல் - 12

இருண்ட ஆழங்களில் நிழலுருவாக நெளியும் பல்லாயிரம்கோடி நாகங்களை நான் காண்கிறேன். மண்ணுக்கு மேலும் விண்ணின் அடுக்குகளிலும் செழித்து கிளைவிட்டு நிறைந்துள்ள அனைத்துக்கும் அவையே வேர்கள். அவற்றின் நெளிவுகளே பின்னி மாளிகைகளாகின்றன. சாலைகளும் தெருக்களும் கோட்டைகளும் ஆகின்றன. கொடிகளாகத் துவள்கின்றன. தேர்களும் புரவிகளும் ஊர்பவர்களும் ஆகின்றன. அந்நிழல் உலகின் மையமென அமைந்த வாசுகியின் அரண்மனையின் அவைக்கூடத்தில் அமர்ந்திருக்கிறேன்.

அந்த அவையில் தட்சன், கார்க்கோடகன், சங்கன், குளிகன், பத்மன், மகாபத்மன் என்னும் மாநாகங்கள் அமர்ந்திருக்கின்றனர். திருதராஷ்டிரன், கௌரவ்யன், ஐராவதன் என்னும் நாகப்பிரஜாபதிகளை அங்கே கண்டேன். ஆரியகன், குணவான், சம்பிரீதன், சக்தன், காளியன், தனஞ்சயன், நகுஷன், அஸ்வதரன், வாக்யகுண்டன், அபூர்ணன், வாமனன், எலபத்ரன், குக்குரன், குக்குணன், நந்தகன், சங்கன், தடிமுகன், ஆப்தகன், மூஷிகாதன், திலீபன், புஷ்பன், புண்டாரகன், கரவீரன், குளிகன், சங்குபாலன், கேசன் போன்ற மூத்த நாகர்கள் வீற்றிருந்தனர்.

நாகப்பிரஜாபதிகளின் குலத்து மைந்தர்களாகிய பலநூறு மாநாகர்களை அங்கே கண்டேன். வாசுகியின் மைந்தர்களான கோடிசன், மானசன், பூர்ணன், சலன், பாலன், ஹலீமகன், பிச்சலன், குணபன், சக்ரன், காலவேகன், பிரகாலனன், ஹிரண்யபாகு, சரன், கக்ஷகன், காலதந்தகன் ஆகியோர் முதல்நிரையில் அமர்ந்திருந்தார்கள். தட்சனின் மைந்தர்களான புச்சாண்டகன், மண்டலகன், பிண்டசேக்தா, ரபேணகன், உச்சோசிகன், சரபன்,

பங்கன், பில்வதேஜஸ், விரோஹணன், சிலி, சலகரன், மூகன், சுகுமாரன், பிரவேபனன், முத்கரன், சிசுரோமன், சுரோமன், மஹாஹனு ஆகியோரை காண்கிறேன்.

ஐராவதனின் மைந்தர்களான பாராவதன், பாரிஜாதன், பாண்டரன், ஹரிணன், கிருசன், விஹங்கன், சரபன், மேதன், பிரமோதன், சம்ஹதாபனன். கௌரவ்ய குலத்தைச் சேர்ந்த ஏரகன், குண்டலன், வேணி, வேணிஸ்கந்தன், குமாரகன், பாகுகன், சிருங்கபேரன், துர்த்தகன், பிராதரன், ராதகன் ஆகியோரையும் திருதராஷ்டிர குலத்தைச் சேர்ந்த சங்குகர்ணன், பிடரகன், குடாரமுகன், சுகணன், சேசகன், பூர்ணாங்கதன், பூர்ணமுகன், பிரஹாசன், சகுனி, தரி, அமாஹடன், காமடகன், சுஷேணன், அவ்யயன், பைரவன், முண்டவேதாங்கன், பிசங்கன், உத்ரபாரகன், ரிஷபன், வேகவத், பிண்டாரகன், ரக்தாங்கன், சர்வசாரங்கன், சம்ருத்தன், படவாசகன், வராஹகன், வீரணகன், சுசித்ரன், சித்ரவேதிகன், பராசரன், தருணகன், மணிஸ்கந்தன், ஆருணி ஆகியோரையும் காண்கிறேன்.

புயல்பட்ட கரிய கடலென கொந்தளித்துக் கொண்டிருந்தது அந்த அவை. அங்கே ஆரியகன் எழுந்து உரத்த குரலில் சொன்னார் "என் மைந்தன் பீமசேனன். அவனுக்கு எதிராக எழுகின்ற எவரும் எனக்கு எதிரானவர்களே. அரசே, என் மைந்தன் இளங்குழவியாக கங்கையின் நீர்ச்சுரங்கம் வழியாக இங்கே வந்ததை நினைவுறுக! அவனுக்கு நாம் அளித்த நஞ்சினால் அவன் அளவிறந்த தோள்வலி கொண்டவனாக எழுந்தான். புவியில் எவராலும் வெல்லப்படாதவனாக வாழ்கிறான். என் குடியினன் இன்று போர்க்களத்தில் நின்றிருக்கையில் அவனை கொல்வேன் என

வஞ்சமுரைத்துள்ள அங்கநாட்டவனின் வில் என இங்குளோன் ஒருவன் எழுந்துள்ளான்…”

ஆரியகனை இடைமறித்து அவையில் இருந்த பல்லாயிரம் நாகங்கள் குரலெழுப்பின. இடித்தொடர் என எழுந்த அந்த ஓசையை கையால் நிறுத்தி வாசுகி சொன்னார் “உங்களில் ஒருவர் எழுந்து உரையுங்கள்…” தட்சனின் மைந்தனாகிய புச்சாண்டகன் எழுந்து “அரசே, இங்கே நாம் பேருருவில் வாழ்ந்தாலும் நம்மில் ஒரு துளி மண்ணுக்குமேல் மானுடர்களாகவும் வெளிப்பாடு கொண்டுள்ளது. இங்கு எஞ்சுவதை அங்கு நடிக்கிறோம். அங்கு எஞ்சுவதனைத்தும் இங்கு பெருகிவளர்கிறது. அங்குள்ள பலியால் இங்கு உயிர்கொள்கிறோம். இங்கிருந்து எழும் வாழ்த்தால் அங்கே ஆற்றல் பெறுகிறோம். நாகமூதாதையர் தெய்வங்களாகி படியும் அடித்தளம் இது. நாம் நாகர்களின் தெய்வங்கள். நாகர்கள் நம் குடிகள். நாம் ஆழியும் அலைகளும். அவர்கள் துளிகளும் துமிகளும்” என்றான்.

“அரசே, பாண்டவர்கள் நம்மை வணங்கி நம் வடிவென மண்ணில் வாழ்பவர்களாகிய நாகர்களின் எதிரிகள். காண்டவப் பெருங்காட்டை அழித்தவர்கள். பாண்டவர்களுக்கு எதிராக நாகர்குடியினர் கொண்டுள்ள வஞ்சம் நம்முடையது. இரண்டு தலைமுறைக்காலமாக அவர்கள் அங்கே பலிக்கொடை அளித்து நம்மை வணங்கியிருக்கின்றனர். அவர்களின் கண்ணீர் நம்மில் நஞ்செனப் பெருகியிருக்கிறது. இதுவே தருணம், நாம் அவர்களை முற்றழித்தாக வேண்டும்!” என்று புச்சாண்டகன் சொன்னான்.

அவையிலிருந்த தட்சன் எழுந்து “நன்று சொன்னாய், மைந்தா” என்றார். நாகங்கள் தலைகள் பெருகிய பெரிய கரிய

படங்களைத் தூக்கி நாச்சுடர் பறக்க “ஆம்! ஆம்!” என்று கூச்சலிட்டன. “வஞ்சம் தீர்த்தாகவேண்டும்! பழிகொள்வோம்!” என்று வால்கள் சுழல ஆர்ப்பரித்தன. ஆரியகர் “மண்ணிலுள்ள அத்தனை வஞ்சங்களையும் இவ்வாழத்திற்கு இறக்கிக் கொண்டுவர வேண்டியதில்லை. அவைநாகர்களே, மண்ணுக்கும் நமக்கும் நடுவே உள்ள உலகங்கள் அங்கிருப்பவை அனைத்தும் இங்கு வந்தடையாமல் தடுக்கும் சல்லடைகள் என்று உணர்க! நாகர்கள் அங்கே மானுடரிடம் போரிடுகிறார்கள். வெல்வதும் வீழ்வதும் அவர்களின் ஊழ். ஊழுக்கு உட்புகுந்து விளையாடும் தெய்வங்களும் தோற்பார்கள் என்பதே தெய்வச்சொல்” என்றார்.

நாகங்கள் “வஞ்சம்! வஞ்சம்!” என்று கூச்சலிட்டன. வாசுகி “எவருடைய வஞ்சம்? அதை சொல்லுங்கள், எவருடைய வஞ்சம்?” என்றார். “அறத்தின் வஞ்சம்!” என்றபடி ஒரு சின்னஞ்சிறு நாகம் எழுந்து முன்வந்தது. அதன் உடலை நான் திகைப்புடன் கண்டேன். பாதிவெந்து உரிந்த செங்கிழங்கு போலிருந்தது. அதன் படம் வலியுடன் துவண்டு எழுந்து காளான்போல சுருண்டு குதிரைக்குழவியின் முகம்கொண்டது. “என் பெயர் அஸ்வசேனன். அங்கே மண்ணுலகில் நான் தட்சகுலத்து இளையோனாக எஞ்சியிருக்கிறேன். என்னை கமுகுப்பாளைப் படுக்கையில் கற்றாழைச்சாற்றில் இட்டு வைத்திருக்கிறார்கள். வளராத உடலுடன் புழுவென அங்கே நெளிந்துகொண்டிருக்கிறேன். என் உடல் சூம்பிச்சிறுக்கும்தோறும் ஒவ்வொரு கணமும் என என்னுள் வஞ்சம் எழுகிறது. அந்த வஞ்சத்தை நான் என்னுள் செறியவைக்கிறேன். இருண்ட ஆழங்களுக்குள் அனுப்பிக்கொண்டே இருக்கிறேன்.”

அது பெருகத் தொடங்கியது. நிழல் மேலெழுவதுபோல. ஆழிப்பேரலைபோல. மலையடுக்குகள் என. மழைக்கார் என. இருண்ட விசும்பென. அதன் விழிகள் இரு எரிவிண்மீன்கள். இடிமுழக்கென விண்ணை நிறைத்தது அதன் குரல். “போர் மண்ணின் மாறா இயல்பு. போரினூடாகவே அங்கே அனைத்தையும் நிகர்செய்கிறான் படைப்பிறைவன். போரினூடாகவே அனைத்தையும் நிகழ்த்திக்கொள்கிறது ஊழ். போரினூடாகவே அறங்களை நிலைநிறுத்துகின்றன தெய்வங்கள். போரினூடாகவே புரண்டு முன்செல்கிறது காலம். போர் தெய்வங்களுக்கு உகந்த வேள்வி.” ஒவ்வொருவரையும் நடுக்குறச் செய்தது அதன் பேரொலி.

“ஆனால் எதையும் முற்றழிக்கலாகாது என்பது நெறிகளில் முதல்நெறி. ஒன்றை முற்றழிக்க நினைப்பவன் தெய்வங்களுக்கு அறைகூவல் விடுப்பவன். எதுவும் முற்றழிவதில்லை. துளியினும் துளி ஒன்று எஞ்சும். அரசே, அணுவைக்கூட முற்றழிக்க இயலாதென்று அவனுக்கு கற்பிப்பதே அத்துளியின் அறமென்று ஆகும். அதன்பொருட்டே எழுந்துள்ளோம். அங்கே காண்டீபம் ஏந்தி நின்றிருக்கும் அறமிலியின் முன் பெருந்திரளென எழுவதே இனி இங்குளோர் செய்யக்கூடுவது.” அவன் திரும்பி நாகர்களை நோக்கி அறைகூவினான். “எழுக! நாகர்களே பெருகியெழுக! வஞ்சம் கொண்டு வீங்குக! நஞ்சுகொண்டு கூர்கொள்க! விழிமணிகளில் அனல் சூடுக!”

வாசுகி “நாகங்களே, அங்கே நிகழ்வது நாம் மட்டும் இயற்றி முடிக்கும் போர் அல்ல. அது விண்ணகத்தெய்வங்கள் அனைத்தும் வந்திறங்கி ஆடித்திமிர்க்கும் பேரரங்கு. அந்த ஆடுகளத்தின் காய்களாகச் சென்று நிற்பது அறிவின்மை. நமது

ஆடல் அல்ல அது என்று உணர்க!” என்றார். ஆரியகர் “ஆம், அதையே நானும் சொல்கிறேன். என் மைந்தன் அங்கு நின்றிருப்பதுகூட தெய்வங்களின் எளிய நாற்களக்கரு என்றுதான். அவன் எதையும் ஈட்டப்போவதில்லை. இழந்த நெஞ்சும் ஒழிந்த கைகளுமாக அவன் விண்ணேகுவான். அவனுக்கு எதிராக களம்நிற்பவர் ஆழிவெண்சங்குடன் அங்கு எழுந்தருளியிருப்பவனையே அறைகூவுகின்றனர்” என்றார்.

“இல்லை, இப்போர் முன்னரே தொடங்கிவிட்டது” என்றபடி அப்பாலிருந்து இன்னொரு பெருநாகம் எழுந்தது. மலையடுக்குகள் என அதன் படங்கள் எழுந்துகொண்டே இருந்தன. எரிமலை தழல் என நாவுகள் பறந்தன. வான்முழக்கு என குரல் ஒலித்தது. அது “என் பெயர் மணிகர்ணன்” என்றது. “என்னை மண்ணுலகில் நாகபாசன் என்பார்கள். ஆணவம் கொண்டு குடியிலிருந்து விலகிச்சென்ற காளநாகினி என்னும் நாகர்குலப் பெண்ணில் அசுரன் ஒருவன் விதைத்த விதை நாகாசுரன் என்னும் கொடியோனாக எழுந்தது. விண்ணகத்தை வென்று இந்திரனென்றாவதற்காக அவன் ஆற்றிய பெருவேள்வியில் நாளொன்றுக்கு பன்னிரண்டாயிரம் நாகங்களை அவியாக்கினான். நாகங்களின் விழிநீருக்கு இரங்கிய பிரம்மன் அவனை அழிக்கும்பொருட்டு இயற்றிய வேள்வியில் நான் எழுந்தேன்.”

“பிரம்மனின் வில்லாகிய மகாபத்மத்திலிருந்து சீறிப்பாய்ந்தேன். நாகாசுரன் வாழ்ந்த நாகவதியை அழித்தேன். அங்கிருந்து நாகருலகாகிய சால்மலிக்குச் சென்று அங்கே அவர்களின் குடித்தெய்வமாக பலியும் கொடையும் பெற்று கோயில்கொண்டு அமைந்தேன். நூறு யுகங்கள் அவர்களின் கொடைபெற்றதனால் தெய்வமானேன். ஆற்றாது அழுத விழிநீர்

கண்டு நீ எழுக. அதுவரை துயில்க என்று உரைத்து என்னை நாகருலகுக்கு அனுப்பினான் முப்புரம் எரித்த எந்தை. இங்கே மணிகர்ணி என்ற பெயர் கொண்டு ஒரு மலைத்தொடராக அமைந்தேன்."

"நான் எழும் தருணத்திற்காக அங்கே அரசநாகவடிவெனக் காத்திருந்தது என் தவத்துள் எஞ்சிய ஒரு சொல். என்னை ஏந்துபவனை பிறந்த கணம்முதல் ஒழியாது பின்தொடர்ந்தது. நெடுநாட்களுக்குப் பின் என்னைத் தொட்டெழுப்பியது ஒரு சொல். விஸ்வகர்மன் ஒருவனின் தவம் முதிர்ந்து கூர்கொண்டு ஏழு ஆழங்களைக் கடந்து இங்கு வந்துசேர்ந்தது. நான் விழித்தெழுந்தேன். எழுக, எழுக என அது மன்றாடியது. உங்கள் பருவடிவொன்று மண்ணிலெழுக என்றது. அவனுக்கு அருளி அங்கே ஒரு வில்லென எழுந்தேன். அங்கநாட்டில் காவல்தெய்வமெனக் கோயில்கொண்டேன். ஆற்றாது எழும் விழிநீர் ஒன்றுக்கு நிகர்செய்யும்பொருட்டு அங்கே எழுவது என் ஊழ். இதோ இவனுக்காக அங்கே போரில் திகழ்வேன். அங்கனின் கைவில் நான்."

"ஆம்! ஆம்! நாங்கள் அவன் வில்லில் அம்புகள். அவன் களத்தில் எழுக எங்கள் நஞ்சு! அவன் அம்புகளில் கூர்கொள்க எங்கள் பற்கள்!" என்று நாகங்கள் முழக்கமிட்டன. "இதோ நாங்கள் கிளம்புகிறோம்... எவர் தடுத்தாலும் ஒடுங்கமாட்டோம்." ஆரியகர் சீறலோசை எழுப்பி "எனில் நானும் எழுகிறேன். என் மைந்தர்பொருட்டு அங்கே நானும் சென்று களம்நிற்கிறேன். நாம் போர்முனையில் சந்திப்போம்" என்றார். "ஆம், அங்கு சந்திப்போம்! அங்கு பொருதுவோம்!" என்று நாகங்கள் கூச்சலிட்டன. வாசுகி "பொறுங்கள். ஒருகணம் பொறுங்கள்"

என்றார். “என் சொல்லை கேளுங்கள்” என்று மீண்டும் மீண்டும் கூவினார்.

தட்சனும் கார்க்கோடகனும் எழுந்து “அமைதி கொள்க! அமைதி! அமைதி!” என்றார்கள். அவை மெல்ல அடங்கியது. வாசுகி “என் சொல்லை இறுதியாக கூறிமுடிக்கிறேன். இந்தப் போர் நாம் அறியா அறங்களுக்கிடையே நிகழ்வது. என்றும் எந்நிலையிலும் பேரறமே வெல்லும் என்பது புடவிநெறி. இதில் எங்குள்ளது தெய்வங்கள் பேணும் அந்த அறம் என்று நம் குடிகளில் முதல்வராகிய அனந்தனை உசாவுவோம்” என்றார். நாகங்கள் “எவரிடமும் கேட்கவேண்டியதில்லை. எங்கள் வஞ்சமே வழிகாட்டுக!” என்று கூவின. “எனக்கு என் மூத்தவரின் வழிகாட்டுதல் தேவை” என்றார் வாசுகி. தன் முன் இருந்த சிறிய மேடையில் அருமணி ஒன்றை வைத்தார். அது ஒளிகொள்ளத் தொடங்கியது. “விண்வாழும் முடிவிலானே, சொல்க! வெல்லும் அறம் எது? சொல்க! நாங்கள் உடனமைய வேண்டிய நிலைகொள்ளும் அறம் எது?”

அருமணியிலிருந்து மெல்லிய ஒளிமின் எழுந்தமைந்தது. அங்கிருந்த அனைவரும் அக்கூற்றை தங்கள் அகத்தே ஒலிக்கக் கேட்டனர். “பெருநெறியை உசாவி அறியலாம், முற்றளித்தும் அறியலாம். உசாவுவோருக்கு தங்கள் ஆணவத்தின் எதிர்விசை என அமைவது அது என்று புரியும். ஆணவம் அழித்து முற்றளித்தோர் இயல்பாக அதை அறியலாம். ஏனென்றால் அனைவரும் அதில் ஒழுகிக்கொண்டிருப்பதை உணர்வார்கள்.” அவ்வொலி அமைவதற்குள்ளாகவே நாகங்கள் கூச்சலிடத் தொடங்கின. “வஞ்சம் கொள்வோம்! பழி தீர்ப்போம்!”

வாசுகி அவர்களை கையமர்த்தி “இங்குள அனைவரிலும் பேருடலன் நான். உங்கள் அனைவரின் நஞ்சையும் ஒருங்குசேர்த்தாலும் என் நஞ்சின் ஓர் அலைமட்டுமே அது. ஆனால் ஆலகாலம் உண்டவன் கால் விரலின் மணியாழியென்று என்னை உணர்ந்தவன். ஆகவே மெய்யறிந்தவன். என் வழி பிறிது. நீங்கள் உங்கள் வழி தேர்க! நான் இமையா விழி சூடி தேரோட்டியாக களம் நிற்பவனுக்கு உடனமைவேன்” என்றார். நாகங்கள் கொந்தளிப்புடன் எழுந்து வந்து அவரை சூழ்ந்துகொண்டன. வால்களால் நிலத்தை அறைந்தும் படங்களால் ஒன்றுடன் ஒன்று அடித்துக்கொண்டும் கூச்சலிட்டன. அவர்களின் ஓசைகளாலும் நெளிவுகளாலும் ஏழாமுலகம் கொந்தளித்தது.

கர்ணன் விஜயத்தை நிலைநிறுத்தி நாண்பூட்டி இழுத்தான். பெரும்பறைமேல் கோல் உரசிச் சென்றதுபோல் விம்மலோசை எழுந்தது. சிவதர் மெய்ப்பு கொண்டார். வேள்வியவையிலிருந்து திரும்பிவந்த பின்பும்கூட எப்படியும் அஸ்தினபுரியிலிருந்து அழைப்பு வரும் என கர்ணன் எண்ணிக்கொண்டிருந்தை அவர் அறிந்திருந்தார். வெறிகொண்டு வில்பயின்றுகொண்டிருந்ததன் வழியாக அரசி நாகினியுடன் சென்றமையால் அங்கநாட்டில் எழுந்த அலரை அவன் கடந்துசென்றான். அவனை உடனமையும் தோழன் என காத்தது அந்த வில்.

அவன் எய்த அம்புகள் முதலில் கைநடுக்கத்தாலும் விழிவிலக்கத்தாலும் இலக்கு பிழைத்தன. முதல்நாள் அவன் அம்புதொடுப்பதைக் கண்ட சிவதர் அவன் மீண்டும் வில்லவனாக எழமுடியுமா என்றே ஐயுற்றார். ஆனால் இரு

நாட்களுக்குள்ளாகவே அவை முன்புபோல பிழையொழிந்தவை ஆயின. எய்பலகையில் அம்பை நட்டு அந்த அம்புமுனையை அம்புமுனையால் அடிக்கும் அவனுடைய கூர்மையை நான்கு நாளிலேயே அவர் கண்டார். வில் அவனை அனைத்திலுமிருந்து அழைத்துச்சென்றது. அவன் சொல்லடங்கினான், விழிகொடுத்து பிறரை நோக்காதவன் ஆனான். அலைபுரளும் ஏரிக்குள் அசையாமல் நின்றிருக்கும் பாறையெனத் தோன்றினான்.

அரசி மறைந்த செய்தி ஷத்ரியர்கள் நடுவே சினத்தையும் பின்பு எள்ளலையும் உருவாக்கியது. கலிங்கத்திலிருந்து மீண்டும் மீண்டும் சிற்றமைச்சர்கள் தூது வந்து அரசியைப் பற்றி உசாவினார்கள். அரசியை அங்கநாட்டார் கொன்றுவிட்டனர் என்று கலிங்கத்தில் செய்தி பரவியது. கலிங்கப்படை கிளம்பி வருகிறது என ஒரு செய்தி வந்தது. “கலிங்கமா? நம் மீதா? இங்கிருப்பவர் எவர் என அறிந்திருக்கிறார்களா?” என்றனர் சூதர். “இங்கிருந்தவர் பெருவில்லவர். இன்றிருப்பவர் கள்வீணர்” என்றனர் ஷத்ரியர். “கதிரவனை முகில் மூடலாம். நாள் விடிவது தவறுமா என்ன?” என்றனர் புலவர். அஸ்தினபுரியில் போர்சூழல் வலுக்குந்தோறும் அந்தச் சொற்கள் அனைத்தும் அதில் மூழ்கி மறைந்தன.

அஸ்தினபுரியின் படைகள் போருக்கெழுந்துவிட்டன என்ற செய்தி வந்த அன்றும் கர்ணன் விஜயத்தை கையிலேந்தி பயின்றுகொண்டிருந்தான். அவனிடம் சிவதர் அச்செய்தியை சொன்னபோது திரும்பி நோக்காமல் “ம்” என்றான். சற்றுநேரம் கழித்து விஜயத்தை அங்கேயே வைத்துவிட்டு தன் அறைக்கு மீண்டான். அவன் மீண்டும் மதுவிலாழ்ந்துவிடக்கூடும் என சிவதர் அஞ்சினார். ஆனால் அவன் கலைக்கவே முடியாத

அமைதியில் மூழ்கினான். எச்செய்திக்கும் விழிதூக்காமல் மீசையை சுட்டுவிரலால் சுழற்றியபடி ஒற்றைச்சொல்லில் அல்லது ஒலியில் மறுமொழி சொன்னான்.

சிவதர் அந்த வில்லை மீண்டும் கொண்டுசென்று கோயிலில் வைக்க ஆணையிட்டார். அவன் அதன் பின்னர் வில்தொட்டு பயிற்சி எடுக்கவில்லை. அரண்மனையில் தன் அறையிலிருந்து வெளிவரவுமில்லை. படைகள் அங்கநாட்டிலிருந்து கிளம்பியபோது சிவதர் விஜயத்தை உடன் எடுத்துவரச் சொன்னார். அதை அரண்மனையின் படைக்கலப்புரையில் பூசெய்கைக்கு அமைத்தார். ஒவ்வொருநாளும் அவர் மட்டும் சென்று அதை வணங்கி மீண்டார். அதை நோக்கும்போதெல்லாம் ஓர் உளஅசைவை அவர் உணர்ந்தார். சுடரசைய நிழலாடும்போது நாகமென அது நெளிந்தெழுவதுபோல் விழிமயக்கடைந்து மெய்ப்புகொண்டார்.

இடைநாழிக்கு அப்பால் தூணருகே நின்றிருந்த படைத்தூதன் தலைவணங்கி அசைவால் அவருக்கு செய்தியறிவித்தான். சிவதர் முன்னால் சென்று அவனிடம் “சொல்” என்றார். “அரசரைப் பார்க்க ஒரு நாகன் வந்துள்ளான்” என்றான் தூதன். “நாகனா? அறிந்தவனா?” என்றார். “அவனை அரசர் அறிவார் என்றான்.” சிவதர் “அவன் எப்படி உள்ளே நுழைந்தான்?” என்றார். “அவர்களின் பாதைகள் நாமறியாதவை, அணுக்கரே. அவன் இருளில் இருந்து நம் மாளிகை முகப்பில் தோன்றினான். அவனை நான் முதலில் பார்த்தேன். எவரிடமும் உரைக்கவில்லை.” சிவதர் சில கணங்கள் எண்ணிய பின் “வரச்சொல்” என்றார். பின்னர் “எவரும் அறியவேண்டியதில்லை” என்றார்.

கர்ணன் விஜயத்தை தன் தோளில் தொங்கவிட்டுக்கொண்டு “செல்வோம்” என்றான். சிவதர் அவனுடன் நடந்தார். அவர்கள் இடைநாழியிலிருந்து கூடத்தை அடைந்தபோது வெளிவாயிலினூடாக அந்த நாகன் நிழலசைவென ஓசையில்லாமல் உள்ளே வந்தான். நாகர்களின் குறிய உடல் கொண்டவன் அல்ல. கரிய நிமிர்ந்த உடலும் விரிந்த தோள்களும் நீண்ட கைகளும் செறிந்த பெரிய பல்நிரையும் கொண்டிருந்தான். அவன் தோளில் ஒரு மூங்கில்கூடை இருந்தது. சிவதர் எச்சரிக்கையாக இருக்கும்படி நாகனைத் தொடர்ந்து வந்த படைத்தூதனிடம் விழிகாட்டினார். அவன் தன் உடைவாளில் கை வைத்தான். கர்ணன் அவனைக் கண்டதும் நின்று “தாங்களா?” என்றான். நாகன் “ஆம், இத்தருணத்தில்தான் உங்களைப் பார்க்கவேண்டும் எனத் தோன்றியது” என்றான்.

கர்ணன் “நான் கிளம்பிக்கொண்டிருக்கிறேன்” என்றான். நாகன் தன் கூடையை நிலத்தில் வைத்தான். அவன் அதை திறக்கையில் உள்ளிருந்து பெருநாகம் ஒன்று எழவிருக்கிறது என சிவதரின் உள்ளமும் விழிகளும் எதிர்பார்த்தமையால் அங்கிருந்த பிறிதொன்று என்னவென்று புரிந்துகொள்ள முடியவில்லை. அதன் கீழ்கூடை பெரிய நீள்வட்ட வடிவக் கொப்பரையால் ஆனது. அதற்குள் செவ்வூன் நிறைந்திருப்பதுபோலத் தோன்றியது. நெடுக வெட்டிய கருப்பைபோல.

கர்ணன் மெல்லிய நடுக்கு கொள்வதை அவர் கண்டார். அவன் இரண்டு அடி முன்னெடுத்து வைத்து குனிந்து நோக்கினான். தூண்களில் எரிந்த பந்தங்களின் அரைவெளிச்சத்தில் அந்தக் கூடைக்குள் இருந்த மென்மெழுகாலான குழியில் கருக்குழவிபோல் ஓர் உடல் இருப்பதை சிவதர் கண்டார்.

கைகளைக் குவித்து வணங்குவதுபோல் நெஞ்சோடணைத்து மெல்லிய கால்களை வளைத்து வயிற்றுடன் சுருட்டிக்கொண்டு பெரிய தலையில் திறந்த விழிகளுடன் அது கனிக்குள் விதை எனத் தெரிந்தது.

சிவதர் தன் நெஞ்சத்துடிப்பை காதில் கேட்டார். கர்ணன் முழந்தாளிட்டு அமர்ந்து அந்தக் குழந்தையை நோக்கினான். அவன் தலை அதிர்ந்துகொண்டிருந்தது. “இளந்தட்சன், அன்றுகண்ட அவ்வண்ணமே இருக்கிறான்” என்றான். “அவன் வளர்வதில்லை. உண்மையில் அவன் தசைகள் நாளும் உருகி வற்றிக்கொண்டிருந்தன” என்றான் நாகன். அக்குழவியின் விழிகள் மட்டும் குழவிகளுக்குரியவையாக இருக்கவில்லை. மானுட விழிகளில் அத்தனை வஞ்சமும் சினமும் திரளமுடியுமா என சிவதர் வியந்தார். அவை கர்ணனை ஊன்றி நோக்கிக்கொண்டிருந்தன. இமைப்பற்ற நோக்கு. நாகவிழிகள்.

கர்ணன் அக்குழவியின் சிறிய கைகளை மெல்ல தொட்டான். மேல்தோல் வெந்து உரிந்ததுபோல் சிவந்த கதுப்பாலான கையில் விரல்கள் குருத்து போலிருந்தன. நகங்கள் வளர்ந்து சுருண்டிருந்தன. நாகன் கர்ணனை கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். சூழ்ந்திருந்த தூண்களும் சுவர்களும் மெல்லிய நடுக்கத்துடன் இருப்பதாக சிவதர் உணர்ந்தார். ஒருகணம் மிக மெல்ல நீள கர்ணன் திடுக்கிட்டு நாகனை நோக்கி “என்ன? என்ன இது?” என்றான். “அவன் இன்று சற்றுமுன் இறந்தான்” என்று நாகன் சொன்னான். “நாகரே!” என்றபடி கர்ணன் எழுந்தான்.

சிவதர் உடல் நடுக்குகொண்டு கைகள் அதிர ஆடைநுனியை பற்றிக்கொண்டு அந்த விழிகளை நோக்கினார். அந்த விழிகள் இறந்துவிட்டிருப்பதை அப்போது உணரமுடிந்தது. ஆனால் அந்த

நோக்கு உயிருடன் இருந்தது. அதிலிருந்த வஞ்சமும் சினமும் கற்சிலை விழிகளில் என அழிவின்மை கொண்டிருந்தன. நாகன் “அவனை நீங்கள் பார்க்கவேண்டும் என்று கொண்டுவந்தோம்...” என்றான். “அவன் கணந்தோறும் வலிகொண்டு வஞ்சமே உளமென்றாகி வாழ்ந்தது நிறைவுற்றது.”

கர்ணன் “ஆம், நான் பார்த்தது நன்று” என்றான். நாகன் அந்தக் கூடையிலிருந்து எடுத்து “அவனிடம் எஞ்சிய நஞ்சனைத்தும் குடிகொள்ளும் அம்புமுனை இது. இதை கொள்க” என்று சொல்லி ஒரு பொதியை கர்ணனை நோக்கி நீட்டினான். சிவதர் அதை வாங்கவேண்டாம் என கர்ணனை தடுக்க விழைந்தார். அவர் உடல் செயலற்றிருந்தது. கர்ணன் அதை வாங்கினான். கமுகுப்பாளையின் மெல்லிதழால் பொதியப்பட்டிருந்தது அந்த அம்பு. நாகன் அந்தக் குழவியை மீண்டும் மேல்கூடையால் மூடினான். அதைச் சுழற்றி தன் தோளிலேற்றிக்கொண்டு “நான் விடைகொள்கிறேன்” என்றான். கர்ணன் கையில் அந்த அம்புடன் சொல்லில்லாது நின்றான். நாகன் இரண்டு அடிகள் பின்னெடுத்து வைத்தான். விழிமயங்குவது போலிருந்தது. அவன் இருளில் மறைந்தான்.

அது வெறும் கனவா என திகைத்து கர்ணனின் கையிலிருந்த பொதியை பார்த்தார் சிவதர். அவன் மென்பாளை சுருள்களை அவிழ்த்தான். உள்ளே தேன்மெழுகில் செய்யப்பட்ட அம்புமுனையின் வடிவம்கொண்ட அச்சு ஒன்றிருந்தது. கர்ணன் அதை இரண்டாகப் பிளந்தான். அதற்குள் சுட்டுவிரல் நீளமுள்ள அம்புமுனை இருந்தது. கர்ணன் அதை விதைப்பருப்பை அகழ்வதுபோல் எடுத்தான். கரிய இரும்பின் மென்மையும் ஒளியும் கொண்டிருந்தது. அதை அவன் தன் விரல்களால்

திருப்பியபோது அதன் கூர் இளநீலமாக மின்னியது. நெய்யெரியும் சுடர்போல.

சிவதர் அதை விழியசையாது நோக்கிக்கொண்டிருந்தார். மான்விழி என்ற சொல் நெஞ்சிலெழுந்தது. அந்தக் கூரின் அழகை மீண்டும் நோக்க அவர் உளம் விழைந்தது. அவ்விழைவை தானும் கொண்டவனாக கர்ணன் அதை மீண்டும் திருப்பினான். நீலமினுப்பு தோன்றி மறைந்தது. மயிற்பீலியில், முத்துச்சிப்பியில், நாகமணியில் என. நஞ்சின் ஒளி. ஆலமுண்டவனின் கழுத்துமணி. கர்ணன் அந்தத் தேன்மெழுகு அச்சில் அதை வைத்து மூடி தன் கையில் வைத்துக்கொண்டு நீள்மூச்சுடன் திரும்பி செல்வோம் என சிவதரை நோக்கி தலையசைத்தான். சிவதர் காய்ச்சல் படிந்த விழிகளுடன் உடன் நடந்தார்.

# கார்கடல் - 13


வடகாட்டில் நாகர்களின் சிற்றூரான ஐராவதீகம் பிறர் அணுகமுடியாததாகவே இருந்தது. அவ்வண்ணம் ஓர் ஊர் இருப்பதை கதைகள் மீண்டும் மீண்டும் கூறின. மாபெரும் புற்றுகளே வீடுகளென அமைந்த நகரம். மூன்று முகம் கொண்டு எழுந்து நின்றிருந்த மலைமுடிக்கு அப்பால், அதன் ஆறுவிழிகளின் நோக்கால் ஆளப்படும் நிலம். அங்கிருந்து ஊர்களுக்குள் வரும் நாகர்கள் அரவுநஞ்சு கொண்டுவந்து விற்பவர்களாகவும் ஊருக்குள் புகும் அரவுகளை பிடித்துச்செல்பவர்களாகவும்தான் சூழ்ந்திருந்த யாதவர்களால் அறியப்பட்டார்கள்.

நாகநஞ்சு அருமருந்து என மருத்துவர்களால் சொல்லப்பட்டது. நாகக் கடி ஏற்று நினைவழிந்து உயிர்பிரிந்துகொண்டிருப்பவர்களை மீட்கும் மருந்தும் அதுவே. கான்களிற்றை போர்க்களிறென அது எதிர்கொண்டு துரத்தியது. நோயால், துயர்களால் நரம்புகள் சிதைந்தவர்களுக்கும் அது மீட்பென்றமைந்தது. மானுட உடலுக்குள் நாகங்கள் நரம்புகளின் வடிவில் பின்னிப்படர்ந்துள்ளன. அவை பூசலிட்டு ஒத்திசைவழிவதையே நாம் நோய் என்கிறோம். நாகநஞ்சு மாநாகத்தின் ஆணை. அரசனின் குரலுக்கு சிறுநாகங்கள் பணியும் என்றனர் மருத்துவர்.

ஐராவதீகக் காட்டின் விளிம்பிலமைந்த இடையச் சிற்றூர்களில் இரவுகளில் ஆயர்கள் சாவடிகளில் கூடி அமர்ந்து நடுவே நெய்விளக்கேற்றி வைத்து கதை கேட்டனர். விளக்கொளி முகத்தில் படும்படி அமர்ந்திருக்கும் சூதன் தொலைவில் நிகழ்ந்துகொண்டிருந்த குருக்ஷேத்ரப் பெரும்போரின் அன்றைய நிகழ்வை கதைகளின் தொடர் என விரித்துரைத்தான். ஒவ்வொன்றும் குருக்ஷேத்ரத்தை நோக்கி வளர்ந்தும் முயங்கியும் பிரிந்தும் முனைகொண்டு வந்தணைந்த வழியை அவன் விளக்கினான். அங்கே அவை மோதிக்கொண்டதன் தருணங்களை சொற்களின் வழியாக நடித்தான்.

ஒவ்வொருநாளும் குருக்ஷேத்ரத்திலிருந்து கிளம்பிய சூதர்கள் அருகிருந்த ஊர்களில் அந்நாளின் நிகழ்வை கதையெனச் சொன்னார்கள். அந்த அவையிலிருந்து கிளம்பிய சூதர்கள் வேறு அவைகளில் அந்நிகழ்வுகளை உரைத்தனர். தொடுத்துத் தொடுத்து கதை விரிய ஒவ்வொரு ஊருக்கும் மாலையில் புதிய கதையுடன் புதிய சூதன் ஒருவன் வந்து நின்றிருந்தான். முந்தையநாளின் சூதன் புலரியிலேயே கொடைபெற்று அடுத்த

ஊர்நோக்கி சென்றுவிட அரைத்துயிலில் அவர்கள் வரும்கதைக்காக காத்திருந்தனர்.

கதை கேட்க நெய்விளக்கில் ஏழு திரி ஏற்றி வணங்கிவிட்டுத் திரும்பிய முதிய ஆயர் மிகத் தொலைவில் குழலோசையை கேட்டார். ஒரு தேனீயின் ரீங்காரமென அது ஒலித்தபோதும் அது நாகர்களின் குழல் என அடையாளம் கண்டார். "நாகர்களின் இசை. அங்கு ஏதோ விழவு போலும்" என்றார். கதை சொல்ல அமர்ந்த சூதன் "அவர்களும் அங்கே குருக்ஷேத்ரத்தில் களம்நின்றிருக்கிறார்கள். இன்று பாரதவர்ஷத்தில் போர்க்கதை உரைப்பது அன்றி பிற நிகழ்வென ஏதுமில்லை" என்றான்.

"அவர்கள் எப்படி அங்கு நிகழ்வதை அறிகிறார்கள்? நம் சூதர் அங்கே செல்வதில்லையே" என்றார் ஆயர். "ஒவ்வொருவருக்கும் ஒரு கதைமுறை உள்ளது. சொல்லிலும் சொல்லுக்கு அப்பால் நிறைந்துள்ள சொற்பொருளிலும் ஊறி அப்பெருங்கதை இந்நிலமெங்கும் பரவிக்கொண்டிருக்கிறது" என்றான் சூதன். ஆயர் பெருமூச்சுவிட்டு "அழிவின் கதை. இதை இந்நிலம் இன்னும் எத்தனை காலம் சொல்லி பெருக்கிக்கொள்ளப் போகிறது?" என்றார். "என்றுமுள அழிவு. எக்கணமும் நிகழும் ஆக்கம்" என்றான் சூதன். ஆயர் மீண்டும் பெருமூச்சுவிட்டார். சூதன் கைகளை கூப்பிக்கொண்டு "ஓம்" என ஒலியெழுப்பினான். "ஓம்! ஓம்! ஓம்!" என்றனர் சூழ்ந்திருந்த ஆயர்கள். சூதன் தன் கதையை சொல்லத் தொடங்கினான்.

"பாண்டவப் படைகளின் நடுவினூடாக காசிநாட்டு இளவரசி அம்பை கூந்தல் எழுந்து நீண்டு பறக்க பெருங்குரலெழுப்பியபடி ஓடினாள். ஒவ்வொரு ஆயிரத்தவர் குழுவுக்கும் இருவர் என காவலர் சிறிய மரமேடைமேல் வேலுடன் விழித்து

அமர்ந்திருந்தனர். ஒவ்வொரு அக்ஷௌகிணியின் தொடக்கத்திலும் சிறு காவலரணில் எழுவர் தாழாப் படைக்கலங்களுடன் இருந்தனர். எவரும் அவளை காணவில்லை. பெருவெள்ளம் அகன்ற பின் சேற்றில் பரவிக் கிடக்கும் சருகுகளும் சுள்ளிகளும் தடிகளும்போல பாண்டவப் படை நிலம்படிந்து துயின்றுகொண்டிருந்தது. இரவிலெழுந்த நீர்வெம்மை மிக்க காற்று அவர்களின்மேல் அசையாது நின்றிருக்க மீன்நெய்ப் பந்தங்களின் ஒளிவட்டங்களில் கொசுத்திரள்கள் பொறிகளென, புகையென சுழன்றன. அவர்கள் எவரும் அவள் ஓசையை கேட்கவில்லை.” ஆயர்கள் விழித்த கண்களுடன் அச்சொற்களில் ஆழ்ந்து அமர்ந்திருந்தனர்.

உலூபி குடியிருந்த புற்றுவீட்டின் வாயிலுக்கு வெளியே வந்து நின்றிருந்த நாகர் குலப் பெண்டிர் எழுவரில் முதல்வி தன் கையிலிருந்த சிறு குழலை மும்முறை முழக்கி வரவறிவித்தாள். புற்றின் சுழற்பாதையின் அடியாழத்தில் ஈரமும் தண்மையும் கொண்ட கதுப்பில் உடல் பதித்து விழி மூடி ஊழ்கத்தில் உடல் ஓய உளம் குவித்து அமர்ந்திருந்த உலூபி அவர்கள் மீண்டும் மும்முறை அவ்வோசை எழுப்பியபோதுதான் அதை அறிந்தாள். சீறல் ஒலியுடன் உயிர்த்தெழுந்து இரு கைகளாலும் புற்றுவழியின் சுவர்களைப் பற்றி உடல் நெளித்து நீர்மை கொண்டவள்போல் வளைந்து வழிந்து மேலேறி திறந்த வாயில் இருந்து நாக்கு எழுவதுபோல் புற்றுவாயிலில் தோன்றினாள்.

கூடி நின்றிருந்த பெண்கள் வாய்மேல் கைவைத்து குரவையொலி எழுப்பி அவளை வாழ்த்தினர். உலூபி ஆண்டிற்கு ஒருமுறைகூட அந்தப் புற்றில்லத்திலிருந்து

வெளிவருவதில்லை. நெடுங்காலத்திற்கு முன் அங்கு வந்து அவளை மணந்து அன்னையாக்கிவிட்டு பாரதவர்ஷத்தின் பெருவீரன் சென்ற பின்னர் ஈன்ற மைந்தனை குலக்குழுவிடம் ஒப்பளித்துவிட்டு அவள் தன் ஊழ்கத்திற்குள் புகுந்தாள். அதன்பின் அவள் அவ்வப்போது குடிப்பூசெய்கைகளின் பொருட்டே அதற்குள் இருந்து வெளிவந்தாள். ஒவ்வொருமுறையும் உருமாறிக்கொண்டே இருந்த அவளை அவர்கள் வெவ்வேறு மூதன்னையராகவே எண்ணினார்கள்.

அவள் தங்கியிருந்த அந்தப் புற்று மிகத் தொன்மையானது. நாகர்கள் அங்கு தோன்றுவதற்கு முன்னரே அங்கிருந்தது. அடியிலாத ஆழம் கொண்டது என்று அதைப்பற்றி மூதன்னையரின் கதைகள் சொல்லின. மண்ணுக்கு அடியில் ஏழாம் உலகென அமைந்த நாகஉலகை நோக்கி திறக்கும் பாதை அது என்றனர் பூசகர். தொன்றுதொட்டு மூதன்னையர் அதற்குள் நுழைந்து ஊழ்கத்தில் அமைந்தனர். அங்கிருந்து வெளிவராமலேயே அவர்கள் மறைந்தனர். உலூபி அதற்குள் சென்று அமர்ந்து தன்னை உள்ளிழுத்துக்கொண்டதும் அவள் செல்லவிருக்கும் பாதை என்ன என்பதை அக்குலம் அறிந்தது. மூன்று நாட்களுக்கு ஒருமுறை அவர்கள் அதன் வாயிலில் வந்து குழல்விளி எழுப்பி அன்னைக்கான உணவையும் நீரையும் படைத்தனர். உலூபி பின்னிரவில் பிறரறியாது வெளிவந்து அவற்றை எடுத்துச்சென்றாள்.

அவள் நாவில் சொல்லெழுவது நின்றது. எனவே விழிகளில் அரவுகளுக்குரிய ஒளி குடியேறியது. சொல்லடங்கிய அரவு சொல்லனைத்தையும் விழிமணி என்றாக்கியது. தன்னை தான் தழுவிக்கொள்ளும் உயிர் அது ஒன்றே. எனவே மண்ணுலகில் வாழும் உயிர்களில் தன்னியல்பாகவே ஊழ்கம் கைகூடுவதும்

அதற்கு மட்டுமே. ஊழ்கத்தில் அனைத்தையும் அறியத்தொடங்குபவர்களின் விழிகள் பெரிதுநோக்கத் தொடங்குகின்றன. அவர்கள் முன் உலகு சிறுத்து நீர்த்துளி என்றாகி புல்நுனியில் நின்று நடுங்குகிறது. அவர்கள் அனைத்து அலைகளுக்கும் மேல் காலெடுத்து வைத்து கடந்துசெல்கிறார்கள்.

நாகினிகள் முன்வந்து உலூபியை மும்முறை தலைதாழ்த்தி வணங்கினர். முதல் பெண் "அன்னையே, தங்களை பூசனைக்கு அழைத்து வரும்படி எங்களுக்கு குடிப்பூசகர்களின் ஆணை" என்றாள். வெண்ணிற நீள்குழல் இடைக்கு தாழ்ந்து கிடக்க, நீண்டு சுருண்ட நகங்கள் கொண்ட தசை வற்றிய கைகள் முதிய பாம்புகள் என தோள் தொங்க, வறுமுலைகள் வயிறு வரை தாழ்ந்து ஒட்டியிருக்க, சுருங்கிய முகத்தில் உள்மடிந்த உதடுகளுக்குள் ஒளிமிக்க கூர்வெண்பற்கள் தெரிய நின்றிருந்த உலூபி செல்வோம் என்று கைகாட்டினாள். அவர்கள் அவளை வணங்கி சூழ்ந்து அழைத்துச் சென்றனர். ஒருத்தி முன்னால் சென்று அவள் வருகையை சங்கொலியாக அறிவித்தாள். இன்னொருத்தி சிறுகலத்திலிருந்து பசுஞ்சாணி கரைத்த நீரை தெளித்து அவள் செல்லும் பாதையை தூய்மை செய்தாள். பிறிதொருத்தி அவளுக்குப் பின்னால் வந்து தோகையால் அவள் பாதத்தடங்களை அழித்தாள்.

வெற்றுடலுடன் நடந்த உலூபி காற்றில் நெளிந்து தவழ்ந்து செல்பவள் போலிருந்தாள். திரிசிரஸ் மலைமுடியில் இருந்து இறங்கி ஐராவதீகத்தின் வடக்குப் புறமாக ஓடும் உரகவதி ஆற்றின் கரை நோக்கி அவர்கள் சென்றனர். உரகவதியில் மரங்களின் வேர்ச்செறிவென படமிலாப் பாம்புகள் அடர்ந்து நீருக்குள் உடல் நுழைத்து அலைகளில் ஆடி

நெளிந்துகொண்டிருந்தன. காலடியதிர்வில் அவை தாங்களும் அதிர்ந்து நெளிவுகொண்டன. சிற்றாற்றின் கரையில் போடப்பட்டிருந்த கருங்கல் பீடத்தில் அவளை அவர்கள் அமரச்செய்து பனைஓலை கோட்டிய தொன்னையில் ஆற்றுநீரை அள்ளி அவள் தலையில் ஊற்றி நீராட்டினர். ஈச்சை இலைகளால் முடைந்த ஆடையை அவள் இடையிலும் மார்பிலும் அணிவித்தனர். சுண்ணமும் மஞ்சளும் கலந்து குருதித் துளியை அவள் நெற்றியில் குறியிட்டனர். நாகர்குலத்திற்குரிய விழிமணி மாலையை ஒரு மரச்செப்பிலிருந்து எடுத்து அவளுக்கு அணிவித்தனர். கமுகுப்பாளையாலான நாகபட முடியை அவள் தலையில் சூட்டினர்.

அவள் சொல்லற்றவள் என்னும் உணர்வால் அவர்களும் சொற்களை இழந்து கையசைவுகளாலும் முகக்குறிகளாலுமே அவளிடம் பேசினர். பின்னர் அவர்கள் எண்ணுவதே அவளுக்குத் தெரிந்தது. அவர்கள் சொல்வதற்குள் அவள் எழுந்து நடக்கத் தொடங்கினாள். அவர்களின் சிறிய அணிநிரை ஊருக்கு வெளியே வடக்குப் பக்கம் அமைந்திருந்த மூதன்னையரின் ஆலயம் நோக்கி சென்றது. தொலைவிலேயே மூதன்னையரின் ஆலயத்தில் வெளிச்சம் எழுந்து சூழ்ந்திருந்த மரச்செறிவின் இலைத்தழைப்பின் இடைவெளிகளினூடாக சிதறி வானில் பரந்திருந்தது தெரிந்தது. அங்கு அசைந்த மானுட நிழல்கள் காட்டின் இலைத் திரைமேல் பேருருக்கொண்டு விழுந்து நடமிட்டன. பேச்சொலிகளும் பொருட்கள் முட்டிக்கொள்ளும் ஒலிகளும் இணைந்த முழக்கம் கேட்டது.

அவள் அணுகிக்கொண்டிருப்பதை உணர்த்த முதல் நாகினி சங்கோசை எழுப்பினாள். அதை ஏற்று அங்கிருந்து மறுவிளி எழுந்தது. அங்கே முழவுகளும் கூரொலி கொண்ட குழல்களும் ஒலிக்கத்தொடங்கின. அவர்கள் அன்னையர் ஆலயத்தை அணுகியபோது உள்ளிருந்து தலைமை பூசகர் கர்க்கர் கையில் நிறைகுடத்து நீருடன் எதிரே வந்தார். மலர்களும் கனிகளும் ஏந்திய தாலங்களுடன் இரு துணைப்பூசகர்கள் அவருக்கு இருபுறமும் வந்தனர். உலூபியை அணுகி நிறைகலம் தாழ்த்தி தலைவணங்கி பூசகர் வரவேற்றார். அவள் ஒரு சொல்லும் உரைக்காமல் இமையா விழிகள் எதையும் நோக்காதவைபோல் வெறித்திருக்க சீராக அடிவைத்து காற்றிலென முன்னால் சென்றாள்.

ஆலயமுகப்பில் கூடி நின்றிருந்த நாகர்கள் அனைவரும் எழுந்து கைகூப்பினர். நாகர்குலத்து அரசன் கௌரவ்யன் கற்பீடத்தில் அமர்ந்திருந்தான். முந்தைய அரசர் முதுகௌரவ்யர் அணிந்திருந்த கல்மணி மாலையை அவருடைய கட்டைவிரல் எலும்பைக் கோத்து கழுத்திலணிந்திருந்தான். நாகபட முடி சூடி, கைகளில் எலும்பில் கடைந்த நாககங்கணங்கள் அணிந்து வலக்கையில் நாகபடம் செம்மணிவிழிகளுடன் எழுந்து வளைந்திருந்த நீண்ட குலக்கோல் ஏந்தி அமர்ந்திருந்த அவனுக்கு இருபுறமும் நச்சுக்கூர்வேல் ஏந்திய காவலர்கள் நின்றிருந்தனர். அவன் முன் நாகபூசைக்கான களம் வரையப்பட்டு அதில் செந்தழல் எழுந்தாடிய ஊன்நெய்ப் பந்தங்கள் எரிந்தன.

உலூபி நாககளத்திற்குள் சென்று அங்கு நூற்றெட்டு நிரையாக பதிட்டை செய்யப்பட்டிருந்த அன்னையரின் அறைக்கல் உருக்களை விழியோட்டி நோக்கியபின் தலைவணங்கினாள்.

பூசகர் கர்க்கர் வணங்கி சாணி மெழுகிய ஓவியத்தரையில் வரையப்பட்டிருந்த களத்தை காட்டினார். கரிப்பொடியும் செம்மண்பொடியும் நீலப்பொடியும் கலந்து உருவாக்கப்பட்டிருந்த அந்த மாநாகக்கட்டு குங்குமச்செம்மை, இலைப்பசுமை, மண்மஞ்சள், துத்தநாகநீலம், கரிக்கருமை, சுண்ணவெண்மை என்னும் ஆறுவண்ணங்களில் வரையப்பட்ட நூற்றெட்டு நாகங்கள் பின்னி உருவானதாக இருந்தது. நாகபடங்கள் நூற்றெட்டு இதழ்களாக வட்டமாக விரிந்து விளிம்பமைக்க நடுவே அவற்றின் உடல்கள் ஆயிரத்தெட்டு முறை ஒன்றையொன்று வெட்டி முடிச்சிட்டு மையத்தில் வால்முனைகள் பின்னி ஒற்றைப்புள்ளியாக குவிந்திருந்தது. அப்புள்ளியில் களிமண் பீடம் அமைக்கப்பட்டு அதில் நாகபுடம் வைக்கப்பட்டிருந்தது.

நாகக்கட்டு அமைந்த களத்தின் வலது மூலையில் போடப்பட்டிருந்த கல்பீடத்தில் உலூபி அமர்ந்தாள். அவளுக்கு நேர் எதிர்புறம் முகம் நோக்கியபடி அரசன் அமர்ந்திருந்தான். கர்க்கர் உலூபியை வணங்கியபின் அரசனிடம் சென்று குரல் தாழ்த்தி மரபுச் சொல்லுரைத்தார். அரசன் எழுந்தபோது முழவுகளும் கொம்புகளும் முழங்கின. சூழ்ந்து நின்றிருந்த பெண்கள் வாயில் கைபொத்தி கழுத்து நரம்புகள் புடைக்க குரவையிட்டனர். தன் கையிலிருந்த நாகபடக் குலக்கோலுடன் அரசன் மூதன்னையரை மும்முறை உடல்நிலம் படிய விழுந்து வணங்கினான். பின்னர் திரும்பி குடித்தலைவர்களை வணங்கினான். குலப்பூசகர் அவனை வழிநடத்தி உலூபியிடம் அழைத்து வந்தனர். அவனுக்குப் பின்னால் குலமூத்தோர் எழுவர் தங்கள் நாகபடக் கோல்களுடன் இருநிரைகளாக வந்தனர்.

உலூபியை அணுகி நின்றபின் “அன்னையே, தங்கள் அடிபணிகிறேன். அருள்க!” என்று அரசன் சொன்னான். தன் மரக்கொந்தையைக் கழற்றி பூசகர் நீட்டிய மரத்தாலத்தில் வைத்தான். நாகபடக் கோலை கையிலேந்தி தலைவணங்கி நின்றான். அவனுடைய முடியை தாலத்தில் மலரும் கனியும் சேர்த்து வைத்து கொண்டுவந்து உலூபியின் காலடியில் வைத்தார் கர்க்கர். அவள் கைநீட்டி அதை தொட்டு வாழ்த்த கொம்புகளும் முழவுகளும் உச்சம் கொண்டு ஆர்த்தன. அரசன் ஏழடி முன்னால் வந்து தன் குலக்கோலை தாழ்த்தி உலூபியின் காலடி மண்ணைத் தொட்டு வணங்கினான். அவள் தாலத்திலிருந்து மூன்று மலர்களை எடுத்து அவன் தலைமேலிட்டு சொல்லின்றி வாழ்த்தினாள். ஏழடி பின்வைத்து நின்று மீண்டும் வணங்கி அவன் திரும்பி குல மூத்தோரையும் கூடியிருந்த நாகர் குடிகளையும் வணங்கினான்.

கர்க்கர் தாலத்தை திரும்ப எடுத்து அதிலிருந்த கொந்தையை அவன் தலைமேல் சூட்டினார். கோலும் முடியுமாக அவன் மீண்டும் சென்று தன் கல்லரியணையில் அமர்ந்தான். குலத்தலைவர்கள் எழுவரும் அரியும் மலருமிட்டு அவனை வாழ்த்தினர். மூதன்னையர் எழுவர் வந்து நீரூற்றி அவன் அரியணை அமர்வை மேலும் ஓராண்டுக்கு நிலைக்கச் செய்தனர். ஏழு நாகர்குலங்களில் இருந்து ஏழு இளமைந்தர் வந்து வணங்கி அரசனிடமிருந்து பொற்பரிசில்களை பெற்றனர். ஏழு கன்னியர் வந்து அவனை வாழ்த்தி மலர்ப்பரிசில்களை பெற்றுச் சென்றனர். ஏழு அன்னையர் வந்து அவனுக்கு எழுவகை அமுதை ஊட்டி வாழ்த்தினர்.

குலப்பூசகர் கை காட்டியதும் ஓசைகள் அழிந்தன. நாகர்கள் கைகளைக் கூப்பியபடி நோக்கி நின்றிருந்தனர். நாககளத்தை

அரைவட்டமாகச் சூழ்ந்திருந்த புற்றுகளில் பலநூறு வளைதிறப்புகள் சொல்லத் திறந்த வாயென தெரிந்தன. பந்தங்கள் அனைத்தும் கொளுத்தப்பட்டபோது அவை ஒளியலையில் ததும்பி ஆடலாயின. கர்க்கர் தலைமையில் குடிப்பூசகர் எழுவர் நாககளத்தை சூழ்ந்தமர்ந்து நாகர்களின் தொல்முறைப்படி பூசனை முறைகளை செய்யத் தொடங்கினர். ஏழு குடங்களில் நீரும், ஏழு தாலங்களில் மலர்களும், ஏழு தாலங்களில் கனிகளும் கொண்டுவந்து படைக்கப்பட்டன. மலர்களை எடுத்து நாகக்கட்டு அமைந்த களத்தின் மையப் புள்ளியாக அமைந்த நாகபுடத்தின் மேல் இட்டு நாகவேதம் ஓதி பூசகர்கள் வழிபட்டனர். கைகளைக் கூப்பியபடி அரசனும் குல மூத்தோரும் நாகர் குடிகளும் சூழ்ந்து அதை நோக்கிக்கொண்டிருந்தனர்.

அரவுச்சீறல்களின் பலநூறு ஒலிமாறுபாடுகளால் ஆனதாக இருந்தது நாகவேதம். பயின்று தீட்டப்பட்ட தொண்டைகளும் ஒன்றே எனக் குவிந்த உதடுகளும் அவற்றில் முற்றமைந்த உள்ளமும் அவ்வொலியை எங்கிருந்தோ என அங்கு எழச்செய்தன. அவர்களிடமிருந்து எழுந்ததேயென்றாலும் அவர்களைக் கடந்து பிறிதொரு இருப்பென அது அங்கே பெருகி உருக்கொண்டது. அவர்கள் அனைவரையும் ஒன்றெனப் பிணைத்தது. செவி பழகப் பழக அவர்கள் அதில் தாங்கள் பேசிவந்த மொழியின் சொற்களை கண்டுகொண்டார்கள். பின்னர் அச்சொற்கள் ஒன்றையொன்று தொட்டுக்கொள்ள பொருள் உருவாகி வந்தது.

முதல் பிரஜாபதியும் வெள்ளாட்டு முகம்கொண்ட பெருநாகமும் ஆன தட்சனையும் முதல் மூதன்னையரான கத்ருவையும் வினதையையும் வாழ்த்தியது அந்தத் தொல்மொழி. புடவியை

ஈன்ற பெருநாகங்களான அதிதி, திதி, தனு, அரிஷ்டை, சுரஸை, கசை, சுர்ஃபி, வினதை, தாம்ரை, குரோதவசை, இரை, கத்ரு, முனி, புலோமை, காலகை, நதை, தனாயுஸ், சிம்ஹிகை, பிராதை, விஸ்வை, கபிலை அகியோரையும் அவர்களிடமிருந்து எழுந்த காகி, ஸ்யேனி, ஃபாஸி, கிருத்ரிகை, சூசி, க்ரீவை ஆகியோரையும் வாழ்த்தியது. அன்னையர் நிரை அச்சொற்களிலிருந்து பெருகியெழுந்தபடியே இருந்தது. ஒவ்வொருவரும் பலராயினர். வேதச்சொல் எனும் ஆழ்களஞ்சியத்திலிருந்து அவர்கள் பிறந்தெழுந்து அங்கே துலங்கினர்.

கர்க்கர் எழுந்து தெற்கு திசை நோக்கி வணங்கி கைகாட்டினர். துணைப்பூசகன் கொம்பெடுத்து மும்முறை ஊதினான். மிக அப்பால் காட்டிற்குள் அதற்கு எதிர்விளியென கொம்போசை எழுந்தது. பெண்டிர் குரவையிடத் தொடங்கினர். காட்டுக்குள்ளிருந்து ஒற்றைப் பந்தமொன்று ஒழுகி வந்தது. இலைத்தழைப்புக்குள் வெளிச்சம் பீறிட்டெழுந்து நீண்டலைய, பந்தமேந்திய முதன்மைப் பூசகர் வெளியே வந்தார். அவரைத் தொடர்ந்து மூன்று பூசகர்கள் கொம்புகளையும் முழவுகளையும் முழக்கியபடி வந்தனர். தொடர்ந்து ஒருவன் தலையில் மரத்தாலம் ஒன்றை சுமந்து வந்தான். அதன் மேல் செம்பட்டால் மூடப்பட்ட கலமொன்று இருந்தது. அவனைத் தொடர்ந்து மேலும் பன்னிரு பூசகர்கள் நாகவேதச் சொற்களை ஓதியபடி வந்தனர்.

பூசகர்கள் உள்ளே வந்து நாகக்கட்டின் மையத்தை சூழ்ந்தனர். தாலமேந்தி வந்தவன் அதை பூசகர் முன் மும்முறை தாழ்த்தி காட்டினான். பூசகர் அதன் ஒரு முனையை தொட இருவருமாக அதை நாகக்கட்டின் நடுவில் இருந்த நாகபுடத்தின் மேல் வைத்தனர். அந்தத் தாலத்திலிருந்த பட்டில்

பொதிந்த சிறு கலத்திற்கு அரிசியும் மலருமிட்டு பூசை செய்து வணங்கிய பின்னர் கர்க்கர் செந்நிற மூடுதிரையை மெல்ல இழுத்து அகற்றினார். அங்கு வெட்டப்பட்ட நாகன் ஒருவனின் தலை இருந்தது. பெண்கள் குரவையொலி விசை கொண்டது. முதிய பெண்கள் கைகளை நீட்டி உடல் விதிர்க்க வெறியாட்டுகொண்டனர். சிலர் கீழே விழுந்து நாகம்போல் நெளியலாயினர்.

நாகனின் நீண்ட குழல்கற்றைகள் இருபுறமும் சரிந்து தாலத்தில் விழுந்து கிடந்தன. மாநாகங்கள் வெளியே வரும் குகைகளின் முன் அவன் தன் கழுத்தை தானே வெட்டி விழுந்து நவகண்டம் அளித்தான். புற்றுவாய்களிலிருந்து எழுந்து விழுந்த நாகங்கள் அவன் உடலை கவ்வி இழுத்து உள்ளே கொண்டுசென்று உண்டன. பூசகர் அவன் தலையை சீராக வெட்டி அத்தாலத்தில் அமைத்து கொண்டுவந்திருந்தனர். குருதி வழிந்து கரிய பிசினாக மாறி தாலத்துடன் ஒட்டி தலையை உறுதியாக நிறுத்தியிருந்தது. அவன் விழிகள் நிறைவுகொண்ட துயிலிலென மூடியிருந்தன. உதடுகள் சற்றே திறந்து உள்ளே நாகர்களுக்குரிய இரு கூர்வளைந்த பற்கள் கொண்ட வெண்நிரை தெரிந்தது. நீண்ட வடித்த காது தாலத்தை தொட்டுக் கிடந்தது. நெற்றியில் நாகபடத்தை பச்சை குத்தியிருந்தான்.

அவனை அங்கிருந்த அனைவரும் அறிந்திருந்தார்கள். திறல்மிக்க வேட்டையனும் நாகர்குலத்தின் அழகனுமாகிய சுனீதன் இளமையிலேயே நாகமூதாதையருக்கு உகந்தவன் என்று பூசகர்களால் குறி சொல்லப்பட்டவன். அவனுடைய ஏழு துணைவியரிலாக பதினேழு மைந்தர்கள் அக்குடியில் பிறந்தனர். மூன்று முறை புலியை வென்று பல் கொண்டு

மீண்டவன் என்பதனால் அவனைப்பற்றி குலப்பாடகர் பாடிய ஆறு பாடாண் பாடல்கள் அக்குடியில் நிலவின.
ஒவ்வொருநாளும் என அவன் மூதாதையரை நோக்கி சென்றுகொண்டிருப்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர். அவன் உடல் ஒளிகொண்டது. கண்களில் நாகமணிகளுக்குரிய மின் எழுந்தது. சொற்கள் கார்வைகொண்டு எடைமிகுந்து மெல்ல அடங்கின. கனிந்து கனிந்து காம்பு இற்றுக்கொண்டிருந்தான்.

அவன் முகத்தையே அனைவரும் நோக்கிக்கொண்டிருந்தனர். கர்க்கர் அரசரிடம் சொல் பெற்று பூசையை தொடங்கினார். கைகளைக் கூப்பியபடி திகைத்தனபோல் வெறித்த விழிகளுடன் நாகர்கள் அந்த முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தனர். கர்க்கரின் விரல்கள் வெறிகொண்ட நாகக்குழவிகள்போல் உடுக்கின் தோல்பரப்பில் நின்று துடித்தன. விசையிலிருந்து மேலும் விசைக்கென திமிறித் துள்ளி எழுந்தது தாளம். பின்னர் மீட்டுபவரிலிருந்தும் அவர் விரல்களிலிருந்தும் அது விடுபட்டது. காற்றில் தன்னைத் தானே நிகழ்த்திக் கொள்வதுபோல் நின்று ததும்பியது. அங்கிருந்த அனைவரையும் சரடெனக் கோத்து ஒன்றாக்கி இறுக்கி நிறுத்தியது.

சூழ்ந்திருந்த பல்லாயிரம் நாகப் புற்றுவாய்களுக்குள் அரவுகள் எழுந்து வந்து அமைவதை அவர்கள் உணர்ந்தனர். அவை அனைத்தும் நோக்கு கொண்ட விழிகளென மாறின. அவர்களை உறுத்தபடி சூழ்ந்திருந்தன. கூர்வேல் முனைகளென வந்து தொடுத்த அந்த நோக்குகளால் அங்கிருந்த நாகர்கள் அனைவரும் மெய்ப்பு கொண்டனர். குழவிகள் அன்னையரை இறுக கட்டிக்கொண்டன. கன்னியர் ஒருவரோடொருவர் உடல் தழுவி நின்றனர். தாளம் உச்சத்தில் சென்று அறுபட்டு ஓய்ந்த

கணத்தில் வெட்டுண்ட தலையில் விழிகள் திறந்தன. உதடுகள் அசைவுகொண்டன.

மூச்சொலிகள் சூழ ஒலித்தன. பூசகர் உடுக்கையைத் தாழ்த்தி தலைவணங்கி கப்பரையிலிருந்து நீர் தொட்டு மூன்றுமுறை அந்தத் தலைமீது தெளித்தார். நீருக்கு அந்த முகம் சிலிர்த்துக்கொண்டது. பூசகர் உரத்த குரலில் “இங்கு எழுந்தருளியவனே! எங்கள் குடியின் வீரனே! நீ யார்? சொல்க!” என்றார். சூழ்ந்திருந்த அமைதியில் அந்தக் குரல் முழவோசைபோல் ஒலித்தது. அவன் உதடுகள் மெல்ல அசைந்தன. “சொல்க! எங்கள் அனைவருக்கும் செவி தொடும்படி சொல்க! எங்கள் களமுற்றத்தில் எழுந்தருளியுள்ள நீ யார்? எங்கள் அன்னையரின் முன் அமர்ந்துள்ள நீ யார்? பல்லாயிரம் நாகச் செவிகளால் கேட்கப்படும் சொற்கள் கொண்ட நீ யார்?”

“என் பெயர் அரவான். நாகர் குலத்து உலூபியின் மைந்தன்” என்று அந்தத் தலை கூறியது. மூச்சொலிகள் சேர்ந்தெழ நாகர்களின் உடல்வளையம் இறுகி அணுகியது. “சொல்க, நீ நோக்குவதென்ன? அங்கே தொல்நிலமாகிய குருக்ஷேத்ரத்தில் நிகழ்வதென்ன?” என்று பூசகர் கேட்டார். அந்த முகம் ஊழ்கத்தில் என புன்னகைத்தது. “நான் அங்கநாட்டரசன் கர்ணனை பார்க்கிறேன். அவன் அறைக்குள் நிழலசைவென சுவர்மடிப்பினூடாகச் சென்று எழுந்து விழிமணி மின்ன நின்றிருக்கிறேன்” என்று அவன் சொன்னான்.

“அது குருக்ஷேத்ரத்திற்கு தென்கிழக்கே அமைந்த சிறிய எல்லைக்காவல் கோட்டையாகிய சிபிரம். கர்ணனின் தனியறைக்குள் அவன் அணுக்கரான சிவதர் புன்னகையுடன் நுழைவதை காண்கிறேன். இதோ தங்களுக்குரிய நாளை

தெய்வங்கள் வகுத்துள்ளன, அரசே. பிதாமகர் பீஷ்மர் களம்பட்டார். அங்கே அம்புமுனையில் படுத்திருக்கிறார். இனி அஸ்தினபுரிக்கு வேறு வழியில்லை. உங்களை போருக்கு அழைத்தே தீரவேண்டும் என்கிறார் சிவதர். சலிப்பு தோன்ற ஆம் என்று கர்ணன் சொன்னான். மெல்ல உடலை அசைத்து பெருமூச்செறிந்தான். சிவதர் மேலும் மேலும் பேச அவன் ஆர்வமிழந்தபடியே சென்றான்.

"பின்னர் கர்ணன் பெருமூச்சுடன் பீடத்தில் உடல் தளர்த்தி கால் நீட்டி அமர்ந்தான். தலையை அண்ணாந்து பீடத்தின் சாய்வில் வைத்துக்கொண்டு கண்களை மூடினான். அவன் தசைகள் ஒவ்வொன்றாக தொய்வதை நான் பார்த்துக்கொண்டிருந்தேன். மெல்லிய விம்மல் போலொன்று எழ அவன் நெஞ்சு அசைந்தது. விழிகளில் இருந்து ஊறிய நீர் இருபுறமும் கன்னங்களில் வழிந்தது. நாகரே, கேளுங்கள்! பிறர் அறியாத ஆண்மகனின் துயர் தன்னந்தனி மதவேழத்தின் நோய் போன்றது. தெய்வங்கள் அன்றி பிறர் அதை அறியப்போவதில்லை. தெய்வங்களிடமும் அது முறையிடப்போவதில்லை."

அரவான் சொன்னான் "அவ்வறையில் பீடக்காலின் நிழல் நீண்டு சுவர்மடிப்பில் விழுந்து நாகத்தின் பத்தியென வளைந்து நின்றது. அதில் குடியேறி விழிகள் ஒளிர நா பறக்க மெல்ல படமசைத்தாடியபடி நான் அவனை பார்த்துக்கொண்டிருந்தேன்." நாகர்கள் அச்சொற்களினூடாக உடனிருந்தென அனைத்தையும் பார்த்தனர். அந்த விழிகளையும் அசையும் உதடுகளையும் நோக்கியபடி உணர்ச்சியற்ற முகத்துடன் உலூபி அமர்ந்திருந்தாள்.

# கார்கடல் - 14

கர்ணனை வரவேற்க கௌரவப் படைமுகப்பிற்கு தம்பியர் இருவர் சூழ துச்சாதனனே நேரில் வந்திருந்தான். காவலரணுக்கருகே மெல்லிய மூங்கில் கம்பத்தில் உயர்ந்து பறந்த அமுதகலசக் கொடியை பற்றியபடி வீரனொருவன் நின்றிருக்க அவனுக்குப் பின்னால் படையிசை முழக்கும் சூதர் எழுவரும் அவர்களுக்குப் பின்னால் அஸ்தினபுரியின் படைத்தலைவர்கள் மூவரும் காத்து நின்றிருந்தார்கள். சமனும் சகனும் கைகளைக் கட்டி இருபுறமும் நின்றிருக்க ஓர் அடி முன்னால் அவன் நிமிர்ந்த உடலுடன் தோளில் விழுந்த கூந்தல் புலரிக்காற்றில் அலையடிக்க நோக்கி நின்றிருந்தான்.

தொலைவில் கொம்பொலி எழுந்தது. அது கௌரவப்படை எல்லையின் காவலரணின் அறிவிப்பு. பின்னர் அவனுக்குப் பின்னால் படைவிளிம்பிலிருந்த காவலரணில் கொம்பொலி எழுந்தது. கொம்பொலிகள் ஒன்றிலிருந்து ஒன்றென கடந்துசென்றன. ‘இந்நேரம் மூத்தவர் அறிந்திருப்பார்’ என துச்சாதனன் நினைத்துக்கொண்டான். அங்கநாட்டின் படைமுகப்பிலிருந்து அவர்களின் வருகையை அறிவிக்கும் கொம்போசை முழங்கியது. கௌரவப் படைகளின் கொம்போசை எழுந்து அவர்களை வரவேற்றது. அங்கநாட்டு படையிலிருந்து மறுவிளி எழுந்து அரசர் அணுகிக்கொண்டிருப்பதை தெரிவித்தது. யானைக்கூட்டங்களென இரு படைமுகப்புகளும் உரையாடிக்கொண்டன.

குறுங்காட்டை நோக்கியபடி துச்சாதனன் நின்றான். விழிகள் இருளை நோக்கி நோக்கி கூர்கொண்டன. முகிலொளியில் இலைகளையும் சிறுபறவைகளையும் காணமுடிந்தது. அவற்றினூடாக அங்கநாட்டின் கதிரோன் கொடி வானில் ஒரு பறவைபோல் சிறகடிப்பதை துச்சாதனன் பார்த்தான். அது கீழிருந்து வந்த பந்தங்களின் ஒளியை பெற்றிருந்தது. அவன் அணுகி வரும் அந்த ஒற்றைச் சிறகை விழிகூட்டாது நோக்கிக்கொண்டிருந்தான். சமன் “அணுகிவிட்டார்கள்” என்றான். அந்த மென்சொல் அனைவருக்கும் கேட்டது. அங்கிருந்தோர் ஓர் அடி முன்வைத்தனர். சிலர் ஆடைகளை சீரமைத்தனர். மூச்சொலிகளும் அணியொலிகளும் எழுந்தன.

கதிர்க்கொடிக்குப் பின்னால் கர்ணனின் யானைச்சங்கிலி பொறித்த போர்க்கொடி தெரியத் தொடங்கியதும் துச்சாதனன் அறியாது மெய்ப்பு கொண்டான். “வந்துவிட்டார்!” என்று அவனுக்கு வலப்பக்கம் நின்ற சமன் சொன்னான். “ஆம்” என்று சகன் பெருமூச்சின் ஒலியில் சொன்னான். “அவர் முன்னரே வந்திருக்கலாம்” என்றான் சமன். “இந்த ஊழ் விளையாட்டில் எவரும் எதையும் முடிவெடுப்பதில்லை, இளையோனே” என்று துச்சாதனன் திரும்பாமலேயே சொன்னான்.

மீண்டும் ஒரு கொம்பொலி எழுந்ததும் துச்சாதனன் கையைத் தூக்கி அசைத்தான். முகப்பில் நின்றிருந்த அமுதகலசக்கொடி ஏந்திய வீரன் நடந்து முன்னால் சென்றான். அவனைத் தொடர்ந்து போர்ப்பறைகளையும் முழவுகளையும் கொம்புகளையும் ஒத்திசைவுடன் முழக்கியபடி படையிசையினர் சென்றனர். கவச உடைகளில் பந்தங்களின் ஒளிகள் நெளிந்தாட எரிவடிவு எடுத்தவர்போல் படைத்தலைவர்கள் தொடர்ந்து நடந்தனர். கவசங்கள்

ஒன்றுடன் ஒன்று உரசி ஒலிக்க துச்சாதனன் தம்பியர் இருவரும் இருபுறமும் அரை அடி பின்னால் நடந்துவர முன்னால் சென்றான்.

குறுங்காட்டின் விளிம்பை அடைந்து அவர்கள் காத்து நிற்க அப்பாலிருந்து கதிர்க்கொடி இலைத்தழைப்புகளுக்கு மேல் எழுந்து அணுகியது. கவச உடையணிந்த கொடிவீரனின் உடலை பார்த்த துச்சாதனன் சமனிடம் “பொழுதென்ன ஆகிறது?” என்றான். “வெள்ளி முளைத்துவிட்டது. இன்னும் ஒரு நாழிகைக்குள் ஒளி எழும்” என்றான் சமன். அங்கநாட்டின் முரசுக்குழுவும் தொடர்ந்து கவச உடையணிந்த பதினெட்டு வீரர்களும் வந்தனர். கர்ணனின் கொடி தெரிந்தது. பெருஞ்சங்கம் ஒலித்து அரசன் அணுகுவதை அறிவித்தது. இலைகளுக்கு அப்பால் அனலாட்டம் தெரிந்தது. ஒருகணம் காட்டெரி என உள்ளம் எழ மறுகணம் அது என்ன என்று நினைவு அறிவித்தது. அது கர்ணனின் பொற்தேர்.

அந்தத் தேரை துச்சாதனன் முன்பு பலமுறை பார்த்திருந்தான். அது முற்றிலும் வெள்ளியாலும் பொன்னாலும் கவசமிடப்பட்ட தேர். அணியூர்வலத்திற்கென பொற்தேர் அமைப்பதை பாரதவர்ஷத்தின் அரசர்கள் சிலர் தங்கள் குலப்பெருமைக்கென கொண்டதுண்டு. போர்த்தேரை பொன்னால் மூடுவதைப்பற்றி துச்சாதனன் கேள்விப்பட்டதே இல்லை. இளைய யாதவரின் பொற்தேர் சூதர்களால் பாடப்பட்டுக்கொண்டிருந்தது. பின்னர் இந்திரப்பிரஸ்தத்தின் அரசி திரௌபதி பொற்தேர் ஒன்றை உருவாக்கினாள் என்றும் அது துவாரகையின் பொற்தேரைவிடப் பெரியது என்றும் சொல் பரவியது. அப்போதுதான் அங்கநாட்டில் கர்ணன் பாரதவர்ஷத்தில்

எவரிடமும் இல்லாத தேர் ஒன்றை அமைப்பதைப்பற்றி செய்தி வந்தது.

அப்போது துரியோதனனின் தனியறையில் அவர்கள் சொல்லாடிக்கொண்டிருந்தனர். அமைச்சர் கனகர் ஒற்றர்செய்திகளை சுருக்கி உரைத்து ஆணைகளைப் பெற்றுக்கொண்ட பின் சற்றே தயங்கி "பிறிதொரு ஒற்றர் செய்தி, அரசே" என்றார். இரு நாழிகைப்பொழுதாக ஓலைகளை கேட்டும், செய்திகளை உசாவியும், ஆணையிட்டும் சலிப்புற்றிருந்த துரியோதனன் கால்களை நீட்டி கைகளை விரித்து அமர்ந்தபடியே சோம்பல் முறித்தான். கனகர் "இது அங்கநாட்டிலிருந்து... முதன்மைச் செய்தி அல்ல. ஆனால் எண்ணுவதற்குரியது. ஆகவே இப்போது இதை உரைக்கிறேன்" என்றார். "சொல்க!" என்று துரியோதனன் சொன்னான்.

கனகர் தயங்கி "இது ஒருவகையில் எல்லை மீறல் என்பதை அமைச்சனாக நான் சொல்லியே ஆகவேண்டும். அரசனிடம் இல்லாத அரியவை எதையும் குடிகள் கொண்டிருக்கலாகாது என்றும் அடையப்பெற்றால் அரசனுக்கு அறிவித்துவிட வேண்டும் என்றும் நெறியுள்ளது. அரசனிடம் இல்லாத அரும்பொருள் ஒன்று குடிகளிடம் இருக்குமென்றால் அது அரசன் அவர்களுக்கு அளித்த கொடையாகவே இருக்கவேண்டும்" என்றார். துரியோதனன் அவர் சொல்வதை சரியாக செவிகொள்ளவில்லை. ஏவலனிடம் மது கொண்டுவரும்படி கைகாட்டிவிட்டு "அதனாலென்ன?" என்றான். ஆனால் சுபாகு என்ன செய்தி என்பதை ஒருவாறு உய்த்துணர்ந்துகொண்டான். அவன் விழிகள் மாறுபட்டன. "அதை நாம் பிறகு பேசுவோம், அமைச்சரே" என்றான்.

துரியோதனன் உளக்கூர்கொண்டு “இப்போது பேசினால் என்ன? இப்போது வேறு உசாவல்கள் ஒன்றுமில்லையல்லவா? சொல்க!” என்றான். கனகர் “அரசே, அங்கநாட்டு அரசர் கர்ணன் தனக்கென பொற்தேர் ஒன்றை அமைத்துக்கொள்வதாக செய்தி வந்துள்ளது. பொன்னில் பொருளியற்றும் கலிங்கநாட்டுச் சிற்பிகள் நூற்றுவர் வந்து சம்பாபுரியில் குடியேறி இருக்கிறார்கள். சென்ற எட்டு மாதங்களாகவே இந்தத் தேரின் பணிகள் நடைபெறுகின்றன. ஆனால் ஏதோ நகைகள் வார்க்கப்படுவதாக நமது ஒற்றர்களும் மயங்கியிருக்கிறார்கள். தேர் பிறிதொரு இடத்தில் தனித்தனி மரச்சிற்பங்களாகவும் உறுப்புகளாகவும் செய்யப்பட்டது. நேற்று அந்தத் தேரின் முதல் வடிவை ஒருங்குகூட்டி நோக்கியிருக்கிறார்கள். அதில் பொற்தகடுகளும் வெள்ளிக்கம்பிளும் பொருத்தப்படுகின்றன. அதற்கான அளவெடுப்புகள் நிகழ்ந்துள்ளன” என்றார்.

“நன்று. அங்கு அவனுக்கு எப்படியோ பொழுதுபோகிறது” என்று துரியோதனன் சொன்னான். “ஆனால் அந்தப் பொற்தேரை வைத்துக்கொண்டு என்ன செய்யப்போகிறார்? அதை தெருக்களில் ஓட்டிச்சென்றால் மீண்டும் தூய்மை செய்தெடுக்க பல நாட்களாகும். ஆண்டுக்கொருமுறை அணியூர்வலமாக அமர்ந்து செல்லலாம். குடிகள் வாழ்த்துவார்கள்” என்று துச்சாதனன் சொன்னான். உடனே நகைத்து “சூதர்களுக்காக நடிப்பதன்றி அரசர்களுக்கு வேறு பணி என்ன?” என்றான். கனகர் “அரசே, நம்மிடம் பொன்வேய்ந்த தேர் எதுவுமில்லை” என்றார். துரியோதனன் “நாமும் ஒன்று செய்யலாம் என்கிறீரா? பொன்னில் யானை ஒன்றை செய்யலாம். எனக்கு தேரிலூர்வது உவப்பல்ல” என்றான்.

“அவர் அஸ்தினபுரிக்கு கீழே முடிகொண்டிருப்பவர்” என்றார் கனகர். துரியோதனன் கண்களில் சினம் குடியேற “நமக்குக் கீழே அங்கநாடு உள்ளதென்று உமக்கு சொன்னவர் யார்? அங்கம் நமது நட்புநாடு. எனக்கு நிகரான அரியணை கொண்டவன் கர்ணன்” என்றான். “ஆம், அதை தாங்கள் பலமுறை சொல்லிவிட்டீர்கள்” என்று கனகர் சொன்னார். “ஆனால் அமைச்சனாக நான் எண்ணுவதை சொல்லியே ஆகவேண்டும். அரசே, நட்புநாடாயினும் தன்னிடம் இல்லாத அரும்பொருள் ஒன்றை பிற அரசர் கொண்டிருந்தார் என்றால் அதை சென்று வென்று வருவதே அரசரின் இயல்பாக இருக்கவேண்டும். சிம்மம் காட்டில் பிறிதொரு உறுமலை ஒப்பாது.”

துரியோதனன் “குடியவைகளில் எழும் அலர் ஒன்றை அமைச்சர்குரலென இங்கு வந்து சொல்ல வேண்டியதில்லை” என்றான். “ஆம், கர்ணன் பொற்தேர் வனைவான் என்றால் அவன் பொருளுடைமையில் என்னைவிட மேம்பட்டவன் என்று பொருள். ஒரு படி கீழிருப்பதில் எனக்கு எவ்விழிவும் இல்லை. மகிழ்கிறேன் என்றே கொள்க!” கனகர் “நீங்கள் சினந்தாலும் நான் முழுமையாக சொல்லிவிடவேண்டும். என் கடன் அது” என்றார். “அரசே, அரசனிடம் இல்லாத பொருள் குடிகளிடமோ துணைநாடுகளிடமோ இணைநாடுகளிடமோ இருக்கலாகாதென்று வகுத்தவர்கள் அரசியல் அறியாதவர்கள் அல்ல. செங்கோல் சூடி தழும்புகொண்ட கைகள் கொண்ட மூதாதையர் கூற்று அது.”

“பிறர் கொள்ளும் பொருள் வெறும் பொருளல்ல என்று உணர்க! அனைத்துப் பொருட்களும் அடையாளங்களே. செல்வம் என்பது என்ன? எப்பொருள் பிற அனைத்தாகவும்

மாற்றிக்கொள்ளக்கூடியதோ அதுவே செல்வம் என்று பொருள்நூல்கள் வகுத்துள்ளன. ஓர் அருமணி போர்ப்படையென்றாகலாம். நகரமாக உருமாறலாம். குலப்பெருமையும் கோல்வண்மையுமாக வடிவுகொள்ளலாம். சொல்மதிப்பாக, புகழாக, தெய்வஅருளாக விளக்கவும்படலாம். கௌரவரே, அரசனின் செங்கோல் என்பது செல்வத்தின்மேல் நின்றிருக்கும் ஓர் அடையாளம் மட்டுமே. தங்கள் வறுமையில் வண்மையாகவும், இடர்களில் படையாகவும் எழும் செல்வம் அங்குள்ளது என அது குடிகளுக்கு அறிவிக்கிறது. அந்தக் கோல் நின்றிருக்கும் நிழல்களில் பிற கோல்கள் தணிந்திருக்க வேண்டும் என்பதனாலேயே அந்நெறி வகுக்கப்பட்டது.”

“தங்களிடமில்லாத செல்வம் அவரிடம் இருந்தால், தங்கள் தேரைவிட சற்றேனும் அது பெரிதாக இருந்தால், இந்நிலத்தில் உங்கள் சொல்லைவிட ஒரு படி மேலானது அவர் சொல்லென்றே குடிகளால் கொள்ளப்படும். அங்கநாட்டுப் படைகளால் மட்டுமல்ல நமது படைகளாலும் அவ்வாறே கருதப்படும். அது நம் ஆட்சிக்கு எவ்வகையிலும் நலம் பயப்பதல்ல” என்றார் கனகர். துரியோதனன் எழுந்துகொண்டு “மெய். நம் குடிகள் ஐயமற உணரட்டும், அவனே என்னைவிட மேம்பட்டவன். அங்கம் அஸ்தினபுரியைவிட ஆற்றல் கொண்டது. சம்பாபுரி பாரதவர்ஷத்தின் எந்நகரையும்விட செல்வம் நிறைந்தது. அவ்வாறே ஆகுக! அமைச்சரே, அதனால் அஸ்தினபுரிக்கோ எனக்கோ என் தம்பியருக்கோ எக்குறையும் வரப்போவதில்லை. எங்களைவிட எவ்வகையிலும் ஆற்றலும் பெருமையும் மிக்க ஒருவனால் பேணப்படுகிறோம் என்ற பெருமையும் நிறைவுமே எங்களுக்கு எஞ்சும்” என்றான்.

துச்சாதனனை நோக்கி "கர்ணன் சமைக்கும் அந்தப் பொற்தேரில் அவன் அமர்ந்து அணியூர்வலம் செல்வதை பார்க்க விழைகிறேன். அங்கநாட்டின் முடிகோள் விழா இன்னும் சில மாதங்களில் வருமென்று எண்ணுகிறேன்" என்றான் துரியோதனன். கனகர் "ஆம், சித்திரை மாதம் மகரராசியில் கதிரோன் நுழையும் நாளில்" என்றார். "அப்போது அஸ்தினபுரியின் அரசனென்றும் கர்ணனின் தோழனென்றும் சம்பாபுரிக்கு செல்கிறேன். அந்தத் தேருக்குப் பின்னால் எனது எளிய தேர் செல்லட்டும். அங்குளோர் அதை காணட்டும். இங்குளோர் உணரட்டும்" என்றான் துரியோதனன். சுஜாதன் "மூத்தவரே, நானும் வருவேன். இவர் சொல்லக் கேட்டதுமே அந்தத் தேரை என் அகத்தால் கண்டுவிட்டேன்" என்றான்.

ஆனால் அஸ்தினபுரியில் கர்ணனின் பொற்தேர் ஒவ்வாமையை உருவாக்கியது. மாற்றுருக்கொண்டு நகருலாச் செல்கையில் துரியோதனனின் செவிபடவே சொற்கள் விழுந்தன. "சூதன் கொள்ளும் பெருமிதம் சாரைப்பாம்பின் சீறலும் பத்தியும்போல" என்றார் ஒரு ஷத்ரிய முதியவர். "கூரையிலேறி நின்றிருக்கும் கோழி தான் உகிரும் அலகும் சிறுத்த வெற்றுயிர் என்பதையே உலகுக்கு சிறகடித்து சொல்கிறது. கூரை உயரமாகும்தோறும் அது வெறும் கோழி என்ற செய்தியே சென்று சேர்கிறது" என்றான் ஒரு முதிய சூதன். அன்று மாலை திரும்பிவருகையில் துச்சாதனன் துரியோதனனிடம் "எவ்வகையிலோ இச்செயல் வழியாக எளிய குடிகளை அவர் சீண்டுகிறார். அவர்கள் கசப்பும் சீற்றமுமே கொள்கிறார்கள். ஏன் இதற்கு துணிந்தார் என்ற எண்ணமே எனக்கு எழுகிறது, மூத்தவரே" என்றான்.

“அவ்வாறல்ல, அது ஒரு வெற்றி. அனைத்து வெற்றிகளும் பிறரில் முதன்மையாக உருவாக்குவது ஒவ்வாமையைத்தான். ஏனெனில் எளியோரினும் எளியோர் எனினும், கடையரிலும் கடையர் எனினும் ஒவ்வொரு மனிதனும் தன் பகற்கனவில் பெருவெற்றிகளையும் அருஞ்சிறப்புகளையுமே தனக்குரியதென்று எண்ணிக்கொண்டிருக்கிறான். பிறர் அடையும் எதுவும் தனக்குரியதென்று கற்பனை செய்கிறான். ஆகவே பிறர் அடையும் வெற்றிகள் அவனை இழுத்து மெய்யின் வெறுமைக்குள் கொண்டு நிறுத்துகின்றன. அதையே ஒவ்வாமையாக, கசப்பாக, சீற்றமாக அவன் வெளிப்படுத்துகிறான். அதற்கான சொற்களை பின்னரே கண்டுகொள்கிறான். குலமென்றும் குடியென்றும் மரபென்றும் நெறியென்றும்” என்றான் துரியோதனன்.

துச்சாதனனின் தோளில் கைவைத்து அவன் தொடர்ந்தான். “ஆனால் மீண்டும் மீண்டும் இச்சிறப்பு சொல்லப்படுகையில் நுரை அடங்குவதுபோல் இவை அடங்கி அழிவதை காணலாம். ஏனெனில் வெற்றி என்பது எத்தனை நாமறித்து சொல்லாடினாலும் இல்லாமல் ஆகிவிடுவதில்லை. ஊழிக்காலம் முழுக்க அலைகள் அறைந்தாலும் கடலோரப்பாறை அங்குதான் இருக்குமென்று சூதர் சொல்லுண்டு. அந்தத் தேர் விழிக்கூடான ஒன்று. அது தெருவிலிறங்குகையில் அதன் அழகு வெல்லும். அதை கவிஞர் பாடத்தொடங்குவர். இதே மானுடர் அவர்களின் நாவுகளால் அத்தேரின் சிறப்பையும் அதில் ஊர்பவனின் அழகையும் பெருமையையும் சொல்லும் நாள் விரைவில் வரும்.”

துச்சாதனன் துரியோதனனை சிலகணங்கள் நோக்கிவிட்டு “அத்தகையதோர் தேர் நமக்கும் இருப்பின் நன்று என்று சுபாகு கூறினான்” என்றான். “இல்லை, இனி அஸ்தினபுரி ஒரு தேர் செய்யும் என்றால் அது அங்கநாட்டுத் தேரைவிட ஓர் அடி குறைவானதாகவும் ஒரு படி கீழானதாகவுமே இருக்கும். அவ்வாறொன்றைச் செய்து நிறுத்துவதென்பது நமது குடிகளால் விரும்பப்படாது. ஆகவே அஸ்தினபுரியில் இனி பொற்தேர் ஒருபோதும் அமைக்கப்படாது” என்று துரியோதனன் சொன்னான். துச்சாதனன் ஒன்றும் சொல்லவில்லை. “சொல்க, உனக்கு விழைவிருக்கிறதா?” என்றான் துரியோதனன். “மூத்தவரே, நான் உங்கள் இளையோன்” என்றான் துச்சாதனன்.

சம்பாபுரியின் செங்கதிரோன் ஆலயத்தில் நிகழ்ந்த பெருவிழவிற்கு அஸ்தினபுரியிலிருந்து துரியோதனனும் தம்பியர் எண்மரும் சென்றிருந்தனர். விழவுக்குப் பின் நிகழ்ந்த அணியூர்வலத்தில் அந்தத் தேர் முதல்முறையாக தெருவில் ஓடியது. விழாவுக்கென அமைக்கப்பட்டிருந்த மேடையில் அமர்ந்து அப்பால் தெரிந்த தேரை நோக்கிய துச்சாதனன் “மூத்தவரே, இது அணித்தேரல்ல, போருக்குரிய தேர்” என்றான். அதை முன்னரே உணர்ந்திருந்த துரியோதனன் தலையசைத்தான். துச்சகன் உள்ளக்கிளர்ச்சியுடன் “இரும்பிலும் பித்தளையிலும் சகடங்கள் வார்க்கப்பட்டுள்ளன. அதன் மரத்தூண்களுக்கு மேல் இரும்புக்கவசங்கள் உள்ளன. அதற்குமேல்தான் வெள்ளியும் பொன்னும் பரப்பப்பட்டுள்ளன” என்றான்.

துச்சாதனன் “இதை போர்க்களத்திற்கு கொண்டு வருவதுபோல அறிவின்மை பிறிதில்லை என்றே தோன்றுகிறது. பிற தேர்களைவிட அரைப்பங்கு உயரம். கண்கவரும் செம்மஞ்சள்

ஒளி. எங்கிருந்தாலும் இது விழிக்கு துலங்கித் தெரியும். நெடுந்தொலைவிலிருந்தே நீளம்புகளை இதை நோக்கி தொடுக்க முடியும். யானைகள் இதைக் கண்டு சினக்கும். தன்னை தான் தான் என்று படைமுகப்பில் எழுந்து அறிவிப்பது போன்றது இத்தேரில் ஊர்வது" என்றான். துர்மதன் "இத்தேரிலா அங்கநாட்டரசர் இனி படைமுகம் வரப்போகிறார்?" என்றான். சுபாகு "படைமுகப்பில் எழுவதென்பது இருவகையானது. முதல்நாள் படைகளை ஊக்கப்படுத்தும்பொருட்டு அணிசெய்யப்பட்ட தேரில் அரசர்கள் ஊர்வது பாரதவர்ஷம் எங்குமிருக்கும் வழக்கமே" என்றான்.

சகன் "ஆனால் போர்க்களத்தில் பொன்னுக்கு இடமில்லை என்றல்லவா சொல்வார்கள்?" என்றான். சுபாகு "ஆம், அதைத்தான் சொன்னேன். அது நெறிமீறல். ஆனால் தெய்வங்கள் நெறிகளைக் கடந்தவை. போருக்கு படைகள் எழுகையில் முகப்பில் இப்பொற்தேர் வருமெனில் தங்கள் அரசன் இறையருள் கொண்டவன் என்றும் வெல்லற்கரியவன் என்றும் படைகள் எண்ணக்கூடும். போர்களில் வெல்வது எப்போதுமே படைகளின் உள்ளுறைந்த பெருமிதம்தான்" என்றான். துரியோதனன் நகைத்து "அவன் இப்பொற்தேரில்தான் படைமுகம் கொள்வான். முழுப் போருக்கும் இத்தேரிலேயே நின்றிருப்பான். அவன் ஆணவத்தை நானன்றி எவர் அறிவார்?" என்றான்.

"ஆனால்..." என்று துச்சாதனன் சொல்லத்தொடங்க "அதன் இடர்களனைத்தையும் அவன் அறிவான். அவ்விடர்கள் ஒன்றும் தனக்கொரு பொருட்டல்ல என்று அறிவிக்கிறான். இத்தேர் அவனுக்கு பிறர் சூட்டும் இழிவுகள் அனைத்திற்கும் அவன் உரைக்கும் செவ்வொளி கொண்ட மறுமொழி" என்றான்.

“போரில் பொன்னுக்கு ஒப்புதலில்லை அல்லவா?” என்று சமன் கேட்டான். “பொன்னணிகளுக்கு விலக்கு என்றே நூல்கள் உரைக்கின்றன. தேர் பொன்னால் கூடாதென்று எங்கும் சொல்லப்படவில்லை” என்று அப்பால் நின்றிருந்த பூரிசிரவஸ் கூறினான். நகைத்தபடி “ஏனென்றால் இதுவரை பொற்தேரில் எவரும் போருக்கெழுந்ததில்லை” என்றான்.

“போரில் பொன் முற்றிலும் பயனற்ற உலோகம். அது அணியென்று மட்டுமே இதுவரை பார்க்கப்பட்டு வந்தது. மரத்தூண்களுக்கு மேல் இரும்புக்கவசங்கள் அணிவிப்பது வழக்கம். உலோகத்தில் எவரும் தேர் செய்வதில்லை. அந்த எடையை போர்க்களத்தில் விரைந்து இழுக்க வேண்டுமெனில் ஏழு புரவிகள் போதாது. அதற்கு மேல் புரவிகள் என்றால் களத்தில் அவை விரைவதற்கு இடமிருக்காது. கடிவாளத்தால் அவற்றை ஆளவும் இயலாது. ஆகவே உறுதியான மென்மரத்தில் தேர்களைச் செய்து தூண்களுக்கு கவசமும் சகடங்களுக்கு பட்டையும் அணிவித்து போருக்குக் கொண்டுவருவதே இன்றுவரை வழக்கம்” என்றான் சுபாகு.

“இந்த தேரின் எடை என்ன என்று தெரியவில்லை. பேரெடை கொண்டிருக்கிறதென்றால் இதை போரில் எவ்வாறு விரைந்திழுப்பார்கள் என்பதும் புரியவில்லை. நாமறியாத கலிங்கத்துப் பொறிசூழ் திறனொன்று இதில் செயல்பட்டிருக்கக்கூடும்” என்று பூரிசிரவஸ் சொன்னான். துச்சாதனன் “இது வெறும் அணித்தேர். வேண்டுமென்றே போர்த்தேரின் வடிவில் அமைக்கப்பட்டுள்ளது” என்றான். “போருக்கெழாத போர்த்தேர்” என்றான் துச்சகன். துரியோதனன் “போருக்கெழுந்தால் பொன்னை வெல்ல இரும்பால் இயலாது” என்று சொல்லி மீசையை நீவிவிட்டு நகைத்தான். அவர்கள்

அமர்ந்திருந்த மேடையிலிருந்து அப்பால் தேரின் கொட்டகை தெரிந்தது. பொற்கவசமணிந்த தெய்வம் கருவறையில் நின்றிருப்பதுபோல அது அங்கே சுடர்கொண்டிருந்தது.

அந்தத் தேர் அதன் கொட்டகையிலிருந்து வெளிவருவதை முரசுகள் அறிவித்தபோது சம்பாபுரியின் குடிகள் ஒருவர் மீது ஒருவரென எழுந்தனர். தன்னைச் சுற்றி மானுட உடல்களாலான அலையொன்று சுருண்டு பொங்குவதை துச்சாதனன் கண்டான். ஓசை வந்தறைந்து அவர்கள் அமர்ந்திருந்த பட்டுத் திரைச்சீலை சூழ்ந்த மேடையை அதிரச்செய்தது. தேர்க்கொட்டகையின் முப்புறமும் தொங்கவிடப்பட்டிருந்த பட்டுத் திரைச்சீலைகள் வீரர்களால் இழுத்து மேலேற்றப்பட்டன. கடலலை பின்னடைவதுபோல அவை வளைவுகளென சுருங்கி மேலெழ அங்கே கனற்குவியலொன்று எழுந்ததுபோல் மின்னி நோக்கை பறித்தது அத்தேர். அதில் ஏழு புரவிகள் பூட்டப்பட்டிருந்தன.

“ஆம், ஏழு புரவிகள்தான்” என்றான் சுபாகு. “அதன் விரைவு என்னவென்று பார்க்கவேண்டும். ஏதேனும் பெருஞ்சாலையில் அது ஓடுகையிலேயே கணிக்க முடியும்.” பூரிசிரவஸ் “அல்ல கௌரவரே, அதன் சகடத்தின் முதல் அசைவிலேயே தெரிந்துவிடும். ஒரு தேரின் விசை என்பது எத்தனை விரைவில் அது விரைவு கூட்டுகிறது என்பதையே சார்ந்துள்ளது” என்றான். தேர் முகப்பின் அமரபீடத்தில் கர்ணனின் தேரோட்டியான அருணன் ஏறி அமர்ந்தான். அவன் பொற்பூச்சுள்ள இரும்புக்கவசங்கள் அணிந்து தலையில் செம்பருந்தின் இறகுகொண்ட இளஞ்செந்நிற தலைப்பாகை சூடியிருந்தான். சவுக்கால் மெல்ல காற்றில் ஒரு முறை அவன் சொடுக்கியதும் தேர் அசைந்து பொற்குழம்பு

அலைகொள்வதுபோல் ஒரு ததும்பலை வெளிப்படுத்தியது. அங்கிருந்து வீசப்பட்டதுபோல் அது விசைகொண்டு அவர்களின் மேடையைக் கடந்து முன்னால் சென்றது.

பூரிசிரவஸ் "எடைமிக்க தேர் எவையும் இத்தனை விரைவு கொண்டிருப்பதில்லை" என்றான். "மும்மடங்கு விசை!" என்று சுபாகு சொன்னான். "எப்படி?" என்று சமன் கேட்டான். "எடை மிகுதி. அதில் ஐயமே இல்லை. இத்தனை உலோகத்தையும் தேர் தன்னில் ஏற்றிக்கொண்டுள்ளது. அவ்வெடை விசை குறையாது செல்லும் வண்ணம் ஏதோ பொறி அமைக்கப்பட்டுள்ளது" என்று பூரிசிரவஸ் சொன்னான். பின்னர் "இன்றிரவு நானே இத்தேரை சென்று பார்த்துவருகிறேன்" என்றான். துரியோதனன் வாய்விட்டு நகைத்து "இப்போதே அச்சிற்பிகளை வரவழைத்து கேட்டுவிடுவோம்" என்றான். "அல்ல, அதை நாமே அறிவதில்தான் நாம் பயில்கிறோம்" என்று பூரிசிரவஸ் சொன்னான்.

அப்பொற்தேர் களமுற்றத்திற்குச் சென்று நிற்க கதிரவன் ஆலயத்தில் வழிபட்டு அரசியர் இருபுறமும் துணைவர பொற்கவசங்களும் மணிக்குண்டலங்களும் ஒளிவிட செம்பருந்தின் இறகு சூடிய அங்கநாட்டின் சூரியபட மணிமுடியுடன் கர்ணன் படிகளில் இறங்கி கீழே வந்தான். சம்பாபுரியின் குடிகள் தங்கள் தலைப்பாகைகளையும் மேலாடைகளையும் தூக்கி விண்ணில் வீசி "அங்கநாட்டரசர் வெல்க! கதிர்மைந்தர் வெல்க! வெல்லற்கரிய வீரர் வெல்க! விழிதிகழ் வேந்தர் வெல்க! பெருங்கொடைச் செல்வர் வெல்க!" என்று வாழ்த்துக் குரலெழுப்பி கூத்தாடினர். கர்ணன் செம்பட்டு விரித்த படிகளினூடாக ஏறி தேரின் உள்ளமைந்த அரியணையில் அமர்ந்தான். இரு அரசியரும் இரு புறமும்

அமர்ந்துகொள்ள தேர் கிளம்பி சம்பாபுரியின் தெருக்களினூடாகச் சென்றது.

இரு புறத்திலிருந்தும் எழுந்து தேர் மேல் பொழிந்த மஞ்சள் அரிசியும் மலர்களும் இளங்காலைப்பொழுதில் பொன் அலைகளாகவே தெரிந்தன. துரியோதனன் முகம் மலர்ந்து அதை பார்த்துக்கொண்டிருந்தான். ஏதோ ஒருகணத்தில் உளம்நெகிழ்ந்து தலைகுனிந்து இரு கைகளாலும் தன் கண்களை அழுத்திக்கொண்டான். துச்சாதனன் குனிந்து "மூத்தவரே..." என்றான். உடலில் மெல்லிய விதிர்ப்பொன்று ஓட சிறு விம்மல் துரியோதனனிடமிருந்து வெளிப்பட்டது. பின்னர் தலையைத் தூக்கி "இளையோனே, அவனன்றி இப்புவியில் பொற்தேரில் ஊரும் பெற்றி கொண்டவன் எவன்? கதிரவன் முகில்களில் எழுவதுபோல் ஒவ்வொரு அசைவிலும் பேரழகு!" என்றான்.

துச்சாதனன் திகைப்புடன் மூத்தவனை நோக்கினான். துரியோதனன் களிவெறி கொண்டு கண்கள் விழிக்க இரு கைகளையும் விரித்து "அறிக உலகு! அவன் தோழன் நான்! அத்தேரில் வாளேந்தி அவனருகே அணுக்கக்காவலனாக நிற்கும் பேறு கிடைக்குமென்றால் அது என் பிறவிப் பயன் என்றே கருதுவேன். அவன் தோழன் நான்! இப்புவி உள்ள அளவும் அவனது தோள்தோழன் என்றே நான் பெருமை கொள்கிறேன்!" என்றான். திகைப்புடன் "அரசே!" என்று பூரிசிரவஸ் சொல்ல துரியோதனன் எழுந்து கைகளை வீசி "வெற்றிகொள் வீரன் வாழ்க! அங்கநாட்டரசர் கர்ணன் வாழ்க! கதிர்மைந்தர் வாழ்க!" என்று குரல் எழுப்பினான்.

துச்சாதனன் அண்மையில் அரசர் வருகையை அறிவிக்கும் முரசொலி எழுந்துகொண்டிருப்பதை கேட்டுக்கொண்டிருந்தான்.

காட்டிலிருந்த அனைத்துப் பறவைகளும் கலைந்து வானில் எழுந்து சூழ்ந்து பறந்து முழக்கமிட்டன. அவையும் வரவேற்பொலி எழுப்பி வாழ்த்துக் கூவுவதாக அவன் எண்ணிக்கொண்டான். சூதர்கள் அவ்வாறுதான் எழுதுவார்கள் என்று எண்ணியபோது புன்னகைத்தான். தொலைவில் பொற்தேரின் முகப்பு தெரிந்தது. அவர்கள் அணுகிச்செல்ல தேர் அந்த முதற்காலைப் பொழுதின் முற்றிய இருளில் சூழ்ந்திருந்த பந்தங்களிலிருந்து அனலொளியைப் பெற்று பற்றிஎரிவதுபோல வந்துகொண்டிருந்தது. ஒரு மாபெரும் வேள்விச் சுடர் என்று துச்சாதனன் மீண்டும் எண்ணிக்கொண்டான். உடனே அதையும் எங்கோ சூதர் சொல்லியிருப்பார்கள் என்ற எண்ணம் எழ அவன் புன்னகைத்தான்.

ஜைத்ரம் என புகழ்பெற்றிருந்த அந்தப் பொற்தேரில் கர்ணன் கையில் வில்லுடன் நின்றிருப்பதை அவன் கண்டான். அக்கணம் பறவைகளின் ஒலி மாறுபடுவது அவனுக்குத் தெரிந்தது. அவனுக்குப் பின்னால் ஒன்றுதொட்டு பிறிதொன்று என கௌரவப் படையின் அத்தனை முரசுகளும் ஓசையிட்டன. அவன் அவற்றை நோக்கிவிட்டு திரும்பிப்பார்த்தப்போது வானில் முதற்கதிரின் ஒளி எழுந்திருந்தது. எங்கிருந்தென்றில்லாமல் சுடர்ப் பொழிவொன்று சாய்ந்து அப்பொற்தேரின் மீதும் அதில் அமர்ந்திருந்த பேரழகன் மீதும் விழுந்தது. இரு கைகளையும் கூப்பியபடி கண்களில் நீர்வழிய துச்சாதனன் நோக்கிக்கொண்டிருந்தான்.

[வெண்முரசு விவாதங்கள்]

# கார்கடல் - 15

துச்சாதனன் கர்ணனின் அருகே செல்கையில் நடை தளர்ந்தான். கைகள் கூப்பியிருக்க விழிநீர் வழிய நின்ற அவனை தொலைவிலேயே கண்டு தேரிலிருந்து இறங்கி இரு கைகளையும் விரித்தபடி கர்ணன் எதிர்கொண்டான். துச்சாதனன் அருகணைந்து அவன் கால்களை நோக்கி குனிய கர்ணன் நெஞ்சோடு அணைத்துக்கொண்டான். துச்சாதனனின் தலை கர்ணனின் மார்பளவுக்கே இருந்தது. ஒரு சொல்லும் இல்லாமல் அவன் கர்ணனின் மார்பில் தலைவைத்து விம்மி அழுதான். கர்ணன் அப்பால் நின்ற சமனையும் சகனையும் அருகே அழைத்து தன் கைவளையத்திற்குள் எடுத்துக்கொண்டான்.

துச்சாதனன் மூச்சை இழுத்து விட்டுக்கொண்டு கண்களைத் துடைத்தபடி விலக கர்ணன் “செல்வோம், இளையோனே” என்று சொல்லி திரும்பி தன் அகம்படியினரை நோக்கி புரவிகளை கொண்டுவரும்படி கைகாட்டினான். “நான் முறைமைச் சொல் உரைக்கவில்லை. சூதரும் பிறரும் வந்துள்ளனர். முறைமைகள்…” என துச்சாதனன் தவிப்பு கொள்ள “எதுவும் தேவையில்லை. நாம் முடிந்தவரை விரைந்து சென்று அரசரை பார்ப்போம்” என்றான் கர்ணன். “அவர் அங்கே அவைக்களத்தில் தங்களுக்காக காத்திருக்கிறார், அரசே. இரவு முழுக்க உங்களுக்கான காத்திருப்பாகவே நீடிக்கிறது” என்றான் சமன். கர்ணன் புன்னகைத்து “செல்வோம்” என்று வீரன் கொண்டுவந்து நிறுத்திய புரவியில் ஏறிக்கொண்டான்.

துச்சாதனன் புன்னகையுடன் “நீங்கள் வருவீர்கள் என்று உறுதியாகவே தெரியும். ஆயினும் வந்தது நிறைவளிக்கிறது, மூத்தவரே. இனி நாங்கள் அஞ்சுவதற்கேதுமில்லை. உங்கள்

வில் இங்கு எழுந்தது எங்கள் மூத்தவர் மூன்று தெய்வங்களாலும் காக்கப்பட்டதற்கு நிகர்” என்றான். கர்ணன் ஒன்றும் சொல்லாமல் புரவியை செலுத்தினான். மானுடப்பெருக்காக திசைஎல்லை வரை பரந்திருந்த படைகளைப் பார்த்ததுமே அவன் முகம் மலர்வதை துச்சாதனன் கண்டான். படைத்தலைவனுக்கு படைகளை பார்ப்பதைப்போல் இனிது பிறிதில்லை என்று தோன்றியதுமே வணிகனுக்கு அங்காடியை பார்ப்பதுபோல் என்று ஒரு மறு எண்ணமும் எழ அவன் புன்னகைத்துக்கொண்டான். உள்ளம் மலர்ந்திருந்தமையால்தான் அவ்வெண்ணம் எழுந்தது என பின்னர் எண்ணினான்.

கௌரவப் படைகளுக்குள் நுழைந்து செல்லச்செல்ல கர்ணன் சற்று அமைதியிழந்து சுட்டுவிரலால் மீசையைச் சுழற்றியபடி இருபுறமும் விழியோட்டிக்கொண்டு வந்தான். அவனை ஓரக்கண்ணால் பார்த்தபடி துச்சாதனன் தன் தேரில் நின்றிருந்தான். மையப்படை காவலரண் முன் வந்து நின்றதும் கர்ணன் இறங்கி இரு கைகளையும் விரித்து சோம்பல் முறித்தான். துச்சாதனன் அருகே வந்து “தங்களுக்காக மாதுலரும் மூத்தவரும் பிறரும் அவைகூடி காத்திருக்கிறார்கள், மூத்தவரே” என்றான். கர்ணன் “ஆம்” என்றபின் துச்சாதனனிடம் “படையமைவை வகுப்பது யார்?” என்று கேட்டான்.

துச்சாதனன் “அஸ்வத்தாமர் படை அமைவுகளை வகுக்கிறார். இறுதிப் படைசூழ்கையை அவையில் சொல்லாடி செம்மை செய்துகொள்கிறோம். பெரும்பாலும் அஸ்வத்தாமரும் ஜயத்ரதரும் இணைந்து படையை நடத்துகிறார்கள். துரோணரின் எண்ணத்தையும் தெரிந்துகொள்கிறோம்” என்றான்.

கர்ணன் “நூல்களில் கண்டபடி அமைக்கிறார்” என்றபடி நடந்தான். துச்சாதனன் அருகே நடந்தபடி “தாங்கள் சொல்வது விளங்கவில்லை, மூத்தவரே” என்றான். “மிகச் சரியாக படைநூல்கள் கூறும்படி அமைக்கப்பட்டுள்ளன இச்சூழ்கைகள். ஆனால் நூல்களில் இல்லாத ஒன்று எப்போதும் படைகளில் நிகழும். அதுவே போரை வடிவமைக்கும்” என்று கர்ணன் சொன்னான்.

“அஸ்வத்தாமர் ஒவ்வொன்றையும் எண்ணி இயற்றுபவர்” என்று துச்சாதனன் சொன்னான். “ஆம். ஆனால் முதல்நாள் படைகள் இங்கு அமைந்ததுமே ஒவ்வொரு பகுதிக்கும் சென்று நோக்கி இங்குள்ள படைகளின் இயல்பை உணர்ந்து படையமைவை அமைத்திருக்கவேண்டும். நாளை இங்கிருந்து எவ்வண்ணம் படைகள் எழுமென்பதை இன்று இங்கு படைகள் அமைந்திருக்கும் முறையிலிருந்தே என்னால் கணிக்க முடிகிறது” என்றபின் “அவர் நூல்கள் கூறியபடி வேல்படை விற்படை யானை குதிரைப் படைகளை முறையாக கலந்து அமைக்கிறார். அது போதாது” என்றான் கர்ணன்.

படைகளை பார்த்தபடி கர்ணன் தொடர்ந்தான். “படைகளின் குலங்களுக்கும் நாடுகளுக்கும் ஏற்ப அவற்றின் இயல்புகளும் அமைந்துள்ளன. அவ்வியல்பும் கருத்தில் கொள்ளப்படவேண்டும். சிற்றரசர்கள் மற்றும் நிஷாத குடிகளிலிருந்து உருவானவர்களின் படைகள் அருகருகே அமையலாகாது. அவற்றுக்கு நடுவே தொல்குடி ஷத்ரியர்களின் படைகளும் அமைந்திருக்கவேண்டும். நிஷாத படைப்பிரிவுகள் நேரடியாக ஒன்றுக்கொன்று தொடர்புகொள்ளவும் களத்தில் ஒற்றைப்படையென இணையவும் ஒருபோதும் வாய்ப்பளிக்கலாகாது.”

கர்ணனுடன் சென்ற சுபாகு அவன் சொல்வதை புரிந்துகொண்டு திரும்பிப் பார்த்தபின் “மெய்தான். பலமுறை களத்தில் அவர்கள் ஒற்றைத்திரளென்றாகி திரும்பி ஓடியிருக்கிறார்கள்” என்றான். கர்ணன் “அச்சம் எளிதில் பரவக்கூடியது. களத்தில் திகழும் இரு விசைகள் அச்சமும் ஆணவமும். அச்சமே அடித்தளம். அதை தாங்கி தடுப்பது வீரனின் ஆணவம். ஆணவம் தொற்றிக்கொள்வது அல்ல. அதை உடல்மொழியாக, அடையாளங்களாக, போர்க்கூச்சல்களாக மாற்றிக்கொள்ளவேண்டும். ஷத்ரியர் நெடுங்காலமாக அதை செய்து வருகிறார்கள்” என்றான்.

துச்சாதனன் “மெய்தான். நிஷாதர்களும் கிராதர்களும் எளிதில் அஞ்சிவிடுகிறார்கள். இறப்பதற்கு அவர்களுக்கு தயக்கமில்லை. ஆயினும் ஏன் அஞ்சுகிறார்கள் என்று நான் எண்ணியதுண்டு. எங்கோ சிலர் அஞ்சினால் அவர்கள் அச்சக்குரலெழுப்புகிறார்கள். அதை கேட்டு அறியாமலேயே பிறரும் பின்திரும்பி ஓடத் தொடங்குகிறார்கள்” என்றான். சுபாகு “மான்கூட்டங்கள் போல அச்சத்தை ஓர் காவலாக கொண்டிருக்கிறார்கள். அசைவுகளினூடாக அதை பிறருக்கும் பரப்புகிறார்கள்” என்றான்.

மீசையை நீவியபடி கர்ணன் சொன்னான் “தொல்குடிகள் திரும்பி ஓடுவது அச்சத்தால் மட்டும் அல்ல. அனைத்துக்கும் மேலாக அவர்கள் தங்கள் குலம் நீடிக்கவேண்டும் என்பதையே கருதுகிறார்கள். போரில் முற்றழியலாகாது என கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள்.” சுபாகு ஏதோ சொல்ல முகக்குறிகொள்ள கர்ணன் தொடர்ந்தான். “ஆனால் ஷத்ரியர் முற்றழிவதற்கென்றே படைக்கப்பட்டவர்கள். தோற்றுமடங்குவதைவிட முற்றழிவதே மேல் என

பயிற்றுவிக்கப்பட்டவர்கள். ஏனென்றால் தங்கள் குடியின் நான்கு கைகளில் ஒன்றே தாங்கள் என அவர்கள் அறிந்திருக்கிறார்கள். அவர்கள் அழிந்தாலும் அவர்களின் குடி அழியாது. வைசியர்களில் இருந்தும் சூத்திரர்களில் இருந்தும் அவர்களின் குடி ஷத்ரியர்களை உருவாக்கிக்கொள்ள முடியும். அவ்வாறு முன்னரும் நடந்துள்ளது.”

சுபாகு “முதலைபோல கைகால்கள் மீண்டும் முளைக்கும்போலும்” என்றான். கர்ணன் சிரித்தான். துச்சாதனன் “ஷத்ரியர்கள் அச்சத்தை மறைக்கக் கற்றவர்கள்” என்று சிரித்தான். கர்ணனும் சிரித்து “மெய்தான். பின்னடைகையில் அதை ஒரு போர்சூழ்ச்சியாக எண்ணிக்கொள்ளவும், அவ்வாறே குரலெழுப்பிக் கொள்ளவும் அவர்களால் இயலும்” என்றான். தாங்கள் அந்தச் சிரிப்பினூடாக கர்ணனின் வருகையை கொண்டாடிக்கொண்டிருப்பதாக துச்சாதனன் உணர்ந்தான். “தாங்கள் ஆணையிடுங்கள், மூத்தவரே! படையெழுகை நிகழ்வதற்குள் படையமைப்பை மாற்றிவிடலாம்” என்றபடி சுபாகு கர்ணனை தொடர்ந்தான். கர்ணன் “இன்னும் இப்படைகளை நடத்தும் பொறுப்பு எனக்கு அளிக்கப்படவில்லை. ஆகவே நான் ஆணையிடுவது முறையாக இருக்காது” என்றான்.

துச்சாதனன் “தாங்கள் எனக்கு ஆணையிடலாம். நான் அவ்வாணையை நிறைவேற்றுகையில் எவரும் என்னை தடுக்க இயலாது. நான் அஸ்தினபுரி அரசனின் செம்பாதி” என்றான். கர்ணன் மீண்டும் நகைத்து “எவருக்கும் அதில் ஐயமும் இருக்காது. ஆனால் துரோணர் மெய்யை அறிவார்” என்றான். துச்சாதனன் சில கணங்கள் அவனை கூர்ந்து பார்த்துவிட்டு “மெய்தான்” என்றபின் “விந்தையாக உள்ளது, மூத்தவரே.

இத்தனை ஆண்டுகளில் பாரதவர்ஷத்தில் விழுந்த அனைத்து முடிச்சுகளும் இந்தப் போர்க்களத்தில் சிலநாட்களில் அவிழவிருக்கின்றன. பல அறுந்துகொண்டிருக்கின்றன” என்றான். தலையை அசைத்து “தன் விற்களத்திலிருந்து உங்களை துரோணர் வெளியேற்றிய காட்சி இன்னும் என் விழிகளில் இருக்கிறது. இன்று முதன்மை வீரராக உங்களை அவர் தன் படையில் நிறுத்தப்போகிறார்” என்றான்.

கர்ணன் “இன்னும் அம்முடிவு எட்டப்படவில்லை” என்றான். துச்சாதனன் “எவருக்கும் வேறு வழியில்லை, மூத்தவரே. தாங்கள் இன்னும் போர்க்களத்தை பார்க்கவில்லை. போர்க்களத்தில் எழும் அறியா விசைகளின் நெறிகளால் நாம் தோல்வி காண்கிறோம் எனில் அதுகூட புரிந்துகொள்ளத்தக்கது. ஆனால் இங்கே ஒருமுறைகூட நாம் முழுத் தோல்வியை அடையவில்லை. நம்மிடம் நிகரற்ற வீரர்கள் இருக்கிறார்கள். ஆயினும் எங்கள் அனைவருக்கும் தெரிந்துள்ளது, இந்தப் பெருங்கட்டமைப்பு அடித்தளம் ஆற்றலிழந்து சரிந்துகொண்டிருக்கிறது என. அது பீஷ்ம பிதாமகர் களம்படுவது போன்ற பெருநிகழ்வில் மட்டும் தெரிவதில்லை. ஒவ்வொரு சிறுநிகழ்விலும் வெளிப்படுகிறது. அடிசரிந்து நிற்கும் கல்ஆலயத்தின் ஒவ்வொரு தூணும் சற்றேனும் நிலை மாறியிருப்பதுபோல” என்றான்.

கர்ணன் துச்சாதனனின் தோளில் கையை வைத்து “களத்திற்கு வந்தபின் பேசக் கற்றுக்கொண்டாய், இளையோனே” என்றான். துச்சாதனன் நகைத்து “இங்கே போருக்கு நிகராகவே ஒவ்வொரு நாளும் சொற்களமும் நிகழ்கிறது” என்றான்.

துரியோதனனின் பாடிவீட்டின் முன் நின்றிருந்த துச்சலனும் துர்முகனும் அங்கிருந்து கர்ணனை நோக்கி வந்தனர். தலைவணங்கி “தங்களுக்காக மூத்தவர் அவைகூடி காத்திருக்கிறார். இளைப்பாறிச் செல்வதற்கு பொழுதில்லை, மூத்தவரே” என்றான் துர்முகன். அப்போதுதான் துச்சாதனன் ஒன்றை உணர்ந்தான். விடிவதற்கு இன்னும் ஒரு நாழிகைக்கு மேலிருக்கும். அப்படியென்றால் சற்று முன் கர்ணன் குருக்ஷேத்ரத்திற்குள் புகுந்தபோது அவன் கண்ட ஒளி எது? வானிலிருந்து புலரியின் பெய்யொளி என்று அப்போது தோன்றியது. முகில் ஒன்று சற்றே விலகி அவ்வொளியை பாய்ச்சியது என. அது விழிமயக்கா? அன்றி எங்கேனும் நீர்ப்பரப்பு பந்த ஒளியை எதிர்பாய்ச்சியதா? ஆனால் அவனுக்கு முற்றிலும் தெளிவாக இருந்தது, அது முதற்புலரியின் பொன்னொளியேதான்.

அவன் திரும்பி கர்ணனை பார்த்தான். கர்ணன் அப்போது சற்றே நிலையழிந்து உள்ளோடும் எண்ணங்களுக்குள் அளைந்துகொண்டிருப்பது தெரிந்தது. சுட்டுவிரல் காற்றில் சுழித்து ஓடும் நீரில் எதையோ எழுதிப்பார்ப்பவன்போல. தலையை மெல்ல அசைத்து எதையோ மறுத்தான். பின்பு விழிதூக்கி தொலைவு வரை விரிந்திருந்த படைவெளியையும் அதன்மேல் கவிந்திருந்த மெல்லொளி ஊறிப்பரவிய வானையும் பார்த்தான். துச்சலன் உள்ளே சென்று கர்ணனின் வரவறிவித்து மீண்டான். இருவரும் வருக என்று கைகாட்டினான். கர்ணன் நீள் காலடி எடுத்து வைத்து உள்ளே நுழைந்தான்.

துச்சாதனன் உடன் சென்றபடி மீண்டும் கர்ணனை நிமிர்ந்து நோக்கினான். குருக்ஷேத்ரத்திற்குள் நுழைந்த கர்ணனின் ஒளி விழிக்குள் எழுந்தது. செஞ்சுடர் விரிந்த புலரிக் கதிரவன்போல. மெய்யாகவே அது உளமயக்கோ விழிமயக்கோ அல்ல. இவர் யார்? இது மானுட உயிர். பிணியும் துயர் சாக்காடும் கொண்டது. அது பிறிதொன்று. விறகு எரிகையில் எழும் விந்தையான கிளர்ச்சியொன்றை மிக இளமையில் அவன் அடைந்தான். விறகுக்குள்ளிருந்து இத்தனை ஒளி மிக்க ஒன்று எப்படி பீறிட்டெழுகிறதென்று வியப்பான். காய்ந்து மண்ணில் கிடக்கும் ஒவ்வொரு விறகுக்குள்ளும் பேரழகும் ஆற்றலும் கொண்ட அது உறைகிறதா என்ன? அனலுறையாத பொருளென்று எதுவும் இல்லை, இங்குள்ள பொருளனைத்தும் அனல் கொண்ட நிலைவடிவங்களே என்று பின்னர் கிருபர் அவனுக்கு கல்விச்சாலையில் சொன்னார்.

கர்ணன் அவைபுகுந்ததும் வாழ்த்தொலிகள் எழுந்தன. அனைவரும் எழுந்து நின்று "அங்கநாட்டு அரசருக்கு இன்வரவு!" என்று முகமன் கூறினர். அரியணையிலிருந்த துரியோதனன் இரு கைகளையும் விரித்தபடி முன்னால் வந்தான். கர்ணன் கைவிரித்து அருகணைய இருவரும் தோள்தழுவிக்கொண்டனர். துரியோதனன் சற்று விம்முவதுபோல் துச்சாதனனுக்கு தோன்றியது. தோள்களைத் தட்டியபடி பெருமூச்சுடன் இருவரும் பிரிந்தனர். துரியோதனனின் விழிகள் நீரணிந்திருப்பதை தொலைவிலேயே துச்சாதனன் கண்டான். அக்கணமே உளம் விம்மி அவனும் விழி நனைந்தான்.

கர்ணன் சென்று துரோணரை கால்தொட்டு சென்னி சூடினான். துரோணர் அமர்ந்தபடி இடக்கையை அவன் தலைக்குமேல்

நீட்டி தொடாமல் வாழ்த்துச்சொல்லை முணுமுணுத்தார். துச்சாதனன் இயல்பாக விழிதிருப்பி அங்கிருந்தவர்களை பார்த்தான். அனைவருமே உணர்வெழுச்சி கொண்டிருப்பதை அறியமுடிந்தது. அஸ்வத்தாமனும் ஜயத்ரதனும்கூட விழிகளில் நீர்மை மின்ன நின்றிருந்தனர். இயல்பாக சல்யரை பார்த்த துச்சாதனன் திகைத்தான். அவர் முகம் கடுஞ்சினம் கொண்டதுபோல இழுபட்டிருந்தது. இரு கைகளையும் இறுக முஷ்டி சுருட்டி தொடையோடு சேர்த்து மெல்ல தட்டிக்கொண்டிருந்தார்.

கர்ணன் திரும்பி அவரை அணுகி குனிந்து அவர் கால்களைத் தொட்டு சென்னி சூடியபோது அந்த முகம் நெகிழ்ந்து கடுந்துயர் கொண்டதுபோல் மாறியது. இரு கைகளையும் அவன் தலைமேல் வைத்து நடுங்கும் உதடுகளுடன் வாழ்த்து சொன்னார். அவன் எழுந்ததும் அவன் இரு கைகளையும் பற்றிக்கொண்டு அசைத்து மேலும் மேலும் வாழ்த்து சொன்னார். கர்ணனின் முகத்தில் தத்தளிப்பு தெரிந்தது. எதையோ சொல்ல விழைந்து தயங்குபவன்போல. அல்லது அவைச்சிறுமை கொள்பவன்போல. அக்கணமே அங்கிருந்து விலகிச் சென்றுவிட விழைபவன்போல.

கர்ணன் சகுனியை நோக்கி சென்று குனிந்து தாள்தொட்டு வணங்கினான். அவர் தலையில் கைவைத்து வாழ்த்தினார். அஸ்வத்தாமன் கர்ணன் அருகே வந்து வணங்கி கர்ணன் அமரவேண்டிய பீடத்தை காட்டினான். கர்ணன் அங்கு அமர்ந்த பின்னர்தான் துச்சாதனன் சிறிய உளநடுக்குடன் உணர்ந்தான், அது பீஷ்மர் முன்பு அமர்ந்திருந்த பீடம். அதில் எப்போதும் விரிக்கப்பட்டிருக்கும் செம்பழுப்பு மரவுரி அகற்றப்பட்டு இளஞ்செந்நிற விரிப்பு இடப்பட்டிருந்தது. கர்ணன் அதில்

அமர்ந்து தன் கால்களை நீட்டிக்கொண்டான். அவ்வசைவு ஏன் அந்த இருக்கையை அவனுக்காக அஸ்வத்தாமன் தெரிந்தெடுத்தான் என்பதை காட்டியது. அங்கு போடப்பட்டிருந்த இருக்கைகளிலேயே அதுதான் உயரமானது. அந்த அளவுகொண்ட வேறு இருக்கை அங்கே இல்லை.

பீஷ்மருக்கு நிகரான உயரம் கொண்ட உடல் கர்ணனுடையது. பீஷ்மர் தன் மெல்லிய கால்களை ஒன்றின்மேல் ஒன்று வைத்து கோத்து அப்பீடத்தில் வலமிருந்து இடமாக சற்றே சாய்ந்ததுபோல் அமர்வார். கர்ணன் இடமிருந்து வலமாக உடலை சரித்து, இரு கால்களையும் நன்கு நீட்டி, கைப்பிடிகளில் கைகளை தளர பதியவைத்து, விழிகள் நிலம் நோக்கி சரிந்திருக்க, குழல்கற்றைகள் தோளிலும் நெற்றியிலும் நிழல் வீழ்த்தி சுருள்கொண்டு நின்றிருக்க அமர்ந்திருந்தான். சில கணங்களிலேயே நெடுங்காலமாக அங்கு அமர்ந்திருப்பவன்போல் தோன்றினான். குருக்ஷேத்ரத்தின் அனைத்துச் சொல்லவைகளிலும் அவன் கலந்துகொண்டிருப்பதுபோல. எப்போதும் அவனை அங்கே உணர்ந்துகொண்டுதான் இருந்தோம் என்று துச்சாதனன் எண்ணினான்.

சகுனி எழுந்து “நாம் நம் படைநிலைமையை அங்கருக்கு முழுதாக விளக்கி அவரை இங்கு அழைத்து வந்திருக்கிறோம் என்று எண்ணுகின்றேன். நாம் போர்வெற்றியை நோக்கி சென்றுகொண்டிருக்கையில் ஒரு பிழையென பிதாமகரின் களவீழ்ச்சி நிகழ்ந்துள்ளது. இப்போரை பத்து நாட்களும் முதன்மைகொண்டு நடத்தியவர் அவர். பாண்டவப் படைகளின் பெரும்பகுதியை அவர் ஒருவரே அழித்தார். நமது படைசூழ்கைகள் முழுக்கவே அவரை முன்னிறுத்தியே

அமைக்கப்பட்டன. களத்தில் நம் அலகுக் கூரென அவர் இருந்தார். இப்போது அவருக்கு நிகரான வீரரொருவரை நிறுத்தி நம் படையை அமைக்கவேண்டிய நிலையிலிருக்கிறோம். அவர் வீழ்ந்தமையால் நம் படையில் ஏற்பட்டிருக்கும் தயக்கத்தை போக்க வேண்டியது முதற்தேவையாக உள்ளது. அங்கநாட்டரசர் கர்ணன் அதற்கு முற்றிலும் தகுதியானவர். ஆகவேதான் அவரை இங்கே அழைத்து வந்துள்ளோம்" என்றார்.

விழிதாழ்த்தி உடல் தளர்த்தி அமர்ந்திருந்த கர்ணன் அதை கேட்டவன்போலவே தெரியவில்லை. துரியோதனன் "அனைத்தையும் இளையோர் சொல்லியிருப்பார்கள், அங்கரே. ஆசிரியர் துரோணர் நமக்கு படைத்தலைமை ஏற்று நடத்துவார். அங்கப் படைகளுடன் முதன்மை கொண்டு இப்போரை நிகழ்த்தவேண்டியது உங்கள் பொறுப்பு" என்றான். கர்ணன் எழுந்து தலைவணங்கி "மறுசொல் இல்லை, உங்கள் விழைவெதுவோ அது ஆணையாக கொள்ளப்படும்" என்றான். பதற்றத்துடன் கைகளை நீட்டியபடி எழுந்து "இல்லை, இது எவ்வகையிலும் ஆணை அல்ல. உங்கள் நண்பனின் கோரிக்கை. உங்களிடம் காவல்கோருபவனின் பணிவுச்சொல்" என்றான் துரியோதனன்.

அவையை நோக்கி ஆழ்ந்த தணிந்த குரலில் கர்ணன் சொன்னான் "அவைக்கு இது என் சொல். எந்நிலையிலும் என் வில்லுடன் களம்நிற்பேன், எனக்கென எதுவும் கருதமாட்டேன். வெற்றியை ஈட்டி கௌரவ அரசருக்கு அளிப்பேன். அதை எதிர்க்கும் எவரையும் கொன்று வீழ்த்துவேன். வெற்றியன்றி எதற்கும் ஒப்பமாட்டேன். வென்றபின் அன்றி இக்களம்விட்டு மீளமாட்டேன். அறிக என் தெய்வங்கள்!" துச்சாதனன் மெய்ப்புகொண்டான். அவையிலிருந்தவர்கள் தங்கள்

படைக்கலங்களைத் தூக்கி “ஆம், அவ்வாறே ஆகுக!” என்று வாழ்த்தினர். கர்ணன் தன் கையிலிருந்த உடைவாளைத் தூக்கி “வெற்றிவேல்! வீரவேல்!” என்றான். அவையின் குரல் வெடிப்புற்று பெருகி எழுந்தது.

அவை மெல்ல அடங்க ஜயத்ரதன் எழுந்து “இன்னும் ஒன்றுள்ளது, அதை நானே சொல்லவேண்டும் என தோன்றுகிறது” என்றான். “இது ஷத்ரியக் குடியவை. இங்கு முன்னரே சிலவற்றை தெளிவுறப் பேசிவிடுவது நன்று. இப்போர் முடிந்த பிறகு அங்க நாட்டரசர் அடையப்போவதென்ன? நட்பின் பொருட்டு அவர் வந்து இங்கு போர்புரியப்போகிறார் எனினும் போருக்குப் பின் அங்கத்தை ஷத்ரிய அரசுகளில் முதன்மையானதென்று அஸ்தினபுரி கொள்ளவேண்டுமென்றும், வென்றமையும் பேரவையில் அத்தனை ஷத்ரிய அரசர்களும் தங்களுக்கு மேல் கோன்மை கொண்டதாக அங்கத்தை கருதவேண்டுமென்றும் நான் எண்ணுகின்றேன்.”

பிரக்ஜ்யோதிஷ மன்னர் பகதத்தர் சீற்றத்துடன் எழுந்து “அது எங்ஙனம்? குடிப்பிறப்பு என ஒன்றுள்ளது…” என்று தொடங்க ஜயத்ரதன் கைவீசி நிறுத்தி “இப்போது களம் நின்று உங்களுக்கு வெற்றியை ஈட்டித்தருவதற்கு குடிப்பிறப்பு தடையாகவில்லை எனில் நாளை அவைமுதன்மைக்கும் அது ஒருபோதும் தடையாக இருக்காது, பகதத்தரே” என்று உரக்க சொன்னான். துரோணர் “நாம் இப்போது படைவெற்றி குறித்து பேசுவோம். பிற பின்பு” என்றார். “அல்ல, ஷத்ரியர்களின் அவைகளில் அங்கர் எவ்வாறு நடத்தப்பட்டார் என்பதை அறிவேன். இந்தப் படைசூழ்கை தொடங்குகையிலேயே சிறுமை செய்து வெளியேற்றப்பட்ட அவரை இன்று அடிபணிந்து இந்த

அவைக்கு கொண்டுவந்திருக்கிறோம். அவருக்கு அவை முதன்மை அளிப்போம் எனும் ஒரு சொல் இங்குள்ள அவையிலிருந்து எழுவதை நாம் செய்யும் பிழையீடாகவும் கைமாறாகவும் கொள்வோம்” என்று ஜயத்ரதன் உரக்க கூவினான்.

அவை அமைதியாக இருந்தது. துரோணர் கசப்பு தெரியும் முகத்துடன் முனகலாக “அதை இப்போது பேசினால் வெறும் உளப்பிளவே உருவாகும்” என்றார். ஜயத்ரதன் “பேசிமுடித்தால் உளப்பிளவு இல்லாதாகும். நான் கூறுவதொன்றே. போர்வெற்றிக்குப் பின் அஸ்தினபுரிக்கு இணையான அவைமுதன்மை எந்த அவையிலும் அங்கத்திற்கு அளிக்கப்படவேண்டும். அங்கநாட்டரசர் கர்ணருக்கும் அவரது கொடிவழியினருக்கும் ஷத்ரியக்குடி என்றும் வாட்கடன் பட்டுள்ளதென்பதை இந்த அவையிலேயே நாம் அறிவிக்கவேண்டும்” என்றான்.

பிரக்ஜ்யோதிஷ மன்னர் பகதத்தர் “அதை இங்கு அறிவிக்க இயலாது. இது ஷத்ரிய அவை அல்ல” என்று சொல்ல ஏளனத்துடன் திரும்பிய ஜயத்ரதன் “இது எஞ்சிய ஷத்ரியர்களின் அவை. இங்குள்ளோர்தான் இனி ஷத்ரியர்களில் எஞ்சியிருப்பவர்கள்” என்றான். அவர் மேலும் ஏதோ சொல்ல கையசைக்க “ஒன்று செய்வோம். கர்ணருக்கு அவைமுதன்மை அளிக்க முடியாது என்று சொல்லும் ஷத்ரியர்கள் இப்போதே அவைவிட்டு நீங்கலாம் என்று அறிவிப்போம். எஞ்சுபவர்களைக் கொண்டு போர் நடத்துவோம். இங்கு அவர் ஒருவர் அன்றி எவரும் படைநிற்பதற்கு முதன்மையானவர் அல்ல” என்றான் ஜயத்ரதன்.

சல்யர் சீற்றத்துடன் எழுந்து “இங்கென்ன கௌரவப் படையை பிளப்பதற்கா நாம் வந்துள்ளோம்?” என்றார். “அவ்வாறு படை பிளக்குமென்றால் அது படைகளின் பிழை. அப்பிளவுக்கு ஒரு வாய்ப்பிருக்குமெனில் அதன் மேல் எதைக்கொண்டு பூசினாலும் நிற்கப்போவதில்லை” என்று ஜயத்ரதன் சொன்னான்.
துரியோதனன் “எனக்கு மாற்றுக் கருத்தில்லை.
இவ்வெற்றியின் பயனாக நமது கோல் நின்றிருக்கும் அனைத்து அவைகளிலும் அங்கம் குடிமுதன்மையை
அடையவேண்டுமென்றே நான் விழைகிறேன்.
அஸ்தினபுரிக்கும் ஒரு படி மேல் என அங்கம்
அமையுமென்றாலும் எனக்கு மாற்றுச்சொல் இல்லை” என்றான்.

சல்யர் “எனில் அதை நான் விழையவில்லை. அது எவ்வகையிலும் இயல்வதல்ல” என்றார். “அரசே, இந்தப் போருக்குப் பின் வெல்பவர்கள் எவராயினும் ஆற்றல் குன்றியவராகவே இருப்பர். ஷத்ரிய குடிகள் ஒன்றென நின்றாலொழிய நிஷாதர்களும் அரக்கர்களும் அசுரர்களும் எழுந்து வந்தால் எதிர்க்க இயலாது. அன்று அவர்களை ஒன்றென நிறுத்துவது குடித்தூய்மையாகவே இருக்க இயலும். இப்போது இவ்வண்ணம் ஒரு பூசலுக்கான வாய்ப்பை உருவாக்கி அளித்தோமெனில் அது ஒவ்வொரு நாளும் வளர்வதாக அமையும்” என்றார். பகதத்தர் “ஆம், நாம் படைகொண்டு எழுந்ததே குடித்தூய்மை வெல்லவேண்டும் என்று. குடிமேன்மையை பலியிட்டு அப்போரில் வெல்லவேண்டும் என்று இன்று சொல்கிறீர்கள்… மடமை!” என்றார்.

அவை அமைதியாக இருப்பதைக் கண்டு துச்சாதனன் திகைப்புடன் முகங்களை மாறி மாறி நோக்கினான். அவர்கள்

அனைவருமே பகதத்தரின் நோக்கு கொண்டிருப்பதாக தோன்றியது. அவன் துரியோதனனை பார்த்தான். துரியோதனன் ஏதோ சொல்ல எழுவதற்குள் கர்ணன் திரும்பி அவையினரை நோக்கி உரத்த குரலில் சொன்னான். “அவையினரே, நான் கோரவில்லை. இப்போருக்குப் பின் அனைத்து ஷத்ரிய அவைகளிலிருந்தும் ஒரு சொல்லும் எஞ்சாமல் கடந்து செல்வதென்றால்கூட எனக்கு மாற்று எண்ணமில்லை.” திரும்பி பகதத்தரிடம் “பகதத்தரே, இன்றுவரை கொடுப்பவனாகவே நின்றுள்ளேன். கொள்ளும்பொருட்டு எங்கும் கைநீட்டப்போவதில்லை” என்றான்.

துரியோதனன் “என் முடிவை இந்த அவையில் சொல்கிறேன்” என்று தொடங்க “வேண்டியதில்லை. இந்த அவையில் இப்பேச்சு இங்கேயே முடிவு கொள்க! நாம் போரைப்பற்றி மட்டும் பேசுவோம். நமக்கு இனி பொழுதில்லை” என்றான் கர்ணன். சகுனி எழுந்து “ஆம், அதையே நானும் எண்ணினேன். நமக்கு இன்னும் பல அவைகள் உள்ளன. இப்பேச்சை இங்கே நிறைவு செய்வோம்” என்றார். கர்ணன் தலைவணங்கி அமர்ந்தான். அவை நீள்மூச்சுகள் எழ மெல்ல இளகியமைவதை துச்சாதனன் கண்டான். சுபாகு அவன் தோளைத் தொட்டு “நன்று, இங்கே இதை பேசிமுடிக்க இயலாது” என்றான். துச்சாதனன் தலையசைத்தான்.

**வெண்முரசு விவாதங்கள்**

# கார்கடல் - 16

அவை முடிந்ததை நிமித்திகர் அறிவித்ததும் நிறைவை உரைக்கும் சங்கொலி முழங்க துரியோதனன் எழுந்து கைகூப்பிய பின் வலம் திரும்பி வெளியேறினான். அரசன் எழுந்தருள்வதைக் கூறி இடைநாழியில் கொம்பொலி எழுந்தது. கர்ணன் பீடத்திலிருந்து எழுந்து துரோணரை வணங்கினான். துரோணர் அவனை பாராதவர்போல இறுகிய முகத்துடன் கைகளை மார்பில் கட்டிக்கொண்டு நிலம் நோக்கி அமர்ந்திருந்தார். அவையினர் எழுந்து ஒருவரோடொருவர் உதிரிச்சொற்களில் உரையாடியபடியும் ஆடைகளைத் திருத்தியபடியும் வெளியே நடந்தனர்.

பகதத்தர் கர்ணனின் அருகே வந்து வணங்கி "பொறுத்தருள்க, அங்கரே! நான் குடிமேன்மை பேசுவதை நீங்கள் அரசியல்நோக்கிலேயே புரிந்துகொள்ளவேண்டும். அது என் பெருமைக்காகவோ உங்கள் சிறுமைக்காகவோ அல்ல" என்றார். "பிரக்ஜ்யோதிஷம் போன்ற நாடுகள் நெடுங்காலம் வெறும் தொல்குடிநிலமாக நீடித்தவை. இன்றும் தொல்குடி உளநிலைகள் வாழ்பவை. தொல்குடிகள் ஒவ்வொன்றும் முற்றிலும் தனித்தவை. பிறனை ஏற்க மறுப்பவை. அதன் தலைவர்கள் அனைவருமே தங்களை அரசர்கள் என்றே எண்ணுபவர்கள். முனிவர் அருளாலும் அந்தணக் குருதியாலும் வேள்வித் தகுதியாலும் ஷத்ரியர்களாகிவிட்டோம் என்று அறிவித்துக்கொண்டு ஒரு குடி பிறவற்றின்மேல் ஆதிக்கம் கொள்கிறது. அரசகுடியாகிறது. அரசுகள் உருவாவது அப்படித்தான்."

"தீர்க்கதமஸின் குருதியில் எழுந்தது பௌண்டரம். பௌண்டர அரசக்குருதியில் எழுந்தது பிரக்ஜ்யோதிஷத்தின் அரசகுடி.

அந்நம்பிக்கையால்தான் நூற்றெட்டு தொல்குடிகளை அடக்கி அவர்கள்மேல் என் அரியணையை நிறுவியிருக்கிறேன். எங்கள் அரசின் அடித்தளமே குடிமேன்மைதான். குடிமேன்மையை நான் அணுவிடை மறுதலித்தால்கூட என் அரசின் அடித்தளத்தில் விரிசலிடுகிறேன். நான் எந்த அவையிலும் அதற்கு உடன்பட முடியாது" என்றார் பகதத்தர். கர்ணன் சிரித்தபடி "நீங்கள் சொல்லாமலேயே அறிவேன். அரசர்களின் அனைத்துச் சொற்களும் அவர்களின் மணிமுடிக்குக் கீழிருந்தே எழுகின்றன" என்றான்.

பகதத்தர் "நீங்கள் களமெழுந்தமையால் நாம் வெல்வது உறுதியாயிற்று. கௌரவர் வெல்வார்கள். துரியோதனர் மும்முடி சூடுவார். அதை நான் பார்க்கப்போவதில்லை" என்றார். கர்ணன் ஏதோ சொல்ல நாவெடுக்க "நான் நிமித்திகரை உசாவிவிட்டே வந்தேன். இன்னும் இரு நாட்களில்" என்றார். "அங்கரே, போருக்குப் பின் அங்கம் படைவல்லமையால் முதன்மை நாடென்றாகும். அதன் கருவூலங்கள் நிறையும். அதைக்கொண்டு பெருவேள்விகளை நிகழ்த்துக! ராஜசூயமே குடிகள் ஷத்ரியர்களாகும் அரசப்பெரும்பாதை" என்றார் பகதத்தர். கர்ணன் "நான் வேள்விகளை இயற்றுவதில்லை" என்றான்.

பகதத்தர் "ஆம், நீங்கள் அள்ளிக்கொடுக்கும் செங்கை வள்ளல் என்று பாடும் சூதர்களே இதுவரை வேள்வியெதையும் இயற்றியதில்லை என்றும் சொல்கிறார்கள். ஆனால் குடிமேன்மை விழைந்தால் வேறு வழியில்லை" என்றார். கர்ணன் வெறுமனே புன்னகைத்தான். "என் குடியின் வாழ்த்துக்கள் உங்களைச் சூழட்டும், அங்கரே" என்றார் பகதத்தர். கர்ணன் அவரை வணங்கினான். அவர் கர்ணனின் தலையில்

கைவைத்து “நலம்சூழ்க! விழைவதை எய்துக!” என வாழ்த்தி திரும்பிநடந்து வெளியேறினார்.

கர்ணன் வெளியே நடந்தபோது துச்சாதனனும் ஜயத்ரதனும் அவனுடன் வந்தனர். கர்ணனின் நீண்ட காலடிகளால் அவன் மெல்ல அசைவதாகத் தோன்றினாலும் உடன்செல்ல ஜயத்ரதன் ஓடவேண்டியிருந்தது. “மூத்தவரே, தங்கள் வருகைபோல் இத்தருணத்தில் இனிது பிறிதில்லை. கருக்கிருளில் கதிரெழுந்ததுபோல்” என்று ஜயத்ரதன் சொன்னான். கர்ணன் புன்னகையுடன் அவன் தோளில் கைவைத்தான். உடன் வந்துசேர்ந்த அஸ்வத்தாமன் “அங்கரே, படைநிலைக்கு செய்யவேண்டிய மாறுதல்களை உரைத்தீர்கள் என்றால் விரைவாக ஆணைகளை இடுவேன். பொழுது ஒளிகொள்வதற்கு இன்னும் ஒரு நாழிகை உள்ளது. அதற்குள் முகப்பை மட்டுமாவது நாம் மாற்றி அமைத்துவிட முடியும். படைகள் குருக்ஷேத்ரத்திற்குச் சென்று அணிநிரக்கும்போதே அம்மாறுதல்கள் இயலும்படி செய்யலாம்” என்றான்.

கர்ணன் “முற்றாக மாற்றவேண்டும். அதற்கு இனி பொழுதில்லை” என்றபின் “சில முதன்மை மாறுதல்களை மட்டுமே சொல்கிறேன். எங்கே கற்றுச்சொல்லி?” என திரும்பி நோக்கினான். அஸ்வத்தாமன் “நான் செவிகேட்பதை மறப்பதில்லை. சொல்லுங்கள்” என்றான். “பாஞ்சாலரே, நாம் படைசூழ்கையை வகுக்கையில் எப்போதும் ஆற்றும் பிழை ஒன்று உண்டு. படைசூழ்கையை ஓர் அழகிய சிற்பம் என்று எண்ணிக்கொள்கிறோம். ஆகவே அது அழகொருமையுடன் புரைதீர்ந்ததாக இருக்கவேண்டுமென்று விழைகிறோம். நோக்கி நோக்கி சீரமைத்து அழகிய முழுவடிவொன்றை அமைக்கிறோம். அமைத்து முடித்ததும் குறையற்ற

சீர்மைகொண்டது என நிறைவுகொள்கிறோம். நன்கு வார்க்கப்பட்டது, ஆகவே வெல்வது என எண்ணிக்கொள்கிறோம்.”

“ஆனால் நாம் எண்ணியிராத ஒன்றுண்டு, அப்படை தன் எதிரில் ஓர் எதிர்ப்படையை சந்திக்கப் போகிறது. அப்படையின் கூறுகளே இதன் கூறுகளை வடிவமைக்கின்றன. எப்போதும் எதிரிப்படையையும் இணைத்துக்கொண்டு ஒற்றைப் பெருவடிவென நமது படைசூழ்கையின் வடிவை அமைத்தால் மட்டுமே களத்தில் நிலைகுலைவுகளை களைய முடியும்” என கர்ணன் சொன்னான். அஸ்வத்தாமன் விழிகளில் திகைப்புடன் “தாங்கள் கூறுவதை நான் இன்னும் சரியாக புரிந்துகொள்ளவில்லை, மூத்தவரே” என்றான்.

“நோக்குக, நமது படைசூழ்கை இன்று சகடவியூகம். எதிரில் அவர்கள் வகுத்துள்ளது கிரௌஞ்சவியூகம். வண்டிக்கும் நாரைக்கும் எந்தச் சிற்பத்தொடர்பும் இல்லை. ஆனால் வண்டிக்குமேல் நாரை பறந்து அமைந்து உடன்வந்துகொண்டிருக்கும் ஓர் உளக்காட்சி எழுமென்றால் நாம் நம் சூழ்கையை நன்கமைக்க முடியும். இளையோனே, நம் வண்டியை பழுதில்லாமல் அமைப்பதல்ல நமது பணி. வண்டியும் நாரையும் இரண்டும் இணைந்த ஒற்றைச்சிற்பம் ஒன்றை அமைப்பதுதான். எப்போதும் வண்டிநாரை என்றே அதை சொல்லவேண்டும். ஒரு தருணத்தில்கூட வண்டிச்சூழ்கை என்று அதை சொல்லக்கூடாது. ஏனென்றால் சொல் நம் உள்ளத்தில் எண்ணங்களை உருவாக்கும் ஆற்றல் கொண்டது. பிழையாக சொல்லப்பட்ட சொல் பிழையான எண்ணத்தையும் உருவாக்கும்.”

“ஆகவே நாம் அமைப்பது வண்டிநாரைச்சூழ்கை. அந்த வண்டிநாரை வடிவத்திற்குள் வண்டி எவ்வண்ணம் செயல்படும் என்று நாம் பேசலாம். வண்டியை நாரை வந்து தாக்குவதைப்பற்றி பேசினீர்கள் என்றால் வரும் களத்தில் நம்மால் வண்டிவடிவை நிலைநிறுத்தமுடியாமல் ஆகும்” என்றான் கர்ணன். ஒரு கணத்தில் அனைத்தும் புரிய துச்சாதனன் நிற்கமுடியாமல் உடல்பதறலானான். தன்னுள் புதிய அறிதல்கள் எல்லாமே பழுக்கக் காய்ச்சிய அம்புமுனைகள்போலவே நுழைகின்றன என எண்ணிக்கொண்டான். அதை அவன் ஏற்றுக்கொண்டு அந்தப் புண் அழியா வடுவென்று அவனில் எஞ்ச நெடுநாட்களாகும்.

கிளர்ச்சியுடன் அருகணைந்து கர்ணனின் கைகளைத் தொட்டபடி “ஆம்! ஆம்!” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “இத்தருணம் வரை நாங்கள் ஆற்றிய முதற்பிழை இதுவே என்று உணர்கிறோம். மூத்தவரே, ஒவ்வொரு படைசூழ்கை வகுக்கையிலும் இதோ ஒரு முழுமையை அடைந்துவிட்டேன் என்று நிறைவுறுகிறேன். அப்பெருமிதத்தை அவையில் சொல்கிறேன். அதிலிருக்கும் மெய்யான உணர்வால் அதை அவையினர் ஏற்கிறார்கள். அதை அவையோர் பாராட்டுகையில் நான் மேலும் உறுதி கொள்கிறேன். ஆனால் களத்தில் எழுந்த ஒரு நாழிகைக்குள் அச்சிற்பம் உடையத்தொடங்குவதை காண்பேன். நான் இயற்றிய வடிவை பிழையெனக் கருத என் உளம் ஒருங்காதென்பதனால் அனைத்துப் பிழைகளையும் படைகள் மேலும் படைநடத்துவோர் மீதும் சுமத்துவேன்.”

“மூத்தவரே… அதன்பின்னர் நிகழும் போர் என்பது நான் வடித்த அச்சூழ்கையின் உடைவுகளை மீட்டு சீரமைப்பது மட்டுமே. சரியும் மாளிகை ஒன்றை அள்ளி அள்ளி தாங்கி

ஒன்றோடொன்று பொருத்தி நிறுத்தும் முயற்சியாகவே போர்சூழ்கைகளை களத்தில் நின்று காப்பது அமைகிறது. இறுதியில் உடைந்து கிடக்கும் சூழ்கையைக் கண்டு திகைப்பேன். அதற்குள்ளிருந்து பீஷ்ம பிதாமகரும் துரோணரும் ஜயத்ரதரும் அரசரும் தங்கள் தனிவீரத்தால் மேலெழுந்து நின்றுபொருதி எய்திய வெற்றியே என்னுடையதென எஞ்சியிருக்கும். அவர்களே வெற்றியின் அடிப்படை என அறிந்திருந்தும் அவர்கள் என் சூழ்கையை சற்று பேணியிருந்தால் வென்றிருப்போம் என்று எண்ணிக்கொள்வேன்.” அஸ்வத்தாமன் உளவிசையால் சற்று திக்கினான்.

“ஆம், இதை நானும் எண்ணியுள்ளேன்” என்று ஜயத்ரதன் சொன்னான். “நல்ல படைசூழ்கை ஒன்றை அமைத்தால் அதன்மேல் நமக்கு நம்பிக்கை மிகுகிறது. அது வடிவு குலையாதிருந்தால் வெற்றி உறுதி என்று நம்பத்தலைப்படுகிறோம். ஆகவே அதன் வடிவை காப்பதொன்றையே போர்க்களத்தில் செய்துகொண்டிருக்கிறோம். அந்நிலையில் தற்காப்புப் போர் என்றாகிறது. போரில் தாக்குதலே வெற்றி. தற்காப்பெனும் எண்ணம் வந்ததுமே நாம் தோற்கத் தொடங்கிவிடுகிறோம்.”

துச்சாதனன் “மூத்தவரே, பீஷ்ம பிதாமகர் கற்காத போர்சூழ்கையா? அவர் ஏன் இதை உணரவில்லை?” என்றான். ஜயத்ரதன் இயல்பாக “அவர் தன்னைக் கடந்து எதையும் எண்ணாதவர்” என்றான். எளிதாக சொல்லப்பட்டாலும் அது உண்மை என உணர்ந்து துச்சாதனன் திடுக்கிட்டான். அந்தத் திகைப்பை பிறர் விழிகளிலும் கண்டான். கர்ணன் அதை உணராமல் “இம்முறை படைசூழ்கையின் வடிவை நான்

சுவடியில் பார்த்தேன்” என்றபின் கைநீட்ட அவன் எண்ணுவதை உய்த்து அஸ்வத்தாமன் தன் அருகே நின்றிருந்த ஏவலனிடமிருந்து தந்தப் பேழையை வாங்கித் திறந்து உள்ளிருந்து தோற்சுருளை எடுத்து அவனிடம் அளித்தான்.

கர்ணன் ஒருமுறை அதை கூர்ந்து விழியோட்டிவிட்டு அதை திருப்பி மீண்டும் கைநீட்டினான். ஏவலன் நீலவண்ண மையில் தோய்த்த முட்பன்றி எழுதுகோலை அளிக்க அதை வாங்கி தோலுக்குப் பின் விரைவாக வரைந்து ஒரு படைசூழ்கையை வகுத்தான். வண்டியும் நாரையும் ஒன்றென இணைந்த அவ்வமைப்பை ஒரு கணம் அஸ்வத்தாமனால் புரிந்துகொள்ள முடியவில்லை. “இது...” என்று நோக்கியபின் உரக்க “வண்டிநாரை” என்று சொல்லி கையை வைத்து “இது வண்டி, அது நாரை. ஆனால் பிணைந்து ஒன்றென்று ஆகிவிட்டிருக்கின்றன” என்றான்.

“நரசிம்மம்போல இரண்டும் ஒன்றான வடிவம் இது. ஒன்று இன்றி பிறிதொன்றிலாதது. போரில் எதிரி பிறன் அல்ல என்றுணர்க! அவன் நம் மறுபாதி. அவன் நாமேதான். அவனாகி நாம் நடிக்கையிலேயே அவனை அறிகிறோம். அவனை அறிந்த பின்னரே வெல்ல இயலும்” என்றான் கர்ணன். “ஆம்!” என்று ஜயத்ரதன் சொன்னான். “ஆம்! இது எத்தனை எளிதாக உள்ளது. ஆனால் ஏன் இதை என்னால் இக்கணம் வரை புரிந்துகொள்ள இயலவில்லை!” அஸ்வத்தாமன் “புதிய அறிதல் என்பது எப்போதும் சற்று நிலைமாறி நிற்றல் மட்டுமே என்று தந்தை சொல்வதுண்டு” என்றான்.

“உண்மை” என்று கர்ணன் சொன்னான். “ஆகவேதான் ஆசிரியரை மூன்றாம்விழி என்கின்றன நூல்கள். ஆசிரியனுக்குரிய தொல்வடிவென கல்லால மரத்தடியில்

அமர்ந்த தென்றிசைமுதலோன் முக்கண்ணன் என வகுத்தனர் மூதாதையர்." சுவடியை அஸ்வத்தாமனிடம் அளித்து "இதிலேயே ஆணைகள் உள்ளன. மிகச்சிறு மாறுதல்கள் மட்டுமே இப்போதைக்கு தேவை. இன்றைய படைசூழ்கை இவ்வாறு அமையட்டும். நாளை இதை முழுமை செய்துகொள்ளலாம்" என்றான்.

அஸ்வத்தாமன் தலைவணங்கினான். ஜயத்ரதனின் தோளில் தட்டிவிட்டு கர்ணன் திரும்பிப் பார்த்தான். சற்று அப்பால் நின்றிருந்த பூரிசிரவஸ் அருகணைந்து தலைவணங்கி "தாங்கள் மூத்தவரை தனியாக பார்க்க எண்ணுகிறீர்களா, மூத்தவரே?" என்றான். கர்ணன் "போருக்கு இனி பொழுதில்லை" என்றான். அந்தச் சந்திப்பை அவன் தவிர்க்கிறான் என்று துச்சாதனன் உணர்ந்தான். "அவர் எதிர்பார்க்கிறார். அங்கே சாமி மரத்தடியில் தன்னந்தனியாக அவர் நிற்பது அதன் பொருட்டே" என்றான் ஜயத்ரதன். கர்ணன் "ஆனால்..." என்றான். பூரிசிரவஸ் "நிலையழிந்து மீள மிகுபொழுதில்லை என்பதும் நன்றுதானே?" என்றான்.

கர்ணன் புன்னகைத்து "நன்று" என்றபின் அஸ்வத்தாமனின் தோளில் கைவைத்துவிட்டு நீண்ட காலடிகளுடன், களிறென மெல்ல ஆடும் நடையுடன் துரியோதனனை நோக்கி சென்றான். துச்சாதனன் அஸ்வத்தாமனைப் பார்த்து "அவரது ஒரு சொல் மூத்தவருக்கு தேவைப்படுகிறது. நேற்று இரவு முழுக்க உளம் தளர்ந்து துயிலாமல் இருந்தார்" என்றான். "உண்மையில் அவர் துயில்கொண்டு நெடுநாட்களாகிறது. அகிஃபீனா உருளைகள்கூட அவரை துயில் கொள்ள வைப்பதில்லை." அஸ்வத்தாமன் "சென்று அவரருகே நின்றுகொள்க!" என்றான். துச்சாதனன் "ஆம், மூத்தவர் அதை

விரும்புவார்” என்று வணங்கிவிட்டு கர்ணனுக்குப் பின்னால் சென்றான்.

துரியோதனனை அணுகிய கர்ணன் இரண்டடி விலகி நின்றான். துரியோதனன் கர்ணனை பார்க்காமல் இரு கைகளையும் பின்னால் கட்டி தலைகுனிந்து நிலம் நோக்கி நின்றான். அவன் விரிந்த தோள்களில் தசைகள் இறுகி நெளிந்துகொண்டிருந்தன. துச்சாதனனுக்கு அங்கே பிறர் இருப்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள் என்று தோன்றியது. கர்ணன் மெல்லிய புன்னகையுடன் துரியோதனனை நோக்கிக்கொண்டிருந்தான். அவன் ஏதோ சொல்லப்போகிறான் என்று துச்சாதனன் எண்ணினான். ஆனால் அவர்களிருவரும் ஒரு சொல்லும் பேசிக்கொள்ளவில்லை.

காலம் மெல்ல நீண்டு நீண்டு செல்ல துச்சாதனன் பொறுமையிழந்து சற்றே அசைந்தான். அது நிழலசைவாக சென்று துரியோதனனை தொட துரியோதனன் நிமிர்ந்து கர்ணனை பார்த்தான். உடைந்த குரலில் “என் தம்பியர் மண் மறைந்துவிட்டனர், அங்கரே” என்று சொல்லி இரு கைகளையும் விரித்தான். கர்ணனும் இரு கைகளையும் விரிக்க துரியோதனன் பாய்ந்து வந்து கர்ணனை இறுக தழுவிக்கொண்டான். தன் தலையை அவன் மார்பில் ஓங்கி அறைந்தபடி பெருத்த விசும்பல்களும் கேவல்களுமாக அழுதான். அவனை அணைத்து அவன் தோள்களை வருடியபடி கர்ணன் நின்றான். அக்காட்சியை நோக்க முடியாமல் துச்சாதனன் விழிதிருப்பிக்கொண்டான்.

கர்ணன் துரியோதனனின் குழல்களில் தன் முகத்தைப் பதித்து எதையோ சொன்னான். தானும் சென்று கர்ணனின் கால்களில் விழுந்துவிடவேண்டும் என்று துச்சாதனன் எண்ணினான். அங்கிருந்து அகன்றுவிடவேண்டும் என்றும் தோன்றியது. அதை நோக்காமலொழியவும் இயலவில்லை. கண்களில் நீர் மறைக்க துரியோதனன் அழுவதை துச்சாதனன் நோக்கி நின்றான். நெடுநேரம் அந்த அழுகை நீடித்தது. ஓய்ந்து விசும்பல்களும் மூச்சொலிகளுமாகி மீண்டும் வெடித்துக் கிளம்பியது. சொற்கள் அற்ற அழுகை. வெற்றொலி. காற்றின், விலங்குகளின், காட்டுமரங்களின், சிற்றுயிர்களின் ஓசைபோல். பின்னர் மெல்ல அமைதியடைந்து துயின்றவன்போல் கர்ணனின் மார்பில் துரியோதனன் கிடந்தான்.

துச்சாதனன் அவர்களிருவரும் காலம் மறந்து, இடம் அழிந்து நின்றிருப்பதை உணர்ந்து மெல்ல அருகணைந்து “மூத்தவரே, பொழுதாகிறது” என்றான். அச்சொல்லையும் அவர்கள் கேட்கவில்லை. மீண்டும் “பொழுதாகிறது, மூத்தவரே. படைநகர்வுக்கான முரசொலிகள் எழுந்துகொண்டுள்ளன” என்றான் துச்சாதனன். கர்ணன் தன்னுணர்வு பெற்று துரியோதனனின் கன்னங்களில் வழிந்த நீரை துடைத்து “கிளம்புவோம்” என்றான். துரியோதனன் பெருமூச்சுடன் “ஆம்” என்றான்.

ஒருகணத்தில் அத்தருணத்திற்காக இருவரும் நாணினர். அதை கடந்து முற்றாக மறந்து முன்பிருந்தவர்களாக மீண்டுவிட விழைந்தனர். துரியோதனன் சுற்றும் நோக்க கர்ணன் தன் ஆடைகளை சீரமைத்துக்கொண்டான். அவ்வசைவுகளினூடாக அவர்கள் மீண்டனர். துச்சாதனன் அத்தருணத்தை எளிதாக்கும்பொருட்டு ஏதேனும் சொல்லவேண்டுமென

விழைந்தான். அப்போது அவர்களிடையே நுழைவதும் பொருத்தமல்ல என்று தோன்றியது. தொலைவில் ஒரு யானை பிளிறிய ஒலியில் மெய்விதிர்க்க துரியோதனன் திரும்பி நோக்கினான். கர்ணனின் கைகளும் அதிர்ந்தன. அவர்களிருவரும் எத்தகைய மென்நிலையில் இருக்கிறார்கள் என்பதை அது காட்டியது.

"பொழுதாகிறது" என்றான் துரியோதனன். "ஆம்" என்றான் கர்ணன். "நாம் ஆற்றவேண்டிய முறைமைகள் உள்ளனவா என்று மாதுலரிடம் கேட்கவேண்டும்" என்று துரியோதனன் சொன்னான். கர்ணன் "ஆம், பொறுப்பென்பது அனைத்தையும் ஆற்றுவதுதான்" என்றான். அந்தப் பொருளிலாச் சொற்களினூடாக அவர்கள் மீண்டுவந்தனர். "நீ அழைக்காமலே வருவாய் என்று சில இரவுகளில் எண்ணுவேன். அழைக்காமல் நீ வந்துவிடக்கூடாதென்று உடனே உளம் பதறுவேன்" என்று துரியோதனன் சொன்னான். மிகத் தனிமையில் மட்டுமே அவர்கள் ஒருமையில் பேசிக்கொள்வார்கள் என்று உணர்ந்திருந்த துச்சாதனன் புன்னகை செய்தான்.

"எண்ணி இயற்றுவது என் இயல்பல்ல. இயற்றுவதை எண்ணுவதும் என் வழக்கமல்ல. ஆனால் இப்போரில் நீ உடனின்றி களம் இறங்கியது குறித்து எண்ணாத நாளில்லை. நான் இழந்தவை அனைத்தும் அந்தப் பிழைக்கான ஈடுதான்" என்றான் துரியோதனன். "அதை இனி பேசவேண்டியதில்லை. நாம் வெல்வோம்" என்று கர்ணன் சொன்னான். "கர்ணா, இனி வெற்றி என்பது எனக்கு பொருளோ புகழோ அல்ல. என்னை இக்களம் வரை கொண்டுசேர்த்த அவ்விழைவுகள் அனைத்தும் இரண்டாம் நாள் போரிலேயே என்னிலிருந்து உதிர்ந்துவிட்டன. இனி வெற்றி என்பது என் இளையோருக்கான பழிதீர்த்தல்

மட்டுமே. இவ்வண்ணம் அது உருமாறும் என்று எப்போதுமே கருதியிருந்ததில்லை” என்று துரியோதனன் சொன்னான்.

அவன் முகம் சுருங்கி துயர்கொண்டதாயிற்று. விழிகள் இடுங்க சினம் எழுந்தது. பற்களைக் கடித்து சீறும் மூச்சொலியில் சொன்னான் “அவன் ஒரு கணமும் தயங்காமல் என் இளையோரை கொன்று குவித்தான். அவர்களின் தலைகளை உடைத்து வெண்நிணம் சிதற...” அவன் கழுத்துத் தசைகள் இழுபட்டு அதிர்ந்தன. பற்கள் உரசிக்கொள்ளும் ஓசையை துச்சாதனன் கேட்டான். “ஆனால் நூறுமுறையேனும் அவன் மைந்தரை கொல்லும் தருணங்கள் எனக்கு வாய்த்தன. என்னால் அதை செய்ய இயலவில்லை. வில்லெடுக்கையில் வீரனாகவும் தொடுக்கையில் தந்தையாகவும் உருமாறுகிறேன். என்னால் மைந்தரை கொல்ல இயலாது.”

கர்ணன் “அவர்கள் கானேகுகையில் உன்னிடம் தன் மைந்தரை ஒப்படைத்துச் சென்றனர். அது விதுரரின் திட்டம். பிற எவரைவிடவும் அவர் நம்மை அறிந்தவர். மைந்தரை வளர்த்து பெருந்தந்தை என்றானவன் நீ. அவர்களோ தங்கள் மைந்தர்களையே மடியிலேற்றி கொண்டாடியவர்கள் அல்ல” என்றான். அதை கேட்காதவன்போல “இதனால்தான் நான் ஆற்றலிழக்கிறேனா? எதனால் அவர்களுக்கு அத்தயங்காமையும் பேராற்றலும் வருகிறது?” என துரியோதனன் சொன்னான். “மைந்தரைக் கொன்றவன் தந்தையை மேலும் எளிதாக வீழ்த்தினான். அவர் உடலில் அணுவிடை எஞ்சாமல் பாய்ந்தன அவன் அம்புகள்.”

“ஆயிரம் முத்தங்கள் என சூதர் பாடக் கேட்டேன்” என்று கர்ணன் புன்னகையுடன் சொன்னான். “எவ்வண்ணம் அது அவர்களுக்கு இயல்கிறது? ஏன் நான் தயங்குகிறேன்? கர்ணா,

அபிமன்யூவும் சுருதகீர்த்தியும் சர்வதனும் சுதசோமனும் எஞ்சும்வரை இப்போர் முடியாது. ஆனால் நானறிந்து ஒருபோதும் அவர்களைக் கொல்ல நம் படைகள் எழாது” என துரியோதனன் சொன்னான். கர்ணன் “ஏனெனில் அவர்கள் தரப்பில் பேரறம் உள்ளது. பேரறத்தின் பொருட்டு சிற்றறங்களை மீறலாம் என்று அவர்கள் உளம் ஒருங்குகிறார்கள். நாம் குடியறத்தின் பொருட்டு களம்நிற்பவர்கள்” என்றான்.

துரியோதனன் திகைத்து பின் உடல்நடுங்கலானான். கர்ணன் “நிலம் கோரி நாம் நின்றதும் ஷத்ரியப் பெருங்குடிகளை படையென இணைத்துக்கொண்டதும் குடியறத்தின்பொருட்டே. அக்குடியறம் தந்தையரையும் மைந்தரையும் கொல்வதை ஒப்புவதில்லை. எனவே நம்மால் ஒருபோதும் அதை செய்ய இயலாது” என்றான். “பிறகெப்படி நாம் வெல்வோம்? நாம் தோற்பதுதான் நெறியா?” என்றான் துரியோதனன். “அக்குடியறங்கள் அனைத்தையும் நான் மீறுகிறேன்” என்று கர்ணன் சொன்னான். “ஏன்? அதனால் நீ அடைவதென்ன?” என்று துரியோதனன் கேட்டான். “செஞ்சோற்றுக்கடன் எனும் பேரறம் என் முன் உள்ளது. அதன்பொருட்டு தெய்வங்களின் ஆணைகளை நான் மீறலாம். நூறுமுறை உடன்குருதியினரை கொல்லலாம். ஆயிரம் முறை மைந்தரை கொல்லலாம். தந்தையர் பழி சூடி கோடி கோடி காலம் கெடுநரகில் உழலாம்” என்றான் கர்ணன்.

அதை தடுப்பதுபோல் கர்ணனின் கையை பற்றிக்கொண்டு “அச்சொல் என்னை கூச வைக்கிறது. என் எளிய அன்பின் பொருட்டு உன்னிடம் இவற்றை நான் கோரினால் அதைவிடக் கீழ்மை பிறிதில்லை” என்று துரியோதனன் சொன்னான். “ஆம்,

இயல்பான அன்றாட அன்பையே உன்னிடமிருந்து பெற்றேன். பெறுகையில் அது எளியது, சிறியது. பெற்ற பின் என் கையில் அது பேருருக்கொண்டது. நான் வாழ்நாள் முழுக்க அதை பெருக்கினேன். நான் வாழும் உலகென அதை ஆக்கிக்கொண்டேன். கௌரவரே, தாங்கள் எனக்கு அளித்ததென்ன என்பதை தங்கள் அரியணையில் அமர்ந்தபடி ஒருபோதும் உணரமுடியாது. அதன் பொருட்டு எனக்குரிய அனைத்தையும் எச்சமின்றி வைப்பதே நான் செய்யக்கூடுவது. அதற்கான தருணம் இன்று அமைந்துள்ளது" என்று கர்ணன் சொன்னான்.

அப்பாலிருந்து சகுனி அருகே நடந்துவந்தார். இருளில் நின்றபடி அவர்களின் உரையாடலை அவர் நோக்கிக்கொண்டிருந்ததாகத் தோன்றியது. அவரைக் கண்டதுமே இருவரும் முற்றிலும் நிலைமீண்டனர். "இன்னும் அரைநாழிகைப் பொழுதே உள்ளது. அதற்குள் அங்கர் சென்று பீஷ்ம பிதாமகரின் வாழ்த்துபெற்று வரவேண்டும். அதுவே முறை" என்று சகுனி சொன்னார். துரியோதனன் "என்ன சொல்கிறீர்கள், மாதுலரே!" என்றான். "அதைத்தான் இங்குள்ள அனைவரும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவரை வணங்காமல் அங்கர் களம்புகுந்தால் அதற்கான பழியை நீடுகாலம் ஏற்கவேண்டியிருக்கும்" என்றார் சகுனி.

"ஆனால் அவர் வாழ்த்துவதென்பது..." என துச்சாதனன் தொடங்க "அவரை வணங்குவதே நாம் செய்யக்கூடுவது. வாழ்த்தை அவர் உரைக்கவேண்டுமென்பதில்லை" என்றார் சகுனி. துரியோதனன் "இந்த வீண்முயற்சி தேவையில்லை என்றே தோன்றுகிறது, மாதுலரே" என்றான். கர்ணன் "இல்லை, காந்தாரர் சொல்வதுவரை நான் அதை எண்ணவில்லை.

ஆனால் என் உள்ளம் அதையே விழைந்திருக்கிறது என அச்சொல் செவிதொட்டதும் உணர்ந்தேன். நான் இந்தக் களத்தில் நுழைந்த கணம் முதல் அவரையே எண்ணிக்கொண்டிருக்கிறேன். சென்று அவரைக் கண்டபின்னர் களமெழுகிறேன்” என்றான். துரியோதனன் தலையசைத்து “உங்கள் விருப்பம், அங்கரே” என்றான்.

**வெண்முரசு விவாதங்கள்**

# கார்கடல் - 17

துரியோதனனும் துச்சாதனனும் தொடர கர்ணன் பீஷ்மரின் படுகளத்தை நோக்கி சென்றபோது விழிதுலங்கும் அளவுக்கு காலைஒளி எழுந்துவிட்டிருந்தது. “நமக்கு இனி பொழுதில்லை” என்று துச்சாதனன் மூச்சுவாங்க கர்ணனின் பின் நடந்தபடி சொன்னான். “ஆம், நாம் விரைவில் திரும்பிவிடுவோம்” என்று கர்ணன் சொன்னான். “பிதாமகர் பேச விழையலாம்” என்று துச்சாதனன் சொன்னான். “இல்லை, இத்தருணத்தில் அவர் பேச்சொழிவார் என்றே நினைக்கிறேன்” என்றான் கர்ணன்.

துரியோதனன் “விரைவாக” என்றான். அந்த இரவு மிக நீளமாக மறுமுனை தெரியாமல் விரிந்திருப்பதை துச்சாதனன் ஒரு கணத்தில் உணர்ந்தான். விடிந்த பின் ஒளியெழுவதற்கு முந்தைய பொழுதே நாள் என நீடிக்கிறது. அது ஒரு கனவா என்ன? படைகள் முழுமையாக கவசங்கள் அணிந்து படைக்கலங்கள் சூடி ஒருங்கிவிட்டிருந்தன. தூதர்கள் அங்குமிங்கும் புரவிகளில் ஓடிக்கொண்டிருந்தனர். காலையில்

ஏரிமேல் எழும் நீராவிப் புகைபோல தலைக்குமேல் தூதுப்புறாக்கள் பறந்தன. படைவீரர்களுக்கு ஆணையிடும் சிறுகுழல்களும் கொம்புகளும் முழங்கின. நூற்றுவர்களும் ஆயிரத்தவர்களும் எழுப்பிய ஆணையொலிகள் இணைந்த முழக்கம் சூழ்ந்திருந்தது.

கர்ணன் துரியோதனனிடம் "நான் சொல்வதற்கொன்றுமில்லை. ஒருவேளை அவர் இது எவருடைய சொல் என்றால் அரசாணை என்று நீ சொல்லவேண்டும்" என்றான். துரியோதனன் "ஆம்" என்றான். துச்சாதனன் "ஒருவேளை அவர் நீங்கள் படைமுகம் நிற்பதை ஏற்கவில்லை என்றால்?" என்றான். மேலும் இரண்டடிகள் வைத்து "உங்களை விலக்கவேண்டும் என அவர் ஆணை பிறப்பித்தால்?" என்றான். கர்ணன் "உயிருள்ளவரை அவர் கௌரவரின் பிதாமகரே. அவ்வண்ணம் அவர் ஆணை பிறப்பித்தாரெனில் அதை தலைக்கொள்வதே நம் கடன்" என்றான்.

"மூத்தவரே!" என்று துச்சாதனன் திகைப்புடன் அழைத்தான். கர்ணன் மறுமொழி சொல்லாது நடக்க துச்சாதனன் மேலும் இரண்டு எட்டு எடுத்து அவனது நீள்காலடிகளுக்கு இணையாகச் சென்றபடி "என்ன சொல்கிறீர்கள்? உங்கள் ஆணைகள் ஓலைகளினூடாகப் பெருகி படைகளை அடைந்துவிட்டன. நமது படைசூழ்கை முறைமாறிக்கொண்டிருக்கிறது. நோக்கினீர்கள் அல்லவா? நாம் வரும்போதே படைகள் களமுகப்பு நோக்கி உருத்திரளத் தொடங்கிவிட்டிருக்கின்றன. உங்களை போர்முனையில் காணும் பொருட்டு அத்தனை வீரர்களும் விழியொருங்கிவிட்டிருக்கின்றனர். இனி எதுவும் நம் கையில் இல்லை" என்றான்.

கர்ணன் ஒன்றும் சொல்லாமல் நடக்க துரியோதனன் “எந்நிலையிலாயினும் பிதாமகரின் ஒரு சொல்லின்றி கர்ணன் களம் நிற்பது எளிதல்ல, இளையோனே. அவரது ஒரு சொல் எழும் எனில் அதுவே நமக்கு போதுமானது. கர்ணனின் மேல் ஐயம் கொண்டுள்ள அஸ்தினபுரியும் ஷத்ரியர்களும் இணைநாட்டு ஷத்ரியர்களும் அதற்குப் பின் ஒன்றும் சொல்ல இயலாமலாகும்” என்றான். துச்சாதனன் துரியோதனனை வெறுமனே நோக்கிவிட்டு “ஆனால்…” என்றான்.

துரியோதனன் அவனை மறித்து “நான் பின்னிரவிலேயே உசாவி அறிந்தேன். அகிஃபீனாவும் சிவமூலியும் இணைந்து அவருக்கு அளிக்கப்பட்டுள்ளது. கடுமையான குருதியிழப்பினால் உடல் மிக நைந்துள்ளது. துயிலினூடாகவே அவர் மீண்டெழ முடியுமென்பதனால் முற்றிலும் உடலை அணைத்து நீள்துயிலில் வைக்கப்பட்டிருக்கிறார். நாம் செல்வதையோ வணங்கி மீள்வதையோ அவர் உணரப்போவதில்லை. அவருடைய வாழ்த்துகளை நாம் பிறகு எவ்வாறு பெறுவோம்!” என்றான். “நாம் நமது உள்ளத்தால் அதை பெற்றுக்கொள்வோம். அவர் தாள்பணிந்து இப்போரை தொடங்குகிறோம் என்பதே நமக்கு போதுமானது. நமது நலம்நாடுபவர் என்பதனால் தன் ஆழ்ந்த உலகிலிருந்து அவர் நம்மை வாழ்த்துகிறார் என்று இப்போது கொள்வோம். இப்போது நாம் செய்யக்கூடுவது அது ஒன்றே.”

துச்சாதனன் திரும்பி தனக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த துச்சகனையும் துச்சலனையும் பார்த்தான். அவர்கள் முகத்திலும் குழப்பம்தான் தெரிந்தது. படுகளத்தின் வாயிலில் நின்றிருந்த காவலர்கள் தலைவணங்கி விலகினர். துரியோதனன் முன்னால் சென்று அவனை வணங்கி

வரவேற்ற இளம் மருத்துவனிடம் “எவ்வண்ணம் இருக்கிறார்?” என்றான். “ஆழ்துயில்” என்று அவன் சொன்னான். “அவருக்கு உடலெனும் எண்ணமே இல்லாமலாக்குவதையே இத்தருணத்தில் நாங்கள் செய்யவேண்டும்.” துரியோதனன் “நாம் வருவதை அவருக்கு உணர்த்த இயலுமா?” என்று கேட்டான்.

“அரசே, அவரைத் தொட்டு உசுப்பி விழிப்புறச்செய்ய முடியும். சற்று அசைத்தாலே அவர் உடலில் உருவாகும் கடும்வலியினால் அவர் தன்னுணர்வு பெறவும் வாய்ப்புண்டு. ஆயினும் இங்கு நிகழ்வதென்ன என்றும் அவர் எவரென்றும் அறிந்துகொள்ளமாட்டார். ஏனெனில் அவர் உடலிலிருந்து உயிர் பெரும்பாலும் விலகி மூத்தோர் உலகிற்கு சென்றுவிட்டது. அதன் சிறு இணைப்பு மட்டுமே இவ்வுடலில் தங்கியுள்ளது” என்றான் மருத்துவன். “நேற்று நள்ளிரவில் அவர் நாடியைப் பற்றிய மூத்த மருத்துவர் முள்ளில் சிக்கிய பட்டாடை காற்றில் எழுந்து பறப்பதுபோலிருக்கிறது, ஒரு சிலமுட்களில் தைத்து அது படபடக்கிறது என்றார்.”

துரியோதனன் “அவர் எங்களை மறக்க வாய்ப்பில்லை” என்றான். மருத்துவன் “அரசே, இருப்புணர்வையும் சூழுணர்வையும் அடைபவை புலன்கள். அவருடைய ஐம்புலன்களும் அணைத்து வைக்கப்பட்டுள்ளன” என்றான். துரியோதனன் துச்சாதனனை நோக்கி தலையசைத்தான். துச்சாதனன் வெளியே சென்று அங்கு துச்சகனும் துச்சலனும் இருபுறமும் நிற்க கைகூப்பி நின்றிருந்த கர்ணனிடம் உள்ளே வரும்படி கைகாட்டினான். கர்ணன் தன் வலக்காலை எடுத்து வைத்து வணக்கத்தால் சற்றே ஒடுங்கிய தோள்களுடன், தணிந்த தலையுடன் படுகள வளையத்திற்குள் நுழைந்தான்.

அம்புப் படுக்கையில் கிடந்த பீஷ்மரைக் கண்டதும் கர்ணன் ஒரு கணம் துணுக்குறுவது தெரிந்தது. அந்த அம்புப் படுக்கை குறித்து அவன் முன்னரே கேட்டிருந்தபோதிலும்கூட அதை பார்த்தது அவனுக்கு நிலையழிவை உருவாக்கியது தெரிந்தது. துச்சாதனனுக்கேகூட முதற்கணம் உளம் அதிர்வுகொண்டது. குருதி வழிந்துறைந்த அம்புகள் நிலைத்த எரிதழல்கள் எனத் தோன்றின. அவர் ஒரு சிதையில் எரிந்துகொண்டிருப்பதாக எண்ணி அவ்வெண்ணத்தை விலக்கினான். கணம்கணமென காலமுடிவுவரை எரிக்கும் சிதை என மீண்டும் ஓர் எண்ணம் எழ தலையை திருப்பி நோக்கை அப்பால் நுடங்கிய கொடியை நோக்கி திருப்பிக்கொண்டான்.

துரியோதனன் மிகத் தாழ்ந்த குரலில் "அங்கரே, மூதாதையை மும்முறை வலம் வந்து வணங்குங்கள். அவர் தாளில் தலைவைத்து நீங்கள் இங்கு வந்து கௌரவப் படைகளின் தலைமுகப்பில் நின்று பாண்டவருடன் பொருதி வெற்றியை ஈட்டுவதற்கு அவருடைய வாழ்த்துகளை கோருங்கள்" என்றான். அத்தருணம் மருத்துவர்களினூடாக செவிகளுக்குச் சென்று கதைகளில் பதியும் என அறிந்திருந்தமையால் அவன் சொல்லெண்ணி முறைமை பிறழாது பேசினான். "பிதாமகர் பீஷ்மர் நின்றிருந்த இடத்தில் நீங்கள் உங்கள் வில்லுடன் நிற்கவிருக்கிறீர்கள். உங்கள் கைவில்லை அவர் காலடியில் வைத்து சொல் பெற்று மீளுங்கள்."

கையில் விஜயத்துடன் கர்ணன் பீஷ்மரை வலம் வந்தான். அவன் உடல் பலமடங்கு எடைகொண்டுவிட்டதைப்போல ஒவ்வொரு அடியையும் மெல்ல இழுத்து தூக்கி வைத்து சுற்றி வந்தான். மூச்சு இறுகி நின்றிருப்பதை அவன் உடலிலிருந்த இறுக்கத்திலிருந்து உணரமுடிந்தது. துச்சாதனனால் பீஷ்மரின்

காட்சியை அகவிழியிலிருந்து விலக்க இயலவில்லை. நோக்காதபோது அது மேலும் அழுத்தம் கொண்டது. எனவே மீண்டும் திரும்பி கைகூப்பியபடி பீஷ்மரின் முகத்தை பார்த்துக்கொண்டிருந்தான். அது மானுடஉடல்போல தோன்றவில்லை. சிலைத்தன்மை கொண்டுவிட்டிருந்தது. சிலைகளில் வந்து குடியேறும் தெய்வத்தன்மை ஒன்று தெளிந்திருந்தது. தென்கோமதியின் ஒழுக்கில் நீருக்குள் எழுந்த பாறையில் செதுக்கப்பட்ட பெருமாளின் கிடந்த திருக்கோலம்போல. தண்மையும் கருமையும் கனவெனக் கனிந்த தோற்றம்.

அவர் முகத்தில் அவன் நினைவு தெளிந்த நாள் முதல் கண்டிருந்த சலிப்பு முற்றிலும் விலகி பேரழகு வந்தமைந்திருந்தது என துச்சாதனன் எண்ணினான். அது தன் உளமயக்கா என்று ஐயம் கொண்டான். இல்லை மெய்யே என்றது விழி. சீர்வளைவுகொண்ட புருவச்செதுக்குகள், மூக்கின் கூர்நிமிர்வு, கன்னங்களின் ஒத்திசைவு, உதடுகளின் பழுதற்ற பொருத்து, தாடியிழைகளின் வழிவு என ஒவ்வொரு உறுப்பும் முழுமையை கனவு கண்ட சிற்பியின் கையில் எழுந்தவைபோல் இருந்தன. அங்கே படுத்திருப்பவர் பீஷ்மர் அல்லவா? உடலில் எழுவது தன்னை உருமாற்றிக்கொள்ளுமா என்ன?

துயிலும் குழந்தைகள் பேரழகு கொள்வதை அவன் கண்டிருந்தான். ஆனால் முதியவர்கள் துயில்கையில் அவர்களின் உள்ளத்தில் திரண்டு எஞ்சியிருக்கும் மைய உணர்வே சிற்பநிலைப்பு கொண்டு வெளிப்படும். தனிமை, ஏக்கம், கைவிடப்பட்ட நிலை, பற்றற்று விடுபடும் விழைவு, விடுபட்டுவிட்ட நிறைவு என. இறந்த முதியவர்கள்

முகங்களிலும் துயிலும் முதியோர் முகங்களிலும் அவன் கண்ட ஒவ்வொன்றும் மானுடநிலையின் ஒரு தருணம் கொண்டவை. ஆனால் பீஷ்மரின் முகம் மானுடர் எய்தமுடியாததாக இருந்தது. இந்த முகத்தை சிற்பிகள் நினைவில் நிறுத்துவார்கள். இதை மரத்திலும் கல்லிலும் வடிப்பார்கள். இனி ஊழிக்காலம் வரை என் கொடிவழியினரில் இந்த முகமே நிலைகொள்ளும்.

மூச்சு ஓடுகிறதா என்று அவன் விழி கூர்ந்தான். அதற்கான எந்த அசைவும் நெஞ்சிலும் கழுத்திலும் வயிற்றிலும் தெரியவில்லை. அவர் இடையில் ஒற்றைத் தோலாடையை சுற்றி தற்றுடுத்திருந்தார். அம்புக்கூர்களாலான மென்பரப்பின்மீது மிதந்து நின்றிருந்த உடலில் நூற்றுக்கணக்கான அம்பு முனைகள் சிறிய முழைகளாக பதிந்திருந்தன. சரிந்த மரத்திலிருந்து புதுமுளைகள் எழுவதுபோல. அவ்வெண்ணத்தால் துச்சாதனன் விதிர்ப்படைந்து துச்சகனின் கைகளை பற்றிக்கொண்டான். துச்சகன் “இந்திரனின் விழிகள்போல” என அவன் செவிமட்டுமே அறியும் குரலில் சொன்னான். துச்சாதனன் மேலும் விதிர்ப்படைந்தான்.

கர்ணன் மூன்றாம் முறை சுற்றிவந்து விஜயத்தை எடுத்து தலைக்குமேல் தூக்கி வாய்க்குள் வஞ்சினச் சொற்களை உரைத்து பீஷ்மரின் காலடியில் வைத்து பின்னர் அவர் கால்கள் தன் நெற்றியில் படும்படி தலைவணங்கினான். வில்லை அவன் திரும்ப எடுக்கக் குனிகையில் பீஷ்மரின் உதடுகள் மெல்ல அசைவதை துச்சாதனன் கண்டான். துரியோதனன் திரும்பி அவ்வசைவுகளைப் பார்த்து உடனே விழிதிருப்பி கர்ணனிடம் கையசைவால் ‘செல்வோம்’ என்றான்.

துச்சாதனன் “பிதாமகர் ஏதோ சொல்கிறார், மூத்தவரே” என்றான். “அவர் வாழ்த்துரைக்கிறார். நன்று. நாம் தேடிவந்தது அது” என்று துரியோதனன் சொன்னான்.

“அவர் சொல்வதை கேட்போம்” என்றான் துச்சாதனன். துரியோதனன் எரிச்சலுடன் “அங்கரை அவர் படைத்தலைமை கொள்ள ஆணையிட்டிருக்கிறார். அவர் அதற்குமேல் சொல்லாடுவது உடல்நிலைக்கு உகந்தது அல்ல. செல்வோம். இன்னும் சற்றுப்பொழுதில் முதலொளி எழுந்துவிடும். அப்போது அங்கர் படைமுகம் நின்றாக வேண்டும்” என்றான். கர்ணனின் தோளில் கைவைத்து “கிளம்புக!” என்றான். கர்ணன் “அவர் ஏதோ கூறுகிறார். அச்சொல் என்ன என்று அறியவேண்டும்” என்றான். துரியோதனன் “அதை நான் கேட்டுவிட்டேன்” என்றான்.

துச்சாதனன் உரத்த குரலில் “மூத்தவரே, பிதாமகர் கூறுவதென்ன என்று நாம் கேட்டாக வேண்டும். அது நம் கடமை” என்றான். நாகசீறல்போல் ஒலித்த தாழ்ந்த குரலில் துரியோதனன் “கிளம்புக! இது என் ஆணை!” என்றான். துச்சாதனன் தலைவணங்கி துச்சகனையும் துச்சலனையும் தோளில் தொட்டு வருக என தலையசைத்து வெளியே சென்றான். கர்ணன் “நில், இளையோனே!” என்று அவனிடம் சொன்ன பின் துரியோதனனிடம் “அவர் உரைக்கும் சொற்களை கேட்போம். அது எதுவாயினும் நாம் தலைக்கொள்ளவேண்டியதே. இறப்பின் தருணத்தில் இருப்பவர் இவ்வுலகுக்கே ஆணையிடும் தகுதி கொள்கிறார். ஏனெனில் இங்கிருந்து அவர் பெற்றுக்கொள்ள எதுவுமில்லை. அச்சொற்களன்றி இவ்வுலகுக்கு அளிப்பதற்கும் ஏதுமில்லை” என்றான்.

பீஷ்மரின் தலையருகே சென்று முழங்காலிட்டு அமர்ந்து தன் செவிகளை பீஷ்மரின் உதடுகள் அருகே வைத்தான் கர்ணன். பீஷ்மர் மீண்டும் எதையோ சொன்னார். கர்ணனின் முகத்தை துச்சாதனன் கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். அதில் ஐயமும் குழப்பமும் மட்டுமே தெரிந்தது. துரியோதனன் சினமும் கசப்பும் கொண்ட முகத்துடன் இரு கைகளையும் சுருட்டி முஷ்டி பிடித்து தோள்களை இறுக்கியபடி நின்றான். அவன் நெஞ்சத்தசைகள் விம்மி இறுகி நெகிழ்ந்து அசைந்தன. பற்களைக் கடித்து இறுக்கியமையால் தாடை முறுகி புடைத்திருந்தது.

துரியோதனனை ஒருகணம் நோக்கிய பின் துச்சாதனன் தானும் முன்னால் சென்று முழந்தாளிட்டு பீஷ்மரின் வாயருகே செவியை கொண்டு சென்றான். பீஷ்மர் “அங்கன் தலைமை கொள்க!” என்றார். துச்சாதனனுக்கு மெய்ப்பு எழுந்தது. அது கேட்டதா தன் உளக்குரலா என அவன் ஐயுற “அங்கன் தலைமை கொள்க!” என்று பீஷ்மர் மீண்டும் சொன்னார். “அவன் புவியில் நிகரற்ற வீரன். அவனை எதிர்கொள்ளவிருப்பவனும் அவ்வாறே. அவர்கள் எதிர்நிற்கலாகாதென்று இதுவரை எண்ணினேன். அதை தவிர்க்க என்னால் இயலாதென்று இப்போது புரிந்துகொண்டேன். அது ஊழெனில் அவ்வாறே நிகழட்டும்.”

அவர் மூச்செறிந்து “அது நிகழட்டும். அவன் எண்ணியதே அமையட்டும்” என்றார். துச்சாதனன் அறியாமல் “எவர்? எவர் எண்ணியது?” என்றான். பீஷ்மர் விழிதிறந்து கர்ணனையும் துச்சாதனனையும் மாறி மாறி பார்த்தார். அவர்களை அவர் அடையாளம் கண்டுகொள்ளவில்லை எனத் தோன்றியது. பின்னர் மெல்லிய புன்னகையில் அவர் உதடுகள் விரிந்தன.

“இன்று நான் கூறுவன அனைத்தும் வீண் சொற்கள்” என்றார். மூச்சிரைக்க “கர்ணன்! கர்ணன்!” என்றார். “இங்குளேன், பிதாமகரே!” என கர்ணன் தன் முகத்தை அவர் முகத்தருகே கொண்டு சென்றான். அவர் அருகணையும்படி தன் விழிகளால் காட்டினார். அவன் மேலும் அருகே செல்ல அவன் குழல் கற்றையை மெல்ல முகர்ந்தார். இனிய புன்னகையில் அவர் முகம் மேலும் அழகு கொண்டது.

“இளமையில் நான் சம்பாபுரிக்கு வந்து உன்னை பார்த்திருக்கிறேன். நீ சிறுவனாக இருக்கும்போது. மிக இளஞ்சிறுவன் அப்போது” என்றார். கர்ணன் “ஆம், பிதாமகரே. அதை நான் நன்கு நினைவுறுகிறேன். உங்கள் உயரமும் தோற்றமும் அன்று என்னை அஞ்ச வைத்தன. அண்ணாந்து நோக்கியபோது உங்கள் தலை விண் கதிரோனுக்கு அருகிலென எழுந்திருப்பதை கண்டேன். அங்கிருந்து இறங்கி வருபவர்போல் குனிந்து உங்கள் கைகளால் என்னை எடுத்தீர்கள். நெஞ்சோடணைத்து என் குழலில் முத்தமிட்டீர்கள்” என்றான். புன்னகையுடன் “ஆம்” என்றார் பீஷ்மர். அவருடைய நோய் முற்றாகவே அகன்றுவிட்டிருந்ததாகப் பட்டது.

பீஷ்மர் மீண்டும் கர்ணனின் குழலை முகர்ந்தார். “அன்றிருந்த அதே மணம் உன் குழலில் இன்றுமிருக்கிறது. என் கைகள் செயலற்றிருக்கின்றன. இல்லையேல் உன்னை நெஞ்சோடு அணைத்திருப்பேன். என் நெஞ்சில் உன் தலையை வை” என்றார். கர்ணன் கைகளை ஊன்றி தலைநீட்டி அவர் நெஞ்சில் தன் தலையை அழுந்தாமல் வைத்தான். அவர் மூச்சை இழுத்துவிட்டார். அவர் உடலில் இருந்த மெழுகுத்தன்மை விலகி அது குருதியோட்டத்தின் உயிர்த்தன்மையை கொள்வதாக துச்சாதனனுக்குத் தோன்றியது. அவர் அவ்வளவு

நேரம் பேசலாமா என ஐயம்கொண்டு மருத்துவனை நோக்கினான். ஆனால் அவனும் கைகளைக் கட்டியபடி வெறுமனே நோக்கி நின்றிருந்தான்.

பீஷ்மர் நினைவுகளால் முகம் மலர்ந்து “மேலும் பலமுறை உன்னைக் காண வந்திருக்கிறேன். அதன் பின்னர் உன்னை தொட்டு எடுக்க துணியவில்லை. ஏனெனில் முதன்முறை உன்னை என் கைகளில் எடுத்தபோது நீ என்னை அறிந்துகொண்டாய் என்பதை நானும் உணர்ந்தேன். அயலவன் ஒருவனால் தூக்கப்படும் குழந்தை கொள்ளும் திமிறல் உன் தசைகளில் இருக்கவில்லை. கருவறைக்குள் குழவி என என் நெஞ்சில் ஒடுங்கி தோளில் தலை சாய்த்திருந்தாய். உன் நெஞ்சுமட்டும் துடித்துக்கொண்டிருந்ததை இப்போதும் நினைவுகூர்கிறேன்” என்றார்.

கர்ணனும் அக்கனவுக்குள் இருந்தான். “முத்தமிட்டு உன்னை தூக்கியபோது உன் இமைகள் சரிந்து உதடுகள் சற்றே திறந்து அரைத்துயிலிலென நீ இருப்பதை கண்டேன். உன்னை உன் அன்னை புதர்களுக்கப்பால் பெயர் சொல்லி அழைத்தாள். உன்னை நிலத்தில் இறக்க நான் முயன்றபோது என் தோளில் சரிந்திருந்த என் முடிக்கற்றையை பற்றிக்கொண்டு தலையசைத்து இறங்க மறுத்தாய். உன் கைகளைப் பிரித்து மெல்ல இறக்கி நிலத்தில் விட்டேன். இரு கைகளையும் விரித்தபடி மீண்டும் ஓடி வந்து என் ஆடையை பற்றிக்கொண்டாய். பூனைக்குட்டிகள் அவ்வாறு நம் ஆடையை பற்றிக்கொள்ளும். அப்போது நம் உள்ளம் கனிவது நாம் எவராயினும் நம் அகத்தில் அன்னை ஒருத்தி வாழ்வதனால்தான் என்பார்கள்.”

“உன் அன்னை புதர்களிலிருந்து தோன்றுவதற்கு முந்தைய கணத்தில் நான் சிறு செயல் ஒன்றால் உன் நோக்கை திருப்பினேன். உன் சிற்றுடலிலும் பெருவில்லவன் ஒருவன் வாழ்ந்ததனால் அவ்வசைவை நோக்கி நீ இயல்பாகத் திரும்பிய அக்கணத்தில் பின்னால் திரும்பி புதர்களுக்குள் நான் மறைந்துகொண்டேன்” என்றார் பீஷ்மர். “உன் அன்னை ஓடிவந்து உன்னைத் தூக்கி எடுத்து ஏன் அங்கு நிற்கிறாய் என்றும் எதை பார்க்கிறாய் என்றும் கேட்டாள். நான் மறைந்த திசையை சுட்டிக்காட்டி நீ அங்கே அங்கே என்றாய். பின்னர் உன் நாவிலிருந்து அச்சொல்லை கேட்டேன். நீ பிதாமகர் என்றாய்” என்றார்.

அவர் மெல்ல சிரித்ததை துச்சாதனன் வியப்புடன் நோக்கினான். “நீ உன் சிறிய சிவந்த உதடுகளால் சொன்னதை இப்போதும் அருகென காண்கிறேன். பிதாமகர் என்று.” அவர் உடல் நகைப்பில் மெல்ல அசைந்தது. “எத்தனை அழகிய சொல். என் மைந்தா, அன்று நீ மானுட உடலில் தெய்வமெழுந்ததுபோல் பேரழகு கொண்டிருந்தாய். அந்த அழகை அகவை ஏறுந்தோறும் பெருக்கிக் கொண்டாய். எத்தனை பேரழகன்!” அவர் விழிகளை மூடி உதடுகள் அசைய “அழகன்! அழகன்!” என்றார். விழிகளைத் திறந்து “ஆனால் உன்னை காணும்போதெல்லாம் என் அகம் எரியும். அத்தனை விழிகளும் உன் அழகை பார்க்கின்றன என்பதை என்னால் எண்ணிக்கூட நோக்க முடியாது” என்றார்.

“உன் அழகு மிகமிக மென்மையானது என்று தோன்றும். அதைக் கண்டு தெய்வங்கள் பொறாமை கொள்ளும் என்று எண்ணுவேன். எங்கோ எதுவோ சீற்றம் கொள்கிறது என அஞ்சிக்கொண்டே இருந்தேன். சுடுசொல்லெடுப்பேன். என்

விழிகளை திருப்பிக்கொண்டு உளக்கடுமை கொள்வேன். மைந்தா, உன் அன்னை என்ன செய்திருப்பாள் என என்னால் உணரமுடிகிறது. ஒவ்வொருநாளும் உனக்கு அவள் கண்ணேறு கழித்திருப்பாள்.” அவர் பெருமூச்சுவிட்டார். “பேரழகு கொண்டவரை தெய்வங்கள் வாழவிட்டதில்லை. அவர்கள் வாழ்வதெல்லாம் அவ்வழகு அழிந்து வெறும் கருத்தென எஞ்சிய பின்னரே.”

ஆனால் கர்ணன் அந்த மாறாத கனவுப் புன்னகையில் இருந்தான். அவர்கள் அறியாது காலெடுத்து துரியோதனன் அருகணைந்தான். அவன் வியப்பில் சொல்லமைந்திருந்தான். பீஷ்மரின் முகமும் உணர்வுகளும் மாறிவிட்டிருந்தன. “நான் பிற எவரையும்விட உன்னிடத்திலேயே மிகுதியான உரிமை எடுத்துக்கொண்டேன். ஏனெனில் நீ மூத்தவன். பிற அனைவரையும்விட உயர்ந்தவன். உனக்கு உரிய அனைத்தையும் தெய்வங்கள் எங்கோ வகுத்திருக்கும் என்று எண்ணினேன்.” பின்னர் விழிகளை மூடி பெருமூச்செறிந்தார். அவர் முகத்தில் எழுந்தது துயரா அல்லது மானுட உணர்வல்லாத வேறேதுமா என்று துச்சாதனன் எண்ணினான்.

“நீ நானே” என்று பீஷ்மர் சொன்னார். “ஆம்” என்று கர்ணன் சொன்னான். “நானிருக்கையில் நீ வேண்டியதில்லை என எண்ணினேன்.” அவர் முகம் துயர்கொண்டதுமே உடலின் ஆற்றலும் மறையத் தொடங்கியது. மூச்சிளைப்பில் மார்பு ஏறியிறங்கியது. “செல்க! நான் ஒழிந்த அவ்விடத்தில் அமைக! என் ஊழே உனக்கும் அமையக்கூடும். நான் என் வஞ்சினங்களில் சிக்கிக்கொண்டவன். என் நோன்புகளால் தளையிடப்பட்டவன். நீயும் உன் வஞ்சினங்களிலிருந்தும் நோன்புகளிலிருந்தும் விடுபடக்கூடும்.”

“நான் வெல்வேன்!” என்றான் கர்ணன். “அவ்வாறே ஆகுக!” என்று பீஷ்மர் கூறினார். பின்னர் கண்களை மூடி பெருமூச்சுவிட்டு “அவ்வாறே ஆகுக!” என்றார். மீண்டும் அவர் எதையோ சொல்லக்கூடும் என்பதுபோல கர்ணன் அவர் முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தான். துரியோதனனும் துச்சாதனனும் உடற்தசைகளில் எங்கும் சிற்றசைவுகூட இல்லாமல் அவரைப் பார்த்தபடி நின்றனர். பந்தங்களின் அசைவொலி மட்டும் எழுந்துகொண்டிருந்தது. பீஷ்மரின் மூச்சு சீரடைந்தது. முகம் உணர்வுகளனைத்தையும் இழந்து வெண்பளிங்குச் சிலை என்றாகியது.

பெருமூச்சுடன் அசைந்த கர்ணன் கையூன்றி எழுந்தான். துரியோதனனும் பெருமூச்சுவிட்டு “நன்று! அவர் உங்களை வாழ்த்தியிருக்கிறார். நீங்கள் அஸ்தினபுரியின் படைத்தலைமை கொள்வதற்கும் ஒப்புதல் அளித்திருக்கிறார்” என்றான். கர்ணன் ஒன்றும் சொல்லாமல் தன் வில்லருகே சென்றான். முகம் முதல் முழங்கால்வரை அனைத்துறுப்புகளும் மண்படிய விழுந்து பீஷ்மரை வணங்கி விஜயத்தை கையிலெடுத்துக்கொண்டான். துரியோதனனையும் துச்சாதனனையும் தம்பியரையும் நோக்காமல் நீள்காலடி எடுத்து நடந்து வெளியே சென்றான்.

துச்சாதனனின் அருகே வந்த துரியோதனன் “பிதாமகரின் ஆணை எழுந்தது நன்று. இனி நாம் துரோணரிடமே அதை கூற முடியும். அங்கர் படைத்தலைமை கொள்ளட்டும். அதை துரோணரும் மீற முடியாது” என்றான். துச்சாதனன் “ஆம்” என்றான்.

**வெண்முரசு விவாதங்கள்**

# கார்கடல் - 18

பீஷ்மரின் படுகளத்திலிருந்து வெளிவந்ததும் கர்ணன் நின்று துரியோதனனிடம் “இன்னும் ஒரு பணி எஞ்சியுள்ளது” என்றான். துரியோதனன் அதை உடனே உணர்ந்துகொண்டு “நமக்கு பொழுதில்லை. படைகள் அணிநிரந்துவிட்டன. நம்மை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்” என்றான். கர்ணன் “இதை தவிர்க்கமுடியாது” என்றான். துச்சாதனன் “சென்றுவருவோம், மூத்தவரே. இன்று காலையில் பொழுது நாம் நீட்ட நீட்ட நீண்டுகொண்டிருக்கிறது” என்றான். கர்ணன் புன்னகையுடன் அவன் தோளைத் தொட்டுவிட்டு துரியோதனனிடம் “பிதாமகரின் வாழ்த்துக்குப் பின் இதை நாம் செய்யாமலிருக்க இயலாது” என்றான்.

அவர்கள் புரவிகளில் ஏறிக்கொண்டு அணியமைந்துவிட்டிருந்த படைகளினூடாக பலகைப்பாதையில் குளம்புகள் முழக்கமிட விரைந்து சென்றனர். துரோணர் உத்தரபாஞ்சாலப் படைகளின் முகப்புக்கு சென்றுவிட்டிருந்தார். அவர்கள் அணுகியபோது அவர் தேர்ச்சகடத்தின் அருகே சிறிய பெட்டி ஒன்றில் அமர்ந்திருக்க அவர் அருகே நின்றிருந்த ஆவக்காவலன் அவருடைய கையுறைகளை அணிவித்துக்கொண்டிருந்தான். அவர்கள் வருவதை அவர் ஏறிட்டுப் பார்த்தார். ஆனால் முகத்தில் வியப்பேதும் தெரியவில்லை. அவன் அசைவுகளும் மாறுபடவில்லை. ஆனால் அவர்களிருவரும் மாறிவிட்டிருப்பது தொலைவிலேயே தெரிந்தது.

கர்ணன் புரவியிலிருந்து இறங்கி கைகூப்பியபடி துரோணரை நோக்கி சென்றான். உடன் துச்சாதனனும் துரியோதனனும்

நடந்தனர். அருகே கர்ணன் வருந்தோறும் துரோணர் மெல்ல மாறுதலடைந்துகொண்டே இருந்தார். பின்னால் ஓசை கேட்க துச்சாதனன் திரும்பிப்பார்த்தான். சகுனி தேரிலிருந்து இறங்கி வருவதை கண்டான். துரியோதனன் "அவர் இருந்திருக்கலாம் என எண்ணினேன்" என்றான். "அவர் எண்ணியதை முன்னுணர்பவர்" என்றான் துச்சாதனன். கர்ணன் துரோணரை அணுகி அவர் காலடியில் தன் முழுதுடலும் மண்படிய விழுந்து வணங்கி "என்னை வாழ்த்துக, ஆசிரியரே! சற்றுமுன் பீஷ்ம பிதாமகரின் வாழ்த்துகொண்டேன். இனி நான் பெறவேண்டியது உங்கள் வாழ்த்து ஒன்றையே" என்றான்.

துரோணர் மெல்லிய உடல்நடுக்குடன் எழுந்துவிட்டார். கைகளை நீட்டி அவன் தலையைத் தொட்டபோது அவர் கைகளும் தலையும் ஆடிக்கொண்டிருந்தன. அவரால் பேசமுடியவில்லை. அவர் அத்தருணத்தையே எதிர்பார்த்திருந்தார் என தெரிந்தது. ஆனால் அது நிகழ்ந்தபோது அவருக்குள் இருந்த ஒன்று அதிர்ந்தது. அவர் கூட்டி வைத்திருந்த சொற்கள் அப்போது பொருள்கொள்ளவில்லை. அத்தருணத்தை நோக்குவதே ஒரு நாணின்மை என உணர்ந்து துரியோதனனும் துச்சாதனனும் விழிகளை விலக்கிக்கொண்டனர். துரோணரின் தொண்டை ஏறியிறங்க தாடி அசைந்தது. அவர் தொண்டையில் உமிழ்நீர் இறங்கும் ஒலி கேட்டது.

கர்ணன் எழுந்து "நான் பிழையென எதையேனும் இயற்றியிருந்தால் பொறுத்தருள்க!" என்றான். "இல்லை" என்றார் துரோணர். "பிழை இயற்றியவன் நான், நீ அறிவாய்" என்றார். அவர் குரல் நெஞ்சுக்குள் சிக்கிக்கொண்டதைப்போல ஒலித்தது. மூச்சிரைக்க கைகளை அசைத்து சொல்திரட்டினார். "பிழை"

என்றார். தொண்டையை கமறிக்கொண்டு “நான் செய்த முதற்பிழை அரசு ஒன்றின் குடியென அமைந்து ஆசிரியத் தொழில் செய்தது. அதன்பொருட்டு அத்தனை மெய்யாசிரியர்களிடமும் பொறுத்தருளும்படி சொல்லிக்கொண்டிருக்கிறேன். உன் ஆசிரியரிடமும் நான் கால்தொட்டு அருள்கோரவேண்டும்” என்றார்.

“யோகிக்கும் அந்தணனுக்கும் அறிஞனுக்கும் கலைஞனுக்கும் அரசென்று ஒன்று இருக்கலாகாது” என்றபோது துரோணரின் குரல் தெளிந்தது. “ஆனால் நான் என் வாழ்நாளெல்லாம் அஸ்தினபுரியின் குடைநிழலை நாடினேன். அரசனுக்கு நாம் அளிப்பது வரியை மட்டும் அல்ல. அவன் நமக்களிக்கும் காவலுக்கு மாற்றாக நம் அடிபணிவை. பிற அனைத்துக்கும் மேலாக அவனை தலைக்கொள்வோம் என்னும் சொல்லுறுதியை. ஒரு நிலையிலும் நான் அதை செய்திருக்கலாகாது. யோகிக்கு மெய்மையும் அந்தணனுக்கு வேதமும் அறிஞனுக்கு ஞானமும் கலைஞனுக்கு தன் அகச்சான்றுமே முழுமுதல் தெய்வங்கள்.”

“நான் காட்டில் குடிலமைத்து ஆசிரியனாக இருந்திருக்கவேண்டும்” என துரோணர் தொடர்ந்தார். “கற்பிப்பவனுக்கு தெய்வமென்றும் அரசனென்றும் அவன் கலை மட்டுமே இருக்கவேண்டும். நான் அடிபிழைத்தவன். என் அச்சமும் வஞ்சமும் விழைவும் அரசை நாடும்படி என்னை தூண்டின.” அவர் முகம் துயர்கொண்டது. “நீ களம்நீங்கியபோது இரவில் நான் துயிலவில்லை. நான் எவரேனும் ஆகுக, என் குருதியிலோடுவது தொல்முனிவரின் மெய்மை அல்லவா? என் பிழை என்ன என்று அன்றே உணர்ந்தேன். உன்பொருட்டு என்

முந்தையோரிடம் நூறுநூறாயிரம் சொற்களில் பிழைபொறுத்தல் கோரினேன்.”

“அன்றே நான் என் வில்லுடன் சென்று அரசிலாக் காடொன்றில் குடிலமைத்திருக்கவேண்டும். என் முந்தையோர் நுண்ணுருவாக எழுந்து எனக்கு ஆணையிட்டது அதுவே. ஆயினும் அஸ்தினபுரியின் குடியென அடங்கியிருந்தேன். என் மைந்தன் அரசாளவேண்டும் என்பதற்காக. துருபதனுக்கு எதிராக என் வஞ்சம் எழுந்து நின்றிருக்கவேண்டும் என்பதற்காக.” துரோணரின் விழிமணிகள் அலைபாய்ந்தன. அவர் அவர்களை பார்க்கா நோக்குடன் பேசிக்கொண்டே சென்றார். “அந்த வஞ்சமே என்னை ஆட்டிவைக்கும் கீழ்த்தெய்வம். என் முதல்மாணவனுக்காக உன்னை சிறுமைசெய்தேன். அவன்முன் என்னை இழிமகனாக நிற்கச் செய்தது அத்தெய்வம்.”

அவர் அவன் தோள்களை பற்றினார். “மைந்தா, உன்னை களம்நீங்கச் சொன்ன அன்று உன் விழிகளில் கண்ட அதே கூரை அவன் விழிகளிலும் காணச்செய்தது ஊழ். பாஞ்சாலத்தின் போர்க்களத்தில் துருபதனை என் காலடியில் கொண்டுவந்து அவன் தள்ளியபோது. அன்று நான் மீண்டுமொருமுறை இருண்ட ஆழத்தில் விழுந்தேன். என் மூதாதையரும் ஆசிரியரும் பழிக்கும் இழிமகன் ஆனேன். கற்ற கல்வி என்பது வழிபடு தெய்வம்போல. நோன்பும் வழிபாடும் தவறியவனிடம் அது சினம்கொள்கிறது. அவனை முற்றழிக்கிறது…”

கர்ணன் அப்பேச்சை நீட்டவிழையாமல் மெல்ல இடைமறித்து “நான் தங்களால் வாழ்த்தப்பட்டேன் என்பதே எனக்குப் போதுமானது. இன்று களம்நிற்கவிருக்கிறேன். உங்கள் சொல் என் உடன்நிற்கட்டும்” என்றான். ஆனால் துரோணர்

பேசவிழைந்தார். “அந்தணன் என்பவன் யாரென்று என்னைப்போல் உணர்ந்தவர் எவருமில்லை. தனக்குமேல் தன் ஞானமன்றி தெய்வமும் இல்லாதவனே அந்தணன். தன் ஞானத்தால் அனைத்திலிருந்தும் விடுதலை அடைந்தவன். அனைத்திலிருந்தும் காக்கப்பட்டவன். நானோ என் அந்தணநிலையை உதறி ஷத்ரியநிலை நோக்கி வந்தவன். என் பிழைகள் ஷத்ரியர் இயற்றுபவை. நான் கொள்ளவேண்டிய தண்டனையோ அந்தணர்களுக்குரியது” என்றார்.

கால் தளர்ந்தவராக அவர் மீண்டும் பெட்டிமேல் அமர்ந்தார். தலையை அசைத்தபடி “பிழையினும் பெரும்பிழை நிஷாதனாகிய ஹிரண்யதனுஸின் மைந்தனுக்கு நான் இழைத்தது. அங்கனே, உனக்கு மட்டுமல்ல, அர்ஜுனனுக்கும் நான் பிழையிழைத்தேன். ஆனால் அப்பிழைகளிலிருந்து நீங்கள் எழுந்தீர்கள். அவனோ அப்பிழையினூடாக மேலும் கீழ்மைகளுக்குச் சென்றான். மீட்பிலா ஆழங்களில் அமைந்தான்... அவனை அங்கே செலுத்திய பழி என்னுடையது” என்றார். அவருடைய உடல் உலுக்கிக்கொண்டது. உயிரற்றவை என இரு கைகளும் பக்கவாட்டில் தளர்ந்துவிழுந்தன.

சகுனி அருகே வந்து “ஆசிரியரே, இன்னும் பொழுதில்லை. நீங்கள் தேரிலேறிக்கொள்ளவேண்டிய தருணம்” என்றார். துரோணர் தலைநிமிர்ந்தபோது இமைமயிர்களில் நீர்ச்சிதர்கள் இருந்தன. தலையை இல்லை இல்லை என அசைத்து “தான் கீழிறங்குவதை ஒருவன் உணரவே கூடாது. அதைப்போல துயரளிப்பது வேறேதுமில்லை” என்றார். சிரிப்புபோல இதழ் கோணலாக இழுபட “அதை வெல்ல ஒரே வழி அக்கீழிறங்கலை ஆதரித்துச் சொல்லாடுவதுதான். அதன்பொருட்டு மேலும் கீழிறங்குவதுதான்” என்றார். பின்னர்

வெடித்து நகைத்து “எத்தனை நுண்ணுருமாற்றங்கள்! எத்தனை பொய்ச்சொற்கள்!” என்றார்.

சகுனி அந்த உணர்வுகளை அறிந்ததாகவே காட்டாமல் “உங்கள் வில்லை நம்பி இன்று களமிறங்குகிறோம், ஆசிரியரே” என்றார். “பிதாமகர் களம்வீழ்ந்தமையால் நம் படைகள் சோர்வடைந்துள்ளன. இன்று நாம் ஒரு தெளிவான வெற்றியை பெற்றாகவேண்டும். நம் படைகள் இன்று நம்பிக்கைகொண்டு திரும்பவேண்டும். இல்லையேல் நாளை போர் நிகழாது” என்றார். அவர் எண்ணுவதை உணர்ந்துகொண்டு துரியோதனன் முன்னால் வந்து “ஆம், ஆசிரியரே. இனி நாங்கள் உங்களையே நம்பியிருக்கிறோம். தந்தையிடம் மைந்தர் என உங்களை நாடி வந்திருக்கிறோம்” என்றான்.

அச்சொற்கள் அவரை மீளச் செய்தன. துரோணர் “இன்று அங்கர் களமிறங்குகிறார். படைகள் எழுச்சிகொள்ள அவரே போதும்” என்றார். “ஆம், ஆனால் நாம் திரும்பும்போது நம்மிடம் வெற்றி என ஒன்று விழிக்குத் துலங்கும்படி இருந்தாகவேண்டும்” என்றார் சகுனி. “இனி பாரதவர்ஷத்தில் எஞ்சியிருக்கும் பெருவீரர் நீங்களே. பிறர் உங்கள் மாணவர்கள் மட்டுமே. தோண்டிநீர் கிணறாவதில்லை. உங்கள் வில்முன் அர்ஜுனனோ அங்கநாட்டரசரோகூட நிற்கமுடியாது. உங்களுக்கு நிகரான வீரர் அஸ்வத்தாமர் மட்டுமே. அவரோ உங்களுக்கு தோளிணையாக களம்நிற்கவிருப்பவர்”.

சகுனி எண்ணுவதென்னவென்று அறியாமல் துரியோதனன் வெறுமனே நோக்கினான். ஆனால் துரோணர் அச்சொற்களைக் கேட்டு மீண்டுவருவதை துச்சாதனன் கண்டான். அவருக்கு அவை தேவைப்பட்டன. அத்தருணத்தில் அகமுணர்ந்த ஒன்றை சொற்களாக்கியதுமே அவர் நாணத் தொடங்கிவிட்டிருந்தார்.

அச்சொற்கள் அவருக்கு அவரை மேலும் துலக்கிக் காட்டின. அங்கிருந்து அகல விழைந்தார். சகுனி “உங்களை எண்ணி அஞ்சிக்கொண்டிருக்கிறார்கள் பாண்டவர்கள். நேற்றிரவெல்லாம் அங்கே சொல்சூழவையில் அதைத்தான் பேசியிருக்கிறார்கள். இளைய யாதவரே பிதாமகர் பீஷ்மரை வீழ்த்தியமையால் நாம் துரோணரை இருமடங்கு வஞ்சம் கொண்டவராக ஆக்கிவிட்டிருக்கிறோம் என்றாராம். வஞ்சத்தைப் பெருக்கி ஆற்றலாக ஆக்கிக்கொள்பவர் அவர், அவருடைய வில்லில் காற்றென்றும் அம்புகளில் அனலென்றும் அவ்வஞ்சம் குடியேறிவிட்டது என்று சொன்னாராம்” என்றார்.

கைநீட்டி அருகிருந்த தன் வில்லைத் தொட்டபடி துரோணர் “நான் இன்று பாண்டவர்களில் ஒருவரையேனும் கொல்வேன். இதை சூளுரையென்றே கொள்க!” என்றார். “அது நமக்கு பெருவெற்றி என்பதில் ஐயமில்லை” என்றார் சகுனி. “ஆனால் அவர்களில் எவர் மாண்டாலும் பிறர் இருமடங்கு வஞ்சமும் வெறியும் கொண்டவர்களாவார்கள்.” துரோணர் “மணிமுடிசூடவிருப்பவன் யுதிஷ்டிரன், அவனை கொல்கிறேன்” என்றார். “அவனை கொன்றால் பீமன் அரசனாவான். அறத்துக்கு அஞ்சும் ஒருவனைக் கொன்று அரக்கனை எதிரியென அமரச் செய்கிறோம்” என்றார் சகுனி.

சகுனி சொல்வதென்ன என்று துரோணர் விழிசுருக்கி நோக்கினார். சகுனி குரல் தழைய “இது என் எளிய எண்ணம். திட்டமென இதை ஆக்கவேண்டியவர் தாங்களே. தங்களுக்கு நான் ஆணையிடலாகாது” என்றார். துரோணர் கூர்ந்து நோக்க “நாம் யுதிஷ்டிரனை சிறைபிடித்தாலென்ன? நம் பணயப்பொருளாக அவனை கொண்டுவருவோம்” என்று சகுனி சொன்னார். துச்சாதனன் ஏனென்றறியாமல் ஓர் அச்சத்தை

அடைந்தான். “நாளை காலைக்குள் படைத்தோல்வியை அறிவித்து களமொழிந்தாலொழிய அவனை உயிருடன் காணமுடியாதென்று அறிவிப்போம். அவர்களுக்கு வேறுவழியில்லை” என்றார் சகுனி.

கர்ணன் கையை வீசி அதை விலக்கி “அது கீழ்மை” என்றான். துரோணர் “ஆம்” என்றார். “எந்நிலையிலும் அரசரையோ அரசகுடியினரையோ மகளிரையோ பணயப்பொருள் ஆக்கலாகாது என்று போர்நூல்கள் ஆணையிடுகின்றன.” சகுனி “இப்போரில் இனி நன்றுதீது உயர்வுதாழ்வு என ஏதுமில்லை. வெற்றி ஒன்றே பொருட்டு” என்றார். துரோணர் “ஆனால்…” என்றார்.

சகுனி உரத்த குரலில் “ஆசிரியரே, அவ்வாறு நீங்கள் யுதிஷ்டிரனை சிறைபிடிப்பீர்கள் என்றால் போர் ஓயுமென்று உறுதியாகவே சொல்கிறேன். அவர்கள் நால்வருக்கும் மட்டுமல்ல அவர்களை ஆளும் இளைய யாதவருக்கும் அவன் முதன்மையானவன். போர் ஓயுமென்றால் உயிரெஞ்சும் பல்லாயிரங்களை எண்ணி நோக்குக! போர் மேலும் நீளுமென்றால் அவர்கள் இறந்தழிவதன்றி வேறுவழியில்லை” என்றார். துரோணர் அச்சொற்களால் அமைதியடைந்து “ஆம்” என்றார். சகுனி “உங்களால் இயலும்” என்றார்.

துரோணர் “ஆம்” என்றார். “இன்று நாம் இருமுனைத் தாக்குதல் செய்யவிருக்கிறோம். நம் படைசூழ்கையை விழிகளால் நோக்கியபோதுதான் இவ்வெண்ணம் எனக்கு வந்தது. இது வண்டிச்சூழ்கை. நீள்சதுரப் பெட்டிபோலிருக்கின்றன நம் படைகள். என் பாகன் இதை புலிப்பொறிப்பெட்டி என்றான்” என்று சகுனி சொன்னார். “புலிக்கான இரையொன்றை வைப்போம். இருபுறமும் இரு கைகள் என நம் படைகள்

எழுந்து வந்து அதை கவ்வட்டும்.” துரியோதனன் “ஆம், அது இயல்வதுதான். பலமுறை நம் படைகள் நடுவே அவன் சிக்கிக்கொண்டிருக்கிறான். ஒவ்வொருமுறையும் அவனை தன் படைகளுடன் சென்று சேரும்படி விட்டிருக்கிறோம்” என்றான்.

துரோணர் “ஆம், யுதிஷ்டிரனை நான் சிறைபிடிக்கிறேன்” என்றார். “ஆனால் ஓர் உறுதிப்பாடு எனக்கு அளிக்கப்பட்டாகவேண்டும். எந்நிலையிலும் அவன் சிறுமைசெய்யப்படலாகாது. சொல்லிலோ செயலிலோ. நம் உள்ளத்திலோ அவன் உள்ளத்திலோ ஒரு சிறு ஒவ்வாமைகூட உருவாகக்கூடாது. இந்நிலத்தின் இணையரசன் என்றே அவன் கருதப்படவேண்டும். அவர்கள் அடிபணியவில்லை என்றாலும் அவனுக்கு தீங்கிழைக்கப்படலாகாது. ஒருவேளை பீமன் தலைமையில் அவர்கள் போரை தொடர்ந்து நடத்துவார்கள் என்றால்கூட அவன் உரிய முறையில் வணங்கப்பட்டு காட்டுக்கே அனுப்பப்பட வேண்டும்.”

“அதை நான் உங்களுக்கு சொல்லுறுதியாக அளிக்கிறேன்” என்று துரியோதனன் சொன்னான். “அஸ்தினபுரியின் அரசனின் ஆணை அது. என் குடிகளையும் குருதியினரையும் அது ஆளும் எனக் கொள்க!” கர்ணன் சலிப்புடன் “அத்தனை எளிதில் அவரை பிடிக்கமுடியாது” என்றான். “ஏனென்றால் அவர்கள் நால்வரும் எந்நிலையிலும் அவரை ஒரு தனிவிழியால் நோக்கிக்கொண்டுதான் இருப்பார்கள். குருளையிடமிருந்து உளவிழியை விலக்காத அன்னைப்புலிபோல பீமன் அவரைக் காத்துநின்றிருப்பான். ஒரு சிறு அழைப்பில் அவரை அணுகும்தொலைவிலேயே என்றும் அர்ஜுனன் இருந்துகொண்டிருப்பான்.”

“அதையும் முன்னரே எண்ணினேன்” என்று சகுனி சொன்னார். “அங்கரே, உங்களால் அர்ஜுனனையும் பீமனையும் எங்கும் செல்லவியலாமல் அம்புகளால் சூழ்ந்து நிறுத்திவிடமுடியும். நமக்குத் தேவை இரண்டு நாழிகைப் பொழுது மட்டுமே. அதற்குள் ஆசிரியர் பாண்டவப் படைகளை உடைத்து யுதிஷ்டிரனை சிறைபிடித்து கொண்டுவந்துவிடுவார்.” துரோணர் “அதற்கு ஒரு நாழிகையே மிகுதி” என்றார். “ஒருவேளை நம் நோக்கத்தை அறிந்து அவர்கள் அவரை படைகளுக்குள் புதைத்துக்கொண்டால்கூட இரண்டு நாழிகைப் பொழுதே போதுமானது” என்றார் சகுனி.

கர்ணன் “அந்திவரை அவர்களை என் விழிமுன் இருந்து விலகவிடாமல் நோக்குகிறேன். இயன்றால் இன்றே அர்ஜுனனையும் பீமனையும் களத்தில் வீழ்த்துகிறேன். என் தயக்கமெல்லாம் அர்ஜுனனை எண்ணி அல்ல, அவன் தேரோட்டியை நான் அறிந்திருப்பதனால்தான். ஆனால் அவனே தடுத்தாலும் இளைய பாண்டவர் இருவரில் ஒருவரையேனும் புண்படுத்திச் சரிப்பேன் என்பதில் ஐயமே தேவையில்லை” என்று கர்ணன் சொன்னான். “பிறகென்ன? இது இன்று நிகழட்டும்” என்று சகுனி சொன்னார்.

கர்ணன் மெல்லிய ஒவ்வாமை கொண்டவனாகத் தோன்றினான். உடலெங்கும் திகழ்ந்த ததும்பலால் அவன் எதையோ சொல்லப்போகிறவன் போலிருந்தான். ஆனால் அவன் ஒன்றும் சொல்லவில்லை. அவன் முகத்தை நோக்கியபின் விழிதிருப்பிய துரியோதனன் துச்சாதனனிடம் “நம் இன்றைய திட்டம் இது, இளையோனே. இதை தனித்தூதர் வழியாக அஸ்வத்தாமனுக்கும் ஜயத்ரதனுக்கும் அறிவித்துவிடு” என்றான். துச்சாதனன் தலைவணங்கினான்.

துரியோதனன் "முறையோ பிழையோ, இது நிகழுமென்றால் நன்றே. அங்கரே, இதை இயற்றினோம் என்றால் பாண்டவ மைந்தர் எவரையும் கொல்லாமல் நம்மால் இப்போரை முடிக்க முடியும். அதை மட்டுமே நான் கருதுகிறேன்" என்றான்.

துரோணர் புதிய ஊக்கம் கொண்டவராக எழுந்து "இன்று இதை எய்துவோம். நாளையே இப்போர் முடியும். அஸ்தினபுரியின் அரசரென நீங்கள் முடிசூடுவீர்கள்" என்றார். அவர் அடைந்த அந்த உளநெகிழ்வுக்கு நேர் எதிர்த்திசையில் நெடுந்தொலைவு சென்று அள்ளிச்சேர்த்துக்கொண்ட மிகையான உளஊக்கத்துடன் "இன்று நான் வில்லென்றால் என்னவென்று அவர்களுக்குக் காட்டுகிறேன். அவர்களின் அத்தனை அரண்களையும் பிளந்துசென்று யுதிஷ்டிரனை அகழ்ந்தெடுக்கிறேன். இது என் வஞ்சினம்!" என்றார். "நீங்கள் சொன்ன சொல்லே வெற்றிமுழக்கமென என் செவிக்கு கேட்கிறது, ஆசிரியரே" என்றான் துரியோதனன்.

துரோணரிடமிருந்து விலகி வந்ததும் சகுனி "இனி கணமும் வீண்செய்வதற்கில்லை. அவரவர் படைமுகப்புக்குச் செல்க!" என்றபின் தன் தேரிலேறிக்கொண்டார். கர்ணன் புரவியில் ஏறி திரும்பி துரியோதனனிடம் "நான் என் தேர்நிலைநோக்கி செல்கிறேன்" என்றபின் விரைந்தான். துரியோதனன் துச்சாதனனிடம் "இளையோனே, நீ உன் படைப்பிரிவுக்கே செல்" என்றபின் தானும் அகன்றான். துச்சாதனன் ஒரே கணத்தில் முற்றிலும் தனியனாக அங்கே நின்றிருந்தான். பின்னர் தன் புரவிமேல் ஏறிக்கொண்டு அதை திருப்பினான். புரவி விசைகூட்டி விரைவுகொண்டது.

அவன் பலகைப்பாதையில் குளம்படித் தாளத்துடன் சென்றுகொண்டிருக்கையில் தனக்குப் பின்னால் அதே தாளத்துடன் அணுகிவரும் புரவியை உணர்ந்து விரைவழியாமலேயே திரும்பி நோக்கினான். சற்று அப்பால் வந்துகொண்டிருந்த கரிய பெரும்புரவிக்குமேல் அமர்ந்திருந்த உருவை தெளித்து நோக்கவியலாமல் பனித்திரை என ஒன்று மறைத்திருந்தது. மேலும் அது அணுகியபோது அவ்வுருவை கண்டான். சுருள்கூந்தல் எழுந்து பறக்க ஒரு முதுமகள் அதன்மேல் இருந்தாள். அவளுடைய புரவிக்குமேல் எழுந்து நின்றிருந்த மெல்லிய மூங்கில்கம்பத்தில் வெண்ணிறக்கொடி பறந்தது. அதில் காகத்தின் முத்திரை இருந்தது.

துச்சாதனன் புரவியை இழுத்து நிறுத்தி அவளை வெறித்து நோக்கி நின்றான். அவள் நீல ஆடை அணிந்திருந்தாள். திரண்ட கலவயிற்றின்மேல் வறுமுலைகள் தொங்கி அமைந்திருந்தன. அப்புரவிக்கு கடிவாளம் இருக்கவில்லை. அவள் வலக்கையில் நீலத்தாமரையையும் இடக்கையில் சிறிய மண்கலத்தையும் வைத்திருந்தாள். கழுத்தில் எலும்புமணி மாலை. காதுகளில் எலும்புக் குழைகள். சிறு துதிக்கை என நீண்ட மூக்கு. மின்னும் எலிக்கண்கள். வாயில் இரு கோரைப்பற்கள் இருபுறமும் வளைந்திருந்தன.

அவள் அருகணைந்தபோது துச்சாதனன் “யார்?” என்றான். தன் குரலில் நடுக்கத்தை உணர்ந்து குரலை செயற்கையாக உயர்த்தி “யார் நீ? இங்கே களத்தில் பெண்களுக்கு நுழைவொப்புதல் இல்லை என்று தெரியாதா?” என்றான். அவள் அருகே வந்து நின்றாள். விழிகளில் இருந்த நோக்கு மானுடர்க்குரியதல்ல. அவளைச் சூழ்ந்திருந்த இருள் விடியல் பரவிக்கொண்டிருந்த அக்காலைப்பொழுதுக்கு அயலாக

இருந்தது. அவள் தாழ்ந்த குரலில் “நான் தவ்வை, இக்களத்தை ஆள்பவள்” என்றாள்.

துச்சாதனன் சொல்லிழந்து நோக்கி நின்றான். அருகே சென்றுகொண்டிருந்த படையினர் எவரும் அவளை காணவில்லை. அவ்வாறென்றால் அது கனவாக இருக்கக்கூடும். அவன் அதிலிருந்து விழித்துக்கொள்ள விழைந்தான். அவளை மேலும் நுணுகி நோக்கவும் விழைந்தான். விடாய் மிகுவதுபோல, மூச்சு இறுகி நெஞ்சு துடிப்பதுபோல உணர்ந்தான். “அன்னையே” என்றான். அக்குரலை அவன் கேட்கவில்லை. அவள் தன் கையிலிருந்த கலத்தை அவனை நோக்கி நீட்டினாள். “இது உனக்கு” என்றாள்.

அவன் கை மேலெழவில்லை. “இதுவும் அமுதே. அமுதுக்கு முன் எழுந்தது. திருமகளுக்கு முன் நான் எழுந்ததுபோல” என்றாள். துச்சாதனன் தன் கையை கும்பிளாகக் கோட்டி நீட்டினான். அவள் கலத்தைச் சரித்து அதிலிருந்த குளிர்ந்த வெண்ணிற அமுதை ஊற்றினாள். அது கடுந்தண்மை கொண்டிருந்தது. நெடும்பொழுது விரலிடுக்குகளில் வழிந்தது. அதை கையில் வைத்திருக்கமுடியாதென்று உணர்ந்தான். அவளுடைய புரவி வால்சுழற்றி விசைஎழுப்பி முன்னால் பாய்ந்துசென்றது. சற்று அப்பால் தேங்கியிருந்த இருளுக்குள் அவள் சென்று மறைந்தாள். அவன் அது வெறும் கனவா என வியந்தபடி குனிந்து தன் கையிலிருந்த அமுதைக் கண்டு திடுக்கிட்டான். சிலகணங்கள் அதை நோக்கி நின்றபின் அதை அருந்தினான்.

அவன் கையை கீழிறக்கி வாயைத் துடைத்தபோது நன்றாகவே விழிதுலங்கியிருந்தது. இருபுறமும் நிரைவகுத்து நின்றிருந்த கௌரவ வீரர்கள் எதிரே துலங்கிவந்த வானை

நோக்கிக்கொண்டிருந்தார்கள். அவன் நோக்குணர்வை அடைந்து ஏறிட்டுப் பார்த்தான். சற்று அப்பால் உயர்ந்த மேடையொன்றின்மேல் பார்பாரிகன் அமர்ந்திருந்தான். அவன் தன்னை நோக்குவதாக அவன் உணர்வு சொன்னது. ஆனால் அவ்விழிகளில் எதையும் நோக்காத வெறிப்பே துலங்கியது.

**வெண்முரசு விவாதங்கள்**

# கார்கடல் - 19

சஞ்சயன் சொன்னான். அரசே, நான் இதோ என் முன் குருக்ஷேத்ரப் போர்க்களத்தை பார்த்துக்கொண்டிருக்கிறேன். எக்கணமும் தோற்பரப்பின்மீது விழுவதற்காக எழுந்து காற்றில் உறைந்து காத்து நின்றிருக்கின்றன கழைக்கோல்கள். பல்லாயிரம் விழிகள் கிழக்கே தொடுவான் விளிம்புக்கு மேல் கதிரவனின் ஒளி எழுவதற்காக நோக்கு ஊன்றி நின்றிருக்கின்றன. கம்பங்களில் எழுந்த கொடிகளில் ஒளி எழுந்துவிட்டது. உலோக வளைவுகளில், படைக்கலக் கூர்களில் கதிரவனின் விழிகள் தோன்றிவிட்டன. குளிர்ந்த காற்றில் ஆடைகள் அசைய படைத்திரளில் சிற்றலைகள் எழுந்துகொண்டிருக்கின்றன.

காத்திருக்கும் படைகள் எனக்கு எப்போதுமே விந்தையானதோர் உளஎழுச்சியை உருவாக்குகின்றன. அவர்கள் உள்ளங்கள் முன்னரே எழுந்து போர்கலந்துவிட்டிருக்கின்றன. உடல்கள் அங்கே செல்லத் தவித்துத் ததும்பி நின்றிருக்கின்றன. எடையென்றும் இருப்பென்றும் ஆன பிறிதொன்று உடலென்று ஆகி அவர்களை அங்கே நிறுத்தியிருக்கின்றது. அணைகட்டி

நிறுத்தப்பட்ட நீருக்குள் பாய்ச்சல் ஒளிந்திருப்பதுபோல. அவர்கள் ஒவ்வொருவரின் உடலிலும் அந்த நிறுத்தப்பட்ட விசையை காண்கிறேன். கதைகளை பற்றிய கைகளில் அது முறுகுகிறது. உடைவாள் உறைகளின் செதுக்குகளில் அலையும் விரல்களில் அது ததும்புகிறது. புரவிகளில் செருக்கடிப்பாகவும் குளம்புமாற்றலாகவும் யானைகளில் செவிநிலைப்பாகவும் துதிக்கைநுனித் தேடலாகவும் அது எழுகிறது.

இரு படைகளுக்கும் நடுவே இருக்கும் அந்த நீண்ட வெற்றிடம் ஒரு நதி போலிருக்கிறது. அது உச்ச அழுத்தத்தில் அதிர்ந்துகொண்டிருக்கின்றது. அங்கு ஒரு விரல் வைத்தால் அறுந்து தெறித்துவிடும். பல்லாயிரம் உள்ளங்கள் எழுந்து அங்கே போரை நிகழ்த்திக்கொண்டிருக்கின்றன. அத்தனை தெய்வங்களும் அங்கே ஏற்கெனவே செறிந்தமைந்துவிட்டன. அங்கே பறக்கப்போகும் அம்புகள் முன்னரே முனைகள் விழிகொள்ள எழுந்துவிட்டன. அங்கே நிகழும் போர் பிறிதொன்று. பல்லாயிரம் நுண்படைக்கலங்கள். பல்லாயிரம் சொல்லிலா வஞ்சங்கள். பல்லாயிரம் பருவிலா விசைகள். இங்கிருந்து பார்க்கையில் அந்த இடைவெளி தெய்வங்களின் கையில் சாட்டை போலிருக்கிறது. அல்லது பெருநாகமா? செங்குருதி ஒழுக்கா? ஒரு புண்வடுவா? அனலா?

அதன் இரு மருங்கிலும் நின்று தங்கள் உடலமைத்த அணை மீது திரண்டெழுந்த உள்ளப்பெருக்கால் முட்டிக்கொண்டிருக்கும் இரு பெரும்படைகள். அவை இரு நீர்த்துளிகள். விண்ணிலிருந்து ஒரு கை நீண்டு அவற்றின் நடுவே சற்று அசைந்தால் போதும். முன்பெங்கோ ஒன்றென இருந்த நினைவையே தங்கள் வடிவென கொண்டிருக்கும் அவை

நீண்டு பெருகி ஒன்றென இணைந்துகொள்ளும். போர்நிகழ்வின்போது இரு படைகளும் ஒன்றையொன்று நிரப்பிக்கொள்ள துடிப்பவை போலிருக்கும் விந்தையை நோக்கிநோக்கி சலிக்கவில்லை எனக்கு. ஒன்றையொன்று உண்பவையும் ஒன்றோடொன்று புணர்பவையும் அவ்வாறே ஒன்றென்றாகின்றன.

அரசே, அதோ அங்கநாட்டரசர் கர்ணன் படைமுகப்பு நோக்கி தன் ஜைத்ரம் என்னும் பொற்தேரில் வந்துகொண்டிருக்கிறார். ரஸ்மிகள் என்னும் ஏழு குதிரைகளால் இழுக்கப்படும் அவருடைய தேர் இலையறியாது பூத்துநிறைந்த வேங்கை மரம் போலிருக்கிறது. இளங்காலை ஒளியில் குகைவிட்டெழும் சிம்மம்போல் சுடர்விடுகிறது. அரையிருளில் பெருகியிருக்கும் படை நடுவே காட்டெரி எழுந்ததுபோல் வருகிறது. அதைக் கண்டு கௌரவப் படையினர் உவகையால் கொந்தளிப்படைகின்றனர். அவர்கள் தங்கள் விற்களையும் வாள்களையும் தூக்கி வீசி எழுந்து கூச்சலிடுகிறார்கள். படைநிலையின் ஒழுங்கையும்கூட அவர்கள் மறந்துவிட்டிருக்கிறார்கள். கைவிடப்பட்டவர்களின் கண்களில் நம்பிக்கை தெய்வப்பேருரு கொள்கிறது. உவகையோ துயரோ சினமோ உச்சகட்ட உணர்ச்சிகள் அனைத்தும் ஒன்றென்றே தோன்றுகின்றன. வெறிப்புகொண்ட விழிகள். வலிப்படைந்த தசைகள். துள்ளி அதிரும் உடல்களில் வீசும் கைகள். சாவின் கணங்கள்போல. அல்லது தெய்வமெழுந்த தருணம்போல.

தேர்த்தட்டில் கர்ணன் தன் கன்னங்கரிய வில்லாகிய விஜயத்தை இடக்கையில் ஏந்தி வலக்கையை இடையில் ஊன்றி நின்றிருக்கிறார். தூய வெண்ணிறமான நாண் கொண்ட அந்த வில் சீறி எழுந்து விண்ணில் பறக்க விழையும் நாகம்

என நெளிந்துகொண்டிருக்கிறது. அவர் நெஞ்சில் சூரியபடம் பொறிக்கப்பட்ட பொற்கவசம் மின்னுகிறது. அவர் காதுகளில் எரிதுளிகள் என மணிக்குண்டலங்கள். தலையில் அவர் அணிந்திருக்கும் கவசத்திலும் பொற்பூச்சு. அதன்மேல் அருமணிகள் பதிக்கப்பட்டுள்ளன. இளநீல கலிங்கப்பட்டு இடைக்கச்சை. செம்பட்டாடை. காலில் அவர் அணிந்திருக்கும் குறடுகளிலும் பொற்தகடுகள் பொதிந்து அருமணிகள் மின்னுகின்றன. அரசே, போர்க்களத்தில் அணிகள் கூடாதென்ற நெறியை அவர் எவ்வகையிலும் பொருட்படுத்தவில்லை. அவருடைய தூளியில் நாகக்குழவிகளென செறிந்திருக்கின்றன நச்சுமுனைகொண்ட அம்புகள்.

கௌரவப் படைகள் எரிகல் விழுந்த ஏரிப்பரப்புபோல அலையலையாக கொந்தளித்து விரிகின்றன. படைத்தலைவர்கள் தங்கள் படைகளை அமைதிப்படுத்த முயல்கின்றனர். “ஓசை அமைக! விடியல் முரசொலி கேட்கும்வரை அமைதி கொள்க!” என கொம்புகள் ஆணையிடுகின்றன. படையினர் அதை செவிகொள்ளவில்லை. நூற்றுவர்தலைவர்களும் ஆயிரத்தவரும் எளிய வீரர்களுடன் எழுந்து கூச்சலிட்டு ஆர்ப்பரிக்கின்றனர். முதலில் அஸ்தினபுரியின் படைகள்தான் வாழ்த்தொலி எழுப்பின. பின்னர் துணைநாட்டுப் படைகள் அவ்வாழ்த்தொலிப் பெருக்கில் இணைந்துகொண்டன. அசுரர்களும் அரக்கர்களும் அதில் இணைந்துகொள்ள கௌரவப் படையின் கான்விளிம்பு வரை, எல்லைகள் வரை விரிந்த வாழ்த்தொலிகளை விழிகளாலேயே காணமுடிகிறது.

அரசே, கௌரவ இளவரசர்களும் மைந்தர்களும் கைகளைத் தூக்கி வாழ்த்தொலி எழுப்பி நடனமிட்டனர். “கதிரோன் எழுகை!

ஆடுக! வெய்யோன் எழுகை! கொண்டாடுக! நாம் புட்கள்! நாம் சிறு பூச்சிகள்! துள்ளி ஆர்ப்பரிப்போம்!” துச்சகரும் துர்மதரும் துச்சாதனரும் தன்னைச் சூழ்ந்து நின்று வாழ்த்தொலி எழுப்பி ஆடுவதைக் கண்ட துரியோதனரும் கைகளைத் தூக்கி “அங்கநாட்டரசர் வாழ்க! வில்திறல் வேந்தன் வெல்க! சூரியன் மைந்தன் வெல்க!” என்று கூவினார். அஸ்வத்தாமரும் பூரிசிரவஸும் ஜயத்ரதரும் “பெருவில்லவன் வெல்க! கதிர்மைந்தன் வெல்க!” என்று கூவினர். மெல்ல மெல்ல அங்கிருந்த அத்தனை அரசர்களும் தங்கள் எல்லைகளை மறந்தனர். பகதத்தர் முகம் மலர கைகளைத் தூக்கி வாழ்த்தொலி எழுப்பியதும் அரசர்களும் தயக்கம் அழிந்து கைகளைத் தூக்கி வாழ்த்துக்குரல் பெருக்கினர். சாகாடும் நோயும் அச்சமும் ஐயமும் அகன்றன. அக்கணம் அங்கிருத்தல்போல் இனிதொன்றில்லை என்றாயிற்று.

கௌரவத்தரப்பில் எழுந்த வாழ்த்தொலிகளை பாண்டவர்கள் முதலில் திகைப்புடன் நோக்கினர். பொற்தேர் மெல்ல வந்து படைமுகப்பில் நின்றபோது விழிகள் வெறிக்க சொல்லழிந்தனர். கௌரவர்களின் வாழ்த்தொலியின் தாளம் பாண்டவர்களின் கால்களில், கைவிரல்களில் அறியாது குடியேறியது. தலைகள் அசைந்தன. முகங்கள் மலர்ந்தன. உதடுகள் சொற்களை தாங்களும் ஏற்று ஒலித்தன. எங்கோ எவரோ “கதிர்மைந்தன் வெல்க! மணிக்குண்டலன் வெல்க! பொற்கவசன் வெல்க!” என்று கூவ பாண்டவப் படைகளிலிருந்தும் ஆங்காங்கே வாழ்த்தொலிகள் எழுந்தன. அக்குரல்களைக் கேட்டதும் பெருமழை ஒரேகணத்தில் இறங்கும் ஒலிபோல பாண்டவப் படையும் வாழ்த்தொலிக்கத் தொடங்கியது. “வெல்க வில்வேந்தன்! வெல்க

விண்ணொளியன்! வெல்க அங்கன்! வெல்க வில்லுக்கிறைவன்!” என பாண்டவப் படை முழக்கமிட்டது.

பாண்டவப் படை நடுவே நின்றிருந்த யுதிஷ்டிரர் அந்த வாழ்த்தொலி தன்னைச் சூழ்ந்துதான் எழுகிறது என்று முதலில் உணரவில்லை. தன்னருகே நின்றிருந்த சதானீகரும் சுருதசேனரும்கூட கைவில்லை தூக்கி தலைமேல் ஆட்டியபடி களிப்பெழுந்த முகத்துடன் கூச்சலிடுவதைக் கண்டதும் திகைத்து “என்ன இது? என்ன நடக்கிறது இங்கே? இளையோரே, மைந்தர்களே!” என்று கூவினார். தேரில் இருந்து புரவிமேல் தாவி அவர் அருகே வந்த சகதேவர் “மூத்தவரே, இது படைகளின் இயல்பான எழுச்சி. நாம் ஆணையிட இயலாது” என்றார். “நம் எதிரிக்கு வாழ்த்து சொல்கிறார்கள்! அவன் வெல்லவேண்டுமென கூவுகிறார்கள்!” என்று யுதிஷ்டிரர் முகம் சினத்தில் சிவந்து இறுக கூச்சலிட்டார். “ஆம், ஆனால் போர்முரசு கொட்டியதுமே வீரர்களாக ஆகிவிடுவார்கள்” என்றார் சகதேவர்.

“நம் மைந்தரும் கூவுகிறார்கள்!” என்றார் யுதிஷ்டிரர். “ஆம், மூத்தவரே. நானும் சேர்ந்து வாழ்த்து கூவினேன். அதோ நகுலனும் வாழ்த்து கூவுகிறான்” என்றார் சகதேவர். “அவனுக்காக! அந்தக் கீழ்மகன் நம் குலமகளை அவைச்சிறுமை செய்தவன்!” என்றார் யுதிஷ்டிரர். “ஆம், ஆனால் இத்தருணத்தில் களமெழுந்திருப்பவர் மெய்யாகவே கதிரோனின் மைந்தன் எனத் தோன்றுகிறார்!” என்றார் சகதேவர். “வாயை மூடு, அறிவிலி!” என யுதிஷ்டிரர் சீறினார். “அவனை இன்றே களத்தில் வீழ்த்தியாகவேண்டும். அர்ஜுனனிடம் சொல். இன்றே அவன் கொல்லப்பட்டாகவேண்டும். அவனை எண்ணி எண்ணி இத்தனை நாள் அஞ்சிக்கொண்டிருந்தேன். என்

கனவுகள்தோறும் நச்சுநாகங்களுடன் தோன்றியவன் அவன். அவன் அளித்த துணிவால்தான் அவன் நம்மை காடுகள்தோறும் அலையவிட்டான். நம் நிலத்தை கைப்பற்றினான். நம் குலமகளை இழிவுசெய்தான்!”

“இங்கிருக்கிற எவையும் கதிரவனில் ஒட்டுவதில்லை” என்று சகதேவர் சொன்னார். யுதிஷ்டிரர் அவர் விழிகளை நோக்கி சிலகணங்கள் அமைந்துவிட்டு மெல்ல அடங்கி முகம் முழுக்க கசப்பு நிறைந்திருக்க “நாம் அவனுடன் போரிடப் போகிறோமா அல்லது அடிபணிவதாகவே திட்டமா?” என்றார். “போர் என்பது வேறு. அது போர்முரசு ஒலிக்கும்போதுதான் தொடங்குகிறது” என்று சகதேவர் சொன்னார். யுதிஷ்டிரரை மெல்லிய புன்னகை நிறைந்திருந்த விழிகளால் நோக்கியபடி “அப்போதுகூட நாம் மண்ணில் தெய்வ உருவென எழுந்த ஒருவரிடம் பொருதுகிறோம் என்னும் பெருமை எஞ்சுகிறது. அவர் கையால் கொல்லப்பட்டால் அதுவும் பெருமையே” என்றார்.

“அகல்க... என் முன்னிருந்து செல்க... கீழ்மக்கள்! வெல்வதென்ன என்று அறியாத அசடர்!” என்று கூவினார் யுதிஷ்டிரர். சகதேவர் “அஞ்சற்க! இந்த உளநிலை ஆழ்ந்த நம்பிக்கையிலிருந்து வருவது. வீரர்களுக்குரியது. நாம் அஞ்சவில்லை என்பதற்கான சான்று இது” என்றார். “செல்க! செல்க!” என யுதிஷ்டிரர் கூச்சலிட்டார். வில்லை தன் அருகே தேர்த்தட்டில் வைத்துவிட்டு கால்சோர்ந்து பீடத்தில் அமர்ந்தார். அவரைச் சூழ்ந்து பாண்டவப் படை “அங்கர் வாழ்க! ஒளியழகன் வாழ்க! வில்தேர் வல்லவன் வெல்க!” என முழங்கிக்கொண்டிருந்தது.

அங்கே பாண்டவப் படைகளின் முகப்பில் கையில் கதையுடன் இரு மருங்கும் சுதசோமரும் சர்வதரும் துணைக்க களம்நின்ற பீமன் இறுகிய முகத்துடன் கர்ணனை விழியிமைக்காமல்

நோக்கிக் கொண்டிருந்தார். அவர் மைந்தரும் அவரைப்போலவே முகம் கொண்டிருந்தனர். அவர்களுக்கு முன்னால் கௌரவர்கள் துள்ளிக்குதித்து கூச்சலிட்டுக்கொண்டிருந்தார்கள். “பொற்தேர் எழுகிறது! வென்று கடந்துசெல்லும் தேர்! வெங்கதிரோன் ஊரும் தேர்! தெய்வங்களும் தடுக்கவியலா பெருந்தேர்!”

அவர்களுக்கு அப்பால் படைமுகப்பில் விழிவிரித்த பீலி எழுந்த முடியுடன் தேர்முகப்பில் இளைய யாதவர் அமர்ந்திருக்க தேர்த்தட்டில் காண்டீபத்தை ஊன்றி இடக்கையை இடையில் வைத்து அரங்குக்கு எழப்போகும் ஆட்டன் என நின்றிருந்த அர்ஜுனரும் கர்ணனை விழியிமையாமல் நோக்கிக்கொண்டிருந்தார். அவரை திரும்பி நோக்கிய இளைய யாதவர் “என்ன எண்ணுகிறாய்?” என்றார். “பேரழகர்! யாதவரே, மண்ணில் மானுடர்க்கு இத்தனை அழகு இயல்வதாகுமா? இவர் மெய்யாகவே யார்?” என்றார். இளைய யாதவர் நகைத்து “பார்த்தா, மண்ணிலிருந்து மானுடர் பெற்றுக்கொள்ளும் ஒவ்வொன்றும் சுமையே. அவை தெய்வங்கள் அளித்தவற்றால் மட்டுமே ஆனவை. அதுவே பேரழகென இலங்குகிறது” என்றார்.

அர்ஜுனர் “ஆம், அவருக்கு மறுக்கப்பட்ட அனைத்தாலும் அழகிலியர் ஆனோம்” என்றார். “மறுக்கப்பட்டவற்றை தேடிச்செல்லாமலிருந்தமையால் அவன் மேலும் அழகுருவன் ஆனான். வெல்லப்பட்ட அனைத்தையும் அள்ளிக்கொடுப்பதன் வழியாக தெய்வநிலை கொண்டான். அர்ஜுனா, கொடுப்பவனிடமிருந்து பொருள் விலகிச்செல்கிறது. அவ்விடத்தில் அப்பொருளுக்குரிய தெய்வங்கள் வந்து நிறைகின்றன. அவன் இவ்வாழ்நாளெல்லாம் அளித்தவற்றின் ஒளியைச் சூடிவந்து நின்றுள்ளான்” என்றார் இளைய யாதவர்.

அர்ஜுனர் பெருமூச்சுவிட்டார். அவர் உளம்விம்மி விழிநீர் சோர்ந்தது. “நான் எண்ணுவனவற்றை இப்போது என்னால் சொல்லிவிட இயலாது, யாதவரே” என்றார். “சொல்லப்படாதவை கருவறைத் தெய்வங்கள், சொற்கள் விழாத்தெய்வங்கள் என்று ஒரு சொல் உண்டு” என்றார் இளைய யாதவர். “இதோ என் முன் நின்றிருப்பது என் வடிவே. என்றும் என் கனவுகளில் நான் எண்ணி எண்ணி ஏங்கிய தோற்றம். நான் சென்று சென்று அடையக்கூடும் இடம்” என்றார் அர்ஜுனர். இளைய யாதவர் வாய்விட்டு நகைத்தார். அரசே, இந்தக் களத்தில் மெய்யான நகைப்பு எழுவது அவரிடமிருந்து மட்டுமே.

திருதராஷ்டிரர் வணங்கிய கையுடன் சஞ்சயனின் சொற்களை கேட்டுக்கொண்டிருந்தார். அவருடைய விழிக்குழிகளில் தசைக்குமிழிகள் துள்ளி அசைந்தன. முகத்திலிருந்து அவை பாய்ந்தெழுந்து வண்டுகளென பறக்கக்கூடும் எனத் தோன்றியது. “சஞ்சயா, இன்று நம் படைகள் என்னென்ன திட்டத்துடன் இருக்கிறார்கள் என்று சொல். அவர்களின் படைசூழ்கை எதைக் காட்டுகிறது என்று நோக்கு… அங்கே போர் நிகழ்வதற்கு முன்னரே என்னுள் போர் தொடங்கிவிடவேண்டும். நிகழும் போருடன் என் போரை இணைத்தால் மட்டுமே என்னால் பொருள்கொள்ள இயலும்” என்றார். சஞ்சயன் படையை ஆடிகளினூடாக அருகிலும் சேய்மையிலும் மாறிமாறி நோக்கியபின் சொன்னான்.

அரசே, பத்துநாள் போரில் படிப்படியாக வீழ்ந்து கர்ணனின் வருகையால் மீண்டெழுந்த நம்பிக்கையுடன் நம் அரசர் தம்பியர் புடைசூழ படைமையத்தில் யானைமேல் அமர்ந்திருக்கிறார். அதற்கு வடக்கே சல்யராலும் சுபலராலும்

இருபுறமும் துணைக்கப்பட்ட துரோணர் தன் தேரில் வெண்தாடி காற்றில் அலைப்புற மலரமர்வில் தேர்ப்பீடத்தில் அமர்ந்து மடியில் வில்லை வைத்திருக்கிறார். துரோணரை உத்தரபாஞ்சாலப் படைகள் தலைமையெனக் கொண்டுள்ளன. மத்ரநாட்டுப் படைகளும் காந்தாரநாட்டுப் படைகளும் உடனுள்ளன. பரிவில்லவர்களும் மெல்லிய தேர்களில் ஊரும் தொலைவில்லவர்களும் கொண்ட விரைவுப்படை துரோணரையும் சல்யரையும் தொடர்கிறது.

நம் அரசருக்கு மறுபக்கம் தெற்கே கர்ணனின் பொற்தேருக்கு இருபுறமும் ஜயத்ரதரும் அஸ்வத்தாமரும் படைத்துணையென நின்றிருக்கிறார்கள். அவர்களை தலைமைகொண்டு சிந்துநாட்டுப் படைகள் நீண்டு அணிகொண்டுள்ளன. அங்கநாட்டுப் படைகள் கர்ணனின் பின்னால் நிரைகொண்டிருக்கிறார்கள். அவர் மைந்தர்களான விருஷகேதுவும் சத்ருஞ்சயனும், சுதமனும், சத்யசேனனும் சித்ரசேனனும் சுஷேணனும் திவிபதனும் பாணசேனனும் நின்றிருக்கிறார்கள். பூரிசிரவஸ் இடையே பால்ஹிகநாட்டுப் படைகளுக்கு முன்னணி கொடுத்து நின்றிருக்கிறார். அவரைத் தொடர்ந்து அமைந்திருக்கின்றன சிபிநாட்டுப் படைகள். காத்திருக்கும் படைகள் ஒற்றைவில்லில் ஓராயிரம் அம்புகள் எனத் தோன்றுகின்றன. ஒரு சிறு விரலசைவில் அவை பெருகியெழுந்து விண்நிறைக்கக்கூடும்.

அரசே, அஸ்வத்தாமர் வகுத்து கர்ணன் சீரமைத்தபடி கௌரவப் படைகள் சகடவடிவில் அமைந்துள்ளன. இறுகிய நீள்சதுரக் கூண்டு போன்று மையப்படைகள் அமைந்திருக்க அதை முன்செலுத்தும் இரு சகடங்களென வலப்புறம் பால்ஹிகரின் யானைப்படையும் இடப்பக்கம் பகதத்தரின் யானைப்படையும்

அமைந்துள்ளன. வடவிளிம்பு துரோணரால் கூர்கொண்டிருக்க தென்விளிம்பில் கர்ணன் நின்றிருக்கிறார். சிறுத்தையைப் பிடிக்கும் பொறி போன்றது இச்சூழ்கை. இதன் முகப்பு உள்மடிந்து எதிரியை அகத்தே நுழையவிடும். இருமருங்கும் மடிந்து அவர்களை சூழ்ந்துகொள்ளும்.

அரசே, கௌரவப் படைகளுக்கு எதிர்முகமாக நின்றிருக்கும் பாண்டவர்களின் படை நாரை வடிவு கொண்டுள்ளது. நாரையின் கூர்ந்த அலகென அர்ஜுனர் தன்பின் இந்திரப்பிரஸ்தத்தின் தேர்ந்த வில்லவர் சூழ நின்றிருக்கிறார். அவருக்கு இருபுறமும் அவருடைய வில்திறன்மிக்க மைந்தர்களான சுருதகீர்த்தியும் அபிமன்யூவும் நாணேற்றிய வில்லுடன் நிலைகொள்கிறார்கள். நாரையின் வலச்சிறகென சாத்யகியும் இடச்சிறகென திருஷ்டத்யும்னரும் படைமுகப்பில் நிற்கிறார்கள். பறவையின் உடலென யுதிஷ்டிரரும் நகுலரும் சகதேவரும் அமைந்திருக்கிறார்கள். துருபதரும் மைந்தர்களும் அவர்களுடன் நின்றிருக்க பெருந்திரள் என அமைந்த பாஞ்சாலப் படை அவர்கள் ஆணைக்கு காத்திருக்கிறது.

நாரையின் கூருகிர் வலக்கால் கடோத்கஜன். இடக்கால் பீமன். பீமனுக்கு அவர் மைந்தர்கள் சர்வதரும் சுதசோமரும் கதை ஏந்தி படைத்துணை அளிக்கிறார்கள். கடோத்கஜனுடன் நிஷாதரும் கிராதரும் அசுரரும் அரக்கர்களுமான படைத்திரள் நின்றுள்ளது. இரு படைகளும் ஒவ்வொரு காலத்துளியாலும் ஒன்றையொன்று நோக்கி, உண்டு, இணைந்து, பிறிதொன்றென ஆகிக்கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு காலத்துளியாலும் ஒன்றையொன்று விலக்கி விலக்கி திசைஎல்லைகளை நோக்கிச் சென்றுகொண்டும் இருக்கின்றன. இக்கணம் இவ்வாறே நீண்டு நீண்டு முடிவிலிக் காலமென

ஆகுமெனில்கூட வியப்படைய ஏதுமில்லை. இப்புடவி பிரம்மத்தை நோக்கி முதல் வியப்பின் கணத்தில் காலமிலாதாகி நின்றுள்ளது என்றல்லவா தொல்மறைகள் கூறுகின்றன?

“சஞ்சயா, சூதா, சொல்க! அங்கு என்ன நிகழவிருக்கிறது? ஆசிரியரான துரோணர் என் மைந்தனுக்களித்த வஞ்சினம் நிறைவேறுமா?” என்று திருதராஷ்டிரர் கேட்டார். “அரசே, இன்று யுதிஷ்டிரரை உயிருடன் சிறைபிடித்து பணயப்பொருளென படைக்குள் வைத்து போர்முடிவைக் குறித்து பேசவேண்டும் என்று கௌரவர் எடுத்த முடிவை, அதை ஏற்று துரோணர் கொண்ட வஞ்சினத்தை ஒற்றர்களினூடாக பாண்டவர்கள் அறிந்தபோது மிகவும் பிந்திவிட்டிருந்தது. படைசூழ்கை முடித்து தன் அணித்தேரில் யுதிஷ்டிரர் களமுகப்புக்கு எழும் பொழுது அது. புறா கொண்டுவந்த அச்செய்தி அவர்கள் அனைவரையுமே முதலில் திகைக்கச் செய்தது.

சீற்றத்துடன் “இது போரறம் அல்ல! இது கீழ்மை!” என்று நகுலர் கூவ “வீண்பேச்சு. இங்கு அறப்போரா நிகழ்கிறது?” என்று கசப்புடன் பீமன் சொன்னார். “நன்று. அவ்வாறு ஒரு இலக்கு அவர்களுக்கிருந்தால் அதுவே அவர்களின் செயல்மையமும் ஆகும். அவர்களை நாம் அங்கே திரட்டிக்கொள்ள முடியும். இன்றைய போரில் அவர்கள் மூத்தவரை சிறைபிடிக்க முயல்வார்கள் எனில் அம்முயற்சியை கடந்தாலே நாம் வென்றுவிட்டோம் என்று பொருள்” என்று அர்ஜுனர் சொன்னார். “இன்று மூத்தவர் நம் படைகளுக்கு உள்ளேயே இருக்கட்டும். நமது பன்னிரு படைப்பிரிவுகளைக் கடந்தன்றி மூத்தவரை எவரும் அணுக முடியாத நிலை எத்தருணத்திலும் களத்திலிருக்க வேண்டும்.”

யுதிஷ்டிரர் “ஆனால் அரசன் என்னும் நிலையில் அது எனக்கு இழிபெயரை உருவாக்கும். நான் களத்தில் ஒளிந்துகொண்டேன் என்று பின்னொரு நாள் சூதர் பாடுவார்கள்” என்றார். பீமன் “சூதர்கள் இனி புதியதாகப் பாடுவதற்கு ஒன்றுமில்லை, மூத்தவரே. இந்தப் பத்து நாட்களும் பெரும்பாலும் நீங்கள் ஒளிந்துகொண்டுதான் இருந்தீர்கள்” என்றார். சீற்றத்துடன் அர்ஜுனர் “சொல்லடக்குங்கள், மூத்தவரே” என்று பீமனை நோக்கி சொன்னார். “என் சொற்கள் எவராலும் செவிகொள்ளப்படுவதில்லை” என்றார் பீமன்.

அர்ஜுனர் “பொழுது அணையும் தருணம் வரை படைக்குள்ளே இருங்கள், மூத்தவரே. அவர்கள் உங்களை அதற்குமேல் எவ்வகையிலும் பணயம்கொள்ள இயலாதெனும் நிலை எழுகையில் அந்திக்கு சற்றுமுன் பன்னிரு படைப்பிரிவுகளும் பிரிந்து விலக முன்னெழுந்துவந்து துரோணரை எதிர்கொள்ளுங்கள். என் இரு மைந்தரும் இருபுறமும் வருவார்கள். நீங்களும் துரோணரும் பொருதிக்கொண்டிருக்கையிலேயே பொழுதணைந்து போர் நாள் முடிவுக்கு வரட்டும். நீங்கள் பொருதி நின்றீர்கள் என்னும் செய்தியே படைவீரர்கள் உள்ளத்தில் எஞ்சி நிற்கும்” என்றார்.

யுதிஷ்டிரர் முகம் மலர்ந்து “நன்று, அதையே செய்வோம்” என்றார். பீமன் சலிப்புடன் தலையசைத்து “நாம் எதை முதன்மையாக பேசிக்கொண்டிருக்கிறோம்?” என்றார். “இதுவே நம் சூழ்கை. இறுதி கொள்க!” என்று சொல்லி எழுந்து அர்ஜுனர் தலைவணங்கினார். “ஆம், என்னை அவர்கள் பணயம் கொள்ளலாகாது. அவ்வாறு நிகழ்ந்தால் இன்றுடன் போர் முடியுமென்றே கொள்ளவேண்டும். அதை தடுப்பது உங்கள் அனவருக்கும் கடன்” என்று யுதிஷ்டிரர் சொன்னார்.

முதல் கதிர்வில் தொடுவானில் எப்போது எழுந்தது, முதல் கழைக்கோல் முரசுத்தோல்பரப்பை எப்போது தொட்டது என்று இங்கிருக்கும் நானல்ல அங்கிருக்கும் எவரும் அறியவில்லை. நோக்கியவரோ கழை சுழற்றி முழக்கியவரோகூட உணரவில்லை. மறுகணம் எழுந்து வளைந்து ஒன்றையொன்று அறைந்துகொண்டு ஒன்றென்றாகி பின்னிப் பிணைந்து துள்ளி நெளியலாயிற்று படைமுகப்பின் விளிம்பின் நீள்கோடு. இக்கணம்வரை நான் பார்த்துக்கொண்டிருந்த அந்த நீள்வெற்றிடம் கொந்தளிக்கும் மானுடக்குமிழிகளின் வெளியாயிற்று.

இதோ மோதிக்கொந்தளிக்கும் படைமுகப்புக்கு யுதிஷ்டிரர் இருபுறமும் சதானீகரும் சுருதசேனரும் துணைவர நகுலரும் சகதேவரும் பின்னணியில் தொடர தனது தேரிலேறி வருகிறார். அவரை வாழ்த்தி பாண்டவர்கள் பெருங்குரலெழுப்புகின்றனர். முரசுகள் முழங்கி போர் தொடங்கியதுமே எடைமிக்க கருங்கல் நீரில் அமிழ்வதுபோல் அவருடைய தேர் பின்னகர ஒன்றின்மேல் ஒன்றென பன்னிரு திரைகள் வந்து மூடுவதுபோல் பாண்டவர்களின் படைப்பிரிவுகளால் சூழ்ந்து பின் அகற்றி கொண்டுசெல்லப்பட்டார்.

அரசே, போர் நிகழ்வதை பார்த்துக்கொண்டிருக்கையில் ஒவ்வொரு துளியையுமென நோக்கி ஒரு போரை காண்கிறேன். விழிவிலக்கி ஒட்டுமொத்த அசைவாக பிறிதொரு போரை காண்கிறேன். ஒன்று பிறிதுடன் எத்தொடர்பும் இலாதிருக்கிறது. போர் நிகழும் தருணத்தில் அங்கு வெற்றியென்றோ தோல்வியென்றோ ஒன்று உள்ளதை தெய்வங்களேனும் உணருமென்று தோன்றவில்லை. போர் நோக்க நோக்க

பெருகுவது. நோக்கி நோக்கி நாம் குறுக்கிக்கொள்வது. சொல்லென்று ஆக்குகையில் அதற்கு முந்தையகணமே போர் முடிந்துவிட்டிருக்கிறது. சொல்லில் எழும் போர் பிறிதொன்று. அது என்றுமுள்ளது.

போர் எந்த மெய்ப்பொருளையும் உருவாக்குவதில்லை. உருவாக்கிய அனைத்தையும் அது உடைத்தழிக்கிறது. வெற்றிடம் எனும் மெய்ப்பொருள் மட்டுமே எஞ்சியிருக்கச் செய்கிறது. அள்ளிய பள்ளத்தில் சூழ்ந்திருக்கும் நீர் சுழித்து வந்து நிரப்புவதுபோல் நாம் உருவாக்கி இங்கு நிறைத்து வைத்திருக்கும் மெய்ப்பொருள்கள் அனைத்தும் வந்து அங்கு நிரம்புவதையே காண்கிறோம். ஆகவேதான் காலந்தோறும் மெய்யறிவோர் போரை நாடி வருகிறார்கள். தங்கள் தலையை அறைந்து உடைத்துக்கொள்ள கரும்பாறைச் சுவரைத் தேடி வரும் வலசைப்பறவைகள்போல.

போர் என்பது ஒரு குமிழி வெடித்து மறையும் கணம் மட்டுமே. முன்பிலாத ஒன்று எழுந்து அக்கணமே மறைவதன்றி வேறில்லை அது. அரசே, சொல்லில் எழும் போர் மலையடுக்குகள்போல் என்றும் இங்கே நின்றிருக்கும். அதிலிருந்து பல்லாயிரம் போர்களை ஒற்றி எடுத்துக்கொண்டே இருப்பார்கள் நம் தலைமுறைகள். போர் எரிபுகுந்து மீள்வதுபோல் ஒரு மறுபிறப்பு. போர் மானுடம் செய்துகொள்ளும் தற்கொலை. பல்லாயிரம் தற்கொலைகளினூடாக வாழ்வை முடிவிலாது நிகழ்த்திக்கொண்டிருக்கிறது இப்புடவி என்கின்றது அசுரவேதம். அது வாழ்க!

திருதராஷ்டிரர் குழப்பத்துடன் கைநீட்டி சஞ்சயனின் கைகளை பற்றிக்கொண்டு “என்ன சொல்கிறாய்? உன் சொற்கள் என்னைக்

குழப்புகின்றன. முன்பு எப்போதும் இப்படி பேசியவனல்ல நீ” என்றார். சஞ்சயன் நகைத்து “இந்தப் போரை பத்து நாட்கள் பத்தாயிரம் முறை நோக்கி நான் அடைந்த சொற்கள் இவையென்று கொள்க!” என்றான்.

**[வெண்முரசு விவாதங்கள்]**

# கார்கடல் - 20

நோக்குமேடையில் கைகளை நெஞ்சோடு சேர்த்து, வலச்செவியை முன்கொண்டுவந்து, உடற்தசைகள் இழுபட்டு நிற்க தன்முன் அமர்ந்திருந்த திருதராஷ்டிரரிடம் சஞ்சயன் சொன்னான். “அரசே, நமது படைகளின் திட்டம் இங்கிருந்து நோக்குகையில் தெளிவாகவே தெரிகிறது. கௌரவப் படை முதல்வராகிய கர்ணன் தன் இரு போர்த்துணைவர்களுடன், தனக்குப் பின்னால் நீந்தும் படகின் பின்னால் விரியும் அலை எனத் தொடரும் கௌரவர்களின் தேர்ந்த விற்படையுடன் எதிரே பாண்டவர் படையின் முகப்பில் நாரையின் கூர் அலகு என எழுந்த அர்ஜுனரை நோக்கி செல்கிறார். நாரையின் தலை நாகபடச் சொடுக்கு என முன்னெழுந்துவர அதற்கேற்ப அதன் நீள்கழுத்து வீசப்படும் சவுக்கென வளைவு நீள்கிறது.”

முழு விசையுடன் அர்ஜுனரை ஏந்தி வந்த இந்திரப்பிரஸ்தத்தின் பயின்றுதேர்ந்த விற்படையை எதிர்கொண்டு அசைவிழக்கச்செய்து நிறுத்துவதே கர்ணனின் திட்டம். போர் தொடங்கிய சில கணங்களிலேயே ஜயத்ரதரும் அஸ்வத்தாமரும் நடத்திய விற்படைகள் இரு சரடுகளென நீண்டுசென்று நாரையின் கழுத்தைச் சுற்றி இறுக்கி நிறுத்தின.

நாணொலி எழுப்பியபடி தேரில் முன்னெழுந்து கர்ணன் அர்ஜுனரை எதிர்கொண்டார். விண்ணவர் வகுத்த ஊழ்க்கணத்தில் இருவரும் மோதிக்கொண்டனர். இடியை இடி எதிர்கொள்வதுபோல. மின்னல் மின்னலை புணர்வதுபோல. விசை எத்தனை இயல்பாக எதிர்விசையை கண்டடைந்துகொள்கிறது! விசை விசையை அன்றி வேறெதையும் விரும்புமா என்ன?

அர்ஜுனரின் தேரை ஓட்டுகிறார் இளைய யாதவர். கர்ணனின் தேர் அவருடைய அணுக்கச்சூதரான அருணரால் தெளிக்கப்படுகிறது. அர்ஜுனரின் தேர் தீட்டப்பட்ட இரும்பால் வெண்ணிற ஒளிகொண்டிருக்கிறது. கர்ணனின் தேர் பொற்தகடுகளின் செவ்வொளியை விரிக்கிறது. அர்ஜுனர் கவசங்களுக்குள் மின்னும் விழிகளுடன் கர்ணனை விழிநிலைக்க நோக்குகிறார். கர்ணனோ எவரையுமே நோக்காதவர் போலிருக்கிறார். காண்டீபம் கரிய நிறம் கொண்டது. இளஞ்சிவப்பு நாண் துடிப்பது. வெண்ணிற நாகமும் கருநிற நாகமும் புணர்ந்து ஊடி ஆடும் நடனம் கர்ணனின் விஜயம். குரங்குக்கொடி துள்ளி படபடக்கிறது. எதிரில் யானைச்சங்கிலிக்கொடி யானைக்காதென துவள்கிறது.

கர்ணனின் இருபுறமும் படைத்துணைவர் என நின்று ஜயத்ரதரும் அஸ்வத்தாமரும் பாண்டவர்களுடன் பொருதினர். சாத்யகியும் திருஷ்டத்யும்னரும் அவர்களை தடுத்து நிறுத்தினர். சுருதகீர்த்தியை தன் அம்புகளால் அறைந்து நிலைக்கச் செய்தார் விருஷசேனர். அபிமன்யூவை எதிர்த்து நிறுத்தினார் விருஷகேது. நிஷாத இளவரசர்களான கும்பகனையும் கரபனையும் கரமண்டனையும் எதிர்த்து நின்றனர் திவிபதனும் சத்ருஞ்சயனும் சுதமனும். அப்போரில்

ஒவ்வொருவரும் தங்களுக்கு நிகரானவர்களை கண்டுகொண்டமையால் காலம் இறுகி இறுகி விரிந்தது. கணம்கணமென ஒவ்வொன்றும் நிகழ்ந்தது.

அரசே, இங்கிருந்து நாம் காண்பது அங்கநாட்டரசராகிய கர்ணனும் இளைய பாண்டவராகிய அர்ஜுனரும் ஒருவரோடொருவர் களத்தில் எதிர்கொள்ளும் காட்சியை. விண்ணில் இந்திரனும் கதிரவனும் நுண்ணுருவிலென வந்து தங்கள் மைந்தர்களின் போர்களை பார்க்கிறார்கள். அவர்களின் மைந்தர்களான சுக்ரீவனும் வாலியும் வந்திருக்கிறார்கள். அரசே, யுகயுகமென அவ்விருவரும் வேறெவ்வகையிலோ இங்கு போரிட்டுக்கொண்டுதானிருக்கிறார்கள். இடிமின்னலின் வேந்தன் கதிர்முகத்தேவன் இருவரும் நிகழ்த்தும் இப்போரை ஆயிரம் பல்லாயிரம் சொற்களால் இங்கு நான் சொல்லவேண்டும். ஆனால் புதிய சொற்கள் பயனிழக்கின்றன. ஆகவே தொல்கவிகள் சொன்ன பழைய சொற்களை கைக்கொள்கிறேன். அங்கே இரு திசைகள் எழுந்து மடிந்து முட்டிக்கொள்கின்றன என்று தோன்றுகிறது.

அவர்கள் ஒருவரோடொருவர் ஏவிக்கொள்ளும் அம்புகள் விண்ணிலும் மண்ணிலும் நிறைந்திருக்கும் முதன்மை விசைகளால் ஆனவை. மின்னல் என துடித்துக்கிழித்து செல்லும் வஜ்ரபாசத்தை அர்ஜுனர் கர்ணன் மேல் ஏவினார். அது செல்லும் வழியெங்கும் உலோகப்பரப்புகள் அனல்கொண்டு மின்னியணைந்தன. வீரர்களின் முகங்கள் கொழுந்துவிட்டமைந்தன. உறுமிவந்த அந்த அம்பை விண்வில் போன்ற ஏழு நிறம் கொண்ட வாசவாஸ்திரத்தால் கர்ணன் அறைந்து உடைத்துத் தெறிக்கவைத்தார். வண்ணங்கள் சாட்டைகள்போல் அவர்களைச் சூழ்ந்து வளைந்து சிதறின.

மலர்த்தெறிப்புகளென பொங்கி நாற்புறமும் பரவின தீப்பொறிகள். அவர்களின் ஆவநாழிகளில் வாழ்கின்றன இங்கு இதற்கு முன் நிகழ்ந்த அத்தனை அம்புகளும். விருத்திரனை வென்ற அம்புகள். ஹிரண்யனை, ஹிரண்யகசிபுவை, வாலியை, ராவணனை கொன்ற அம்புகள். முப்புரம் எரித்தவை. வடமேருவை உடைத்தவை.

கர்ணன் வெற்புருக்கும் அக்னிபாசத்தால் அர்ஜுனரை தாக்கினார். அர்ஜுனர் தன் தேரைத் திருப்பி சற்றே ஒழிய அது பலநூறு இடியோசைகள் ஒருங்கிணைந்ததுபோல் செவி அதிரச் சென்று அப்பால் நெடுந்தொலைவில் நின்றிருந்த சுமேரு எனும் வெற்பை அறைந்து அதை ஆயிரம் துண்டுகளாக உடைந்து தெறிக்கச் செய்தது. கற்பாறைகள் உடைந்து தெறித்து கற்பாறைகள் மேல் அறைந்து அனல் பரப்பின. மலைச்சரிவுகளில் உருண்டு ஒன்றை ஒன்று கிளப்பி பொருதிக் கீழிறங்கின. நீர்ப்பரப்புகளில் விழுந்து அலைக்கொப்பளிப்பை எழுப்பின. அர்ஜுனர் ஏவிய கனகாஸ்திரம் உருகி வழியும் பொன் என ஒளிபீறிட வானிலெழுந்தது.

அரசே, இதோ நான் காண்கிறேன். அது செல்லுமிடமெல்லாம் உருகி வழிகின்றன உலோகங்கள். அதை நோக்கிய விழிகள் அனைத்தும் இருண்டு கரிய குழிகளாகின்றன. முகங்களில் தசை உருகி எலும்புரு புடைத்தெழுந்து சிரிக்கிறது. அதை ஒழியும்பொருட்டு கர்ணன் தன் தேரை இருமுறை திருப்பி பின்னடைந்தார். அவர் எய்த காளாஸ்திரம் சிம்மம்போல் உறுமியபடி எழுந்தது. அது செல்லும் வழியெங்கும் இருள் பரவியது. தேர்கள் ஒன்றோடொன்று முட்டிக்கொண்டு கவிழ, யானைகள் அஞ்சிப் பிளிற, குதிரைகள் நிலையழிந்து கனைத்தபடி சுற்றிவர அது சென்று அர்ஜுனரின் அம்பை

அள்ளி தான் வாங்கிக்கொண்டது. கருங்குழம்பில் மூழ்கி மறைந்தது பொன்னுருளை.

அடுத்த அம்புக்காக அர்ஜுனர் தன் ஆவநாழியை நோக்கி கை கொண்டுசெல்ல நாணொலியுடன் கர்ணன் தேரை விலக்கினார். அர்ஜுனர் தன் தொடையிலறைந்து வெறுப்புடன் நகைத்தபடி "சூதன்மகனே! இன்றுடன் உன் ஆணவத்தை அழிப்பேன். இன்று இக்களத்தில் நீ குருதிப்பிண்டம் என விழுவாய்!" என்றார். கர்ணன் விழிகளில் நகைப்பின்றி எதிர்நகைப்பெடுத்து "என்றும் ஆணவம் கொள்ள எனக்கு வாய்த்ததில்லை, பாண்டவனே. இனி நீ அழிப்பதற்கு என்று இருப்பது என் ஆத்மா ஒன்றே. பேடியே, பெண்ணுருவே, அதை அழிக்க உன்னாலோ உனது தெய்வங்களாலோ இயலாது" என்று கூவினார்.

ஒருவரை ஒருவர் பழித்துரைத்து வஞ்சினமேற்கின்றனர். ஒருவர் உள்ளத்தை ஒருவர் அறைந்து சிதைக்க விழைகின்றனர். ஆனால் நஞ்சை உமிழ்ந்தபின் எஞ்சும் உள்ளத்தின் தூய்மையால் அவர்கள் ஒருவரை ஒருவர் அணுகிவருகின்றனர். சொற்கள் பொருளிழக்கின்றன அங்கே. "சூதன்மகனே, இதோ உனக்கு" என்று கர்ணனை நோக்கி அர்ஜுனர் கூவ "நாணிலாப் பேடியே, இவ்வம்புடன் நீ அழிவாய்!" என்று கர்ணன் மறுகூச்சலிட அம்புகள் அவற்றுக்குரிய பிறிதொரு மொழியில் உறுமியும் சீறியும் கூச்சலிட்டும் பேசிக்கொண்டன.

கர்ணன் எய்த உஷாஸ்திரம் என்னும் அம்பு போர்க்களத்தை குருதிச் செம்மையில் ஒளிரச்செய்தது. பின்னர் உருகும் பொன்னால் ஆனவர்களாக அங்கிருந்த அனைவரையும் மாற்றியது. பொற்குமிழிக் கொந்தளிப்பென குருக்ஷேத்ரம் ஒருகணம் தோன்றி மறைந்தது. அவ்வொளியில்

புலரியெழுந்ததோ என மயங்கி சூழ்ந்திருந்த காட்டின் பறவைகள் அனைத்தும் எழுந்து கூச்சலிட்டன. யானைகள் ஒன்றுடன் ஒன்று முட்டிச்சுழன்று பிளிறின. புவியியற்கை ஒருகணம் நிலைதடுமாறி தன்னிலை மீண்டது. அர்ஜுனர் மேகாஸ்திரத்தால் அதை தடுத்தார். வானில் கருமுகில்கள் அலையலையாக எழுந்து கூரையிட்டதுபோல் போர்க்களம் ஒளியிழந்தது. நீர்த்துளிகள் சிதறி யானைமருப்பின் மயிர்முட்களில் மணிகளாயின. தேர்மகுட வளைவுகளில் ஈரம் வழிந்தது. எரிதுளியை ஈரமென்பஞ்சால் அழுத்தி அணைப்பதுபோல் அது கர்ணனின் அம்பை கவ்வி வீழ்த்தியது.

சீற்றம் கொண்டு உறுமியபடி அர்ஜுனர் தன் விண்தந்தையிடமிருந்து பெற்ற பத்மாஸ்திரத்தை கர்ணனின் மேல் ஏவினார். எழுகையில் தாமரை மலர் போன்றது. விசை கொள்கையில் சுழன்று இதழ் பெருகி பல்லாயிரம் தளம் கொண்ட மாமலர் என்றும் அணுகுகையில் அனலென்றாகி கொதித்தும் அது கர்ணனை தாக்க வந்தது. தன் தேரை சற்றே திருப்பி அதை கர்ணன் ஒழிந்தார். அவர் வில்லிலிருந்து கிளம்பிய சியாமாஸ்திரத்தில் குடியிருந்த பெருநாகமான காளகன் சுழல்காற்று என சீறியபடி அந்த மலரை துரத்திச்சென்றான். கலியன், கரிமுகன், ததிமுகன், காதரன், காமிகன், கசண்டன், கன்மதன், கல்மாஷன், கபாலன், குத்ஸிதன், குர்மிதன், குடிலன் எனும் பன்னிரண்டு ஆழ்நிலத்துப் பெருநாகங்கள் குடிகொண்ட அம்புகளை அதைத் தொடர்ந்து செல்லும்படி கர்ணன் அனுப்பினார். வானில் விரைந்த பத்மாஸ்திரத்தை துரத்திச்சென்று கவ்விச் சுழன்று மண்ணில் அறைந்து விழுந்தன அந்நாகங்கள்.

அவை விழுந்த இடத்தில் நூறு வாரை ஆழமுள்ள பெருங்குழியொன்று எழுந்தது. அங்கிருந்து புழுதி வெடித்துக் கிளம்பி அலையென்றாகி நாற்புறமும் விரிய நிலத்தில் ஒரு மாபெரும் மண்மலர் தோன்றியது. பன்னிரு நாகங்களும் அந்த மகாபத்மத்தை இழுத்து ஏழு ஆழங்களைக் கிழித்துக் கடந்து உள்ளே கொண்டுசென்றன. பாதாளத்தின் இருளுக்குள் செவ்வொளியைப் பரப்பியபடி பத்மம் புதைந்து சென்றது. நாகர்களின் ஆழுலகை காட்டிருளில் எரியெழுந்ததுபோல் ஒளிரச்செய்தது. பல்லாயிரங்கோடி நாகங்கள் அவ்வொளியில் செவ்வொளி பெற்று நெளிந்து பின் அணைந்தன. அங்கு முன்பு பாற்கடல் கடையப்பட்டபோது வாசுகி உமிழ்ந்த கருநஞ்சில் அரவக்கோன் கையில் இருந்து உதிர்ந்த ஒரு துளி விழுந்து உருவான குநீதம் எனும் பெருவாவியில் அந்த மலர் விழுந்தது. அதன் மேல் பேருடலர்களாகிய நாகங்கள் ஒன்றுக்கு மேல் ஒன்றென விழுந்து அலையிளகிக்கொண்டிருந்தன.

அந்நஞ்சால் அனலவிந்து குளிர்ந்து மேலும் ஆழத்திற்குச் சென்றது அம்மலர். நாகங்கள் அந்த நஞ்சால் உடலுருகி வெள்ளெலும்புச் சங்கிலி என ஆகி அடித்தளத்தில் படிந்தன. எடையிலாதானதும் ஆயிரம் இதழ் கொண்ட பொன்னிறத் தாமரையாக அக்கரிய நச்சு நீருக்கு மேல் எழுந்தது பத்மம். நாக உடல்களால் ஆன வெண்ணிறத் தண்டுகள் கொண்டிருந்தது அந்த மலர். மண்ணில் அது விழுந்த இடத்தில் நீர் பெருகி அது ஒரு தடாகம் ஆகியது. அதை நாகபத்மவாவி என்றனர் மக்கள். நாகப்பழி நீங்க நீராடும் புனிதநீர் என அதை வகுத்தனர் அந்தணர்.

“சஞ்சயா, என்ன சொல்கிறாய்? எதை பார்க்கிறாய்? நீ சொல்வதென்னவென்று உணர்ந்திருக்கிறாயா?” என்று

திருதராஷ்டிரர் கூவினார். தனது பெருங்கையால் நிலத்தை ஓங்கி அறைந்து “நீ யார்? சஞ்சயனா அவன் குரலில் பேசும் மாயகந்தர்வனா? சொல்! இக்கணமே சொல்!” என்றார். “நான் ஏகாக்ஷன்!” என்று சஞ்சயன் சொன்னான். “இருவிழி நோக்குள்ளவர் நோக்காதவற்றை நோக்குபவன். திருதராஷ்டிரா, என் சொற்களைக் கேள்! விழிகளால் பார்த்து எவர் எதை அறியமுடியும்?” என்று சஞ்சயன் சொன்னான். திகைத்துப்போனவராக மெல்ல பீடத்திலிருந்து எழுந்த திருதராஷ்டிரர் “யார்?” என்று மீண்டும் கேட்டார். “இரு விழியை ஆளும் மூன்றாம் விழிகொண்டோன். இரு விழியை அணைத்து அவ்விழி மட்டும் எஞ்சவைத்தோன். கடந்த நோக்குளோன். கணிப்புக்கு அப்பாற்பட்டதைக் கண்டு உனக்கு சொல்கிறேன். அமர்க!” என்று சஞ்சயன் சொன்னான்.

திகைப்புடன் அமர்ந்த திருதராஷ்டிரரை நோக்கி சஞ்சயன் சொன்னான். அங்கு நிகழ்ந்துகொண்டிருக்கும் போர் இங்கு எனக்கு முழுமையாகத் தெரிகிறது. இரு வில்லவர்களும் உச்ச விசையுடன் அங்கு போரிடுகிறார்கள். கிரௌஞ்சம் தலை கட்டப்பட்டு அசைவிலாது நிற்க அதன் சிறகுகள் பெருவிசையுடன் நிலத்தை அறைந்து பதைக்கின்றன. அதன் உகிர்கள் இரண்டும் வெறிகொண்டவைபோல் கௌரவப் படைகளை கிழித்துச் சிதைக்கின்றன. கிரௌஞ்சத்தால் தாக்கப்பட்ட வண்டி அலைமோதுகிறது. தன் சிறகுகளின் விசையால் நாரை வண்டியை மண்ணிலிருந்து மேலே தூக்கிவிடுமென்று தோன்றுகிறது. அறைந்து சிம்புகளாக தெறிக்கவிடும் போலும். ஆனால் வண்டி நீர்ப்பாவை என கலைந்து மீண்டு தன்னை ஒருங்கிணைத்துக்கொள்கிறது.

முதல் நாழிகையிலேயே இக்களத்தில் இதுவரை நிகழ்ந்ததிலேயே உச்சப் பெரும்போர் நிகழத் தொடங்கிவிட்டது. மானுட விழிகளால் நோக்குபவர்கள் இரு தேர்களிலும் அமர்ந்து விழிதொடமுடியா விசையுடன் கைகள் சுழல ஒழியாத் தூளியிலிருந்து மின்னும் அம்புகளை எடுத்து ஒருவருக்கொருவர் எய்து இடையே நின்றிருக்கும் வானை நிரப்பிக்கொண்டிருக்கும் பெருவில்லவர்களையே காண்கிறார்கள். அந்த வானம் கிழிந்து கிழிந்து மீன் துள்ளும் நீர்ப்பரப்பென கொந்தளித்தது. அவர்களுக்கு நடுவே ஒன்றைஒன்று முட்டி உராய்ந்து தெறிக்கும் விற்களாலான கொந்தளிக்கும் உலோகப்படலம்போல கணமாயிரம் என எழும் அம்புகள். அலகுடன் அலகு முட்டி அனல் கிளப்பும் பறவைகள். சிறகுகளில் சிறகு மோத, அலகுகளில் அலகு உரச, கூவிச் சுழன்று நிலம்பதிப்பவை. சீற்றம்கொண்ட சேவல்கள் என மண்ணில் விழுந்தபின்னரும் எழுந்து துடிப்பவை.

இருவரும் ஒருவரேதானோ எனும் உளமயக்கை அடைகிறார் அஸ்வத்தாமர். ஒருவர் பிறிதொருவராக இடம் மாறிக்கொண்டார்களோ என்று ஜயத்ரதர் மலைக்கிறார். அதுவரை அவர்கள் தங்கள் ஆழத்தில் நிழலசைவென தெரியக்கண்ட அனைத்தும் விழிக்கூடென துலங்கும் தருணம். அவர்கள் ஒருவரை ஒருவர் ஒருபோதும் வெல்ல முடியாதென்று ஜயத்ரதர் எண்ணினார். ஒருவரை ஒருவர் வென்றால் வென்றவரும் அழிந்தாகவேண்டுமென்று அஸ்வத்தாமர் நினைத்தார். “தந்தை!” அர்ஜுனனை நோக்கி உளமெழுந்தார் விருஷசேனர். அர்ஜுனர் அம்பெடுக்கக்கண்டு கர்ணனை நோக்கி “தந்தையே, கருதுக! அது நாகபாசன்!” என விருஷகேது கூவினார்.

கர்ணனின் அம்புகளில் எழுந்த பாதாள நாகங்கள் சீறி நெளிந்து சென்றன. அர்ஜுனரின் அம்புகளில் எழுந்தன செவ்விறகுப் பருந்துகள். அவர் எய்த கிரௌஞ்சபாசம் இரு சிறகுகளும் பின்னொடுங்கி நீள, கால்கள் உடலுடன் ஒடுங்க, வாளொடு வாளுரசும் பேரொலி எழுப்பியபடி கர்ணனை நோக்கி வந்தது. கர்ணன் தன் கையிலெழுந்த உரகபாசத்தால் அதை அடித்தார். நெளிந்து சென்ற அம்பு கிரௌஞ்சத்தின் கால்களைச்சுற்றி கழுத்தை வளைத்து இறுக்கியது. அலறியபடி பறந்து அப்பால் விழுந்த கிரௌஞ்சம் அவ்விசையிலேயே புரண்டு சென்று நூறு மரங்களை வேருடன் சாய்த்தது. அவையிரண்டும் துள்ளித் திமிறி விழுந்து சிறகறைந்து வால்சொடுக்கி கழுத்துக்கள் பின்னி போரிட்டன. ஒற்றை உடல் கொண்டவையாகி விண்ணிலிருந்து விழுந்த விந்தை உயிரென்று துள்ளின. உரகத்தின் தலையை கவ்விக் கொன்றது நாரை. தன் நஞ்சால் நாரையைக் கொன்றது உரகம். இரண்டும் செயலிழந்து அங்கே அமைந்தன.

கர்ணனின் அம்பறாத்தூணி பாதாளப் பேருலகம் நோக்கி திறக்கும் ஆழி என்றிருந்தது. அதனூடாக எழுந்து வந்தன மண்நடுங்கச் செய்யும் நாகப்பேருடல்கள். புயல்பட்ட கடலின் அலைகளென நிவர்ந்தன அவற்றின் முடிவிலாச் சுழிப்புகள். கார்முகில் என பெருகி அவை இருளை சமைத்தன. அர்ஜுனரின் ஆவநாழி விண்ணுக்குச் செல்லும் முகில்சுழியாக இருந்தது. அதனூடாக பறந்திறங்கி வந்தன விண்ணாளும் வெளியாளும் பறவைகள். வெண்ணிற யானைகள். விண்ணும் மண்ணும் அக்களத்தில் ஒன்றுடன் ஒன்று பொருதிக்கொண்டன. ஒன்றையொன்று கண்டுகொண்டன.

இருவர் ஆவநாழிகளிலிருந்தும் மானுடம் முன்பு கண்டிராத அம்புகள் எழுந்தபடி இருந்தன. இங்கே ஒவ்வொரு கூர்மேலும் வந்து தொட்ட கதிரொளி அவற்றிலிருந்து அம்பொன்றை கண்டெடுத்திருக்கிறது. முட்களில், பாறைஉடைவுகளில், பற்களில், உகிர்களில். மலரிதழ் விளிம்புகளும் பட்டாம்பூச்சி இறகுகளும் வாள்முனைகளென்றாயின. அல்லித்தண்டுகளும் மண்புழுக்களும் அம்புகளென்றாயின. விண்ணிலிருந்து மண்ணுக்குப் பொழியும் ஒவ்வொன்றும் கூர்மைகொள்கின்றன. அக்கூர்கள் அனைத்திலிருந்தும் மின்னோன் தன் அம்புகளை பெற்றிருக்கிறான். மழைநீர்த்துளிகள் வெற்புகளை உடைக்கும் விசைகொண்டன. விண்வில் இரும்புமுகடுகளை கூர்வாள் என அரிந்து சென்றது. முகில்விளிம்பு மலையுச்சிப் பாறைகளை சீவியது. கூர்களுடன் கூர்கள் மோதின. ஒவ்வொன்றும் தனக்கு நிகர் எது என கண்டுகொண்டது. மலர் முகிலை. மழைத்துளி நாகவிழியை.

மூன்று யுகங்களாக வேதங்கள் அவியிட்டு வளர்த்தன இந்திரனை. அவன் கையின் தாமரை ரிக். அவன் ஊரும் வெள்ளையானை யஜுர். அவனுடைய புரவி சாமம். அரசே, அவன் கையின் மின்படையே அதர்வம். நூறுநூறாயிரம் எரிகுளங்களில் அவனுக்கான அவி பொழியப்பட்டது. இந்த மண்ணில் ஐந்து புலன்களுக்கும் இனிதென அறிந்த அனைத்தாலும் அவனுக்கான வேள்விகள் இயற்றப்பட்டன. விழிமகிழும் மலர்களும் பட்டும். மூக்கு உகக்கும் நறுமணங்கள். நாக்கு திளைக்கும் இன்னுணவுகள். செவிக்கினிய சங்கு. உடல் குளிரும் இனிய நீரும் சாமரமும். ஐந்து பருக்களும் அவனுக்கு அவியாயின. பல்லாயிரம் வேர்களை ஊன்றி எழுந்த பெருமரம்போல் தேவர்களால் பொலிந்த தேவர்க்கிறைவன் அவன்.

அவனை எதிர்த்து நின்றிருக்கின்றனர் நாகர்கள். அரசே, மரம் எழுவதற்கு முன்னரே வேர் பரவிவிடுகிறது. இந்த பாரதவர்ஷத்தின் வேர்கள் அவர்கள். ஈரேழு உலகையும் தாங்குவது நாகருலகு. விண்ணளந்தோன் விழிமலரும் அணை. அமுதின் அடிக்கலங்கல். இங்கு எட்டு யுகங்கள் நாகர்கள் தங்கள் வேதங்களால் ஆழத்து தெய்வங்களை வளர்த்திருக்கிறார்கள். அவியென அவர்கள் அளித்தது தங்களையே. அனல்வளர்த்து அவ்வெரிதழலில் நிரைநிரையென வந்து படமெடுத்துச் சீறி எழுந்து வாலறைந்து பாய்ந்து சென்றமைந்து எரிந்தெழுவது அவர்களின் வழக்கம். ஒரு மைந்தனையும் ஒரு மகளையும் மட்டும் எஞ்சவிட்டு முழுக்குலமே எரிபுகுந்தழியும் சர்ப்பசத்ரவேள்விகளை அவர்கள் ஆயிரம் முறை இங்கே நிகழ்த்தியிருக்கிறார்கள். எஞ்சும் விதை ஆயிரம்மடங்கு உயிராற்றல்கொண்டு பெருகி எழுந்து புவிநிறைக்கும். அவ்வண்ணம் ஆயிரம் மடங்கென அவர்கள் பெருகுவார்கள்.

நாகர்கள் ஓம்பிய தெய்வங்கள் அனைத்தும் அதோ கர்ணனுக்குப் பின்னால் நிரைகொள்கின்றன. நால்வேதங்கள் வளர்த்த தேவர்பெருக்கால் பாண்டவர் பக்கம் விரிந்துள்ளது. மானுடர் அங்கே பளிங்குத்துண்டுகள் நடுவே வைக்கப்பட்ட வண்ணமணிபோல ஒருவர் முடிவிலாதோர் எனப்பெருகி நாகர்களும் தெய்வங்களுமாகிறார்கள். அவர்களின் படைக்கலங்கள் நிழல் பெருகுவதுபோல் பிறிதொருவகையில் விரிகிறார்கள். அங்கே நிகழும் போர் விழிகளால் தொட்டுவிட இயலாதது. எண்ணங்களால் தொடர ஒண்ணாதது. சொல்லிச்சொல்லிப் பெருக்கிச் சென்றடையவேண்டியது. என் சொற்கள் சூதர் செவிகளில் விழுந்து சித்தங்களில் முளைத்து சொற்களெனப் பெருகி நூறாயிரம் தலைமுறைகள் கடந்த

பின்னர் ஒருவேளை இதன் ஒரு முகத்தை மானுடர் சென்றடையக்கூடும்.

திருதராஷ்டிரர் முனகலாக “சொல்க, சஞ்சயா! அங்கே நிகழ்வது என்ன? கர்ணன் அர்ஜுனனை வெல்வான் அல்லவா?” என்றார். “அரசே, அங்கு நிகழும் போர் வலக்கை இடக்கையுடன் போரிடுவதுபோல. வலதுவிழி இடதுவிழியை நோக்குவதுபோல் அவர்கள் ஒருவரை ஒருவர் அறிகிறார்கள். மெய், அவர்களால் ஒருவரை பிறர் அறியவே இயலவில்லை. அறியவொண்ணா பெருவெளியுடன் போரிடுவதாகவே இருவரும் உணர்கிறார்கள். அம்புகளை இடைவிடாது செலுத்தியபடி அவர்கள் போரிடுகையில் அவர்களுக்குள் தன்னுணர்வு திகைத்துச் சொல்லிழந்து அமைந்திருக்கிறது. உடலே செவியென்றாகி ஒவ்வொரு சிற்றொலியையும் கேட்கிறார்கள். உடலெங்கும் விழிகளென்றாகி ஒவ்வொரு அசைவையும் காண்கிறார்கள். எதையும் அறியாமல் உறைந்திருக்கிறார்கள்.

இருவரும் ஒருவருக்கொருவர் அம்புகளை கருதிவைத்திருக்கிறார்கள். அர்ஜுனரின் ஆவநாழியின் இருண்ட ஆழத்திலிருந்து சீற்றம்கொண்டு எழுந்துவரும் பறவைகளை காண்கிறேன். வலுத்த அலகுகொண்ட நாரைகள். நாகக் கழுத்துகொண்ட அன்னங்கள். கன்னங்கரிய காகங்கள். கூர்வளைந்த அலகுடன் பருந்துகள். கவ்வும் கால்களுடன் கழுகுகள். கொலைத்தொழில் வல்லூறுகள், அறைகூவும் கூகைகள். தாவும் பனந்தத்தைகள். மிதந்து நிற்கும் சிட்டுகள். இத்தனை பறவைகளால் ஆனதாக இருந்ததா அந்த ஆவநாழி? இவற்றின் முட்டைகளே மணல்பருக்களாக அமைந்த பாலை ஒன்றை அதற்குள் அவர் சுருட்டி வைத்திருந்தாரா என்ன?

கர்ணனின் ஆவநாழியிலிருந்து ஒன்று பிறிதொன்றை தொடுத்திழுத்துக்கொண்டு என எழும் நாகங்கள் முடிவற்றவை. மணிக்கல்செறிந்தமைந்த படம் எழுப்பிய அரசநாகங்கள். பொன்னிற நாகங்கள். கரிய தளிருடல் கொண்டவை. சீறித் தலையெடுப்பவை. சுருண்டு தன்னை தான் வளைத்தவை. சிலம்புவடிவ விரியன்கள். வேர்த்தளிர் போன்ற சுருட்டைகள். சிறுவிரல்போல் சிவந்த குழவிகள். தென்னைவேர்போல் கொத்துக்கொத்தென எழுபவை. மலையாறுபோல் பேருருக்கொண்டு வளைபவை.

நோக்கநோக்கப் பெருகி பெரும்பாறைகளை செதிலடுக்குகளாகக்கொண்டு விந்தியமலைத்தொடர்போல் சூழ்ந்து எழும் அந்த மாநாகத்தின் பெயர் சூரியகன். பெருமலையின் உச்சிப்பாறை என ஆயிரம் யுகங்கள் முட்டைக்குள் கிடந்த அவனை தொல்யுகமொன்றில் தொட்டு விரிய வைத்தவன் கதிரவன். அவனருகே புயல்சுருட்டிய கருமுகிலென எழுபவன் காரகன். அவன் கடலடியின் இருளில் மறக்கப்பட்ட புதையலென துயின்றவன். அங்கு சென்று தொட்டு அவனை அழைத்ததும் சூரியனின் கதிர்தான்.

அதோ எழுந்தெழுந்து வந்துகொண்டே இருக்கும் நாகங்களைக் கண்டு அஞ்சிக்கூச்சலிடுகிறார்கள் தேவர்கள். “வேந்தே, முதல்மூவரே, எங்களை காத்தருள்க!” என்று அலறுகிறார்கள். “என் மின்படையை அடிபணிக! என் வெண்களிறை வழுத்துக! நான் வெல்வேன்!” என்று இடியோசை எழுகிறது. அரசே, அவ்வோசை நூறாயிரம் புயல்களென ஒலிக்கும் நாகங்களின் ஒலியில் முற்றாகவே மறைந்துவிடுகிறது.

# கார்கடல் - 21

சஞ்சயன் சொன்னான். கௌரவர்களின் அரசே, குருக்ஷேத்ரத்தில் இப்போது நிகழ்ந்துகொண்டிருக்கும் போர் ஒற்றைக் குவியம் கொண்டதாக ஆகிவிட்டிருக்கிறது. அங்கநாட்டரசராகிய கர்ணனும் இளைய பாண்டவராகிய அர்ஜுனரும் நிகர்நிலையில் நின்று அணுவிடை தாழாது போர்புரிந்துகொண்டிருக்கிறார்கள். கர்ணனின் விற்திறனையும் நிலைபெயராது தொல்மலைகளைப்போல் நின்றிருக்கும் அவர் உள்ளத்தையும் தொட்டுத் தொட்டு விழிபெருகி அம்மொத்தக் களத்தையுமே தன் நோக்கில் நிறுத்தியிருக்கும் பேருருவையும் கண்டு பாண்டவர்கள் மலைத்துவிட்டிருந்தார்கள். விழிக்கு ஒன்றும் தெரியவில்லையெனினும் அணுவிடை அணுவிடையென அர்ஜுனர் கைதளர்ந்து பின்னடைவதை அங்கிருந்த ஒவ்வொருவரும் உணர்ந்தனர்.

கௌரவப் படை அர்ஜுனரின் இந்திரப்பிரஸ்த வில்லவர்களின் பின்படையை சூழ்ந்துவிடக்கூடாது என்பதற்காக அவருக்கு இருபுறமும் சாத்யகியும் திருஷ்டத்யும்னரும் நின்று போரிட்டனர். கௌரவர்களுக்குத் துணையாக பூரிசிரவஸும் வந்தபோது நகுலரும் சகதேவரும் அவர்களை தடுத்து நிறுத்தும்பொருட்டு அங்கே சென்றார்கள். மெல்ல மெல்ல சுழிமையம் நோக்கிச் செல்லும் வாவிநீர் என பாண்டவப் படையின் வீரர்கள் அனைவருமே அர்ஜுனரை நோக்கி சென்றனர். ஆயிரம் வில்லவர்களும் ஏழாயிரம் வேல்படையினரும் அவரைச் சூழ்ந்து காத்தனர். அவர்கள் அனைவரையுமே தன் அம்புகளால் அறைந்து வீழ்த்தி பாண்டவர்களின் சூழ்கையை உடைத்து முன் சென்றுகொண்டிருந்தார் கர்ணன்.

கிரௌஞ்சம் தன் தலையை தரையோடு அழுத்தி உயிர்வலியுடன் விடுபடும்பொருட்டு இரு சிறகுகளையும் ஓங்கி அறைந்துகொண்டிருந்தது. பீமனை துரியோதனரும் சர்வதரை துச்சாதனரும் சுதசோமரை துர்மதரும் துச்சகரும் எதிர்த்தனர். கர்ணன் தன் கணமொழியா அம்புகளால் அர்ஜுனரை பின்னடையச் செய்வதை முரசொலிகளின் விசைமாற்றத்தினூடாகவே நுண்ணிதின் உணர்ந்த பீமன் அவர் உதவிக்குச் செல்ல விழைந்தாலும் அவரை நகரவிடாமல் கௌரவர்களின் சூழ்கைத் தாக்குதல் நிறுத்தி வைத்திருந்தது. சர்வதரும் சுதசோமரும் கௌரவர்களின் தாக்குதலை அன்று மும்மடங்கு விசைகொண்டதென உணர்ந்தனர். அரசே, வெற்றிபெறுகிறோம் என்னும் உணர்வைப்போல் ஆற்றல் அளிப்பது பிறிதொன்றில்லை.

இடும்பர் சூழ களம்நின்று பொருதிய கடோத்கஜனை அறைந்து பின்னடையச் செய்துகொண்டிருந்தார் பகதத்தர். சுப்ரதீகம் எடுத்துச் சுழற்றிய முள்ளுருளையால் தேர்கள் உடைந்து தெறித்தன. குருதி சிதற சிறு புழுக்களென நசுங்கினர் வீரர்கள். சகுனியின் அறைகூவல் எழுந்தபடியே இருந்தது. “எழுக! எழுக! வென்றெழுக! அவர்களின் விசை தளர்கிறது. வண்டிக் கூண்டில் சிக்கிக்கொண்டிருக்கிறது நாரை!” சுபலரையும் மைந்தரையும் சிகண்டி எதிர்கொண்டார். அவருடைய இரு மைந்தர்களும் இருபுறமும் நின்றிருக்க ஆற்றல்கொண்ட அம்புகளால் காந்தாரர்களின் பெரும்படையைச் சிதறடித்து முன்னால் சென்றார். அப்பால் குந்திபோஜர் சல்யரை எதிர்த்தார். குந்திபோஜரின் உதவிக்கு விராடர் எழுந்துவந்தார். சல்யரின் விற்திறனுக்கு முன் நிற்க இயலாமல் அவர்கள் பின்னடைய பாண்டவப் படை அலைமோதியது.

கிருதவர்மரை நிஷாதர்களும் கிராதர்களும் சேர்ந்து எதிர்த்து நின்றனர். கிருதவர்மரை வெல்லமுடியாமல் அவர்கள் பின்னடைந்தபோது சிகண்டி தன் வில்லில் நாணொலி எழுப்பியபடி அவர்களின் உதவிக்கு வந்தார். கிருதவர்மரும் சிகண்டியும் நிகர்நிலையில் நின்று போரிட்டனர். கிருதவர்மரின் அம்புகள் ஒவ்வொன்றாக உடைய அவர் பின்னடையத் தொடங்கியதும் அவருக்கு உதவும்படி சகுனியின் ஆணை எழுந்தது. கிருபர் நாணொலி எழுப்பியபடி யாதவப் படைகளுக்குத் துணையாக வந்துசேர்ந்தார். சிகண்டியை அம்புகளால் அறைந்து பின்னடையச் செய்தார். அவர்கள் இருவரையும் எதிர்த்துநிற்பது இயலாதென்று அறிந்தாலும் சிகண்டி தன் வெறிகொண்ட விற்தொழிலைக் காட்டி களத்தில் நின்றுபொருதினார்.

ஆனால் பாண்டவர்கள் எவரும் பிறிதொரு போர்மையம் உருவாகிக் கொண்டிருப்பதை உணரவில்லை. பாஞ்சாலப் படைகளால் துணைக்கப்பட்ட துரோணர் எந்த முரசறிவிப்பும் இல்லாது ஒரு சிறு வல்லூறுபோல் தன் சிறகுகளை விரித்து யுதிஷ்டிரர் நின்றிருந்த படைப் பின்நிரையை நோக்கி நகர்ந்தார். யுதிஷ்டிரர் படைமுகப்பில் வந்து போர் எழுவதற்கான ஆணையைக் கொடுத்த பின்னர் படைகளுக்குள் மூழ்கிச்சென்று பாண்டவப் படைத்திரளின் பன்னிரு அடுக்குகளுக்கு அப்பால் இருந்தார். சிறகுகளால் தன் குஞ்சை மூடிவைத்திருக்கும் கிரௌஞ்சம் போலிருந்தது பாண்டவப் படை. அங்கு சென்று அடையவேண்டுமெனில் பாண்டவப் படையை முற்றாகவே வென்றாகவேண்டும் என்பதனால் போரின் விசையில் பாண்டவர்கள் அனைவருமே யுதிஷ்டிரரை மறந்துவிட்டிருந்தனர்.

அரசே, யுதிஷ்டிரரை நோக்கி நேரடியாக துரோணர் சென்றிருந்தால் பாண்டவர்கள் எச்சரிக்கை கொண்டிருக்க வாய்ப்பிருந்தது. யுதிஷ்டிரரை நோக்கி நேரடியாகச் செல்லும் போர்முனையில் சகுனி பால்ஹிகராகிய சலனும் திரிகர்த்தநாட்டு அரசர் சுசர்மரும் அவர் மைந்தர்களான சம்சப்தர்களும் துணைவர திரிகர்த்த காந்தார வில்லவர்படை இருறமும் அணைய முழு விசையில் தாக்கிக்கொண்டிருந்தார். யுதிஷ்டிரரைப் பிடிக்க சகுனி முனைவதாகவும் அதற்கு எந்த வாய்ப்பும் இல்லையென்றும் அதனூடாக பாண்டவர்கள் நம்பவைக்கப்பட்டனர்.

துரோணர் மெல்ல மெல்ல எவரும் தனித்தறியாமல் வடக்கே விலகிச்சென்று பாண்டவப் படையின் வடக்கு எல்லையில், அதன் நாரைச் சூழ்கையின் விளிம்பில், வலச்சிறகின் பிசிறுகளில் தன் முழு விசையையும் கொண்டு தாக்கினார். அவரை அங்கு எதிர்பார்த்திராத பாண்டவப் படையினர் இயல்பாக தெற்கே ஒதுங்கி வழிவிட காட்டுக்கும் பாண்டவப் படைக்கும் நடுவே இடைவெளி உருவாகியது. வழி திறந்துகொண்டதுமே துரோணரின் தலைமையில் கௌரவப் படை பாண்டவர்களின் படையின் வட எல்லையினூடாக வழிந்து சென்று படையின் பின்புறத்தை அடைந்தது. அரைநாழிகைப் பொழுதுக்குள் நிகழ்ந்த இந்தச் செயல் பாண்டவப் படையை சென்றடையவில்லை. பாண்டவர்கள் அர்ஜுனர் பின்னடைவதைக் குறித்த பதற்றத்தில் இருந்தனர். முரசுகளனைத்தும் படைமுகப்பிலேயே இருந்தன. பின்புறத்திலிருந்த ஓரிரு முரசுகள் முழக்கமிட அங்கிருந்து முரசுகளினூடாக செய்திகள் எழுந்து படைமுகப்பை அடைய ஒருநாழிகைப் பொழுதாகியது.

“துரோணர்! படைப் பின்புறத்தில் துரோணர்!” என முரசுகள் முழங்கியபோது சகுனியின் ஆணைப்படி கர்ணன் தன் கைதளர்ந்து சற்றே வில் தாழ்வதுபோல் காட்டி பின்னடையத் தொடங்கினார். அர்ஜுனரைச் சூழ்ந்திருந்த பாண்டவப் படையினர் வெற்றிக்குரலெழுப்பி கூச்சலிட்டு துள்ளிக் குதித்தனர். வேல்களையும் வாள்களையும் தூக்கிப்பிடித்து “இந்திரப்பிரஸ்தம் வெல்க! வில் விஜயன் வெல்க! காண்டீபம் வெல்க! எழுக மின்கொடி! எழுக குருகுலம்!” என்று குரலெழுப்பினர். அக்கொண்டாட்டத்தில் முரசுச்செய்திகளை எவரும் கேட்கவில்லை.

மேலும் மேலும் கர்ணன் பின்னடைய விசைகொண்டு தாக்கியபடி அர்ஜுனர் அவரை அழுத்தி கௌரவப் படைகளுக்குள் கொண்டு சென்றார். கர்ணன் பொற்தேர் பின்னடைந்து மேலும் பின்னடைந்து அர்ஜுனரை உள்ளிழுத்தது. அதே தருணத்தில் துரோணர் பாண்டவப் படையின் பின்பகுதியைத் தாக்கி சிதறடித்தார். அங்கு படைகளனைத்தும் சிதறி ஒருங்கிணைவின்றி அலைமோதிக் கிடந்தன. படைமுகப்பிற்கு படைக்கலங்களையும் வீரர்களையும் கொண்டு செல்லும் வண்டிகளும் அத்திரிகளும் படைநகர்வுகளையும் தடுக்கும் வண்ணம் அங்குமிங்குமாக பரவியிருந்தன. திறந்த வாயில் எனக் கிடந்த அப்பகுதியினூடாக ஒரே வீச்சில் அறைந்து பாண்டவப் படையின் மையப்பகுதிக்கு வந்த துரோணர் என்ன நிகழ்கிறதென்று யுதிஷ்டிரர் உணர்வதற்குள் தன் வில்லவர் படையால் அவரை சூழ்ந்துகொண்டார்.

யுதிஷ்டிரரின் தேரின் கொடியை தன் அம்புகளால் அறைந்து தெறிக்க வைத்தார் துரோணர். யுதிஷ்டிரருக்கு

மெய்க்காவலென அமைந்திருந்த நூற்றெட்டு திறன் வாய்ந்த வில்லவர்கள் நிரையில் அனைவரையும் கழுத்தறுத்துக் கொன்று தேர்தட்டில் வீழ்த்தினார். யுதிஷ்டிரரின் உதவிக்கென தனிப்படை ஒன்று ஆயிரத்தெட்டு புரவிவில்லவர்களுடன் திரும்பி எழுந்தணைய அவர்களை சல்யர் தன் படைகளுடன் தடுத்துக் கொன்று நிலம் சரித்தார். மறு எல்லையில் யுதிஷ்டிரரைக் காக்கவந்த சிகண்டியை கிருதவர்மர் தடுத்தார். இருபுறமும் படைப்பெருக்கிலிருந்து பிரிக்கப்பட்ட யுதிஷ்டிரரின் படை செயலிழந்து நிற்க அவர்களை வெறிகொண்டு கொன்றுவீழ்த்தினார் துரோணர். அவருடைய பிறையம்புகள் தலைகொய்து எறிந்தன. நீளலகு அம்புகள் நெஞ்சைத் துளைத்து மறுபக்கம் சென்று நின்றன.

தன்னைச் சூழ்ந்து உடல்கள் குவிவதை, ஒவ்வொரு அம்பும் உயிர் குடித்து நின்று துடிப்பதை கண்டு யுதிஷ்டிரர் வில்லுடன் தேர்த்தட்டில் நின்று பதைத்தார். “முரசெழுக! அர்ஜுனனுக்கு செய்தி செல்க!” என ஆணையிட்டார். துரோணர் “அரசே, தேர்த்தட்டில் முழந்தாளிடுக! அம்புகளை ஒழிந்து முழந்தாளிடுக!” என்று கூவினார். “உங்களை சிறைபிடித்துள்ளோம்! பணிக!” என்று திரிகர்த்தராகிய சுசர்மர் கூச்சலிட்டார். ஆனால் யுதிஷ்டிரர் அந்த ஆணையால் சீற்றம்கொண்டு “களம்படுவதில் எனக்கு அச்சமில்லை! எந்நிலையிலும் பாண்டுவின் மைந்தன் பணிவதில்லை என்று அறிக!” என்றபடி தேர்த்தட்டில் வில் ஏந்தி நின்றார். “வில்லை தாழ்த்துக! அன்றில் உங்கள் ஒரு படையும் எஞ்சப்போவதில்லை” என்று துரோணர் கூவினார். “வில் தாழ்த்தி போர் நிலைக்க ஆணையிடுக! உங்கள் படையினர் உயிரை காத்துகொள்க!”

தன்னைச் சூழ்ந்து செத்து உதிர்ந்துகொண்டிருந்த காவலர் படையினரைப் பார்த்த பின் “ஆம், வில் தாழ்த்துகிறேன்! கொலை நிற்கட்டும்!” என்று யுதிஷ்டிரர் சொன்னார். வில்லை தாழ்த்திவிட்டு தேர்த்தட்டில் அவர் கைவிரித்து நிற்க துரோணரின் வில்லவர் படை வீசு வலையென எழுந்து சென்று வளைத்து யுதிஷ்டிரரை சுற்றிக்கொண்டது. யுதிஷ்டிரரின் தேர்த்தட்டில் பாய்ந்தேறிய வீரனொருவன் ஒரே வாள்வீச்சில் அவர் பாகனின் தலையை வெட்டி வீழ்த்தியபின் நுகத்திலமர்ந்து கடிவாளத்தை இழுத்துச் சுண்டினான். யுதிஷ்டிரரின் தேர் நடுவில் செல்ல துரோணரின் படை சூழ்ந்து அவரை வலப்பக்கமாக கொண்டுசென்றது.

யுதிஷ்டிரர் சிறைபிடிக்கப்பட்டார் என்ற செய்தியை அறிவித்தபடி பாண்டவ முரசுகள் அனைத்தும் முழங்கத்தொடங்கின. துருபதரும் சகதேவரும் நகுலரும் அச்செய்தியைக் கேட்டு தங்கள் படைகளை திருப்பிக்கொண்டு யுதிஷ்டிரரைக் காக்கும் பொருட்டு தொடர வாள் என அவர்கள் நடுவே நுழைந்து அவர்களைத் தடுத்தது சல்யரின் படை. சகதேவரும் நகுலரும் இருபுறமும் நின்றெதிர்க்க நடுவே துருபதர் வில்லாட சல்யர் அவர்களை அங்கேயே தளைத்து நிறுத்தினார். சகதேவர் “மூத்தவருக்கு அறிவியுங்கள்! அரசர் கைப்பற்றப்பட்டுவிட்டார்! மூத்தவருக்கு அறிவியுங்கள்!” என்று வில்லோட்டியபடியே கூவினார். முரசுகள் மேலும் மேலும் முழங்கி யுதிஷ்டிரர் கைப்பற்றப்பட்ட செய்தியை அறிவித்தன.

துரியோதனருடன் கதைப்போர் செய்துகொண்டிருந்த பீமன் அதைக் கேட்டு தன் படைகள் பின்னால் திரும்பி மையப்படைக்குள் நுழைந்து வலுத்திரட்டிக்கொள்ள ஆணையிட்டார். அவர் பின்னகர முற்பட்டதைக் கண்டதும்

துரியோதனர் “விடாதீர்கள், சூழ்ந்துகொள்ளுங்கள்!” என்று ஆணையிட்டு தன் தம்பியரும் பிறரும் துணைக்க பீமனை மேலும் வலுவாக சூழ்ந்துகொண்டார். சீற்றத்துடன் பீமன் கௌரவர்களில் இளையவராகிய சத்வரை தலையில் அறைந்து கொன்றார். அலறியபடி அவர் மேல் பாய்ந்த சித்ராக்ஷரை நெஞ்சில் அறைந்து குருதிசிதற தெறிக்க வைத்தார். சர்வதர் கௌரவ மைந்தர்களான விஸ்வகரையும் பாசபாணியையும் கொன்றார். சுதசோமர் கௌரவ மைந்தர்களான அனுத்ததன், அத்ஃபுதன், சுதம்ஷ்டிரன் ஆகியோரை கொன்றார்.

தம்பியரும் மைந்தரும் வீழ்ந்ததைக் கண்டு நெஞ்சில் அறைந்து குரலெழுப்பியபடி துரியோதனர் தேரிலிருந்து எடைமிக்க கதையுடன் பாய்ந்திறங்கி பீமனை தடுத்தார். பீமனின் கதை எழுந்து அவர் கதையை அறைந்தது. இருவரும் வெறியுடன் ஒருவரை ஒருவர் தாக்கியபடி களத்தில் சுற்றிவந்தனர். அரசே, மதமெழுகையில் யானை கொள்ளும் அசைவுகளே சினமெழுகையில் அத்தனை உயிர்களிடமும் வெளிப்படுகிறது. துரியோதனரின் அறைகளை தடுத்துத் தடுத்துப் பின்னடைந்த பீமனின் உதவிக்கு வந்த சர்வதரை துச்சாதனர் எதிர்கொண்டார். சுதசோமரை லக்ஷ்மணர் எதிர்கொண்டார். ஆறு கதைவீரர்களும் நெஞ்சில் நஞ்சு கொந்தளிக்கும் விசையுடன் ஒருவரையொருவர் எதிர்த்துப் போரிட்டனர்.

ஒவ்வொரு கணமும் நழுவிக்கொண்டிருப்பதை பீமன் உணர்ந்தார். “விரைவு! விரைவு! விரைவு!” என்று அவர் கூவிக்கொண்டிருந்தார். அரைநாழிகைப் பொழுதுக்குள் யுதிஷ்டிரரைக் கொண்டு துரோணர் கௌரவரின் பெரும்படைத் திரளுக்குள் சென்றுவிடுவார். கௌரவப் படை அவரை உள்ளிழுத்து மூடிவிட்டதென்றால் அதன்பின் மீட்க இயலாது.

அரைநாழிகைப் பொழுதே உள்ளது. அரைநாழிகைப் பொழுது! அவ்வெண்ணத்தை செவிகேட்டவர்போல துரியோதனர் வெறியுடன் நகைத்து “ஆம், அரைநாழிகைப் பொழுது! இன்னும் அரைநாழிகைப் பொழுதே உள்ளது! ஆனால் இன்று அந்திவரை இக்களத்திலிருந்து நீ வெளியேறப் போவதில்லை!” என்று பீமனை அறைந்தார். அதை ஒழிந்து விலகிய பீமனின் தோளை அறைந்து தெறிக்கச்செய்தார். கையூன்றி எழுந்து உறுமியபடி பீமன் மீண்டும் பாய்ந்தார்.

சினமும் ஆற்றாமையும் கொண்டு உள்ளம் பொங்குந்தோறும் தன் காலடிகள் பிழைப்பதை, வீச்சு குறி தவறுவதை பீமன் உணர்ந்தார். வீச்சு இலக்கழிந்து நிலையழியச் செய்த காலடிகளுடன் அவர் மீள்வதற்குள் துரியோதனரின் கதை அவர் நெஞ்சைத் தாக்க மல்லாந்து விழுந்தார். அவர் தலையை உடைக்க வந்த கதையின் தலையை புரண்டு தவிர்த்தார். ஏழு அறைகள் அவரை கொல்லும் பொருட்டு வீழ்ந்தன. ஏழு குழிகளை செம்மண் தரையில் உருவாக்கியபடி துரியோதனரின் பெருங்கதை நிலத்திலறைந்தது. கையூன்றி பாய்ந்தெழுந்து விலகிய பீமனை துரியோதனர் தொடர்ந்து சென்று அறைந்தார். உடைந்த தேர் ஒன்றில் பின்புறம் முட்ட உடல் தூக்கி பறவைபோல் மேலெழுந்து அதன் மேல் நின்ற பீமனை நோக்கி கதை வீசி ஒரே அறையில் அத்தேரை உடைந்து தெறிக்கவைத்தார்.

சர்வதர் துச்சாதனரின் அறைகளிலிருந்து தப்ப அங்குமிங்கும் பாய்ந்து நிலத்தில் விழுந்து புரண்டெழுந்து போரிட்டார். அவரை அறைந்த ஒவ்வொரு அடியிலும் தேர்கள் உடைந்து தெறித்தன. குதிரைகள் குருதி சிதற உடல் நொறுங்கி விழுந்தன. லக்ஷ்மணரும் சுதசோமரும் இரு

இணையுடல்களின் நடனம்போல் போரிட அவர்களை இரு கருவண்டுகள் சுற்றிவருவது போல் கதைகள் சுழன்றன. லக்ஷ்மணரை மிக அருகிலெனக் கண்டபோது அவர் விழிகள் கனிந்திருப்பதை சுதசோமர் அறிந்தார். ஆனால் அது அவரை பேரச்சம் கொள்ளச்செய்தது. அவர் நெஞ்சத்துடிப்பால் கையிலிருந்த கதை வழுவியது. இறுகப்பற்றி அவர் பின்னெட்டு வைக்க அவர் கதையில் அறைந்த லக்ஷ்மணரின் கதையின் எடை குதிகால்வரை சென்றது.

நகுலரையும் சகதேவரையும் துணைக்க வந்த சதானீகரையும் சுருதசேனரையும் சல்யரின் படைகள் எதிர்கொண்டன. பாண்டவப் படைகள் மூச்சு நெரிக்கப்பட்டு இறுதிக் காற்றுக்கென உடல் விதிர்க்கும் பெருவிலங்குகள்போல் அதிர்ந்துகொண்டிருந்தன. அரைநாழிகை எனும் சொல்லே மொத்த பாண்டவப் படையையும் துடிக்க வைத்தது. நகுலர் "பின்தொடர்க... ஆசிரியரின் படை நம் படைகளுடனான தொடர்பை இழந்துவிடலாகாது" என்று கூவினார். சிகண்டியின் தலைமையில் பாஞ்சாலப் படை துரோணரைத் தொடர முற்பட்டபோது கிருபர் அவரை தடுத்து நிறுத்தினார்.

கர்ணனால் சூழ்ச்சியாக கௌரவப் படைகளுக்குள் இழுக்கப்பட்ட அர்ஜுனர் யுதிஷ்டிரர் சிறைபிடிக்கப்பட்டார் என்னும் செய்தியைக் கேட்டதுமே நிகழ்ந்ததென்ன என்று புரிந்துகொண்டார். தேரை இழுத்து பின்னடையச் செய்த இளைய யாதவர் "நாம் அங்கு செல்வதற்குள் பொழுது கடந்துவிடும். பாண்டவனே, சல்யரைக் கடந்து துரோணரை அடைய முடியாது" என்றார். ஒருகணம் காண்டீபம் நழுவ அர்ஜுனர் உளம்நலிந்தார். "ஒருபோதும் நீ இனி உன் மூத்தவரை பார்க்கப்போவதில்லை, அர்ஜுனா!" என்று

நகைத்தபடி கர்ணன் தன் முழு ஆற்றலுடன் முன்னெழுந்து வந்தார். அவர் வில்லில் இருந்து புறப்பட்ட விந்தையான அம்புகளால் அர்ஜுனரின் படைவீரர்கள் ஒவ்வொருவராக சரிந்தனர்.

சுருதகீர்த்தியும் அபிமன்யூவும் இருபுறங்களாக ஜயத்ரதரையும் பூரிசிரவஸையும் தாக்கி தடுத்து நிறுத்தினர். சாத்யகியும் திருஷ்டத்யும்னரும் அர்ஜுனர் மேலும் பின்னடையாமல் இருக்க அரணொன்றை உருவாக்கியபடி பின்னால் நின்றனர். கர்ணனின் நாகநெளிவுகொண்ட அம்புகள் அர்ஜுனரின் தலைக்குமேல் சென்று இறங்கி அவருக்குப் பின்துணையாக வந்துகொண்டிருந்த புரவிவீரர்களை ஒவ்வொருவராக வீழ்த்தின. இளைய யாதவர் திரும்பிப்பார்த்தபோது தனது தேருக்குப் பின்னால் உடைந்து விழுந்து கிடந்த தேர்களையும் சிதைந்து துடித்த குதிரைகளையும் கண்டார். "நமது தேரை இனி பின்னெடுக்கவே இயலாது, பார்த்தா!" என்றார். முற்றிலும் உளம் தளர்ந்து அர்ஜுனர் "மூத்தவரே! மூத்தவரே!" என்று அரற்றினார்.

"அவர்கள் சற்றும் எண்ணாத ஒன்றை செய்வோம். கர்ணனை உனது மைந்தர்கள் இருவரும் எதிர்கொள்ளட்டும்" என்றார் இளைய யாதவர். அர்ஜுனர் எண்ணுவதற்குள் தன் புரவியைத் திருப்பி பக்கவாட்டில் முழு விசையில் பாய்ந்து கௌரவப் படைகளுக்குள் புகுந்தார். அங்கிருந்த வில்லவர்கள் அதை எதிர்பார்க்காமல் அலறியபடி சிதறினர். காண்டீபம் அனல்பட்ட நாகமென நின்று துடிக்க அம்புகள் எழுந்தெழுந்து வில்லவர்களை வீழ்த்த அர்ஜுனர் கௌரவப் படைகளுக்குள் தன்னந்தனியாக புகுந்தார். அந்தத் தேர் உருகும் மெழுகை காய்ச்சிய வாளெனக் கிழித்து கௌரவப் படைகளினூடாக

சென்றது. அர்ஜுனரை பின்தொடர கர்ணன் தேரை திருப்பியபோது சுருதகீர்த்தியும் அபிமன்யூவும் அவரை எதிர்கொண்டனர்.

அபிமன்யூ உரக்க நகைத்தபடி “உங்கள் வில் என் முன் நிற்குமா என்று பாருங்கள், அங்கரே. இன்று மூத்தோர்கொலைபுரிந்தவனாக பாடி மீள்வேன்!” என்று வஞ்சினம் உரைத்தார். கர்ணன் சீற்றத்துடன் “அறிவிலி... உயிர்கொடாது விலகி ஓடு” என்று கூவியபடி தன் அம்புகளால் அபிமன்யூவை அறைந்தார். ஆனால் ஓரிரு அம்புகளுக்குள் அர்ஜுனரைவிடவும் ஆற்றல் மிகுந்த வீரன் அவர் என்று கண்டுகொண்டார். அபிமன்யூவின் அம்புகளால் கர்ணனைச் சூழ்ந்திருந்த வில்லவர்கள் நிலம்பட்டனர். கர்ணனின் தேரின் கொடியும் அவர் தோள்கவசங்களும் சிதறின. கர்ணனின் அனைத்து அம்புகளையும் அறைந்து நிலத்தில் வீழ்த்தி நூறு சரடுகளால் கட்டப்பட்ட மதவேழமென அவரை நின்றிருந்த இடத்திலேயே நிறுத்தினார் அபிமன்யூ.

“செல்க! இளைய பாண்டவனை சூழ்ந்து கொள்க!” என்று கர்ணன் கூவினாலும் சாத்யகியும் திருஷ்டத்யும்னரும் இணைந்து ஜயத்ரதரையும் பூரிசிரவஸையும் அசையாமல் நிறுத்தினர். அர்ஜுனரின் கொலைவெறியைக் கண்டு அஞ்சி செயலிழந்துவிட்டிருந்த கௌரவர் படை காற்றுக்கு பட்டுத்திரைகள்போல விலகி விலகி வழிவிட்டது. கௌரவப் படையின் பெருவில்லவர்கள் அனைவருமே பாண்டவப் படையின் வெவ்வேறு இடங்களில் முழுமையாக சிக்கிக்கொண்டிருந்தனர். அவர்கள் வகுத்த சூழ்கையே அவர்களை அவ்வாறு பிரித்து நிலைகொள்ளச் செய்தது.

சுருதசேனரையும் சதானீகரையும் நகுலரையும் சகதேவரையும் எதிர்த்துக்கொண்டிருந்த கௌரவர்களின் படை மத்ரநாட்டின் வேலேந்திய காலாட்களால் ஆனதாக இருந்தது. அதைக் கிழித்து கடந்து சென்ற அர்ஜுனர் பீமனையும் சுதசோமரையும் சர்வதரையும் எதிர்த்துக்கொண்டிருந்த கௌரவர்களின் பின்புறம் வழியாக சென்றார். திடுக்கிட்டுத் திரும்பி அவரை எதிர்கொண்ட உக்ரபர், அகம்பனர், உக்ரேஷ்டர் என்னும் மூன்று கௌரவ மைந்தர்களை வீழ்த்தினார். என்ன நிகழ்கிறது என்று புரிந்துகொள்வதற்குள்ளாகவே சோமகீர்த்தியையும் திருதரதாசிரயரையும் நெஞ்சில் புண்பட்டு விழச்செய்தார். கலைந்து கூச்சலிட்டு எதிர்த்த இளங்கௌரவர்களையும் மத்ரநாட்டு இளவரசர்களையும் அம்புகளால் அறைந்து பின்னடையச்செய்து விசைகுறையாமல் அப்பால் சென்றார்.

கடோத்கஜனை எதிர்த்துக்கொண்டிருந்த பிரக்ஜ்யோதிஷத்தின் பகதத்தரின் படைவீரர்கள் பதினெண்மரைக் கொன்று கடந்துசென்றார். அவர் திரும்பியபோது கடோத்கஜனின் கொக்கிக் கயிறுவந்து கவ்வி வீழ்த்தியது. அவர் சிக்கிக்கொண்டதை அறிந்த சுப்ரதீகம் பிளிறியபடி வந்து பாசத்தை பற்றிக்கொண்டிருந்த கடோத்கஜனை அறைந்தது. பகதத்தர் கொக்கியை உதறி பின்னடைந்து சுப்ரதீகத்தின்மேல் ஏறிக்கொண்டார். அர்ஜுனர் பெருயானைமேல் அமர்ந்து எடைமிக்க கதாயுதத்தை சுழற்றிக்கொண்டிருந்த பால்ஹிகரின் பின்துணையாக அமைந்த சிபிநாட்டுப் படையினரை அறைந்து வீழ்த்தியபின் துரோணரின் படைகளை நோக்கி சென்றார்.

யுதிஷ்டிரருடன் கௌரவப் படைகளுக்குள் நுழையும் பொருட்டு வந்த துரோணர் தனக்கு முன்னால் அர்ஜுனர் எதிர்பாராது எழுவதைக்கண்டு திகைத்தார். அர்ஜுனர் அத்திகைப்பு

விலகுவதற்குள்ளாகவே அவரது வில்லையும் அம்புகளையும் அறைந்து உடைத்தார். ஆவக்காவலனையும் பாகனையும் கொன்றார். துரோணரின் மூன்று புரவிகள் கழுத்தறுந்து கீழே விழுந்து துடிக்க அவர் ஊர்ந்த தேர் நிலையழிந்தது. இளைய யாதவர் தேரைத் திருப்ப அர்ஜுனர் “துரோணரே, போர் முடிந்துவிட்டது! உயிர் காக்க செல்லுங்கள்” என்று கூவினார். துரோணர் தன் தேரிலிருந்து தாவி பிறிதொரு தேரிலேறிகொண்டு அங்கிருந்த வில்லவனின் வில்லைப் பெற்று அர்ஜுனரை நோக்கி அம்புகளை ஏவினார்.

“இப்போது அவரிடம் போர்புரிய வேண்டியதில்லை. யுதிஷ்டிரரின் தேர் மீண்டு நம் படைகளுக்குள் செல்ல வழியொருக்குக!” என்று இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனர் யுதிஷ்டிரரின் தேருக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த துரோணரின் காலாட்படையையும் வில்லவர்படையையும் தன் அம்புகளால் கொன்றுவீழ்த்த இளைய யாதவர் பாய்ந்து இறங்கி கீழே விழுந்திருந்த புரவிகள் மேலும் உடைந்த தேர்கள் மேலும் கால்வைத்து வெட்டுக்கிளிபோல் தாவி யுதிஷ்டிரரின் தேரிலேறி அங்கிருந்த பாகனை ஓங்கி உதைத்து அப்பால் வீசிவிட்டு கடிவாளத்தை பற்றிக்கொண்டு தேரைத் திருப்பி தேருக்குப் பின்னால் விழுந்து கிடந்த புரவிகளையும் வீரர்களையும் பாதையென்றாக்கி கொந்தளிக்கும் அலைமேல் நிலையழியும் படகுபோல் தேர் துள்ளி அலைந்து உலைய ஓட்டிக்கொண்டு சென்றார். அர்ஜுனர் தன் வில்லுடன் தேரிலிருந்து பாய்ந்து அங்கிருந்த புரவியொன்றில் ஏறி அதை முழு விசையில் முடுக்கி யுதிஷ்டிரரின் தேரைத் தொடர்ந்து சென்றார்.

சில கணங்களுக்குள் தன்னை மீட்டுக்கொண்டதும் துரோணரின் படை அம்புகளைப் பெய்தபடி அர்ஜுனரை நோக்கி வந்தது. தன் புரவியில் பின்திரும்பி அமர்ந்து அம்புகளைத் தொடுத்து துரத்தி வருபவர்களை விரைவழியச் செய்தபடி அர்ஜுனர் யுதிஷ்டிரரின் தேரைத் தொடர்ந்து சென்றார். யுதிஷ்டிரரின் தேர் பாண்டவப் படைகளை அடைந்து உள்ளே நுழைந்துவிட்டது என்பதை அறிந்ததும் "அரசர் மீண்டுவிட்டார்! அரசர் காக்கப்பட்டார்!" என அறிவிக்கும் முரசுகள் முழங்கின. "வெற்றி! வெற்றி!" என்று பாண்டவர்கள் கூச்சலிட்டனர். பாண்டவப் படை இரு கிளைகளாக பெருகிவந்து முழுமையாக மூடி யுதிஷ்டிரரை உள்ளே கொண்டுசென்றது.

இருபுறமும் வந்து சேர்ந்து இணைந்த பாண்டவ வில்லவர்படையின் முகப்பில் பிறிதொரு தேரில் பாய்ந்தேறி நின்று அர்ஜுனர் தோல்வியின் சீற்றத்துடன் தன்னை எதிர்கொண்டு வந்த துரோணரை தடுத்தார். உள்ளிருந்து பாயும் புரவிகளின் முதுகினூடாக கால்வைத்து தாவி வந்து அவர் தேரிலேறி அமர்ந்து கடிவாளத்தை எடுத்துக்கொண்டார் இளைய யாதவர். துரோணர் அனைத்தும் கைவிட்டுச்சென்றுவிட்டன என உணர்ந்து கைகளை உதறி சலிப்புடன் தலையை அசைத்தார். பாண்டவப் படை "வெல்க! யுதிஷ்டிரர் வெல்க! வெல்க மின்கொடி! வெல்க இந்திரப்பிரஸ்தம்!" என வெற்றிமுழக்கமிட்டது. பீமன் உரக்க நகைத்து துரியோதனரிடம் "நீங்கள் எண்ணியது நிகழப்போவதில்லை, அஸ்தினபுரியின் அரசே" என்றார்.

திட்டம் தோல்வியடைந்ததை உணர்ந்து அரைக்கணம் தளர்ந்த துரியோதனரை நோக்கி வீறுகொண்டு எழுந்து அவர் தோளை தன் கதாயுதத்தால் அறைந்து பின்னால் தெறிக்க வைத்தார்

பீமன். அந்த ஒரு கணமே சர்வதருக்கும் சுதசோமருக்கும் போதுமானதாக இருந்தது. லக்ஷ்மணர் பின்னடைந்தார். துச்சாதனர் “மூத்தவரே” என துரியோதனரை நோக்கி திரும்பினார். பீமன் பற்களைக் கடித்து கதையைச் சுழற்றியபடி அர்ஜுனரின் அம்புகளால் புண்பட்டு தேர்த்தட்டில் அமர்ந்திருந்த சோமகீர்த்தியையும் திருதரதாசிரயரையும் தலையில் அறைந்து கொன்றார். அந்த மீறலால் உளமழிந்த கௌரவர்கள் அலறி பின்னடையத் தொடங்கினர். கௌரவர்கள் இருவர் களம்பட்டதை அறிவிக்கும் முரசு துரியோதனரை மேலும் சோர்வுறச் செய்ய அவர் பின்னடைந்து தன் படைகளுக்குள் நுழைந்து தேரிலேறிக்கொண்டார். பீமன் கதையைத் தூக்கி தலைமேல் சுழற்றியபடி வெறிக்குரலெழுப்பி அமலையாடினார்.

# கார்கடல் - 22

யுதிஷ்டிரர் மீண்டுவிட்டதை அறிவித்த முரசொலி கர்ணனை சீற்றம்கொள்ள வைத்தது. “அறிவிலிகள்! வீணர்கள்!” என்று கூவியபடி வில்லை ஓங்கி தேர்த்தட்டில் அறைந்தான். பற்களை நெரித்தபடி அவன் தன் அம்புகளை மேலும் விசையுடன் தொடுத்தான். அவன் அம்புகள் இலக்கு பிழைத்ததே இல்லை என்பதை பாண்டவர்கள் கண்டனர். அவை வளைந்தும் நெளிந்தும் ஏறியும் இறங்கியும் இலக்குகளை தேடிச்சென்று தைத்தன. “அவை அம்புகள் அல்ல! மாற்றுருக்கொண்ட நாகங்கள்!” என்று ஒரு வீரன் கூவினான். “நாகங்கள் மட்டுமே இவ்வாறு வானில் நெளிந்து பறக்க இயலும்!” எங்கும் “நாகங்கள்! பறக்கும் பாம்புகள்!” என்னும் கூச்சல்கள் எழுந்தன.

சாத்யகி விலகிச்சென்று பூரிசிரவஸை எதிர்கொள்ள திருஷ்டத்யும்னன் படைநடத்தும் ஆணைகளை அறிவிக்கும்பொருட்டு பின்னடைய அபிமன்யூவும் சுருதகீர்த்தியும் இருபுறமும் கர்ணனை எதிர்த்தனர். அதிரதனின் இளையோனாகிய தீர்க்கரதனின் மைந்தர்கள் துருமனும் வித்பலனும் விருத்ரதனும் சத்ருந்தபனும் அவனுக்குப் பின்னால் தேர்களில் வந்தனர். கர்ணனின் மைந்தர்களான விருஷசேனனும் விருஷகேதுவும் திவிபதனும் சத்ருஞ்சயனும் சுதமனும் சத்யசேனனும் சித்ரசேனனும் அவர்களுடன் இருந்தனர். மீன்கூட்டம்போல அவர்களின் வெள்ளிமின்னும் தேர்களின் அரைவளையம் பாண்டவ மைந்தர்களைச் சூழ்ந்தது.

அபிமன்யூ தன் தேர்ப்பாகனை காலால் உதைத்து "செல்க! செல்க!" என்று கூவினான். கர்ணனின் முன்னால் வந்து நின்று அவன் செலுத்திய அம்புகளை அறைந்து தெறிக்கச்செய்தான். "இதோ, நாகங்களை வெல்லும் கருடன்!" என்று கூவியபடி அபிமன்யூ ஏவிய அம்பு வந்து கர்ணனின் தேரை அறைய அவன் சற்று நிலையழிந்தான். கர்ணன் அம்புதேர்வதற்குள் அவன் பாகனின் தலையை அறுத்துவீசியது அபிமன்யூவின் வாளி. "தொடர்க! தொடர்க!" என கர்ணனின் படைக்குப் பின்னால் போர்முரசு முழங்கியது. "பாண்டவ மைந்தரை குறைத்து எண்ணாதீர்கள். அவர்களைச் சூழ்ந்து வெல்க! கர்ணனின் பின்பக்கத்தை காத்துகொள்க!" துருமன் பாய்ந்து கர்ணனின் தேரிலேறிக்கொண்டு அதை நிலைபெறச்செய்து முன்னால் செலுத்தினான்.

கர்ணன் சீற்றத்துடன் விருஷகேதுவிடம் "நீங்கள் சுருதகீர்த்தியை வளைத்துக் கொள்ளுங்கள். நான் இக்களத்திலேயே இந்த நாணிலா மைந்தனை

கொன்றுவீழ்த்துகிறேன்” என ஆணையிட்டபடி தேர் விசைகொள்ள முன்னால் பாயந்தான். அபிமன்யூவின் தேர்ப்பாகன் அம்பு தைத்த நெஞ்சைப்பற்றியபடி இறந்து விழுந்தான். அபிமன்யூவின் தேரின் குதிரைகள் நான்கு தலையறுந்து விழுந்தன. அவன் கொடியும் தேர்மகுடமும் உடைந்தன. அபிமன்யூ பின்புறமாகப் பாய்ந்து புரவியிலேறி பாண்டவப் படைகளுக்குள் நுழைந்தான். விருஷசேனனுடன் நேர்நின்று பொருதிய சுருதசேனன் அவன் எய்த அம்பை தோளில் ஏற்று புண்பட்டு தேர்த்தட்டில் விழ அவனை பாண்டவர்கள் பின்னெடுத்துச் சென்றனர். அவர்களை விருஷகேதுவும் சத்ருஞ்சயனும் துரத்திச்சென்றனர்.

கௌரவப் படை கர்ணனின் தலைமையில் மீண்டும் கூர்கொண்டு பாண்டவப் படையை அறைந்தபடி முன்னெழுந்து சென்றது. கர்ணன் கணந்தோறும் சீற்றமும் விசையும் மிகுந்தவன் ஆனான். அவனைத் தடுக்க பாண்டவப் படைகள் அனைத்தும் அடுக்கடுக்காக இணைந்து அரணமைத்தும் முடியவில்லை. யுதிஷ்டிரரை இழந்த சினம் மேலோங்க தன் அனைத்துக் கட்டுப்பாடுகளையும் இழந்து கூச்சலிட்டபடியும் வசைபொழிந்தபடியும் பாண்டவப் படையைத் தாக்கிய துரோணரை துருபதனும் திருஷ்டத்யும்னனும் வந்து எதிர்கொள்ள சிகண்டி கிருபரை தடுத்தார்.

கர்ணன் தேர்த்தூணை ஓங்கி ஓங்கி அறைந்து “செல்க! முன்செல்க!” என்று ஆணையிட்டான். காட்டெரி மரங்களைப் பொசுக்கி ஊடுருவுவதுபோல அவன் தேர் பாண்டவப் படைகளுக்குள் சென்றது. இருபுறமும் பாண்டவ வில்லவர்கள் அவன் அம்புகள் பட்டு தேர்களிலிருந்து துடித்து கீழே விழுந்தனர். கர்ணன் இலக்கு நோக்குவதையே பாண்டவப்

படையினர் காணவில்லை. அம்புகள் தாங்களாகவே ஆவநாழியிலிருந்து எழுந்து அவன் கையிலமர்ந்து நாணிலிழுபட்டு எழுந்து சீற்றொலி எழுப்பி பாய்ந்து வருவதாகவே அவர்களுக்குத் தோன்றியது. அவர்கள் வளைந்தாலும் நெளிந்தொழிந்தாலும் ஒளிந்தாலும் அவற்றிடமிருந்து தப்ப இயலவில்லை.

கர்ணனின் ஓர் அம்பு அவர்களின் கவச இடுக்கை புகுந்து தொட்டு நிலையழியச் செய்ய மறுகணம் பிறிதொரு பேரம்பு வந்து அவர்களின் தலைகளை கொய்து வீழ்த்தியது. அம்புகள் தங்களுக்குள் பேசிக்கொள்ள முடியுமென்று, காற்றில் தங்கள் திட்டங்களை வகுத்துக்கொண்டு தாங்களே ஒரு சூழ்கை அமைத்து வந்து தாக்கக்கூடுமென்று அவர்கள் முன்பு அறிந்திருக்கவில்லை. எழும் ஒரு அம்பை தடுத்து அடிப்பதற்கு அவர்கள் அம்பெடுப்பதற்குள் பிறிதொரு அம்பு வந்து அந்த அம்பை எடுத்த கையை தாக்குமென்றும் விண்ணில் சீறி எழுந்த அம்பு வளைந்து கீழிறங்கி விழுந்து கிடப்பவனை தேடி வந்து தைக்குமென்றும் அக்கணத்தில்தான் முதலில் கண்டனர்.

“இது போரல்ல! இது போரே அல்ல! இது நாகர்களின் மாய வித்தை!” என்று பாஞ்சாலப் படைவீரர்கள் கூச்சலிட்டனர் “எழுகின்றன கொடிய நச்சுநெளிவுகள்! நாபறக்கும் பாதாளக் கணைகள்! நாம் மானுடரிடம்தான் போரிட முடியும்! மண்ணுக்கடியிலிருந்து பெருகியெழும் தெய்வங்களுடனல்ல” என்று வில்லவன் ஒருவன் தேரைத் திருப்பியபடி கூவினான். அவன் சொற்கள் காற்றில் அலைகொண்டு நிற்கவே அவன் தலையை வெட்டி கொண்டு சென்றது பன்னகவாளி. அவனை நோக்கி அஞ்சி கூச்சலிட்டவனின் குரலையே இரண்டாக வெட்டிச்சென்றது பிறிதொரு அம்பு.

யுதிஷ்டிரரை பாண்டவப் படைக்குள் புகுத்திவிட்டு படைமுகப்பிற்கு வரும் வழியிலேயே அர்ஜுனன் கர்ணன் பாண்டவப் படைகளை அழித்து முன்னெழுந்துவிட்டதை முரசொலிகளிலிருந்து உணர்ந்தான். தேரில் விழுந்துவிட்ட சுருதகீர்த்தியை இழுத்து கொண்டுசென்று பின்னால் நகர்ந்த மருத்துவ ஏவலரையும் தொடர்ந்து அபிமன்யூ தரையிலமர்ந்து தன் புண்களுக்கு கட்டுபோட்டுக்கொண்டிருப்பதையும் கண்டான். சகதேவனும் நகுலனும் வில்லும் அம்பும் இழந்து கர்ணன் முன்னிலிருந்து தேரிலிருந்து பாய்ந்து ஓடி ஒளிந்து தப்பினார்கள் என அறிந்தான். அவனை எதிர்கொண்ட வீரன் ஒருவன் "அரசே, இன்னும் ஒரு நாழிகை இவ்வண்ணம் அங்கர் போரிட்டால் பாண்டவப் படைகள் இரண்டாகப் பிளந்துவிடும். நடுவே கௌரவர் ஊடுருவினால் நமக்கு முற்றழிவு" என்றான். மேலும் ஒருவன் ஓடி வந்து "பெருவில்லவர்கள் நூற்றுக்கணக்கில் விழுந்துகொண்டிருக்கிறார்கள். நிஷாத இளவரசர்களான உத்பாதரும் உஜ்வலரும் பார்க்கவரும் விழுந்துவிட்டனர்!" என்றான்.

அர்ஜுனன் "செல்க! படைமுனைக்கு விரைக!" என்று இளைய யாதவரிடம் சொன்னான். இளைய யாதவர் தன் தேரை மெல்ல ஓட்டிச்சென்றார். "செல்க! விரைக!" என்று அர்ஜுனன் கூவினான். தேர் சீராகச் செல்வதை உணர்ந்து "விரைவு கொள்க!" என்று கூச்சலிட்டான். "அங்கே அவன் யுதிஷ்டிரர் தப்பிவிட்ட சீற்றத்தில் இருக்கிறான். அச்சீற்றம் சிலரை கொன்றால் சற்றே தணியும். அதன் பின்னர் அவனை நாம் எதிர்கொள்வோம்" என்றார் இளைய யாதவர். அர்ஜுனன் காண்டீபத்தை ஓங்கி தேர்த்தட்டில் அறைந்து "விளையாடுகிறீர்களா? நான் கோழை என எண்ணுகிறீர்களா?" என்றான். "அல்ல, ஆனால் நீ அவனுக்கு நிகர் அல்ல. அவன்

வில்லெடுத்து நின்றால் நானன்றி எவரும் எதிர்கொள்ள இயலாது” என்றார் இளைய யாதவர்.

“வென்றுகாட்டுகிறேன். இக்களத்திலேயே அவனை கொல்கிறேன்!” என்று அர்ஜுனன் தொண்டை கமற, நெஞ்சில் அறைந்து வீறிட்டான். “என் எல்லை எதுவென காண்கிறேன். அறிக தெய்வங்கள், இக்களத்தில் அவனை கொன்றுவீழ்த்துவேன்!” இளைய யாதவர் புன்னகையுடன் தேரை செலுத்தினார். தொலைவில் யானைச்சங்கிலி கொடி பறந்த பூசல்சுழி அலறல்களாலும் சங்கொலிகளாலும் கொம்பொலிகளாலும் நிறைந்திருந்தது. எரியெழுந்த இடத்தில் கலைந்து விண்ணில் பூசலிடும் பறவைகள்போல் அங்கு வானில் அம்புகள் தெரிந்தன. மையத்திலிருந்து நாற்புறமும் கிளம்பும் அலையென கர்ணனால் தாக்கப்பட்டு பின்னடையும் படைகளின் கொப்பளிப்பு நெடுந்தொலைவிற்கு வளையங்களாக பரவியது. அலைகளில் எற்றுபடும் நெற்றென பார்த்தனின் தேர் அந்த வளையங்களில் ஏறி அமைந்தது.

பாண்டவப் படையின் அலைமோதலைப் பிளந்து ஊடுருவி அப்பால் சென்ற அர்ஜுனனின் தேர் கர்ணனின் அம்புகளின் தொடுஎல்லையில் உடைந்த தேர்களும் இறந்த உடல்களும் குவிந்து உருவான வேலி ஒன்றைக் கடந்து அவன்முன் சென்று நின்றது. இருவரும் ஒருவரையொருவர் எதிர்கொண்ட கணம் இரு தரப்பிலிருந்த படைவீரர்களும் சொல்லில்லா வியப்பொலி ஒன்றை எழுப்பினர். பின்னர் கௌரவப் படையினர் “நாகபாசர் வெல்க! வெல்க அங்கர்! வெல்க கதிர்மைந்தர்! வெல்க கர்ணன்!” என்று வாழ்த்தொலி எழுப்ப பாண்டவர் தரப்பினர் “எழுக காண்டீபம்! எழுக இளைய பாண்டவர்! வெல்க விண்ணவன் மைந்தன்! எழுக மின்கொடி!”

என்று வாழ்த்தொலி எழுப்பினர். இரு பெருவில்லவர்களும் ஒரே கணத்தில் அம்புகளால் முட்டிக்கொண்டனர். வானில் அம்புகள் பூசலிட்டு சிதறி விழுந்தன.

போர் உச்சத்தில் தொடங்கி மேலும் மேலுமென உச்சத்திற்கு சென்றுகொண்டிருந்தது. சில கணங்களில் சூழ்ந்திருந்தோர் அனைவரும் விற்களைத் தாழ்த்தி அந்தப் போரை நோக்கலாயினர். அர்ஜுனனின் தேரை அறைந்து நிலையழிய வைத்தன கர்ணனின் அம்புகள். குரங்குக்கொடி உடைந்து தெறித்தது. காண்டீபத்துடன் தேர்த்தட்டில் விழுந்தும் ஒளிந்தும் அர்ஜுனன் போரிட்டான். அவனுடைய கவசங்களும் தலையணியும் உடைந்து தெறித்தன. ஆவக்காவலன் தேரிலிருந்து அலறியபடி கீழே விழ திகைத்து நின்ற அர்ஜுனனை நோக்கி இளைய யாதவர் “பின்னடைக!” என்றார். “முன்செல்க! முன்செல்க!” என்று அர்ஜுனன் கூச்சலிட்டான். தேர்த்தட்டில் காண்டீபத்தால் அறைந்து “முன்னெழுக! முன்னெழுக!” என்றான்.

கர்ணன் “வருக! இதுவே நாமிருவர் போரிடும் இறுதித் தருணம் என்றாகுக!” என நகைத்துக்கொண்டே அணுகிவந்தான். அவன் பற்களின் வெண்மையை அருகிலென அர்ஜுனன் கண்டான். நாகங்களின் சீறல்சூழ்ந்திருந்த காற்றில் வெள்ளிமின்னல்கள் என அம்புகள் பறந்தன. அம்பை எடுத்த கணம் அர்ஜுனன் துரோணரின் காலடிகளை எண்ணினான். அந்த அம்பை அறைந்து சிதறடித்து அவன் தொடைக்கவசத்தை உடைத்தது கர்ணன் அம்பு. அடுத்த அம்பை எடுத்தபோது அவன் இந்திரனை எண்ணினான். அந்த அம்பு துண்டுகளாக உடைந்து அவன் தேரிலேயே விழுந்தது. சீறி அணுகிய அம்பிலிருந்து தப்ப

அவன் விழுந்து எழுந்தபோது பிறிதொரு அம்புவந்து அவன் கால்குறடை உடைத்தெறிந்தது.

அடுத்த அம்பை எடுத்தபோது விழிநீருடன் அவையில் நின்றிருந்த திரௌபதியை எண்ணினான். அது அன்றில்சிறகொலி எழுப்பிச் சென்று கர்ணனின் தோளிலையை சிதறடித்தது. சீற்றத்துடன் கர்ணன் அம்பெடுத்து முன்னெழுந்த கணம் அர்ஜுனனுக்குப் பின்னால் மறைந்தவனாக அபிமன்யூ அம்புதொடுத்து கர்ணனின் பாகனாக அமர்ந்திருந்த உடன்குருதியினனான துருமனின் தலையை கொய்தெறிந்தான். அர்ஜுனன் “அறிவிலி! ஒளிந்திருந்து போரிடுகிறாயா?” என அபிமன்யூவை நோக்கி சீறினான். “அவனை கொல்வேன்! அவனை கொல்வேன்!” என வெறியுடன் கூச்சலிட்டபடி அபிமன்யூ அம்புகளால் கர்ணனின் தேரிலேற முயன்ற வித்பலனை கொன்றான்.

கர்ணன் “கீழ்மகனே, முன்னால் வந்து நின்று போரிடு!” என்றான். “கொல்வேன்! என்னை எவரும் வெல்ல விடமாட்டேன்! கொல்வேன்!” என்று அபிமன்யூ பேயெழுந்தவன்போல கூச்சலிட்டுக்கொண்டே இருந்தான். அபிமன்யூவைத் தேடிவந்த கர்ணனின் அம்பை அர்ஜுனன் அறைந்து தெறிக்கச்செய்தான். அடுத்த அம்பை ஒழிய இன்னொரு தேருக்குப் பாய்ந்தான் அபிமன்யூ. அங்கே தேருக்குப் பின் ஒளிந்து நின்று கர்ணனின் இளையோன் விருத்ரதனை கொன்றான். சத்ருந்தபன் கர்ணனின் தேர்ப்பாகனாக ஏறிக்கொள்ள அவனையும் அபிமன்யூவின் வாளி வீழ்த்தியது. கர்ணனின் மைந்தர்களான விருஷசேனனும் விருஷகேதுவும் இருபக்கமும் அம்புகளால் அரணமைத்து அபிமன்யூவை தாக்கி பின்னடையச் செய்ய திவிபதன் தேர்ப்பாகனாக ஏறிக்கொண்டான்.

சத்ருஞ்சயனும் சுதமனும் சத்யசேனனும் சித்ரசேனனும் சேர்ந்து அபிமன்யூவை எதிர்த்தார்கள். அபிமன்யூவின் உதவிக்கு வந்த சகதேவனை கர்ணனின் அம்பு தோளில் அறைந்து தேரிலிருந்து விழச்செய்தது. அவனை நோக்கிச் சென்ற நகுலனை பிறிதொரு அம்பு அறைந்து வீழ்த்தியது. பாண்டவர்களின் அலறல்களுக்கும் கூச்சல்களுக்கும் நடுவே அபிமன்யூவை அம்புகளால் அறைந்து அறைந்து பின்னடையச் செய்தனர் கர்ணனின் மைந்தர். விருஷசேனனின் அம்புபட்டு அபிமன்யூ தேரில் விழுந்தான். பாகன் அவனை பின்னெடுத்துச் சென்றான். அவனைத் தொடரமுயன்ற கர்ணனின் மைந்தர்களை அர்ஜுனன் அம்புகளால் தடுத்தான். சுதமன் அர்ஜுனனின் அம்பால் தேர்த்தட்டில் விழுந்தான். சத்யசேனனை அறைந்து அப்பால் விழச்செய்தது அர்ஜுனனின் கருடபாசம்.

பெருஞ்சினத்தால் எழுந்த சிரிப்புடன் கர்ணன் அர்ஜுனனை நோக்கி வந்தான். அவன் அம்புகளால் அர்ஜுனனின் தேர் உடைந்து சிதறியது. புரவிகளில் ஒன்று கழுத்தறுபட்டு முகம்தாழ்த்திச் சரிய தேர் நிலையழிந்தது. இளைய யாதவர் கடிவாளத்தைப் பிடித்து இழுத்து தேரைத் திருப்பி உள்ளே அழைத்துச்சென்றார். “முன்னெடுத்துச் செல்க! முன்னெடுத்துச் செல்க!” என்று அர்ஜுனன் கூவினான். அதை இளைய யாதவர் கேட்டதாகவே காட்டிக்கொள்ளவில்லை. “யாதவரே, பின்திரும்ப வேண்டாம். இக்களத்தில் நான் பின்திரும்பினால் இனி எனக்கு புகழென்பதில்லை. நம் குடிக்கு வெற்றியென்பதில்லை!” என்று அர்ஜுனன் கூவினான். “அவன் முன்னால் இனி நிற்க இயலாது. நம் தேர் உடைந்துவிட்டிருக்கிறது. உன் அம்புகள் ஒழிந்துவிட்டிருக்கின்றன” என்று இளைய யாதவர் சொன்னார்.

“என் தலை கொடுக்கிறேன். இக்களத்தில் அவன் முன் இறந்து உதிர்கிறேன். சூதனை அஞ்சி பின்னடைந்தேன் எனும் பெரும்பழி எனக்குத் தேவையில்லை!” என்று அர்ஜுனன் கூவினான். “முன்னெடுத்துச் செல்க! முன்னெடுத்துச் செல்க!” என்று யாதவரின் பீலி சூடிய குழல்பற்றி உலுக்கினான். ஆனால் கர்ணனின் அம்பு வளையத்திலிருந்து தேரை பின்னெடுத்து மேலும் மேலும் பின்னகர்த்தி பாண்டவப் படைகளின் ஆழத்திற்குள் கொண்டு சென்றார் இளைய யாதவர். மருத்துவர்கள் பாய்ந்து வந்து தேரிலேறி கவசங்களைக் கழற்றி அவன் உடலில் பட்டிருந்த புண்களை அம்புமுனைகளைப் பிடுங்கி தூய்மை செய்து கட்டுகளை போட்டனர்.

அர்ஜுனன் விலகிய இடைவெளியை நிரப்பி முன்னெழுந்த சுருதசேனனும் சதானீகனும் இருபுறத்திலிருந்தும் வந்து கர்ணனை எதிர்கொண்டனர். அவர்களுடன் சாத்யகி வந்து சேர்ந்துகொண்டான். ஆனால் அவர்களால் கர்ணனின் விசையை சற்றும் நிலைகொள்ளச் செய்யமுடியவில்லை. பாண்டவர்கள் உளம் சோர்ந்து மேலும் மேலும் பின்னடைய கௌரவர்கள் கூச்சலிட்டு நகைத்தபடி முன்னெழுந்து வந்தனர். நிஷாத இளவரசர்கள் எழுவர் களம் பட்டனர் என அறிவித்து முரசொலி எழுந்தது. “பீஷ்மர் காற்றெனில் இவர் எரி. இனி பாண்டவப் படைகள் எஞ்சப்போவதில்லை!” என்று முதிய வீரர் ஒருவர் கூவினார். சோர்வுறுத்தும் எதையும் படையில் சொல்லலாகாதென்னும் நெறியை மீறி ஒவ்வொருவரும் அச்சத்தையும் ஐயத்தையும் கூவியறிவித்தனர். அவை ஒன்றுடன் ஒன்று கலந்து எழுந்த முழக்கத்தில் சொற்கள் பொருளிழந்தாலும் ஒலி உணர்வுகொண்டிருந்தது. கடந்துசெல்கையில் அம்முழக்கத்திலிருந்து பிரிந்து காதில்

தொட்ட உதிரிச் சொற்றொடரை அம்முழக்கம் பீடமென அமைந்து தாங்கியிருந்தது.

இளைய யாதவர் திருஷ்டத்யும்னனிடம் “அலைகள்! அலைகள்!” என்று கூவி கைகளால் காட்டினார். அவர் கூறுவதை புரிந்துகொண்ட திருஷ்டத்யுமனன் “நிலைமாறாது எவரும் அங்கர் முன் நிற்கவேண்டியதில்லை. அரைநாழிகை நேரம் ஒவ்வொருவரும் அவர் முன் நின்று தடுங்கள்! ஆவநாழி ஒழியும் கணத்தில் பின்னடைந்து அடுத்தவருக்கு இடம்கொடுங்கள். கடற்பாறை முறை! கரைப்பாறையை கடலலைகள் அறைவதுபோல் முடிவிலாது நம் படைவீரர்கள் அவரை அறைந்துகொண்டிருக்க வேண்டும். மோதி உடைக்க இயலாது என்று உணருங்கள்” என்று ஆணையிட்டான். “கடற்பாறை முறை! கடற்பாறை முறை!” என முரசுகள் முழக்கமிட்டன.

அவ்வறிவிப்பை கேட்டு பாண்டவப் படைகள் மேலும் உளம் சோர்வதை விழிகளால் காண முடிந்தது. சதானீகனும் சுருதசேனனும் தளர்ந்து பின்னடைய திருஷ்டத்யும்னனும் அவன் வில்லவர்களும் கர்ணனை எதிர்கொண்டனர். அவர்கள் தளர்ந்து பின்னடைய தன் யாதவப் படைகளுடன் சாத்யகி அவரை எதிர்கொண்டான். பின்னர் விராடரும் அதன் பின்னர் துருபதனும் கர்ணனை எதிர்கொண்டனர். அலையிறங்கி உருண்டு வரும் பெரும்பாறைக்கு முன் சிறு கற்களையும் மரத்தடிகளையும் போட்டு தடுக்க முயல்வதுபோல அவன் விரைவை சற்று குறைக்கமட்டுமே அவர்களால் இயன்றது. தாக்கி தலைகொண்டு திரும்பி ஆவநாழியையே அடையும் சுழிநாக அம்புகளிலிருந்து குருதிசொட்டி கர்ணனின் தேர் நனைந்தது. அவனுக்கு மட்டுமென குருதிமழை ஒன்று

பெய்ததுபோல் அதன் மகுடவிளிம்புகளிலிருந்து குருதித்துளிகள் சொட்டின. அவன் உடலெங்கும் குருதி வழிந்தது. தொல்நிலங்களிலிருந்து எழுந்துவந்த அறியாத போர்த்தெய்வம் என்று அவன் தோன்றினான்.

தேர்த்தட்டில் உடல் சோர்ந்து அமர்ந்த அர்ஜுனன் எண்ணியிராக் கணத்தில் உளமழிந்து விம்மி அழத்தொடங்கினான். திரும்பி அவனது துயரைப் பார்த்த பின் இளைய யாதவர் ஒன்றும் சொல்லாமல் அமர்ந்திருந்தார். தான் அழுவதை தானே உணர்ந்து சினமெழ எழுந்து ஓங்கி தேர்த்தட்டில் மிதித்து "முன்செல்க, யாதவரே! இக்கணம் முன் செல்லவில்லையென்றால் இங்கேயே என் அம்பால் சங்கறுத்து விழுவேன்" என்றான். "இனி முன் செல்லலாம். உன் ஆவநாழிகளை நிரப்பிக்கொள்" என்றார் இளைய யாதவர். "இதோ துருபதனும் சத்யஜித்தும் விலகுகிறார்கள். அந்த இடைவெளியை அரைநாழிகைப் பொழுதுக்கு நீ நிரப்பு!"

"இல்லை! அங்கிருந்து நான் மீளமாட்டேன்! அவ்விழிமகன் முன்னிருந்து உயிருடன் மீளமாட்டேன்! அங்கேயே இறந்து விழுவேன்!" என்று அர்ஜுனன் கூவினான். "கீழ்மகன்! கொலையாட்டுக்கென எழுந்து வந்திருக்கிறான்! யாதவரே, இவன் வில்திறனால்தான் அஸ்தினபுரி துணிவு கொண்டது. இவனை எண்ணியே இங்கு போருக்கெழுந்துள்ளனர். எங்கள் குலமகளை அவைச்சிறுமை செய்தவன் இவன். இவன் வென்றால் உங்கள் ஒவ்வொரு சொல்லும் இம்மண்ணிலிருந்து முற்றழியும். நாகர்களால் நிறையும் இந்த நிலம். எரிந்தணைந்த காண்டவ வனத்திலிருந்து முட்டைகள் பொரித்து பெருகுவதுபோல் பாம்புகள் எழுந்து பூமியை நிரப்பும். இவனை

அழித்தாக வேண்டும். நான் உங்கள் கையில் அம்பு! என்னை ஏவுக!”

மறுமொழி சொல்லாமல் புன்னகைத்தபடி இளைய யாதவர் தேரைச் செலுத்தி மீண்டும் அர்ஜுனனை கர்ணன் முன் கொண்டுவந்தார். இரண்டாம் முறை வந்தபோது அர்ஜுனன் முற்றிலும் நிலையழிந்து தீப்பற்றி எரிபவன் போலிருந்தான். அவன் அம்புகள் எழுந்து பெருமுழக்கத்துடன் கர்ணனை நோக்கி வந்தன. வெற்புகளை இடித்தழிப்பவைபோல் விசை கொண்டிருந்த அவற்றை கர்ணனின் நாகஅம்புகள் எளிதில் சுற்றி வளைத்து சிதறடித்து அப்பாலிட்டன. அவன் அம்புகள் எவையும் கர்ணனின் தேரைச் சூழ்ந்திருந்த விழிதொட இயலாத காப்பு வளையமொன்றை அணுகக்கூட முடியவில்லை. உளம் சோர்ந்து அவன் மேலும் வெறி திரட்டிக்கொண்டபோது கர்ணனின் அம்புகள் வந்து அவனை அறைந்தன. நெஞ்சில் அறைந்த அம்பால் அவன் தேர்த்தட்டிலிருந்து தூக்கி வீசப்பட்டான். அவன் கவசம் உடைந்து அம்பு ஆழப்புதைந்து நின்றிருந்தது. வலியலறலுடன் எழ முயன்றபோது மீண்டுமொரு அம்பு அவனைத் தாக்க அவன் நிலத்தில் பதிந்தான். அவன் உடல் அங்கே கிடந்து துள்ளியது.

இளைய யாதவர் தன் தேரைத் திருப்பி அர்ஜுனனை மேலும் தொடர்ந்து தாக்க வந்த கர்ணனின் அம்புகளிடமிருந்து அவனை காத்தார். அம்புகள் தேரிலறைந்து உதிர்ந்தன. ஆனால் விண்ணிலெழுந்து குத்தாக இறங்கி வந்த பிறிதொரு அம்பு அர்ஜுனனை அறைந்து புரட்டியது. முழவுகள் “இளைய பாண்டவர் விழுந்தார்! இளைய பாண்டவர் விழுந்தார்!” என்று உறுமத் தொடங்கின. சுருதசேனனும் சதானீகனும் அர்ஜுனனை

காக்கும் பொருட்டு இருபுறத்திலிருந்தும் ஓடிவந்தனர். உயிர் எஞ்சியுள்ளதா என்று அறியும்பொருட்டு திருஷ்டத்யும்னன் தன் தேரிலிருந்து குதித்து தரையில் கையூன்றி தவழ்ந்து அருகணைந்தான். சுருதசேனனும் சதானீகனும் இருபுறத்திலிருந்தும் கர்ணனை நோக்கி அம்புகளை எய்து அவன் விசையை தடுக்க முயன்றனர்.

கர்ணன் உரக்க நகைத்தபடி தன் ஆவநாழியிலிருந்து நாகவாளியை எடுத்தான். அக்கணத்தை சதானீகனும் சுருதசேனனும் ஒவ்வொரு கணத்துளியென தெளிவாக கண்டனர். கர்ணனின் கண்களில் அதுவரை இருந்த கூர் அகன்று கொலைத் தெய்வங்களுக்குரிய வெறிநகைப்பு குடியேறுவதை, அவன் உதடுகள் விரிந்து வெண்பற்கள் வெளித்தெரிவதை கண்டு அவன் மானுடனல்ல மண்ணாழத்திலிருந்து எழுந்து வந்த நாகம் என்று உளமயக்கடைந்தனர். நாகவாளி புற்றிலிருந்து படமெடுத்து எழும் அரசநாகம் என ஆவநாழியிலிருந்து எழுந்ததை அங்கிருந்த அனைவரும் உணர்ந்தனர். பல்லாயிரம் இழுமூச்சுகள் எழ படையே சீறலோசை எழுப்புவது கேட்டது.

கர்ணன் நாகவாளியை கைசுழற்றி எடுத்து நாணிலிட்டு இழுத்த கணம் இளைய யாதவர் அதைப் பாராதவர்போல் தேர்த்தட்டில் பாய்ந்தெழுந்து பின்திரும்பி நின்று கீழே விழுந்து கிடந்த அர்ஜுனனை பார்த்தார். அவர் மேல் நாகபாசாம் பாயப்போகிறதென்று எண்ணி சதானீகன் "இளைய யாதவரே" என்று கூவினான். புன்னகையுடன் திரும்பிப்பார்த்து இளைய யாதவர் "என்ன?" என்று கேட்டார். மறுபுறம் சுருதசேனன் "நாகவாளி! அவர் கையில் நாகவாளி!" என்று கூவினான்.

திரும்பி கர்ணனைப் பார்த்து புன்னகைத்த இளைய யாதவர் இரு கைகளையும் விரித்தார்.

சில கணங்கள் இறுகிய வெண்நாணில் அம்பு விம்மி நின்றிருக்க அவரைப் பார்த்தபின் வில் தாழ்த்தி அம்பை எடுத்து மீண்டும் தன் ஆவநாழியிலிட்டு மறுபுறம் திரும்பி அங்கு நின்றிருந்த ஏழு பெருவில்லவர்களை ஒரே வீச்சில் கொன்றழித்தபடி "முன்னேறுக! முன்னேறுக!" என்று கர்ணன் கூச்சலிட்டான். அதற்குள் அர்ஜுனனை இழுத்து தேரிலேற்றி பாண்டவப் படைகள் உள்ளே கொண்டு சென்றன. "வீழ்ந்தான் அர்ஜுனன்! வீழ்ந்தான் இளைய பாண்டவன்!" என்று கௌரவப் படைகளில் முரசுகள் முழங்கலாயின.

பாஞ்சாலப் படைகளின் முகப்பில் நின்று போரிட்டுக்கொண்டிருந்த துரோணர் சலிப்புடன் தன் வில்தாழ்த்தி தலையை அசைத்தார். அவரருகே புரவியில் விரைந்து வந்த பூரிசிரவஸ் உரத்த குரலில் "வீழ்ந்தார் பார்த்தர்! இனி அவர் களமெழப்போவதில்லை என்கிறார்கள்" என்று கூவினான். கைகளை விரித்தபடி புரவியில் அமர்ந்தபடியே களிவெறியுடன் நடனமிட்டு "இனி அவர் களமெழப்போவதில்லை! இனி காண்டீபம் எழப்போவதில்லை!" என்றான். சீற்றத்துடன் அவனை நோக்கித் திரும்பிய துரோணர் கைவீசி "விலகு, அறிவிலி!" என்றார். அதை எதிர்பாராத பூரிசிரவஸ் தன் புரவியின் கடிவாளத்தை பிடித்திழுத்து நிறுத்தி வெற்றுவிழிகளுடன் கூர்ந்து நோக்கினான்.

மறுபுறத்தில் துரோணரை நோக்கி புரவியில் வந்த அஸ்வத்தாமன் "அவர் உயிர்துறக்கவில்லை, தந்தையே! அது வெறும் மயக்கம்தான்" என்றான். "இன்றைய போரிலிருந்து கற்றுக்கொண்ட அனைத்து ஆற்றலுடன் நாளை எழுவார்.

ஐயமில்லை!” என்றான். துரோணர் மெல்ல முகம் மலர்ந்து “ஆம்! அவனை வெல்ல இயலாது!” என்றார். பூரிசிரவஸ் அவர் உளநிலையை புரிந்துகொண்டு மெல்ல புரவியை இழுத்து பின்னடைந்தான். அஸ்வத்தாமன் தந்தையின் முகம் சுருங்குவதைக் கண்டதனால்தான் அருகணைந்திருக்கிறான் என்று தெரிந்தது. “காண்டீபம் ஒருபோதும் தோற்காது, தந்தையே!” என்றான் அஸ்வத்தாமன். துரோணர் “ஆம்! மெய்!” என்றார்.

அஸ்வத்தாமன் உரத்த குரலில் சூழ நின்ற அனைவரும் கேட்கும்படி “எப்போதும் கற்றுக்கொண்டிருப்பவர் அவர். இன்றைய வீழ்ச்சி இதுவரை அவர் பெற்றவற்றிலேயே மிகப் பெரிய கல்வியாக அமையக்கூடும்” என்றான். துரோணர் வாய்விட்டு நகைத்து “ஆம், பரசுராமரின் விற்தொழில் என்ன என்று இன்று புரிந்துகொண்டிருப்பான். இனி நாளை அவன் பொருதப்போவது பார்க்கவகுல முனிவரிடம்” என்றார். மேலும் நகைத்து கைதூக்கி “முதல்முறையாக பார்க்கவர் ஷத்ரியர்களிடம் தோற்கப்போகிறார். இப்புவி அதை பார்க்கவிருக்கிறது” என்றார்.

# கார்கடல் - 23

அரவான் சொன்னான். எவரும் எதிர்நிற்கவியலாத வெய்யோன் அங்கு செருகளத்தில் திகழ்வதை நான் காண்கிறேன். அவன் ஒளிமிக்க தேரை நேர்விழிகொண்டு நோக்கும் எவரும் அங்கில்லை. என் குடியினரே அறிக! அவன் அங்கே மாநாகன் என எழுந்து நின்றிருக்கிறான். இப்புவியில் இன்றுவரை வாழ்ந்த நாகர்கள் அனைவரும் நஞ்செனக்

கொண்ட வஞ்சம் அனைத்தும் அவனில் திரள்கின்றது. அதன் முன் நின்றிருக்க இயலாமல் அனல்பட்ட தளிர்களெனச் சுருள்கின்றன அனைத்தும். அவர்களின் படைக்கலங்கள், அவற்றை ஏந்திய வஞ்சினங்கள், அவற்றை ஏந்திய மொழி, அம்மொழியை ஏந்திய நினைவுகள், அந்நினைவில் வாழும் வேள்விகள்.

ஆயிரம் யுகங்களின் அவிப்பயன் அவர்களை அங்கே காக்கவில்லை. என் குடியினரே, அந்த அவியுண்டு பெருகிய தேவர்கள் அவர்களை துணைக்கவில்லை. அந்த தேவர்களுக்குத் தலைவன் தன் மைந்தன் அம்பால் அறையுண்டு விழக்கண்டு விண்ணிலிருந்து பதைக்கிறான். அவன் ஊர்ந்த வெண்ணிற யானை துதிக்கை தூக்கி பிளிறுகிறது. அவனைச் சூழ்ந்து நின்று கூச்சலிடுகிறார்கள் தேவர்கள். விண்ணிலிருந்து அகம் துவள்கிறார்கள் முனிவர்கள். அவர்களின் தெய்வங்களெல்லாம் செயலிழந்து தங்கள் பீடங்களில் ஒட்டியிருக்கின்றன. நாகங்களின் நாளெழுந்தது. ஆழியனின் அரவு ஆயிரம்தலை சுருக்கி அங்கே மீள விழைந்தது. அனல்மேனியனின் அணி வழிந்திறங்கத் தலைப்பட்டது. அன்னையின் மேகலை தவழ்ந்திழிந்தது. இங்கு இங்கு என நெளிய, நான் நான் என தருக்க நாகங்களைப்போல் வடிவுகொண்டமைந்தவை எவை?

குருக்ஷேத்ரப் பெருங்களத்தில் மண்ணுக்கு அடியில் பல்லாயிரம் வளைகள் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பெருகி நிறைந்திருந்தன. அவற்றின் ஆழங்களில் நீண்ட குகைப்பாதைகள் இறங்கிச்சென்று பாதாள இருளில் முடிந்தன. கரிய நீர் ஊறிப்பெருகி எழுவதுபோல் அங்கிருந்து நாகங்கள் வந்தபடியே இருந்தன. அவை போர்க்களத்தில் ஓசையிடாது

நெளிந்து மேலெழுந்தன. மின்னும் விழிகளுடன் படம் விரித்து நாபறக்க சீறிச் சொடுக்கி தலைதிருப்பி அங்கு நிகழ்வனவற்றை நோக்கின. வாலை ஓங்கி அறைந்து அவ்விசையால் எழுந்து பறந்து அக்காற்றை நிரப்பின. தங்களுக்கு உகந்த அம்புகளிலேறி அமர்ந்து சென்று எதிரிகளை தாக்கின. ஒன்றுடன் ஒன்று வாலறைந்து சுழன்று கவ்வி நிலத்தில் விழுந்து துள்ளித் துடித்துச் சுழன்றன. போர்க்களமெங்கும் நிகழ்ந்துகொண்டிருந்தது நாகங்களின் நெளிவுக்கொந்தளிப்பு.

ஆர்யகனின் குலத்திலமைந்த பல்லாயிரம் நாகங்கள் பாண்டவர் தரப்பிலும் இருந்தன. அவற்றுக்கு நூறுமடங்கு நாகங்கள் கௌரவத் தரப்பிலெழுந்தன. அவை ஒன்றையொன்று கடித்து ஒற்றைப் பந்தென ஆகி துள்ளியுருண்டன. வானிலிருந்து பார்த்த மூதாதையர் குருக்ஷேத்ரத்தில் கரிய நீரலைகளின் நெளிவு நிறைந்திருப்பதைக் கண்டு அங்கு பெருவெள்ளம் எழுந்ததோ என்று ஐயுற்றனர். பின்னர் மேலும் விழி கூர்ந்து அவை நாகங்களின் உடல்களாலான பெரும்பரப்பு என்று தெளிந்தனர். நாகங்களின் நச்சுத்துளிகள் சிதறி மண்ணில் விழுந்தன. அங்கே மண் வெந்து புகைந்து ஆழ்துளைகளாக குழிந்து இறங்கியது. மென்சேற்றில் கூழாங்கற்கள்போல் அவை புதைவுகொண்டன. அத்துளைகளால் குருக்ஷேத்ரக் குருதிநிலம் சல்லடை போலாயிற்று.

மேலும் மேலுமென மண்ணுக்கடியிலிருந்து நாகங்கள் எழுந்து வந்தன. கர்ணன் போரிடும்போது அவனைச் சூழ்ந்து அவை பெருகியெழுந்து முகில்படலம்போல் நின்றன. அவன் எய்த ஒவ்வொரு அம்புடனும் நூறு நாகங்கள் உடன் பறந்தன. உயிர்குடித்து விம்மி உடல் பெருத்து தங்களில் தாங்களே திளைத்து கொண்டாடின. அங்கு நிகழ்ந்துகொண்டிருந்தது

நாகங்களின் பெரும்போர். அன்றி நாகங்களின் விழவுக் களியாட்டு. நாகங்களைப்போல் தங்களைத் தாங்களே உண்பவை வேறில்லை. தங்களைத் தாங்களே தழுவிக்கொள்பவையும் இல்லை. நாகங்கள் கொன்றன. வென்று நெளிந்தன. சீறித் தருக்கின. அஞ்சிப் பதுங்கின. சீற்றமே மொழியெனக் கொண்டவை. சினமே நோக்கெனக் கொண்டவை. அனலையே நாவெனக் கொண்டவை. நஞ்சென நெஞ்சம் கொண்டவை. நாகங்களை வெல்லவும் நாகங்களே எழவேண்டும். கூட்டரே, நாகங்கள் முழுதுற வெல்லவும் நாகங்களே தேவை.

அந்தியில் போர்முடிவை அறிவித்து முரசுகளின் முழக்கு எழுந்தபோது நாகங்கள் மேலும் வெறிகொண்டு என்ன செய்வதென்றறியாமல் தங்களைத் தாங்களே முடிச்சிட்டு வால்சொடுக்கி தாங்களே எழுந்தமைந்து களம் நுரைத்து கொப்பளித்துக்கொண்டிருந்தன. ஒவ்வொரு படைவீரரும் சோர்ந்து வில்லும் வாளும் தாழ்த்தி தள்ளாடி நின்றபோது அவை அவர்களின் கால்களில் சுற்றிக்கொண்டு நிலையழியச் செய்தன. அவர்கள் பெருமூச்சுடன் விண் நோக்கி நிமிர்ந்தபோது சுழன்று உடலைச் சுற்றிக்கொண்டு இறுக்கி நெஞ்சுடையும் வலியை அளித்தன. அவர்கள் தனிமையும் துயரும் கொண்டு நிலம்பார்த்து தலைகுனிந்தபோது தரையெங்கும் நாகங்களை நிழலசைவெனக் கண்டனர். அஞ்சி மூடிய கண்களுக்குள் கரிய அலைகளென ஓடிய நாகங்களைக் கண்டு அவை என்னவென்றறியாது ஒருவரோடொருவர் தோள்பற்றிக்கொண்டனர். கால்களை இழுத்து வைத்து குருதி கொட்டும் புண்களை கைகளால் பொத்தியபடி அவர்கள் தங்கள்

பாடிவீட்டுக்குத் திரும்பியபோது நிழல்கள் நீண்டு நாகங்களென அவர்களைத் தொடர்ந்தன.

நிலைமீண்டுகொண்டிருந்த தன் படைவிரிவின் நடுவே யானையின் மேல் பாய்ந்தேறி நின்ற கௌரவர் தலைவனாகிய துரியோதனன் இரு கைகளையும் விரித்து "வெற்றி! கௌரவர்களுக்கு வெற்றி! இப்போரில் நாம் வென்றோம்! நாம் மீண்டெழுந்துவிட்டோம்!" என்று கூவினான். "இதோ அர்ஜுனன் வீழ்ந்தான். பாண்டவர் மூவர் புண்பட்டுள்ளனர். அவர்களின் படைகள் சிதறி அழிந்துள்ளன. அவர்களிடம் எஞ்சுவது ஏதுமில்லை இனி" என அவன் கூவ அவன் படையினர் ஆர்ப்பரித்தனர். "இதுவரை நிகழ்ந்தது அல்ல இனி எழுவது. அவ்வீணர் மாநாகத்தின் உடலை மிதித்து அதை படமெடுக்க வைத்தனர். இன்று அதன் சீறலைக் கண்டனர். இனி அதன் நஞ்சை அவர்கள் எதிர்கொள்ளப் போகிறார்கள். அறிக, முற்றழியவிருக்கிறார்கள்!" அவன் சொற்களை முழவுகளும் கொம்புகளும் பெருக்கிப் பரப்பின. அங்கே பெருகியிருந்த கௌரவர்கள் வேல்களையும் வாள்களையும் விற்களையும் வானோக்கித் தூக்கி பெருங்குரலெழுப்பினர்.

கைகளையும் கேடயங்களையும் தட்டித் தாளமிட்டும் கூவி ஆர்ப்பரித்து சிறுநடனமிட்டும் கௌரவர் தங்கள் பாடிவீடுகளை நோக்கி நிரைவகுத்தனர். எங்கும் சிரிப்புகளும் வாழ்த்தொலிகளும் உளம்கிளர்ந்த வசைமொழிகளும் ஒலித்தன. "இன்றொடு முடிந்தது போர்! நாளை நிகழ்வது எரியாட்டு!" என ஒரு வீரன் தேர்க்கூரைமேல் ஏறிநின்று கூச்சலிட்டான். "முடிந்தது போர்! முடிந்தது போர்!" என்று கௌரவர்கள் ஏற்றொலித்தனர். "இனி சொல்லில்லை. இனி கள்மட்டுமே!" என ஒரு வீரன் கூவ "கள்! கள்!" என பல்லாயிரம்

தொண்டைகள் கூச்சலிட்டன. அந்த உளநிலை மிக விரைவிலேயே சிரிப்பாகவும் கொண்டாட்டமாகவும் மாறியது. அது முதிர்ந்து தற்பகடியாக உருக்கொண்டது. “தலையை வெட்டிக் கொடுத்து காலை மீட்டிருக்கிறோம்! வெற்றி! கௌரவர்களுக்கு வெற்றி!” என்று ஒருவன் மொந்தையில் நிறைந்த கள்ளை தலைக்குமேல் தூக்கி கூச்சலிட அனைவரும் கைகளைத் தூக்கி கூவி நகைத்தனர்.

“கள் எழுக! கள்தெய்வம் கொலுக் கொள்க!” என்று படை முழங்கியது. “கள்! கள்! கள்!” என திரள் கொந்தளித்தது. வழக்கமாக படைகள் அமைந்த பின்னரே கள்வண்டிகள் கிளம்பும். அன்று படையினரில் ஒரு பிரிவினர் சென்று கள்வண்டிகளை கைப்பற்றி தாங்களே இழுத்துக்கொண்டு வந்தனர். அவர்களே கள்ளை அள்ளி அனைவருக்கும் ஊற்றினர். தங்கள் நிலைகளுக்குச் சென்று அமையாமையால் வீரர்கள் தலைக்கவசங்களில் கள்ளை வாங்கினர். அதை குடித்தபோது அவர்களின் உடலெங்கும் கள் வழிந்தது. கள்ளை மாறிமாறி ஊற்றிக்கொண்டார்கள். கள் வழியும் உடலுடன் ஒருவரை ஒருவர் தாக்கி களிப்போரிட்டனர். சற்றுநேரத்தில் கள்ளில் புழுத்தவை என அங்கே மானுட உடல்கள் கட்டிப்புரண்டு கொப்பளித்துக்கொண்டிருந்தன.

பாண்டவர்கள் களம் முழுக்க செத்துக் குவிந்திருந்த தங்கள் தோழர்களைப் பார்த்து சலிப்பும் துயரும் கொண்டவர்களாக தனித்தனியாக தங்கள் பாடிவீட்டை நோக்கி நடந்தனர். அர்ஜுனன் வீழ்ந்துவிட்டான் என்பதையே அவர்கள் அனைவரும் எண்ணிக்கொண்டிருந்தனர். ஆனால் எவரும் அதை சொல்லாக்கவில்லை. அவர்கள் நடுவே சென்ற தேரில் யுதிஷ்டிரர் அர்ஜுனன் கிடந்த மருத்துவநிலை நோக்கி

சென்றார். “அரசர் செல்கிறார். அவர் முகம் துயர்கொண்டிருக்கிறது” என்றான் ஒரு வீரன். “அவர் முகம் என்றும் துயருடன்தான் இருக்கிறது” என்றான் இன்னொருவன். “மருத்துவநிலையிலிருந்து என்ன செய்தி வந்துள்ளது?” என்று ஒருவன் கேட்டான். “நாம் எச்செய்தியையும் அறியவியலாது. முரசுகள் முழங்கும் வரை நம் அறிவுக்கு அவர் நலமுடன் இருப்பவரே” என்றார் முதிய வீரர் ஒருவர்.

யுதிஷ்டிரர் மருத்துவநிலையை அடைந்து தேரிலிருந்து இறங்கியதும் அங்கே நின்றிருந்த ஏவலர் இருவர் வந்து வணங்கினர். அவர் ஒன்றும் சொல்லாமல் தளர்ந்த கால்களும் தொய்ந்த தோள்களுமாக மருத்துவநிலை நோக்கி நடந்தார். அவர் வந்ததை அறிந்து உள்ளிருந்து வந்த முதிய மருத்துவரான கர்வடர் தலைவணங்கி “நெஞ்சிலும் இடையிலும் நிலையில் வலுவான தாக்குதல் பட்டுள்ளது, அரசே. குருதி ஒழிந்துள்ளமையால் இன்னும் தன்னினைவு மீளவில்லை. முயன்றுகொண்டிருக்கிறோம்” என்றார். யுதிஷ்டிரர் “அவன் உயிருக்கு...” என்று சொல்லெடுத்து அச்சொல் தன் செவியில் கேட்கவே தயங்கி நாவை நிறுத்தினார். “இப்போது எவராலும் எதுவும் சொல்ல இயலாது. உடல் உயிரை தக்கவைக்க போராடிக்கொண்டிருக்கிறது. நன்று நிகழுமென்றே எண்ணுவோம்” என்றார் கர்வடர்.

யுதிஷ்டிரர் மேலும் பேச எழுந்த நாவை அடக்கி தலையசைத்தார். கர்வடர் உள்ளே செல்ல அவர் தளர்ந்து மெல்ல பின்னடைந்து சுவரோரமாக போடப்பட்டிருந்த மரப்பெட்டிமேல் அமர்ந்தார். அவரை சூழ்ந்தவர்கள்போல ஏவலர் நின்றனர். மேலும் மேலும் புண்பட்ட உடல்கள் மருத்துவநிலை நோக்கி வந்துகொண்டிருந்தன. களம்பட்ட

நிஷாத குல இளவரசர்களின் தந்தையர் விழிநீர் வழிய அவ்வண்டிகளுக்குப் பின்னால் வந்தனர். குருதிமணமும் கந்தகநீரின் மணமும் கலந்து காற்று அங்கேயே தங்கி நின்றது. அப்பால் பொதுவீரர்களுக்கான மருத்துவநிலையிலிருந்து முனகல்களும் அலறல்களும் கலந்த கூட்டோசை எழுந்து காற்றுச்சுழலுக்கேற்ப வலுத்தும் தணிந்தும் ஒலித்தது.

குளம்படியோசை கேட்டு யுதிஷ்டிரர் திரும்பி நோக்கினார். புரவியில் வந்து இறங்கிய திருஷ்டத்யும்னன் யுதிஷ்டிரரை அணுகி தலைவணங்கி “பேரழிவு! இப்போர் தொடங்கிய பின்னர் இன்றுபோல் அழிவு என்றுமில்லை. பீஷ்மர் உருவாக்கிய அழிவுக்கு ஒரு படி மேல்” என்றான். யுதிஷ்டிரர் “ஆம், அதை எவரும் சொல்லவேண்டியதில்லை. விழிகளே காட்டின” என்றார். “அவர்களின் சூழ்கையை உடைத்துவிட்டோம். இன்று வெல்லும்பொருட்டு அவர்கள் இட்டிருந்த திட்டமும் தோல்வியடைந்தது. ஆனால் அங்கர் தனியொருவராக நின்று நம்மை அழித்தார்” என்றான் திருஷ்டத்யும்னன். “அவர் வெல்லற்கரியவர் என்று அறிவோம். ஆனாலும் நம்மில் எவரும் முன்னிற்கவியலாதென்பது…” யுதிஷ்டிரர் கைகாட்டி நிறுத்தி “அவன் புகழை பாடவேண்டியதில்லை” என்றார்.

திருஷ்டத்யும்னன் குரலைத் தாழ்த்தி “நான் சொல்வது அதுவல்ல. அவர் ஆற்றலைக் கருத்தில்கொண்டே நாம் இனி படைசூழ்கை அமைக்கவேண்டும் என்றுதான்” என்றான். சினத்துடன் முகம்தூக்கிய யுதிஷ்டிரர் “எந்தப் படைசூழ்கை? சொல்க! எந்தப் படைசூழ்கை? இன்று நாம் வகுத்த படைசூழ்கை என்ன? நம் வீரர்கள் அனைவருமே அவன் ஒருவனை மட்டும் சூழ்ந்து நின்று போரிட்டனர். நம்மில் எவராலும் அரைநாழிகைப் பொழுதுகூட அவன்முன் நிற்கவியலவில்லை” என்றார்.

திருஷ்டத்யும்னன் ஒன்றும் சொல்லாமல் நின்றான். “நாம் செய்வதற்கொன்றே உள்ளது, அவன்முன் சென்று தலைகொடுப்பது. பிறிதொன்றுமில்லை. வீரர்கள் என சொல்லி நம்முடன் இருந்தவர்கள் அனைவரும் எத்தனை வீணர்கள் என இன்று அறிந்தேன். மாவீரன் என சூதர்களால் புகழப்பட்டவன் அதோ அம்புபட்டு உயிர்பிரியக் காத்திருக்கிறான். பிற மாவீரர் அவனைப்போலன்றி உயிருடன் எஞ்சியிருக்கிறீர்கள்.”

திருஷ்டத்யும்னன் சொல்லெடுக்காமல் கைகளை மார்பில் கட்டியபடி விலகி நின்றான். “நாம் தோற்றுவிட்டோம். இனி நம்மிடம் எஞ்சுவது ஏதுமில்லை” என்றார் யுதிஷ்டிரர். துயருடன் தலையை அசைத்தபடி “நாம் தருக்கியதெல்லாம் வீண். இந்தத் துயர் நமக்குத் தேவை. பீஷ்ம பிதாமகரை களத்தில் வீழ்த்தியமைக்கு நமக்கு முன்னோர் அளிக்கும் தண்டனை இது” என்றார். திருஷ்டத்யும்னன் முகத்தில் சினம் எழுந்தாலும் அவன் ஒன்றும் சொல்லவில்லை. “நாளை என்ன செய்யவிருக்கிறோம்? சொல்க! நாளை நம் திட்டம் என்ன?” என்று யுதிஷ்டிரர் கேட்டார். திருஷ்டத்யும்னன் ஒன்றும் சொல்லவில்லை. சலிப்புடன் கையை வீசி “நாம் செய்யக்கூடுவது ஒன்றுமில்லை. சொல்லாடலாம். சொல்லிச்சொல்லி எதையாவது மாற்றமுடியுமா என்று பார்க்கலாம்” என்றார். “சொல்லிச் சொல்லி அவனை எழுப்பி அமரச்செய்ய முடியுமா என்று பாருங்கள்” என உள்ளே கைசுட்டினார்.

திருஷ்டத்யும்னன் பொறுமையிழந்து பேச முற்பட்டபோது குளம்படிகள் ஒலித்தன. சாத்யகி புரவியில் வந்து இறங்கி அணுகிவந்து யுதிஷ்டிரரிடம் தலைவணங்கி “எப்படி இருக்கிறார்?” என்றான். யுதிஷ்டிரர் ஒன்றும் சொல்லாதது

கண்டு புரிந்துகொண்டு திருஷ்டத்யும்னனிடம் என "எவராலும் அவரை தடுத்து நிறுத்த இயலவில்லை. இன்று நிகழ்ந்தது போரே அல்ல, வெறும் கொலையாட்டு" என்றான். பேச்சை மாற்றும்பொருட்டு "இளைய யாதவர் எங்கே?" என்று திருஷ்டத்யும்னன் கேட்டான். "அவர் இளைய அரசர்கள் நகுலரையும் சகதேவரையும் பார்க்கச் சென்றிருக்கிறார்" என்று சாத்யகி சொன்னான். "அவர்கள் நலம்பெற்றுவிடுவார்கள். சிறிய புண்கள்தான்." யுதிஷ்டிரர் உள்ளத்திலெழுந்த வினாவை இயல்பாகவே திருஷ்டத்யும்னன் சொல்லாக்கினான். "இங்கு அல்லவா அவர் வரவேண்டும்?"

அதை சொல்லெனக் கேட்டதும் யுதிஷ்டிரர் முகத்தில் சீற்றமெழுந்தது. அதைக் கண்ட சாத்யகி "ஆம், ஆனால் அவருக்கு முழு நம்பிக்கை இருக்கிறது போலும்" என்றான். "அவர்தான் தேர் தெளித்தவர். இளைய பாண்டவரைத் தூக்கி மருத்துவ வண்டியில் அவரே ஏற்றினார். அவர் அறிந்திருப்பார், பெரிதாக ஏதுமில்லை என்று எண்ணியிருக்கலாம்." யுதிஷ்டிரர் "அதை சொல்லவேண்டியவர் மருத்துவர்" என்றார். சாத்யகி ஒன்றும் சொல்லாமல் சற்று கீழிறங்கி முற்றத்தில் நின்றான். இளம் மருத்துவன் ஒருவன் வெளியே வர யுதிஷ்டிரர் எழுந்து "என்ன செய்கிறார்கள்? விழிப்பு கண்டுள்ளதா?" என்றார். "இல்லை" என்றான் அவன். "நரம்புகளும் சிதைந்துள்ளன. உடலின் அனல் அணைந்துகொண்டே இருக்கிறது."

யுதிஷ்டிரர் வெறித்து நோக்கி நிற்க "உடலை இயக்கும் ஏழு அனல்களில் மூன்று மட்டுமே வெம்மையுணர்த்துகிறது. மூலாதாரமும் சுவாதிட்டானமும் மணிபூரகமும் இயல்கையில் இருப்பும் பசியும் மூச்சும் எஞ்சியிருக்கிறது என்று பொருள். அதற்குமேல் நினைப்பும் சொல்லும் தன்னிலையும்

மெய்யுணர்வும் மறைந்துள்ளது” என்றான். அரசரிடம் பேசக்கிடைத்த வாய்ப்பை அவன் மிகையாக பயன்படுத்துகிறான் என உணர்ந்த திருஷ்டத்யும்னன் “ம்” என்றான். அதிலிருந்த உட்குறிப்பை புரிந்துகொள்ளாமல் மருத்துவன் “உண்மையில் ஒரே அனல் என்பது சகஸ்ரத்தில் வாழும் மெய்யுணர்வே. அதிலிருந்தே ஆஞ்ஞையும் விசுத்தியும் அனாகதமும் பற்றிக்கொள்கின்றன. அவை எரியும் நெய்யென்றாவதே முதல் மூன்றின் பணி. மூன்று விறகும் நான்கு எரியும் என அதை நூல்கள் சொல்கின்றன” என்றான்.

“நாங்கள் இதற்குச் செய்யவேண்டிய ஏதேனும் உண்டா? வேள்விகள், பூசனைகள் எதை வேண்டுமென்றாலும் செய்கிறோம்… எவ்வண்ணமேனும் சகஸ்ரம் எழுந்தாகவேண்டும்” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “மானுடர் அதில் செய்வதற்கொன்றுமில்லை. அவ்வுடலில் தன்னை அமைத்துள்ள உடலிலி அதை எண்ண வேண்டும். அதற்கு ஊழின் நெறியும் தெய்வங்களின் ஆணையும் வேண்டும்” என்ற மருத்துவன் “நாம் வேண்டிக்கொள்ளலாம். எவ்வகையில் வேண்டிக்கொண்டாலும் அது நன்றே” என்றான். “நீர் செல்லலாம்” என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். அக்குரலில் இருந்த கடுமையால் திகைத்து பின் தலைவணங்கி அவன் சென்றான். “அவன் நெற்றியில் சகஸ்ரம் மலரவேண்டும். அவன் யோகி. அவன் உடலில் அது ஒருபோதும் அணையாது. அவன் மீள்வான். ஐயமே இல்லை, அவன் மீள்வான்” என்றார் யுதிஷ்டிரர்.

பீமனும் சுதசோமனும் இரு புரவிகளில் வந்திறங்கினர். பீமன் வந்தபடியே “எவ்வண்ணம் இருக்கிறான்?” என்றான். திருஷ்டத்யும்னன் “நலம்பெறக்கூடும் என்றனர்” என்றான். “ஆம்,

நலம்பெறுவான். அவன் வருகை நோக்கம் நிறைவேறாது செல்லமாட்டான். அவன் அவர்களை முற்றழிப்பான்” என்றான் பீமன். “மந்தா, வீண்சொற்கள் வேண்டாம்” என்று யுதிஷ்டிரர் சொன்னார். சாத்யகி “சர்வதன் புண்பட்டுவிட்டான் என்றார்கள்” என்றான். பீமன் “நினைவு மீளவில்லை. ஆனால் நாளை விழித்தெழ வாய்ப்பிருக்கிறது என்று மருத்துவர் சொன்னார்கள். அங்கிருந்துதான் இங்கு வருகிறேன்” என்றான்.

சுதசோமன் தன் தோளிலும் இடையிலும் பெரிய கட்டுகளை இட்டிருந்தான். திருஷ்டத்யும்னன் “இவனும் படுக்கையில் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது” என்றான். “ஆம், இரு நாட்கள் ஓய்வெடுக்க வேண்டுமென்றுதான் மருத்துவர் சொன்னார்” என்றான் பீமன். யுதிஷ்டிரர் அவனிடம் “மைந்தா, நீ சென்று மருத்துவநிலையில் படுத்துக்கொள். இங்கு உன் இளைய தந்தை விரைவில் மீண்டெழுவான். நாளை களம் நிற்பான்” என்றார். தலையசைத்த பின் சுதசோமன் சற்றே விலகி தனித்து நின்றான்.

பீமன் திருஷ்டத்யும்னனிடம் “நாளைய போர்சூழ்கையை வகுக்கையில் அனைத்தும் அவனை மையம் கொண்டே அமையட்டும்” என்றான். சாத்யகி “இன்று இயல்பாகவே அவ்வாறு அமைந்துவிட்டது” என்றான். “ஒருவேளை நாளை இளையவன் களத்திற்கு எழாமலிருந்தால்...” என்று யுதிஷ்டிரர் சொல்ல தன் தொடையில் ஓங்கி அறைந்து வெடிப்போசை எழுப்பிய பீமன் “எழுவான்! அவன் எழுந்தாக வேண்டும்! அவன் எழுவான்!” என்றான். யுதிஷ்டிரர் நம்பிக்கை இழந்தவர்போல தோளை அசைத்து இன்னொரு பக்கம் திரும்பிக்கொண்டார்.

திருஷ்டத்யும்னன் “இளைய யாதவர் வந்து நோக்கினால் நன்று. அவர் குரலை இளையவரின் உச்சித்தாமரை அறியும்”

என்றான். பீமன் “அவர் இங்கிருப்பார் என்று நான் எண்ணினேன்” என்றான். சீற்றத்துடன் திரும்பிய யுதிஷ்டிரர் “ஏன் அவன் என்ன மருத்துவனா? இங்கிருந்து அவன் என்ன செய்யப்போகிறான்? அவன் தன் பணியை ஆற்றட்டும். இங்கு நாமே போதும்” என்றார். “இளையவரை எழ வைக்க அவரால் இயலும். அவர் அழைத்தால் போதும்” என்று சாத்யகி சொன்னான். பீமன் “அவர் ஆணையிட்டால் அவன் எழுந்துவிடக்கூடும்” என்றான். “பொருளற்ற பேச்சு! நம்மனைவருக்கும் தெரியும் என்ன நிலையிலிருக்கிறான் இளையோன் என்று” என்றார் யுதிஷ்டிரர்.

தேர் வந்துநிற்க அதிலிருந்து சிகண்டி இறங்கி அருகே வந்தார். “எங்கிருந்து வருகிறீர்கள்?” என்று யுதிஷ்டிரர் கேட்டார். சிகண்டி தலைவணங்கி “நான் தெற்குக் காட்டிற்கு சென்றுகொண்டிருக்கிறேன். இன்றைய போரில் நம் படையினர் பெரும்பகுதியினர் அழிந்துவிட்டனர். பிணங்களை சிதைக்கும், மண்ணுக்கும் அனுப்பி முடிக்கும்போது பொழுது விடிந்திருக்கும்” என்றார். யுதிஷ்டிரர் வெறுமனே பேசுவதற்காகவே அவ்வினாவை கேட்டார். அந்த மறுமொழியால் சலிப்புற்று “அதையே மீளமீளச் சொல்லவேண்டியதில்லை” என்றார். “நான் வந்தது படைவீரர்களை விண்ணனுப்பும் சடங்குக்கு வழக்கம்போல் அரசர் இன்று வருவாரா என்று கேட்கத்தான்” என்றார் சிகண்டி. “இன்று நான் வரப்போவதில்லை. என்னால் இயலாது” என்றார் யுதிஷ்டிரர். சிகண்டி “அச்சடங்கை இங்கேயே நிகழ்த்தலாம்” என்றார். “என்னால் இயலாது. இப்போது என்னால் எதுவும் இயலாது” என யுதிஷ்டிரர் கூவினார்.

சிகண்டியின் விழிகளில் சினம் எழுந்து மறைந்தது. “அரசே, நீத்தோரை அரசச்சுடர் கொண்டு விண்ணுக்கு அனுப்புகிறோம். அவர்களின் பெற்றோரின் கைகள் என இங்கே இலங்குவது உங்கள் கைகளே” என்றார். யுதிஷ்டிரர் “என் உள்ளமே சிதையாக எரிகிறது. இத்தருணத்தில் நான் அச்சடங்கைச் செய்தால்…” என்றபின் “என் உள்ளம் கொள்ளும் கற்பனைகளை என்னால் தாளவியலாது, பாஞ்சாலரே” என்றார். சிகண்டி தணிந்து மென்குரலில் “எனில் நீங்கள் ஒரு சுளுந்தில் அனல் தொட்டு அளியுங்கள். அதையே அவர்களின் சிதைநெருப்பாக வைத்து விண்ணேற்றுவேன்” என்று சொல்லி சிறிய சுளுந்தொன்றை எடுத்து யுதிஷ்டிரரிடம் நீட்டினார். யுதிஷ்டிரர் அருகிலிருந்த பந்தத்தில் கொளுத்தி அதை அளிக்க தலைவணங்கி பெற்றுக்கொண்டு படியில் இறங்கினார்.

“இளைய யாதவரை வரும் வழியில் பார்த்தீர்களா?” என்று திருஷ்டத்யும்னன் கேட்டான். சிகண்டி திரும்பி நோக்கி “அவர் நகுல சகதேவரை பார்த்துவிட்டு தன் குடிலுக்கு திரும்புகிறார்” என்றார். “தன் குடிலுக்கா?” என்று யுதிஷ்டிரர் கேட்டார். சிகண்டி “ஆம், அங்கு உடற்பொடி நீக்கி ஓய்வெடுக்கப் போகிறார். ஏவலர் செல்வதைக் கண்டேன்” என்றார். யுதிஷ்டிரர் பீமனை பார்த்த பின் வெறுமனே தலையசைத்தார். சிகண்டி சுடருடன் இருண்ட முற்றத்தில் இறங்கியபோது யுதிஷ்டிரர் பெருமூச்சுவிட்டார். சுடர் ஒழுகிச்செல்வதை நோக்கி நின்ற திருஷ்டத்யும்னன் பெருமூச்சுவிட்டான்.

சாத்யகி “நான் வருகிறேன்” என்று யுதிஷ்டிரரை வணங்கினான். “இங்கே நிகழ்வனவற்றை அங்கு சென்று சொல்லவேண்டியதில்லை. அவரை அழைக்கவேண்டியதுமில்லை” என்று பீமன் சொன்னான். “அவர்

அறியாதது ஏதுமில்லை. அவர் தன் வழியில் செல்லட்டும்.” சாத்யகி “ஆம், அதையே நானும் எண்ணினேன்” என்றான். யுதிஷ்டிரர் “அவன் இங்கு வந்தாகவேண்டும். இளையோனை அவனால் மீட்கமுடியும்” என்றார். “மூத்தவரே, நாம் முன்னரே முற்றடிபணிந்துவிட்டோம். இனி அவரிடம் நாம் எதை கோரினாலும் பிழையே” என்றான் பீமன்.

# கார்கடல் - 24

துச்சாதனன் வெளியே படையானை ஒன்றின் பிளிறலைக் கேட்டதுமே துரியோதனனின் வருகையை உணர்ந்தான். அதன் பின்னரே அரச வருகையை அறிவிக்கும் கொம்பொலி எழுந்தது. அவையிலிருந்தவர்கள் தங்கள் ஆடைகளையும் அணிகளையும் சீரமைத்துக்கொண்டனர். பீடத்தில் சற்றே உடல் சாய்த்து விழிசரிய துயில் கொண்டவன்போல் அமர்ந்திருந்த கர்ணனிடம் மட்டும் எந்த அசைவும் ஏற்படவில்லை. துச்சாதனன் அறைவாயிலுக்குச் சென்று நின்றான். அப்பால் தேரிலிருந்து இறங்கிய துரியோதனன் அவை நோக்கி வந்த நடையிலேயே அவன் உளம் உவகையில் துள்ளிக்கொண்டிருப்பது தெரிந்தது. ஆனால் துச்சாதனனை அது மகிழவைக்கவில்லை.

தன்னைத் தொடர்ந்து வந்த துர்மதனிடமும் துச்சகனிடமும் விரைந்த சொற்களாலும் சுழலும் கையசைவாலும் பேசிக்கொண்டே வந்தவன் துச்சாதனனை நெருங்கியதும் அவன் தோளில் ஓங்கி ஓர் அறைவிட்டு “அனைவரும் வந்துவிட்டார்களா?” என்றான். துச்சாதனன் “ஆம் அரசே, தங்களுக்காக காத்திருக்கிறார்கள்” என்றான். கைகளைக்

கூப்பியபடி துரியோதனன் அவைக்குள் நுழைந்தபோது அங்கிருந்தோர் எழுந்து வாழ்த்துரைத்தனர். வணங்கியபடி சென்று தன் பீடத்தில் அமர்ந்தான். அவைமுறைமைகள் தொடங்குவதற்குள் திரும்பி துச்சாதனனிடம் அவை தொடங்கலாம் என்று கைகாட்டினான்.

துச்சாதனன் தன்னிடம் அவன் அவ்வாறு சொல்லும் வழக்கமில்லையென்பதனால் திகைத்து பின்னர் அவை நோக்கி கைகூப்பி “அரசர் வாழ்க! வாழ்க அமுதகலக்கொடி! அவை நிகழ்க!” என்றான். தன் குரல் அவனுக்கே அயலாக ஒலித்தது. வழக்கமாக முதற்சொல் எழுவதற்காகக் காத்திருக்கும் அவை அன்று புத்துணர்ச்சியுடன் இருந்தது. அஸ்வத்தாமன் எழுந்து “இந்நாளில் நம் போர்களில் குறிப்பிடும்படியான வெற்றி ஒன்றை அடைந்த மகிழ்வுடன் நாம் கூடியிருக்கிறோம். இளைய பாண்டவர்கள் அர்ஜுனரும் நகுலரும் சகதேவரும் அவர்களின் மைந்தர்களும் பீமனின் மைந்தர்களும் புண்பட்டு மருத்துவநிலைகளில் படுத்திருக்கிறார்கள் என்ற செய்தி இப்போது வந்துள்ளது” என்றான்.

அவையினர் கைகளைத் தூக்கி ஆர்ப்பரித்தனர். துரோணர் மட்டும் தாடியை நீவியபடி தலைகுனிந்து அமர்ந்திருந்தார். அஸ்வத்தாமன் “அர்ஜுனரின் நிலை இன்னும் எதுவும் கூறவொண்ணாதபடியே உள்ளது. மருத்துவர்கள் அவர் விளிக்கு மறுவிளி அளிப்பது வரை காத்திருக்கவேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். அங்கே மருத்துவநிலைக்கு வெளியே யுதிஷ்டிரரும் பிறரும் நின்றுகொண்டிருக்கிறார்கள். எவ்வாறாயினும் நாளை போருக்கு அர்ஜுனர் எழப்போவதில்லை. அவர்கள் தோல்வியின் முதற்சுவையை அறிந்துவிட்டார்கள். நாம் வெற்றியின் சுவையை” என்றான்.

சல்யர் கைகளைத் தூக்கி “வெற்றி தொடங்கிவிட்டது. நாளையே நாம் போர்நிறைவு செய்வோம்” என்றார்.

“நமது படைகள் கொண்டாடிக்கொண்டிருக்கின்றன” என்று அஸ்வத்தாமன் தொடர்ந்தான். “நேற்று மாலை நம்பிக்கையிழந்து சோர்ந்து மீண்டார்கள். இரவெல்லாம் அங்கர் வருவார் என காத்திருந்தனர். அவரை எண்ணி படைமுகம் எழுந்தார்கள். ஒளிமிக்க உருவுடன் அவர் படைமுகப்பில் எழுந்தபோதே உளம்மீண்டனர். இப்போது வெற்றிபெற்றுவிட்டோம் என்றே எண்ணி ஆர்ப்பரிக்கிறார்கள்.” ஜயத்ரதன் “ஆம், நான் இங்கு வரும்போது பார்த்தேன். நமது படைகளில் புத்தூக்கம் நிறைந்துள்ளது. விழியோட்டிய திசையெங்கும் மதுக்கிண்ணங்களுடன் களிகொண்டாடும் படைவீரர்களையே பார்த்தேன்” என்றான்.

அருகில் நின்ற பகதத்தர் “என்னுடைய படைகளை ஒட்டி அசுரர்களின் படைப்பிரிவுகள் உள்ளன. அவர்கள் அங்கே தவ்வையின் கல்வடிவம் ஒன்றை வைத்து வழிபடுவதைக் கண்டேன்” என்றார். அனைவரும் அவரை நோக்கி திரும்ப அஸ்வத்தாமன் “தவ்வையா?” என்றான். சுபாகு “அசுரர்களும் அரக்கர்களும் தவ்வையை தங்கள் அமுதுக்குரிய தெய்வமாக வணங்குகிறார்கள். முன்பு பாற்கடலை தேவரும் அசுரரும் கடைந்தபோது அசுரருக்கு அருளும் இன்னமுதுடன் எழுந்தவள் என்று தவ்வை அவர்களால் கருதப்படுகிறாள். உண்டாட்டுகளிலும் மதுக்களியாட்டுகளிலும் தவ்வையை நிறுவி அவளுக்கு முதற்கலம் அளித்துக் கொண்டாடுவது அவர்களின் வழக்கம்” என்றான்.

துரியோதனன் “ஒவ்வொருவரும் அவரவர்களுக்குரிய வகையில் கொண்டாடட்டும்” என்றான். சுபாகு “நமது

படைகளிலும் தவ்வையின் அமுதை உண்டு களியாடுகிறார்கள். நான் வரும்போது பார்த்தேன்" என்றான். ஜயத்ரதன் நகைத்தபடி கைகளைத் தூக்கி "கௌரவப் படைகளில் தவ்வை எழுக! அவள் அமுது நம்மை ஆற்றல் கொண்டவராக்குக!" என்றான். அவையினர் அனைவரும் கைகளைத் தூக்கி வாழ்த்துரை கூவிச் சிரித்தனர். சற்றுநேரம் அவை நகையாட்டும் சிரிப்புமாக நிறைந்திருந்தது.

துரியோதனன் "கூறுக அஸ்வத்தாமரே, நாளை நம் படைசூழ்கை என்ன?" என்றான். அஸ்வத்தாமன் "இன்று நமது படைசூழ்கையை வெற்றிகரமாக முன்னெடுத்து பாண்டவப் படைகளை சிதறடித்திருக்கிறோம். இன்றைய வெற்றியை நான் கூர்ந்து நோக்கியபோது உணர்ந்தது ஒன்றே. இன்று போரில் முதன்மைப் பெருவீரராகிய அங்கர் வென்று முன் சென்றார். அவரது அம்புகளுக்கு நிகர் நிற்க பாண்டவர் தரப்பில் எவரும் இருக்கவில்லை. ஆனால் எந்நிலையிலும் அவர் நம் சூழ்கையின் ஒரு பகுதியாகவே இருந்தார். பீஷ்மர் களம் நின்று போரிட்டபோது நம் சூழ்கையை அவருக்கிணையாக கொண்டு செல்வதற்காகவே நமது ஆற்றலின் பெரும்பகுதியை செலவழித்தோம். இன்று தெய்வத்தின் பீடமென அமைந்திருந்தது நமது சூழ்கை. இனியும் அவ்வண்ணமே அமைக!" என்றான்.

துச்சாதனன் துரோணரை பார்த்தான். துரோணர் தன் தாடியை கைகளால் நீவியபடி தலைகுனிந்து அமர்ந்திருந்தார். அவன் விழியசைவினூடாக துரோணரை நோக்கிய துரியோதனன் "ஆசிரியரே, இன்றைய போரில் தாங்கள் ஆற்றிய பெரும்பணியால் நாம் வெற்றிமுகம் நோக்கி செல்கிறோம். அதன்பொருட்டு நான் தங்கள் அடிபணிய கடமைப்பட்டுள்ளேன்"

என்றான். கைநீட்டி அவன் பேச்சைத் தடுத்து தலைதூக்கி, வெறுப்பால் உள்மடிந்து இறுகிய வாயும் நீர்மை படிந்த கண்களுமாக துரோணர் சொன்னார் "வீண்சொற்கள் வேண்டியதில்லை. நமது படைகள் வென்றன. நான் தோற்றேன்." துரியோதனன் ஏதோ சொல்ல வாயெடுக்க அவர் கைவீசி அவனை நிறுத்தி மேலும் கசப்புடன் சொன்னார்.

"எனக்கு இப்படை அளித்திருந்தது ஒரே பணி. அதை நான் தவறவிட்டேன். யுதிஷ்டிரனை சிறையெடுத்து வந்திருந்தால் இன்று நாம் போர் வெற்றியை கொண்டாடிக்கொண்டிருப்போம். நாளை அஸ்தினபுரியின் மும்முடி உங்கள் தலையில் அமைந்திருக்கும். பல்லாயிரம் படைவீரர்கள் இறப்பொழிந்து தங்கள் குடிகளுக்கு மீண்டிருப்பார்கள். என்னால் இயலவில்லை." அவர் குரல் தழைந்தது. அவையினர் உளநிலை மாறி அவரை நோக்கி அமர்ந்திருக்க விம்மல் கலந்த குரலில் துரோணர் சொன்னார் "நான் தோற்று நின்றிருக்கிறேன். என் விற்தொழில் தவம் பொருளிழந்ததாகிறது." தன்னைச் சூழ்ந்திருந்த அமைதியைக் கண்டு அவர் விழிதூக்கினார். ஷத்ரியர்களின் விழிகளை சந்தித்ததும் சீற்றம்கொண்டார்.

"என் திட்டங்களை நொறுக்கியவன் அவன். அந்த இளைய யாதவன். பிற எவருக்கும் தோன்றாத ஒரு வழி எப்போதும் அவனுக்குத் தோன்றுகிறது. பிறர் துணியாதபோதும் அவன் எழுகிறான். பிற எவருக்கும் தோன்றாதது என்பதனாலேயே அங்கு எதிர்ப்புகள் எதுவும் இருப்பதில்லை. அவ்வாறு நமது படைகளை குறுக்காக வெட்டி அவன் என்னை நோக்கி குறுக்காக வரக்கூடுமென்று ஏன் எண்ணாமல் போனேன் என்று நூறுமுறை என் தலையில் அறைந்துகொண்டேன். இந்தத்

தன்னிழிவிலிருந்து இனி ஒருபோதும் என்னால் மீள முடியாது.”

அஸ்வத்தாமன் ஏதோ சொல்ல முயல “நில்!” என்று அவனை நிறுத்தி துரோணர் சொன்னார் “நிகழ்ந்தது ஒன்றே. அவன் நான் ஆடிய ஆட்டத்தையே திருப்பி என்னிடம் ஆடினான். அவர்கள் படைமுகப்பில் அனைத்து ஆற்றலையும் குவித்ததனால் படைகளுக்குப் பின் பக்கம் எவருமிருக்கவில்லை. ஆகவே நான் வளைந்து சென்று படைகளுக்குப் பின்புறத்தைத் தாக்கி யுதிஷ்டிரனை சிறைபிடித்தேன். யுதிஷ்டிரனை நமது படைப்பிரிவுக்குள் கொண்டு வந்ததுமே வென்றுவிட்டோம் என்ற உணர்வு நமக்கு ஏற்பட்டது. ஆகவே நாம் அவனை காத்துக்கொள்ள எதுவும் செய்யவில்லை. யுதிஷ்டிரனை அவர்கள் வந்து மீட்பது அதற்குப் பின் இயல்வதல்ல என்று நாமே எண்ணிக்கொண்டோம். அவ்வெண்ணத்தால் ஆற்றலிழந்த நம் படைகளை ஊடுருவி வந்து அவன் கைபற்றிச் சென்றான்.”

“ஆசிரியரே, உங்கள் வீரம் உலகறிந்தது” என அவரிடம் ஆறுதல் சொல்ல முற்பட்டான் துரியோதனன். அவனைத் தடுத்த துரோணர் “வீரமின்மையால் நான் தோற்கவில்லை என நானும் அறிவேன். நான் தோற்றது நெறியால். அர்ஜுனன் தன் தமையனை நாடி வந்துவிட்டதை அறிந்தபோது என்னருகே தேரில் வெறும் கையுடன் யுதிஷ்டிரன் நின்றிருந்தான். அக்கணமே திரும்பி அவன் தலையை கொய்தெறிந்திருந்தால் அப்போதே இந்தப் போர் முடிந்திருக்கும்” என்றார். அவை சொல்லணைந்து நோக்கி அமர்ந்திருக்க சல்யர் “என்ன சொல்கிறீர்கள்?” என முனகினார்.

“நான் அதை செய்யவில்லை. செய்ய என்னால் இயலவில்லை. ஏன்? அவன் செய்திருப்பான் அல்லவா? சொல்க, பீமன் அதை செய்திருப்பான் அல்லவா? ஏன் நான் செய்யவில்லை? ஏனென்றால் எனக்கு நானே முதன்மையானவன். என் நெறிகள். என் மரபு. என் புகழ். அதற்குமேல் நின்றிருக்கும் ஒன்றும் என்முன் இல்லை. அவன் முன் அவனுக்கு இளைய யாதவன் கற்பித்த பேரறம் ஒன்று இருந்தது. அவனுக்கு அவன் உயிரைப்போலவே புகழும் ஒரு பொருட்டல்ல. என்னுடைய தயக்கத்தை அறமென்று நான் சொல்லிக்கொள்ளலாம். அது வெறும் ஆணவம் மட்டுமே.”

துரோணரின் குரல் ஓங்கியது. “அவன் எனக்கொரு சொல் உரைத்திருக்கிறான். ஆணவத்தால் நான் அழியப்போகிறேன் என்று. ஆம் ஆம் என்று என் உள்ளிருந்து என் தெய்வங்கள் உரைக்கின்றன” என்றார் துரோணர். அவர் தொண்டை இடற அழுகையில் முகம் இழுபட்டது. அவை துரோணரின் கண்ணீரை பார்த்தபடி அமர்ந்திருந்தது. அடக்க அடக்க விழிநீர் பெருகி வர துரோணர் தன் இரு கைகளாலும் கண்களை அழுத்தி அதை நிறுத்தினார். அதே கைகளால் தாடியை நீவி உடல் உலுக்கிய விம்மல்களை அடக்கினார். பின்னர் நிமிர்ந்து “ஆனால் நான் என் ஆணவத்தை ஒழியப்போவதில்லை. ஆணவம் ஒழிந்தபின் எவன் போர்புரிய முடியும்? இக்களத்திற்கு நான் வந்ததே என் ஆணவத்தால்தான்” என்றார்.

“நேற்று உரைத்தேன் என் விழைவால் கீழிறங்கினேன் என்று. இன்று உணர்கிறேன் அவ்விழைவால்தான் நான் போர்வீரன் என. அவ்விழைவு இல்லையேல் களத்திற்கே வந்திருக்க மாட்டேன். என் விழைவையும் ஆணவத்தையும் மேலும் பெருக்கவே எண்ணுகிறேன். என்னை கட்டுப்படுத்தும்

எதுவேனும் இருந்தால் அதை நாளை களையவிருக்கிறேன். அது தெய்வங்களும் மூதாதையரும் ஆசிரியரும் எனக்களித்த நற்கொடைகளாக இருப்பினும் சரி, நாளை கட்டற்றவனாக களம் நிற்பேன். இனி வெற்றியொன்றே எனக்குரியது. இல்லையேல் வாழ்வதில் பொருளில்லையென்றே ஆகும்" என்றார் துரோணர். எழுந்து தன் கையை தூக்கி "அரசருக்கு நான் ஒன்று சொல்கிறேன், இன்று விட்டதை நாளை செய்வேன். நாளை யுதிஷ்டிரனைச் சிறைப்பிடிப்பேன். அதன்பொருட்டு மட்டுமே போர்புரிவேன்" என வஞ்சினம் உரைத்தார்.

துரோணரின் உணர்வுகளைப் பார்த்தபடி அவை பேசாமல் அமர்ந்திருந்தது. அவரை உறுத்துநோக்கியபடி இருப்பதை உணர்ந்து ஒவ்வொருவராக விழிதாழ்த்தி உடலசைத்து தலை திருப்பி நிலை மீண்டனர். துரியோதனன் இரு கைகளாலும் பீடத்தின் கைப்பிடிகளை தட்டியபடி "நாம் நமது சூழ்கைகளைப் பற்றி பேசுவோம்" என்றான். ஜயத்ரதன் "அங்கரை எதிர்கொள்ள அர்ஜுனனாலும் அபிமன்யுவாலும் பிறராலும் இயலவில்லை என்பது தெளிவாகியுள்ளது. நம் படைகளை அதை ஒட்டியே நாம் அமைப்போம். நாளை அர்ஜுனன் களத்திற்கு வரவில்லையெனில் அவர்களில் எவர் எழுந்தாலும் எவ்வகையில் படைசூழ்கை அமைத்திருந்தாலும் நாம் வெல்வோம்" என்றான்.

"அர்ஜுனன் களம்வருவது அரிதினும் அரிது என்றே செய்திகள் சொல்கின்றன" என்று சுபாகு சொன்னான். அஸ்வத்தாமன் "ஆயினும் அவர் அர்ஜுனர். காண்டீபம் ஏந்திய பாரதர். நாம் அவரை எவ்வகையிலும் குறைத்துக்கொள்ளவேண்டியதில்லை" என்றான். "ஆகவே நமது படைசூழ்கையை இரு வாய்ப்புகள்

கொண்டதாக அமைப்போம். அர்ஜுனர் வருவார் எனில் என்ன செய்வோம், வராதொழிந்தால் எவ்வண்ணம் கடந்து சென்று அமைப்போம் என திட்டமிடுவோம்.” ஜயத்ரதன் “ஆம், அதுவே உகந்தது” என்றான். துரியோதனன் “அவன் மீளவும்கூடும்… அதையும் கருத்தில் கொள்வோம்” என்றான்.

அஸ்வத்தாமன் “அரசே, நாம் நாளை வென்றாகவேண்டும். இன்று அவர்களின் படையின் அடித்தளங்களை நொறுக்கியிருக்கிறோம். நொறுங்கிய அடித்தளங்கள் அவ்வகையிலேயே அமைவு கொண்டு உறுதி அடையவும் வாய்ப்புண்டு என்கிறார்கள். அது நிகழலாகாது. அர்ஜுனன் இல்லாதபோது படைநடத்தும் தன்னம்பிக்கையும் திறனும் சாத்யகிக்கோ திருஷ்டத்யும்னருக்கோ வந்துவிடலாகாது. ஆகவே, நாளை அப்படையை ஒட்டுமொத்தமாக சரித்து இடும் பெரும்படைசூழ்கையை நாம் அமைக்கவேண்டும். என் உள்ளத்தில் ஓர் எண்ணம் உள்ளது” என்றபடி அவன் தன் தோற்சுருளை எடுத்தான்.

அவையின் பின்நிரையிலிருந்து திரிகர்த்தனாகிய சுசர்மன் எழுந்து முகப்புக்கு வந்தான். கைகளைத் தூக்கியபடி அவை நோக்கி திரும்பி “எங்களுக்கு பாண்டவர்களுடன் ஒரு கணக்கு இருக்கிறது. அதை ஆசிரியரும் அவையோரும் அறிவீர்கள். இந்தக் களத்திற்கு சம்சப்தர்களாகிய நாங்கள் வந்ததே அக்கணக்கை தீர்க்கத்தான். நாங்களும் வஞ்சினம் உரைக்கிறோம், திரிகர்த்தர்களாகிய நாங்கள் நாளைய போரில் அர்ஜுனனை கொல்வோம். நாளை அந்த ஒற்றை இலக்குடன் நாங்கள் களம்நிற்கவிருக்கிறோம்” என்றான்.

அவன் தம்பியரான சத்யரதன், சத்யவர்மன், சத்யவிரதன், சத்யேஷு, சத்யகர்மன் ஆகிய ஐவரும் எழுந்து அவை

முகப்புக்கு வந்தனர். சத்யரதன் “ஆம், அது எங்கள் வஞ்சினம். நாங்கள் இன்று அந்த உறுதியை பூண்ட பின்னரே இந்த அவைக்கு வந்தோம்” என்றான். சுசர்மன் “அவையோர் அறிக! எங்களுக்கும் பாண்டவர்களுக்குமான போர் தொடங்கி நெடுநாட்களாகின்றன. இளைய மைந்தனாகிய அர்ஜுனன் எங்கள் நாட்டினூடாக தன் வடபுலப் பயணத்தை நிகழ்த்தியபோது என் தந்தை சென்று வணங்கி கப்பம்கட்டி தன் பணிவை அறிவித்தார். மலைநில மக்களாகிய எங்களால் அஸ்தினபுரியின் பெரும்படையை எதிர்கொள்ள இயலாதென்று அவர் அறிந்திருந்தார்” என்றான்.

“நாங்கள் அஸ்தினபுரிக்கு கப்பம்கட்டும் நாடாகவே இருந்தோம். அஸ்தினபுரிக்கும் இந்திரப்பிரஸ்தத்திற்குமான பூசலில் எங்களுக்கு பங்கில்லை. ஆனால் இந்திரப்பிரஸ்தம் அமைந்ததும் நகுலன் படைகொண்டு வந்து எங்கள் நிலத்தை வென்று கப்பம் பெற்று சென்றான். அஸ்தினபுரியின் படைத்துணை இல்லாமல் நகுலன் ஆற்றலின்றி இருப்பான் என எண்ணிய என் மூத்தவராகிய சுரதர் படைகொண்டுசென்று நகுலனின் படைகளை எதிர்த்தார். ஆனால் அவர்கள் யாதவப் பெரும்படையுடன் வந்திருந்தனர். களத்திலேயே நகுலன் அவரை கொன்று வீழ்த்தினான்.”

“வஞ்சம் நோக்கியிருந்த நாங்கள் விராடபுரியில் பாண்டவர்கள் மறைந்திருந்ததை உணர்ந்து படைகொண்டுசென்றோம். அர்ஜுனன் எங்களை துரத்திவரவேண்டும் என்பதற்காக விராடரின் ஆநிரைகளை கவர்ந்து சென்றோம். அவனை எளிதில் வெல்லலாம் என எண்ணினோம். ஆனால் அவனை நாங்கள் குறைத்து எண்ணிவிட்டோம். விராடபுரியின் படைகளைத் திரட்டி துரத்திவந்த அர்ஜுனன் எங்கள்

நாட்டுக்குள் புகுந்து எரியூட்டினான். எங்கள் குடிகளை அழித்தான். எங்கள் நாட்டை சாம்பலும் இடிபாடுகளும் கண்ணீரும் நிறைந்ததாக ஆக்கிவிட்டு திரும்பிச்சென்றான்.”

“விராடப் படைகள் என்னை சிறைபிடித்துச் சென்றன. அகுரம் என்னும் மூங்கில்கோட்டையில் என்னை சிறையிட்டன. பன்னிரு நாட்கள் அங்கே நான் சிறையிலிருந்தேன். என் குடியினர் வந்து பொன்னும் பொருளும் வைத்து அடிபணிந்து, ஏழுமுறை வணங்கி, முடிநிலம் வைத்த பின்னரே விடுவிக்கப்பட்டேன்” என சுசர்மன் சொன்னான். “அன்று ஒன்று உணர்ந்தோம். எங்களால் அர்ஜுனனையோ நகுலனையோ பழிவாங்க முடியாது. அவர்களுக்கு நிகரான எதிரி உருவாகும்போது எதிர்ப்புறம் சேர்வதொன்றே வழி. அதற்காக காத்திருந்தோம். அவையோரே, அரசே, நாங்கள் குருக்ஷேத்ரம் வந்தது அதற்காகவே.”

“இப்போரில் மீளமீள பாண்டவர்களை நாங்கள் தாக்கினோம். ஒருபோதும் அவர்களை வெல்ல எங்களால் இயலவில்லை. இன்றும் நாங்கள் களத்தில் சிதறடிக்கப்பட்டோம். புண்பட்டு சோர்ந்து குடிலுக்குத் திரும்பினோம். சற்றுமுன்பு நாங்கள் அதையெண்ணி துயர்கொண்டிருந்தோம். என் இளையோர் கூறினர், அவர்களை வெல்ல இயலாதென்றால் அவர்கள் கையால் இறப்போம். அந்தப் புகழேனும் எஞ்சட்டும் நமக்கு என்று. நான் துயருற வேண்டாம், நம் தெய்வங்கள் நம்மை கைவிடுவதில்லை என்றேன். நாங்கள் கள்ளருந்தி துயில்கொண்டிருந்தபோது ஒரு பெண் குடிலுக்குள் வந்து எங்களை எழுப்பி கையிலிருந்த மொந்தையை நீட்டினாள்.”

துச்சாதனன் மெய்ப்பு கொண்டு ஓர் அடி முன்னெடுத்து வைத்தான். “அவள் கரியவள். நீள்மூக்கும் எருமைவிழிகளும் கொண்டவள். அவள் எங்கள் குடித்தெய்வமான தமக்கை. நான் கனவிலோ நனவிலோ என அவளை கண்டேன். என் தம்பியரை எழுப்பினேன். மெய்யாகவே என் அறைக்குள் ஒரு குடுவையில் கடுங்கள் இருந்தது. அதை மாந்தினோம். அங்கிருந்து எழுந்து இங்கே வந்தோம்” என்று சுசர்மன் சொன்னான். “அவையினரிடம் நாங்கள் கோருவதொன்றே. இன்றுவரை உங்கள் படைசூழ்கையில் எங்களை அமைத்தீர்கள். இன்று எங்களுக்கு ஒரு தனி வாய்ப்பு கொடுங்கள். கொல்கிறோம், அன்றி சாகிறோம். இனிமேலும் பொறுத்திருக்க எங்களால் ஆகாது.”

“இன்று இங்கே வருவதற்கு முன்னர் போர்வீரர்களுக்குரிய அந்தத் தொன்மையான வஞ்சினத்தை நாங்கள் எடுத்தோம். கரிய ஆடை அணிந்து படைக்கலங்களில் குருதி தோய்த்து எங்கள் குடிதெய்வத்தின் முன்வைத்து வணங்கினோம். நாளை அர்ஜுனனை கொல்வோம். இல்லையேல் அங்கேயே களத்தில் உயிர்விடுவோம். அவனைக் கொல்லாது எந்நிலையிலும் படைமுகத்தில் இருந்து மீளமாட்டோம். அறிக தெய்வங்கள்! அறிக மூதாதையர்! அறிக அவை!” என்றான் சுசர்மன். திகைப்படைந்த அவை அவர்களை நோக்கி அமர்ந்திருக்க வாளை உருவி மும்முறை அசைத்தபின் அவர்கள் தங்கள் இருப்பிடம் திரும்பினர்.

வெடித்தெழுந்ததுபோல் அவை ஓசையிட்டது. கையமர்த்தி அவர்களை நிறுத்திய பின் துரியோதனன் “நமது படைசூழ்கை என்ன என்று சொல்லுங்கள், அஸ்வத்தாமரே” என்றான். அஸ்வத்தாமன் தோல்சுருளை எடுத்து துரியோதனனிடம்

அளித்துவிட்டு அவை நோக்கி திரும்பி “இம்முறை நம் இலக்கென்ன, அவர்களின் காப்புமுறை என்ன என இரண்டையும் நோக்கவேண்டியிருக்கிறது. நாளை அவர்களின் முதன்மைக் கவலை யுதிஷ்டிரரை காப்பதாகவே அமையும். இன்று நாம் அவரை கவர முயன்றதை அவர்களின் படைகள் நன்கு அறிவார்கள். ஆகவே அவர்களால் நாளை யுதிஷ்டிரரை ஒளித்து நிறுத்த முடியாது. அது அவருக்கு இழிவை உருவாக்கும்” என்றான்.

“அவரை அவர்கள் அணிசெய்து நடுக்களத்தில் கொண்டுவந்து நிறுத்தியாகவேண்டும். அவரைக் கண்டு பாண்டவப் படையினர் வஞ்சினக்குரல் எழுப்பியாகவேண்டும். அவர் படைமுகப்பில் இல்லையேல் அவர்கள் உளம்சோர்வார்கள். நாளை அர்ஜுனர் எழுவதும் ஐயத்திற்குரியது என்கையில் இதை தவிர்க்கவே முடியாது” என்றான் அஸ்வத்தாமன். “அதற்குரிய சிறந்த சூழ்கை என்பது அரைநிலவுச்சூழ்கையே. அரைவட்டவடிவிலானது அது. அதன் இரு முனைகளிலும் அவர்களிடமிருக்கும் தேர்ந்த வில்லவர்படையை நிறுத்துவார்கள். விசைகொண்ட தேர்களில் அவர்கள் இருப்பார்கள். பிறைநிலவின் இருமுனைகளும் இரு கூரிய வாள்களைப்போல.”

“பிறையின் மையத்தில் அவர்கள் யுதிஷ்டிரரை நிறுத்தினால் முழுப் படையினரும் அவரை காணமுடியும். அவர் படைமுகப்பில் நிற்பதாகவும் தோன்றும். ஆனால் அவர் உண்மையில் படைகளுக்கு உள்ளேதான் நின்றிருக்கிறார். அவரை நாம் தாக்கமுயன்றால் அரைநிலவின் இருமுனைகளும் வளைந்து முன்னெழுந்து அவரை கவரப்போகும் படைகளை சூழ்ந்துகொள்ளும்” என

அஸ்வத்தாமன் தொடர்ந்தான். “அவரை அவர்கள் நமக்கு ஒரு பொறியாகவும் வைக்கலாம். அவரை காட்டிவிட்டால் நம்மால் கவராமலிருக்க இயலாது. அது நம் படைகளுக்கு முன் நாம் இழிவுகொள்வது. பன்றிக்கு வைக்கப்படும் பொறி அது. கவரச்சென்றால் இருபுறமும் இழுவிசை கொண்டு நின்றிருக்கும் வாள்களால் வெட்டப்படுவோம்.”

“நம் சூழ்கை என்ன?” என்று சல்யர் கேட்டார். “அதை நன்கு ஆராய்ந்தபின் நான் நமக்கு வகுத்துள்ளது கருடச்சூழ்கை” என அஸ்வத்தாமன் சொன்னான். “கருடனின் சிறகுகளும் வலுவான படைக்கலங்களே. கருடன் கூரலகை நீட்டி யுதிஷ்டிரரை கொத்தி எடுக்கட்டும். இருபக்கமும் எழுந்து அணையும் பிறையின் முனைகளை கருடனின் இரு சிறகுகளும் தடுக்கட்டும்.” சுசர்மன் “கருடனின் கழுத்தும் அலகும் நாங்கள்…” என்றான். “ஆம், அலகென ஆசிரியர் அமைக! நீங்கள் அவருக்கு துணைசெல்க!” என்றான் அஸ்வத்தாமன். “அர்ஜுனர் எழுந்தால் அவரை அங்கர் எதிர்கொள்ளட்டும். இல்லையேல் அபிமன்யுவை.”

துரியோதனன் சூழ்கையை நோக்கிவிட்டு “பழுதற்றிருக்கிறது” என்றான். சல்யர் அதை வாங்கி நோக்கிவிட்டு பிற படையினருக்கு அளித்தார். அவையிலிருந்து “ஆம், இதை இறுதி செய்வோம்! கருடச்சூழ்கை அமைக!” என்று குரல்கள் எழுந்தன. அஸ்வத்தாமன் “நாளை நம் ஆசிரியர் உரைத்த வஞ்சினமும் இதனூடாக நிறைவேறும்” என்றான். துரியோதனன் கையசைத்து “அவ்வண்ணமே ஆகட்டும். நாளை நாம் கருடச்சூழ்கை அமைத்து களமெழுவோம்” என்றான். பின்னர் திரும்பி அவைக்கு வெளியே இடைநாழியில் நின்றிருந்த துச்சகனிடம் “ஒற்றுச்செய்திகள் ஏதேனும்

வந்துள்ளனவா?” என்றான். துச்சகன் “மூத்தவரே, சற்று முன் வந்த செய்திகளின்படி இளைய பாண்டவர் இன்னும் உயிர்மீளா நிலையிலேயே படுத்திருக்கிறார். அபிமன்யுவும் சுருதகீர்த்தியும் கட்டுகளுடன் தங்கள் குடில்களுக்குத் திரும்பி அகிஃபீனா உண்டு ஓய்வெடுக்கிறார்கள். நகுலனும் சகதேவனும்கூட நலம் பெற்றுவிட்டார்கள்” என்றான்.

துரியோதனன் “இளைய யாதவர் என்ன செய்கிறார்?” என்றான். “அவர் இன்னும் தன் தோழரை சென்று பார்க்கவில்லை. தன் குடிலுக்குள் ஓய்வெடுக்கும் பொருட்டு சென்றார். அங்கு அவரைக் காத்து அவரது அணுக்கர்கள் இருவர் நின்றிருந்தனர். அவர்கள் மரவுரியால் அவர் உடலை தூய்மை செய்தனர். தன் குடிலுக்குள் நுழைந்து கதவை மூடிக்கொண்டார். வழக்கம்போல் இன்றும் காவிய ஆய்வில் மூழ்கிவிட்டாரென்று தொலைவிலிருந்து நோக்கும் நமது ஒற்றன் செய்தி அனுப்பியிருக்கிறான்” என்றான் துச்சகன்.

“விந்தைதான்!” என்று துரியோதனன் சொன்னான். “தன் தோழனை அவர் ஏன் கைவிட்டார்? ஏன் சென்று அவனை பார்க்கவில்லை? அவர் சென்று நோக்கினாலேயே அவன் நலம் பெறக்கூடும் என்று சொல்லப்படுவதுண்டே?” “நோக்கி பயனில்லை என்று எண்ணியிருக்கலாம். அர்ஜுனன் களமெழவில்லை எனில் எவ்வண்ணம் போரை நிகழ்த்துவோம் என்று சூழ்கை வகுத்துக்கொண்டுமிருக்கலாம்” என்று ஜயத்ரதன் சொன்னான். அவையில் குழப்பமான பேச்சொலிகள் எழுந்தன.

துரியோதனன் “ஒருவேளை...” என்றபின் கைவீசி அதை விலக்கி “அவ்வாறு எளிதாக இது முடியுமென்று எனக்கு தோன்றவில்லை. எப்போதுமே இது இவ்வாறு நம்முடன் விளையாடுகிறது. அண்மையிலெனக் காட்டுகையில் நாம்

நம்பிக்கை கொள்கிறோம். நம் ஆற்றலைக் குவிக்க தயங்குகிறோம். அர்ஜுனன் நாளை படையில் முழுவிசையுடன் எழுவான், வஞ்சம் தீர்க்கும் வெறியுடன் வில்லெடுப்பான் என்று நம்பியே நாம் களச்சூழ்கையை அமைப்போம்” என்றான்.

கர்ணன் எழுந்து “ஆம், அதுவே எனது எண்ணமும்” என்றான். அனைவரும் தலைதூக்கி வானிலெனத் தெரிந்த அவன் முகத்தை பார்த்தார்கள். “நான் ஓய்வெடுக்க விழைகிறேன்” என்றபடி தலைவணங்கி கர்ணன் வெளியே சென்றான். துரியோதனன் துச்சாதனனை நோக்கி கர்ணனுடன் செல்லும்படி விழி காட்டினான். துச்சாதனனும் தலைவணங்கி கர்ணனுக்குப் பின்னால் சென்றான்.

[வெண்முரசு விவாதங்கள்]

# கார்கடல் - 25

துச்சாதனன் கர்ணனுடன் நடந்தபோது மிகவும் உடல்களைத்திருந்தான். அவன் துயின்று இரண்டு இரவுகள் கடந்துவிட்டிருந்தன. அந்த இரு நாட்களும் பல ஆண்டுகளாக நீண்டு, நிகழ்வுகளால் செறிந்து, நினைத்தெடுக்கவே முடியாத அளவுக்கு பெருகியிருந்தன. களைப்பு அவன் கால்களை சேற்றிலென சிக்க வைத்தது. உடலின் அத்தனை தசைகளும் நனைந்த ஆடைகள் என எலும்புகள் மேல் தொங்கிக்கிடந்தன. உள்ளமும் ஒரு நனைந்த மென்பட்டாடை என படிந்திருந்தது. நாக்கு உலர்ந்த மென்தளிர் என வாய்க்குள் ஒட்டியிருந்தது. ஒரு சொல்லை எடுப்பதென்றால்கூட முழுதுடலாலும் உந்தி ஊறச்செய்து நாவுக்குக் கொண்டுவந்தாகவேண்டும். நா

அச்சொல்லை தன்னதென்று ஏற்கவேண்டும். அச்சொல் நாவை பற்றவைக்கவேண்டும்.

கர்ணனும் ஒரு சொல்லும் உரைக்கவில்லை. சீரான காலடிகளுடன் அவன் நடந்துகொண்டிருந்தான். அவனுக்குரிய வழக்கமான நடை அல்ல அது என்பதனால் துச்சாதனன் உடன் செல்ல முடிந்தது. அவர்களைச் சூழ்ந்து கௌரவப் படைகள் கொண்டாட்டமிட்டுக் கொண்டிருந்தன. கேடயங்களிலும் தலைக்கவசங்களிலும் அடித்துத் தாளமிட்டபடி நெருப்பைச் சுற்றி படைவீரர்கள் ஆடிக்கொண்டிருந்தார்கள். நிழல்கள் எழுந்து வானிலாடின. துச்சாதனன் பெருமூச்சுவிட்டான். கர்ணன் நின்று அந்தச் செந்நிற அலைகளை நோக்கினான். பின்னர் விண்ணிலெழுந்திருந்த மீன்களை பார்த்தான். மீண்டும் திரும்பும்போதுதான் அவன் துச்சாதனனை பார்த்தான். “நீ சென்று ஓய்வெடு, இளையோனே” என்றான்.

“இல்லை, தங்களை குடில்வரை கொண்டுசென்று ஆக்குகிறேன்” என்றான் துச்சாதனன். “வா” என்றபடி கர்ணன் நடந்தான். இம்முறை அவன் நடை விசைகொண்டிருந்தது. “மூத்தவரே” என்று துச்சாதனன் மெல்லிய குரலில் அழைத்தான். “சொல்” என்றான் கர்ணன். “இன்று களத்தில் உங்கள் கையிலிருந்தது பாதாளநாகம் என்றனர். மணிகர்ணன் என்னும் பாதாளநாகமே உங்கள் கையில் எழுந்து நடனமிட்டது என்றும் நாகங்களே உங்கள் அம்புகளாகச் சென்று பாண்டவர்களை வென்றது என்றும் சொல்கின்றனர்” என்றான். கர்ணன் புன்னகையுடன் அவன் தோளில் தட்டினான். “நான் உங்கள் போரை பார்க்கவில்லை. ஆனால் அவர்கள் சொல்வதில் மெய்யுள்ளது என்றே எனக்கும் படுகிறது” என்றான் துச்சாதனன்.

“பிறகென்ன?” என்றான் கர்ணன். “அதை நீங்களும் சொல்லவேண்டும். உண்மையிலேயே உங்கள் ஆவமும் வில்லும் நாகங்களா என்ன?” என்றான் துச்சாதனன். “இளையோனே, இந்த மண்ணில் எதுவும் புதிதாக நிகழ இயலாது என்று உணர்க! இங்கு நிகழும் எந்தப் போரும் முன்பு நிகழ்ந்த போரின் நீட்சிகளே. ஏனென்றால் இங்கு நிகழும் அத்தனை வேள்விகளும் முன்பு நிகழ்ந்த வேள்விகளின் எச்சங்கள்தான்” என்று கர்ணன் சொன்னான். “நாகர்கள் இங்கே வெல்லப்பட்டிருக்கிறார்கள். முதலில் அவர்கள் வஞ்சத்தால் வெல்லப்பட்டார்கள். பின்னர் ஒருங்கிணைவால் வெல்லப்பட்டார்கள். இறுதியாக மெய்யறிவால் வெல்லப்பட்டார்கள். வரலாற்றில் எப்போதுமே வெற்றி அம்மூன்று நிலைகளில் அவ்வரிசையில்தான் நிகழ்கிறது.”

“ஆம், நாகர்களின் வஞ்சத்தைப் பற்றி நான் அறிவேன்” என்றான் துச்சாதனன். மேலும் அவன் சொல்லத் துடித்தான். ஆனால் முதற்சொல் எழுந்ததுமே சொல்லவேண்டாம் என்னும் எண்ணத்தை அடைந்தான். அதை உணர்ந்த கர்ணன் “சொல்” என்றான். துச்சாதனன் நிலையழிந்து “எனக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை, மூத்தவரே. நான் எவரிடமும் எதையும் பகிர்ந்து அறியேன்” என்றான். “சொல்” என கர்ணன் மீண்டும் சொன்னான். “நான் இன்று காலை ஒரு கனவு கண்டேன்… சில நாட்களாகவே துயில் நீப்பு. நீங்கள் வருகிறீர்களா என்னும் பதற்றத்தில் நேற்றெல்லாம் அமரக்கூட இல்லை. களைப்பில் விழித்திருக்கையிலேயே எனக்கு கனவுகள் வந்துசெல்கின்றன.”

“ஆம்” என்று கர்ணன் சொன்னான். “இப்போது களத்தில் நின்றிருக்கும் அத்தனைபேரும் அப்படித்தான் இருப்பார்கள்.

இப்போர் நனவிலும் கனவிலுமாகவே நிகழும்…” சிரித்து “செல்லச் செல்ல முழுக் கனவென்றே ஆகும். தெய்வங்களும் பேய்களும் நாகங்களும் விளையாடும் வெளியில் நிகழும்” என்றான். துச்சாதனன் “என் கனவில் இதுவரை நான் காணாத தெய்வமொன்றை கண்டேன். பின்னர் உணர்ந்தேன், அவள் மூத்தவள் என” என்றான். கர்ணன் “தவ்வை அரக்கர்களின் களியாட்டுத்தெய்வம். இன்று அவையில் சுசர்மர் அவளைப்பற்றி சொன்னார்” என்றான். “ஆம், ஆனால் அவளை அவர்கள் நாட்டப்பட்ட கல்லாக மட்டுமே வழிபடுகிறார்கள். முழுதுருவில் நான் கண்டதேயில்லை” என்றான் துச்சாதனன். “அரிதாகவே அவள் முழுதுருவை வரைகிறார்கள்” என்றான் கர்ணன். “அவ்வன்னையின் கையிலிருந்து நானும் அவர்கள் சொன்ன அந்த அமுதை உண்டேன்” என்றான் துச்சாதனன்.

கர்ணன் வெறுமனே நோக்கினான். “அதற்கு என்ன பொருள் என எனக்குத் தெரியவில்லை. எதுவானாலும் ஆகுக மூத்தவரே, தெய்வங்களை நோக்கத் தொடங்குவது ஒருவன் இங்கிருந்து செல்லும் தருவாய் அணுகிவிட்டது என்பதற்கான சான்று என்பார்கள். எனக்கும் அவ்வாறே என தோன்றுகிறது. அதில் எனக்கு மாற்று விழைவும் இல்லை. இப்போரிலிருந்து உயிருடன் மீளமாட்டேன் என்பது நான் எனக்கே சொல்லிக்கொண்ட வஞ்சம். இப்போர் வென்று என் மூத்தவர் மீளும்வரை மட்டுமே உடனிருப்பேன். குருக்ஷேத்ரத்திலிருந்து அவர் கிளம்பும்போது நான் இங்கேயே விழுந்திருப்பேன்.”

“ஏனென்றால் அதுவே முறை” என்று துச்சாதனன் தொடர்ந்தான். “இனிவரும் தலைமுறைகளிலும் அஸ்தினபுரியின் அவை பேசப்படும். அங்கே குலமகள் சிறுமைசெய்யப்பட்டதை சூதர்கள் பாடிப்பெருக்குவார்கள். அதை

கேட்கும் நம் குலக்கொடியினர் அவர்களுக்கு அறம் காப்பென எழுந்து வரும் என உணரவேண்டும். நான் கிளம்பும்போது அசலையிடம் அதைத்தான் சொல்லிவிட்டு வந்தேன்.” கர்ணன் “இது களத்திலெழும் சோர்வு. இத்தகைய உளநிலைகளை வெல்வதும் போரின் பகுதியே” என்றான். “இருக்கலாம். ஆனால் நான் சோர்வடையவில்லை. அன்னையைக் கண்டதை ஒரு நல்லூழ் என்றே நினைக்கிறேன்” என்றான் துச்சாதனன்.

“ஏனென்றால், நான் அன்று அவையில் திரௌபதியை சிறுமைசெய்து மீண்டு என் அறைக்குச் சென்று நீராடும்பொருட்டு ஆடைகளை கழற்றிக்கொண்டிருந்தபோது அவளை கண்டேன்” என்று அவன் தொடர்ந்தான். “நான் களைத்திருந்தேன். என் அறைக்குச் செல்கையில் நடக்கவே இயலவில்லை. என் உள்ளத்தில் வினாக்கள் எழுந்து ஒன்றுடன் ஒன்று முட்டிக்கொண்டு நின்றன. ஏன் நான் அதை செய்தேன்? என் மூத்தவரின் ஆணைக்கு மாறாக நான் எதையும் எண்ணுபவன் அல்ல. என் அன்னையையோ மனைவியையோ அவ்வண்ணம் இழுத்துவந்து அவைச்சிறுமை செய்ய அவர் ஆணையிட்டிருந்தாலும் அதை செய்திருப்பேன் என்பதில் எனக்கு ஐயமே இருக்கவில்லை. ஆனால் அது மட்டும் அல்ல. பிறிதொன்றும் இருந்தது.”

“மூத்தவரே, நான் அச்செயலில் ஆழத்தில் எங்கோ மகிழ்ந்தேன். மிக மிக ஆழத்தில். ஏன் என்று தெரியவில்லை. அந்த மகிழ்ச்சியை எண்ணவும் எனக்கு கூசுகிறது. அமிலம்போல் எரிக்கிறது என்னை. ஆனால் நான் மகிழ்ந்தேன்” என்றான் துச்சாதனன். “கையுறைகளை கழற்றிக்கொண்டிருக்கையில் அதைத்தான் எண்ணிக்கொண்டிருந்தேன். அப்போது அறைக்குள் வண்ணம் அசைந்தது. திரும்பி நோக்கியபோது என்

அறையிலிருந்து ஒருத்தி வெளியே செல்வதை கண்டேன். பேரழகி. முதற்கணமே அவள் மானுடப்பெண் அல்ல என புரிந்தது. யார் என நடுங்கும் குரலில் கேட்டேன். நில் நில் எனக் கூவியபடி பின்னால் சென்றேன். ஆனால் அவள் வெளியே சென்று மறைந்துவிட்டாள். என் குரலைக் கேட்டபடி ஏவலன் மட்டும் அங்கே வந்து நின்றிருந்தான்.”

“நான் செயலிழந்து அமர்ந்தேன். அந்நிகழ்வை எவரிடமும் சொல்லவில்லை. நூறுநூறுமுறை எனக்குள்ளேயே கேட்டுக்கொண்டேன். அந்நிகழ்வின் பொருள் என்ன? அந்த தேவி எவர்? எவரிடமாவது கேட்கவேண்டுமென நினைப்பேன். அஞ்சி தவிர்ப்பேன். பின்னர் அதை திட்டமிட்டே மறந்தேன். இன்று அக்கையைக் கண்டபோது ஒன்றை உணர்ந்தேன், அவள்தான் அன்று என்னைவிட்டுச் சென்றவள். அன்று சென்றபோது அவள் பேரழகியாக இருந்தாள். இன்று கொடுந்தோற்றம் கொண்டிருந்தாள், ஆனால் அவள்தான். ஐயமே இல்லை. அவள் எனக்களித்த அமுதின் பொருள் என்ன? அந்த அமுது குளிர்ந்திருந்தது. முதற்சுவை கடும்கசப்பு. கடுமையால் கசப்பே இனிப்பென்றும் தோன்றுமே அப்படி அதை உணர்ந்தேன். அதன் பொருள் என்ன?”

கர்ணன் “நான் இத்தகைய உளஓட்டங்களை கூர்ந்து நோக்கி ஆராய்வதில்லை” என்று சொன்னான். “ஏனென்றால் புகையை நாழியால் முகக்கும் பணிக்கு நிகர் உள்ளப்பெருக்கை மதிப்பிடுவது என என்னிடம் ஒருமுறை பரசுராமர் சொன்னார். அன்று உதறிய வழக்கம் இது. என் உள்ளம் ஓடிக்கொண்டே இருப்பதை எப்போதேனும் உணர்வேன். துணுக்குற்று விழித்தெழுந்து அக்கணமே என்னை விலக்கிக்கொள்வேன்” என்றான் கர்ணன். பின்னர் நின்று “அங்கே சென்று

அவர்களுடன் கலந்துகொள்வோம்” என்றான். அவன் கைசுட்டிய இடத்தை நோக்கிய துச்சாதனன் “எளிய வேல்படைவீரர்கள்... அனைவருமே முழுக் களிமயக்கில் இருக்கிறார்கள்” என்றான். “அது நன்று. நாமும் களிமயக்கடைவோம். கொதிக்கும் சித்தத்தை மதுவிட்டு நனைக்காமல் இனி குடிலுக்குச் சென்று துயில முடியாது” என்றான் கர்ணன்.

அவர்கள் அனலைச் சூழ்ந்தமர்ந்து குடித்து நகையாடிக்கொண்டிருந்த குழுவை நோக்கி சென்றபோது ஒரு வீரன் களிமயக்கில் சரிந்த விழிகளுடன் “யார்? நெட்டையனா?” என்றான். இன்னொருவன் கர்ணனை உணர்ந்து பாய்ந்தெழுந்து “அரசே!” என்றான். “குடிக்கலாமென வந்தோம்... சற்றுநேரம் களியாடலாமென்று” என்றபடி கர்ணன் அமர்ந்தான். துச்சாதனன் தயங்கி நிற்க “அமர்க!” என்றான் கர்ணன். அவனை கைபற்றி இழுத்து அமரச்செய்தான். துச்சாதனன் நிலையழிந்தவனாக உடல் கோட்டி அமர்ந்தான். “என்னை நினைவிருக்கிறதா, அங்கநாட்டரசே? முன்பு மகதப்போரில் நீங்கள் எங்களுடன் மதுவாடினீர்” என்றான் ஒரு வீரன். “ஆ! நினைவுறுகிறேன். பூதநாதரே, நலம்தானே? இன்னுமா உயிருடன் இருக்கிறீர்?” என்றான் கர்ணன். “இந்தப் போரில் சென்றுவிடுவேன். செல்வதற்கு உகந்த போர்” என்றான் பூதநாதன்.

“செல்லும் போரை கொண்டாடும்பொருட்டு ஒரு மொந்தை!” என்றான் கர்ணன். படைவீரர்கள் வெடித்து நகைத்தார்கள். கர்ணன் தன்னிடம் அளிக்கப்பட்ட மொந்தையை துச்சாதனனிடம் அளித்தான். “குடி... இன்றிரவு நன்றாகத் துயில்வாய்.” துச்சாதனன் அதை தயக்கத்துடன் வாங்கிக்கொண்டான். கர்ணன் மூன்று மொந்தைக் கள்ளை

அருந்தி ஏப்பம்விட்டு மீசையை நீவியபடி “நல்ல கள். குளிர்ந்தது” என்றான். “இது அங்கே அரக்கர்களிடமிருந்து வந்தது. அவர்கள் அக்கையை நிறுவி இதை அருந்துகிறார்கள்” என்றான் பூதநாதன். “அக்கை! அஹஹஹஹா! அக்கை!” என்று ஒருவன் தொடையிலறைந்து வெடித்துச் சிரித்தான். கர்ணன் ஏப்பங்கள் விட்டபடி “இவனுக்கு ஒரு சிக்கல்… இவன் மூத்தவளை பார்த்துவிட்டான்!” என்றான். “அவருமா! ஆஹாஹாஹா!” என அவன் நகைக்க பூதநாதன் “அரசே, இங்கே பலர் அவளை பார்த்திருக்கிறார்கள்” என்றான்.

“அவள் தோன்றுவதன் பொருளென்ன?” என்று கர்ணன் கேட்டான். “அவள் அனைவரையும் அள்ளிக் கொண்டு செல்லப் போகிறாள். வேறென்ன?” என்று ஒருவன் சொன்னான். கர்ணன் இன்னொரு மொந்தைக்கு கைநீட்டி “அது எவருக்கும் தெரிந்ததே. ஆனால் இவன் முன்னர் ஒருமுறை அவளை பார்த்திருக்கிறான். அன்று அவள் இவனிடமிருந்து கிளம்பிச்சென்றுகொண்டிருந்தாள்” என்றான். பூதநாதன் “மெய்யாகவா? அக்கை செல்வதுபோல் கனவு வரக்கூடாது. அத்தனை செல்வங்களும் உடன் செல்லும். செல்பவள் பேரழகியெனத் தெரிவாள்” என்றான். சற்றே மயக்கு ஏறியிருந்த துச்சாதனன் பாய்ந்து கையூன்றி முன்சென்று “ஆம், பேரழகி! அப்படித்தான் இருந்தாள்” என்றான்.

“அவளை மீண்டும் கண்டீர்களா? ஒருமுறை சென்றபின் அவள் காட்சி கொடுப்பதே இல்லையே?” என்றான் பூதநாதன். “வீரரே, நான் அவளை மீண்டும் கண்டேன். என்னை நோக்கி வந்து எனக்கு அமுதளித்துச்சென்றாள்.” பூதநாதன் “நன்று… அவள் உங்களுக்கு அருளியிருக்கிறாள். முன்பு நீங்கள் ஆற்றிய அறமின்மை ஒன்றின்பொருட்டு உங்கள்மேல் முனிந்தவள்.

இன்று உங்களுக்கு மீண்டும் அருளியிருக்கிறாள். நீங்கள் அவளால் மீட்கப்பட்டுவிட்டீர்கள்” என்றான். துச்சாதனன் உரத்த கேவலோசையுடன் அழுதான். கர்ணன் அவன் தோளைத்தட்டி “என்ன இது? அறிவிலி...” என்றான். “இல்லை... இல்லை” என துச்சாதனன் உடல்குலுங்க அழுது முகத்தை நிலம்நோக்கி தாழ்த்தினான்.

கர்ணன் கைகாட்ட மேலும் மது வந்தது. “குடி... குடி இதை. நான் சொல்கிறேன்” என கர்ணன் அதை துச்சாதனனுக்கு நீட்டினான். அவன் இரு கைகளாலும் அதை வாங்கி இளங்குழவிபோல் அருந்தினான். ஏப்பம் விட்டபின் “என் அன்னை! என் குலமகள்!” என்றான். பூதநாதன் “கதைகளின்படி இரணியனின் துணைவி கியாதி, இராவணப்பிரபுவின் அரசி மண்டோதரி என பேரரக்கர் அனைவருக்கும் துணைவியென எழுந்தவள் அக்கையே” என்றான். துச்சாதனன் “என் குலமகள்... என் குலமகள் அசலை” என விசும்பினான். “ஒன்று செய்யலாம். இவருடைய முற்பிறப்பு நிலை என்ன என்று உசாவலாம். இங்கு அதற்கு ஒருவர் இருக்கிறார். சாதர் என்று பெயர். ஊரில் இவர் காளிகை அன்னையின் பூசகராக இருந்தார்.”

“அவரால் எழமுடியுமெனத் தோன்றவில்லை. அரசநாகத்தால் கடியுண்டவர்போல் நஞ்சேறிக் கிடக்கிறார்” என்று ஒருவன் சொன்னான். “அது நன்று... எழுப்புக!!” என்றான் பூதநாதன். இருவர் சாதரை உலுக்கி எழுப்ப அவர் எழுந்தமர்ந்து உரக்க ஏப்பம்விட்டு மீண்டும் கள்ளுக்காக கை நீட்டினார். “சாதரே, எழுக! அங்கநாட்டரசர் கர்ணன் வந்துள்ளார். உங்களிடம் சில வினாக்களை எழுப்புகிறார்” என்றான் பூதநாதன். “அவரை நான் அறிவேன். நாங்கள் இணைந்து வங்கப்போர்க்களத்தில்

மதுவருந்தி...” என்றபின் கர்ணனைப் பார்த்து “வணங்குகிறேன், அரசே” என்றார் சாதர்.

“சாதரே, உங்களை நினைவுறுகிறேன். அன்று நீங்கள் இன்னொருவனிடம் பூசலிட்டீர்கள். அவன் பெயர் சம்பு” என்றான் கர்ணன். “ஆம், நல்லவன். இறந்துவிட்டான்” என்ற சாதர் “என்ன கேட்கவிருக்கிறீர்கள்?” என்றார். “இவன் கேட்கிறான். இவன் யார்? இவனை ஏன் அக்கை தொடர்கிறாள்?” என்று கர்ணன் கேட்டான். “என் குலமகள்... அவளை நான் தொடவே இல்லை” என்று துச்சாதனன் விசும்பி அழுதான். சாதர் “உசாவுகிறேன். என் தெய்வங்களை எழுப்புகிறேன்” என்றபின் கையூன்றி தவழ்ந்து நெருப்பருகே வந்தார். நன்கு அமர்ந்து நெருப்பொளியில் சிவந்து தெரிந்த தரையில் ஒரு களத்தை சுட்டுவிரலால் வரைந்தார். அதில் ஏழு கூழாங்கற்களை வைத்தார். மிக மெல்ல அவற்றை நகர்த்தினார். அச்செய்கையாலேயே மயக்குற்றவர்போல அதை மீண்டும் மீண்டும் செய்துகொண்டிருந்தார்.

பின்னர் “ஆம்” என்றார். “எவர்? எவர்?” என்றார். கர்ணன் துச்சாதனனின் ஒரு மயிரிழையைப் பறித்து அந்தக் களத்தில் வைத்தான். அவர் உடலில் ஒரு சிறிய விதிர்ப்பு கடந்துசென்றது. பின்னர் ஆழ்ந்த மூச்செறிதல்கள் வெளிப்பட்டன. குரல் பிறிதெங்கிருந்தோ என ஒலித்தது. “இவர் விண்ணிலிருந்து ஆளும் கலிதேவனின் கொடியாக அமைந்த காகம். தன் விழைவால் காகன் என்னும் அசுரன் எனப் பிறந்தார். மண்ணில் ஆயிரமாண்டுகாலம் அரசனாக ஆண்ட பின்னர் காகமென்று வடிவுகொண்டு காட்டில் வாழ்ந்தார்.”

“முன்பு விண்பேருருவன் இங்கே ராகவராமனாக அயோத்தியில் பிறந்து மிதிலையின் இளவரசியை மணந்து தந்தையின்

சொல்கேட்டு கானேகி மந்தாகினி என்னும் ஆற்றின் கரையில் அவளுடன் தனித்திருந்தான். இனிய காற்றில் அவன் அவள் மடிமேல் தலைவைத்து துயின்றான். அப்போது காற்றில் ஆடை விலக சீதையின் இடத்தொடை வெளிப்பட்டது. தொடையின் அழகை மேலே மரக்கிளையில் இருந்து இடதுவிழியால் கண்ட காகாசுரன் கீழிறங்கி வந்து அந்த மென்தொடையை தன் கூரிய கரிய அலகால் கொத்தினான்."

"தன் கணவனின் துயில் கலையலாகாது என்று அன்னை அதை பொறுத்துக்கொண்டாள். குருதி வழிந்து கன்னத்தை நனைக்க விழித்தெழுந்த ராமன் என்ன நிகழ்ந்தது என்று அறிந்து சினம்கொண்டான். காகத்தை நோக்கி அவன் சினந்தபோது அது இருள்விரிந்ததுபோல் எழுந்து பேருருக் காட்டியது. ராமன் அருகிருந்த தர்ப்பைப்புல்லை எடுத்து அதை நோக்கி வீசினான். அது பெரும்புயலென பெருகி வருவதைக் கண்டு காகாசுரன் பறந்து தப்பினான். அந்த தர்ப்பபாசம் அவனை ஏழுலகங்களுக்கும் துரத்தியது. எங்கும் நிலைகொள்ளாமல் அவன் பறந்தான். அவன் வழிபட்ட குலதெய்வங்கள் அனைத்தும் அவனை கைவிட்டன. வேறுவழியில்லாமல் அவன் வந்து ராமனின் காலடியில் விழுந்து தன்னை காக்கும்படி கோரினான்."

"அடியார்க்குநல்லானாகிய பெருமான் காகாசுரனின் பிழைபொறுத்து ஏற்றுக்கொண்டான். தன் தேவியின் காலடியில் மும்முறை வணங்கி அருள்பெறும்படி கோரினான். காகாசுரன் வணங்க அன்னை அவன் கழுத்தை தடவினாள். அவள் கையிலிருந்த குருதியின் ஈரம் பட்ட அந்த இடம் மட்டும் மென்வண்ணம் கொண்டது. அன்னையின் அழகை நோக்கிய அவன் ஒருகண் மட்டும் நோக்கிழந்தது. அன்றுமுதல் காகங்கள்

கழுத்து வெளிறி, அரைநோக்கு கொண்டன” என்றார் சாதர். “காகன் மீண்டும் விண்ணேகி கலிதேவனின் துணைவனாக அமர்ந்தான். கலி மண்பிறக்க முடிவெடுத்தபோது தானும் உடன்வந்தான். அஸ்தினபுரியின் அரசன் என கலிதேவன் எழுந்தான். உடன் துச்சாதனன் என்னும் பேரில் காகன் பிறந்தான்.”

“அரசே, முற்பிறப்பில் செய்தவற்றையே மீண்டும் அவன் செய்தான். எப்பிழையும் ஏழுமுறை செய்யப்படும் என்று உணர்க! முதல்முறை அது பொறுத்தருளப்படும். பின்னர் அறிவுறுத்தப்படும். அதன்பின்னர் தண்டிக்கப்படும். ஏழுமுறை இயற்றப்பட்டு அதனூடாக ஏழுவகை அறிதல்களாக அது மாறும். ஏழாம்முறை விண்ணிலுறையும் தூய மெய்யறிவென்று தெளியும். அதனூடாக அப்பிழைசெய்பவன் வீடுபேறடைவான். பிழைகளனைத்தும் தவங்களே. பிழைகளினூடாகவே உயிர்கள் நிறைவடைந்து விண்மீள்கின்றன” என்றார் சாதர்.

துச்சாதனன் “என் குலமகள்! என் அரசி!” என விசும்பிக்கொண்டிருந்தான். கர்ணன் அவன் தோளை மெல்ல தட்டினான். பின்னர் எழுந்துகொண்டு “நான் கிளம்புகிறேன். நாளை போரில் எழுவோம்” என்றான். ஒற்றைக்கையால் துச்சாதனனின் எடைமிக்க பேருருவை சிறுகுழவி என தூக்கினான். அவனை நோக்கிக்கொண்டிருந்த சாதர் “நீங்கள் நாகர்” என்றார். துச்சாதனன் அரைவிழிப்பில் “ஆம், அவர் நாகபாசர். பாதாளனாகிய மணிகர்ணன் அவர் வில்லென்று நின்று நடமிடுகிறது” என்றான். சாதர் “நான் உங்களிடம் ஒன்று சொல்லவேண்டும், அங்கரே” என்றார். அவர் விழிகள் நாகங்களுக்குரிய இமையா மணித்தன்மையை

அடைந்துவிட்டிருந்தன. “சொல்க!” என்றான் கர்ணன். சாதரின் குரல் சீறலென மாறிவிட்டிருந்தது.

நாகர்களிடம் ஒரு கதை உள்ளது. முன்பு இங்குள்ள அத்தனை நாகங்களும் வான்நிறைத்து பறந்துகொண்டிருந்தன. காசியபரின் குருதியில் தட்சனின் மகள்களில் பிறந்த மாநாகங்கள் அனைத்தும் பெருஞ்சிறகுகள் கொண்டிருந்தன. அவை முதலில் வருணனாலும் பின்னர் சூரியனாலும் இறுதியில் இந்திரனாலும் முற்றாக தோற்கடிக்கப்பட்டன. மேலும் மேலும் அவியூட்டி வருணனையும் சூரியனையும் இந்திரனையும் ஆற்றல்மிக்கவர்களாக ஆக்கினர் அந்தணர். நூற்றெட்டுமுறை விண்ணிலும் நூற்றெட்டுமுறை மண்ணிலும் நாகர்கள் வெல்லப்பட்டனர். அஞ்சி அஞ்சி நிலையொழிந்து அவை பின்வாங்கின. ஆகவேதான் மண்நாகங்கள் இன்றும் மழையையும் வெயிலையும் ஒழிகின்றன. இடியோசையை அஞ்சுகின்றன.

மூன்று தேவர்களிடமும் நாகங்கள் இறுதி எல்லை வரை என நின்று போரிட்டன. ஒருமுறை போரின் உச்சகணத்தில் அவை கண்டன வருணனே பிரம்மன் என. சூரியனே சிவன் என்றும் இந்திரனே விண்வடிவன் என்றும் அவை அறிந்தன. உளம்நடுங்கிச் சுருண்டு அவை இருளுக்குள் சென்று பதுங்கின. அங்கே ஆழங்களுக்குள் இருந்து ஆழங்களுக்குள் அவை சென்றன. தங்கள் உடலை நீரென நீட்டி பாதாளங்களுக்குச் சென்று பந்தெனச் சுருட்டி அமைந்தன. அவற்றின் சிறகுகள் உதிர்ந்தழிந்தன.

முன்பு அவை வானளந்த காலத்தில் இடியின் ஓசையில் பேசிக்கொண்டிருந்தன. பாதாள இருளில் ஒன்றுடன் ஒன்று உடலொட்டி ஒற்றைச்சுருளென ஆகிக் கிடந்தபோது

ஒன்றோடொன்று மூச்சொலியில் பேசிக்கொண்டன. அப்பேச்சே அவற்றின் குரலென்று பின்னர் மாறியது. அவற்றின் நீண்டு பறக்கும் உடல் உருமாறி பதுங்கும் வடிவை அடைந்தது. வானில் இருக்கையில் அவற்றின் செவிகள் பருந்துக்குரியவையாக இருந்தன. பாதாளத்தில் அசைவே ஒலியுமென்பதனால் அச்செவிகள் மறைந்து விழிகளையே அவை செவிகளாகக் கொண்டன.

நாம் இனி எந்நிலையிலும் வெல்லவியலாது என்று மாநாகங்கள் ஒன்றோடொன்று சொல்லிக்கொண்டன. நாம் நம்மை ஆக்கிய தெய்வங்களால் கைவிடப்பட்டுள்ளோம். அவிபெற்று வளர்ந்து வருணனும் சூரியனும் இந்திரனும் மூன்று முதற்தெய்வங்களுக்கு நிகரென்று ஆகிவிட்டிருக்கிறார்கள். இனி நாம் மேலெழுவது இயல்வதல்ல. நாம் நம் அன்னையிடம் சென்று கேட்போம். தன் மைந்தர்களுக்கு அவள் சொல்வதென்ன என்று உசாவுவோம் என்றது முதிய நாகமான கார்க்கோடகன்.

மாநாகர்கள் கிளம்பி மேலும் மேலும் ஆழத்திற்குச் சென்று ஆழமும் ஆன வானிலெழுந்தனர். அங்கே மாமலைத்தொடர்களை சிறுசெதில்கள் எனக்கொண்டு விண்மீன் மினுக்குகளால் ஆன கரிய திசைப்பெருக்கென உடல்விரித்துக் கிடந்த அன்னை கத்ருவை அணுகின. இடியோசைகளும் மலர்வெடிக்கும் ஒலியென்றாகும் கடுவெளி அது. ஆனால் அன்னைக்கு மைந்தர்குரல் எண்ணமாக இருக்கையிலேயே சென்றடையும். அவர்களின் மன்றாட்டை அன்னை கேட்டாள்.

அன்னையே, நாங்கள் தோற்கடிக்கப்பட்டிருக்கிறோம். இனி இப்புடவிப் பெருநெசவில் எங்களுக்கு இடமே இல்லையா என்று நாகங்கள் கேட்டன. அன்னை கண்கனிந்து எழுந்தாள்.

மைந்தர்களே, உங்கள் சிறகுகள் உதிர்ந்து பாதாளம் எங்கும் நிறைந்திருப்பதைக் கண்டீர்கள் அல்லவா? அச்சிறகுகளை உண்ணுங்கள். அவை உங்கள் உடலில் நஞ்சு என ஊறிச்சேரும். இனி அதுவே உங்களை ஆற்றல்கொண்டவர்களாக்கும். உலகறிய விரிப்பவை சிறகுகள் ஆகின்றன. கரப்பவை நஞ்சாகின்றன.

ஒளிந்திருக்கும் வஞ்சம், மறைத்துக்கொண்ட சினம், அடக்கிக்கொண்ட விழைவு, ஒலியாகாத சொல், திரளாத எண்ணம், திரிபடைந்த தவம் அனைத்தும் நஞ்சே. மைந்தர்களே, ஒளிக்குரியது சிறகு. நஞ்சு இருளின் விசை. இரவுகளை ஆளுங்கள். ஆழங்களில் நிறையுங்கள். இப்புவியில் இனி கரந்துறையும் அனைத்தையும் உரிமைகொள்ளுங்கள். காத்திருக்கும் அனைத்திலும் சென்று குடியேறுங்கள். அடங்காத அனைத்திலும் ஆற்றலென்றாகுங்கள். நீங்களில்லாமல் புடவியில் எந்நெசவும் முழுமையடையாமலாகுக

அன்னையின் சொற்களுடன் நாகர்கள் திரும்பி வந்தனர். அதன்பின் அவர்கள் தங்கள் பாதாளத்தில் இருந்து ஏழுலகுக்கும் கரவுப்பாதைகளை அமைத்துக்கொண்டார்கள். மண்ணுக்கு எழுந்துவந்து இங்குள்ள மலைக்குடிகளில் தூயவர்களாகிய பெண்களைக் கவர்ந்து அவர்களின் கருக்களில் நாகர்குடிகளென எழுந்தனர். நாகர்கள் காடுகளின் இருளில் கரந்துவாழ்ந்தனர். பெருநகரங்களின் அடியில் அவர்களின் ஊடுபாதைகள் அமைந்தன. அரண்மனைகளின் அடித்தளங்கள் அவர்கள்மேல் அமைந்திருந்தன. கோட்டைகளும் காவல்களும் அவர்களை தடுக்காமலாயின. அவர்களை பெரும்படைகளும் அஞ்சின. இப்பாரதவர்ஷம் நோக்குக்கு ஷத்ரியர்களாலும் உணர்வுக்கு நாகர்களாலும் ஆளப்படுவதாகத் தெரியும் என்றனர் மூத்தோர்.

கர்ணன் அவர் சொற்களை கேட்டுக்கொண்டு நின்றான். பூதநாதன் துயில்கொண்டிருந்தான். தழல் அணைந்து கங்காக மாறிவிட்டிருந்தது. “நான் உடனிருப்பேன்” என்று சாதர் சொன்னார். “நான் என்றும் உடனிருக்கிறேன்.” கர்ணன் மேலும் சிலகணங்கள் அவரை நோக்கியபின் துச்சாதனனைத் தூக்கியபடி நடந்தான். அவன் தோளில் தொங்கியபடி துச்சாதனன் சொன்னான். “அன்னையின் இனிய மது! அன்னை!”

அவர்கள் செல்வதை படைவீரர் நோக்கி அமர்ந்திருந்தனர். சாதர் தன் தலைக்கவசத்தில் விரலோட்டி தாளமிட்டார். “தோழர்களே, தொல்லரக்கர் குடியினரே, அருந்துக நம் அன்னையின் இன்னமுதை. கரியது, குளிர்ந்தது, ஆற்றல் அளிப்பது. அருந்துக இதை! இது நம்மை அழியாதவர்களாக ஆக்கும். எண்ணுக, இடும்பர் குடி எழும்! இங்கு நம் குருதி நிலைகொண்டு வாழும்!” முன்னும் பின்னும் உடலசைத்து சன்னதம் கொண்டு குரலெழுப்பினார் “நான் இடும்பன்! தொல்லிடும்பர் குடியின் குடாரன்! என் சொற்கள் இவ்விருளில் பெருகியெழுக! ஆம், எழுக!”

# கார்கடல் - 26

இரவுக்குரிய ஆடைகளை கர்ணனுக்கு அணிவித்துவிட்டு தலைவணங்கி ஏவலன் மெதுவாக பின்னடி வைத்துச் சென்று குடிலின் கதவை மூடினான். கர்ணன் கைகளை மேலே நீட்டமுடியாதபடி அந்த மரக்குடிலின் அறை உயரம் குறைவானதாக இருந்தது. கொடிகளை இழுத்துக்கட்டி உருவாக்கப்பட்ட நீண்ட மஞ்சத்தில் உடலை அமைத்து அமர்ந்து கைகளை நீட்டி உடலை வளைத்தான். சிலகணங்கள்

அந்த நாளை முழுமையாக நினைவில் மீட்டியபடி அமர்ந்திருந்த பின் பெருமூச்சுடன் படுத்து கால்களை நீட்டி கைகளை மார்புடன் கோத்துக்கொண்டான். மீண்டும் பெருமூச்சுவிட்டு உடலை எளிதாக்கினான்.

துயில்கையில் எப்போதும் இரு கைகளையும் மார்பிலமைத்து நேர்நிலையில் மல்லாந்து படுப்பதே அவன் வழக்கம். இரவில் ஒருமுறைகூட அவன் புரள்வதில்லை. அவன் மூச்சொலி நாகச்சீறல் என சீராக எழுந்துகொண்டிருக்கும். துயிலின் நடுவே பிற ஓசைகள் எதுவும் அவனிடமிருந்து எழுவதில்லை. அவன் துணைவியர் அவன் துயில்கிறானா ஊழ்கத்திலிருக்கிறானா என்ற ஐயத்தை அடைவதுண்டு. அரிதாக இரவில் அவனைத் தொட்டு எழுப்புகையில் அவர்கள் அவன் மிக அப்பாலெங்கிருந்தோ எழுந்து வருவதுபோல் உணர்வார்கள். முதல் சிலகணங்கள் அவன் எவரையும் அடையாளம் காண்பதில்லை. முதல் வினா "எவர்?" என்றே இருக்கும். படம் எடுத்த நாகத்தின் சீறல் என அது ஒலிக்கும்.

மஞ்சத்தறையில் அவனுடன் அரசியர் துயில்வதில்லை. அவர்கள் அவனுடன் இருக்கையில்கூட சற்று விழிமயங்கி விழித்துக்கொண்டால் அவ்வறைக்குள் பிறிதொருவரும் இருக்கும் உணர்வை அடைவார்கள். முதல்நாள் உடன்மஞ்சம் கொண்ட விருஷாலி நள்ளிரவில் எழுந்து அமர்ந்து உடல் நடுங்கி அறைக்குள் விழியோட்டினாள். அவளுடைய அரைக்கனவில் அவ்வறைக்குள் பேருடல் கொண்ட நாகம் ஒன்று சுற்றி வளைத்து தன் உடல்மேலேயே தலை வைத்து இமையா விழிகளுடன் இருப்பதை கண்டாள். அது மெய்யென்றே அவள் உள்ளம் அறிவுறுத்த உளறலுடன்

எழுந்தமர்ந்தாள். மூச்சை இழுத்துவிட்டு தன்னை மெல்லமெல்ல மீட்டுத் தொகுத்துக்கொண்டாள்.

நெஞ்சை நீவியபடி அறைக்குள் மெல்ல நடந்து பார்த்தாள். சாளரத்தைத் திறந்து வெளியே நோக்கினாள். பின்னர் கதவை மெல்லத் திறந்து வெளியே காவல் நின்ற ஏவல்பெண்டிடம் "இங்கு ஏதேனும் அசைவு தெரிந்ததா?" என்றாள். அவள் வெறித்த விழிகளுடன் "இல்லையே, அரசி" என்றாள். கதவை மூடி மீண்டும் மஞ்சத்தில் வந்து அமர்ந்த விருஷாலி பதற்றத்துடன் தன் ஆடையை கசக்கி முடிந்து அவிழ்த்து விரல்கள் நிலையழிந்து கொண்டிருக்க அலைபாயும் விழிகளுடன் அமர்ந்திருந்தாள். நோக்குவன அனைத்தும் நாகமென நெளிந்தன. அனைத்துப் பொருளையும் நெளியச்செய்யும் ஒன்றால் அழியாது நெளியவைக்கப்பட்டவையா நாகங்கள்? நெளிவென எழுந்த தெய்வமொன்றின் புலனறிவடிவங்களா அவை?

மறுநாள் கர்ணனிடம் அவள் அதை சொன்னாள். அப்போது அவள் அச்சம் மறைந்திருந்தது. பகலொளியில் நாகங்கள் அனைத்திலிருந்தும் மறைந்துவிட்டிருந்தன. அப்போது ஒரு நாகம் கண்முன் எழுந்தால்கூட அதை கோலென்றோ கயிறென்றோ மூங்கிற்குழலென்றோதான் எண்ணத்தோன்றும். அவன் புன்னகையுடன் "என் அன்னையும் இதை சொன்னதுண்டு, என் அருகே பிறிதொரு இருப்பை அவர் உணர்வதாக. அதனால்தான்போலும், நினைவறிந்த நாள் முதல் எப்போதும் நான் தனியாகவே துயின்று வருகிறேன்" என்றான். "மெய்யாகவே ஒரு நாகம் உங்களுடன் இருக்கிறதா?" என்று அவள் கேட்டாள்.

கர்ணன் சிலகணங்களுக்குப் பின் "அது உளமயக்கா என்று நான் அறியேன். ஆனால் பலமுறை என்னைத் தொடர்ந்து வரும் பெரிய நாகம் ஒன்றை கண்டிருக்கிறேன். நான் பிறக்கும்போதே அதுவும் உடன் வந்தது என்று அன்னை சொல்வதுண்டு" என்றான். விருஷாலி அச்சத்துடன் விழியோட்டி "உங்கள் அறைக்குள் நான் துயிலமாட்டேன். அதை நேரில் ஒருமுறை பார்த்துவிட்டேன் என்றால் உங்களை அணுகவே என்னால் இயலாது" என்றாள். அதன்பின் ஒவ்வொரு முறையும் அவனுடன் கூடிவிட்டு அவள் மெல்ல கதவைத் திறந்து வெளியே சென்றாள்.

சுப்ரியை மட்டும் சிலநாள் அவனுடன் அறைக்குள் பிறிதொரு மஞ்சத்தில் துயின்றாள். அவளும் ஒருநாள் அந்த மாநாகத்தை பார்த்தாள். அவள் தன் கையிலிருந்த தலையணைகளையும் அருகிருந்த நீர்க்குடுவையையும் எடுத்து அதன் மேல் எறிந்து வீறிட்டதைக் கேட்டு கர்ணன் விழித்தெழுந்து "யார்? என்ன?" என்றான். "நாகம்! மாநாகம்!" என்று அவள் கூவினாள். "எங்கே?" என்று அவன் கேட்டான். எழுந்து சென்று ஐந்து சுடர் எரிந்த விளக்கைத் தூண்டி அறையை ஒளியேற்றி சுழிந்து நோக்கி "எங்கே?" என்றான். "இந்த அறைக்குள்! நான் மெய்யாகவே பார்த்தேன்!" என்று அவள் சொன்னாள்.

அவன் அவள் தலைமயிரை கையால் தடவி "அது விழிமயக்கு. அன்றேல் கனவு. நினைப்பொழிக!" என்றான். "இல்லை. கனவில் அந்த நாகத்தை மிக அருகிலே கண்டேன். திகைத்து விழித்தெழுந்தபோது உங்கள் மஞ்சத்திற்கு அடியில் அது கிடப்பதை பார்த்தேன். மிகத் தெளிவாக. மண்ணில் அதுதான் மிகப்பெரும் நாகமென்று எண்ணுகின்றேன். உங்கள் உடலளவுக்கே தடிமனானது. பன்னிரு சுருள்களாக உங்கள்

மஞ்சத்துக்கு அடியில் அது கிடந்தது. பொன்னிறக் காசுகள் அடுக்கியதுபோன்ற அதன் பெரிய தலை மானுடத் தலையை விடவும் பெரிது. நெடுநேரம் அதை என்னை மறந்து பார்த்துக்கொண்டிருந்தேன். பின்னர்தான் அழைத்தேன்” என்றாள்.

“எனில் அது எங்கே?” என்றான் கர்ணன். “மறைந்துவிட்டது. நான் உங்களை அழைத்தபோதே சுருள்களை இழுத்து அப்பால் சென்றது” என்றாள் சுப்ரியை. கர்ணன் நகைத்து “நோக்கு, அப்பால் சுவர்தான் இருக்கிறது. அத்தனை பெரிய ஒன்று அச்சுவரினூடாக கடந்துசெல்ல இயலாது” என்றான். அவள் எழுந்து “இனி நான் இந்த அறைக்குள் தங்கமாட்டேன். இந்த அறைக்குள் எவரும் தங்க இயலாது” என்றாள். “நன்று, கதைகளிலிருந்து மெய் உருவாகிறது. மெய்யிலிருந்து கதைகள் மீண்டும் பிறக்கின்றன என்பார்கள்” என்றபின் அவன் அவள் தோளைத்தட்டி “செல்க!” என்றான்.

அவள் உடல் நுண்ணிதின் நடுங்கிக்கொண்டிருப்பதை அத்தொடுகையில் அவன் உணர்ந்தான். இடைவளைத்து அவளை தன் உடலுடன் சேர்த்துக்கொண்டு அவள் இரு கன்னங்களிலும் முத்தமிட்டு “அஞ்சாதே!” என்றான். அவள் அவன் நெஞ்சில் தலையை சாய்த்து மெல்ல விம்மினாள். கழுத்தில் மென்தசைகள் அதிர்ந்தன. அவ்வதிர்வின்மேல் அவன் மீண்டும் முத்தமிட்டு “அஞ்சாதே. அவ்வண்ணம் ஒரு நாகமிருந்தால்கூட அது எனக்கும் என் கொடிவழியினருக்கும் காவலாகவே அமையும்” என்றான்.

அவள் சிறு சீற்றத்துடன் தலை நிமிர்ந்து “நீங்கள் கதிரவனின் மைந்தர் என்கிறார்கள். எனில் எங்கிருந்து வந்தது அந்தப் பாதாள நாகம்?” என்றாள். “அதுவும் கதிரவனின் மைந்தனாக இருக்கக்கூடும். கதிரொளி சென்று தொடாத இடமுண்டா

என்ன?” என்று கர்ணன் சொன்னான். அவள் மேலும் சினம்கொண்டு “வேடிக்கை அல்ல இது. அந்த நாகம் ஏன் உங்களுடன் வருகிறது? அவ்வாறெனில் நீங்கள் மெய்யாகவே யார்?” என்றாள். கர்ணன் “அதற்கு எவரேனும் உறுதியான மறுமொழியை சொல்லிவிட முடியுமா என்ன?” என்றான். சிரித்து “நான் எவரென்று ஒவ்வொரு நாளும் அறிந்து முன் சென்று கொண்டிருக்கிறேன். ஒருவேளை இறுதிக்கணத்தில் முற்றறிவேன் போலும். நன்று, நீ சென்று வேறு மஞ்சத்தில் துயிலலாம்” என்றான்.

அவள் கடும்சீற்றத்துடன் அவன் கையை பற்றிக்கொண்டு உலுக்கி “அது பாதாள தெய்வம்! பாதாள தெய்வங்கள் ஒருபோதும் மானுடனை பொருட்படுத்துபவை அல்ல. அவை முடிவிலாது பலிகொள்பவை. சிறுபிழையும் பொறுக்காதவை. ஊரும் ஊர்தியை உண்டபின்னரே தங்கள் இடம் மீள்பவை. இருள்தெய்வங்களை வழிபட்டோர் குடி வாழ்ந்ததில்லை என்பார்கள். அது உங்களைத் தொடர்வது காக்கும் பொருட்டு அல்ல, உரிமை கொள்ளும் பொருட்டே” என்றாள். கர்ணன் “இருக்கலாம். அதற்கு நான் என்ன செய்ய இயலும்? அதிலிருந்து தப்ப இயலுமா என்ன?” என்றான்.

“தப்ப வேண்டும். உங்கள் தந்தையை தாள் பணிக! இவ்விருளின் சுழல்களை நாம் ஓட்டுவோம்” என்றாள். அவன் “ஆம், செய்வோம்” என்றான். அவனுடைய ஆர்வமின்மையால் அவள் மேலும் சீண்டப்பட்டாள். “கலிங்கத்தில் நாங்கள் நகரில் எங்கும் ஒரு அரவுகூட வாழ ஒப்புவதில்லை. ஒரு நெளிவு கண்ணில்பட்டால்கூட நாகவேள்வியால் அதை துரத்துவோம்” என்றாள். கர்ணன் நகைக்க “இங்கு நாம் வேத வேள்விகள் நிகழ்த்துவோம். ஒவ்வொரு நாளும் இங்கு அவிப்புகை

எழட்டும். இந்த இருள்உலக தெய்வங்களை அண்டாது அகற்றும் வல்லமை வேதச்சொல்லுக்கும் புகைக்கும் உண்டு” என்று அவள் சொன்னாள். “ஆம்” என்று கர்ணன் சொல்லி அவளைத் தட்டி “செல்க! ஒய்வெடு” என்றான். “என்ன சொல்கிறீர்கள்?” என்றாள். “வேள்விப்புகை மண்ணுக்குள் செல்லுமா என்ன?” என்றான். “அங்கே அவை வாழட்டும். நாம் வாழும் உலகில் அவை எழவேண்டியதில்லை. ஆழத்திலுள்ளவை ஆழத்திலேயே இருந்தாகவேண்டும்” என்றாள். கர்ணன் அதற்கும் நகைத்தான்.

சுப்ரியை “நான் உறுதியாகவே சொல்கிறேன். இனி அது உங்களைத் தொடராது ஒழிய வேண்டும். நீங்கள் அதை அகற்றியே ஆகவேண்டும். நாம் வேதவேள்விகளை இயற்றுவோம். அங்க நாட்டுக்கு நாம் வந்தபிறகு அறிந்தேன், இங்கு பெருவேள்விகள் எதுவும் நிகழ்ந்ததில்லை என்று. உங்களுக்கு அந்தணருக்கு பொன்னள்ளிக் கொடுக்க கையெழாது என்று சூதர்கள் சொன்னார்கள். உங்கள் உள்ளத்தில் அந்த மறுப்பை உருவாக்கி நிலைநிறுத்துவதே இந்த ஆழத்து நாகம்தான். உளம் ஒருங்குங்கள். இங்கு ஏழு நாடுகளிலிருந்தும் அந்தணர்கள் வரட்டும். வேள்விச்சாலை உருவாகட்டும். ஒருகணம் முறியாது இங்கு வேதப்பேரொலி எழுந்து பன்னிரு ஆண்டுகள் நீடிக்குமென்றால் பாதாள தெய்வங்கள் உங்களை முற்றாகவே கையொழியும். அது உங்களுக்கும் என் குடிக்கும் விடுதலை” என்றாள்.

கர்ணன் அப்பேச்சை ஒழியும்பொருட்டு “நன்று. அதை நான் எண்ணுகிறேன்” என்று அவள் தோளைத் தட்டி மெல்ல அழைத்துச்சென்று கதவைத் திறந்து அங்கு நின்றிருந்த சேடிப்பெண்ணிடம் “தேவிக்கு பிறிதொரு மஞ்சத்தறையை

காட்டுக!" என்றான். அவள் செல்லும்போது சீற்றத்துடன் தலையை அசைத்துக்கொண்டிருந்தாள். அவள் அதை பலநாட்கள் தொடர்ந்து வலியுறுத்திக்கொண்டே இருந்தாள். மைந்தர் பிறந்த பின்னர் அவள் அச்சமும் சீற்றமும் பெருகியது. மைந்தர் பிறப்புக்குரிய வேள்விச்சடங்குகள் எதையும் அவன் செய்யவில்லை. அவள் பலமுறை கூறி மன்றாடி அழுது சீற்றம்கொண்ட பின்னரும் அவன் இளகவில்லை. அவனிடமிருந்து உளம் விலகும்தோறும் அவளுடைய குரலில் சினம் ஓங்கியது.

ஒரு தருணத்தில் சீற்றம் கரைமீற அவன் அவளிடம் "நோக்குக, என் ஊழை நான் வகுக்க இயலாதென்பதே இதுநாள் வரை நான் கற்றுக்கொண்டது! என் வாழ்வின் ஒவ்வொரு தருணமும் முன்னரே வகுக்கப்பட்டுவிட்டிருக்கிறது. ஊழுக்கெதிராக போராடிச் சலித்த பின்னரே இவ்வடிவை எடுத்துள்ளேன்" என்றான். "ஊழை வேதத்தால் வெல்லலாம். முன்னோர் அறிவுறுத்தியது அது" என்று அவள் சொன்னாள். "வெல்பவர் இருக்கலாம். என்னால் இயலுமென்று தோன்றவில்லை" என்றான் கர்ணன். "இங்கு வேள்வி நிகழட்டும், என் ஆணை" என்று அவள் சொன்னாள். "நான் நிகழ்த்துகிறேன். அனைத்தையும் நானே ஒருக்குகிறேன். நீங்கள் மாற்றுச் சொல்லுரைக்காமலிருந்தால் மட்டும் போதும்."

கர்ணன் "அவ்வேள்வியில் செங்கோலேந்தி வேள்விக்காவலனாக அமரவிருப்பவன் யார்?" என்று கேட்டான். அவள் அவன் சொல்வதை உணர்ந்து "அந்தணர் எவரை ஏற்கிறார்களோ அவர்" என்றாள். "அந்தணர் என்னை ஏற்க மாட்டார்கள். என் குருதிமைந்தர்களில் உன் வயிற்றில் பிறந்தவர்களை மட்டுமே ஏற்பார்கள்" என்றான். "அவன் என்னை

தன் தந்தையல்ல என்று அறிவிக்கும் மூன்று சடங்குகளை செய்யவேண்டும். நீரால், அனலால், வேதச்சொல்லால் என்னை விலக்க வேண்டும். விண்ணவர்களில் ஒருவரை தன் தந்தையென ஏற்று அவர் பெயரை தன் பெயருடன் சூட வேண்டும். அவன் கொடிவழியில் எழுபவர்கள் பின்னர் அத்தெய்வத்தின் வழித்தொடர்களாகவே அறியப்படுவார்கள். என் கோலும் முடியும் அக்கணமே என்னிலிருந்து விலகும். பின்னர் அங்கநாட்டுச் சொல்வழியில் வசுஷேணனின் பெயர் இருக்காது."

கசப்புடன் சிரித்து "நன்று! அது அவ்வாறு இருக்கவேண்டும் என்றும் நான் எண்ணவில்லை. ஆனால் சூதனாகிய அதிரதனின் பெயர் இருந்தாகவேண்டும். சொல்க, உனது அந்தணர்கள் எவரேனும் அதிரதனின் பெயரை வேள்வித்தலைவனென அமர்ந்து நான் உரைப்பதை ஏற்பார்களா என்ன? அவ்வண்ணம் ஏற்கும் அந்தணர் எவரேனும் இருந்தால் அழைத்து வரச்சொல், இங்கே வேள்வி நிகழட்டும்" என்றான். அவள் சொல்லமைந்து சற்று நேரம் இருந்தபின் "இவ்வண்ணமே அஸ்தினபுரியின் அடிமை நாடென அமையப்போகிறோமா நாம்? என்றேனும் தனி முடியும் கோலும் கொண்டு எழ மாட்டோமா? அன்று நாம் வேள்வி செய்தாகவேண்டும் அல்லவா?" என்றாள்.

கர்ணன் அவளை கூர்ந்து நோக்கி "ஆகவே?" என்றான். அவள் ஒன்றும் சொல்லவில்லை. "ஆகவே?" என உரத்த குரலில் அவன் மீண்டும் கேட்டான். அவள் சீற்றத்துடன் விழிதூக்கி "நமக்கு வேறு வழியில்லை" என்றாள். "என்னை துறக்கும்படி என் மைந்தருக்கு நாமே ஆணையிடவேண்டும் என்கிறாய் அல்லவா?" என்றான். அவள் சொல்லின்றி இருந்தாள். "எண்ணுக! உன் மைந்தனுக்கு இன்னும் ஐந்தாண்டுகூட

அகவை ஆகவில்லை.” பின்னர் அவன் முகம் வஞ்சப்புன்னகையில் விரிந்தது. “ஐந்து அகவை கொண்ட மைந்தனை அரியணை அமர்த்தி அவனுக்குப் பின்னால் நீ செங்கோலேந்தி அமர்ந்திருக்கலாம் அல்லவா?” என்றான். அவளும் சீற்றத்துடன் உதடு சுழித்து “ஏன், அப்படி எத்தனையோ ஆட்சிகள் இங்கு நிகழ்ந்துள்ளன. அரியணை அமர்ந்து ஆள்வதற்கான குலமும் பயிற்சியும் கொண்டவள்தான் நான்” என்றாள்.

கர்ணன் “நன்று! உன் மைந்தன் தோள்விரிந்தெழட்டும். வில்லேந்தி அவன் நிலம் வெல்லட்டும். அவன் வென்ற நிலத்தை ஆள்வதற்கு முழுதுரிமை உனக்குண்டு” என்றான். அவள் தன் மேலாடையை இழுத்தெடுத்து சுற்றிக்கொண்டு எழுந்து நின்று “அவ்வண்ணம்தான் நிகழவிருக்கிறது. என் மைந்தன் இவ்வரியணை அமர்ந்து ஆள்வான். அனைத்து வேள்விகளையும் செய்வான். அப்போது உங்களை இங்கிருந்து அகற்ற வேண்டிய பணி எனக்கு இருக்காது. அதை நீங்கள் வழிபடும் இந்த நாகபூதமே செய்யும். உங்களை கவ்வி இழுத்து அது அடியிலா இருளாழத்திற்கு கொண்டு செல்லும். அங்கிருந்து நீங்கள் அனைத்தையும் பார்க்கலாம்” என்றபின் வெளியே சென்று திரும்பி நோக்கி “இங்கிருந்து உங்கள் மைந்தர்கள் அனுப்பும் எள்ளும் நீரும்கூட வந்து சேராத அடியாழம் அது. செல்ல விழைவது அங்குதான் எனில் அவ்வாறே ஆகுக” என்று சொன்னபின் அகன்றாள்.

கர்ணன் அவளால் வீசி அறையப்பட்ட கதவு ஓசையுடன் மோதித் திறந்து குடுமி முனகியொலிக்க அசைந்துகொண்டிருப்பதை பார்த்தான். பின்னர் தன் மீசையை கைகளால் நீவியபடி தலைகுனிந்து, விழிசரித்து, தன்னில் ஓடும்

எண்ணங்களை கட்டில்லாது பெருகவிட்டு அமர்ந்திருந்தான். சிவதரும் அவன் அணுக்கர்களும்கூட அந்த நாகத்தை பலமுறை பார்த்திருந்தார்கள். அது அவர்களுக்கு பழகி ஒருகட்டத்தில் இன்னொருவர் என்ற சொல்லால் அதை சொல்லத் தொடங்கிவிட்டிருந்தனர். இன்னொருவர் எழும் நாள்கூட அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. இன்னொருவரை தொடர்பிலாத எவரும் பார்த்துவிடக்கூடாது என்பதில் அவர்கள் உளம் நாட்டினார்கள். பேச்சில் இயல்பாகவே இன்னொருவர் என்று கர்ணனிடம் சொன்னார்கள்.

அஸ்தினபுரிக்கு கர்ணன் கிளம்பிச்சென்றபோது சிவதர் அவனிடம் தனியாக “அரசே, இன்னொருவரும் உடன் வருவார். அங்கு அவையிலும் எவ்வடிவிலோ அவர் இருப்பார்” என்றார். கர்ணன் ஒன்றும் சொல்லவில்லை. மஞ்சத்துப் போர்வைகளை நீவி வைத்தபடி “அங்கு நீங்கள் சொல்லும் ஒவ்வொரு சொல்லையும் அவர் கேட்டுக்கொண்டிருப்பார் என்பதை உணருங்கள். அவருக்கு உகக்காத ஒன்றை நீங்கள் செய்ய இயலாது என்பதையும் தெளிக!” என்றார். “உகக்காத எதை நான் அங்கு சொல்லவிருக்கிறேன்?” என்றான் கர்ணன்.

சிவதர் “நட்பின்பொருட்டு அடிமையாதல். அன்பின் பொருட்டு அனைத்தையும் விட்டுக்கொடுத்தல். கொடை என்பது ஓர் உளநிலை. கொடுக்கத் தொடங்கியவர் அனைத்தையுமே கொடுத்துவிடுவார். எஞ்சுவது அனைத்தும் சுமையென ஆகும். எஞ்சாது ஒழிவதே விடுதலை எனத் தோன்றும்” என்றார். கர்ணன் “அது வேள்விப் பேரவை. அங்கு...” என்றதும் சிவதர் “அனைத்து வேள்விகளிலும் அவர்களும் இருக்கிறார்கள். நிழலாடாது நெருப்பு எப்படி எரியும்?” என்றார். “மெய்” என்று

கர்ணன் சொன்னான். “நோக்குக, அரசே! இங்கு நாம் வாழும் வாழ்க்கை நமது தெய்வங்களுக்கு அளிக்கும் முடிவிலாப் பெருங்கொடை. இன்னொருவர் உங்களை கைவிட்டால் உடனிருப்பவர் எவருமில்லை” என்றபின் சிவதர் வெளியே சென்றார்.

அஸ்தினபுரியின் வேள்விச்சாலையில் சிறுமைப்பட்டு அவையிலிருந்து வெளியேறி வருகையில் சிவதர் “இன்றிரவு இன்னொருவர் உங்கள் அறையில் எழுவார். அவர் சீற்றம் கொண்டிருப்பார். ஐயமே இல்லை” என்றார். கர்ணன் “என்னால் இயல்வது ஒன்றுமில்லை” என்றான். “இன்று வேள்விச்சாலையிலும் முன்னர் அவையிலும் நீங்கள் அரசரைப்போல் பேசவில்லை. அடிபணிந்தீர்கள். அனைத்தையும் அள்ளி முன்வைத்தீர்கள். இடக்காலால் அந்த அவை உங்களைத் தட்டி வெளியே தள்ளியபோது ஒரு சொல்லும் உரைக்காமல் எழுந்து மீண்டீர்கள்” என்றார் சிவதர். கர்ணன் ஒன்றும் சொல்லாமல் நடந்தான். அவன் தன் அறைக்குள் சென்றதும் சிவதர் “நன்று! எந்நிலையிலும் தன் மைந்தரிடம் தந்தை உள்ளாழத்தில் முனிவதில்லை. அதை மட்டுமே நாம் நம்பியிருக்க வேண்டும்” என்றார்.

அன்றிரவு அரைத்துயிலில் கர்ணன் தன் மஞ்சத்திற்கு அடியில் அந்த மாநாகத்தை உணர்ந்தான். அறைக்குள் எங்கிருந்தோ கரிய நீரோடை வந்து சுழித்து மையம் கொள்வதுபோல் அதன் பேருடல் வளைந்து கொண்டிருந்தது. அம்மஞ்சத்தை மெல்ல காற்றில் மேலே தூக்கியது. அவன் கண்விழித்தபோது அதன் பெரும்படத்தை தன் முன் கண்டான். இமையா விழிகள் இரு மின்மினிகள்போல், இரு தொலைவான விண்மீன்கள்போல், அவனை நோக்கிக்கொண்டிருந்தன. அவன் மார்பின் மேல்

வைத்த கையை எடுத்துக் கூப்பியபடி அதை பார்த்துக்கொண்டிருந்தான்.

“எந்தையே” என பெருமூச்சுடன் வணங்கிவிட்டு கர்ணன் கண்களை மூடி மெல்ல உடல் தசைகளை தளர்த்தி நீள்மூச்சுவிட்டு துயிலத்தொடங்கினான். அறைக்குள் மெல்லிய அசைவொலி எழுந்தது. செதில்தோல் தரையை உரசும் ஓசை. செதில்கள் ஒன்றுடன் ஒன்று வழுக்கிச்செல்லும் ஓசை. மரப்பட்டைகள் உரசுவதுபோல் எனத்தோன்றும். பட்டுத்துணியின் உரசலோ என மெல்லென்றிருக்கும். பின்னர் யானையின் மூச்சுபோல் சீறலோசை. கண் விழிக்காமலேயே அவன் தன் மஞ்சத்துக்கு அடியில் பெருகி வளைந்து சுழிமையத்துக்கு மேல் தலைவைத்துப் படுத்திருக்கும் மாநாகத்தை கண்டான். அதன் விழிகளையே நோக்கிக்கொண்டிருந்தான்.

வெளியே கதவு தட்டப்பட்டது. கர்ணன் எழுந்து சென்று கதவைத் திறந்தான். “அரசே, தங்களை சந்திக்க அன்னை எழுந்துள்ளார்” என்று ஏவலன் சொன்னான். “எங்கே?” என்று அவன் திரும்பிப்பார்த்தான். “வெளியே உள்ளார்” என ஏவலன் கதவை திறந்தான். அவன் வெளியே காலெடுத்துவைத்தான். அங்கு இருளுக்குள் மண்ணிலிருந்து விண்தொட எழுந்த பேருருவ நாகமொன்றை கண்டான். அதன் உடற்சுருட்கள் ஒன்றின்மேல் ஒன்றென வளைந்து எழுந்திருந்தன. இருளாழத்தில் உடல்நுனி சென்று மறைந்திருந்தது. இரு விழிகளும் எரிவிண்மீன்போல் வானில் எழுந்திருந்தன. விரிந்துகொண்டிருந்த படத்தில் மணிமாலை போன்ற செதில்வளைவுகள் அசைந்தன.

“எவர்?” என்று கர்ணன் நடுங்கும் குரலில் கேட்டான். “அன்னை தன்னை கத்ரு என்று உரைத்தார்கள்” என்று ஏவலன் சொன்னான். கர்ணன் குடிலிலிருந்து வெளியே இறங்கி அவளை நோக்கி சென்று “தாங்களா?” என்றான். “ஆம், நான் உன் மூதன்னை” என்று நாகம் சொன்னது. கதவு மீண்டும் தட்டப்பட்டபோது கர்ணன் முழுவிழிப்பு கொண்டு எழுந்து அமர்ந்தான். அவன் உடல் விதிர்த்துக்கொண்டிருந்தது. ஏவலன் கதவை தொடர்ந்து பல முறை தட்டியிருக்கவேண்டும். அவன் குரல் உரத்து ஒலித்தது. “அரசே! அரசே! முதன்மைச் செய்தியொன்று வந்துள்ளது. அரசே!” என்றான். அவன் ஏவலனின் குரலை அடையாளம் கண்டான். அதிலிருந்த பதற்றத்தை உணர்ந்ததும் இடையிலிருந்த ஆடையை செம்மை செய்து எழுந்தான்.

அக்கணமே மஞ்சத்திற்கு அடியிலிருந்து மாநாகம் எழுந்து அவன் கால்களை வலுவாக சுற்றிக்கொண்டது. நிற்க இயலாமல் கர்ணன் தடுமாறினான். விழுந்துவிடுவோம் என்று எண்ணி கைநீட்டி கட்டில்நிலையை பிடித்தான். கால்களை விடுவித்துவிட முயலுந்தோறும் அதன் பிடி மேலும் இறுகியது. அதன் உடல் வளைந்து மேலெழுந்து அவன் தலைக்குமேல் நின்றது. அதன் முகம் அவன் முகத்துக்கு நேரே வந்தது. தன் விழிகளால் அவனுடன் அது உரையாடியது. “வேண்டாம், துயில்க! வாசல் திறவாதொழிக!” என்றது.

கர்ணன் தள்ளாடி நிலையழிந்து பதறிய கைகளை நீட்டி குடிலின் தூணைப் பற்ற முயல அதன் சுருள்கள் மேலும் மேலும் எழுந்து அவன் கைகளைப்பற்றி உடலோடு இறுக்கின. “அன்னை!” என்று அவன் சொன்னான். “இவ்விரவைக் கடந்து செல்க! இவ்விரவை மட்டும் கடந்து செல்க!” என்று நாகம்

சொன்னது. “எவ்வண்ணம் என்னால் இயலும்?” என்று அவன் கேட்டான். “வந்திருப்பவள் என் அன்னை!” நாகம் “அன்னை அல்ல அவள், மூடா!” என்று சீறியது. “குளிர்ந்த நஞ்சுடன் வந்துள்ள தமக்கை அவள். ஆயிரம் பல்லாயிரம் கோடி முகம்கொண்டு இப்புவியெங்கும் நிறைந்திருப்பவள்.” கர்ணன் “அன்னை! அன்னை!” என்றான். “இவ்விரவை மட்டும் எவ்வண்ணமேனும் கடந்து செல்க! இந்தக் கணத்தை மட்டும் கடந்து செல்க! நீ வெல்வாய். இங்கு மட்டுமேனும் நீ வெல்வாய்!”

கர்ணன் “என்னால் இயலாது! என்னால் அது இயலாது!” என்றான். “என் அமுதை அருந்துக! என்னுள் ஊறிய ஒரு துளி அமுது உன்னை ஆற்றல்கொண்டவனாக்கும். கூர்வாளென இவ்விரவைப் போழ்ந்து கடக்கச்செய்யும்” என்றது நாகம். கர்ணன் ஒருகணத்தில் தன்னுடலை அதிலிருந்து உதறி மீண்டான். பிடிதளர்ந்த நாகத்தை இரு கைகளாலும் அள்ளி அப்பால் வீசினான். பேரோசையுடன் அது தரையில் அறைபட்டு விழுந்து செதில்கள் உரசும் ஒலியுடன் புரண்டு சுருண்டெழுந்து சீறி “நீ என்னை புறந்தள்ளுகிறாய். என்னை சிறுமைசெய்கிறாய்!” என்றது. “அன்னை வெளியே எனக்காக காத்து நிற்கிறார்” என்று சொல்லி அவன் வெளியே ஓடினான்.

“அவள் கொண்டுவந்திருப்பது என்ன என்று அறியமுடியாதவனா நீ?” என்றது நாகம். “நான் அவருக்கு முதற்கடன் பட்டவன்” என்று கர்ணன் சொன்னான். “என்னை நீ புறந்தள்ளுகிறாய்! என்னை நீ புறந்தள்ளுகிறாய்! என்னை நீ புறந்தள்ளுகிறாய்!” என்று நாகம் வீறிட்டது. “வேறு வழியில்லை. இருவரில் ஒருவரையே இத்தருணத்தில் நான் ஏற்கமுடியும்” என்றபின் கர்ணன் சென்று கதவை திறந்தான்.

ஏவலன் தலைவணங்கி “அரசே, இந்திரப்பிரஸ்தத்தின் யாதவஅரசி தங்களை பார்க்க விழைந்து இங்கு வந்திருக்கிறார்” என்றான். கர்ணன் அப்போதுதான் முழு தன்னினைவை அடைந்து “யார்?” என்றான். “இந்திரப்பிரஸ்தத்தின் யாதவஅரசி குந்திதேவி தங்களை பிறரறியாது பார்க்கவேண்டுமென்று இங்கு வந்திருக்கிறார்” என்றான் ஏவலன்.

“எங்கு?” என்றான் கர்ணன் உளம்கலங்கியவனாக. “இதோ இங்கு” என்று சற்று அப்பால் சேடி ஒருத்தி துணை நிற்க வெண்ணிற ஆடையால் முகத்தை முற்றிலும் மறைத்து தலைகுனிந்து உடல் குறுக்கி நின்றிருந்த சிற்றுருவத்தை ஏவலன் சுட்டிக்காட்டினான். கர்ணன் மூச்சுத்திணறுவதுபோல், கைகால்கள் உதறுவதுபோல் உணர்ந்தான். சிலகணங்கள் அவளை நோக்கி நின்றபின் “வரச்சொல்க!” என்றான். ஏவலன் சென்று குந்தியிடம் பணிந்து அவன் வரவொப்புதல் அளித்ததைச் சொல்ல குந்தி சிறிய அடிகளை எடுத்து வைத்து நிழல் நகர்வதுபோல் ஓசையின்றி அவனை அணுகினாள்.

வெண்முரசு விவாதங்கள்

# கார்கடல் - 27

குந்தி நிழல் என ஓசையின்றி அணுகிவந்தாள். கர்ணன் தலைவணங்கி “இந்திரப்பிரஸ்தத்தின் பேரரசிக்கு நல்வரவு. இப்பொழுதில் இவ்வெளியேனின் தனிக்குடிலுக்கு தாங்கள் வந்தது முறையல்ல எனினும் என் குடிக்கும் எனக்கும் நற்பெயர் என்று உணர்கிறேன். தங்கள் வரவின் அருள் எனக்கு அமையட்டும்” என்றான். குந்தி தன் வலக்கையைத் தூக்கி

அவனை வாழ்த்தி “நலம் சூழ்க!” என்றாள். தணிந்த குரலில் “நான் உன்னை பார்க்கவேண்டுமென்று வந்தேன்” என்று சொன்னாள்.

அந்தப் பொருளிலாச் சொல் அவள் உளம் குழம்பியிருப்பதை காட்டியது. கர்ணன் “அது என் நல்லூழ். வருக, அரசி!” என்று உள்ளே அழைத்துச் சென்றான். விழிகளால் ஏவலனிடம் பிற எவரும் நுழையலாகாது என்று ஆணையிட்ட பின் கதவை மூடி “அமர்க, பேரரசி!” என்று சிறுபீடத்தை காட்டினான். “இது பாடி வீடு. இங்கு பீடங்கள் ஏதுமில்லை, பலபயனுக்குரிய இந்தப் பெட்டியே பீடமென்றாகிறது” என்றான். குந்தி மறுமொழி சொல்லாமல் பெட்டி மேல் அமர்ந்தாள். கர்ணன் சற்று அப்பால் ஒரு சிறிய பெட்டியை இழுத்து அதன் மேல் அமர்ந்து முழங்கால்களில் கையூன்றி விரல்களைக் கோத்த பின் “நான் அஸ்தினபுரியில் பலமுறை தங்களை பார்த்துளேன். இப்போது அகவை முதிர்ந்து மெலிந்து உடல் சிறுத்திருக்கிறீர்கள். ஆயினும் அன்றுணர்ந்த அதே சொல் ஒன்றை இப்போதும் என் உள்ளத்தில் உணர்கிறேன்” என்றான்.

குந்தி புன்னகைத்தாள். கர்ணன் “அரசகுடியினர் பெருங்கவிஞன் ஒருவனின் கவிதைச்சொல்போல சொல்லில் செறிவுகொண்டவர்கள் என்று ஒரு சூதர்சொல் உண்டு. தாங்களோ ஓர் ஊழ்கநுண்சொல்லின் ஆழம் கொண்டவர்கள். இப்போது அச்சொல் மேலும் ஒலியின்மை நோக்கி சென்றுள்ளது” என்றான். குந்தி பெருமூச்சுவிட்டு “நான் உன்னிடம் சிலவற்றை தனியாக பேசவேண்டுமென்று வந்தேன்” என்றாள்.

கர்ணன் குந்தியை மீண்டும் வணங்கி “சொல்லுங்கள், அரசி. அடியவனால் தங்களுக்கு ஆகவேண்டியது என்ன?

எதுவாயினும் தலைகொடுக்கிறேன்” என்றான். “நான் உன்னிடம் சிலவற்றை பேச விழைந்தேன்” என்று மீண்டும் சொன்ன குந்தி அவ்வுணர்விலிருந்து மெல்ல வழுவி தயங்கி பின்னடைந்தாள். நேரடியாக தான் எண்ணியதை சொல்ல இயலாதென்று உணர்ந்து “நான் என் மைந்தன் அர்ஜுனனின் மருத்துவநிலையிலிருந்து வருகிறேன்” என்றாள். தற்செயலாக என சரியான இடத்தில் தொடங்கிவிட்டதை உணர்ந்து அவள் உளம் கூர்கொண்டது.

கர்ணன் அச்சொற்களால் உளம் அணைந்து, தயங்கிய குரலில் “எவ்வண்ணம் இருக்கிறார்? அவர் உடல்நிலை...” என்று சொல்ல குந்தி “மீண்டுவிடுவான். நாளை காலையில் எழுவான். ஒருவேளை நாளை மறுநாள் களம் வரவும் கூடும்” என்றாள். கர்ணன் முகம் மலர்ந்து “நன்று” என்றான். “நான் நிலைகுலைந்திருந்தேன், அரசி. இன்று சற்று மிகையாகவே மதுவருந்தியிருக்கிறேன். என் நிலைகுலைவு எதனால் என்று இப்போதுதான் அறிகிறேன். என் கணை பட்டு இளைய பாண்டவர் களத்தில் விழுந்தார். வீரனாக அது என் வெற்றி. ஆனால் ஆழத்திலிருந்து அதை நான் விரும்பவில்லை.”

“அது ஏன் என்று தெரியுமா?” என்று குந்தி நிமிர்ந்து அவன் முகத்தை பார்த்தாள். கர்ணன் தன் அனைத்து எண்ணங்களையும் அசைவறச் செய்து வெற்றுவிழிகளால் அவளை நோக்கியபடி “அறியேன். எவ்வண்ணமோ அவரே நான் என்று உணர்கிறேன். என் தோற்றமும் அவர் தோற்றமும் ஒன்றுபோல் இருப்பதாக சூதர் சொல்வதுண்டு. தசைச்சிற்பத்தால் அல்ல, அசைவாலோ நோக்காலோ, அப்பாலுள்ள பிறிதொன்றினாலோ நான் அவரே என்று நானும் உணர்ந்துள்ளேன். அதனாலாக இருக்கலாம்” என்றான். குந்தி

“ஆம், உன் தோற்றமும் அவன் தோற்றமும் ஒன்றே” என்றாள். மீண்டும் குரல் தாழ்த்தி “அது ஏன் என்று தெரியுமா?” என்று கேட்டாள்.

கர்ணன் “அதை தாங்கள் அறிந்திருக்கக்கூடும்” என்றான். “நீயும் அறிவாய். உள்ளாழத்தில் அதை அறியாத யாரும் அஸ்தினபுரியிலோ இந்திரப்பிரஸ்தத்திலோ இருக்க வாய்ப்பில்லை” என்றாள் குந்தி. கர்ணன் “பேரரசி, மெய்மையை சற்றே அறியாதோரும் இல்லை. வாழ்வில் அதை முழுதுணர்ந்தோரும் இல்லை என்பார்கள்” என்று சொன்னான். அதிலிருந்த மெல்லிய நகையாட்டு அத்தருணத்தின் கூர்மையை தவிர்க்கும்பொருட்டு அவனிடம் எழுந்தது என்று உணர்ந்த குந்தி “உன்னிடம் மெய்மை பற்றிச் சொல்லாட நான் இங்கு வரவில்லை” என கடுமையாகச் சொன்னாள். “நாமிருவருமே நன்கறிந்த ஒன்றை மீண்டும் உன்னிடம் அழுத்திச் சொல்லவே வந்தேன். அவன் உன் இளையோன். நீ என் மைந்தன். என் வயிற்றில் என் குருதியில் ஊறி பிறந்தவன்” என்றாள்.

கர்ணன் சிலகணங்கள் அசைவற்று விழிநட்டு அவளை நோக்கியபின் இமைதாழ்த்தி விரல்களை மாற்றி கோத்துக்கொண்டான். அவன் இரு தோள்களிலும் தசைகள் இறுகி அசைந்து நெகிழ்ந்தன. நீள்மூச்சுடன் அவன் “ஆம்” என்றான். அவள் அவன் மேலும் ஏதேனும் சொல்லக்கூடும் என காத்தாள். அவன் விழிகள் சரிந்தே இருந்தன. முகம் சிலையென அமைந்திருந்தது. அவள் அவன் தலையை கைநீட்டி தொட விழைந்தாள். ஆனால் கைகள் எழவில்லை. தொண்டையைச் செருமி குரலை எழுப்பி “நான் உன்னை ஈன்றேன்” என்றாள். அதை ஒட்டி மேலும் சொல்லெடுக்க

முடியாமல் பின்னடைந்து “உன் அன்னை உன்னை யமுனையில் கண்டெடுத்தாள் என அறிந்திருப்பாய்” என்றாள்.

“ஆம்” என்று கர்ணன் சொன்னான். “கன்னிச்சோலையில் நான் வாழ்ந்த நாளில் கருவுற்று உன்னை பெற்றேன். பழிக்கு அஞ்சி உன்னை கைவிட்டேன்.” அவன் விழிதூக்கி அவளை நோக்க “ஆம், என் குடியில் அது பழி சேர்ப்பதல்ல. ஆனால் நான் ஷத்ரியக்குடி ஒன்றுக்கு மணம்முடித்துச் செல்ல விழைவுகொண்டிருந்தேன். பாரதவர்ஷத்தை ஆள திட்டமிட்டிருந்தேன்” என்று குந்தி சொன்னாள். “என் விழைவால் உன்னைத் துறந்தேன். அதை என்னிடமிருந்து ஒருபோதும் நான் ஒளித்ததில்லை. ஆகவே உன்னிடமும் மறைக்கவேண்டியதில்லை. நான் பிறப்பால் யாதவப்பெண் எனினும் அகத்தால் ஷத்ரியக்குடியினள். விழைவே ஷத்ரியர்களை உருவாக்கும் விசை.”

“பின்னரும் மும்முறை உன்னை என்னிடமிருந்து நான் விலக்கினேன். சதசிருங்கத்திலிருந்து மீள்கையில் உன்னை என் மைந்தன் என நான் அறிவித்திருக்கலாம். உன்னை அங்கநாட்டிலிருந்து கொண்டுவந்து துரோணரின் மாணவனாக ஆக்கியபோது அதை செய்திருக்கலாம். நீ வில்லுடன் பயிற்சிக்களத்தில் எழுந்தபோது கூறியிருக்கலாம். ஒவ்வொருமுறையும் என்னைத் தடுத்தது என் விழைவே. நான் முடிசூடவேண்டும் என்னும் பெருவிழைவு. என் மைந்தர் அரசாளவேண்டும் என்னும் இயல்பான எண்ணம்...” என்றாள் குந்தி.

“நீ என் மைந்தன் என நான் முன்னரே அறிவித்திருந்தால் விரும்பாதன நிகழ்ந்திருக்கலாம். ஏற்கெனவே என் யாதவகுடிப் பிறப்பை அஸ்தினபுரியின் ஷத்ரியர் விரும்பவில்லை. உன்னை

முதல் மைந்தன் என்று சொல்லியிருந்தால் அதன்பொருட்டே நானும் என் மைந்தரும் விலக்கப்பட்டிருப்போம். பாண்டுவின் மைந்தன் என்பதே யுதிஷ்டிரனின் தகுதியாக இன்றும் உள்ளது” என்றாள் குந்தி. “அத்துடன் நான் பீஷ்மரை அஞ்சிக்கொண்டிருந்தேன். அவர் உள்ளம் குருதித்தூய்மையில், குடிச்சிறப்பில் ஊன்றியது. அவர் ஒருபோதும் உன்னை ஏற்கமாட்டார் என அறிந்திருந்தேன்.”

கர்ணன் திகைப்புடன் விழிதூக்கி “அவரா?” என்றான். “ஆம், அவரே. அவரை நான் நன்கறிவேன். அவருக்கு என்மேல் ஒருபோதும் மதிப்பு இருந்ததில்லை. அவர் உன்னையும் குடி சொல்லிப் பழித்தார்” என்றாள் குந்தி. கர்ணன் சில கணங்கள் அவளை உற்று நோக்கியபின் புன்னகை செய்தான். “ஏன் புன்னகைக்கிறாய்?” என்று குந்தி கேட்டாள். “இல்லை” என்றான். “சொல்” என அவள் சுருங்கிய விழிகளுடன் சொன்னாள். “ஒன்றுமில்லை, அரசி...” என்றான் கர்ணன்.

குந்தி சற்றுநேரம் அவனை நோக்கிக்கொண்டிருந்துவிட்டு “நீ என் மைந்தன் என எப்போதேனும் அகத்தால் உணர்ந்திருக்கிறாயா?” என்றாள். கர்ணன் வலிகொண்டவன்போல் முகம் சுளித்து ஏறிட்டு நோக்கி “ஆம்” என்றான். “என்னை பார்க்க விழைந்துள்ளாயா? என்னை உள்ளத்தால் அணுகியிருக்கிறாயா?” என்று அவள் ஆவலுடன் சற்றே முன்நகர்ந்து கேட்டாள். “ஆம்” என்று அவன் சொன்னான். அவன் விழிகள் சரிந்தன. அவள் அவன் துயில்கொள்வதாகவே எண்ணினாள். “பலமுறை நான் உங்களை கனவில் கண்டிருக்கிறேன்.”

குந்தி பரபரப்புடன் “எத்தகைய கனவுகள்? சொல்க, எப்படிப்பட்டவை அவை?” என்றாள். கர்ணன் துயிலில் என

உடல் மெல்ல ஆட, தாழ்ந்த குரலில் “பல கனவுகள். இறுதியாக வந்த கனவில் நீங்கள் ஒரு சிறிய உப்பரிகையில் இருளுக்குள் நின்று விடிவெள்ளியை நோக்கிக்கொண்டிருக்கிறீர்கள். கையில் மயிலிறகு விசிறியை வைத்திருக்கிறீர்கள். விடிவெள்ளியை ஒரு முகில் மறைத்தபோது நீங்கள் விம்மி அழுதீர்கள். நான் அந்த ஒலியைக் கேட்டு உளம் அதிர்ந்தேன். மிகமிக அமைதியில் கேட்கும் விம்மலோசைபோல உளமுலைப்பது பிறிதொன்றில்லை. எந்தப் பேரோலத்தைவிடவும் விண்ணைச் சென்றடைவது அது. நான் நடந்து அருகே வந்து உங்கள் தோளை தொட்டேன்” என்றான்.

“ஆம்! ஆம்!” என சொல்லி குந்தி எழுந்துகொண்டாள். “இது நிகழ்ந்தது. உபப்பிலாவ்யத்தின் உப்பரிகையில் நான் அவ்வாறு நின்றிருந்தேன். விடிவெள்ளி நோக்கி ஏங்கினேன். எனக்குப் பின்னால் காலடியோசை கேட்பதுபோலத் தோன்றி திரும்பி நோக்கினேன்.” அவள் கைநீட்டி அவன் முழங்காலை தொட்டாள். “மைந்தா, நீ என் அருகே நின்றிருக்கிறாய். எப்போதும் எனக்கு மிக அணுக்கமாக இருந்திருக்கிறாய்.” கர்ணன் “அஸ்தினபுரியில் நான் பெரும்பாலும் உங்கள் கால்களையே நோக்கியிருக்கிறேன். அவை என் கனவில் எப்போதும் வந்துகொண்டிருக்கும்” என்றான். “தென்னகக் காட்டில் அலைகையில் நான் இறையுரு என எந்தையை எண்ணுவேன். அன்னை என உங்கள் கால்களையே எண்ணுவேன். இரு வெண்கற்களை எடுத்துவைத்து உங்கள் கால்கள் என எண்ணி மலரிட்டு வணங்குவேன்.”

குந்தி உதடுகளை அழுத்திக்கொண்டு மெல்ல அமர்ந்தாள். அவள் கழுத்துத் தசைகள் அதிர்ந்தன. மெல்லிய விசும்பலோசையுடன் அவள் அழுதாள். அதை அறியாதவனாக

கர்ணன் தொடர்ந்தான். “மீளமீள வரும் கனவுகள் சில உண்டு. பிறிதொரு உப்பரிகையில் நின்று நீங்கள் உங்கள் முலைப்பாலைப் பிழிந்து வெளியே ஊற்றுகிறீர்கள். கீழே ஒரு நாய் என நின்று நான் அந்த இனிய அமுதை நா நீட்டிச் சுவைத்து உண்கிறேன். அக்கனவின் பொருள் என்ன என்று எனக்கு புரிந்ததே இல்லை. அச்சமூட்டும் பிறிதொரு கனவில் நான் ஒரு சுனைக்கு அடியில் மூழ்கி விளையாடிக்கொண்டிருக்கிறேன். குழவியாக இருக்கிறது என் உடல். நீங்கள் நீருக்குமேல் வாளுடன் வருவதைக் கண்டு அன்னையே, வேண்டாம் வேண்டாம் என கூச்சலிடுகிறேன். என் அலறல்கள் குமிழிகளாக எழுந்து வெடிக்கின்றன.”

“போதும்” என்று குந்தி சொன்னாள். அதை கேளாதவனாக கர்ணன் தொடர்ந்தான். “நீங்கள் கொடுஞ்சிரிப்புடன் வாளால் என்னை வெட்டினீர்கள். துண்டுதுண்டாக மாறி அந்தச் சுனையின் வெய்யநீரில் நான் மிதக்கிறேன். குருதிக்குமிழிகளுடன் அந்தச் சுனை கொந்தளித்துக் கொண்டிருக்கிறது.” குந்தி “போதும்” என உரக்கச் சொன்னாள். கர்ணன் திடுக்கிட்டவன்போல் அவளை நோக்கினான். அவள் மூச்சிரைக்க தலைகுனிந்தாள். தலையாடை சரிந்து முகத்தை மூடியது. அவன் “உங்களைப்பற்றிய கனவுகள், அரசி” என்றான். “பிறிதொருமுறை நீங்கள் ஒரு குடிலில் எவருடனோ பேசிக்கொண்டிருந்தீர்கள். நான் சோலையில் நடந்து அங்கே வந்தேன். குடிலுக்குள் இருந்து நீங்கள் என் காலடியோசை கேட்டு வெளிவந்தபோது முகம் வெளிறி அஞ்சி நடுங்கிக்கொண்டிருந்தீர்கள். குடிலுக்குள்...”

குந்தி சீற்றத்துடன் “நிறுத்து, மூடா!” என்றாள். அவன் தன் சொற்களை தானே உணர்ந்தவனாக திகைத்து விழிமலைத்து

நோக்கினான். அவளுடைய மூச்சிளைப்பின் ஓசை கேட்டுக்கொண்டிருந்தது. நெடுநேரம் என காலம் நீண்டது. அவள் மெல்ல மீண்டு “ஆம், நான் அஞ்சிக்கொண்டிருந்தேன்” என்றாள். “எல்லா அன்னையரும் மூத்த மகனை அஞ்சுகிறார்கள்” என்று மேலும் தாழ்ந்த குரலில் சொல்லிக்கொண்டாள். எழுந்து சென்றுவிட விழைபவள்போல் ஓர் அசைவு அவளில் உருவாகியது. அதை உள்ளத்தால் வென்று அமர்ந்து “நான் உன்னிடம் அரசியல் பேச வந்தேன்” என்றாள். அச்சொல்லால் அவனும் நிலைமீண்டு “சொல்க, அரசி!” என்றான்.

“நீ என் மைந்தன் என என்னால் எளிதில் நிறுவ முடியும். அச்சேடியின் மகள் மார்த்திகாவதியில் இன்னும் உயிருடன் இருக்கிறாள். உன்னை இளமையிலேயே அறிந்த என் மூத்தவர் வசுதேவர் மதுராவில் இருக்கிறார். நான் எந்த அவையிலும் நீ என் மகன் எனச் சொல்வேன். அதற்கான உளத்துணிவை அடைந்துவிட்டேன்” என்றாள் குந்தி. கர்ணன் விழிதூக்கி “சான்றுகள் தேவைப்படுமா என்ன?” என்றான். “ஆம், தேவையில்லை. எந்த அவையிலும் நீ வந்து நின்றாலே போதும். அவைதோறும் உன்னை சூதன்மகனென்றும் இழிபிறப்பாளனென்றும் சொன்ன அத்தனை பேரும் அதை உணர்ந்ததனால்தான் அவ்வாறு சொன்னார்கள். ஷத்ரியனென நீ அவை நின்றால் பாரதவர்ஷத்தின் அனைத்து அரசர்களும் உனக்கு முடிதாழ்த்த வேண்டியிருக்குமென்று அறியாத எவரும் இங்கில்லை” என்றாள் குந்தி.

கர்ணன் கைவீசி விலக்கி “அதை இனி நாம் பேசவேண்டியதில்லை, அரசி” என்றான். “அன்னை என்று அழைக்கமாட்டாயா?” என்று அவள் கேட்டாள். “அறைக்குள்

அவ்வாறு அழைத்தென்ன பயன்? இருளுக்குள், ஆழத்திற்குள் அவ்வாறு நூறு முறை அழைத்திருக்கிறேன். அதை நா ஒலிக்க வேண்டுமெனில் உலகு அதை ஏற்க வேண்டும்” என்றான் கர்ணன். “ஏற்க வைக்கிறேன், பாரதவர்ஷத்தின் ஷத்ரியர்கள் கூடிய அவையில் எழுந்து சொல்கிறேன் நீ என் மைந்தன் என்று. நீ என் மைந்தனாவது என் ஒரு சொல்லில்தான் உள்ளது. நான் அச்சொல்லை உரைப்பேனா என்று இத்தனை ஆண்டுகள் அவர்கள் அஞ்சியிருந்தார்கள். அதை நான் உரைத்துவிட்டால் தெய்வங்களும் அதை மறுக்க இயலாது” என்றாள் குந்தி.

அவளை கூர்ந்து நோக்கியபடி “என் தந்தை எவரென கேட்பார்கள்” என்றான் கர்ணன். அவள் அவன் முகத்தில் இருந்த மெல்லிய விலக்கத்தை, அதன் விளைவான ஏளனத்தை கண்டுகொள்ளவில்லை. அவள் வேறெங்கோ உணர்ச்சிக் கொந்தளிப்புடன் இருந்தாள். “சூரியன்! விண்ணிலிருந்து கதிர்பெருக்கென இறங்கி சுனையொன்றில் எழுந்தவன். நான் நியோகமுறைப்படி உன்னை பெற்றேன். ஷத்ரிய நெறிப்படி அதற்கு அப்பால் எதுவும் கேட்கப்படலாகாது. யாதவப் பெண்ணிடம் அதையும் கேட்கலாகாது” என்று உரக்கச் சொன்னாள்.

கர்ணன் சட்டென்று சலிப்புகொண்டவன் ஆனான். கைவீசி அப்பேச்சை விலக்கி “இப்போது இந்தக் களத்தில் இதை நாம் ஏன் பேசுகிறோம்? நீங்கள் என்னை உங்கள் மைந்தன் என்று அறிவிக்கவேண்டிய பல அவைகள் கடந்துசென்றுவிட்டன, அரசி” என்றான். அவள் அவன் உணர்ச்சிகளையே அறியவில்லை. உள எழுச்சியுடன் “ஆம், நான் அறிவேன். ஒவ்வொரு அவையிலும் இவன் என் மைந்தன், இவன்

பாண்டவர்களில் மூத்தோன் என்று எழுந்து கூச்சலிடும் கணத்திற்கு முந்தைய கணத்தில் என்னை அனைத்துச் சரடுகளாலும் கட்டி நிறுத்தி இக்கணம் வரை வந்துள்ளேன். அது என் விழைவால். அச்சத்தால். அதைத்தான் உன்னிடம் இப்போது சொன்னேன். அதைக் கடந்து என்னால் எழ இயலவில்லை. அது ஊழென்றோ தெய்வங்களின் விழைவென்றோ எண்ணிக்கொள்ள வேண்டியதுதான்” என்றாள்.

“ஆனால் இத்தருணத்தில் அதை நான் உரைக்காவிடில் ஒவ்வொன்றும் என் கைகளிலிருந்து அகலும். தீராப் பழி கொண்டு நான் இருளில் அணைவேன். அன்னையென இனி நான் இப்புவியில் ஏதேனும் செய்வதற்கு எஞ்சியிருக்கிறதென்றால் அது இது மட்டுமே. அதை உணர்ந்துதான் இங்கு வந்தேன்” என்று குந்தி சொன்னாள். கர்ணன் புன்னகையுடன் நோக்கி “சொல்லவந்ததை அடைந்துவிட்டீர்கள், அரசி” என்றான். குந்தியும் தன் உணர்வலைகளிலிருந்து மீண்டாள். அவன் விழிகளிலிருந்த நகைப்பின் ஒளியைக் கண்டு உள்ளம் நிலையழிந்தாலும் சொற்களை திரட்டிக்கொண்டாள். “கர்ணா, உன் கையால் என் மைந்தர் களத்தில் உயிர் துறப்பார்கள். நாளை புலர்ந்து போர் எழுகையில் என் மைந்தர் உன் முன் வெறும்பலியாடுகளென நிற்க வேண்டியிருக்கும். இந்த ஒரு நாள் போரிலேயே இதை அனைவரும் உணர்ந்துகொண்டிருப்பார்கள்” என்றாள்.

“ஆம், அதை உணர்ந்துகொண்ட ஒருவரால் நீங்கள் இங்கு அனுப்பப்பட்டிருக்கிறீர்கள்” என்று கர்ணன் சொன்னான். அவள் தயங்காமல் “உண்மை. சற்று முன் இளைய யாதவன் என்னை பார்க்க வந்தான். அர்ஜுனனின் நிலையை அறியும்பொருட்டு துயிலாமல் செய்திக்காக காத்திருந்தேன். நாழிகைக்கு

ஒருமுறை புறா வந்து அவன் நிலை அவ்வண்ணமே தொடர்கிறது என்று சொல்லிக்கொண்டிருந்தது. அப்போதுதான் அவனே வந்திருப்பதை ஏவலன் வந்து சொன்னான். அவனே வந்துள்ளான் என்று கேட்டதும் முதல் எண்ணமாக என்னுள் எழுந்தது அமங்கலக் கணிப்பு ஒன்றுதான். என் உடல் நடுங்கியது. விழுந்துவிடுவேன் என்று தோன்றியது. இளைய யாதவன் துயர்கொண்டுள்ளானா என்றுதான் ஏவலனிடம் கேட்டேன். இல்லை அரசி, வழக்கம்போல்தான் இருக்கிறார் என்றான். எப்போதும் அவன் வழக்கம்போலத்தான் இருப்பான் என்னும் எண்ணம் வந்தது. என் மைந்தனின் பொருட்டு அவன் ஒருகணம்கூட துயர்கொள்ளமாட்டான் என எண்ணியதும் அவன்மேல் கடும் காழ்ப்பை அடைந்தேன். அவனைக் கண்டு நஞ்சு கக்க வேண்டுமென உள்ளம் எழுந்தது” என்றாள்.

“அரண்மனைக்குள் வர இளைய யாதவன் விழையவில்லை. அரண்மனைக்குள் இருந்து செய்தி வெளியேறிவிடும் என அஞ்சினான். அரண்மனைக்குப் பின்னாலிருந்த புரவிச்சாலையில் என்னை அழைத்து அங்கே நின்று என்னிடம் உரையாடினான். என் மைந்தரைக் காக்க எனக்கிருக்கும் இறுதி வழி இது ஒன்றே என்றான். ஆற்றவேண்டிய அனைத்தையும் வகுத்தளித்தான். இங்கு என்னுருவில் வந்திருப்பது அவன்தான் என்றே கொள்க! அவன் எதற்கும் அஞ்சாதவன் என அறிவேன். அவனே என்னைத் தேடிவந்து அதை சொன்னபோதுதான் என் மைந்தர் இருக்கும் நிலைமையை நான் நன்குணர்ந்தேன்” என்றாள் குந்தி.

மெல்லிய கசப்புடன் “அவருடைய சூழ்ச்சிக்கு அளவே இல்லை” என்றான் கர்ணன். குந்தி “எனக்கு நிகராகவே என் மைந்தர் மேல் பற்றுகொண்டவன் அவன். நேரில் அவனைப் பார்த்து

பேசியபோது குரலும் விழிகளும் இயல்பாகவே இருப்பதைத்தான் உணர்ந்தேன். ஆனால் அவனிடமிருந்து ஆழ்ந்த துயர் ஒன்று எழுந்ததை என் அகம் உணர்ந்தது. அது என் உள்ளத்தை உருக்கியது. அவனை தந்தை என்றல்ல அன்னை என்றே எண்ணினேன். தன் திறனையும் அறிவையும் நம்பும் தருக்கை முற்றிலும் இழந்து வெறும் பேதை என்று அவன் நின்றிருப்பதாக உணர்ந்தேன்” என்றாள்.

எங்களுக்குள் ஒருபோதும் சொல்லென எடுத்திராத ஒன்று இது. உன் பெயரை அவன் என்னிடம் ஒருபோதும் சொன்னதில்லை. நானும் நாமறந்தும் உன்னைப்பற்றி அவனிடம் பேசியதில்லை. ஆனால் அவன் அறிவான் என நான் அறிந்திருந்தேன். அவன் தந்தைக்குத் தெரியும் என்பதனால் அல்ல. அவன் அறியாத ஒன்று இப்புவியில் இருக்காது என்பதனால். மைந்தன் என்றும் தெய்வமென்றும் ஓருருவே முன் நின்று விளையாடுகையில் அதனுடன் இணையாக விளையாட காதல்கொண்ட கன்னியரால்தான் இயலும். அன்னையர் உள்ளம் பேதலித்துவிடும். நானோ தேவகியோ யசோதையோ அவனுடன் அணுகியும் அகன்றும் நிலைக்காத ஊசலொன்றில்தான் எப்போதும் இருந்துகொண்டிருக்கிறோம்.

அவன் அப்போதுகூட என்னை விழிதொட்டுப் பேச நாணினான். இருளை நோக்கிக்கொண்டு என்னிடம் சொன்னான். “இந்திரப்பிரஸ்தத்தின் அரசி, இத்தருணத்தில் பாண்டவர்களைக் காக்க உங்களால்தான் இயலும். அவர்களை அழிக்கும் பேராற்றல் கொண்டவன் உங்கள் முதல் மைந்தன். அவனிடம் செல்க! அவன் தம்பியரின் உயிரை இரந்து பெறுக! அவன் கடமை அவர்களைக் காப்பது என்று உணர்த்துக! இத்தருணத்தில் வேறு வழியே இல்லை.” நான் அவன்

சொற்களை அப்போது முழுமையாக உள்வாங்கவில்லை. “அவன் அளிக்காமல் உங்கள் மைந்தருக்கு வாழ்க்கையில்லை என்று சொல்லுங்கள், அத்தை” என்று அவன் சொன்னான்.

கால் தளர்ந்து நான் கொட்டடியின் சட்டத்தின்மேல் அமர்ந்துவிட்டேன். எங்கள் நடுவே காற்று குளிராக சுழன்றடித்துக்கொண்டிருந்தது. பலமுறை சொல்லெடுக்க நெஞ்சுகூட்டினேன் என்றாலும் என்னால் இயலவில்லை. பின்னர் ஒருகணத்தில் என் உள்ளத்தில் மிகப் பெரிய எடையின்மையை உணர்ந்தேன். அனைத்து வாயில்களையும் திறந்திட்டு வெட்டவெளியில் நின்றிருப்பதுபோல. எவரிடமேனும் அவ்வாறு எல்லையழிந்து நின்றிருப்பேன் எனில் அது அவனிடம் அல்லவா? இப்புவியில் என்னை அணுக்கமாக அறிந்த பிறன் யார்?

அவனை நானறியேன். அவனை எவரும் அறியமாட்டார். ஆனால் அவன் அனைவரையும் அறிவான். அனைவரையும் அறிந்த ஒருவனால் எவர்மேலும் சினமோ ஏளனமோ கொள்ள இயலாது. எவரையும் அவர்களின் பிழைகளின் பொருட்டோ தீமைகளின் பொருட்டோ பழிக்க இயலாது. அவன் காலடியில் விழுந்துவிடவேண்டும் என எண்ணினேன். அவனைத் தழுவி கண்ணீர்விடவேண்டுமென உளமெழுந்தேன். ஆனால் நான் அன்னை. அவன் என் முன் மழலை பேசிய மைந்தன். நெஞ்சைப் பற்றியபடி உடல்குறுக்கி அமர்ந்திருப்பதொன்றே என்னால் இயன்றது.

அவன் என்னை நோக்காமல் இருளில் விழி செலுத்தியபடி “அரசி, வருநாள் போரில் பாண்டவர் இறப்பாரெனில் இப்புவியில் எனக்கும் இயற்றுவதற்கு ஒன்றும் எஞ்சியிருக்காது” என்றான். “இவ்விரவில் நான் உணர்ந்தேன், என் தோழனின் உயிரன்றி

இப்புவியில் என்னை நிறுத்தும் விசை பிறிதொன்றில்லை என்று. அது உங்கள் கையில் உள்ளது. இதற்கு மேலும் ஆணவம் கொண்டு ஒழிந்தீர்கள் எனில் உங்களை நீங்களே நீரும் அன்னமும் வந்து சேரா காரிருளில் செலுத்துகிறீர்கள். உங்கள் மைந்தரை நிறைவுறாத உயிர்களென மூச்சுவெளியில் அலைய வைக்கிறீர்கள்" என்றான்.

உணர்வுகளில்லாத குரல். ஆனால் நான் கதறி அழுதபடி அங்கேயே அமர்ந்துவிட்டேன். "இல்லை மைந்தா, இதோ செல்கிறேன். சென்று அவன் கால்களில் விழுகிறேன் என் மைந்தனின் உயிரை அளிக்கும்படி கோருகிறேன்" என்றேன். அங்கிருந்தே கிளம்பி நேரடியாகவே இங்கே வந்தேன். உன்னைக் கண்டு என் கோரிக்கையை முன்வைக்க. இதில் எந்தக் கரவும் நுணுக்கமும் இல்லை. இது ஓர் அன்னையின் எளிய விண்ணப்பம் மட்டுமே.

"கோர உங்களுக்கு அனைத்து உரிமையும் உள்ளது, அரசி. அங்கன் என்றோ, அரசன் என்றோ அல்ல, உங்கள் மைந்தனென்று சொல்லி அதை சொல்லுங்கள்" என்றான் கர்ணன்.

# கார்கடல் - 28

குந்தி சற்றே அமைதியிழந்து "இந்த அறைக்குள் வேறு எவரேனும் இருக்கிறார்களா?" என்றாள். கர்ணன் "நீங்களே பார்க்கிறீர்கள், இங்கே நம்மைத் தவிர மானுடர் எவருமில்லை" என்றான். "எவரோ கேட்கிறார்கள். எவரோ என்னை நோக்குகிறார்கள். என் உட்புலன் பதற்றம் கொள்கிறது" என்று

குந்தி சொன்னாள். கர்ணன் “இங்கிருந்து ஒரு சொல்லும் பிற மானுடர் செவிகளுக்குச் செல்லாது” என்றான்.

குந்தி “நான் என்ன சொல்லவேண்டுமோ அதை சொல்லிவிட்டேன், மைந்தா” என்றாள். “நன்று அரசி, உங்கள் விழிநீரை எனக்கு காட்டிவிட்டீர்கள். என் விழிநீரை உங்களுக்கல்ல, எவருக்கும் காட்டும் எண்ணம் எனக்கில்லை” என்று கர்ணன் சொன்னான். குந்தி “அவர்கள் ஐவரும் உனது தம்பியர். உன் உள்ளத்தின் ஆழத்தில் ஒரு கனிவென அதை நீயும் உணர்ந்திருப்பாய்” என்றாள். கர்ணன் “அவ்வுணர்ச்சிகளுக்கு எப்பொருளும் இல்லை” என்றான். குந்தி “உறவுகளுக்கு ஏதேனும் பொருள் உண்டு என்றால் அன்னையின் உறவுக்கும் உடன்பிறந்தார் உறவுக்கும் மட்டுமே. அவை மட்டுமே குருதியாலானவை. குருதி தெய்வங்களால் ஆளப்படுவது” என்றாள்.

கர்ணன் தலையை அசைத்தான். அவன் மேலும் ஏதோ சொல்ல நாவெடுப்பதை உணர்ந்து அதை தடுக்கும்பொருட்டு முந்திக்கொண்டு “நான் சொல்லவந்ததை முழுமையாக சொல்லிவிடுகிறேன்” என குந்தி தொடர்ந்தாள். “உன்னை என் மைந்தன் என நான் அறிவித்தால் என் குருதிமைந்தரில் நீயே முதல்வன். இந்திரப்பிரஸ்தத்தின் முடியுரிமை உனக்குரியது.” கர்ணன் அறியாமல் மெல்ல நகைக்க குந்தி மேலும் விசைகொண்ட சொற்களால் தொடர்ந்தாள் “குருகுலத்து மைந்தர் நூற்றைவருக்கும் நீ முதல்வனாவாய். எனவே அஸ்தினபுரிக்கும் நீயே அரசுரிமை கொண்டவன். உன் முடியுரிமையை யுதிஷ்டிரன் மறுக்கமாட்டான். எந்நிலையிலும் துரியோதனனும் தம்பியரும் உன்னை மறுக்கமாட்டார்கள்.

அவர்கள் ஏற்றார்கள் என்றால் குடித்தலைவர்களும் மறுசொல் உரைக்கவியலாது.”

“கௌரவரும் பாண்டவரும் இருபுறமும் துணைக்க நீ அஸ்தினபுரியின் அரியணையில் அமரமுடியும். துரியோதனனும் பீமனும் அர்ஜுனனும் உன் பெரும்படைத்தலைவர்களாக நிற்பார்கள் என்றால் விரல் சுட்டும் நிலமெல்லாம் உன்னுடையதாகும். பாரதவர்ஷத்தின் பேரரசனாக மும்முடி சூடி நீ அமர இயலும்” என்றாள் குந்தி. கர்ணன் சலிப்புடன் எழுந்துகொண்டு “நல்ல சொற்கள், அரசி. பிறிதொரு தருணத்திலென்றால் என் உள்ளம் எழுச்சிகொண்டிருக்கும். இந்நாள் வரை என் மீது பெய்யப்பட்ட சொற்கள் அனைத்துக்கும் இது உகந்த மறுமொழி. என் மைந்தர் மீதும் வரவிருக்கும் கொடிவழியினர் மீதும் அமரும் அனைத்துச் சிறுமைகளும் நீங்கும். ஆனால் என் உள்ளம் தணிந்து கிடக்கிறது. இச்சொற்களால் ஓர் அணுவிடைகூட என் அகம் அசைவுகொள்ளவில்லை” என்றான்.

“நான் முடிசூடி அமர விழைந்த அரியணைகள் பல. இன்று அவை அனைத்தும் எனக்கு பொருளிழந்து போய்விட்டிருக்கின்றன. போர்க்களத்திற்கு வரும் வீரன் வெளியே இருக்கும் அனைத்தும் பொருளிழப்பதை உணர்வான். அரசி, நான் குருக்ஷேத்ரத்திற்குள் நுழைவதற்கு முந்தைய கணம் என் விழைவுகளையும் கனவுகளையும் முற்றாகவே உதறிவிட்டேன்” என்று சொன்னபடி கர்ணன் சிற்றறைக்குள் நிலையழிந்து நடந்தான். அவன் தலை கூரையில் முட்டவே மீண்டும் அமர்ந்துகொண்டான். “இன்று நான் நாடுவதென்ன என்று எனக்கே தெரியவில்லை. அவைமதிப்பை நாடியதுண்டு. புகழை விழைந்ததுண்டு. வஞ்சங்களை எண்ணியதுண்டு.

இன்று எங்கோ ஓர் இடத்தில் அனைத்தையும் அகலவிட்டு அமர்ந்துவிடவேண்டும் என்று மட்டுமே தோன்றுகிறது.” அவன் நகைத்து “போர்க்களம் ஒரு தவச்சாலை என்பார்கள். எனில் இது துறவே” என்றான்.

குந்தி மெல்ல முன்னகர்ந்தபோது அவள் தலையிலிருந்து ஆடை நழுவ முகம் விளக்கொளியில் துலங்கியது. சற்றே நீர்மை பரவிய விழிகளால் அவனை கூர்ந்து நோக்கியபடி “ஆயினும் ஓர் விழைவு எஞ்சியிருக்கும். அதை பெண்ணென நான் அருகிருந்து உணர்கிறேன். வசுஷேணா, நீ மும்முடி சூடி அரியணையில் அமர்ந்தால் உன்னருகே திரௌபதி அமர்ந்திருப்பாள்” என்றாள். கர்ணன் அறியாது எழுந்து பின் தன்னிலை உணர்ந்து மீண்டும் அமர்ந்து தலையை வெறுமனே அசைத்தான். குந்தி மேலும் குரல் தாழ்த்தி “மைந்தா, பெண் மீது கொள்ளும் வஞ்சமும் காமத்தின் பிறிதொரு வடிவே” என்றாள். “பத்தாண்டு முதிர்ந்த உணவு களிப்பூட்டும் மதுவாகிறது. நூறாண்டு முற்றிய மது நஞ்சாகிறது என்பார்கள். பெருவிழைவு கொல்லும் நஞ்சு. அடைந்து கடப்பதொன்றே அதை வெல்லும் வழி.”

“ஆம், ஆனால் அதற்கும் பொழுதுகடந்துவிட்டது, அரசி. இது அதற்கான தருணமும் அல்ல” என்று கர்ணன் சொன்னான். “ஏன்?” என்றாள் குந்தி. “இப்போரை இன்றிரவே நிறுத்த இயலும். நான் சென்று என் மைந்தரிடம் சொல்கிறேன். அங்கிருந்து தொழுத கையுடன் யுதிஷ்டிரனும் தம்பியரும் இங்கு வருவார்கள். துரோணரிடமும் கிருபரிடமும் உண்மையை உரைப்பார்கள். உடன் நானும் வருகிறேன். அஸ்தினபுரியின் அரசனிடமும் தம்பியரிடமும் நான் உரைக்கிறேன். பிதாமகர் பால்ஹிகர் முடி தொட்டெடுத்து உனக்கு சூட்டட்டும். நாளை

புலரியில் இப்பெரும்போர் நின்றுவிட்டதென்று படைகளுக்கு அறிவிப்போம். எஞ்சியவர்களாவது தங்கள் மனைவியரிடமும் மைந்தரிடமும் சென்று சேரட்டும். தந்தையரும் மைந்தர் மீள்வதைக் கண்டு மகிழட்டும். போதும் இந்த அழிவு! இத்தனை குருதியை அளித்த பின்னராவது நமக்கு சற்று அறிவெஞ்சியதென்று உலகு அறியட்டும்.”

குந்தி அவ்வுணர்ச்சியை கண்டுகொண்டு “என் பொருட்டு அல்ல, என் மைந்தர் பொருட்டும் அல்ல, இப்போர் நின்றால் உயிர் பிழைக்கும் பல்லாயிரவர் பொருட்டு நீ என்னை எண்ணலாகாதா?” என்றாள். கர்ணன் “இங்கிருந்து உயிர் எஞ்சி மீண்டுசெல்பவர்கள் உயிரளித்த அனைவருக்கும் கடன்பட்டவர்கள். அக்கடனிலிருந்து அவர்கள் மீள இயலுமா என்ன?” என்றான். “அரசி, ஒரு போர் எந்த நஞ்சினால் தொடங்கப்பட்டதோ அது முற்றழியாமல் ஒருபோதும் முடிவடையாது. இப்போரை இன்று இவ்வண்ணம் சில சூழ்ச்சிகளினூடாக நிறுத்துவோமெனில் அந்நஞ்சு எஞ்சியிருக்கும். ஆழத்தில் புளித்து நுரைத்து பொங்கும். என்றேனும் மேலும் விசை கொண்ட ஒரு பெரும்போர் இங்கே எழும். இது உடலில் ஊறிய நஞ்சு. கட்டியென்று ஆகி பழுத்து சீழாகி உடைந்து வெளியேறட்டும். உடல் நலம்பெற அது ஒன்றே நாம் செய்யக்கூடியது.”

குந்தி “நீ போர்வெறி கொண்டிருக்கிறாய். இப்போரில் வென்று பெருவீரனென புகழ்பெறக்கூடும் என்று எண்ணுகிறாய். நோக்கு, இப்போரில் வென்றாலும் நீ சூதனே. எந்நிலையிலும் உனக்காக அஸ்வமேதமோ ராஜசூயமோ செய்ய அந்தணர் வரப்போவதில்லை. உன் அரசும் கொடிவழியினரும் என்றும் அஸ்தினபுரிக்கு அடிபணிந்தே வாழவேண்டியிருக்கும். உன்

களமறத்தை பாடிநிறுத்துவார்கள் என்று எண்ணுகிறாய். அது நிகழப்போவதில்லை. அனைவரும் அறிவார், இப்புவியில் பிறந்த வீரர்களில் நீயே முதன்மையானவன் என்று. ஆனால் அதை சூதர் மட்டுமே பாடுவார்கள். சூதர் பாடல் என்பது அன்றாடம் அலைக்கும் காற்று. புலவர் சொல்லே என்றுமிருக்கும் மலைத்தொடர்" என்றாள்.

"நீ ஒருபோதும் புலவரால் பாடப்படமாட்டாய். சூத்திரனும் சூதனும் அசுரனும் அரக்கனும் நிஷாதனும் கிராதனும் முதன்மை வீரர்கள் என்று அமைவதை ஒருபோதும் காவியகர்த்தர்கள் விரும்புவதில்லை. நீ ஆற்றும் அனைத்து வீரமும், நீ கொள்ளும் அனைத்து வெற்றியும் வெறும் சொற்களென இருமுறை செவிகொள்ளப்படும். மூன்றாம் தலைமுறையில் முற்றழியும். இன்றுவரை சூத்திரன் என்று பிறந்து காவியத்தலைவனான எவர் உளர்? இனி என்று ஒரு சூத்திரன் காவியத்தலைவனாகப் போகிறான்? இயலாது. என் சொல்லில் மட்டுமே உன் பெரும்புகழும் உள்ளது. அதை உணர்க!" என்றாள்.

"அதையும் நான் அறிவேன். அரசி, புகழையும் நான் நாடவில்லை. இக்களத்திற்கு வெளியே என்னைப்பற்றி ஒரு சொல் எஞ்சவில்லையெனினும் எவ்விழப்பும் இல்லை என்று என் நெஞ்சைத்தொட்டு இன்று உங்களிடம் சொல்கிறேன்" என்றான் கர்ணன். "பின் எதற்காக? ஏன் இந்த வீண் உறுதி?" என்று குந்தி சீற்றத்துடன் கேட்டாள். "அரசி, ஆயிரம் சல்லடைகளால் அரிக்கப்பட்டு எஞ்சுவதே களத்தில் நம்முடன் இருக்கிறது. பீஷ்ம பிதாமகர் குலநெறி என வந்தடைந்தார். நான் அதை செஞ்சோற்றுக்கடன் என்று உரைப்பேன்" என்றான் கர்ணன்.

“பாலையில் வழி தவறி தன் தசைகளையும் குருதியையும் ஜடரை அன்னைக்கு பலியென அளித்து இறுதி சித்தத்துளி உலர்ந்தழியும் கணத்தில் நின்றிக்கும் ஒருவனுக்கு அளிக்கப்படும் ஒரு குவளை நீருக்கு நிகராகாது மூன்று தெய்வங்களும் அளிக்கும் விண்ணுலகு. அவன்முன் விண்ணவனோ மூவிழியனோ படைத்தவனோகூட ஒரு குவளை நீராக அன்றி வேறு வடிவில் எழ இயலாது” என கர்ணன் சொன்னான். “அந்த நீரென எனக்கு முன் வந்து நின்றவன் என் தோழன். அவன் எனக்கு அளித்தது என்ன என்று என்னையன்றி எவரிடமும் என்னால் சொல்லி புரியவைக்க இயலவில்லை. என் துணைவியர், மைந்தர் எவரிடமும் அதை நான் சொல்லி புரியவைக்க முடியவில்லை.”

“நீ சிறுமைப்படுத்தப்பட்டபோது உன் தோள்தழுவி நின்று உன்னை காத்தான். உன்னை அரசன் என்றாக்கினான். ஆனால் அதை ஒரு போர்சூழ்ச்சியென்றே செய்திருக்கக்கூடும். என் மைந்தனின் விற்திறன் கண்டு அஞ்சி இணையான வில்லவன் ஒருவனுக்காக காத்துக்கொண்டிருந்தவன் அவன். உன்னைக் கண்டதும் அச்சம் நீங்கி வந்து அணைத்துக்கொண்டான். உன்னை அருகிருத்துகையிலேயே பாரதவர்ஷத்தை வெல்ல முடியும் என்று கண்டுகொண்டான். உன்னை வெல்வதற்கு மிக எளிய வழி அத்தருணத்தில் நீ விழையும் ஒரு எளிய ஒப்புதலை உனக்களிப்பது மட்டுமே என்று அறிந்தவன் அவன். ஒரு கைப்பிடி சோற்றை பலியாக அளித்து தெய்வத்தை உடன்நிறுத்துவதுபோல் தன்னுடன் நிறுத்திக்கொண்டான்” என்றாள் குந்தி.

எழுந்து அவனருகே வந்து குனிந்து “அவன் உன்னை முதன்மையாகக் கருதினான் எனில் அரசரவையிலும் வேள்விகளிலும் நீ சிறுமைப்படுத்தப்பட்டபோது அவன் குரல் ஏன் எழவில்லை? உன்னை படைவிலக்கம் செய்து பீஷ்மர் ஆணையிட்டபோது அனைத்தையும்விட மேலென உனக்காக ஏன் அவன் பேசவில்லை? அப்போது அவன் உள்ளத்தில் ஓங்கி நின்றவை எவை? அவற்றுக்காகவே அவன் இன்று போரிடுகிறான். தன் முடியும் நாடும் புகழுமன்றி பிறிதொன்றும் அவன் எண்ணத்தில் இல்லை. அவற்றை அடைவதற்கான படைக்கருவி என மட்டுமே அவன் உன்னை கண்டிருக்கிறான். இதை உணரவில்லை எனில் நீ அறிவிலி அல்ல. ஆணவத்தால் அறிவை இழந்த கீழ்மகன்” என்றாள் குந்தி.

“என் தோழனின் பிழைகளை கணக்கெடுப்பது என் இயல்பல்ல. பிற அனைவரையும்விட அவனை நான் அறிவேன். மண்விழைவு மிகுந்தவன். அதைவிட தன் தம்பியர் மேல் பற்று மிகுந்தவன். அரசி, என்றேனும் தம்பியர் நூற்றுவரில் எவருக்கேனும் நான் தீங்கிழைத்திருந்தால் அஸ்தினபுரியின் அரசன் என்ன செய்திருப்பான்? ஒருகணமும் தயங்காமல் வாளேந்தி என்னை கொல்ல வந்திருப்பான். என் குருதி கொண்டே அடங்கியிருப்பான். அதை நான் அறியேனா என்ன? இப்புவியில் அவன் உள்ளத்தில் எனக்கு எத்தனை படிகளில் இடம் என்று எந்நிலையிலும் கணக்கெடுக்க மாட்டேன். அன்பை அளவிடுபவர் ஒருபோதும் அன்பை அறிவதில்லை.”

“அவனுக்கு நான் யார் என்பதல்ல, எனக்கு அவன் யார் என்பதே நான் எண்ணுவது. எனக்கு அவனே முதன்மையானவன். என் உடன்பிறந்தாரைவிட, அன்னையைவிட, என் துணைவியரையும்விட, மைந்தரையும்விட, என்

குடித்தெய்வங்களையும்விட அவனே எனக்கு வேண்டியவன். அவனை கைவிடும்படி என் தந்தைவடிவான கதிரவனே வந்து கோரினாலும் ஒப்பமாட்டேன். என் கவசத்தையும் குண்டலங்களையும் குருதிவார பிடுங்கி எறியவே துணிவேன். அவன் பொருட்டு களத்தில் உயிர் விடுவதே இப்பிறவியில் நான் ஆற்றக்கூடிய முதற்கடன்" என்றான் கர்ணன்.

குந்தி சீற்றத்துடன் சொன்னாள் "இப்போது நீ பேசுவது ஷத்ரியனின் குரலில் அல்ல. மண்ணையும் முடியையும் வான்சிறப்பையும் குடிப்பெருக்கையும் விழைபவனே ஷத்ரியன். அவற்றை பிற அனைத்தையும்விட முதன்மையாகக் கருதுபவன். தெய்வங்களையும் மூதாதையரையும் நெறிகளையும் அவன் பேணுவதுகூட அந்நான்கு விழைவுகளின் பொருட்டே. அன்னமிட்ட கையை முத்தமிட்டு அடிபணிபவன் சூத்திரன். ஏவிய கையை இறையெனக் கொண்டாகவேண்டிய தெய்வ ஆணை அவனுக்கே." இகழ்ச்சியால் வாய் கோணலாக "சூதன் வளர்ப்பினால் உன் உள்ளத்தில் புகுந்த எண்ணம் அது. அதை உதறி உன் குருதிக்கு மீள்க! அதுவே உனக்கு சிறப்பளிக்கும்" என்றாள்.

கர்ணன் புன்னகைத்து "உங்கள் உள்ளம் எவ்வகையில் எழுமென்று இச்சொற்களினூடாக அறிந்தேன். அரசி, நான் சூதனாகிய அதிரதனையும் சூதன் மனைவியாகிய ராதையையுமே என் தாயும் தந்தையும் என்று கருதுகிறேன். என்னில் ஓடும் சூத்திர இயல்பை நான் உதறுவது அவர்களிருவரையும் உதறுவதற்கு நிகர். எந்நிலையிலும் அவர்களை மறுத்து ஒரு சொல் என் உள்ளத்திலோ நாவிலோ எழாதென்று அறிக! நான் அருந்திய முலைப்பால் அவருடையது. நீங்கள் எனக்களித்த குருதி கசந்து கசந்து

அளித்தது. அவர் அளித்த முலைப்பால் இனித்து இனித்து ஊட்டப்பட்டது. அதுவே என் குருதியில் ஓடுகிறது. என் நாவில் சொற்களாகவும் என் உள்ளத்தில் எண்ணங்களாகவும் அதுவே நிறைகிறது.”

வெறுப்புடன் “சூதன்மகன் என்னும் தகுதியையே தலைக்கொள்கிறாயா?” என்று குந்தி கேட்டாள். “ஆம், எந்த அரங்கிலும் நீங்கள் உங்கள் மகன் என்று என்னை சொல்லலாம். நீங்கள் சொல்லிமுடித்த மறுகணமே நான் எழுந்து நான் சூதன்மகனென வளர்ந்தவன் என்பேன். சூதனுக்கு என் மைந்தர்கள் நீர்க்கடன் அளிப்பார்கள். என் கொடிவழியினரின் மூதாதையர் நிரையில் அவர் பெயரும் அவர் தந்தையர் பெயருமே இருக்கும். அரசி, அச்சூதன் மனைவியையே ஒவ்வொரு முறை வில்தொட்டு எடுக்கையிலும் எண்ணி உளத்தில் வணங்குகிறேன்” என்றான் கர்ணன்.

குந்தி மூச்சிரைப்புடன், சீற்றம் கொண்ட விழிகளில் நீர்நிறைய அவனை நோக்கி அமர்ந்திருந்தாள். “சொல்லுங்கள் இந்திரப்பிரஸ்தத்தின் அரசி, உங்களுக்கிணையான அரியணையில் ராதையை உங்களால் அமரச்செய்ய இயலுமென்றால் சொல்க! உங்களை அன்னையென்று நானும் அவையில் ஏற்றுக்கொள்கிறேன். அன்றி எந்த அவையிலும் நான் உங்களை அன்னையென்று சொல்லப் போவதில்லை” என்றான் கர்ணன். குந்தி மெய் தளர்ந்து “இதை நான் எதிர்பார்க்கவில்லை. நீ என்னை அன்னையென்று இரு கை விரித்து ஏற்பாய் என்று எண்ணினேன். பெருங்கொடையென்று என் சொற்களைக் கொள்வாய் என்று நம்பினேன்” என்றாள்.

“அரசி, இரு கை விரித்து உங்களை ஏற்கிறேன். பெருங்கொடை என்றே உங்கள் சொற்களை கொள்கிறேன். நீங்கள் இங்கு வருவதற்கு முன் எவரேனும் என்னிடம் கேட்டிருந்தால் இவ்வாழ்க்கையில் நான் முதன்மையாக நாடுவது அதையே என்று சொல்லியிருக்கவும் கூடும். ஆனால் என் உள்ளம் அதை நாடவில்லை என அது சொல்லப்பட்ட பின்னரே உணர்கிறேன். இத்தருணத்தில் என்னை மீளமீளப் பொருத்தித்தான் என்னை நானே கண்டடைகிறேன்” என்றான் கர்ணன். “எவையெல்லாம் என்னை ஆக்கினவோ அவையனைத்தையும் உதறி உங்கள் மைந்தன் மட்டுமே என்று ஆவது என்னால் இயலாது. அவ்வண்ணம் ஆவேன் எனில் நான் நெறியற்றவன். என் ஆசிரியர்களுக்கும் மூத்தோருக்கும் தெய்வங்களுக்கும் உகக்காதவன். அவ்வண்ணம் ஒரு மைந்தனைக்கொண்டு நீங்கள் இயற்றப்போவதென்ன?”

“என் பொருட்டு நீ படையொழிய முடியுமா, அதை மட்டும் சொல்” என்று குந்தி கேட்டாள். “அதை மட்டுமே நாடி வந்தீர்கள் எனில் மாற்றொரு சொல்லில்லை. இயலாது. என் தோழனின் படைக்கலமாக மட்டுமே என்னை காண்கிறேன். வில்லேந்தி போரில் வென்று அவனை பாரதவர்ஷத்தின் மும்முடி சூட்டி அமரச்செய்வது மட்டுமே என் கடன். பிறிதொரு எண்ணம் எழப்போவதில்லை” என்று கர்ணன் சொன்னான். குந்தி நீள்மூச்சுடன் எழப்போனாள். கர்ணன் மெல்ல எழுந்து அவளருகே வந்து முழந்தாளிட்டு அமர்ந்தான். “உங்களிடம் நான் கோருவதொன்றே. உங்கள் காலில் என் தலையை வைக்கிறேன். உளம் நிறைந்து உங்கள் கைகளை என் தலையில் வைத்து வாழ்த்துக!” என்றான்.

குந்தி வெறுமை நிறைந்த கண்களால் அவனை பார்த்துக்கொண்டிருந்தாள். “அன்னையே, என் இளமையில் நான் எண்ணித் துயருற்ற ஒன்றுண்டு. என்னைக் கருவுற்றபோது என் அன்னை எத்தனை முறை என்னை கசந்திருப்பாள், எப்படியெல்லாம் என்னைத் துறந்து சொல்பெருக்கியிருப்பாள், நான் பிறந்தபோது நோயுற்ற உடல் உறுப்பொன்றை வெட்டி அகற்றுவதுபோல் என்னை அகற்றியிருப்பாள் என்று. அவ்வெறுப்பை எண்ண எண்ண என் உடலும் உள்ளமும் இருப்பும் கசக்கும். விழிநீர் வடித்து இருளுக்குள் தனித்து படுத்திருக்கிறேன். அத்துயர் என் எண்ணங்களிலிருந்து அகன்று என் ஆழத்திலெங்கோ ஒருதுளி நஞ்சென எஞ்சியுள்ளது. இன்று நீங்கள் என்னை உளமுவந்து வாழ்த்துவீர்கள் எனில் அத்துயரிலிருந்து விடுபடுவேன்” என்றான் கர்ணன்.

குந்தி தன் இரு கைகளையும் அவன் தலையில் வைத்து “புகழ் கொள்க! சிறப்புறுக!” என்று வாழ்த்தினாள். கர்ணன் கண்கள் நிறைய முகம் தூக்கி “இது போதும். இப்புவியில் இதற்கப்பால் நான் விழைவது பிறிதொன்றுமில்லை” என்றான். குந்தி “நான் உன்னிலிருந்து விழைவன சில உள்ளன” என்றாள். “சொல்லுங்கள், அன்னையே” என்றான் கர்ணன். “நீ போரிலிருந்து ஒழியலாகாதா? இறுதியாக நான் கேட்பது அதையே” என்றாள். “இல்லை அன்னையே, என்னால் இயலாது” என்று கர்ணன் சொன்னான். “எனில் என் மைந்தர் ஐவரையும் உன் அம்புகள் கொல்லலாகாது என்னும் உறுதியையாவது எனக்குக் கொடு” என்று அவள் கேட்டாள்.

சிறுமியருக்குரிய வீம்புடன் சிவந்திருந்த அவள் முகத்தைப் பார்த்து புன்னகைத்து கர்ணன் “அன்னையே, இப்போதும் என் மைந்தர் ஐவரென்றே சொன்னீர்கள்” என்றான். “ஆம், நீ என்

மைந்தனென்னும் நிலையைத் துறந்து இங்கு நின்றிருக்கிறாய். உன் அன்னையென்று அச்சூதமகளை சொன்னாய்” என்று குந்தி சொன்னாள். “ஆம், நான் மறுத்து ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் என் தோழனின்பொருட்டு இங்கு களம் வந்து நின்றிருக்கிறேன். அவர்களின் முதன்மை எதிரிகள் தங்கள் மைந்தர் ஐவர். அவர்களை கொல்லமாட்டேன் என்னும் சொல்லை நான் அளித்தால் அச்சொல்லை துறந்தேன் என்று மட்டுமே பொருள். அது என்னால் இயலாது.”

“அன்னையென நீ எனக்கு அளிப்பது ஒன்றுமே இல்லையா?” என்றாள் குந்தி. “கேளுங்கள், அன்னையே. இப்போருக்குப் பின் உங்கள் களமுற்றத்தில் வந்து சங்கறுத்து விழுவதென்றால் அவ்வாறே ஆகுக! நான் என்னிலிருக்கும் எதையும் உங்களுக்காக அளிப்பேன். ஆனால் இதை அளிக்க இயலாது. ஏனெனில் ஏற்கெனவே இதை என் தோழனுக்கு அளித்துவிட்டேன். இதை அளிக்கவேண்டியவன் அவன். நீங்கள் விழைந்தால் நாளை அவனிடம் சென்று இவ்வண்ணம் என் அன்னையாகிய நீங்கள் கோருகிறீர்கள் என்று சொல்லி அவன் அளித்தால் உங்களுக்கு அளிக்கிறேன்” என்றான் கர்ணன்.

கூரிய குரலில் “வேண்டாம்” என்று குந்தி சொன்னாள். “என் மைந்தரை நீ கொல்லலாகாது. இதையன்றி வேறெதையும் நான் விரும்பவில்லை. இதை அளிக்கவில்லை எனில் நான் கோரியதை அளிக்காது திருப்பி அனுப்பினாய் என்று மட்டுமே கொள்வேன். ஆம், உன்னை நான் கருவில் கசந்தேன். பின்னர் ஒவ்வொரு கணமும் இனித்தினித்து எண்ணிக்கொண்டிருந்தேன். தெய்வங்கள் அறிக, உன்னை எண்ணாது ஒரு நாள் கடந்து சென்றதில்லை! உன் முகத்தை கனவில் காணாது நான் ஒருகாலைகூட விழித்துக்கொண்டதே

இல்லை" என்று குந்தி சொன்னாள். "ஆனால் இன்று இங்கிருந்து கடந்தால் உன்னை வெறுத்தபடியேதான் செல்வேன். இனி ஒருதுளியும் இனிமை எஞ்சாத கசப்பாகவே நீ என்னுள் எஞ்சுவாய்." அவள் குரல் சீற்றத்துடன் எழுந்தது. "இந்தப் படி கடந்து செல்கையில் உன்மேல் தீச்சொல்லிடுவேன். உன்னைப் பழித்து உரைத்த பின்னரே இங்கிருந்து நீங்குவேன்."

கர்ணன் துயருடன் அவள் கையைப்பற்ற தன் கையை நீட்டினான். அந்தக் கையை பின்னால் இழுத்தபடி "வீண்சொல் எதுவும் எனக்குத் தேவையில்லை. உறுதியென ஏதேனுமிருந்தால் சொல்" என்றாள். "அன்னையே, நான் நீங்கள் கோருவதை அளிக்க இயலாது. வேண்டுமெனில் ஒன்று செய்கிறேன். நீங்கள் இங்கிருந்து நீங்குவதற்குள் இங்கேயே இறந்துவிழுகிறேன். உங்கள் பழிச்சொல் பெறுவதிலிருந்து அவ்வண்ணம் தப்பிக்கிறேன்" என்றான் கர்ணன். "இங்கே நீ இறந்து விழுந்தாலும் என் பழிச்சொல்லிலிருந்து தப்ப மாட்டாய். உன் குருதியைத் தொட்டு சொல்வேன். உன்னை வெறுக்கிறேன், உன் வருபிறவிகளிலும் நீ என் வெறுப்புக்குரியவன், உன் குடிகளும் கொடிவழியும் பழிச்சொல் சுமக்கட்டும் என்று" என்று குந்தி சொன்னாள்.

திகைப்புடன் கர்ணன் அவள் முகத்தை பார்த்துக்கொண்டிருந்தான். பின்னர் "இதுநாள்வரை பழியும் தீச்சொல்லும் ஏளனமும் சூடியே என் வாழ்க்கை சென்றது. இனியும் அவ்வாறே எனில் அது நிகழ்க! வருபிறவிகளிலும் அதுவே என் ஊழ் எனில் அவ்வாறே ஆகுக! எனக்கு வேறு வழியில்லை, அன்னையே" என்றான். "நீ நான் சொல்வதை இன்னமும் புரிந்துகொள்ளவில்லை. என் உள்ளத்து அனலை நீ உணரவில்லை" என்றாள் குந்தி. "என் மைந்தர் இறப்பதைப்

பற்றி மட்டும் நான் கவலை கொள்ளவில்லை. அவர்கள் தங்கள் தமையன் கையால் உயிர்விடுவதைப் பற்றியே கருதுகிறேன். அப்பெரும்பழியை என் மைந்தனாக நீ சூடுவதைப்பற்றி அஞ்சுகிறேன்.”

கர்ணன் “அதை முற்றுணர்கிறேன், அன்னையே. உங்கள் சொல் என்னையும் என் கொடிவழியினரையும் கொடுந்தெய்வம் எனச் சூழ்ந்து தொடருமென்று அறிவேன். ஆயினும் நான் இதையே சொல்கிறேன், இப்பழியும் இழிவும் நான் என் தோழனுக்கு அளிக்கும் கொடை எனில் நான் செய்வதற்கொன்றுமில்லை” என்றான். பின்னர் புன்னகைத்து “உயிர் அளிப்பது தற்கொடைகளில் உச்சம் என்பர். அதற்கும் மேல் புகழை அளிப்பது. அதற்கும் மேல் பெருங்கொடை என ஒன்றுண்டு என்று இப்போது அறிந்தேன். வீடுபேற்றை, கொடிவழியினரின் வாழ்க்கையை அளிப்பது” என்றான்.

“பெறுவதில் நான் நிறைவுற்றதில்லை. எனவே கொடுப்பதில் அதை கண்டுகொண்டேன். எதையெல்லாமோ உவந்து கொடுத்திருக்கிறேன். இதையும் கொடுக்க என்னால் இயலுமா என்று என்னிடம் கேட்கின்றன போலும் தெய்வங்கள். ஆமென்று சொல்வதொன்றே என் முன் உள்ள வழி” என்றான் கர்ணன். “என்னிடம் இனி எஞ்சுவதொன்றுமில்லை, அன்னையே. ஒருவேளை இதுவே என் வீடுபேறு போலும்.”

குந்தி எழுந்து சலிப்புடன் தலையசைத்து “நீ என்னை புறக்கணிக்கிறாய் என்றே கொள்கிறேன். இப்புவியில் என்னைவிட பிற அனைவரும் மேல் என்று என்னிடம் சொல்கிறாய்” என்றாள். அவள் விழிகளில் நீர் நிறைந்தது. “அதை சொல்ல முழு உரிமை உனக்கு உண்டு. நான் அதை கேட்கவேண்டியவளும்கூட” என்றாள். கர்ணன் “இவ்வண்ணம்

உணர்கிறீர்கள் எனில் நான் என்ன சொல்வது, அன்னையே?” என்றான். குந்தி “ஆனால் இத்தருணம் நன்றே. இந்த ஒருநாழிகைப் பொழுதில் நான் நூறு இருளுலகத் தண்டனைகளை அடைந்தேன். நான் செய்த அனைத்தையும் நிகர் செய்துவிட்டேன்” என்றாள்.

அவள் நடக்க கர்ணன் தொய்ந்த தோள்களும் தளர்ந்த நடையுமாக உடன் சென்றான். “நலம் சூழ்க!” என அவனை வாழ்த்திவிட்டு குந்தி குடில் கதவை திறந்தாள்.

# கார்கடல் - 29

குடில் கதவின் படலில் கை வைத்த குந்தி அரவுமணம் பெற்ற புரவிபோல் உடல் சிலிர்த்து நின்றாள். “இங்கே எவரோ இருக்கிறார்கள்” என்றாள். கர்ணன் ஒன்றும் சொல்லாமல் நின்றான். “இந்த அறைக்கு அடியில் நிலவறை ஏதேனும் உள்ளதா?” என்றாள் குந்தி. “அன்னையே, இது குருக்ஷேத்ரக் களம்... இது பாடிவீடு” என்றான் கர்ணன். “ஆம், ஆனால் இங்கே எவரோ இருக்கிறார்கள். காலடியில். ஆழத்தில்” என்றாள் குந்தி. கர்ணன் வெறும் நோக்குடன் நின்றான். “இங்கே மறைந்திருப்பவர் எவராக இருந்தாலும் அவர்களுக்கு உன்மேல் ஆதிக்கம் இருக்கிறது. அவர்கள் எனக்கெதிராக உன்னை சிறைகட்டி வைத்திருக்கிறார்கள்” என்று அவள் சொன்னாள்.

அவன் அதற்கும் மறுமொழி சொல்லாமல் நின்றது அவளில் சீற்றத்தை உருவாக்கியது. “நீ என்னிடமிருந்து மறைப்பது என்ன?” என்றாள். அவன் முகம் மாறவில்லை. “என்மேல் கொண்ட வஞ்சத்தை நீ மறைக்கவில்லை. அதற்கப்பால்

என்ன?” என்று அவள் மீண்டும் கேட்டாள். கர்ணன் “இதற்கெல்லாம் நான் என்ன மறுமொழி சொல்ல முடியும்? நான் எதையும் மறைக்கவில்லை. ஆனால் ஆழங்களில் திகழ்பவை என்ன என்று அவை வெளிவரும்போது மட்டுமே நாமனைவரும் அறிகிறோம்” என்றான். குந்தி சீற்றம் கொண்டபோது அவள் புன்னகைப்பதுபோல தோன்றியது. “வஞ்சப்பேச்சை சகுனியிடமிருந்து கற்றுக்கொண்டிருப்பாய்” என்றாள்.

அவள் மெல்ல உருமாறுவதைப்போல அவனுக்குத் தோன்றியது. அவள் விழிகளில் அவன் அதுவரை அறிந்திராத கூர்மை எழுந்தது. களிப்பாவை கோரி அழுதுசீறும் சிறுமி போலவும் மானுடம் மேல் காழ்ப்புகொண்ட முதுமகள் போலவும் ஒரேதருணத்தில் தோன்றினாள். “நான் எதையும் பெறாமல் கிளம்பிச்செல்கிறேன் என எண்ணி நீ ஆறுதல் கொண்டாய் அல்லவா?” என்றாள். கர்ணன் “நீங்கள் துன்புற்று என்னையும் துன்புறுத்த விழைகிறீர்கள்” என்றான். “நான் உன்மேல் தீச்சொல்லிடுவேன் என்றபோது நீ அகத்தே ஏளனம் கொண்டாய் அல்லவா?” என அவள் கேட்டாள்.

கர்ணன் துயரம் நிறைந்த விழிகளால் நோக்க “நீ அவ்வாறுதான் எண்ணுவாய். ஏனென்றால் நீ பெண்களின் உள்ளத்தை அறிந்ததே இல்லை. உன் இரு துணைவியரும் உன்னை இருவகையில் துறந்தனர். உன் வளர்ப்பன்னையுடன் உனக்கு உளஒருமை இல்லை. நீ விழையும் பெண் உன்னை கடும்வெறுப்புடனன்றி எண்ணமுடியாதவள்” என்றாள். கர்ணனின் உடல் நடுங்கத் தொடங்கியது. அவன் உதடுகள் சொல்லின்றி மெல்ல அசைந்தன. “ஏனென்றால் நீ உன்னைப் பற்றி அன்றி எதையும் எண்ணியதில்லை. நீ உன்

தோழனுக்காக இவ்வாறு நிலைகொள்வதாக சொல்லிக்கொள்கிறாய். அது பொய். நீ எண்ணுவதெல்லாம் உன்னைப்பற்றி மட்டுமே.”

கர்ணன் கால் தளர்ந்தவன்போல் சற்றே பின்னடைய குந்தி திரும்பி அவனை நோக்கி ஓர் அடி எடுத்து வைத்தாள். “நீ பிறனைப் பற்றியும் எண்ணுபவன் என்றால் சொல், எத்தனை முறை உன் மைந்தரைப் பற்றி எண்ணினாய்? என் குருதியிலெழுந்த உன் மைந்தரை சூதர்களென அடிமைப்பணிக்கு அனுப்பியபோது ஒருநாளேனும் அவர்களின் உள்ளத்தைப் பற்றி எண்ணினாயா? எண்ணியிருக்கமாட்டாய்” என்று குந்தி சொன்னாள். “முலையூட்டாத அன்னையை குழந்தை வெறுப்பதுபோல் தன்னில் ஒரு பகுதியை உருக்கி தனக்கு அளிக்காத ஆண்மகனை பெண் வெறுக்கிறாள். நீ உன்னில் ஒரு துளியையும் விட்டதில்லை. இரும்பில் வார்த்த சிலை என இத்தனை காலமும் இருந்திருக்கிறாய். நீ என்னை புரிந்துகொள்ளமாட்டாய் என நானும் அறிந்திருந்தேன். ஏனென்றால் நீ எவரையுமே புரிந்துகொள்ளவில்லை.”

கர்ணன் மெல்ல முனகினான். குந்தி “அறிந்துகொள், நீ இந்த குருக்ஷேத்ரக் களம்விட்டு மீளமாட்டாய். ஏனென்றால் நீ எவரேனும் ஆகுக, நீ பொருதிக்கொண்டிருப்பது இந்த யுகத்தின் தலைமகனிடம். நாளைய யுகத்தின் படைப்பாளனிடம். நீ வெல்லவே முடியாது. எவரும் வெல்லமுடியாது. எதுவும் தடைநிற்க இயலாது. நான் பதைப்பது அவன் வெல்லவேண்டும் என்பதற்காக அல்ல. அவன் வெல்வான். என் தவிப்பு அந்த வேள்வியில் என் மைந்தர் அவிப்பொருளாகிவிடக்கூடாது என்பதற்காக. ஆனால் நீ அழிவாய். இந்த குருக்ஷேத்ர மண்ணில் நெஞ்சுடைந்து விழுவாய். அப்போது அறிவாய், நீ

ஒருநாள்கூட வாழவில்லை என. அன்பையே நீ அறிந்ததில்லை. மைந்தரின்பத்தையும் அறியவில்லை. உன் வாழ்நாளெல்லாம் நீ உன்னையே சமைத்துக்கொண்டிருந்தாய்" என்றாள்.

"தருணங்களுக்கேற்ப உருமாறியும் உருப்பெற்றும் கடந்துவருவதே மானுட இயற்கை. நீ அத்தனை தருணங்களிலும் உன்னை மாறாது அமைத்துக்கொண்டாய். ஆகவே தளிர்க்காத பூக்காத கல்மரமாக நின்றாய்" என்று குந்தி சொன்னாள். "உன்னைப்போலவே துணியை ஊசி என வாழ்க்கையை கடந்துசென்றவர் பீஷ்மர். அவர் அதோ அம்புப் படுக்கையில் கிடக்கிறார். அத்தனை அம்புகளும் அவரே அவர்மேல் எய்துகொண்டவை. ஒவ்வொன்றையாக எண்ணி எண்ணி உணர்ந்து நாள்கணித்து வான்நோக்கி படுத்திருக்கிறார். எண்ணிக்கொள், உனக்கும் அதுவே இறுதி. குருக்ஷேத்ரத்தில் வந்து முடிவதற்காகவே நீ இதுவரை கடந்துவந்தாய்."

குந்தி தன் சொற்களின் விசையால் உடல் இறுக இரு கைகளையும் விரல்கோத்து பற்களைக் கடித்தபடி அவனை பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் உடல் மெல்ல நடுங்கிக்கொண்டிருப்பதை அவன் கண்டான். பின்னர் பெருமூச்சுடன் அவள் தணிந்தாள். விழிதிருப்பி குடில்சுவர்களை நோக்கினாள். "இங்கே எவரோ இருக்கிறார்கள்" என்றாள். அவன் பெருமூச்சுடன் தானும் தணிந்தான். இருவரும் அவர்கள் சென்ற அந்த உச்சத்திலிருந்து இரண்டு வழிகளினூடாக மெல்ல இறங்கினார்கள். மீண்டும் அவன் பெருமூச்சுவிட்டபோது குந்தியும் நீள்மூச்செறிந்தாள். "நீள்பொழுதாகிறது. எனக்காக தேர் காத்திருக்கும்" என்று அவள் சொன்னாள்.

நிலைமீண்டு அவள் உள்ளம் அனைத்தையும் தொட்டுத்துழாவத் தொடங்கிவிட்டதை அவன் உணர்ந்தான். எண்ணியிராத கணத்தில் “நீ உன் தோழனுக்கு அளித்த சொல் என்ன?” என்றாள். “நான் கூறிவிட்டேன், அன்னையே” என்றான். “மிகச் சரியாக சொல். உன் தோழனுக்கு நீ அளித்த சொல் என்ன?” என்றாள். “என்ன?” என்றான் கர்ணன். “துரியோதனனுக்கு நீ என்ன சொல்லுறுதியை அளித்தாய்? இறுதியாக நீ அவனிடம் சொன்ன சொற்கள் என்ன?” என்றாள் குந்தி. கர்ணன் “அர்ஜுனனை களத்தில் வெல்வேன். களம்வென்று அவர் மும்முடிசூடி அஸ்தினபுரியின் அரியணையில் அமரும்படி செய்வேன் என்று வாளுருவி வஞ்சினம் உரைத்தேன்” என்றான்.

“நன்கு நோக்கு. அர்ஜுனனை கொல்வேன் என்று மட்டுமே நீ கூறியிருக்கிறாய்” என்று குந்தி சொன்னாள். கர்ணன் குழப்பத்துடன் “ஆம், ஆனால் அவரை அரியணை அமர்த்துவேன் என்று சொன்னபோது நான் எண்ணியது...” என தொடங்க அவள் கையமர்த்தி “நீ சொன்ன சொற்களுக்கு மட்டுமே பொறுப்பாவாய்” என்றாள். “ஏனென்றால் அத்தருணத்தில் அச்சொற்களை சொல்ல வைப்பவை தெய்வங்கள். சொற்களின் பொருளையும் அவையே வகுக்கின்றன.” கையை நீட்டி “நீ அர்ஜுனனை மட்டுமே கொல்வேன் என அவனிடம் சொல்லுறுதி அளித்தாய். ஆகவே பிற நால்வரையும் கொல்ல மாட்டேன் எனும் சொல்லை எனக்களி” என்றாள்.

“அன்னையே...” என்றான் கர்ணன். “இனி உன் தோழனின் பெயரைச் சொல்லி நான் கோருவதை நீ ஒழிய இயலாது. தோழனுக்கு நீ அர்ஜுனனை மட்டும்தான் கொல்வேன் என்று சொல்லளித்திருக்கிறாய் என நீயே சொன்னாய்” என்றாள் குந்தி.

கர்ணன் திகைத்து உடலெங்கும் பரவிய பதற்றத்துடன் நிற்க நீட்டிய கையை அசைத்து “சொல்லுறுதி அளி... உன் உள்ளத்தில் சற்றேனும் என்னை கருதினாய் என்றால் உன் சொல் எழுக!” என்றாள். அவன் எண்ணமற்றவன்போல விழி வெறித்திருக்க “அன்னையே...” என்றான். அவள் அவன் கையைப்பற்றி தன் கைமேல் வைத்து “சொல்” என்றாள். அவன் கை நடுங்கியது. அது வெம்மைகொண்டிருந்தது. குந்தி “சொல்... உன் நாவால் சொல்” என்றாள். “ஆம், சொல்கிறேன்” என்றான். “அர்ஜுனனை அன்றி பிற நால்வரையும் எந்நிலையிலும் கொல்லமாட்டேன் என்று சொல்” என்றாள் குந்தி. அவன் “அர்ஜுனனை அன்றி பிற நால்வரையும் எந்நிலையிலும் கொல்லமாட்டேன்” என்றான்.

குந்தி அவன் கையை விடாது பற்றிக்கொண்டு “அர்ஜுனனை கொல்ல முயல்வாய் என்றுதான் நீ சொல்லளித்திருக்கிறாய்” என்றாள். அவன் சொல்ல வாயெடுப்பதற்குள் “அதை நீ கடைக்கொள்ளலாம்” என்றாள். அவன் கை நடுங்கிக்கொண்டிருந்தது. “நீ உன்னிடமிருக்கும் நாகபாசத்தால் அர்ஜுனனை கொல்ல முயல்வாய் அல்லவா?” என்றாள். “ஆம்” என்று கர்ணன் சொன்னான். “அதில் காண்டவக்காட்டிலிருந்து தப்பிய தட்சன் என்னும் நாகம் அவனுக்காக காத்திருக்கிறது என்றார்கள். என்றேனும் பழிதீர்க்கும் பொருட்டு உன் ஆவநாழியில் உறங்குகிறது அது” என்றாள் குந்தி. கர்ணன் “அதிலிருந்து அவன் தப்ப முடியாது... மூவுலகில் எங்கு சென்று ஒளிந்தாலும் அது அவனை தேடிவரும். எனென்றால் அது அவனே எஞ்சவிட்ட நஞ்சு” என்றான்.

“ஒவ்வொருவரும் அவ்வாறு எதையோ விதைக்கிறார்கள்” என்று குந்தி சொன்னாள். கர்ணன் “ஆம்” என்றான். அவள்

சொல்லவருவதென்ன என அவன் எண்ண முயன்றான். ஆனால் அவளுடைய அண்மையும் அருகிலெழுந்த நீர்விழிகளும் அவனை உளம்குவிய முடியாமல் ஆக்கின. குந்தி “அதை நீ அவன்மீது ஏவாதொழிய இயலாது. ஆனால் உன் தோழனுக்களித்த சொல் அதை நீ அவன்மேல் ஏவுவாய் என்றுதான். அதை நீ மீள மீள ஏவுவாய் என்றல்ல” என்றாள் குந்தி. “நீ அர்ஜுனனை வெல்வாய் என்ற சொல்லின் பொருள் அந்த அம்பை ஏவுவாய் என்று மட்டுமே. ஏவுக! ஆனால் ஒருமுறை மட்டுமே ஏவுக!” என்று தொடர்ந்தாள். “இல்லை” என்று கர்ணன் சொல்ல அவள் இடைமறித்து “உன் தோழனுக்கு அளித்த சொல்லை மறுக்காமல் நீ எனக்களிக்கக் கூடியது இது ஒன்றே. ஒருமுறை மட்டும் அரவம்பை அர்ஜுனன் மீது ஏவுக! பிறிதொருமுறை அதை அவன் மீது ஏவாதொழிக!” என்றாள்.

“ஆனால் அது எவ்வாறு...” என்று கர்ணன் முனகலாகக் கேட்க “நீ அளித்த சொல்லை மீறாது எனக்களிக்கும் கொடை அது ஒன்றுதான். நீ அதை எனக்கு அளித்தாகவேண்டும். இதை ஒழிந்தாயெனில் நீ என்னை புறந்தள்ளுகிறாய் என்றே பொருள்” என்றாள் குந்தி. கர்ணன் சலிப்புடன் சென்று தன் பீடத்தில் அமர்ந்தான். குந்தி அவனை அணுகி “அதில் எவ்வகையிலும் சொல் மீறல் இல்லை. உன் சொல்லுக்கு நீ முழுமையாகவே இருக்கிறாய்” என்றாள். “அந்நாகபாசம் எந்நிலையிலும் எவரையும் தப்பவிடாது என்றால் அதை மறுமுறை செலுத்தவேண்டிய தேவைதான் என்ன?” கர்ணன் “அது வில்லில் இருந்து எழுந்தால் குறிபார்க்கப்பட்டவரை கொல்லாது மீளாது, ஐயமே தேவையில்லை” என்றான். “பிறகென்ன?” என்று குந்தி கேட்டாள். “நீ அதை அவன்மேல் ஏவினால் அவன் தப்ப முடியாது.”

“அவ்வாறெனில் அச்சொல்லுறுதி உங்களுக்கு எதற்காக?” என்றான் கர்ணன். “உனக்காகத்தான். முதல்முறை நீ அதை ஏவுவது உன் தோழனுக்கு நீ அளித்த சொல்லுக்காக. அப்பழி உன்னை மறுபிறவிகளில் தொடராது. ஆனால் நீ அதை மீண்டும் செலுத்தினால் உன் தனிவஞ்சம் அதில் இருக்கும். அதனூடாக அவன் இறந்தால் உனக்கு அவ்வுலகிலும் இடமிருக்காது. உன் கொடிவழியினரிலும் அப்பழி நீடிக்கும்.” கர்ணன் குழம்பிய விழிகளுடன் நோக்கினான். “நான் எண்ணுவது உன்னைப்பற்றி மட்டுமே” என்றாள் குந்தி. கர்ணன் பெருமூச்சுடன் “அவ்வாறே ஆகுக!” என்றான். “இது நீ எனக்களிக்கும் சொல்லுறுதி. அரவம்பை ஒருமுறைக்குமேல் நீ ஏவமாட்டாய்” என்றாள் குந்தி. “ஆம்” என்று கர்ணன் சொன்னான்.

குந்தி நீள்மூச்செறிந்து “நான் எண்ணிவந்தது நிகழவில்லை. ஆனால் எனக்கென இவ்வளவேனும் நீ உளம்கனிந்ததில் நிறைவுகொள்கிறேன்” என்றாள். கர்ணன் அவளையே நோக்கிக்கொண்டிருந்தான். பின்னர் “அன்னையே, நான் ஒன்று கேட்கலாமா?” என்றான். “சொல்” என்றாள். “நீங்கள் சொன்னீர்கள், நான் கல்மரம் என்று.” குந்தி சிலகணங்கள் அவனை நோக்கியபின் “சினத்தால் அவ்வாறு சொன்னேன், சினமில்லையேல் சொல்லியிருக்க மாட்டேன். ஆனால் அது உண்மை” என்றாள். “என்னை நீங்கள் சந்தித்ததே இல்லை. ஆனால் மிகமிக அணுக்கமாக என்னை அறிந்திருக்கிறீர்கள்” என்று கர்ணன் சொன்னான். “அதிலென்ன வியப்பு? நான் உன்னை உளம்தொடர்ந்துகொண்டே இருந்தேன்” என்றாள் குந்தி.

“அதனால்தான் உங்கள் வெறுப்பும் அத்தனை கூர்கொண்டிருந்தது. அச்சொற்களிலிருந்து நான் இனிமேல் மீளவே முடியாதென எண்ணுகிறேன்” என்று கர்ணன் சொன்னான். “சொல்க, அன்னையே! நான் தன்மையநோக்கும் ஆணவமும் கொண்டவன் என்றீர்கள். முற்றிலும் உண்மை அது. நான் ஏன் அவ்வாறு இருக்கிறேன்?” குந்தி “உன் இயல்பு அது” என்றாள். “அன்னையே, என்னை முலையூட்டி வளர்த்த ராதையின் உள்ளம் என்னுடன் இல்லை. என்னை இன்றும் அணைத்துக்கொள்கிறார். அமுதூட்டுகிறார். ஆனால் அவர் என்னைத் தொட்டால், என் விழிகளை அண்மையில் அவர் விழிகள் சந்தித்தால் அறிகிறேன் அவர் அகன்றுவிட்டிருப்பதை” என்று கர்ணன் சொன்னான்.

“அது இயல்புதான். வைரம் எங்கும் முழுமையாக ஒட்டாது என்று சொல்வார்கள்” என்றாள் குந்தி. கர்ணன் “நான் ஏன் இப்படி ஒருதுளியும் பிறழாதவன் ஆனேன்? நீங்கள் என்னை வளர்க்காததனாலா?” என்றான். “நான் சில தருணங்களில் எண்ணிக்கொள்வதுண்டு. பாலைநிலத்து விதைகளைப்போல உடையாத ஓடு கொண்டவன் ஆகிவிட்டேன் என்று.” குந்தி “நீ எண்ணித் துயருறவேண்டும் என்றால் இவ்வழியே செல்லலாம். ஆனால் அது உண்மை அல்ல. உண்மை மிகச் சிக்கலானதாகவே இருந்தாகவேண்டும் என்பதில்லை. அது மிகமிக எளிதானதாகவே இருக்கலாம். உச்சநிலை மெய்மைகள் மிகமிக உலகியல்சார்ந்ததாக, மிக அன்றாடத்தன்மை கொண்டதாக இருக்கலாம். அது பெண்களுக்கே புரியும். ஆண்கள் அடுமனைக்குச் செல்லவே ஏழுமலை கொண்ட காட்டுப்பாதையை தெரிவுசெய்வார்கள் என நாங்கள் பெண்கள் சொல்லிக்கொள்வதுண்டு” என்றாள்.

“சொல்க, என் இயல்பு ஏன் இவ்வாறாயிற்று?” என்று கர்ணன் மீண்டும் கேட்டான். “ஏன் நீ அர்ஜுனனை உள்ளூர அருவருக்கிறாய்?” என்று குந்தி கேட்டாள். “அன்னையே…” என்றான் கர்ணன். “சொல்க” என்றாள் குந்தி. கர்ணன் “நான் அருவருக்கவில்லை” என்றான். “சரி, இவ்வண்ணம் கேட்கிறேன். நீ அவனுடன் களம்பொருதுகையில் எந்தச் சொல்லால் பழித்துரைத்தாய்?” கர்ணன் சற்று தயங்கி “பேடி என” என்றான். “ஆம், அதுவே உன் அருவருப்பு” என்றாள் குந்தி. அவன் தலைகுனிந்து “ஆம், அவனிடமிருக்கும் பெண்மையை நான் வெறுக்கிறேன்” என்றான். குந்தி “அந்த ஒவ்வாமையை இளைய யாதவனிடமும் அடைகிறாயா?” என்றாள். “ஆம், அதை என்னால் தவிர்க்கவே முடியவில்லை” என்றான்.

குந்தி “நீ துரியோதனனுடன் ஏன் அணுக்கமாக உணர்கிறாய்?” என்றாள். கர்ணன் “நான் இதை எவ்வண்ணம் சொல்வது?” என்றான். “அதையும் இவ்வாறே எண்ணுக! நீ துரியோதனனை எப்போது வெறுப்பாய்?” கர்ணன் “இப்படி கேட்டால்…” என்று சொல்ல “நீ வினவியமைக்கு விடை தேடுகிறேன். சொல்!” என்றாள். “மிக அரிதாகத்தான்” என்றான் கர்ணன். “ஒரு தருணத்தை நினைவுகூர்க!” என்றாள் குந்தி. “அவன் தன் மகள் கிருஷ்ணையை அருகணைத்து இன்சொல் பேசும் ஒரு தருணத்தில் அருகிருந்தேன். அப்போது அவன் முகத்திலும் மொழியிலும் கூடிவந்த மென்மையை என்னால் தாளமுடியவில்லை. என் ஒவ்வாமையை வெளிக்காட்டாது அறையிலிருந்து அகன்றேன்” என்றான் கர்ணன்.

“அதுவேதான். மைந்தா, நீ வெறுப்பது பெண்மையின் இயல்புகளை” என்று குந்தி சொன்னாள். “ஏனென்றால் நீ முழுமையான ஆண்மகன். உன் உடலே உன்னை அவ்வாறு

ஆக்குகிறது. உன் தோள்களும் கைகளும் நெஞ்சும் முற்றிலும் நிகர்நிலை கொண்டவை. உன் ஒவ்வொரு உறுப்பும் பிழையிலா முழுமைகொண்டது. உன் ஆண்மைப்பேரெழில் உன் தெய்வத்தின் கொடை. உன்னை நோக்குபவர் அனைவரும் விழிமலைப்பது அதனால்தான். நீ களமெழுந்தால் படைப்பெருக்கு கொந்தளித்து எழுகிறது. ஒவ்வொரு ஆண்மகனும் ஆகவிழையும் வடிவம் நீ. பல்லாயிரம் பெண்கள் உன்னை நோக்கி நோக்கி விழிநிறைத்திருப்பார்கள். ஆனால் என்னைப்போல் எவரும் உன்னை கண்களால் வழிபட்டிருக்க மாட்டார்கள்."

"ஆனால் அந்த முழுமை மானுடருக்குரியதல்ல" என்று குந்தி தொடர்ந்தாள். "அந்த முழுமையே ஒரு குறைதான். அது ஊசலின் ஒருதிசை ஆட்டம்போல. ஆணில் பெண்ணும் பெண்ணில் ஆணுமென்றே மானுட உடலும் உள்ளமும் நிறைவுகொள்கின்றன. அர்ஜுனனிடம் இருக்கும் பெண்மையின் கூறுகளால்தான் அவன் பெண்களுக்கு அணுக்கமாகிறான். பெண் ஆணை அணுகுவது அவனிடமிருக்கும் பெண்மையினூடாகவே இயலும். அவனைப்போன்றவனே இளைய யாதவனும். நீ மூத்த கௌரவனால் கவரப்படுவது அவனும் உன்னைப்போல் வெறும் ஆண்மை என்பதனால்தான். உங்களுக்கு மறுதரப்புகள் தெரிவதில்லை. உள்ளத்தில் நெகிழ்வுகளும் பிசிறுகளும் இல்லை. நீங்கள் சிற்பங்களைப்போல மாறா முகமும் உணர்வும் கொண்டவர்கள்."

"உன்னை பெண்கள் நோக்கி நோக்கி நெஞ்சழிவார்கள். அவர்கள் உன்னை வந்தடையவே இயலாது. எவ்வாறேனும் உன்னை அணுகுபவர்கள் உன்னால் எரித்தழிக்கப்படுவார்கள்.

கதிரவனுக்கும் மலர்களுக்குமான உறவைப்போல" என்று குந்தி சொன்னாள். கர்ணன் பெருமூச்சுவிட்டான். "நீ அவளை விரும்பியதுகூட அவளிலுள்ள ஆண்மையின் கூறைக் கண்டுதான்" என்றாள் குந்தி. "அன்னையே, நாம் அதைப்பற்றி இனிமேல் பேசவேண்டாமே" என்று கர்ணன் சொன்னான். "மெய்யாகவே இங்கு வருகையில் நான் எண்ணிவந்தது அதுதான். அவளும் நீயும் நிறைவடையக்கூடும் என. அவளை அடைந்தால் உனக்கு மூத்த கௌரவன் தேவைப்படமாட்டான் என்று" என்றாள் குந்தி. "வேண்டாம், அன்னையே" என்றான் கர்ணன். "சரி" என குந்தி சொன்னாள். கர்ணன் மீண்டும் பெருமூச்சுவிட்டான். ஆனால் அவன் முகம் தெளிவடைந்திருந்தது.

குந்தி எழுந்துகொண்டு "நான் கிளம்புகிறேன். இத்தனை பொழுதாகுமென நான் எண்ணவே இல்லை" என்றாள். கர்ணன் சிரித்தபடி "அன்னையே, பெண்கள் அணுகமுடியாதவனாகிய என்னை நீங்கள் எப்படி இத்தனை எளிதாக அணுகி வென்றீர்கள்?" என்றான். குந்தி நகைத்தபோது அவளுடைய வெண்பல்நிரை தெரிய அவள் இளமையின் அழகு கொண்டாள். "அது அவ்வாறுதான். ஆண்மைமுழுத்தவர்கள் பெரும்பாலும் அன்னையரின் குழவிகள்" என்றாள். கர்ணன் நகைத்து "விந்தைதான்" என்றான். "நீ என் மடியில் வளர்ந்திருந்தால் உலகையே வெல்லும் அடிமை ஒருவனை பெற்றவளாக இருந்திருப்பேன்" என்றாள். உளம்நெகிழ்ந்து அவன் தலையில் கைவைத்து "சிறப்புறுக! மேன்மை கொள்க!" என வாழ்த்தினாள்.

கர்ணன் அவள் கால்தொட்டு சென்னி சூடி "இங்கே என் வாழ்வு நிறைவடைகிறது, அன்னையே" என்றான். அவள் "ஏன் இப்படி நெடுமரம்போல் ஆனாய் என்று வியக்கிறேன்" என்று அவன்

தோளை அறைந்தாள். அவன் வெடித்து நகைத்து "நானும் பல தருணங்களில் அதை எண்ணிக்கொள்வதுண்டு. பெரும்பாலான மானுடரை அவர்களின் தலைமுடியைக் கொண்டே அடையாளம் காண்கிறேன்" என்றான். குந்தி வாய்பொத்தி சிரித்து "கீழிருந்து நோக்கினால் உன் முகவாய் மிகத் தொலைவில் விந்தையாகத் தெரிகிறது" என்றாள். அவன் வெடித்துச் சிரிக்க அவளும் உடன் இணைந்து சிரித்தாள். பலமுறை முயன்றும் இருவராலும் சிரிப்பை நிறுத்தமுடியவில்லை. பின்னர் குந்தி கண்ணீர் வழிய ஆடைநுனியால் வாய்மூடி சிரிப்பை அடக்கி "நான் செல்லவேண்டும்" என்றாள். கர்ணன் சிரிப்பின் மூச்சிளைப்புடன் "இவ்வண்ணம் நகைத்து நெடுநாட்களாகின்றது" என்றான். "ஆம், நானும் சிரிப்பதேயில்லை" என்று அவள் சொன்னாள்.

அத்தருணத்தின் உளவிடுதலையையே சிரிப்பாகக் கொண்டோம் என கர்ணன் நினைத்துக்கொண்டான். பொருளில்லாத சிரிப்புதான் மெய்யாகவே சிரிப்பு போலும். அவள் மீண்டும் ஒருமுறை அவன் தலைமேல் கையை வைத்து வாழ்த்தியபின் "விடைகொள்கிறேன்" என்றாள். அவன் அவளுடன் நடந்தான். அவள் கை இயல்பாக நீண்டு அவன் கையை பற்றியது. அவள் கை அவனுடைய பெரிய விரல்களுக்குள் சிறுமியின் கை போலிருந்தது. கைகளைப் பற்றியபடி அவர்கள் குடிலை விட்டு வெளியே வந்தனர். "நான் விடைகொள்கிறேன்" என்று குந்தி மீண்டும் சொன்னாள். அவள் குரல் மிகத் தாழ்ந்திருந்தது. "சென்றுவருக, அன்னையே!" என்றான் கர்ணன்.

அவள் தன் கையை அவன் கைகளிலிருந்து விடுவித்துக்கொண்டு மெல்ல நடந்து சேடியை அடைந்தாள். சேடியிடம் ஒரு சொல் உரைத்துவிட்டு நடந்தாள். எத்தனை

மெலிந்திருக்கிறாள், எவ்வளவு சோர்ந்திருக்கிறாள் என்று கர்ணன் எண்ணிக்கொண்டான். அவள் திரும்பி நோக்கியபோது அந்த இருளிலும் அவள் விழிகளை சந்திக்க முடிந்தது. மீண்டும் திரும்பி நோக்கியபோது நோக்கில்லாமலேயே விழிகளை சந்திக்க முடிந்தது. அவளுடைய வெண்ணிற உருவம் இருளில் மறைந்த பின்னரும் விழியில் சற்றுநேரம் எஞ்சியிருந்தது.

# கார்கடல் - 30

அஸ்வத்தாமன் காவல்மாடத்தின் மேல் நின்று கருடச்சூழ்கை உருப்பெறுவதை நோக்கிக்கொண்டிருந்தான். ஒரு சூழ்கை அவன் உள்ளத்தில் எப்போதும் மிக எளிய ஓர் எண்ணமாகவே எழுவது வழக்கம். முதல்நாள் போர் முடிந்ததுமே அன்றைய நிகழ்வுகள் என்ன, அதை நிகர்செய்யவோ நீட்டிச்செல்லவோ மறுநாள் ஆற்றப்படவேண்டிய பணி என்ன என்னும் வினாக்கள் அவன் உள்ளத்தில் எழுந்து முட்டிமோதும். ஒவ்வொருநாளும் போர் முடிந்த மறுகணமே அவன் உள்ளத்தில் எழுவது அவ்வெண்ணம்தான். அவன் நேராக காவல்மாடங்களை நோக்கியே செல்வான். தன் புண்களுக்கு மருந்திட்டுக்கொள்வதுகூட அங்கே அமர்ந்துதான். அவனுடன் மருத்துவ ஏவலரும் ஏறிவர மேலே அமர்ந்து அவன் நோக்கிக்கொண்டிருப்பான்.

படைகள் திரும்பிச்செல்வதை பார்த்துக்கொண்டிருக்கையில் அவன் உள்ளம் மெல்லமெல்ல எண்ணமொழிந்து கூர்மட்டும் கொண்டதாக ஆகும். அவர்களின் சோர்வும் எழுச்சியும்

குலைவும் பிறிதொரு வகை ஒருங்கிணைதலும் அவன்முன் நிகழ்ந்துகொண்டிருக்கும். அதிலேயே அவன் அமைக்கவேண்டிய சூழ்கை என்ன என்ற செய்தி இருக்கும். மணல்மேல் காற்று தன் வடிவை வரைந்து காட்டுவதுபோல போரை ஆளும் தெய்வம் ஒன்று தான் விழையும் சூழ்கையை அவனுக்கு எழுதிக் காட்டும். அது தன் உளமயக்கு என அவன் அறிந்திருந்தாலும் உள்ளம் அவ்வாறு பருப்பொருளில் சில தோற்றப்பாவைகளாகவே எழமுடியும் என்று எண்ணினான்.

மழைநீர் பிரிந்தும் இணைந்தும் ஓடுவதுபோன்றது படைகள் பிரிந்துசெல்வது. தோல்வியை உணர்ந்தார்கள் என்றால் அவர்கள் தனிமானுடர்களாக சிதறிச்சிதறிப் பரவுவார்கள். பின்னர் சிறுசிறு குழுக்களாக மாறுவார்கள். ஓசையும் கொந்தளிப்பும் இருக்காது. நனைந்த ஆடை நிலத்தில் படிந்தமைவதுபோல படை களத்தில் நிலைகொள்ளும். ஈரவிறகு என அவன் எண்ணிக்கொள்வான். இதை பற்றவைக்கவேண்டும். இதன் செவிகளில் முரசறையவேண்டும். இதன் வாலை ஒடித்து முறுக்கவேண்டும். அவ்வெண்ணத்துடன் நோக்கியிருக்கையில் அந்தப் படையின் உருமாற்றங்களில் ஒன்றில் அவன் தன் சூழ்கையை காண்பான்.

பீஷ்மர் களத்தில் விழுந்த நாளில் துயரும் கசப்பும் கொண்டிருந்த கௌரவப் படை களத்தில் அமைந்த பின் மதுவண்டிகள் அதன் ஊடே விரிசல்கள்போல் பரவிய பாதைகளினூடாக செல்லத்தொடங்கின. மாட்டின் முடிப்பரப்புக்குள் உண்ணிகள் செல்வதுபோல என எண்ணியபடி அவன் பார்த்துநின்றான். மெல்லமெல்ல கௌரவப் படை ஊக்கம் கொள்ளத் தொடங்குவதை அவன் கண்டான்.

எங்கிருந்தோ பாடல் ஒன்று எழுந்தது. அந்த ஒலி மேலே கேட்கவில்லை, ஆனால் அதை ஏற்றுப்பாடியவர்களின் உடலசைவுகள் சேர்ந்தெழுந்த அலை கண்ணுக்குத் தெரிந்தது. அலை பரவி விரிந்து படையை மூடியது. அவன் அந்த ஊக்கம் எதனால் என வியந்தான். ஏவலனிடம் கேட்க நாவெடுத்தபோது அவனுக்கே தெளிந்தது, கர்ணன் களமெழவிருக்கிறான்.

அந்தச் செய்தி ஒரு சுடர் எனத் தோன்றியது. அந்தப் படைப்பெருக்கு அச்செய்தியெனும் கனலை பேணிக்கொண்டாகவேண்டும். அவன் வெறித்து நோக்கிக்கொண்டிருக்கையில் படைகளில் சுடரை அணையாது காக்கும் பீதர்நாட்டுக் கூண்டை கண்டான். ஆம், அரணிட்டுக் காக்கவேண்டும். அவ்வெண்ணம் எழுந்ததுமே அவன் அதை சூழ்கையாக மாற்றிக்கொண்டான். கூண்டு. கூண்டு வண்டி. வண்டிச்சூழ்கை. மறுநாளுக்குரிய சூழ்கையை அங்கிருந்தே அவன் தோல்சுருளில் வண்ண மையால் வரையத் தொடங்கினான். வரைந்து முடித்ததுமே தோல்வியின் சலிப்பும் கசப்பும் அகன்று அவன் முகம் பொலிவுற்றது. கண்மூங்கில் வழியாக தொற்றி கீழிறங்கி தன் புரவியை நோக்கி ஓடினான்.

முந்தையநாள் படைகள் கொப்பளித்துக்கொண்டிருந்தன. வெற்றியை அவை அருகென கண்டுவிட்டிருந்தன. பாறைச்செறிவுக்குள் வந்தறைந்து கொப்பளித்து நுரைபெருக்கும் கடல் அலைகள் போலிருந்தன படைகள். ஒருதிசை நோக்கி பெருகிச்சென்ற படைப்பிரிவு ஒன்று இன்னொன்றுடன் முட்டி நுரைபோலவே கொந்தளித்து மீண்டும் பிரிந்தது. அவன் அந்த அலைக்கழிவை நோக்கிக்கொண்டிருந்தபோது இரு சிறகுகள் எழுந்து அணைவதை ஒருகணம் கண்டான். கருடச்சூழ்கையை உடனே உள்ளத்தில் உருவாக்கிக்கொண்டான். “எங்கே

சுவடிச்சுருள்?” என்று கேட்டான். அதற்காக ஒருங்கி நின்றிருந்த ஏவலன் சுவடியை நீட்டினான். அவன் கைவிரல்களிலிருந்து விரிந்த சிறகுடன், கூரலகுடன் பருந்து எழுந்து வந்தது.

ஓர் எண்ணம் கைகள் வழியாக காட்சிவடிவாவது இன்மையிலிருந்து பொருள் ஒன்று எழுவதுபோல. அந்தப் பொருள் விதையாகி முளைத்து காடாவதுபோல அது சூழ்கையென்றாவது. அவன் சூழ்கையை இறுதிசெய்ததுமே அதை பூரிசிரவஸிடம் அளித்துவிடுவான். அவன் அதை பல உறுப்புகளாகப் பிரித்து ஒவ்வொரு உறுப்புக்கும் அதற்குரிய படைப்பிரிவுகளை அமைப்பான். அந்தப் படைப்பிரிவுகளை பலபகுதிகளாக பிரித்து அவற்றுக்கான ஆணைகளை உருவாக்குவான். அகச்சொற்களில் இருந்து திரட்டி தான் உருவாக்கிய வரைவுச்சிற்பம் மீண்டும் உருவழிந்து சொற்களாக ஆவதை அஸ்வத்தாமன் வியப்புடன் நோக்கி நிற்பான். “உங்கள் சூழ்கை இப்போது எண்பத்தெட்டு ஆணைகளாக மாறிவிட்டது, பாஞ்சாலரே” என்று பூரிசிரவஸ் சொல்வான்.

அந்த ஆணை இருளுக்குள் புரவித் தூதர்கள் வழியாக படைகளுக்குள் பரவிச்செல்லும். தன் குடிலில் துயில்கொள்ள படுத்திருக்கும்போது அந்த ஆணைத்தொகை ஓசையில்லாமல் வலைபோல படைகளுக்குள் ஊடுருவி மூடிக்கொண்டிருப்பதை உள்ளத்தால் உருக்கொடுத்து நோக்கிக்கொண்டிருப்பான். முதன்மைப் படைத்தலைவர்களுக்கு மட்டுமே பூரிசிரவஸின் ஆணைகள் செல்லும். அவர்கள் தங்களுக்குக் கிடைத்த ஆணைகளை மேலும் சிறு ஆணைகளாகப் பிரித்து ஆயிரத்தவர்களுக்கு அனுப்புவார்கள். ஆயிரத்தவர் அவற்றை நூற்றுவருக்கு அளிப்பார்கள்.

நீரில் புல்விதைகள் பரவுவதுபோல ஆணைகள் படைகளில் விரிந்தன. பின்னர் நீரில் உப்பு என கரைந்து அவை மறைந்தன. சொற்கள் மீண்டும் எண்ணமென்றாயின. தன்னுள் எண்ணமென இருந்தவை. சொல்லாகி வடிவமென்றாகி மீண்டும் சொல்லாகி சிதறி எண்ணமென்றாகி அமைந்துவிட்டன. தன் உடலே விரிந்து பரவி படை என ஆகி குருக்ஷேத்ரத்தில் கிடப்பதுபோல் நினைத்துக்கொள்வான். தன் உடலின் பேருரு. அதில் படைசூழ்கை ஒரு வியனுருவ எண்ணம். அந்நினைப்பு அவனை நிறைவுகொண்டு விழிசரியச் செய்யும்.

விழித்துக்கொண்டதுமே முதல் எண்ணமென எழுவது இறுதியாக உள்ளத்தில் கரைந்தழிந்த எண்ணத்தின் எஞ்சிய பருத்துளிதான். முகம் கழுவி இன்னீர் அருந்தியதுமே புரவியில் ஏறிக்கொண்டு காவல்மாடங்கள்தோறும் செல்லத்தொடங்குவான். துயிலெழுவதற்கான முரசுகள் ஒலித்ததுமே படைப்பரப்பு தேனீக்கூட்டம் கலையும் முழக்கத்துடன் உயிர்கொள்ளும். காலைக்கடன்களுக்கு விளக்குகளை கொளுத்தலாகாது என்பது ஆணை. பந்தங்களின் பொதுவான ஒளி மட்டுமே இருக்கும். பல்லாயிரம் கூழாங்கற்களில், கூரைப்பரப்புகளில் பட்டு அது களமெங்கும் பரவியிருக்கும். அந்த ஒளியே விழிதெளிய போதுமானது. படைவீரர்கள் கவசங்களும் படைக்கலங்களும் கொண்டு ஒருங்குவதை இருளுக்குள் நிழலசைவுகளாக காணமுடியும்.

கொம்புகள் எழுவதற்குள் அனைவரும் ஒருங்கி முடித்தாக வேண்டும். ஆயிரத்தவர் தலைவர்களின் கொம்போசைகள் இருளுக்குள் மாபெரும் யானைக்கூட்டம் ஒன்று நின்று ஒன்றோடொன்று செய்தி பரப்புவதுபோல எழுந்துகொண்டிருக்கும். ஒவ்வொரு படைப்பிரிவும்

தனித்தனியாகத் திரள்வது இருள் அலைகொண்டு பருவடிவுகளாக மாறுவதுபோல தெரியும். ஆயிரத்தவர் தலைவர்கள் தங்கள் படைகள் சென்று நிலைகொள்ளவேண்டிய இடங்களை களத்தில் அடையாளப்படுத்தி அங்கே சிறிய நெய்விளக்குகளை ஏற்றிவைத்திருப்பார்கள். விளக்குகளின் எண்ணிக்கை, செறிவின் வழியாக அவை எழுத்துக்களாக ஆகிவிட்டிருக்கும். அவற்றை நோக்கி படைவீரர்கள் தங்களுக்கென வகுக்கப்பட்ட இடங்களில் சென்றமைவார்கள்.

ஒவ்வொருவரும் தங்களுக்குரிய இடங்களில் அமையும்தோறும் விழிநிறைக்கும் வடிவென படைசூழ்கை எழுந்துவரும். முந்தையநாள் தோல்சுருளில் அவன் வரைந்த வடிவின் வானுருத்தோற்றம். காலையொளியில் கண்துலங்கத் துலங்க அவ்வடிவைப் பார்ப்பது தெய்வமெழுகை என அவனை நெஞ்சுநிறையச் செய்யும். அந்தச் சூழ்கை அவனால் உருவாக்கப்பட்டது என்று எண்ணத் தோன்றாது. அவனை வாயிலாக்கி எங்கிருந்தோ வந்தது. பல்லாயிரம் உள்ளங்களினூடாக பல்லாயிரம் உடல்களில் தன்னை நிகழ்த்திக்கொண்டது. மண்ணிலுள்ள பேருருக்கள் எல்லாம் எங்கோ விண்ணில் துளியென அணுவென இருந்துகொண்டிருப்பவை. ஏதோ தெய்வத்தின் கனவில் ஒரு கணம் இது.

அவன் சிறகுவிரித்து நின்றிருந்த பருந்தை பார்த்துக்கொண்டிருந்தான். அதன் தலையில் அலகு இன்னும் கூர்கொள்ளவில்லை. விழிமணிகள் ஒளிகொள்ளவில்லை. ஆனால் இறகுகளை திரட்டிக்கொண்டு அது மேலும் மேலும் பெருகிக்கொண்டிருந்தது. எழுந்து வானில் பறந்துவிடக்கூடும். அவனுக்கு மெல்லிய புன்னகை எழுப்பும் எண்ணம் ஒன்று

எழுந்தது. அவ்வாறு பறந்து எழுந்து அகன்றுவிட்டால் என்ன ஆகும்? கௌரவப் படையே அகன்றுவிட்டால்? எங்கோ வானிலெழுந்து விண்முகில்களில் ஒன்றில் சென்று அமர்ந்துவிட்டால்? அவன் அருகே நின்றிருந்த ஏவலன் "அரசே" என்றான். ஒன்றுமில்லை என அவன் கையசைத்தான்.

காவல்மாடத்திலிருந்து இறங்கி அவன் புரவிநோக்கி சென்றான். ஏறி அமர்ந்து கடிவாளத்தை சுண்டியபோது எதிரே பூரிசிரவஸ் புரவியில் வருவதைக்கண்டு இழுத்து நிறுத்தினான். அருகே வந்த பூரிசிரவஸ் இருளுக்குள் வெண்பற்கள் மின்ன "படை முற்றொருங்கிவிட்டது, பாஞ்சாலரே" என்றான். "இது தன் இரையை கவ்விக் கவரும் என்பதில் ஐயமில்லை." அஸ்வத்தாமன் படைசூழ்கை முழுமை பெறுந்தோறும் அதன் குறைகளை மட்டுமே பார்க்கும் விழி கொண்டவனாக மாறுவது வழக்கம். பூரிசிரவஸின் சொற்களால் அவன் தன் கனவிலிருந்து மீண்டான். "அங்கே வட எல்லையில் காந்தாரப் படைகளின் மூன்றாவது பிரிவு இன்னமும் ஓசை அடங்கவில்லை. அங்கு சென்று நிகழ்வதென்ன என்று பாருங்கள். ஒருங்கமையவில்லை என்றால் பொறுப்பேற்றுக் கொள்ளுங்கள்" என்றான். "ஆணை" என்று தலைவணங்கி பூரிசிரவஸ் கடந்து சென்றான்.

அஸ்வத்தாமன் புரவியில் சீர்நடையாக படைகளின் நடுவே சென்றான். பிறிதொரு காவல் மாடத்தின் மீதேறி அதன் உச்சிக்குச் சென்று அங்கிருந்து படைசூழ்கையை பார்த்தான். அது தன் இறகுகளை பாண்டவப் படை நோக்கி விரித்திருந்தது. அதன் கூரலகில் கர்ணனின் பொற்தேர் வந்து நிற்பதை அவன் கண்டான். அதன் தேர்த்தட்டில் கர்ணன் இரு கைகளையும் மார்பில் கட்டியபடி நின்றிருந்தான். அத்தனை தொலைவில்

அவனை பார்த்ததுமேகூட அஸ்வத்தாமன் சிறு அமைதியின்மை ஒன்றை அடைந்தான். கர்ணனிடம் அவன் ஏதோ ஒரு மாற்றத்தை கண்டான்.

படிகளில் இறங்கும்போது தன்னுடன் வந்த ஏவலனிடம் “சந்திரகீர்த்தியை என்னை வந்து பார்க்கச் சொல்” என ஆணையிட்டான். அவன் அடுத்த காவல்மாடத்திற்கு செல்வதற்குள் சந்திரகீர்த்தி அங்கே வந்திருந்தான். அவனுடைய அஞ்சிய தயக்கம்கொண்ட உடலைக் கண்டதும் அவன் அமைதியின்மை பெருகியது. எரிச்சலாக அது மாறியது. “என்ன?” என்றான். சந்திரகீர்த்தி “ஒவ்வாச் செய்திதான். உறுதிப்படுத்திய பின் சொல்லலாம் என எண்ணினேன். மேலும் படைகளெழும் இத்தருணத்திற்குரியதா அது என்னும் ஐயமும் கொண்டேன்” என்றான். “சொல்க!” என்றான் அஸ்வத்தாமன். “அங்கர் முழுதுளத்துடன் இருக்கிறாரா?”

அவன் கேட்பதை புரிந்துகொண்டு சந்திரகீர்த்தி சொல்காத்தான். “அவர் கைகளை மார்பில் கட்டியிருக்கிறார். நேற்று விஜயத்தை ஊன்றி நாணேற்றி அதைப் பற்றி தலைநிமிர்ந்து நின்றிருந்தார்” என்றான் அஸ்வத்தாமன். சந்திரகீர்த்தி சில கணங்களுக்குப் பின் “நேற்று அவரை சந்திக்க எவரோ வந்திருக்கிறார்கள்” என்றான். அஸ்வத்தாமன் திகைத்து “அங்கரை சந்திக்கவா? எங்கிருந்து? சம்பாபுரியிலிருந்தா?” என்றான். “அல்ல. பாண்டவப் படைகளில் இருந்தும் அல்ல. வேறு எங்கிருந்தோ” என்று சந்திரகீர்த்தி சொன்னான். “மிக மந்தணமான வருகை அது. அங்கே எப்படி அவர்கள் வந்தார்கள் என்பதே புரியவில்லை.”

“இச்செய்தி அரசருக்கு அறிவிக்கப்பட்டதா?” என்றான் அஸ்வத்தாமன். “இல்லை. இது எனக்கே சற்று முன்னர்தான் தெரியவந்தது. இன்னமும் உறுதி செய்யப்படாத செய்திதான்.

வந்தவர் எவரென்றும் தெளிவில்லை. இருவர் பெண்கள் என்றனர்.” அஸ்வத்தாமன் “சம்பாபுரியிலிருந்தா?” என்று உரக்க கேட்டான். “எங்கிருந்தென்று தெரியவில்லை. நமது படை எல்லையை அவர்கள் கடந்ததை மட்டுமே என் ஒற்றன் பார்த்திருக்கிறான். மேலும் செய்திகளை திரட்டி அனுப்பும்படி சற்று முன்னர்தான் என் படையினருக்கு செய்தி அனுப்பியிருக்கிறேன். ஏதேனும் உறுதியான செய்தி வந்த பின்னர் அதை அரசருக்கு அறிவிக்கலாம் என்று எண்ணினேன்” என்றான் சந்திரகீர்த்தி.

அஸ்வத்தாமன் சினத்துடன் “அறிவிலிகள்! அறிவிலிகள்!” என்றான். “படைக்குள் இருவர் வந்து சென்றதைக்கூட நோக்கவில்லை என்றால் ஒற்றர்வலை எதன் பொருட்டு?” சந்திரகீர்த்தி மறுமொழி சொல்லாமல் உடன் வந்தான். “இப்போதே செல்க! இன்னும் சற்று நேரத்தில் வந்தது யார், என்ன நிகழ்ந்தது என்று எனக்கு தெரிந்தாகவேண்டும்” என்றான். “ஆணை” என்றான் சந்திரகீர்த்தி. அஸ்வத்தாமன் தணிந்து “என்ன நிகழ்ந்தது? எப்படி நிகழ்ந்தது இப்பெரும்பிழை?” என்றான். “நேற்று நம் படைகள் அனைத்துமே கள்வெறியில் இருந்தன. அங்கரும் இரவு நெடுநேரம் படைகளுடன் அமர்ந்து மதுவருந்தி களித்திருக்கிறார். கௌரவ படைப்பிரிவில் மதுக்களியின்றி துயின்ற எவரும் நேற்று இருந்திருக்க வாய்ப்பில்லை” என்றான் சந்திரகீர்த்தி.

“அதை பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்” என்று அஸ்வத்தாமன் உரக்க சொன்னான். “அரசே, அது அங்கரை பார்க்க வந்த இரு நாகர்கள் என்று தோன்றுகிறது” என்று சந்திரகீர்த்தி சொன்னான். “அப்பகுதியிலிருந்த நம் புரவிகள் இரவெல்லாம் அமைதியிழந்திருக்கின்றன. அவை நாகங்களை

மட்டுமே அவ்வாறு அஞ்சுபவை. அவர்களால் மட்டுமே அத்தனை ஓசையின்றி நுழையமுடியும்” என்றான். அஸ்வத்தாமன் “ஆனால்...” என்றான். சந்திரகீர்த்தி பணிவுடன் இடைமறித்து “அரசே, அவருக்கும் நாகர்களுக்குமான உறவு நாம் அறிந்ததைவிட ஆழம் கொண்டது. அவரை நாகர்கள் தொடர்ந்து வந்து சந்திக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது” என்றான்.

“அங்கே சிபிரத்தின் மாளிகையில் இருந்து அவர் கிளம்பும்போதுகூட யாரோ ஒரு நாகன் வந்து அவரை சந்தித்திருக்கிறான். தன் தோளில் பெரிய மூங்கில் கூடை ஏந்திய ஓங்கிய உடல்கொண்ட முதிய நாகன். அவன் தோன்றியதை வீரர்கள் பார்த்திருக்கிறார்கள். மறைந்ததை பார்க்கவில்லை. எவ்வண்ணம் அரண்மனையில் எழுந்தான் என்று எவருக்கும் தெரியவில்லை. இப்போர்க்களம் நாகர்களின் நிலமும்கூட. நாம் நின்றிருக்கும் காலடிக்குக் கீழே அவர்களின் கரவுப்பாதைகள் செறிந்துள்ளன. நினைத்த இடத்தில் எழ இயல்வதனால்தான் அவர்களை இன்னமும் முற்றழிக்க இயலவில்லை என்றார்கள்.”

அஸ்வத்தாமன் “வந்தது நாகர்கள் அல்ல, ஐயமில்லை” என்றான். சந்திரகீர்த்தி விழிசுருக்கி நோக்க “அறிவிலி! நாகங்களுக்கு நிலஎல்லையோ படைஎல்லையோ இல்லை. நினைத்த இடத்தில் விதை முளைத்தெழுவதுபோல் மண் கீறி எழுபவர்கள் அவர்கள். வந்தவர்கள் நமது எதிரித் தரப்பை சார்ந்தவர்கள். நம் எல்லைக்கு அப்பால் இருப்பவர்கள். எல்லையைக் கடந்து கரந்து உள்ளே வந்திருக்கிறார்கள்” என்றான். பின்னர் “பெரும்பாலும் வந்தவர்கள் பெண்கள்” என்றான்.

சந்திரகீர்த்தி “அதை எவரும் உறுதிப்படுத்தவில்லை” என்றான். “வந்தவர்கள் இத்தனை மந்தணமாக வரமுடியுமென்றால் பெண்களாகவே இருக்க முடியும். நமது படைப்பிரிவில் எங்கு அஸ்தினபுரியின் தொன்மையான ஷத்ரிய படைப்பிரிவினர் இருந்தார்களென்று பாருங்கள். அஸ்தினபுரியின் அரசகுடியினர் எவரேனும் வந்து அறுதி ஆணையிட்டால் அதை நம் படைப்பிரிவினராயினும் அவர்களால் மீற இயலாது. அவ்வாறு அறுதி ஆணையிடும் தகைமை இப்போது இப்போர்க்களத்திற்கு வெளியில் உள்ளவர்களாலேயே இயலும். பெண்களே இப்போது போருக்கு வெளியில் இருக்கிறார்கள். திருதராஷ்டிரர் ஆணையிடலாம். ஆனால் அவர் உடலை எவரும் அறிவார். ஆகவே…”

சந்திரகீர்த்தி திகைத்து நின்று திரும்பி “யாதவப் பேரரசி! ஐயமில்லை! யாதவப் பேரரசியேதான்!” என்றான். அஸ்வத்தாமன் “ஆம்” என்றான். சந்திரகீர்த்தி “அவர்களைப் பார்த்த ஐவரை அழைத்து வரச்சொல்லியிருக்கிறேன்” என்றான். “அவர்களிடம் ஒன்றை மட்டும் உசாவுக! வந்தவர்கள் சிறிய உடல் கொண்டவர்களாக இருந்தார்களா? வெள்ளை ஆடையால் முகம் மறைத்திருந்தார்களா? அங்கரின் குடிலுக்குள் அவர்கள் எத்தனை பொழுது இருந்தார்கள்?” என்றான் அஸ்வத்தாமன். சந்திரகீர்த்தி தலைவணங்கினான். “செல்க!” என்று கைகாட்டிவிட்டு அஸ்வத்தாமன் தன் புரவியில் முன்னால் சென்றான்.

மேலும் இரு காவல்மாடங்களின் மீதேறி படைசூழ்கையை நோக்கிவிட்டு அஸ்வத்தாமன் வளைந்து துரியோதனன் தலைமை வகித்த சிறகின் முனையை அடைந்தான். இருபுறமும் துச்சாதனனும் துச்சகனும் நின்றிருக்க

துரியோதனன் கையில் இருந்த கதையை பொறுமையிழந்து மெல்ல சுழற்றியபடி தேர்த்தட்டில் நின்றிருந்தான். அருகணைந்து கர்ணனை முந்தைய நாள் குந்தி சந்தித்திருக்கக் கூடுமென்பதை கூறலாமா என்று அஸ்வத்தாமன் எண்ணினான். ஆனால் அதனால் எப்பயனுமில்லை என்று தோன்றியது. துரியோதனன் நம்பிக்கையையும் ஊக்கத்தையும் குறைப்பதை அன்றி வேறெதையும் அது இயற்றாது.

தன் எண்ணத்தை தானே விலக்கும் பொருட்டு கைவீசி தலையை அசைத்தபடி புரவியின் கடிவாளத்தை இழுத்து திருப்பினான். அவனுக்கு எதிரே புரவியில் வந்த சந்திரகீர்த்தி அருகே வந்து தலைவணங்கினான். கடிவாளத்தை இழுத்து புரவியை சற்றே திருப்பி நின்று “சொல்” என்றான் அஸ்வத்தாமன். “அரசே, நேற்று வந்தவர் இந்திரப்பிரஸ்தத்தின் யாதவ அரசியாகவே இருக்க வாய்ப்பு. குற்றுடல் கொண்டவர். வெள்ளையாடை அணிந்தவர். அவர்கள் ஒரு விரைவுத்தேரில் வந்து குறுங்காட்டில் இறங்கியிருக்கிறார்கள். அங்கிருந்து அவர்களை எவரோ ஒருவர் நம் எல்லைக்கு கொண்டுவந்திருக்கிறார். எல்லையிலிருந்த காவல்வீரர்கள் அவரை முழுதுறப் பணிந்து உள்ளே வரவிட்டிருக்கிறார்கள்.”

அஸ்வத்தாமன் பெருமூச்சுவிட்டு “எத்தனை பொழுது அவர்கள் உள்ளிருந்தார்கள்?” என்றான். “ஒருநாழிகைப் பொழுது. அதற்கு மேலில்லை.” அஸ்வத்தாமன் “எப்படி திரும்பிச்சென்றார்கள்?” என்றான். “வந்தது போலவே, மெல்லிய வெண்ணிழலாக, எந்தத் தடயமும் எஞ்சாமல்” என்றான் சந்திரகீர்த்தி. அஸ்வத்தாமன் “அங்கர் அவரை பின் தொடர்ந்து சென்று வழியனுப்பினாரா?” என்று கேட்டான். “ஆம், தன் குடில் வாயில் வரைக்கும் அவர் வந்தார்.” அஸ்வத்தாமன் “குடிலின் படிகளில் இறங்கினாரா?”

என்றான். “இல்லை அரசே, குடில் வாயிலிலேயே நின்றார்” என்றான் சந்திரகீர்த்தி. “அரசி திரும்பிச்செல்கையில் மீண்டுமொருமுறை திரும்பி நோக்கி விடைபெற்றாரா?”

சந்திரகீர்த்தி “நிகழ்ந்த அனைத்தையும் சொல் சொல்லென உரைக்கக் கேட்டேன். அவர்கள் உவகையுடன் பிரிந்தனர்” என்றான். “அங்கர் பின்னால் சென்றிருக்கக் கூடுமா?” என்றான் அஸ்வத்தாமன். “அங்கர் அந்த வாயிலிலேயே நின்றிருந்தார், கட்டுண்டவர்போல்” என்றான் சந்திரகீர்த்தி. “ஆம், கட்டுண்டு” என்று அஸ்வத்தாமன் சொன்னான். அவன் முகம் மலர்ந்தது. “நன்று, நாம் அஞ்சவேண்டியது எதுவுமில்லை என்று எண்ணுகிறேன்” என்றான்.

சந்திரகீர்த்தி ஆறுதல் கொண்டு “இத்தனை பெரிய உளவுப்பிழை என் தொழிலில் நிகழுமென்று எண்ணியதே இல்லை. இதன் விளைவென்ன என்று எண்ணுகையில் உளம் பதைக்கிறது. அரசே, இப்போரில் உயிர் கொடுத்தாலொழிய என் அகம் அடங்காது” என்றான். அவன் தோளைத் தட்டி “அஞ்சற்க! இது நமது எண்ணத்திற்கும் கற்பனைக்கும் அப்பாற்பட்ட நிகழ்வுகளால் ஆன வெளி. இங்கு ஒவ்வொருவரும் களம்படுகிறோம். அதற்கு முன் முற்றாக ஆணவம் அழிகிறோம். தெய்வங்களுக்கு முன் தோற்ற பின்னரே மானுடர் மானுடரிடம் தோற்கிறார்கள் என்று நூல்கள் சொல்கின்றன” என்றான். சந்திரகீர்த்தி பெருமூச்செறிந்தான்.

அஸ்வத்தாமன் புரவியை இழுத்து செல்கையில் “அரசே...” என்று சந்திரகீர்த்தி மீண்டும் அழைத்தான். அஸ்வத்தாமன் திரும்பிப் பார்த்தான். “இதை ஒரு வீரன் மட்டும் தயங்கியும் குழம்பியும் ஐயத்துடன் சொன்னான். அந்த அறைக்குள் பிறிதொருவர் இருந்ததாகவும் அங்கர் சிலமுறை அறியாது

விழிதிருப்பி உள்ளிருந்தவரை பார்த்ததாகவும் அவன் உணர்ந்திருக்கிறான்.” அவனை சில கணங்கள் நோக்கியபின் மறுமொழி கூறாமல் அஸ்வத்தாமன் புரவியை திருப்பி கடந்து சென்றான்.

மெல்ல மெல்ல அவன் படைகளில் அமிழ்ந்துகொண்டிருந்தான். அதை மேலிருந்து பார்த்த நினைவு அவனில் எஞ்சியிருந்தது. அது குறைந்து குறைந்து அவன் படைகளில் ஒருவனாக ஆனான். படையின் முழுமை அவன் சித்தத்திலிருந்து மறைந்தது. இனி அந்திமுரசு கொட்டும்வரை அவன் அப்படைசூழ்கையின் ஒரு சிறு உறுப்பு மட்டும்தான். அவனுக்கு ஆணையிடப்படுவதை அவன் ஆற்றுவான். தான் வரைந்த தெய்வத்திற்கு பூசகனாக தானே ஆவதுபோல. அத்தெய்வம் அவன் மேல் வெறியாட்டுகொண்டு எழுவதுபோல.

அஸ்வத்தாமன் கௌரவப் படைகளின் முகப்பிற்கு சென்றான். வலச்சிறகில் அவனுடைய இடம் ஜயத்ரதனுக்கு அருகே இருந்தது. புரவியிலிருந்து இறங்கி தேர்மேல் ஏறிக்கொண்டான். எதிரே விரிந்திருந்த பாண்டவப் படையை பார்த்தான். பிறை நிலவு இருபுறமும் இழுபட்டு நீண்டு மெல்ல வளைந்துகொண்டிருந்தது. அவனுக்கு யானையின் இரு தந்தங்கள் என்று தோன்றியது அது. நடுவே யானையின் மத்தகம். இரு நீர்த்துளி விழிகள். வில்லை ஏந்தி நிலைநிறுத்திய பின் முரசொலிக்காக செவிகூர்ந்து நின்றான்.

# கார்கடல் - 31

பாண்டவர்களின் படைவிரிவை நோக்கியபடி காவல்மாடம் ஒன்றின் உச்சியில் இளைய யாதவர் நின்றிருந்தார். பிறைசூழ்கை மிக எளியது. அனைத்துப் படையினரும் இணையாக நின்றிருப்பது அது. அவ்வாறு நின்றிருக்கையில் பிறைவடிவம் இயல்பாகவே உருவாகி வரும். இரு விளிம்புகளும் எழுந்து வருகையில் பின்பக்கமாக வளையும் பிறை. திருஷ்டத்யும்னன் பிறைசூழ்கையை அமைத்தபோது துருபதர் நிறைவுகொள்ளவில்லை. “இது மிக எளியது…” என்றார்.

“எளிய சூழ்கைகளும் ஆற்றல்மிக்கவையே. கடினமான சூழ்கையை அமைக்கையில் நாம் அடையும் நிறைவை அவை அளிப்பதில்லை என்பதனால் அவை பயனற்றவை என்றாவதில்லை” என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். “இயற்கையில் உள்ள வடிவுகளிலிருந்து எழும் சூழ்கைகள் எளிய அமைப்பு கொண்டிருக்கும். ஆனால் அவற்றுக்குப் பின்னால் அவ்வடிவுகளை சமைக்கும் இயற்கைவிசைகளின் ஆற்றல் அமைந்துள்ளது.”

துருபதர் “மலர்ச்சூழ்கை எளியதே” என்றார். “அவ்வாறு தோன்றுகிறது. ஆனால் அது உண்மை அல்ல. எளிய வடிவங்களை ஒன்றன் மேல் ஒன்றென அமைத்து சிக்கலை உருவாக்கிக் கொள்கிறது இயற்கை. மலர்களின் தொடுப்பு எளிய வட்டமே. ஒன்றன்மேல் ஒன்றென மலரடுக்கு அமைந்து புல்லிவட்டத்தில் இணைகையில் அது சிக்கலானதாக ஆகிறது” என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். சாத்யகி “நாம் மலர்சூழ்கையை அமைக்கலாமே?” என்று கேட்டான். “தாமரைச்சூழ்கை மிகமிக ஆற்றல்கொண்ட பொறி என்பார்கள்.”

திருஷ்டத்யும்னன் “ஏன்?” என்றான். “அவர்கள் நம் அரசரை கவர முயல்வார்கள் என்று அறிவோம். அவரையே தாமரைச்சூழ்கையின் நடுவே நிறுத்துவோம். அரசரைக் கவர அங்கர் வருவார்… நம் முதன்மை எதிரி அவரே. அனைவரும் சூழ்ந்து அவரை வீழ்த்துவோம்.” திருஷ்டத்யும்னன் “அவர் அவர்களில் முதன்மையானவர். ஆனால்…” என்றான். சாத்யகி “அவரே அவர்களின் முதன்மை ஆற்றல். நேற்றைய போரில் நம்மை முழுமையாக தோற்கடித்தவர். இன்று இளைய பாண்டவர் படைக்கு எழவியலா நிலையில் இருக்கிறார். நாம் உளம்சோர்ந்திருக்கிறோம். இன்று பிற அனைவரும் சேர்ந்து அங்கரை வீழ்த்தினோம் என்றால் நாம் இழந்த அனைத்தையும் மீட்டுக்கொள்வோம். நாளை இளைய பாண்டவர் எழுந்தால் மூச்சை ஊதியே கௌரவப் படையை சரித்துவிடுவார்” என்றான்.

பீமன் “அது தேவையில்லை” என்றான். “ஒருவனை அனைவரும் சூழ்ந்து தாக்குவதென்பது நம் அனைவருக்கும் இழிவு.” சாத்யகி “அவர் ஒருவரே நம் அனைவரையும் தாக்கி அழிப்பதைவிட அது குறைவான இழிவே” என்றான். “வெல்லமுடியாவிடில் சாவது மேல். சூழ்ந்து தாக்குவதை ஒழிக! அவ்வாறு வென்று என் தமையன் அரியணை அமரவேண்டியதில்லை” என்றான் பீமன். சாத்யகி “நாம் நேற்று சிதறடிக்கப்பட்டோம். இன்று என்ன நிகழுமென்று தெரியவில்லை. நம் முதன்மைவீரர் அம்புபட்டு கிடக்கிறார்” என்றான். பீமன் “நான் களத்தில் எந்த இரக்கத்தையும் காட்டப்போவதில்லை. ஆனால் ஒருவனை சூழ்ந்துகொண்டு அனைவரும் தாக்கினோம் என்னும் இழிவை எனக்காக சூடிக்கொள்ள மாட்டேன்” என்றான்.

யுதிஷ்டிரர் “அவன் சொல்வதும் மெய்யே. அத்தகைய சூழ்கை நமக்குத் தேவையில்லை. பிறைசூழ்கையே சிறப்பாக உள்ளது” என்றார். திருஷ்டத்யும்னன் “இளைய யாதவர் தன் எண்ணத்தை சொல்லட்டும்” என்றான். “எல்லா சூழ்கைகளும் நன்றே” என்றபின் இளைய யாதவர் எழுந்துகொண்டு “நான் செல்லவேண்டியிருக்கிறது” என்று சால்வையை சுற்றிக்கொண்டார். “பிறைசூழ்கையே போதும்” என்றார் யுதிஷ்டிரர். அவையில் இருந்து ஏற்பொலிகள் எழுந்தன. பீமன் “நாம் உளம்சோர வேண்டியதில்லை. நமக்கு அவன் யார் என இப்போது தெரிந்திருக்கிறது. இன்று நான் அவனை நேருக்குநேர் எதிர்கொள்வேன். எண்ணிக்கொள்க, அவர்கள் இன்று பெருந்தோல்வியுடனேயே திரும்பிச்செல்வார்கள்!” என்றான்.

இளைய யாதவர் குறுகிய மூங்கில் கணுப்படிகளினூடாக வண்டுபோல் தொற்றி கீழிறங்கி வந்தார். அவரது மேலாடை காற்றில் பறந்தமையால் விண்ணிலிருந்து இறகு விரித்துப் பறந்து இறங்கி மண்ணில் நிற்பவர் போலிருந்தார். அங்கு காத்து நின்றிருந்த ஏவலன் அவரை அணுகி “அரசி தன் மாளிகை மீண்டுவிட்டார்” என்றான். “சொல்” என்று இளைய யாதவர் சொல்ல ஏவலன் அரசியின் சொற்களை மெல்ல முணுமுணுத்தபடி அவருடன் வந்தான். அவர் நின்று அவன் செல்லலாம் என்று கைகாட்டினார்.

இருளில் புரவியில் ஏறிக்கொண்டு தனியாக சீர்நடையில் சென்று அர்ஜுனனின் மருத்துவநிலையை அடைந்தார். வாயிலில் அரைத்துயிலில் இருந்த மருத்துவ ஏவலர்கள் காலடியோசை கேட்டு விழித்து திரும்பி அவரைப் பார்த்து பதறி எழுந்து நின்று தலைவணங்கினர். இளைய யாதவர்

அணுகி வந்து தாழ்ந்த குரலில் “எப்படியிருக்கிறார்?” என்றார். “இன்னும் அதே நிலையில்தான்” என்று இளமருத்துவன் சொன்னான். முதிய மருத்துவர் உள்ளிருந்து பேச்சொலி கேட்டு எழுந்து வெளிவந்தார். தலைவணங்கி “இளைய யாதவருக்கு வணக்கம். நான் கலிககுலத்தோனாகிய கர்வடன், இங்கே தலைமை மருத்துவன். அரசே, இளைய பாண்டவரின் நான்கு மலர்களும் இன்னமும் இதழ் குவிந்தே உள்ளன” என்றார். இளைய யாதவர் தலையசைத்து அவரை வெளியே செல்லும்படி கைகாட்டினார். மருத்துவர்கள் வெளிவர அவர் அறைக்குள் சென்று கதவை மூடிக்கொண்டார்.

அர்ஜுனனின் அருகணைந்து அவர் தலையருகே அமர்ந்தார். அர்ஜுனனின் முகம் வெந்ததுபோல் காய்ச்சல் கொண்டிருந்தது. உதடுகள் உலர்ந்து ஒன்றுடன் ஒன்று ஒட்டியிருந்தன. மூடிய இமைகள் வீங்கி ஆற்றுருளைக்கல்போல் தெரிந்தன. தாடிமயிர்கள் நனைந்து திரிகளாக படிந்திருக்க வாய் சற்றே திறந்து மெல்லிய மூச்சு ஓட அதுவரை ஒருவிளிப்பாடு அகலே காத்து நின்றிருந்த முதுமை அவ்வுடலில் வந்து முழுமையாக படிந்திருப்பதுபோல் தோன்றியது. இளைய யாதவர் அர்ஜுனனின் கையை எடுத்து தன் கைக்குள் வைத்துக்கொண்டு குனிந்து அவன் காதில் “பார்த்தா!” என்று அழைத்தார். அர்ஜுனன் அதை கேட்கவில்லை. “பார்த்தா!” என்று அவர் மீண்டும் ஒருமுறை அழைத்தபோது அவனுக்குள்ளிருந்து மெல்லிய சுடரொன்று நடுங்கியது. “பார்த்தா!” என்று அவர் மூன்றாம் முறை அழைத்தபோது இமைகள் நலுங்கின. அவன் “ம்ம்” என்று மறுவிளி கேட்டான்.

காலஇடங்களுக்கு அப்பால் ஓரிடத்தில் அவர்கள் சந்தித்துக்கொண்டனர். அது காளிந்தியின் கரை. கரிய பாறை

மேல் மலரமர்வில் இளைய யாதவர் அமர்ந்திருந்தார். கீழே சிறுபாறை மீது கைகளை மார்பின்மீது கட்டியபடி அவரை நோக்கி அர்ஜுனன் அமர்ந்திருந்தான். அவர்களைச் சூழ்ந்து நீரோசையும் காற்றோசையும் நிறைந்திருந்தன. “இது பிறிதொரு காலம், பாண்டவனே” என்று இளைய யாதவர் சொன்னார். “அன்று சென்று நின்று நான் இதை உன்னிடம் கேட்கிறேன். நீ எழ விழைகிறாயா? இங்கு இன்னும் எஞ்சியுள்ளதா?” என்றார். “ஆம். எனக்கு ஆணையிடப்பட்டதை நான் இன்னும் முடிக்கவில்லை” என்றான் அர்ஜுனன். “அனைத்தையும் செய்து முடித்தவன் ஆவநாழி ஒழிந்தவனும்கூட” என்று இளைய யாதவர் சொன்னார். “ஒழிந்து இங்கு அனைத்திலிருந்தும் பறந்தெழவே விழைகிறேன். இப்பிறவியில் இங்கு எச்சமென எதுவும் இருக்கலாகாது” என்று அர்ஜுனன் சொன்னான்.

“நோக்குக, இவ்வினிய நீர்! இவ்விளங்காலை. இக்குளிர்காற்று. இங்கு அனைத்தும் எத்தனை இனிமை கொண்டுள்ளன! அமுதென்பதென்ன, புலன்கள் தொடுகையில் ஐம்பருக்களும் கொள்ளும் கனிவுதான் அது. மானுடன் உணரும் இன்பத்தையே விண்ணில் அமுதென வாற்றி வைத்திருக்கிறார்கள். பாற்கடல் என்பது என்ன? இவ்வனைத்திலும் பிரம்மத்தை உணரும் ஒருவனின் உள்ளப்பெருக்கு அல்லவா அது? அதை கடைந்தெடுக்கும் சுவை தெய்வங்களுக்கு உகந்தது. தேவர்களை அழிவற்றவர்களாக்குவது. பாண்டவனே அறிக, அந்த அமுது இங்கு அனைத்திலும் உள்ளது! மரத்தில் வேர்முதல் இலைவரை தேன் மறைந்திருப்பதைப்போல” யாதவரின் விழிகளை பார்த்துக்கொண்டிருந்த அர்ஜுனன் “ஆம்” என்றான்.

“சிறிய வாழ்வில் புழங்குந்தோறும் இன்பமும் துன்பமும் இனிமையும் கசப்புமென இவ்வுலகு நிலைமாறி அலைகொள்கிறது. இங்கு செயல்யோகியென ஒருவன் மாறுகையில் துன்பங்கள் மீதும் கசப்பின் மீதும் ஆளுகை கொள்கிறான். இன்பத்தை தனித்தறியத் தொடங்குகிறான். ஞானத்தால் தவத்தால் அவன் வீடுபேறடையுந்தோறும் இனிமை மட்டுமே எஞ்சுகிறது. அமுதொன்றே எஞ்சும் ஒரு நிலையும் உண்டு. அதில் அமர்ந்தோர் யோகிகள். அவ்வமுதனைத்தையும் உதறி இங்கிருந்து செல்பவனே வீடுபேறடைபவன்” என்றார் இளைய யாதவர். “உன் நெற்றியின் ஊற்றுக்கண் திறந்து இனிமைப் பெருக்கு எழுந்து உடலின் ஒவ்வொரு கணுவும் உவகை கொள்ளும் தருணம் ஒன்றிலிருந்து முற்றிலும் உதறி மேலெழ இயலுமா உன்னால்?”

“ஆம், இக்கணம் அதை என்னால் உறுதியாக சொல்ல இயலும். இங்கிருக்கும் பேரின்பங்கள் அனைத்தும் திரண்டு ஒரு துளியென ஆகி என் நாவிற்கு எட்டும் தொலைவில் முழுத்திருந்தாலும் ஒதுக்கிவிட்டு முன்செல்லவே விழைவேன்.” இளைய யாதவர் நகைத்து “எனில் சொல்க, மீண்டெழ விழைகிறாயா? இப்போது இறப்பின் விளிம்பிலிருக்கிறாய். உன் ஒரு சொல்லில் வாழ்வையோ இறப்பையோ நீ தெரிவுசெய்ய இயலும், சொல்க!” என்றார். தயக்கமில்லாமல் “மீண்டெழவே விரும்புகிறேன்” என்று அர்ஜுனன் சொன்னான். “இனிய மலர். தெய்வங்கள் அமர்ந்தருளும் நறுமணப்பீடம் கொண்டது. ஆயிரம் பல்லாயிரம் இதழ்களால் சூழப்பட்டது. உள்ளே செல்லும் வழி விரியத் திறந்திருக்கிறது. அதனுள் உள்ளன அனைத்து அழகுகளும் இனிமைகளும். காற்றில் எழுந்து பரவி அனைத்து

சித்தங்களுக்குள்ளும் நுழைந்து அருகே இழுக்கின்றது அதன் நறுமணம்.”

“உள்ளே நுழைவது எளிது. அங்கு நுழைந்துள்ளது இனிய மது. பார்த்தா, உள்நுழைவோரில் பல்லாயிரத்தில், பல லட்சங்களில், பல கோடிகளில் ஒருவரே வெளியேற இயல்கிறது. மீண்டும் உள்நுழைய விழைகிறாயா?” என்றார் இளைய யாதவர். “ஆம், இன்னும் சில அம்புகள் எஞ்சியுள்ளன. யாதவனே, உனது அருளிருந்தால் நான் வெளியேறுவேன்” என்று அர்ஜுனன் சொன்னான். “சொல்க! நான் வெளியேறும் வழி எது?” இளைய யாதவர் அவனருகே குனிந்து “அங்கு உனது ஒரு துளியை நீ எஞ்சவிட்டுச் செல்லவேண்டும். பல்லி தன் வாலை அறுத்து உதிர்த்துவிட்டுத் தப்புவதுபோல. அதுவே ஒரே வழி” என்றார். அர்ஜுனன் “ஆம்” என்றான். “உனது மிகச் சிறந்த பகுதியை. நீ மிக விரும்பும் ஒரு பகுதியை” என்றார் இளைய யாதவர். “அது உனக்கு பிறிதொரு இறப்பென்றே ஆகும். அப்பேரிழப்பால் நீ அதை கடந்து செல்ல இயலும்.”

அர்ஜுனன் “ஆம், நான் அதற்கு ஒருக்கமே” என்றான். “எனில் எழுக!” என்று சொல்லி இளைய யாதவர் அவன் நெற்றிப்பொட்டை தன் கைவிரலால் தொட்டார். அவன் வலக்கால் இழுத்துக்கொண்டது. முகம் கோணலாகி உதடு வளைந்து எச்சில் வழியத்தொடங்கியது. உடலெங்கும் சென்ற வலிப்பு மேலும் மிகவே அவனிடமிருந்து முனகலோசை ஒன்று எழுந்தது. இளைய யாதவர் எழுந்து தன் ஆடையை சீர் செய்து கதவைத் திறந்து வெளிவந்தார். முதிய மருத்துவர் எழுந்து வணங்கி நிற்க “விழித்துக்கொண்டார். புலரி எழுகையில் எழுந்து படைமுகப்பிற்கும் வருவார். உரிய மருந்தும் உணவும் கொடுங்கள்” என்றபின் நடந்தார்.

துரோணர் முந்தைய நாளிரவு முற்றிலும் துயில்நீத்திருந்தார். பருந்துச்சூழ்கையின் இடச்சிறகில் அதன் இறகுமுனைகளில் ஒன்றாக தன் தேர்மேல் நின்றிருக்கையில் அவ்வப்போது வெண்முகில்போல அவருடைய தன்னுணர்வின் மேல் துயில் வந்து மூடி மெல்ல கடந்துசென்றது. தன்னுணர்வை தக்கவைத்துக்கொள்ள அவர் முயன்றபோது குளிரலைபோல வந்து அறைந்து தூக்கி கொண்டுசென்று பிறதெங்கோ நிறுத்தி திகைப்புற்று மீளச் செய்தது.

ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு வாழ்வில் திகழ்ந்து மீள்வதை அவரே விழித்தெழுகையில் வியப்புடன் நோக்கினார். நூறு குடும்பங்கள் மட்டுமே வாழ்ந்த மலைச்சிற்றூரான பிரமதத்திற்கு அவர் கிருபியுடன் வந்திறங்கினார். மலையில் வெட்டி எடுக்கப்படும் கல்லுப்பை ஏற்றிக்கொண்டு வந்து கிராமங்கள் தோறும் விற்கும் வணிகனான கலிகன். தேன்மெழுகு பூசிய ஈச்சம்பாய்களால் பொதியப்பட்ட உப்புக்குவை மீது அமர்ந்து கங்கையின் பெருக்கை நோக்கியபடி ஒழுகி வந்தபோது கரையோரமாக விலகிச்சென்ற ஒவ்வொரு ஊரிலும் அவர் சற்றுநேரம் வாழ்ந்து வாழ்ந்து மீண்டார். “என்ன எண்ணம்?” என்றாள் கிருபி. துரோணர் “மானுடனுக்கு ஒரு வாழ்க்கை மட்டும்தானே அளிக்கப்பட்டுள்ளது?” என்றார். கிருபி நகைத்துக்கொண்டு அவர் கைகளைப்பற்றி “ஒரு வாழ்க்கையை நிறைப்பதற்கே முடியாமலாகிறது. கையை விட்டு அளாவி நுரையை எழுப்பி நிறைக்கவேண்டியிருக்கிறது” என்றாள்.

கிருபியை அவர் அவளுடைய சிற்றூரின் குடிலில் சந்தித்தார். அவள் முதுமையால் இறுகிவிட்டிருந்தாள். அவர் உத்தரபாஞ்சாலத்தில் அவளுடைய ஊரைத் தேடி வந்திருந்தார்.

தன் குடில்வாயிலில் விறகுகளை பிளந்துகொண்டிருந்த அவளைக் கண்டதும் அவர் நடைதளர்ந்தார். முறத்தில் காய்கள் உலரவைக்கப்பட்டிருந்தன. அப்பால் மூங்கில்பாயில் நெல் காய்ந்தது. காகங்களை ஓட்டும்பொருட்டு கரிய மரவுரி ஒன்றை கழுகுவடிவில் செய்து நிறுத்தியிருந்தாள். அவர் அணுகுவதன் நிழலசைவைக் கண்டு நிமிர்ந்தாள். அவரைக் கண்டதும் முகத்தில் எந்த உணர்வுமாற்றமும் உருவாகவில்லை. அவர் முற்றத்தில் ஏறியதும் “வருக!” என்றாள்.

அவர் சாணிமெழுகிய திண்ணையில் களைப்புடன் அமர்ந்தார். அவள் உள்ளே சென்று கொப்பரையில் இன்நீருடன் வந்தாள். அவர் அதை வாங்கி அருந்தியபோது அந்தச் சுவை எத்தனை பழகியதாக இருக்கிறது என்று எண்ணிக்கொண்டார். அவள் அவரைவிட்டுப் பிரிந்து நெடுநாட்களாகிவிட்டிருந்தது. அஸ்வத்தாமன் உத்தரபாஞ்சாலத்தின் அரசனானதுமே அவள் அவனுடன் சென்றாள். அங்கிருந்து சில ஆண்டுகளிலேயே அச்சிற்றூருக்குச் சென்றுவிட்டாள். அஸ்வத்தாமன் அவளை அரண்மனையில் தங்கவைக்க விழைந்தான். “நான் அரசி அல்ல, அந்தணப்பெண். அரசியாவது என்னால் இயலாது. ஆவேன் எனில் அது வீழ்ச்சி” என கிருபி சொன்னாள்.

அஸ்வத்தாமன் அவளுக்கு அளித்த எதையுமே அவள் பெற்றுக்கொள்ளவில்லை. தன்னந்தனியாக கிளம்பி அவன் அமைத்துக்கொடுத்த அக்குடிலுக்கு சென்றாள். அங்கே தனியாகவே தங்கினாள். அச்சிற்றூரின் தலைவர் அவளுக்குத் தேவையானவற்றை கொண்டுவந்து அளித்தார். அவள் அங்கே சிற்றூரின் சிறுமியருக்கு நெறிநூல்களை கற்பித்தும் பெண்களுக்குரிய வேள்விகளை இயற்றியும் வாழ்ந்தாள். அஸ்வத்தாமன் அவ்வப்போது வந்து அவளைப் பார்த்து

மீண்டான். துரோணர் அவளை பார்க்கச்செல்வது குறைந்தது. அவர் வருவதை அவள் விரும்பவில்லை என்று தோன்றும். அவள் கண்களில் கனிவு இருக்காது. வாழ்க்கையை கடந்துசென்றுவிட்ட முதுமகள்களுக்கு விழிகளில் ஒரு கடுமை தோன்றுவதுண்டு. புருவங்களில் இருந்த நரைமயிர்கள் விழிகள்மேல் விழுந்துகிடக்க அவள் அவர் அறியாத நோக்கொன்றை கொண்டிருந்தாள்.

"நான் வரும்போது எண்ணிக்கொண்டேன், முன்பு நீ சொன்னதை. ஒரு வாழ்க்கையை நிறைப்பதற்கே முடியாமலாகிறது. கையை விட்டு அளாவி நுரையை எழுப்பி நிறைக்கவேண்டியிருக்கிறது என்று" என்றார். கிருபி "வாழ்க்கையை ஒரு துளியைக் கொண்டே நிறைத்துவிடமுடியும்" என்றாள். "ஆம், இங்கு வரும்போதெல்லாம் நான் அதையே உணர்கிறேன். இங்கே வந்து தங்கவேண்டும் நான்" என்றார் துரோணர். "இங்கே வில்லுடன் தங்க இயலாது" என்று கிருபி சொன்னாள். "ஆம், அதை உதறிவிட்டு வரவேண்டும்" என்று துரோணர் சொன்னார். "வில் உங்கள் கைப்பழக்கம்" என்று கிருபி சொன்னாள். அவர் திடுக்கிட்டு நோக்கினார். தன்முன் விரிந்திருந்த பாண்டவப் படைகளை உணர்ந்ததும் சற்றே நிலைநழுவியிருந்த வில்லை இறுகப்பற்றிக்கொண்டார்.

இத்தருணத்தில் இழந்த அனைத்தையும் மீட்டுக்கொள்கிறோமா? ஒரு வஞ்சத்தின் பொருட்டு இவையனைத்தையும் இழந்திருக்கிறோம். வஞ்சம் கொள்பவரிடம் தெய்வங்கள் கேட்கின்றன, எத்தனை? எவ்வளவு? எதுவரை? ஒவ்வொன்றும், அனைத்தும், இறுதிவரை என்று உரைக்கில் மட்டுமே வஞ்சத்தில் வெற்றியை அளிக்கின்றன. வஞ்சநிறைவின்

இனிமையை அளிக்கின்றன. வஞ்சநிறைவு என்பது மூக்குற்றிப்பூவின் தேன். துளியினும் துளி. சிறுதேனீயால் மட்டுமே அதை அறிந்து தொட்டு எடுக்கமுடியும். வஞ்சம் கொண்டவனுக்கு வஞ்சமன்றி பிறிதெதுவும் எஞ்சுவதில்லை. வஞ்சத்திற்கு பின் வஞ்சமும் எஞ்சுவதில்லை. எத்தனை நூல்கள் மீளமீளச் சொல்கின்றன இவற்றை. எவரேனும் உளம்கொள்கிறார்களா? இயலாமையால் அன்றி எதன்பொருட்டேனும் வஞ்சத்தைக் கைவிட்ட மானுடர் உண்டா?

வஞ்சமும் இல்லையேல் எதைக்கொண்டு என் வாழ்க்கையை நிறைத்துக்கொள்வேன்? அந்தணனாக வாழவியலாதா என்ன? அதை கிருபி உணர்ந்திருந்தாளா? அன்று அவள் குடிலின் திண்ணையில் அமர்ந்திருந்தபோது பெருஞ்சினம் மூண்டெழ நீ உரைத்த ஒரு சொல்லில் இருந்து எழுந்தது என் ஆறாப் பெருவஞ்சம் என்று சொல்ல எண்ணினார். ஆனால் அச்சொல்லில் இருந்த சிறுமையை அவரால் தாளமுடியவில்லை. ஒரு பசுவுக்காகவா நீ துருபதனை தேடிச்சென்றாய் என்று அவள் கேட்கக்கூடும். கேட்பவள்தான் அவள். அவரால் அங்கே அமர்ந்திருக்க முடியவில்லை. நெடுந்தொலைவு கடந்து அங்கே வந்திருந்தார். ஆனால் உடனே திரும்பிவிடவேண்டும் என்று தோன்றியது. கிளம்புகிறேன் என அவர் சொன்னபோது கிருபி ஒன்றும் சொல்லவுமில்லை. அவர் திரும்பி அந்த பொய்க்கழுகை பார்த்தார். புன்னகையுடன் நடந்தார்.

வானில் முகில்கள் ஒளிகொள்ளத் தொடங்கிவிட்டிருந்தன. கரிய இரும்பு உரசப்பட்டு மெருகேறுவதுபோல. கீழ்வானில் சில பறவைகளின் சிறகசைவு. அவர் பெருமூச்சுடன் இத்தனை

மெல்ல காலம் ஒழுகும் ஒரு தருணத்தை முன்பு உணர்ந்ததே இல்லை என எண்ணிக்கொண்டார். இது இமயத்தின் அடிவாரத்தில் திருஷ்டாவதி நதியின் கரையில் பிலக்ஷவனம் என்னும் காடு. இந்த இடைவழியில் இந்தக் காலையில் பதியும் முதற்காலடி என்னுடையதா என்ன? மழை பெய்துகொண்டிருந்தது. ஆஷாட மாதத்து இளமழை. சரத்வானின் மலைக்குடிலுக்கு நேர்கீழே திருஷ்டாவதி அருவியாகப் பெய்திறங்கி மலைப்பாறைகளில் சிதறி நுரைத்து நாணல்கூட்டங்களுக்கு நடுவே வழிந்தோடியது.

கண்ணீர் வழியும் முகத்தைத் தூக்கி துரோணர் கேட்டார் “என்னுள்ளும் அத்தகைய வஞ்சம் குடியேறுமா என்ன? அனலை கருக்கொண்ட கந்தகமலையாக நானும் ஆவேனா? என் காயத்ரி எனக்குள்ளேயே கருகிப்போவதுதான் அதைவெல்லும் ஒரே வழியா?” அவர் தோளை மெல்ல தொட்டு இளைய யாதவன் சொன்னான் “வில் என்பது ஒரு புல் மட்டுமே. என்றும் தனுர்வேதமென்பது புல்லை அறிந்துகொள்ளும் ஞானம்.” அவர் திகைப்புடன் அவனை நோக்கி “என்ன சொல்கிறாய்? நீ எப்படி இங்கே வந்தாய்?” என்றார். “புல்லை ஏன் அறியவேண்டும் மானுடர்?” என்றான் இளைய யாதவன். துரோணர் “ஏனென்றால் இந்த பூமியென்பது புல்லால் ஆனது” என்றார்.

மீண்டுமொரு கணம் விழித்துக்கொண்டு அப்போதும் புலரிமுரசு முழங்கவில்லை என்று உணர்ந்தார். எங்கிருக்கிறேன்? இது குருக்ஷேத்ரம். ஆனால் நான் இதோ என் மைந்தனுடன் இளவெயிலில் அம்பு பயின்றுகொண்டிருக்கிறேன். பொன்வெளிச்சத்தில் காலையிலெழுந்த சிறுபூச்சிகள் சுடர்களாக சுழல்கின்றன. இலைப்பரப்புகள் பளபளத்து அசைகின்றன. மிக அப்பால் ஆலயமணியின் ஓசை எழுகிறது.

அம்புபயிலும் இளையோரின் சிரிப்பொலிகள். அவ்வண்ணம் சிரிக்க அதன்பின் எப்போதுமே மாணவர்களால் இயல்வதில்லை. மாணவர்களுடன் இருப்பதே என் உவகை. மாணவர்களுக்கு அளிக்கையில் நான் ஆசிரியன். மாணவர்களிடமிருந்து பெற்றுக்கொள்கையில் நான் தந்தை. ஆசிரியன் என்பவன் என்றும் இளமை மாறாத மைந்தரின் தந்தை.

மாணவருடன் சிறு சொல்லாடி நகைத்தபடி ஆலமரத்தடியில் அமர்ந்தார். "அம்பைத் தொட்டதுமே அதை உணர்பவன் அதமன். அவன் உடல் பயிற்சியை பெற்றிருக்கிறது. அம்பருகே கைசென்றதுமே அதை உணர்ந்துகொள்பவன் மத்திமன். பயிற்சியை அவன் அகமும் பெற்றிருக்கிறது. அம்பென எண்ணியதுமே அம்பை அறிபவன் உத்தமன். அவன் ஆன்மாவில் தனுர்வேதம் குடியேறியிருக்கிறது." அவர் முன் அஸ்வத்தாமனும் அர்ஜுனனும் கர்ணனும் ஏகலவ்யனும் அமர்ந்திருந்தார்கள். அவர்களை நோக்கியபடி அவர் சொன்னார். "எந்த ஞானமும் உபாசனையால் அடையப்படுவதே. அதன் நிலைகள் மூன்று. ஞானதேவியிடம் இறைஞ்சி அவளை தோன்றச்செய்தல் உபாசனை. அவளை கனியச்செய்து தோழியாகவும் தாயாகவும் தெய்வமாகவும் தன்னுடன் இருக்கச்செய்தல் ஆவாகம். முழுமை என்பதுதான் அவளேயாதல். அதை தன்மயம் என்றனர் மூதாதையர்."

விழித்துக்கொண்டு அது கனவென்று உணர்ந்தார். "தந்தையே!" என்று அம்புடன் வந்த மைந்தனிடம் "செல்க!" என்று படபடப்புடன் சொன்னார். "இது பெரும்போர்க்களம். நான் புலரியில் வில்லுடன் காத்து நின்றிருப்பதாக உணர்கிறேன்." அஸ்வத்தாமன் திகைப்புடன் ஏறிட்டுப் பார்த்தான். எவர்

எவரிடம் போரிடுகிறார்கள் என்று அவருக்குத் தெரியவில்லை. வலப்பக்கம் நின்றிருந்த துருபதனை திரும்பி நோக்கி “இது எந்தப் போர்?” என்றார். துருபதன் நகைத்து “போருக்கு எழுந்த பின்னரும் போரை அறியாமல் இருக்கிறீர், துரோணரே. இது தேவர்களும் அசுரர்களும் அமுதின் பொருட்டு நிகழ்த்தும் பெரும்போர்” என்றான். “அது முன்பு நிகழ்ந்ததல்லவா?” என்று அவர் கேட்டார். “அது என்றும் நிகழ்வது. முடிவற்றது” என்று துருபதன் சொன்னான்.

“பாஞ்சாலனே சொல்க, நாம் எவர் தரப்பில் நின்று போரிடுகிறோம்? நாம் யார்?” என்று துரோணர் உரக்க கேட்டார். “இதிலென்ன ஐயம்? நாம் அசுரர்களின் பொருட்டு போரிடுகிறோம். அதோ நம்முன் பெருகி நின்றிருப்பவர்கள் தேவர்கள். அமுது அங்கிருக்கிறது. இன்னமும் அது எவராலும் முழுக்க வெல்லப்படவில்லை” என்றான் துருபதன். போர்முரசுகள் முழங்கத்தொடங்கின. துரோணர் தன் வில்லை கையிலெடுத்து துருபதனிடம் “நீ என்னருகே நில். நீ உடனிருந்தால் நான் வெல்லப்பட இயலாதவன்” என்றார். “நான் உங்கள் வலது கை என என்றும் உடனிருப்பேன்” என்று துருபதன் கூறினான். முரசுகள் முழங்கிக்கொண்டிருந்தன. அவர் விழித்துக்கொண்டு காற்றில் பறந்த தன் மேலாடையை எடுத்து சுற்றிகொண்டார். ஆனால் கவசங்கள் எடையுடன் உடலை அழுத்துவதாக உணர்ந்தார். அது அவருடைய கொடியின் படபடப்பென உணர்ந்ததும் விழிப்பு முழுமையாகியது.

கையுறைகளை இழுத்து சீரமைத்தார். என்ன கனவு அது? அதை முழுக்க தொகுக்க இயலவில்லை. கனவுகளின் பொருளின்மை எப்போதுமே துணுக்குறச் செய்கிறது. பொருந்தா

பெருந்தொலைவுகளை அவை பறந்து தாவிச் சென்று இணைத்துவிடுகின்றன. இனிய நாட்களை நினைவுறுகிறேனா? அல்லது அவ்வினிய நாட்களில் எய்தாது எஞ்சியிருந்த சிலவற்றையா? அவர் தன் இடக்கையருகே ஒருவர் நின்றிருப்பதை உணர்ந்தார். எப்போது அவ்வுரு தன் தேரிலேறிக்கொண்டது என்று திகைத்து "யார்?" என்றார். அது ஒரு பெண் என்று உணர்ந்ததும் "இப்போர்க்களத்தில் எப்படி வந்தாய்? விலகு!" என்றார். அவள் தன் கையிலிருந்த கரிய சிறு மொந்தையை அவரை நோக்கி நீட்டினாள். "இது என்ன?" என்று அவர் கேட்டார். "இது அமுது. என்றும் நீங்கள் விழைந்தது" என்றாள்.

"இல்லை, நான் விழைந்தது இது அல்ல!" என்று அவர் சொன்னார். "இதுதான். இதை மூத்த அமுது என்பார்கள். உங்களுக்குரியது இதுவே" என்று அவள் அதை அவரிடம் நீட்டினாள். அதை கைகளில் வாங்கிக்கொண்டார். "உன்னை பார்த்திருக்கிறேன்... நீ யார்?" என்று அவர் கேட்டார். "என்ன சொல்கிறீர், ஆசிரியரே?" என்ற திரிகர்த்த நாட்டு அரசன் சுசர்மனின் குரல் கேட்டு அவர் விழித்துக்கொண்டார். சுசர்மன் தன் கையிலும் ஒரு மொந்தையை வைத்திருந்தான். "அகிஃபீனா கலந்த இனிய மது. போரில் ஊக்கத்தை அளிக்கும்" என்றான். "தாங்கள் தேர்தட்டில் சோர்ந்திருப்பதாகத் தோன்றியது ஆகவே அமுதுடன் நானே வந்தேன்."

துரோணர் அந்த மதுவை அருந்தினார். அதில் கந்தகமணம் இருப்பது போலிருந்தது. "எரிமணம்" என்றார். "ஆம், நம் குருதியை எரியச்செய்யும்" என்றான் சுசர்மன். "ஆசிரியரே, உங்கள் வஞ்சம் அனலாகட்டும். இன்று அறம், நெறி, முறை என எதையும் நீங்கள் கருத்தில் கொள்வதில்லை என்று

சொன்னதைப்போல எங்களை ஊக்கமடையச் செய்யும் பிறிதொன்றில்லை. அதையே எங்களுக்கும் சொல்லிக்கொண்டோம். அர்ஜுனன் இன்று படைமுகம் எழப்போவதில்லை. ஒருவேளை அவன் வந்தாலும் பதறாக் காலில் நின்று அசையா வில் கொள்ளப்போவதில்லை. இன்று நாம் அவன் உயிரை கொள்வோம்.” அவன் மதுக்கலத்தைத் தூக்கி அருந்தி “இன்று பாரதவர்ஷத்தின் பெருவீரனின் கதை முடிகிறது. அவனை பயிற்றுவித்த ஆசிரியராலேயே அவன் அழிகிறான்” என்றான்.

துரோணர் “ஆம்” என்றார். மொந்தையைத் தூக்கி அப்பால் வீசிவிட்டு “இன்று நான் பிறிதொருவன். மூத்தவளின் அருள் என்னுடன் திகழ்க!” என்றார். சுசர்மன் களிமயக்கில் உரக்க நகைத்து கைகளைத் தூக்கி தன் தம்பியரை நோக்கி “மூத்தவள் துணையெழுக! மூத்தவள் அருள்க!” என்றான். சம்சப்தர்கள் அவனுடன் சேர்ந்து உரக்கக் கூச்சலிட்டு நகைத்தார்கள்.

# கார்கடல் - 32

சஞ்சயன் சொன்னான். முதலொளிக்காக காத்து நின்றிருக்கும் இரு படைப்பிரிவுகளையும் நான் காண்கிறேன். அவர்கள் அன்றைய போரை புதிய ஆர்வத்துடன் எதிர்பார்த்திருக்கிறார்கள். கௌரவர்கள் அனைவரும் பாண்டவப் படையின் முகப்பில் அர்ஜுனனின் குரங்குக்கொடி எழுகிறதா என்பதையே நோக்கிக்கொண்டிருக்கிறார்கள். அர்ஜுனன் எழுந்தமைக்கான எந்தச் சான்றும் ஒலியென எழவில்லை என்பதனால் அவர்களின் ஊக்கம் கணம்தோறும் கூடிக்கொண்டிருக்கிறது.

மறுபக்கம் பாண்டவர்கள் மெல்லிய துடிப்புடன் நின்றிருந்தனர். ஏதோ ஒன்று நிகழுமென அவர்கள் எவ்வண்ணமோ அறிந்திருந்தனர். அவ்வண்ணம் முடிவதற்குரியதல்ல அது என்பதையே அவர்கள் இரவெல்லாம் பேசிக்கொண்டிருந்தனர். அது பிறிதொன்று. வருந்தலைமுறையினர் எண்ணி எண்ணிப் பேசும் பெரும்பொருள். அது எழுந்தாகவேண்டும். அதை இயற்றும் இளைய யாதவர் மட்டுமே அறிந்த ஒன்று நிகழ்ந்தாகவேண்டும். அவர்கள் படைமுகப்பில் நின்றிருந்த தேர்களையே நோக்கிக்கொண்டிருந்தனர்.

பாண்டவப் படையின் அரைநிலவுச்சூழ்கையின் மையத்தில் யுதிஷ்டிரரின் மெய்க்காவல்படையினர் தங்கள் மின்படைக் கொடியுடன் நின்றிருந்தனர். அவர்கள் நடுவே உள்ளிருந்து அரசத்தேர் வருவதற்கான இடைவெளி விடப்பட்டிருந்தது. அதற்கு இருபுறமும் என விரிந்த நிலவுவளைவின் வலப்பக்கம் சாத்யகியும் திருஷ்டத்யும்னனும் துருபதரும் சிகண்டியும் விராடரும் இறுதியாக பீமனும் நின்றிருந்தனர். இடப்பக்கம் நீண்ட வளைவில் அபிமன்யுவின் மெய்க்காவலர் நின்றிருந்தனர். சுருதகீர்த்தியும் சுருதசேனனும் தேர்களில் வில்லுடன் நின்றிருக்க இறுதியாக அர்ஜுனனின் மெய்க்காவல்படையினர் நின்றனர்.

கருடச்சூழ்கையின் அலகென நின்றிருந்த துரோணரின் தேர்மகுடத்தில் கமண்டலக் கொடி பறந்துகொண்டிருந்தது. அவருக்குப் பின்னால் சுசர்மனும் சம்சப்தர்களும் நின்றிருந்தனர். பருந்தின் வலச்சிறகில் நின்றிருந்த அஸ்வத்தாமன் முரசுகளை நோக்கிக்கொண்டிருந்தான். அவனருகே பூரிசிரவஸ். அருகிலேயே ஜயத்ரதன் நின்றிருந்தான். இடச்சிறகில் சல்யர், அவர் அருகே கிருபர்.

அப்பால் பகதத்தர். பருந்தின் வலக்கூருகிர் என துரியோதனனும் தம்பியரும். இடது உகிர் என பால்ஹிகர். அவர்கள் ஒவ்வொருவரும் தங்களை மேலும் மேலும் தீட்டிக்கொண்டனர். முதற்கணத்தில் முழுமையாக எழுந்து கிளம்ப அகம்திரட்டிக்கொண்டிருந்தனர்.

எத்தனை முறை நிகழ்ந்தாயிற்று! இருப்பினும் அந்தப் புலரி முதற்கணம் முன்னறிய ஒண்ணாததாகவே உள்ளது. அதை முடிவெடுக்கும் பணியை தெய்வங்களே வைத்துக்கொண்டிருக்கின்றன. அரசே, அந்த முதல் கணத்தில் முதல் அம்பில் உயிர்விடவிருக்கும் முதல் வீரனை தெய்வங்கள் அப்போது தெரிவுசெய்து கொண்டிருக்கின்றனவா?

அந்த முகங்களை நான் மாறிமாறி நோக்குகிறேன். இப்போது இருபுறத்திலும் எழுந்து நடக்கும் நிலையிலிருக்கும் அனைவருமே போருக்கெழுந்துவிட்டனர். அடுமனையாளர்களும் மருத்துவர்களும் மட்டுமே எஞ்சியிருக்கின்றனர். பயிலாப் படைவீரர்கள் ஆகையால் அந்த முகங்களில் அச்சமும் தயக்கமும் எழுச்சியும் குழப்பமும் என ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு உணர்ச்சி நிறைந்துள்ளது.

அனைத்து உணர்ச்சிகளையும் மூடியிருக்கிறது களைப்பு. அங்கே நற்துயில்கொண்டு எழுந்தவர் சிலரே. போர் தொடங்கும்வரை துயிலின்மையால் தளர்ந்து விழப்போகிறவர்கள்போல் தெரிவார்கள். முரசொலித்ததும் அவர்களிடம் குடியேறுவது என்ன? இறப்பை அருகெனக் கண்ட உயிரின் பதற்றமா? உயிர்குடிக்க உள்ளிருந்து எழும் தெய்வங்களின் வெறியா? எவர் அறிய இயலும்? அங்கே கால்கள் மண்விட்டு எழத் துடிக்கின்றன. கைகள் சிறகுகளாக விழைகின்றன. வெறிகொண்ட மானுடர் ஏன்

எம்பிக்குதிக்கிறார்கள்? நிலைமீறிய எதற்கும் மண்ணில் இடமில்லையென்பதனாலா? அமைவதே மண், எழுவதே வான் என்பதனாலா?

எழுகதிரின் முதலொளி தோன்றுவதற்கு சிலகணங்களுக்குமுன், முழைக்கழியில் முரசர்களின் பிடி இறுகிக்கொண்டிருக்கையில் பாண்டவப் படைமுகப்பில் அபிமன்யு தோன்றினான். அவனுடைய தேர் வந்து நின்றபோது அங்கிருந்த படைவீரர்கள் வாழ்த்தொலி எழுப்பினர். அது அலையெனப் பரவி படைமுழுக்க சென்றது. கௌரவர்கள் அபிமன்யுவை கூர்ந்து நோக்கினர். உடலின் கட்டுகளின்மேல் கவசங்கள் அணிந்திருந்தமையால் அவன் பருத்த உடல்கொண்டவனாகத் தோன்றினான். அவன் கையிலிருந்த வில் புதியதாக இருந்தது. குழலை தலைக்குப்பின் கட்டி அள்ளியிட்டு விளையாட்டுக்களத்திற்கு எழப்போகிறவன்போல் நின்றான்.

விழிகள் அர்ஜுனனை தேடிக்கொண்டிருக்க மிக அப்பால் வாழ்த்தொலிகள் எழுந்தன. கௌரவர்களின் படைவிரிவிலேயே அந்த ஆவல் விழிக்குத் தெரியும் அலையென்றாகியது. குரங்குக்கொடி மெல்ல அணுகிவந்தது. கர்ணன் தன் வில்லை நேர்நிறுத்தி வலக்கையால் மீசையை நீவியபடி நோக்கினான். துரோணர் விழிகளுக்குமேல் கையை வைத்து கூர்ந்தார். யானைமேலிருந்த துரியோதனன் துச்சாதனனிடம் “இளையோனே, அவனா?” என்றான். சுபாகு “அவரேதான், மூத்தவரே” என்றான். “களமெழுகிறான்!” என்று துச்சாதனன் வியப்புடன் சொன்னான். “ஆனால் அதில் வியப்பதற்கொன்றுமில்லை. அவ்வாறுதான் நிகழும்” என்றான் துரியோதனன்.

படைமுகப்பை அணுகுந்தோறும் அர்ஜுனன் விலகிச்செல்வதை ஜயத்ரதன் நோக்கினான். பிறையின் விளிம்பில் அர்ஜுனனின் மெய்க்காவல்படை நின்றிருந்தது. அவன் அங்கு செல்லாமல் யுதிஷ்டிரரை நோக்கி சென்றான். அவர்களின் திட்டம் புரிந்து சகுனி ஆணைகளை பிறப்பிப்பதற்குள் விடியலை அறிவித்து முரசுகள் முழங்கின. பாண்டவர்களிடமிருந்து முதல் அம்பு எழுந்து வந்து தாக்கியது. கௌரவப் படைகள் பொங்கிச் சென்றறைய போர் மூண்டது. இரு மரவுரிகளைச் சேர்த்துத் தைத்த வடுவென அந்தப் போர்முகப்புக்கோடு. ஆயிரம்கால் அட்டைபோல அது எங்கோ சென்றுகொண்டிருக்கிறது என்று விழிமயக்கடைகிறேன்.

கௌரவர்களின் அரசே, நான் அந்த முதல் அம்பை எய்தவனை கண்டேன். அவன் பெயர் வஜ்ரன். இந்திரப்பிரஸ்தத்திற்கு அருகே காமடம் என்னும் சிற்றூரைச் சேர்ந்த யாதவன். அங்கே இனிய காட்டில் கன்றோட்டி வாழ்ந்த சிறுவன். இந்திரப்பிரஸ்தம் அமைந்தபோது படையில் சேர்ந்தான். அம்புவிடப் பயின்றான். முதல் பத்துநாட்கள் அவன் படைகளுக்குப் பின்னிரையிலேயே இருந்தான். பின்னர் அவனை படைமுகப்புக்கே அனுப்பினர். அங்கே அவனுக்கு பெரிய நிலைவில்லும் அம்புகளும் அளிக்கப்பட்டன. முதல்நாள் அவன் கூட்டத்துடன் அலைமோதினான். அன்றே ஆணைகளை செவிகொள்ளவும் பிற அனைத்தையும் உளம்விலக்கவும் அவன் பயின்றான். "தோல்வரைக்கும்தான் வலி. போர்தொடங்குவது வரை மட்டுமே அச்சம்" என்னும் தொல்மொழியின் பொருளை அறிந்துகொண்டான்.

வஜ்ரன் தன் வாழ்நாளில் எவ்வுயிரையும் அறிந்து கொன்றதில்லை. இலக்கு வைத்து அம்பெறிந்ததும் இல்லை.

கௌரவப் படை இருக்கும் திசைநோக்கி அம்புகளை எய்தபடி ஆணையிடப்படும் திசைநோக்கிச் செல்வதையே அவன் இருநாட்களாக செய்துவந்தான். அவனுடன் வந்த அனைவரும் மடிந்த பின்னரும் அவன் உயிருடன் இருந்தமையால் அப்போரிலிருந்து உயிருடன் மீள்வதே தன் ஊழ் என அவன் தன்னுள் அறியா உறுதி ஒன்றை கொண்டிருந்தான். புலரிமுரசின் ஆணையெழுந்ததும் நின்ற வில்லில் நாணிழுத்து அம்புகோத்து விண்ணில் எய்தான். அடுத்த அம்பை எடுத்தபடி கூச்சலிட்டுக்கொண்டு முன்னால் ஓடினான்.

அந்த அம்புசென்று நெஞ்சிலறைய அலறி மல்லாந்து விழுந்து கைகால்களை உதறிக்கொண்டு துடித்து அணைந்தவன் ஜ்வாலன். அஸ்தினபுரிக்கு அருகே சுமந்தம் என்னும் ஊரைச் சேர்ந்த ஷத்ரியன். அங்கே அவன் தந்தை காவல்பணி செய்துவந்தார். தந்தையால் அவன் காவலனாகவே பயிற்சியளிக்கப்பட்டான். காவல்மாடத்தில் இரவும் பகலும் அமர்ந்திருந்த தந்தையை அவன் பல்லி என பழித்தான். அந்த வாழ்க்கையைக் கசந்து அங்கிருந்து எவருக்கும் தெரியாமல் வேலுடன் கிளம்பி அஸ்தினபுரிக்கு வந்து படையில் சேர்ந்தான். அனைத்துப் பயிற்சிகளிலும் அவன் பேரார்வத்துடன் பங்கெடுத்தான். தேர்ந்த வில்லவன் என்று ஆசிரியரால் பாராட்டப்பட்டான்.

ஒவ்வொருநாளுமென அவன் குருக்ஷேத்ரத்தை எதிர்பார்த்திருந்தான். அங்கே அவன் ஆற்றும் வீரச்செயலால் தன் பெயர் சூதர்நாவிலேறி தன் தந்தையை சென்றடையவேண்டும் என்று விழைந்தான். ஆனால் குருக்ஷேத்ரத்திற்கு வந்தநாள் முதல் அவனுக்கு எல்லைக்காவல் பணியே அளிக்கப்பட்டது. தேர்ந்த வில்லவரை

எல்லையில் அமர்த்தினால் காவலுக்கு அவர்கள் ஓரிருவரே போதுமென்று காந்தாரர் சகுனி எண்ணினார். நாளும் போர்வீரர்கள் மடிந்துகொண்டிருக்க, எல்லைக்காவலைக் குறைத்து அனைவரையும் படைமுனைக்கு அனுப்பினர்.

அன்று காலைதான் அவன் முதல்முறையாக களத்திற்கு வந்தான். வில்லுடன் வெறிக்குரல் எழுப்பியபடி அவன் முன்னால் பாய்ந்த கணத்திலேயே அவன் நெஞ்சை துளைத்துச்சென்றது அம்பு. அவன் ஒரு மூச்சுத்திணறலை, சொல்முட்டிய ஒரு கணத்தை, உடற்தசைகளில் ஓடிய விதிர்ப்பை, வந்தறைந்த நிலத்தை, ஒளியுடன் விரிந்த வானை, மங்கலடைந்து அகன்ற ஒலிப்பெருக்கை மட்டும் இறுதியாக அறிந்தான். அவன் உடல் மேல் அவன் படைத்துணைவர்கள் மிதித்து ஏறிச்சென்றனர். தேர்களின் சகடங்கள் ஏறிக்கடந்தன. அவன் அங்கே அசைந்து அசைந்து தலையாட்டிக்கொண்டிருந்தான்.

அவன் எழுந்து தன் உடலை பார்த்தபோது அது மிகவும் சிதைந்திருந்தது. துயருடன் திரும்பியபோது அருகே இன்னொருவனும் அதை நோக்கிக்கொண்டிருப்பதை கண்டான். “யார்?” என்றான். “இந்த அம்பை எய்தவன்” என்று அவன் சொன்னான். “சற்று முன் என் மேல் யானை ஒன்று மிதித்து ஏறிச்சென்றது. என் உடல் சிதைந்து கிடக்கிறது.” அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கிக்கொண்டனர்.

அவர்களுக்குக் கீழே நிகழ்ந்துகொண்டிருந்த போரை குனிந்து நோக்கிய பின் ஜ்வாலன் “நாம் இங்கிருந்து செல்லவியலாதா?” என்றான். “நாம் இவர்களால் அனுப்பி வைக்கப்படவேண்டும்” என்று வஜ்ரன் சொன்னான். “என் தந்தைக்கு என் பெயர் சென்று சேராது” என்றான் ஜ்வாலன். “அதனால் எந்த

வேறுபாடும் இல்லை. அவர் உன்னை மறப்பது உறுதி” என்று வஜ்ரன் சொன்னான். “ஏன்?” என்று ஜ்வாலன் கேட்டான். “இதோ பார், எத்தனை ஆயிரம்பேர். இவர்களை எவர் நினைவில்கொள்ள இயலும்?” என்றான் வஜ்ரன். பெருமூச்சுடன் “ஆம்” என்றான் ஜ்வாலன். பின்னர் “இவர்களை இங்குள்ளோர் முற்றாக மறந்தால் நன்று என்று தோன்றுகிறது” என்றான். “ஆம்” என்றான் வஜ்ரன்.

சகுனியின் ஆணைக்கேற்ப தலைப்பாகையில் செம்பருந்தின் இறகு சூடிய மாளவர்களும், வல்லூறின் இறகுசூடிய மகதர்களும், தாழைமடல் சூடிய துண்டிகேரர்களும், கருங்குருவி இறகுசூடிய மாவேல்லர்களும், ஈச்சம்பூக்குலைச் சூடிய அபிசாரர்களும், தென்னம்பாளை சூடிய அம்பஷ்டர்களும், பனம்பூக்குலை சூடிய ஆபிரர்களும், நாரையிறகு சூடிய அரட்டர்களும், மலையணிலின் வால்சூடிய லலித்தர்களும் என திரண்டிருந்த கௌரவப் படை எதிரில் நிறைந்து அலைத்த ஐந்துமணிப் பதக்கம் சூடிய பாஞ்சாலர்களுடனும், புரவிவால்குஞ்சம் சூடிய விராடர்களுடனும், கொக்கிறகு சூடிய மச்சர்களுடனும், பன்றிக்காது சூடிய நிஷாதர்களுடனும், காகச்சிறகு சூடிய கிராதர்களுடனும், வெண்ணிறப் பனிமானின் வால்முடியை சூடிய லடாகர்களுடனும் போரிட்டது.

கமுகுப்பாளையில் கழுதைக்காது சூடிய பத்ரர்களும், தென்னம்பாளையில் பசுக்காது சூடிய பிச்சகர்களும், யானைநகங்களைக் கோத்த தலையணிகள் அணிந்த வத்சர்களும், குதிரைப்பல் மணிமாலையை தலைப்பாகையில் அணிந்த சௌரவர்களும் அங்கே போருக்கெழுந்திருக்கிறார்கள். கோசலர்களின் கொம்புகள் காட்டெருமையின்

ஓசைகொண்டவை. குலூதர்கள் சிறுநாணலால் தாங்கள் மட்டுமே அறியும் கூரிய வண்டுமுரலை எழுப்பி பேசிக்கொள்கிறார்கள். குக்குரர்களும் போஜர்களும் அந்தகர்களும் விருஷ்ணிகளும் வளைதடியால் எறிந்து ஒருவரை ஒருவர் தொட்டு செய்தியறிவிக்கிறார்கள். காம்போஜர்கள் எறிந்து அக்கணமே திரும்ப இழுத்துக்கொள்ளும்படி வேல்முனையில் சுருள்கொடி ஒன்றை கட்டியிருக்கிறார்கள். அரவேகர்களின் நீண்ட மூங்கில்வேலின் முனையில் சிறுத்தைச் சிறுநீர் நனைக்கப்பட்ட மரவுரிச்சுருள் உள்ளது. அது புரவிகளை நாசிவிடைத்து மிரளச்செய்கிறது.

கௌரவர்களின் தரப்பில் திரண்டிருந்த மஞ்சள்நிறமான சிற்றுடல்கொண்ட மத்ரர்களும், சுண்ணநிறத்தில் பேருடல்கொண்டிருந்த பால்ஹிகர்களும், பறக்கும் திறன்கொண்ட ஹம்ஸமார்க்கர்களும், தாள்தோயும் நீண்ட கைகளும் வளைந்த கால்களும் கொண்ட சம்ஸ்தானர்களும், பெரிய வெண்பற்கள் கொண்ட சூரர்களும், நீண்ட தலைமயிரை நிலம்தோய ஏழு சடைகளாகப் பின்னியிட்ட வேணிகர்களும், கழுத்தில் யானைத்தந்தத்தில் செதுக்கப்பட்ட வளையங்கள் அணிந்த விகுஞ்சர்களும் எதிரே எழுந்த செந்நிறமான ஹூணர்களையும், செம்மண் நிறமான அஸ்மாகர்களையும், கரும்பாறைபோல் வெண்தேமல் படிந்த உடல்கொண்ட காரூஷர்களையும், மாந்தளிர் நிறமான மருத்தர்களையும், சருகுநிறமான பிரயாகர்களையும் எதிர்கொண்டார்கள்.

பாண்டவர்களால் தலைமைதாங்கப்பட்ட குனிந்தர்களும், தித்திரர்களும், தண்டகர்களும், தசார்ணர்களும், பௌரவர்களும் கௌரவர்களால் நடத்தப்பட்ட வாடாதனர்களையும், வனாயுக்களையும், மேகலர்களையும், முண்டர்களையும்

எதிர்த்து நின்றனர். அரசே, இத்தனை குலங்கள் இப்படி திரண்டு ஒன்றென்றாவது இப்புவியில் போரிலன்றி என்றேனும் நிகழ வாய்ப்புண்டா? ஒரு பெருவிழவில் இவர்கள் இப்படி தோள்தழுவி ஒற்றை உடலென்றாகும் நாள் வருமா? இப்போரை அவர்கள் விழவென்று மாற்றி நடிக்கக்கூடும். அன்று இன்றுள்ள வஞ்சங்களும் வெறிகூச்சல்களும் மறைந்துவிட்டிருக்கும். சிரிப்பும் வாழ்த்துகளும் எழுந்துகொண்டிருக்கும். அன்று அந்தப் பெருங்களத்தில் என்னை இரு விழிமணிகளாக களிமண் உருளைமேல் நிறுவி அன்னமும் நீரும் மலரும் படைத்து வழிபடுவார்கள். பளிங்கு உருளைகள் மேல் அக்காட்சி சுருண்டு துளியென்றாகி சுழன்று அசைய நான் சொல்லின்றி நோக்கிக்கொண்டிருப்பேன்.

தன்முன் வந்து நின்றிருந்த அர்ஜுனனைக் கண்டு சுசர்மன் சற்று திகைத்தாலும் “தாக்குக!” என ஆணையிட்டு வில்லெடுத்து அம்புகளை தொடுக்கத் தொடங்கினான். அவனுக்கு இருபுறமும் நின்றிருந்த திரிகர்த்தர்கள் பெருங்கூச்சலுடன் அம்புகளை ஏவியபடி அர்ஜுனனை நோக்கி சென்றனர். அர்ஜுனனின் அம்புகள் அவர்களின் தேர்களையும் கேடயங்களையும் கவசங்களையும் அறைந்து சிதறடிக்கத் தொடங்கின. சுசர்மனின் இருபுறமும் சத்யரதனும் சத்யவர்மனும் சத்யவிரதனும் சத்யேஷுவும் சத்யகர்மனும் தேர்களில் நின்று அர்ஜுனனுடன் போரிட்டனர். அவர்கள் எப்போதும் அப்போதிருந்த உச்சவிசையுடன், உள்ளமும் உடலும் ஒன்றாகும் நிலையில் இருந்ததே இல்லை.

அர்ஜுனன் தேர்த்தட்டில் களைப்புடன் நின்றிருந்தான். அவன் முகம் வீங்கியிருந்தது. கண்களுக்குக் கீழே தசைவளைங்கள் கருமைகொண்டு தொங்கின. அவன் உடலில் இருந்த மெல்லிய

நடுக்கை தொலைவிலேயே காணமுடிந்தது. அவன் கையில் காண்டீபம் அன்றிருந்ததுபோல் என்றும் ஆற்றல் குறைந்ததாக இருக்கவில்லை. அப்பால் வில்லுடன் எழுந்த கர்ணன் அவனை அரைக்கணமே விழியோட்டி நோக்கினான். பின்னர் நாணொலி எழுப்பியபடி அவன் திரும்பி சாத்யகியையும் திருஷ்டத்யும்னனையும் நோக்கி சென்றான். அவன் தன்னை நோக்கி வருவான் என எதிர்பார்த்து வில்லுடன் முன்னெழுந்த அர்ஜுனன் அவன் திரும்பிச்செல்வதைக் கண்டு தேர்த்தட்டில் திகைத்து நின்றான். அவனை எதிர்கொண்ட சுபலரும் காந்தாரப் படையினரும் அம்புகளைப் பொழிய அவர்களுடன் போர்புரியலானான்.

மறுபக்கத்தில் இருந்து துரோணர் அவனை நோக்கி வந்தார். அவருடைய நாணொலியைக் கேட்டு அவன் காண்டீபத்தைத் தூக்கியபடி அவரை நோக்கி சென்றான். அவருடைய அம்புகளைத் தடுத்து அவரை அம்புகளால் அறைந்தபடி படைகளைப் பிளந்து முன்னால் சென்றான். துரோணர் அர்ஜுனனிடம் பொருதத் தொடங்கிய சற்றுநேரத்திலேயே அவன் அம்புகளை காற்றில் முறித்து தன் அம்பால் காண்டீபத்தின் நாணை அறுத்தார். ஆனால் அவன் கீழே குனிந்து புது நாணேற்றி எழுவதற்குள் அவர் மறுதிசையில் திரும்பி சிகண்டியை எதிர்கொண்டார். அவன் அவர் அகன்றுசெல்வதை கண்டான். அதற்குள் திரிகர்த்தனாகிய சுசர்மன் வந்து அவனை எதிர்க்கத் தொடங்கினான்.

அர்ஜுனன் அம்புடன் எழுந்தபோது சம்சப்தர்களின் முதல்வனான சுசர்மன் தன் தேரில் எழுந்து நின்று அர்ஜுனனை நோக்கி “பாண்டவனே, இன்று உன்னைக் கொல்லாமல் எங்கள் குடியில் ஒருவரேனும் மீளமாட்டோம்

என்று வஞ்சினம் உரைத்திருக்கிறோம். இன்று நம் வஞ்சங்கள் முடிவுக்கு வரவேண்டும்” என்று கூவினான். அர்ஜுனன் சலிப்புடன் விலகிச்செல்லும் கர்ணனையும் துரோணரையும் பார்த்தபடி அவர்களுடன் போரிட வந்தான். மின்னும் அம்புகளால் சம்சப்தர்கள் அர்ஜுனனை அறைந்தனர். அவனைச் சூழ்ந்துகொண்டு ஒரே தருணத்தில் அம்புதொடுத்தனர். அர்ஜுனன் கையிலிருந்து அம்புகள் அரைவட்டமாகப் பெருகி வந்து அவர்களின் அம்புகள் கடக்கவியலாத காப்புப்புலம் ஒன்றை அமைத்தன.

அவர்கள் நடுவே மூண்ட போரில் ஒருபக்கம் கட்டற்ற வெறி இருந்தது. ஆகவே ஒவ்வொரு அம்பிலும் ஒரு வசைச்சொல் இருந்தது. ஒன்று கசந்தது, பிறிதொன்று சீறியது, மற்றொன்று பழித்தது, இன்னுமொன்று ஏளனம் செய்தது, சொல்லில்லாது ஊளையிட்டது ஒன்று. மானுடர் எந்த அளவுக்கு வெறுப்பை திரட்டிக்கொள்ள முடியும், எவ்வண்ணம் வெறுப்பிலேயே வாழமுடியும் என்பதை அந்த அம்புகள் காட்டின. அன்பில் வாழ்வோரைவிட வெறுப்பில் வாழ்பவர்களே மிகுதி. அன்பை பேரன்பாக்கி வீடுபேறடைவது அருந்தவம். வெறுப்பை பெருவெறுப்பாக்கி அதன் நிழலில் அமர்ந்திருப்பது யார்க்கும் எளிது. அரசே, நான் நான் என எழுவோர்க்கு வெறுப்பே நல்ல படைக்கலம். வெறுப்பே இப்புவியில் மிகவும் புழங்கும் பணம். வெறுப்பால் அனைத்தையும் வாங்கிவிடமுடியும். நிறைவு ஒன்றைத்தவிர.

மறுபக்கம் தேர்ந்த கைகளிடம் அனைத்தையும் விட்டுவிட்டு தன் ஓட்டுக்குள் ஒடுங்கிவிட்டிருந்த அர்ஜுனனால் அவர்களின் அம்புகள் தடுக்கப்பட்டன. அந்த அம்புகளில் அவனுடைய ஒரு சொல்கூட இருக்கவில்லை. ஆகவே அந்த அம்புகளின்

தெய்வங்கள் அவற்றில் குடியேறின. அவை காற்று வெளியிலெழுந்து பரவின. எதிர்வருவனவற்றை சிதறடித்து தங்கள் இலக்கு நோக்கி சென்றன. சம்சப்தர்களின் அம்புகள் அனைத்தும் சிதறித்தெறித்தன. அர்ஜுனனின் அம்புகளை அவர்களால் தடுக்க முடியவில்லை. திரிகர்த்தர்களின் தேர்ந்த மலைவில்லவர்கள் அம்புபட்டு அலறி விழுந்துகொண்டே இருந்தனர். தங்களைச் சுற்றி வில்லவர்கள் நிலம்படிய தேர்கள் உருண்டு அகல உருவான வெற்றிடத்தில் சம்சப்தர்கள் மேலும் மேலும் சினவெறி எழுந்து நின்றுபோரிட்டனர்.

ஒவ்வொரு அம்புக்கும் ஒரு வடிவம் உள்ளது. எடையும், மிதப்பும், கூரும், கோணலும் உள்ளது. அதனூடாகவே ஓர் அம்பு பிறிதொன்றுடன் மாறுபடுகின்றது. அரசே, அம்புகளுக்கு எவரும் பெயரிடுவதில்லை. அவற்றின் தனித்தன்மையை அவற்றை வார்த்தவன்கூட அறிவதில்லை. நாணேற்றுகையில் வில்லவன் அறியக்கூடும். பறந்தெழுகையில் நோக்குபவர் அறியலாகும். தாக்குகையில் மாள்பவர் உணர்வதென்றாலும் ஆகும். ஆனால் அவை பிறந்த கணம் முதல் வெறும்பொருளென கிடக்கின்றன. கட்டுகளில், தொகைகளில் பிறவற்றுடன் சேர்ந்து புற்றுள்செறிந்த நாகக்குழவிகளென்றிருக்கின்றன. அவற்றின் வாழ்க்கை என்பது தூளியிலிருந்து எழுந்து நாணிலமர்ந்து விண்ணிலேறி பறந்து சென்று இலக்கிலமைவது வரைக்குமான சில கணங்களே. பிறந்து ஒருமுறை பறந்ததுமே மறையும் பறவைகள்.

அந்த ஒருகணத்தில் அவற்றை ஆயிரத்தில் லட்சத்தில் ஒன்றைக்கூட விழிகள் நோக்குவதில்லை. நோக்கப்பட்டவற்றில் ஆயிரத்தில் லட்சத்தில் ஒன்றைக்கூட உள்ளம் அறிவதில்லை. உள்ளம் அறிந்தவற்றில் ஆயிரத்தில்

லட்சத்தில் ஒன்றைக்கூட எவரும் பிரித்தறிந்து பெயரிடுவதில்லை. ஆனால் அத்தனை அம்புகளுக்கும் தெய்வங்கள் பெயரிட்டுள்ளன. அவற்றில் குடியேறி அவை காத்திருக்கின்றன. விண்ணிலெழுந்ததும் அவை களிப்புற்று சிறகுலைத்து கூர்சீறி பாய்கின்றன. இலக்கடைந்ததும் துள்ளித்துள்ளி குருதி குடிக்கின்றன. மண்ணில் பாய்ந்து நின்று செருக்கடிக்கின்றன. ஒன்றை ஒன்று முறித்து சிதறி உதிர்கின்றன.

தன் உளச்சொல்லை ஒருவன் அம்பிலேற்றுகையில் பிறிதொரு தெய்வத்தை அதில் அமைக்கிறான். இரு தெய்வங்களும் பூசலிடுகின்றன. அப்பூசலால் அலைக்கழிந்தபடி அவை செல்கையில் இலக்கழிகின்றன. தேர்ந்த படைக்கலங்களில் அவற்றை செலுத்துபவனின் ஒரு சொல்லும் இருப்பதில்லை. அவை அப்படைக்கலங்களுக்குரிய தெய்வங்களால் முற்றாக ஆளப்படுகின்றன. ஆகவே அவை வெல்லற்கரிய கூர்மையும் விசையும் கொண்டிருக்கின்றன.

சுசர்மன் அர்ஜுனனின் நிகர் அகவை கொண்டவன். அவன் தான் பிறந்த செய்தியை முதலில் தான் கேட்டதே அர்ஜுனனிடம் அவனை ஒப்பிடுவதாகத்தான். “அஸ்தினபுரியின் அர்ஜுனனுக்கு நான்குமாதம் இளையவன் நீ” என அவன் அன்னை அவனிடம் சொன்னாள். “உன்னை ஈன்றபோது வயற்றாட்டியும் அதையே சொன்னாள்.” அர்ஜுனனாக முயல்வதே அவன் இளமையாக இருந்தது. தேர்ந்த ஆசிரியர்களிடம் வில்பயின்றான். “ஒருநாள் நீ அஸ்தினபுரியின் இளவரசனுடன் வில்கோப்பாய். அன்று அவன் நீ அவனே என உணரவேண்டும்” என ஆசிரியர் அவனிடம் சொன்னார். அவன்

வில்தேர்ந்தான், அர்ஜுனனைப்போல் மலைக்காடுகளில் அலைந்தான்.

திரிகர்த்தம் வழியாக அர்ஜுனன் படைகொண்டு சென்றபோதுதான் அவன் அர்ஜுனனை முதலில் பார்த்தான். அந்த கணத்தை அவன் பதினெட்டாண்டுகளாக எண்ணி எண்ணி காத்திருந்தான். அது அணுகும்தோறும் பதற்றம் கொண்டான். இரவுகளில் துயிலாமல் புரண்டான். இருளில் நின்று ஏங்கி அழுதான். அந்தநாளில் அவன் கால்கள் தளர உடல்நடுங்க முகம் வெளிர்த்து உதடுகள் உலர்ந்து விழிகள் ஒளிக்குக் கூச படைமுகப்பில் நின்றிருந்தான். அஸ்தினபுரியின் படை வருவதை கொம்புகள் அறிவித்தபோது அவன் விழுந்துவிடுவதைப்போல் உணர்ந்தான். மூச்சு வெம்மைகொள்ள விழி இருட்டி வந்தது. தொலைவில் அமுதகலக் கொடி தெரிந்தபோது கொம்புகள் முழங்க அரசகுடியினர் எழுந்து நின்றனர். அர்ஜுனனை அவன் தொலைவில் தேர்முகப்பில் பார்த்தான். பலமுறை ஓவியங்களில் பார்த்து உள்ளத்தில் வளர்த்தெடுத்திருந்த தோற்றம்.

ஆனால் அந்நிகழ்வை அவன் பல்லாயிரம் முறை உளம்நடித்திருந்தமையால் அது மிகச் சலிப்பூட்டுவதாக இருந்தது. அது எப்போது முடியுமென அவன் கணம் கணமென காத்திருந்தான். ஒவ்வொரு முறைமையாக முடிந்து அவன் அர்ஜுனனை அணுகியபோது நாக்கில் கசப்பென ஏதோ நிறைந்திருந்தது. அர்ஜுனன் அவனைத் தழுவி இன்சொல் உரைத்தான். “இவன் உங்களை எண்ணி வில்பயில்பவன், இளவரசே” என தந்தை அர்ஜுனனிடம் சொன்னது செவியில் விழுந்தபோது நெய் பற்றிக்கொள்வதுபோல சினம்

பீறிட்டெழுந்தது. அக்கணமே வாளை உருவி அவனை வெட்டி வீழ்த்திவிடவேண்டும் என்பதைப்போல. நெஞ்சிலறைந்து வெறியோலமிடவேண்டும் என்பதுபோல.

அன்றுமுதல் அவன் அர்ஜுனனை வெறுத்தான். அர்ஜுனன் திரிகர்த்தத்தில் இருந்த எட்டு நாட்களில் இரண்டாம் முறை சுசர்மன் அவனை சந்திக்கவே இல்லை. அர்ஜுனன் வந்த மறுநாளே அவனுக்கு உடல்நலம் குன்றியது. காய்ச்சலும் வலிப்பும் எழ நினைவிழந்து மருத்துவநிலையில் கிடந்தான். அர்ஜுனன் சென்ற பின்னர் எட்டு நாட்கள் கழித்தே எழுந்தான். பிறகெப்போதும் அவன் அர்ஜுனன் என்னும் சொல்லை நாவால் சொல்லவில்லை. செவிக்குக் கேட்டால் உளம்வாங்காது ஒழிந்தான். அதை அறிந்தபின் எவரும் அதை அவனிடம் சொல்லவுமில்லை. மெல்ல மெல்ல அப்பெயரை எண்ணுவதையும் அவன் கடந்துசென்றான். ஆனால் அவன் கனவுகளில் அர்ஜுனன் காண்டீபம் ஏந்திய கையுடன் விழிகளில் ஏளனத்துடன் வந்துகொண்டே இருந்தான்.

அவன் தம்பியர் அவனாலேயே உருவாக்கப்பட்டனர். அவர்களுக்கு அந்த வெறுப்பை சொல்லில்லாமல் அவன் அளித்தான். அவர்களுக்கு அனைத்தையும் அளிக்கும் ஆசிரியனாகவும் சொல்துணைவனாகவும் ஆளும்தெய்வமாகவும் அந்த வெறுப்பு அமைந்தது. ஒருமுறை சத்யேஷு “இவ்வாறு நாம் அவனை வெறுக்காவிட்டால் இத்தனை ஆர்வத்துடன் வில்பயின்றிருப்போமா? மலைக்குடிகளாகிய நாம் இவ்வளவு விரிவாக பாரதவர்ஷத்தின் அரசியலை அறிந்திருப்போமா?” என்றான். அவன் சொல்வதென்ன என உடன்பிறந்தாருக்குப் புரியவில்லை. அவர்கள் வெறுமனே அவனை கூர்ந்து பார்த்தனர்.

“இவ்வெறுப்பால் நாம் அடைந்ததே மிகுதி. நாம் இதனால் பேணிவளர்க்கப்பட்டோம்” என்றான் சத்யேஷு. அவர்கள் நால்வருக்கும் அப்போதும் அது புரியவில்லை.

குருக்ஷேத்ரப் போர்க்களத்தில் சுசர்மனும் தம்பியரும் தங்கள் பிறவிகளின் இறுதிநிலையை அடைந்தனர். அங்கே அவர்கள் ஒவ்வொருவரும் தங்களை பெருவியப்புடனும் களிப்புடனும் கண்டடைந்தனர். நான் நான் என பெருகினர். இன்மை வரை சுருங்கினர். அக்கணம் வரை வாழ்ந்தமை அதற்காகவே என்பதுபோல் திளைத்தனர்.

அர்ஜுனனின் பிறையம்பு சத்யரதனின் தலையை அறுத்து வீசியது. அதைக் கண்ட பிறர் வேறெங்கோ அது நிகழ்வதென உணர்ந்தனர். சத்யவர்மன் நெஞ்சில் பாய்ந்த நீளம்புடன் தேருடன் வைத்து தைக்கப்பட்டான். சத்யகர்மனும் சத்யவிரதனும் தலையறுபட்டு தேரிலிருந்து விழுந்தனர். சுசர்மன் “கீழ்மகனே!” என்று அலறியபடி வில்லுடன் புரவியில் பாய்ந்தேறி அம்புகளை ஏவிக்கொண்டே அர்ஜுனனை நோக்கி பாய்ந்தான். அவன் தலையை அர்ஜுனனின் அம்பு வெட்டி வீழ்த்த புரவியிலிருந்து அவன் பக்கவாட்டில் விழுந்து துடித்தான். புரவி விசையழியாது விரைந்துசென்று அர்ஜுனனின் தேர்க்காலில் மோதி விழுந்தது.

சத்யேஷு தன் உடன்பிறந்தார் கொல்லப்பட்டதை பார்த்தான். முதல்முறையாக அவன் அந்த வெறுப்பை தனக்கு அப்பால் நிறுத்தி நோக்கினான். “ஏன்?” என அவன் வியந்த அக்கணமே அவன் கழுத்தை அறைந்து தலையை வெட்டிச் சரித்தது அர்ஜுனனின் அம்பு. அந்த வினா எங்கோ எஞ்சியிருந்தது. “உச்சிப்பொழுதாகிறது, அர்ஜுனா. அங்கே பகதத்தரை உன் தமையன் எதிர்கொள்கிறான். அவரை அவனால்

வெல்லமுடியாதென்று எண்ணுகிறேன்” என்று இளைய யாதவர் சொன்னார். தன்னைச் சூழ்ந்து சிதறிக்கிடந்த சம்சப்தர்களின் உடல்களை திரும்பி ஒருகணம் பார்த்துவிட்டு அர்ஜுனன் “செல்க!” என்றான்.

# கார்கடல் - 33

இடும்பர்களின் தொல்காட்டில் மூதாதையரின் சொல் நாவிலெழ பூசகராகிய குடாரர் சொன்னார் “குடியினரே அறிக! விந்தியனுக்குத் தெற்கே நம் குலக்கிளைகளிலொன்று வாழ்கிறது. அவர்களை நரகர்கள் என்கிறார்கள் பிறர். தொல்பழங்காலத்தில் அவர்கள் மண்ணுக்குள் இருண்ட ஆழத்தில் இருளுருவென வாழ்ந்தனர். அன்று கைகளும் கால்களும் இல்லாத புழுவுடல் கொண்டிருந்தனர். பின்னர் மானுடராகி எழுந்தபோதும் குழியெடுத்து அதற்குள் தங்கள் இல்லங்களை அமைத்துக்கொண்டனர். மண் அகழும் பன்றியை குலக்குறியெனக் கொண்டவர்கள். அவர்களின் இல்லங்களுக்கு மேல் யானைகள் நடந்து செல்லும். அவர்களுக்கு அடியில் நாகங்கள் ஊர்கின்றன. அவர்கள் தங்கள் உடலால் ஒலிகேட்கும் ஆற்றல்கொண்டவர்கள்.

முன்பு மண்மகளை பெரும்பன்றியொன்று புணர்ந்தமையால் பிறந்த குடி என நரகர்களை சொல்கிறார்கள். அவர்களில் எழுந்த மாமன்னர் தொல்நரகாசுரர். அவருடைய குடியிலெழுந்த நாற்பத்தெட்டாவது நரகாசுரர் இளைய யாதவராலும் அவர் துணைவியாலும் போர்க்களத்தில் கொல்லப்பட்டார். முதல் நரகாசுரரின் மகளாகிய சிம்ஹிியை மணந்தவர் பாஷ்கலர். அவர் தொல்லசுரகுடியான ஹிரண்யகுலத்தைச் சேர்ந்தவர்.

முன்பு அசுரகுடியை வென்று முழுதாண்ட ஹிரண்யகசிபுவிலிருந்து உருவானது ஹிரண்யகுலம். விண்வாழும் முதற்தாதை காசியபரின் குருதியில் திதி என்னும் பேருருவ அன்னைக்குப் பிறந்தவர் ஹிரண்யகசிபு. ஹிரண்யகசிபுவுக்கு அனுஹ்ராதன், ஹ்ராதன், பிரஹ்லாதன், சம்ஹ்லாதன் என்னும் நான்கு மைந்தர்கள் பிறந்தனர். அவர்களில் சம்ஹ்லாதன் ஆயுஷ்மான், சிபி, பாஷ்கலர் என்னும் மூன்று மைந்தர்களை ஈன்றார். அவரே முதலாம் பாஷ்கலர்.

பாஷ்கலர் தென்னிலத்தை ஆண்ட அசுர மாமன்னராகிய மகிஷாசுரரின் அமைச்சரானார். மகிஷாசுரருக்கும் இந்திரனுக்கும் நிகழ்ந்த பெரும்போரில் படைநடத்திச் சென்று இந்திரனை வென்றவர் பாஷ்கலர். இந்திரனின் முறையீட்டை ஏற்று தேவி துர்க்கை போர்க்கோலம் கொண்டு களம் வந்தபோது பாஷ்கலரும் துர்முகரும் படைகொண்டு சென்றனர். அன்னையின் மாமங்கலத் தோற்றமே அவளை வெல்லற்கரியவளாக ஆக்குகிறது என்று உணர்ந்து பாஷ்கலர் அவள் இடமுலையை அரிந்தெடுக்க பிறை அம்பு ஒன்றை ஏவினார். அதற்கு உயிர்கொடுக்க தன் உயிரையே நுண்சொல் ஓதி அதில் ஏற்றினார். அந்த அம்பு அன்னையின் மடியில் சென்று அமைந்து சிறுகுழவிபோல் உருக்கொண்டு அன்னையின் இடமுலையில் பால் குடிக்கலாயிற்று. திகைத்து நின்ற பாஷ்கலரின் தலைமேல் தன் வலக்காலை வைத்து அழுத்தி மண்ணுக்கு அடியில் செலுத்தினாள் அன்னை.

பாஷ்கலகுடியில் பிறந்த பதினேழாம் பாஷ்கலர் பெண்கொடையாக பெருஞ்செல்வத்தை நரகாசுரரிடம் இருந்து பெற்று தன் முதற்குடியிலிருந்து பிரிந்து கிழக்காக நிலம்தேடிச் சென்று பிரம்மபுத்ரையின் கரையில் அமைந்த செஞ்சதுப்பு

நாணற்படுகையில் சிற்றூர் ஒன்றை அமைத்தார். அதற்கு தன் மூதாதையான நரகாசுரர் ஆண்ட தொல்லசுர நகரான பிரக்ஜ்யோதிஷத்தின் பெயரை அளித்தார். அங்கே எருமைகள் எளிதில் பெருகின. எருமைகளால் செல்வம் வளர்ந்தது. ஊர்கள் வளர்ந்து அந்நிலம் ஒரு நாடென்றாயிற்று. அக்குருதியில் வந்தவர் சைலாலயர். அவர் அந்நாணல் நிலத்தில் அமைத்த நகரமே பிரக்ஜ்யோதிஷம். நெடுங்காலம் வங்கத்தின் நிழலில் அஞ்சி ஒடுங்கிக் கிடந்தது. அசுரநிலமான அங்கே அந்தணர் கால் வைக்கவில்லை.

சைலாலயர் குடிவிலக்குகளை உதறி வங்கநாட்டு இளவரசியை கவர்ந்துவந்து மணம் செய்தார். படைகொண்டுவந்த வங்கர்களை வென்றார். அவர்கள் அவரை ஏற்றுக்கொண்டனர். தீர்க்கதமஸின் குருதி அவர் குடியை மேம்படுத்தியது. சைலாலயர் வங்கத்தில் இருந்து தீர்க்கதமஸின் கொடிவழியினரான அந்தணரை அழைத்து வந்து ஏழு பெருவேள்விகளை செய்து இந்திரனை தன் வேள்விச்சாலையில் அழைத்து வந்தார். அவன் அடிபணிந்து தன்னை காத்தருள வேண்டுமென்று கோரினார். இந்திரனின் அருளால் இடிமின்னலின் ஆற்றல் கொண்ட அம்புகளை அவர் பெற்றார். அவ்வண்ணம் அவர் ஆற்றல்மிக்கவரானார். பிரக்ஜ்யோதிஷத்தின் அரசர்குடியினர் ராஜசூயம் நிகழ்த்தி ஷத்ரியர்களானார்கள்.

சைலாலயரின் கொடிவழியில் பிறந்தவர் முதல் பகதத்தர். அவர் இந்திரனுக்கு பெருங்கொடைவேள்விகள் ஏழை இயற்றி வேள்விச்சாலையில் எழுந்தருளச் செய்தார். பகதத்தரிடம் “உன் எதிரி யார்?” என்று இந்திரன் கேட்டான். “துவாரகையை ஆளும் இந்திரனின் எதிரியே எனக்கும் எதிரி” என்று பகதத்தர்

சொன்னார். “என் முன்னோரின் குலத்தவராகிய நரகாசுரனைக் கொன்றவர் அவர். என் வஞ்சம் அவர் மீதே” என்று சூளுரைத்தார். இந்திரன் மகிழ்ந்து அவ்வேள்விச்சாலையில் அனல்பெருந்தூணென எழுந்து உன் “குடியுடன் நானிருப்பேன். உனக்கு அருள்வேன். வெல்க!” என்றான்.

முதிய பகதத்தர் நூறாண்டுகள் பிரக்ஜ்யோதிஷத்தை ஆண்டார். அவருடைய ஆட்சிக்காலத்தில் பிரக்ஜ்யோதிஷத்தைச் சுற்றி ஏழு பெருங்கோட்டைகள் கட்டப்பட்டன. நடுவே பன்னிரு அடுக்குகள் கொண்ட ஆயிரம் மாளிகைகளாலான நகரம் உருவாகி வந்தது. பிரக்ஜ்யோதிஷம் வெல்ல முடியாத படையொன்றை தனக்கென திரட்டிக்கொண்டது. பிரம்மமைந்தன் பேராறென ஓடும் அந்நிலத்தில் படகுகள் பெருஞ்சிறை விரிக்க இயலுமென்பதனால் வணிகர்கள் அந்நகரில் குவிந்தனர். அங்கிருந்து வடக்குக்கும் மேற்குக்கும் செல்ல வணிகவழிகள் உருவாகி வந்தன. ஒருநாள் படைமுகத்தில் இளைய யாதவரை சந்திக்கவேண்டும் என்றும் வென்று தன் வஞ்சினத்தை முடிக்கவேண்டும் என்றும் பகதத்தர் விழைவுகொண்டிருந்தார்.

பிரக்ஜ்யோதிஷத்தின் முதல் பகதத்தர் பன்னிரண்டு ஆண்டுகள் மைந்தரின்றி இருந்தார். அமைச்சர்கள் புத்திரகாமேஷ்டி வேள்வியை இயற்றும்படி அவரிடம் சொன்னார்கள். வங்கத்திலிருந்து தீர்க்கதமஸின் குருதிவழியைச் சேர்ந்த பிரஃபவர் என்னும் வைதிகர் நூற்றெட்டு மாணவர்களுடனும் அகம்படியினருடனும் பிரக்ஜ்யோதிஷத்துக்கு வந்து சேர்ந்தார். நூற்றெட்டு நாட்கள் நீண்ட அப்பெருவேள்வியில் புவியில் கண்ட இன்பொருட்கள் அனைத்தும் தேவர்களுக்கு அவியிடப்பட்டன. எரியில் எழுந்த தொல்பிரஜாபதியான

தீர்க்கதமஸ் “என் குடி பெருகுக! ஆற்றல் கொண்டவர்கள் ஆகுக என் மைந்தர்!” என்று தன் இரு கைகளில் இரு கனிகளை நீட்டினார். அவருடைய நோக்கில்லா விழிகள் அவருள் அமைந்த பிறிதொன்றை நோக்கின.

“அறிக, இதிலொன்று இனியது! இதை உண்பாய் எனில் விழியொளி கொண்ட மதி தெளிந்த ஒருவனை மைந்தனாகப் பெறுவாய். அவன் இடைக்குக்கீழ் ஆற்றலற்றவனாக இருப்பான். இது கசக்கும் கனி. இதை உன் துணைவி உண்பாள் எனில் பெருந்தோள் கொண்டவனாகிய மைந்தனை பெறுவாய். ஆனால் அவன் விழித்திறன் குறைந்தவனாக இருப்பான். விழைவதை தெரிவு செய்க!” என்றார் தீர்க்கதமஸ். பகதத்தர் இரு கனிகளையும் நோக்கி திகைத்தார். அவர் அருகே நின்றிருந்த அமைச்சர் மெல்ல “அரசே, உங்கள் குலமூதாதையான தீர்க்கதமஸ் போன்ற மைந்தனை தெரிவு செய்க!” என்றார். “ஆம்” என்று சொல்லி அக்கசப்புக் கனியை நோக்கி கைநீட்டினார் முதிய பகதத்தர். அக்கனியை அவருக்கு அளித்து தீர்க்கதமஸ் எரியில் மறைந்தார்.

அந்தக் கனியை வேள்விச்சாலையில் வைத்து வழிபட்டு தங்கத்தாலத்தில் கொண்டு சென்று தன் துணைவியிடம் அளித்தார் பகதத்தர். “இனியவளே, என் மூதாதையரைப்போல தொல்லரக்கர்களைப்போல் தோள்பெருத்த ஆற்றல்கொண்ட மைந்தன் பிறக்கும் பொருட்டு இதை நீ அருந்துக!” என்றார். அவர் துணைவியான யவன இளவரசி சுதீரை அரக்கர்குடியை உள்ளூர வெறுத்தவள். தன்னை தீர்க்கதமஸின் வேதச்சொல் விளங்கும் நாணல் என எண்ணிக்கொண்டிருந்தவள். நீராடி அமர்ந்தபின் அவள் அதை எடுத்து உண்ணத் தொடங்கினாள். அந்தக் கனி ஊன்கட்டிபோல் கெடுமணம் கொண்டிருந்தது.

பச்சைக்குருதியென அதில் சாறுவழிந்தது. அதன் சுவை கடும் கசப்பென்றிருந்தது. சுதீரை முகம்சுளித்தபடி ஒரு வாய் உண்டபின் குமட்டலெழ எவருமறியாமல் அதை தன் தோட்டத்திலேயே வீசிவிட்டாள்.

அங்கே மரத்தில் இருந்த பருந்து அந்தக் கனியை ஊன் கட்டி என எண்ணி கவர்ந்துகொண்டு சென்றது. அதை அருகிலிருந்த காட்டில் ஆலமரம் ஒன்றின் உச்சியில் வைத்து கொத்தி உண்ணமுயன்ற பருந்து அதிலிருந்த ஊன்மணம் பொய்யே என்று உணர்ந்தது. சலிப்புடன் அது அக்கனியை கீழே உதிர்த்தது. அங்கிருந்த நாணல்மேட்டில் மேய்ந்து கொண்டிருந்த பிடியானையின் மீது அக்கனி விழுந்தது. திரும்பி துதிக்கையால் அக்கனியை எடுத்து நோக்கிய யானை அதன் விந்தையான மணத்தால் ஈர்ப்படைந்து அதை சுவைத்து உண்டது.

பதினாறு மாதங்கள் அரசி சுதீரை கருவுற்றிருந்தாள். மதங்க கர்ப்பம் என்று பிரக்ஜ்யோதிஷம் மகிழ்ச்சி கொண்டாடியது. ஆனால் யானைகளுக்குரிய ஆடிமாதம் எட்டாம் வளர்நிலவு நன்னாளில் பிறந்த அக்குழவி ஓர் உள்ளங்கைக்குள் வைக்கும் அளவே உருவம் கொண்டிருந்தது. பேற்றறையிலிருந்து அக்குழவியை சிறிய மரத்தாலத்தில் வெளியே கொண்டுவந்து பகதத்தரிடம் காட்டிய வயற்றாட்டி நடுங்கிக்கொண்டிருந்தாள். திகைத்து பின்னடைந்த பகதத்தர் “இது என்ன?” என்றார். “சிற்றுரு கொண்டுள்ளது… ஆனால் உயிருடன் உள்ளது” என்று வயற்றாட்டி சொன்னாள். “புழு! வெறும் புழு!” என்று அருவருப்புடன் சொல்லி பின்னடைந்த பகதத்தர் கையசைத்து “கொண்டு செல்க! இனி இது என் முன் ஒருபோதும் வரலாகாது!” என்று திரும்பிக்கொண்டார். அரசி ஒரு முறையே

திரும்பி அக்குழவியை பார்த்தாள். சலிப்புடன் “இது என்னுள்ளிருந்தா வந்தது?” என்றாள். வயற்றாட்டி மறுமொழி சொல்லவில்லை. “புழு!” என்று அவளும் சொன்னாள். கைவீசி “கொண்டு செல்க! அகல்க!” என்றாள்.

உரிந்த தோலுடன் விதையிலிருந்து கிள்ளி வெளியே எடுக்கப்பட்ட சிறிய பருப்பு போன்ற அக்குழவி வயற்றாட்டியால் சேடியருக்கு அளிக்கப்பட்டது. முலைகொடுத்துக்கொண்டிருந்த இரு சேடியர் அக்குழவியை வாங்கினர். இரவும் பகலும் தங்கள் அடிவயிற்று வெம்மையில் வைத்து அதை வளர்த்தனர். குழவி வளர்ந்து எழுந்து நடக்கத் தொடங்கியது. அப்போதும் அது தேம்பிய தோள்களும் மெலிந்த கைகால்களும் ஒடுங்கிய சிறுமுகமும் கொண்டதாகவே இருந்தது. எலிபோல் அரண்மனையின் சுவர்களை ஒட்டி ஊர்ந்தது. அதன் விழிகள் வெண்ணிறமாக நரைத்திருந்தன. ஏழு முறை உறிஞ்சுவதற்கு அப்பால் அது பாலருந்தவில்லை. அதன் அழுகை சிறு சீவிடின் ஓசைபோல பட்டுநாடா அதிரும் ஒலிகொண்டிருந்தது. இரவுகளில் சிறு ஓசைக்கும் அஞ்சி நடுங்கி விழித்து அழுதுகொண்டிருந்தது.

அதன் அச்சமும் நடுக்கும் சேடிப்பெண்களையே கேலி செய்ய வைத்தது. அதை அவர்கள் “சீவிடுப்பூச்சி” என்றனர். அதை கண்டதும் நாவைச் சுழற்றி ர்ர்ர் என ஒலியெழுப்பி விளையாடினர். அதன் செவிலியன்னையர் மட்டும் அதை வேறெங்கும் காட்டாமல் அகத்தளத்திலேயே வளர்த்தனர். காலையில் இளவெயிலில் அதை மடியிலிட்டு கதிரோன் ஒளிபடச் செய்தனர். அப்போது அரண்மனையின் மடிப்பில் பெருந்தூண் மறைவில் நின்று அதை பார்த்து பகதத்தர் உதடு சுழித்து “புழு! வெறும் புழு” என்றார். அவர் தன்னுள் எழுந்த

ஒன்றுக்கு மறுப்பாகவே அதை சொல்லிக்கொண்டிருந்தார். சொல்லிச்சொல்லி அதை நிறுவ முயன்றார். ஆகவே எப்போதும் ஒற்றைச் சொல்லையே உரைத்தார்.

“அதை காட்டிற்கு கொண்டுசென்று வீசிவிட ஆணையிடவேண்டுமென்று ஒவ்வொரு நாளும் எண்ணுகிறேன். ஆனால் என்னால் அதை செய்ய இயலவில்லை” என்றார். அமைச்சர் காவகர் “அம்மைந்தனை பிறக்க வைத்த ஊழுடன் ஆடவேண்டியதில்லை. அழிக்கும் ஆற்றல்கொண்ட சிவன் அல்ல நீங்கள். அரசனே ஆயினும் எளிய மானுடனே” என்றார். பகதத்தர் “இவ்வண்ணம் ஒரு மைந்தன் எனக்கு ஏன் பிறந்தான்?” என்றார். “உங்களுடன் ஊழ் விளையாடுகிறது. அனைவருடன் ஊழே விளையாடிக்கொண்டிருக்கிறது. அதற்கு உங்கள் நல்லியல்பை எதிர்வைத்து ஆடுக! நல்ல ஆட்டத்தை ஆடுபவர்களை ஊழ் வாழ்த்திச் செல்லும்” என்றார். “ஆம்” என பகதத்தர் அப்பேச்சை ஒழிந்தார். ஆனால் அதை தன் பகற்கனவாக ஆக்கிக்கொண்டார்.

அரசி மீண்டும் கருவுறவில்லை. அக்குழவியை அவள் பார்க்கவுமில்லை. ஒவ்வொரு நாளும் மெலிந்துகொண்டிருந்தாள். தன் அகத்தளத்திலிருந்து தனக்குத்தானே பேசியபடி தனிமையில் சோழிவிளையாடி பொழுதை கழித்தாள். உடலுக்குள்ளிருந்து நீர்மை முழுமையாக வடிந்து அகல்வதுபோல் அவள் தோலுருவானாள். கண்கள் குழிந்து, கன்னங்கள் ஒட்டி, அசையும் சடலமென்று மாறி ஒருநாள் அச்சோழிக்களத்தின் அருகிலேயே விழுந்து இறந்திருந்தாள். பகதத்தர் குடியிலும் பெண்டிரிலும் தன்னை மறக்க முயன்றார். தனக்கு ஒரு மைந்தனில்லை என்பதையே அவர் தன்னுள்ளத்திற்கு மீளமீள சொல்லிக்கொண்டார். மெல்ல

பகல்களில் அவர் மைந்தரில்லாதவரானார். இரவுகளில் கள் மயக்கில் துயின்றார். ஆனால் எப்போதேனும் பின்புலரியில் அரை விழிப்பு கொள்கையில் ஆயிரம் மைந்தரை உடல் நிறைத்து கைவிரித்து நின்றிருக்கும் தீர்க்கதமஸாக தன்னை உணர்ந்தார்.

ஒருநாள் தன் கனவில் வந்த தீர்க்கதமஸிடம் கேட்டார் "தந்தையே, தங்களைப்போலவே ஒரு பெருந்தந்தைதான் நானும். என் உள்ளத்தில் தந்தையென்று அன்றி பிறிதெவ்வாறும் நான் உணர்ந்ததே இல்லை. கணுதோறும் முளைக்க கருகொண்டிருக்கும் முருங்கைமரம் என் உடல். என்னிலிருந்து ஏன் மைந்தர்கள் எழவில்லை?" புன்னகைத்து தீர்க்கதமஸ் சொன்னார் "ஆயிரம் மைந்தர் ஒரு மைந்தனென உன்னில் பிறந்திருக்கிறார்கள் என்று உணர்க!" விழித்துக்கொண்ட பகதத்தர் அக்கனவை எண்ணி எண்ணி வியந்து இருளில் நடந்தார். அதை தன்னுள் ஓட்டி பொருள்கொள்ள இயலாதபோது அமைச்சரிடம் கேட்டார். அந்தணரான காவகர் "அதற்கு பொருள் ஒன்றே. ஆயிரம் மைந்தருக்கு நிகரானவன் தங்கள் மைந்தன். மூதாதைசொல்லுக்கு மாற்றில்லை" என்றார்.

பகதத்தர் சற்று சீற்றத்துடன் "அவனை தாங்கள் இறுதியாக எப்போது பார்த்தீர்கள்?" என்றார். "நேற்றும் பார்த்தேன். அவர் என் இளவரசர். அவரை பேணிக் காக்கவேண்டியதும் முடிந்தவரை நற்சொல் உரைத்து வளர்க்கவேண்டியதும் என் கடன்" என்று அமைச்சர் சொன்னார். "ஆயிரம் மைந்தருக்கு அவன் எவ்வாறு இணையாவான்? விழியற்றவன். அதை நிகர் செய்யும் உடலும் அற்றவன்" என்று அவர் சொன்னார். "அதை நான் அறியேன். ஆனால் இப்புவியில் பருப்பொருளென்பது

தெய்வ ஆணைக்கு இணங்க செயல்படுவது என்று மட்டும் கூறுவேன். ஒருவேளை உடல் இங்கு பிறந்திருக்கலாம். ஆற்றல் வேறெங்கோ எழுந்திருக்கலாம்” என்று அமைச்சர் சொன்னார். “வீண்பேச்சு” என்றார் பகதத்தர். “அவரை துறக்க நீங்கள் விழைகிறீர்கள் என்றால் உங்கள் ஆற்றலின்மையின் சான்றுமட்டும்தான் அது” என்றார் காவகர். திகைப்புடன் காவகரை நோக்கிக்கொண்டு சொல்லிழந்து நின்றார் பகதத்தர்.

பகதத்தர் தன் மைந்தனை அதுவரை அரசவைக்கோ விழவுக்கொலுவுக்கோ கொண்டு சென்றதில்லை. அவனது ஐந்தாவது அகவை நிறைவன்று அரசஉடையணிந்த அவனை குடிப்பேரவைக்கு கொண்டுவரச் செய்தார். தன்னருகே சிறு அரியணை ஒன்றை அமைத்து அதில் அவனை அமரவைத்தார். அரசமைந்தனை அதுவரை பார்த்திராத பிரக்ஜ்யோதிஷத்தின் குடிப்பேரவை அவனை காணும்பொருட்டு கொந்தளித்துக்கொண்டிருந்தது. அவர்கள் மெல்லிய அலராக அவன் உடல் பற்றியும் விழி பற்றியும் அறிந்திருந்தனர். அதை சொல்லிச் சொல்லி பெருக்கிக்கொண்டனர். ஆனால் முழுக்க நம்பவுமில்லை. அம்மைந்தனை அருவருத்தும் கேலி செய்தும் சூதர் பாடும் பாடல்கள் ஒன்றிரண்டையாவது செவிகொண்டிருந்தனர் அனைவரும். ஆகவே அரசர் அரியணையில் அமர்ந்து அவைமுறைமை முடிந்து அறிவிப்புகள் தொடங்கும்போது நிமித்திகன் மேடையேறி இளவரசன் அவை புகுவதை அறிவித்ததும் வாழ்த்தொலிகள் எழுந்தன. ஆனால் அவை அனைத்திலும் ஒரு தயக்கமிருந்தது. விழிகள் இளவரசர் அவை புகும் வாயிலையே நாடி நின்றன.

வெளியே கொம்பொலியும் முழவொலியும் எழுந்தபோது அவை முற்றடங்கியது. ஆடைகள் காற்றில் அசையும் ஒலிகூட

கேட்கும் அமைதி நிலவியது. இளவரசன் ஒரு சிறு தாலத்தில் வைக்கப்பட்டு ஏவலன் ஒருவனால் தூக்கிக்கொண்டு வரப்பட்டான். அவன் அவை நுழைந்தபோது திகைப்பொலியுடன் முழு குடியவையும் சற்று பின்னடைவதை பகதத்தர் கண்டார். பின்னர் எங்கிருந்தோ ஒரு கேலிச்சிரிப்பு எழுந்தது. எவரோ ஒரு குடித்தலைவர் "இளவரசரின் சிறுபகுதி மட்டுமே இங்கு வந்துள்ளது!" என்றார். அவை வெடித்துச் சிரித்து தொடர்சிரிப்பில் கொந்தளிக்கத் தொடங்கியது. பின்னர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கேலிச்சொல்லை உரைத்தனர். அவை மேலும் மேலும் சிரித்தது. அரசர் அங்கிருப்பதை மறந்தது.

முகம் சிவந்து பற்களைக் கடித்தபடி இரு கைகளையும் சுருட்டி நெஞ்சோடு சேர்த்து முதிய பகதத்தர் அமர்ந்திருந்தார். இளவரசனை அரியணையில் அமரச்செய்தபோது "யானை மேல் உண்ணி ஒட்டியிருப்பது போலிருக்கிறது" என்று எவரோ கூறினர். அவை ஓஓ என ஏளனக்குரல் ஒலித்து கூச்சலிட்டது. அவர்கள் ஆழத்தில் அவ்வாறு அரசனை மீறி கொண்டாடுவதில் களிப்படைந்தனர். எனவே மெல்ல அச்சிரிப்பு அரசருக்கு எதிராகவும் எழுந்தது. "அவர் நரகாசுரரின் வடிவம். அசுரர்கள் மகிமாவும் அணிமாவும் அறிந்தவர்கள்" என்றார் ஒரு குடித்தலைவர். "அணுவென்றாகி ஒருவர் மலையென்றாகி இன்னொருவர். அண்டத்தில் உள்ளதே அணுவிலும் என்க!" பகதத்தர் தலைக்குமேல் தன் கையை கூப்பி "அமைதி கொள்க! அவை அமைதி கொள்க!" என்றார். அவை அதையும் களியாட்டாக ஆக்கிக்கொண்டது. "அமைதியாக நோக்குக... ஓசையால் இளவரசரின் உடல் அதிர்வுகொள்கிறது..." என ஒருவர் கூவ "ஓசையுடன் போரிடும் அசுரர்!" என இன்னொருவர் சொன்னார்.

இளவரசன் அத்தனை கேலிச்சொற்களை அதற்குமுன் கேட்டிருந்ததில்லை. அகத்தளத்தில் சேடியர் அவன் முகம் நோக்கி கேலி செய்வதில்லை. அவர்கள் கேலி செய்கிறார்கள் என்று அவனுக்கு தெரிந்தாலும்கூட அது எப்பொழுதும் பின்நகைப்பாகவே இருந்தது. விரிந்து பெருகியிருந்த அப்பெருஞ்சபை பல்லாயிரம் முகங்களுடன் தன்னைச் சூழ்ந்து எள்ளி நகையாடுவதைக்கண்டு உடல் நடுங்க விழிகளிலிருந்து நீர் வழிய இரு கைகளையும் கோத்து மடியில் வைத்தபடி அவன் அமர்ந்திருந்தான். அவன் பற்கள் ஒன்றுடன் ஒன்று உரசி காதில் ஒலித்துக்கொண்டிருந்தன. உடலுக்குள் நரம்புகள் இழுபட்டு இழுபட்டு நெரியும் அதிர்வை உணர்ந்தான். மயங்கி விழுந்துவிடலாகாது என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.

முதிய பகதத்தர் தன் கைகளை மீள மீள அவைநோக்கி கூப்பி "கேளுங்கள்! நான் சொல்வதை கேளுங்கள்! இத்தருணத்தில் நான் கூறுவதொன்றே. எனக்கு செவி கொடுங்கள்!" என்றார். ஆனால் அவை கலைந்து கலைந்து ஒலியெழுப்பிக்கொண்டே இருந்தது. இறுதியில் குடித்தலைவர் ஒருவர் எழுந்து "இந்தச் சிற்றுயிரை எங்கள் அரசுக்கு அடுத்த தலைவர் என்று கூறப்போகிறீர்களா என்ன? பிரக்ஜ்யோதிஷத்தின் பதினெட்டு குடிகளுக்கு இனி இவர்தான் ஆட்சியாளரா?" என்றார். முதிய பகதத்தர் "என் கனவு என்ன உரைத்ததென்று கூறவே இந்த அவையை கூட்டினேன். கேளுங்கள், என் கனவில் தீர்க்கதமஸ் எழுந்தார். இவன் பேருருவன் ஆவான். இந்நகரை வெற்றியின் உச்சியில் நிறுத்துவான். நம்புக!" என்றார்.

"அத்தகைய கனவுகள் தந்தையருக்கு வராமலிருந்தால்தான் வியப்பு. புழு நெளிந்து நெளிந்து யானையாகும் என்கிறீர்கள்

இல்லையா?” என்றார் ஒரு குடித்தலைவர். இன்னொருவர் “அரசே, அரசரென அமர்ந்திருக்கும் நீங்களும் உங்கள் குடியும் எங்கள் நூற்றெட்டு குடியில் ஒன்றுமட்டுமே. உங்கள் ஆற்றலால் உங்களை அரசராக கொண்டோம். ஆற்றலற்ற உங்கள் மைந்தனை நாங்கள் அரசனென ஏன் கொள்ளவேண்டும்?” என்றார். பிறிதொருவர் “எங்கள் குடிகளில் ஆற்றல் மிகுந்த மைந்தர்கள் பலருள்ளனர். வெறும் மூச்சுக்காற்றிலேயே இந்தச் சிற்றுயிரை ஊதிப்பறக்கவிடும் மைந்தன் எனக்குள்ளான். அவன் அரியணை அமரட்டும்” என்றார். பிறிதொருவர் “ஆம், அசுரர்குடியில் இதற்கு ஒரு முறைமை உள்ளது. எவர் மற்களத்தில் வென்று நிலைகொள்கிறாரோ அவர் ஆளட்டும் நாட்டை” என்றார்.

“அரசன் வெல்லபடாதவனாக இருக்கவேண்டும் என்கின்றன நூல்கள். அரசன் செங்கோல்போல, கொடிபோல ஓர் அடையாளம். இந்தப் புழுவை அடையாளமாகக் கொண்டு பிரக்ஜ்யோதிஷம் ஒருங்கு திரள இயலாது. இப்படி ஒரு அடையாளம் எங்கள் அரியணையில் அமர்ந்திருந்ததென்றால் அப்பால் மலைக்குடிகளாக வாழும் நிஷாதர்களும் கிராதர்களும்கூட இங்கே படைகொண்டு வருவார்கள்” என்றார் ஒரு முதிய குடித்தலைவர். “ஏற்க இயலாது! ஏற்க இயலாது!” அவர்களுக்குள் அரசன் மேல் என்றும் இருந்த கசப்புகளும் ஆழத்தில் அவர்கள் கொண்டிருந்த விழைவுகளும் எழுந்து வந்தன. அவை கூச்சலும் கொந்தளிப்புமாக அலைமோதியது. “நான் சொல்வதை சற்றே கேளுங்கள். நான் சொல்வதற்கு சற்று செவிகொடுங்கள்” என்று மீள மீள பகதத்தர் கூவினார். ஆனால் அவர்கள் எவரும் பகதத்தர் சொற்களை செவிகொள்ள சித்தமாக இருக்கவில்லை.

அன்றிரவு இளம் பகதத்தன் தன் அரண்மனையிலிருந்து காணாமலானான். அவன் தன் அரண்மனையிலிருந்து வெளியே செல்லும் வழக்கமே இல்லை என்பதனால் அவனிடம் சேடியரும் செவிலியரும் எவ்வகையிலும் விழிதொடுத்திருப்பதில்லை. அவனுடன் விளையாட எந்தக் குழந்தையையும் விடுவதில்லை. பிற குழந்தைகளால் அவன் உடலில் ஏதேனும் சிறு புண்வந்தால்கூட அதன் விளைவுகள் கடுமையானவை என அவர்கள் எண்ணினர். அவன் மெலிதாக உந்தினாலே விழுபவன். சற்று விரைந்தோடினால் கால் பின்னுபவன். விழிக்கூர் குறைந்தவன் என்பதனால் எப்போதும் எங்கேனும் முட்டிக்கொள்பவன். அவன் உடலில் எலும்புகள் சற்று அழுந்தப் பற்றினாலே உடைந்துவிடுபவை. அவன் பற்களும் எளிதில் நொறுங்குபவை. "அணையவிருக்கும் சுடர், காற்று அதன் எதிரி" என்றாள் செவிலியன்னை.

பகதத்தன் நாளெல்லாம் தன் பாவைகளுடன் அரண்மனையின் ஏதேனும் மூலையில் தனக்குத்தானே பேசிக்கொண்டு அமர்ந்திருப்பான். அவன் பாவைகள் அனைத்துமே யானைகள். மரத்திலும் பளிங்கிலும் தந்தங்களிலும் துணியிலும் களிமண்ணிலும் செய்யப்பட்டவை. அவற்றை நிரைவகுக்கச் செய்தும் ஒன்றுடன் ஒன்று போரிடச் செய்தும் அவன் விளையாடினான். அவனாகவே வந்து உணவோ நீரோ கேட்பதில்லை. எதன்பொருட்டும் எவரையும் அழைப்பதில்லை. ஓர் இடத்தில் அமர்ந்தால் அந்திவரை அங்குதான் இருப்பான். ஆகவே அவர்கள் எவருமே அவனை நோக்காமலானார்கள். அவன் அங்கே ஒரு பொருள் போலவே கருதப்பட்டான். ஆகவே அவனை அவர்கள் உணவூட்டும் பொழுதுகளில் ஒழிய நினைவு கொள்ளவே இல்லை. அவன் ஒருநாளில்

இருமுறையே உணவருந்தினான். காலையில் உண்டபின் பொழுதணைந்த பின்னர்.

அந்தியில் அவனுக்கு பாலன்னம் ஊட்டும்பொருட்டு தேடிவந்த செவிலிதான் அவன் பாவைகள் மட்டுமே கிடப்பதைக் கண்டு அவனை தேடத்தொடங்கினாள். அரண்மனையின் சுவர்மடிப்புகளிலும் படிகளின் அடியிலும் பின்னர் சிற்றறைகளிலும் தேடித்தேடி கண்டடையமுடியாமல் அவள் திகைத்து கூச்சலிட்டாள். அவர்கள் அவனை அரண்மனை முழுக்க தேடினர். பின்னர் வெளியே சென்று எழில்காட்டிலும் களமுற்றங்களிலும் தேடினர். செவிலியர் ஆணையிட்டதும் காவலர்தலைவர்கள் ஏவலர் கூடங்களிலும் கொட்டில்களிலும் அப்பாலிருந்த அடுமனைகளிலும் தொழும்பர்மனைகளிலும் தேடினர். அவன் மறைந்துவிட்டான் என்பதை அவர்களால் நம்பமுடியவில்லை. ஆகவே அவர்கள் கிணறுகளிலும் குளங்களிலும் தேடுவதற்கே அஞ்சினர். அலறி அழுதபடி செவிலியர் மயங்கிவிழுந்தனர்.

அதன் பின்னரே படைத்தலைவனுக்கு செய்தி சென்றது. அவன் சீற்றமும் துயருமாக ஓடிவந்து செவிலியரை ஓங்கி அறைந்தான். அனைத்துச் செவிலியரையும் சேடியரையும் மாளிகைக்காவலர்களையும் சிறைப்பிடித்து கட்டிவைத்துவிட்டு நூறு ஏவலரை அனுப்பி அரண்மனை வளாகம் எங்கும் தேடும்படி ஆணையிட்டான். முந்நூறு ஒற்றர்கள் நகரில் பரவி இளவரசனை தேடத் தொடங்கினர். அத்தனை குடித்தலைவர்களின் இல்லங்களிலும் ஒற்றர்களும் காவலர்களும் சென்று இளவரசனை தேடினர். காவகருக்கு செய்தி அறிவிக்கப்பட்டதும் அவர் குடித்தலைவர்கள் அனைவரையும் சிறைப்பிடிக்க ஆணையிட்டார்.

கோட்டைக்காவலர்களும் காவல்மாடத்தில் இருந்தவர்களும் சிறைப்பற்றப்பட்டனர். குடித்தலைவர்களின் சிறுமைந்தர்களை சிறைப்பிடித்து கட்டிவைத்து அவர்களிடம் இளவரசன் கிடைக்கவில்லை என்றால் அவர்கள் அனைவரும் கொல்லப்படுவார்கள் என்றார் காவகர். அவர்கள் ஏதுமறியோம் என்று கதறினர்.

இறுதியாகவே பகதத்தருக்கு செய்தி கொண்டுசெல்லப்பட்டது. அவர் திகைத்து நடுக்குகொண்ட உடலுடன் நின்று பின்னர் வாளை உருவிக்கொண்டு பாய்ந்து சிறைப்பிடிக்கப்பட்டவர்களை கொல்லும்பொருட்டு ஓடினார். அவரை படைத்தலைவர்கள் பிடித்துக்கொண்டார்கள். நெஞ்சிலறைந்து அழுதபடி பகதத்தர் நிலத்தில் ஓசையெழ விழுந்தார். அங்கே ஓங்கி அறைந்தபடி கதறி அழுதார். நினைவழிந்து கிடந்த அவரை மஞ்சத்திற்கு கொண்டுசென்றனர். பன்னிருநாட்கள் இளவரசனை தேடினர். அவன் தொலைந்துவிட்டான் என்று உறுதியானதும் காவகர் ஆவதென்ன என்று உசாவுவதற்காக அரசரின் படுக்கையறைக்கு வந்தார். மெலிந்து ஒடுங்கி மஞ்சத்தில் கிடந்த பகதத்தர் “என் ஊழ். மற்றொன்றும் சொல்வதற்கில்லை. சிறையுண்டவர்களை விடுதலை செய்க!” என ஆணையிட்டார்.

“அல்ல அரசே, இது அரசப்பிழை. இதற்கு பொறுப்பேற்றவர்கள் தண்டனை அடைந்தே ஆகவேண்டும். தண்டிக்கப்படாத குற்றம் புல்விதை எனப் பெருகும் என்கின்றன நூல்கள்” என்றார் காவகர். குடித்தலைவர்களும் மைந்தர்களும் விடுதலைசெய்யப்பட்டார்கள். கோட்டைக்காவலரும் காவல்கோட்டத்தினரும் அவர்களின் பொறுப்புகளிலிருந்து நீக்கம் செய்யப்பட்டு நெற்றியில் சூட்டுமுத்திரை பதிக்கப்பட்டு குடிக்கீழ்மை விதிக்கப்பட்டனர். அரண்மனைக் காவலர்

அனைவரும் தலைவெட்டி கொல்லப்பட்டார்கள். சேடியருக்கும் செவிலியருக்கும் நஞ்சு அளிக்கப்பட்டு அவர்களே அதை அருந்தி உயிர்விடவேண்டுமென ஆணையிடப்பட்டது. இளவரசன் பிரக்ஜ்யோதிஷத்திலிருந்து மறைந்துபோனான்.

# கார்கடல் - 34

மூன்று மாதகாலம் பிரக்ஜ்யோதிஷம் துயரம் கொண்டாடியது. அனைத்துக் கொண்டாட்டங்களும் கைவிடப்பட்டன. ஒற்றைமுரசு மட்டுமே அரண்மனையிலும் கோட்டையிலும் ஒலித்தது. நாட்டைச் சுற்றியிருந்த சிற்றூர்களிலும் காடுகளிலும் விரிவாகத் தேடிவிட்டு ஒற்றர்கள் ஒவ்வொருநாளும் வந்துகொண்டிருந்தனர். இளவரசன் மறைந்துவிட்டான் என்பது மீண்டும் மீண்டும் உறுதியாகியது. சிறுநம்பிக்கையைப் பேண ஒவ்வொரு எதிர்ச்செய்திக்குப் பின்னரும் உள்ளம் முயன்றது. அந்த நம்பிக்கையையே இலக்காகக் கொண்டு வந்து அறைந்தன அடுத்த செய்திகள்.

காவகர் நிமித்திகர்களை அழைத்து இளவரசன் உயிருடன் இருக்கிறானா என்று உசாவினார். “அமைச்சரே, அவர் உயிருடன் இருக்கிறார். தன் தெய்வத்தால் பேணப்படுகிறார். பேராற்றல் மிக்கவராக திரும்பி வருவார். பெரும்புகழ்பெற்ற மன்னராக, நிகரற்ற மல்லராக திகழ்வார். வரவிருக்கும் மாபெரும் போர் ஒன்றில் பாரதவர்ஷத்தின் நிகரற்ற வீரன் ஒருவனால் கொல்லப்படுவார். அவரைக் கொன்று ஆட்கொள்ள பிரம்மத்தின் வடிவென மானுடன் ஒருவன் மண்ணிலெழுவான்” என்றனர் நிமித்திகர். அச்சொல் பகதத்தரை உயிர்வாழச்செய்யும் அமுதமாக அமைந்தது. அவர்

நோய்மீண்டு எழுந்தார். அரண்மனையில் ஒவ்வொன்றும் நிலைமீண்டன.

பிரக்ஜ்யோதிஷத்தின் குடிகளும் அதை விரும்பினர். அவர்கள் இளவரசனை ஏளனம் செய்த பெரும்பிழைக்கு ஈடுசெய்ய எண்ணினர். ஆகவே மறைந்த இளவரசன் அவர்களின் இல்லங்களிலெல்லாம் தெய்வமென அமர்ந்திருந்தான். அவனை ஓவியர் ஒருவர் யானைப்பாவையுடன் விளையாடும் வடிவில் பட்டில் வரைந்திருந்தார். அதையே சிற்பமென்றாக்கி அவர்கள் நிறுவிக்கொண்டனர். களியானையுடன் அமர்ந்திருந்த சிறுவனாகிய பகதத்தன் பின்னாளில் வந்த சிலைகளில் அந்த யானைமேல் அமர்ந்திருந்தான். யானை பெரிதாகியபடியே செல்ல மாமதவேழத்தின் மேல் அமர்ந்திருக்கும் சிறுவனாக அவன் உருமாறினான். அவன் மறைந்த நாளில் இல்லங்களில் களிமண்ணில் அவன் உருவை நிறுவி பாலன்னம் படைத்து வழிபட்டனர்.

அரண்மனையிலிருந்து பகதத்தன் மறைந்தது தற்செயலாக நிகழ்ந்தது. அவையில் நிகழ்ந்த சிறுமையால் துயருற்ற அவன் எவரையும் பார்க்க விழையவில்லை. எவரும் தன்னை காணாமல் எங்கேனும் ஒளிந்துகொள்ள விழைந்தான். ஆகவே அரண்மனையில் இருந்து மெல்ல வெளியேறிச்சென்று அங்கே இடைநாழியிலிருந்த கூடை ஒன்றுக்குள் புகுந்து மறைந்துகொண்டான். அரண்மனையிலிருந்து அழுக்குத்துணிகளை சலவைக்காரர்களிடம் கொண்டுசெல்லும் கூடை அது. அதை வண்டியில் ஏற்றி அவர்கள் பிரம்மபுத்ரைக்கு கொண்டுசெல்லும்போது அவன் துயின்றுகொண்டிருந்தான்.

நதிக்கரையில் அவர்கள் வண்டியை நிறுத்தி கூடைகளை இறக்கி அடுக்கிவிட்டுச் சென்றனர். அவன் வெளியே வந்தபோது அங்கே முதிய சலவைக்காரர் சிலர் மட்டுமே இருந்தனர். அவன் அங்கே நின்றிருந்த பரிசல் ஒன்றில் ஏறி அமர்ந்தான். அதன் கயிற்றை என்னவென்று அறியாமல் பிடித்து இழுத்து அவிழ்த்தான். பரிசல் நீர்ப்பெருக்கில் செல்லத் தொடங்கியது. அதன் விசைகொண்ட சுழற்சியால் தலைசுற்றி அவன் அதிலேயே மயங்கி விழுந்தான். அவன் மீண்டும் விழித்துக்கொண்டபோது ஆற்றிடைக்குறை ஒன்றில் பரிசல் சிக்கி நின்றிருந்தது. அவன் அதில் இறங்கி சேற்றுப்பரப்பில் அமர்ந்துகொண்டான்.

அங்கே அவனுக்கு உணவு ஏதும் கிடைக்கவில்லை. பசி தாளாமல் அவன் கதறி அழுததை எவரும் கேட்கவில்லை. இருள் மூடிக்கொண்டிருந்தது. அவன் அங்கிருந்த நாணல்களைப் பிடுங்கி உண்ணமுயன்று முடியாமல் வான்நோக்கி கூவினான். இரவில் அப்பாலிருந்த நாணல்கரையிலிருந்து ஆற்றில் இறங்கி நீந்திவந்த யானைக்கூட்டம் ஒன்று ஆற்றிடைக்குறையில் ஏறி அங்கிருந்த பேய்க்கரும்புகளை பிடுங்கி உண்டது. அக்கூட்டத்தில் இருந்த பிடியானை ஒன்று அவன் அகவையே கொண்ட ஆண்குழவி ஒன்றை உடன் கொண்டு வந்திருந்தது. அந்தக் குழவிக்களிறு அவன் அழுகையைக் கண்டு அருகே வந்து கூர்ந்து நோக்கியது. பின்னர் அவனை தன் துதிக்கையால் தூக்கி கொண்டுசென்று தன் அன்னையிடம் நிறுத்தியது.

அன்னை தன் மைந்தனுடன் வந்த மானுடச்சிறுவனைக் கண்டு சினம்கொண்டு தாக்க வந்தது. ஆனால் இளங்களிறு அன்னையை தடுத்து அச்சிறுவனுக்கு காப்பளித்தது.

அன்னையிடம் அவனுக்கு முலையூட்டும்படி சொன்னது. அன்னை மைந்தனுக்குப் பணிந்து பகதத்தனின் மேல் தன் காலை தூக்கி வைத்து அவன் முகத்தில் பாலை பீய்ச்சியது. பகதத்தன் அந்த அமுதை அருந்தி உயிர்மீண்டான். இளங்களிற்றின் களித்தோழனாகி இரவெல்லாம் விளையாடினான். அக்களிற்றுக்குழவி யானைகளில் அரிதான ஒன்றாக இருந்தது. பிற யானைகளைவிட நினைவிற்கொள்ளவும் எண்ணவும் திறன் அதனிடமிருந்தது. யானைகள் எவற்றிலும் இல்லாத விழைவும் கற்பனைத்திறனும் கொண்டிருந்தது. ஆகவே யானைக்குலமே அறிந்திராத வஞ்சமும் கொடுமைகளில் விருப்பும் அதனிடமிருந்தது. தான் தேடியது மானுடனை என அது அவனைக் கண்டதுமே அறிந்தது. அவனுடன் ஆடி அது மானுடன் ஆனது. அவன் யானையென்றானான்.

இளங்களிற்றின் மீதேறி ஆற்றைக் கடந்து காட்டுக்குள் சென்றான். அங்கே யானைக்கூட்டத்தில் ஒருவனாக மாறினான். யானைப்பால் உண்டு வளர்ந்தவன் மிக விரைவிலேயே பெருந்தோள்கொண்டவனாக ஆனான். மரங்களை வெறுங்கையால் அறைந்து உலுக்குபவன். காட்டெருமைகளை கொம்புகளைப் பற்றி தூக்கிச் சுழற்றி வீசுபவன். ஆனால் அவன் விழிக்கூர் மட்டும் குறைவாக இருந்தது. கைதொடும் அண்மைக்கு வருவதையே அவனால் காணமுடிந்தது. அவனுக்கில்லாத விழிக்கூரும் செவிநுண்மையும் யானைக்கு இருந்தது. எனவே எப்பொழுதும் அவன் யானைமீதே இருந்தான். அவர்கள் ஓருடல் என்றாயினர். அவன் தான் என எண்ணுகையிலேயே யானைமேல் அமர்ந்தவனாகவே அகவுரு விரிந்தது. உயரத்திலிருந்து குனிந்த நோக்குடன் மூன்று கைகளுடன் நான்கு தூண்கால்களை எடுத்துவைத்து

அசைந்தாடிச் செல்பவனாகவே அவன் தன்னை கனவிலும் கண்டான்.

ஒருநாள் அவன் தன் கனவில் பிரக்ஜ்யோதிஷத்தின் மாளிகையை கண்டான். அங்கே ஓர் அரியணையில் எலும்புரு போன்ற முதியவர் ஒருவரை அமரச்செய்திருந்தனர். அவர் மணிமுடிசூடி கையில் செங்கோல் ஏந்தியிருந்தார். அவருக்கு முன் ஒரு யானை நின்றிருந்தது. அவர் அதனுடன் மெல்லிய குரலில் பேசிக்கொண்டிருந்தார். விழித்தெழுந்ததும் அவன் அக்காட்டிலிருந்து கிளம்பினான். பிரம்மபுத்ரையை நீந்திக்கடந்து மறுகரையில் ஏறி நாணற்சதுப்புகள் வழியாகவும் மூங்கில்காடுகள் வழியாகவும் நடந்து பலநாட்களுக்குப் பின்னர் பிரக்ஜ்யோதிஷத்தை வந்தடைந்தான். முதற்புலரியில் செவிவிரிந்த பெருங்களிற்றின்மேல் ஏறிவந்து நின்றவனை கண்டதுமே பிரக்ஜ்யோதிஷத்தின் படைவீரர்கள் அவன் யார் என கண்டுகொண்டனர். “இளவரசர் வருகை! இளவரசர் நகர்புகுகை!” என முரசொலிகள் முழங்கத் தொடங்கின. கோட்டைமேல் இளவரசனுக்குரிய கொடி எழுந்தது.

பிரக்ஜ்யோதிஷத்தின் மக்கள் தெருக்களில் கூடி வாழ்த்துக் குரலெழுப்பினர். சிலர் நெஞ்சிலறைந்து அழுதனர். அரிமலர் அள்ளித்தூவி ஆடைகளை வீசி படைக்கலங்களை தூக்கி ஆட்டி வெறிக்கூச்சலிட்டு நடனமாடினர். இளவரசன் வந்துகொண்டிருப்பதை பகதத்தர் அறிந்தார். படுக்கையில் பூசணம்பூத்த தோலும் வெறித்த விழிகளும் மஞ்சள்படிந்த பற்களுமாகக் கிடந்த அவரை தூக்கிக் கொண்டுவந்து உப்பரிகையில் அமர்த்தினர். அவர் தொலைவில் செம்மண் குன்று ஒன்று அசைந்தாடி வருவதை கண்டார். அதன்மேல் ஆடையேதும் அணியாமல் அமர்ந்திருந்த பேருருவனே தன்

மைந்தன் என விழிதெளியாமலேயே உணர்ந்தார். அணுகிவந்த பகதத்தன் முற்றத்தை அடைந்ததுமே அந்த இடத்தை அடையாளம் கண்டான். கைதொழுது நின்றிருந்த அமைச்சரிடம் “என் தந்தையை பார்க்கவேண்டும்” என்றான்.

தந்தை அவனைக் கண்டதும் படுக்கையிலிருந்து எழுந்துவிட்டார். சொல்கூடாமல் தொண்டை தவிக்க அவனை அள்ளி நெஞ்சோடணைத்தார். “நீ நரகாசுரன்! நீ ஹிரண்யன்!” என்று அவர் சொன்னபோது சொற்கள் உடைய அழுகை பெருகி எழுந்தது. “நீணாள் வாழ்க! நீடுபுகழ் கொள்க!” என்று அவர் அவன் தலையை முகர்ந்தார். அன்றிரவே முதிய பகதத்தர் உயிர்துறந்தார். பதினெட்டு நாட்களுக்குப் பின் பகதத்தன் பிரக்ஜ்யோதிஷத்தின் அரசனாக முடிசூட்டிக்கொண்டான்.

பகதத்தரின் பட்டத்து யானைக்கு நிமித்திகர்கள் கூடி சுப்ரதீகம் என்று பெயரிட்டார்கள். அவர் அரசராகப் பட்டமேற்றபோது அந்த யானை பட்டத்துயானையாக ஆகியது. அதை அவர் யானைகளுக்குரிய ஒலியால்தான் அழைத்தார். வேறெவரும் அழைத்தால் அது செவிகோட்டுவதுமில்லை. ஆயினும் அதற்கு பூசைகளுக்காகவும் சடங்குகளுக்காகவும் அரச அறிவிப்புகளுக்காகவும் பெயர் தேவைப்பட்டது. ஆகவே நிமித்திகர்கள் கூடி அதற்கு பெயரிடும் சடங்கு ஒன்றை நடத்தினர். மதங்கநூல் முறைமைப்படி அரண்மனை முற்றத்தில் பெருங்களம் ஒன்று வரையப்பட்டது. அதில் எட்டு திசைகளும் அடையாளப்படுத்தப்பட்டன. கிழக்கே இந்திரனின் அமராவதியும் தென்கிழக்கே அனலவனின் தேஜோபுரியும் தெற்கே யமனின் சம்யமனியும் தென்மேற்கே நிருதியின் கிருஷ்ணாஞ்சனையும் மேற்கே வருணனின் சிரத்தாவதியும் வடமேற்கே வாயுதேவனின் கந்தவதியும் வடக்கே குபேரனின்

மஹோதயமும் வடகிழக்கில் சிவனின் யசோவதியும் அடையாளப்படுத்தப்பட்டன. அங்கே திசைத்தெய்வங்கள் நிறுவப்பட்டன. இந்திரனை வைரக்கல்லாகவும் அனலவனை சுடர்விளக்காகவும் யமனை காகச்சிறகாகவும் நிருதியை நாகச்சுருளாகவும் வருணனை குடநீராகவும் வாயுதேவனை மயிலிறகாகவும் குபேரனை பொன்நாணயமாகவும் சிவனை முப்புரிவேலாகவும் நிறுத்தி பூசை செய்தமைத்தனர்.

அந்த எட்டு திசைகளுக்கும் எட்டு திசையானைகள் நிறுவப்பட்டன. கிழக்கே ஐராவதமும் அதன் பிடியாகிய அஃபுருமையும் வெள்ளிக் குட வடிவில் அமைக்கப்பட்டன. தென்கிழக்கே புண்டரீகன் அவன் துணைவி கபிலையுடன் செம்புக்குட வடிவில் நிறுவப்பட்டான். தெற்கே வாமனன் என்னும் திசையானை தன் பிடியாகிய பிங்கலையுடன் வெள்ளீயத்தால் உருளைவடிவில் வார்க்கப்பட்டு நிறுவப்பட்டான். தென்மேற்கே குமுதன் துத்தநாக உருளையாக வடிக்கப்பட்டான். அவன் துணைவி அனுபமை அருகே நின்றாள். மேற்கே காரீய உருளையாக அஞ்சனன் தன் துணைவி தாம்ரகர்ணியுடன் அமைந்தான். வடமேற்கே புஷ்பதந்தன் ஒரு இரும்புக் கிண்ண வடிவில் துணைவி சுஃப்ரதந்தியுடன் நிறுவப்பட்டான். வடக்கே சார்வபௌமன் அங்கனையுடன் பாதரச உருளை வடிவில் நின்றான். வடகிழக்கே சுப்ரதீகன் தன் பிடியாகிய அஞ்சனாவதியுடன் பொற்குடத்தின் வடிவில் அமைந்தான்.

யானையை அவிழ்த்துவிட்டு முரசுகளை முழக்கிக்கொண்டிருந்தார்கள். பெருங்களத்தில் நுழைந்த கட்டுகளற்ற களிறு ஒவ்வொன்றாக துதிக்கையால் தொட்டு நோக்கி ஆராய்ந்த பின் சென்று வடகிழக்கில் நிலைகொண்டது.

“பணிக சிவம்! பணிக சிவம்!” என்று வாழ்த்தொலிகள் எழுந்தன. யானையை சென்று தளைத்து அதற்கு சுப்ரதீகம் என்று பெயரிட்டனர். கொட்டிலில் இருந்து அதற்கு இணங்கிய பிடியானை ஒன்றை அழைத்து வந்தனர். அதன் பெயரை அஞ்சனாவதி என்று மாற்றினர். சுப்ரதீகம் ஒவ்வொருநாளும் என வளர்ந்தது. யானைகள் எதற்கும் அமையாத பேருருவை அடைந்தது. அதன்மேல் அமர்ந்திருக்கையில் காலுக்குக் கீழேதான் அரண்மனையின் அடுத்த பெருங்களிற்றின் முதுகு தெரியும். அதன் காதுகள் இருபுறமும் வீசும் காற்றில் அருகிருக்கும் கொடிகள் பறக்கும். அதன் மூச்சுபட்ட இடத்தில் குழிகள் விழுந்து பலநாட்கள் நிரம்பாமலிருக்கும். அது பெருமரங்களை செடிகளைப்போல பிழுதது. நாளொன்றுக்கு ஆயிரம் கவளம் அன்னம் உண்டது. ஆணையிடப்படாமலேயே எண்ணங்களை புரிந்துகொண்டது. அணிகளை தானே எடுத்து பூட்டிக்கொண்டது.

அது யானையே அல்ல, கந்தர்வன் ஒருவன் யானையென வடிவுகொண்டிருக்கிறான் என்றனர் சூதர். பாரதவர்ஷம் முழுதிலும் இருந்து அந்த யானையைப் பார்க்க யானைமருத்துவர்களும் யானைப்பாகர்களும் தேடிவந்தனர். பூத்த வேங்கைமரம் காற்றில் நின்றுலைவதுபோல முகத்திலும் செவிகளிலும் செம்பூப் பரப்புடன் நின்றிருக்கும் சுப்ரதீகம் எவரையும் தன்னருகே வர விடுவதில்லை. அரசர் அன்றி எவரும் அதன்மேல் ஏறவும் இயல்வதில்லை. அரசர் அந்த யானையுடன் தன் பொழுதில் பெரும்பகுதியை கழித்தார். அவரால் அணுக்கமாக புரிந்துகொள்ளத்தக்க மொழி அந்த யானை பேசுவதே என்று அமைச்சர்கள் சொன்னார்கள். அரசமுடிவுகளையேகூட சுப்ரதீகத்திடம் ஒரு சொல் கேட்டுத்தான் அவர் எடுத்தார்.

யானையும் அவரும் சேர்ந்தே படைப்பயிற்சி எடுத்தனர். அவர் தேரிலோ புரவியிலோ ஏறுவதில்லை. அனைத்து நகருலாக்களும் வேட்டைகளும் யானைமேலேயே. போரிலும் அவர் யானைமேல்தான் தோன்றினார். யானைமேல் அமர்ந்திருப்பது போரில் அம்புகளுக்கு எளிதில் இலக்காவது என்றாலும் அவர் எடைமிக்க கவசங்கள் அணிந்து அதன் மத்தகத்தின்மீதே அமர்ந்திருந்தார். அவர் கையில் இருந்த வில் மிக நீளமான நிலைவில்லைவிட இருமடங்கு பெரியது. அவர் தொடுக்கும் அம்புகள் எறிவேலைவிட எடையும் நீளமும் கொண்டவை. சுப்ரதீகம் தன் துதிக்கையில் சங்கிலியில் கோத்த கதையுருளையை எடுத்துச் சுழற்றி வீசி திரும்ப இழுத்துப் போரிடும் ஆற்றல்கொண்டிருந்தது. களத்தில் அவர்கள் போரிடும் திறனைக் கண்டவர்கள் அவர்கள் இருவரும் ஒற்றை உடலே என்று உணர்ந்தனர். ஆணைகள் இல்லாமல், சொற்களே எழாமல் அவர்கள் ஒரே எண்ணத்தை பகிர்ந்தனர். சுப்ரதீகம் தன் கதையை சுழற்றி வீசி தேர்களை நிலையழியச்செய்யும் கணத்தில் பகதத்தரின் அம்புகள் வந்து தேரோட்டியை கொன்றுவீழ்த்தும்.

திரிஹஸ்தன் என்றும் கஜபாகு என்றும் பகதத்தர் அழைக்கப்பட்டார். கிழக்கே எழுந்துவந்துகொண்டிருந்த இருபது நாடுகளை வென்று பிரம்மபுத்ரையின் கரையை முழுக்க தன் ஆட்சிக்குள் அடக்கிய பகதத்தரின் காலத்தில் பிரக்ஜ்யோதிஷம் பெரும்புகழ் பெற்றது. செல்வமும் ஆற்றலும் கொண்டு கிழக்கின் யானை என்று பெயரீட்டியது. அவர் வங்கத்துடனும் கலிங்கம், பௌண்டரம், அங்கம், சுங்கம் ஆகிய இணைநாடுகளுடனும் நல்லுறவை உருவாக்கிக்கொண்டு ஒரு படைக்கூட்டை அமைத்தார். ஆகவே கிழக்கில் எந்த அயல்நாடும் படைகொண்டு செல்ல அஞ்சும் நிலை

உருவாகியது. ஆற்றுவணிகத்தால் செல்வம் பெருகியமையால் ஆறு நாடுகளுக்கு நடுவில் பூசல்கள் எவையும் உருவாகவில்லை. மூன்று அஸ்வமேத வேள்விகளைச் செய்து பகதத்தர் அந்தணரின் வாழ்த்துக்களை பெற்றார். ஆனால் தன் குருதியினரான அசுரகுடியினருக்கு பொருளும் படைக்கலமும் கொடுத்து ஆற்றல்மிக்க படை ஒன்றையும் திரட்டிக்கொண்டார்.

பகதத்தரின் அன்னை சுதீரை யவன அரசன் அமூர்த்தரின் மகள். வடமேற்கே பெரும்பாலையின் விளிம்பில் வாழும் யவனர்கள் அதற்கும் மேற்கே, பாலைநிலங்களுக்கும் அப்பாலிருந்து வந்தவர்கள். வெண்ணிற உடலும் நீலவிழிகளும் செந்நிறக் குழலும் கொண்டவர்கள். பேருருவர்கள். தன் குடியின் கரிய சிற்றுடல் வடிவை களைய விரும்பிய முதிய பகதத்தர் பிற குடியினர் பெண்கொடுக்கவோ கொள்ளவோ தயங்கிய யவனர்களிடம் குருதியுறவு கொண்டார். அதன் விளைவாக யவனத்தின் படைத்துணையை அவர் அடைந்தார். பகதத்தரும் யவன இளவரசியான சுஸ்மிதையை மணந்தார். அவருக்கு பதினெட்டு மைந்தர்கள் பிறந்தனர். அவர்களில் மூத்தவனாகிய வஜ்ரதத்தன் இணையான தோள்வல்லமை கொண்டிருந்தான். அவனால் சுப்ரதீகத்தை மட்டுமே அணுக முடியவில்லை.

அஸ்தினபுரியின் அரசனுடன் அணுக்கம் கொண்டிருந்த அங்கம், வங்கம், கலிங்கம், சுங்கம், பௌண்டரம் என்னும் ஐந்துநாடுகளின் கூட்டமைப்புடன் சேர்ந்து பகதத்தரும் குருக்ஷேத்ரப் போர்க்களத்திற்கு சென்றார். தன் முதல் மைந்தன் வஜ்ரதத்தனை அரசுப்பொறுப்பளித்து நிறுத்திவிட்டு ஏழு மைந்தருடன் கிளம்பினார். அவருடைய விழிநோக்கு

மிகவும் குறைந்துவிட்டிருந்தது. இமைகள் எடைகொண்டு சுருங்கி கண்களுக்குமேல் விழுந்திருந்தமையால் அவற்றை மேலே தூக்கி பட்டுச்சரடு ஒன்றால் நெற்றியுடன் சேர்த்துக் கட்டியிருந்தார். களத்தில் அவருடைய விழிகளை மட்டும் எண்ணியவர்கள் கொல்லப்பட்டார்கள். அவர் சுப்ரதீகத்தின் விழிகளால் அனைத்தையும் நோக்கிக்கொண்டிருந்தார். ஐம்புலன்களுக்கும் அப்பாலிருந்த யானையின் தனிப்புலன் ஒன்று அவரை நோக்கி குறிவைக்க எழுந்த விற்களையே அவருக்கு காட்டியது. அக்குறி தேர அம்பெடுத்தவன் அதை தொடுப்பதற்குள் நெஞ்சுடைந்து சரிந்தான். யானை அங்கிருந்த ஒவ்வொருவரின் கனவுக்குள்ளும் புகுந்தது. அதை அவர்கள் தங்கள் உள்ளத்தில் அணுக்கமாக நோக்கிக்கொண்டிருந்தனர். அங்கே அந்த யானையின் விழிகள் கொலைத்தெய்வங்களின் நோக்கு கொண்டிருந்தன.

யவனர்கள் எண்ணிக்கை குறைந்தவர்கள். ஆனால் மிக விரிந்த நீள்நிலத்தை அவர்கள் தங்கள் ஆட்சியின்கீழ் வைத்திருந்தனர். எனவே தங்களுக்குரிய விற்கலைகள் சிலவற்றை அவர்கள் உருவாக்கியிருந்தனர். அவற்றிலொன்று அவர்களால் சிலாஸ்திரம் என அழைக்கப்பட்டது. இரும்பாலான எடைமிக்க நீள்வில் அது. அதை மலைச்சரிவில் தொங்கி இறங்கும் பாறையுடன் பிணைத்த கயிற்றால் வளைத்து எடைமிக்க பெரிய அம்புகளை கீழ்நோக்கி செலுத்துவார்கள். யானை மத்தகத்தை, கரும்பாறையை, இரும்புக் கவசத்தை ஒற்றை அறையால் பிளக்கும் ஆற்றல்கொண்டிருந்தன அந்த அம்புகள்.

அவர்கள் தங்கள் அம்புகளில் மலையிடுக்குகளில் ஊறித்தேங்கியிருக்கும் கரிய கன்மதத்தை வெட்டி எடுத்து பொருத்தி பயன்படுத்தினர். முன்பு அனலவன் மண்மகள்மேல்

காமம் கொண்டு அணுகியபோது அன்னை அவனை உதறி ஏளனம் செய்து விலக்கினாள். சினமும் ஆற்றாமையும் கொண்ட அனலவனின் காமம் மேலும் பெருகியது. அப்போது வெளியான உயிர்க்குருதி அப்பாறையிடுக்குகளில் படிந்து கரிய மண்ணாக மாறி இறுகியிருந்தது. கல்லால் மெல்ல உரசினாலே பற்றிக்கொள்ளும். அதில் தோன்றும் அனல் வஞ்சம் கொண்டது. கெடுமணத்துடன் வெடியோசை எழுப்பி பெருகி எழும். நீரூற்றினாலும் அணையாத சீற்றம் கொண்டது. நஞ்சுமிழ்ந்து வானில் நின்றாடும்.

அந்த அம்பையே தன் படைக்கலமாகக் கொண்டிருந்தார் பகதத்தர். அவர் கையிலிருக்கும் வில்லுடன் இணைக்கப்பட்ட சங்கிலி சுப்ரதீகத்தின் முன்னங்காலுடன் கட்டப்பட்டிருக்கும். தன் காலால் மிதித்து வில்லை அது வளைத்து அம்புபொருத்தச் செய்யும். யானைவிசை கொண்ட பேரம்பு தேர்முகடுகளை உடைத்தெறிந்தது. இரும்புக் கவசங்களை முட்டை ஓடுகள் என நொறுக்கியது. இடியோசையுடன் அது மோதியபோது அறைபட்டவர்கள் பின்னால் தெறித்துச்சென்று விழுந்தார்கள். சுவர்களை அம்புகள் ஊடுருவிச் செல்லும் என்றும் மரங்களை அறுத்து அப்பாலிடும் என்றும் நூல்களில் படித்தவர்கள் அதை நேரில் கண்டு திகைப்படைந்தனர்.

முதல்நாள் போரில் அவர் விராடருடன் தனிப்போர் புரிந்தார். சுப்ரதீகத்தின் கதையால் தேர் நொறுங்குண்ட விராடர் பாய்ந்து புரவியொன்றில் ஏறி கவசநிரைக்குள் புகுந்துகொண்டு பகதத்தரின் அம்பில் இருந்து தப்பினார். ஆனால் இடும்பர்குலத்து மாவீரன் கடோத்கஜனுடன் நிகழ்ந்த தனிப்போரில் அவர் பின்னடைந்தார். சுப்ரதீகத்தின் கதையிலிருந்து தப்ப வானில் பாய்ந்தெழுந்த கடோத்கஜன்

கொக்கிக் கயிற்றை வீசி அதன் கழுத்துச்சரடில் கோத்துக்கொண்டு அது துதிசுழற்றிய விசையிலேயே தான் வானில் பறந்து அவரை தாக்கினான். சுப்ரதீகம் பின்னடி எடுத்துவைத்து அவரைக் காத்து கௌரவப் படைக்குள் கொண்டுசென்றது. அன்று அவருடைய எடைமிக்க நெஞ்சக்கவசம் உடைந்து தோளிலும் விலாவிலும் கடோத்கஜனின் கொக்கி சிக்கி கிழித்த புண்கள் உருவாயின.

களத்தில் அனைவராலும் அஞ்சப்பட்டவராக திகழ்ந்தார் பகதத்தர். பீமசேனரை அவருடைய யானை கதையால் நெஞ்சிலறைந்து வீழ்த்தியது. மயங்கி சரிந்த தந்தையை தருணத்தில் பாய்ந்துவந்த கடோத்கஜன் காத்து தூக்கி அப்பால் கொண்டுசென்றான். மீண்டு வந்த கடோத்கஜனை எண்ணியிராக் கணத்தில் தாக்கி தூக்கி வீசியது சுப்ரதீகம். தசார்ணத்தின் அரசன் ஹிரண்யவதனன் தன் மருகன் பெயர்மைந்தர்கள் சித்ரரூபனும் சித்ரசர்மனும் படைத்துணையாக பகதத்தரை எதிர்கொண்டான். அப்போரில் பகதத்தர் சித்ரரூபனையும் சித்ரசர்மனையும் கதையால் அறைந்து தேர்களை உடைத்து நிலத்தில் விழச்செய்து நீளம்புகளால் நெஞ்சுதுளைத்துக் கொன்றார். தனித்து நின்ற ஹிரண்யவதனன் கூச்சலிட அவனுக்கு பாஞ்சாலராகிய சிகண்டியில் பிறந்த பெயர்மைந்தர்களான ஷத்ரதர்மனும் ஷத்ரதேவனும் துணைசெய்ய ஓடிவந்தனர். பகதத்தர் ஷத்ரதர்மனின் இரு கைகளையும் பிறையம்பால் வெட்டி வீழ்த்தினார். அலறியபடி ஓடிவந்த ஷத்ரதேவனின் தலையை சுப்ரதீகம் அறைந்து உடைத்தது. தசார்ணனாகிய ஹிரண்யவதனன் அவர் அம்பால் கவசம்பிளந்து நெஞ்சு உடைந்து மறுபக்கம் சென்று நிலத்தில் தைத்த நீளம்பால் கொல்லப்பட்டான்.

பகதத்தர் அன்று காலை எழுகையில் தன் குடில்முன் வந்து அமர்ந்திருந்த சின்னஞ்சிறு பறவை ஒன்றை பார்த்தார். அது துயர்கொண்டிருந்தது. ஓசையின்றி அவரை நோக்கியபடி அருகிருந்த சிறு கழிமேல் அமர்ந்திருந்தது. அவர் அதை நோக்கிக்கொண்டிருந்தார். அது எழுந்து பறக்கவில்லை. அவர் அதன் சிறிய மணிக்கண்களை நோக்கினார். மேலும் அருகே சென்றார். அது எழுந்து பறக்குமென எதிர்பார்த்தார். பின்னர் பெருமூச்சுடன் அதை தவிர்த்துவிட்டு உள்ளே சென்று முகம் கழுவி மீண்டார். திரும்பி வந்து நோக்கியபோது அதை காணவில்லை. அவர் கவசங்கள் அணிந்து படைக்கலங்களுடன் சுப்ரதீகத்தை பார்க்கச் சென்றார். இரும்புக் கவசங்கள் அணிந்த யானை தொலைவில் இரும்புக்கூரைகொண்ட மண்டபம்போல் நின்றுகொண்டிருந்தது. அவர் அணுகுவதை உணர்ந்ததும் அதன் துதிக்கை நீண்டு வந்து அவரை தேடியது. அவர் அருகே சென்று நின்றார். அதன் துதிக்கை அவரை தழுவியும் வருடியும் முகர்ந்தும் மகிழ்ந்தது. சீறிய மூச்சொலியுடன் அது அவரை நோக்கி தலைகுலுக்கியது.

கிளம்பலாம் என அவர் பாகனுக்கு தலையசைத்த பின் கால் தூக்கும்படி அதன் விலாவில் தட்டி ஆணையிட்டார். ஆனால் யானை கால் தூக்கவில்லை. அவர் மீண்டும் மீண்டும் அதற்கு ஆணையிட்டார். என்ன ஆயிற்று அதற்கு என்று புரியாமல் காதைப் பிடித்து உலுக்கினார். அவர் சொல்லி அது செய்யும் வழக்கமில்லை. சொன்ன பின் செய்யாமலிருந்ததே இல்லை. “என்ன? என்ன?” என்று அவர் கேட்டார். “காலெடு… காலெடு” என்றார். யானை தலைகுலுக்கி உறுமியது. அவர் அதன் கண்களை நோக்கினார். மதம்கொண்டிருக்குமா என்ற ஐயம் எழுந்தது. விழியீரம் வழிந்த கரியதடத்தில் சிறிய பூச்சிகள் மொய்த்துக்கொண்டிருந்தன. மதக்கசிவு இல்லை.

நோயுற்றிருக்குமா என்று ஐயம்கொண்டு சுற்றிவந்தார். அதன் கால்கீழிலும் வாலைச்சுற்றியும் கூர்ந்து நோக்கினார். நெறிவீக்கத்தின் பைகள் ஏதுமில்லை. கால்களில் புண்கள் இல்லை.

“துதிக்கையில் புண்கள் ஏதேனும் இருந்தனவா?” என்று அவர் பாகனிடம் கேட்டார். “இல்லை, அரசே. புண்கள் என பெரிதாக ஏதுமில்லை” என்றான். “பிறகென்ன?” என்றார். “நோய்கொண்டிருக்கிறதா?” என தனக்குத்தானே கேட்டபடி அதன் வாயருகே மூக்கை கொண்டு சென்று கெடுமணம் வீசுகிறதா என்று நோக்கினார். அதன் காதுக்குப் பின்னாலும் கழுத்திலும் கைகளால் அறைந்து நோக்கினார். சலிப்புடன் அதனிடமே “என்ன?” என்றார். அது தலையசைத்து உறுமியது. அவர் புரிந்துகொள்ளமுடியாமல் பாகனிடம் திரும்பி “என்ன?” என்றார். அவன் ஒன்றும் சொல்லவில்லை. அவர் தன் வில்லை எடுக்கும்படி கைகாட்டினார். ஏவலன் வில்லை எடுத்தபோது யானை மீண்டும் உரக்க உறுமியது.

அவருக்கு அதன் உள்ளம் புரிந்தது. கால் ஒன்று இழுத்துக்கொள்ள சற்று தடுமாறி அதன் முன்காலில் சாய்ந்துகொண்டார். அதன் கை நீண்டு வந்து அவர் தோளில் எடையுடன் படிந்தது. “ஆம்” என்று அவர் சொன்னார். அதன் காதை பற்றி அசைத்தபடி “ஆம்” என்று மீண்டும் சொன்னார். வில்லை ஒரு கையால் வாங்கிக்கொண்டு யானையின் கால்மூட்டில் கால்வைத்து ஏறி மேலே அமர்ந்தார். அது மீண்டுமொருமுறை ஆழ்ந்த குரலில் அமறியது. அதன் மத்தகத்தை தட்டி “ஆம்” என்று அவர் மீண்டும் சொன்னார். தன் ஏவலரை நோக்கி “கிளம்பலாம்” என்றார். யானையை அவர் மெல்ல தொட்டபோது அது தளர்ந்த காலடிகளுடன் நடந்தது.

அவர் அந்தச் சிறிய குருவியை நினைத்துக்கொண்டு அதன் மேல் அமர்ந்திருந்தார்.

# gகார்கடல் - 35

ஏகாக்ஷர் சொன்னார் “படைக்களத்தில் தன் பட்டத்து யானையான சுப்ரதீகத்தின் மேல் ஏறி பகதத்தர் தோன்றினார். அரசி, அவர் கொண்டிருந்த அம்புகள் அனைத்தும் அவரைவிட இருமடங்கு நீளமானவை. அவற்றின் கூர்முனைகள் கையளவுக்கே பெரியவை. அவை உறுமியபடி சுழன்றுசென்று கவசங்களை உடைத்து உடலுக்குள் பாய்ந்ததுமே சற்று சுழன்று நிலைகொள்பவை. ஆகவே அவ்வுயிரைக் கொல்லாமல் அவற்றை பிடுங்கி எடுப்பது இயலாது. அம்புகள் நீண்டவை ஆதலால் அவை தைத்து வீரன் களம்பட்டதுமே அவன்மேல் பிற வீரர்களும் தேர்ச்சகடங்களும் புரவிகளும் ஓடி அந்த அம்பை அசைத்து அவன் உள்ளுறுப்புகளை சிதைத்துவிடுவார்கள். குருக்ஷேத்ரத்தில் சினம்கொண்டெழுந்த காலதேவன் போலவே பகதத்தர் தோற்றமளித்தார்.”

முன்பொருமுறை ஹிரண்யாக்ஷன் என்னும் அசுரன் தன் பெருங்கதையினால் கடலின் அலைகளை அறைந்து சிதறடித்து விளையாடினான். அந்த அறைகள் பட்டு கடலரசனாகிய வருணன் துன்புற்றான். அவன் அழுதபடியே சென்று விண்ணளந்தோனிடம் தன்னை அவ்வசுரனின் கதையிலிருந்து காக்கவேண்டும் என்று கோரினான். சினம்கொண்டு விண்ணவன் எழுந்தான். அதை அறிந்த ஹிரண்யாக்ஷன் பேருருக் கொண்டு பூமியன்னையை தன் பற்கொம்பின்மேல் ஏற்றிக்கொண்டு கடலாழத்திற்குள் சென்று ஒளிந்தான்.

காப்போன் தான் ஒரு பன்றியென உருக்கொண்டு கடலின் ஆழத்திற்குள் உள்ள ஏழு இருண்ட பாதாளங்களையும் ஊடுருவிச்சென்று அங்கே எல்லையில்லாது விரிந்த மணல்வெளியில் ஒரு மணற்பருவாக சுருங்கி ஒளிந்திருந்த ஹிரண்யாக்ஷனைக் கண்டு கொன்று அன்னையை மீட்டு கொண்டுவந்தார்.

ஹிரண்யாக்ஷனின் கொம்பு வயிற்றில் புகுந்தமையால் புவியன்னை கருவுற்றாள். அவள் ஈன்ற மைந்தனே நரகாசுரன். மண்ணாழத்தில் பிறந்தமையால் அன்னை அப்பெயரை அவனுக்கு ஈந்தாள். கொடிய கருந்தோற்றம் கொண்டிருந்த நரகனை விண்ணவர் கொன்றுவிடக்கூடும் என அஞ்சிய அன்னை உலகாள்வோனிடம் சென்று அவனை காக்கவெண்டுமென இரந்தாள். அவளுக்குக் கனிந்த மூத்தோன் தன் பைந்நாகப்பாயின் வாலின் நிழலைத் தொட்டு எடுத்து ஒரு அம்பு என்று ஆக்கி அளித்தார். இது வைஷ்ணவாஸ்திரம். இதை நீ உன் கையில் ஒரு கணையாழியாக அணிந்துகொள்க! உன் மைந்தனுக்கு இதை கொடு. அவன் வளர்ந்து பேருருவன் ஆவான். அவனை எவரும் வெல்ல இயலாது. அவன் அறம்பிழைத்தானென்றால் மண்ணில் நானே அவனைக் கொல்ல எழுவேன். என் முன் மட்டுமே இந்த அம்பு செயலிழக்கும் என்று அருளினார்.

அன்னையிடமிருந்து வைஷ்ணவாஸ்திரத்தைப் பெற்ற நரகாசுரன் வெல்லற்கரியவனாக ஆனான். கிழக்குமலைகளின் அடிவாரத்தில் பிரக்ஜ்யோதிஷம் என்னும் நகரை உருவாக்கி அதை தன் தலைநகராகக்கொண்டு அசுரப்பேரரசு ஒன்றை அமைத்தான். ஹயக்ரீவன், நிசுந்தன், பஞ்சநதன், முரன் என்னும் விண்ணுருவ அரக்கர்களை பிரக்ஜ்யோதிஷ மாநகரின்

எல்லைக்காவலர்களாக அமைத்தான். வேதமுனிவரான த்வஷ்டாவின் மகள் கசேருவை கவர்ந்துகொண்டுவந்து தன் துணைவியாக்கிக் கொண்டான். எதிர்க்க எவருமில்லை என ஆணவம் மிகவே விண்ணுலகுக்குச் சென்று இந்திரனின் அன்னை அதிதியின் அணிகலன்களை அறுத்துக்கொண்டுவந்து தன் துணைவிக்கு அளித்தான்.

இந்திரன் சென்று முறையிடவே பாற்கடலில் இருந்து பெருமான் எழுந்து மண்ணில் வந்து நரகாசுரனிடம் போரிட்டு அவனை கொன்றார். மண்ணின் பெருவீரர்களும் முனிவர்களும் விண்ணவரும் வெல்லமுடியாத நாராயணாஸ்திரம் பெருமானின் கையில் ஒரு சிறு கணையாழியாகச் சென்றமைந்தது. நரகாசுரனின் குடிகள் சிதறிப்பரந்து பிறிதோரிடத்தில் பிரக்ஜ்யோதிஷத்தை மீண்டும் அமைத்தனர். யாதவ நிலத்திற்குள் அமைந்த அந்நகரிலிருந்துகொண்டு அவர்கள் துவாரகையின் ஆநிரைகளை கவர்ந்தனர். சினம்கொண்ட இளைய யாதவர் தன் துணைவி சத்யபாமையுடன் போருக்கெழுந்து நரகாசுரனின் குருதியிலெழுந்த நூற்றெட்டாவது நரகாசுரனைக் கொன்று பிரக்ஜ்யோதிஷத்தை அழித்தார்.

நரகாசுரனின் குடியில் இருந்த தொன்மையான படைக்கலமாகிய நாராயணாஸ்திரம் புதிய பிரக்ஜ்யோதிஷத்தின் அரசரான பகதத்தரிடம் வந்தது. அது கருடச்சிறகுகள் கொண்டது. கருடனின் அலகுபோல் கூர்ந்த முனைகொண்டது. கருடன்போல் ஓசையிட்டு விண்ணிலெழுந்து அங்கேயே வட்டமிட்டு இலக்கை நோக்கியபின் செங்குத்தாக மண்ணுக்கு வந்து பாய்ந்து உயிர்குடிப்பது. அதனிடமிருந்து தப்ப எவராலும் இயலாது. அது

விண்ணளந்த பெருமான் ஒருவனுக்கே கட்டுப்படும் என்று கதைகள் உரைக்கின்றன. அதை பகதத்தர் போர்க்களத்தில் பயன்படுத்தவில்லை. அவர் அதை பீமனுக்கோ அர்ஜுனனுக்கோ கருதி வைத்திருப்பதாக சொல்லப்பட்டது.

அன்று காலை பகதத்தர் தீக்குறி ஒன்றை கண்டார். அவருடைய யானையும் களமெழத் தயங்கியது. ஆகவே அன்றே பீமனையோ அர்ஜுனனையோ கொல்வதாக தன்னுள் வஞ்சினம் உரைத்தபின் அவர் குருக்ஷேத்ரக் களத்தை சென்றடைந்தார். அங்கே நிகழ்ந்த பெரும்போரில் அவர் துருபதனிடமும் விராடனிடமும் போரிட்டார். தன் மைந்தரைக் கொன்ற அவர்மேல் சினம்கொண்டு பொருத வந்த சிகண்டியை அம்புகளால் அறைந்து தேரிலிருந்து வீழ்த்தினார். சிகண்டி தப்பி ஓடி படைகளுக்குள் ஒளிந்துகொண்டார். திரிகர்த்தனும் சம்சப்தர்களும் கொல்லப்பட்ட செய்தியை அவர் அறிந்தார். தன் இலக்கான பீமனை நோக்கி சென்றுகொண்டிருந்தார். தொலைவில் பீமனை கண்டுகொண்டதும் அவரை நோக்கி தன் யானையை செலுத்தினார். களத்தில் இரு பெருமல்லர்களும் சந்தித்துக்கொண்டார்கள்.

அரவான் சொன்னான். யானை அளவுக்கு போரை நன்கறிந்த பிறிதொரு உயிர் இல்லை. புரவிகள் போரில் களிக்கின்றன, ஆனால் எளிதில் அஞ்சிவிடுகின்றன. யானையின் முகத்தில் எழும் கரிய மாநாகம் போரில் திளைக்கின்றது. குருதியில் குளிக்குந்தோறும் குளிர்ந்து ஆற்றல் கொள்கிறது. என் குடியினரே, அங்கே குருக்ஷேத்ர மண்ணில் சுப்ரதீகம் செய்த போரை இனி என்றென்றும் சூதர்கள் பாடுவார்கள். பெருங்கவிஞர் சொல்லில் நிறுத்துவார்கள். தலைமுறைகள் அதன் வீரத்தை எண்ணி திகைப்பார்கள். அது வானிலிருந்து

தெய்வம் ஒன்று தன் கையில் தூக்கிச் சுழற்றும் சங்கிலிக் கதையின் கரிய முழைபோல போர்க்களத்தில் சுழன்றுவந்தது. அது சென்ற இடத்தை குருதித்தடமாக காணமுடிந்தது. கரிய யானையை அவர்கள் எவரும் காணவில்லை, அது செங்குருதியால் செம்மண்குன்று என தோன்றியது.

பீமன் தன் தேரில் நின்றபடி யானையிடம் போர்புரிந்தார். அவரைத் தொடர்ந்துவந்து காத்த பாஞ்சாலத்தின் வில்லவர்களை பகதத்தர் தன் அம்புகளால் வீழ்த்திக்கொண்டே இருந்தார். மெல்ல மெல்ல பீமன் தனிமைப்பட்டு களம்நடுவே நின்றார். அவரை பின்னால் சென்று மையப்படைகளுடன் சேர்ந்துகொள்ளும்படி அறிவுறுத்தி முரசுகள் முழங்கிக்கொண்டே இருந்தன. ஆனால் அவர் அதை தவிர்த்தார். மேலும் சீற்றம்கொண்டவராக அவர் பகதத்தர் மேல் பாய்ந்தார். சுப்ரதீகத்தின் கதை வந்து அறைந்து அவருடைய தேர் உடைந்து தெறித்தது. அதிலிருந்து பாய்ந்து அவர் மண்ணில் விழுந்து புரண்டு எழுந்தார். அறைந்து அறைந்து அவரை தொடர்ந்து வந்த கதை பட்ட இடம் குழியாகியது. அந்த மண் பெருகி அவர்மேல் பொழிந்து அவரை செந்நிறமாக்கியது. வில் ஒடிந்து தெறிக்கவே பீமசேனர் தன் கதையை தூக்கியபடி யானையுடன் போர்புரிந்தார்.

யானையின் கதை அவருடைய கதையை அறைந்து அப்பால் வீசியது. அவர் பாய்ந்து பிறிதொரு கதையை எடுத்துக்கொண்டார். அவரை நோக்கி மேலிருந்து அம்புகளைத் தொடுத்த பகதத்தர் வெறிக்கூச்சலிட்டார். அவருடைய அம்புகள் அந்த செந்நிலத்தில் தைத்து இலை எரிந்தணைந்து குச்சிகள் நீண்டுநிற்கும் மூங்கில்காடென்றாயின. அதனூடாக தப்பி வளைந்து ஓடிய பீமன் அந்த மாமதயானையை எதிர்கொள்ள

ஒரே வழி அதன் அருகே சென்றுவிடுவதே என உணர்ந்து அதை நோக்கி ஓடி அதன் கதை சுழன்றுவரும் வட்டத்திற்குள் சென்றார். யானை அவரை பார்க்கமுடியாமல் தன்னைத்தான் சுற்றிக்கொண்டு பெருங்குரலெழுப்பியது. அதன் கால்களுக்குக் கீழே சென்று அவர் அங்கே நின்று அதை தாக்கினார். அதன் கவசங்கள் உடைந்தன. அதன் காலுக்குக் கீழே புண்பட்டது. கால் வளைய யானை சரிந்து விழுந்தது. அதற்கு அடியில் பீமசேனர் சிக்கிக்கொண்டார் என்று எண்ணிய பாண்டவப் படையினர் கூச்சலிட்டு அலறினர்.

“இளைய பாண்டவர் பீமசேனர் வீழ்ந்தார்!” என்று முரசுகள் முழங்கின. பாண்டவப் படையினர் அலறிக்கொண்டு நிலையழியலாயினர். யுதிஷ்டிரர் அஞ்சி கூச்சலிட்டபடி நகுலனிடம் “இளையவனிடம் சென்று மந்தனை காக்கச் சொல்க... மந்தன் உடனே மீட்கப்பட்டாக வேண்டும்” என்றார். அச்செய்தி சென்றதும் சம்சப்தர்களைக் கொன்று உடலெங்கும் குருதியுடன் நின்றிருந்த அர்ஜுனன் தேரைத் திருப்பியபடி பகதத்தரை நோக்கி சென்றார். அவருடன் பாஞ்சாலத்தின் வில்லவர்கள் நூற்றுவர் நாணொலி எழுப்பியபடி சென்றனர். “பகதத்தரை வெல்வது எளிதல்ல, பார்த்தா... அவருடைய நாராயணாஸ்திரம் ஆற்றல் மிக்கது” என்று இளைய யாதவர் சொன்னார். “அதை அவர் மூத்தவர்மேல் ஏவவில்லை அல்லவா?” என்றார் அர்ஜுனன். “இல்லை, அவ்வாறு ஏவியிருந்தால் அதன் ஒலி வேறாக கேட்டிருக்கும்” என இளைய யாதவர் சொன்னார்.

பீமசேனர் இறந்துவிட்டார் என்று கௌரவப் படைகள் ஆர்ப்பரித்துக்கொண்டிருக்கையிலேயே சுப்ரதீகம் புரண்டு எழுந்து நின்று துதிக்கை தூக்கி ஆர்ப்பரித்தது. அது விழுந்த

எடையை தன்மேல் இருந்து ஒழிந்து அப்பால் பாய்ந்தெழுந்து கதையுடன் நின்ற பீமசேனரை நோக்கி கதையுடன் பாய்ந்தார் பகதத்தர். இருவரும் ஒருவருக்கொருவர் இணைநின்று கதைப்போரிட்டனர். இருவரின் தசைகளும் ஆற்றல் ஆற்றல் என முறுகி நெளிந்து தழைந்தன. இரு கதைகளும் விம்மி காற்றில் சுழன்று வந்து அறைந்தன. இருவரும் கால் எண்ணி வைத்து சுற்றிவந்து தாக்கினர். ஒருவர் வீச்சை ஒருவர் தடுத்தனர். அதில் ஒருவரின் ஆற்றலை ஒருவர் உணர்ந்தனர். இரு மல்லர்கள் ஒரு கோளத்தின் இரு பக்கங்கள் என இணைந்துகொள்கிறார்கள்.

பகதத்தரின் விழிநோக்கு தன் கைகளை நீட்டித் தொடும் எல்லைவரைதான் என்பதை பீமன் புரிந்துகொண்டார். தன் காலடியோசையைக் கொண்டோ கதை சுழலும் விம்மலைக் கொண்டோ காற்றசைவைக் கொண்டோதான் அவர் தன்னை அறிகிறார். ஆகவே பஞ்சடி வைத்து நடக்கும் போர்முறையை கைக்கொண்டார். கதையை சுழற்றாமல் தன் முன் அசைவிலாது பிடித்தபடி அவர் உடலை அறைய தடம் நோக்கினார். அவர் நெஞ்சு திரும்பி அண்மையிலெனத் தெரிந்த கணத்தில் ஓங்கி அறைந்தார். அக்கணமே அவருக்குப் பின்னால் நின்றிருந்த சுப்ரதீகத்திடமிருந்து எழுந்த மெல்லிய ஓசையால் அவரை நன்கு கண்டவராக பகதத்தர் பாய்ந்து அகன்றார்.

அதன் பின்னரே பீமன் உணர்ந்தார். அவருக்குப் பின்னால் நின்று அந்த யானை நூறுமுறை தீட்டிய கூர்கொண்ட தன் விழிகளால் அவருடைய ஒவ்வொரு தசையசைவையும் நோக்கிக்கொண்டிருக்கிறது என. அதன் துதிக்கை அசைவில், செவிவீச்சில் பகதத்தருக்கான மொழி இருப்பதை கண்டார்.

மீண்டும் மீண்டும் தாக்கி பிரிந்து பாய்ந்து தாக்கும்போது அந்த மொழிக்கும் அப்பால் அவர்கள் மட்டுமே எழுப்பி கேட்டுக்கொள்ளும் நுண்ணொலி ஒன்றில் பிறிதொரு மொழி அவர்களிடையே நிலவுவதை உணர்ந்தார். அவரது யானைவிழிகளை நோக்கி போரிட அவர் கற்றிருக்கவில்லை. அவை நோக்குவதென்ன என்பதை அவருடைய விழிகளாலும் பயின்ற உள்நோக்காலும் உணர இயலவில்லை.

பீமன் கைதளர்ந்து பின்னடையத் தொடங்கினார். அவர் விலாவில் அறைந்து வீழ்த்தியது பகதத்தரின் கதை. குருதி உமிழ்ந்தபடி அவர் புரண்டு எழுந்து விலகினார். பகதத்தர் மீண்டும் தன் யானைமேல் ஏறிக்கொண்டு பெருவில்லை இழுத்து அம்புதொடுத்து அவர் மேல் ஏவினார். முதல் அம்பை ஒழிந்த பீமசேனர் கால்தளர்ந்து விழ அடுத்த பேரம்பை பகதத்தர் எடுத்தபோது மல்லநாட்டரசன் ஆகிருதியின் மைந்தனாகிய ருசிபர்வன் கூச்சலிட்டபடி வந்து சுப்ரதீகத்தின் மேல் தன் வேலால் தாக்கினான். சினம்கொண்ட யானை திரும்பி அவனை தாக்கியது. அவன் தன் வேலால் மாறி மாறி யானையை குத்திக்கொண்டிருக்க அவனைத் தூக்கி நிலத்திலறைந்து கொன்றது சுப்ரதீகம்.

களைத்து குருதி கக்கிக்கொண்டிருந்த பீமன் எழுந்து விலகிச் சென்றுவிட அவரைத் துரத்தியபடி பாண்டவப் படைகளுக்குள் பகதத்தர் நுழைந்தார். அவரை அஞ்சி பாறை விழுந்த ஏரியின் நீர் என அலையலையாக பாண்டவப் படைகள் அகன்றன. பீமசேனரை பகதத்தர் அணுகி “இன்றுடன் ஒழியட்டும் உன் ஆணவம்!” என்று கூவியபடி தன் முதன்மை அம்பை எடுக்க கை நீட்டியபோது கூகைக்குழறல்போல் எழுந்த நாணொலியுடன் வந்து அவரை எதிர்கொண்டார் அர்ஜுனன்.

அவர்களிடையே விற்போர் தொடங்கியது. பகதத்தரின் அம்புகள் பெருங்கழுகுகளின் ஆற்றல் கொண்டிருந்தன. உதிரும் மலைப்பாறைகள்போல் அவை இறங்கின. பகதத்தரின் அம்புகளை அறைந்து முறிக்கவோ தடுத்து வீழ்த்தவோ இயலாதென்று முதல் அம்பிலேயே அர்ஜுனன் உணர்ந்துகொண்டார். அவை எடையும் விசையும் மிகுந்திருந்தன. பகதத்தரும் சுப்ரதீகமும் இணைந்து விடுப்பவை அவை. அவற்றை அறைந்து திசையழியச் செய்வதொன்றே வழி என கற்றுக்கொண்டார். அவர் பகதத்தரின் அம்புகளை அறைந்து விலக்கிய அதே கணம் இளைய யாதவர் தேரைத்திருப்பி அவரை காத்தார்.

“அவரிடமுள்ள அரிய அம்பு நாராயணாஸ்திரம் எனப்படுகிறது. முன்பு அவர்களின் மூதாதையாகிய நரகாசுரன் விண்ணளந்தபெருமானை தவம்செய்து அடைந்தது. இடியோசையுடன் மின்னலின் ஒளியுடன் எழுவது. கருடனின் கூர்மூக்கும் விரிசிறகும் கொண்டது. அந்த அம்பு ஒன்றே அவர்களின் இறுதிப் படைக்கலம். பார்த்தா, அதை வெல்பவனே அவர்களை வெல்லமுடியும்” என்றார் இளைய யாதவர். “அவரை அடி… அவர் நிலைகுலையவேண்டும். சினம்கொண்டு தன்னிலை மறக்கவேண்டும். அந்த அம்பை எத்தனை முன்னால் அவர் கையிலெடுக்கிறாரோ அத்தனை நன்று. அந்த அம்பு இருக்கிறது என்னும் நம்பிக்கையே அவரையும் அவருடைய யானையையும் ஆற்றல்மிக்கவர்களாக்குகிறது. அந்த அம்பை வென்றுவிட்டால் அவரிடமிருக்கும் எஞ்சிய அம்புகளால் பயனேதுமில்லை…”

அவர் சொல்வதை உணர்ந்த அர்ஜுனன் தன் அம்புகளால் பகதத்தரின் கவசங்களை அறைந்தார். அவருடைய

நீளம்புகளால் எப்பயனும் இல்லை என்பதுபோல் இடதுகையால் அவற்றை விலக்கினார். அவருடன் போர்புரிகையிலேயே அருகிருந்த பிற வில்லவர்களிடம் வெற்றுச்சொல்லாடி நகைத்தார். அவருடைய அம்புகள் விசையின் ஓசையுடன் அவரைக் கடந்து சென்றன. அவருடைய மெல்லிய உடல் தேர்த்தட்டில் நின்று நடனமிட்டது. அந்த அம்புகளில் ஒன்றுகூட அவரையோ தேரையோ தொடவில்லை.

சீற்றம்கொண்ட பகதத்தர் “ஷத்ரியன் என்று நடிக்கும் யாதவனே, இன்றுடன் உன் வாழ்வு முடிந்தது!” என்று கூவியபடி நாராயணாஸ்திரத்தை ஏவினார். அதை எடுக்க அவருடைய கை வளைந்து பின்னால் சென்று அம்பை எடுத்து நாணில் ஏற்றி தொடுத்த அக்கணம் தேர்த்தட்டில் எழுந்து தன் கவசத்தின் பின்முடிச்சை சீரமைத்தார் இளைய யாதவர். அவருடைய நெஞ்சக்கவசத்தின் ஒளிமின்னல் பகதத்தரின் கண்களை வெட்டிச்சென்றது. இடியோசை எழுப்பி அனல்கொண்டு எரிந்தபடி செம்மலர்ச் செண்டுபோல் வந்த அம்பு அர்ஜுனனின் தேரைக் கடந்து அப்பால் சென்று மண்ணில் அறைந்து விழுந்தது. அங்கே இடிவிழுந்ததுபோல் நிலம் அதிர்ந்தது. மாபெரும் செந்நிறமலர் என அப்புழுதி இதழ்களை விரித்து மலர்ந்து வளைந்தடங்கியது. தேர்கள் சரிந்து உள்ளே விழுமளவுக்கு பெரிதாக இருந்தது அந்தக் குழி. அதற்குள் நீர் ஊறி சூழ்ந்திருந்த செம்மண் வளையத்தை நனைத்து மேலேறியது. மண்ணில் எழுந்த புண் என அது சேறாகியது.

புழுதித்திரையினூடாக அர்ஜுனன் அம்புகளை பகதத்தரை நோக்கி செலுத்தினார். முற்றிலும் நோக்கிழந்து அமர்ந்திருந்த அவருடைய தலைக்கவசம் உடைந்தது. நெஞ்சக்கவசம் பிளந்து

உள்ளே பாய்ந்து உயிர்நரம்பை அறைந்து துண்டித்தது பார்த்தனின் வாளி. அலறியபடி அவர் யானைமேலிருந்து கீழே விழுந்தார். புழுதிப்படலம் கரைந்து காற்றில் அலைகொண்டு அப்பால் சென்றபோது திகைத்து நின்றிருந்த சுப்ரதீகத்தின் காலடியில் கைவிரித்து கால்பரப்பி முகம் வானோக்கி வெறிக்க கிடந்த பகதத்தரை கௌரவப் படையினர் கண்டார்கள். சுப்ரதீகம் அவரை தன் துதிக்கையால் தொட எண்ணி நீட்டி அஞ்சி பின்னடைந்து மீண்டும் நீட்டியது. அதன் செவிகள் பதறிப்பதறி அலைபாய்ந்தன. மீண்டும் கைநீட்டி அது அவரை தொடமுயன்றது. எதிர்க்காற்றில் விசையழிவதுபோல் காலெடுத்து வைத்து பின்னடைந்தது. அதன் வயிற்றுக்குள் இருந்து எழுந்த உறுமலை அவர்கள் கேட்டனர்.

பின்னர் அது மெல்ல முன்னால் சென்று அவரை தொட்டது. திடுக்கிட்டு செவியசைவு நிலைக்க துதிக்கை மட்டும் நெளிய அப்படியே நின்றது. அதன் கை பதற்றம் கொண்டு பகதத்தரை உடலெங்கும் தொட்டுத்தொட்டு முத்தமிடுவதுபோல் அலைந்தது. அவரை எழுப்ப விழைவதுபோல புரட்டிப்புரட்டி உலுக்கியது. எழுப்பி அமரச்செய்ய முயன்றது. துதிக்கையில் தூக்கி எடுத்து காற்றில் உலுக்கியது. அதன் கையில் துணிப்பாவைபோல் பகதத்தர் தொங்கிக்கிடந்தார். பின்னர் அவரை மிக மெல்ல நிலத்தில் கிடத்திவிட்டு பின்னெட்டு எடுத்துவைத்து நோக்கி நின்றது. துதிக்கையை தலைக்குமேல் தூக்கி வணங்கி வாழ்த்தொலி எழுப்பியது. அந்த ஓசை துயர ஓலமாக மாற அப்பகுதியில் நின்றிருந்த அத்தனை யானைகளும் துதிவளைத்து மறுகுரல் எழுப்பின. அங்கே அத்தனை யானைகள் இருப்பது அப்போதுதான் தெரிந்ததுபோல் ஒவ்வொருவரும் திரும்பி நோக்கினர். இரு

படைப்பிரிவுகளையும் சேர்ந்த யானைகள் மாறி மாறி ஓசையிட்டபடியே இருந்தன.

பகதத்தரின் வேளக்காரப் படையினர் தங்கள் தலை அணிகளை எடுத்து வீசிவிட்டு ஒற்றை நிரையென்றாகி “பகதத்தர் வாழ்க! முக்கரத்தான் வாழ்க! பிரக்ஜ்யோதிஷம் வெல்க!” என்று கூவியபடி மோதி உயிர்விடும் வஞ்சினத்துடன் அர்ஜுனனை நோக்கி பாய்ந்தனர். அவர்கள் நூற்றெண்மரையும் அர்ஜுனன் தன் அம்புகளால் செறுத்து கொன்று வீழ்த்தினார். அவர்களில் இறுதிவீரன் எஞ்சியிருந்த தருணத்தில் சுப்ரதீகம் பெருஞ்சீற்றத்துடன் துதிக்கையைச் சுழற்றி கொம்பு குலுக்கி அவரை நோக்கி பாய்ந்து வந்தது. “அதை கொல்... அதை விடுதலை செய்!” என்று இளைய யாதவர் சொன்னார்.

அர்ஜுனனின் தேரை அடைந்து அதை உடைக்க சுப்ரதீகம் முயல தேரைத் திருப்பி அதை ஒழிந்தார் இளைய யாதவர். அர்ஜுனன் பிறைவாளியால் அதன் துதிக்கையை வெட்டி வீழ்த்தினார். முகக்கை அறுந்ததும் யானை திகைத்து நின்றது. அதன் முகம் மானுடத்தன்மை கொள்வதுபோல் தோன்றியது. அந்த வெட்டுண்ட கை மண்ணில் கிடந்து துள்ளிச்சுருண்டு குதிப்பதைக் கண்டு இருபக்கப் படைகளும் மருண்டு நின்றன. அந்தக் கை கரிய நாகமென நெளிந்து தவழ்ந்து யானையை நோக்கி சென்றது. படமெடுப்பதுபோல் மேலெழுந்து சுப்ரதீகத்தின் முகத்தில் மீண்டும் ஒட்டிக்கொள்ள முயன்றது.

உடைந்த கலத்திலிருந்து என குருதி பெருகிக் கொட்டிக்கொண்டிருந்த முகத்துடன் நின்றிருந்த சுப்ரதீகம் அந்தக் கை தன்னை நோக்கி வருவதைக் கண்டு அஞ்சியதுபோல பின்னடைந்தது. துள்ளித்துள்ளி விழுந்த கையை விட்டு விலகிச்சென்று அதை கூர்ந்து நோக்கியபின்

திரும்பிக்கொண்டது. சில எட்டுகள் காலெடுத்து வைத்து பக்கவாட்டில் சரிந்து வயிறு உப்பிப் பெருத்து எழுந்து அலைகொள்ள விழுந்து வால் துவண்டு புழுதியில் அளைய, பூதச்சிரிப்பு எழுந்த நகக்கால்கள் இரண்டு காற்றில் எழுந்து உதைத்துக்கொள்ள துடித்தது. அந்தக் கை தவழ்ந்து சுப்ரதீகத்தை அடைந்து அதன்மேல் ஏற முயன்று வழுக்கி வழுக்கி விழுந்தது. எஞ்சிய வேளக்காரப் படைவீரன் தன் கழுத்தை வேலால் வெட்டி சரிந்து விழுந்தான். அந்தக் கை அவ்வோசை கேட்டு திடுக்கிட்டு அவனை நோக்கி பாய்ந்து அவனை கவ்விச்சுழற்றி இறுக்கி அதிர்ந்து மெல்ல அடங்கியது.

அரவான் சொன்னான். பகதத்தர் வீழ்ந்தார் என அறிவித்து முரசுகள் முழங்கின. கௌரவப் படையினர் அவரை வாழ்த்தி பேரொலி எழுப்பினர். பாண்டவர்கள் வெற்றிக்குரல் முழக்கினர். அன்று மாலை பகதத்தரின் உடலும் சுப்ரதீகத்தின் உடலும் இடுகாட்டுக்கு கொண்டுசெல்லப்பட்டன. நிமித்திகரின் கூற்றுப்படி பகதத்தர் எரிந்த அதே அரசச்சிதையிலேயே சுப்ரதீகத்தின் உடலும் வைக்கப்பட்டது. ஆனால் அதன் துதிக்கை மட்டும் அருகிலிருந்த ஆழ்ந்த பிலத்திற்குள் போடப்பட்டு மண்ணிட்டு அடக்கம் செய்யப்பட்டது. பகதத்தரின் மகன் விஸ்வதத்தன் அவர் உடலுக்கு தீமூட்டினான்.

பகதத்தர் நுண்ணுருவாக விண்ணிலெழுந்தபோது சுப்ரதீகமும் உடனெழுந்தது. இருவரும் மீண்டும் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டார்கள். சுப்ரதீகத்தின் துதிக்கை ஆழங்களுக்குள் புதைந்து தன் நாக உலகுக்கே மீண்டது. தன்னை ஆட்டுவித்த மாநாகத்திலிருந்து விடுபட்ட சுப்ரதீகம் பகதத்தருடன் விண்ணுலகை அடைந்தது.

# கார்கடல் - 36

புரவியில் பாய்ந்து வந்த துச்சகனின் உடலெங்கும் குருதி நனைந்திருந்தது. கால் சுழற்றி தாவி இறங்கி பறந்து வந்த அம்புகளுக்கு தலைகொடாமல் குனிந்து ஓடி கர்ணனின் தேருக்கு அருகே வந்து சகடத்தில் தொற்றி தேரில் ஏறி ஆவக்காவலனின் அருகே எழுந்து நின்று “மூத்தவரே, இதுவே தருணம் என்று அரசர் கருதுகிறார். களமெழுந்துள்ள அர்ஜுனன் நோயுற்றிருக்கிறான். அவனால் போர்புரிய இயலவில்லை. அம்புகள் இலக்கு பிழைக்கின்றன. இத்தருணத்தில் நீங்கள் அவனை வெல்வது எளிது” என்றான். “மாதுலர் சகுனி பலமுறை அர்ஜுனனை எதிர்கொள்ளும்படி ஆணையிட்டும்கூட தாங்கள் முன்னெழவில்லை என்று சினங்கொண்டார். அவர் என்னை தங்களிடம் ஆணையை நேரில் சொல்லும்படி கூறி அனுப்பினார்” என்றான். கர்ணன் “ஆம்” என்றபடி சுருதசேனனையும் சதானீகனையும் அம்புகளால் அறைந்து பின்செலுத்தினான். பாஞ்சாலத்தின் ஏழு வில்லவர்களை தொடர்ந்து தன் அம்புகளால் அடித்து வீழ்த்தினான்.

துச்சகன் மேலும் உரத்த குரலில் “இவர்களல்ல தங்கள் இலக்குகள். மூத்தவரே, தாங்கள் வென்றாகவேண்டியது அர்ஜுனனை. அவனை வெல்லாமல் இப்போரில் நாம் வெல்ல இயலாது. இன்றே அவனை கொல்லவேண்டும். இனி ஒரு தருணமில்லை. கிளம்புக என்று மூத்தவர் வேண்டிக்கொள்கிறார்” என்றான். “செல்க!” என்று கர்ணன் சொன்னான். கசப்பும் சீற்றமுமாக “மூத்தவரே!” என்று துச்சகன் கூவினான். “செல்க!” என்று கர்ணன் உரக்க கூவ அவன்

மேலும் சொல்லுக்குத் தவித்து பின்னர் தேரிலிருந்து தாவி இறங்கி அம்பு நிரைகளுக்கு கீழே உடல் குனித்து தன் புரவியை நோக்கி ஓடினான்.

மேலும் சற்று கழித்து துரியோதனனே தன் தேரில் அங்கு வந்திறங்கினான். அப்போது அபிமன்யுவும் சுருதகீர்த்தியும் இருபுறமும் நின்று கர்ணனுடன் பொருதிக்கொண்டிருந்தனர். துரியோதனன் தன் தேரை கர்ணனின் தேருக்கு நிகராக கொண்டுவந்து தானும் அம்புகளை தொடுத்தபடி உரத்த குரலில் “அங்கரே, இதுவே உகந்த பொழுது. இப்பொழுது அவன் சம்சப்தர்களை கொன்றுவிட்டு பகதத்தரை எதிர்க்கும்பொருட்டு சென்றுகொண்டிருக்கிறான். பகதத்தருக்கும் பீமனுக்கும் கடும்போர் அங்கு நிகழ்ந்துகொண்டிருக்கிறது. சுப்ரதீகத்தின் விரைவை எதிர்க்க இயலாமல் பீமன் தவிக்கிறான். இன்னும் சற்று நேரத்தில் பீமனை பகதத்தர் கொன்றுவிடக்கூடும்” என்றான்.

கர்ணன் அவனை நோக்கி திரும்பவில்லை. “நாம் அதை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோம். அதோ மீண்டும் முரசுக்குரல் எழுகிறது. அர்ஜுனன் அங்கு செல்கிறான். அர்ஜுனனும் பீமனும் இணைந்தால் ஒருவேளை பகதத்தரை வீழ்த்திவிட முடியும். பகதத்தரின் உதவிக்கு நான் உடனே செல்லவேண்டும். அர்ஜுனனை தடுத்து நிறுத்துங்கள். அவன் அம்புகளை உடையுங்கள். இக்களத்திலேயே அவனை கொன்று வீழ்த்துங்கள். இன்று இல்லையேல் இனி என்றும் நிகழாது” என்றான் துரியோதனன் மீண்டும். கர்ணன் தன் வில் தாழ்த்தி சினத்துடன் திரும்பி “அவன் நோயுற்றிருக்கிறான்” என்றான். “ஆம், அதைத்தான் நல்வாய்ப்பென்று சொன்னேன்” என்றான்

துரியோதனன். “நோயுற்றிருப்பவனை வெல்வது எனக்கு புகழ் சேர்ப்பதல்ல” என்று கர்ணன் சொன்னான்.

துரியோதனன் கண்களில் சினம் எழுந்தது. “இந்த அறங்கள் அனைத்தையும் கைவிடுவதாக எனக்கு சொல்லளித்தீர். என் வெற்றி ஒன்றே குறி என்று அவையில் என்னிடம் கூறினீர்” என்றான். கர்ணன் “ஆம், ஆனால் நோயுற்று நடுங்கிக்கொண்டிருக்கும் ஒருவனிடம் போர்புரிய என் உளம் ஒப்பவில்லை. அவ்வெற்றியைப் பற்றிய எண்ணமே எனக்கு குமட்டலை உருவாக்குகிறது” என்றான். “இது வஞ்சகம். அங்கரே, நீங்கள் என்னை கைவிடுகிறீர்கள். அவனிடம் போரிடுவதைவிட நூறுமடங்கு இழிவு சொன்ன சொல்லை பின்னெடுப்பது. எப்படி நீங்கள் என்னை இவ்வண்ணம் கையொழிய முடியும்? செஞ்சோற்றுக்கடன் என்ற சொல்லை மறந்துவிட்டீரா?”

கர்ணன் சினத்துடன் “அந்தக் கடன் அங்குதானிருக்கிறது. அஞ்ச வேண்டியதில்லை. அதை நிரப்பாமல் இம்மண்விட்டு நான் செல்லப்போவதுமில்லை” என்றான். “ஆனால் இன்று நான் அவனை எதிர்க்கப்போவதில்லை. இன்று அவனுக்கும் எனக்கும் இங்கு போர் நிகழவேண்டுமென்று நீங்கள் எனக்கு ஆணையிடவும் இயலாது. எந்நிலையிலும் எவரிடமிருந்தும் ஆணை பெறுபவனல்ல நான் என நீங்களும் அறிவீர்கள்.” துரியோதனன் “வேண்டியதில்லை. நானும் என் உடன்பிறந்தாரும் அவனுடன் போர்புரிகிறோம். அவனை இக்களத்திலேயே கொல்கிறோம். எங்களுக்கு இனி நெறிகளெதுவும் இல்லை” என்று கூவினான். நெஞ்சிலறைந்து கண்ணீருடன் “இறந்து தேர்த்தட்டில் விழுந்தவர்கள் என் உடன்பிறந்தார். என் கடன் அவர்களுடனே விண்ணுக்குச்

செல்வது. அவர்களிடம் மட்டும்தான் நான் மறுமொழி சொல்ல வேண்டியிருக்கிறது" என்றான்.

தேரைத் திருப்பி கைவீசி "உங்கள் நெறிகள் உங்களை காக்கட்டும். நன்று!" என்று சொல்லி துரியோதனன் விரைந்து அகன்று சென்றான். கர்ணன் தன்னை எதிர்த்த பாஞ்சாலப் படைவீரர்களையும் திருஷ்டத்யும்னனையும் பின்னடையச் செய்தான். அவன் செல்லும் வழியெங்கும் இருபுறமும் ஒதுங்கி பாண்டவப்படை வழிவிட்டது. அவன் அம்புகளிலிருந்து தப்ப இயலாதென்று அறிந்து அம்பெல்லைக்கு வெளியிலேயே அவர்கள் நின்றிருந்தனர். கர்ணன் மேலும் மேலும் விசைகொண்ட அம்புகளை எடுத்து விஜயத்தில் பொருத்தி இழுத்து அவர்களை வீழ்த்தினான். அலறல்களும் கூச்சல்களும் நிறைந்து அவனிருக்கும் இடம் அப்படையினர் அனைவருக்கும் தெரிந்தது.

தொலைவில் போர்முரசின் ஒலி கேட்டது. அவனைச் சூழ்ந்திருந்த கௌரவ வீரர்கள் "பகதத்தர் வீழ்ந்தார்! சுப்ரதீகம் வீழ்ந்தது!" என்றனர். கர்ணன் அரைக்கணம் உளம் விலக்கி அச்செய்தியை கேட்டான். பகதத்தரின் முகம் அவன் முன் கடந்து செல்ல சீற்றம் கொண்டவன்போல தலையை அசைத்தான். "பகதத்தர் வாழ்க! பிரக்ஜ்யோதிஷத்தின் தலைவர் வாழ்க! கொலையானை சுப்ரதீகம் வாழ்க! விண்ணேகுக மாவீரர்!" என்று கௌரவப் படையினர் வாழ்த்தொலிக்க மறுபக்கம் பாண்டவப் படையினர் வில்களையும் வேல்களையும் தூக்கி வீசி நடனமிட்டனர்.

கர்ணன் தன் அம்புகளால் பாண்டவர்களை அறைந்து பின்தள்ளிச் சென்றுகொண்டிருந்தபோது எதிரில் உடலெங்கும் குருதியுடன் அர்ஜுனன் முன்வருவதை கண்டான். அர்ஜுனன்

பகதத்தரை வீழ்த்திய சோர்வுடன், ஒழிந்த ஆவநாழியுடன், நாண் தளர்ந்த காண்டீபத்துடன் பாண்டவப் படைகளுக்கு பின்னால் சென்று சற்று ஓய்வெடுத்து புது நாண் மாற்றி மீண்டுகொண்டிருந்தான். அவன் தேர் மேலும் மேலும் பாண்டவப் படைகளுக்குள் உட்புகுந்து சென்றபோது எதிர்பாராத வகையில் ஏழு திரைகள் ஒன்றன் பின் ஒன்றாக விலகுவதுபோல் அவனைச் சூழ்ந்திருந்த பாஞ்சாலர்களின் விற்படைகளும் வேல்படைகளும் புரவிநிரைகளும் அகல எதிரில் கர்ணன் தன் தேரில் வருவதை கண்டான்.

அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் எதிர்கொள்வதை அறிந்ததும் இருபுறத்திலிருந்தும் வீரர்கள் அஞ்சி கூச்சலிட்டனர். கர்ணன் அர்ஜுனனை பார்த்து மறுசொல் எடுப்பதற்குள் அவன் தேரை ஓட்டிய இளையவனாகிய சத்ருஞ்சயன் புரவிகளை மாறி மாறி சவுக்கால் அறைந்து தேரை அர்ஜுனனை நோக்கி செலுத்தினான். தேர் பற்றிஎரிந்துகொண்டு வருவதுபோல் அந்தி ஒளியில் சுடர் விரிந்தபடி அணுகுவதை அர்ஜுனன் கண்டான். அவன் கை இயல்பாக ஆவநாழியைத் தொட்டு செயலிழந்தது. “பின்னெடுக்கவா?” என்று இளைய யாதவர் கேட்டார். “வேண்டியதில்லை! வேண்டியதில்லை!” என்று நடுங்கும் குரலில் அர்ஜுனன் சொன்னான்.

மீண்டும் ஒருங்கிணைந்து அர்ஜுனனை மூடிவிட பாண்டவப் படைகள் முயன்றபோது கர்ணனின் இருபுறமும் வந்துகொண்டிருந்த அவன் மைந்தர்கள் பொழிந்த அம்புகள் அவர்களைத் தடுத்து அணையிட்டு அப்பால் நிறுத்தின. கர்ணன் எங்கோ உளம் அமைந்து நோக்கிழந்த விழிகள் இமைசரிந்திருக்க அம்புகளால் படைகளை அறைந்துகொண்டிருந்த அரைக்கணத்தில் திரும்பி அர்ஜுனனை

பார்த்தான். காண்டீபத்தை அறியாது மேலே தூக்கிய அர்ஜுனன் அதன் நாண் தளர்ந்திருப்பதைக் கண்டு வெற்று நோக்குடன் முகம் உறைந்தான். கர்ணன் "தேர் விலக்குக!" என்றான். "அரசே!" என்றான் சத்ருஞ்சயன். "இளையோனே, தேரை விலக்கு" என்று அழுத்தமான குரலில் கர்ணன் சொல்ல சத்ருஞ்சயன் தேரை இழுத்து விலக்கி கௌரவப் படைகளை நோக்கி கொண்டுசென்றான்.

கர்ணனைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த மைந்தர்களும் அவ்வாறே தேர்களைத் திருப்பி கௌரவர்களின் மையப்படையை நோக்கி செல்ல அவ்விடைவெளியை நிரப்பியபடி பாஞ்சாலர்களின் விற்படைகளும் விராடரின் வேல்படையும் கிராதர்களின் காலாட்படையும் வந்து மூடி அர்ஜுனனை அப்பால் கொண்டுசென்றன. மிகத் தொலைவில் யானைச்சங்கிலி கொடி நுடங்க பொற்தேர் அகன்று செல்வதை அர்ஜுனன் பார்த்தான். தேர்த்தட்டில் ஓங்கி காலால் உதைத்து காண்டீபத்தை அறைந்து வீசிவிட்டு பீடத்தில் அமர்ந்து கைகளால் தலையை பற்றிக்கொண்டு அவன் விம்மி அழுதான்.

கடிவாளங்களைப் பற்றியபடி பின்னால் திரும்பிப்பார்த்த இளைய யாதவர் "ஏன் துயருறுகிறாய்? உனக்கு உயிர்க்கொடை அளிக்கும் வாய்ப்பு அவனுக்குக் கிடைத்தது. அதற்கு மேல் இந்நிகழ்வுக்குப் பொருளேதுமில்லை" என்றார். "இத்தருணத்திற்குப் பின் நான் எதை அடைந்தாலும் அதற்கு பொருளேதுமில்லை, யாதவரே. இக்கணம் வரை என் முதன்மை எதிரியாக எண்ணியிருந்தவன் இவன். இவனை கொன்றாலொழிய நான் வீரனல்ல என்றும் இவனைக் கொல்லும் கணத்திலேயே விண்ணவனின் மைந்தனென்று ஆவேன் என்றும் எண்ணியிருந்தேன். தோற்றது நான்

மட்டுமல்ல, விண்ணவர்க்கு இறைவனாகிய எந்தையும்தான். பிறந்து பிறந்து என்றும் நிகழும் இப்போரில் மீண்டும் எந்தை தோற்றிருக்கிறார்” என்றான்.

“என்றும் தேவர்களே இறுதியாக வெல்வார்கள்” என்று இளைய யாதவர் சொன்னார். “அதற்கு என்ன பயன்? அவ்வெற்றி இழிவு கொண்டது. இன்று அவனிடமிருந்து உயிரை கொடை எனப் பெற்றதும் நான் இறந்தேன். இனி வில்லவனென்றும் விண்ணோன் மைந்தனென்றும் சொல்லிக்கொள்வதில் என்ன பொருள்?” என்று அர்ஜுனன் கூவினான். “போர்க்களத்தில் எதுவும் நிகழும். நன்று, தீது, மேன்மை, கீழ்மை அனைத்தும் இங்கு ஒன்றே. களத்தில் அனைத்து சொற்களும், அனைத்து உணர்வுகளும் நாம் கையாளும் படைக்கலங்கள் மட்டுமே” என்று இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனன் மறுமொழி கூறாது தலையை கைகளில் தாங்கி உடல் குறுக்கி அமர்ந்திருந்தான்.

அந்தி சரிவதை அறிவுறுத்தும் முரசுகள் முழங்கத் தொடங்கின. பாண்டவ வீரர்கள் உரக்க கூச்சலிட்டு விற்களையும் வேல்களையும் வானில் தூக்கியெறிந்து “வெற்றி கொள்வோம்! வில்விஜயனுக்கு வெற்றி! இந்திரன் மைந்தனுக்கு வெற்றி! காண்டீபத்துக்கு வெற்றி! மின்கொடிக்கு வெற்றி! இந்திரப்பிரஸ்தத்திற்கு வெற்றி! யுதிஷ்டிரருக்கு வெற்றி!” என்று கூச்சலிட்டனர். அப்பால் கௌரவப் படையினர் சோர்ந்து தனித்து பிரிந்து செல்வதை காணமுடிந்தது.

கர்ணனின் தேர் சென்று நிற்க பாகன் பாய்ந்திறங்கி அவன் இறங்குவதற்குரிய படிப்பெட்டியை வைத்தான். கர்ணன்

இறங்கி தன் வில்லை அருகே வந்த ஏவலனிடம் நீட்டி கையுறைகளை விரல்களால் கவ்வி உருவியபடி நடந்தான். தொலைவில் தனித்தேரில் துரியோதனன் செல்வதை பார்க்க முடிந்தது. கர்ணன் அவனை பார்த்தபின் அணுகிச்சென்றான். துரியோதனன் தேரிலிருந்து இறங்கி வெறுப்பும் துயரும் நிறைந்த முகத்துடன் அங்கேயே நின்றான். அருகணைந்ததும் "பகதத்தர் கொல்லப்பட்டார்!" என்றான். கர்ணன் மறுமொழி சொல்லவில்லை. "இது அவையில் அவர் உங்களை குலஇழிவு சொன்னமைக்கான மறுசெயல் என்று என்னிடம் சொன்னார்கள். நான் அதை நம்ப அஞ்சுகிறேன். அவ்வாறு ஒரு சிறுமையை உங்கள் மேல் இதுவரை நான் சுமத்தியதில்லை. ஆனால் இன்று அதை என்னால் சுமத்தாமலிருக்கவும் இயலாது" என்றான் துரியோதனன்.

"என் மேல் எப்பழியையும் எவரும் சுமத்தலாம்" என்று கர்ணன் சொன்னான். துரியோதனன் அச்சொல்லால் உளமழிந்து தன் இரு கைகளால் அவன் கைகளை பற்றிக்கொண்டு "பிறகேன் இந்த நிலை? ஏன் இப்படி செய்ய நேர்ந்தது?" என்று உடைந்த குரலில் கேட்டான். "அறமென்றும் அளியென்றும் என்னிடம் சொல்லவேண்டாம். என் மைந்தர், என் இளையோர் இந்தக் களத்தில் எப்படி தலையறைந்து வீழ்த்தப்பட்டனர் என்று உனக்கு தெரியும். இன்று நான் நின்றிருக்கும் நிலை என்னவென்றும் தெரியும். இத்தருணம் அறத்தையும் அளியையும் பேசிக்கொண்டிருப்பதற்கானதல்ல என்று பிற எவரையும்விட உனக்கே தெரியும். இருந்தும் ஏன் இதை செய்தாய்? நான் ஏதேனும் பிழை இழைத்தேனா? அன்றி என் தம்பியரோ குடியோ ஏதேனும் பிழையாற்றினோமா?"

“என் நிலையை சொற்களால் முழுமையாக உங்களிடம் சொல்லிவிட இயலாது, அரசே” என்று கர்ணன் சொன்னான். “ஒருவேளை என்றேனும் நீங்கள் அதை அறியவும் கூடும். அல்லது நாம் விண்ணில் சந்திக்கையில் அனைத்தையும் பகிர்ந்துகொள்கிறேன். இன்று அதற்கு என்னிடம் விளக்கமில்லை.” சீற்றத்துடன் “ஒரு விளக்கமிருக்கிறது” என்று துரியோதனன் சொன்னான். “இதுவரை நாம் எவரும் சொற்களால் ஒருவரோடொருவர் சொல்லிக்கொள்ளாத விளக்கம் அது” என்றான். அவன் விழிகளை நேர்நோக்கி “அது உண்மை” என்று கர்ணன் சொன்னதும் துரியோதனனின் விழிகள் மாறுபட்டன. “அது முற்றிலும் உண்மை. அவன் என் இளையோன். அவர்கள் என் இளையோர்” என்று கர்ணன் சொன்னான்.

துரியோதனன் திகைப்புடன் “ஆனால்...” என்றான். “அது நாமனைவரும் அறிந்தது. நாம் எவரும் சொல்ல உகக்காதது. அவ்வாறே இருக்கட்டும்” என்றான் கர்ணன். துரியோதனன் உளம் தளர்ந்து “மெய்தான். நான் அவனை கொல்லும்படி உங்களிடம் சொல்லியிருக்கக் கூடாது. உங்களால் அது இயலாது. அப்பெரும்பழியைச்சூடி நீங்கள் நின்றிருக்க வேண்டுமென்று நான் கோரலாகாது” என்றான். அவன் தோளைத் தொட்டு உரத்த குரலில் “அப்பெரும்பழியை நான் சூடுவேன் என்று மீண்டும் சொல்லளிக்கிறேன். இன்று அவனை நான் கொல்லாது ஒழிந்தது ஒன்று கருதியே. என்முன் ஒரு முகம் நின்றிருந்தது. என் கை தளரச்செய்தது” என்றான் கர்ணன்.

“ஆனால் எந்நிலையிலும் அவன் தப்ப இயலாத பெரும்பாணம் ஒன்று என்னிடம் உள்ளது. நெடுநாள் வஞ்சம் கரந்த

நஞ்சுகொண்ட நாகாஸ்திரம். அதை நாளை அவன் மேல் செலுத்துவேன். அவனை கொன்று மீள்வேன். ஐயம் வேண்டியதில்லை” என்றான். “அந்நஞ்சை இன்றிரவு என் குருதியில் செலுத்திக்கொள்கிறேன். இன்று என்னிலுள்ள அனைத்தும் அகலும். நான் அந்த நஞ்சால் மட்டுமே செலுத்தப்படுவேன்… ஆம், இவையனைத்திலும் இருந்து விடுபடுவேன்.” துரியோதனன் “ஆனால்” என்றபின் “வேண்டாம். அப்பெரும்பழிக்குப் பின் உன் உளநிலை எப்படி இருக்குமென்று என்னால் எண்ண முடிகிறது. என் பொருட்டு அதை செய்ய வேண்டியதில்லை. இது ஊழ் வழியே செல்க!” என்றான்.

“இல்லை. இது நான் மாறாது எடுத்த முடிவு. என்னை ஆளும் தெய்வத்திற்கு என்னை ஒப்புக்கொடுக்கிறேன். பின் நான் மானுட உணர்வுகளால் ஆற்றல்குன்றியவனாக இருக்கமாட்டேன். என் நச்சம்புக்கு முன் அவனுடைய எந்த அம்பும் நில்லாது. அவனுடைய எந்த சொற்பேறும் அதை தடுக்காது. எண்ணுக! நாளை அவன் வாழ்வை முடிப்பேன்” என்றபின் கர்ணன் திரும்பிச் சென்றான். துரியோதனன் களத்தில் தனித்து நின்றான்.

தன் குடிலின்முன் அர்ஜுனன் சிறு பெட்டி மேல் அமர்ந்து கைகளை மடியில் கோத்து தலைகுனிந்திருந்தான். இரு ஏவலர் மென்மரவுரிச் செண்டால் அவன் உடலிலிருந்த பொடியை வீசி அகற்றினர். மணலால் அவன் கைகளிலிருந்த குருதியை உரசி துடைத்து ஈர மரவுரியால் தூய்மை செய்தனர். தேர் வந்து நின்ற ஒலிகேட்டு அவன் விழிதூக்கி நோக்கினான். இளைய யாதவர் அதிலிருந்து இறங்கி புன்னகையுடன் தன்னை நோக்கி

வருவதைக் கண்டதும் எழுந்து தன் குடிலுக்குள் சென்றுவிட வேண்டுமென்று அவன் எண்ணினான்.

அவன் உடலில் அவ்வசைவு எழக்கண்டதும் மேலும் அகன்ற புன்னகையுடன் அருகணைந்து அப்பாலிருந்த சிறுபெட்டியை இழுத்திட்டு அதில் அமர்ந்து தன் முழங்காலில் கைவைத்து விரல்களைக் கோத்தபடி "இன்னும் துயர் கொண்டிருக்கிறாயா?" என்று இளைய யாதவர் கேட்டார். அர்ஜுனன் விழிதூக்கி "உயிரோடிருத்தலே இழிவென்று தோன்றும் சில தருணங்கள் உண்டு வாழ்வில்" என்றான். "உயிரோடிருத்தல் வீணென்று தோன்றுவதைவிட அது மேல்" என்று இளைய யாதவர் சிரித்தார். "யாதவரே, உங்களுக்கு மெய்யாகவே மானுட குலத்தை பார்த்தால் என்ன தோன்றுகிறது? பயனற்ற இழிபிறவிகள் என்றா? கடலில் பல நூறு காதம் அகலமுள்ள மீன் கூட்டங்களை ஒரே இழுப்பில் வாய்க்குள் இழுத்து விழுங்கிச்செல்லும் மலைபோன்ற மீன் ஒன்றுண்டு என்று மாலுமிகள் சொல்லக் கேட்டிருக்கிறேன்" என்று அர்ஜுனன் சொன்னான்.

"மானுடர் பயனுள்ளவர்கள்தான். தெய்வங்கள் தாங்கள் எண்ணுவன அனைத்தையும் அவர்களைக் கொண்டே இங்கு நிகழ்த்தவேண்டியிருக்கிறது" என்று அதே சிரிப்புடன் இளைய யாதவர் சொன்னார். "எண்ணி நோக்குக! ஒரு சதுரங்கக் காயின் மெய்யான பொருள்தான் என்ன? அந்தக் களத்தில் அது சில மாறாத அடையாளங்களை கொண்டுள்ளது. ஆனால் ஆடலில் ஒவ்வொரு கணமும் அதன் பொருள் மாறிக்கொண்டிருக்கும். ஆடல் முடிவிலாதது எனில் முடிவிலாப் பொருள் கொண்டதல்லவா அதுவும்?" உதடுகளைச் சுழித்து "வெறும்

சதுரங்கக் காய்!” என்று அர்ஜுனன் சொன்னான். “ஆம், அதுதான். பிறிதொன்றுமல்ல” என்று இளைய யாதவர் சொன்னார்.

தலைகுனிந்து சற்று நேரம் இருந்த பின் நிமிர்ந்து நோக்கி அர்ஜுனன் “சில தருணங்களில் உங்கள் மேல் தோன்றும் வெறுப்புக்கு எல்லையே இல்லை” என்றான். “எல்லையற்ற அன்பு கொண்டவர்மேல்தான் அத்தகைய வெறுப்பும் உருவாகும் என்பார்கள்” என்று சொல்லி தலையை தூக்கி உரக்க நகைத்து “மானுடரைப் பற்றி அழுத்தமாக எதைச் சொன்னாலும் அது சரியானதாகவும் தோன்றுவதன் விந்தைதான் என்ன! காவிய ஆசிரியர்கள் அதில்தான் திளைக்கிறார்கள் போலும்” என்றார். “யாதவரே, இன்று நிகழ்ந்ததற்கு என்ன பொருள்? அவ்விழிமகன் கையால் உயிர்பெற்று நான் வாழ வேண்டுமா? இதன் பின் அவனை களத்தில் கொன்றால் நான் அடையும் பெயருக்கு என்ன பொருள்? எப்படி இனி அவனை கைநடுங்காது என்னால் எதிர்கொள்ள முடியுமா?” என்றான்.

“அதற்கென தருணம் வரும்” என்று இளைய யாதவர் சொன்னார். “இல்லை, இனி அவனை களத்தில் எதிர்கொள்ள என்னால் முடியாது. அவன் முன் கை நடுங்காது காண்டீபம் எடுக்க மாட்டேன். அவ்வாறு இனியும் ஒருமுறை அவனிடம் சென்று நின்று தோற்றால் அது சிறுமை. மீண்டும் ஒருமுறை அவனால் உயிர்க்கொடை அளிக்கப்பட்டால் என் குடிக்கும் கொடிவழிக்குமே அது கீழ்மை” என்றான். “கைநடுங்காது முழுவிசையுடன் அவனை கொல்லும் ஆற்றலை உனக்களிக்கும் நிகழ்வுகள் ஒருங்கு கூடுக என்று மட்டுமே இத்தருணத்தில் என்னால் சொல்லக்கூடும்” என்றபின் அவன் தொடையில் கைவைத்து “எண்ணி நோக்குக! எவ்வாறு இது நிகழ்ந்தது?” என்றார்.

அர்ஜுனன் நிமிர்ந்து நோக்க “பாண்டவனே, இந்த மாபெரும் துலாவில் எந்தத் தட்டில் ஒன்றை நீ வைத்தாலும் பிறிதெங்கோ ஒரு தட்டு நிகர் செய்யப்படுகிறது. நீ காண்டவப் பெருங்காட்டை எரித்ததை நினைவுறுகிறாயல்லவா?” என்றார். “ஆம், இன்று களத்தில் அதைத்தான் எண்ணிக்கொண்டிருந்தேன். உண்மையில் களத்தில் அங்கன் எழுந்த நாள் முதல் மற்றொன்றையும் எண்ணவில்லை” என்று அர்ஜுனன் சொன்னான். “ஒரு தட்சன் எஞ்சினான். அவனையும் கொன்றொழிக்கும்படி உன்னிடம் கூறினேன். உன் அறம் அதை தடுத்தது. நீ அவனுக்கு உயிர்க்கொடை அளித்தாய்” என்றார். “ஆம்” என்று அர்ஜுனன் குழப்பத்துடன் சொன்னான். “அந்த உயிர்க்கொடையையே இன்று அங்கன் உனக்கு திருப்பியளித்திருக்கிறான். அளித்தது அவனல்ல, அவன் ஆவநாழியில் அம்பின் வடிவில் உறங்கும் அந்த இளம்தட்சனே” என்றார் இளைய யாதவர்.

திகைப்புடன் சற்று நேரம் பார்த்த அர்ஜுனன் “ஆனால் அதை நான் பேரளியுடன் அளித்தேன்” என்றான். யாதவர் உரக்க நகைத்து “அந்த அளிக்கு என்ன பொருள்? அவன் குலத்தை முற்றழித்து அவன் உடலை பாதி வேகச் செய்து உயிரளித்துவிடுவது எவ்வகையில் அளிகொண்ட செயல்? அதற்கு நிகரானது இன்று உன் ஆணவத்தை முற்றழித்து பல்லாயிரம் விழிகள் முன் உன்னை சிறு உயிரென்றாக்கி அந்த தட்சன் உனக்கு அளித்த உயிர்க்கொடை. நீங்கள் இருவரும் உளம்கனிந்து அதை செய்தீர்கள். ஆனால் விளைவுகள் ஒன்றே. அளித்ததை பெற்றுவிட்டாய். இனி களத்தில் உனக்கு கடன் ஏதுமில்லை” என்றார் இளைய யாதவர்.

அர்ஜுனன் “எனக்கு புரியவில்லை” என்றான். அவன் தொடையைத் தட்டியபின் எழுந்துகொண்ட யாதவர் “பாண்டவனே, நீ அவனுக்கு அளித்த உயிர்க்கொடையை இளந்தட்சன் இப்போது திருப்பி அளித்திருக்கிறான். ஏனெனில் இனி அவன் அதன்பொருட்டு உன்னிடம் கருணை காட்ட வேண்டியதில்லை. உன்னை துரத்தி திசையெல்லை வரை கொண்டு சென்று வஞ்சம் தீர்க்கலாம். உன் குலக்கொடியின் கருபுகுந்து கொடிவழியினரை அழிக்கலாம். உன் தலைமுறைகளில் நஞ்சென்றும் பழியென்றும் குடிகொள்ளலாம். அவனுக்கு இப்போது தடைகளில்லை” என்றார்.

அர்ஜுனன் திகைத்த விழிகளுடன் நோக்கி அமர்ந்திருந்தான். “அவ்வண்ணமே உனக்கும் இனி தடையில்லை என்றாகுக! அதற்கென தருணம் அமைக!” என்றபின் இளைய யாதவர் திரும்பிச்சென்று தன் தேரிலேறிக்கொண்டார்.

# கார்கடல் - 37

அஸ்வத்தாமன் அவை நிறைந்துகொண்டிருப்பதை பார்த்தபடி அறிவிப்புமேடை அருகே நின்றான். அவையினர் கலைந்த பேச்சொலிகளுடன், தயக்கமான உடலசைவுகளுடன் இருந்தார்கள். கிருபரும் சுபலரும் பேசியபடி வந்தமர்ந்தனர். சகுனி தனியாக வந்து தன் பீடத்திலமர்ந்து அலுப்புடன் விழிகளை மூடிக்கொண்டார். அவர் அருகே வந்து குனிந்து ஏதோ கேட்ட மைந்தன் உலூகனிடம் சலிப்புடன் ஏதோ சொல்லி கையசைத்தார். அவன் வணங்கி விலகி அப்பால்

அமர்ந்தான். ஜயத்ரதனும் பூரிசிரவஸும் வந்தனர். பூரிசிரவஸ் அஸ்வத்தாமனின் அருகே வந்து தலைவணங்கினான்.

அஸ்வத்தாமன் அவையை ஒருமுறை நோக்கிவிட்டு பூரிசிரவஸிடம் “அங்கர் வரவில்லையா?” என்றான். துர்மதன் “களத்திலிருந்து அவர் நேரடியாகவே தன் குடிலுக்கு சென்றுவிட்டார். அவரைத் தொடர்ந்துசென்று பார்த்துவரச் சொல்லி துச்சகனை அனுப்பினேன். அவன் திரும்பி வந்து அவர் வரப்போவதில்லை என்று சொன்னான்” என்றான். பூரிசிரவஸ் “அவருக்கும் அரசருக்கும் இன்று களம்முடிந்து திரும்புகையில் சிறுபூசல் நிகழ்ந்தது என்றார்கள்” என்றான். அஸ்வத்தாமன் ஆர்வமில்லாமல் “ஆம், அதைப்பற்றி இங்கு அனைவருக்குமே தெரிந்திருக்கிறது” என்றான். பூரிசிரவஸ் “நான் அதை கேட்டபோது வியப்படைந்தேன்” என்றான்.

அஸ்வத்தாமன் சற்றுத் தயங்கி “அவர் செய்ததை என்னால் புரிந்துகொள்ள இயல்கிறது. இன்று களத்தில் எழுந்த அர்ஜுனன் மிகவும் களைத்திருந்தான். அவனால் காண்டீபத்தை ஏந்தவே முடியவில்லை” என்றான். “ஆனால் இன்று அவர் சம்சப்தர்களை கொன்றார். பகதத்தர் அவரால் களம்பட்டார்” என்றான் பூரிசிரவஸ். “அவர்கள் அர்ஜுனனுக்கு எதிரீடே அல்ல. அவனுடைய மெய்யான எதிரிகள் இன்று அங்கரும் தந்தையும்தான். அவர்கள்முன் அவன் நின்றுபொருதியிருக்க இயலாது. அங்கர் மட்டுமல்ல தந்தையும்கூட அவனை விட்டுவிலகியே சென்றார்” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “ஆம், அதையும் சொன்னார்கள்” என்று சொன்ன பூரிசிரவஸ் “தங்கள் தந்தையும் இன்னும் அவை புகவில்லை” என்றான். “அவரிடம் பேசினேன். அவரும் உளம் சோர்ந்திருக்கிறார்” என்றான்.

வெளியே வாழ்த்தொலி கேட்டது. சல்யரும் துரோணரும் ஒருசொல்லும் பேசாமல் உள்ளே வந்தனர். அவையிலிருந்தோர் எழுந்து வாழ்த்தினர். துரோணர் தன் பீடத்திலமர்ந்ததும் சல்யர் அஸ்வத்தாமனின் அருகே வந்து "அவைபுக தனக்கு எண்ணமில்லை என்றார். அவர் வந்தாகவேண்டும் என்று கூட்டிவந்தேன்" என்றார். "நன்று, அவரும் இல்லையேல் இதை அவையென்றே சொல்ல முடியாது" என்றான் அஸ்வத்தாமன். வெளியே வாழ்த்தொலிகளும் கொம்போசையும் கேட்டன. உள்ளிருந்தவர்கள் பேச்சை நிறுத்தி எழுந்து நின்றார்கள். துச்சாதனன் உள்ளே வந்து தலைவணங்கி அரசர் வருவதை அறிவித்தான். தொடர்ந்து துச்சலனும் துச்சகனும் இருபுறமும் வர துரியோதனன் அவைநுழைந்தான். சுபாகு அவனுக்குப் பின்னால் வந்தான்.

கைதொழுதபடி தன் பீடத்தில் அமர்ந்த துரியோதனனின் அருகே சென்று குனிந்த துச்சாதனன் கர்ணன் வரவில்லை என்பதை அறிவித்தான். அவர்கள் பேசிக்கொள்வதை அவை செவிகூர்ந்து நோக்கியிருந்தது. துரியோதனன் தலையசைத்து அவை நிகழலாமென கைகாட்டினான். ஓர் அவையிலுள்ள பொதுவான உணர்வு அனைவரையும் அழுத்தி மூடுவதன் விந்தையை அஸ்வத்தாமன் எண்ணிக்கொண்டான். பூரிசிரவஸ் "தொடங்கிவிடலாமே" என்றான். அஸ்வத்தாமன் முறையாக அவையறிவிப்பு செய்து "இன்று நாம் பெருவீரர்கள் சிலரை இழந்துவிட்டு அமர்ந்திருக்கிறோம். பகதத்தரும் சம்சப்தர்களும் நம் படையை தாங்கியிருந்தவர்கள். அவர்களின் மறைவு நமக்கு இழப்பு. நாளை போருக்கெழுகையில் அதை அனைவரும் உணர்வோம்" என்றான். இடைபுகுந்த துரியோதனன் "நிகழவிருப்பதைப்பற்றி பேசுவோம்" என்றான்.

அஸ்வத்தாமன் “ஆம், நான் நமது படைசூழ்கைபற்றி பேசவிருக்கிறேன்” என்றான்.

அஸ்வத்தாமன் மேலும் பேசுவதற்குள் பால்ஹிகனாகிய சலன் எழுந்து “நான் முதலில் கேட்க விரும்புவது ஒன்றுண்டு, இங்குள்ள அனைவரும் அதையே கேட்க விழைகிறார்கள். அதை பேசிவிட்டு நாம் மேலும் திட்டங்களிடுவோம்” என்றான். அவன் கேட்கவிருப்பதை உணர்ந்து அவை நிமிர்ந்தமைந்தது. சலன் உரக்க “இன்று இளைய பாண்டவரை நம் ஆசிரியரும் அங்கரும் மிக எளிதாக வென்றிருக்க முடியும். அவர்கள் இருவருமே அவரை ஒழிந்து விலகியதை நாம் அனைவருமே அறிவோம்” என்றான். துரியோதனன் எரிச்சலுடன் ஊடே புகுந்து “அதை பின்னர் பேசுவோம்” என்றான். “அதை பேசியபின் பிறவற்றை பேசினால் போதும்” என்று சோமதத்தர் உரத்த குரலில் சொன்னார். அவையினர் அதை எற்று முழக்கமாக ஒலித்தனர்.

துரியோதனன் சினத்துடன் சொல்லெடுக்க முயல சகுனி கைகாட்டி அவனை தடுத்தார். சலனை நோக்கி “சொல்க!” என்றார். சலன் “நான் கேட்பது அரசகுடியினர் அனைவரும் எண்ணும் வினாவே. இங்கே அறங்களை நோக்காது பொருதவேண்டியது நாங்கள் மட்டும்தானா? இந்தப் போரில் நாங்கள் எவரும் குருதி நோக்கவில்லை. சிபிநாட்டினர் பால்ஹிகர்களின் குருதியினர். ஆனால் அவர்கள் அங்கே எங்களுக்கு எதிராக நின்றிருக்கிறார்கள். என் கைகளால் நான் சைப்யர் பலரை கொன்றேன். இதோ மத்ரர் இருக்கிறார். அவருடைய தங்கை மைந்தர்கள் பாண்டவர்கள். அவர் நீக்கில்லாத விசையுடன்தான் அவர்களை தாக்கிக்கொண்டிருக்கிறார். நாங்கள் உடன்குருதியினரை

கொல்ல எழும்போது நெறி நோக்கவில்லை. நாளை குடிப்பழி சேருமென்று அஞ்சவுமில்லை. ஆனால் ஆசிரியரும் அங்கரும் தங்களுக்கு பழிசேருமென்று அஞ்சினார்கள்" என்றான். அவையின் ஏற்பொலி சொல்லில்லா ஒலியலையாக எழுந்தது.

அவையை சூழ நோக்கி மேலும் உளவிசை பெற்று சலன் சொன்னான் "அங்கர் துணைவராது போனமையால்தான் பிரக்ஜ்யோதிஷத்தின் பகதத்தர் கொல்லப்பட்டார்." துரோணரை நோக்கியபடி "அவரை காக்க நமது படைகள் சென்றன. ஆனால் ஆசிரியரும் அங்கரும் அங்கே செல்லவில்லை. நான் கேட்பது ஒன்றே. அவர்கள் அர்ஜுனனை தாக்கவேண்டும் என அரசாணை விடப்பட்டதா? அவர்கள் அதை ஆற்றாது ஒழிந்தார்களா?" என்றான். அவன் நீட்டிய கையுடன் நிற்க, அவை சொல்லில்லாது காக்க, சிலகணங்களுக்குப் பின் துரியோதனன் "ஆம், அரசாணை விடப்பட்டது" என்றான். "அது மீறப்பட்டதா?" என்று சலன் கேட்டான். "ஆம், ஆனால் நாளை அர்ஜுனனை கொல்லவிருப்பதாக அங்கர் சொன்னார்" என்றான் துரியோதனன்.

"நாளை கொல்லவிருப்பவர் இன்று ஏன் ஒழிந்தார்?" என்றான் சலன். "நான் கேட்கவிருப்பது அது மட்டுமே. ஏன் இன்று அவர் அர்ஜுனரை செல்லவிட்டார்? நெறிநோக்கி என்றீர்கள் என்றால் நாங்கள் மட்டும் ஏன் நெறிமீறவேண்டும்?" அஸ்வத்தாமன் "இன்று அர்ஜுனனின் உடல்நலம் குன்றியிருந்ததை நாம் அறிவோம்" என்றான். "அதைத்தான் நான் கேட்கிறேன். உடல்நலம் குன்றியவரைக் கொன்ற பழியை அங்கர் அஞ்சுகிறார். பழியஞ்சாது போரிடும் கடமை எங்களுக்கு மட்டும்தானா?" என்றான் சலன். அவையினர் எழுந்து நின்று கைநீட்டி கூச்சலிடத் தொடங்கினர். துரியோதனன் சீற்றதுடன்

“இந்த அவையில் நாம் பூசலிடவா அமர்ந்திருக்கிறோம்?” என்றான். “நான் பூசலிடவில்லை. என் வினாவுக்கான விடை எழட்டும்” என்றான் சலன்.

அவையிலிருந்த அரசர்கள் “ஆம்! அதை அங்கரோ ஆசிரியரோ சொல்லட்டும்” என்று கூவினர். “எங்கள் இளமைந்தர் கொல்லப்பட்டனர். எந்த நெறிகளுக்கும் அடங்காமல் இங்கே கொலை நடந்தது” என்று சலன் கூவினான். துரோணர் எழுந்து கைகூப்பியபோது அவை மெல்ல அடங்கியது. துரோணர் கைகூப்பியபடி அவையில் இறுதி அரசனும் அமரும்வரை காத்துநின்றார். “நான் ஒப்புக்கொள்கிறேன், என்னால் இயலவில்லை” என்றார் துரோணர். “நேற்று இந்த அவையில் நான் வஞ்சினம் உரைத்தேன், எல்லா அறங்களையும் கைவிட்டு நான் போரிடுவேன் என்று. ஆனால் என் முன் என் முதன்மை மாணவன் நடுங்கும் கைகளுடன் வந்து நின்றிருந்தபோது என்னால் போரிட இயலவில்லை.” அவருடைய கூப்பிய கைகள் நடுங்கின. “அதை நெறி என பெருமைகொள்ளவில்லை. எனக்கு அது சிறப்பென எண்ணவுமில்லை. என்னால் இயலவில்லை. என் உள்ளம் பின்னடைந்தது. என் கைகள் தளர்ந்தன.”

“இந்த அவையில் நான் இனி நெறிநோக்குவதில்லை என்று சொன்னபோது ஏதோ தெய்வம் என்னருகே நின்றிருக்கிறது. அது என் சொல்லை அறைகூவல் என கொண்டிருக்கிறது” என்றார் துரோணர். “அதன்முன் முற்றாகவே தோற்றேன். எச்சமின்றி திரும்பி வந்திருக்கிறேன். என்னால் என் முதன்மை மாணவனை கொல்ல முடியாது. அவன் உடல்நலிந்து நடுங்கும் வில்லுடன் எதிரே நின்றபோது என்னை தந்தையென்றும் ஆசிரியர் என்றும் மட்டுமே உணர்ந்தேன்.” அவருடைய

கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. உதடுகளை இறுக்கியபடி நின்றபின் மெல்ல மீண்டும் பீடத்தில் அமர்ந்தார்.

அவையினர் அவ்வுணர்வால் ஆட்பட்டு அமைதியாக இருக்க சலன் எழுந்து ஏளனத்துடன் “நன்று, ஆசிரியர் தெளிவாகவே சொல்லிவிட்டார். அரசனுக்களித்த சொல், வீரனின் கடமை அனைத்தையும்விட பெரிது அவருக்கு தன் மாணவன் மேல் உள்ள பற்று என்று. இனி அவரிடம் பேசுவதில் பயனில்லை. இனி அறியவேண்டியது ஒன்றே. அங்கர் என்ன செய்யப்போகிறார்? இன்று அவருடைய கைகள் தயங்கின, நாளை எழும் என்பதற்கு என்ன உறுதிப்பாடு?” என்றான். துரியோதனன் “நான் அவ்வுறுதியை அளிக்கிறேன். நாளை போரில் அவர் அர்ஜுனனை கொல்வார்” என்றான். அவையிலிருந்து ஏளன ஒலிகள் எழுந்தன. சலன் “உங்கள் சொல் மீறப்பட்டதைப்பற்றித்தான் பேசவே தொடங்கினோம். வெற்றிக்காக உடன்குருதியினரைக் கொன்ற இழிமக்களாகிய ஷத்ரியர்களுக்கு நெறிநின்று விண்ணுலகை நாடும் சூதர்மைந்தர் நேரில் வந்து என்ன மறுமொழி சொல்லவிருக்கிறார்?” என்றான்.

சகுனி எழுந்து கையமர்த்தி “நாம் இனி இதை பேசுவதில் பொருளில்லை” என்றார். சலன் மேலும் ஏதோ சொல்ல முனைய “அமர்க!” என்றார் சகுனி. அந்த ஆணைக்கு கட்டுப்பட்டவர்களாக அவையினர் அமைந்தனர். போர்க்களத்தில் ஒலித்துக்கொண்டே இருந்த அவருடைய ஆணைகளுக்குக் கட்டுப்பட்ட அறியாப் பழக்கமே அது என அஸ்வத்தாமன் எண்ணினான். சகுனி “நாம் நாளைக்கான படைசூழ்கையை வகுக்கும்பொருட்டு இங்கே வந்துள்ளோம். அது நிகழ்க!” என்றார். துரியோதனன் “ஆம், அதை அஸ்வத்தாமர்

அறிவிக்கட்டும்” என்றான். அஸ்வத்தாமன் அவை நோக்கி திரும்பியபோது துரோணர் நடுங்கும் உடலுடன் எழுந்து நிற்பதை கண்டான். அவர் நோயுற்றவர் போலிருந்தார். முகம் வெளிர்த்து உதடுகள் நடுங்கிக்கொண்டிருந்தன. “நான் ஒன்று சொல்லவேண்டும்…” என்றார்.

“நீங்கள் நலம் குன்றியிருக்கிறீர்கள் ஆசிரியரே, அமர்க! ஓய்வெடுங்கள். நாளை பேசுவோம்” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “இல்லை, இந்த அவைக்கு இப்போதே இதை நான் சொல்லியாகவேண்டும்” என்று துரோணர் சொன்னார். “இதை சொன்னாலொழிய என்னால் துயில்கொள்ள இயலாது.” அஸ்வத்தாமன் நிலையழிந்து சுற்றிலும் நோக்கினான். “அவையோரே, நேற்று சம்சப்தர்கள் தங்கள் குடிவழக்கப்படி குலதெய்வங்களின் முன் ஒரு வஞ்சினம் உரைத்துவிட்டு களம்புகுந்தனர், அர்ஜுனனை கொல்லாமல் உயிருடன் களம் மீள்வதில்லை என்று.” அவர் மூச்சிளைத்தார். அவர் சொல்லப்போவதென்ன என்று உணர்ந்து அஸ்வத்தாமன் “தந்தையே…” என அழைக்க அவனை கையமர்த்திவிட்டு துரோணர் சொன்னார்.

“நான் இந்த அவையில் அவ்வஞ்சினத்தை உரைக்கிறேன். நாளை நான் அர்ஜுனனை கொல்லும்பொருட்டே போர்புரிவேன். பாண்டவர் ஐவரையும் கொல்லவே முயல்வேன். பாண்டவ மைந்தரும் என் இலக்கே. என் போர் அக்கொலைகளின் பொருட்டு மட்டுமே.” அவருடைய முதிய குரல் நடுக்குடன் ஓங்கியது. “நாளை களத்திலிருந்து மீள்கையில் பாண்டவர்களோ அவர்களின் மைந்தர்களோ என்னால் கொல்லப்பட்டிருப்பார்கள். என் கையில் பாண்டவக் குருதி படியாமல் களம் மீளமாட்டேன். அவ்வாறு நிகழாவிட்டால்

அந்திமுரசு ஒலிக்கும் கணம் என் அம்பால் கழுத்தறுத்து உயிர்விடுவேன். இது என் மூதாதையர் மேல் ஆணை. ஆசிரியர்கள் மேலும், குடித்தெய்வங்கள் மேலும் ஆணை!"

அவ்வஞ்சினம் அவையை திகைக்கச் செய்தது. ஒவ்வொருவரும் நடுக்கு கொண்டனர். சல்யர் கைகளைத் தூக்கி "என்ன இது, ஆசிரியரே!" என்றார். சொல்லி முடித்ததுமே அவ்வுணர்வினூடாக பிறிதொருவராக மாறிய துரோணர் கையைக் காட்டி அவர்களை அடக்கிவிட்டு எழுந்து தன் சால்வையை தோளிலிட்டு அவையை நோக்கி திரும்பி வணங்கிவிட்டு வெளியே சென்றார். அவர் சென்று மறையும் காலடி ஓசை அணையும்வரை அவை திகைத்து அமர்ந்திருந்தது. துரியோதனன் பெருமூச்செறிந்து "அதுவும் நன்றே" என்று மீண்டும் பேச்சை தொடங்கினான். "அவ்வஞ்சினம் நம் அனைவருக்கும் உரியதாகுக! நாளை பாண்டவர்களில் ஒருவர் களம்படுவாரெனில் போர்முடிகிறது. அதற்கு மேல் அவர்களால் எழ இயலாது" என்றான்.

அஸ்வத்தாமன் தளர்ந்து நின்றான். "சொல்க!" என்றான் துரியோதனன். அஸ்வத்தாமனின் குரல் மேலெழவில்லை. துரியோதனன் "ஒன்று நான் உரைக்கிறேன் உத்தரபாஞ்சாலரே, நாளை போரில் என் சொல்லுக்குக் கட்டுப்பட்டு அங்கர் களம்நிற்பார். அர்ஜுனனுக்கு எதிராக அவருடைய எதிரில்லா அம்பு எழும். ஐயமே தேவையில்லை, நாளை பாண்டவர்களில் ஒருவரேனும் களம்படுவார். ஆசிரியருக்கு போர்க்களத்தில் எந்தச் சிறுமையும் நிகழாது. வெற்றியுடன் அவர் களத்திலிருந்து திரும்பி வருவார். இது என் சொல்" என்றான். அஸ்வத்தாமன் பெருமூச்சுவிட்டு மெல்ல மீண்டான். "எந்தை

உளம்குலைந்திருக்கிறார். இப்படி அவரை பார்த்ததே இல்லை” என்றான்.

“நாம் நாளை நிகழ்த்தவிருப்பது நேர்ப்போர் அல்ல. பாண்டவர்களில் ஒருவரையேனும் கொல்வதே நமது இலக்கு. யானையின் துதிக்கையில் புண்படுவது போன்றது அது. அவர்கள் உளம்தளர்ந்தாகவேண்டும். நம்பிக்கையிழந்தாகவேண்டும்” என்று துரியோதனன் சொன்னான். ஜயத்ரதன் “நமது இலக்கு அர்ஜுனன். அவன் இருக்கும் நிலையில் அது இயல்வதே என்று தோன்றுகிறது” என்றான். அஸ்வத்தாமன் “தந்தை தன் எல்லையை தானே மீறும்பொருட்டு இந்த அறைகூவலை தனக்கென விடுத்திருக்கிறார்” என்றான். துரியோதனன் “ஒவ்வொருநாளும் போரில் நாம் நம் எல்லைகளை கடக்கிறோம்” என்றான். அஸ்வத்தாமன் “தந்தையால் அதற்கு இன்றுவரை இயன்றதில்லை” என்றான்.

“நாம் நாளை பாண்டவர்களில் ஒருவரை கொல்லவிருக்கிறோம். அதை அறுதியாக முடிவுசெய்வோம். மேலே செல்க” என்று சகுனி உரத்த குரலில் சொல்ல அஸ்வத்தாமன் “அதற்கு மிக உகந்தது நான் வகுத்துள்ள இந்தப் படைசூழ்கை” என்றான். அஸ்வத்தாமன் “இது தாமரைச்சூழ்கை. நூற்றெட்டு இதழ்கள் கொண்ட மாமலராக இதை வடித்திருக்கிறேன். ஒவ்வொரு இதழும் ஒரு படைப்பிரிவு. அவையனைத்தும் மலரின் அடியில் அமைந்த புல்லிவட்டத்தால் ஒன்றென இணைக்கப்பட்டுள்ளன. பிற எங்கும் அவற்றுக்கிடையே இணைப்பில்லை. தங்கள் தன்விழைவுப்படி இயங்குபவை அவை. அவற்றை ஒன்றென செயல்படுத்தும் ஆணைகள் அனைத்தும் அந்தப்

புல்லிமையத்திலிருந்தே எழ வேண்டும். அங்கு வழக்கம்போல காந்தாரர் நிலைகொள்ளட்டும்” என்றான்.

“அனைத்து இதழ்களும் ஆற்றலால் நிகரானவை. பெருவீரர்களால் ஆன இதழ்கள் உள்ளே அமைக எண்ணிக்கையில் அவர்களின் படை சிறியது. வெளியே எண்ணிக்கை மிகுந்த காலாள்படைகள் அமையட்டும். அவை ஒன்றன்மேல் ஒன்றெனப் படிந்து பொதியக்கூடியவை” என்று அஸ்வத்தாமன் தொடர்ந்து சொன்னான். தோற்சுருளை சுபாகுவிடம் அளிக்க அவன் அதை விரித்து கையால் நீவி கூர்ந்து நோக்கினான். “அரசே, தாமரை மலர் வண்டை ஈர்த்து இதழ்களால் கவ்விப்பொதிந்து சிறைபிடிக்கும் பொறி. மலர்ப்பொறி என அதை கவிஞர் பாடுகிறார்கள். எதிரியின் முதன்மை வீரனையோ அவன் படையையோ தனித்துக் கவ்வி எடுப்பதுபோன்றது” என்றான் அஸ்வத்தாமன். சுபலர் “சகடச்சூழ்கையின் இன்னொரு வடிவமா?” என்றார். “சகடச்சூழ்கை ஒரு வாயிலும் வெளிவரமுடியாது சுழற்றி மயக்கும் ஊடுவழிப் பின்னல் கொண்டது. அது கோட்டைக்காவலுக்குரியது. இது வட்டமல்ல. இதழ்களின் அடுக்கு வட்டமாக அமையலாம். ஆனால் ஒவ்வொரு இதழும் இணைந்தும் விலகியும் நீண்டும் குவிந்தும் போரிடலாம்” என்றான் அஸ்வத்தாமன்.

“கரபுஷ்பம் என இன்னொரு படைசூழ்கை உண்டு” என அஸ்வத்தாமன் தொடர்ந்தான். “ஐந்து படைகளால் ஆனது. ஐந்து விரல்களைப்போல அது குவிந்துசென்று மலர்கொய்வதுபோல் எதிரியின் முதன்மைப் படைவீரனை கவ்வி கொண்டுவரும். அதையே நான் முதலில் எண்ணினேன். ஆனால் நம்மிடமிருக்கும் மாவீரர்களின் எண்ணிக்கையை

நோக்கியபோது இந்த தாமரைச்சூழ்கையே உகந்தது என்று பட்டது.” சுபாகு படைசூழ்கையை பார்த்துவிட்டு துரியோதனனிடம் தோற்சுருளை அளித்தான். துரியோதனன் அதை கையில் வாங்கி முகவாயை வருடியபடி கூர்ந்து பார்த்தான். “அரசே, தேன் நாடி வண்டுகள் தாமரைக்குள் வருகின்றன. மையத்திலுள்ள மகரந்தத் தாள்களுக்கு அடியில் வந்தாலொழிய அவற்றால் தேனருந்த இயலாது. அங்கிருந்து அவை எளிதில் பறந்தெழ இயலாமல் தேனும் பூம்பொடியும் தடுக்கும். இதழ்கள் ஒன்றுடன் ஒன்றுகூடி குவிந்து வண்டை சிறைப்படுத்தும். நாம் வகுக்கும் சூழ்கையில் அர்ஜுனன் அல்லது பீமன் விழ வேண்டும்.”

அவை அஸ்வத்தாமன் சொல்வதை கூர்ந்து கேட்டிருந்தது. “நாளை ஒருவேளை அர்ஜுனன் களத்திலெழுந்தால் அவர்களுக்கிருக்கும் ஒரே இலக்கு அங்கநாட்டரசராகவே இருக்க இயலும். ஏனெனில் இன்று அர்ஜுனன் அங்கரின் அம்புகளுக்கு முன் நிலையழிந்து களம்பட்டு உயிர் மீண்டு வந்திருக்கிறான். பாண்டவப் படைகள் அர்ஜுனனை நம்பியே இதுகாறும் போரிட்டுள்ளன. பீஷ்மரை வென்ற பெருவீரனெனும் ஒளியுடன் அவன் இதுவரை களம் புகுந்திருக்கிறான். இன்று அவன் களத்தில் வீழ்ந்தமையால் பாண்டவப் படையின் நம்பிக்கை குறைந்திருக்கும். அந்நம்பிக்கையை மீட்டெடுப்பதே அவர்களுக்கு இப்போது முதன்மை அறைகூவல். ஆகவே முழு விசையையும் திரட்டி அங்கநாட்டரசரை அறைந்து ஒருமுறையேனும் பின்னடையச் செய்யாமல் நாளைய போரை அவர்கள் முடிக்க இயலாது. அர்ஜுனன் எழாவிட்டால் பீமன் அந்த அறைகூவலை ஏற்றாகவேண்டும். அங்கரே நமது பொறியின் மையம்” என்று அஸ்வத்தாமன் சொன்னான்.

“நமது படைசூழ்கை களத்திலெழுந்த பின் சற்று நேரத்தில் தாமரையின் இதழ்கள் விரிந்து விரிந்து அகல துணையேதுமின்றி களம் நடுவே அங்கர் நிற்பார். அவருடைய பொற்தேர் தாமரையின் மகரந்தபீடம் எனத் துலங்கும். அதை நோக்கி அக்கருவண்டு நாணொலி ரீங்கரிக்க வந்து சேரும். நாம் சூழ்ந்து கவ்வி அவனை சிறைப்படுத்துவோம். களத்தில் அவனை கொன்று வீழ்த்துவோம்” என்றான் அஸ்வத்தாமன். அவையெங்கும் பெருமூச்சுகள் எழுந்தன. “ஒருவேளை நாளை அர்ஜுனன் களமெழவில்லையென்றால் பீமனை வீழ்த்துவோம்” என்று அஸ்வத்தாமன் மேலும் உரக்கச் சொன்னான். சல்யர் “அர்ஜுனன் மருத்துவநிலையில் கிடக்க பீமனும் களத்தில் வீழ்ந்தானெனில் நாளையுடன் போர் முடிகிறது” என்றார்.

பூரிசிரவஸ் “நாளை அவர்கள் கைமலர் சூழ்கையை அமைக்கக்கூடும்” என்றான். “ஏன்?” என்றான் துரியோதனன். பூரிசிரவஸ் “ஏனென்றால் அஸ்வத்தாமரின் உள்ளத்தில் முதலாவதாக அதுவே எழுந்தது. நம் உள்ளங்கள் அணுக்கமானவை. போரில் ஒருவரை ஒருவர் நோக்கி, ஒவ்வொரு எண்ணமும் சொல்லும் கருதி, கலந்து போரிட்டு ஒருவராகவே ஆகிவிட்டிருக்கிறோம்” என்றான். துரியோதனன் சிலகணங்களுக்குப் பின் “ஆம், அங்கே சூழ்கை அமைப்பவர் தட்சிணபாஞ்சாலர். இவரும் அவரும் ஒருவரை ஒருவர் நாளும் எண்ணி தவம்செய்பவர்கள்” என்றான். அஸ்வத்தாமன் அப்பேச்சை விழையாமல் “அவ்வாறு நிகழலாம். மலர்சூழ்கையை வெல்ல முதன்மை வடிவம் கைமலர்சூழ்கையே. மலர்கொய்ய வரும் கையை சூழ்ந்து கவ்விக்கொள்வோம். தொடும் விரலை வெட்டி எடுப்போம். மென்மலர் இதழ்களின் கூர்மையென்ன என அவர்கள் அறிக” என்றான்.

“ஆம், இதை நிகழ்த்துவோம்! இது நிகழும்!” என்று ஜயத்ரதன் சொன்னான். “உள்ளே சிக்கிக்கொண்டவர் முழு உயிர்விசையுடனும் போரிட வாய்ப்புள்ளது” என்று சுபலர் சொன்னார். “சிக்கிவிட்டோம் என உணர்ந்த கணமே படைசூழ்கையின் ஏதேனும் ஒரு பகுதியை உடைத்துக்கொண்டு வெளிவருவதே அவர் எவராயினும் செய்யக்கூடுவது. ஆனால் தாமரைச் சூழ்கையின் இதழ்களை உடைப்பது இயல்வதே அல்ல. அதன் ஒவ்வொரு படைப்பிரிவுக்கு மேலும் பிறிதொரு படைப்பிரிவு வந்து அமைந்துள்ளது. எந்தப் பக்கத்தை தாக்கினாலும் எப்படியும் ஏழு படைப்பிரிவுகளை வென்று மறுபக்கம் செல்லவேண்டும். அதற்குள் நாம் அவரை வென்றுவிடமுடியும்” என்று அஸ்வத்தாமன் அவருக்கு விளக்கம் அளித்தான்.

“மெய்யாகவே எனக்குத் தெரியவில்லை” என தோற்சுருளை நோக்கியபடி துரியோதனன் கேட்டான் “தாமரைச்சூழ்கையை உடைப்பது எப்படி?” அஸ்வத்தாமன் “அரசே, படைசூழ்கைக் கலையை கற்றவர்கள் அறிவார்கள், தாமரைச்சூழ்கையிலிருந்து வெளிவர இரண்டு வழிகளே உள்ளன. ஒன்று, அதன் கூம்பு முனையின் மையப்புள்ளியை மிகச் சரியாக அறிந்து அங்கே தாக்குவது. அதை முட்டித்திறந்து வெளிவர முடியும். அந்த முனையில் மட்டும் தாமரை சூழ்கை ஆற்றலற்றது. அதைவிட எளிய பிறிதொரு வழி உண்டு. அதன் புல்லிவட்டம் எப்போதும் அனைத்து இதழ்களும் ஒன்றிணைந்ததாக இருக்கும். அங்கு முதன்மை படைக்கலன்களோ அன்றி பெருவீரர்களோ இருக்க வாய்ப்பில்லை. அங்கே படைகள் ஒற்றை உருவென்று திரள்வதும் அரிது. அங்கு சென்று தாக்குவோன் அவ்வழியினூடாக பின்புறம் சென்று அனைத்துப் படைகளையும் வட்டமிட்டு வளைத்து தன் படைகளுக்கு

திரும்பிவிடமுடியும். தாமரைச்சூழ்கையின் அனைத்துப் படைகளும் தங்கள் பெருவீரர்களை அப்போது உள்பக்கமாக திருப்பியிருப்பதனால் எந்தப் படையும் அதனை எளிதில் தடுத்துவிட முடியாது" என்றான் அஸ்வத்தாமன்.

"அர்ஜுனனுக்கு இப்படைசூழ்கை நன்கு தெரிந்திருக்கும்" என்றான் ஜயத்ரதன். "வாய்ப்புள்ளது. ஆனால் அவன் என்ன செய்யமுடியுமென்பதை நாம் முன்னரே அறிந்திருப்பதனால் அதையும் தடுத்துவிடமுடியும். தாமரைச்சூழ்கையின் சிறப்பியல்பே உள்ளே சிக்கிக்கொண்ட ஒரு வீரனை குவியும் இதழ்களென எழுந்து நூற்றெட்டு படைப்பிரிவுகளும் ஒன்றாகச் சேர்ந்து அழுத்துவதுதான். அரசே, ஒருவனைச் சூழ்ந்து கௌரவப் பெரும்படையும் அனைத்து மாவீரர்களும் வில்லுடன் நிலைகொள்வார்கள். அவன் எவ்வகையிலும் தப்ப இயலாது" என்றான் அஸ்வத்தாமன்.

துரியோதனன் "இப்படைசூழ்கையை அவை ஏற்கிறதா?" என்றான். கிருபர் "என் சொல் ஒன்று எஞ்சியிருக்கட்டும். நான் இதை சொல்லியாகவேண்டும். இங்கே துரோணர் இல்லாமையால் அவருடைய அகக்குரலென நான் பேசுகிறேன்" என்றார். "அரசே, அவையோரே, போர் என்பது எல்லா வழிகளிலும் நிகழ்வது. ஆனால் ஒருவனை பொறிவைத்து சூழ்கை அமைப்பது எவ்வகையிலும் உகந்தது அல்ல. அஸ்தினபுரிக்கு பெருமைசேர்ப்பதும் அல்ல." அவையினர் எவரும் மறுமொழி சொல்லவில்லை. துரியோதனன் "இனி வெற்றி ஒன்றே எனக்கு பெருமைசேர்ப்பது, ஆசிரியரே" என்றான்.

பின்னர் அவையை நோக்கி "மறுசொல் உள்ளதா? அரசர்கள் எவரேனும் எதிர் சொல்கிறீர்களா?" என்றான். அவை

அமைதியாக இருந்தது. “எனில் நாளை நம் சூழ்கை தாமரைவடிவிலேயே அமையட்டும். நாம் வெல்வோம்!” என்றான். “வெல்க கௌரவர்! வெல்க அமுதகலக்கொடி! வெல்க துரியோதனர்!” என அவை வாழ்த்தொலித்தது. எழுந்து கைகூப்பி அவையை வணங்கிய பின் துரியோதனன் அவைநீங்கினான்.

அஸ்வத்தாமன் பெருமூச்சுடன் தன் பீடத்தில் அமர்ந்தான். பூரிசிரவஸ் அவனருகே வந்து குனிந்து “நாம் இப்போதே சூழ்கைக்கான பணிகளை தொடங்கியாகவேண்டும்” என்றான். அஸ்வத்தாமன் சோர்வுடன் “ஆம்” என்றான். “ஏன்?” என்று பூரிசிரவஸ் கேட்டான். “ஆசிரியர் அவ்வண்ணம் சொன்னது ஒருகணத்தில் என் ஆர்வம் அனைத்தையும் அணைத்துவிட்டது” என்றான் அஸ்வத்தாமன். “ஆனால் அவர் மிக எளிய போர்நெறியை மட்டும்தான் சொன்னார். அவர் அதை சொல்லவில்லை என ஆகக்கூடாதென்று எண்ணியதுபோல் தெரிந்தது” என்றான் பூரிசிரவஸ். “ஆம், ஆனால் என் உள்ளம் அந்தப் புள்ளியில் அனைத்து விசையையும் இழந்தது.”

பூரிசிரவஸ் “உங்களுக்குள் நீங்களே ஐயமும் தயக்கமும் கொண்டிருக்கலாம். அச்சொல்லை ஒரு நிமித்தமாக எண்ணுகிறீர்கள்” என்றான். “இருக்கலாம்” என்றான் அஸ்வத்தாமன். “இது உங்கள் தந்தையின் உயிர்காக்கப்போகும் சூழ்கை. இதை நாம் பழுதற அமைத்தாகவேண்டும். எழுக!” என்று அஸ்வத்தாமனின் கையை பற்றினான் பூரிசிரவஸ். அஸ்வத்தாமன் நீள்மூச்சுடன் எழுந்துகொண்டான்.

# கார்கடல் - 38

காந்தாரியின் அரண்மனையில் தன் ஒற்றை விழி இமைக்காது வெறித்திருக்க இரு கைகளும் வெறுங்காற்றிலிருந்து எதையோ துழாவி எடுப்பதுபோல் அலைபாய ஏற்ற இறக்கங்களோ உணர்ச்சிகளோ அற்ற சீர் குரலில் ஏகாக்ஷர் சொன்னார். அரசி, குருக்ஷேத்ரத்தில் இந்த இளங்காலையில் நான் காண்பது பத்மவியூகம் பொறியென உயிர்கொள்வதை. தாமரையில் அடித்தண்டென சகுனி தன் பதினெட்டு செய்தி முரசுகளுடனும் நூற்றெட்டு கொம்புகளுடனும் கூடிய செய்திமாடத்தை நிறுவி அதை சுற்றியும் காந்தாரப் படைகளை வட்டமாக அமைத்து நிலைகொண்டிருக்கிறார். ஆயிரம் கூண்டுகளில் செய்திபுறாக்கள் சிறகொடுக்கி கழுத்துக்களை உள்ளிழுத்து விழி மயங்கி அமர்ந்திருக்கின்றன. தொலைசெய்திக்குரிய நூறு கழுகுகள் தோலுறைகளால் தலை மூடப்பட்டு இரும்புக்கூண்டுகளுக்குள் உடல் குறுக்கி அமர்ந்துள்ளன. புரவிகளில் செல்லும் தூதர்கள், ஓலை எழுத்தர்கள் என அனைவரும் அங்கு வந்து சேர்ந்துவிட்டிருக்கின்றனர்.

கவசங்களணிந்து படைக்கலங்கள் சூடிய படைவீரர்கள் வாழ்த்தொலிகளோ அறைகூவல்களோ இல்லாமல் இரும்புக்குறடுகள் மண்ணில் சீராக விழுந்தொலிக்கும் தாளங்கள் இணைந்தெழுந்த ஒலியலைகள் மட்டும் நிறைந்திருக்க நிரைவகுத்து படையென்றாகின்றனர். ஆணையொலிகள் ஆங்காங்கே எழுகின்றன. சிறு சுடர்களால் சுழற்றி காற்றிலெழுதி கட்டளைகளை அளிக்கின்றனர் படைத்தலைவர்கள். இருளில் இரும்புக் கவசங்களும் கேடயங்களும் வாள்களும் மின்னும் ஒளியால் அங்கு நீர்நிலையொன்று அலைகொள்வதுபோல் தோன்றுகிறது.

தாமரைச்சூழ்கையில் ஒவ்வொரு இதழும் தன்னை அமைத்துக்கொண்டது. அதன் குவிமுனையில் தலைமைப் பெருவீரன் நின்றிருந்தான். அவனுக்கு இருபுறமும் வில் வளைவென வேல்களை ஏந்திய புரவிப்படை வீரர்கள் நின்றனர். அவர்களின் நிரைக்குள்ளே தேர் வில்லவர்கள். அவர்களுக்கு இருபுறமும் எரிவேலேந்திய காலாட்படையினர் நின்றனர்.

அஸ்வத்தாமன், சல்யன், பூரிசிரவஸ், சுபலர், துரியோதனன், சுபாகு, துரோணர், கர்ணன் உள்ளிட்ட பதினெட்டு கௌரவப் பெருவீரர்கள் முதன்மை கொள்ள அமைந்த பதினெட்டு இதழ்கள் தாமரையின் உள்ளிதழ் வட்டமென அமைந்திருந்தன. அதைச் சூழ்ந்து மத்ர, கேகய, கோசல, வங்க, கலிங்க, அங்க, மாளவ, அவந்தி, கூர்ஜர, சிபி, சௌவீர, பால்ஹிக, திரிகர்த்த நாட்டுப் படைகளின் நூற்றெட்டு இதழ்கள் செறிந்திருந்தன. படையமைவு முன்பே தோண்டி வைக்கப்பட்ட பள்ளத்தில் நீர் ஓசையின்றி சென்று நிறைவதுபோல் புலரிக்கருக்கிருள் மறைவதற்குள்ளாகவே முழுமை பெற்றது. விடிவெள்ளி துலங்கி வானில் நின்றிருக்க ஒவ்வொருவரும் அவ்வப்போது விழிதூக்கி அதை பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

முற்புலரியில் சுருதகீர்த்தி வந்து தன் தோளைப்பற்றி எழுப்புவது வரை அபிமன்யு துயின்று கொண்டிருந்தான். அதற்கு முன், காலை முரசொலி எழுந்ததுமே ஏவலர் பலமுறை அவனை எழுப்பியிருந்தனர். எப்போதுமே புலரியில் எழுவதற்கு அவனால் இயல்வதில்லை. இரவில் எத்தனை களைத்திருந்தாலும் நெடும்பொழுது அவன் துயில்வதும் இல்லை. இரவில் படைவீரர்களிடம் சொல்லாடிக்கொண்டோ

சூதாடிக்கொண்டோ களியாட்டமிடும் அவனிடம் வந்து “இளவரசே, நெடும்பொழுதாகிறது. புலரியில் தாங்கள் எழுந்தாகவேண்டும். பிந்தி துயில்வது அதற்கு ஊறு” என்று அவனை எச்சரித்து வற்புறுத்தி மன்றாடிக்கொண்டிருக்கும் ஏவலர்களே புலரியில் அவனிடம் வந்து “இளவரசே, எழுக! முரசொலி முழங்கத்தொடங்கிவிட்டது! இளவரசே, கொம்பொலிகள் எழுகின்றன. இன்னும் பொழுதில்லை” என்று உலுக்கவும் வேண்டியிருக்கும்.

இரவில் சீற்றத்துடன் “செல்க, மூடா! நான் எப்போது துயிலவேண்டுமென்று ஆணையிடும் உரிமையை உனக்கு யார் அளித்தது? நான் இளவரசன்! விரும்பியதைச் செய்வேன். விலகு! இல்லையேல் உன் சங்கை அறுப்பேன்” என்று சீறுபவன் புலரியில் முதலில் சிணுங்கலுடன் உடல் சுருட்டிக்கொள்வான். அப்போது அகவை முதிராத குழவி போலிருப்பான். கருக்குழந்தையென உடலை மடித்து நெஞ்சோடு கைசேர்த்து அவன் துயில்கையில் முலையருந்தும் குழந்தையின் உதடுகள்போல் முகம் கூர் கொண்டிருக்கும். மீண்டும் மீண்டும் அவனை எழுப்பும் ஏவலர் அவனிடமிருந்து வசைச்சொற்கள் பீறிட கைகள் நெளிந்து எழுகையில் சற்று பின்னடைந்து நின்று “புலரி எழுந்துவிட்டது, அரசே. என் கடன் இது” என்று மீண்டும் சொல்வார்கள். “செல்க! நானறிவேன்!” என்று சொல்லி அவன் மீண்டும் புரண்டுபடுப்பான்.

அன்று காலை பலமுறை எழுப்பிய பின் ஏவலரே தயங்கி குடிலுக்கு வெளியே சென்று நின்றுவிட்டனர். அபிமன்யு அரைத்துயிலில் குழறலாக ஏதோ சொன்னான். சிறுவர்களுக்குரிய நகைப்பொலி எழுந்தது. மீண்டும் மெல்லிய குறட்டையொலி கேட்கத் தொடங்கியது. சிறு

குழந்தைகளுக்குரிய புறாக்குறுகல் போன்ற குறட்டையொலி அது. புரவிக்குளம்படி எழ இருளுக்குள் இருந்து பந்தவெளிச்சத்தில் தோன்றிய சுருதகீர்த்தி வந்திறங்கி “என்ன ஆயிற்று? இன்னுமா உங்கள் இளவரசர் எழவில்லை?” என்று கேட்டபடி அணுகியபோது “தாங்களே எழுப்புங்கள், இளவரசே. இதற்குமேல் எங்களுக்கு செல்கை இல்லை” என்று ஏவலன் சொன்னான்.

சுருதகீர்த்தி குடிலுக்குள் சென்று மஞ்சத்தில் மரவுரியைப் போர்த்தியபடி கருக்குழவிபோல் உடல்சுருட்டிப் படுத்திருந்த அபிமன்யுவின் தோளை அறைந்து “எழுக!” என்றான். “என்ன! என்ன!” என்றபடி புரண்ட அபிமன்யு சுருதகீர்த்தியைக் கண்டு சலிப்புடன் உடலை நெளித்து “இன்னும் சற்று பொழுது... இன்னும் சில கணங்கள், மூத்தவரே” என்றான். “இதற்கு மேல் துயின்றால் நீ களத்திற்கு எழவேண்டியதில்லை. இங்கேயே படுத்துக்கொள்” என்றபடி சுருதகீர்த்தி எழுந்தான். அவன் கையைப்பற்றி நிறுத்தி “இங்கேயே இருங்கள், மூத்தவரே. இன்னும் சில கணங்கள். என் இமைகள் எடைகொண்டிருக்கின்றன” என்றான் அபிமன்யு.

சுருதகீர்த்தி எதிர்பாராத கணத்தில் அவன் இரு கைகளையும் பற்றி விசையுடன் தூக்கி நிறுத்தினான். அவன் தோளைப்பற்றி பலமுறை உலுக்கி “விழித்துக்கொள்!” என்றான். அபிமன்யு “என்ன செய்கிறீர்கள்! என் தலை சுழல்கிறது!” என்றபடி கைகளை விரித்து சோம்பல் முறித்து “நான் நேற்றிரவு துயில நெடும்பொழுதாகியது” என்றான். “அதுதான் அனைவருக்கும் தெரியுமே. இங்கு பின்னிரவில்கூட விளக்கொளி தெரிந்தது என்று சொன்னார்கள்” என்றான். “நான் படைநிரைகளைச் சென்று பார்த்துக்கொண்டிருந்தேன். மீண்டுவந்து அவற்றை

சுவடியிலும் நோக்கினேன்” என்றபின் “தந்தை எப்படி இருக்கிறார்?” என்றான்.

“உளம் சோர்ந்திருக்கிறார். நேற்று அவர் வாழ்வின் மிகப் பெரிய இழிவொன்றை சந்தித்ததாக எண்ணிக்கொண்டிருக்கிறார்” என்றான் சுருதகீர்த்தி. “அது இழிவேதான். அக்கீழ்மகனின் கையிலிருந்து உயிர்பெற்று மீள்வதைவிட சிறுமை பிறிதொன்றுமில்லை” என்றபின் அபிமன்யு “ஆனால் தந்தைக்கு அவ்விழிவு தேவைதான்” என்றான். “ஏன்?” என்று சுருதகீர்த்தி விழிசுருக்கி கேட்டான். “அத்தனை பெருமைகளையும் ஒருவரே அடைகையில் மறுதட்டில் சற்று இழிவு இருப்பது நன்றல்லவா?” என்று அபிமன்யு சொன்னான். பின்னர் உரக்க நகைத்து “எண்ணி நோக்குக, மூத்தவரே! பாரதவர்ஷத்தின் ஆண்மையின் அடையாளம் என்று புகழப்படுபவரின் உடலில் உள்ள பெண்மையைப்பற்றி… எத்தனை பெரிய நிகர் செய்தல் அது. தெய்வங்களும் அவ்வப்போது சிரிக்கத்தான் செய்கின்றன” என்றான்.

சுருதகீர்த்தி அவன் முகத்தையே கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். அபிமன்யு அர்ஜுனனைப்பற்றி பெரும்பாலும் ஒன்றும் சொல்வதில்லை. ஆனால் பேசும்பொழுதெல்லாம் அதில் பிறிதொரு பொருளிருக்கிறதோ என்ற எண்ணம் சுருதகீர்த்திக்கு வராமலிருந்ததில்லை. “நன்று! நீ உடல்தூய்மை செய்வதற்கெல்லாம் பொழுதில்லை. முகம் கழுவி உணவுண்டு கவசங்களை அணிந்து கொள். இன்னும் சிறு பொழுதே உள்ளது” என்று சுருதகீர்த்தி சொன்னான். அபிமன்யு கைதட்டி வாசலில் நின்ற ஏவலனை உள்ளே அழைத்தான். அவன் தாலத்தை கொண்டு நீட்ட அதில் முகம்

கழுவி வாய் கொப்பளித்து சிறிது நீரள்ளி தலையில் தெளித்து கைகளால் கோதி பின்னால்விட்டான். “கவசங்களை கொண்டு வருக!” என்றான்.

சுருதகீர்த்தி “இன்று நீ பல்தூய்மை செய்து கொள்ளலாம். இன்று உன் பிறந்தநாள்” என்றான். “இன்றா?” என அபிமன்யு முகம் சுளித்தான். “இன்றென்றும் கொள்ளலாம். நீ பிறந்த மீன் இன்று. பிறந்த மாதம் வரவிருப்பது” என்றான் சுருதகீர்த்தி. “நன்று! இதை என் பிறந்தநாளென்று கொள்கிறேன்” என்றபின் “விழுது” என்றான். ஏவலன் கொண்டு வந்த ஆலம்விழுதால் பற்களை துலக்கியபடி “மீண்டும் அதே கனவு!” என்றான். “இளமையில் உன்னை ஈன்றபோது துணியால் சற்று அழுத்தமாக சுற்றியிருப்பார்கள். அத்தகையோருக்கு வாழ்நாள் முழுக்க எதிலோ சிக்கிக்கொண்டிருப்பது போன்ற கனவுகள் எழும் என்ற கேட்டிருக்கிறேன். மருத்துவர் சூக்தர் ஒருமுறை என்னிடம் சொன்னார்” என்றான் சுருதகீர்த்தி.

“உங்களுக்கு வரும் கனவென்ன?” என்று அபிமன்யு கேட்டான். “பற்றிஎரிவதுபோல. நான் எங்கோ படுத்திருக்கிறேன். என்னுடைய வலது காலின் நகக்கணு அனல்துளிபோல் மின்னும். நான் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே என்னுடல் பற்றி எரியத்தொடங்கும். மெழுகுபோல உருகி எரிந்து நாற்புறமும் வடிந்து கொண்டிருப்பேன். நூறுமுறை அந்தக் கனவு எனக்கு வந்துள்ளது” என்றான். “மூத்தவரே, இக்கனவுகள் எதையாவது சுட்டுகின்றனவா?” என்றான் அபிமன்யு.

“எதை சுட்டினாலென்ன? வாழ்வும் இறப்பும் வேறெங்கோ முடிவு செய்யப்பட்டுள்ளது. அனைத்தையும் இணைத்துப்பின்னி விரிந்திருக்கும் அந்தப் பெருந்திட்டத்தில் ஒரு துளியினும் துளி இங்கு தெறித்து நம் முன் வந்து கிடந்து என்னை பார்

என்கிறது. அதை பார்த்து நாம் அம்முழுமையை ஒருபோதும் உணர முடியாது. வீண் எச்சரிக்கையையும் அச்சத்தையுமே அடைவோம். அதை ஒரு அழகிய கலைநிகழ்வென்று மட்டுமே கொண்டு முன்செல்வது நன்று" என்றான் சுருதகீர்த்தி. "தவிர்க்கமுடியாமைகளைப் பற்றி பேசுபவன் ஒருபோதும் வீரனாக இங்கு வாழ்வதில்லை."

"இன்று தந்தை களம் நிற்கப்போவதில்லையா?" என்று அபிமன்யு கேட்டான். சுருதகீர்த்தி "அவர் மிகவும் உளம் தளர்ந்திருக்கிறார். ஆனால் அவரின்றி நமது படை எழாது" என்றான். "அவர் உளம் தளர்ந்திருக்கிறார் என்பது பிற எவரையும்விட அவர்களுக்குத் தெரியும். அவரையோ அரசரையோ சிறைபிடிப்பதற்கான சூழ்கைகளை அவர்கள் அமைப்பார்கள்" என்றான் அபிமன்யு. "ஆம், அவர்கள் மலர்சூழ்கை ஒன்றை அமைத்திருப்பதாக சொல்லப்படுகிறது" என்றான் சுருதகீர்த்தி. "மலர்சூழ்கை எதற்குரியது?" என்று அபிமன்யு கேட்டான். "அது ஒருவனை முழுப் படையும் சூழ்ந்துகொண்டு சிறைபற்றுவதற்குரியது. மலருக்குள் வண்டென உள்ளே செல்பவன் சிக்கிக்கொள்வான்" என்று சுருதகீர்த்தி சொன்னான். அபிமன்யு "சூழ்கைகள் அனைத்துமே எவரேனும் சிக்கிக்கொள்வதற்குரிய பொறிகள்தான்" என்றபின் வாய்கழுவி மீண்டும் நீரள்ளி தலையில் விட்டு நீவினான். "மெய்தான். எல்லா சூழ்கைகளும் கண்ணிகளே" என்றான் சுருதகீர்த்தி.

"இன்று நம் படைகள் சற்று வெற்றிக்களிப்பில் உள்ளன என்று அவர்கள் அறிவார்கள். நேற்று அங்கநாட்டரசனால் உயிரளிக்கப்பட்டமையால் சிறுமை கொண்டுள்ள நம் தந்தை சீற்றம் கொண்டு மிகையான ஊக்கத்துடன் எழுவாரென்றும்

அவர்கள் எண்ணியிருப்பார்கள். நாம் பொறிக்குள் சென்று சிக்குவதற்கான வாய்ப்புகளே மிகுதி” என்றான் அபிமன்யு. “ஆனால் தந்தை போருக்கெழுவதற்கே உளமில்லாதவராக, ஆற்றல் முழுக்க வடிந்து போய் அமர்ந்திருப்பதாக சொல்கிறார்கள். புலரியில் அவரை எழுப்பி கவசமணியச் செய்யச் சென்ற ஏவலர்கள் அவர் கவசமணிய விழையாமையை வந்து சொல்ல சிறிய தந்தை நகுலரும் சகதேவரும் அவரைப் பார்க்கச் சென்றிருக்கிறார்கள்” என்று சுருதகீர்த்தி சொன்னான்.

“அவர் எழுவார். ஏனெனில் எழாமல் இருக்க அவரால் இயலாது. ஆனால் தளர்ந்த வில்லுடன் அவர் போருக்குச் செல்வாரென்றால் அங்கனால் கொல்லப்படுவார்” என்று அபிமன்யு சொன்னான். “கொல்லப்படுவதா? அவரா?” என்று சீற்றத்துடன் சுருதகீர்த்தி கேட்டான். “ஏன் அவர் மானுடரல்லவா? அம்புகள் அவரை துளைக்காதா என்ன?” என்றான் அபிமன்யு. சுருதகீர்த்தி “ஆம், மானுட அம்புகளால் அவர் துளைக்கப்படமாட்டார். அதை நிமித்திகர்கள் சொல்லியிருக்கிறார்கள்” என்றான். “நிமித்திகர்கள் அவ்வாறு சொல்லிச் சொல்லி பலவற்றை ஏற்றி அவரை மானுடனல்ல என்று தானும் நம்ப வைத்திருக்கிறார்கள். அந்நிலையில்தான் இப்படி எவரேனும் சிறுமை செய்து அனுப்புகையில் உடைந்து வீணனென அமர்ந்திருக்கிறார்” என்று அபிமன்யு சொன்னான்.

கவசங்களைக் கட்டியபடி குனிந்து நின்று “இன்று தளர்ந்த வில்லுடன் சென்று அங்கன் முன் நிற்பார். அவன் அம்புகளால் கழுத்தறுந்து வீழ்த்தப்படுவார். அதை நான் அருகிலெனக் காண்கிறேன்” என்றான். சுருதகீர்த்தி சீற்றத்துடன் எழுந்து “நிறுத்து. அவர் மைந்தனென நானிருக்கிறேன். என் கண் முன்

ஒருபோதும் அது நிகழாது” என்றான். “எனில் அதற்கு முன் உங்கள் தலை வெட்டுண்டு வீழ்த்தப்பட்டிருக்கும்” என்றான். “இப்போது அங்கரை தெய்வமென்றாக்குபவன் நீ” என்று சுருதகீர்த்தி சொன்னான். “மூத்தவரே, அவன் ஏறக்குறைய தெய்வமேதான். அவனிடமிருக்கும் அம்புகள் எவருடையவை? பதினெட்டு முறை பாரதவர்ஷத்தை சுற்றி வந்து ஷத்ரிய குடியை வேரறுத்து அனல்குலத்து ஷத்ரியர் என்னும் நிகர்குடியை உருவாக்கி பாரதவர்ஷத்தை புரட்டியமைத்த பரசுராமனின் அம்புகளல்லவா? அதிலிருக்கும் சீற்றத்தையல்லவா நூறு தலைமுறைகளாக இங்கு ஷத்ரியர்கள் அஞ்சிக்கொண்டிருக்கிறார்கள்? இன்று அந்த அம்புகளில் காண்டவக் காட்டின் எஞ்சிய நஞ்சும் ஏறியிருப்பதாக சூதர்கள் சொல்கிறார்கள்” என்றான் அபிமன்யு.

சுருதகீர்த்தியை நோக்கி கைசுட்டி “அங்கு ஒரு அம்பு காத்திருக்கிறது நம் தந்தைக்காக. அது நீள்தவம் செய்த நஞ்சு. தவங்கள் ஒருபோதும் வீணாவதில்லை” என அவன் சொன்னான். “அதிலிருந்து எளிதில் ஒழிய அவரால் இயலாது. ஏனெனில் அவரே தனக்கென கொளுத்திக்கொண்ட சிதைநெருப்பு அது. அது அவரைத் தேடி வரும். வஞ்சம் கொண்ட நாகத்திலிருந்து விண்வாழும் மூவிழியனே தப்ப இயலவில்லை. அதை தன் கழுத்தின் அணியென ஆக்கி இன்றும் பேணிக்கொண்டிருக்கிறார் என்கிறார்கள்” என்றான்.

சுருதகீர்த்தி “நீ சொல்ல வருவதென்ன என்று நன்கு புரிகிறது எனக்கு” என ஏளனத்துடன் சொன்னான். “தந்தைக்கு மேல் எழ விரும்புகிறாய். அவர் வீழ்ந்த இடத்திலிருந்து எழுந்து அவ்வஞ்சத்தை முடித்து புகழ்கொள்ள விரும்புகிறாய். அது நிகழாது. களத்தில் நீயும் நானும் விழுவோம். அவர்

ஒருபோதும் விழமாட்டார். ஏனெனில் நம் அம்புகள் நமது எண்ணங்களிலிருந்தும் உணர்வுகளிலிருந்தும் வருகின்றன. அவரது அம்புகள் அவருள் நிறைந்திருக்கும் இன்மையிலிருந்து வருகின்றன. அவ்வின்மையை இங்கு வாழ்ந்து எவரும் ஈட்டிக்கொள்ள இயலாது. இங்குள்ள வாழ்வை ஒவ்வொரு கணமும் துறந்துதான் ஈட்டிக்கொள்ள இயலும்” என்றான்.

“அவரை இந்த அனைத்திலிருந்தும் விடுவித்து கைபற்றி அப்பால் அப்பால் என்று அழைத்துச்செல்லும் ஆசிரியர் அவருக்கு இருக்கிறார். நீயும் நானும் இங்கே விழைவால், வஞ்சத்தால் செயல்வலைப் பின்னலில் சிக்கியிருப்பவர்கள்” என்றான் சுருதகீர்த்தி. “இளைய யாதவரின் படைக்கலம் நம் தந்தை என்பதை நீ மறந்துவிட்டாய். நாம் ஊழின் படைக்கலங்கள். அவர் இறையுருவாக மண்ணில் எழுந்தவரின் படைக்கலம். ஒருபோதும் அது மானுடர் முன் தாழாது. ஐயமே வேண்டாம், அவர் எடுத்த இலக்கு தவறாது” என்றபின் சுருதகீர்த்தி வெளியே சென்றான்.

அபிமன்யு “பொறுங்கள் மூத்தவரே, நானும் வருகிறேன்” என்றபின் சிறுபீடத்தில் அமர்ந்தான். ஏவலர் அவனுக்கு காலில் கவசங்களை அணிவிக்கத் தொடங்கினர். “நீ கிளம்பி வா. நான் படைமுகப்புக்குச் செல்கிறேன்” என்றான் சுருதகீர்த்தி. அபிமன்யு உரக்க நகைத்து “இன்று படைமுகப்பில் தந்தை நிற்க வேண்டியதில்லை, அவர் தளர்ந்திருக்கிறார் என்று அவரிடம் சொல்லுங்கள். இன்று நான் அங்கனுடன் பொருதுகிறேன். அவனுடைய அந்த வெல்ல முடியாத அம்புகளை எப்படி வெல்வதென்று நம் படைகளுக்கு காட்டுகிறேன்” என்றான். அவனை ஒரு கணம் நோக்கிவிட்டு சுருதகீர்த்தி புரவியில் ஏறிக்கொண்டான்.

அபிமன்யு படைமுகப்புக்குச் சென்றபோது அனைத்தும் முற்றொருங்கிவிட்டிருந்தன. ஒவ்வொரு கணமும் முரசின்மீது கழைக்கோல் விழும் என்று எதிர்பார்த்தவர்களாக படைவீரர்கள் நின்றிருந்தனர். அவனுடைய தேர் உருண்டு வருவதன் ஓசை படைமுகப்பில் சிறிய அலைகளை எழுப்பியது. தேர் சென்று நின்றதும் அபிமன்யு தேர்த்தட்டில் எழுந்து நின்று கைகளைக் கோத்து நெட்டிமுறித்தபின் தன் வில்லை எடுத்து தேர்த்தட்டில் ஓசையெழ ஊன்றி அதன் நாணை வலக்கையால் வருடினான். அந்த ஓசை கேட்டு அருகிலிருந்த தேரில் இருந்து சதானீகன் திரும்பி நோக்கி “ஏன் இத்தனை பிந்திவிட்டாய்? இன்று நமது படைகள் ஹஸ்தவியூகம் அமைத்துள்ளன” என்றான்.

அபிமன்யு அதை பொருட்படுத்தவில்லை. “அவர்கள் அமைத்துள்ள மலர்ச்சூழ்கையை எதிர்ப்பதற்கான வழி இது ஒன்றே” என சதானீகன் தொடர்ந்தான். “ஐந்து விரல்களாக நமது படைகள் உருப்பெற்றுள்ளன. அனைத்து விரல்களையும் சென்று தொடும் கட்டை விரலாக மூத்த தந்தை பீமசேனர் எல்லையில் நின்றுள்ளார். சுட்டுவிரலென மூத்த தந்தை அர்ஜுனரும், நீள்விரலென திருஷ்டத்யும்னரும், நாகவிரலென சாத்யகியும், சிறுவிரலென சிகண்டியும் அமைய நமது படை அணிகொண்டுள்ளது” என்றான். அபிமன்யு “நாம் எப்போதும் சூழ்கைகளை சிறப்பாகவே அமைக்கிறோமோ?” என்றான்.

அதிலிருந்த ஏளனத்தை புரிந்துகொண்ட சதானீகன் “இன்று அவர்கள் நம்மில் ஒருவரை கொன்றோ சிறைபிடித்தோ மீள்வோம் என்று வஞ்சினம் உரைத்து வந்துள்ளதாக செய்தி வந்துள்ளது. மறுவஞ்சமாக நாம் அவர்களில் சிலரை பற்றிக்கொண்டுவர எண்ணியிருக்கிறோம்” என்றான். “நம்

இலக்கு யார்?” என்று அபிமன்யு கேட்டான். “அங்கர். அல்லது கௌரவ அரசர். அவர்களின் இலக்கு நம் அரசர் என்று தோன்றுகிறது.” அபிமன்யு “ஏன் இளையவராக இருக்கக்கூடாதா?” என்று சிரிப்புடன் கேட்டான். “என்ன சொல்கிறாய்?” என்று சதானீகன் கேட்டான். “தந்தை வில் தளர்ந்து இருப்பது படைகள் அனைவருக்கும் தெரியும். அவரை இலக்கு வைத்து அவர்கள் வந்திருக்கலாமல்லவா?” என்றான் அபிமன்யு.

“அவரை அத்தனை எளிதாக பிடிக்க இயலாது” என்று சதானீகன் சொன்னான். “ஆம், அதன் பொருட்டே இப்படை சூழ்கை அமைக்கப்பட்டிருக்கலாம். அவர் உளம் தளர்ந்திருக்கிறார். உளம் தளர்ந்திருப்பவர்கள் தங்களால் இயல்வதற்கு அப்பால் ஒரு பெருஞ்செயலை செய்யும்பொருட்டு துணிந்தெழுவது எங்கும் நிகழ்வதுதான். அச்செயலினூடாக தங்கள் சோர்வை நீக்கி ஆற்றலை திரட்டிக்கொள்ள இயலுமென்று அவர்கள் எண்ணுவார்கள். அரிதாக அது நிகழவும் செய்யும். பெரும்பாலும் அச்செயல் அவர்களை கீழே தள்ளி காலால் மிதித்து கூழாக்கிவிடும்” என்றான் அபிமன்யு.

சதானீகன் அச்சொற்களால் கசப்படைந்து “அவர் என்ன செய்யவேண்டுமென்பதை கற்பிக்கும் இடத்தில் நாம் எப்போதுமிருந்ததில்லை” என்றான். “ஆம், ஆனால் சுட்டுவிரல் நீட்டி இன்று அந்தப் பொறியை தொடப்போகிறது நம் படை. அது கவ்வி துண்டித்து எடுத்துக்கொள்ளப்போகிறது” என்று அபிமன்யு சொன்னான். “எனில் நீ சென்று அவரை மீட்பாய் போலும்” என்று ஏளனமாக சதானீகன் கேட்டான். “ஆம், அவர் சிக்கிக்கொண்டால் அங்கு சென்று அவரை மீட்டு வரும் ஆற்றல் கொண்டவன் நான் மட்டுமே. மீட்டுக்கொண்டு

வருவேன். அதன் பின் அவரைப் பார்த்து ஒரு சொல்கூட உரைக்காமல் தலைவணங்கி மீள்வேன். என் கண்களை அவர் சந்திக்கமாட்டார். அங்கனின் கையிலிருந்து உயிர்பெற்று மீண்டதற்கு நிகரான துயரை அப்போது அடைவார். ஒருவேளை எங்களுக்குள் இருக்கும் கணக்கு அப்போது நிறைவேறக்கூடும்" என்றான் அபிமன்யு. சதானீகன் மறுமொழி சொல்லாமல் தன் தேரை திருப்பி அப்பால் கொண்டுசென்றான்.

போர்முரசுகள் ஒலிக்கத் தொடங்கியதும் அபிமன்யு நாணொலி எழுப்பியபடி "வெற்றிவேல்! வீரவேல்!" என்று கூவிக்கொண்டு பாஞ்சாலத்தின் வில்லவர்படை தன்னை இருபுறமும் சூழ்ந்து துணைவகுக்க கௌரவப் படைகளின்மேல் பாய்ந்தான். போர் தொடங்குவதற்கு முந்தைய கணம் வரை தன் அகம் பலநூறு துண்டுகளாக சிதைந்து ஒன்றுடன் ஒன்று உரசி முட்டிக்கொண்டிருப்பதாக அவன் உணர்வதுண்டு. போர் தொடங்கிய கணமே அவன் முற்றிலும் மறைந்து அத்தேரில் அவன் வில் மட்டும் நின்று கொந்தளித்துக்கொண்டிருக்கும். அதிலிருந்து அவனை மீறியே என அம்புகள் எழுந்துகொண்டிருக்கும். கணமொழியாது அலைகளை ஏவும் பெருங்கடல் வளைவு என அவன் வில்லைப்பற்றி சூதர்கள் முன்பு பாடியிருந்தனர். ஒவ்வொரு கணமும் அவன் முற்றொழிந்து மறுகணத்தை நோக்கி சென்று கொண்டிருந்தான். போரின் திட்டமிடல்களும், திட்டத்தை மீறி எழுதல்களும், பின்னடைதல்களும், வீறுகளும், சோர்வுகளும், சூழ்ச்சிகளும், வஞ்சினங்களும் அனைத்தும் பிறிதொருவனால் நிகழ்த்தப்பட அவன் அப்பால் நின்று அதை நோக்கிக்கொண்டிருப்பான்.

தொலைவில் விரிந்திருந்த கௌரவப் படையின் பெருந்தாமரையை அவனால் அந்தத் தேரிலிருந்து பார்க்க இயலவில்லை. அதன் இதழ்கள் ஒவ்வொன்றும் முனை நீண்டு குவிந்த அலைகள் வடிவிலிருந்தன. அவனுக்கு முன்னால் இருந்த இதழில் பூரிசிரவஸும் சலனும் சோமதத்தரும் பால்ஹிகக் கூட்டமைப்பின் வில்லவரும் இருந்தனர். அவன் பூரிசிரவஸுடன் வில் கோத்து பால்ஹிகர்களின் தேர்வீரர்களை அம்பால் அறைந்து வீழ்த்திக்கொண்டிருந்தான். பூரிசிரவஸ் தன் உடன் பிறந்தவர்கள் அனைவருக்கும் கையசைவால் ஆணையிட்டுக் கொண்டு அவ்வடிவை காத்தபடி போரிட்டான்.

போர் இருபுறமும் விசை குவியாமலேயே நிகழ்ந்துகொண்டிருந்தது. தோள்கோத்து தழுவிப் புரண்டு போரிடப்போகும் மல்லர்கள் ஒருவரை ஒருவர் நோக்கியபடி வட்டக்களத்தில் தசையிளக சுற்றிவருவது போலவே அது நிகழ்ந்தது. முதன்மை வீரர்கள் எவரும் ஒருவரோடொருவர் கோத்துக்கொள்ளவில்லை. தாமரை இதழ் அகன்று விரிந்து மெல்ல சுழல ஜயத்ரதனால் நடத்தப்பட்ட படையிதழ் அபிமன்யுவின் முன் வந்தது. ஜயத்ரதன் உரக்க நகைத்தபடி “என்ன தயங்கிவிட்டீர்களா? உங்கள் படையில் ஒவ்வொருவரும் அஞ்சி விலகுகின்றனர்! வருக! இளவரசே வருக! உங்களுக்காகவே தேன் ஒருக்கி காத்திருக்கிறது மாமலர்” என்று கூவினான். “இதழ்கள் ஒருங்கட்டும். இன்று அவ்விருந்தை சிதைத்து உள்ளே வந்து உண்டு திரும்புவதே எங்கள் இலக்கு” என்று அபிமன்யு கூவினான்.

ஐந்து விரல் விரித்து கை மலருடன் போரிட்டது. ஐந்து விரல்களும் விரிந்து மலரை அள்ளிக்குலைக்க முயன்றன. மலர் மெல்ல சுழன்று அதை ஒழிய விரல்கள் குவிந்து

இதழ்களை தனித்தனியாக கவ்விக் கிழித்து கசக்கியது. சிதைந்த இதழ்களின் வீரர்களை பின்னடையச் செய்ய சகுனியின் ஆணை எழுந்தது. "பின்னடைக! மீண்டும் ஒருங்கிணைக! சிதைந்த இதழ்கள் புல்லிவட்டங்களாகி தாமரையின் அடிவளையத்தை அமைத்துக்கொள்க!" புல்லிவட்டங்களிலிருந்து புதிய இதழ்கள் எழுந்து வந்து மீண்டும் மலரை முழுமைப்படுத்தின. ஒழியாது இதழ் முளைக்கும் தாமரை சுழன்றுகொண்டே இருக்க அதை அறைந்து பற்றிச் சுழற்றி ஊடுருவி போரிட்டது கை.

அபிமன்யு ஒவ்வொரு இதழையும் தாக்கி முன்னெழுந்து வந்த வீரர்களுடன் போரிட்டான். இறுதியில் கர்ணனை நேருக்கு நேர் சந்தித்தபோது உரக்க நகைத்தபடி "பெருவீரர்கள் ஒருவனுக்கு இலக்கு குறித்திருக்கிறீர்கள்! நன்று! அந்த அச்சம் இன்று மேலும் வளரும்" என்றான். "ஈயே, வீண் சொல்லெடுக்காது திரும்பிப் போ. இது வண்டுக்கு விரித்த வலை" என்று கர்ணன் சொன்னான். சீற்றம்கொண்டு "சிறியவனிடமிருந்து பெரிய அம்புகளை பெறுவீர்கள்" என்று வஞ்சினம் உரைத்து அபிமன்யு கர்ணனை அம்புகளால் அறைந்தான்.

மீண்டும் அவர்களிடையே அந்த நிகர்குலையா நெடும்போர் தொடங்கியது. கர்ணன் தன் அகவையை ஒவ்வொரு அம்புக்கும் குறைத்து இளையோனாகி அபிமன்யுவை அணுகவேண்டியிருந்தது. அபிமன்யு தன் அகவையை அம்புக்கு மேல் அம்பென வளர்த்து முதியவனாகி கர்ணனை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. கர்ணன் தன்னை விருஷசேனனாக உணர்ந்தான். அபிமன்யு தன்னை அர்ஜுனனாக உணர்ந்தான். இரு அம்புமுனைகளும் எங்கோ ஒரு புள்ளியில் சந்தித்துக்கொண்டன. அவை மட்டுமே அறியும்

ஒரு சொல்லை பரிமாறிக்கொண்டன. கூரோடு கூர் சந்திக்கும்போது எழும் ஒரு நுண்சொல். செவி கேட்காததாக, விழியுணராததாக, உளம் அந்த முனையளவே கூர்ந்தாலன்றி சென்றடையாததாக இருந்தது அது.

தாமரை விரிந்து கையை பற்றியபின் கூம்பலாயிற்று. அதன் அழுத்தம் மேலோங்கி வருவதை உணர முடிந்தது. அதன் இருபுறத்திலிருந்த இதழ்களும் இறுகி ஒன்றை ஒன்று அழுத்திக்கொண்டே சென்றன. பீமனும் அர்ஜுனனும் தம் படைகளை பின்னெடுத்துக்கொண்டு சென்றனர். யுதிஷ்டிரர் அவ்விசைக்கு ஈடுகொடுக்க முடியாமல் தன்னுடைய சிறிய மெய்க்காவல் படையுடன் மையத்தில் தடுமாறினர். துரோணரின் படைகள் இதழெனக் குவிந்து வந்து எண்ணியிராக் கணத்தில் சரடென்றாகி நீண்டு யுதிஷ்டிரரை பற்ற வந்தன. துரோணர் வெறிகொண்டு அம்புகளை தொடுத்தபடி விரைந்து வந்தார். நோக்கியிருக்கவே அவர் மிக அருகே அணைந்துவிட்டார். அவர் அம்புகளால் யுதிஷ்டிரரின் மெய்க்காவல் படைகளிலிருந்த வீரர்கள் ஒவ்வொருவரும் அறைபட்டு அலறி வீழ்ந்தனர்.

அஞ்சி கை பதறி “பின்னடைக! பின்னடைக! ” என்று யுதிஷ்டிரர் கூவினார். “மந்தனுக்கு செய்தி சொல்க! இளையவர்கள் வருக! என்னை சிறைபிடித்து கொண்டுசெல்லும் இலக்கு கொண்டிருக்கிறார்கள்.” சல்யரும் சோமதத்தரும் இருபுறமும் துரோணரை காத்தனர். துரோணரின் அம்பு எல்லைக்குள் யுதிஷ்டிரர் வந்தார். அவருடைய கொடியும் தேர்மகுடமும் உடைந்தன. “நான் சிக்கிக்கொண்டேன்! என்னைக் காக்கும்பொருட்டு படையெழுக!” என்று யுதிஷ்டிரர் கூவினார். அருகே அபிமன்யுவின் கொடியைக் கண்டு “அபிமன்யுவை

வரச்சொல்க! இந்தப் படைசூழ்கையின் முனையை அவன் உடைக்கட்டும்” என்றார். யுதிஷ்டிரரின் அழைப்பைக் கேட்டதும் கர்ணனுடன் பொருதிக்கொண்டிருந்த அபிமன்யு அக்கணமே தேரைத் திருப்பி பக்கவாட்டில் துரோணரின் படைகளை தாக்கினான். இடைமுறியா மழைபோன்ற அம்புகளால் துரோணரின் காவல்சுற்றத்தை வீழ்த்தி அவரை அறைந்து பின்னடையச் செய்தான். தேர்த்தட்டில் சோமதத்தர் அம்புபட்டு விழுந்தார். சல்யரின் வில் முறிந்து தெறித்தது. அவர் தொடையில் அம்பு பாய்ந்து தேர்த்தட்டில் அமர்ந்தார்.

துரோணரின் காவலர்படையில் வில்லவர் அனைவரும் விழ அவர் நிலையை உணர்ந்து தன் தேரை பின்னடையச் செய்தார். யுதிஷ்டிரர் “விடாதே! அப்படியே முன்னகர்ந்து செல்! சென்று தாமரை வளையத்தை உடை! அதன் மையத்தை அறை!” என்றார். “உடைகிறது! இதுவே தருணம். அதை முற்றாக சிதைத்தழித்துவிடு. செல்க!” என அபிமன்யுவிடம் ஆணையிட்டார். அபிமன்யு ஒருகணம் தயங்க “அஞ்சாதே! இத்தருணம் தெய்வக்கொடை! அவர்கள் வலுகுறைந்திருக்கிறார்கள். தாமரைச்சூழ்கையில் இது பெரும்பிளவு. உள்ளே செல்! அதன் மையத்தை சிதறடி! அவர்களுக்குக் காட்டு நாம் யாரென்று !” என்றார்.

அபிமன்யு துரோணரை அம்புகளால் அறைந்தபடி துரத்திச்சென்றான். அவனுடைய ஆற்றலைக் கண்டு அவர் கை ஓய்ந்துவிட்டது தெரிந்தது. “நில்லாதே, செல்! நீ சென்றுகொண்டிருக்கையிலேயே பீமனும் அர்ஜுனனும் வந்து உன்னை பின்துணைப்பார்கள். நமது படை நீள்வேல் என தாமரையை ஊடுருவிச்செல்லும்” என யுதிஷ்டிரர் கூவினார். “ஆணை! பீமனும் அர்ஜுனனும் எழுக… இளையோனை

பின்தொடர்ந்து செல்க!” அபிமன்யு துணைப்படையுடன் வேல் வடிவு கொண்டு தாமரையை ஊடுருவிச் சென்றான். யுதிஷ்டிரர் அவர் இயல்பை மீறி வெறிகொண்டிருந்தார். முன்னர் எழுந்த அச்சம் அவரை நிலைகுலையச் செய்துவிட்டிருந்தது. “மந்தன் எழுக! இளையவன் எழுக! இளவரசனை பின்தொடர்ந்து செல்க! ஊடுருவல் அறுபடாது ஒற்றைச்சரடென அமைக!” என கைதூக்கி ஆர்ப்பரித்தார்.

“இளையவர் வந்துகொண்டிருக்கிறார், அரசே!” என்று அவருடைய செய்திக்காவலன் அறிவித்தான். “எங்கே மந்தன்?” என்று யுதிஷ்டிரர் கூவினார். “அவர் கௌரவ அரசருடன் பொருதுகிறார்… கிளம்பிவிட்டார்.” ஆனால் தாமரையின் வலப்பக்கத்திலிருந்து ஜயத்ரதனும் இடப்பக்கத்திலிருந்து கர்ணனும் நடத்திய இரு பேரிதழ்கள் வந்து ஒன்றுடன் ஒன்று சந்தித்து, ஒன்றுடன் ஒன்று இணைந்து மூடி அபிமன்யுவை கௌரவப் படைகளுக்குள் கொண்டுசென்று முற்றாக விழியிலிருந்து மறைத்தன.

# கார்கடல் - 39

நாகக் களமுற்றத்தில் அமர்ந்து அரவான் சொன்னான். நான் இப்போது நூற்றெட்டு இதழ்களுடன் விரிந்த பெருந்தாமரையின் இதழ்கள் ஒன்றன்மீது ஒன்றென மெல்ல படிந்து ஒற்றை வளையமென்றாகி குவிந்து மொட்டாகி இறுகி செண்டாகி மணியாகி மூடிக்கொள்வதை பார்க்கிறேன். உறுதியான ஓர் எண்ணம் மலரை உலோகமென்றாக்கும் என்பதை அறிந்தேன். மலர்ச்சூழ்கைக்குள் பாண்டவ இளையோனாகிய அபிமன்யு முழுமையாகவே

சிக்கிக்கொண்டான். அவனைச் சூழ்ந்து கௌரவர்களின் பெருவீரர்கள் அனைவரும் குலைத்த வில்லுடன் நிறைந்த ஆவநாழியுடன் வந்து வளையமென்றானார்கள்.

நெடுநேரம் என்ன நிகழ்கிறதென்று அபிமன்யுவுக்கு புரியவில்லை. வெறிகொண்டு அம்பு தொடுத்து அவன் துரோணரை பின்னடையச் செய்துகொண்டிருந்தான். துரோணருக்கு உதவ வந்த கர்ணனையும் அவன் தன் அம்புகளால் எதிர்கொண்டான். கர்ணனின் தேரிலறைந்து அதன் பொற்பூச்சுத் தகடுகளை நெளியவைத்த தன் அம்புகள் அவனை மேலும் மேலும் வெறி கொள்ளச் செய்தன. கர்ணனின் தேர் நீரில் மூழ்கும் கலம் என கௌரவப் படைக்குள் பின்னடைவதை அவன் தன் வில்திறனின் வெற்றியென்றே கருதினான். சூதர்களின் சொற்கள் அவனுள் எழுந்தன. என்றும் வாழும் காவியங்களை அவன் இளைய உள்ளம் நேர்முன் எனக் கண்டது.

கர்ணனை மறு எல்லை வரை கொண்டு சென்று வீழ்த்தும்பொருட்டு பேரம்பொன்றை எடுத்தபோதுதான் தன்னைச் சூழ்ந்து கௌரவர்களின் அனைத்து முதன்மை வில்லவர்களும் நாணேற்றிய வில்லுடன், சினமெழுந்த கண்களுடன் நின்றிருப்பதை பார்த்தான். சிக்கிக்கொண்டுவிட்டோம் என்று உணர்ந்ததும் அவனுள் முதலிலெழுந்தது ஒரு களிப்புதான். பிற எவருக்கும் நிகழாத ஒன்று தனக்கு நிகழ்ந்துள்ளது. ஆயிரம் பல்லாயிரம் வருடங்கள் சூதரும் புலவரும் சொல்லி விரிக்கும் தகைமை கொண்ட ஒன்று. அக்களத்தில் பொருதி வீழ்ந்த பல்லாயிரவரில் ஒருவனாக அன்றி எப்போதும் தனித்தவனாக அவனை ஆக்கும் ஒன்று. உரக்க நகைத்தபடி அவன் கூவினான் “வருக! கௌரவ

வில்லவர் அனைவரும் வருக! வில்லென்றால் என்னவென்று நோக்கி அறிக!”

அவன் தன் அம்புகளால் அவர்கள் அனைவரையும் மாறி மாறி எதிர்த்தான். நூறு கைகள் எழுந்து வந்ததுபோல். தன் மூதாதையைப்போல் உடல் முழுக்க விழி பெருகியவன்போல். நூறு அம்புகள் ஒரே தருணம் எழுந்து அவன்மேல் பாய சூழ்ந்து அணுகிய ஒவ்வொரு அம்பையும் தனித்தனியாக நோக்கினான். ஒரே கணத்தில் பல அம்புகளை அறைந்து வீழ்த்தினான். அவன் திறனின் உச்சத்தைக் கண்டு சூழ்ந்திருந்த கௌரவப் பெருவீரர்கள் திகைப்பும் பின் அச்சமும் அடைந்தனர். அர்ஜுனனுக்கு வைத்த பொறியில் அவன் வந்து சிக்கிக்கொண்டது அவர்களுக்கு முதலில் அளித்த ஏமாற்றத்தை அந்த அச்சம் போக்கியது. அத்தருணத்தில் அவனை அவ்வாறு வீழ்த்தாவிடில் அந்தப் போர் ஒருபோதும் முடிவடையப்போவதில்லை எனும் உணர்வை அங்கிருந்த அனைவருமே அடைந்தனர்.

அபிமன்யு சல்யரின் வில்லை உடைத்தான். பூரிசிரவஸின் தலைக்கவசமும் உடல்கவசமும் உடைந்து தெறித்தது. அவன் தன் தேரை பின்னிழுத்து கவசவீரர்களுக்கிடையே மறைந்துகொண்டான். துரியோதனன் வெறிக்கூச்சல் இட்டபடி எழுந்து வர அவன் கவசத்தை உடைத்து தோளில் மூன்று அம்புகளால் அறைந்து தேர்த்தட்டில் நினைவிழந்து விழச்செய்தான். கௌரவ மைந்தராகிய குபந்தனும் கேரகனும் கேதுவும் கௌசலனும் க்ஷமகனும் க்ஷுபனும் குரோதகனும் கும்பனும் கந்தகனும் கணகனும் கஜகர்ணனும் கர்பனும் காத்ரனும் அவன் அம்புகள் பட்டு தேர்த்தட்டுகளிலிருந்து அலறி வீழ்ந்தனர். மைந்தர்கள் இறப்பதைக் கண்டு துரியோதனன்

“அங்கரே, இவனை வீழ்த்த உங்களால் மட்டுமே இயலும்” என்று கூச்சலிட்டான். கர்ணன் தன் வில்லின் நாணை இழுத்து முரலல் ஒலியெழுப்பியபடி அபிமன்யுவை நேர்நின்று எதிர்த்தான். நாகபாசனின் தேருக்குப் பின் ஆயிரம் தலையுடன் சேடன் எழுந்ததுபோல் நாகர்படை பொங்கி வளைந்து அலைநிலைத்ததுபோல் நின்று, நா பறக்க, விழி ஒளிர ததும்புவதை நான் கண்டேன். ஆனால் அபிமன்யு எதையுமே காணவில்லை. அவன் நோக்கியதெல்லாம் துள்ளும் விஜயத்தை, அதிலேறி காற்றிலெழும் அம்புகளை மட்டுமே.

கர்ணன் அபிமன்யுவை சூழ்கைக்கு உள்ளிழுக்கையில் ஊமைச்சீற்றம் கொண்டிருந்தான். அது அபிமன்யு மீதான சினமல்ல, தன் மீதான சினமும் அல்ல, இலக்கின்றி ஒவ்வொரு கணமும் உருமாறும் கசப்பு. எங்கு விழி படுகிறதோ அதன்மீது முழு நஞ்சையும் உமிழும் பொருமல். அபிமன்யு அவனை அறைந்து அறைந்து பின்னடையச் செய்துகொண்டிருக்கையில் ஒருகணம் அவன் அம்பினால் தன் நெஞ்சக்கவசம் உடைந்து உயிர் அகலக்கூடுமெனில் நன்றே எனும் எண்ணம் அவனில் வந்துசென்றது. பின் எங்கெங்கோ இருந்து முகங்கள் எழுந்து அவனை சூழ்ந்தன. இளிவரல்கள், அறைகூவல்கள், பின்னர் துளித்த ஒரு துளி விழிநீர். தன் சீற்றத்தை திரட்டிக்கொள்ள அவன் முயன்றான். ஆனால் நெஞ்சிலெழுந்த விசை விஜயத்தை சென்றடையவில்லை.

முற்றிலும் அபிமன்யு சூழ்ந்துகொள்ளப்பட்டதும் கர்ணன் திகைத்தவன்போல் வில்லைத் தாழ்த்தி தேர்த்தட்டில் வெறுமனே நின்றான். பூரிசிரவஸும் சல்யரும் கிருபரும் துரோணரும் இணைந்து அவனைத் தாக்க மலர்சூழ்கை ஒரு பெரும் நீர்ச்சுழியென சுழல அதன் மையத்தில் விசைகொண்டு

தன்னைத்தான் சுற்றியபடி அவன் போரிடுவதை வெறித்து நோக்கியபடி அவன் நின்றான். “தாக்குக! நம் மைந்தருக்கு பழிநிகர் செய்க! அவன் மானுடனே அல்ல! குருதிப்பலி ஆடும் கொடுந்தெய்வம்” என துரியோதனனின் ஆணையை அவன் கேட்டான். ஆயினும் அவனால் கை தூக்க இயலவில்லை.

அவனுக்கு வலப்பக்கம் தேர்த்தூணில் உடல் சுழற்றி எழுந்தது கார்க்கோடகன் எனும் நாகம். “எழுக உன் நஞ்சு! எழுக உன் கூர்வாளி!” என்று அது கர்ணனிடம் சொன்னது. “மாநாகனே, அறிக! உமிழப்படாத நஞ்சு மணியென்றாகும். மணி வெறும் ஒளி மட்டுமே. உமிழப்படுகையிலேயே நஞ்சு பொருள்கொள்கிறது” என்று அது கூறியது. இடப்பக்கம் எழுந்தது அஸ்வமுகன் எனும் பெருநாகம். “கொல் அவனை! ஒவ்வொரு கணமும் நீ இழந்தவை அனைத்திற்கும் நிகரென இப்பழியை கொள்! இங்கு ஒருமுறையேனும் முழுமையாக வெல்! கொல் அவனை! கொல்!” என்று அறைகூவியது. நாகங்கள் அவனைச் சூழ்ந்து திளைத்து “கொல்! கொல்! கொல்!” என்றன. “ஆயிரம் பாறைகளில் அறைந்து சிதறிய அலை பின்வாங்குகையிலேனும் விசைகொண்டாக வேண்டும். நாகனே, கதிரவன் மைந்தனே, இத்தருணத்தில் எழுக உன் விசை! இப்போதெழுக உன் சீற்றம்!” என்றது அஜமுகன் என்னும் மாநாகம்.

கர்ணனின் கையிலிருந்து விஜயம் தயங்கியது. அத்தருணம் தேர் திரும்ப உரக்க நகைத்தபடி ஒருகணம் அவனை நோக்கிய அபிமன்யுவில் இளைய அர்ஜுனன் தோன்றி மறைந்தான். சீற்றம்கொண்டு தன் நாணை இழுத்து அம்புகளால் அபிமன்யுவை அறைந்தான். மேலும் மேலுமென அறைந்து அபிமன்யுவின் தோள்கவசங்களை உடைத்தெறிந்தான். அவன்

நெஞ்சக்கவசம் உடைந்து தெறித்தது. வில் அறுந்தது. தேரிலிருந்து அவன் பாய்ந்திறங்கிய கணம் புரவிகள் கழுத்தறுபட்டு சரிந்தன. கவிழ்ந்த தேருக்குப் பின்னால் பாய்ந்திறங்கி விழுந்து கிடந்த வீரனொருவனின் வில்லை எடுத்து அபிமன்யு அவர்களை எதிர்கொண்டான்.

இடும்பர்களின் மலையில் வெறியாட்டெழுந்து நெஞ்சில் அறைந்து துள்ளிச் சுழன்றெழுந்து பார்பாரிகன் சொன்னான். இதோ நான் மலர்ச்சூழ்கையின் நடுவே நின்று அந்த இளையவனை பார்த்துக்கொண்டிருக்கிறேன். அவன் கைகளில் எழுவது தன்னை மட்டுமே எண்ணி முழுவாழ்வையும் நிகழ்த்திய ஒருவனில் மட்டுமே எழும் பேராற்றல். ஆணவம் கூர்த்து முனை கொண்டு சூடிய ஒளி. எவ்வுணர்வும் உச்சமடைகையில் அது தெய்வங்களுக்குரியதாக ஆகிறது. அவன் போரிடுவதைக் காண வெண்ணிற முகில்களிற்றின்மேல் இந்திரன் வந்திறங்கினான். தேவர்கள் முகில்கள் தோறும் பெருகினர். முகில்கள் செறிந்து வான் இருண்டது. கீழ்ச்சரிவில் இடியோசையும் மின்னலுடன் எழுந்தது.

கை பெருகி சித்தம் ஒன்றென்றாகி நின்று அவன் போரிடுகையில் சூழ்ந்திருந்த கௌரவ வீரர்கள் ஒவ்வொருவரும் காற்றெரியில் சுழன்று பதறி பறக்கும் பறவைகள்போல் அலைமோதினார்கள். உடன்வந்த பாஞ்சால வீரர்கள் அனைவரும் கொன்றொழிக்கப்பட அபிமன்யு தன்னந்தனியனாக நின்று போரிட்டான். அவன் அம்புகள் பட்டு சுபலரின் ஏழு படைத்தலைவர்கள் தேர்த்தட்டுகளில் விழுந்தனர். துரியோதனன் தன்னெதிரே தழலென ஆடி நின்றிருந்த அர்ஜுனனை பார்த்தான். நடுங்கும் கைகளுடன்

தேரில் அமர்ந்திருந்தான். அவனுக்கு இருபுறமும் துச்சகனும் துச்சாதனனும் வில் சோர தேரில் பின்னடைந்துகொண்டிருந்தனர்.

கோசலமன்னன் பிருஹத்பலன் தன் தேரிலிருந்து வில்லுடன் பாய்ந்திறங்கி "இந்தக் கணத்திற்கென்றே வாழ்ந்தேன், பாண்டவனே" என்று கூவியபடி அபிமன்யுவை நோக்கி சென்றான். உடைந்த அம்புகளில் சிலவற்றை பொறுக்கியபடி எழுந்த அபிமன்யு நாண் தளர்ந்த வில்லுடன் அவனை எதிர்த்தான். அவர்களிடையே போர் தொடங்கியதுமே அது நிகர்நிலையில் இல்லை எனத் தெரிந்தது. "செல்க, கோசலனை காத்துநில்லுங்கள்!" என்று துரியோதனன் கூவினான். பிருஹத்பலன் அபிமன்யுவின் வில்லை உடைத்தான். எஞ்சிய ஒற்றை அம்புடன் அவன் தேர்ச்சகடம் ஒன்றுக்கு அடியில் பதுங்கினான். கர்ணன் நாண்குலைத்தபடி தேரில் அபிமன்யுவை நோக்கி வருவதற்குள் அருகில் உடைந்து கிடந்த தேர் ஒன்றின் மேல் பாய்ந்தேறிய அபிமன்யு அந்த ஒற்றை அம்பை வீசி பிருஹத்பலனின் கழுத்துநரம்பை வெட்டினான். பொத்திய விரல்களின் நடுவே குருதி கொப்பளித்து எழ, வாய் கோணலாகி, கால்கள் குழைய பிருஹத்பலன் களத்தில் விழுந்தான்.

"அவன் மானுடனல்ல. ஏதோ போர்த்தெய்வம் அவன் உடலில் இறங்கியிருக்கின்றது" என்று துச்சகன் கூவினான். "மூத்தவரே, இளைய பாண்டவனில் குடியிருக்கும் ஒன்று ஏழு மடங்கு விசையுடன் இவனில் எழுந்துள்ளது. நம்மால் இவனை வீழ்த்த இயலாது" என்று துச்சாதனன் சொன்னான். தன் வில்லை எடுத்து அம்பால் அவனை அறைவதற்கான ஆற்றலை முற்றாக இழந்து அமர்ந்திருந்தான் துர்மதன். கர்ணனின்

அம்புகளால் தேரிழந்து வெறுந்தரையில் நின்றிருந்த அபிமன்யு வீழ்ந்துகிடந்த ஒருவனின் வில்லை தரையிலிருந்து எடுத்து கீழே உதிர்ந்திருந்த அம்புகளை பொறுக்கி எய்தான். அவ்வில்லை அஸ்வத்தாமனின் அம்பு உடைக்க பாய்ந்து தேருக்கடியினூடாக மறுபக்கம் சென்று பிறிதொரு வில்லை மண்ணிலிருந்து எடுத்து போரிட்டான். தன்னைச் சூழ்ந்து பறக்கும் ஒவ்வொரு அம்புக்கும் நெளிந்தும் ஒளிந்தும் தப்பி மேலும் மேலும் விழுந்த அவர்களின் அம்புகளைப் பொறுக்கி அவன் போரிட்டான்.

துரியோதனன் ஒருகணத்தில் “நிறுத்துங்கள்! போதும் இப்போர்!” என்று கூவினான். “மூத்தவரே…” என்று துச்சாதனன் கூவினான். துரியோதனன் கைகளை வீசி “போதும்… அவனை போகவிடுங்கள்… வேண்டாம்!” என ஆணையிட்டான். அவன் குரல் எழுந்த அக்கணத்திலேயே அபிமன்யுவை நோக்கி உருவிய வாளுடன் லக்ஷ்மணன் பாய்ந்தான். “நில்! வேண்டாம், நில்!” என்று துரியோதனன் கூவினான். லக்ஷ்மணன் அபிமன்யுவுடன் வாள் முட்டி போரிடத் தொடங்கியபோது எழுந்த ஓசையில் அந்தக் குரல் மறைந்தது. அவர்கள் இருவரும் வெறிகொண்ட உச்சத்திலிருந்து உச்சத்திற்கு எழுந்து போரிட்டனர். அபிமன்யுவின் வாள் விசையும் சுழற்சியும் கொண்டிருந்தது. லக்ஷ்மணனின் வாள் எடையும் நீளமும் கொண்டிருந்தது. அபிமன்யுவின் வாளை லக்ஷ்மணனின் வாள் உடைத்தது. அக்கணமே நிலத்தில் விழுந்து அதே விசையில் உடைந்த வாளை வீசி லக்ஷ்மணனின் கழுத்தை அறுத்தான் அபிமன்யு. தலை அறுபட்டு பக்கவாட்டில் தொங்க நிலத்தில் தோள் அறைந்து விழுந்து கால்களை உதைத்துக்கொண்டு துள்ளியது லக்ஷ்மணனின் உடல்.

துரியோதனன் ஓசையற்ற, காட்சிகள் ஏதுமற்ற வெட்டவெளி ஒன்றின் சுழிமையத்தில் என தன்னை உணர்ந்தான். எண்ணங்களும் சுழித்து ஒற்றைச் சொல்லென்றாயின. அவன் விழிகளும் வாயும் திறந்திருக்க தலை நடுங்கிக்கொண்டிருந்தது. அவன் உடல் பக்கவாட்டில் சரிய அருகிருந்த ஆவக்காவலன் அவனை பற்றிக்கொண்டான். துச்சாதனன் நெஞ்சில் ஓங்கி அறைந்துகொண்டு “கொல்லுங்கள்! விடாதீர்கள்! ஒவ்வொருவரும் களமிறங்குங்கள். இன்று இவன் குருதி கொள்ளாது இப்போர் முடிவுறாது” என்று கூவினான். கிருபரும் துரோணரும் கர்ணனும் அஸ்வத்தாமனும் பூரிசிரவஸும் சல்யரும் சேர்ந்து அபிமன்யுவின் மேல் அம்புகளால் அறைந்து அறைந்து அவனை நிலத்தில் புரட்டினர். உடலெங்கும் அம்புகளுடன் முள்ளம்பன்றிபோல அவன் பாய்ந்து தேருக்கு அடியில் பதுங்கிக்கொண்டு அங்கிருந்து அம்புகளை எடுத்து வீசி காந்தாரத்து போர்வீரர்களை கொன்றான். துரியோதனனின் அணுக்கனான பிருந்தாரகன் கழுத்தின் நரம்பை வெட்டிய அம்பினால் வீழ்த்தப்பட்டு தேர்த்தட்டிலிருந்து சரிந்தான்.

அப்பால் மலர்ச்சூழ்கைக்கு வெளியே பீமன் தலைமைகொண்ட பாண்டவர்களின் படையின் கட்டைவிரல் அர்ஜுனன் நடத்திய சுட்டுவிரலுடன் இணைந்து தாமரையின் பின்பக்கம் பெரும் விசையுடன் அறைந்து சிதறடித்துக்கொண்டிருந்தது. அங்கு நின்றிருந்த காலாட்படையினர் பீமனின் கதையாலும் அர்ஜுனனின் அம்புகளாலும் செத்து உதிர்ந்துகொண்டிருந்தனர். ஆனால் ஒழியாது மேலும் மேலும் இடைவெளிகளை நிரப்பிக்கொண்டிருந்த அவர்களின் எண்ணிக்கை அவர்களிருவரையும் தடுத்து நிறுத்தியது. வைக்கோற்போரில் முட்டும் யானை என பீமன் ஆற்றலிழந்தான். உதிரும்

இலைகளை, சருகுகளை சலிக்காது அம்புகளால் வீழ்த்துவதுபோல் உணர்ந்து அர்ஜுனன் சீற்றம் கொண்டான்.

“கணம் ஒழுகிக்கொண்டிருக்கிறது. இன்னும் சற்று பொழுது. நாம் இதை உடைத்து அவனை மீட்டாக வேண்டும்” என்று திருஷ்டத்யும்னனின் ஆணை ஒலித்தது. “இன்னும் சில பொழுது! இந்தப் படைக்கோட்டையை உடைத்தாகவேண்டும்! இன்னும் சற்றே பொழுது!” என்று முரசுகள் பதறி ஓலமிட்டன. “ஜயத்ரதனும் கிருதவர்மனும் மலர்ச்சூழ்கையை காத்துக்கொள்க! செல்க! மலர்ச்சூழ்கையை காத்து நிலைகொள்க!” என சகுனியின் ஆணை எழுந்தது. சிந்துநாட்டுப் படைகளின் இதழின் முகப்பிலிருந்து பின்னணிக்குச் சென்று ஜயத்ரதனும் கிருதவர்மனும் அர்ஜுனனை எதிர்த்து நின்றனர். இருபுறத்திலிருந்தும் எழுந்த அம்புகளை அர்ஜுனன் தடுத்து போர்புரிந்தான். சகுனியின் ஆணைப்படி பால்ஹிகர் தன் யானையில் ஏறிவந்து பீமனை தடுத்தார். அவனுடைய படைகளை அறைந்து சிதறடித்தார்.

அபிமன்யு அனைத்துப் படைக்கலங்களையும் இழந்து தரையில் நிற்பதை துரியோதனன் கண்டான். “இது நற்போரல்ல! நான் படைக்கலமில்லாதிருக்கிறேன்! ஒரு வில்லும் அம்பும் எனக்கு கொடுங்கள்! ஒரு தேரை எனக்கு அளியுங்கள்! வீரனாகப் பொருதி உயிர்விட எனக்கு வாய்ப்பளியுங்கள்” என்று அபிமன்யு கூவினான். துரியோதனனை நோக்கி “தந்தையே, மைந்தனென உங்களிடம் நான் கோருவது ஒன்றுதான். ஒரு தேர்! ஒரு வில்! ஓர் ஆவநாழி” என்றான். துரியோதனன் மறுமொழி சொல்வதற்குள் துரோணர் தன் அம்பால் அவன் நெஞ்சை அறைந்தார். குருதி வழிய அவன் தெறித்து மண்ணில் விழுந்து உருண்டு எழுந்து நின்றான். “சொற்களை கேளாதீர்கள். அவனை

கொல்லுங்கள்!” என்று துரோணர் கூவினார். “அவன் வில்லில் எழுந்தது தொல்லசுரர்களின் ஆற்றலென்பதை மறக்கவேண்டியதில்லை. கொல்லுங்கள் அவனை” என்றார்.

காந்தாரியின் முன் அமர்ந்து தன் கைகளால் களத்தை அளைந்து சோழிகளை அகற்றியபடி ஒற்றை விழி உறுத்து நோக்கியிருக்க ஏகாக்ஷர் சொன்னார். துரோணரின் சொற்களை நான் கேட்கிறேன். அவரும் அதை பெரும் திகைப்புடன் கேட்கிறார். எங்கிருந்து அது எழுந்ததென்று அவரும் வியக்கிறார். ஆனால் சீற்றத்துடன் அம்புகளை ஏவியபடி தன்னந்தனியனாக அப்படை முன் நின்றிருந்த சிறுவனை அவர் தாக்கினார். பிற கௌரவ வீரர்கள் அனைவரும் வில் தாழ்த்தி திகைப்புடன் அவரைப் பார்த்து நின்றனர். துரியோதனன் தன் வில்லை மடிமேல் வைத்து இரு கைகளாலும் தலையைத் தாங்கி உடல் குறுக்கி அமர்ந்துவிட்டான். கண்களில் கண்ணீர் வழிய துச்சாதனனும், நோக்கை திருப்பி உடல் நடுக்குற துச்சகனும் நின்றிருந்தனர். கர்ணன் தன் வில்லில் கோத்திருந்த அம்புடன் வெறுப்பு நிறைந்த முகத்துடன் அந்நிகழ்வை பார்த்தான். எவரும் ஒரு சொல்லும் உதிர்க்கவில்லை.

மேலும் மேலும் வெறிகொண்டு வசைச்சொற்களை உதிர்த்தபடி துரோணர் அபிமன்யுவை அம்புகளால் அறைந்தார். அவன் தேருக்கு அடியில் ஒளிய அம்புகளால் அதன் சகடத்தை உடைத்து தெறிக்க வைத்து அவனை அடித்தார். அவன் புரண்டு தேர்த்தட்டுக்கு அடியில் சென்று மறைய அவருடைய அம்புகள் தேரையே உடைத்து தெறிக்க வைத்து அவனை வெளிக்கொணர்ந்து தாக்கின. உடலெங்கும் அம்புடன் அவன்

மண்ணில் புரண்டு குருதி வழியும் முகத்துடன் கையூன்றி எழ முயன்றான்.

“நீ யார் அர்ஜுனனா? கீழ்மகனே, நீ அர்ஜுனனா என்ன?” என்று துரோணர் பற்களைக் கடித்தபடி கூவிக்கொண்டிருந்தார். “ஆசிரியனுக்கே கற்பிக்கிறாயா? நீ அசுரன். நீ அரக்கன்!” பின்னர் தன் வில்லை ஓங்கி தேர்த்தட்டில் வீசிவிட்டு இரு கைகளையும் விரித்து பீடத்தில் அமர்ந்தார். அபிமன்யு எழுந்து விழுந்துகிடந்த தேர்ச்சகடம் ஒன்றை எடுத்துக்கொண்டு துரோணரை தாக்கச் சென்றான். அதைக் கண்டு துரோணரின் முகம் வெறுப்பில் வலிப்பு கொண்டது. கைகள் நடுங்கின. ஆனால் அவர் வில்லை எடுக்கவில்லை. அஸ்வத்தாமன் பற்களைக் கடித்தபடி தன் வில்லில் அம்பு பொருத்தி நாணை இழுத்தான். அக்கணம் துரியோதனன் “வேண்டாம்... போதும்... நிறுத்துங்கள்... நிறுத்துங்கள் இதை!” என்று கூவினான்.

துச்சாதனன் “மூத்தவரே, நம் மைந்தனைக் கொன்றவன் இவன்” என்று கூச்சலிட்டான். “இவன் தலையை என் கைகளால் உடைக்கிறேன்” என்று அவன் பாய்ந்தபோது அவன் மைந்தன் துருமசேனன் “நில்லுங்கள் தந்தையே, மூத்தவருக்காக நான் முடிக்கவேண்டிய கணக்கு இது” என கதையுடன் அபிமன்யு மீது பாய்ந்தான். அபிமன்யு உடலெங்கும் தைத்து நின்று குருதிவீழ்த்திய அம்புகளுடன் தேர்ச்சக்கரத்தால் துருமசேனனை எதிர்த்தான். துருமசேனனின் அறைகள் பட்டு அந்த தேர்ச்சகடம் உடைந்தது. அறைபட்டு அபிமன்யு மண்ணில் விழுந்தான். துள்ளி அகன்றும் புரண்டும் அவன் கதையின் அறைகளை ஒழிந்தான்.

மலர்ச்சூழ்கைக்கு வெளியே ஜயத்ரதனின் வில்லை முறித்தபின் அர்ஜுனன் காண்டீபம் தாழ்த்தி உரத்த குரலில்

“சைந்தவரே, நான் உங்களுக்குச் செய்த உதவிகளுக்காக உளம்கொள்க! நீங்கள் சொன்ன சொற்களுக்காக என்னை விடுக!” என்றான். பின்னணியில் சகுனியின் முரசு “பொருதுக... பொருதுக!” என்று முழங்கியது. அர்ஜுனனை நோக்கி ஒருகணம் தயங்கிய ஜயத்ரதன் மாற்றுவில்லை வாங்கி அவன் மேல் மேலும் அம்புகளை தொடுத்தபடி முன்னேறி வந்தான். அவனை அறைந்து அறைந்து பின்னகரச் செய்துகொண்டிருந்த அர்ஜுனனின் கண்களிலிருந்து நீர் பெருகி வழிந்தது.

அபிமன்யு குருதிவழிய நிலைதடுமாறி கால்தளர்ந்து விழுந்தான். அவன் விழிகள் தளர்ந்து மூட கைகள் குழைந்தன. துருமசேனன் அவன் நெஞ்சின் மேல் கால் வைத்து “என் மூத்தவரின் குருதிக்காக இது” என்று கூவியபடி கதையால் அவன் தலையை ஓங்கி அறைந்து உடைத்தான். தலைகோப்பை உடைந்து அகல, வெண்கூழென தலைக்குள்ளிருந்து மூளை வெளிப்பட, கைகால்கள் விதிர்த்து இழுத்துக்கொள்ள அபிமன்யு தன் குருதியால் சேறான மண்ணில் கிடந்து புளைந்தான். அவன் வாயிலிருந்து ஏதோ சொல் எழுவதை கர்ணன் கூர்ந்து நோக்கினான். துருமசேனனும் குருதியும் நிணமும் வழிந்த தன் கதையைத் தாழ்த்தி முழந்தாளிட்டுக் குனிந்து அவ்வுதடுகளை பார்த்தான். ஒரு பெயர் சொல்லப்படுவதுபோல் தோன்றியது. அது என்னவென்று அவர்களால் உய்த்துணரக் கூடவில்லை.

# கார்கடல் - 40



அஸ்தினபுரியின் புஷ்பகோஷ்டத்தில் ஏகாக்ஷரின் கதை கேட்டு அமர்ந்திருந்த காந்தாரி மெல்லிய சீறல் ஒலியுடன்

தலை குனிந்து விழிநீர் பெருக்கினாள். அவள் கண்களைக் கட்டியிருந்த நீலப் பட்டுத் துணியை நனைத்து அவ்விழிநீர் ஊறிப்பரவியது. காந்தாரியின் அருகே நின்றிருந்த சத்யசேனை குனிந்து அவள் தோளைப் பற்றி மெல்ல தட்டி "அரசி! அரசி!" என்றாள். காந்தாரி இரு கைகளாலும் கன்னத்தை அழுந்தத் துடைத்து மூச்சை இழுத்து சீராகி "ம்" என்று முனகினாள். போதும் என்பதுபோல் சத்யசேனை கைகாட்டினாள். அதை நோக்காமலேயே உணர்ந்து மேலும் சொல்லும்படி காந்தாரி கையசைவால் ஏகாக்ஷருக்கு ஆணையிட்டாள். ஏகாக்ஷர் மீண்டும் சொல்லத் தொடங்கினார்.

பேரரசி, அபிமன்யு கொல்லப்பட்டதை அறிவித்து காந்தாரரின் முரசுகள் முழங்கத் தொடங்கின. அச்செய்தியை நம்ப இயலாததுபோல் பிற முரசுகள் நெடுநேரம் அமைதி காத்தன. பின்னர் ஈர விறகு பற்றிக்கொள்வதுபோல் அச்செய்தி பிற முரசுகளிலும் எழத்தொடங்கியது. முரசொலிகள் இணைந்து "இளைய பாண்டவ மைந்தர் களம்பட்டார்! வீழ்ந்தார் அபிமன்யு. விண்ணுலகேகினார் இந்திரனின் பெயர்மைந்தர்" என்று முழங்க அதற்குள் அச்செய்தி பாண்டவப் படைகள் முழுக்க சென்றடைந்துவிட்டிருந்தது. பிற ஒலிகளோ வாழ்த்தொலிகளோ இன்றி பாண்டவப் படை குளிர்ந்து உறைந்து ஓசைகள் நின்றிருந்தது.

யுதிஷ்டிரர்தான் முதலில் நிலை மீண்டார். தன் உடலில் குடியேறிய துடிப்புடன் பாய்ந்திறங்கி நிலத்தில் நின்று "இளையோனே!" என்றார். "இளையோரே! எங்கே நகுலன்? சகதேவன் எங்கே? உடனே அழைத்து வருக அவர்களை!" என்று தன் ஏவலருக்கு ஆணையிட்டார். அவர்கள் அங்குமிங்கும் ததும்பி விலக "அழைத்து வருக இளையோரை! இப்போதே...

உடனே” என்று கூச்சலிட்டு என்ன செய்வதென்று அறியாமல் காலில் தடுக்கிய வில் ஒன்றை எடுத்து அப்பால் வீசினார். அவரை நக்க வந்த புரவியின் தலையை அறைந்தார். அதற்குள்ளாகவே இருபுறத்திலிருந்தும் நகுலனும் சகதேவனும் அவரை நோக்கி பாய்ந்துவந்து இறங்கினர்.

சகதேவன் அவரை அணுகி தலைகுனிந்தான். “செல்க! சென்று இளையோன் அருகே நின்றுகொள்க!” என்று யுதிஷ்டிரர் ஆணையிட்டார். பதற்றத்துடன் தேரில் ஏறி உடனே மீண்டும் இறங்கி “இன்னும் சற்று நேரத்தில் நான் அங்கு வருகிறேன். இங்கு சில ஆணைகள் எஞ்சியிருக்கின்றன. அதுவரை அங்கு நிலைகொள்க!” என்றார். மூச்சு இரைக்க நகுலனை நோக்கி “நமது படைகள் உளம் சோர்ந்திருக்கின்றன. இத்தருணத்தில் அவர்கள் முழு விசையுடன் தாக்கினால் நாம் முற்றழிவோம். திருஷ்டத்யும்னனிடமும் சாத்யகியிடமும் படைத்தலைமை கொள்ளும்படி எனது ஆணையை அறிவியுங்கள். இளையோர் எவரும் இத்தருணத்தில் படைநடத்த இயலாதென்று அவரிடம் சொல்லுங்கள்” என்றார்.

நகுலன் தலைவணங்கி கிளம்பிச்செல்ல யுதிஷ்டிரர் தன் ஏவலருக்கு தன்னை தொடரும்படி கைகாட்டிவிட்டு விரைந்து சென்று புரவியிலேறிக்கொண்டார். அருகிலிருந்த காவல்மாடத்தின் மீதேறி நின்று பாண்டவப் படைகளை பார்த்தார். அவர் எண்ணியது போலவே பாண்டவப் படைகள் அனைத்து ஒழுங்குகளையும் இழந்து வெறும் திரளென்று மாறியிருந்தன. அதுவரை நிகழ்ந்துகொண்டிருந்த போர்முடிச்சுகள் அவிழ்ந்து நீண்ட தையல் பிரிவதுபோல இரு படைகளும் அகன்றன. இரண்டுக்கும் நடுவே ஓர் இடைவெளி உருவாகி அகன்று வருவதை அவர் பார்த்தார். “அவர்கள்

பின்னடைகிறார்கள். தம்மை தொகுத்துக்கொண்டு முழு விசையுடன் நம்மை தாக்கவிருக்கிறார்கள்” என்று கூவினார். “திருஷ்டத்யும்னனிடம் சென்று சொல்க! நமது படைகள் அனைத்து ஒழுங்குகளையும் இழந்துவிட்டன. இனி ஐவிரல்சூழ்கை பயனற்றது. நாம் இன்று அந்தி வரை களத்தில் நம்மை காத்துக்கொள்வதொன்றே செய்யக்கூடுவது. அதற்குரிய புதிய சூழ்கை ஒன்றை அமைக்கச் சொல்க! அது வெறும் கவசக்கோட்டையாக இருந்தாலும் சரி” என்று ஆணையிட்டார்.

அவருடைய ஆணைகளை ஏற்று ஏவலர்கள் காவல்மாடத்திலிருந்து விரைந்திறங்கினார்கள். மெல்ல நகர்ந்துகொண்டிருந்த காவல்மாடத்தில் நின்றபடி அவர் அந்தப் படைவிரிசலை பார்த்துக்கொண்டிருந்தார். அது எதையோ சொல்ல விரிந்த உதடுகள்போல் அவருக்கு தோன்றியது. பின்னர் வெட்டுண்ட தசைப் பிளவுபோல. அதை நோக்குவதை தவிர்த்து விழி திருப்பிக்கொண்டார். பெருமூச்சுடன் அவர் காவல்மாடத்தின் படிகளில் இறங்கியபோது திருஷ்டத்யும்னனின் முரசொலிகள் எழுந்துகொண்டிருப்பதை கேட்டார். “அணி திரள்க! அணி திரள்க! படையினர் ஒருவரோடொருவர் தொடுத்துக்கொள்க! நீள்சரடென்று ஆகுக! நூற்றுவர் நூற்றுவர்களுடன் பொருந்துக! ஆயிரத்தவர் தொகுத்துக்கொள்க!” என்று முரசுகள் ஒலித்தன.

திருஷ்டத்யும்னன் ஒரு கேடயப் பெருஞ்சுவரை அமைக்கவிருக்கிறான் என்று யுதிஷ்டிரர் புரிந்துகொண்டார். கீழே நின்ற புரவியிலேறிக்கொண்டு “செல்க!” என்றார். அதற்கு முன்னால் நின்றிருந்த படைவீரன் அவர் எண்ணுவதை புரிந்துகொண்டு தன் புரவியிலேறிக்கொண்டு வழிவிலக்கி முன்னால் சென்றான். அவருடைய புரவி எப்போதுமே

வழிவிலக்குபவனை தொடரும் பயிற்சி கொண்டது. குழம்பி ஒருவரோடொருவர் முட்டி வெற்றொலிகள் எழுப்பியபடி மீண்டும் அணி திரண்டுகொண்டிருந்த பாண்டவப் படைகளின் நடுவினூடாக அவரது புரவி சென்றது. பாஞ்சாலப் படைப்பிரிவுகளின் உள்ளே தொலைவில் அவர் அர்ஜுனனின் குரங்குக்கொடி பறப்பதை பார்த்தார். அதைக் கண்டதும் அவர் நெஞ்சு பதைப்பு கொண்டது. புரவியிலேயே தோள்தொய்ந்து தலைகுனிந்து அமர்ந்தார்.

புரவியிலிருந்து இறங்கி மெல்ல நடந்தபோது தரையிலமர்ந்திருந்த அர்ஜுனனை கண்டார். நடையை சீராக்கியபடி அவனை நோக்கி சென்றார். அவனருகே இளைய யாதவர் நின்றிருந்தார். நகுலனும் சகதேவனும் அங்குதான் இருந்தார்கள். யுதிஷ்டிரர் புரவியிலிருந்து இறங்கி அர்ஜுனனை அணுகினார். அத்தருணத்தில் சொல்ல வேண்டிய சொற்களை தன்னுள்ளிருந்து எடுத்து கோத்துக்கொள்ள முயன்றார். ஒவ்வொரு சொல்லும் பிசின் பரவிய பளிங்குருளைகளைப்போல வழுக்கிச்சென்றது. அர்ஜுனன் தரையில் விழுந்து எழுந்தவன்போல் இரு கைகளையும் கால்களையும் பரப்பி தலைகுனிந்து அமர்ந்திருந்தான். கட்டவிழ்ந்த குழல்கற்றைகள் அவன் முகத்தை மறைத்தபடி தொங்கின. அவன் விக்கலெடுப்பதுபோல் அவருக்குத் தோன்றியது.

அவர் அணுகியதும் சகதேவன் அவரை நிமிர்ந்து பார்த்தான். அதிலிருந்த பகைமை அவரை ஒருகணம் திகைக்கச் செய்தது. பின்னர் சீற்றம் எழுந்தது. எதன் பொருட்டு அப்பகைமை என அவர் உள்ளம் வினாவியது. ஆனால் அதைக் கண்ட முதற்கணம் ஏன் என் உள்ளம் ஏற்றுக்கொண்டது என்று

உடனே அது குழம்பியது. முழந்தாளிட்டு அர்ஜுனன் அருகே அமர்ந்து அவன் தோளில் கைவைத்து “இளையோனே, ஊழ் அனைத்தையும்விட வலிது” என்றார். அர்ஜுனன் தன் கையால் தோளில் வைக்கப்பட்ட அவர் கையை விலக்கினான். அச்செயலிலிருந்த கசப்பு மெல்லிய தொடுகையிலேயே அவரை வந்தடைந்தது. அவர் உள்ளம் மேலும் இறுக “இப்போரில் நாம் அனைவருமே உயிரை முன்வைத்துதான் ஆடிக்கொண்டிருக்கிறோம். நம் உயிரை மட்டுமல்ல நம் மைந்தரின் உயிர்களையும்” என்றார்.

“நாம் எவரும் மறுகணமே இறப்பதற்கான வாய்ப்பிருக்கிறது. ஆகவே இருந்தவர்க்கோ இறப்பவர்க்கோ நாம் துயர்கொள்ள வேண்டியதில்லை” என்று யுதிஷ்டிரர் தொடர்ந்தார். அர்ஜுனன் அவர் சொற்களை கேட்டதாகத் தெரியவில்லை. ஆனால் கூரிய ஊசியால் குத்தப்பட்டதுபோல் ஓர் விதிர்ப்பு அவன் உடலில் கடந்து சென்றது. யுதிஷ்டிரர் மேலும் எதையேனும் சொல்ல வேண்டுமென்று விரும்பினார். ஆனால் அங்கு நின்ற அத்தனை பேருமே அவருடைய சொற்களுக்கெதிராக உளமறுப்பு கொண்டிருக்கிறார்கள் என்பதை சொல்லோ உடலசைவோ எழாமலேயே அவரால் புரிந்துகொள்ள முடிந்தது. அவர் மேலும் தத்தளித்த பின் எழுந்துகொண்டார்.

அருகே நின்ற இளைய யாதவர் அவரிடம் “தாங்கள் தங்கள் படைக்கு திரும்பலாம், அரசே. இளைய பாண்டவன் இனி படைமுகப்பிற்கு எழ இயலாது” என்றார். யுதிஷ்டிரர் “ஆம், இன்னும் ஒரு நாழிகைக்குள் அந்தி முரசுகள் முழங்கத்தொடங்கிவிடும். அதுவரை நாம் தாக்குப்பிடிக்கவேண்டும்” என்றார். பின்னர் திரும்பி நகுலனிடம் “மந்தன் எங்கே?” என்றார். “அவர் இன்னும் களத்தில்தான்

இருக்கிறார், மூத்தவரே” என்றான். “அவனுக்கு செய்தி தெரியாதா என்ன?” என்றார் யுதிஷ்டிரர். நகுலன் சற்று பொறுமையிழந்து, பின்னர் மீண்டு “செய்தியறியாத எவரும் இப்போது படையிலில்லை” என்றான். யுதிஷ்டிரர் “எனில் ஏன் அவன் இங்கு வரவில்லை? அவனுடைய இளையோன் மைந்தன் அல்லவா அபிமன்யு? இங்கு வந்து அவன் நின்றிருக்கவேண்டாமா?” என்றார்.

“அவர் படைமுகப்பில் நிற்பதே நன்று. அவரது உளநிலைக்கும் உகந்தது” என்று இளைய யாதவர் சொன்னார். “செல்லுங்கள், அரசே. தாங்களும் படைகளுக்குள்ளேயே நின்றுகொள்ளுங்கள். நான் தங்கள் இளையோனை பார்த்துக்கொள்கிறேன்.” யுதிஷ்டிரர் நகுலனையும் சகதேவனையும் நோக்கி “பார்த்துக்கொள்ளுங்கள். அவன் உள்ளம் எந்நிலையில் இருக்கிறதென்று நாம் அறிவோம். உடனிருப்பது நமது கடன்” என்றார். அவர்களிருவர் விழிகளிலும் தெரிந்த ஒன்று அவரை அச்சுறுத்த தன் விழிகளை விலக்கிக்கொண்டு இளைய யாதவரிடம் “நான் படைகளுக்குள் செல்கிறேன். அவர்கள் நம்மை பெருகிவந்து அறைந்தால் இன்றே போர் முடிந்துவிடும். நாம் முற்றழிவோம்” என்றார்.

இளைய யாதவர் “அவர்கள் நம்மை தாக்கவில்லை” என்றார். “ஏன்?” என்று யுதிஷ்டிரர் திகைப்புடன் கேட்டார். “அவர்களே தயங்கிவிட்டார்கள். ஏன் என்று தெரியவில்லை. அவர்கள் தாக்குவதென்றால் இதற்குள் தாக்கியிருக்கவேண்டும்” என்று இளைய யாதவர் சொன்னார். “ஆம், நான் மேலிருந்து பார்த்தபோது இரு படைகளும் விலகி குருக்ஷேத்ரம் மீண்டும் தெளிவதையே கண்டேன்” என்றார் யுதிஷ்டிரர். “ஆனால் நான் அவர்கள் நம்மை தாக்குவார்கள் என்றே எண்ணினேன். ஏன்

தயங்கினார்கள் என தெரியவில்லை. மைந்தனின் இறப்பால் நாம் சீற்றம்கொண்டிருப்போம் என அஞ்சியிருக்கலாம்.”

திரும்பி தன் புரவியிலேறிக்கொண்டு “செல்க!” என்றார். மீண்டும் அவருடைய இந்திரப்பிரஸ்த வில்லவர்படை நடுவே வந்து சேர்ந்தார். அங்கே ஆணைகளை இட்டபடி நின்றிருந்த சாத்யகியிடம் “என்ன நிகழ்கிறது?” என்றார். “அவர்களின் படை விலகி ஒருங்கமைவு கொள்கிறது” என்றான் சாத்யகி. “அவர்கள் பெருகிவரக்கூடும்” என்றார் யுதிஷ்டிரர். “பெருகி வந்து பிறிதொரு தாக்குதலை நடத்த இன்னும் பொழுதில்லை. அந்தி மங்கிக்கொண்டிருக்கிறது” என்று சாத்யகி சொன்னான். “என்ன நிகழ்கிறது? ஏன் அவர்கள் தயங்குகிறார்கள்? நாம் சீற்றம் கொண்டு போரிடுவோம் என்று அஞ்சிவிட்டார்களா?” சாத்யகி “அவர்களும் துயருற்றிருக்கலாம்” என்றான். “ஏன்?” என்றார் யுதிஷ்டிரர். “அரசே, அபிமன்யு துரியோதனரால் தோளிலிட்டு வளர்க்கப்பட்ட மைந்தன்.” யுதிஷ்டிரர் அவனை ஒருகணம் நோக்கிவிட்டு மீண்டும் தன் புரவியிலேறிக்கொண்டு “செல்க!” என்றார். காவலன் அவரை தெற்குக் காவல்மாடத்தருகே கொண்டு சென்றான். அதன் மேல் ஏறிக்கொண்டிருக்கையில் அன்றைய போர் முடிந்துவிட்டது என்று அவருக்குத் தோன்றியது.

காவல்மாடத்தில் நின்று படைகளை பார்த்தபோது இரு படைகளும் முற்றாக சூழ்கை அமைத்து மீண்டு ஒன்றை ஒன்று நோக்கி நின்றிருக்க நடுவே குருக்ஷேத்ரம் வெறித்திருப்பதை யுதிஷ்டிரர் கண்டார். அதில் கொல்லப்பட்டவர்களும் புண்பட்டவர்களும் உடைந்த தேர்களும் புரவிகளுமாக உடல்கள் நெளிய சிற்றலையெழும் ஏரிப்பரப்புபோல தோன்றியது அந்நிலம். இடையில்

கைவைத்தபடி அவர் அதை பார்த்துக்கொண்டிருந்தார். அவரருகே நின்ற ஏவலனிடம் “மந்தன் என்ன செய்கிறான்?” என்றார். “சற்று முன்பு வரை அவர் போர்புரிந்துகொண்டிருந்தார். அவரால் பால்ஹிகரை கடக்க இயலவில்லை. நமது முழுப் படையும் பின்னடைந்தபோது கதை தாழ்த்தி மையச்சூழ்கையுடன் வந்து இணைந்துகொண்டார்” என்றான். “ஆம், இன்றைய போர் இத்துடன் முடிந்தது” என்று யுதிஷ்டிரர் சொன்னார்.

தொலைவில் அந்தியை அறிவிக்கும் முரசுகள் ஒலிக்கத்தொடங்கின. யுதிஷ்டிரர் சற்று ஆறுதல் கொண்டு நீள்மூச்செறிந்தார். “இன்று பேரழிவில்லாமல் நாம் தப்பியது நல்லூழ் என்றே சொல்லவேண்டும்” என்றார். அந்திமுரசுக்குப் பின்னரும் இரு தரப்புப் படையினரும் கலையாது அசையாது அவ்வாறே நின்றிருந்தனர். படைகள் பின்னடையலாம் என்பதை அறிவிக்கும் முரசுகள் முழங்கத் தொடங்கிய பின்னரும் இரு படைகளும் கலையவில்லை. பின்னர் கௌரவப் படை உருகி மடிந்து உருவழிந்து வற்றி மறைவதுபோல் திரும்பத் தொடங்கியது. அவ்வசைவைக் கண்ட பின்னர் பாண்டவப் படைகளும் பின்னகரலாயின.

யுதிஷ்டிரர் அவைக்குள் நுழைந்தபோது வாழ்த்தொலிகள் எழவில்லை. அவையோர் எழுந்து நின்ற உடையசைவுகளும் அணியசைவுகளும் மட்டுமே எழுந்தன. அவர் எவரையும் நோக்காது கைகூப்பி வணங்கிவிட்டு தன் பீடத்தில் அமர்ந்தார். இளைய யாதவரும் அர்ஜுனனும் வரவில்லை என்பதை பார்த்த பின் திரும்பி சகதேவனிடம் அவை தொடங்கலாம் என்பதை அறிவுறுத்த கையை காட்டினார். சகதேவன்

அவைமுறைமையை அறிவித்ததும் குந்திபோஜர் எழுந்து “அரசே, இன்று நாம் இப்போர் தொடங்கிய நாளிலிருந்து நமக்கு நிகழ்ந்த பேரிழப்பொன்றை அடைந்திருக்கிறோம். நம் படைகள் அனைவருமே உளம் தளர்ந்திருக்கிறார்கள். பீஷ்மரை வென்றபோது நாம் அடைந்த அனைத்து ஊக்கங்களையும் இழந்து இப்போர் இனி தொடரத்தான் வேண்டுமா என்ற எண்ணத்தை அடைந்திருக்கிறோம்” என்றார்.

அவையில் பெருமூச்சுகள் எழுந்தன. குந்திபோஜர் “நம் இளையோன் அபிமன்யு அர்ஜுனனின் மைந்தன் மட்டுமல்ல. இந்தக் குலத்தின் மாபெரும் வீரன் அவனே என்பதை நாமனைவரும் அறிவோம். என்றேனும் நம் வேள்விப்புரவிக்கு முன்னால் தனியாக வில்லுடன் அவன் செல்வான் என்று கனவு கண்டிருந்தோம். அவனது கால்படும் நிலமெல்லாம் நம் நிலமாகும் என்றும் அவனது குருதியில் குடி பெருகி பாரதவர்ஷத்தை நிறைக்கும் என்றும் எண்ணியிருந்தோம். அனைத்தையும்விட இந்தப் போர் வெல்ல நாம் நம்பியிருந்த முதன்மை பெருவீரர் மூவரில் ஒருவன் அவன். இவ்விழப்பை எதிர்கொள்ள நாம் என்ன செய்யவிருக்கிறோம் என்பதே இந்த அவையில் பேசவேண்டியது” என்றார்.

பீமன் கையைத் தட்டியபடி எழுந்து “அதற்கு முன் இந்த அவையில் பேச வேண்டிய ஒன்றுண்டு” என்றான். “இளையோனும் தனித்தோனுமாகிய அவனை மலர்ச்சூழ்கைக்கு உள்ளே செல்ல ஆணையிட்டது யார்? எந்தப் போர்நெறிகளைக் கொண்டு அவர் அதை செய்தார்?” யுதிஷ்டிரர் சினத்துடன் “ஆம், நான் அதை செய்தேன். அக்கணத்தில் அதை செய்தாகவேண்டுமென்று எனக்குத் தோன்றியது. அவர்களின் படைசூழ்கை திறந்து கிடந்தது. அதை மேலும் உடைத்து

உள்புகுந்து வெல்ல இயலுமென்று கண்டேன். ஆகவே அவனை முதல் படைவீரன் என்று உள்ளே அனுப்பினேன். நீயும் அர்ஜுனனும் உடன் தொடர்வீர்கள் என்று நம்பினேன். நீங்கள் இவ்வாறு அங்கெங்கோ இருப்பீர்கள் என்று எண்ணவில்லை" என்றார்.

"உங்கள் மைந்தனை பின்தொடர முடியாத அளவிற்கு உங்களை தடுத்து நிறுத்துபவர்களை எதிரில் கொண்டிருக்கிறீர்கள் என்று சற்றும் கருதவில்லை. ஏனெனில் உங்களை மாவீரர்களென்றும் எவராலும் தடுத்து நிறுத்த முடியாதவர்களென்றும் கற்பனை செய்தேன். உங்களை நம்பினேன். மைந்தனை காக்கமுடியாதவர்கள் என அறிந்திருந்தால் அவ்வாறு செய்திருக்கமாட்டேன்" என்றார். "மூத்தவரே, படைசூழ்கை குறித்து எதுவும் அறியாதவர் நீங்கள். மலர்ச்சூழ்கை என்பது அதன் மையத்தில் இருக்கும் ஒன்றை நோக்கி எதிரியை ஈர்த்து உள்ளழைத்து மூடிக்கொள்வது. நீங்கள் கண்ட அந்த விரிசல் என்பது உண்மையில் பொறியின் வாய்திறப்பு. அதற்குள் பயிலா இளைஞனாகிய அபிமன்யுவை எப்படி அனுப்பினீர்கள்? அவனுக்கு அப்படைசூழ்கையை உடைத்து வெளிவரத் தெரியுமா என்பதை அறிந்தீர்களா? முதலில் அப்படைசூழ்கை என்றால் என்னவென்று அறிந்தீர்களா?" என்றான் பீமன்.

யுதிஷ்டிரர் "படைசூழ்கைகளை அறிந்தவர்கள்தான் இங்கு போரிடுகிறார்களா? நான் போர்க்கலை அறியேன். நான் நெறியறிந்தவன் மட்டுமே. போர்க்கலை அறிந்தவன் அவன் என்று சூதர்கள் பாடுகிறார்கள். நான் அவனை சூதர் சொல் வழியாக மட்டுமே அறிவேன். அவனுக்கு வெளிவரத் தெரியாதென்று எனக்கு எப்படி தெரியும்?" என்றார். குந்திபோஜர்

“சூழ்கைகளிலிருந்து வெளிவருவது முற்றிலும் வேறு கலை. அதை பொதுவாக இளையோர் ஆழ்ந்து கற்று நினைவில் கொள்வதில்லை. எங்கும் வென்றுமீளமுடியும் என்று மட்டுமே அவர்கள் எண்ணுகிறார்கள். வெளிவரும் முறையை கற்ற இளைஞர் எவருமில்லை. ஐயமிருந்தால் இந்த அவையிலேயே கேட்டுப்பாருங்கள்” என்றார். துருபதர் “ஆம், வெளிவரும் முறையை முதலிலேயே எண்ணிச்சூழ்ந்துவிட்டு உள்ளே செல்ல எண்ணுவது நடுஅகவை கடந்தவர்கள் மட்டுமே” என்றார்.

“அதை நான் அறியேன், அவனை மாவீரன் என எண்ணினேன்” என்றார் யுதிஷ்டிரர். பீமன் “அவனைக் கொன்றது நீங்கள். அப்பொறுப்பை நீங்கள் இந்த அவையில் ஏற்றுத்தான் ஆகவேண்டும்” என்றான். “என்ன சொல்கிறாய்?” என்று சீற்றத்துடன் எழுந்த யுதிஷ்டிரர் உடனே உளம்தளர்ந்து அமர்ந்து “ஆம், அவனை மட்டுமல்ல, அஸ்தினபுரியின் படைகளுக்கு முன்னால் நெஞ்சு உடைந்தும் தலை சிதைந்தும் விழுந்த அத்தனை இளைஞர்களையும் கொன்றவன் நான்தான். அப்பொறுப்பை நான் ஏற்றாகவேண்டும். விண்ணவர் முன்னும் மூதாதையர் முன்னும் அதற்கான மறுமொழியை நான் உரைக்கவேண்டும். அப்பொறுப்பிலிருந்து நான் எவ்வகையிலும் விலகவில்லை” என்றார்.

“மழுப்பும் சொற்கள் தேவையில்லை. அரசரென்று நீங்கள் ஆணையிடுவது வேறு, படைத்தலைவன் என்று தாளா பொறுப்பை ஏற்று நீங்கள் ஆணையிட்டது பிறிதொன்று” என்று பீமன் சொன்னான். சகதேவன் “மூத்தவரே, இனி அப்பேச்சை வளர்ப்பதில் பொருளில்லை. பிழை நிகழ்ந்துவிட்டது. இழப்பு நம் குடிக்கே என்பதனால் நாம் அதை பொறுத்துக்கொள்வோம்”

என்றான். “நம் அனைவருக்கும் அப்பிழையில் பொறுப்புண்டு. அரைநாழிகைப் பொழுது நீங்கள் முந்தி வந்திருந்தாலும் அபிமன்யுவை காத்திருக்க இயலும். இளையவரும் நீங்களும் தனித்தனியாக மலர்ச்சூழ்கையின் இதழ்களை தாக்கியதற்கு மாறாக ஒற்றைப்படையென்றாகி ஒரு புள்ளியில் தாக்கியிருந்தால் உடைத்து உட்புகுந்து அவனுக்கு துணை சென்றிருக்க இயலும். அதுவும் அத்தருணத்தில் உங்களுக்குத் தோன்றவில்லை.”

“போர் என்பது அரசர் சொன்னதுபோல் ஊழின் விளையாட்டே” என அவன் தொடர்ந்தான். “அனைத்தும் எண்ணி சூழ்ந்து இயற்றப்படுவதாகவே தோன்றும். எண்ணம் சூழ்ந்து இயற்றப்படுவதற்கு அப்பால் பிறிதொன்றே முடிவுகளை சமைக்கிறது என்பது பின்னர்தான் தெரியும்.” பீமன் “நான் சொல்விளையாட இங்கு வரவில்லை. இளையோன் எங்கும் தன்னை மறந்து பாய்ந்து நுழைபவன் என்பதை நாமனைவரும் அறிவோம். இந்தப் படைக்கு வந்தபோதே ஒவ்வொரு கணமும் உயிர்கொடுக்கத் துடிப்பவன் போலிருந்தான் அவன். அவனை முன்னிறுத்தலாகாதென்று நான் பலமுறை எண்ணினேன். ஒவ்வொரு முறையும் அவனுடன் இருபுறமும் சதானீகனும் சுருதசேனனும் நின்றிருக்க வேண்டுமென்று அறிவுறுத்தினேன். சுருதகீர்த்தியிடம் எப்போதும் அபிமன்யுவுடன் அமையவேண்டுமென்று ஆணையிட்டிருந்தேன்” என்று சொன்னான்.

அவன் குரல் இடறியது. “இன்று நாம் அவனை இழந்துவிட்டு நிற்கிறோம். நாம் மறுமொழி சொல்லவேண்டியது அர்ஜுனனிடமல்ல, பாண்டுவிடம், விசித்திரவீரியனிடம், சந்தனுவிடம் பிரதீபனிடம்.” அவன் குரல் குன்றி விம்மல்

போலாகியது. “படைத்திறன் கொண்ட தந்தையரும் உடன்பிறந்தாரும் பெரும்படைத்திரளும் இருந்தும் தன்னந்தனியாக நின்று போரிட்டு தலையுடைந்து விழுந்தான் என் மைந்தன். ஆம், அதற்கு முதற்பொறுப்பை நானே ஏற்கிறேன். முதற்பொறுப்பை நானே ஏற்கிறேன்!” என்று அவன் ஓங்கி நெஞ்சில் அறைந்தான். முழங்கிய குரலில் வஞ்சினம் உரைத்தான்.

“இந்த அவையிலிருக்கும் அனைவரும் அறிக! என் மூதாதை அறிக! தெய்வங்கள் அறிக! இதற்குப் பிழைநிகராக நான் ஒரு பொழுதும் அரசஇன்பங்கள், களியாட்டுகள் எதிலும் இனிமேல் கலந்துகொள்வதில்லை. அரசனாகவோ அஸ்தினபுரியின் குடியாகவோ எந்தச் சிறப்பையும் சூடமாட்டேன். இனி என் வாழ்க்கையில் இன்னுணவையோ நல்லாடையையோ கொள்ளமாட்டேன். நான் இக்கணத்திலிருந்து வெறும் காட்டாளன் மட்டுமே. இது என் நோன்பு. இங்கிருந்து சென்ற பின் விண்புகுந்து என் மைந்தனிடம் சொல்கிறேன், பொறுத்தருள்க என்று. அவன் பொறுத்தருள்செய்த பின்னரே என் மூதாதையரிடம் சென்று நிற்பேன்.” உடல் நடுங்க சில கணங்கள் நின்றுவிட்டு பீமன் எடையுடன் பீடத்தில் அமர்ந்தான்.

அவை முழுக்க மெல்லிய அழுகை நிறைந்திருந்தது. யுதிஷ்டிரர் நிலைகுலைந்தவர்போல தன் பீடத்தின் கைகளை தடவிக்கொண்டிருந்தார். தலையை அசைத்தபடி தனக்குள் பேசியபடி எக்கணமும் எழுந்து அகன்றுவிடுவார் என்று உடல் கூடியபடியும் இருந்தார். சகதேவன் “நாம் இங்கு துயரை பரிமாறுவதற்காக கூடியிருக்கவில்லை. இழப்பு பெரிதே. அதை நாமனைவருமே நன்குணர்ந்துமிருக்கிறோம். இனி படைசூழ்கை

அமைத்து இப்போரை வெல்வதொன்றே நம் இலக்கு. இறந்த மைந்தனுக்கு நாம் ஆற்றும் கடன் இப்போரை வென்று முன்னெழுவதே” என்றான்.

திருஷ்டத்யும்னன் “ஆம், இந்த இழப்பிலிருந்து இரு மடங்கு விசையுடன் நாம் எழுந்தாகவேண்டும். நாளை நாம் சோர்ந்து தளர்ந்து இருப்போம் என்று எண்ணி அவர்கள் வருகையில் ஏழு முறை தீட்டப்பட்ட வாள் போல் நமது படை எழுந்து நின்றாகவேண்டும். அது ஒன்றே நாம் இயற்றவேண்டியது. விண்ணில் நின்று அவன் நம்மை நோக்குகிறான் என்றால் அவன் உளம் மகிழ்வது அதன்பொருட்டாகவே இருக்கும்” என்றான். அவையினர் “ஆம்! ஆம்!” என்றனர். சாத்யகி “நாம் வென்றாகவேண்டும். அவர்களின் நெஞ்சை மிதித்து நின்று இளவரசனை நினைவுகூர்ந்தாகவேண்டும்” என்றான். “ஆம்! ஆணை! பழிநிகர் செய்யவேண்டும்!” என அவை முழக்கமிட்டது.

யுதிஷ்டிரர் சகதேவனை நோக்கி “இளையோனே, அபிமன்யு களம்படுதலை இங்கு அறிவித்தபோது இயல்பாக உன் நாவில் எழுந்தது பீஷ்மர் படுகளத்திற்குப் பின் இது நிகழ்ந்துள்ளது என்று. உன்னை அறியாமலேயே இணைவைத்துவிட்டாய். ஏனென்றால் அதுவே மெய். அவர்கள் தரப்பில் பிதாமகர் அவ்வாறு களம் விழுவாரெனில் நம் தரப்பில் ஒரு மைந்தன் ஏன் இவ்வண்ணம் விழலாகாது? துலாவின் தட்டில் நாமும் ஈடுவைத்துவிட்டோம். இப்போது இருதரப்பும் நிகராகிவிடும். புதிதென நாளை போரை தொடங்குவோம்” என்றார்.

பீமன் பெருத்த ஓசையுடன் பீடம் நகர்ந்து பின்னால் சரிந்து விழ எழுந்து கையை வீசியபடி அவையிலிருந்து வெளியே சென்றான். அவன் நடந்து அகல்வதை யுதிஷ்டிரர் அடக்கப்பட்ட சீற்றத்துடன் பார்த்திருந்தார். பின்னர் எதுவும் நிகழாததுபோல்

திரும்பி அவையினரிடம் “நாம் இயற்றவேண்டுவதென்ன என்பதை சூழ்க!” என்றார்.

# கார்கடல் - 41

யுதிஷ்டிரர் அர்ஜுனனின் குடிலுக்குள் நுழைந்தபோது அங்கே இருந்த நகுலனும் சகதேவனும் எழுந்து வணங்கினர். “எப்படி இருக்கிறான்?” என்று அவர் கேட்டார். சகதேவன் ஒன்றும் சொல்லவில்லை. யுதிஷ்டிரர் அவன் மஞ்சத்தின் அருகே அமர்ந்தார். காட்டுக்கொடிகளை இழுத்துக்கட்டி பின்னப்பட்டிருந்த அந்த மஞ்சம் அவருடைய உடல்பட்டு சற்று அசைந்தது. யுதிஷ்டிரர் “இளையோனே” என அழைத்தார். அர்ஜுனன் எதிர்வினை ஆற்றவில்லை. யுதிஷ்டிரர் “இளையோனே” என மீண்டும் அழைத்தார். பின்னர் சகதேவனிடம் “அகிபீனா கொடுக்கப்பட்டுள்ளதா?” என்றார். சகதேவன் “அவர் விழித்துத்தான் இருக்கிறார்” என்றான்.

யுதிஷ்டிரர் திரும்பி அர்ஜுனனிடம் “இளையோனே” என்றார். சகதேவன் “அவர் முற்றாகவே பேச்சு ஒடுங்கிவிட்டிருக்கிறார். நாங்கள் பலமுறை அவரை பேசவைக்க முயன்றோம். மேலும் மேலும் உள்ளொடுங்கிக்கொண்டே செல்கிறார்” என்றான். யுதிஷ்டிரர் “இளையோனே, என்ன இது? நீ அறியாததா? இறப்பும் பிறப்புமாகவே இப்புவியில் மானுட வாழ்க்கை நிகழ்கிறது. போர்க்களத்தில் வீழ்வது வீரனுக்கு விண்ணுலகுக்கான பாதை எனக் கேட்டு வளர்ந்தவர்கள் நாம். நாளையே நம்மில் எவர் வீழ்வார்கள் என்றும் நமக்குத் தெரியாது” என்றார். அர்ஜுனன் அங்கிருப்பதாகவே தோன்றவில்லை.

யுதிஷ்டிரர் சகதேவனிடம் “இளைய யாதவன் வந்தானா?” என்றார். “இல்லை” என்றான் சகதேவன். “அவனை அழைத்து வருக! இவனை இறப்பில் இருந்து அவன்தான் மீட்டான். இந்த இருளிலிருந்தும் அவனால் மட்டுமே மீட்க முடியும்” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “மூத்தவரே” என்றான் சகதேவன். “செல்க, நான் அவனை அழைத்தேன் என்று சொல்” என்றார் யுதிஷ்டிரர். சகதேவன் வணங்கி வெளியே செல்ல நகுலனிடம் “மந்தனையும் அழைத்துவரச் சொல்” என்றார். “அவர் நேராக உணவுச்சாலைக்கு சென்றார். இப்பொழுதில் முழுமையான மதுமயக்கில் இருப்பார்.”

யுதிஷ்டிரர் எரிச்சலடைந்து “அனைவரும் இங்கு வரவேண்டும். அத்தனை மைந்தரும் வரட்டும். இது நம் குடியின் அவை. இவன் இப்படி இருக்கையில் நாம் என்ன செய்யமுடியும்? சென்று துயில்வோமா என்ன?” என்றார். பின்னர் தணிந்து “இங்கேயே இருப்போம். இவனைச் சூழ்ந்து அமர்ந்திருப்போம். நம்மால் வேறென்ன செய்யமுடியும்? நானும் எத்தனை வெற்றுச்சொற்களைத்தான் எடுப்பது?” என்றார். நகுலன் “நீங்களும் அகிபீனா உண்டு துயிலலாம், மூத்தவரே. மிகமிக உளம் தளர்ந்திருக்கிறீர்கள்” என்றான்.

“ஆம்” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “என்னால் எதையுமே தாளமுடியவில்லை. நான் விழைந்ததல்ல இந்த நிலமும் முடியும். இதோ அனைத்துக்கும் அடிகோலியவனாக அமர்ந்திருக்கிறேன். நூறு பிறவிகளில் ஈடுசெய்ய இயலாத பெரும்பழியை சூடியிருக்கிறேன். சென்று தந்தையின் முகத்தை நோக்கக்கூட தகுதியற்றவனானேன்.” குரல் உடைய அவர் விம்மி அழத் தொடங்கினார். கைகளால் முகத்தை பொத்திக்கொண்டு உடலை நன்கு ஒடுக்கி குனிந்து தோள்கள்

குலுங்க அழுதார். நகுலன் என்ன சொல்வதென்று தெரியாமல் நோக்கி நின்றான். அவர் அழுதுகொண்டிருக்கையில் அங்கிருந்து செல்வதற்கும் தோன்றவில்லை. அவர் ஓய்வதற்காக அவன் காத்திருந்தான்.

மெல்ல விசும்பி ஓய்ந்து மீண்டும் துயர் எழ அவர் அழுதார். பின்னர் வெறுமனே உடல் மெய்ப்புகொண்டு அசைய வளைந்து அமர்ந்திருந்தார். எப்போதோ அங்கே நகுலன் இருப்பதை உணர்ந்து எரிச்சலுடன் "என்ன செய்கிறாய் இங்கே? செல்க! என் ஆணை நிறைவேறவேண்டும். அனைவரும் இங்கே வரவேண்டும்" என்றார். நகுலன் தலைவணங்கி வெளியே சென்றான். யுதிஷ்டிரர் "நில்!" என்று கூவினார். "நான் உன்னிடம் செல்லும்படி ஆணையிட்டேன். ஏன் இங்கே நின்றாய்? நான் அழுவதை பார்த்துநின்றாயா? அது உன்னை நிறைவுறச் செய்கிறது அல்லவா?" என்று கூச்சலிட்டார். அவர் கழுத்தில் நீள்நரம்பு புடைத்து அசைந்தது. "ஆம், நான் கோழை. வீணன். பொய்நடிப்பு நிகழ்த்துபவன். வீண்சொல் எடுக்கும் முதியவன்... ஆனால் இந்த நடிப்பால்தான் உயிர்வாழ்கிறேன்." மூச்சிரைக்க அவனை நோக்கி வந்தபோது அவருடைய விழிகள் பித்துகொண்டு சிவந்திருந்தன.

அவர் அகிபீனா உண்டிருப்பாரோ என நகுலன் ஐயம்கொண்டான். அவன் அங்கே நிற்காமல் வெளியே செல்ல அவர் திரும்பி அந்த அறையை திகைப்படைந்தவர்போல நோக்கினார். அங்கு நிகழ்ந்த எதையுமே அறியாதவனாக அர்ஜுனன் கிடந்தான். ஆனால் விழிகள் வெறித்துத் திறந்திருந்தன. "இளையவனே, இளையவனே" என மெல்ல யுதிஷ்டிரர் அழைத்தார். அவன் விழிகளில் அசைவு தெரியவில்லை. "போதும்... இப்படியே இவையனைத்தையும்

விட்டுவிட்டு கிளம்பிவிடுவோம். எங்கேனும் அடர்காட்டில் சென்று வாழ்வோம்... நம் வாணாள் முடியும் வரை இங்கே விலங்கென்றும் சிற்றுயிர் என்றும் இருப்போம். நாம் இருப்பதை நாமன்றி எவரும் அறியவேண்டியதில்லை.”

அதை சொல்லச் சொல்ல அவ்வெண்ணத்தால் உந்தப்பட்டு முகம் மலர்ந்தார். விழிகளில் பித்தின் வெறிப்புடன் அர்ஜுனன் தோளைப் பற்றி உலுக்கி “நாம் மகிழ்ந்திருந்த நாட்கள் காட்டின் மடியில்தான். முனிவர்களின் குடில்கள், தூநீர்வாவிகள், நதிக்கரைகள். நாம் வாழ்க்கையை அங்கேதான் அறிந்தோம். சென்றுவிடுவோம். ஐவரும் இப்படியே கிளம்புவோம். இங்கே என்ன நிகழவேண்டும் என இளைய யாதவனே முடிவெடுக்கட்டும். இது அவனுடைய போர். நம்முடையது அல்ல” என்றார்.

அவர் அர்ஜுனனின் தோளை வெறியுடன் உலுக்கினார். “நாம் சதசிருங்கத்திற்கே செல்வோம். அந்த ஏரி அங்குதான் இருக்கும். நினைவிருக்கிறதா? அதில் இரு நிலவுகளை நாம் கண்ட இரவை? நம் தந்தை அங்கே இருக்கக்கூடும். நாம் அங்கே மீண்டும் சிறுவர்களாகக்கூட மாறமுடியும்.” அவர் அவன் முகத்தை சிலகணங்கள் உற்று நோக்கினார். மெல்ல பித்து அகல உளம் சோர்ந்து பெருமூச்சுவிட்டார். “எதுவும் எஞ்சப்போவதில்லை. ஆம், எதுவுமே நமக்கு எஞ்சப்போவதில்லை. நாம் இந்தப் போரில் அனைத்தையுமே இழப்போம். இது இப்போர் தொடங்குவதற்கு முன்னரே எனக்குத் தெரியும். பலமுறை என் கனவில் வந்திருக்கிறது இது.”

“இந்தப் போருக்கு நாம் எழுவதற்கு முன்னர் கனவில் நான் இரு பெண்களை பார்த்தேன். அம்பாலிகையும் அம்பிகையும்.

நம் மூதன்னையர். இளையோனே, இது அவர்களின் வஞ்சம். அவர்கள் கிளம்பிச்செல்லும்போது அந்த வஞ்சத்தை மட்டும் நம் அரண்மனையிலேயே விட்டுவிட்டுச் சென்றுவிட்டார்கள். அது அங்கே நூறுமேனி பெருகியது…” அவர் மீண்டும் விம்மியழுதார். அழுகையை நிறுத்த முயலுந்தோறும் முடியாமல் மேலும் அழுதார். அழுகை கலந்த குரலில் அவனை உரக்கக் கூவி அழைத்தார். “எழுந்திரு, மூடா… கீழ்மகனே, எழுந்திரு. நீ இல்லாமல் நான் இங்கே என்ன செய்யப்போகிறேன்? கீழ்மகனே! கீழ்மகனே!”

அவனை ஓங்கி ஓங்கி அறைந்தார். பின்னர் எழுந்து நின்று கைவீசி பெருஞ்சினத்துடன் “இதெல்லாம் என்ன என்று தெரியாதா உனக்கு? இது பெண்பழி. அம்பையின் தீச்சொல். அவளுக்கும் முன்னால் மைந்தரை ஈன்று குருதிவார்ந்து வெளிறி இறந்த சுனந்தை இட்ட தீச்சொல். தபதியும் அதற்கு முன் சர்மிஷ்டையும் விடுத்த விழிநீர். இது நம் குடியை வாழவே விடாது… நாம் ஒன்றும் செய்வதற்கில்லை. நாம் வெறும் பலிகள்…” என்றார்.

வெளியே காலடியோசை கேட்டதும் அவர் திடுக்கிட்டார். அதுவரை பேசிக்கொண்டிருந்தோமா எண்ணிக்கொண்டிருந்தோமா என குழம்பி அர்ஜுனனை நோக்கினார். எடைமிக்க காலடிகளுடன் பீமன் உள்ளே வந்தான். வெறுமனே தலைவணங்கி அப்பால் சென்று பெட்டி ஒன்றை இழுத்துப்போட்டுக்கொண்டு அமர்ந்தான். நகுலன் உள்ளே வந்தான். “மைந்தர் எங்கே?” என்றார் யுதிஷ்டிரர். “அவர்களை எழுப்பவேண்டாம், துயிலட்டும் என நான் ஆணையிட்டேன்” என்றான் பீமன்.

இளைய யாதவரும் சகதேவனும் வந்தார்கள். இளைய யாதவர் அமர சகதேவன் ஒரு பெட்டியை எடுத்துப்போட்டான். அவர் அமர்ந்து கைகளைக் கோத்து மடியில் வைத்தபடி ஒன்றும் சொல்லாமல் வெறுமனே நோக்கி அமர்ந்திருந்தார். பீமன் “இளைய யாதவரே, அவன் உள்ளம் எந்நிலையில் உள்ளது என்று அனைவருக்கும் தெரியும். ஆனால் அவன் இருக்கும் நிலை அஞ்ச வைக்கிறது. அவனை மீட்டாக வேண்டும்” என்றான். இளைய யாதவர் “நாம் என்ன செய்ய முடியும்? அவன் செல்லும் தொலைவுவரை சென்றுவிட்டு மீளட்டும்” என்றார்.

சகதேவன் “துரோணரும் கர்ணனும் இவ்வாறு செய்வார்கள் என்று எண்ணியிருக்கவேயில்லை” என்றான். பீமன் “அவர்களால் இயன்றாலும் துரியோதனன் இதை செய்ததை என்னால் எத்தனை எண்ணியும் உளம்கொள்ள இயலவில்லை” என்றான். யுதிஷ்டிரர் “நாம் பிதாமகர் பீஷ்மரைக் கொன்றபோது அவர்களும் இதையே சொல்லியிருக்கக் கூடும்” என்றார். சீற்றம்கொண்டு எழுந்து “இதோ சோர்ந்து கிடக்கும் இவனிடம்தான் இதை சொல்கிறேன். சிகண்டியை முன்னிறுத்தி பிதாமகரை வீழ்த்தியவன் இவன். அதற்கு ஒப்புதல் அளித்தவன் நான். நாங்கள் இருவரும் இத்துயருக்கு முற்றிலும் தகுதி கொண்டவர்கள்தான்” என்றார்.

“எதற்கு வீண்பேச்சு?” என்று சகதேவன் சொன்னான். “வீண்பேச்சுதான். நாம் பேசும் அனைத்துமே வீண்பேச்சுதான். இந்தப் பேச்சுகளுக்கு அப்பால் நாம் மிகமிக எளியவர்களாகவே இருக்கிறோம். அரக்கரையும் அசுரரையும்போல கண்மூடித்தனமான விசைகொண்டவர்களாக. கிராதர்களையும் நிஷாதர்களையும்போல தங்களை மட்டுமே

நோக்கக்கூடியவர்களாக” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “அருந்தவம் இயற்றி அறியவேண்டும் ஞானத்தை. அதன் பின் மேலும் தவம் இயற்றி அந்த ஞானத்தில் அமையவேண்டும். நாம் அறிந்தவற்றை வெற்று ஆணவமாக ஆக்கிக்கொண்டவர்கள். நாம் அடைந்தவை அனைத்தும் பொய்யே. இப்போது அதை அறிகிறேன்.”

“எண்ணி நோக்குக, நாம் எத்தனை கௌரவ மைந்தர்களை கொன்றோம்! எத்தனை கௌரவர்களை தலையறைந்து சிதைத்து வீசினோம்! துரியோதனன் அதை எப்படி உணர்ந்திருப்பான்? அவர்களும் நம் மைந்தர்கள், நம் உடன்பிறந்தார். நாம் அதை ஒருகணமேனும் எண்ணினோமா? இத்துயரால் நாம் தெய்வங்களிடம் உரைப்பது என்ன? நாம் வெறும் விலங்குகள். குருதியால் மட்டுமே ஆளப்படுபவர்கள். குருதியின் பிடியிலிருந்து எழுவதற்கே ஞானம் தேவை. நாம் அதை அடையவே இல்லை.” யுதிஷ்டிரர் சலிப்புடன் தலையசைத்து அமர்ந்துகொண்டு “நம் குருதியில் ஓடுவது சர்மிஷ்டையின் அசுரக்குருதி. சத்யவதியின் நிஷாதக்குருதி” என்றார்.

“என்ன செய்யவேண்டும் என்கிறீர்கள்?” என்று சீற்றத்துடன் பீமன் கேட்டான். “பேசவேண்டும் என நீங்கள் அழைத்தமையால்தான் வந்தேன். உங்கள் வீண்பசப்புகளைக் கேட்டு பொழுது கழிக்க என்னால் இயலாது.” யுதிஷ்டிரர் “நான் என் அறுதிமுடிவை சொல்லவே அழைத்தேன். அதற்காகவே இளைய யாதவனை வரச்சொன்னேன். நான் போரை நிறுத்திவிட முடிவெடுத்திருக்கிறேன். போதும். இனி இப்போர் தொடர்வதில் எனக்கு எந்த உடன்பாடும் இல்லை. எனக்கு அரசும் முடியும் தேவை இல்லை. என் குலக்கொடி

சிறுமைசெய்யப்பட்டதைப்பற்றி எந்த உளக்குறையும் எனக்கில்லை. எனக்கு இந்தப் புவியில் எந்த வருகணக்கும் செல்கணக்கும் இல்லை. நான் கிளம்பவிருக்கிறேன். எனக்கான இடம் முனிவர் வாழும் காடுதான். போரை விழைவோர் நிகழ்த்தட்டும்” என்றார்.

சகதேவன் “நாம் இதை நாளை பேசுவோம்” என்றான். யுதிஷ்டிரர் சொன்னார் “இது வெறும் உணர்ச்சிவெறி என நினைக்கிறாய் போலும். அல்ல, நான் எண்ணி எண்ணி எடுத்த முடிவுதான் இது. இனி அதிலிருந்து விலக நான் சித்தமாக இல்லை. நாளை என்றல்ல என்றும் இதுவே என் சொல். இனி நான் போரிட விரும்பவில்லை. இளைய யாதவன் அவனுடைய போரை நிகழ்த்துக... நான் இனி அதில் இல்லை.”

இளைய யாதவர் “எனது போர் அல்ல இது” என்றார். “என் போர் எந்த மானுடருடனும் இல்லை” என்றபடி எழுந்துகொண்டு “அரசருக்கு ஆர்வமில்லை என்றால் இந்தப் போரை நிறுத்திவிடுவோம்” என்றார். யுதிஷ்டிரர் “ஆம், இன்றே தூதர் செல்லட்டும். கௌரவரிடம் சென்று நாம் போரை நிறுத்திவிட்டு விலகிக்கொள்கிறோம் என அறிவிக்கட்டும். அஸ்தினபுரியும் இந்திரப்பிரஸ்தமும் துரியோதனனுக்கே உரிமையாகட்டும். அவனும் அவன் கொடிவழியினரும் இந்நிலவிரிவை முழுதாளட்டும். என் குடியினர் இங்கிருந்து கிளம்பி தெற்குக்கோ கிழக்குக்கோ செல்வார்கள். அங்கே இன்னமும் மேழிபடாத, கன்றுக்குளம்பு தொடாத மண் உண்டு. அவர்களின் குருதியில் யாதவ மரபு உறைகிறது. தங்கள் வாழ்நிலத்தை அவர்கள் கண்டுகொள்வார்கள்” என்றார்.

“பிறகென்ன, தூதன் கிளம்பட்டும்” என்றார் யுதிஷ்டிரர். இளைய யாதவர் “இம்முறை நான் தூதுசெல்ல முடியாது, அரசே. நான்

என் கால்பொடியை தட்டிவிட்டுவிட்டு அஸ்தினபுரியிலிருந்து கிளம்பியவன்” என்றார். “சகதேவன் செல்லட்டும். வேண்டுமென்றால் நானே செல்கிறேன்” என்றார் யுதிஷ்டிரர். பீமன் உறுதியான குரலில் “மூத்தவரே, ஒன்று கேட்டுக்கொள்க! நான் இளைய யாதவருக்கு சொல்லளித்து இக்களத்திற்கு வந்தவன். அனைத்தையும் இழந்தாலும் சரி இந்தக் களத்தில் இருந்து வெற்றியுடன் அன்றி மீளமாட்டேன். நீங்கள் விழைந்தால் இப்போதே கிளம்பிச்செல்லலாம்” என்றான். யுதிஷ்டிரர் “என்ன சொல்கிறாய்? நான் உன் தமையன். என் ஆணையை மீறுகிறாயா?” என்று உடைந்த குரலில் கூச்சலிட்டார். அவருடைய உடல் நடுங்கியது. “மூத்தவரே, உங்கள் ஒப்புதலுடன் நான் என் வாழ்வு, மீட்பு இரண்டையுமே இளைய யாதவருக்கு அளித்துவிட்டவன்” என்றான் பீமன்.

“நீ நடத்து இப்படையை. நான் கிளம்புகிறேன். என் தம்பியர் பிறர் உடன்வருவார்கள். என் மைந்தர் வருவார்கள்” என்று யுதிஷ்டிரர் கூவினார். “சகதேவா, நாம் கிளம்புவோம். நகுலா, நீ வருகிறாய் அல்லவா?” சகதேவன் “நாங்கள் உங்களுக்கு எங்களை அளித்துக்கொண்டவர்கள், மூத்தவரே” என்றான். “அது போதும். நான் கிளம்புகிறேன். நீயே இப்போரை நிகழ்த்துக! வென்றால் இந்திரப்பிரஸ்தத்திற்கும் அஸ்தினபுரிக்கும் நீயே அரசனாகுக! ஆம், ஒருவகையில் அது சரியே. உன் கைகளால் நீ அவர்களை கொல்கிறாய். விலங்குநெறிப்படி நீயே அரசனாகவேண்டும். விலங்குகளின் உலகு இது. இங்கே எனக்கு இடமில்லை” என்றார் யுதிஷ்டிரர். “முடிவு எடுத்துவிட்டபின் நாம் ஏன் பிந்தவேண்டும்... கிளம்புவோம். அதற்குமுன் இவனிடம் நான் கேட்கவேண்டும். என்னுடன் வருகிறானா அல்லது இங்கே இருந்து உங்கள் போரை

நிகழ்த்தவிருக்கிறானா என்று. யாதவனே, இவனை எழுப்புக! நீயே அதை கேட்டுச் சொல்க!”

இளைய யாதவர் “பீமசேனரே, நான் உங்களை உங்கள் தமையனிடமே திரும்ப அளிக்கிறேன். நீங்கள் எனக்களித்த சொல் இனி உங்களை கட்டுப்படுத்தாது” என்றார். “என் பாதை தெளிவாகவே உள்ளது. நீங்கள் நூறுமுறை என் சொல்லை திரும்ப அளித்தாலும் மீள மீள உங்கள் காலடியில் அதை வைப்பேன்” என்று பீமன் சொன்னான். “ஒவ்வொருமுறை இறைமுன் மலர் இடுகையிலும் உள்ளத்தை ஒருமுறை வைக்கிறோம் என்பார்கள். பல்லாயிரம் முறை உள்ளத்தை வைப்பதே முழுதளிப்பு.”

இளைய யாதவர் “நீங்களும் இழக்க நேரலாம். பெருந்துயர்கள் வழியாக செல்ல நேரலாம்” என்றார். “ஆம், அறிவேன். முழுதளிப்பு என்பது அதையும் சேர்த்துத்தான்” என்றான் பீமன். “அத்துடன் இது என் குலமகளுக்காக நான் கொண்டுள்ள வஞ்சமும் கூட. எந்தத் தெய்வம் சொன்னாலும், எந்தப் பெருந்துயர் எதிர்பட்டாலும் அதிலிருந்து நான் விலகப்போவதில்லை. இங்கே ஒரு பெண்ணின் விழிநீரும் வஞ்சினமும் எந்நிலையிலும் கைவிடப்படவில்லை என்பதை உலகம் அறிக!” இளைய யாதவர் புன்னகைத்து “அச்சொல் நிலைகொள்ளவேண்டும், இளைய பாண்டவரே. எந்நிலையிலும் அது நிலைகொண்டாகவேண்டும்” என்றார்.

யுதிஷ்டிரர் சோர்ந்தவராக திரும்பச் சென்று தன் பீடத்தில் அமர்ந்தார். “என்னை கீழ்மகனாக உணரச் செய்கிறீர்கள். இங்கிருந்து நான் சென்றால் அவள் என்னை நம்பிச் சொன்ன வஞ்சினத்தை துறந்தவன் ஆவேன். மானுடன் என வாழும் தகுதியை இழந்துவிடுவேன்” என்றார். பீமன் “அச்சொல் வென்று

இக்களத்தில் குருதியாடி நின்றிருக்கும். ஐயமே தேவையில்லை, மூத்தவரே. நீங்கள் அப்பொறுப்பை என்னிடம் அளித்துவிட்டுச் செல்லலாம்" என்றான். யுதிஷ்டிரர் கைகளால் முகத்தைப் பொத்தி குனிந்து அமர்ந்திருந்தார்.

இளைய யாதவர் அர்ஜுனனைத் தொட்டு "பாண்டவனே, எழுக…" என்றார். அவன் உடல் விதிர்த்தது. "பாண்டவனே, எழுக…" என்று மீண்டும் இளைய யாதவர் சொன்னார். மூன்றாம் முறை "எழுக, பார்த்தா!" என்றதும் அர்ஜுனன் விதிர்த்து இமைகள் சுருங்கி அதிர விழிப்படைந்தான். "எழுக…" என்றார் இளைய யாதவர். அர்ஜுனன் எழுந்தமர்ந்து அவர்களை மாறிமாறி நோக்கினான். "எங்கிருந்தாய்?" என்று பீமன் கேட்டான். "பிறிதொரு இடம்… வேறெங்கோ" என அவன் சொன்னான். பின்னர் திடுக்கிட்டவன்போல சகதேவனிடம் "அபிமன்யு எங்கே?" என்றான். சகதேவன் முகத்தில் திகைப்புடன் இளைய யாதவரை நோக்கினான். அவர் ஒன்றும் சொல்லாமல் வெறுமனே அர்ஜுனனை நோக்கி அமர்ந்திருந்தார்.

அர்ஜுனன் ஒரே கணத்தில் அனைத்தையும் இழுத்து எடுத்துக்கொண்டு எழுந்து நின்றான். அவன் உடல் நடுங்கியது. அவன் விழப்போகிறான் என பீமன் பிடிக்க எழுவதுபோல அசைந்தான். அர்ஜுனன் தளர்ந்த கால்களுடன் அமர்ந்துகொண்டு "ஆம்" என்றான். அவன் இருமுறை தொண்டையைக் கமறிய ஓசை ஒரு பெருங்கதறலின் துணுக்கு எனத் தோன்றி அவர்கள் அனைவரின் உடல்களையும் துணுக்குறச் செய்தது. ஆனால் அர்ஜுனனின் உடல் மேலும் ஒடுங்கியது. அவன் விழிகளில் இருந்து நீர் ஓசையின்றி சொட்டத் தொடங்கியது. அதை அவர்கள் நோக்கி நின்றனர்.

விழிநீர் பெருகி தாடியை நனைத்து மார்பில் சொட்டிக்கொண்டே இருந்தது.

பின்னர் மெல்லிய குரலில் “யாதவரே” என அவன் அழைத்தான். “சொல்லுங்கள், இதற்கு என்ன பொருள்?” இளைய யாதவர் ஒன்றும் சொல்லவில்லை. “சொல்லுங்கள், என்ன பொருள் இதற்கு?” என அவன் கைநீட்டி இளைய யாதவரின் கையை பிடித்தான். “சொல்லுங்கள்... இழப்பல்ல என்னை வதைப்பது. இதிலுள்ள மாபெரும் பொருளின்மைதான். என் உள்ளத்தை விரித்து விரித்து இப்புடவியளவுக்கே அகற்றி அள்ள முயன்றேன். ஒன்றும் சிக்கவில்லை. இப்பொருளின்மை... பெரும்பூதமென எழுந்து என்னை கொல்ல நின்றிருக்கிறது இது.” இளைய யாதவர் “ஒவ்வொரு இறப்பின்போதும் அனைத்து மானுடரும் அதையே உணர்கிறார்கள். அதற்கு மாற்றுவழி என ஏதுமில்லை” என்றார்.

“பொருள் இருந்தாகவேண்டும். யாதவரே, உம்மை நான் அறிவேன். உம் பேருருவை என் கனவுகளில் கண்டிருக்கிறேன். பொருள் உண்டு, அதை நீர் அறிவீர். சொல்லுங்கள்” என்று அர்ஜுனன் உரக்கக் கூவினான். “பொருளென இங்கே சொல்லப்படும் அத்தனை சொற்களும் வீண் என அறிவேன். நீர் சொல்லமுடியும்... சொல்க! என்ன பொருள் இதற்கு? என் மைந்தன் இவ்வண்ணம் இங்கே ஏன் சாகவேண்டும்?” இளைய யாதவர் “அதை நீ உணரமுடியாது. நான் சொன்னாலும் நீ அறிந்த ஒன்றாகவே அதை விளங்கிக் கொள்வாய். பாண்டவனே, நீ காண்பது முடிவிலாப் பெருக்கென வானத் திசைகளைத் தொட்டு ஓடிக்கொண்டிருக்கும் சரடு ஒன்றின் ஒரு மணியை. அத்தனை மணியையும் உணராமல் ஒன்றை நீ அறியமுடியாது. அந்த ஒரு மணியோ புடவியின் ஓர்

அணுத்துளி. அண்டமே அணுவென்பதால் அதுவும் முடிவிலியே" என்றார்.

அர்ஜுனன் எழுந்து நின்று கைநீட்டி கூச்சலிட்டான். "சொல்க... சொல்க... நீங்கள் எனக்கு அதன் பொருளை சொல்லியாகவேண்டும். இல்லையேல் இனி என்னால் வில்லேந்த இயலாது. ஒன்றின் பொருளின்மை அனைத்தையும் பொருளற்றதாக ஆக்கிவிடுகிறது. சொல்க! என் மைந்தனின் இறப்புக்கு என்ன பொருள்?" இளைய யாதவர் "சொல்கிறேன்" என்றபடி கைநீட்டி அவன் கையை பற்றினார். அவன் உடல் நடுக்குகொள்ள கால்மடிந்து மஞ்சத்திலேயே மீண்டும் அமர்ந்தான். அவன் விழிகள் அதிர்ந்துகொண்டே இருந்தன. அவர்கள் எங்கோ ஓர் அரண்மனையின் கூடத்தில் அமர்ந்திருந்தனர். இளைய யாதவர் சூதன்வடிவில் இருந்தார். கையிலிருந்த சிறுயாழை மீட்டியபடி பாடலும் உரையுமாக அவர் கதை சொல்லிக்கொண்டிருந்தார்.

"பின்னர் எப்போதோ நான் சொல்லவேண்டிய கதை இது, பாண்டவனே" என்றார் இளைய யாதவர். "முன்பொரு காலத்தில் கனகை என்னும் பொன்னிற நாகம் ஒரு தாழைப் புதருக்குள் நூறு முட்டைகளை இட்டது. முட்டைகளை இட்டுவிட்டு மும்முறை மண்ணைக் கொத்தி பூமாதேவியை காவலுக்கு நிறுத்திவிட்டு திரும்பிப்பாராமல் செல்லும் வழக்கம் கொண்டவை நாகங்கள். சூரிய ஒளியில் அந்த முட்டைகள் விரிந்து சின்னஞ்சிறு புழுக்களைப் போன்ற நாகக் குழந்தைகள் வெளிவந்தன. நாகங்களின் வழக்கப்படி அவை வாசனையை உணர்ந்து, நெளிந்து அருகே இருந்த தாழைமலர்களில் ஏறி அதன் சிறகுகளின் நறுமணம் மிக்க வெம்மைக்குள்

அமர்ந்துகொண்டன. அதன்பின் அந்த மலரையே அவை அன்னை என உணர்ந்தன.”

“அன்னை தன் நறுமணத்தால் வண்டுகளை அருகே அழைத்து அக்குழந்தைகளுக்கு உணவூட்டினாள். இரவில் தன் இறகுகளைக்கொண்டு மூடி அவற்றை பாதுகாத்தாள். அவை தங்கள் வழிகளையும் நெறிகளையும் கண்டுகொள்ளும்வரை அவற்றை அவளே பேணினாள்” என அவர் தொடர்ந்தார். “அந்த நூறு பாம்புக் குழந்தைகளில் ஒருவன் பெயர் உசகன். சந்திரகுலத்தைச் சேர்ந்த அரசநாகமாகிய உக்ரோதனின் மகன் அவன். தன் உடன்பிறந்தார் அனைவரும் செம்பொன் நிறத்தில் ஒளிவிட்ட தாழை மடல்களில் புகுந்துகொண்டதைக் கண்ட உசகன் மேலும் ஒளிகொண்ட ஒரு தாழை மடலை நோக்கி சென்று அதன் இதழ்களுக்குள் புகுந்தான். அது அங்கே எரிந்த காட்டுநெருப்பு.”

“தன்னில் புகுந்த உசகனை அக்னிதேவன் உண்டான். அக்னிதேவனின் வயிற்றுக்குள் சென்ற உசகன் அனலோனே, உன்னை என் அன்னை என்று எண்ணி இங்கே வந்தேன். என்னை உணவாக்கியது அறமல்ல என்றான். அக்னிதேவன் என்னை அடைந்த எதையும் உண்ணுவதே என் அறமாகும். ஆனால் நீ அன்னையைத் தேடிவந்த குழந்தை என்பதனால் உனக்கு ஒரு சொற்கொடை அளிக்கிறேன். நீ மானுடனாக மேலும் மும்முறை பிறப்பாய். மும்முறையும் இப்பிழையை நீ ஆற்றுவாய். மூன்று மெய்மைகளை அடைந்து விடுபடுவாய் என்றான்.”

அர்ஜுனன் உரத்த குரலில் “ஆம்!” என்றான். இளைய யாதவர் அவனிடம் “நீ விழைந்தால் அச்சரடின் அடுத்த மணிகளை காட்டுகிறேன்” என்றார். “வேண்டாம்” என்றபடி அவன் தன்

கைகளால் முகத்தை பொத்திக்கொண்டான். “போதும்... பொருளின்மை எங்கிருந்து எழுகிறது என்று புரிந்துகொண்டேன்.” தலையை அசைத்தபடி “போதும்” என்றான். இளைய யாதவர் புன்னகையுடன் யுதிஷ்டிரரை நோக்கி “நீங்கள் உங்கள் வினாவை எழுப்பலாம், அரசே. அவன் வருவான் என்றால் அழைத்துச்செல்லலாம்” என்றார். யுதிஷ்டிரர் “நான் செல்லவில்லை. அவன் உணர்ந்த அப்பொருளின்மையையே நானும் உணர்ந்தேன். அதை இன்னொரு பொருளின்மையால் நிகர் செய்யலாமென விழைந்தேன்” என்றார்.

அர்ஜுனன் நிமிர்ந்து “அவனை கொன்றவன் எவன்?” என்றான். அவன் முகமும் குரலும் மாறிவிட்டிருந்தன. “அவர்கள் அனைவருமே பழிகொண்டவர்கள்தான்” என்றான் பீமன். “அவன் யார் கையால் இறுதியாக உயிர்துறந்தான்?” என்று அர்ஜுனன் உரக்கக் கூவினான்.

“இளையோனே, அவ்வண்ணம் ஒரு தனி வஞ்சம் தேவையில்லை. இது போர்” என்றார் யுதிஷ்டிரர். “அவன் அதனூடாக இங்கு மீண்டுவருகிறான் போலும்” என்றான் பீமன். “இளையோனே, கர்ணனும் துரோணரும் சேர்ந்து அவனை வீழ்த்தினர். அவன் தலையை உடைத்தவன் துச்சாதனனின் மைந்தனாகிய துருமசேனன். அவனை நாளையே நான் கொன்று களத்தில் இடுவேன்.”

அர்ஜுனன் வலிகொண்டவன்போல தலையை அசைத்துக்கொண்டே இருந்தான். “அரை நாழிகை... அரை நாழிகைப் பொழுது” என்று தன்னுணர்வற்றவனாக புலம்பினான். “அரை நாழிகைப் பொழுதை ஈட்டியிருந்தால் என் மைந்தனை மீட்டிருப்பேன், யாதவரே.”

பீமன் “அதை இனிமேல் சொல்லி பயனில்லை…” என்றான். “அவனிடம் இறுதியாக நான் கைகூப்பி இரந்தேன்… வீரத்தையும் தன்மானத்தையும் கைவிட்டு மன்றாடினேன்…” அவன் நிமிர்ந்தபோது மீண்டும் விழிகள் நிறைந்திருந்தன. “யாதவரே, ஒருவன் ஒரு களத்தில் எத்தனை முறைதான் சாவது?” இளைய யாதவர் “அவன் அங்கே போர்வீரனாக மட்டுமே இருந்தான்” என்றார். “ஆனால் நாங்கள் அப்படி இருக்கவில்லை. கோதவனத்தில் அவனை மூத்தவர் சிறைத்துச் சிறுமைசெய்தபோது நான் வீரனென்று நின்று பேசினேன். மூத்தவர் அரசன் என்றும் அவனுடைய குடிமூத்தவர் என்றும் நின்றிருந்தார். அன்று எங்கள் அளிக்கொடையாக தன் உயிரை மீட்டுச்சென்றவன் அவன்” என்றான் அர்ஜுனன்.

சொல்லச் சொல்ல சீற்றம் வளர அர்ஜுனன் எழுந்து நின்றான். “பின்னரும் எனக்கு செய்தியனுப்பினான். என் நட்பை தெய்வக்கொடை என கருதுவேன் என்று. என்றும் என்னிடம் நன்றியுடன் இருப்பேன் என்று. கீழ்மகன்…” அவன் அதுவரை கொண்டிருந்த அத்தனை சோர்விலும் துயரிலுமிருந்து கிழித்தெழுந்து பெருகி நின்று “அக்கீழ்மகனை நாளை கொல்வேன். அந்திக்குள் அவனை கொல்லாவிடில் களத்திலேயே என் சங்கறுத்து செத்துவிழுவேன். இது என் வஞ்சம். அறிக முன்னோர், அறிக தெய்வங்கள். இது என் வஞ்சினம். நாளை அந்திக்குள் அவனை கொன்று வீழ்த்துவேன். ஆணை! ஆணை !ஆணை!” என்றான்.

யுதிஷ்டிரர் திகைப்புடன் அவனை தடுக்கும்பொருட்டு கைநீட்டி “இளையோனே” என்றார். பீமன் அவரை தடுத்தான். அர்ஜுனன் “இனி ஒரு சொல்லும் எச்சமில்லை, யாதவரே” என்றான். இளைய யாதவர் “இனி உன்னால் துயிலமுடியும், பாண்டவனே.

நாளை களத்தில் நிற்போம்” என்றபடி எழுந்தார். சகதேவனிடம் “அவனுக்கு அகிபீனா அளியுங்கள். துயிலட்டும்” என்றார். சகதேவன் தலையசைத்தான். இளைய யாதவர் வெளியே செல்ல பீமனும் நகுலனும் உடன்சென்றனர். அர்ஜுனனை மீண்டுமொருமுறை நோக்கியபின் யுதிஷ்டிரரும் வெளியே சென்றார்.

# கார்கடல் - 42

அவையில் ஒவ்வொருவராக வந்து அமர்ந்தனர். அந்த ஓசை ஒரு மந்தணப்பேச்சுபோல ஒலித்துக்கொண்டிருக்க அஸ்வத்தாமன் தன் படைசூழ்கையை தோல்சுருளில் இறுதியாக வரைந்துகொண்டிருந்தான். பூரிசிரவஸ் அவனருகே வந்து குனிந்து “பணிமுடியவில்லையா?” என்றான். “இல்லை, நான் இன்று எட்டு வெவ்வேறு சூழ்கைகளை வகுத்துவிட்டேன். எதுவுமே சரியாக அமையவில்லை. திரும்பத் திரும்ப பிழைகளையே காண்கிறேன்” என்றான் அஸ்வத்தாமன். “வழக்கமாக ஒரே கணத்தில் ஒரு சூழ்கையை முடிவுசெய்வீர்களே?” என்றான் பூரிசிரவஸ். “ஆம், நான் எண்ணிப்பார்ப்பதே இல்லை. படையிலிருந்தே அதை பெறுவேன். இன்று ஒன்றுமே தோன்றவில்லை” என்று அஸ்வத்தாமன் சொன்னான்.

பூரிசிரவஸ் “வழக்கமாக படைகளைப் பார்த்தபடி காவல்மாடத்தில் நின்றிருப்பீர்கள்” என்றான். “ஆம்” என்று மட்டும் அஸ்வத்தாமன் சொன்னான். “இன்று நானும் படைகளை பார்க்க விரும்பவில்லை. படைகள் மாபெரும் குவியாடிபோல என் உணர்ச்சிகளை பல்லாயிரம் மடங்காக

பெருக்கிக் காட்டுபவை. உவகையை, சோர்வை, சலிப்பை. இன்று நான் என் உணர்ச்சிகளை பெருக்கிக்கொள்ள விழையவில்லை.” அஸ்வத்தாமன் அதற்கு மறுமொழி ஏதும் சொல்லாமல் தோல்சுருளில் வரைந்தான். “உச்” என ஓசையிட்டபடி தோல்சுருளைச் சுருட்டி அப்பால் வைத்தபின் “அனைவரும் வந்துவிட்டார்களா?” என்றான்.

பூரிசிரவஸ் “வந்துகொண்டிருக்கிறார்கள்” என்றான். அவன் மேலும் பேச விழைந்தான். “நான் உணர்வதென்ன என்று தெரியவில்லை, பாஞ்சாலரே. எனக்கு எந்தக் குற்றவுணர்ச்சியுமில்லை. என் மைந்தரின் இறப்புக்குப் பின்னர் நான் எதையும் பொருட்டெனக் கருதவில்லை. சொல்லப்போனால் என் அகம் விந்தையான நிறைவையே அடைகிறது” என்றான். “ஆனால் படைகள் சோர்வும் சலிப்பும் கொண்டிருக்கின்றன. போர்முடிவை அறிவித்து முரசொலித்ததும் எந்த வெற்றிக்குரலும் எழவில்லை. என் செவிகள் அடைத்துக்கொண்டதுபோல் உணர்ந்தேன். அத்தனை அமைதியாக நம் படைகள் இதுவரை கலைந்ததில்லை.”

“சிலர் வேண்டுமென்றே வாழ்த்தொலிகளை எழுப்ப முயன்றனர். ஆனால் படை எதிரொலிக்கவில்லை. அவை தேய்ந்து மறைந்தன. அவ்வொலியை எழுப்பியவர்கள் உடல்களுக்குள் மூழ்கி தங்களை ஒளித்துக்கொண்டார்கள். இவர்களுக்கு என்ன ஆயிற்று என்று நான் திகைத்தேன். வரும் வழியெங்கும் பார்த்தேன். அத்தனைபேரும் துயர்கொண்டிருக்கிறார்கள். பலர் விம்மி அழுகிறார்கள். அனைவரும் நேராக குடி நோக்கியே செல்கிறார்கள்.” அஸ்வத்தாமன் “அவர்களின் இளவரசன் அல்லவா?” என்றான். “ஆம், ஆனால் இங்கே நூற்றுக்கணக்கில் இளவரசர்கள்

இறந்திருக்கிறார்கள்” என்றான் பூரிசிரவஸ். அஸ்வத்தாமன் ஒன்றும் சொல்லவில்லை. “அத்தனைபேருக்கும் கணக்குகள் இருக்கின்றன” என்று பூரிசிரவஸ் தலையை அசைத்துக்கொண்டான்.

துச்சகன் உள்ளே வந்து தலைவணங்கினான். “அரசர் எழவில்லையா?” என்று பூரிசிரவஸ் கேட்டான். “அவர் அவையெழப்போவதில்லை. நேராக பாடிவீட்டுக்குச் சென்றார். மதுவருந்தத் தொடங்கினார். தன்னினைவே இல்லாது படுத்திருக்கிறார்” என்றான் துச்சகன். “அங்கர்?” என்று அஸ்வத்தாமன் கேட்டான். “அவர் தன் பாடிவீட்டுக்குச் சென்றார். அவரும் மூக்குவார மதுதான் அருந்திக்கொண்டிருக்கிறார்.” அஸ்வத்தாமன் “என்ன நிகழ்கிறது என்றே புரியவில்லை” என்றபின் சலிப்புடன் அவையை நோக்கிவிட்டு “எங்கே காந்தாரர்?” என்றான். “வந்துகொண்டிருக்கிறார்” என்று பூரிசிரவஸ் சொன்னான்.

சகுனியும் சலனும் சேர்ந்தே வந்தார்கள். சுபலர் சல்யர் தொடர வந்தார். கிருபரும் சோமதத்தரும் மெல்லிய குரலில் பேசிக்கொண்டே வந்தார்கள். அரசர்கள் பெரும்பாலும் வந்துவிட்டிருப்பதை அஸ்வத்தாமன் கண்டான். “இனி எவருமில்லை. அவையை தொடங்கிவிடலாம்” என்றான். “ஆசிரியர் துரோணர் வரவில்லையே” என்று பூரிசிரவஸ் சொன்னான். “அவர் வரமாட்டார்” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “எனில் எதற்கு அவை?” என்றான் பூரிசிரவஸ். “நாம் நாளைய படைசூழ்கைக்கு அவையொப்புதல் கொள்ளவேண்டியிருக்கிறது” என்றான் அஸ்வத்தாமன். “அதை சுருக்கமாக முடித்து அவையை கலைப்போம். வேறென்ன செய்வது?”

ஜயத்ரதன் கிருதவர்மனுடன் தலையை ஆட்டி விசைகொண்டு பேசியபடி வந்தான். அத்திரளில் அவன் மட்டுமே மகிழ்ச்சியுடன் இருப்பதாகத் தோன்றியது. கிருதவர்மன் அவன் பேச்சை உளம்கொள்ளாமல் சூழ்ந்திருந்த அரசர்களை நோக்கிக்கொண்டு வந்தான். அவர்கள் பிற அரசர்களுக்கு வணக்கம் தெரிவித்து முகமனுரைத்தபடி இருக்கைகளில் அமர்ந்தனர். அரசர்களில் ஒருவர் எழுந்து சென்று இன்னொருவரிடம் குனிந்து பேசிக்கொண்டிருந்தார். ஏவலர்கள் இன்னீரும் வாய்மணமும் பரிமாறியபடி சுற்றிவந்தனர். வெளியே படைகள் துயில்கொள்ள அறிவுறுத்தியபடி கொம்புகள் ஒன்றுதொட்டு இன்னொன்று என முழக்கமிட்டன.

சல்யர் கைகளை நீட்டி உடலை நெளித்து கோட்டாவி விட்டபின் திரும்பி அஸ்வத்தாமனை நோக்கி உரத்த குரலில் “அரசர் வரவில்லையா என்ன?” என்றார். துச்சகன் அவர் அருகே ஓடிச்சென்று மண்டியிட்டு விளக்கத் தொடங்கினான். அஸ்வத்தாமன் சகுனியை அணுகி நிலைமையை விளக்கினான். சகுனி “அவை தொடங்கட்டும்… அரசர் தேவையில்லை” என்றார். அஸ்வத்தாமன் பூரிசிரவஸிடன் தலையசைக்க அவன் மேடையிலேறி அவைத் தொடக்கத்துக்கான முறைமைச் சொற்களை உரைத்தான். அவையில் எந்த ஆர்வமும் எழவில்லை. பூரிசிரவஸ் “நாம் அறிந்தவரை பாண்டவப் படைகள் சோர்ந்துவிட்டிருக்கின்றன. யுதிஷ்டிரர் சோர்ந்து விழுந்துவிட்டார் என்கிறார்கள். உடல்நலிந்திருக்கும் பார்த்தர் உள்ளமும் ஒடுங்கிவிட்டார். நாளை போர்நிகழுமா என்பதே ஐயத்திற்குரியது” என்றான்.

அவையில் எதிர்வினை என ஏதும் எழவில்லை. “மெய், நமக்கும் சற்று சலிப்பு உள்ளது. நம் படைகள் விழையாத

சிலவற்றை நாம் போர்சூழ்கையின் பொருட்டு செய்ய நேர்ந்துள்ளது. ஆனால் நாம் வென்றுகொண்டிருக்கிறோம். பெரும்பாலும் நாளையே போர் முடிந்துவிடும். நம் படைகள் இல்லம் திரும்பும். நாம் நம் நிலங்களை அடைவோம்... நாம் எண்ணிவந்தவை எல்லாம் நிறைவேறும்" என்று பூரிசிரவஸ் சொன்னான். "அவர்களின் உளச்சோர்வுதான் நாம் இலக்காக்கியது. அது நிகழ்ந்துள்ளது."

"நாம் மேலும் உளச்சோர்வடைந்துள்ளோம்" என்று கிருதவர்மன் சொன்னான். "எங்கே அரசர்? எங்கே அங்கரும் துரோணரும்?" பூரிசிரவஸ் "அவர்களும் உளச்சோர்வடைந்துள்ளனர் என்பது மெய். அபிமன்யு நம் அரசரால் வளர்க்கப்பட்ட மைந்தன். அவரால் அத்துயரிலிருந்து எளிதில் வெளிவர இயலாது. ஆனால் அவர் நாளை புதிய விசையுடன் எழுவார். நாளை நாம் அடையப்போகும் வெற்றியை வகுக்கும் சூழ்கை அமைக்கப்பட்டுள்ளது. அதை அஸ்வத்தாமர் அவைமுன் வைப்பார்" என்றான். கிருதவர்மன் "அரசர் என்று அமர்ந்து அச்சூழ்கையை ஒப்பவிருப்பவர் யார்?" என்றான். "காந்தாரர் சகுனி அரசரின் மாதுலர். அவர் ஒப்புக்கொண்டால் போதும்" என்றான் பூரிசிரவஸ்.

"சூழ்கை என்ன?" என்று சல்யர் கேட்டார். அங்கிருந்த எவரும் அதில் எவ்வகையிலும் ஆர்வம் கொள்ளவில்லை என்று தெரிந்தது. அஸ்வத்தாமன் "சகடச்சூழ்கை..." என்றான். "அதுவே உகந்தது என்று படுகிறது. நம் தரப்பின் வீரர்கள் அனைவருக்கும் இணையான இடமளிப்பது. மேலும் நாளை பாண்டவர்களின் தரப்பில் எந்த எழுச்சியும் இருக்காது. நாம் எழுந்துசென்று தாக்கி அவர்களை சூழ்ந்துகொள்ள முடியும். அவர்களின் முகப்புவீரர்கள் அனைவரையுமே வண்டிக்குள்

இழுத்து சிறைப்படுத்தலாம்…” சகுனி “முன்னரே வகுத்த சூழ்கையை அப்படியே மீண்டும் அமைத்திருக்கிறீர்கள்” என்றார். அஸ்வத்தாமன் “ஆம், நம்மிடம் பெரிய இழப்புகளேதுமில்லை. சூழ்கை அவ்வண்ணமே அமையலாம்” என்றான்.

துச்சலன் அவைக்கு வெளியே வந்து நின்றான். “என்ன?” என்று வினவியபடி அஸ்வத்தாமன் திரும்பி நோக்கினான். “ஒரு முனிவர்… அவைக்குள் வந்து அரசரிடம் பேசவேண்டும் என்கிறார். எச்சொல்லும் செவிகொள்ள மறுக்கிறார்” என்றான் துச்சலன். “முனிவரா? இது போரவை. நாம் சூழ்கை வகுத்துக்கொண்டிருக்கிறோம்” என்றான் அஸ்வத்தாமன். கிருபர் “முனிவர்கள் போர்க்களத்திற்கு வருவதில்லையே. யார்?” என்றபடி எழுந்தார். துச்சலனை உந்திக் கடந்து ஓங்கிய உருவம் கொண்ட முதிய முனிவர் உள்ளே வந்தார். நரைத்த தாடியும் குழல்கற்றைகளும் சடைத்திரிகள் கலந்து தொங்கின. புலித்தோலை தோளுக்குக் குறுக்காக அணிந்திருந்தார். உரத்த குரலில் அவையை நோக்கி “இங்கே அஸ்தினபுரியின் அரசன் இல்லையா? என் பெயர் பிருஹத்காயன்… நான் சிந்துவின் முன்னாள் அரசன். ஜயத்ரதனின் தந்தை” என்றார்.

அதுவரை அப்பால் திரும்பி ஏதோ பேசிக்கொண்டிருந்த ஜயத்ரதன் திகைப்புடன் எழுந்து “தந்தையே!” என்றான். ஓடிவந்து அவர் அருகே குனிந்து கால்களைத் தொட்டு வணங்கி “தந்தையே, தாங்களா?” என்றான். அவர் அவன் தலையைத் தொட்ட பின் “நானே என்னை முறைப்படி அறிமுகம் செய்துகொள்கிறேன். ஏழு நதிகளால் பேணப்படும் சிந்துநிலத்தின் அரசகுடியில் பிறந்தவன் நான். எங்கள் தொல்மூதாதை பிரகதிஷு. அவர் மைந்தர் பிரகத்ரதர். அவருக்குப் பிறந்தவர் உபபிரகதிஷு. அவர் புதல்வர் பிரகத்தனு.

அவருடைய மூத்த மைந்தர் பிருகத்பாகு. அவருக்குப் பின் அரியணை அமர்ந்த என் பெயர் பிருஹத்காயன். மைந்தனுக்கு அரியணையை அளித்துவிட்டு கானேகினேன்” என்றார்.

சகுனி எழுந்து “அரசர் இங்கே அவையில் இல்லை. அரசரின் மாதுலனாகிய நான் காந்தாரநாட்டினன். சுபலரின் மைந்தன். என் பெயர் சகுனி. தங்களை அவையமர்ந்து எங்களை வாழ்த்தும்படி தலைவணங்கி கோருகிறேன்” என்றார். “நான் வாழ்த்துகூற இங்கே வரவில்லை. இங்கே போர் நிகழும் செய்தியை நான் அறிந்திருந்தேன். மிக அருகிலேதான் என் தவச்சாலை. இன்று சற்றுமுன் எனக்கு ஒரு செய்தி கிடைத்தது, என் மைந்தனைக் கொல்ல அர்ஜுனன் வஞ்சினம் உரைத்திருப்பதாக… அக்கணமே கிளம்பி இங்கே வந்தேன்…” என்றார்.

“இத்தனை விரைந்தா?” என்று பூரிசிரவஸ் கேட்டான். கைவீசி அவனைத் தவிர்த்து “அதற்குரிய வழிகள் எங்களுக்குள்ளன” என்று சொன்ன பிருஹத்காயர் “என் மைந்தனை நாளை அந்திக்குள் கொல்வேன் என்றும் இல்லையேல் அந்தியில் தன் அம்பால் தன் கழுத்தை வெட்டிக்கொண்டு களத்திலேயே வீழ்வேன் என்றும் அர்ஜுனன் வஞ்சினம் உரைத்திருக்கிறான்” என்றார். ஜயத்ரதன் “தந்தையே!” என்று கூவினான். “அது உண்மை. அதை அறியும் வழி எனக்குண்டு…” என்றார். சகுனி “முனிவரே, போர்க்களத்தில் வஞ்சினங்கள் இயல்பானவை” என்று சொல்லத் தொடங்க “ஆம், ஆனால் பாரதவர்ஷத்தின் முதன்மை வில்லவன் எடுத்த வஞ்சம் எளிதான ஒன்றல்ல. அவனுடன் இருப்பவன் இந்த யுகத்தின் தலைவன்” என்றார்.

சுபலர் “முனிவரே…” என சொல்லெடுக்க பிருஹத்காயர் அவரை கைநீட்டி நிறுத்தி “நான் முனிவன் அல்ல. தவம்புரியவே

கானேகினேன். இவ்வுலகில் அனைத்தையும் கட்டவும் கடக்கவும் திறன்பெற்றேன். மாமுனிவர் செல்லாத இடங்களுக்கும் செல்லும் சொல்லும் பெற்றேன். ஆனால் மெய்மை என்னை அணுகவேயில்லை. ஏனென்றால் என்னை இப்புவியுடன் சேர்த்துக் கட்டியிருப்பது இவன்மேல் நான் கொண்டுள்ள பற்று. பத்தாண்டுகள் அதை அறுக்கப் போராடினேன். பின்னர் அறிந்தேன், நான் அதை இப்பிறவியில் அறுக்கவியலாது என்று. எனில் என்னை ஆளும் தெய்வம் அதுவே என உணர்ந்தேன். இத்தனை ஆண்டுகள் அதையே தவமெனக் கொண்டேன்" என்றார்.

"அர்ஜுனன் அல்ல, புடவியை சமைத்து காத்து அழித்தருளும் மூவருமே ஆயினும் என் மைந்தனைக் கொல்ல எவரையும் விடமாட்டேன். அச்செய்தியை அறிந்ததுமே கிளம்பி வந்தேன்" என்று பிருஹத்காயர் சொன்னார். "ஆம், அவன் நாளை சைந்தவரை கொல்லப்போவதில்லை" என்று சகுனி உரக்கச் சொன்னார். "அவரை கொல்வேன் என்றுதான் வஞ்சினம் உரைத்திருக்கிறான். அவர் போருக்கெழுந்தால் கொல்வேன் என்று அல்ல. நாளை சைந்தவர் போர்முனைக்கே செல்லப் போவதில்லை. கௌரவப் பெரும்படைக்கு நடுவே போர்முனையிலிருந்து மிகமிக விலகி கவசப்படைகள் சூழ்ந்த இடத்தில் இரும்புக்கூண்டுக்குள் கொடியோ அடையாளமோ இன்றி அமர்ந்திருக்கப் போகிறார். நாளை புலரி எழுந்து அந்தி அணைவதுவரை வெளியே வரப்போவதில்லை. அவரை எப்படி கொல்லப்போகிறான் என்று பார்ப்போம்."

அவையினர் ஒருகணம் கழித்தே அதை முழுமையாக புரிந்துகொண்டார்கள். உரக்கக் கூச்சலிட்டபடி தங்கள் கைகளைத் தூக்கி வீசினர். சலன் எழுந்து "ஆம், இது அவனே

வந்து சிக்கிக்கொண்ட பொறி. ஒருநாள், ஒருநாளை நாம் கடக்கமுடிந்தால் அம்பில்லாமல் அவனைக் கொல்லலாம். அவர்களை முழுமையாகவே வீழ்த்திவிடலாம்" என்றான். கிருதவர்மன் "வண்டிச்சூழ்கை அதற்கு மிக உகந்தது. அவர் அதற்கு நடுவே இருக்கட்டும். வண்டியின் முகப்பில் மட்டுமல்ல, நான்கு முனைகளிலும் முதன்மை வில்லவர் நிலைகொள்ளட்டும். எப்படி உள்ளே வருகிறான் என்று பார்ப்போம்…" என்றான். அவை களிவெறிகொண்டு ஆர்ப்பரித்தது.

அவர்கள் உளம்சோர்ந்திருந்தனர். உளச்சோர்வு கொண்டவர்களின் ஆழம் விடுபட விழைகிறது. ஆகவே அதற்குரிய சிறிய வாய்ப்பையும் அது தவறவிடுவதில்லை என்று அஸ்வத்தாமன் எண்ணிக்கொண்டான். அலையலையாக அவை எழுந்தமைந்து கூச்சலிட்டுக்கொண்டே இருந்தது. அஸ்வத்தாமன் எழுந்து கைவிரித்து அவர்களை அமரச்செய்ய முயன்றான். சகுனி எழுந்து கைவீசியதும் அவை மெல்ல அடங்கியது. சகுனி "சலன் சொன்னது மெய். அவன் சிக்கிக்கொண்ட பொறி இது. அவன் ஆணவம் மிக்கவன். அவனை அவன் ஆணவத்தாலேயே அழிக்கவேண்டும் என தெய்வங்கள் எண்ணியிருக்கின்றன போலும்" என்றார்.

அஸ்வத்தாமன் "அவரால் நம் படைகளைக் கடந்துவந்து ஒருபோதும் சைந்தவரை அணுகமுடியாது. ஐயமே தேவையில்லை" என்றான். கிருதவர்மன் "பெருந்திறலும் அதற்கிணையான ஆணவமும் கொண்டவர்கள் தங்கள் ஆழத்திலிருக்கும் பற்று ஒன்றால்தான் அழியவேண்டும் என்பது ஊழ்நெறி. அவன் அழியவேண்டியது இவ்வண்ணமே" என்றான். அவையினர் கூச்சலிட்டுக் கொந்தளித்தனர். சல்யர் "அவன் உள்ளம் மைந்தன் மீதான பற்றால் பேதலித்திருக்கிறது…

இல்லையேல் இப்படி ஒரு வஞ்சினத்தை உரைத்திருக்க மாட்டான். போரில் குறிப்பிட்ட ஒருவரைக் கொல்லாமல் மீளமாட்டேன் என அறிவிலியே வஞ்சினம் உரைப்பான். ஏனென்றால் போர்க்களத்தில் தனியொருவனைத் தேடுவது புல்வெளியில் தானியமணியைத் தேடுவதுபோல...” என்றார்.

“ஆம். போர் ஒரு நாற்களம். அங்கே எவர் எவரை சந்திக்கிறார் என்பதை எல்லா கணிப்புகளுக்கும் அப்பால் தெய்வங்களே முடிவெடுக்கின்றன” என்றார் கிருபர். “ஆகவேதான் ஐயுறுகிறேன், மெய்யாகவே அந்த வஞ்சினத்தை அவன் உரைத்தானா? அவை நடுவே உரைத்தால் மட்டுமே அது வஞ்சினம். உற்றார் நடுவே, மருத்துவநிலையில் சொல்லும் உணர்ச்சிச் சொற்களை அவ்வாறு சொல்லமுடியாது” என்றார் சல்யர். சகுனி “மத்ரரே, அவனைச் சூழ்ந்து எப்போதும் தெய்வங்கள் உள்ளன என்பார்கள். ஆகவே அவன் கனவில் உளறினாலும் அச்சொற்களுக்கு பொறுப்பேற்றாகவேண்டும்” என்றார். “அவன் பெருந்துயரில் இருந்திருக்கவேண்டும். முற்றாகவே உளமழிந்திருக்கவேண்டும். அவ்வஞ்சினம் வழியாக அவன் விசைமீண்டு வருவதென்றால் அதுவும் நன்றே என அவர்கள் எண்ணியிருக்கலாம்.”

அவையினர் கலைந்து பெருங்குரலில் பேசிக்கொண்டிருக்க ஜயத்ரதன் எழுந்து “அவையினர் பொறுத்தருள்க! தந்தை என்மேல் முனியாதொழிக!” என்றபோது திரையை இழுத்துச் சுருக்கியதுபோல் ஓசைகளடங்கி அவை அமைதிகொண்டது. “நான் போர்க்களத்திலிருந்து ஒளிந்துகொள்ள விழையவில்லை” என்று ஜயத்ரதன் சொன்னான். “நான் மறைந்திருக்கப் போவதில்லை. அவ்வாறு உயிர்பிழைத்து இழிபுகழ்பெற்று வாழ்வதைவிட மடிவதே மேல் என்றே என் அகம் சொல்கிறது.

என்னை விட்டுவிடுங்கள். நான் அவன் முன் களத்தில் நிற்கிறேன்…” பிருஹத்காயர் “என்ன சொல்கிறாய், மூடா!” என்றபடி எழுந்து கையை ஓங்கியபடி அவனை நோக்கி வந்தார்.

சகுனி “சைந்தவரே!” எனக் கூவி அவரை நிலைகொள்ளச் செய்தார். “உங்கள் அரண்மனை அல்ல இது. கௌரவப் பேரவை!” என்றார். பிருஹத்காயர் சீற்றத்துடன் தலையசைத்தபடி “அறிவிலி! வீணன்!” என்று பற்களைக் கடித்தார். “தந்தையே, ஒருபோதும் உங்கள் விழிமுன் வீரனாகவோ ஆண்மகனாகவோ நின்றிருந்ததில்லை நான். என்னை உங்கள் கைகளுக்குள் பொத்திப்பொத்தி வளர்த்தீர்கள். நோயாளியாக மட்டுமே என்னை கருதினீர்கள். ஒருவேளை என் இளமைக்கால வேண்டுதலை செவிகொண்டே தெய்வங்கள் இவ்வண்ணம் ஒரு சூழலை அமைத்தன போலும். நான் உங்கள் கண்முன் ஆண்மகன் என நின்றுகாட்டுகிறேன். வெல்லாதொழியலாம், களம்படலாம். ஆனால் பாரதவர்ஷத்தின் பெருவில்லவன் முன் இரு நாழிகைப் பொழுதேனும் நின்றுபொருதுவேன்” என்றான்.

“அறிவிலி! அறிவிலி!” என்று கூவியபடி பிருஹத்காயர் எழுந்து கையை ஓங்கியபடி ஜயத்ரதனை நோக்கி பாய்ந்தார். அவரை தடுக்க முயன்ற பூரிசிரவஸை தள்ளி வீழ்த்திவிட்டு மைந்தனை அணுகி அவனை அறையும்பொருட்டு கைதூக்கி பின் தளர்ந்து கைதாழ்த்திக்கொண்டார். சல்யர் எழுந்து அவரைப் பிடித்து அப்பால் விலக்கிச் சென்றார். ஜயத்ரதன் “நான் ஒளிந்துகொள்ள மாட்டேன். இவர்முன் சிறுமைகொள்ள மாட்டேன். நான் நின்றுபோரிடுவேன்… ஐயமே வேண்டியதில்லை…” என்றான். “எனில் உன்னை இங்கேயே

நானே கொன்றுவீசுகிறேன். கிழ்மகனே, சிறுமையனே” என்று பிருஹத்காயர் கூச்சலிட்டார். அவரை பிடித்திருந்த சல்யரை உதறிவிட்டு தன் கையிலிருந்த பெரிய யோகக்கழியை தூக்கினார். அது ஒரு நாகமென்றாகியது. அதன் நாபறக்க விழிகள் ஒளிர்ந்தன.

சகுனி “முனிவரே, அமர்க!” என்று ஆணையிடும் குரலில் சொன்னார். “இவன் என் சொல்லை மீறுகிறான். என்னை இழிவுசெய்கிறான். என் சுட்டுவிரல் இவன். என் ஒரு துளி…” என்று பிருஹத்காயர் கூச்சலிட்டார். அவர் தலை நடுங்கிக்கொண்டிருக்க ஒரு கண்ணிலிருந்து நீர் வழிந்தது. “எனில் சென்று கொல்க…” என்றார் சகுனி. “மத்ரரே, அவரை விட்டுவிடுங்கள்… அவர் மைந்தனை கொல்லட்டும். ஏனென்றால் அவர் தன் கைகளால் மைந்தனைக் கொல்வார் என்றுதான் நிமித்தக்கூற்று எழுந்துள்ளது.” பிருஹத்காயர் தளர்ந்து பின்னடைந்து பீடத்தின் சாய்வுப்பரப்பை பற்றிக்கொண்டார். அவர் கையிலிருந்த யோகக்கழி கீழே விழுந்தது. அவர் முனகல்போல ஒலியெழுப்பினார். பின்னர் மெல்ல கால் தொய்ந்து அமர்ந்தார்.

“சைந்தவரே, இங்கே எவர் போரிடவேண்டும், எங்கே களம்நிற்கவேண்டும் என முடிவெடுக்க வேண்டியவன் நான்” என்று சகுனி சொன்னார். “போரில் மறைந்துகொள்ளுதலும் உத்தியே. போரிலிருந்து ஒளிந்தோடும்படி உங்களிடம் சொல்லவில்லை. கவசங்களுக்குள் மறைந்துகொள்ளவே ஆணையிடப்படுகிறது. நீங்கள் அஞ்சி மறைந்திருக்கவில்லை. உங்கள் படையின் தலைவனின் ஆணையைத்தான் தலைக்கொள்கிறீர்கள்.” ஜயத்ரதன் “ஆனால்…” என சொல்லெடுக்க “நீங்கள் அர்ஜுனன் மறைவுக்குப் பின்

களமெழுக! உங்கள் கைகளால் பாண்டவர்களின் படைகளை கொன்று கூட்டுக! அதுவே வெற்றியென்றாகும். அறிக, அறுதிவெற்றியை அடைந்தவர்களே பேசப்படுகிறார்கள்" என்றார்.

"இல்லை, இது வெறும்பசப்பு… நான் இதற்கு உடன்படமாட்டேன்" என்றான் ஜயத்ரதன். "நான் களம்நிற்பேன். பொருதுவேன்." சகுனி "நீங்கள் களம்நின்றால் உறுதியாகவே உயிர்விடுவீர். சூதர்பாடலில் எவ்வண்ணம் வாழ்வீர் என எண்ணுக! நட்புக்கு வஞ்சமிழைத்தமையால், சொல்திறம்பியமையால் கொல்லப்பட்டவர் என… மெய்யல்லவா?" என்றார். ஜயத்ரதன் "நான் என்ன செய்ய முடியும்? நான் அபிமன்யு கொல்லப்பட்டதை இப்போதுகூட ஏற்கவில்லை. நான் அப்போது அதை அறியவே இல்லை. ஆனால் என் படைத்தலைவரின் ஆணைக்கு களத்தில் நான் கட்டுப்பட்டாக வேண்டும்" என்றான். சகுனி "ஆம், ஆனால் அதை எவர் எதிர்காலத்திடம் சொல்வது? அவன் இறந்து நீங்கள் இருந்தாகவேண்டும். அவன் கையால் கொல்லப்பட்டால் அவன் எண்ணுவதே உண்மையென நிலைகொள்ளும்" என்றார்.

ஜயத்ரதன் சோர்ந்தவனாக அமர்ந்தான். "நான் இதற்கு எவ்வகையிலும் பொறுப்பல்ல" என்றபோது அவன் குரல் உடைந்தது. "நான் அபிமன்யுவை கொல்லத் துணைபோகவில்லை. உள்ளே நிகழ்ந்த எதுவும் எனக்குத் தெரியாது. தெரிந்ததும் உங்களிடம் கண்டித்தேன். அத்தனைபேரிடமும் என் எண்ணத்தை சொன்னேன்…" அவன் விழிகள் நீர் நிறைந்து வழிந்தன. "நான் என்னை வேண்டுமென்றே நகையாட்டும் சொற்பெருக்கும் கொண்டவனாக ஆக்கிக் ண்டேன். எப்படியேனும் இந்த நாளை கடந்துசென்றுவிட்டால் போதும் என எண்ணினேன். இன்றிரவு

என்னால் துயில்கொள்ள முடியாதென்றே நம்பினேன்…” அவன் மேலும் சொல்லெடுக்க முயன்று பின் விழிநீர் பொழிய விசும்பி அழத்தொடங்கினான்.

பிருஹத்காயர் “நிறுத்து, கீழ்மகனே. நீ என்ன பேடியா? களிமகன்போல் அழுகிறாய்!” என்றார். வெறுப்பும் கசப்புமாக ஜயத்ரதனை நோக்கி “நீ பிரகதிஷுவின் குருதி… அதை மறக்காதே” என்றார். ஜயத்ரதன் விழிகளைத் துடைத்து “ஒருநோக்கில் அர்ஜுனன் சொல்வது சரியே. என்னை அரசன் என நடத்தவேண்டும் என்று சொன்னவன் அவன். அரசனுக்குரிய அனைத்து முறைமைகளையும் எனக்கு அளித்தவர் யுதிஷ்டிரர். அவர்களின் மைந்தனை நாம் வேட்டைவிலங்கைப்போல சூழ்ந்துகொண்டு கொன்றோம். அதற்காக நான் கொல்லப்படுவேன் என்றால் அது முறையே. அதுவே நிகழ்க!” என்றான். சகுனி “ஆனால் அவனைக் கொன்றது உங்கள் கீழ்மையால் என்பதே சொல்லில் நிலைகொள்ளும்” என்றார். ஜயத்ரதன் கைகளை விரித்து தலையை அசைத்தான்.

“ஒன்றே வழி… என் ஆணைப்படி பகலந்திவரை பாதுகாப்பில் இருந்துகொள்ளுங்கள். அந்தியில் அவன் தன் வஞ்சினத்தை நிறைவேற்றியபின் வெளியே வருக! அதன்பின் அவன் உடன்பிறந்தாரை அணுகி நிகழ்ந்ததை சொல்லவேண்டுமென்றால்கூட அதுவும் இயல்வதே” என்றார் சகுனி. “வென்றால் மட்டுமே உங்களுக்கு மீட்பு. வீழ்ந்தால் தலைமுறைகளாக தொடரும் இழிபெயர். பிரகதிஷுவின் குடிக்கு, பிருஹத்காயரின் குருதிக்கு கீழ்ச்சொல்லே எஞ்சும்… எண்ணுக!” ஜயத்ரதன் பெருமூச்சுவிட்டுக்கொண்டு தலைகுனிந்து அமர்ந்திருந்தான். பிருஹத்காயர் “நான் சொல்கிறேன். அவன்

ஆணையை நிறைவேற்றுவான்” என்றார். சகுனி “முனிவரே” என்று சொல்ல “அவன் என் ஆணையை மீறமாட்டான். அவன் மறைந்திருப்பான்” என்றார்.

சகுனி “ஆம், இதுவே நம் திட்டம். நாளை களத்தில் அர்ஜுனனிடமிருந்து சைந்தவரை காப்பாற்றுவதே நம் படைகளின் முழு இலக்கு” என்றார். பிருஹத்காயரிடம் “நிறைவுகொள்க, சைந்தவரே! உங்கள் மைந்தர் வெல்வார். உங்கள் ஊழையும் நீங்கள் கடந்துசெல்வீர்கள்” என்றார். பிருஹத்காயர் எழுந்து தன் யோகக்கழியை எடுத்துக்கொண்டு “என் மைந்தனுக்கு கௌரவக்கோல் காவல்... அப்பொறுப்பிலிருந்து அது விலகுமென்றால் நான் அதன் முதன்மை எதிரி. நான் அறங்கள் அற்றவன். தெய்வங்களும் அற்றவன். என் மைந்தனன்றி இப்புவியில் எனக்கு ஏதுமில்லை. அதை சொல்லிவிட்டுச் செல்லவே வந்தேன். சொல்க உங்கள் அரசனிடம்!” என்றபின் வாசலை அணுகி அங்கே நின்றார். திரும்பி உரத்த குரலில் சொன்னார்.

“நான் இங்குதான் இருப்பேன், என் மைந்தனின் அருகிலேயே. என் நோக்கிலேயே அவன் இருக்கவேண்டும். அந்திக்குப் பின்னர் அர்ஜுனனின் இறப்புச்செய்தி செவியை வந்தடைந்த பிறகுதான் நான் கிளம்புவேன். எனக்கு அவனருகே ஒரு பாடிவீடு அமையுங்கள்.” சகுனி “ஆணையிடுகிறேன்” என்றார். “அர்ஜுனனை நான் குறைத்து எண்ணவில்லை. இவ்வாறு நாம் செய்யக்கூடுமென எண்ணாதவன் அல்ல அவன். அவன் செய்யப்போவதென்ன என்று நான் அறிந்துகொண்டுதான் இருப்பேன். நாளைய ஆடல் எனக்கும் அவனுக்கும் நடுவிலேயே. ஒருவேளை இத்தனை ஆண்டுகளில் நான்

தவம்செய்து ஈட்டிய அனைத்தும் இத்தருணத்திற்காகவேதான் போலும்.”

தலைவணங்கி அவர் செல்வதை அவையினர் பார்த்து அமர்ந்திருந்தார்கள். பூரிசிரவஸ் அஸ்வத்தாமனிடம் “ஒரு கொடுந்தெய்வம் நீங்கிச்செல்வதுபோல” என்றான். “இப்புடவி என்னும் வேலின் கூர் என தெய்வத்தை வணங்குகின்றது அசுரவேதம். ஒன்று கூர்கொள்கையில் அது தெய்வமாகிறது” என்றான் அஸ்வத்தாமன். “அவை நிறைவுகொள்க!” என்று சகுனி கைகாட்டினார். துச்சலன் அவைநிறைவை அறிவித்தான். சகுனி “நாளைய சூழ்கையை முழுதமையுங்கள், உத்தரபாஞ்சாலரே” என அஸ்வத்தாமனிடம் சொல்லிவிட்டு கிருபரையும் சல்யரையும் வணங்கிவிட்டு தானும் கிளம்பினார்.

அவைகூடும்போதிருந்த உணர்வுகள் முழுமையாகவே மாறி கொந்தளிக்கும் உணர்ச்சிகளுடன் அவை கலையத் தொடங்கியது. ஜயத்ரதன் அருகே சென்ற கிருதவர்மன் அவன் தோளைத் தொட்டு தூக்கி அழைத்துச்சென்றான். பூரிசிரவஸ் அஸ்வத்தாமன் அருகே வந்து “விந்தைதான்” என்றான். “இத்தனை ஆற்றலும் அறிவும் தவமும் கொண்டவர்களென்றாலும் அவர்கள் மைந்தர்பற்றால் முழுமையாக கட்டுண்டிருக்கிறார்கள்.”

“நீங்கள் விடுபட்டுவிட்டீர்களா?” என்று அஸ்வத்தாமன் கேட்டான். விழிகளை விலக்கிக்கொண்டு பூரிசிரவஸ் “இல்லை” என்றான். “விந்தை இருப்பது அங்குதான். ஒவ்வொருநாளும் இங்கே பிறருடைய மைந்தர் பல்லாயிரவர் செத்துக்குவிகிறார்கள். நெறியும் அறிவும் தவமும் இருந்தும் தங்கள் மைந்தரைப்பற்றி மட்டுமே தந்தையர்

எண்ணிக்கொண்டிருக்கிறார்கள்” என்று அஸ்வத்தாமன் சொன்னான்.

# கார்கடல் - 43

குடிலுக்குள் சிறு பெட்டியில் அமர்ந்து தலையை கைகளால் தாங்கி மெல்ல அதிர்ந்துகொண்டிருந்த ஜயத்ரதனுக்கு முன்னால் அவனை பார்த்தபடி கிருதவர்மன் அமர்ந்திருந்தான். பதுங்கி இருக்கும் குழிமுயல்போல் ஜயத்ரதன் தோன்றினான். கிருதவர்மன் எழுந்து சென்றுவிடவேண்டுமென்று எண்ணினான். அவ்வெண்ணம் பலமுறை உருவானபோதும்கூட அவனால் உடலை அசைத்து எழ முடியவில்லை. பெருந்துயரிலிருக்கும் ஒருவரை விட்டுச்செல்வது எளிதல்ல. உடனிருப்பது அதைவிட கடினம். அங்கே உரிய சொற்கள் என ஏதுமில்லை. அப்போது எச்சொல்லும் பொருத்தமற்றவையே. ஆனால் நா மீறி எழும் சொற்கள் இயல்பாகவே அத்தருணத்தில் அமைந்து உரிய பொருள் கொள்வதும் உண்டு.

அவன் எழுந்துவிடலாம் என்று எண்ணி தன் முழு உடல் ஆற்றலையும் கூட்டி கைகளை ஊன்றி உடலை அசைத்தான். அவ்வசைவு ஜயத்ரதன் உடலை விதிர்க்கச் செய்தது. கிருதவர்மன் சிறு கனைப்பொலி ஒன்றை எழுப்பியபோது அவன் நிமிர்ந்து பார்த்தான். “நான் கிளம்புகிறேன். தனிமையில் இருப்பதே உங்களுக்கு நன்றென்று தோன்றுகிறது” என்று கிருதவர்மன் சொன்னான். ஜயத்ரதன் எழுந்து அவன் கையை பற்றிக்கொண்டு “இல்லை, நீங்கள் உடனிருங்கள். யாதவரே, எவ்வகையிலோ நீங்கள் மட்டும் இப்போது உடனிருக்க

இயலுமென்று தோன்றுகிறது” என்றான். கிருதவர்மன் மீண்டும் தன் உடலை தளர்த்தி அமர்ந்தான்.

ஜயத்ரதனின் விரல்கள் கடுங்குளிரில் என நடுங்கின. அவன் அவற்றை கோத்தும் பிரித்தும் ஒன்றோடொன்று நெரித்தும் நிலையழிந்துகொண்டிருந்தான். அவன் கைவிரல் என நாகக்குழவிகள் குடியேறிவிட்டன என்று பட்டது. அவை அவன் அறியாத பிறிதொரு நடனத்தை ஆடிக்கொண்டிருந்தன. “என் உணர்வுகள் என்ன என்று எனக்கே தெரியவில்லை. உண்மையைச் சொன்னால் இப்போது இறந்துவிடவேண்டுமென்ற பெருவிழைவன்றி வேறெதுவும் என் உள்ளத்தில் இல்லை. விதவிதமாக இறப்பதைப்பற்றி மட்டுமே என் எண்ணங்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன” என்று அவன் சொன்னான். அவன் விரல்கள் பின்னி பின் விரிந்தன. கட்டைவிரலை இரு விரல்கள் பற்றி ஒடித்தன.

“மாறி மாறி எண்ணக் காட்சிகள். இந்த வாளை எடுத்து என் கழுத்தில் செலுத்திக் கொள்வதைப்பற்றி, இப்படியே இறங்கிச்சென்று அடர்காட்டில் நின்று சங்கறுத்து விழுவதைப்பற்றி, அங்கே தெற்கில் சிதைகளில் எரிபவருடன் பாய்ந்து சேர்ந்துவிடவேண்டும் என்று… ஒன்று சலிக்கையில் பிறிதொன்று. மாறி மாறி முடிவே இல்லாமல். சாவதைப் பற்றிய எண்ணம் இனிக்கிறது. ஆனால் முழுமையாக சாவை கற்பனையில் நிகழ்த்தி முடித்ததும் வெறுமையும் சலிப்பும் உருவாகிறது. ஆகவே இன்னொரு வகையில் சாவை கற்பனை செய்யத் தொடங்குகிறேன். நூறுநூறு முறை செத்துக்கொண்டே இருக்கும் இந்தத் தருணத்தில் எத்தனை பிறவிகள் எடுத்திருப்பேன்!”

கிருதவர்மன் “இறப்பைப்பற்றி மிகைவிழைவு கொள்வதும் உளச்சோர்வின் இயல்பே” என்றான். “சாவை கற்பனையில் நிகழ்த்தியதும் சலிப்பு உருவாவது சாவு தீர்வல்ல என்பதை காட்டுகிறது.” ஜயத்ரதன் “ஆம்” என்றான். “ஏன் நீங்கள் உடனிருப்பது எனக்கு இத்தனை உவப்பாக இருக்கிறது? சற்று முன் பிற மானுடருடன் இருக்கையில் அவர்களை ஏன் அவ்வளவு வெறுத்தேன்? வாளெடுத்து அவர்கள் ஒவ்வொருவரையும் கொன்று வீழ்த்திவிடவேண்டும் என்று எண்ணினேன். நீங்கள் என் அருகே வந்து தோளை தொட்டபோது அன்னையின் தொடுகைபோல் உணர்ந்தேன். யாதவரே, உங்களிடம் வருகையில் மிக பாதுகாப்பாக எண்ணினேன். இந்தச் சிறு குடிலுக்குள் நீங்கள் இருக்கிறீர்கள் என்பதே இவ்வாழ்வுடன் எனக்கான ஒரே தொடர்பாக இருக்கிறது” என்றான்.

அந்த அணுக்கச் சொற்கள் கிருதவர்மனை கூச்சம் கொள்ளச் செய்தன. அவன் குனிந்து தன் நகங்களை நோக்கிக்கொண்டிருந்தான். ஜயத்ரதன் அந்த அண்மையை அச்சொற்களால் தனக்கே சொல்லிக்கொண்டமையால் மேலும் தெளிவாக உணர்ந்தவனாக “நாம் அதிகம் நெருங்கியதில்லை. நம்மிடையே உளம்பரிமாறும் உரையாடலும் நிகழ்ந்ததில்லை. உங்களைப் பற்றி நான் மிகுதியாக ஏதும் அறியேன். இந்தப் போர்க்களத்தில்தான் நாம் இத்தனை அணுக்கமாக சந்தித்துக்கொள்வதே நிகழ்கிறது. இருந்தும் ஏதோ ஒன்று உங்களுடன் என்னை கொண்டுவந்து சேர்க்கிறது” என்றான். அந்த அணுக்கத்தை ஒரு காவல் என, ஒளிவிடம் என அவன் உருவாக்கிக்கொள்கிறான் எனத் தோன்ற கிருதவர்மன் அதிலிருந்து எழுந்து விலக எண்ணினான். ஆனால் தன் நா

பேசத் தொடங்கியபோதுதான் தான் எழவில்லை என்பதையே உணர்ந்தான்.

கிருதவர்மன் "நீங்கள் இப்போதிருக்கும் இந்த நிலையில் நான் இருந்திருக்கிறேன்" என்றான். ஜயத்ரதன் திகைப்புடன் நிமிர்ந்து பார்த்தான். "கைகள் பின்னால் கட்டப்பட்டு தேர்த்தூணில் என்னை நிறுத்தியிருந்தார்கள். துவாரகையின் தெருக்களினூடாக என்னை இழுத்துச்சென்றார்கள். இருபுறமும் கூடியிருந்த மக்கள் என்மேல் காறி உமிழ்ந்தார்கள். இழிசொல் கூவினார்கள். அச்சொற்களை மறந்துவிட்டேன். அவ்வுணர்வுகள் விழிகள் மட்டும் நஞ்சு பரவிய வேல்களென என்னைச் சூழ்ந்து செறிந்துள்ளன. எஞ்சிய இவ்வாழ்நாளில் ஒருநாளேனும் அவற்றை எண்ணாமல் நான் கடந்து வந்ததில்லை. ஒருகணமேனும் அவை இல்லாமல் வாழ்ந்திருக்கிறேனா என்று எனக்குத் தெரியவில்லை" என்று கிருதவர்மன் சொன்னான்.

"ஆம், அவ்வாறு ஒரு கதை கேட்டிருக்கிறேன். ஆனால் நிகழ்ந்ததென்ன என்று தெரியாது" என்று ஜயத்ரதன் சொன்னான். "அக்கதை இளைய யாதவர் உங்களுக்கு உயிர்க்கொடை அளித்த பெருஞ்செயல் என்று சூதர்களால் பாடப்படுகிறது." கிருதவர்மன் "ஆம், உயிர்க்கொடை அளித்தான்" என்றான். நீள்மூச்சுடன் "ஆலகாலம்போல் கசக்கும் நெஞ்சுடன், அதை ஓயாது கடையும் மத்து என சித்தத்துடன் வாழ்வதற்கு உயிர் தேவை அல்லவா? சில தருணங்களில் கொலை பெருங்கொடையாக அமையக்கூடும். எனக்கு அதை அவன் மறுத்தான்" என்றான். வாயில் கசப்பு ஊற, அதை துப்ப விழைபவன்போல உதடுகுவித்து பின் இறுக்கிக்கொண்டான்.

“என்னை பின் கை கட்டி இழுத்துவந்த இளைய பாஞ்சாலனிடம் மன்றாடினேன். பொன் விழைவதும், பெண் விழைவதும், மண் விழைவதும், மணி விழைவதும் வீரர்க்கு உரியதுதான். ஆனால் வஞ்சகனாகவும் இழிமகனாகவும் என் நெஞ்சுறைந்த திருமகள் முன் சென்று நிற்பதென்பது இறப்பினும் கொடிது எனக்கு என்றேன். அவனிடம் அதை சொல்லியிருக்கலாகாது என இப்போது உணர்கிறேன். என் சொற்கள் வழியாக அவன் தன் தந்தைக்கு அர்ஜுனன் இழைத்த சிறுமையை நினைவுகூர்ந்திருப்பான். அதை நிகர் செய்ய என்மேல் அதை செலுத்தினான்.” ஜயத்ரதன் “என்ன சொல்கிறீர்கள்?” என்றான். “அறிவின்மை எனத் தோன்றும். ஆனால் மானுடர் அவ்வாறுதான் செயல்படுகிறார்கள். எவரிடமோ அடைந்த புண்ணை வேறெவரையோ புண்படுத்தி தீர்த்துகொள்கிறார்கள்” என்றான் கிருதவர்மன்.

“அன்று என்னை இயக்கியது ஒரு சிறு விழைவு. அது என்னை கடந்த ஒரு விசை. அனைத்து மானுடரையும் ஆட்டுவிக்கும் பெருவிசைகளில் ஒரு சரடு” என கிருதவர்மன் தொடர்ந்தான். “அந்த அருமணி, ஒவ்வொருவருக்கும் ஒரு பொருள். எனக்கு அது என் உளம்கவர்ந்த திருமகளின் விழி. ஆனால் அதன் பொருட்டு நான் ஏற்றது என் ஏழு பிறவிகளுக்கும் கசக்கும் நஞ்சு… திருமகள் கொலைகாளியாகி நின்றிருக்கும் கருவறை என என் உள்ளம்.” மேலும் பேச முயன்று பின் கைவீசி விலக்கி “அதை ஏன் பேச வேண்டும்? விடுவோம்” என்றான்.

ஜயத்ரதன் கை நீட்டி கிருதவர்மனின் கால்களில் தன் கையை வைத்தான். “என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. இன்று நானிருக்கும் நிலை அதுவே. தற்சிறுமை கொண்டு, புழுவென அணுவெனச் சிறுத்து, இருத்தலென்பதே கணந்தோறும்

வலிபெருகும் வதையென ஆதல்” என்றான். கிருதவர்மன் “ஆம்” என்றான். ஜயத்ரதன் “அவர்கள் இத்துயரை அறியமாட்டார்களா?” என்றான். “அவர்கள் இழப்பின் துயரை அறிந்திருப்பார்கள். இழப்பு நமது ஆளுமைக்கு அப்பாற்பட்டது. முழுப் பொறுப்பையும் நாம் தெய்வங்களிடம் அளித்துவிட இயலும். ஆனால் சிறுமை நம்மிலிருந்தே தொடங்குகிறது. ஆகவேதான் நாம் அவற்றுக்கு பொறுப்பேற்றுக் கொள்கிறோம்” என்றான்.

“நம்மிடம் இல்லாத சிறுமையை எவரும் நம் மீது ஏற்றிவிட இயலாது” என கிருதவர்மன் தொடர்ந்தான். “நான் எண்ணிப் பார்த்ததுண்டு. அன்று துவாரகையில் ஒரு யோகியை அவ்வண்ணம் கைகள் கட்டி தெருவில் இழுத்துக்கொண்டு சென்றிருந்தால், அவர்மேல் அம்மக்கள் காறி உமிழ்ந்திருந்தால், அவர் சிறுமை கொண்டிருப்பாரா என. அவர்கள்மேல் அவர் ஏளனமோ இரக்கமோதான் கொண்டிருப்பார். சிறுமை இருந்தது என்னுள்ளேதான். அதை பல்லாயிரமென பெருக்கி எனக்கே காட்டும் ஆடியே அத்தருணம். சைந்தவரே, நான் வெறுப்பது என்னை இழிவு செய்தவர்களை அல்ல. என்னை இழிந்தோனாக ஆக்கிக்கொண்ட அத்தருணத்தைத்தான்.”

“அது ஓர் அணு சற்றே திரும்பும் அளவுக்கு சிறிய நிகழ்வு. ஆனால் அதன்பின் அனைத்தும் மாறிவிட்டது. அவன் மேல் எனக்குள்ள வெறுப்பென்பது அவன் அத்தருணத்தை தான் காணாமல் கடந்து சென்றிருக்கலாம் என்பதனால். அதை நான் காணாமல் ஆக்கியிருக்கலாம் என்பதனால். மானுடரை அவர்களுக்குள் உறையும் சிறுமையை காணச்செய்வதுபோல் பெரும் வன்முறை பிறிதில்லை. என்னை அறைந்து கூழாக்கி நிலத்திலிட்டு மிதித்து அரைப்பதற்கு நிகர் அது” என்றான்

கிருதவர்மன். அத்தனை விரிவாக அதை பேசியதை எண்ணி அவன் அகம் வியந்தது. ஆகவே அத்தருணத்தை விலக்கி எழுந்து செல்ல விரும்பியது. அகம் எழுந்து அகல அவன் உடல் அங்கேயே இருந்தது. எத்தருணத்திலும் ஜயத்ரதன்மேல் கடும் காழ்ப்பென அவ்வுணர்வு உருமாறக்கூடும் என அவனுக்கே தெரிந்திருந்தது.

ஜயத்ரதன் “என் நிலையும் மற்றொன்றல்ல, யாதவரே” என்றான். “நான் பாண்டவ அரசியை சிறைபிடிக்க முயன்றேன். அது கௌரவ மூத்தவருக்கு ஓர் அரும்பரிசென அவளை அளிக்கவேண்டும் என்பதற்காகவே என்று நானே என்னிடமும் பிறரிடமும் நூறுநூறு முறை சொல்லி நிறுவிக்கொண்டிருக்கிறேன். ஆனால் அது மெய்யல்ல என்று பிற எவரையும்விட எனக்குத் தெரியும். எவரும் பொய்யென்று ஒன்றைள சொல்லி தனக்குத்தானே நிறுவிக்கொள்ள முடியாது. நான் அவளை கவர்ந்துசெல்ல முயன்றது என் விழைவின் பொருட்டே” என்றான்.

“பாஞ்சால நாட்டில் அவளுடைய மணத்தன்னேற்புக்குச் செல்லும்போது பட்டுத்திரைச்சீலையில் அவளது உருவத்தை பார்த்தேன். அப்போது எழுந்த விழைவு அது. உண்மையில் அதை அப்போது எளிதில் கடந்து சென்றேன். ஆனால் அவள் என்னால் அடையப்பட முடியாதவள் என்று அந்த அவையில் நிறுவப்பட்டபோது அது ஆணவத்துடன் இணைந்து பலமடங்காகியது. அதை என்னிடமிருந்தே அழுத்தி எங்கோ மறைத்தேன். பிறகு ஒருபோதும் என்னுள்ளிலிருந்து அதை எடுத்து நோக்கியதே இல்லை” என ஜயத்ரதன் தொடர்ந்தான்.

“ஆனால் அழுத்தும்தோறும் அது ஆழத்தில் சென்று வளர்ந்தது. இப்புவியில் நாம் மண்ணுக்குள் அழுத்திச் செலுத்தும்

அனைத்தும் ஏழாம் உலகத்து நாகங்களுக்கு சென்று சேர்கின்றன. இங்கு ஒரு துளியென இருப்பவை அங்கு கடலாகின்றன. நாகங்களின் நச்சு அனைத்தையும் பெருக வைப்பது. நீர்படுபவை ஊறி பெரிதாகின்றன, நெருப்புபடுபவை வானளாவ எழுகின்றன என்று தொல்லசுரர் வேதச்சொல் ஒன்று உண்டு.” ஜயத்ரதன் விழிகள் நிலைத்திருக்க உதடுகளால் புன்னகைத்து “ஏன் இவ்வாறு நம்மை நாமே கூறுபோட்டுக்கொள்கிறோம்? இது போர்க்களம் என்பதனாலா? இங்கே இறப்பு நிறைந்துள்ளது என்பதனாலா?” என்றான்.

கிருதவர்மன் நகைத்து “ஆம், இங்கே எளிய போர்வீரன் உட்பட அனைவருமே தங்களை வெட்டி கீறி கூறிட்டு ஆராய்ந்துகொண்டிருக்கிறார்கள். வெறுமையைள சென்றடைந்து திரும்பி வெற்றுக்களியாட்டுக்குச் செல்கிறார்கள்” என்றான். “நான் என் வாழ்நாளில் ஒரே ஒருமுறை மட்டுமே என் எண்ணங்களை நானே திரும்பி நோக்கியிருக்கிறேன். என் வாழ்க்கையை மதிப்பிட்டிருக்கிறேன். முதல்முறையாக என்னை அங்கநாட்டரசரின் முன்வைத்தபோது” என்றான் ஜயத்ரதன். “யாதவரே, நாம் ஏன் அந்தப் பெருவிழைவை அடைந்தோம்? வாழ்க்கையையே அதற்கு நிகராக வைத்து ஆடிக்கொண்டிருக்கிறோம்?” என்றான்.

கிருதவர்மன் திடுக்கிட்டான். பின்னர் தன்னை மீட்டுக்கொண்டு நீள்மூச்செறிந்து “மகிஷாசுரன் ஏன் தூவெண்ணிறப் பேரெழில்கொண்டவள் மேல் பித்துகொண்டான்?” என்றான். பின்னர் “இருள் ஏன் ஒளிக்காக தவம் செய்கிறது?” என்றான். ஜயத்ரதன் “ஆம்” என்றான். “நாம் நம்மிடமிருந்து மீள, நம்மிலிருந்து மேலெழ விழைகிறோம். ஆனால் அதையும் கைப்பற்றலாகவே நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது” என்றான்

கிருதவர்மன். “நாம் அன்றாடம் வாழ்வது வஞ்சத்தின்பொருட்டே என்றாலும் ஆழத்தில் அந்தப் பெருந்திருமேல் கொண்ட காதலை கரந்துறைச் செல்வமாக கொண்டிருக்கிறோம். அதை நாம் இழந்தால்தான் முற்றிலும் பொருளிழந்தவர்களாவோம்” என்றான்.

அவ்வெண்ணத்தை வந்தடைந்ததுமே இருவரும் நிறைவடைந்தனர். சொல்லமைந்து தங்களுக்குள் மூழ்கி அமர்ந்திருந்தனர். பின்னர் நீள்மூச்சுடன் மீண்ட ஜயத்ரதன் “எல்லாம் பழைய கதைகள். இத்தருணத்தில் எளிய சிறுமைகளை தோண்டி எடுத்து மீண்டும் நிறுவிக்கொள்ளவேண்டிய தேவையில்லை” என்றான். “போர்க்களம் என்றால் என்ன என்று இங்கு வந்தபோதுதான் அறிந்தேன். ஒவ்வொன்றையும் அடியாழம் வரை கலக்கி சேறும் குப்பையும் கிளர்ந்தெழச் செய்யும் கொந்தளிப்பு இது. இந்தப் பதின்மூன்று நாட்களில் இக்களத்தில் வாழும் அனைவருமே உளம் கலங்கி அனைத்தும் மேலெழுந்து மேலெழுந்தவை கீழமைந்து பிறிதொருவராக உருமாறியிருப்பார்கள். ஒவ்வொரு கணமும் இங்கு ஒருவர் உளமிறந்து பிறிதொரு உளம் கொண்டு எழுந்துகொண்டிருக்கிறார்கள்.”

கிருதவர்மன் அச்சொற்களை செவிகொள்ளவில்லை. அவன் உள்ளம் மேலெழுந்துகொண்டே இருக்க ஜயத்ரதன் எழுந்த உச்சத்திலிருந்து சரிந்துகொண்டே இருந்தான். கழிவிரக்கமும் தனிமையும் கொண்டு அவன் சொன்னான் “இந்தக் களத்திற்கு வந்த கணம் முதல் நான் எண்ணிக்கொண்டிருப்பது இதைத்தான். இப்போர் கௌரவர்கள் அவையில் பாண்டவ அரசியை இழிவு செய்ததன் பொருட்டு தொடுக்கப்பட்டது

என்கிறார்கள். எனில் அதைவிடப் பெரிய இழிவை நான் அவளுக்கு இழைத்தேன். அவள் கூந்தலைப் பற்றி இழுத்துச்செல்ல முற்பட்டேன். அதன்பொருட்டு பிறிதொரு போர் தொடங்க வேண்டும். ஆனால் என் இழிசெயலைப் பொறுத்து என்னை வாழ்த்தி திரும்ப அனுப்பினார் பாண்டவ மூத்தவர். அன்று பிறிதொரு மானுடனாக, இணைவீரனாக நின்று என் பொருட்டு சொல்லெடுத்தவர் இளைய பாண்டவர்."

"அன்று அவருக்கு நான் எந்தச் சொல்லையும் அளிக்கவில்லை. ஆனால் அத்தனை சொற்களையும் அளித்துவிட்டேன் என்றே பொருள். இப்புவியில் அவர்கள் இருவருக்கும் நிகராக பிறிதெவருக்கும் நான் கடன்பட்டிருக்கவில்லை" என்று ஜயத்ரதன் தொடர்ந்தான். "ஆனால் இன்று போர்க்களத்தில் நான் கீழ்மகனாக நடந்துகொண்டேன். கீழ்மையிலும் கீழ்மை நான் இயற்றியது." தன் ஆழ்நிலை கலைந்தமையால் எரிச்சல்கொண்ட கிருதவர்மன் "நீங்கள் என்ன செய்திருக்கவேண்டும் என்கிறீர்கள்?" என்றான். மேலும் சீற்றம்கொண்டு "மைந்தனை காக்கவந்த இளைய பாண்டவரை செல்க என்று கௌரவப் படைகளுக்குள் செலுத்தியிருக்க வேண்டுமா? அவர் முன்னிருந்து வாள் தாழ்த்தி விலகியிருக்க வேண்டுமா? எனில் எதன் பொருட்டு இங்கே வாள் கொண்டு எழுந்திருக்கிறீர்கள்? உங்கள் முழுக் கடன் கௌரவ அரசரிடமே. கௌரவர்களின் வெற்றியே உங்கள் பொறுப்பு. எதன் பொருட்டும் அதை நீங்கள் துறந்தாகவேண்டும் என்பதில்லை" என்றான்.

"ஆம், நான் அவரை உள்ளே விட்டிருக்க வேண்டியதில்லை" என்றான் ஜயத்ரதன். "ஆனால் நான் உள்ளே சென்றிருக்கலாம். அனைவராலும் சூழப்பட்டு நிலத்தில் நின்றிருந்த அபிமன்யுவை

நான் நினைத்திருந்தால் காத்திருக்கலாம்.” கிருதவர்மன் சினத்துடன் எழுந்து “என்ன செய்திருப்பீர்கள்? துரோணரும் கர்ணனும் அம்புகளால் சூழ்ந்து தாக்கிக்கொண்டிருக்கையில் ஊடு புகுந்து அவர்கள் அனைவரையும் வென்று இளவரசன் உயிரை பேணியிருப்பீர்களா? அல்லது கௌரவர்களின் அம்புகள் பட்டு அங்கு இறந்து விழுந்திருப்பீர்களா?” என்றான்.

“இவ்வண்ணம் சொல்லடுக்கி நான் என்னை காத்துக்கொள்ள முயன்றேன். ஆனால் உடனே என் அகம் அதற்கான மறுமொழியை சொல்லிவிட்டது” என்று ஜயத்ரதன் சொன்னான். “யாதவரே, அங்கே பாண்டவ மைந்தனைச் சூழ்ந்து தாக்கிய ஒவ்வொருவரும் கை நடுங்கிக்கொண்டுதான் இருந்திருப்பார்கள். மீறி எழுந்த சீற்றத்துடனோ அசையா உளஉறுதியுடனோ எவரும் அப்போது போரிட்டிருக்க மாட்டார்கள். நான் சென்று ஒரு சொல் உரைத்திருந்தால் ஒருவேளை அவர்களின் அம்புகள் தாழ்ந்திருக்கலாம். அவன் உயிர் மீண்டிருப்பானா என்று எனக்கு சொல்லத் தெரியவில்லை. ஆனால் அனைவராலும் சூழ்ந்து கொல்லப்பட்டான் எனும் பழியிலிருந்து நாம் தப்பியிருக்கலாம். அத்தருணத்தில் எனக்கு அது தோன்றவில்லை.”

“போர் எழுந்த பின்னர் நம் ஒவ்வொருவரிலும் பிறிதொரு தெய்வம் குடியேறிவிட்டது. அது குருதி குருதி என்று கூவுகிறது. வெற்றிகூட அதற்கு ஒரு பொருட்டல்ல. நெறிகளையோ முறைகளையோ அது அறிவதேயில்லை” என்றான் ஜயத்ரதன். “இப்போதுகூட இளைய பாண்டவரின் இறைஞ்சும் விழிகளை காண்கிறேன். சைந்தவனே இது நம் நட்பின் பொருட்டு என அவர் கூவியது மலையடுக்குகள் சூழ்ந்து எதிரொலி எழுப்புவதுபோல நூறுநூறு முறை என்

செவிகளில் ஒலிக்கிறது. ஆனால் நான் அவரை என் அம்புகளால் மேலும் மேலும் அறைந்து தடுத்து நிறுத்தினேன். ஒரு நாழிகை பொழுது அவரை தடுத்து நிறுத்த என்னால் இயலும் என்று அறிந்திருந்தேன். ஒரு நாழிகைப் பொழுதுக்குள் அபிமன்யு கொல்லப்படுவான் என்பதையும் அறிந்திருந்தேன். குலநெறியும், மூத்தாரும், தெய்வங்களும் வாழும் ஆழுள்ளத்திற்கு அந்த அறிதல் சென்றுசேராமல் நானே தடுத்துக்கொண்டேன்."

கிருதவர்மன் "இவ்விரவில் இதை எண்ணி பொழுதை மீட்டிக்கொள்வதில் எப்பொருளுமில்லை. துயில்க! இது ஒவ்வொரு கணத்திலும் நம்மை மீறி சென்றுகொண்டிருக்கும் பெருநிகழ்வென்பதை உணர்ந்தால் இதில் எதன் பொருட்டும் நாம் துயருற மாட்டோம். எதற்கும் பொறுப்பேற்றுக்கொள்ளவும் மாட்டோம்" என்றான். பின்னர் "நான் வருகிறேன், இத்தருணத்தில் உங்களுடன் இருக்க விழையவில்லை" என்றான். "யாதவரே!" என்று கையை பற்றினான் ஜயத்ரதன். கிருதவர்மன் "இத்தருணத்தில் நான் உடனிருக்கலாகாது. அதை நீங்கள் இவ்வளவு சொற்களை பேசும்போது உணர்ந்தேன். நான் இங்கிருக்கையில் ஆடி போல உங்கள் துயரை உங்களுக்கே எதிரொளித்துக் காட்டுகிறேன். அதை நீங்கள் பெருக்கிக்கொள்ள கருவியாக அமைகிறேன்" என்றான்.

ஜயத்ரதனின் கையை விடுவித்துக்கொண்டு "தனிமையில் உங்கள் எண்ணப் பெருக்கு உங்களுக்கே ஒருகணத்தில் சலிக்கும். ஏனெனில் தனியனின் எண்ணங்கள் மிக விரைவில் அதன் உச்சத்தை அடைந்துவிடுகின்றன. அங்கிருந்து நேர் எதிர்த்திசையில் திரும்பியாகவேண்டும். அதற்கான சொல்முறைகளையும் உணர்வுகளையும்

உருவாக்கிக்கொண்டாக வேண்டும். மிக விரைவில் நிகழ்ந்தவை அனைத்தையும் துறந்து பிறிதொரு இடத்திற்கு சென்று சேர்வீர்கள். அது ஓர் இனிய இளமைப்பொழுதாக இருக்கலாம். அன்றி காதலின் களிப்பாக இருக்கலாம். ஆனால் துயரழிந்த தூய தருணம் ஒன்றை உள்ளம் சென்று சேரும். துயரை உள்ளம் உதறிக்கொள்ளும் வழி அது ஒன்றே" என்றபின் கிருதவர்மன் அவன் தோளில் தட்டிவிட்டு குடில் வாயிலை நோக்கி சென்றான்.

ஜயத்ரதன் அவன் பின்னால் வந்து "என்னை கொல்வேன் என இளைய பாண்டவர் வஞ்சினம் உரைத்திருக்கிறார். நம் திட்டத்தை வைத்து நோக்கினால் அதற்கு எந்த வாய்ப்பும் இல்லை. ஒரே நாளில் அங்கர், துரோணர், கிருபர், சல்யர், பால்ஹிகர், அரசர் என அனைவரையும் வென்று நம் படையை முழுமையாக தோற்கடித்தாலொழிய அது நிகழாது. ஆனாலும் என் உள்ளம் அச்சம் கொள்கிறது. ஒருகணம்கூட நிலைகொள்ளவில்லை. இந்த நிலைகொள்ளாமையே என்னை அச்சுறுத்துகிறது. இது இறப்புக்கு முன் மானுடரிடம் எழும் நிலைகொள்ளாமையா என என் அகம் தவிக்கிறது" என்றான். கிருதவர்மன் பேசாமல் நோக்கி நின்றான். "சொல்க யாதவரே, என்ன நிகழும்? நான் கொல்லப்படுவேனா?"

"இப்போது நீங்கள் பேசிய அனைத்தும் காட்டுவது ஒன்றுதான். நீங்களே உங்கள் சாவை விரும்பி சென்றுகொண்டிருக்கிறீர்கள்" என்றான் கிருதவர்மன். "என்ன சொல்கிறீர்கள்?" என்றான் ஜயத்ரதன் சீற்றத்துடன். "நீங்கள் உங்கள் பிழைகளை ஏற்றுக்கொள்கிறீர்கள். அதற்கான தண்டனையை விழைகிறீர்கள். அந்தக் களப்பலி உங்கள் வாழ்க்கையை எப்படி நிறைவுகொண்டதாக ஆக்கும் என உருவகித்துக் கொள்கிறீர்கள்.

அது பெருந்திருமேல் கொண்ட விழைவுக்கு அளிக்கும் பலிக்கொடை என விரித்துக்கொள்கிறீர்கள். சைந்தவரே, சாவு சாவு என உங்கள் அகம் தாவிக்கொண்டிருக்கிறது" என்றான் கிருதவர்மன். ஜயத்ரதன் தளர்ந்து "ஆம்" என்றான். பின்னர் கலங்கிய கண்களுடன் "நான் என்ன செய்யவேண்டும்?" என்றான்.

"அந்த உளத்தளர்வை உதறுக! உங்களை இறுக்கி கல்லென்றாக்கிக் கொள்க!" என்றான் கிருதவர்மன். "இந்நிலையில் அதற்கு ஒரே வழி வஞ்சம் கொள்வதே. இளைய பாண்டவர் மேல் கசப்பை திரட்டிக் கொள்க! வஞ்சத்தைப் பெருக்கி நிலைநிறுத்துக! அதன்பொருட்டு பொய்யை சமைத்து குவித்துக் கொண்டாலும் அது முறையே. வஞ்சமே நம்மை தலைதாழ்த்தாமல் களத்தில் நிற்கச்செய்யும் என்று உணர்க!" ஜயத்ரதன் "என்னால் இயலாது" என்றான். "நான் கண்ட வழி அதுவே. இந்தக் களத்தில் இறுதிவரை என் நஞ்சுடன் நான் நிலைகொள்வேன். மூன்று தெய்வங்களும் அமுதை கொண்டுவந்து பொழிந்தாலும் அதை கரைத்தழிக்க இயலாது" என்றான் கிருதவர்மன்.

"என்னால் இயலாது, யாதவரே" என்று ஜயத்ரதன் உடைந்த குரலில் சொன்னான். "எத்தனை சொல்லிக்கொண்டாலும் நான் செய்த கீழ்மையை என்னால் ஏற்க இயலாது." கிருதவர்மன் "அது ஒன்றே வழி. வேறொன்றும் நான் சொல்வதற்கில்லை" என்றபின் வெளியே சென்றான். ஜயத்ரதன் அவன் உருவம் மறைவதை, வெளியே புரவிக்குளம்போசை எழுவதை கேட்டுக்கொண்டு நின்றான். வெளியே ஓடி உரத்த குரலில் "அக்கீழ்மையை நான் ஏன் இயற்றினேன் என்று தெரியுமா?" என்று கூவினான். "எல்லா பெருங்கீழ்மைகளும் உளம்தாளா

பேருணர்வு ஒன்றால்தான் இயற்றப்படுகின்றன!” ஆனால் அவன் குரல் ஒலிக்கவே இல்லை. அவன் உடல் உயிரற்றதுபோல் தளர்ந்தது. மெல்ல நகர்ந்து மீண்டும் தன் பீடத்தில் அமர்ந்துகொண்டான்.

# கார்கடல் - 44

குடில் வாயிலில் தோன்றிய மூத்த காவலரான தப்தர் தலைவணங்கி “மூத்த சைந்தவ அரசர்” என்றார். ஜயத்ரதன் தன்னுணர்வு கொண்டு எழுந்து “யாதவர் சென்றுவிட்டாரா?” என்றான். “ஆம், அரசே. அவர் சென்று நெடும்பொழுதாகிறது. சைந்தவ அரசர் தங்களைப் பார்க்க வந்துள்ளார்” என்றார் தப்தர். “அவரை நான் பார்க்க விழையவில்லை” என்றபடி அருகே வந்தான் ஜயத்ரதன். சிவந்து கலங்கிய விழிகள் வெறிக்க “நான் எவரையும் பார்க்க விழையவில்லை என்றேன் அல்லவா?” என்றான். தப்தர் ஒன்றும் சொல்லாமல் நின்றார். “அவரை நான் பார்க்க விரும்பவில்லை என்று சொல்க! நான் துயின்றுவிட்டேன் என்று சொல்க!” என்றான். “அவரிடம் எவரும் எதையும் சொல்லமுடியாது, அரசே” என்றார் தப்தர். “அத்துடன் நீங்கள் அவரை பார்ப்பதே முறை” என்று தணிந்த குரலில் சொன்னார்.

ஜயத்ரதன் திகைத்து நோக்க காவலர் மேலும் குரல் தழைய “ஒருவேளை...” என்றார். அவர் சொல்வதை உணர்ந்து ஜயத்ரதன் உளம் நடுங்கினான். ஜயத்ரதனை இளமையிலிருந்து தூக்கி வளர்த்த தப்தர் அவன் உளப்போக்கை நன்கு அறிந்திருந்தார். “ஒருவேளை இது உங்கள் இறுதி இரவாக இருக்கலாம். பிறிதொரு முறை உங்கள் தந்தையுடன்

சொல்லாட முடியாமல் போகலாம். சொல்லப்படாத சொற்களுடன் அவரோ நீங்களோ இங்கிருந்து செல்லலாகாது. ஆகவே அவரை எதிர்கொள்க!” என்றார். ஜயத்ரதன் தளர்ந்த கால்களுடன் அமர்ந்தான்.

“ஒருவேளை அச்சொற்கள்தான் நீங்கள் இதுநாள்வரை எதிர்பார்த்ததாக இருக்கக்கூடும். அதனூடாக உங்கள் அனைத்து முடிச்சுகளையும் அவிழ்த்து நீங்கள் விடுபடவும் கூடும்” என்றார் தப்தர். “ஆம்” என அவன் சொன்னான். “அவர் வரட்டும்… நான் பிறிதொன்று எண்ண இயலாது.” தப்தர் “ஆணை” என்றார். அவர் திரும்புவதற்குள் கதவைத் தள்ளி அகற்றித் திறந்து குடிலுக்குள் நுழைந்த பிருஹத்காயர் “தப்தரே, விலகுக! என் மைந்தனிடம் தனியாக பேச வந்துள்ளேன்” என்றார். “ஆம், அரசே” என்று தலைவணங்கி தப்தர் வெளியே சென்றார். ஜயத்ரதன் உடல் நடுங்க எழுந்து நின்றான். பின்னர் நினைவுகூர்ந்து அருகணைந்து அவர் கால்களைத் தொட்டு வணங்கினான்.

பிருஹத்காயர் இரு கைகளையும் இடையில் வைத்து நிமிர்ந்து நின்றார். அவர் முன் தன் சிறிய உடலை குறுக்கியவனாக ஜயத்ரதன் நின்றான். தன் வலக்கையிலிருந்த யோகக்கழியை அறை மூலையில் சாய்த்து வைத்தபின் பிருஹத்காயர் சென்று பீடத்தில் அமர்ந்தார். “அமர்ந்துகொள்” என்று உரத்த குரலில் சொன்னார். ஜயத்ரதன் நின்றுகொண்டிருந்தான். “அமர்க!” என்று மேலும் உரக்க ஆணையிட அவன் நடுங்கி சென்று அமர்ந்துகொண்டான். அவர் முழங்கும் குரலில் “அஞ்சவேண்டியதில்லை. உன்னை நான் பார்க்க வந்தது எதையும் மன்றாடிப் பெறுவதற்காக அல்ல. இப்புவியில் நீ

உயிரோடிருப்பதை அன்றி வேறெதையும் உன்னிடமிருந்து நான் எதிர்ப்பார்க்கவும் இல்லை” என்றார்.

அந்த உரத்த ஓசையாலேயே சீற்றம் கொண்டு ஜயத்ரதன் “உயிரோடிருப்பதையே ஒரு பெரும் பொறுப்பாக எனக்களித்துவிட்டீர்கள். எனக்கு உயிரளித்ததையே நீங்கள் உங்கள் வாழ்நாளில் இழைத்த பெரும்பிழை என்று சொல்வேன்” என்றான். அவர் ஏளனத்துடன் “உனக்கு உயிரளித்தது என் விழைவால் அல்ல. அது ஓர் இன்றியமையாமை. என் ஆழத்துவெளியில் எங்கோ நான் எனக்காக ஒளித்து வைத்திருந்த கூரிய நச்சுப்படைக்கலம் நீ. இருளுலகில் பேருருக்கொண்டு எழுந்த கருங்கனல் ஒன்றின் தீச்சொல்” என்றார். வெற்றுச் சிரிப்பொன்றை உரக்க எழுப்பிய பின் “தனக்கே ஒவ்வாத ஒன்றை இயற்றுபவன் தனக்கென ஒரு படைக்கலத்தை சமைத்துக்கொள்கிறான் என்கின்றன நூல்கள்” என்றார்.

ஜயத்ரதன் சலிப்புடன் கைகளை கோத்துக்கொண்டு தலையை அசைத்தான். “ஐங்களம் அறியாத இருளாற்றல் ஒன்று நீ பிறந்த கணம் முதல் உன்னைச் சூழ்ந்து வந்துகொண்டிருக்கிறது என்றனர் நிமித்திகர். அன்று தொடங்கிய அழல் இது. உன் உயிரைப் பேணுவது மட்டுமே என் இவ்வுலகப் பொறுப்பு. ஏனென்றால் நான் உன் வழியாகவே மீள இயலும்” என்ற பிருஹத்காயர் தன் கைகளை விரித்துப் பார்த்தார். “உன்னை ஈன்றிராவிடில் என் தமையனின் குருதி என் கைகளில் இப்படி எரிந்திருக்காது” என்றபடி இரு கைகளையும் விரித்து அவனுக்குக் காட்டினார். “நான் பிறந்தபோது என் இந்த கைகளைக் கண்டு வயற்றாட்டியே அஞ்சினாள். எனக்கு எந்தை பிருஹத்காயர் என்று பெயரிட்டார்.

என் பிறவிச்செல்வமென்று இதை எனக்குச் சொல்லி புகுத்தினர். என் குடியின் காவல்தெய்வமே என் கைகளாக எழுந்தது என்றனர்.”

“எப்போதும் இரு தோழர்கள் என என்னுடன் இருந்தன இவை” என்றார் பிருஹத்காயர். விழிகள் சரிய அவர் ஏதோ தெய்வம் ஒன்றிடம் சொல்பவர்போல பேசினார். “இவற்றுக்கு ஒவ்வொரு நாளும் கடுமையான பயிற்சி அளிக்கப்பட்டது. அதற்கான திறன்வாய்ந்த போர்ப்பயிற்சியாளர்களை பாரதவர்ஷம் முழுக்க தூதர்களை அனுப்பித் திரட்டினார் எந்தை. என் பெருங்கைகள் புகழ்பெற்றபோது ஒவ்வொரு நாளும் பாகுபலியினர் விருஷதர்புரத்திற்கு தேடிவந்தனர். அவர்கள் அனைவரையும் அறைந்து வீழ்த்தி வென்றேன். பின்னர் அவர்களை வெல்வதையே பயிற்சியாகக் கொண்டேன். என்னை வெல்ல ஷத்ரியர்களில் பீஷ்மராலும் பால்ஹிகராலும் முனிவர்களில் பலாஹாஸ்வராலும் பரசுராமராலும் மட்டுமே இயலும் என்று நிறுவப்பட்டது.”

“மெல்ல மெல்ல என் கைகள் பொருள்மாறிக்கொண்டிருந்ததை நான் உணரவில்லை. அவை ஒவ்வொரு நாளும் புகழ்மொழிகள் கேட்டு திமிர்த்தன. ஒருநாள் அவையில் வடபுலத்துச் சூதன் ஒருவன் அவற்றைப் புகழ்ந்து பாடிக்கொண்டிருந்தபோது நான் கைகளை இறுக்கியும் தளர்த்தியும் தசைகளை துள்ளச்செய்துகொண்டிருப்பதை நானே உணர்ந்து திடுக்கிட்டேன். மேடையில் தசைத்திறன் காட்டும் மல்லனைப்போல. அரசனுக்குரிய செய்கை அல்ல அது. அவையிலிருந்தோர் விழிகளை பார்த்தேன். எவருக்கும் அது விந்தை என்றும் தெரியவில்லை. அவ்வாறென்றால் அவர்கள் நோக்க நான் அதை தொடர்ந்து செய்துவந்திருக்கிறேன்.

ஆனால் என்ன உணர்ச்சியை வெளிப்படுத்தவேண்டும் என்று அறியாதவர்களாக அவர்கள் தங்கள் விழிகளை என்மேல் நிலைக்கச் செய்திருந்தனர்.”

“நான் என் கைகளை அசைவற்று நிறுத்த முயன்றேன். என் முழு உளவிசையாலும் அவற்றை இழுத்தேன். அப்போது அறிந்தேன், அவை என் கட்டுப்பாட்டில் இல்லை என்று” என்று பிருஹத்காயர் தொடர்ந்தார். “அவை என் உடலை தங்கள் பீடமெனக் கொண்ட ஆழுலகத்து நாகதெய்வங்கள். அவை தங்கள் களியாட்டை தாங்களே இயற்றிக்கொண்டன. தங்கள் பலிக்கொடைகளை தாங்களே எடுத்துக்கொண்டன. மற்போர்களில் நான் எதிரிகளை பெரும்பாலும் தலையில் ஓங்கி அறைந்து கொல்வேன். அது என் விழைவல்ல என கண்டுகொண்டேன். அதன்பின் போரில் எதிரியை கொல்லவேண்டாம் என முடிவெடுத்தேன். ஒவ்வொரு கணமும் உளம்நட்டிருந்தேன். ஆனால் மற்போர் தொடங்கியதுமே சீறி நெளிந்த என் கைகள் அந்த திரிகர்த்த நாட்டு மல்லனை அறைந்து பலிகொண்டன.”

“தலை உடைந்து மூக்கில் குருதி வழிய அவன் விழுந்து கிடந்து நெளிவதை நோக்கிக்கொண்டிருந்தேன். என் கைகள் இரை விழுங்கிய மாநாகங்கள்போல நிறைவுடன் மெல்ல ஒன்றையொன்று தழுவிக்கொண்டு நெளிந்தன” என்றார் பிருஹத்காயர். “அதன்பின் அவற்றை அஞ்சத்தொடங்கினேன். அவற்றை தவிர்க்க முயன்று இறுதியில் கண்டடைந்தேன், அவை என் பிறப்புக்கு முன்னரே என்னை கண்டடைந்தவை என்று. அவற்றை என்னால் எவ்வகையிலும் வெல்லவோ தவிர்க்கவோ இயலாது. பின்னர் அவற்றுக்கு என்னை அளித்தேன். அவை என்னை கொண்டுசெல்ல

ஒப்புக்கொண்டேன். பாரதவர்ஷத்தின் பெருவீரனாக என்னை நிலைநிறுத்தின அவை. என் குடியை களங்களில் வாகைமலர் சூடச் செய்தன. சிந்துநாடு அகன்றது. விருஷதர்புரம் பொலிந்தது.”

“ஆனால் அவற்றுக்கு நான் பலிக்கொடை அளித்துக்கொண்டே இருந்தேன். ஒருநாள் கனவில் வால்தழுவி தலைவிரித்து நின்ற இரட்டை நாகங்களாக அவை என் முன் தோன்றின. நான் அஞ்சி கைகூப்பி நின்றேன். உன் தமையனை பலிகொள்ள விழைகிறோம் என்றன. எந்தையரே, தெய்வங்களே என நான் கூவினேன். ஆம், அந்த பலியால்தான் நாங்கள் இனி நிறைவுறுவோம் என்றன. தெய்வங்களே, தெய்வங்களே என நான் கதறி அழுதேன். நாங்கள் உனக்கு அளிப்பவை அரியவை. நீ இன்று பேரரசு ஒன்றின் இணையரசன். அக்கொடைக்கு நிகரான பலியையே நாங்கள் விழைகிறோம் என்றது ஒரு நாகம். இனி இணையரசனுக்குரிய அரியணையில் அமரமாட்டோம் என்றது இன்னொரு நாகம். நான் கண்ணீர்விட்டு கைகூப்பினேன். நிகரென்று பிறிதொருவனை ஒப்போம். விஞ்சும் எவரையும் வெல்வோம் என்றன அவை.”

“விழித்துக்கொண்ட பின் நான் பித்தனைப்போல ஏங்கி அழுதேன். ஆனால் எவரிடமும் சொல்லவில்லை. என் மூத்தவர் முன் செல்வதையே ஒழிந்தேன். அவர் இல்லை என்றே எண்ணிக்கொண்டேன். விருஷதர்புரத்திலேயே பெரும்பாலும் இருக்காமலானேன். ஆனால் என் நாகங்கள் தங்கள் வழியை தாங்களே சமைத்து இலக்கு நோக்கி சென்றுகொண்டிருந்தன. அவை சீறி எழுந்தபோது, வலது நாகம் அவரை அறைந்து கொன்றபோது நான் உளம் உறைந்து நோக்கிக்கொண்டிருந்தேன். அந்த கணத்தில் அறிந்தேன்,

பெரும்தீச்சொற்கள் ஆணவத்தை இனிக்கச் செய்யும் நற்கொடைகள் என மாற்றுருக்கொண்டே வந்தமையும் என. அந்நாகங்களின் முதன்மைப் பலி நானே என.”

ஜயத்ரதன் அவரை நோக்கிக்கொண்டிருந்தான். அவர் விழிகள் வெறித்திருந்தன. “காட்டில் இத்தனை நாள் நான் என்ன செய்தேன் என்று அறிவாயா?” தன் ஏளனத்தை திரட்டிக்கொண்டு “தவம் செய்தீர்கள் என்றார்கள். தவம் செய்து எதை ஈட்டப்போகிறீர்கள் என்று நான் எண்ணிக்கொண்டேன்” என்றான் ஜயத்ரதன். “ஈட்டவில்லை, இழந்துகொண்டிருந்தேன். விழைவை, ஆணவத்தை. எஞ்சுவது உன்மேல் நான் கொண்ட இந்தப் பற்று ஒன்றே. இதை என்னால் இழக்க இயலாதென்று கண்டேன். அவ்வறிதலும் ஒரு பேறுதான். ஒருவன் தன் எல்லைகளை உணர்வதுகூட ஒருவகை ஞானம்தான்.”

ஜயத்ரதன் அவர்மேல் எழும் அந்த வெறுப்பை அவனே வியப்புடன் நோக்கிக்கொண்டிருந்தான். “நான் உயிருடனிருந்து தங்களுக்கு அளிப்பதென்ன?” என்று கேட்டான். அவரிடம் மீண்டும் அந்த வெற்றுச்சிரிப்பு எழுந்தது. “நான் விழியிழந்தவன் என ஓர் அந்தணன் சொன்ன சொல்லை நினைவுறுகிறாயா?” என்றார். ஜயத்ரதன் “ஆம்” என்றான். “உன்னால் கூன்முதுகில் அறையப்பட்ட அந்தணனின் சொல் அது... உன்னை நோக்கமுடியாதவனாகவே அன்றும் இன்றும் இருக்கிறேன். விழியிழந்தோன் மைந்தர்கள் எல்லை வகுக்கப்படாத உலகு கொண்டவர்கள். அவர்கள் சிதறியழியக்கூடும், கடந்துசென்று மீளவும் ஆகும்” என்றார் பிருஹத்காயர்.

“என் விழியின்மையால் உன்னை சூழ்ந்திருந்தேன்” என பிருஹத்காயர் தொடர்ந்தார். “உன் தலையை மண்தொடச்

செய்பவன் தலைசிதறி அழிவான் என்னும் சொற்பேற்றை நான் மாருத்ரனிடமிருந்து பெற்றேன். அச்சொல்லால் அரணமைக்கப்பட்டு நீ இதுவரை வாழ்ந்தாய். எண்ணுவன அனைத்தையும் இயற்றி ஆணவத்தை பெருக்கிக்கொண்டாய். அனைத்துக் கீழ்மைகளிலும் திளைத்தாய்.” ஜயத்ரதன் கசப்புடன் புன்னகைத்து “ஆம், எனக்காக நீங்கள் இயற்றும் தவத்திற்கு ஈடுசெய்யவேண்டாமா?” என்றான். “அறிவிலி!” என்று அவர் கையை ஓங்கினார். எழுந்த கை நாகபடம் என நின்று ஆடி பின்னர் தாழ்ந்தது. இரு கைகளும் ஒன்றை ஒன்று தழுவிக்கொண்டன. நெளிந்து விலகின.

மூச்சிறுக விரல்களை சுருட்டிகொண்டு குரல் தாழ்த்தி பிருஹத்காயர் “அறிவிலி!” என்று முனகிக்கொண்டார். தலையை அசைத்த பின் “என் தமையன் துணைவியின் தீச்சொல் என் பின் உள்ளது. நான் மைந்தர்துயரால் உயிர்விடுவேன் என. நான் தப்பி ஓடிக்கொண்டிருப்பது அச்சொல்லில் இருந்தே. என் தவம் அதற்காகவே” என்றார். அவன் விழிகளை நோக்கி நிலைத்த விழிகளுடன் “நான் விண்புகும் பொருட்டு நீ இங்கிருக்கவேண்டும். எனது நீர்க்கடனை நீ இயற்ற வேண்டும். மூச்சுலகில் நீ அளிக்கும் ஒரு கைப்பிடி நீர் எனக்கு வந்து சேரவேண்டும். இப்பிறவியில் தெய்வங்களிடம் நான் கோருவது இது ஒன்றே” என்றார்.

ஜயத்ரதன் “அத்தனை மைந்தரையும் தந்தையர் இக்கடனால் கட்டி இப்புவியில் நிறுத்தியிருக்கிறார்கள்” என்றான். “அது தெய்வங்கள் மைந்தனுக்கும் தந்தைக்குமிடையே போடும் பிணைப்பு” என்று பிருஹத்காயர் சொன்னார். “இந்தக் கைகளால் உன்னை நான் தொட்டதில்லை. ஒவ்வொரு நாளும் கணமும் உன்னையே எண்ணிக்கொண்டிருக்கிறேன். நூறுநூறாயிரம்

முறை சித்தத்தால் உன்னைத் தழுவி உச்சிமுகர்கிறேன். இப்புவியில் நாம் மிக விரும்பியவற்றை துறப்பதே தெய்வங்களுக்கு நாம் அளிக்கும் மிகச் சிறந்த பலிக்கொடை என்பார்கள். நான் உன்னைத் தொடும் விழைவையே மாருத்ரனுக்கு அவியென அளித்தேன்.”

“உன்னை பார்க்கையில் எல்லாம் என் கை என்னை மீறி எழுந்து உன்னை தொட வருவதை கண்டேன். ஆகவேதான் உன்னை முற்றாகவே தவிர்த்தேன். நாட்டையும் நகரையும் விடுத்து காடேகினேன்” என்றார் பிருஹத்காயர். “இக்கணம்கூட என் உடலும் உள்ளமும் ஏங்கும் ஒரே இன்பம் உன்னை தொடுவதுதான். அதை உள்ளத்தால் ஒறுக்கும்தோறும் வளர்ந்து என்னை சூழ்ந்திருக்கிறது. இக்கைகளை பார், இவை உன்னைத் தொடுவதற்காக துடிக்கின்றன.” ஜயத்ரதன் சிரித்தபடி எழுந்துகொண்டு “இல்லை தந்தையே, அவை என்னை அறைவதற்காகவே எழுந்தன” என்றான். அவர் “அறிவிலி!” என்றார். “இன்று அவையில் எழுந்தது முதல் பலமுறை நீங்கள் என்னை நோக்கி கையோங்கிவிட்டீர்கள்” என்றான் ஜயத்ரதன்.

“இப்பிறப்பில் உனைத் தொடும் பேறு எனக்கில்லை” என்றார் பிருஹத்காயர். அவர் குரல் உடைந்தது. “நான் மண் நீங்கும்போது இறுதியாகக்கூட உன்னை தொடலாகாதென்று நோன்பு கொண்டிருக்கிறேன். விண்ணில் நீ வந்து சேர்கையில் அங்கு நின்று இரு கைகளாலும் உன்னை அள்ளி நெஞ்சோடணைத்து உன் குழல் மணத்தை முகர்வேன். இங்கு நான் எஞ்சவிட்டுச் செல்லும் அனைத்தையும் அங்கு பெறுவேன்.” அவர் உதடுகள் நெளிய முகத்தை இறுக்கியபடி தலைகுனிந்தார். உடல் நடுங்கிக்கொண்டே இருந்தது.

“நீ அங்கு வரவேண்டுமெனில் நான் உன்னால் விண்ணேற்றப்படவேண்டும். நீ என் மைந்தனென அங்கு வந்து சேரவேண்டும்…” என்றபோது அவர் இரப்பதுபோல தன் கைகளை நீட்டினார். தன் அகம் நெகிழ்வதைக் கண்டு அஞ்சி அதை நோக்கி தன்னிழிவுகொண்டு ஜயத்ரதன் உளம்பின்னடைந்தான். சலிப்புடன் “உங்கள் மேல் நம்பிக்கை கொள்க! உங்கள் கடுந்தவத்தால் சூழப்பட்டவன் அல்லவா நான்?” என்றான். “ஆம், உன்னை அவர்கள் அணுகவே முடியாது. அவ்வாறு படைசூழ்கைகளை உடைத்து அணுகிவந்து உன்னை அவன் கொன்றால் அவன் தலைவெடித்துச் சாவான். அதை அவனை ஆளும் இளைய யாதவன் அறிவான். நீ இரு நிலைகளில் காக்கப்பட்டவன்” என்றார். “ஆனால் இன்று அவையில் நிகழ்ந்தது என்ன என்று பின்னர்தான் உணர்ந்தேன். அது என்னை அச்சுறுத்துகிறது.”

முதல்முறையாக ஜயத்ரதன் உளக்கூர்மை அடைந்தான். “இன்று கொல்லப்பட்ட மைந்தன் அபிமன்யு மட்டும் அல்ல” என்றார் பிருஹத்காயர். “கௌரவப் பேரரசின் பட்டத்து இளவரசன் லக்ஷ்மணன் களம்பட்டிருக்கிறான். அதைப்பற்றி ஒரு சொல்கூட அவையாடலில் எழவில்லை. துரியோதனனும் துச்சாதனனும்கூட அதைப்பற்றி பேசவில்லை.” அதை அப்போதுதான் உணர்ந்து ஜயத்ரதன் “ஆம்” என்றான். “ஏன்?” என்றார் பிருஹத்காயர். ஜயத்ரதன் வெறுமனே நோக்கினான். “அபிமன்யு அறம்கடந்து கொல்லப்பட்டமை அவர்கள் அனைவரையும் துன்புறச் செய்கிறது. அதை கடந்துசெல்ல முயல்கிறார்கள்” என்றார் பிருஹத்காயர்.

“ஆம், அது இயல்பே” என்றான் ஜயத்ரதன். “இந்தப் போரில் இதுவரை நாம் அறம் மீறவில்லை. அவர்கள் அறம்

மீறும்போதுகூட கௌரவ அரசர் நெறிநின்றே போரிடுகிறார்.” பிருஹத்காயர் “அபிமன்யுவின் இறப்புக்கு கௌரவப் படை துயர்கொண்டது. அவனை வாழ்த்திக் கூவியது” என்றார். “அபிமன்யு துரியோதனரால் வளர்க்கப்பட்ட மைந்தன்” என்றான் ஜயத்ரதன். “எண்ணுக மூடா, உடனிறந்தவன் பட்டத்து இளவரசன் லக்ஷ்மணன்! பேரியல்பும் கனிவும் கொண்டவன். நிறையுளத்தான் என குடிகளால் கொண்டாடப்பட்டவன்” என்றார் பிருஹத்காயர். “ஆயினும் கௌரவப் படை அபிமன்யுவுக்காகவே துயருறுகிறது.” ஜயத்ரதன் “அவர்களுக்கும் பிழையுணர்வு இருக்கலாம்” என்றான்.

“அறிவிலி!” என்றார் பிருஹத்காயர். “அந்தப் பிழையுணர்வு எங்கு சென்று நிற்கும் என உணர்கிறாயா? அவர்களின் ஆழுளம் பிழைநிகர் செய்ய விழையும். அதன்பொருட்டு உன்னை அவர்கள் பலியிடவும் கூடும்.” ஜயத்ரதன் சிரித்துவிட்டான். “சிரிப்பதற்குரியதல்ல இது. மானுட உள்ளங்களின் ஆடல் தெய்வங்களுக்கு நிகரான அறியமுடியாமையை சூடியது. அவர்கள் அறிந்து செய்யமாட்டார்கள். ஆனால் ஏதோ ஒன்று நிகழ்ந்து இப்பிழையுணர்வின் பெருந்துன்பத்திலிருந்து விடுதலைகொள்ள முடியுமென்றால் நன்றே என்று எண்ணுவார்கள்” என்றார் பிருஹத்காயர்.

“தனித்தனியாக அவர்கள் உன்னை இழக்க எண்ணம் கொள்ளமாட்டார்கள். உன்மேல் பேரன்புகூட கொண்டிருக்கலாம். ஆனால் கூட்டாக உள்ளங்களை ஆள்வது பிறிதொரு தெய்வம். அது தனிமானுடரின் நெறிகளுக்கும் அறவுணர்வுக்கும் அப்பாற்பட்டது. தனிமானுடர்களாக அவர்கள் கொள்ளும் விழைவுகளையும் உணர்வுகளையும்கூட அது பொருட்படுத்துவதில்லை. வஞ்சினம் உரைத்து வெற்றி

விழைந்து எழும் தனியர்களின் தொகைகளான பெரும்படை கூட்டாக தோல்வியையும் முற்றழிவையும் விரும்பி அடையக்கூடும் என்பதை நூல்கள் சொல்கின்றன” என்றார் பிருஹத்காயர். “அவர்களின் அந்தக் கூட்டு எண்ணம் உன்னை கொல்ல வழியமைக்கக்கூடும் என்று தோன்றியது. அவர்களை நம்பி உன்னை விட்டுவிடுவது மடமை என எண்ணினேன். ஆகவேதான் இங்கே வந்தேன்.”

“பிறிதொரு சொல்லில் இதையே கிருதவர்மரும் சொன்னார்” என்றான் ஜயத்ரதன். “என்ன?” என்றார் பிருஹத்காயர். “ஒன்றுமில்லை” என்றான் ஜயத்ரதன். பிருஹத்காயர் “நான் அஞ்சுவது இளைய யாதவனை. உனக்குக் காப்பென்று ஆகும் என் தவப்பேறை வெல்லும் வழி ஒன்றை அவன் கண்டுகொள்ளக்கூடும். அது என்ன என்று அறியேன். ஆனால் அவனால் அதுவும் இயலும்” என்றார். எழுந்து நிலையின்மையுடன் அறைக்குள் சுற்றி வந்தார். “என்னால் நான் செய்யவேண்டியதென்ன என்று முடிவெடுக்க இயலவில்லை. ஆனால் உன்னுடன் இருக்கவேண்டும் என்று தோன்றியது. அனைத்து திசைகளில் இருந்தும் உனக்கு உயிரிடர் வரக்கூடும்.”

ஜயத்ரதன் “நான் சலித்துவிட்டேன். நான் அஞ்சவில்லை என்று சொல்லமாட்டேன். ஆனால் அஞ்சி அஞ்சிப் பதுங்குவது என் இயல்பல்ல” என்றான். “ஒருநாள்தான்… நாளை பகலந்தி முடிய ஒருநாள். அதன்பின் நீ வாழ்வாய். நான் வெல்வேன். இப்பிறப்பிலேயே என் தீச்சொல்முடிச்சை அவிழ்த்துவிட்டு விண்ணேகுவேன்” என்றார் பிருஹத்காயர். “நான் துயில்கொள்ளவேண்டும்” என்றான் ஜயத்ரதன். “துயில்க! நானும் உன்னுடன் இக்குடிலிலேயே இருக்கிறேன்.” ஜயத்ரதன்

“இங்கா?” என்றான். “ஆம், உன்னை நான் தனியாக விடக்கூடாது…” என்றார் பிருஹத்காயர். ஜயத்ரதன் பெருமூச்சுவிட்டான்.

குரல் கனிய பிருஹத்காயர் சொன்னார் “படுத்துக்கொள். அனைத்தையும் மறந்து துயில்கொள்… தந்தை இருக்கிறேன். என் அனைத்து ஆற்றல்களும் உனக்காகவே.” ஜயத்ரதன் உளம் உடைந்தான். மஞ்சத்தில் ஓசையுடன் அமர்ந்து கைகளால் முகம்பொத்தி விசும்பி அழத்தொடங்கினான். அவர் “அஞ்சாதே, மைந்தா. உன்னுடன் தவம் நிறைந்த நான் இருக்கிறேன். என்னுடன் மாருத்ரனின் அருள் உள்ளது. நீ வாழ்ந்து நிறைவுறுவாய்” என்றார். “தந்தையே…” என்றான் ஜயத்ரதன். “நீங்கள் என்னை தொட்டிருந்தால் நான் பிறிதொருவனாக ஆகியிருப்பேனா? இவ்விருளும் அலைக்கழிப்பும் அற்றவனாக சிறப்புற்றிருப்பேனா?”

அவன் சொற்கள் பிருஹத்காயரை நடுக்குகொள்ளச் செய்தன. “என்னை தொடுக… என்னை தழுவுக! குழவிப்பருவத்திலிருந்தே நான் விழைந்த ஒன்றை இன்றேனும் நான் அடைகிறேன்…” அவர் அறியாது எழுந்தபின் அமர்ந்துகொண்டு “வேண்டாம்” என்றார். “அவள் விழிகள் என் கண்முன் என தெரிகின்றன. வஞ்சம் ஒன்றே கதிரோன் என நாளும் விடியும் உலகில் வாழ்பவள். சிதையில் எரியும் வலியை கணம் கணமென அறியும் காலமுடிவிலியில் இருப்பவள். அவளுடைய தீச்சொல்” என்றார். ஜயத்ரதன் விழிகளில் நீருடன் அவரை நோக்கி அமர்ந்திருந்தான். “வேண்டாம், மைந்தா… இப்பிறவியில் வேண்டாம். என் கைகள்…” என்றார்.

“ஆம்” என அவன் பெருமூச்சுவிட்டான். கண்களை துடைத்துக்கொண்டான். அவர் “நாம் விண்ணுலகில்

தழுவிக்கொள்வோம்” என்றார். அவன் இகழ்ச்சியுடன் உதடுகள் வளைய “விண்ணுலகு ஏகுவதற்கு முன் இங்கேயே உங்கள் கண்முன் நான் இறந்தால் என்னை தழுவிக்கொள்க! என் தலையை நெஞ்சோடணைத்துக்கொள்க! நான் அதை உணரப்போவதில்லை என்றாலும் இப்புவியில் நான் கொண்ட விழைவு நிறைவேறட்டும்” என்றான். துயர்மிக்க குரலில் “மைந்தா…” என்றார் பிருஹத்காயர். அவன் நோக்கை திருப்பிக்கொண்டான். அவர் சுவரில் விழுந்திருந்த அவன் நிழலை நோக்கினார். அதை தொடுவதற்காக கைநீட்டி பின்னர் தவிர்த்துக்கொண்டார். அவன் அதை உணர்ந்து மெய்ப்புகொண்டான். ஆனால் திரும்பி அவரை நோக்கவில்லை.

அவருடைய நீள்மூச்சொலி கேட்டு அவன் எண்ணம் கலைந்தான். திரும்பி அவரை நோக்கியபோது அவருடைய வலக்கையின் நிழல் தன் தலையை தொட்டுக்கொண்டிருப்பதை கண்டான். மரவுரி அணிந்து கல்மாலையும் உருத்திரவிழிமணிக் குண்டலங்களும் சடைமுடிப்பரவலுமாக அவர் மூவிழியன் என்று தோன்றினார். விழியிமைக்கும் ஒரு கணத்தில் முகத்தோற்றம் மாற விழியிழந்தவராகத் தெரிந்தார். அவன் நெஞ்சு துடிக்க கூர்ந்து நோக்கினான். விழியின்மையே அவர் முகமெங்கும் நிறைந்திருந்தது. தலையை திருப்பியிருந்தமையும், வாய் சற்று திறந்திருந்ததும் எல்லாம் திருதராஷ்டிர மாமன்னரையே நினைவுறுத்தின. இறுதியாக அவரை அஸ்தினபுரியின் அரண்மனையில் கனவுருத் தோற்றமாகக் கண்டதை அவன் நினைவுகூர்ந்தான். அப்போதும் அவர் விழியிழந்தவராகவே தோன்றினார்.

சிலகணங்கள் நோக்கியபின் மஞ்சத்தில் படுத்து கால்களை நீட்டிக்கொண்டான். அவர் பீடத்தில் அசைந்து அமர்ந்தார்.

அவன் நோக்காமல் “தாங்கள் படுத்துக்கொள்வதென்றால்…” என்றான். “தேவையில்லை, நான் துயிலப்போவதில்லை” என்றார் பிருஹத்காயர். அவன் கண்களை மூடிக்கொண்டான். கைகளை மஞ்சத்தில் படியவைத்து உடலை தளர்த்திக்கொண்டே இருந்தான். உடலில் களைப்பு நிறைந்து எடையுடன் பரவியிருந்தாலும் துயில் வரவில்லை. உடல் களைப்பை துறந்த பின்னர்தான் உள்ளம் துயிலை நாடும் போலும். ஏனென்றால் அது துயிலுக்குள் பிறிதொரு விழிப்பை அடைகிறது. அந்தக் கனவுள்ளத்திற்கு ஊக்கம்கொண்ட உடல் தேவையாகிறது.

அந்த ஒருநாளில் நிகழ்ந்தவை பற்றிய நினைவு அவனை திகைப்படையச் செய்தது. பற்பல காலஅடுக்குகளாக ஒரு முழு வாழ்க்கையே நிகழ்ந்துமுடிந்ததுபோல. திரும்பச் சென்று ஒவ்வொன்றையும் மீட்டு எடுக்கமுடியும் என ஏன் தோன்றுகிறது? அபிமன்யு எழுந்து வரலாம். லக்ஷ்மணன் தோன்றலாம். இழக்கப்பட்டவை அனைத்தும் மீளலாம். அதற்கான வாய்ப்பு இப்புடவியில் எங்கோ இருக்கக்கூடும். அருந்தவத்தால் அதை அடையமுடியும். ஆனால் அருந்தவம் இப்புவியின் எளிய துயர்களை வெல்லவும் இன்பங்களை அடையவும்தான் என்றால் எத்தனை சிறுமைகொண்டது அது! ஆயினும் கேட்ட கதைகளில் அனைவருமே இப்புவியில் பொருள்கொள்ளும் ஒன்றுக்காகவே புவிதுறந்து தவம் இயற்றியிருக்கிறார்கள். இதோ, இவர்கூட அவ்வாறுதான்.

பின்னர் விழித்துக்கொண்டபோது உடல்நடுங்கிக்கொண்டிருந்தது. எழுந்தமர்ந்து அறைமூலையில் பீடத்தில் அமர்ந்து திறந்த கதவினூடாக வெளியே நிறைந்திருந்த இருளை நோக்கிக்கொண்டிருந்த

பிருஹத்காயரை பார்த்தான். அவருடைய பெரிய கைகள் ஒன்றையொன்று முத்தமிட்டுத் தழுவி பின்னி நெளிந்துகொண்டிருந்தன. அவனை அஞ்சி விழித்துக்கொள்ளச் செய்த கனவில் அவை இரு கரிய நாகங்களாக மாறி அவர் உடலில் இருந்து வழிந்திறங்கி அவனை நோக்கி வந்து உடலைச் சுற்றிக் கவ்வி இறுக்கி தலையை விழுங்கும்பொருட்டு வாய் திறந்து அணுகின என்பதை நினைவுகூர்ந்தான்.

# கார்கடல் - 45

குருக்ஷேத்ரப் பெருநிலத்தில் சூழ்ந்திருந்த குறுங்காட்டின் மேற்கு எல்லையில் ஆளுயரச் சிதல்புற்றுகள்போல் ஒன்றன்மேல் ஒன்று ஏறிச் செறிந்து நின்ற செம்மண் மேட்டின் இடுக்குகளில் தசைக் கதுப்பெனத் தெரிந்த சேற்றில் ஈரக்கசிவாகத் தோன்றி சொட்டி சிறு வழிவுகளாகி திரண்டு ஓடையாகி இறங்கி செம்மண் சேறு கரைவகுத்த சிறு சுனையொன்றில் தேங்கி கவிந்து ஒழுகி சிற்றோடையாகி காட்டிற்குள் சென்று இலை செறிந்த ஆழத்திற்குள் மறைந்து அங்கிருந்த நிலப்பிளவொன்றுக்குள் நுழைந்த தூநீர் ரக்தவாஹா என்று அழைக்கப்பட்டது. அது வஞ்சத்தின் ஒழுக்கு என்றனர் தொல்குடிப் பூசகர். அது ஆறாத புண். உறையாத குருதி. எவரும் அறியாத ஒழுக்கு.

அங்கு செல்வது நன்கு வழி தெரிந்த பூசகரின் துணையோடன்றி இயல்வதல்ல. பல்லாயிரம் கோடி அம்புகளும் வேல்களும் கூர்த்து நின்றிருக்கும் பெரும்படைபோல் முட்புதர்கள் அதை வேலியிட்டுச் சூழ்ந்திருந்தன. அவற்றை வெட்டி வழி தெளித்துச் செல்வது இயலாது. மண்ணுக்கு அடியில் செல்லும் பிலம் ஒன்று மட்டுமே பாதை. அதன் வாய்திறப்பு காட்டில் பிறிதொரு இடத்தில் இருந்தது. அதற்குள் குருக்ஷேத்ரக் காட்டில் வாழும் ஓநாய்களும் கழுதைப்புலிகளும் குடியிருந்தன. பற்பல தலைமுறைகளாக அவை கொன்று இழுத்துக்கொண்டுவந்து வைத்து உண்ட விலங்குகளின் எலும்புகளும் மண்டையோடுகளும் வெண்கூழாங்கற்களென செறிந்துகிடந்த

அந்தச் செம்மண் வளைக்குள் காலூன்றி கை மடித்து பதித்து குழவியென இழைந்தும் மகவென தவழ்ந்தும் மட்டுமே செல்ல இயலும்.

வெளியிலிருந்து பச்சை இலைகொளுத்தில் புகையிட்டு உள்ளே இருளுக்குள் ஒளிந்திருக்கும் விலங்குகளையும் நாகங்களையும் அகற்றிவிட்டு உள்ளே செல்பவர் ஒரு காதம் அவ்வாறு எலியென்றும் அரவென்றும் சென்று பின்னர் மேலிருந்து ஒளி தெரியும் பொந்தினூடாக எழுந்து வெளிவந்தால் ரக்தவாஹாவை பார்க்க முடியும். அதை முதலில் பார்ப்பவர்கள் பேருடல்கொண்ட விலங்கொன்றின் புண் என்ற எண்ணத்தை அடைந்து நெஞ்சுலைவார்கள் என்றனர் சூதர். அதன் சேற்றுக்கு நாட்பட்ட புண்ணின் சீழ்வாடை இருந்தது. அதில் மீன்களோ சிற்றுயிர்களோ வாழ்வதில்லை. ஆறா வஞ்சினங்கள் கொள்ளவும், கொண்ட வஞ்சினங்களை நிலைநிறுத்தவும் வஞ்சினங்களிலிருந்து தப்பவும் அங்கே சொல்லேற்புகளை நிகழ்த்துவதுண்டு.

முற்புலரியில் பிருஹத்காயர் அதைப்பற்றி சொல்லும்வரை ஜயத்ரதன் அவ்விடத்தைப்பற்றி அறிந்திருக்கவில்லை. அவன் துயின்றுகொண்டிருக்கையில் அவர் அவன் அருகே வந்து தன் யோகக்கழியால் தரையை நான்கு முறை தட்டி “விழித்தெழு” என்றார். அவன் எழுந்து அமர்ந்து “என்ன?” என்றான். “முற்காலை. நாம் கிளம்பவேண்டும்…” என்றார். அவர் தன் கனவில் தோன்றியிருப்பதாகவே அவன் முதலில் நினைத்தான். மீண்டும் அவர் சொன்ன பின்னர்தான் முழு உளம் எழுந்து “ஆணை, தந்தையே” என்றான். அவர் “நாம் உடனே கிளம்புகிறோம். எவரும் அறியலாகாது” என்றார். அவன் மறுசொல்லின்றி கிளம்பினான்.

அவரைக் காத்து நான்கு பூசகர்கள் நின்றிருந்தனர். ஒருவன் அவருடைய மாணவன். அவனும் அவரைப்போலவே ஆடை அணிந்து பெருந்தோள்களுடன் நின்றிருந்தான். அவர்களுடன் செல்லும்போதுதான் பூசகர் ஒருவர் தாழ்ந்த குரலில் அந்த இடத்தைப்பற்றி சொன்னார். கதைகளில்கூட அவன் அதை அறிந்திருக்கவில்லை. “அங்கு சொல்லும் ஒவ்வொரு வஞ்சினச் சொல்லையும் ஆயிரத்தெட்டு மாநாகங்கள் அறிகின்றன. அவை அவற்றை தங்கள் சொல்நிறைந்த விழிகளால் கேட்கின்றன” என்று சூதர் சொன்னபோது அவன் மெய்ப்பு கொண்டான்.

அவன் அங்கே செல்ல விரும்பவில்லை. ஆனால் எடைமிக்க காலடிகளை வைத்து சென்றுகொண்டிருந்த தந்தையை மறுத்து எண்ணும் துணிவு அவனுக்கு இருக்கவில்லை. அன்றுவரை அவன் தந்தை சொல்லை மீறுவதையே தனக்கு உகந்தது என எண்ணியிருந்தான். அவரை சிறுமைசெய்வதனூடாக தான் மேலெழுவதாக கருதினான். முடிசூட்டிக்கொண்டதும் சிந்துநாட்டில் அவர் உருவாக்கிய அனைத்து நெறிகளையும் அவன் மாற்றியமைத்தான். அவருடனிருந்த அனைத்து அமைச்சர்களையும் அவன் விலக்கினான். அவர் நட்புகொண்ட நாடுகளை பகைத்தான், பகைத்தவர்களை அணுகினான். ஆனால் ஒவ்வொன்றையும் ஆயிரம் முறை நெஞ்சுக்குள் சொல்லிக்கொண்ட வஞ்சினத்தின் வல்லமையுடன் இயற்றியமையால் மீளமீள வெற்றியையே அடைந்தான்.

அத்தனைக்குப் பின்னரும் அவன் பிருஹத்காயரின் மைந்தன் என்றே அறியப்பட்டான். கொல்லப்பட இயலாதவன் என தெய்வச்சொல் பெற்றவன் என அவனைப் பணிந்த மாற்றார் உண்மையில் அஞ்சியது தன் தந்தையையே என எண்ணுந்தோறும் அவன் மேலும் கசப்புகொண்டான்.

சிந்துநாடெங்கும் அவருடைய தடங்களே இல்லாமல் ஆக்கினான். அதன் பின்னரும் அவர் அவ்வண்ணமே எஞ்சினார். “மண்ணில் மறைந்திருப்பதனால் வேர் இல்லாமலாவதில்லை. ஒவ்வொரு இலையின் நீரும் வேரின் கொடையே” என ஒரு சூதன் அவன் முன் அவையமர்ந்து பாடியபோது சினம்பொங்கும் உள்ளத்துடன் அவன் கேட்டுக்கொண்டிருந்தான். “எங்கோ காட்டின் ஆழத்தில் பிருஹத்காய முனிவர் இயற்றும் தவம் இங்கு அன்னமும் நீரும் பொன்னும் பட்டுமென ஆகிறது. பகைவர் நெஞ்சில் அச்சமும் அன்னையர் மார்பில் அமுதும் ஆகிறது. அவரை வாழ்த்துக!”

அவன் கைகளால் அரியணையை அறைந்தபின் எழுந்து விலகினான். அமைதியிழந்து அரண்மனையில் உலவிக்கொண்டிருந்த அவனிடம் முதிய அமைச்சர் கனகசீர்ஷர் “எந்த அரசும் குடிகளின் எண்ணங்களுக்கு தளையிட இயலாது, அரசே” என்றார். “அவ்வண்ணமென்றால் என் வெற்றிகளுக்கு என்ன பொருள்? நான் வாழ்வதற்கு என்ன பொருள்?” என்று அவன் கேட்டான். அவர் பேசாமல் நின்றார். தொண்டைநரம்புகள் புடைக்க “சொல்க!” என்று அவன் கூவினான். “கொல்லப்படவே இயலாதவர் என்னும் சொல் இல்லையேல் நீங்கள் இத்தனை வென்றிருக்க இயலாது” என்றார் கனகசீர்ஷர். அவன் மீண்டும் பீடத்தில் அமர்ந்தான். பின்னர் வெறியுடன் தலையை ஓங்கி ஓங்கி அறைந்தான். “சாவு! சாவு ஒன்றே நான் இத்தருணத்தில் விழைவது. இன்னொருவரின் அளிக்கொடையென அமையும்போது உயிரும் எத்தனை கசக்கிறது…” என்றான்.

அமைச்சர் வெறுமனே நோக்கிக்கொண்டிருந்தார். “அமைச்சரே, அவர் எனக்கு கொடையளிக்காத ஏதேனும் என்னிடம்

உள்ளதா?” என்றான். அமைச்சர் புன்னகையுடன் “இக்கசப்பு” என்றார். அவன் அவரை இமைக்காமல் நோக்கிக்கொண்டிருந்தான். “தந்தையரிடமிருந்து எந்த மைந்தருக்கும் மீட்பில்லை, அரசே. அவ்வாறு புடவியை சமைத்துள்ளது பிரம்மம்” என்றபின் மீண்டும் தலைவணங்கி அவர் வெளியே சென்றார். அவன் அங்கே அந்திவரை அமர்ந்திருந்தான். எங்கேனும் எழுந்து சென்று உயிரை மாய்த்துக்கொண்டாலென்ன என்று எண்ணினான். தன் தலையை நிலத்தில் விழ வைப்பவர் தலைவெடித்து இறப்பார். தானே தன் தலையை வெட்டி உகுத்தால் அந்தத் தலையே வெடிக்குமா என்ன? அவனுடைய வெற்றுச் சிரிப்போசை கேட்டு ஏவலன் வந்து தலைவணங்கினான். அவன் செல்க என்று கைகாட்டினான்.

ஆனால் முந்தைய ஓர் இரவுக்குப் பின் அனைத்தும் மாறிவிட்டிருந்தது. காலையில் கண்விழித்து தந்தையைப் பார்த்தபோது அவன் அகம் நிறைவடைந்தது. எங்கோ காட்டுச் சிறுகுடிலில் தந்தையுடன் இளமைந்தனாக வாழ்வதுபோல என எண்ணிக்கொண்டான். அதன் பின்னரே அக்கனவை சற்றுமுன் அவன் அடைந்ததை நினைவுகூர்ந்தான். அவர் அவனிடம் “காலைத்தூய்மை செய்துகொள்” என்றார். அவரால் அவனை நேருக்குநேர் நோக்கி பேச முடியவில்லை. முந்தையநாள் இரவு விழிகளை நட்டுப்பேசியவர்தான். அவன் விழிகள் மைந்தன் விழிகளென மாறிவிட்டிருக்கின்றனபோலும். அவன் புன்னகையுடன் எழுந்து முகம்கழுவி வந்தபோது அவர் “கிளம்புக!” என்று சொல்லி தன் யோகக்கழியுடன் முன்னால் சென்றார்.

பந்தத்துடன் சென்ற இரு பூசகர்கள் குகைவாயிலில் நின்று குந்திரிக்கத்தை எரித்து புகை உருவாக்கினர். குகைக்குள் புகை புகுந்து மறுபக்கத் திறப்பு வழியாக அது வெளியேறும்வரை அங்கே காத்திருந்தனர். முழவுகளை முழக்கி குகைக்குள் எதிரொலி எழுப்பும்படி செய்தனர். உள்ளிருந்து பன்னிரு நரிகள் கொண்ட ஒரு கூட்டம் ஊளையிட்டபடி எழுந்து அவர்களைக் கடந்து வெளியே ஓடியது. பூசகர் "நன்று, நரிகள் இருப்பதனால் பிற விலங்குகளோ பாம்புகளோ உள்ளே இல்லை என்றாகிறது. செல்வோம், முனிவரே" என்றார். பந்தங்களை அணைத்துவிட்டு பூசைக்குரிய பொருட்களை தோல் உறைகளில் கட்டி முதுகில் சேர்த்து தொங்கவிட்டபடி முதல் பூசகர் பிலத்திற்குள் நுழைந்தார். பிருஹத்காயர் திரும்பி ஜயத்ரதனிடம் "நீ செல்லலாம். நன்றே நிகழ்க!" என்றார்.

ஜயத்ரதன் "அஞ்சும் அளவுக்கு ஒன்றுமில்லை என்றே எனக்கு இப்போது தோன்றுகிறது, தந்தையே. இன்று போரில் கௌரவர்களின் அனைத்து வீரர்களும் இணைந்து அர்ஜுனனை வளைத்துக்கொண்டு பாண்டவப் படைகளின் முகப்பிலிருந்து அவரை அசையாமல் நிறுத்தப்போகிறார்கள். துரோணர், கிருபர், சல்யர், அங்கர், அஸ்வத்தாமர், பூரிசிரவஸ், கிருதவர்மர், அரசர் எனும் எட்டு கந்துகளில் இழுத்துக்கட்டப்பட்ட யானைபோல் அவர் இன்று நின்றிருப்பார்" என்றான். "நானோ கௌரவப் படைகளுக்கு நடுவே ஒன்றுடன் ஒன்றென சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும் சிறுகுடிலுக்குள் இருக்கப்போகிறேன். எந்த அம்பும் என்னைத் தேடி அங்கு வரப்போவதில்லை."

பிருஹத்காயர் "இன்னமும் நான் கொள்ளும் அச்சத்தை நீ புரிந்துகொள்ளவில்லை. உண்மையில் அதை புரிந்துகொள்வதும் எளிதல்ல. மைந்தா, இப்பருவெளியில்

பொருளெனத் தென்படுபவை அனைத்தும் தோற்றம் கொள்வதற்கு முன்பு நுண்வடிவென, எண்ணமென, இயல்கை என அதற்கும் அப்பால் இப்புடவியின் தகவு என இருப்பு கொண்டவை. இங்கு ஒன்றுமே அழிவதில்லை. ஒன்று பிறிதொன்றென மாறிக்கொண்டிருக்கிறது. இப்போது என்னில் அச்சமென்றிருப்பது சில காலத்திற்கு முன்பு உன்மேல் நான் கொண்ட பற்றென இருந்தது. அதற்கு முன்பு மண்மேல் கொண்ட விழைவென்றிருந்தது. அதற்கு முன்பு என்மேல் கொண்ட வெறுப்பென்றிருந்தது. அதற்கு முன்பு நான் என்ற எண்ணமாக இருந்தது" என்றார். "எச்செயலும் அதற்கான மறுசெயலை உருவாக்குகிறது. செய்கை மேல் நமக்கு சற்றேனும் கட்டுப்பாடுள்ளது. அதை நாம் செய்யாமல் இருந்துவிடமுடியும். மறுசெய்கை மேல் நமக்கு எந்தக் கட்டுப்பாடும் இல்லை. அதை தெய்வங்களிடம் நாம் கொடுத்துவிட்டோம்."

அவன் அவர் சொல்வனவற்றை புரிந்துகொள்ளாமல் வெறுமனே கேட்டுக்கொண்டிருந்தான். "நான் போரிட்டுக்கொண்டிருப்பது தெய்வங்களிடம். ஆகவே மானுட இயல்கைகளைப்பற்றி நான் கணக்கிடவே இல்லை. தெய்வங்களால் இயலாதன ஏதுமில்லை. தெய்வங்களை வெல்ல தெய்வங்களாலேயே இயலும். நான் என் தெய்வங்களை துணைகொள்ள எண்ணுகிறேன்." அவர் தன் கைகளை விரித்தார். "நன்கு கேள், அவன் அத்தனை எளிதில் உன்னை கொல்லமுடியாது. நீ படைகளுக்குள் ஒளிந்திருப்பாய் என்றால் அவன் அம்புகள் எவையும் உன்னை அணுகாது. ஆனால் ஓர் அம்பு உன்னை நாடிவரும். அதன் பெயர் பாசுபதம்" என்றார்.

“இளைய பாண்டவன் அதை வெள்ளிப் பனிமலை மேல் சென்று விடையூரும் தெய்வத்திடமிருந்து நேரில் பெற்றான் என்கிறார்கள். அது மூவுலகிலும் அலைவது. நீ எங்கு ஒளிந்திருந்தாலும் உன்னை வந்து தொட்டு அழிக்கும் ஆற்றல் கொண்டது. அதிலிருந்து நீ தப்ப வேண்டுமெனில் ஒன்றே வழி. உனக்கு நிகரான தெய்வக்காப்பு தேவை. நீடுதவம் செய்து அதே மூவிழித் தெய்வத்திடமிருந்து நான் பெற்றது பன்னகம் என்னும் காப்பு. அவன் கழுத்தில் அணிந்த அரவு அது. நான் மாநாகர்களின் அருள் பெற்றிருக்கிறேன். அவர்கள் உன்னைச் சூழ்ந்து காப்பார்கள். பாசுபதம் உன்னை துரத்தி வந்தால் நீ நாகர்களால் ஏழாம் உலகுக்கு எடுத்துச் செல்லப்படுவாய். அங்கு ஆழிருளில் புதைக்கப்பட்டு உயிர்காக்கப்படுவாய்.”

“ஆம், பாசுபதம் அங்கும் செல்லும் ஆற்றல் கொண்டது. ஆனால் அங்குள்ள ஒரு கணம் இங்குள்ள நாள். உன்னை பாசுபதம் தேடி வந்து அழிப்பதற்குள் இங்கு அந்தி எழுந்துவிடும். உன்னை கொல்ல எழுந்தவன் தன்னைக் கொன்று பழி விலக்கவேண்டியிருக்கும்” என்றார் பிருஹத்காயர். “இது வஞ்சநிலம். இங்கு அமர்ந்து என் உள்ளத்தை மேலும் மேலுமென கூர்கொள்ளச் செய்கிறேன். அதன் முனையொளியில் வந்தமைக இருள்வடிவ மாநாகங்கள்! என் சொல் உன்னுடன் இருக்கும். நலம் சூழ்க!”

ஜயத்ரதன் குனிந்து அவர் கால்களை சென்னிசூடினான். வழக்கம்போல் அவன் கை தன்மேல் பட்டுவிடலாகாது என்பதற்காக அவர் சற்று பின்னடைந்தார். அவன் அவ்வசைவால் உளம்கலங்கி விழிநீர் கோத்தான். “அருள்க, தந்தையே!” என்றான். அவர் தொண்டை இறுக “ம்” என்றார். “நீங்கள் இப்போதேனும் என்னை தொடலாகாதா?” என்றான்

ஜயத்ரதன். “வேண்டாம்…” என அவர் தாழ்ந்த குரலில் சொல்லி தலையசைத்தார்.

“என்றும் உங்கள் எண்ணத்திற்கு மாறாக நின்றிருக்கவே விழைந்தேன். நீங்கள் நான் வாழவேண்டுமென்று விழைந்தமையாலேயே நான் சாக விழைந்தேன். இன்று நான் வாழ விழைகிறேன்… இதற்குப் பின்னரேனும் நான் உங்கள் அருகே வரவேண்டும். உங்கள் கைகளில் என் தலையை வைத்து விழிநீர் உகுக்கவேண்டும்.” பிருஹத்காயர் அவனை நோக்காமல் “செல்க!” என்றபின் திரும்பி பூசகர்கள் சென்று மறைந்த பிலத்திற்குள் நுழைந்தார்.

ஜயத்ரதன் அங்கே நின்று அந்த இருண்ட துளைக்குள் அவர் சென்று மறைவதை பார்த்துக்கொண்டிருந்தான். சற்று நேரத்தில் அவர்கள் அங்கு இருந்தார்களா என்றே தோன்றும்படி அவ்விடம் வெறுமை கொண்டது. அவன் தானும் அவர்களைத் தொடர்ந்து உள்ளே சென்றுவிட வேண்டும் என்று ஒருகணம் உளமெழுந்தான். குனிந்து தந்தையே என்று அழைக்கவேண்டுமென்று நா வரை வந்த அவ்வெண்ணத்தை மாற்றிக்கொண்டான். மேலும் சற்றுநேரம் அங்கே நின்றபின் திரும்ப நடந்து புரவி நிறுத்தப்பட்டிருந்த இடத்தை அடைந்தான். அவன் ஓசைகேட்டு அது மூச்சொலி எழுப்பியது.

புரவியிலேயே குருக்ஷேத்ரத்தின் குறுங்காட்டினூடாக தனித்து மெல்ல சென்றான். புரவியின் காலடி ஓசை எங்கெங்கோ எழுந்து அவனை வந்து சூழ்ந்துகொண்டிருந்தது. இருள் ஒரு சுவரென்று மாறி அவ்வோசை எதிரொலித்ததுபோல் தோன்றியது. அவர்கள் சென்று சேரும் அந்த இடம் எவ்விதம்

இருக்குமென்று எண்ணிக்கொண்டான். முட்புதர் சூழ்ந்த ஒரு வெட்டவெளி. அங்கு பந்தங்கள் கொளுத்தி வைத்து அவர்கள் பூசை ஒன்றை இயற்றவிருக்கிறார்கள். இந்திரனின் மின்படை ஏற்று விருத்திரனின் உடலிலிருந்து விழுந்த முதற்குருதித்துளி ஊறி பெருகத் தொடங்கியதே ரக்தவாஹா என்று பூசகர் சொன்னார். விருத்திரன் அச்செந்நிலமென மாறி விழுந்து விரிந்த பின்னரும் அந்த முதற்குழி ஈரம் உலராத புண்ணென்று எஞ்சி குருதி வடிக்கிறது. இந்திரன் பிறந்து பிறந்தெழுந்து அந்த குருதிநிலத்தில் போரிட்டுக்கொண்டே இருக்கிறான்.

வெறுமை வளைந்து அமைந்த வான்வெளிக்குக் கீழ் மண் ஒவ்வொரு பருத்துளியும் வஞ்சங்களால் விழிநீரால் ஆனதாக விரிந்திருக்கிறது. வஞ்சின ஈடேற்றத்திற்காக, வஞ்சினத்திலிருந்து தப்புவதற்காக நோன்பிருக்கிறார்கள். நோன்புகளை கேட்கும் தெய்வங்கள் அவ்விண்ணில் வாழ்கின்றன. இப்புவியில் வாழும் கோடானுகோடி மானுடர், பல்லாயிரம்கோடி உயிர்கள், அளவிறந்தகோடி சிற்றுயிர்கள் அனைவரும் கொள்ளும் வேண்டுதல்களை செவிகொள்வதற்கென்று எத்தனை கோடி தெய்வங்கள் விண்ணிலும் மண்ணின் ஆழத்திலும் இருக்கும்!

அத்தருணத்திலும் ஏன் அத்தனை நம்பிக்கையிழப்பு தனக்கேற்படுகிறதென்று அவன் வியந்தான். தந்தையிடம் கூறும்போதே அவனுக்குள் அந்த நம்பிக்கையிழப்பு தோன்றியது. ஒன்றை முழுமையாக வகுத்துரைக்கையிலேயே உள்ளம் அதிலெங்கோ ஒரு பிழை இருக்கக்கூடுமென்று எண்ணுகிறது. அத்தனை உறுதியாக ஒன்று கட்டப்படுகையிலேயே அதை இடிக்கும் பொறுப்பை தெய்வங்கள் ஏற்றுக்கொள்கின்றன. குருக்ஷேத்ரத்தை அவன்

அணுகும்போது முற்றிலும் உளம் தளர்ந்திருந்தான். அதற்கேற்ப உடலும் தளர்ந்து புரவிமேல் துயின்று தலை தாழ்த்தி அமர்ந்திருந்தான். அப்பால் கேட்ட படைகளின் ஓசை அவனை விழிப்புகொள்ளச் செய்தது. குறுங்காட்டின் எல்லையை அடைந்து பந்தங்களுடன் துயிலெழத் தொடங்கியிருந்த கௌரவப் படைவிரிவை பார்த்தபோது எந்த முறைமையும் இன்றி அவனுக்குள் ஓர் உறுதி தோன்றியது, அன்றுடன் அவன் கொல்லப்படுவான் என்று.

அவன் அவ்வெண்ணத்தால் ஒரே கணத்தில் முழுமையான விடுதலையை அடைந்தான். முகத்தில் புன்னகையும் எழுந்தது. காவல்மாடத்தை அவன் கடந்துசென்றபோது எதிரே சிந்துநாட்டின் ஒற்றர்தலைவன் மூகன் நின்றிருந்தான். ஓசையில்லாமல் புரவியில் அணுகி அவனுடன் இணையாக வந்தபடி “பாண்டவர் தரப்பிலிருந்து செய்திகள்” என்றான். “சொல்க!” என்றான் ஜயத்ரதன். “பின்னிரவு கடந்தபின் அங்கே சொல்சூழவை நிகழவில்லை. அனைவரும் ஓய்வெடுக்கச் சென்றுவிட்டனர். இளைய பாண்டவர் தன் மைந்தன் சுருதகீர்த்தி உடனிருக்க குடிலில் உறங்கினார்.” ஜயத்ரதன் “மைந்தனுடனா?” என்றான். “ஆம், அரசே” என்றான் மூகன். “அவ்வாறா வழக்கம்?” என்றான் ஜயத்ரதன். “இல்லை. வழக்கமாக அவர் மைந்தருடன் பேசுவதே இல்லை. விழிநோக்குவதும் அரிது” என்றான் மூகன். “சொல்” என்றான் ஜயத்ரதன்.

“துயிலச் செல்லும்போது இளைய யாதவரும் சகதேவரும் அவருடன் சென்றனர். அவர்கள் விடைகொள்கையில் அப்பால் நின்றிருந்த சுருதகீர்த்தியை நோக்கி மைந்தா, என்னுடன் இரு என்று அர்ஜுனர் சொன்னார். சுருதகீர்த்தி திகைப்படைந்தாலும்

அதை காட்டிக்கொள்ளாமல் தலைவணங்கினார். அர்ஜுனர் உள்ளே சென்றதும் ஏவலர் மதுவும் அகிபீனாவும் கொண்டுசென்றனர். அதை அவர் அருந்தி புகைத்துக்கொண்டு படுத்துக்கொண்டார். சுருதகீர்த்தி வாயிலில் வந்து காவலென நிற்க மைந்தா உள்ளே வந்து என்னருகே அமர்ந்துகொள்க என்றார். சுருதகீர்த்தி உள்ளே சென்று அவருடைய காலடியில் தரையில் அமர்ந்தார். அவர் அவரிடம் ஏதும் சொல்லவில்லை. குடிலின் கூரைச்சரிவை நோக்கி விழிநட்டிருந்தார். வலிகொண்டவர்போல மெல்ல உடலை நெளித்து கைவிரல்களை நெரித்துக்கொண்டும் முனகிக்கொண்டும் இருந்தார்.”

“அப்போது மீண்டும் புகையிடச் சென்ற ஏவலன், அவனே நம் ஒற்றன், அவர் கால்களை தொடுக என்று செய்கையால் சுருதகீர்த்தியிடம் சொன்னான். அவர் தயங்கியபடி கைநீட்டி அர்ஜுனரின் கால்களை தொட்டார். அவர் உடலில் இருந்த அந்த இறுகிய அசைவு நின்றது. சுருதகீர்த்தி கைகளை கால்மீதே வைத்திருந்தார். அவர் உடல் மெல்ல மெல்ல நெகிழ்ந்து மஞ்சத்தில் படிந்தது. மூச்சொலி சீராக எழலாயிற்று. அவர் கால்களைத் தொட்டபடி அமர்ந்திருந்த சுருதகீர்த்தி விழிநீர் வழிய தலையை மஞ்சத்தின் சட்டத்தின்மேல் சாய்த்துக்கொண்டார். அரசே, அபிமன்யுவுக்காக அப்போதுதான் அவர் விழிநீர் உகுத்தார்.”

ஜயத்ரதன் “அபிமன்யுவுக்காக என எப்படி தெரியும்?” என்றான். “ஆனால்...” என மூகன் சொல்லத் தொடங்க கைவீசி அவனை மேலே பேச ஆணையிட்டான் ஜயத்ரதன். “அரசே, அதன் பின் முன்கருக்கு வேளையில் நம் மூத்த அரசர் இளைய யாதவரை சந்திக்க அங்கே சென்றிருக்கிறார்.” ஜயத்ரதன் புரவியின்

கடிவாளத்தை அறியாமல் இழுத்துவிட்டான். “யார்?” என்றான். “தங்கள் தந்தை...” என்றான் மூகன். “இன்றா?” என்றான் ஜயத்ரதன். “ஆம், இன்று பின்னிரவில்” என்று மூகன் சொன்னான். “இரவு முழுக்க என்னருகே அவர் இருந்தார்” என்றான் ஜயத்ரதன். “ஆனால் நம் ஒற்றன் தன் விழிகளால் நோக்கியிருக்கிறான். செவிகளால் கேட்டுமிருக்கிறான்” என்று மூகன் திகைப்புடன் சொன்னான். “அவர் அங்கே சென்று மீள பொழுதே இல்லை” என்றான் ஜயத்ரதன் உறுதியுடன். “அவர் அங்கே சென்றார் என்றே ஒற்றன் சொல்கிறான். அவன் சொல் பொய்யாவதில்லை” என்றான் மூகன்.

“அவருடைய மாணவர்கள் சிலரும் அவரைப்போலவே தோற்றம் கொண்டவர்கள்” என்று ஜயத்ரதன் சொன்னான். மூகன் ஒன்றும் சொல்லவில்லை. “நாமறியா வழிகள் அவர்களுக்குண்டு” என்றான் ஜயத்ரதன். “சொல்க, என்ன நிகழ்ந்தது அங்கு?” “அவர் இளைய யாதவரைப் பணிந்து உங்கள் உயிருக்காக இறைஞ்சினார்” என்றான் மூகன். “உரையாடல் முழுமையாக செவிகளில் விழவில்லை. ஆனால் இளைய யாதவர் தங்கள் தந்தையிடம் கேட்டார், நீங்கள் அஞ்சுவது எதை என. என் தமையன்மனைவியின் தீச்சொல்லை. அவள் எனக்கென வகுத்த மைந்தர்துயரை என பிருஹத்காயர் மறுமொழி சொன்னார். அது நிகழாது என இளைய யாதவர் சொல்லளித்தார்” என்றான் மூகன்.

ஜயத்ரதன் வியப்புடன் “அது நிகழாது என்றாரா?” என்றான். “ஆம் அரசே, அதை நம் ஒற்றன் தெளிவுறக் கேட்டான். அது நிகழாது என்றார்” என்றான் மூகன். “நீங்கள் இருவரும் விழைவதே நிகழும் என்றார்.” ஜயத்ரதன் சில கணங்களுக்குப் பின் அவனை செல்க என கையசைத்து விலக்கி, புரவியை

கால்களால் ஊக்கி, முன்னால் சென்றான். அவன் முகத்தில் மறைந்திருந்த புன்னகை மீண்டும் உருவானது.

# கார்கடல் - 46

பார்பாரிகன் சொன்னான்: இடும்பர்களே கேளுங்கள்! அன்று புலரி எழும் பொழுதில் கௌரவ அரசன் துரியோதனனின் தனிக்குடிலுக்குள் துரோணர், கிருபர், சல்யர், கர்ணன், அஸ்வத்தாமன், பூரிசிரவஸ், கிருதவர்மன் என ஏழு வில்லவர்களும் கூடி அமர்ந்திருந்தனர். துயிலுக்குப் பின் துரியோதனன் உளம் தேறி வந்திருந்தான். முந்தைய நாள் இரவெல்லாம் அவனை அலைக்கழித்த அனைத்தையும் கடந்து அன்று காலை தன் மைத்துனனின் உயிர்காப்பதொன்றே கடமை என்று எண்ணி பிறிதொருவனாக மாறியிருந்தான். கர்ணன் மட்டும் இரவெலாம் உழன்று உளம் தேறாதவனாக அக்குடிலின் ஓரத்தில் கைகளை கட்டிக்கொண்டு சிறிய பீடத்தின்மீது தலைகுனிந்து அமர்ந்திருந்தான்.

“இப்படைசூழ்கையை எந்நிலையிலும் அவர்களால் எதிர்கொள்ள இயலாது. நமது சகடச்சூழ்கையின் நான்கு எல்லையிலும் வில்லவர்களை நிறுத்தியிருக்கிறோம். பின்நிரையில் தம்பியர் உள்ளனர். முன்நிரையில் வில்லவர் எழுவர். இம்முறை நம்முடைய இலக்கு அர்ஜுனன் மட்டுமே. பால்ஹிகர் பீமனை எதிர்கொள்ளட்டும். அவரைக் கடந்து அவன் நமது படைகளை அணுக இயலாது. எட்டு திசைகளிலும் அர்ஜுனனை சூழ்ந்துகொள்வோம். நாம் எண்ணிய திசையில் மட்டுமே அவன் நகர வேண்டும். பகலெழுந்து அந்தி சரிவது வரை நம்

அம்புகளுக்கு மாற்றம்பு எய்தே அவன் கை சலிக்கவேண்டும். அந்தியில் நாம் வெல்வோம்” என்றான் துரியோதனன்.

அதை அவர்கள் முன்னரும் நூறுமுறை சொல்லியிருந்தனர். சொல்லிச் சொல்லி அதை தங்களுக்கே நிறுவிக்கொண்டனர். அது நிகழ்ந்தாகவேண்டும் என்று அவர்கள் தெய்வங்களுக்கு அதனூடாக அறிவுறுத்தினர். ஏனென்றால் அவர்கள் ஒவ்வொருவருக்கும் உள்ளே மெல்லிய வருடல்போல் ஓர் ஐயம் இருந்துகொண்டிருந்தது. “இது இன்று நாம் வகுத்துக்கொண்டிருக்கும் சூழ்கை. இதில் பிழையென என்னென்ன நிகழக்கூடும் என்பதை ஒவ்வொருவராக கூறுக!” என்றான் அஸ்வத்தாமன். “பிழையற்ற சூழ்கையென்றே இது வகுக்கப்பட்டுள்ளது. ஆயினும் அறியாப் பிழை ஏதேனும் இருந்தால் இப்போதே அப்பழுதையும் அடைத்துக்கொள்வோம்.”

துரியோதனன் “நம்மில் ஒவ்வொருவரும் அர்ஜுனனாக இருந்தால் இச்சூழ்கையை எவ்வாறு வெல்வோம் என்பதை கூறுக!” என்றான். அவர்கள் படைசூழ்கை வகுக்கப்பட்ட தோல்சுருளை கையில் வாங்கி கூர்ந்து நோக்கினர். சல்யர் “நான் அனைவரையும் எதிர்க்க மாட்டேன். ஒருவரை மட்டுமே எதிர்ப்பேன். பிற அனைவரையும் என் மைந்தரையும் உடன்பிறந்தாரையும் கொண்டு எதிர்க்க வைப்பேன். என்னை தடுத்து நிறுத்துவதைப்பற்றி எண்ணிக்கொண்டிருக்கும் எதிரிகளில் ஒருவரை களத்தில் கொன்று வீழ்த்துவேன். தங்களில் ஒரு பெருவீரர் வீழ்ந்ததை உணர்ந்ததுமே கௌரவப் படை நிலையழிந்து கூச்சலிடத் தொடங்கும். அந்தக் குலைவை பயன்படுத்திக்கொண்டு ஊடுருவி உட்சென்று ஜயத்ரதனை கொல்வேன்” என்றார்.

“ஜயத்ரதனை கண்டுபிடிப்பதொன்றும் அத்தனை கடினமானது அல்ல. அவனை சூழ்ந்திருக்கும் அத்தனை படைவீரரும் அந்த இடத்தை அறிந்திருப்பார்கள். படைக்கொந்தளிப்பில் அவன் இருக்குமிடம் மட்டும் அசையாமலிருக்கும். ஏனெனில் அவன் அசைவதில்லை. ஆகவே அவன் காவல்வீரர்களும் நிலைமாறுவதில்லை. படைகள் அணிகுலைந்து விரியும்போது ஓர் இடம்நோக்கி படைகள் குவிந்து செறிவடையும். ஏனென்றால் நிலைகுலைவின்போது அவனை காக்கவேண்டும் என்னும் எண்ணமே மேலெழும்” என்றார் சல்யர். “அனலம்பைத் தொடுத்து அவன் இருக்கும் இடத்தை முற்றாகவே எரிய வைப்பேன். வைக்கோலில் மறைந்திருக்கும் சிற்றுயிரை மொத்தமாகவே கொளுத்திவிடுவதே உகந்தது.”

“ஆம், அது நல்ல திட்டம்தான்” என்று துரியோதனன் சொன்னான். அஸ்வத்தாமன் “அதை குறித்துக்கொள்கிறேன், மத்ரரே. சைந்தவர் நிலையாக ஓர் இடத்தில் இருக்கமாட்டார். நம் படைகளுக்குள்ளேயே அவரும் அலைவுகொண்டிருப்பார்” என்றான். “எந்நிலையிலும் நம் படைகளில் ஒரு சிறு திறப்புகூட உருவாகக் கூடாது. எங்கு எவர் புகுந்தாலும் உடனே அவரை சூழ்ந்துகொள்ளவே நாம் முயல்வோம். இன்று அவரை வெளியே நிறுத்தி நாம் பின்னடைந்து இணைந்து மீண்டும் தடைச்சுவரென்று ஆகிவிடவேண்டும்” என்றான். “ஆம்” என்று துரியோதனன் சொன்னான்.

பூரிசிரவஸ் “நான் அர்ஜுனன் என்றால் போரை நெடுநேரம் ஒரே விசையில் நடத்துவேன். எங்கோ ஓர் இடத்தில் கௌரவப் படைகள் தாங்கள் வெல்லப்பட முடியாதவர் என்று எண்ணச் செய்வேன். அஞ்சிப் பின்னடைவதுபோல் நடிப்பேன். அத்தருணத்தில் முழு விசையும் கூட்டி போரிடத்

தொடங்குவேன். ஐந்திரம் என்னும் ஆற்றல்மிக்க அம்பு அர்ஜுனனாகிய என்னிடம் உள்ளது. என் தந்தை இந்திரனால் எனக்கு அளிக்கப்பட்டது. இடிமின்னலை எழுப்பி மண்ணை நடுங்கச்செய்வது அது. அது கௌரவப் படையில் பெரும் சந்தடியை உருவாக்கும். மையத்திலிருந்தவர்கள் கலைந்து அங்குமிங்கும் ஓடுகையில் அவர்களில் ஒரு சாரார் ஜயத்ரதனை காக்கும்பொருட்டு சூழ்வார்கள். அச்சூழ்கையின் மையத்தில் அவனிருப்பான் என்பதை எளிதுணர்ந்ததும் வஜ்ராஸ்திரத்தால் அந்த இடத்தை அறைந்து முற்றாக அழிப்பேன். சென்று விழுந்த இடத்தை வெடித்துச் சிதறவைத்து ஆழ்ந்த குழியாக ஆக்கும் ஆற்றல் அதற்குண்டு. ஜயத்ரதன் அழிவான்" என்றான்.

துரோணர் "இதுநாள்வரை போர்நெறிகளின் பொருட்டு நான் எடுக்காது வைத்த சம்மோஹனாஸ்திரம் என்னும் பேரம்பை எடுப்பேன். அது விழிகளை அதிரச்செய்து உளம்கலங்கச் செய்வது. அது கௌரவப் படைகளை மயங்கச் செய்யும். அத்தருணத்தில் ஊடுருவி உள்ளே செல்வேன். மையத்தை சில கணங்களுக்குள் நான் சென்றடைந்துவிடமுடியும். பிரக்ஞாஸ்திரத்தை தொடுத்து படைகளை நினைவுமீளச் செய்வேன். தன்னினைவு மீண்ட கணமே ஜயத்ரதன் எழுந்து பின்னோக்கி தப்பி ஓடுவான். அவனையும் சூழ்ந்த படைவீரர்களையும் சக்திஅஸ்திரத்தால் அறைவேன். நரம்புநிலைகள் தாக்கப்பட்டு அவர்கள் செயலிழந்து நின்றிருக்கையில் அவன் தலைகொய்வேன்" என்றார்.

அஸ்வத்தாமன் "அவருடைய ஆற்றல்மிக்க அம்புகளைப் பற்றி நான் அறிவேன். அவை ஒவ்வொன்றுக்கும் நம்மிடம் மாற்று அம்புகள் உள்ளன" என்றான். பூரிசிரவஸ் "இத்தருணத்தில் நாம்

நம் போர்முறையை இத்தனை கூர்மையுடன் வகுத்துக்கொள்வதற்கான தேவை ஒன்றே. பொறியில் சிக்கிய வேங்கை மதயானையின் ஆற்றல் கொள்கிறது என்பார்கள். இது அவர்கள் சிக்கிக்கொண்ட பொறி. முழு உயிர்விசையுடன் அவர்கள் போராடுவார்கள்” என்றான். “இங்கே சொல்லப்பட்ட ஒவ்வொரு வழியையும் நம்மால் முன்னரே அடைத்துவிட முடியும். இதற்கப்பால் ஒன்றை அவர்கள் எண்ணவியலாது.”

துரியோதனன் கர்ணனிடம் “தாங்கள் எண்ணுவதென்ன, அங்கரே?” என்றான். “நாம் வகுத்த திட்டம் அதற்கு எதிராக அவர்கள் ஆற்றக்கூடும் என்று நாம் எண்ணும் திட்டம் இரண்டுமே வெறும் சொற்கள்தான். களத்தில் என்ன நிகழுமென்று முன்னரே நாம் வகுத்துவிட இயலாது. எது வரினும் களத்தில் நிற்போம் என்று மட்டுமே இத்தருணத்தில் நம்மால் கொள்ள முடியும்” என்றான் கர்ணன். அச்சொற்கள் அவர்கள் அனைவரையும் உளம் தளரச்செய்தன. துரியோதனன் “அவ்வண்ணமெனில் இத்தனை படைசூழ்கையும் கடந்து ஜயத்ரதனை அவர்கள் கொன்றுவிடமுடியுமென்று எண்ணுகிறீர்களா?” என்றான். “ஜயத்ரதனை கொல்வதற்கான ஒரு மீச்சிறு பாதையை நாம் திறந்து வைத்திருக்கிறோம். ஊசி மட்டுமே நுழையுமளவு சிறிய பாதை. ஆனால் பெரும்பிளவொன்றை உருவாக்க அதுவே போதும். மலைப்பாறைகளுக்குள் ஆறுகள் நுழைவது ஊசித்துளை விரிசலினூடாகவே என்பார்கள்” என்றான்.

துரியோதனன் கூர்ந்து நோக்க “அரசே, நேற்றிரவு நாம் அடைந்தது ஒரு வெற்றி. நம் எதிர்ப்படையின் பெருவீரனொருவனை களத்தில் கொன்றிட்டிருக்கிறோம். நாம் ஏன் நேற்று வெற்றிகொண்டாடவில்லை? நேற்று தாங்கள்

எங்கிருந்தீர்கள்? நான் எங்கிருந்தேன்?” என்றான் கர்ணன். துரியோதனன் “அது ஏன் என்று உங்களுக்கே தெரியும், அங்கரே” என்றான். கர்ணன் “அவன் எனக்கும் மைந்தனுக்கு நிகர். நீங்கள் தோளிலும் நெஞ்சிலுமிட்டு வளர்த்த மைந்தன். அந்த உணர்வையே இரவெல்லாம் அடைந்தோம். எண்ணி நோக்குக! அப்பிழைக்கு நிகராக நம்மில் ஒருவர் மறைந்தால் நன்று என்று நாம் எங்கோ எண்ணுகிறோமா?” என்றான்.

“இது என்ன பேச்சு? அரசரும் நானும் மைந்தர்களை இழந்தவர்களே” என்றான் பூரிசிரவஸ். கர்ணன் “நம்மில் நாம் இன்று களம்பட்டால் நன்றே என்ற எண்ணம் எழாத எவரேனும் உளரா?” என்றான். கிருதவர்மன் “நான் அவ்வாறு எண்ணவில்லை” என்றான். அஸ்வத்தாமன் “எனக்கும் அவ்வெண்ணம் எழவில்லை” என்றான். பூரிசிரவஸ் “களம்பட்டால் நன்று என்ற எண்ணம் எப்போதும் எனக்குள்ளது. என் மைந்தர் இறப்புக்குப் பிறகு” என்றான். துரியோதனன் கைகளைக் கட்டி தலைகுனிந்து அமர்ந்திருந்தான். “சொல்க அரசே, தாங்கள் அவ்வாறு எண்ணினீர்களா?” என்றான் கர்ணன். “ஆம், ஒருமுறை அவ்வெண்ணமும் எழுந்தது. இன்று அர்ஜுனன் கையால் கொல்லப்பட்டேன் என்றால் நேற்று அபிமன்யு கொல்லப்பட்டதற்கு ஈடுசெய்ததாகும் என்று. ஆனால் என் மைந்தனின் இறப்பைப்பற்றிய எண்ணத்தைப் பெருக்கி வஞ்சமாக்கி அதை செறுத்து எழுந்தேன்.”

“அது ஓர் உளச்சோர்வின் வெளிப்பாடே” என்றான் பூரிசிரவஸ். “ஆம், வெறும் உளச்சோர்வுதான். அதில் ஐயமில்லை” என்று கர்ணன் சொன்னான். “ஆனால் அந்த ஒருதுளி எண்ணம் பாறைகளைப் பிளக்கும் நீர்த்துளி. இன்று அவன் களம்பட்டால் ஏதோ ஒருவகையில் நிறைவடைவோம்.” பூரிசிரவஸ் “என்ன

சொல்கிறீர்கள்?” என்றபடி எழுந்தான். அஸ்வத்தாமன் “இது சிறுமைசெய்தல்... ஆம். சிறுமைசெய்தல் அன்றி வேறொன்றுமில்லை” என்றான். “இல்லை, நான் என் அகம் சொல்வதை கூறுகிறேன். இன்று நாம் அவனை களத்தில் இழப்போம். எவ்வண்ணம் என்று எனக்கு சொல்லத் தெரியவில்லை. ஆனால் அவனை இழந்த பின்னர் எண்ணிப்பார்க்கையில் நம்மீது எந்தப் பிழையும் இல்லை என்பதை நமக்கு நாமே நிறுவிக்கொள்ளும்பொருட்டே இத்தனை விரிவாக படைசூழ்கையை வகுக்கிறோம். இன்று களத்தில் இதனினும் வெறிகொண்டு நாம் எதிர்ப்போம். உயிர் கொடுக்க துணிந்து நிற்போம்” என்றான் கர்ணன்.

அஸ்வத்தாமன் “அதைத்தானே நாம் செய்ய முடியும்? அதற்கு அப்பால் நமக்கு இயல்வதென்ன?” என்றான். “அதற்கப்பால் நாம் ஏதேனும் செய்ய முடியும் என்று நான் கூறவில்லை. நம்மால் இயற்றக்கூடிய அனைத்தையும் நாம் இன்று செய்வோம். அதற்கப்பால் பிறிதொன்று அவனை களப்பலியாக்கும்போது நம்மால் இயன்றதை செய்துவிட்டோம் என்று எண்ணி நிறைவு கொள்வோம்” என்றபின் கசப்புடன் நகைத்து “போர்க்களம் எத்தனை இரக்கமற்றது! மாபெரும் ஆடிபோல் நாம் அனைவரையும் நமக்கே காட்டுகிறது” என்றான் கர்ணன்.

“அங்கரே, களத்தில் நாம் வீண்கசப்புகளையும் நம்பிக்கையின்மைகளையும் பெருக்கிக்கொள்வதில் என்ன பொருள்?” என்று கிருபர் கேட்டார். “நான் நம்பிக்கையின்மைகளை உருவாக்கவில்லை, அவற்றை பெருக்கவுமில்லை. அவை உள்ளன என்று அடையாளம் காட்டுகிறேன். முன்னரே சற்று அறிந்திருந்தால் போர்க்களத்தில் அது நம்முள்ளிருந்து எழும்போது நாம்

அதிர்ச்சியடையாமல் இருப்போம்” என்றான் கர்ணன். “ஆசிரியரே, போர்க்களம் ஒரு யோகவெளி. அங்கு தாளமே அனைத்தையும் ஆள்கிறது. எங்கு தாளம் இருக்கிறதோ அங்கெல்லாம் யோகம் கைகூடுகிறது. நமது கைகள் அம்புத்தூளியிலிருந்து நாணுக்கும் இலக்குக்கும் என சுழல, விழிகளும் செவிகளும் ஒன்றென இணைந்து கூர்கொள்கையில் ஐம்புலன்களையும் ஒன்றாக ஆளும் சித்தம் முற்றாக அணைந்துவிடுகிறது. யோகம் கூடி ஆழம் எழுந்து வருகிறது. இப்போது சொற்களால் சித்தப்பெருக்கால் எவற்றையெல்லாம் மறைத்து வைத்திருக்கிறோமா அவையனைத்தும் அப்போது வெளிவரும். அப்போது நாம் கைதளரலாகாது. அது நம்மை அதிரச்செய்யும் புதிய மெய்யென அப்போது தோன்றலாகாது. நம்மால் இயல்வதனைத்தையும் செய்கிறோம் என்றும், செய்வதை முழுமையுற இயற்றுவதே நமது கடன் என்றும் அப்போது நமக்கு தோன்றவேண்டும்.”

அவன் சொற்களைக் கேட்டு அனைவரும் சலித்து சோர்ந்து அமர்ந்திருக்க கர்ணன் புன்னகைத்து “இச்சோர்வு நன்று. இவ்வுணர்வுடன் நாம் களம் சென்றால் நமது விசை மேலும் மேலுமென பெருகி உச்சமடையும். எழுச்சிகொண்டு சென்று படிப்படியாக களத்தில் அதை இழப்பதைவிட இது மேலானது” என்றபின் “நான் சென்று ஆடையும் கவசங்களும் அணிந்து ஒருங்குகிறேன்” என்று தலைவணங்கி வெளியே சென்றான்.

அஸ்வத்தாமன் “அவர் உளம் கசந்திருக்கிறார். அன்றி அச்சொற்களுக்கு எப்பொருளுமில்லை” என்றான். துரோணர் “நானும் அவ்வாறே எண்ணினேன். ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதவற்றை இணைத்து இப்படி சிக்கலான உணர்வுநிலைகளை கற்பனை செய்துகொள்வதில் எந்தப்

பொருளுமில்லை. நுண்மையாகச் செல்கிறோம், எல்லைகளைக் கடந்து விரிகிறோம் என்னும் தன்னாணவம் மட்டுமே இதன் பெறுபொருள். செயற்களத்தில் நுண்மைதேர்பவன் அறிவிலி. போர்க்களம் இத்தனை ஊடுபாவுகள் நிறைந்த எண்ண ஓட்டங்களுக்குரியதல்ல. இது மனிதன் தன்னை விலங்கென ஆக்கி நின்று பொருதியாகவேண்டிய தளம். இங்கு இலக்குகள், அவற்றை நோக்கும் அம்புகள், அவற்றை ஆளும் கைகள், கைகளை ஆளும் புலன்கள், புலன்களை ஆளும் சித்தம் ஆகிய ஐந்து பருநிலைகள் மட்டுமே கருத்தில் கொள்ளப்பட வேண்டும்” என்றார்.

“ஏனென்றால் போர்க்களம் வெறும் பருப்பொருள்விரிவுதான். எண்ணங்கள் சுழன்றலையும் நுண்வெளி அல்ல. பருப்பொருட்கள் தங்களுக்கு பிரம்மம் வகுத்த நெறிகள் கொண்டவை. பருநெறிகளின்படி எந்நிலையிலும் அர்ஜுனன் ஜயத்ரதனை சென்றடைய இயலாது” என்றார் துரோணர். “அதையே நானும் சொல்கிறேன், அவர் ஒருபோதும் சென்றடைய இயலாது” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “அவர்களின் படைசூழ்கை என்ன?” என்றார் துரோணர். “இக்கணம் வரை அதை அவர்கள் வகுக்கவேயில்லை. வகுத்தால் எப்படியும் நாமறிவோம் என எண்ணுகிறார்கள் போலும்” என்றான் அஸ்வத்தாமன். பூரிசிரவஸ் “அவர்கள் கூரியமுனைகொண்டு தாக்கும் சூழ்கைகளையே அமைக்கக்கூடும். சூசிமுகி என்னும் சூழ்கை இதற்கு உகந்தது…” என்றான். “எதுவாக இருந்தாலும் நம்மை அவர்களால் ஊடுருவ இயலாது” என்றான் அஸ்வத்தாமன்.

ஆனால் துரியோதனன் எழுந்து பெருமூச்சுடன் “எண்ணிநோக்குகையில் நீங்கள் சொல்வதே மெய். ஆனால்

எண்ணம் சென்றடையா ஆழத்தில் அங்கர் சொன்னதே மெய் என எனக்கும் தோன்றுகிறது. நம்மை மீறிய விசைகள் நம்முள் எண்ணங்களாகவும் அச்சங்களாகவும் விழைவுகளாகவும் ஆளும்போது நம்மால் இயல்வதை ஆற்றமுயல்வது மட்டுமே நம் கடன். அதை செய்வோம்” என்றான்.

அரவான் சொன்னான். மீண்டும் குருக்ஷேத்ரம் ஒருங்கியிருக்கிறது. அன்றைய புலரிக்காக அவர்கள் அனைவரும் காத்திருக்கிறார்கள். பாண்டவப் படைகளின் முகப்பில் யுதிஷ்டிரர் தன் தேரில் வந்து நின்றார். அவருக்கு இருபுறமும் நகுலனும் சகதேவனும் நின்றனர். சாத்யகியும் துருபதனும் வந்தனர். பீமன் வந்தபோது வாழ்த்தொலிகள் எழுந்தன. பின்னர் சங்குகளும் பேரிகைகளும் முழங்க தொலைவில் குரங்குக்கொடி ஒற்றைப்பறவை என சிறகடித்து வந்தது. இளைய யாதவர் தன் மாறாத புன்னகையுடன் தேர்தெளிக்க காண்டீபத்தை ஊன்றி இடையில் கையூன்றி தேர்த்தட்டில் அர்ஜுனன் நின்றிருந்தான். அவனைக் கண்டதும் பாண்டவப் படையினர் வாழ்த்து முழக்கமிட்டனர்.

கௌரவப் படைகளின் பின் நிரையில் கொடியோ அடையாளமோ இல்லாத குடிலுக்குள் பந்தங்கள் அணைக்கப்பட்ட இருளுக்குள் அமர்ந்திருந்த ஜயத்ரதனிடம் கழி மேலிருந்து இறங்கிய கழையன் சொன்னான் “அவர் களைத்திருக்கிறார். கண்களின் கீழே வளையங்கள். உதடுகள் வெளுத்திருக்கின்றன. கைகளில் மெல்லிய நடுக்கும் உள்ளது. ஆனால் காண்டீபம் உறுதியுடன் ஊன்றியிருக்கிறது.” ஜயத்ரதன் “அவர்?” என்றான். “அவருடைய தலைமேல் நீலப்பீலி விழிதிறந்து நோக்கிக்கொண்டிருக்கிறது அனைத்தையும்!”

என்றான் கழையன். ஜயத்ரதன் அவன் செல்லலாம் என கையசைத்தான். அவன் தலைவணங்கி சென்றபின் கண்களை மூடியவனாக காத்திருந்தான். தொலைவில் கேட்டுக்கொண்டிருந்த ஓசைகள் மெல்ல காட்சிகளாக மாறத்தொடங்கின. குளிர்காற்றில் மெல்ல அசையும் கொடிகள். செருக்கடிக்கும் புரவிகள். காத்திருக்கும் முரசுத்தோல் வட்டங்களின் மெல்லிய ஒளி.

மெல்லிய ஓசை கேட்டு அவன் கண்விழித்தான். அவன் எதிரே ஒருவன் அமர்ந்திருந்தான். "யார்?" என்று அவன் கேட்டான். கை உடைவாளை நோக்கி சென்றது. "அஞ்சற்க, நான் உன் காவலன். என் பெயர் அகம்பனன்... நான் பாதாளநாகன். உன்னை பாதுகாக்கும்பொருட்டு உன் தந்தையால் அனுப்பப்பட்டேன்" என்றான். அவன் விழிகள் இமைகொள்ளவில்லை என்பதை ஜயத்ரதன் கண்டான். அவன் உடல் இடைக்குக் கீழே இருளுக்குள் நிழலோடை என நெளிந்தது. "உன் தந்தை அங்கே எங்களை எண்ணி தவமிருக்கிறார். அவருடைய அழைப்பு பாதாளங்களில் இடியோசை என வந்து எங்களை எழுப்புகிறது" என்று அகம்பனன் சொன்னான். "அவர் அஞ்சியிருக்கிறார். மண்ணில் அச்சம்போல் பேருருக்கொண்டு எழுபவை பிறிதில்லை." அவன் புன்னகைத்தான். "ஆழத்தில் அதனினும் மும்மடங்கு விரைவில் பெருகுபவர்கள் நாங்கள்."

"அவர் அர்ஜுனனின் அம்புகளை எண்ணி அச்சம் கொள்கிறார். ஒவ்வொரு அம்புமுனையையும் ஓராயிரம் முறை உளம்தொட்டு ஊழ்கநுண்சொல்லாக ஆக்கிக்கொள்கிறார். ஓர் அம்பிலிருந்து உன்னைக் காக்க நூறு நாகங்களை மேலெழுப்புகிறார்" என்று கூறியபடி இன்னொருவன் தோன்றினான். "என் பெயர் நிகும்பன். அர்ஜுனனின்

தேவாஸ்திரத்திலிருந்து உன்னை காக்கும்பொருட்டு எழுந்த நூறு நாகங்களின் தலைவன். தண்டில்லாமல் கூர் மட்டுமே ஆன அம்பு அது என்று அறிக!” அவனுக்குப் பின்னால் எழுந்த ஒருவன் “என்னை முற்றிலும் நிகர்நிலையில் அமைந்த நியானாஸ்திரத்திலிருந்து காக்கும்பொருட்டு எழுப்பினார் உன் தந்தை” என்றான். பிறிதொருவன் “பன்றிபோல் உறுமி மண்துளைத்துச் செல்லும் அசுராஸ்திரத்திலிருந்து காக்கும்பொருட்டு எழுந்த என் பெயர் சாகரன்” என்றான். “சிவாஸ்திரத்திலிருந்து உன்னை காக்கும்பொருட்டு எழுந்த என் பெயர் நந்தி” என்றான் வெண்ணிறமான ஒருவன். “சக்தியஸ்திரம் விழியறியா அதிர்வின் வடிவை கொண்டது. சாந்தன் என்னும் பெயர்கொண்ட என்னால் மட்டுமே உன்னை காக்க இயலும்” என்றான் பிறிதொருவன்.

“பேரெடை கொண்ட பர்வத அஸ்திரம், செவிநிறைத்து மயக்கம் அளிக்கும் கந்தர்வ அஸ்திரம், மண்ணைத் துளைக்கும் மனு அஸ்திரம் என்னும் அம்புகளிலிருந்து காப்பவர்கள் இவர்கள்” என அகம்பனன் சுட்டிக்காட்டினான். அந்நாகர்கள் அரவுப்படம் எழுந்து மணிவிழிகள் மின்ன சீறலோசை எழுப்பி நிழல்களென அசைந்தனர். வைஷ்ணவம், வாருணம், நாராயணம், ருத்ரம், பிரம்மம், ஆக்னேயம், ஐந்திரம், மோகனம், பார்கவம் கருடம், சௌரம், வாயவம் என்னும் அம்புகளிலிருந்து காக்கும் நாகர்கள் எழுந்தனர். “இவை ஒவ்வொன்றும் இங்குள்ள வேதங்கள் என்று உணர்க! ஒவ்வொரு வேதத்திற்கும் நிகரான நாகவேதக் கிளை ஒன்றுண்டு…” என்று அகம்பனன் சொன்னான். “லிங்கம், கிருஷ்ணம், யமம், மாகேஸ்வரம், சுதர்சனம், விக்னேஸ்வரம், வராகம், நரசிம்மம், குமாரம், பரசுராமம், வாமனம், மச்சம் என்னும் அம்புகள் ஒவ்வொன்றும் இங்குள்ள மெய்நிலைகள் ஒவ்வொன்றையும் குறிக்கின்றன. அறிக, அவன் தான்

கற்றுக்கடந்த ஒவ்வொன்றையும் ஓர் அம்பெனக் கொண்டவன்! அவனை அஸ்த்ரயோகி என்கின்றனர் முனிவர்” என்றான் அகம்பனன்.

“அவன் அம்புகளாக அமைந்துள்ளன இங்கே முனிவர் அறிந்தவையும் யோகிகள் உணர்ந்தவையும் கவிஞர் பாடியவையுமான மெய்மைகள் அனைத்தும். புயலெழுப்பும் வாசவிசக்தி, மின்னல் சமைக்கும் வஜ்ரம், அனலெழுப்பும் தேஜஸ்வரம், ஏழன்னையரின் சப்ததேவாஸ்திரம், பேரழகுகளைக் காட்டும் மாயாஸ்திரம், கோரத்தோற்றம் காட்டும் ராட்சச அஸ்திரம், காற்றில் விளையாடும் யக்ஷாஸ்திரம். சைந்தவனே, அவன் அம்புகள் எண்ண எண்ணப் பெருகுபவை. ஹயக்ரீவன், ஹனுமான், பலராமன், கலி, கல்கி என்னும் தெய்வங்களே அம்புகள் என அவனிடம் உள்ளன. ஹரி, ஹரம், ராகவம், ராமம், கார்த்திகேயம், வீரபத்ரம், பைரவம் என இங்கு வணங்கப்படுவன அனைத்தும் அம்புகளாகியிருக்கின்றன. சரஸ்வதியும் லட்சுமியும் துர்க்கையும் அம்புகளென அவனுக்கு கனிந்துள்ளனர். பிருஹஸ்பதி, மார்க்கண்டேயன், வசிஷ்டர், விஸ்வாமித்திரர் என முனிவர்களின் உருக்கொண்ட அம்புகள். தர்மம், சியாமம், கர்மம் என பேருருக்கொண்ட அம்புகள். அவை நாம் அவனை அறியுந்தோறும் வளர்பவை. அவன் தன்னை அறியுந்தோறும் மறைபவை. அனைத்து மெய்யறிவுகளையும் அம்புத்தூளியில் அடக்கிய அவனை பாரதன் என்கின்றனர் கவிஞர்” என்றான் அகம்பனன்.

“அவனை அஞ்சும் உன் தந்தையின் சொற்களில் இருந்து அவை மேலும் மேலும் எழுந்துகொண்டே இருக்கின்றன” என்று நிகும்பன் சொன்னான். “உன்னை அவற்றிலிருந்து நாங்கள்

காக்கவிருக்கிறோம். உன்பொருட்டு ஆழத்திலிருந்து எழுந்து வந்துகொண்டே இருக்கிறோம்.” ஜயத்ரதன் தன்னைச் சூழ்ந்திருந்த கரிய இருள்பரப்பு நாகங்களால் நிறைந்திருப்பதை பார்த்தான். ஒன்றுடனொன்று இணைந்த நெளிவுகளாலான திசைவளைவு. “அவை அனைத்திலும் ஆற்றல்மிக்கது பாசுபதம்” என்றபடி அவன் முன் எழுந்தது மாநாகம் ஒன்று. “என் பெயர் பன்னகன். உன் தந்தையின் நுண்சொல்லால் அழைத்து இங்கே கொண்டுவரப்பட்டவன். நீ என்னால் பாசுபதத்திலிருந்து காக்கப்படுவாய்.”

ஜயத்ரதன் தன் கைகளை நெஞ்சோடு சேர்த்துக்கொண்டு உடல்குறுக்கி அமர்ந்திருந்தான். மிகத் தொலைவில் புலரிமுரசொலி எழுவதை கேட்டான். முதல் முரசுக்கழியின் ஓசையை எழுகடல் என வந்து மூடிக்கொண்டது போரின் முழக்கம்.

[வெண்முரசு விவாதங்கள்]

# கார்கடல் - 47

ஏகாக்ஷர் சொன்னார்: அன்றைய போர் தொடங்கும்போது கௌரவப் படையின் அத்தனை வீரர்களும் உள்ளூர சற்று அச்சம் கொண்டிருந்தார்கள் என்று அஸ்வத்தாமனுக்கு தெரிந்திருந்தது. அது அவர்கள் அனைவருமே உணர்ந்து ஒருவரோடொருவர் மறைத்துக்கொண்ட ஒன்று. அன்று புண்பட்டு எழும் அன்னைப் புலி போன்றிருப்பான் அர்ஜுனன் என்று அறிந்திருந்தனர். அவர்களின் உடலில் அசைவில் அது

வெளிப்படவில்லை. ஆனால் அதை ஒரு சூழ்ந்திருக்கும் பேருணர்வாக உணரமுடிந்தது.

தன் இறுதிப்போர் அது என எண்ணி களத்தில் வரும் ஒருவனை எதிர்கொள்வது மிகக் கடினம். ஏனென்றால் போருக்கெழும் ஒவ்வொருவரும் தங்களை அறியாமலேயே அப்போரிலிருந்து வெற்றியுடன் திரும்பி வரும் தருணத்தை உளம் நடித்திருப்பார்கள். உயிர் கொடுக்கச் சித்தமே என்று அவர்கள் கூறினாலும், அவர்களின் உள்ளம் அதை நம்பினாலும் ஆழத்திலிருக்கும் பிறிதொன்று அவர்களை மீளச்செய்து கொண்டே இருக்கும். பின்னிழுக்கும் அந்த ஒரு சரடு உயிரின் விழைவு. மண்ணில் அத்தனை உயிர்க்குலங்களையும் இழுத்துக்கட்டியிருக்கும் வேர்த்தொடர்பு.

போர்களில் எடுக்கப்படும் அனைத்துப் படைக்கலங்களையும் அது எவ்வண்ணமோ சென்று தொடுகிறது. அனைத்து வஞ்சினங்களுடனும் கலந்துள்ளது. மாவீரர்களையும் அறியாது ஓர் அடி பின்னெடுக்கச் செய்கிறது. பெருவஞ்சம் சூடியவர்களையும் அச்சம் கொள்ள வைக்கிறது. தாங்கள் அஞ்சுவதை அவர்களே கண்டு திகைக்கையில் அச்சரடின் மேல் சென்று தொட்டுக்கொள்கிறார்கள். அதன் பொருட்டு நாணுகிறார்கள். அந்நாணத்திலிருந்து மேலும் வெறிகொண்டவர்களாகிறார்கள். ஒருகணமும் தங்கள் தலையறுத்திடத் தயங்காதவர்களாக மாற்றிக்கொள்கிறார்கள். அன்னை தெய்வங்களுக்கு முன் தன் தலையை தானே வெட்டி குருதி கொடுக்கும் நவகண்ட வீரன் அதற்கு முந்தைய கணம் வரை அச்சரடில்தான் அறியாக் கை ஒன்றால் பற்றிக்கொண்டிருக்கிறான். அவன் துணிந்தெழுந்து கடந்து சென்று கண்மூடித்தனமாக வெட்டுவது அச்சரடைத்தான்.

அஸ்வத்தாமன் போர்முரசு ஒலிக்கும் கணம் வரை தன்னுள் அச்சரடை உணர்ந்துகொண்டிருந்தான். கண்ணுக்குத் தெரியாத மென்பட்டுச் சரடு. பெரும் களிறுகளை இழுத்துக்கட்டி நிறுத்தும் ஆற்றல் கொண்டது. போர் தொடங்கிய கணம் அதை ஓங்கி வெட்டி அறுத்துக்கொண்டு பாய்ந்து பாண்டவப் படை நோக்கி சென்றான். “கொல்க! கொல்க!” என்று கூவியபடி அம்புகளை தொடுத்தான். “கொன்று மேற்செல்க! குருதிகொண்டு எழுக!”

போர் முழுவிசையில் தொடங்கி அங்கிருந்து உச்சம் கொண்டபடியே சென்றது. கௌரவப் படைவீரர்கள் பாண்டவப் படைவீரர்களை தாக்கியபோது விழிகளுக்குப் புலப்படாமலேயே இருசாராரின் உணர்வுநிலைகளில் இருந்த வேறுபாடு தென்பட்டது. கௌரவர்கள் ஒவ்வொருவரும் அர்ஜுனனின் உளவெறியை அஞ்சிக்கொண்டிருந்தனர். பின்னடைவதற்கான வழியொன்றை முன்னரே கண்டுவைத்திருந்தனர். பாண்டவ வீரர்கள் அர்ஜுனனின் எரிசினத்தின் ஒருதுளியை தாங்களும் ஏந்திக்கொண்டிருந்தனர். ஆகவே அரைநாழிகைக்குள்ளேயே கௌரவப் படைமுகப்பு எடைதாங்காமல் வளைவதுபோல் பாண்டவப் படையின் விசையேற்று பின்னடையலாயிற்று.

சகுனி “சூழ்ந்துகொள்க! இளைய பாண்டவரை சூழ்ந்துகொள்க!” என்று முரசறைந்து ஆணையிட்டுக்கொண்டே இருந்தார். வில்லவர் எழுவரும் அனைத்துத் திசைகளிலிருந்தும் தங்கள் துணைவிற்படையுடன் வந்து பாண்டவப் படையின் முகப்பிலிருந்த அர்ஜுனனைச் சூழ்ந்து வளைத்துக்கொண்டனர். பாண்டவர்களின் படைசூழ்கை என்ன என்று சில கணங்களில் புரிந்தது. அது கூர்மவியூகம். ஆனால் ஆமையின் ஓடு என அமைந்த கவசப்படை படைக்குப் பின்னால்தான் இருந்தது. கௌரவர்கள் தாக்கத் தொடங்கியதும் அது இரு நீட்சிகளாக

இருபுறத்திலிருந்தும் வந்து இணைந்து அரண் ஆகியது. ஆமை தன் கால்களையும் தலையையும் உள்ளிழுத்துக்கொண்டது.

தரையில் சகடங்கள் மேல் உருண்ட பெரிய இரும்புக் கேடயங்களை பின்னின்று உந்திவந்த தேர்களால் ஆன கவசப்படையால் அர்ஜுனனுக்கு காவலமைத்தனர் பாண்டவப் படையினர். இரும்புக்கோட்டை என அது அர்ஜுனனை மூடி அவர்களிடமிருந்து அகற்றியது. அர்ஜுனன் எண்ணியிராக் கணத்தில் அந்தக் கேடயப்படையின் ஒரு பகுதியை திறந்து விசையுடன் வெளிவந்து அங்கு நின்றிருந்த கௌரவப் படையை எதிர்த்து, அதன் தலைவனை அம்புகளால் அறைந்து கவசங்களையும் தேர்த்தூண்களையும் உடைத்து புரவிகளை வீழ்த்தி பின்னடையச்செய்து அவனைத் துணைக்க பிற வில்லவர் அங்கு வரும்போது விசை குறையாமலேயே பின்னடைந்து தன் கவசப்படை சூழ்கைக்குள் மறைந்து எதிர்பாராத் தருணத்தில் பிறிதொரு இடத்தில் திறந்து வெளிவந்து தாக்கினான்.

அந்தப் போர்முறை கௌரவப் பெருவில்லவர் எழுவரையுமே திகைக்கச் செய்தது. எழுந்த அர்ஜுனனின் விசையை அவர்களால் எதிர்கொள்ள முடியவில்லை. விசைமீண்டு அவர்கள் அவனைத் தொடர்ந்து சென்று தாக்கியபோது அம்புகள் பாண்டவர்களின் கேடயங்களை அறைந்து மணியோசையுடன் உதிர்ந்தன. எந்தத் தருணத்தில் எவருக்கெதிராக அர்ஜுனன் அக்கவசங்களைத் திறந்து வெளித்தோன்றுவான் என்று உய்த்துணர்வதே அவர்களின் போராக இருந்தது. அவன் அவ்வாறு கவசப்படையைப் பிளந்து கிளம்புவதில் எந்த ஒழுங்கும் இருக்கவில்லை. அர்ஜுனனின் உள்ளத்தை பல்வேறு கோணங்களில்

கணித்துக்கொண்டிருந்தனர் கிருபரும் துரோணரும் சல்யரும். கணிக்க இயலாதென்று விட்டுவிட்டனர் அஸ்வத்தாமனும் பூரிசிரவஸும். அணுகிக் கணித்தவன் கர்ணன் ஒருவனே. அவனையும் திகைக்க வைத்தது அர்ஜுனனின் போர்.

கர்ணனுடன் போரிட்டு அறைந்து சிதறடித்த பின்னர் தன் படைகளுக்குள் மறைந்த அர்ஜுனன் மறுகணம் துரோணர் முன் தோன்றுவான் என்று அஸ்வத்தாமன் எதிர்பார்த்தபோது கேடயவாயில் பிளந்தெழுந்து அவன் முன் தோன்றினான் அர்ஜுனன். அந்த முதற்கணத் திகைப்பை அவன் அடையும்போதே அஸ்வத்தாமனின் வில்லும் மகுடமும் உடைந்து தெறித்தது. தேரில் குப்புற விழுந்து தன்மேல் கேடயத்தை கவிழ்த்துக்கொண்டு அர்ஜுனன் தொடர்ந்து வீசிய அம்புகளிலிருந்து அவன் தன்னை காத்துக்கொண்டான். பூரிசிரவஸும் சல்யரும் இருபுறத்திலிருந்து வந்து அர்ஜுனனை அறையத்தொடங்கியதும் அவன் எழுந்து அம்புகளால் அர்ஜுனனை அடித்தான். ஆனால் வெள்ளிமீன் நீருக்குள் மூழ்கி மறைவதுபோல் அர்ஜுனன் கேடயப்படைகளுக்குள் மறைந்தான். “கொல்க! கொல்க!” எனக் கூவியபடி அவனை துரத்திச் சென்ற மூவரும் இரும்புக்கேடயங்களின் நிரையால் தடுக்கப்பட்டனர். அம்புகள் வீணாகி உதிர அஸ்வத்தாமன் “கோழை! மூடன்!” என சினம்கொண்டு கூச்சலிட்டான்.

அர்ஜுனன் மீண்டும் கர்ணனையே நெருங்குவான் என்று நிலைகொள்ளாமல் உதைத்தும் வில்லை தேர்த்தூணில் அறைந்தும் நின்ற அஸ்வத்தாமன் எதிர்பார்த்தான். ஏனெனில் கர்ணன் பாண்டவர்களின் கவசப்படையை அறைந்து உள்நோக்கி வளைத்துக்கொண்டிருந்தான். உருகிய இரும்பு அறைபட்டு நெகிழ்வதுபோல் கவசப்படை

பின்னடைந்துகொண்டிருந்தது. அங்கே எக்கணமும் அர்ஜுனன் தோன்றுவானென்று பிறரும் எதிர்பார்த்தார்கள். அத்திசை நோக்கி செல்ல சல்யர் தன் தேர்ப்பாகனுக்கு ஆணையிட்ட அதே கணம் மீண்டும் கவசநிரை திறந்து மீண்டும் அஸ்வத்தாமன் முன் அர்ஜுனன் தோன்றினான். அதை சல்யரும் பூரிசிரவஸும் எதிர்பார்க்கவில்லை. அவர்களிருவரும் இரு திசைகளிலாக திரும்பியிருந்தனர். ஒருகணத்தில் தன் அனைத்து உளத்திண்மையையும் இழந்த அஸ்வத்தாமன் கூச்சலிட்டபடி தேரிலிருந்து இறங்கி அதன் பின்பகுதியினூடாக ஓடி தன் படைகளுக்குள் புகுந்துகொண்டான்.

அர்ஜுனனின் அம்புகள் வெறிகொண்டு வந்து அறைந்து அவன் தேர்ப்பாகனை கொன்றன. ஆவக்காவலன் தலை சிதறி விழுந்தான். அவனுக்குத் துணையாக வந்த உத்தரபாஞ்சாலத்தின் இருபத்திநான்கு வில்லவர்களும் தங்கள் தேர்த்தட்டில் இறந்துவிழுந்தனர். குதிரைகளைக் கொன்று தேரைக் கவிழ்த்து குருதி தெறித்த காண்டீபத்தின் நாணை சுண்டி இழுத்தபின் தன்னை நோக்கி வந்த சல்யரையும் பூரிசிரவஸையும் நோக்கி முகத்தில் வழிந்த குருதியை உறிஞ்சிச் சேர்த்து ஓங்கி உமிழ்ந்துவிட்டு அர்ஜுனன் பின்னடைந்து தேர்க்கவச அணிகளுக்குள் மறைந்தான்.

கர்ணன் அங்கே நிகழ்ந்ததை அறிந்தும் உள்ளம் திசைமாறாமல், சற்றும் குறையாத விசையுடன் பாண்டவர்களின் கவசப்படையை அறைந்து உள்நுழைந்துகொண்டிருந்தான். மீண்டும் கர்ணனை நோக்கி அர்ஜுனன் எழுவான் என்று அனைவரும் எண்ணிக்கொண்டிருந்தபோது கவசட் சுவர்களைத் திறந்து அதே இடத்தில் எழுந்து அஸ்வத்தாமனின் படைகளின்

வெற்றிடத்தை நிரப்பிக்கொண்டிருந்த பூரிசிரவஸை அவன் தாக்கினான். அதை முற்றிலும் எதிர்பாராத பூரிசிரவஸ் தேரில் திகைத்து நிற்க அம்புகளால் அறைந்து பால்ஹிக குலத்தின் அத்தனை தேர்வீரர்களையும் கொன்றொழித்தான் அர்ஜுனன். பூரிசிரவஸின் தோளிலும் தொடையிலும் அம்புகள் பாய அவன் கேடயங்களை தன்மீது போட்டுக்கொண்டு தேர்த்தட்டிலேயே விழுந்து மறைந்துகொண்டான். அவன் தேர்வீரர்களும் தேர்ப்பாகனும் புரவிகளும் இறந்தனர். தேர் நிலையழிந்து பாண்டவமுகப்பிலேயே சென்று கவிழ்ந்தது. கவிழ்ந்த தேருக்கு அடியில் சிக்கிக்கொண்டதனால் மேலும் மேலும் வந்தறைந்த அர்ஜுனனின் அம்புகளிலிருந்து பூரிசிரவஸ் உயிர் தப்பினான்.

பூரிசிரவஸின் உதவிக்கு எழுக என சகுனி ஆணையிட கௌரவப் படைகள் இருபுறத்திலிருந்தும் கூடிவந்து கேடயங்களால் மூடிக்கொண்டன. கொக்கியை வீசி இழுத்து பூரிசிரவஸின் உடலை தேருக்கடியிலிருந்து மீட்டபோது அவன் உயிருடன் இருப்பதாகவே கௌரவர்கள் எண்ணவில்லை. ஆனால் தொடையிலும் நெஞ்சிலும் பட்ட அம்புகளில் குருதி வழிய இடக்காலை இழுத்து ஓடிவந்து காக்க வந்த மருத்துவத் தேருக்குள் ஏறி படுத்துக்கொண்டான் பூரிசிரவஸ். அப்பகுதியிலிருந்த பேரழிவைப் பார்த்து திகைத்த பின் சல்யர் “விளையாடுகிறான்!” என்றார். துரோணர் குருதி வழிய தேருக்கு அடியில் அமர்ந்திருந்த அஸ்வத்தாமனை நோக்கியபின் சல்யரிடம் “செல்க! செல்க!” என்று கேடயப்படையை சுட்டிக்காட்டி கூவினார். “இன்றுடன் அவ்விழிமகன் அழியவேண்டும்... செல்க!”

சல்யரும் அவரும் பாண்டவ கவசப்படையின் முகவளைவைத் தாக்கியபோது அது மேலும் மேலும் உள்ளிருந்து

செறிவுகொண்டது. மறுபக்கம் திறந்து பீறிட்டெழுந்து கர்ணனை எதிர்கொண்டான் அர்ஜுனன். கர்ணன் அர்ஜுனன் தன் முன் தோன்றுவான் என்பதை ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்திருந்தபோதும்கூட அத்தருணம் அவனை திகைக்க வைத்தது. அவர்களுக்கிடையே மீள மீள நடந்துகொண்டிருந்த அந்த ஒருகணமும் குறையாத போர் மீண்டும் தொடங்கி அவ்வுச்சத்திலேயே நடந்தது.

அத்தருணத்தில் அர்ஜுனனின் சீற்றம் மேலெழுந்திருந்தது. கர்ணனுக்குள் பிறிதொரு விசை தளர்ந்திருந்தது. தன் உளத்தளர்ச்சியை வெல்ல பல மடங்கு சினத்தையும் செயல்வீச்சையும் உருவாக்கிக்கொண்டிருந்தான் கர்ணன். அது முதல்சில பொழுதுகளில் அவனுக்கு துணை நின்றது. ஆனால் உள்ளீடற்ற அந்த விசையை குன்றாது பெருகி வந்துகொண்டிருந்த தன் சினமெனும் விசையால் அர்ஜுனன் வென்றான். கர்ணன் தன் மேல் அறைந்து அறைந்து பின் தள்ளிய அம்புகளில் எழுந்து மிகுந்த விசையை மேலும் மேலும் உணர்ந்தான். தன்னுள் அச்சமொன்று எழுவதை அறிந்தான். இத்தருணம் தன் இறுதியாகுமா என்று அவன் உள்ளே ஓர் எண்ணம் ஓடியது. இதுவா இவ்வாறா இங்கா என்று அவன் அகம் வியந்துகொண்டிருந்தது.

அர்ஜுனன் கைபெருகி நூறு காண்டீபங்களால் அவனை தாக்குவது போலிருந்தது. பொற்தேர் மகுடம் உடைந்தது. தூண்களின் கவசப்பரப்புகள் சிதறித்தெறித்தன. அர்ஜுனனின் அம்புகள் வந்து கர்ணனின் நெஞ்சக்கவசத்தை நெளியச்செய்தன. தோள்கவசங்களும் கைக்காப்புகளும் சிதறின. அவன் தோளில் பாய்ந்த அம்பு நிலைகுலைய வைத்த கணம் பிறிதொரு அம்பு வந்து விஜயத்தை அறைந்து நாணை

உடைத்தது. அவன் முழந்தாளிட்டு தன் தலைக்கு வந்த அம்பை ஒழிந்தான். அடுத்த அம்பு வந்து தோளை அறைய தேர்த்தட்டிலேயே விழுந்தான். பாகன் தேரை திருப்பி கௌரவப் படைகளுக்குள் கொண்டு செல்ல அவ்விடைவெளியை இருபுறமும் வந்துகொண்டிருந்த அங்கநாட்டு வில்லவர்கள் வந்து நிரப்பி அர்ஜுனனை எதிர்கொண்டனர்.

அர்ஜுனன் அங்கநாட்டவர் ஒவ்வொருவரையாக அறைந்து வீழ்த்தினான். கர்ணனின் தேர் படைகளுக்குள் நுழைந்து மறைந்தபோது கௌரவ வீரர்கள் அஞ்சி கூச்சலிட்டுக்கொண்டே பின்னடைந்தனர். அவர்கள் ஒவ்வொருவரையும் மேலும் விசைகொண்டு துரத்தி தேர்த்தட்டிலேயே கொன்று வீழ்த்தினான் அர்ஜுனன். படைவீரர் ஒவ்வொருவரும் உயிரச்சத்தை உணர்ந்துகொண்டிருந்தனர். எங்கோ ஓர் இடத்தில் “விலகிச் செல்க! இன்று இளைய பாண்டவரை எவரும் வெல்ல இயலாது!” என்று எவரோ குரலெழுப்ப பிறிதெவரும் ஏற்றுச்சொல்லவில்லையெனினும் எண்ணம்போல் அந்த அச்சம் அனைத்துப் படைவீரர்களிடமும் பரவியது.

அர்ஜுனன் கர்ணன் சென்ற வழியையே அறைந்து அறைந்து உடைத்து உள்நுழைந்துகொண்டிருந்தான். “ஒருங்கு கூடுங்கள்! படைகளை ஒன்றிணையுங்கள்! முதன்மை வில்லவர் எழுவரும் மீண்டும் படைமுகப்புக்கு செல்லுங்கள்!” என்று சகுனியின் ஆணை ஒலித்துக்கொண்டிருந்தது. அஸ்வத்தாமன் குருதியை உதறியபின் எழுந்து அமர்ந்துகொள்ள மருத்துவ ஏவலர்கள் ஓடிவந்து அவன் கவசங்களை விரைவாகக் கழற்றி புண்களில் மருந்திட்டு மெழுகுத் துணிகளால் அழுத்தி

கட்டுபோட்டனர். சற்று அப்பால் பூரிசிரவஸ் இரு மருத்துவ ஏவலர்களால் தூக்கி வரப்பட்டான்.

முதற்கணம் அவன் இறந்துவிட்டான் என்ற எண்ணத்தை அஸ்வத்தாமன் அடைந்தான். ஆனால் அவன் முனகியபடி தலையசைத்து பின் தன்னுணர்வு கொண்டு தன்னை தூக்கியவர்களை விடும்படி கையசைவால் சொல்லி காலூன்றி எழுந்து நின்றான். இருவர் அவனைப் பற்றி கொண்டுவந்து அஸ்வத்தாமன் அருகே அமரவைத்து கவசங்களை கழற்றினர். முரசுகளின் ஓசையைக் கேட்டபின் அஸ்வத்தாமன் பூரிசிரவஸிடம் “அங்கர் பின்னடைகிறார்! எண்ணிப்பார்க்கவே இயலவில்லை! அங்கர் பின்னடைகிறார்!” என்றான். பூரிசிரவஸ் “இளைய பாண்டவரின் வெறியை எவ்வகையிலோ உணர இயல்கிறது. அதற்கு முன் எவரும் நிற்க இயலாது!” என்றான். அஸ்வத்தாமன் “ஆம்! தந்தையின் வெறி” என்றான்.

பூரிசிரவஸ் “அங்கர் இன்று காலையிலிருந்தே நிலைகொள்ளாதவராக இருந்தார். படைகள் எழும்போது ஒருவேளை அவர் போர்முனைக்கே வராது பின்தங்கிவிடக்கூடுமோ என்று நான் எண்ணினேன். வழக்கமாக பிறரிடம் இன்சொல் உரைப்பவர் இன்று சினங்கொண்டவர் போலவும் அரிய நோயுற்றவர் போலவும் தனக்குத்தானே எழாச் சொல்லில் உரையாடியபடி தலையை அசைத்துக்கொண்டிருந்தார். வில்லால் தேர்த்தட்டில் அமைதியிழந்து தட்டிக்கொண்டிருப்பதை பார்த்தபின் நான் சல்யரிடம் சொன்னேன், அங்கர் மிக அமைதியிழந்திருக்கிறார் என. சல்யர் யார்தான் அமைதியிழக்கவில்லை என்று சிடுசிடுத்தார். அதன் பின் நான் எதுவும் பேசவில்லை” என்றான்.

பூரிசிரவஸின் புண்கள் சற்று பெரிதாகவே இருந்தன. அவற்றில் உருகிய மெழுகுத்துணியை வைத்துக் கட்டியபோது அவன் மெல்ல முனகினான். அஸ்வத்தாமன் “நானும் அதை பார்த்தேன்” என்றான். பூரிசிரவஸ் “ஆனால் போர் தொடங்குவதற்கென முரசுகள் ஒலித்தபோது அவர் முற்றிலும் உருமாறியிருந்தார். ஒருகணத்தில் வீங்கி பேருருக்கொள்ளும் தவளைகளைப்போல. வெறிகொண்டு பாண்டவப் படைகளை அவர் தாக்கும்போது இன்றே களத்தில் அர்ஜுனனை பலிகொள்வார் என்று தோன்றியது” என்றான். “நம் எழுவரில் பாண்டவப் படைகளை அறைந்து பின்னெடுத்தவரும் அவரே. அது அச்சோர்வுக்கெதிரான அவரது எழுச்சி” என்று அஸ்வத்தாமன் கூறினான்.

பூரிசிரவஸ் “எனக்கு மெய்யாகவே புரிந்துகொள்ள முடியவில்லை. பாஞ்சாலரே, இவர்கள் ஏன் இத்தனை துயர்கொள்கிறார்கள்? அச்சிறுவனைக் கொன்றதன் பொருட்டு துயர்கொள்வதென்றால் ஏன் போருக்கெழுந்தார்கள்?” என்றான். அஸ்வத்தாமன் “எவ்வகையிலோ அவர்கள் தங்களை தந்தையென்று உணர்கிறார்கள் போலும்” என்றான். பூரிசிரவஸ் “என் கண்முன் அவன் கௌரவ மைந்தர்களை கொன்று குவித்த ஒவ்வொரு காட்சியும் அலையலையென எழுந்து வருகிறது. அவனை இன்னும் பலமுறை கொல்லவேண்டுமென்று சினம் எழுகிறது” என்றான்.

“வில்லவர் எழுக! ஏழு வில்லவர்களும் சூழ்ந்துகொள்க! இளைய பாண்டவர் நம் படைசூழ்கையை உடைத்து உட்புகுகிறார்!” என சகுனியின் ஆணை கூவியது. அது பதறி அலறுவதுபோல் தோன்றியது. அஸ்வத்தாமன் “கிளம்புவோம். காந்தாரரின் அறைகூவல் விடாது ஒலிக்கிறது” என்றான்.

“அங்கர் விழுந்துவிட்டார்!” என்று முரசுகள் ஒலிக்கத்தொடங்கின. அஸ்வத்தாமன் எழுந்து “அங்கரா!” என்றான். பூரிசிரவஸ் “அவர் பின்னடைகிறார் என்றுதான் முரசுகள் சொல்கின்றன. தவறாக புரிந்துகொண்டீர்கள்” என்று சொன்னான். அஸ்வத்தாமன் “மெய்தான், ஆனால் புண்பட்டிருக்கிறார் என்று தோன்றுகிறது. எண்ணிநோக்கவே இயலவில்லை. நம் எழுவரையும் அவன் ஒருவனே வில்கொண்டு எதிர்நின்று பொருதுகிறான் என்றால்…” என்றான்.

“இக்களத்தில் எதுவும் விந்தை அல்ல” என்றான் பூரிசிரவஸ். அஸ்வத்தாமன் “அவர்களின் சூழ்கை மிகத் திறன்வாய்ந்தது. அந்தக் கேடயக்கோட்டை அரிய சூழ்ச்சி. அதற்குள்ளிருந்து வெளிவந்து தாக்கும் வழிமுறையை வகுத்தவன் எவனாயினும் போர்க்கலை அறிந்தவன்” என்றான். “வேறு எவர்? இளைய யாதவராகத்தான் இருக்க முடியும்” என்று பூரிசிரவஸ் சொன்னான். “அவர் களத்தில் இல்லை, ஆனால் களத்தில் அவரன்றி எவரும் இல்லை.”

“வில்லவர்கள் முன்னெழுக! வில்லவர்கள் முன்னெழுக!” என்று சகுனியின் ஆணை ஒலித்துக்கொண்டே இருந்தது. “போர் தொடங்கி உச்சிப்பொழுதே நெருங்கிக்கொண்டிருக்கிறது. இன்னும் பாதிப் பொழுது எஞ்சியுள்ளது. அந்திமுரசு ஒலிக்கும்வரை பொழுதை கடத்துவதொன்றே நாம் செய்யக்கூடியது. வருக!” என்றபடி அஸ்வத்தாமன் தன் தேர் நோக்கி சென்றான். அதில் ஏறி அமர்ந்துகொண்டு “முன் செல்க!” என்றான். பூரிசிரவஸ் “ஊடுருவிய அர்ஜுனனை தடுத்துவிட்டார்கள். சல்யரும் கிருபரும் துரோணரும் சேர்ந்து அர்ஜுனனை எதிர்கொள்கிறார்கள். நாமும் களம் சென்றால்

இன்னும் சில நாழிகைப்பொழுது அவரை அவ்வளையத்திற்குள்ளேயே வைத்திருக்க இயலும்” என்றான்.

அஸ்வத்தாமன் வில்லை எடுத்துக்கொள்ள பூரிசிரவஸ் “என்னதான் அவர் நம்மை வீழ்த்தினாலும் இன்னும் நமது படைகளின் முகப்பைக் கடந்து அவர் அம்புகள் சென்றடையவில்லை. அவரால் இன்று ஜயத்ரதனை சென்றடையவே இயலாது” என்றான். அஸ்வத்தாமன் ஒன்றும் சொல்லவில்லை. அவர்கள் படைமுகப்பை அடைந்தபோது அர்ஜுனன் கிருபரை அறைந்து தேர்த்தட்டில் வீழ்த்திவிட்டு மீண்டும் கவசநிரைக்குள் புகுந்தான். சினம் பற்றிக்கொள்ள துரோணர் “நில்! நில்! அறிவிலி!” என்று கூவியபடி அர்ஜுனனை தொடர்ந்து சென்றார். அர்ஜுனன் கவசப்படைகளுக்குள் மூழ்கும் கணத்தில் தன்னிடமிருந்த விசைமிக்க அம்புகளால் கவசப்படைகளின் இடைவெளியை அறைந்து உடைத்தார். அவ்விடைவெளி மூடுவதற்குள் தொடர்ந்து அம்புகளை செலுத்தியபடி அதற்குள் நுழைந்தார்.

துரோணரைத் தொடர்ந்து சென்ற உத்தரபாஞ்சாலத்தின் வில்லவர்களும் அந்த வாயிலுக்குள் நுழைந்து உள்ளே சென்றனர். “தனித்துச் செல்கிறார்! தொடர்க! தொடர்க!” என்று பூரிசிரவஸ் கூச்சலிட்டான். அஸ்வத்தாமனும் பூரிசிரவஸும் அம்புகளால் அறைந்தபடி அந்தக் கவச இடைவெளியினூடாக உள்ளே செல்ல முயன்றபோது இருபுறத்திலும் விசைகொண்டு அழுத்தி அது தன்னை மூடியது. “உள்ளே சென்று சிக்கிவிட்டார்!” என்று பூரிசிரவஸ் கூவினான். அஸ்வத்தாமன் “இந்தப் புள்ளியை அறைவோம். அவர்கள் அவரை கைப்பற்றாதபடி செய்வோம்” என்று கூவி மூடிய

கவசப்படையின் இடைவெளியை மீண்டும் மீண்டும் அறைந்தான்.

அம்புகள் இரும்பை அறைந்து வீணாகி உதிரவே அஸ்வத்தாமன் திரும்பி “யானைகள் எழுக! தண்டேந்திய யானைகள் எழுக!” என்றான். முகப்பிலிருந்து நீள்தண்டேந்திய யானைகளின் நிரை வருவதை படையின் அசைவுகளின் அலைகளிலிருந்தே உணரமுடிந்தது. பூரிசிரவஸ் “உள்ளே ஆசிரியர் தனியாக சிக்கிக்கொண்டிருக்கிறார்!” என்றான். அஸ்வத்தாமன் “அவரே எண்ணாமல் அவரை யாரும் வெல்ல இயலாது!” என்றான். யானைகள் வந்து கவச நிரையை அறையத்தொடங்கின. தண்டுகளால் உடைந்து சிதறிய தேரிலிருந்து எடைமிக்க ஆளுயர கவசங்கள் கீழே விழுந்தன. கேடயத்தேர்வரி உடைந்தபோது கேடயங்களை ஏந்திய யானைகள் நிரை முன்னெழுந்து வந்தன. தண்டேந்திய யானைகளை யானைகளாலேயே எதிர்கொள்ளும்படி திருஷ்டத்யும்னனின் ஆணை எழ இருபுறத்திலிருந்தும் கவசங்களைத் தள்ளியபடி பாண்டவ யானைகள் வந்தன. அக்கவசங்கள் தரையில் உருண்டுவந்த சிறிய சகடங்கள் கொண்ட வண்டிகள் மேல் அமைக்கப்பட்டு இருபுறமும் யானைகளால் உந்தி நிறுத்தப்பட்டிருந்தன. கோட்டை ஒன்றின் கற்பலகைகள் உயிர்கொண்டு எழுந்துவருவதுபோல் தோன்றின. இரும்புச் சிப்பிகள்போன்ற வடிவுகொண்டிருந்த அவற்றின்மேல் அம்புகள் மணியோசைகள் எழ சென்று சென்று அறைந்தன.

மீண்டும் தண்டுகளால் ஒரே இடத்திலேயே கௌரவப் படைகள் அறைந்துகொண்டிருந்தன. “அங்கே பெரும்போரின் ஓசைகள்! என்ன ஆயிற்று தங்கள் தந்தைக்கு!” என்று பூரிசிரவஸ் அச்சத்துடன் கூவினான். “எந்த வில்லவனும் எண்ணி நோக்க

இயலாத மிகைச்செயல் அது! ஏன் அதை செய்தார் ஆசிரியர்!” அஸ்வத்தாமன் “அவரும் தந்தை என்பதனால்! எங்கோ ஓரிடத்தில் அவர் ஜயத்ரதனாக என்னை எண்ணிக்கொண்டதனால்!” என்றான். திகைப்புடன் பூரிசிரவஸ் திரும்பிப்பார்த்தான். அதற்குள் தண்டேந்திய கௌரவ யானைப்பபடை பாண்டவர்களின் கவசயானை நிரையை உடைத்து நிரையை விலக்கியது. அதனூடாக துரோணர் அப்பால் அர்ஜுனனுடன் வெறிகொண்டு போரிட்டுக்கொண்டிருந்தது தெரிந்தது.

பூரிசிரவஸும் அஸ்வத்தாமனும் இருபுறமும் கவசங்களை தள்ளியபடி வழிமூட வந்த தேர் வீரர்களை அறைந்து விலக்கி கொன்று அவர்களின் கேடயங்கள் ஓசையெழ நிலத்தில் விழவைத்தபடி அப்பிளவுக்குள் புகுந்து துரோணரை நோக்கி சென்று அவருக்கு இருபுறமும் துணை நின்றனர். துரோணர் அவர்கள் வந்திணைந்ததைக்கூட நோக்காமல் முகம் கோணலாகி வாயிலிருந்து ஒருபோதும் அவர்களிடமிருந்து எழாத வசைச்சொற்களை சொல்லியபடி அர்ஜுனனை அம்புகளால் அறைந்து கொண்டிருந்தார். அர்ஜுனன் அத்தாக்குதலை எதிர்கொள்ள முடியாமல் மேலும் மேலும் பின்னடைந்து சென்றான். கேடயங்கள் ஏந்திய தேர்களையும் யானைகளையும் பின்னிழுத்து மீண்டும் நிரை வகுத்து இரு சரடுகளென்றாக்கி துரோணருக்கும் அர்ஜுனனுக்கும் இடையே புகவைத்து சுவரை உருவாக்கி அர்ஜுனனைக் காத்து உள்ளிழுத்துக்கொண்டு சென்றான் திருஷ்டத்யும்னன்.

கவசங்களால் முற்றிலும் அர்ஜுனன் மூடப்பட்டதும் “அறிவிலி! அறிவிலி! வீணன்!” என்று உரக்கக் கூவியபடி தேர்த்தட்டிலேயே காறித்துப்பினார் துரோணர். வில்லால் தேர்த்தட்டை ஓங்கிக்

குத்தியபடி தலையசைத்து “கீழ்மகன்! இன்று அவனை கொல்லாமல் களம் திரும்புவதில்லை!” என்றார். அஸ்வத்தாமன் “தந்தையே! நமது சூழ்கைக்குள் செல்வோம். மீண்டும் ஒருமுறை நம்மை தொகுத்துக்கொள்வோம். அங்கரும் புண்களுக்கு கட்டுபோட்டு எழுந்துவிட்டார்” என்றான். அவர்கள் பின்னடைந்து தங்களை ஒருங்கிணைத்துக்கொண்டனர்.

கர்ணன் மீண்டும் படைமுகப்பிற்கு வந்தான். காந்தாரரின் ஆணை ஒலிக்க படைகள் அணிகொண்டன. வில்லவர் எழுவரும் முந்தைய வடிவையே மீண்டும் அடைந்து பாண்டவர்களின் படையை தாக்கினர். கவசநிரையின் வலப்பக்கத்திலிருந்து அர்ஜுனன் வில்லுடன் எழுந்து சல்யரை நோக்கி சென்றான். துரோணர் சீற்றத்துடன் “விடாதீர்கள்! அவனை பிடியுங்கள்!” என்றபடி அர்ஜுனனை நோக்கி சென்றார். அவர் அருகே வந்து அம்புகளால் அறைந்ததுமே மீண்டும் அர்ஜுனன் கவசநிரைக்குள் சென்றான். மறுபக்கம் கர்ணனை நோக்கி எழுந்து மீண்டும் போரிடத் தொடங்கினான். கர்ணன் உடல் தளர்ந்திருந்தமையால் மிக விரைவிலேயே பின்னடைந்தான்.

துரோணர் “இழிமகனே! இழிமகனே!” என்று கூவியபடி அர்ஜுனனை நோக்கி அம்புகளை தொடுத்தபடி சென்றார். நீளம்புகளால் அறைந்து அர்ஜுனனை தொடர்ந்து வந்த பாஞ்சால வில்லவர்களை ஒவ்வொருவராக வீழ்த்தினார். சுருதசேனனும் சுருதகீர்த்தியும் அவரது அம்புகளால் தேர்த்தட்டில் விழுந்தனர். சதானீகன் தேரிலிருந்து இறங்கி விலகி ஓட அவனைத் தொடர்ந்து அம்புகளால் அறைந்து நிலத்தில் விழசெய்தார். கொக்கிச்சரடால் அவன் உடலை

கவ்வி இழுத்து அப்பால் எடுக்க அவன் பறந்ததுபோல் சென்று பாண்டவப் படைகளுக்குள் மறைந்தான்.

“தந்தையே, நாம் இளைய பாண்டவரை இந்தச் சூழ்கைக்குள் நிறுத்துவதற்கு மட்டுமே எண்ணம் கொண்டிருக்கிறோம்!” என்று அஸ்வத்தாமன் சொன்னான். துரோணர் மூச்சிரைக்க “இழிமகன்! இழிமகன்!” என்று சொல்லிக் கொண்டிருந்தார். “தந்தையே பின்னடைக! அந்தச் சூழ்கையை மட்டும் தக்க வைப்போம்! இந்த இடத்திலிருந்து இன்னும் இரு நாழிகைப்பொழுது அவர் விலகாமலிருந்தால் தன் அம்பினாலேயே தன் கழுத்தை அவர் அறுத்துக்கொள்ள வேண்டியிருக்கும்!” என்று அஸ்வத்தாமன் சொல்ல “ஆம்! ஆம்!” என்றபடி துரோணர் பின்னடைந்தார்.

# கார்கடல் - 48

ஏகாக்ஷர் சொன்னார்: மீண்டும் வில்லவர் எழுவரும் ஒன்றென்றாகி நிரை வகுத்தனர். அப்பால் பீமனை பால்ஹிகர் எதிர்த்துக்கொண்டிருக்கும் செய்தியை முரசுகள் அறிவித்தன. திருஷ்டத்யும்னனும் சாத்யகியும் துரியோதனனையும் துச்சாதனனையும் எதிர்த்துக்கொண்டிருந்தனர். “இன்னும் சற்றுபொழுது! இதுவரை வந்துவிட்டோம்! இன்னும் சில நாழிகைப் பொழுதே!” என்று சகுனியின் ஆணை கூவிக்கொண்டிருந்தது. பூரிசிரவஸ் கீழ்வானில் மின்னல்கள் வெட்டத் தொடங்கியதை பார்த்தான். ஆடி மாதமாகையால் மழை ஒவ்வொருநாளும் மூண்டும் பின் எண்ணி ஒழிந்தும் விளையாடிக்கொண்டிருந்தது. எப்போதும் விண்ணில் மின்னலும் இடியும் இருந்தது.

வரவிருக்கிறது பெருமழை என்று அஸ்வத்தாமன் எண்ணினான். அனைத்தையும் அள்ளிக்கூட்டிச்சென்று யமுனையில் கரைக்கும் மாமழை. புதுத்தளிர் எழச்செய்யும் வானருள். இடியோசை எழுந்து குருக்ஷேத்ரம் நடுங்கியது. குளிர்ந்த காற்று தென்கிழக்கிலிருந்து வீசத் தொடங்கியது. கொடிகள் பறவைச் சிறகென படபடக்கத் தொடங்கின. காற்றில் பசுங்குருதியின் மணம் இருந்தது. அர்ஜுனன் கவசப் படைகளிலிருந்து எத்திசையிலிருந்தும் வெளிவரவில்லை. அவன் புண்பட்டிருக்கக்கூடும் என்று அஸ்வத்தாமன் எண்ணினான். “எங்கும் அவனை எதிர்நோக்குக! எங்கும் காத்திருங்கள்” என்று சகுனியின் ஆணை ஒலித்தது.

குருக்ஷேத்ரக் களத்தில் ஒவ்வொருவரும் தங்கள் உடல்களில் காலத்தை உணரத் தொடங்கினார்கள். நாழிகைகள் கணங்களாயின. ஒவ்வொரு கணமும் பலநூறு எண்ணங்களாக விரிந்து பரந்தது. ஒரு கணத்தில் வாழ்ந்து சலித்து உந்தி விடுபட்டு அடுத்த கணம் நோக்கி செல்லும் விந்தையை அவர்கள் அறிந்தனர். “இன்னும் ஆறு நாழிகைப் பொழுது! இன்னும் ஆறு நாழிகைப் பொழுது!” என்று முரசுகள் முழங்கின. “ஆறு நாழிகைப் பொழுது! ஆறு நாழிகைப் பொழுது!” என்று கொம்புகள் அறைகூவின. “ஆம்! ஆறு நாழிகைப் பொழுது! ஆறு நாழிகைப் பொழுது!” என்று சூழ்ந்திருந்த பல்லாயிரம் தொண்டைகள் அலறின. “ஆறு நாழிகைப் பொழுது!” என்று யானைகள் பிளிறின. “ஆறு நாழிகைப் பொழுது!” என்று புரவிகள் கனைத்தன. மாபெரும் முரசுத்தோற்பரப்பென குருக்ஷேத்ரம் “ஆறு நாழிகைப் பொழுது! ஆறு நாழிகைப் பொழுது!” என முழங்கிக்கொண்டிருந்தது.

யுதிஷ்டிரர் உளம் கலங்கி வில் தாழ்த்தி தேர்த்தட்டில் தலைகுனிந்தமர அவருடைய பாகன் தேரை பின்னுக்கிழுத்து பாண்டவப் படைகளுக்குள் கொண்டுசென்றான். அவரைத் தொடர்ந்து வந்த சகதேவன் “என்ன இது, மூத்தவரே? நீங்கள் பின்னடைவதை படைவீரர் பார்க்கிறார்கள்” என்றான். யுதிஷ்டிரர் சீற்றத்துடன் பற்களைக் கடித்தபடி “பார்த்தாயல்லவா, வடமலை அடுக்குகள்போல் நின்றிருக்கிறார்கள் கௌரவர்கள். அப்பால் எங்கோ ஒளிந்திருக்கிறான் அவ்வீணன். இளையவன் எப்படி அவனை கொல்ல இயலும்? எந்த அம்பு அங்கு வரை சென்று சேரும்? முதலில் அவன் எங்கிருக்கிறான் என்று எவருக்குத் தெரியும்? இல்லை, இன்றுடன் போர் முடிகிறது, இன்றுடன் நாம் அழிகிறோம்” என்றார்.

பின்னர் மேலும் சீற்றத்துடன் எழுந்து “நான் ஒன்று உரைக்கிறேன். இப்புவியில் என் இளையோர் ஒருவர் உயிர்விட்டாலும் மறுகணமே நானும் உயிர்விடுவேன். இளையோரின்றி இங்கு வாழமாட்டேன். இது தெய்வங்கள் மேல், மூதாதையர் மேல், நெறிகளின் மேல் ஆணை!” என்றார். சகதேவன் “மூத்தவரே, தாங்கள் சொற்களை வீணாக்க வேண்டியதில்லை. இளைய பாண்டவரை வெல்லும் ஆற்றல் கொண்ட எவரும் இங்கில்லை. உடனிருப்பவர் தெய்வம் மண்ணிலெழுந்த மானுடர். இங்கு அவர் எண்ணுவதே நிகழும்!” என்றான். “ஆம், மீளமீள நானும் அதையே சொல்லிக்கொள்கிறேன். ஆனால் ஒவ்வொரு நாளும் உளம் தளர்கிறேன். இப்போது அவனையன்றி நான் அடிபணிவதற்கு எவருமில்லை. அவனே நமக்கு காப்பு” என்றபடி யுதிஷ்டிரர் மீண்டும் தேர்த்தட்டில் அமர்ந்தார்.

சகதேவன் திரும்பியபோது “இளையோனே, மந்தன் என்ன செய்கிறான்?” என்றார். “அவரை பால்ஹிகர் தடுத்து நிறுத்தியிருந்தார், மூத்தவரே. பால்ஹிகரும் கௌரவரும் உருவாக்கிய வலயத்திலேயே அவரும் சுதசோமனும் சர்வதனும் இப்பகல் முழுக்க சிக்கியிருந்தார்கள். அங்கிருந்து அவர் பின்னடைந்தபோது கௌரவ அரசரால் எதிர்கொள்ளப்பட்டார். கௌரவ மைந்தர்கள் எழுபதின்மரை அவர் கொன்றார். கௌரவர்கள் நால்வர் அவருடைய கதைக்கு பலியானார்கள். அவர் இப்போது அங்கருடன் பொருதிக்கொண்டிருக்கிறார்” என்றான். “எங்கு நோக்கினும் அவர்கள் எழுவரும் சூழ்ந்து நின்றிருக்கிறார்கள். எத்திசையில் எழுந்தாலும் அங்கு விற்படையே தெரிகிறது” என்று யுதிஷ்டிரர் சொன்னார்.

“ஆம், அவர்கள் இப்போது நமது போர்முறைக்கு பழகிவிட்டனர். வில்மேலோர் எழுவருமே எக்கணமும் இளையவர் தங்கள் முன் வில்லுடன் எழுவார் என்று உளம்கொண்டு நின்றிருப்பதனால் குறுகிய பொழுது போர்புரிந்து அப்படியே மீள்வதொன்றையே அவரால் செய்யமுடிகிறது” என்றான் சகதேவன். கொம்புகள் உரக்க முழங்கின. பால்ஹிகருக்கும் பீமனுக்கும் நிகழ்ந்த போர் உச்சத்தை அடைகிறதென்று உணர்ந்த யுதிஷ்டிரர் “செல்க, அங்கு செல்க! மந்தனின் அருகே நில்!” என்றார். “என் படைத்துணை அவருக்கெதற்கு?” என்றான் சகதேவன். சீற்றத்துடன் எழுந்த யுதிஷ்டிரர் “நம் அனைவரின் படைத்துணையும் அவனுக்கு வேண்டும். இப்படி எண்ணி தயங்குவதற்குரிய தருணமல்ல இது. நாமனைவரும் ஒன்றாக நின்றாக வேண்டும்…” என்றார். “செல்க… இளையோர் இருவரும் நம் அனைவராலும் சூழ்ந்து காக்கப்படவேண்டும்.”

“அதுதான் நிகழ்ந்துகொண்டிருக்கிறது, மூத்தவரே!” என்றான் சகதேவன். பொருளில்லா சினத்துடன் எழுந்து “வீணன்! வீணன்!” என்றபடி யுதிஷ்டிரர் தன் வில்லை தேர்த்தட்டில் அறைந்தார். “எதை எண்ணி அந்த வஞ்சினத்தை எடுத்தான்! மூடன்! மூடன்!” என்றபின் “நீ அறிவாயா அவன் தந்தை மூவிழியனிடமிருந்து சொற்பேறொன்றை அடைந்திருப்பதாக கதைகள் உண்டு. அவன் தலையை நிலம் வீழ்த்துபவர் எவரோ அவர் தலை உடைந்து தெறிக்கவேண்டுமென்று” என்றார். சகதேவன் “அதெல்லாம் வீண் கதைகள்” என்றான். “அனைத்துமே கதைகள்தான்… இதோ இங்கே நிகழ்ந்துகொண்டிருப்பதே ஒரு பொருளில்லாத கதைதான்” என்று யுதிஷ்டிரர் கூவினார். “கதைகள் பொருளில்லாதவை அல்ல. கதைகள் பொருளில்லாதவை என்று சொல்பவன் பொருளில்லா வாழ்க்கையை உணராத அறிவிலி.”

பின்னர் மூச்சிரைக்க “அவை முளைத்து பெருகியிருக்கலாம். ஆனால் முதல் விதையின்றி எழாதென்று அறிக… அவனை கொன்றால் அவன் தந்தையின் சொற்பேறு தெய்வப் படைக்கலமென எழும்… ஆம், ஐயமே இல்லை… அவனை கொல்லாவிடில் தானே சங்கறுத்து விழவேண்டும். கொன்றால் தலையுடைந்து இறக்கவேண்டும்… எனக்கொன்றும் புரியவில்லை” என்றார். பின்னர் கைவீசி “விலகிச் செல்க! எவரும் என்னருகில் வரவேண்டியதில்லை. என் இளையோன் உயிரோடிருக்கிறான் என்ற செய்தி மட்டும் இனி என்னை வந்தடைந்தால் போதும்” என்றார்.

சகதேவன் ஓசையின்றி தலைவணங்கி புரவியை திருப்பிக்கொண்டு விரைந்து அகன்று சென்றான். யுதிஷ்டிரர் தன்னை சூழ்ந்தொலித்த முழவோசைகளை, முரசொலிகளை,

கொம்பொலிகளை கேட்டபடி ஒவ்வொரு கணமும் உடல் விதிர்க்க கைகள் நடுங்க அமர்ந்திருந்தார். “ஐந்து நாழிகை! இன்னும் ஐந்து நாழிகை! ஆம், ஐந்து நாழிகை!” என்று அது அவரை நோக்கி கூவிக்கொண்டிருந்தது.

பார்பாரிகன் சொன்னான்: சகதேவன் படைமுகப்பிற்கு வந்தபோது பூரிசிரவஸுடனும் சல்யருடனும் போர் முடித்து அர்ஜுனன் படைகளுக்குள் பின்னெழுந்திருந்தான். அவனருகே சென்ற சாத்யகி “அரசே, துரோணரை எதிர்கொள்ள பாஞ்சாலர்களால் இயலவில்லை. இன்று அவர் வெறியில் அனைத்தையும் மறந்தவர் போலிருக்கிறார்!” என்றான். அர்ஜுனன் பித்து தெரிந்த முகத்துடன் தலையசைத்து முகத்தில் வழிந்து உதட்டை தொட்ட குருதியை துப்பினான். புரவியில் விரைந்து அவனருகே சென்று வணங்கிய சகதேவன் “இப்போர் இவ்வண்ணமே இன்னும் நான்கரை நாழிகை மட்டும் நீடிக்க முடியும், மூத்தவரே!” என்றான். அர்ஜுனன் “ஆம்” என்றான். அவன் தான் சொல்வதை புரிந்துகொள்கிறானா என ஐயம் கொண்ட சகதேவன் “நமக்கு பொழுதில்லை… நான்கரை நாழிகைகள் மட்டுமே” என்றான்.

அர்ஜுனன் இளைய யாதவரை நோக்கி “ஆம், அது ஒன்றே வழி” என்றான். பற்களைக் கடித்து கைகளை முறுக்குவதைப் பார்த்து திகைத்த பின் சகதேவன் இளைய யாதவரை பார்த்தான். அர்ஜுனன் “அரிய அம்புகள் எவற்றையும் இப்போரில் எடுப்பதில்லை என்று வஞ்சினம் உரைத்திருந்தேன். அந்நெறியை அவர்களே மீறிவிட்டார்கள். இனி நான் அஞ்சுவதற்கும் தயங்குவதற்கும் ஏதுமில்லை” என்றான். வெற்றுநகைப்புடன் “ஆம், வீரத்தால் அல்ல வெறும்

விந்தையால் வென்றான் விஜயன் என்று என்னைப்பற்றி சூதர்கள் பாடுவார்கள். அது நிகழ்க!” என்றபின் திரும்பி ஆவக்காவலனிடம் “அசுராஸ்திரம்!” என்றான். ஆவக்காவலன் ஒருகணம் திகைத்தபின் கைவீசினான்.

அர்ஜுனனின் தேருக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த மூடுண்ட பெருந்தேரிலிருந்து இரு ஆவக்காவலர்கள் இரண்டாள் நீள கழையொன்றை எடுத்தனர். சினையுற்ற மலைப்பாம்புபோல் அது புடைப்பும் வீக்கமும் கொண்டிருந்தது. இரண்டு மானுட உடலின் எடைகொண்டிருந்தது. அர்ஜுனன் காண்டீபத்தின் கீழ்முனையை காலால் கவ்வி மேல்வளைவை இருமுறை பிடித்திழுத்தபோது அது நீண்டு மும்மடங்கு உருக்கொண்டதாயிற்று. சகதேவன் “மூத்தவரே!” என்று சொல்ல நாவெடுத்தான். “போதும்! இனி என்னிடம் நெறிகள் எதையும் எவரும் உரைக்க வேண்டியதில்லை” என்று அர்ஜுனன் சொன்னான். அர்ஜுனனின் தேரின் பின்சகடத்துடன் இணைந்திருந்த முட்சகடத்தில் தோல்பட்டை ஒன்று பொருத்தப்பட்டது. அதை காண்டீபத்தின் மேல்முனையில் இணைத்தான்.

“செல்க!” அவன் கைநீட்டி ஆணையிட்டதும் இளைய யாதவர் சவுக்கை சொடுக்கி தேரை முன் செலுத்தினார். ஏழு புரவிகளும் பாய்ந்தெழுந்த விசையால் தேர்ச்சகடம் உருள அந்தத் தோல்பட்டையால் இழுக்கப்பட்ட காண்டீபம் கிளைமுறியும் முனகலோசையுடன் வளைந்தது. அக்கணமே அதன் நாணை இழுத்து அதே விசையில் அந்தப் பேரம்பை அதில் தொடுத்து ஏவினான். கவசநிரை கடந்து அப்பால் பாய்ந்த தேரிலிருந்து பாறை பிளக்கும் ஒலியை எழுப்பியபடி அசுராஸ்திரம் சீறியெழுந்து விண்ணில் பாய்ந்து வளைந்து

கௌரவப் படைகளுக்குள் சென்று விழுந்தது. அது விழுந்த இடத்தில் பெருவெடிப்போசை எழுந்தது. அங்கிருந்து நூறு சிறு மின்னல்கள் கிளம்பி படைப் பகுதிகளை அதிரச்செய்தன. ஒன்றின் மேல் ஒன்றென எழுந்த மூன்று கரும்புகைச் சுருள்கள் வளர்ந்து தேவதாரு மரம்போல் நின்று கீழ்க்காற்றில் மெல்ல கலைந்து அப்பால் சென்றன.

கௌரவப் படைகளின் அலறல்களையும் கூச்சல்களையும் சகதேவன் கேட்டான். மரம் விழுந்த இடத்தின் பறவைக்கூட்டம்போல் கௌரவர்கள் அங்கிருந்து பறந்தகன்றனர். "கைவிடுபடைகள் தொடர்க!" என அர்ஜுனன் கூவ அந்த ஆணை முழவொலியென எழ யானைகளாலும் புரவிகளாலும் இழுக்கப்பட்ட பெருவிற்களில் இருந்து எரிப்பொதிகளுடன் அம்புகள் எழுந்து கௌரவப் படைகள் மேல் விழுந்து வெடித்தன. இடித்தொடர்களால், மின்னல்களால் குருக்ஷேத்ரம் அதிர்ந்தது. புகைமுகில்கள் எழுந்து களக்கொந்தளிப்பை மூடின. கௌரவப் படையினர் அஞ்சி விலக உருவான இடைவெளியினூடாக அர்ஜுனன் உள்ளே நுழைந்தான்.

அரவான் சொன்னான்: அசுராஸ்திரம் இருள் வடிவானது. வௌவால் போன்ற மடிப்புகள் விரிந்து அகலும் பெருஞ்சிறகுகள் கொண்டது. நூறு கூகைகளின் ஓசை எழுவது. கூரலகு திறந்து அனல் உமிழ்வது. அது கௌரவப் படைகளுக்கு மேல் எழுந்து நூறு முறை சுழன்றது. அதன் அனல் பட்ட இடங்களில் வீரர்கள் பொசுங்கி உயிர்விட்டனர். யானைகள் உடலெங்கும் தோல் உரிந்து செந்தசை வெந்து வெளுக்க தோலிருந்த நாகமென வெந்த துதிக்கை நெளிய கதறியபடி சுழன்றோடின. புரவிகள் குஞ்சிமயிர் தழலுடன்

பறக்க துள்ளித் தெறித்து விழுந்து நிலத்தில் புரண்டு குமிழிகளாக வெடித்து உடற்கொழுப்பு நீலச்சுடராக நின்றெரிந்தன. தேர்கள் அனல் கொண்டு உருண்டு சென்று புரண்டு எரிந்தெழுந்து பிற தேர்களை பற்ற வைத்தன. அனல் எரிந்த வளையம் விரிந்து அகல அங்கு கருகிய உடல்களும் பொசுங்கிய தேர்களும் பரவிய சாம்பல் வெளியொன்று உருவாகியது. அங்கே இன்னமும் உயிரணையாத உடல்கள் கரிய புழுக்களைப்போல் கிடந்து துடித்தன.

அர்ஜுனன் அந்தப் பரப்பிற்குள் நுழைந்து கண் நோக்கும் விரைவைவிட விசை கொண்டு அதை கடந்து கௌரவப் படைகளுக்குள் புகுந்தான். அக்கணம் மண்ணுக்குள் திறந்த பலநூறு புற்றுவாய்களிலிருந்து எழுந்த பல்லாயிரம் நாகப் பேருருக்கள் சொடுக்கப்படும் சாட்டைகள்போல் உடல் நெளிய எழுந்து அவனை சூழ்ந்துகொண்டன. அவை துரோணரின், கிருபரின், பூரிசிரவஸின், சல்யரின், அஸ்வத்தாமனின், அங்கரின் அம்புகளில் சென்று குடியேறி சீற்ற ஒலியுடன் எழுந்து சென்று அர்ஜுனனை தாக்கின. அவன் ஊர்ந்த தேர் மீதும் புரவிகளின் மீதும் விழுந்து கரிய நாக உடல்கள் சுருண்டு நெளிந்தன. புரவிகளைச் சுற்றி இறுக்கி இழுத்து கீழே தள்ளின. தேர் சரிந்து ஒருபக்கமாக ஓட இளைய யாதவர் தன் கையிலிருந்த சவுக்கால் அறைந்து அறைந்து அந்நாகங்களை அப்பால் தள்ளினார். சலியாத அம்புகளால் அந்நாகங்களை அரிந்து துண்டுகளாக்கி அச்சாம்பல் வெளியிலிட்டு அவை புழுப்பெருக்குகளென செறிந்து நெளிந்து கொப்பளிக்க அவற்றின்மேல் தன் தேரை உருட்டிச்சென்றான் அர்ஜுனன்.

மேலும் மேலுமென நாகங்கள் ஏழு வில்லவர் அம்புகளில் எழுந்து அர்ஜுனனை தாக்கின. அர்ஜுனன்

ராக்ஷஸஅஸ்திரத்தை எடுத்தான். தேரின் விசையில் வில்லை குலைத்து நாண் இழுத்து அதை ஏவினான். அக்கணம் போர்க்களம் முற்றாக இருண்டது. இருளுக்குள் அம்புகளின் சீறல் ஒலிக்க கூர்முனைகள் மோதிக்கொள்ளும் மின்னல்கள் மட்டுமே தெரிந்தன. அவ்விருளுக்குள் ஓசைகளினூடாகவே பாதை தெரியக்கண்டு கௌரவப் படையைத் தாக்கி மேலும் உட்புகுந்தான். இருளுக்குள் நிலையழிந்த கௌரவர் ஒருவரை ஒருவர் நோக்கி கூச்சலிட்டனர். தங்கள் உடல்களில் கால்சிக்கி தங்களவர் மீதே விழுந்தனர். தழுவிக்கிடந்த அவர்களை கொன்று அழித்தன பாண்டவர்களின் கைவிடுபடைகளிலிருந்து எழுந்த கண்ணிலா அம்புகள்.

கர்ணன் தன் கையிலிருந்த விஜயத்தை இழுத்து தமோஹம் என்னும் நாக அம்பை எய்தான். அதில் அமைந்திருந்த ஏழுதலைகொண்ட பாதாள நாகம் இருளுக்குள் வழி உசாவிச்செல்லும் கட்செவி கொண்டது. அர்ஜுனனின் தேரை அறைந்து அது கவிழ்ந்து உருளச்செய்தது. தேரிலிருந்து வில்லுடன் தெறித்து விலகி அப்பால்சென்ற அர்ஜுனன் முழந்தாளிட்டு அமர்ந்து தன் தலைகொய்ய வந்த தமோஹத்திலிருந்து தப்பினான். தேரிலிருந்து கையூன்றி எழுந்த இளைய யாதவர் அப்போதும் கடிவாளத்தை விடாமல் ஆணையிட்டு புரவிகளை விசை குறையாது உந்தி தேரை திருப்பினார். பக்கவாட்டுப் புரவி ஒன்று கனைத்தபடி துள்ள அவ்விசையில் தேரை எழுப்பிவிட்டார். அதற்குள் ஏழு அம்புகளால் தமோஹனை அறைந்து துண்டித்துவிட்டு அர்ஜுனன் பாய்ந்து மீண்டும் தேரிலேறிக்கொண்டான்.

பூரிசிரவஸும் சல்யரும் எய்த அம்புகளில் குடியேறி பாதாள நாகங்கள் கடல் ஊற்றெடுப்பதுபோல பெருகிப்பெருகி

எழுந்து ராக்ஷஸஅஸ்திரத்தை தாக்கின. ஆயிரம் பெருநாகங்கள் அதன் மேல் விழுந்து அழுத்தி மண்ணுடன் பற்றிக்கொண்டன. ஒளி மீண்டதும் அக்கணமே அர்ஜுனன் ஐந்திரம் என்னும் அம்பை அனுப்பினான். விண்ணில் இடியோசை எழுந்தது. தொலைவில் மின்னல்கள் வெட்டி வெட்டி அதிர்ந்தன. ஐந்திரம் ஏழு முறை சுழன்று விண்ணிலெழுந்தது. அதன் விசையில் போர்களத்திலிருந்த ஆடைகளும் கொடிகளும் தங்கள் இணைப்புகளிலிருந்து விடுபட்டு ஒன்றாகிச் சுழன்று தூண்போல் மேலெழுந்தன. வேல்முனைகளும் ஈட்டிக்காம்புகளும் கூட அச்சுழற்காற்றால் மேலே தூக்கப்பட்டன. வீரர்கள் அஞ்சி அப்பால் விலக அத்தூண் போர்க்களத்தை உலைத்தபடி கௌரவப் படைகளுக்குள் கடந்து சென்றது. அதை தொடர்ந்து சென்ற அர்ஜுனன் சிதறி ஓடிய கௌரவப் படைகள் ஒவ்வொருவரையும் வில்கொண்டு அறைந்து வீழ்த்தினான்.

நாகர்கள் மண்ணிலிருந்து உருகிய இரும்புக் கொந்தளிப்பென எழுந்து அச்சுழலை கவ்விக்கொண்டனர். ஒருவர் வாலை ஒருவர் கவ்வித் தொடுத்து வலையென்றாகி அதன் மேல் ஏறி தாங்களும் சுழன்றனர். கரிய உறையென்றாகி அக்கோபுரத்தை மூடினர். விண்ணளவுக்கு எழுந்து சென்ற நாகங்களின் எடையால் ஐந்திரம் தன் விசையழிந்து மண்ணில் விழுந்தது. வானில் தூக்கப்பட்ட ஈட்டிகளும் அம்புகளும் உடைந்த தேர்ப்பகுதிகளும் ஒன்றன் மேல் ஒன்றென விழுந்து ஒரு குன்று உருவாகியது. அதிலிருந்து நாற்புறமும் சிதறி எழுந்த நாகங்கள் பத்திகளை நிலத்தில் அறைந்து சீறி தலையெழுப்பி நா பறக்க விழி மின்ன வஞ்சம் உரைத்தன.

அர்ஜுனன் வாருணம் எனும் அம்பை எய்தான். அனைவரும் மெய்ப்புகொள்ளும் குளிர் அங்கே எழுந்தது. மறுகணம் அப்பகுதியெங்கும் மழை சீறி அறைந்தது. கொடிகள் நனைந்து படபடத்தன. தேர்முகடுகளில் இருந்த உலர்ந்த குருதி கரைந்து செங்கொழுமையெனச் சொட்டியது. ஆடைகள் உடலில் ஒட்ட வீரர்கள் நிலையழிந்தனர். தேர்ச்சகடங்களும் புரவிக்குளம்புகளும் செம்மண்ணுடன் குருதியைச்சேர்த்து மிதிக்க உழுது புரட்டிய புது வயலென்றாயிற்று குருக்ஷேத்ர நிலம். மழைத்திரைக்குள் புகுந்த அர்ஜுனன் கௌரவப் படைவீரர்களை கொன்றான். அவர்கள் விழிமறைத்த நீருக்குள் மூச்சுத்திணறினர். குளிரொளித் தூண்களென நின்றிருந்த மழைக்காட்டுக்குள் முட்டிமுட்டி திசையழிந்தனர். ஊடுருவி வந்த அம்புகளால் கொல்லப்பட்டு உதிர்ந்தனர்.

பிருஹத்காயர் தன் வஞ்சினக் களத்திலிருந்து அதை கண்டார். “எழுக தெய்வங்கள்! எனைக் காக்கும் பாதாள மூர்த்தங்களே எழுக!” என்று இரு கைகளையும் விரித்துக் கூவினார். தன் முன்னிருந்த அவிப்பொருட்களை அள்ளி அள்ளி அடியிலா சிறு துளைக்குள் போட்டு வணங்கினார். அப்படையல்கள் சென்று பாதாள உலகத்தில் ஒருவரோடு ஒருவர் பின்னி முண்டி மேலெழுந்த நாகங்கள் மேல் விழுந்தன. நெய்யுண்ணும் தழல்கள்போல் பாதாள நாகங்கள் அவற்றை பிளவுநா நீட்டி எட்டி எட்டி உண்டன. சீறி விசைகொண்டு குருக்ஷேத்ரத்தின் அனைத்து பாதாள வாயில்களினூடாகவும் அவை மேலெழுந்தன. ஒன்றையொன்று அறைந்து உடல் பின்னி நெளிந்தும் பத்தி விரித்தும் அவை வான்கூரை போலாயின. குருக்ஷேத்ரத்தை முற்றாக மூடி வாருணத்தின் ஒரு துளி நீரும் மண்ணை வந்தடையாமல் மறைந்தன.

மழை ஓய்ந்த வெளியில் நின்று கொண்டிருந்த அர்ஜுனனை நோக்கி இளைய யாதவர் “மாயாஸ்திரத்தை எடு…” என்றார். அர்ஜுனன் எய்த மாயவாளி களத்திலிருந்த அனைவர் விழிகளையும் நுண்ணிதின் நடுக்குறச் செய்தது. அதிர்ந்த விழிகளிலிருந்து நோக்கு மறைய அவர்கள் வெண்ணிற இருளையே எங்கும் கண்டனர். பொருட்களை துலக்கும் ஒளி பால் திரிவதுபோல் பல நூறு வண்ணங்களென்றாகி எதையும் காட்டுவதற்கு ஒவ்வாததாக மாறியது. பாதாள நாகங்கள் தங்கள் நாக்குகளை, வாய்களைத் திறந்து நாகமணிகளை ஒளியெழக் காட்டின. பல்லாயிரம் நாகமணிகளிலிருந்து எழுந்த இளநீல ஒளி அப்பகுதியை துலங்கச் செய்தது. கௌரவப் படைவீரரும் வில்லவர் எழுவரும் முற்றிலும் புதிய ஒளியில் குருக்ஷேத்ரத்தை கண்டனர்.

விழைவதை மட்டுமே காட்டும் அவ்வொளியில் இளஞ்சிவப்பு வண்ணத்தில் அனற்கோடென துள்ளிய காண்டீபத்தை, அதை ஏந்தி நின்ற செம்புகை வண்ணம் கொண்ட வீரனை, அவன் முன் அமர்ந்திருந்த நீலச்சுடர் என உடல் அமைந்த பாகனை, வெண்தழல்போல் நெளிந்தோடிய புரவிகளை கனல் என எரிந்த தேரை நாகங்கள் கண்டன. “கொல்லுக! கொல்லுக!” என்று கூவியபடி அவனை தங்கள் வால்கூர் அம்புகளால் அறைந்தன. அர்ஜுனன் கௌரவப் படையின் பாதியைக் கடந்து உள்ளே சென்றுவிட்டிருந்தான். “இன்னும் இரு நாழிகைப் பொழுது!” என்று தொலைவில் காந்தாரர் சகுனியின் ஆணை கேட்டது. “இருள் எழவிருக்கிறது! இன்னும் இரு நாழிகைப் பொழுது!” என்று படைகள் கூவிக்கொண்டிருந்தன.

அர்ஜுனன் சந்திராஸ்திரத்தை தொடுத்தான். அனைவரும் உளம்கலங்கி சிரித்தும் வெறிகொண்டு கூச்சலிட்டும் அலைய

பன்னிரு நாகங்கள் அவ்வம்பைச் சுற்றி கவ்வி விழுங்கின. அவன் பௌமாஸ்திரத்தை தொடுத்து மண்ணைத் துளைத்து அவற்றை துரத்திச் சென்றான். அவனை ஆயிரம் நாகங்கள் குடையென கவிந்து தாக்கின. அவன் சௌபர்ணாஸ்திரத்தால் அவற்றை தாக்கினான். அது சிறகுகள் கொண்டு நூறாயிரம் பறவைகளாக மாறி நாகங்களை பறந்து பறந்து கொத்திக்கிழித்தன. நாகங்கள் அவன் தேர் உருண்ட மண்ணில் பரவி அவனை அள்ளி வானில் தூக்கின. அவன் கருடாஸ்திரத்தால் அவற்றை தாக்கி தன் தேரை மீண்டும் மண்ணில் விழச்செய்தான். ஆக்னேயாஸ்திரத்தால் நாகங்களை எரித்தான். வாயுவாஸ்திரத்தால் அவற்றை அள்ளிச்சுழற்றி பெரிய உருளைகளாக்கி திசைகளுக்கு அப்பால் எறிந்தான். விசோஷனாஸ்திரத்தால் புழுதிச்சுழல்களை எழுப்பினான். சைலாஸ்திரத்தால் மண்ணை அறைந்து நிலநடுக்கை உருவாக்கினான். வஜ்ராஸ்திரத்தால் மண்ணைப் பிளந்து அவ்வாயில் பாம்புகளை உள்ளே தள்ளினான். அவை எண்ணி எண்ணிப் பெருகும் தன்மைகொண்டிருந்தன. எதிரியின் எண்ணங்களிலிருந்து எழும் ஆற்றலையும் பெற்றிருந்தன. தங்கள் எண்ணப்பெருக்காலேயே அவை அனைத்தையும் வென்றன.

அவன் அந்தர்த்தானஸ்திரத்தால் தன்னை இன்மையென்றாக்கி ஒளியில் மறைத்துக்கொண்டான். அவை தங்கள் நிழல்களைக்கொண்டு ஓர் அர்ஜுனனைப் படைத்து அவனை தாக்கின. அந்நிழல் அடைந்த தோல்வியும் தன்னதே என்று உணர்ந்த அர்ஜுனன் தோற்றம் கொண்டு ருத்ராஸ்திரத்தால் அவர்களை அழித்தான். அது ஆயிரம் அனல்நாவெழுந்த எரிகுளமாக விரிய அதில் அரவுத்திரள் அவியாகியது. தங்களை அவியிட்டு அந்த வேள்விப்பயனால் அவை மேலும்

பேருருக்கொண்டு எழுந்தன. சம்மோஹனாஸ்திரத்தால் அவன் அவற்றை மயங்கச்செய்தான். அவை அம்மயக்கில் கனவுகண்டு அக்கனவில் ஒன்று ஆயிரமெனப் பெருகி எழுந்தன. கந்தர்வாஸ்திரத்தால் அவன் அக்கனவுகளில் புகுந்துகொண்டு அவற்றை கொன்றான். அந்தப் போர் காலமின்மையில் என நிகழ்ந்துகொண்டே இருந்தது. கொல்லக் கொல்லப் பெருகி அர்ஜுனனை சூழ்ந்தன நாகங்கள். வெல்ல வெல்ல சினம்கொண்டு அவன் எழுந்துகொண்டே இருந்தான்.

இளைய யாதவர் "பாசுபதம் எழுக!" என்று கைதூக்கி கூவினார். உறுமியபடி பாசுபதம் எழுந்தது. குகைவிட்டெழுந்த சிம்மம் என அதன் ஓசை கேட்டு கௌரவர்கள் நடுங்கினர். அக்கணமே கர்ணனின் அம்பிலிருந்து பன்னகம் இடியோசை முழக்கி எழுந்து பாசுபதத்தை நோக்கி சென்றது. பாசுபதம் எருதுமுகம் கொண்டிருந்தது. நூறு சிறகுகளும் சிம்ம உகிர்கள் கொண்ட ஆயிரம் கைகளும் அதற்கிருந்தன. பன்னகம் முதலைத் தோல்பரப்பும் முதலைக் கைகள் ஆயிரமும் அனலுமிழும் வாயும் எண்ணியதை சென்று தொட்டு தெறிக்கும் நெடுங்கதிரென நாவும் கொண்டிருந்தது. பாசுபதமும் பன்னகமும் விண்ணில் போர்புரிந்தன. அப்போர் ஒருகணத்திற்குள் விரியும் யுகங்களில் நிகழ்ந்தது. ஆழங்களிலிருந்து எழும் அனைத்து ஆற்றல்களையும் பன்னகம் கொண்டிருந்தது. உயரங்களிலிருந்து இறங்கும் விசைகள் அனைத்தையும் தன்னிடம் கொண்டிருந்தது பாசுபதம். நாகர்களே நாகமும் காளையுமாகி முதலும் முடிவுமாகிய சிவம் தன்னுடன் தானே போரிட்டுக்கொண்டிருந்தது.

# கார்கடல் - 49

அரவான் சொன்னான்: ஜயத்ரதனை அள்ளித் தூக்கிக்கொண்ட அதலன், அஹோரன் முதலிய ஏழு மாநாகங்கள் பன்றிவடிவ முகம்கொண்டு தேற்றைகளால் மண்ணைப்பிளந்து உள்ளே கொண்டுசென்றன. பிளந்து பிளந்து அவை செல்லச்செல்ல இருள் எடைகொண்டதுபோல் ஆழம் வந்து அவனை சூழ்ந்துகொண்டது. அவன் மூச்சுத் திணறி துடித்து ஓசையின்றி அலறி அந்நாகங்களிலிருந்து விடுபடுவதற்காக துடித்தான். அவற்றின் பிடி ஆயிரம்மடங்கு ஆற்றல்கொண்ட யானைத் துதிக்கைகளைப்போல் அவனை சுற்றிக் கவ்வியிருந்தது. பின்னர் இறுதி மூச்சும் குமிழியாக மாறி அகல அவன் நெஞ்சுக்குள் எடையின்மை எழுந்தது. அவன் எண்ணங்களும் முறுக்கவிழ்ந்தன. அவன் இனிய துயிலில் என மயங்கி அமிழ்ந்துகொண்டே இருந்தான்.

அவன் உடல் சிறுமகவென்று ஆகியது. கட்டைவிரலை வாய்க்குள் இட்டு உடலைக் குறுக்கி கண்மூடி இன்துயிலில் அமைந்தான். துளியெனச் சிறுத்து மேலும் மேலும் சுருங்கி அணுவென்றாகி ஆழத்தில் பெருகிக்கிடந்த இருளில் கரிய உருவங்களாக நிறைந்திருந்த மாநாகங்களில் ஒன்றின் செதில்மலையின் ஒரு சிறு இமைப்பொளியாக பதிந்தான். அங்கே அவன் தன்னை என்றுமிருப்பவனாக உணர்ந்தான். அவன் தலைக்குமேல் இடியோசை எழுந்தது. மின்னலில் நாகச்செதில்கள் மலைமுடிகள் என அதிர்ந்தணைந்தன. எதிரொலிகள் மலைமடிப்புகள் தோறும் மடிந்து எழுந்து அகன்றன. "என்ன அது? என்ன?" என்று அவன் கூவினான்.

“அஞ்சற்க! அது பாசுபதம்… இங்குள்ள வான்வெளியில் அதன் ஓசையும் ஒளியும் மட்டும் வந்துள்ளது” என்றது அருகே இருந்த இருள்தெய்வம்.

ஈ போனற சிறகுகளும் வட்டப் பெருங்கண்களும் சுருண்ட கொடுக்கும் கொண்டிருந்தது அது. “என் பெயர் உபப்பிராணன். இந்த இருளுலகை நிறைத்திருக்கும் முடிவிலாக் கோடி தெய்வங்களில் ஒன்று” என்று அது சொன்னது. “நீ இங்கே காக்கப்பட்டுள்ளாய்… அங்கே அந்தி எழும்வரை நீ இங்கிருப்பாய்.” ஜயத்ரதன் பெருமூச்சுவிட்டு “நான் என்றுமே உயிருக்கு அஞ்சியதில்லை. வில்லெடுத்து முதல் அம்பை தொடுக்கையில் ஆசிரியர் சொல்லும் அறவுரை அது. முதல் அம்பெடுத்து நாணிலேற்றியவன் தானும் அம்பால் கொல்லப்படலாமென தெய்வங்களுக்கு ஒப்புதல் அளிக்கிறான். அதை அளித்துவிட்டே அம்பை எடுக்கவேண்டும். இருந்தும் இதோ அஞ்சி அமர்ந்திருக்கிறேன். ஏன்?” என்றான்.

மெல்லிய சிறகொலியுடன் எழுந்தமைந்த உபப்பிராணன் சொன்னது “நீ அஞ்சவில்லை. உன்னிலிருப்பது உன் தந்தையின் அச்சம்.” மீண்டுமொருமுறை அது எழுந்தமைந்தது. “அவர் எப்போதும் தனக்காக அஞ்சியதில்லை. தந்தையர் மைந்தருக்காகவே அஞ்சுகிறார்கள்.” விண் வெளுத்து விழிமறையும் ஒளிபொழிய மின்னல் ஒன்று கடந்துசென்றது. விழிமீண்டுகொண்டிருக்கையில் செவி அதிர்ந்து தலைக்குள் எண்ணங்கள் ஒன்றுடன் ஒன்று முட்டிக்கொண்டு முழக்கமிடும்படி இடியோசை எழுந்தது. “பாசுபதம் இப்புடவியை ஏழுமுறை சுற்றிவந்துவிட்டது. அது உன்னை கண்டடையப் போகிறது” என்றது உபப்பிராணன். “அது என்னை

கண்டடையட்டும் என்றே விழைகிறேன்… இனி என்னால் இயலாது” என்றான் ஜயத்ரதன்.

“அங்கே நூறு சூரியன் சேர்ந்து எழுந்ததுபோல் அது பெருங்கடல்களை கொதிக்கச் செய்கிறது. மலைமுடிப்பாறைகள் வெடித்து உருள்கின்றன. நதிகள் நீர்புகைந்து சேற்றுத்தடங்களாகின்றன. சுனைகள் வறண்டு அனலூறத் தொடங்குகின்றன” என்றது உபப்பிராணன். “இதற்குமேல் என்னால் இயலாது… இச்சிறுமையே எனக்கு போதும்!” என்றான் ஜயத்ரதன். “எனில் எழுக… நீ செய்யவேண்டியதொன்றே. இந்த வானம் ஓர் இருண்ட திரை. அந்த உடைவாளை எடுத்து அதை கிழி. வெளியே கடந்துசென்று நெஞ்சுநிமிர்ந்து நில். அவனுடன் பொருது. தலையெனில் தலைகொடு. எழும் சொல்வெளியில் ஆண் என நின்றிருப்பாய்.” ஜயத்ரதன் அசையாமல் அமர்ந்திருந்தான். பின்னர் “என்னால் இயலாது. எந்தைக்கு நான் அளிக்கக்கூடியது இது ஒன்றே” என்றான். உபப்பிராணன் நகைத்து “என்றும் இது இவ்வாறே நிகழ்கிறது. மானுடர் ஊன் புழுத்து ஊனுண்டு ஊனில் மறைபவர். சிறகுகொண்டு எழுவோர் சிலரே” என்றது.

வெற்புகள் உடைந்து சரிவதை ஜயத்ரதன் கண்டான். “இது பன்னகம் என்னும் மாநாகம். முப்புரமெரித்தவனின் கழுத்தின் அணி” என்றது உபப்பிராணன். “இங்கே பாசுபதம் வந்தடைய இயலாது…” ஜயத்ரதன் மிக அப்பால் ஓர் அசைவை கண்டான். “யார் அது? என் ஆடிப்பாவையா?” என்றான். “ஆம், நீயேதான்” என்றபடி எழுந்து சுழன்று பறந்துமீண்டது உபப்பிராணன். “அது உன் தந்தை… உன்னைத் தேடி வந்துகொண்டிருக்கிறார்.” ஜயத்ரதன் “இங்கா? என்னைத் தேடியா?” என்றான். அதற்குள் “மைந்தா!” என்று கூவியபடி பிருஹத்காயர் அவனை நோக்கி

இரு கைகளையும் விரித்தபடி ஓடிவந்தார். “மைந்தா! எழுக! பொழுதணைந்துவிட்டது. நாம் வென்றோம்!” ஜயத்ரதன் அஞ்சி பின்னடைந்தான். “இல்லை, நீங்கள் பொய்யுரு… அவர்கள் அனுப்பிய மாயன்” என்றான்.

“மைந்தா, நான் உன் தந்தை. என் தவத்தால் உன்னை இங்கு அனுப்பியவன்” என்றபடி பிருஹத்காயர் மேலும் அருகே வந்தார். “இங்கே நான் உன்னை தொடமுடியும்… என் கைகளை தொட்டால் நீ அறிவாய் நான் உன் தந்தை என.” அவருடைய கைகள் அவன் தோளை தழுவின. அவன் உடல்நெகிழ “தந்தையே” என்றான். கால்தளர்ந்து அவர் கைகளிலேயே சரிந்தான். அவன் தோளை தன் தோள்களுடன் அணைத்து தலையை அள்ளி நெஞ்சுடன் சேர்த்துக்கொண்டார் பிருஹத்காயர். “மைந்தா! மைந்தா!” என விம்மி அழுதார். அவருடைய விழிநீர் அவன் குழல்முடிச்சின்மேல் சொட்டியது. அவர் வெறிகொண்டு அவனை முத்தமிடத் தொடங்கினார். அவன் கன்னங்களிலும் தோள்களிலும் கழுத்திலும் தலையிலும் அவர் முத்தங்கள் விழுந்துகொண்டே இருந்தன. “மைந்தா! மைந்தா! மைந்தா!” என அவருடைய வாய் புலம்பியது.

பின்னர் அவர் அவனை தோள்பற்றி நிறுத்தி “நீ வென்றுவிட்டாய்… செல்க!” என்றார். “இல்லை, தந்தையே… அங்கே இன்னமும் இடியோசை சூழ்ந்துள்ளது!” என்றான் ஜயத்ரதன். “அறிவிலி… அது மழையின் ஓசை… அந்தி எழுந்துவிட்டது. அர்ஜுனன் உயிர்விடுவதை நீ பார்க்கவேண்டாமா? எழுக!” என்று அவர் அவன் கைகளைப்பற்றி அழைத்துச் சென்றார். “செல்க!” என பின்னின்று உந்தினார். அஞ்சிய கால்களை அவன் மெல்ல எடுத்து அப்பால்

வைத்தான். அவன் நடக்க நடக்க இருளின் திரை விலகிக்கொண்டிருந்தது.

ஏகாக்ஷர் சொன்னார்: தேரைச் செலுத்தி படைகளைப் பிளந்தபடி வந்த யுதிஷ்டிரர் "சகதேவன் எங்கே? நகுலன் எங்கே?" என்று கூவிக்கொண்டிருந்தார். அவரை நோக்கி புரவியில் வந்த சாத்யகி "அரசே, அனைத்து முனைகளிலும் போர் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. இளைய பாண்டவர்கள் அனைவருமே போரிலிருக்கிறார்கள்" என்றான். "என்ன நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்று சொல்..." என்றார் யுதிஷ்டிரர். "அரசே, கௌரவ மூத்தவரையும் எஞ்சிய தம்பியரையும் பீமசேனர் எதிர்க்கிறார். சல்யரை சகதேவரும் கிருபரை நகுலரும் எதிர்கொள்கிறார்கள். துரோணருக்கும் திருஷ்டத்யும்னருக்கும் போர் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. கடோத்கஜன் அங்கே பால்ஹிகப்பேருருவரை எதிர்த்து நின்றிருக்கிறார்" என்றான் சாத்யகி. "பாஞ்சஜன்யத்தின் ஓசை கேட்கவில்லை. தேவதத்தமும் ஒலிக்கவில்லை. எங்கே என் இளையோன்? அவனுடன் இருப்பவர்கள் எவர்?" என்றார் யுதிஷ்டிரர்.

"அரசே, அவர் ஆற்றல்மிக்க அம்புகளால் கௌரவப் படையை பிளந்து மிகவும் உள்ளே சென்றுவிட்டார். ஜயத்ரதனை நெருங்கிக்கொண்டிருக்கிறார். போர் முடிவுக்கு வர இன்னும் சற்றுநேரமே உள்ளது... கால்நாழிகைப் பொழுதேனும் எஞ்சுமா என்று தெரியவில்லை" என்றான் சாத்யகி. "மந்தனிடம் சொல், அர்ஜுனனை பின்தொடர்ந்து செல்லும்படி. இளையவன் தனித்துவிடப்படலாகாது. ஜயத்ரதனை கொல்லவேண்டும் என்ற அவனுடைய வஞ்சினமே பொறியென்றாகி அவன்

அவர்களுக்குள் சென்று சிக்கிவிடக்கூடும்… செல்க!” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “என்னை தங்களுக்குக் காவலாக இங்கே அமர்த்தினார் திருஷ்டத்யும்னர்” என்றான் சாத்யகி. “எனக்கு ஒன்றும் ஆகாது. என் இளையோன் உயிர் எனக்கு என்னைவிட முதன்மையானது. செல்க… அவனுடன் மந்தன் இருக்கவேண்டும். அவன் மைந்தன் சுருதகீர்த்தி வலம்காக்கவேண்டும்… செல்க!” என்று யுதிஷ்டிரர் கூச்சலிட்டார். சாத்யகி தலைவணங்கி திரும்பிச்சென்றான்.

யுதிஷ்டிரர் படைகளினூடாக தேரில் சென்றார். பாண்டவப் படையினர் சோர்வடைந்திருப்பதை உணரமுடிந்தது. வானில் ஒளி அமையத் தொடங்கியது. யுதிஷ்டிரர் இரு கைகளையும் வானை நோக்கி விரித்தபடி தேர்த்தட்டில் திகைத்து நின்றார். வானம் நோக்க நோக்க ஒளியடங்கியது. கைவீசி அதை தடுத்து நிறுத்திவிடமுடியுமா? அல்லது வாளெடுத்து என் சங்கறுத்து விழுந்தால் அதை நிறுத்த இயலுமா? ஒருகணம் அவர் உள்ளம் அப்போரில், அனைத்து மானுடச் செயல்பாடுகளில் இருந்த பெரும்பொருளின்மையை உணர்ந்து மலைப்பு கொண்டது. ஒவ்வொன்றும் காலத்தில் உருகி நழுவி ஓடிக் கடந்து மறைந்துகொண்டிருக்கின்றன. மானுடர் போரிடுவதெல்லாம் அதனுடன் மட்டுமே. ஒவ்வொரு போரும் கேலிக்கூத்து. ஒவ்வொன்றும் அறிவின்மை.

அப்பாலிருந்து பாய்ந்துவந்த சுருதசேனன் “தந்தையே, அங்கநாட்டரசர் பெரிய தந்தை பீமசேனரை தடுத்து நிறுத்தியிருக்கிறார். அங்கே அவர்களிடையே கடும்போர் நிகழ்ந்துகொண்டிருக்கிறது” என்றான். “செல்க, அங்கன் மந்தனை கொன்றுவிடக்கூடும்… சுதசோமனும் சர்வதனும் அவன் இரு கைகளென நின்றிருக்கவேண்டும்!” என்றார் யுதிஷ்டிரர். “ஆனால்

பெரிய தந்தை இதுவரை இல்லாத விசை கொண்டிருக்கிறார். அங்கரை அறைந்து பின்னடையச் செய்கிறார்" என்றபின் சுருதசேனன் கடந்துசென்றான்.

அவர்கள் எவருமே வானை நோக்கவில்லை. காலம் எண்ண எண்ண நீள்வது என அவர்கள் கருதியதுபோல் தோன்றியது. கணங்கள் கணங்களாகவே அவர்கள் கணக்கிட்டனர். யுதிஷ்டிரர் தலையை தன் கைகளால் பற்றிக்கொண்டார். மூச்சை நிறுத்தினால் காலம் நின்றுவிடுமா? எண்ணத்தை நிறுத்தினால் நின்றுவிடுமா? ஆனால் எண்ணத்தை நிறுத்துவதெங்ஙனம்? அவர் சூழ்ந்திருந்தோர் எழுப்பிய ஓசையை கேட்டார். அது மெல்ல உருமாறிக்கொண்டிருந்தது. ஒலியடங்கிக்கொண்டே செல்வதாகத் தோன்ற விழிதிறந்து நோக்கினார். உண்மையில் ஒலி மிகுந்திருந்தது. அத்தனைபேரும் வானை நோக்கிக்கொண்டிருந்தார்கள்.

இருள் தெற்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் பரவி வந்து வானை முழுமையாக நிறைத்தது. இடியோசை மிக அப்பால் எழுந்தது. மின்னல்கொடி ஒன்று தெற்கே துடித்தணைந்தது. குளிர்ந்த காற்று குருக்ஷேத்ரத்தை மூடிக் கடந்துசென்றது. முகிலெழுந்து வானை மூடிவிட்டதா? ஆனால் முற்றாகவே கருமையாக மூடி நிறைந்திருந்தது வான்பரப்பு. மேலும் மேலும் இருண்டபடியே சென்றது சூழல். தேர்முகடுகளின் வளைவுகளும் படைக்கலங்களின் கூர்களும் ஒளித்துளிகள் சூடியிருந்தன. படைவீரர்கள் மெல்ல மெல்ல அசைவிழந்தனர். வாள்கள் தழைந்தன. வில்களில் நாண்கள் தொய்ந்தன. போரின் விசையில் உளம் தனிமைகொள்ள ஒவ்வொருவராக ஆகிவிட்டிருந்த படைவீரர்கள் தங்கள் அணிகளை நோக்கி சென்று இணைந்து மீண்டும் படையென்றாக குருக்ஷேத்ரத்தின்

நடுவே இரு படைகளுக்கு இடையே இடைவெளி உருவாகி அகன்று விரிந்தது.

படைகளிடையே குளிரெனப் பரவிய அமைதி இறுகி இறுகி மூச்சடைக்கச் செய்தது. அருகே பறந்த கொடியின் ஓசை தன் தலையில் வந்துவந்தறைவதுபோல் யுதிஷ்டிரர் உணர்ந்தார். “அதை நிறுத்துங்கள் எவரேனும்...” என ஓசையின்றி கூச்சலிட்டார். எரியும் விடாயா, நெஞ்சக்குழியின் எரிச்சலா, மூச்சுநின்றுவிட்ட இறுக்கமா என்றறியா தவிப்புடன் நின்றார். காலமில்லா ஊசிமுனையில் அத்தவிப்பும் அசைவிழந்திருந்தது. பின்னர் உச்சியில் முடிச்சொன்று அவிழ அனைத்தும் சரிந்து பேரோசையுடன் மண்ணை நோக்கி விழுந்தன. உண்மையில் அக்கணத்திற்கு மறுகணத்தில்தான் பொழுதணைவதை அறிவித்தபடி முரசுகள் முழங்கத் தொடங்கின. அவ்வோசையை யுதிஷ்டிரர் விழிகளால் கேட்டார். அவர் உடல் நடுக்கு கொண்டிருந்தது. பின்னர் இடப்பக்கமாக அவருடைய உடல் தூக்கி வீசப்பட்டதுபோல் தளர்ந்து சரிந்தது. தேர்த்தட்டை பற்றிக்கொள்ள முயன்றபோது அது வளைந்து அப்பால் சென்றது. அவர் உடல் ஓசையுடன் தேர்த்தட்டை அறைந்தது. உதடு தேர்த்தட்டில் பட்டு குருதிச்சுவைகொள்வதை உணர்ந்தார்.

கையூன்றி எழுந்தமர்ந்தபோது இருவர் அவரை தூக்கியிருப்பதை உணர்ந்தார். அதற்குள் எத்தனை பொழுது ஓடியது! பெருங்குரலில் படைகள் ஆர்ப்பரித்துக்கொண்டிருந்தன. “வெற்றி! வெற்றி! வெற்றி!” அவர் “இளையோனே! மைந்தா!” என்று கூவியபடி புரண்டு அப்பால் கிடந்த அம்பை எடுத்து தன் கழுத்துக்கு கொண்டுவருவதற்குள் அந்தக் கையைப் பற்றி தேர்த்தட்டுடன் அழுத்தியபடி நகுலன் சொன்னான் “மூத்தவரே,

பார்த்தர் வென்றுவிட்டார். வீழ்ந்தான் ஜயத்ரதன்!” யுதிஷ்டிரர் நீர்நிறைந்த பித்துவிழிகளுடன் அவனை நோக்கினார். தலை நடுங்கிக்கொண்டே இருக்க “என்ன? என்ன?” என்றார். “வீழ்ந்தான் ஜயத்ரதன்! ஜயத்ரதன் கொல்லப்பட்டான்! நம் இளையவர் வஞ்சினம் முடித்துள்ளார்!”

யுதிஷ்டிரர் “மெய்யாகவா? மெய்யாகவா?” என்றார். “ஆம், அரசே. அவன் தலை மண்ணில் உருண்டது. இளையவர் இந்திரன்போல் தேரில் அமர்ந்திருக்கிறார். நம் படைகள் வெறிகொண்டு வாழ்த்துக்கூச்சலிடுகின்றன!” யுதிஷ்டிரர் கையூன்றி ஒருக்களித்து தனக்கு சுற்றும் பார்த்தார். “ஆம்!” என்றார். பின்னர் நெஞ்சில் கைவைத்து “தெய்வங்களே! மூதாதையரே!” என விசும்பி அழுதார். அவர் தோள்களை சகதேவன் பற்றிக்கொண்டான். அவர் உடல்குறுக்கி தோள்கள் குலுங்க கால்கள் இழுபட்டு அதிர அழுதுகொண்டிருந்தார்.

அர்ஜுனன் தன்னை எதிர்த்து நின்றிருந்த துரியோதனனிடம் போரிட்டுக்கொண்டிருந்தான். அவன் கௌரவப் படைகளை எரித்தழித்தபடி செல்ல ஊடுருவித் தடுத்த துரியோதனனும் தம்பியரும் அவனை சூழ்ந்துகொண்டு அம்புகளை பெய்தனர். “விலகுக! விலகுக!” என்று அர்ஜுனன் கூவினான். “இது என் வஞ்சினம்… நான் என் சொற்களால் ஆளப்படுபவன்… அகல்க! அகல்க!” துரியோதனன் “இன்று என்னை கொல்லாமல் நீ என் மைத்துனனை தொடப்போவதில்லை, பாண்டவனே” என்றான். அர்ஜுனனின் அம்புகளை எதிர்த்து நிகர் அம்பு தொடுத்து களம்நின்றான். துச்சாதனனை சுருதகீர்த்தி எதிர்த்தான். துச்சகனையும்

துர்முகனையும் சுருதசேனன் எதிர்கொண்டான். விசைகொண்டு முன்னடைந்த அர்ஜுனனை அவர்கள் தடுத்துவிட்டிருந்தனர்.

“இன்னமும் சில வினாழிகைகள்… வினாழிகைகள் மட்டுமே” என்று இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனன் “என்னால் இனி இயலாது, யாதவரே. அவன் இங்கே எங்குமில்லை என்றே என் உள்ளம் சொல்கிறது. களத்திலிருந்தே அவனை அகற்றியிருக்கிறார்கள்” என்றான். துரியோதனனும் தம்பியரும் பின்னடைய அம்புகளால் அறைபட்டு விழுந்த கௌரவப் படைகளின் நடுவே உருவான பாதையில் பின்னால் சுருதகீர்த்தியும் சுருதசேனனும் அம்புகள் தொடுத்தபடி துணைவர தேர் விரைந்தோடியது. “காற்று இருள்கிறது… வானொளி அவிகிறது. முரசுகள் அந்தியை அறிவிக்க இன்னும் பொழுதில்லை” என அர்ஜுனன் வானை நோக்கியபடி கூவினான். “படையினர் பொழுதுணர்வை அடைந்து படைக்கலம் தாழ்த்துகின்றனர். ஒலியடங்கி குருக்ஷேத்ரம் அணைந்துகொண்டிருக்கிறது.” இளைய யாதவர் “பொழுதிருக்கிறது!” என்றார்.

அக்கணம் அந்திமுரசுகள் ஒலிக்கத் தொடங்கின. அவ்வோசை ஒவ்வொரு உலோகப்பரப்பிலிருந்தும் மீள ஒலித்தது. யானைப்பள்ளைகள், புரவிமயிர்ப்பரப்புகள் அதிர்ந்தன. கொடிகள் அவ்வோசையில் நுடங்கின. வாள்முனை ஒளிப்புள்ளிகள் அவ்வதிர்வில் நடுங்கின. கௌரவப் படையின் பேரோசை வெடித்துக்கிளம்பியது. நூறாயிரம் முரசுகள் வெற்றிமுழக்கமிட்டன. பல்லாயிரம் தொண்டைகள் “வெற்றி! சைந்தவருக்கு வெற்றி! ஜயத்ரதருக்கு வெற்றி! எழுக கரடிக்கொடி! எழுக அமுதகலக்கொடி! வெற்றி! வெற்றி!” என்று கூச்சலிட்டன. அஸ்வத்தாமன் “என்ன இது? வேண்டாம்!

ஆணை! படைகள் நிலைமீள்க... நிலைமீள்க படை!” என்று கூச்சலிட்டான். “அவர் சங்கறுத்து வீழ்வது வரை போர் முடியவில்லை. நிலைமீள்க!” அவன் ஆணையை முரசுகள் ஓங்கி ஒலித்தன. ஆனால் கௌரவப் படைகளின் பெருமுழக்குக்கு நடுவே அவ்வோசை முற்றாகவே மறைந்தது.

கௌரவப் படைகளுக்கு நடுவே நீண்ட பெருங்கழையில் கரடிக்கொடி எழுந்தது. அப்புள்ளி நோக்கி நான்கு திசைகளிலிருந்தும் செறிந்து பாய்ந்து அதை சுழியென்றாக்கியது கௌரவப் படை. சைந்தவ வீரர்கள் வெறிகொண்டு கூவி துள்ளி கூச்சலிட்டனர். ஒருவர் மேல் ஒருவர் ஏறி குதித்தனர். வேல்களையும் விற்களையும் வாள்களையும் வானில் எறிந்து பற்றி ஆர்ப்பரித்தனர். தலைப்பாகைகள் அலையலையாக எழுந்தமைந்த வெளியில் ஜயத்ரதன் பாம்பு படமெடுப்பதுபோல் எழுந்தான். அவனைக் கண்டதும் “சைந்தவர் வெல்க! வெல்க ஜயத்ரதர்!” என்று படைகள் கூச்சலிட்டன. எங்கோ “இனி பாஞ்சாலத்தரசி சைந்தவர்க்கே!” என ஒரு குரல் கூவியது. அத்தனை கொந்தளிப்பிலும் அதை சில செவிகள் கேட்டன. “கவர்க பாஞ்சாலியை! கொள்க திரௌபதியை! திரௌபதியே சைந்தவ அரசி!” என சைந்தவர்கள் கைகளைத் தூக்கி கூச்சலிட்டனர். சிரித்தபடி, சிரிப்பு புரைக்கேறி அழுதபடி நடனமிட்டனர்.

கைகளின் அலைகளுக்குமேல் ஜயத்ரதன் ததும்பி அங்குமிங்கும் சுழன்றான். கைகளை வீசி “வெற்றி! வெற்றி!” என அவன் ஆர்ப்பரித்தான் “சொல் காக்கட்டும் இளைய பாண்டவன்! சங்கறுத்து விழுந்து நெறி நிற்கட்டும் இளைய பாண்டவன்! இளைய பாண்டவன் வீழ்க! சொல் எழுக! வீழ்க விஜயன்!” என கௌரவப் படை கூவியது. பல்லாயிரம்பேர்

வாள்களை உருவி வீசி பாண்டவர்களை நோக்கி அச்சொற்களை கூற தீச்சொல் பெற்றவர்களைப்போல பாண்டவப் படை பின்னடைந்தது. களத்தில் அர்ஜுனனின் தேர் மைந்தர் தேர் உடன்நிற்க தனித்து நின்றது. இளைய யாதவர் கடிவாளங்களைப் பிடித்தபடி மாயாத மென்புன்னகையுடன் ஜயத்ரதனை நோக்கிக்கொண்டிருந்தார்.

அர்ஜுனன் “ஆம்!” என்றபடி தன் அம்புத்தூளியிலிருந்து பிறையம்பை எடுத்தான். எண்ணாமல் கைசென்று எடுத்த அந்த அம்பை நோக்கி அவன் வியந்தான். வெண்ணிற ஒளிக்கூர் கொண்டிருந்தது. தூய புன்முறுவல்போல். எச்சிறப்பும் அற்றது. பெயரிடப்படாதது. எவரோ ஓர் எளிய வீரனுக்கென கருதப்பட்டது. அவன் அவ்விந்தையுணர்வால் வெடித்துச் சிரித்துவிட்டான். கைசுழற்றி அவன் அம்பை தன் கழுத்தை நோக்கி கொண்டுசென்றபோது வானம் வெடித்து ஒளிக்கீற்று ஒன்று மண்ணிலிறங்கியது. அங்கிருந்த தேர்முகடுகளும் வாள்முனைகளும் கண்கூச ஒளிகொண்டன. அஞ்சிய கௌரவர்கள் கலைந்து ஒலியெழுப்பியபடி அங்கிருந்து விலகி ஓடினர். அந்த ஒளிக்கற்றை கணம் கணமெனப் பெருகி அகல அங்கே செங்குத்தென ஓர் ஒளிரும் ஏரி நின்றிருந்ததுபோல் தோன்றியது.

வானை மூடியிருந்தது கருமுகில் பரப்பெனத் தெரிய பாண்டவர்கள் “தொடங்குக போர்! அந்தியெழவில்லை! தொடங்குக போர்!” என்று கூவியபடி வாள்களையும் விற்களையும் தூக்கிக்கொண்டு ஓடிவந்தார்கள். கௌரவர்களால் அதை சொல்லென்றாக்க இயலவில்லை. அவர்களின் ஓசைகள் விலங்குகளின் ஒலி போலிருந்தன. முதலில் நிலைமீண்ட சகுனி “சூழ்ந்துகொள்க! சைந்தவரை அனைத்து வீரர்களும்

சூழ்ந்துகொள்க!” என்று ஆணையிட்டார். முரசொலி கேட்டதும் துரியோதனன் “படைகள் அணிதிரள்க…” என்று கூவியபடி ஜயத்ரதனை நோக்கி தேரை செலுத்தினான். கர்ணனும் துரோணரும் கிருபரும் சல்யரும் ஜயத்ரதனை நோக்கி திரும்பினர். “விரைக! சூழ்ந்துகொள்க!” என்று சகுனியின் அறைகூவல் ஒலித்துக்கொண்டே இருந்தது.

ஜயத்ரதன் திகைத்து செயலிழந்துவிட்டிருந்தான். அவனை தூக்கியவர்களும் எண்ணமழிந்து வானை நோக்கினர். வான்பிளவு அகன்று அகன்று இரு எல்லைகளாக மாறிச்செல்ல நடுவே எழுந்த நீலவானில் சாய்கதிரின் ஒளி நிறைந்திருந்தது. முகில்விளிம்புகள் கூர்கொண்டு சுடரிட்டன. அந்திப்பறவைகள் சில எழுந்து வானொளியில் சுழன்று களியாடின. “பார்த்தா, நிமிர்ந்து நோக்கும் அவன் தலையை வெட்டுக!” என்றார் இளைய யாதவர். அச்சொல் முடிவதற்குள் அர்ஜுனன் ஜயத்ரதனின் தலையை வெட்டினான். “அவன் தலை நிலம் தொடலாகாது. அது விண்ணிலேயே நின்றிருக்கட்டும்” என்றார் இளைய யாதவர். மேலும் மேலுமென அம்புச்சரடுகளை அறைந்து அந்தத் தலையை காற்றில் எழுப்பினான் அர்ஜுனன். அம்புகள் பறவைகளாகி கொத்திக்கொத்தி அதை கொண்டுசென்றன.

ஜயத்ரதனின் உடல் அவன் படைவீரர்களின் மேலேயே சரிந்து விழுந்தது. வெங்குருதி அவர்கள் மேல் குடம் கவிழ்ந்ததுபோல் பொழிந்தது. அஞ்சி அப்படியே அவ்வுடலை நிலத்திலிட்ட பின் அவர்கள் விலகி ஓடினர். “வீழ்ந்தார் சைந்தவர்! சைந்தவர் வீழ்ந்தார்” என முரசுகள் ஒலித்தன. துரியோதனன் கால்தளர்ந்து தேர்த்தட்டில் அமர்ந்தான். கர்ணனின் விஜயம் கைநழுவியது. கிருதவர்மன்தான் முதலில் சூழுணர்வு கொண்டான். “அந்தத்

தலையை அவர் மண்ணில் வீழ்த்தியாகவேண்டும்... இளைய பாண்டவரை சூழ்ந்துகொள்க... அவரை அம்புதொடுக்க முடியாதபடி செய்க... தாக்குக! தாக்குக!” என்று அவன் கூவினான். அவ்வாணையை முரசுகள் ஒலிக்கத் தொடங்கியதும் வில்லவர் எழுவரும் அர்ஜுனனை நோக்கி சென்றனர். ஆனால் சுருதகீர்த்தியும் சுருதசேனனும் தங்கள் அம்புகளுடன் அவர்களை எதிர்கொண்டார்கள்.

“அந்தத் தலை நிலம்படலாகாது. அதை வானிலேயே வடமேற்கே கொண்டுசெல்க! குருக்ஷேத்ரத்தில் ரக்தவாஹா என்னும் ஓடைக்கரையில் தவம் செய்யும் அவன் தந்தை பிருஹத்காயரின் மடியில் அது விழவேண்டும்... கொண்டுசெல்க!” என்று இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனனின் அம்புநிரை ஒன்று தொட்டு ஒன்றென எழுந்து அந்தத் தலையை கொண்டுசென்றது. நோக்கிலா விழிகளுடன் குருக்ஷேத்ரத்தை நோக்கியபடி ஜயத்ரதன் சென்றான். அவன் செல்வதை பாண்டவப் படையும் கௌரவப் படையும் திகைப்புடன் அண்ணாந்து நோக்கி நின்றன. குளிர்ந்த காற்று சுழன்றடிக்கத் தொடங்கியது. அதில் நீர்த்துளிகள் நிறைந்திருந்தன. சில கணங்களிலேயே அத்தனை கொடிகளிலிருந்தும் நீர் தெறித்தது. தேர்மகுடவிளிம்புகள் குருதியூறிச் சொட்டின. ஜயத்ரதனின் தலை வானில் சிறிதாகி குருக்ஷேத்ரக் காட்டுக்கு அப்பால் மறைந்தது.

பார்பாரிகன் சொன்னான்: குருக்ஷேத்ரப் பெருங்காட்டில் அமைந்த ரக்தவாஹாவின் கரையில் பிருஹத்காயர் தன் மாணவர்களுடன் தவத்திலிருந்தார். இரு கைகளையும் கொடையேற்பு என மடியில் மலரவைத்து விழிமூடி நாகவேத

நுண்சொற்களை நாவில் நிறைத்து உள்ளம் ஏழு ஆழங்களுக்கு அடியில் சென்றுவிட்டிருக்க அமர்ந்திருந்தார். அவர் முகத்தில் எழுந்த கனிவைக் கண்டு அங்கு என்ன நிகழ்ந்தது என அவருடைய முதன்மை மாணவன் விகிர்தன் வியந்தான். அவர் விழிகள் நிறைந்து கன்னங்களில் கண்ணீர் வழிந்தது. ஆனால் முகம் பேருவகையில் நெளிந்துகொண்டிருந்தது. உதடுகள் முத்தம் ஈபவைபோல சுருங்கி அதிர்ந்தன. அப்போது அவர் முலையூட்டும் அன்னையெனத் தோன்றுவதாக அவன் நினைத்தான்.

தலைக்குமேல் பறவைகள் கலைந்து ஓசையிட்டதைக் கேட்டு விகிர்தன் எழுந்து நோக்கினான். மேலிருந்து சுழன்று இறங்குவது ஒரு கரிய பறவை என அவன் எண்ணினான். மறுகணம் அது பிருஹத்காயரின் கைகளில் வந்து விழுந்தது. அவர் திடுக்கிடவில்லை. மிக மெல்ல விழிமலர்ந்து குனிந்து நோக்கினார். அவர் இருந்த அவ்வுலகிலிருந்து மீளவேயில்லை என்று தோன்றியது. காய்ச்சல்படிந்த சிவந்த விழிகளால் அவர் தன் கையிலிருந்த அந்தத் தலையை பார்த்தார். அதை தைத்திருந்த அம்புகள் அனைத்தும் சுழற்சிவிசையில் உதிர்ந்துவிட்டிருக்க காற்றால் நீவி ஒதுக்கப்பட்ட குழல்கற்றைகளுடன் அந்தத் தலை அணிகொண்டு வந்ததுபோல் இருந்தது. விழிகள் அப்போது துயிலெழுந்தவைபோல் விழித்திருந்தன. உதடுகள் முலைகுடிக்கும் மகவுபோல் கூம்பியிருந்தன. அவர் முகத்திலிருந்த அந்தப் பேருவகையும் கனிவும் ஜயத்ரதன் முகத்திலும் இருந்தது.

பிருஹத்காயர் மிக மெல்ல ஜயத்ரதனின் தலையை நிலத்தில் வைத்தார். “ஆம்!” என்றார். வலப்பக்கமாகச் சரிந்து மண்ணில்

விழுந்தார். அவர் உடல் சிலமுறை இழுத்துக்கொண்டது. பூசகர்கள் குனிந்து நோக்கி அவரை மெல்ல புரட்டினர். அவர் மூக்கிலிருந்தும் செவிகளிலிருந்தும் குருதி வழிந்துகொண்டிருந்தது. பூசகர் விகிர்தனிடம் “இறந்துவிட்டார், உத்தமரே!” என்றார். அவர் கால்களைத் தொட்டு வணங்கி “விழைந்தவற்றை அடைக, நிறைவுறுக!” என்றான் விகிர்தன்.

# கார்கடல் - 50

ஏகாக்ஷர் சொன்னார்: கடலை அணுகும்தோறும் அகலும் ஆறுபோல் குருக்ஷேத்ரப் பெருங்களத்தில் போர் விரிந்து கிளைபிரிந்து பரவிக்கொண்டிருக்கிறது. இன்று அது ஒரு போரல்ல, நூறு முனைகளில் நூறு நூறு விசைகளுடன் நிகழும் ஒரு கொந்தளிப்பு. அரசி கேள், இன்று ஜயத்ரதன் கொல்லப்பட்டான். அவனை கொல்லும்பொருட்டும் காக்கும்பொருட்டும் நிகழ்ந்தது இன்றைய பொழுதின் சூழ்கைகளும் மோதல்களும். ஆனால் பிறிதோரிடத்தில் பீமன் மதவேழத்தின்மேல் காட்டெரி பட்டது என வெறியும் விசையும் கொண்டிருந்தான். அங்கு நிகழ்ந்த போரை எவரும் காணவில்லை. சூதர் சொல்லில் அது மீண்டும் நிகழ வாய்ப்பில்லை.

அன்று காலை முதல் அவன் எரிச்சல் கொண்டிருந்தான். தன்மேல் கவசங்களை அணிவித்த வீரனிடம் வன்சொல் உரைத்தான். வாயில் புழுதிபட்டதுபோல் துப்பிக்கொண்டிருந்தான். மதுநிறைந்த குடுவையுடன் வந்த ஏவலனிடம் “எங்கு சென்றாய், அறிவிலி?” என்று கூச்சலிட்டான். அவன் மறுமொழி சொல்லாமல் நீட்ட வாங்கி ஒரே மூச்சில்

குடித்துவிட்டு வெறுங்கையால் அக்குடுவையை நெரித்து உடைத்து வீசினான். அருகே நின்றிருந்த சர்வதனும் சுதசோமனும் தந்தையின் சீற்றத்தின் பொருள் உணர்ந்திருந்தனர். முந்தைய இரவே “அறிவிலி! எவரை நோக்கி வஞ்சினம் உரைக்கிறான்? வஞ்சினங்கள் தன் எதிரிக்கு உரைக்கவேண்டியவை. தன்னை நோக்கி அறைகூவிக்கொள்ள வேண்டியவை. படைத்த தெய்வங்களிடம் வஞ்சினம் உரைப்பவன் மலைமேல் தலையை முட்டிக்கொள்கிறான்” என்றான்.

சகதேவன் “அவர் வெல்வார்” என்றான். “பேசாதே, உன்னைப் போன்றவர்களின் சொற்கள் அவனை மண்ணிறங்கிய இந்திரன் என தன்னைப்பற்றி எண்ணச் செய்கின்றன. அவன் எளிய மானுடன். தென்கடல்களை பிளக்கவோ வடமலையை கவிழ்க்கவோ ஆற்றல்கொண்டவன் அல்ல…” என்றான் பீமன். மேலும் சீற்றத்துடன் தரையை காலால் அறைந்து மிதித்து “அவனை கொல்வேன் என்றதுகூட வஞ்சினச் சொல்லே. கொல்லாவிடில் உயிர்துறப்பேன் என்று சொல்ல இவன் யார்? இவன் உயிர் இவனுக்குரியதென்றால் ஏன் போருக்கெழுகிறான்? இங்கு ஒவ்வொருவர் உயிரும் பிறருக்குரியது. நம் மூத்தவருக்கு, நமது குடிக்கு, நம்மை ஆளும் இளைய யாதவருக்கு உரிமைப்பட்டவர்கள் நாம்” என்றான்.

“களம்நின்று கழுத்தறுந்து விழுக! அது அறம். போர்க்களத்தில் தானே தன் சங்கை அறுத்துவிழுந்தான் என்றால் இவனுக்குக் காத்திருப்பது எந்த நீரும் அன்னமும் சென்றடையாத ஆழிருள்…” என்று கைகளைத் தூக்கி கூவினான். “அறிவிலாக் கீழ்மகன்… அவன் வஞ்சினத்தைக் கேட்டு எழுந்து வந்த நம் மூத்தவரிடம் சொல்லவேண்டும் சில சொற்கள்.” சகதேவன்

மறுமொழி சொல்லாமல் திரும்பிச்சென்றபின் இரவெல்லாம் நிலையழிந்தவனாக தன் குடில்முற்றத்தில் சுற்றிநடந்தான். அவ்வப்போது வெறிகொண்டு தரையை அல்லது அங்கு நின்ற மரத்தை ஓங்கி மிதித்தான். கைகளை ஓங்கி அறைந்துகொண்டான். அமர்ந்ததுமே உள்ளத்தின் விசையால் மீண்டும் எழுந்தான்.

சுதசோமன் வந்து வணங்கி “தந்தையே, நம் யானைகளில் ஒன்று அமைதியிழந்துள்ளது” என்றபோது என்ன இது இடம்பொருள் அறியாமல் என வியந்த சர்வதன் கைநீட்டி அவனை தடுக்க முயன்றான். ஆனால் “எந்த யானை?” என வினவியதுமே பீமன் அடங்கினான். சுதசோமனுடன் சென்று அந்த யானையை அமைதிப்படுத்தி உணவளித்துத் திரும்பியபோது மீண்டும் இயல்பான அமைதியை அடைந்துவிட்டிருந்தான். வெறும் மண்ணில் உடல்நீட்டிப் படுத்து விண்மீன்களை நோக்கிக்கொண்டிருந்தான். சற்றுநேரத்திலேயே துயில்கொண்டான். சுதசோமன் சர்வதனை நோக்கி புன்னகை செய்தான். பின்னர் “நீயும் துயில்கொள்க, இளையோனே!” என்றான். பீமன் துயிலில் முகில்கள் திரண்டு யானைவடிவு கொள்வதை கண்டான். பின்னர் மிகமிக அருகே பேருடல்கொண்ட பெண்குரங்கு ஒன்று அமர்ந்திருப்பதை அவன் உணர்ந்தான்.

போர்க்களத்தில் பீமன் மீண்டும் அமைதியிழந்தவனாகவே இருந்தான். இருமுறை திரும்பி சுதசோமனிடம் “வில்லை நேராக நிறுத்துக, அறிவிலி!” என கசந்தான். “இந்த ஆவநாழியை எடுத்து வைத்தவன் எவன்? இன்று அவன் தலையை அறைந்து உடைப்பேன்” என ஆவக்காவலனிடம் சீறினான். போர்முரசு ஒலித்ததும் கூர்மவியூகம் ஒருங்கி கவசப்படைக்கு உள்ளிருந்து

பீமன் முன்னெழுந்தபோது அங்காரகன்மேல் பெருங்கதையுடன் வந்த பால்ஹிகர் அவனை எதிர்கொண்டார். பறக்கும் யானை என சுழன்ற அவருடைய கதை மானுடரால் எதிர்க்கமுடியாத எடையும் விசையும் கொண்டிருந்தது. பீமன் அதை தடுக்கவோ எதிர்க்கவோ முயலவில்லை. பால்ஹிகப் பிதாமகர் கதை சுழற்றலின் எந்த நுட்பத்தையும் உளங்கொண்டவர் அல்ல என அவன் அறிந்திருந்தான்.

பால்ஹிகர் மனிதர்களால் சென்றடைய முடியாத பிறிதொரு உயரத்தில் இருந்தபடி தன் கதையின் சங்கிலியைப் பற்றி மீளமீள ஒரே வகையாக சுழற்றிக்கொண்டிருந்தார். அதில் அறைபட்டு தேர்கள் உடைந்து தெறித்தன. யானைகள் நீர்க்குமிழிகள்போல் உடைந்தன. பீமன் அதிலிருந்து ஒழிந்து நெளிந்து தப்பி அவருடைய கைகள் சோர்ந்து விசையழியச் செய்ய முயன்றான். ஒரு நாழிகைப் பொழுதுக்கு மேல் அப்போர் அங்கு நிகழ்ந்தது. அவர் சற்றும் சோர்வுறவில்லை என்பதை அவன் உணர்ந்தான். விசை தளர்வது ஓர் அறிகுறி எனில் விசை சற்று மிகுவது பிறிதொரு அறிகுறி. தளரும் விசையை உள்ளத்தால் உந்தி மேலெடுக்கிறார் என்பதற்கான சான்று அது. குன்றாது கூடாதிருக்கும் விசை அவர் எவ்வகையிலும் கையோ உள்ளமோ தளரவில்லை என்பதையே காட்டியது.

சலிப்புடன் அவன் தன்னிரு மைந்தருக்கும் கைகாட்டிவிட்டு பின்னடைந்து படைகளுக்குள் புகுந்துகொள்ள இருபுறத்திலிருந்தும் கவசப்படை எழுந்து வந்து அவனை மூடிக்கொண்டது. ஆனால் தன் யானையை ஊக்கி முன் வந்து அக்கவசப்படையை பெருங்கதையால் அறைந்துடைத்து சிதறடித்தார் பால்ஹிகர். “கவசப்படையை மடித்து மூன்றடுக்கு

கொள்க! பால்ஹிகரின் கதையை எதிர்கொள்க!” என்று முரசொலி ஆணையிட்டது. பால்ஹிகரின் கதை இரும்பு மத்தகமென அறைய கவசங்களை ஏந்திய தேர்கள் அதிர்ந்து அதிர்ந்து பின்னுருண்டன. கவசப்பரப்புகள் பிளந்து சரிய அறைபட்டு தேர்கள் உடைந்து சிதறின. அந்த இடைவெளியை மடிந்துவந்த கவசப்படையின் ஒரு பகுதி உடனே மூடிக்கொண்டது. அவற்றை ஏந்திவந்த யானைகள் ஒன்றை ஒன்று உந்தி மும்மடங்கு விசைதிரட்டிக்கொண்டு கேடயங்களை இறுக்கி நிலைகொண்டன.

அர்ஜுனன் ஏழு பெருவில்லவர்களாலும் சூழப்பட்டிருக்கிறான் என்ற செய்தியை பீமன் முரசுகளினூடாக அறிந்தான். மைந்தர்களிடம் தன்னை தொடரச் சொல்லிவிட்டு அத்திசை நோக்கி செல்ல அவன் தன் தேரைத் திருப்பிய கணத்தில் அவனுக்குக் காப்பென அமைந்திருந்த கவசக்கோட்டையும் கேடயங்களும் உலோகப் பேரொலியுடன் தெறித்து அப்பால் விழ, அவற்றை ஏந்தி நின்றிருந்த வேழங்கள் கதையால் அறைபட்டு பேரோசையுடன் நிலத்தில் விழுந்து துதிக்கையும் வாலும் சுழல துடித்து அமைய அவற்றினூடாக கரிய நீர்ச்சுழியொன்று அணை உடைத்து எழுந்து வருவதுபோல் அங்காரகன் எழுந்து வருவதை அவன் கண்டான். அதன் மேல் கருமுகிலில் ஊர்பவர்போல் அமர்ந்திருந்த பால்ஹிகர் உரக்க நகைத்தபடி தன் கதையை சுழற்றினார்.

அவர் வஞ்சினம் உரைப்பதில்லை. கீழே பொருதிக்கொண்டிருக்கும் எவரையும் தனித்து அடையாளம் காண்பதும் இல்லை. மன்னர்களுக்கும் இளவரசர்களுக்கும் எளிய படைவீரர்களுக்கும் வேறுபாட்டை அறிவதுமில்லை. அந்த உணர்வின்மையே அவரை அச்சமூட்டுபவராக,

வெல்லற்கரியவராக காட்டியது. மீண்டும் அவரை எதிர்கொண்ட பீமன் இருபுறத்திலிருந்தும் சர்வதனும் சுதசோமனும் அவரை தாக்கும்படி செய்தான். அவர் அவர்களில் ஒருவனை நோக்கி கதை சுழற்றியபடி செல்கையில் பீமன் தேரிலிருந்து பாய்ந்து எழுந்து அங்காரகனின் உடலில் அமைந்த கவசத்தை அறைந்தான். அங்காரகனின் இரும்புக்கவசம் இரு விரல்மடிப்பளவிற்கு தடிமன் கொண்டிருந்தது. அதில் அறைந்த அவனுடைய கதை மெல்லிய பள்ளமொன்றையே உருவாக்கியது. அச்சுழிப்பில் போர்க்களத்தில் நிகழ்ந்துகொண்டிருந்த அசைவுகள் வளைந்து வண்ண நெளிவென்றாயின.

மூன்றுமுறை பீமன் அங்காரகனின் கழுத்தருகே கவசத்தை அறைந்தான். சினம்கொண்ட யானை திரும்பி தன் நீள்பெரும் கோட்டால் அவனை குத்தும்பொருட்டு வந்தது. தன் கதையை அதன் இரு கொம்புகளுக்கு நடுவே ஊன்றி துள்ளி பின்னால் விலகி பீமன் தப்பினான். அருகில் விழுந்து கிடந்த பிறிதொரு சிறுயானையை கால் பற்றி சுழற்றித் தூக்கி அவனை நோக்கி விசிறியது அங்காரகன். பீமன் தன் கதையை சுழற்றிய விசையிலேயே தரையில் ஊன்றி உடல்சுழற்றி துள்ளி அப்பால் விலக யானையின் உடல் வந்து அவனருகே விழுந்து தோற்பை என வயிறு பெருகியதிர எஞ்சிய உயிர் அலறலாக வெளிப்பட துடித்தது. பீமன் திரும்பி பாய்ந்து அதன் மேல் மிதித்து கதையால் மீண்டும் அங்காரகனின் துதிக்கையை அறைந்தான். முதலைவால் என அடுக்கடுக்காக அமைந்த அதன் துதிக்கைக் கவசங்களின் மேல் அவனுடைய அடி பதிந்து வழுக்கியது.

“தந்தையே, இப்போர் இங்கு எவ்வகையிலும் முடியாது” என்று சர்வதன் கூவினான். “நம்மை இங்கு தளைத்திடவே இவர்கள் எண்ணியிருக்கிறார்கள். இன்று நாம் அவர்களின் படைசூழ்கையை உடைத்தாகவேண்டும்.” சுதசோமன் “தந்தையே, இங்கே நாங்கள் நின்றிருக்கிறோம். தாங்கள் அங்கு செல்க! இன்று அந்தி வரை பிதாமகரை போக்குகாட்டி இங்கு நிறுத்தி வைக்க நாங்கள் முயல்கிறோம்” என்று சொன்னான். பீமன் “முதியவர் பேரழிவை உருவாக்கிவிடுவார்!” என்றான். “ஆம், எவரும் அவரை தடுக்க இயலாது. ஆனால் இன்று மாலைக்குள் கௌரவப் படைசூழ்கையை நாம் உடைத்தாக வேண்டும். அதுவரை இவருக்கு உயிர்ப்பலி கொடுத்துக்கொண்டே இருப்போம். வேறு வழியில்லை. செல்க!” என்று சுதசோமன் கூவினான். பீமன் தயங்க “செல்க, தந்தையே… இளைய தந்தையை துணைசெய்க!” என்றான் சர்வதன்.

யானைகளை வீழ்த்தி அவர்கள் முன் எழுந்த பால்ஹிகரை அவர்கள் இருவரும் ஒரே தருணத்தில் கதை கொண்டு எதிர்த்தனர். அவருடைய பெருங்கதை இருவரையும் ஒரேதருணத்தில் மாறிமாறிச் சுழன்று தாக்கியது. பீமன் புரவிகளின் மேல் தாவி பின்நிரையில் இருந்த தன் தேரை சென்றடைந்து “செல்க! அர்ஜுனனுக்கு பின்துணையாகச் செல்க!” என ஆணையிட்டான். தேர் பாண்டவப் படைகளினூடாகச் சென்றது. பாண்டவ வீரர்கள் ஒழுகும் கலத்தின் நீர்ச்சுழிப்புகள்போல உள்ளே சுழன்று கவசக்கோட்டை திறந்த வாயில்களினூடாக எழுந்த பாண்டவ வில்லவருக்குப் பின்னால் நீண்டு ஒழுகி வெளியே சென்றனர். மீன்வலை இழுபட்டு குவிந்து படகுக்கு மீள்வதுபோல மீண்டும் கவசக்கோட்டைக்குள் வந்து அணிகொண்டனர். முரசுகளின்

ஆணைக்கேற்ப புண்பட்டவர்கள் பிரிந்து பின்னடைய புதிய வீரர்கள் அந்த இடங்களை நிரப்ப முழுமைகொண்டு மீண்டும் படை முன்னெழுந்தது.

கவசப்படை திறந்து பிறிதொரு இடத்தில் எழுந்த பீமனை துரியோதனன் தன் தம்பியருடன் எதிர்கொண்டான். அவர்கள் கதையால் முட்டிக்கொண்ட இடியோசையை படைவீரர் அனைவரும் அதிர்வென உணர்ந்து உடல் மெய்ப்பு கொள்ள திரும்பி நோக்கினர். பீமன் "கீழ்மகனே, என் குலக்கொழுந்தின் குருதிக்காக இன்று பழி தீர்ப்போம். பசுங்குருதி அருந்தாமல் இன்று படைமுகத்திலிருந்து நீங்குவதில்லை!" என்று வஞ்சினம் உரைக்க துரியோதனன் உரக்க நகைத்து "இன்று உன் இளையோனின் பசுங்குருதியை அள்ளி அருந்தி விடாய் தீர்க்கப்போகிறாய். காட்டு விலங்கு நீ. குருதியில் உனக்கென்ன வேறுபாடு?" என்றான். ஒருவரையொருவர் சொற்களால் எரிய வைத்துக்கொண்டு அவர்கள் அங்கே போரிட்டனர். ஒருவரை ஒருவர் அறைந்து கவசங்களை தெறிக்க செய்தனர். நிலத்தில் விழுந்து புரண்டெழுந்தனர். கதையை தரையிலூன்றி அவ்விசையில் விண்ணிலெழுந்து இறங்கும் விசையில் கதையை சுழற்றி ஒருவரை ஒருவர் அறைந்தனர்.

அரசி, கதைப்போர் ஏழு வகையானதென்று அறிக! ஏழு வகை கதைப்போரும் ஏழு உயிர்களிலிருந்து மானுடர் கற்றுக்கொண்டவை. கொடுக்கு தூக்கி ஒன்றையொன்று தாக்கும் தேள்களின் முறையை முதன்மையானது என்கிறார்கள். அதை விருச்சைகம் என்கின்றன நூல்கள். நாகங்களென படம் தூக்கி எழுந்து அறைந்துகொள்வது சர்ப்பிகம். குதிரைகள்போல் விசைகொண்டு சுழன்று சுழன்று அறைந்துகொள்வது அஸ்வம். யானைகள்போல் மத்தகம்

முட்டி துதிக்கை பின்னி போரிடுவது மாதங்கம். எருதுகள்போல் விசைகொண்டு முட்டி கொம்பு கோத்து திருப்பி போரிடுவது ரிஷபம். கலைமான்கள்போல் தொலைவிலிருந்து துள்ளிப் பாய்ந்து வந்து காற்றில் முட்டிக்கொள்வது ஹரிணம். நாரைகள்போல் எழுந்து வானிலேயே அறைந்துகொள்ளும் போர் உண்டு. அதற்கு கிரௌஞ்சம் என்று பெயர்.

அங்கு ஏழு வகை கதைப்போரும் நிகழ்ந்தது. ஒவ்வொரு போருக்குப் பின்னும் இருவரும் வென்றவர்களாக, இருவருமே தோற்றவர்களாக எழுந்தனர். துரியோதனனுடன் அவன் இளையோர் துச்சகனும் துச்சலனும் சமனும் சகனும் விந்தனும் அனுவிந்தனும் துர்தர்ஷனும் சுபாகுவும் இணைநின்று போரிட்டார்கள். அப்பால் துச்சாதனன் கடோத்கஜனுடன் கதைப்போர் புரிந்தான். அவனுக்குத் துணையாக விகர்ணனும் துர்மர்ஷணனும் துர்முகனும் உபசித்ரனும் கிருதனனும் போரிட்டார்கள். பீமனுக்குத் துணையாக அவனால் பயிற்றுவிக்கப்பட்ட இந்திரப்பிரஸ்தத்தின் பதினெட்டு பெருமல்லர்கள் கதைசுழற்றி நின்றனர். கதைகள் வண்டுகள்போல் காற்றில் மூளலோசை எழுப்பிச் சுழன்று சுழன்று பறந்தன. அறைந்து அறைந்து தெறித்தன. மலையிடிந்து விழுந்த பெரும்பாறைகள் ஒன்றோடொன்று முட்டிச்சரிவதுபோல எழுந்தது அவ்வோசை.

துரியோதனனை ஓரணுவும் பின்னடி வைக்கச்செய்ய இயலாதென்று உணர்ந்து சீற்றம் கொண்ட பீமன் எதிர்பாரா தருணத்தில் பக்கவாட்டில் பாய்ந்து அங்கே பிற கதைவீரருடன் போரிட்டுக்கொண்டிருந்த துரியோதனனின் இளையோர் துர்கர்ணனையும் கர்ணனையும் கதையால் அறைந்து தலையை உடைத்துக் கொன்றான். சிதறித்தெறித்த அவர்களின்

குருதியைக் கண்டு திகைத்து கை ஓய்ந்து நின்ற துரியோதனன் மறுகணம் உடல்துடிக்க “இழிவிலங்கே!” என்று கூவியபடி தன் கதையை வீசிக்கொண்டு பீமனை நோக்கி பாய்ந்து வந்தான். அவன் அறைந்த அடிகள் மண்ணில் பதிந்து குழியாயின. தேர்களில் விழுந்து சிதறடித்தன. வெட்டுக்கிளியென களமெங்கும் துள்ளி அகன்ற பீமன் பின்வாங்குவதுபோல் நடித்து மீண்டுமொரு எதிர்பாரா தருணத்தில் பாய்ந்து இளைய கௌரவர்களான உபசித்ரனையும் கிருதனனையும் கொன்றான்.

துரியோதனன் தொண்டை புடைக்க விழிநீர் கோக்க “மைந்தா! கிருதனா! உபசித்ரா!” என தம்பியரின் பெயர் சொல்லி கதறினான். பீமன் தன் கதையால் கிருதனனின் நெஞ்சை ஓங்கி அறைந்து திறந்து வெறுங்கையால் அவன் நெஞ்சக்குலையை பிழுது எடுத்து சுழற்றி துரியோதனனின் முகத்தில் எறிந்தான். தலைசுழன்று துரியோதனன் நிலத்தில் அமர அவனை கொல்லும்பொருட்டு பீமன் பாய்ந்து அருகணைந்தான். அவன் கதை சுழன்று துரியோதனன் தலையை தாக்கவிருக்கும் கணத்தில் துச்சாதனனின் கதை வந்து அவனை தடுத்தது. துச்சாதனனும் துர்முகனும் துச்சலனும் இணைந்து பீமனை தாக்க படைவீரர்கள் அணைந்து மயங்கிச் சரிந்த துரியோதனனை இழுத்து அப்பால் கொண்டுசென்றனர். துச்சாதனன் அடித்தொண்டையில் விலங்குபோல் ஊளையிட்டபடி பீமனை தாக்கினான். கௌரவர்கள் அனைவரும் கண்களில் நீர்வழிய கூச்சலிட்டபடி அவனை சூழ்ந்துகொண்டார்கள்.

பீமன் அவர்களின் துயரத்தின் விசையை தன் கதையில் உணர்ந்தான். துர்மதனை அவன் கதை அறைந்து தெறிக்கச் செய்தபோது வாயாலும் மூக்காலும் குருதியை மூச்சென

ஊதித் தெறிக்கச் செய்தபடி அவன் மேலும் வெறிகொண்டு எழுந்து வந்தான். “கொல்லுங்கள் அவனை! மூத்தவரே, இன்று அவனை கொல்லுங்கள்!” என்று துர்மதன் கூச்சலிட்டான். பீமன் தன் குழல்கற்றைகளில் இருந்து உதிர்ந்து வழிந்து வாயை அடைந்த குருதியை அவன் முகத்தில் துப்பி “இதோ உனக்கு உடன்பிறந்தானின் கொழுங்குருதி” என்றான். அச்சொல்லால் நிலையழிந்த துர்மதன் அடிபிறழ்ந்து முன் பாய்ந்து ஓங்கி பீமனை அறைய கதை தூக்கினான். அப்பிழையால் அவன் தன் விலாவை பீமனுக்குக் காட்ட பீமனின் கதை வந்து அங்கே அறைந்து அவன் நெஞ்சை உடைத்து வாயினூடாக குருதி பீறிடச் செய்தது. ஓசையேதுமின்றி பேருடல் சரிந்து நிலத்தில் விழுந்து துர்மதன் இறந்தான்.

அவன் இறுதித்துடிப்பைக் கண்டு திகைத்து நின்றிருந்த துச்சாதனனை நோக்கி “இன்று இன்னும் குருதிபலி உள்ளது, கீழ்மகனே!” என்றபின் பீமன் இரு தாவல்களாகச் சென்று தன் படைகளுக்குள் புகுந்து கொண்டான். கௌரவ இளையோர் ஐவர் இறந்ததை அறிவிக்கும்பொருட்டு முரசு முழங்கத்தொடங்கியது. அச்செய்தி கௌரவப் படைவீரர்களிடம் சினத்தையே கிளப்பியது. அவர்கள் வெறிக்கூச்சல்களுடன் பாண்டவர்களை தாக்கினார்கள். பீமன் தேரிலிருந்து இறங்கி குருதியால் நனைந்து ஒட்டியிருந்த தன் தோல்கையுறைகளை கழற்றினான். இரு ஏவலர் அவன் கைகளை மரவுரியால் துடைத்து வேறு கையுறைகளை அணிவித்தனர். அத்தருணத்தில் மறு எல்லையிலிருந்து திரும்பி வளைந்து வந்த அர்ஜுனன் தன் படையினருடன் கவசக்கோட்டையைத் திறந்து அப்பால் சென்றான்.

பீமன் கையுறைகளை இழுத்துவிட்டுக்கொண்டு கதையை எடுத்தபடி ஓடிச்சென்று தேரிலேறிக்கொண்டு அர்ஜுனனைத் தொடர்ந்து சென்றான். “அவர்கள் உளம்தளர்ந்துள்ளனர், இளையோனே… இவ்வழியே நாம் உடைத்துச் செல்வோம். உச்சிப்பொழுது ஆகிவிட்டிருக்கிறது” என்று அவன் கூவ அர்ஜுனன் அச்சொற்களை கேட்டதாகத் தெரியவில்லை. கௌரவப் படையினர் அங்கே கவசக்கோட்டை திறப்பதை எதிர்பார்த்திருக்கவில்லை. ஆனால் அவர்கள் படைகொண்டு எழுந்தது அவர்களின் சினத்திற்கு இலக்காக மாறியது. மூன்று திசைகளிலும் இருந்து கௌரவ இளையோர் படைகளுடன் வந்து சூழ்ந்துகொண்டார்கள். வலப்பக்கம் துச்சாதனனும் விகர்ணனும் இடப்பக்கம் துச்சலனும் துச்சகனும் தலைமை தாங்கிய படைகள் வந்தன. நேர் எதிரில் துரியோதனன் தன் வில்லை தேர்த்தட்டில் வெறியுடன் ஓங்கி ஓங்கி அறைந்துகொண்டும் நெஞ்சில் அறைந்து கூவியபடியும் வந்தான்.

அர்ஜுனனுக்கும் துரியோதனனுக்கும் விற்போர் மூண்டது. துரியோதனன் அர்ஜுனனை வில்லில் எதிர்த்து நின்றிருக்க முடியும் என்பதை பீமன் வியப்புடன் கண்டான். அர்ஜுனனின் கவசங்கள் உடைந்தன. இளைய யாதவரின் நெஞ்சக்கவசமும் உடைந்தது. இரண்டு அம்புகள் அர்ஜுனனின் இடைக்கவசங்களின் இடுக்கில் பாய்ந்திறங்கின. துரியோதனனின் வெறியும் விசையும் ஏறிக்கொண்டே இருந்தன. பீமன் துச்சலனையும் துச்சாதனனையும் மாறி மாறி எதிர்த்தான். அவர்கள் அவனை அறைந்து பின்னடையச் செய்தனர். துச்சாதனனின் கதைவீச்சு இடையில் பட்டுத்தெறிக்க முச்சுக்குமிழ் உடைய அலறியபடி பீமன் மல்லாந்து விழுந்தான். அவனை நோக்கி கதையுடன் பாய்ந்து வந்த

துச்சலனை தன் கதையை வீசி எறிந்து கொன்றபின் குரங்குபோல் துள்ளி எழுந்து தேர்மகுடமொன்றைக் கடந்து அப்பால் சென்றான். துச்சாதனன் தன் கதையை அவனை நோக்கி எறிந்தான். பீமன் அதை ஒழிந்து பிறிதொரு கதையை எடுத்துக்கொண்டு தாவி வந்து சமனையும் சகனையும் கொன்றான்.

துச்சாதனன் கை ஓய்ந்து "இளையோனே!" என்று சகனை நோக்கி கூவினான். அவனைக் கொல்ல கதையுடன் பீமன் பாய்ந்தபோது விகர்ணன் தன் கதையுடன் வந்து தடுத்தான். எடைமிக்க கதையால் விகர்ணனை அறைந்து பின்னடையச் செய்தபடி "இளையோனே, செல்க! உன்னைக் கொல்ல நான் விரும்பவில்லை. உன் சொல்லுக்காக பாண்டவர் கடன்பட்டிருக்கிறோம்" என்றான் பீமன். வெறியுடன் எழுந்து அறைந்து காலூன்றித் திரும்பி மீண்டும் தாக்கியபடி மூச்சிரைக்க விகர்ணன் கூவினான் "நான் உயிர்கொடுக்க வந்தேன்... என் தமையனுக்காக உயிர்கொடுத்தே பிறவிக்கு பொருள்கொள்வேன்." பீமன் அவன் கதையை அறைந்து தெறிக்கச் செய்தான். எழுந்து அவன் நெஞ்சில் மிதித்து அவனை மல்லாந்து விழச்செய்து "செல்க! என் கதை என்னைவிட வஞ்சம் கொண்டது. செல்க, என் கையால் உன்னை கொல்ல விழையவில்லை!" என்றான்.

அர்ஜுனன் "மூத்தவரே, அவன் குடியின் பழி அவனுக்கும் உரியதே. கொல்க அவனை! கொல்க! கொல்க அவனை!" என்று கூவியபடி துரியோதனனை அம்புகளால் அடித்து முன்சென்றான். அவனை எதிர்கொண்டபடி துரியோதனன் "இளையோனே, எழுந்து அகல்க! உயிர் காத்துக்கொள்க, இளையோனே!" என விகர்ணனை நோக்கி கூவினான். பீமன்

“உன் குலத்தின் பழியை நீ சுமக்கவேண்டியதில்லை, இளையோனே. எழுந்து விலகுக!” என்றபின் தன்னை நோக்கி பாய்ந்து வந்த துச்சாதனனை கதையால் அறைந்தான். அவன் கதையை ஒழிய நிலமளாவ தழைந்து சுழன்று துச்சாதனன் எழுவதற்குள் சிறகடித்தெழும் நாரை என காற்றில் எழுந்து துச்சாதனனை துணைசெய்ய வந்த விந்தனையும் அனுவிந்தனையும் அறைந்துகொன்றான்.

உருண்டு எழுந்து அருகே கிடந்த கதையொன்றை எடுத்துக்கொண்டு பீமனை அடித்தான் விகர்ணன். விந்தனின் தலையுடைந்த குருதி அவன் முகத்தில் பீறிட்டு நோக்கை மறைத்தது. அவன் தள்ளாடி நிற்க அவன் தோளில் அறைந்து அப்பால் தெறிக்கச் செய்து “செல்க! விலகிச் செல்க! அறம் உன்னை காத்தது என்றமையட்டும். அறமின்மை எங்கள் மேல் அமையாதொழியட்டும்!” என்று பீமன் அடிக்குரலில் கூவினான். ஆனால் ஒரு கை உடைந்து நனைந்த துணி என துவள மறுகையால் கதையை எடுத்தபடி விகர்ணன் பீமனை நோக்கி பாய்ந்தான். பீமன் திரும்பி நோக்காமலேயே கதையைச் சுழற்றி அவன் தலையை அறைந்து உடைத்தான். விகர்ணனின் வெங்குருதி அவன்மேல் சாரலெனப் பொழிந்து வலத்தோளிலும் புறங்கழுத்திலும் வழிந்தது.

“மைந்தா! மைந்தா, விகர்ணா!” என துரியோதனன் கூவினான். “கீழ்பிறப்பே!” என்று கூவியபடி கதையுடன் தாக்க வந்த துச்சாதனனை ஓங்கி அறைந்து தெறிக்கச் செய்தபின் இருமுறை பின்னால் தாவி புரவிமேல் ஏறிக்கொண்டான் பீமன். முரசுகள் ஒலிக்க அர்ஜுனனும் படையினரும் பின்வாங்கி பறவைக்கூட்டம்போல் குவிந்து நீண்டு கவசக்கோட்டை வாயிலுக்குள் சென்று மறைந்தனர். கேடயங்கள்

இணைந்துகொள்ள கோட்டை மீண்டும் சொல்லடங்கியது. தேரிலிருந்து இறங்கி ஓடிய துரியோதனன் மண்ணில் சிதைந்து கிடந்த விகர்ணனின் உடலை எடுத்து தன் நெஞ்சோடணைத்துக்கொண்டு “மைந்தா! இளையோனே!” என்று கூவியழுதான்.

விசும்பல் ஒலி கேட்டு ஒற்றைவிழி திருப்பி ஏகாக்ஷர் பார்த்தார். சத்யசேனை தளர்ந்து நிலத்தில் விழ சத்யவிரதை அவளை மெல்ல தாங்கி அப்பால் கொண்டு சென்றாள். சேடியர் ஓசையிலாது வந்து தூக்கி அவளை பிறிதொரு அறைக்கு கொண்டு சென்றனர். களத்தில் சுட்டு விரலை ஊன்றியபடி எகாக்ஷர் காந்தாரியை பார்த்துக்கொண்டிருந்தார். பானுமதி கண்களிலிருந்து நீர் வழிந்துகொண்டிருந்தது. சிறிய சிவந்த உதடுகளை பற்களால் அழுத்திக் கடித்தபடி அவள் போதுமென்பதுபோல் தலையசைத்தாள். அந்த மெல்லிய அசைவு எப்படி காந்தாரிக்குத் தெரிந்தது என்று எகாக்ஷர் வியக்கும்படி அவள் கை நீட்டி மேலே சொல்க என்று ஆணையிட்டாள்.

ஏகாக்ஷர் சொன்னார்: அந்தக் களத்தில் தன் இளையோனின் குருதியை இரு கைகளாலும் அள்ளி அள்ளி நெஞ்சிலும் முகத்திலும் பூசிக்கொண்டு துரியோதனன் கூவியழுதான். “இளையோனே, உன் சொல்லால் அல்லவா மானுடனாக வாழ்ந்தேன்! உன்னில் அல்லவா நான் உளம்திறந்து வெளிப்பட்டேன்!” என்று கதறினான். அரசி, அப்பால் கேடயக்கோட்டைக்குள் புரவியிலிருந்து இறங்கி பீமன் தரையில் அமர்ந்துகொண்டான். இரு கைகளாலும் நிலத்தை அறைந்தபின் தன் தலையை மண்ணில் பதித்து உடல்குறுக்கினான். அவன் தோள்களும் விலாக்களும்

அதிர்ந்தன. கழுத்தில் தசைகள் இழுபட்டு தெறித்தன. சகதேவன் அருகணைந்து “மூத்தவரே!” என்று ஏதோ சொல்லப்போக பீமன் எழுந்து பேய்த்தெய்வமென முகம் வலிப்படைந்து விழி துறித்திருக்க “அகல்க! செல்க!” என்று கூவினான். கைநீட்டி “செல்க! இல்லையேல் உங்கள் நெஞ்சு பிளந்து குருதி குடிப்பேன். செல்க!” என்றான்.

# கார்கடல் - 51

அரவான் சொன்னான்: நாகர்களே, கேளுங்கள். இன்று கௌரவப் படையின் அணிகுலைத்து கௌரவர்கள் நால்வரின் குருதியை உடலெங்கும் அணிந்து பாதாளத்திலிருந்து எழுந்து வந்த கொடுந்தெய்வம்போல் வெறித்த விழிகளும் விரித்த வாயுமாக கைகளில் நிணம் வழுக்கும் பெருங்கதாயுதத்துடன் களத்தில் நின்றிருந்த பீமனை நான் கண்டேன். அவன் ஓடிச்சென்று தன் தேரிலேறுகையில் தன் கையின் நிழல் நீண்டதொரு நாகம்போல் வளைந்து தேர்கள் மேல், புரவிகள் மேல், நிலத்திலென இழைந்து தன்னை அணுகுவதை கண்டான்.

ஒரு கண விழிதிரும்பலில் அவன் திகைத்து பிறிதொரு காலத்தை சென்றடைந்தான். அங்கு அவன் முன் நீண்ட வெண்தாடியுடன் வெண்ணிறமான பெருந்தோள்களுடன் இடைக்குக்கீழ் நூறு சுருள்களாக நெளியும் நாக நீளுடலுடன் ஆரியகன் நின்றிருந்தார். “மைந்தா, இன்று உனது நாள். உன்னுடன் நாங்கள் இருக்கிறோம். உன்னுடலில் குடிகொள்கிறோம். செல்க, இன்று உன்னை கொல்லும் ஆற்றல்கொண்ட அங்கநாட்டு அரவம்பனை வெல்க! இன்றே தருணம். இன்று முழுக்க நாங்கள் உன்னுடன் இருப்போம்.

இன்று மட்டுமே உன்னால் அவனை வெல்லமுடியும் என்று உணர்க!" என்றார். அவர் நா பிளந்து பறந்தது. இமையா மணிக்கண்கள் ஒளிகொண்டிருந்தன. நூறுமுறை மண்ணை எரித்தழிக்கும் வஞ்சமும் சினமும் கொண்டவராக தெரிந்தார். பொறுமையிழந்து அவருடைய உடற்சுருட்கள் நெளிந்தமைந்தன.

பீமன் திகைப்புடன் "நீங்கள் யார்?" என்றான். "ஆழுலகத்து மாநாகமாகிய என் பெயர் ஆரியகன். உன்னை ஆற்றல்மிக்கவனாக ஆக்கிய நஞ்சை உனக்கு அளித்தவன்" என்றது மாநாகம். "ஆம், உங்கள் முகத்தை நினைவுறுகிறேன். ஆனால் அன்று அழகிய தோற்றமும் இனிய குரலும் கொண்டிருந்தீர்கள்" என்றான் பீமன். "அது நான் உனக்களித்த நாக அமுதத்தின் அழகும் இனிமையும். இங்கே புவிக்குமேல் நாங்கள் கொடுந்தோற்றம் கொள்கிறோம், எங்கள் அமுது இங்கே நஞ்சென்றாவதுபோல" என்றார் ஆரியகன். "செல்க, முழு விசையாலும் அங்கனை எதிர்த்துக் கொல்க! இல்லையேல் அவன் உன் இளையோனை இன்றே கொல்வான்." பீமன் எரிச்சலுடன் "என் இளையோன் வெல்லப்பட இயலாதவன்" என்றான். "தெய்வத்தால் செலுத்தப்படும் தேரிலமர்ந்திருப்பவன் அவன். மண்ணிலிருந்து எந்த அம்பும் அவனை நெருங்க இயலாது."

"ஆம். ஆயினும் தெய்வங்கள் விண்ணிலனுப்பிய கோள்களை அரவுகள் கவ்வுவது உண்டு என்று உணர்க! இன்றே அங்கனை கொன்று எழுக! இன்று உச்சிப்பொழுதுக்குப் பின் இரண்டு நாழிகைப் பொழுது கதிரோனின் ஆற்றல் குறையும். ராகுவும் கேதுவும் விடுக்கும் வான்நிழல் அவ்வெம்மையை சூழ்ந்து குளிர்விக்கும். அப்போது நாகங்களின் ஆற்றல் ஆயிரம் மடங்கு

பெருகும். அந்தப் பொழுதில் அங்கனை எதிர்கொள்க! உன் தோள்கள் என நானும் என் உடன்பிறந்தானாகிய சுவீர்யவானும் அமைவோம். உன் அம்புகளில் எங்கள் குடியின் அனைத்து நாகங்களும் ஏறிக்கொள்வோம். அம்புகளில் விசைகூட்டுவோம். அவற்றின் கூர்களில் நஞ்சு நிறைப்போம். இன்று நீ அவனை வென்றால் இப்போர் முடிவுறுகிறதென்றே பொருள்.”

“அறிக, அவன் அம்புத்தூளியில் உறைகின்றது தக்ஷகுலத்து எஞ்சிய இளையோன் குடிகொள்ளும் தொல்லம்பு ஒன்று! எஞ்சும் துளி என்றும் பேராற்றல் கொண்டது என உணர்க! அழிந்தவை அனைத்தும் நுண்வடிவென அதில் உறைகின்றன. உன் இளையோன் அர்ஜுனனுக்காக வஞ்சத்தை தவமென இயற்றி மூத்து கூர்கொண்டு காத்திருக்கிறது அது. அதை இத்தருணத்தில் அவன் வெளியே எடுப்பான் எனில் அதன் நஞ்சு நலிவுற்றிருக்கும். அதை உன்னை நோக்கி அவன் தொடுப்பானெனில் நாங்கள் நூற்றெட்டு பேர் சேர்ந்து அதை சூழ்ந்து வென்று செயலற்றதாக்குவோம். அதன் பொருட்டே ஆழத்து நாகருலகிலிருந்து இங்கு எழுந்துள்ளோம். எழுக! இத்தருணத்தை வெல்க!” என்றார் ஆரியகன்.

பீமன் தன் கைகளை நீட்ட இரு மாநாகங்கள் எழுந்து அவன் கைகள் ஆயின. ஆனகன் என்னும் நாகம் அவன் கதை ஆகியது. கர்விதன் என்னும் நாகம் அவன் வில்லாகியது. அவன் அம்பறாத்தூணியெங்கும் நாகங்கள் செறிந்து எடைமிகுந்தது. அவன் திரும்பி “தொடர்க!” என்று ஆணையிட்டபோது பாஞ்சாலத்தின் ஆயிரம் கதைவீரர்கள் அவனைத் தொடர்ந்து எழுந்தனர். அவர்கள் அனைவர் கைகளிலும் படைக்கலங்களிலும் பாதாள நாகங்கள்

குடிகொண்டன. அவர்கள் அணிதிரண்டு எழுந்தபோது குருக்ஷேத்ரப் படைக்களத்தில் அதுவரை இல்லாத குளிர் பரவியது. நாகங்களின் மூச்சுக்காற்றால் கொடிகள் அசைந்தன. புரவிகள் அஞ்சி உடல்மெய்ப்பு கொண்டு கால்மாற்றின. யானைகள் தங்கள் உடலுக்குள் உறுமிக்கொண்டன.

கவசப்படை திறந்து வெளியேறி அவர்கள் வெறிகொண்டு கௌரவப் படையை சிதைத்தபடி முன்னேறினர். ஒருபோதும் அத்தனை பேராற்றல் மானுடக் கைகளிலும் கதைகளிலும் குடியேறியதில்லை. கைநகங்களே விழிகளாக ஒற்றை அம்பும் இலக்கு பிழைக்கவில்லை. நாகங்களால் ஏந்தப்பட்ட அம்புகள் விந்தையான சீறலோசை கொண்டிருந்தன. கௌரவர்களின் படைநிரைகள் நீர்த்துகள்போல சிதறித்தெறித்தன. தங்கள் குருதிச்சேற்றிலேயே தாங்கள் வழுக்கி விழுந்தனர். கதைகள் அறைந்து சிதைத்த உடல்களின் நிணத்தில் யானைக்கால்கள் வழுக்கின. “பேயுருக்கள்! நாகங்கள்!” என்று கௌரவ வீரர்கள் சிலர் கூவினர். “நஞ்சு! அம்புகளில் நஞ்சுள்ளது!” என்று கூவியபடி விழுந்த ஒருவன் நரம்புகள் நீலநிறம் பெற்று உடல் நீரிலூறியதுபோல் உப்பிப் பெருக்க துடித்தமைந்தான். அமிலத்தால் முழுக்காட்டப்பட்டதுபோல தோல் வெந்து உரிய நெளிந்தணைந்தான்.

கர்ணன் தொலைவில் அவ்வலறல்களை கேட்டான். “வீரர் செல்க! சென்று இளைய பாண்டவர் பீமனை தடுத்து நிறுத்துக! அங்கர் எழுக! அங்கர் செல்க! இது ஆணை” என்று சகுனியின் முரசு ஒலித்தது. கர்ணன் தன் மைந்தர்களுடன் அங்கநாட்டு விற்படையினர் துணைவர வந்து பீமனை எதிர்கொண்டான். பீமன் கையில் இருந்த வில் காண்டீபத்திற்கு நிகரான விசைகொண்டிருப்பதை அவன் அன்று அறிந்தான். இருவரும்

போர்புரிந்தபோது ஒவ்வொரு அம்பையும் ஏந்திக்கொண்டு வந்த நாகங்களை அவனால் காண முடிந்தது. அவை அவனை நோக்கி விழியுறுத்துச் சீறின. சிம்மம்போல் முழக்கமிட்டன. வாள்கள் என அவற்றின் வால்கள் வீசின. கர்ணன் தன் ஆவநாழியில் கைவிட்டபோது அதனூடாக அடியிலியில் நிறைந்திருந்த நாகருலகை சென்றடைந்தான். அவன் கையில் எழுவதற்காக நாகங்கள் முட்டி மோதி எழுந்தன. அவன் வில்லில் தங்களை தொடுத்துக்கொண்டு உறுமியபடி சென்று ஆரியகனின் நாகர்களை எதிர்கொண்டன.

விண்ணில் நாகங்கள் ஒன்றுடன் ஒன்று மோதி போரிட்டன. முதலைபோல் செதில்கொண்ட, ஆயிரம் பற்கள்கொண்ட வியாஹ்ரனைத் தாக்கியது வௌவால்போல் விரியும் சிறகுகள் கொண்ட காளபக்ஷன். முகத்தில் கொம்புகள் கொண்டிருந்த உக்ரனை தடுத்துச் சுற்றிக்கொண்டது இரண்டு தலைகள் கொண்ட துவைதன். நாகங்கள் உடல் பிணைத்து விண்ணிலேயே நெளிந்து பேரோசையுடன் தரையில் விழுந்து அறைந்து எழுந்து துள்ளித் துள்ளித் துடித்தன. காளகனை கருணன் தாக்கியது. காஞ்சனனை மிருத்யுரூபன் அறைந்து அப்பால் வீழ்த்தியது. உக்ரனை உதானன் தாக்கியது. உதரனை சுகிர்தன் அறைந்தான். நாகங்களின் உடல்களே அம்புகளாகி நிகழ்ந்த அப்போர் தெய்வங்களை திகைக்க வைக்க விண்ணில் சூழ்ந்து அவர்கள் கீழே நோக்கி சொல்லடங்கி நின்றனர். நாகநெளிவுகளின் கரிய அலைகளால் கர்ணனும் பீமனும் சூழப்பட்டனர். புயலில் என களமெங்கும் தூக்கிச் சுழற்றப்பட்டார்கள்.

விண்ணில் சூரியன் உச்சிக்கோட்டை அடையுந்தோறும் ஆற்றல் குறைந்தவனானான். வானில் ஒளியிருந்தாலும்

வெம்மை குறையலாயிற்று. தெற்குவானிலிருந்து நாகங்கள் ஒன்றுடன் ஒன்று உடல்பின்னியவையாக பெருகி வந்து ஒளியை மூடின. அவற்றை பிறர் முகில்திரள் என்று எண்ணினர். ஆனால் நாகங்களால் அறையப்பட்டு உடல்நஞ்சாகி விழுந்து உயிர்துறந்த வீரர்கள் இறுதிக்கணத்தில் அவை நாகப்பரப்பென அறிந்தனர். ஏரிக்கு அடியில் கிடந்து மேலே பரவியிருக்கும் நீர்ப்பாசிப்பரப்பின் நெளியும் வேர்ச்செறிவை நோக்குவதைப் போல. “நாகம்! நாகம்!” என்று நா தவிக்க அவர்கள் உயிர்விட்டனர். கதிரொளி குறையுந்தோறும் கர்ணன் ஆற்றல் குறைந்தவனானான். அவன் அம்புகளில் விசை குறைந்தது. அவன் கைநீட்டி எடுத்தபோது தயங்கியும் அஞ்சியும் நெளிந்த ஆற்றல்குறைந்த நாகங்களே ஆழுலகிலிருந்து எழுந்து வந்தன.

பீமன் தன் வெற்றிகளால் ஊக்கம் கொண்டான். களிவெறியுடன் “சூதன்மகனே, இன்று உன் குருதிகொண்டே திரும்புவேன்!” என வஞ்சினம் உரைத்தான். “என் குலமகளை சிறுமைசெய்ததன் பொருட்டு இன்று நீ மண்படிந்து விழுவாய்!” என்று கூவினான். கர்ணன் இகழ்ச்சியுடன் நகைத்து “நன்று! உன் குலமகளின் பெருமைக்காகப் பேசிய விகர்ணனைக் கொன்ற அதே கதையை எடு… அறியட்டும் தெய்வங்கள்” என்றான். பீமனின் கையிலிருந்த அம்பு தாழ்ந்தது. அக்கணம் அம்புகளை பெருக்கியபடி எழுந்தணைந்த கர்ணன் அவன் வில்லை உடைத்தான். அவன் தேர்ப்பாகனை அறைந்து வீழ்த்தினான். அவன் புரவிகளில் ஒன்று சரிந்தது. அவன் இடப்பக்க கவசங்கள் நொறுங்க அவன் தேரிலிருந்து பாய்ந்திறங்கி ஓடினான். அவனை அம்புகளை அடித்து அடித்து துரத்தி நகைத்த கர்ணன் “ஓடி உயிர்காத்துக்கொள், ஊன்குன்றே. இது வில்லறிந்தோரின் களம்… உனக்கு என வருவார்கள்

வெற்றுத்தசை கொண்ட மல்லர். அங்கு சென்று விளையாடு” என்றான்.

பீமன் திரும்பி நோக்கியபோது கர்ணனின் நெஞ்சில் அனலென எரிந்த கவசத்தை, அவன் செவிகளில் இரு சுடர்கள் என கண்ணை வெட்டிய குண்டலங்களை கண்டான். திகைத்து கைகள் தளர நின்றான். அவன் சொல்லிக்கொண்டிருப்பதென்ன என்று அவன் செவிகள் கேட்கவில்லை. கர்ணனின் தேரை ஓட்டிய துர்ஜயன் கைசுட்டி ஏதோ சொன்னான். அவனும் செவ்வொளியில் மின்னிக்கொண்டிருந்தான். பீமனின் வலக்காலும் வலக்கையும் முற்றாகவே ஆற்றலிழந்து தொங்கிக்கொண்டிருந்தன. ஒரு கணத்தில் அவனுள் இருந்து உயிர் துடித்து எழுந்தது. ஓடு ஓடு ஓடு என ஆணையிட்டது. அவன் மூச்சு தெறிக்க ஓடிச்சென்று தேரிலேறிக்கொண்டான். “பின்னடையவா, பாண்டவரே?” என பாகன் கேட்டபோதுதான் நெஞ்சை அடைத்துக்கொண்டு ஒரு விம்மல் எழுந்தது. “செல்லவா?” என்று பாகன் கேட்டதற்கு அதுவே மறுமொழி என ஒலித்தது.

தேர்ப்பாகன் தேரை பின்னெடுத்த கணம் அவன் இருதோள்களிலும் நாகங்கள் விம்மிப்பருத்து பெருகியெழுந்தன. ஆரியகன் அவன் செவிகளில் “இதோ அணைகிறது கதிர்குன்றும் பொழுது. இன்றே கொல்க அவனை! அஞ்சாதே. மேலும் பெரிய அம்பை எடு! இதோ இவ்வம்பில் நான் குடிகொள்கிறேன்! இதோ இதை எடு!” என்று ஆணையிட்டார். பீமன் இன்னொரு வில்லை பெற்றுக்கொண்டு தேரில் முன்னெழுந்து சென்றான். கண்முன் ஒளியழிந்து வருவதை கண்டான். கர்ணனின் நெஞ்சில் எரிந்த கவசம் அணைந்து

மஞ்சள் நெளிவெனத் தெரிந்தது. குண்டலங்களின் தழலைக் கண்டது விழிமயக்கோ என்று தோன்றியது.

அத்தருணத்தில் கர்ணனின் சொற்கள் அவன் எண்ணத்தை அறைந்தன. நெருப்பென அவனை எரியச் செய்தன. அம்புகளால் அறைந்தபடி அவன் கர்ணனை நோக்கி சென்றான். "ஆம், நான்தான் விகர்ணனை கொன்றேன். அத்தனை கௌரவர்களையும் கொல்வேன் என சொல்கொண்டவன் நான். அவனும் கௌரவனே. இன்னும் கொல்வேன். அனைவரையும் கொன்றபின் மீண்டும் பிறந்தெழுவேன். மீண்டும் மீண்டும் கொல்வேன். ஏழு பிறப்பில் அவர்களைக் கொன்று களியாடுவேன். அறிக தெய்வங்கள். நான் அறமிலி! நான் நெறியறியா விலங்கு. நான் கீழ்மகன். நான் எந்தத் தெய்வத்திற்கும் கடன்பட்டவன் அல்ல. இங்கே எதையும் எஞ்சவிட்டுச் செல்பவனும் அல்ல..."

ஆரியகனின் நாகங்களால் கர்ணன் சூழப்பட்டான். அவன் ஒளியை முற்றாக அவை மறைத்தன. அவன் அம்பில் எழுந்த நாகங்களை அவை சிதைத்தன. களத்தில் அவன் நின்றிருந்த பகுதியை மட்டும் இருள்போர்வை ஒன்று வந்து சூழ்ந்தது. அவனுடன் நின்றுபொருதிய மைந்தர்களால்கூட அவனை காணமுடியவில்லை. நாகபாசன் என்பதனாலேயே அவன்மேல் வஞ்சம் கொண்டிருந்த நாகங்கள் இருந்தன. அவன் அம்பில் எழுந்த நாகங்களின் பகைவர்கள் இருந்தனர். அவனால் வெல்லப்பட்ட நாகங்கள் இருந்தன. ஒவ்வொன்றும் அத்தருணத்தில் தங்கள் வஞ்சத்தை, பகைமையை, மீறிச்செல்வதன் களியாட்டை, பிழை இயற்றுவதிலுள்ள உவகையை கண்டுகொண்டன. அவன் கவசங்களின் மேல்

முத்தமிட்டு முத்தமிட்டு உதிர்ந்தன நச்சுப்பற்கள். அவனைச் சூழ்ந்தன வசையென சீறல்கள்.

ஏகாக்ஷர் சொன்னார்: அரசி, களத்தில் கர்ணனுடன் பீமன் போரிட்டுக்கொண்டிருக்கையில் அவனுக்குப் பின்னாலிருந்து சகதேவனும் நகுலனும் அம்புகள் பெய்தபடி கிளம்பி வந்து இருபுறமும் நின்று வில்துணை செய்தனர். மூவரும் தொடுத்த அம்புகளால் அங்கநாட்டு விற்படையினர் தடுக்கப்பட்டார்கள். கர்ணன் கைவீசி ஆணையிட அவன் மைந்தர்களும் இளையோரும் சூழ்ந்து நின்று போரிட்டார்கள். கர்ணனின் மைந்தர் ஒவ்வொருவரும் கர்ணனே என பாண்டவர்கள் அறிந்தார்கள். விருஷசேனனும் விருஷகேதுவும் கர்ணனின் இரு கைகளென்றே திகழ்ந்தார்கள். அவர்களின் அம்புகளால் பாண்டவர்களின் விற்படையினர் இறந்து தேரிலிருந்து உதிர்ந்தபடியே இருந்தனர். கவசக்கோட்டைக்குள் இருந்து பாஞ்சால வில்லவர்கள் எறும்புகள் சிறகுகொண்டு எழுவதுபோல் வந்து வீழ்ந்தவர்களின் இடத்தை நிறைத்தனர்.

நகுலன் சித்ரசேனனின் அம்பால் வில் அறுபட தாவி தேரிலிருந்து இறங்கி தப்பினான். அவன் புரவியொன்றில் ஏறி வில்லவன் களம்பட திகைத்துச் சுழன்று நின்ற ஒரு தேரில் ஏறிக்கொள்வதற்குள் அவனை சத்யசேனனின் அம்புகள் வந்து அறைந்தன. அவன் வில்சூடி அம்பறாத்தூணியுடன் தேரை விசைகொண்டு முன்செலுத்தியபோது விந்தையான இருள் ஒன்று அப்பகுதியை மூடிக் கடந்துசென்றது. மண்ணிறங்கிய அந்த மழைமுகில் கடந்துசெல்வதற்குள் அதன் திரைமறைவில் விரைந்து அணுகிய நகுலன் சித்ரசேனனின் கழுத்தை பிறையம்பால் அறுத்தான். தேர்த்தட்டிலிருந்து அவன் உருண்டு

விழுந்த ஓசைகேட்டு நிலையழிந்த சத்யசேனனின் நெஞ்சை நீளம்பு ஒன்றால் துளைத்தான். இருள்மயக்கம் விலகியபோது தன் இரு மைந்தரும் தேரிலிருந்து விழுந்துகிடப்பதைக் கண்டு கர்ணன் அலறினான். அவனுடைய பாகன் துர்ஜயன் தேரை பின்னெடுத்துச்செல்ல அலறியபடியே நீரில் மூழ்குபவன் என அவன் தோன்றினான்.

“செல்க, அவனைத் தொடர்ந்து செல்க... இச்சோர்விலிருந்து அவன் எழலாகாது!” என்று கூவியபடி பீமன் கர்ணனை அம்புகளால் அறைந்தபடி தொடர்ந்துசென்றான். கொக்கிகளால் சித்ரசேனனும் சத்யசேனனும் தூக்கி அகற்றப்பட்டனர். பீமனை விருஷசேனன் தாக்க சகதேவனை விருஷகேது தாக்கினான். நகுலனை சுஷேணனும் சத்ருஞ்சயனும் எதிர்த்தனர். கர்ணன் நாணொலி எழுப்பியபடி எழுந்துவந்து பீமனை அம்பால் அறைந்தான். பீமன் தன் தேரை கர்ணனை நோக்கி திருப்பி கொண்டுசெல்ல ஆணையிட்டான். பீமனால் கர்ணனை களத்தில் எதிர்கொள்ள முடியும் என்பதைக் கண்ட பாஞ்சால வீரர்கள் “விருகோதரர் வெல்க! வெற்றிகொள் பாண்டவர் வாழ்க!” என முழக்கமிட்டனர். ஒவ்வொரு அம்புக்கும் அம்பு செலுத்தி பீமன் கர்ணனை எதிர்த்தான். குருக்ஷேத்ரக் களத்திற்கு வந்தபிறகு முதல்முறையாக கர்ணன் ஏழுமுறை தேர்த்தட்டில் உடல் வளைத்துப் படுத்து தன் தலை கொய்ய வந்த அம்புகளிலிருந்து தப்பினான்.

இளையோரின் இறப்பால் விருஷசேனனும் விருஷகேதுவும் வெறிகொண்டிருந்தனர். கண்ணீர் வழியும் கண்களுடன் சகதேவனையும் நகுலனையும் அவர்கள் எதிர்த்தனர். நகுலன் “இன்று எங்கள் மைந்தனின் குருதிக்கு நூறுமேனி ஈடுசெய்ய களமெழுந்திருக்கிறோம்... சூதர்கூட்டங்களே, விலகிச்செல்க!

உங்கள் குதிரைக்கொட்டில்களில் ஒடுங்கிக்கொண்டு உயிர்காத்துகொள்க!” என்று கூவினான். விருஷசேனன் மறுவஞ்சினம் உரைக்கவில்லை. பற்களால் உதடுகளை கடித்துக்கொண்டு தோள்தசைகள் விம்மி விம்மி நெகிழ அம்புகளால் சகதேவனை அறைந்தான். விருஷகேது நகுலனின் பாகனை கொன்றான். அவன் நெஞ்சிலும் தோளிலும் அம்புகளை செலுத்தினான்.

பீமனின் அம்புகள் பட்டு கர்ணனின் புரவிகளில் ஒன்று கழுத்து அறுந்து கால்பின்னி தேரை வலப்பக்கமாக இழுத்தது. அதை இழுத்து தேரை சீரமைக்க முயன்ற துர்ஜயன் தன் தவறான கோணத்தை பீமனுக்கு காட்டினான். அதை உணர்ந்து அவனைக் காக்க கர்ணன் அம்பு எடுப்பதற்குள் துர்ஜயன் தேரிலிருந்து தலைதுண்டாகி சரிந்துவிழுந்தான். எடுத்த அம்பை பீமனை நோக்கி கர்ணன் ஏவ அதை பீமன் அறைந்து சிதறடித்தான். என்ன நிகழ்ந்தது என்று கர்ணனுக்கு புரியவில்லை. தன் எண்ணமே அம்பென எழுவதை கண்டவன் அவன். எண்ணி செயலாற்றுவதற்கு நடுவே புகும் அந்த கணநேர இருளை அவன் அப்போதுதான் உணர்ந்தான். “கீழ்மகனே!” என்று கூவியபடி அம்புகளால் பீமனை மாறி மாறி அறைந்தான். அத்தனை அம்புகளும் செயலிழக்கக் கண்டு அறியா உளவிசை ஒன்று எழ தன் நாகபாசத்தின்மேல் கைவைத்தான். பின்னர் பற்களைக் கடித்தபடி தன்னை காத்துக்கொண்டான்.

பீமன் வெற்றியால் அனைத்து உளக்கொந்தளிப்பையும் கடந்து கைகளும் உள்ளமும் பெருகியவனானான். குருக்ஷேத்ரக் களத்தில் அவன் ஒருபோதும் அத்தகைய வீச்சுடன் போரிட்டதில்லை. “உன் ஆணவத்தால் என் குலமகளை

இழிவுசெய்தாய்! இழிபிறப்போனே, உன்னை நம்பி எங்களை பகைத்தான் கௌரவன். நீ இயற்றிய ஒவ்வொன்றுக்கும் ஈடுசெய்யப்போகிறாய்” என்று கூவினான். “இதோ இக்களத்தில் வீழ்வார்கள் உன் மைந்தர். இங்கே நெஞ்சு உடைந்து கிடப்பார்கள் உன் உடன்பிறந்தார். அறிக, உன் குலம் இங்கே எஞ்சாது அழியும்!” என்றான். கர்ணன் “எஞ்சுவதை கணக்கிடத் தொடங்கிவிட்டாயா? உன்னில் எஞ்சுவதென்ன என்று பார்” என்றான். கர்ணனின் தேரில் ஏறிக்கொண்ட பிருஹத்ரதன் கடிவாளத்தை இழுத்து தேரை நிலைமீட்டு பீமனுக்கு எதிராக கொண்டுசென்றான்.

அவர்களின் அம்புகள் ஒன்றுக்கு ஒன்று எதிர்நின்றன. கர்ணனின் அம்புகளும் இலக்கு பிழைக்கும் என்பதை அங்கர் அன்று அறிந்தனர். ஓர் அம்பு பிழைத்தபோது கர்ணனே திகைத்தான். பிறிதொன்று பிழைக்க அத்திகைப்பே வழிவகுத்தது. சீற்றம் மேலும் அவனை தவறச்செய்தது. அத்தருணத்தில் பீமனின் வில்லிலிருந்து எழுந்த கரிய காளாஸ்திரம் அவன் நெஞ்சைத் தாக்கி தூக்கிச் சுழற்றி குருதியுடன் வீசியது. தேரிலிருந்து விழுந்த கர்ணன் பாய்ந்து புரவி ஒன்றிலேறிக்கொண்டு அம்புகளால் பீமனை அறைந்தபடி தன் தேர் நோக்கி பாய்ந்தான். பீமனின் அம்புகளால் அவன் கவசங்கள் உடைந்தன. குருதி வழியும் உடலுடன் தன் தேரில் மீண்டும் ஏறிக்கொண்டு அம்புத்தூளியை கையிலெடுத்தான். பீமன் பேரம்பு ஒன்றை எடுக்க சினக்கூச்சலுடன் கர்ணன் மீண்டும் தன் நாகபாசத்தை கையிலெடுத்தான். மேலும் சினம்பெருக “விலகிச்செல்! கீழ்மகனே, விலகிச்செல்... என்னிடம் உயிர் விளையாடாதே” என்று கூவியபடி அதை திரும்ப வைத்தான்.

அரவான் சொன்னான்: நாகர்கள் வென்ற களம் அது. ஆரியகனின் நாகங்களால் அரவம்பனின் நாக அம்புகள் செயலற்றன. அங்கர் படை மெல்லமெல்ல பின்னடைந்துகொண்டிருந்தது. “செல்க! செல்க!” என்று மாநாகமான ஆரியகன் பீமனை நோக்கி கூவினார். பீமன் கராளாஸ்திரத்தை எடுத்து வில்லில் தொடுத்தெடுக்க அதில் ஏறி அமர்ந்த ஆரியகன் கர்ணனை நோக்கி மதகளிறுபோல் துதிசுழற்றி செவிவீசியபடி பறந்து வந்தார். கர்ணனின் கையிலிருந்து நாகபாசம் தயங்கியது. ஒருகணத்தில் அவன் அதை கைவிட்டு பிறிதொரு அம்பை எடுப்பதற்குள் அவன் நெஞ்சை ஆரியகன் அறைந்தார்.

தேர்த்தட்டிலிருந்த கர்ணன் தெறித்து விழ அவனை அள்ளித்தூக்கி குதறி அப்பாலிட்ட ஆரியகன் நிலத்தில் வாலறைந்து எழுந்து பாய்ந்து அவனை கவ்வச்சென்றார். தன் அம்பறாத்தூணியிலிருந்து பரசுராமர் அளித்த திருணாஸ்திரத்தை எடுத்து ஆரியகன்மேல் தொடுத்தான் கர்ணன். குன்றாக்கூர் கொண்ட புல்லின் விசை ஆரியகனை இரு துண்டுகளாக்கியது. ஆரியகனின் நீண்ட கரிய உடல்துண்டுகள் வெண்ணிழலுடன் போர்க்களத்தில் விழுந்து துடித்தன. ஒன்றையொன்று நோக்கி வந்து இணைந்து கொள்ள முயன்று முட்டி முறுகி பின்னலாகி களத்தில் நின்று துள்ளின. நெஞ்சக்குருதி வார நினைவிழந்து மயங்கிய கர்ணனை நோக்கி ஹலாஸ்திரத்தை ஏவினான் பீமன். முழங்கி வந்த அதை தடுக்கும்பொருட்டு காலால் மண்ணை உதைத்துப் புரண்ட கர்ணன் கையை அறைந்து ஊன்றி எழுந்து குருதிவழிந்து நோக்கு மறைந்த கண்களால் பீமனை பார்த்தான். மூன்றாம் முறையாக அரவம்பைத் தொட்ட அவன் கை விலகி தொய்ந்து சரிந்து மண்ணில் படிந்தது.

அங்கநாட்டினர் வீசு கொக்கிகளால் கர்ணனை தூக்கி இழுத்து படைக்குள் கொண்டு சென்றனர். “வீழ்ந்தார் அங்கர்! வெற்றி! இளைய பாண்டவருக்கு வெற்றி! வெற்றி! விருகோதரருக்கு வெற்றி!” என்று பாண்டவர்களின் முரசுகள் ஓசையிட்டன. களத்தில் கவிழ்ந்து கிடந்த கர்ணனின் பொற்தேர் மேல் ஓங்கி உதைத்து பீமன் உரக்க நகைத்தான். “இன்றுடன் உன் ஆணவம் அழிக! இவ்வனைத்துக்கும் அடிகோலிய உன் ஆணவத்தின் மேல் இதோ காறித்துப்புகிறேன்! கீழ்பிறவியே, இனி நீ தலைதூக்கி களமெழலாகாது!” என்றான்.

# கார்கடல் - 52

சஞ்சயன் சொன்னான்: பேரரசே, இன்று காலைமுதல் நிகழ்ந்துவரும் இந்தப் போரை நான் உங்களுக்கு முழுமையாக சொல்லி முடிக்க இன்னும் சில பிறவிகள் தேவையாகக்கூடும். இன்று ஒவ்வொருவரும் பலவாகப் பிரிந்தனர். ஒரே போரை வெவ்வேறு இடங்களில் நிகழ்த்தினர். களம்பட்டவர்கள் வெவ்வேறு நிலங்களில் விழுந்தனர். வெவ்வேறு உடல்களிலிருந்து எழுந்தனர். விண்ணில் தங்களை தாங்களே கண்டுகொண்டு திகைத்தனர். குருக்ஷேத்ரம் பல்லாயிரம் ஆத்மாக்களை விடுவிக்கும் மாபெரும் தவச்சாலையென ஆகியிருக்கிறது.

இந்தப் போர் தொடங்கி இன்று பதின்மூன்று நாட்கள் ஆகிவிட்டிருக்கின்றன. புரவிகளைப்போல் மிகச் சிறுபொழுது துயிலும்பொருட்டு அவர்களின் உடல்கள் பழகிவிட்டிருக்கின்றன. அவர்களின் உடல்களில் ஐம்புலன்களும் எங்குமென உருகிப்பரவிவிட்டன. உடலெங்கும்

காதுகளும் கண்களும் மூக்குகளும் நாவுகளும் கொண்டவர்களாக அவர்கள் ஆனார்கள். அவர்களின் உள்ளம் எல்லைகளை அழித்துக்கொண்டு கலந்தது. கலமே தான் என எண்ணும் மாயையை உதறிய நீர் வானமெங்கும் பரவியது. கொல்லப்படுபவன் கொல்பவனும் தானே என ஆனான். வீழ்ந்தவனில் இருந்து எழுந்து கொன்றவனில் குடியேறி இறங்கினான். நேற்று இன்றுகள், இங்கு அங்குகள், இது அதுக்கள் இயல்பழிந்தன. எங்கும் நிகழும் ஒன்றே அனைத்தும் என நின்றது என்றும் நிகழும் அது.

முற்புலரியில் தன் புரவிமேல் அமர்ந்து எல்லைக்காவல்மாடத்திலிருந்து திருஷ்டத்யும்னன் இருந்த படைமுகப்புக் காவல்மாடம் நோக்கி சென்றுகொண்டிருந்த சாத்யகி வழியில் புரவியிலேயே உளமழிந்து உடல் தொய்ந்து தலைசரிந்து அமர்ந்திருந்தான். அவன் புரவியின் கடிவாளத்தைப் பற்றிய காவலன் “யாதவரே!” என்று உலுக்க விழித்தெழுந்து “என்ன? என்ன?” என்றான். “விழுவதுபோலிருந்தீர்கள். புண்பட்டிருப்பீர்களோ என்றுகூட அஞ்சினேன்” என்று காவலன் சொன்னான். வாயை துடைத்துக்கொண்டு “ஒன்றுமில்லை” என்றபின் சாத்யகி கடிவாளத்தை பற்றினான். அவன் நெஞ்சில் சொற்கள் ஓடிக்கொண்டிருந்தன. முகம் மலர்ந்திருந்தது. அது ஏன் என அவனே வியந்தான். அச்சொற்களை மீண்டும் ஓட்டிநோக்கினான்.

“விஷ்ணுவிலிருந்து பிரம்மன். பிரம்மனின் மைந்தர் அத்ரி. அவரிலிருந்து சந்திரன், புதன், புரூரவஸ், ஆயுஸ், நகுஷன், யயாதி, யது என எழுந்தது யாதவப்பெருங்குலம். முதல் யாதவ மன்னர் பெரும்பிதாமகரான சஹஸ்ரஜித். ஆயிரம் புதிய

நிலங்களை வென்று வளைகோல் சூடி கல்லரியணை அமர்ந்தவர் அவர். அவர் மைந்தர் சதஜித் நூறு நிலங்களை வென்றவர். அவர் மைந்தர் ஹேகயரிலிருந்து எழுந்தது நமது தொல்குடி. அவர் மைந்தர் தர்மர். கணி, பத்ரசேனர், தனகர், கிருதவீரியன் என்னும் கொடிவழியின் ஒளிமிக்க வைரமென எழுந்த மாவீரர் கார்த்தவீரியர். அவர் மைந்தர் மது. மதுவின் மைந்தர் எனப் பிறந்த விருஷ்ணியே நமது குடியின் முதல் தந்தை. நாம் ஆளும் நூற்றெட்டு நிலங்களை அமைத்தவர் யுதாஜித். அவர் மைந்தர் சினி. சினியில் பிறந்தவர் எந்தை சத்யகர். சாத்யகியாகிய என் பெயர் யுயுதானன். நான் விருஷ்ணி குலத்தோனாகிய யாதவன். என் உடல்பொருளாவி மூன்றையும் துவாரகையின் தலைவனுக்கு அளித்தவன். இப்பிறவியில் பிறிதொரு கடமையோ இலக்கோ உறவோ அற்றவன்.”

“என் மைந்தர்களாகிய நீங்கள் யௌயுதானிகள். விருஷ்ணிகளாகிய யாதவர்கள். ஆனால் என் கடமை உங்களையும் ஆளும். நான் ஏற்றது பொறுப்பு அல்ல என்று உணர்க! இது தொழும்பர்க்குறி. உடையோனே விடுத்தால்கூட தொழும்பர்க்கு விடுதலை இல்லை. அவர் ஏழு தலைமுறைகளுக்கும் மீறிச்செல்லும் ஆணை இல்லை.” அவன் முன் மைந்தர்கள் பதின்மரும் அமர்ந்திருந்தார்கள். அசங்கனின் முகம் கூர்கொண்டிருந்தது.
உத்ஃபுதன், சந்திரபானு, சபரன், சாந்தன், முக்தன் ஆகியோர் அவன் சொற்களை செவிகொண்டு அமர்ந்திருந்தனர். சாலனின் விழிகளில் புன்னகை. சித்ரன் தன் கையால் சித்ராங்கதனை தொட்டு ஏதோ உரைத்துக்கொண்டிருந்தான். சாத்யகி விழிதிருப்பியபோது விலக்கிக்கொண்டான். சினி வேறெங்கோ நோக்கிக்கொண்டிருந்தான். சாத்யகியின் நோக்கை கண்டு

அசங்கன் இளையோனை தொட சினி திடுக்கிட்டு உணர்வுகொண்டு தன் ஆடையை இழுத்து சீராக்கிக்கொண்டான்.

“இப்புவியில் பிறப்பவரில் பெரும்பாலானவர்கள் வாழ்க்கை முழுக்க தேடுவது ஆற்றுவதற்குரிய பணியை, கொள்ளவேண்டிய படைக்கலத்தை, செல்லவேண்டிய திசையை. அவை முன்னரே வகுக்கப்பட்டு இங்கு வருபவர் நல்லூழ் கொண்டவர் என்று உணர்க! தேடுபவர் தேடலை மட்டுமே அடைகிறார். நாமே நம் இலக்கை தெரிவுசெய்ய முடியாது. ஏனென்றால் அது இங்கு நிகழும் அனைத்தையும் நுண்ணறிவால் உணர்ந்துதெளிந்து அடையவேண்டிய விடை. அவ்வறிதலுக்கே திசையும் படைக்கலமும் பணிக்களமும் தேவையாகிறது. வழிகாட்டப்படுவோர் பேறுபெற்றோர். வழிநடத்தப்படுவோர் பெரும்பேறுபெற்றோர். அவர்கள் அடையாளம் காணப்பட்டவர்கள். தெய்வத்தால் கொடையேற்றுக்கொள்ளப்பட்டோர்.”

“ஆம், இளமையில் நம் வழி நம்மதே என்று தோன்றும். நாமே தேடியறிந்தாலென்ன என்று கனவுகாண்போம். எண்ணுக, இப்புவிவாழ்க்கையில் அவ்வண்ணம் நீங்கள் தெரிவுசெய்து அடைந்தவை எவை? தெரிவுசெய்தா அன்னை வயிற்றில் பிறந்தீர்கள்? அவள் தெரிவுசெய்யப்படவில்லை என்பதனால் பிறிதொருத்தியை அவ்வன்னைக்கு நிகரென வைப்பீர்களா என்ன? குலமும் குடியும் நிலமும் நாடும் தெரிவுசெய்யப்பட்டவை அல்ல. இளையோரே, உங்கள் மொழியும் தெய்வங்களும்கூட நீங்கள் பிறக்கையிலேயே அளிக்கப்பட்டுவிட்டவை. எண்ணிநோக்குக, தந்தையை ஒவ்வொருவரும் தேடிக் கண்டடைந்து வகுத்துக்கொள்ளலாம்

எனில் இங்கே எவருக்கு நல்வாழ்க்கை அமையும்?" என்றான் சாத்யகி.

அவர்கள் ரிஷபவனத்தில் யமுனையின் கரையில் ஒரு கடம்பமரத்தின் அடியில் அமர்ந்திருந்தனர். "நீலக்கடம்பு என் தலைவரின் மரம். அச்சம் கொள்கையில் அந்த மரத்தடியில் சென்றமர்க! அணைக்கப்படுவீர்கள். ஐயமெழுகையில் அதன் நிழல்தேடுக, தெளிவடைவீர்கள்! இன்று நம் தலைக்குமேல் அவர் கைகள் விரிந்திருக்கின்றன. அவருடைய சொல் நமக்கு ஒளியென்று எப்போதும் முன்னமைக!" என்றான் சாத்யகி. அவர்கள் கைகூப்பி "ஆம், அவ்வாறே ஆகுக!" என்றனர். அவன் எழுந்துகொண்டான். அவர்கள் சிரித்துக்கொண்டே தங்களுக்குள் பேசிக்கொள்ள சினி ஓடிவந்து அவன் கையை பற்றிக்கொண்டு தொங்கி "தந்தையே, எனக்கு வில் தேவையில்லை. நான் கதை பயில விழைகிறேன்" என்றான்.

"கதை பெருந்தோளர்களுக்குரியது, மூடா" என்றான் சாத்யகி. "நான் பெருந்தோளனாவேன். நிறைய ஊனுண்டால் போதும் என்று அடுமனையில் முக்தர் சொன்னார். நான் நேற்றுகூட..." என்றான். சாலன் சாத்யகியின் இன்னொரு கையில் தொங்க முயல சினி அவனை அறைந்து "போடா... போடா" என்றான். சாத்யகியிடம் "தந்தையே, தங்கள் கைகளில் தொங்குகிறான்" என்றான். "ஏன், நீ தொங்குவதில்லையா?" என்றான் சாத்யகி. "நான் சிறு குழவி... அவன் பெரியவன்" என்றான் சினி. சாத்யகி சிரித்து அவன் தலையின் மென்மயிர்ப்பரப்பை கையால் வருடினான். "தந்தையே, நாம் எப்போது உபப்பிலாவ்யத்திற்கு செல்கிறோம்?" என்றான் அசங்கன். "நாளை..." என்றான் சாத்யகி. சினி "நாளையேவா?" என்று கூச்சலிட்டான். கைகளை விரித்து துள்ளிக்குதித்து "நாளை! நாளை!" என்று ஆர்ப்பரித்தான்.

இருளில் காவல்மாடத்தின் முகப்பிற்கு வந்து நின்றான். எதிரே குருக்ஷேத்ரம் ஒழிந்து காத்திருந்தது. பின்னிரவின் மென்பனி மெல்ல அதன்மேல் இறங்கிக்கொண்டிருந்தது.
ஒவ்வொருநாளும் ஒரு மாபெரும் ஓவியம் வரையப்பட்டு அந்தியில் முற்றாக அழிக்கப்பட்டு குருதிச்செம்மையாக எஞ்சும் பலிக்களம் அது என எண்ணிக்கொண்டான். அவ்வேளையில் எங்கும் ஓசைகள் இருக்கவில்லை. காற்றில் கொடிகள் படபடக்கும் ஓசைகள் மட்டும் கேட்டுக்கொண்டிருந்தன. விண்மீன்கள் பால்நிறைந்த அகிடில் காம்புகள்போல பிதுங்கி நீண்டிருந்தன. அவன் காவல்மாடத்தின் மூங்கிலில் சாய்ந்தபடி வானை நோக்கிக்கொண்டு நின்றான். பெருமூச்செழுந்தது. அப்போதுதான் தன் முகம் மலர்ந்திருப்பதை உணர்ந்தான்.

ஏதோ தன்னுணர்வு எழ அவன் இருளுக்குள் கூர்ந்து நோக்கினான். கௌரவப் படைகளின் விளிம்பிலமைந்த காவல்மாடத்தில் தூணில் சாய்ந்தபடி பூரிசிரவஸ் நின்றிருப்பதை கண்டான். அப்பால் காற்றில் கொடி ஆடுவதுபோல் அவன் புரவியின் வால் சுழன்றுகொண்டிருந்தது. தன் உள்ளம் ஏன் கல்லித்திருக்கிறது என்று சாத்யகிக்கு புரியவில்லை. எந்த எண்ணமும் எழவில்லை. வெறுமனே நோக்கிக்கொண்டு நின்றிருந்தான். பூரிசிரவஸும் தன்னை முன்னரே நோக்கிவிட்டிருந்தான் என அவன் நன்குணர்ந்திருந்தான். விழிகள் சந்திக்க முடியாத தொலைவும் இருளும் இருந்தன. அவன் கூர்ந்து நோக்கிக்கொண்டு நின்றுவிட்டு பின்னர் காற்றில் பறந்த ஆடையை சீரமைத்துக்கொண்டு கிளம்பினான். ஆனால் உடலை அசைக்க முடியவில்லை. அங்கேயே அது எடையுடன் பதிந்துவிட்டிருந்தது. பலமுறை எண்ணத்தை குவித்து அதை மீட்கவேண்டியிருந்தது. அவன் சென்று தன் புரவிமேல்

ஏறிக்கொண்டு திரும்பி நோக்காமல் படைகளுக்குள் சென்று மறைந்தான்.

சஞ்சயன் தொடர்ந்தான்: போர்முரசுகள் ஒலித்தபோது சாத்யகி திருஷ்டத்யும்னனின் அருகே இருந்தான். திருஷ்டத்யும்னன் பதற்றம் கொண்டிருந்தது அவன் கையசைவுகள் மாறுபட்டிருந்ததிலிருந்து தெரிந்தது. “இந்தப் போர் பொழுதுகளுடன் நாம் இயற்றுவது. புலரிமுதல் அந்திவரை. நமக்கிருப்பது ஒரு பகல். நாம் வென்றாகவேண்டும்” என்றான். சாத்யகி தன்னுள் எழுந்த ஐயத்தை அவனிடம் கேட்கவில்லை. ஆனால் அவனிடம் அங்கிருந்த படைப்பெருக்கே அதை கேட்டுக்கொண்டிருந்தது. “ஆம், இயலாததுதான். ஆனால் இயலும். இயலாததை இயற்றுபவர் நம்முடன் இருக்கிறார். நாம் வெல்வோம். அரிதியற்றி வென்றமையால் நாம் இன்று மாலை வெற்றிக்கொண்டாட்டமிடுவோம். வெற்றியே மேலும் வெற்றி நோக்கி கொண்டுசெல்வது. நாம் முழு வெற்றி அடைவோம். இந்நிலத்தில் நம் தலைவனின் சொல்நின்று பெருகும். தலைமுறைகளை அது ஆளும்!” என்றான். அச்சொற்களால் உளம்பொங்கிய சாத்யகி “ஆம், வெற்றி!” என்று பெருமூச்சின் ஒலியில் சொன்னான்.

அவனை அருகழைத்த அர்ஜுனன் “இளையவனே, நீ இன்று முழுக்க என் மூத்தவரை துணைசெய்க!” என்றான். “ஆனால்…” என்று சொல்லவந்த சாத்யகியை அடக்கி “ஏனென்றால் இன்று நாம் பிறிதொரு இலக்கு கொண்டுள்ளோம். அவ்விலக்கு நமது பாதுகாப்புணர்வை திசைமாற்றிவிடக்கூடும். அதை அவர்கள் கணக்கிட்டறியவும்கூடும். நேற்றும் முன்னாளும் அவர்களின்

இலக்கு நம் மூத்தவரை பணயம்கொள்வது மட்டுமாக இருந்தது என்பதை மறக்கவேண்டியதில்லை” என்றான். “ஆம்” என்றான் சாத்யகி. அவன் தலைவணங்கி பாண்டவப் படைகளினூடாக யுதிஷ்டிரரை நோக்கி சென்றான். படையினர் முழுமையாகவே நிலைகொள்ளாமல் நின்றிருப்பதை கண்டான்.

யுதிஷ்டிரர் பதற்றத்தில் தேர்த்தட்டில் நிற்கமுடியாதவராக இருந்தார். “என்ன நிகழ்கிறது? புதிய சூழ்கை எதையேனும் வகுத்துள்ளோமா?” என்று அவனிடம் கூவினார். “இவர்கள் வகுத்துள்ள இந்தக் கவசக்கோட்டை தற்காப்புக்குரியது. இன்று நாம் தாக்கி வென்று கடந்தாகவேண்டும். சைந்தவனை அந்திக்குள் கொன்றாகவேண்டும். அதற்குரியது சூசிமுகி என்னும் சூழ்கை. அல்லது ஓசையின்றி நெளிந்தேறும் அரவுச்சூழ்கை. இதுவல்ல… இதை உடனே மாற்றியாகவேண்டும்” என்றார். “அரசே, இனி எதையும் மாற்றமுடியாது. இதோ கதிர் எழுகிறது” என்றான் சாத்யகி. போர்முரசுகள் முழங்கின. யுதிஷ்டிரரின் உடல் நடுங்கிக்கொண்டே இருந்தது. “என்னிடம் முரசுகள் சொல்வதென்ன என்று ஒருமுறை சொற்களாலும் சொல்க… என்னால் ஓசைகளை சொற்களாக்கிக்கொள்ள இயலவில்லை” என்றார்.

சாத்யகி யுதிஷ்டிரரின் படையை நடத்திக்கொண்டுசென்று மூன்று முனைகளில் எழுந்து கௌரவர்களை தாக்கினான். கௌரவர்களின் படைத்தலைவனாகிய சார்வ◌ஃபௌமனையும் அவனுடைய ஏழு துணைவர்களையும் கொன்றான். மீண்டும் கவசநிரையிலிருந்து எழுந்து சென்று துச்சாதனனை தாக்கினான். வில்லால் பொருதி ஓர் உச்சத்தில் கதையுடன் பாய்ந்தெழுந்து துச்சாதனனை அவன் தாக்கினான். இருவரும்

சுழன்று சுழன்று அறைந்து போரிட்டனர். துச்சாதனனின் தோளில் அறைந்து அவனை வீழ்த்தினான். பீமனுடன் பொருதிக்கொண்டிருந்த துச்சகனும் துர்முகனும் துர்மர்ஷணனும் துச்சாதனனின் உதவிக்கு வந்தனர். சாத்யகி எழுந்து துச்சாதனனின் நெஞ்சை உதைத்து அப்பால் தள்ளி அவன் முகத்தில் காறி உமிழ்ந்து "கீழ்மகனே, உன் நெஞ்சக்குருதிக்காக மூத்தவர் விடாய்கொண்டிருப்பதனால் இன்று என்னிடம் உயிர் ஈயப்பெற்றாய்" என்றான். "கொல்க! கொல்க அவனை!" என்று கூவியபடி துச்சாதனன் அவனை நோக்கி ஓடிவர துள்ளி தேரிலேறி பின்னடைந்து மீண்டும் கவசக்கோட்டைக்குள் புகுந்துகொண்டான்.

திருஷ்டத்யும்னனும் துரோணரும் மோதிக்கொண்ட செய்தியை முழவுகள் அறிவித்தன. திருஷ்டத்யும்னன் "என்னை பிறப்பித்த வஞ்சினம் நீங்கள், ஆசிரியரே!" என்று கூவினான். "அதற்கென உங்களிடமே கற்ற அம்புகள் இவை... நீங்கள் நன்கறிந்த கூர் கொண்டவை. முற்றிலும் அறியாத விசை கொண்டவை." துரோணர் "போரில் தோற்றவனின் வஞ்சம் என்பது வெறும் கீழ்மை, சிறுமகனே" என்றார். "இதோ உன்னை கொல்கிறேன். உன் வழித்தோன்றல்கள் இனி இவ்வஞ்சத்தை சூடுக!" திருஷ்டத்யும்னன் ஒவ்வொரு அம்புக்கும் வசைச்சொற்களை உதிர்த்தபடியே உள்ளச்சினத்தை விசையெனத் திரட்டியபடி துரோணரை அம்புகளால் அறைந்தான். விழிகளும் கைகளுமன்றி எங்கும் அசைவே இல்லாமல் அவர் அவ்வம்புகளை காற்றிலேயே முறித்திட்டார். அவன் கொடியையும் தேர்த்தூண்களையும் உடைத்தார். அவன் கவசங்கள் உடைந்தன.

அவன் பின்னடைவதற்காக ஒருக்கியிருந்த பாதையை முன்னரே நோக்கி அங்கே இரு யானைகளை துதிக்கை அறுத்து வீழ்த்தினார். வெறிகொண்ட யானைகள் தங்கள் பக்கத்துத் தேர்களை அறைந்து சிதறடிக்கவே அங்கே படைமுகம் சிதைந்து திருஷ்டத்யும்னனின் தேர் பின்னடைய இயலாமலாயிற்று. “காக்க! பாஞ்சால இளவரசரை காக்க!” என்று பாண்டவர்தரப்பு முரசுகள் ஓங்கி ஆணையிட்டன. திருஷ்டத்யும்னனின் கவசங்கள் உடைந்தன. அவன் கேடயத்தை தன்மேல் கவிழ்த்தபடி தேர்த்தட்டில் குப்புற விழுந்தான். அந்த இரும்புப்பரப்பின்மேல் அறைந்து மணியோசை எழுப்பின துரோணரின் அம்புகள். தேர்ப்புரவிகள் தலையற்று விழுந்தன. பாகன் இறந்து வலப்பக்கம் சரிந்தான். தேர் அவனுடன் சரிய திருஷ்டத்யும்னன் கீழே குதித்து தன் படை நோக்கி ஓடினான். அவனை துரத்தித் துரத்தி அறைந்தன துரோணரின் அம்புகள். அவன் தன் காலில் அம்புபட மல்லாந்து விழுந்தான். கேடயம் அப்பால் தெறித்தது.

துரோணர் நீண்ட அம்பு ஒன்றை தன் வில்லில் தொடுத்து “வேள்விக்கனலுக்கே மீள்க, பாஞ்சாலனே!” என கூவியபடி அதை எய்த கணம் விழுந்துகிடந்த இரு யானைகளின் நடுவிலூடாக சாத்யகி புரவியில் பாய்ந்து வந்து அவ்விசையிலேயே கொக்கிக் கயிற்றை வீசி திருஷ்டத்யும்னனை கவ்வி இழுத்தெடுத்தான். அதே விசையில் அவனைச் சுழற்றி தன் குதிரைமேல் ஏற்றிக்கொண்டு இரு தேர்கள் மேல் புரவியாலேயே தாவி அப்பால் சென்றான். அவன் ஊர்ந்த புரவி விழுந்த விசையில் முன்னங்கால்கள் ஒடிந்து புரண்டு கனைத்தெழ அங்கிருந்த வீரன் ஒருவன் அதன் கழுத்தை வெட்டிச் சரித்தான். அவன் வந்த இடைவெளியை உடனே கவசப்படை மூடிக்கொண்டது. இடையிலும் தோளிலும்

புண்களுடன் திருஷ்டத்யும்னன் கிடக்க அவனை நோக்கி மருத்துவ ஏவலர் ஓடினர்.

சாத்யகி மீண்டும் யுதிஷ்டிரரை நோக்கி விரைந்தான். “என்ன ஆயிற்று? பிழைத்துக்கொண்டாரா?” என்று அவர் கேட்டார். “ஆம்” என்று சாத்யகி சொன்னான். “அவரை கொல்ல இயலாது. அவர் அருந்தவத்தால் அனலில் எழுந்தவர்” என்றார் யுதிஷ்டிரர். “யாதவனே, என் இளையோர் என்ன செய்கிறார்கள்? மந்தன் சூழ்ந்துகொள்ளப்பட்டானோ என ஐயுறுகிறேன்... பொழுதாகிக்கொண்டிருக்கிறது” என்றார். சாத்யகி “அஞ்சற்க அரசே, முரசுகள் அவர்கள் முழு விசையுடன் பொருதிக்கொண்டிருப்பதாகவே அறிவிக்கின்றன” என்றான். “நமக்கு இன்னும் பொழுதில்லை. போர் தொடங்கி இரு நாழிகைகள் கடந்துவிட்டன. நாம் இன்னும் அரணுக்குள் மீண்டுமீண்டு போரிட்டுக்கொண்டிருக்கிறோம்” என்றார் யுதிஷ்டிரர்.

அக்கணம் துரோணர் கவசப்படையின் அரணை உடைத்துக்கொண்டு உள்ளே வந்தார். அம்புகளால் எதிர்நின்றவர்களை கொன்றுவீழ்த்தியபடி யுதிஷ்டிரரை அணுகினார். யுதிஷ்டிரரின் காவலாக நின்றிருந்த கிராதர்குலத்து அரசனாகிய வியாஹ்ரதத்தன் வில்லுடன் சென்று அவரை எதிர்கொண்டான். சென்ற விசையிலேயே அவன் தலை அறுபட்டு தேரிலிருந்து விழ அவன் துரோணரின் தேருக்கு முன்னால் விழுந்து புரவிக்குளம்புகளால் மிதிக்கப்பட்டான். சாத்யகி வில்குலைத்தபடி சென்று துரோணரை எதிர்கொண்டான். அவருடைய விசையை குறைத்தாகவேண்டும் என்ற திட்டத்துடன் அவருக்குத் துணையளித்து பின்னால் வந்துகொண்டிருந்த

உத்தரகுருநாட்டின் அரசனாகிய ஜலசந்தனை கழுத்தறுத்திட்டான். துரோணர் அரைக்கணம் விழிதிருப்பிய நேரத்தில் அவர் வில்லை அறுத்தெறிந்தான்.

துரோணர் சீற்றம்கொண்டு அவனை தாக்கத் தொடங்கினார். அவருடைய நிலைபெயராமையை கலைத்தமையே வெற்றி என சாத்யகி எண்ணினான். "அரசர் பின்னடைக! அனைத்து வில்லவர்களும் அரசருக்கு துணையாக சூழ்ந்துகொள்க! முரசுகள் எழுக! எனக்கு பாண்டவ மைந்தர் துணைவரட்டும்!" என்று கூவியபடி அவன் துரோணரிடம் போரிட்டான். ஒவ்வொரு அம்புக்கும் நிகர் நின்று அவரை தடுத்தான். ஏழுமுறை அவர் வில்லின் நாணை உடைத்தான். அவருடைய வலக்காது குண்டலத்துடன் அறுந்து தெறித்தது. புரவிகளில் ஒன்று கழுத்தறுந்து கால்சோர்ந்து பிற புரவிகளால் இழுபட்டது. அவருடைய பாகனின் இடத்தோளில் சாத்யகியின் அம்புகள் தைக்க அவன் அலறியபடி தேரின் அமரபீடத்தில் வலம்சரிந்தான். அவன் துரோணரின் விழிகளை நோக்கியபடியே போரிட்டான். ஒரு சிறு விழியசைவு அவன் நெஞ்சை அதிரச்செய்தது. அதன் பின்னரே தன் விலாவில் பதிந்திருந்த அம்பை அவன் உணர்ந்தான். தேரிலிருந்து அவன் கீழே விழுந்தான்.

தன்னை காக்கும்பொருட்டு அறைகூவிய முரசொலியை சாத்யகி கேட்டான். அவனை நோக்கி துரோணரின் அம்புகள் பறவைகள் மண்ணிறங்கும் ஒலியுடன் வந்து நிலத்தில் தைக்க அவன் புரண்டு புரண்டு உடைந்த தேர் ஒன்றின் அடியில் ஒளிந்துகொண்டான். சதானீகனும் சுருதசேனனும் இருபுறத்திலிருந்தும் வந்து துரோணரை எதிர்கொண்டனர். அவனை கொக்கிச்சரடு இழுத்து அப்பால் கொண்டு சென்றது.

இருமியபோது அவன் வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் குருதி தெறித்தது. அவனை இழுத்து அமரச்செய்து கவசங்களை கழற்றினர் மருத்துவ ஏவலர். கவசங்களுக்குள் நிறைந்திருந்த குருதி மடியில் கொட்டியது. தன் குருதியின் மணத்தை ஒருவனால் தனித்தறிய முடியுமா என்ன? “ஆழ்ந்த புண், யாதவரே… தாங்கள் சற்றேனும் ஓய்வெடுக்கவேண்டும்” என்றார் மருத்துவ ஏவலர்.

“கட்டு போடுங்கள்… மது வருக… பீதர்நாட்டு எரிமது!” என்று சாத்யகி ஆணையிட்டான். அவர்கள் அந்த அம்பின் தண்டை மட்டும் பிடுங்கி எடுத்தனர். “அலகு ஆழமாக இறங்கியிருக்கிறது. தசையை அறுத்துத்தான் அதை மீட்க முடியும்” என்றார் மருத்துவர். “அது அங்கிருக்கட்டும்… கட்டு போடுக!” என்றான் சாத்யகி. அவர்கள் அந்த அம்புக்குச் சுற்றும் தேன்மெழுகிட்டு உறுதியாக்கி அதையே சேர்த்துக்கட்டி அதன்மேல் கவசங்களை அணிவித்தனர். எரிமணத்துடன் பீதர்நாட்டு மது வந்தது. குடுவைக்குள் கொதிப்பதுபோல் நுரைக்குமிழிகொண்டிருந்தது. அவன் பற்களைக் கடித்து தசையில் உருகும் மெழுகு பதியும் அனலெரிச்சலை உள்ளிழுத்து உடலில் நிரப்பி கரைத்துக்கொண்டான். பின்னர் கையூன்றி எழுந்தான். காலில் சற்றே தளர்வு தெரிந்தது. மது உடலுக்குள் இருந்து ஆவியென எழுந்து உலுக்கிக்கொள்ளச் செய்தது. விழிகளில் நீராவி படர்ந்தது.

சதானீகனும் சுருதசேனனும் பின்னடைகிறார்கள் என்று முரசுகள் அறிவித்தன. “துணைசெல்க! பாண்டவ மைந்தருக்கு துணைசெல்க!” என்று முரசுகள் முழங்கின. அவன் தேர்த்தட்டில் ஏறும்பொருட்டு படியில் கால்வைத்தபோது உடல் நிகர்நிலையிழந்து வலப்பக்கமாக சரிந்தது. தூணை

பிடித்துக்கொண்டு நின்றான். கண்களில் இமைகள் தடித்து கீழிறங்கின. வாயிலிருந்து எச்சில் கோழையாக வழிந்தது. இருமுறை குமட்டி துப்பினான். வில்லை எடுத்தபோது கால்கள் இல்லையென்றே தோன்றியது. நீர்க்குடம்போல் உடல் எதன்மேலோ நிலைகொள்ளாமல் நின்று தளும்பிக்கொண்டிருந்தது.

அவன் குருதிமணத்தை அறிந்தான். மிக அணுக்கமான மணம். மிகமிக ஆழமாக அவன் அறிந்த மணம். எவருடையது அது? எங்கு அறிந்தது? மயங்கிய எண்ணங்கள் அங்குமிங்குமென வழுக்கியலைந்து கொண்டிருக்கையில் தீச்சுட்ட தொடுகை என அவன் அறிந்தான் அது சினியின் குருதிமணம் என. அசங்கனின் மணமும் அதுவே. அது மைந்தரின் மணம். அவர்களின் வாயிலிருந்து எழுவது. வியர்த்த குழலில் நிறைந்திருப்பது. புறங்கழுத்தில், கையிடுக்கில் வீசுவது. அவன் கூச்சலிட்டபடி தேர்ப்பாகனை ஓங்கி உதைத்தான். "செல்க! செல்க!" என்று தேர்த்தட்டில் நின்று துள்ளினான். அம்புகளை செலுத்தியபடி விரைந்து சென்று துரோணரை எதிர்த்தான்.

அவனுடைய விசை அவரை முதற்கணத்திலேயே அஞ்சவைத்தது. அந்த ஒரு கணத் தளர்ச்சியிலிருந்து அவர் எழவே முடியாதபடி அவன் மேலும் மேலுமென அம்புகளால் அவரை அறைந்தான். அவருடைய கவசங்களின் இடுக்குகளிலெல்லாம் அவன் அம்புகள் அறைந்து நின்றன. விழியசைவையே கையசைவென்றாக்கிக் கொண்ட அவருடைய வல்லமையை அவன் தன் வெறியால் கடந்தான். அவர் தோளிலும் விலாவிலும் அவன் அம்புகள் தைத்தன. அவர் குருக்ஷேத்ரக் களத்திற்கு வந்த பின்னர் முதல்முறையாக தேர்த்தட்டில் குப்புற விழுந்து அம்புகளில் இருந்து தப்பினார்.

அவர் முதுகிலணிந்த கவசத்தை அம்புகள் அறைந்து உடைத்தன. சீற்றம்கொண்ட பேய்கள் என அவை அவரை முட்டி முட்டி ஆர்ப்பரித்தன. புரண்டு எழுந்து அவர் அவனை அறைந்தபோது அவன் மேலும் வெறிகொண்டு கூச்சலிட்டபடி அவரை நோக்கி வந்தான்.

துரோணர் அச்சமென்பதை முதல்முறையாக அறிந்தார். அவனுக்குள் பாதாளத்தின் கொடுந்தெய்வமொன்று குடியேறியது போலிருந்தது. விழிகள் வெறித்திருந்தன. சிதையில் எரிந்து தசையுருகும் பிணத்தின் முகம் என பற்கள் எழ வாய் இளித்து அகன்றிருந்தது. துரோணரின் உடலில் இருந்து அவர் உள்ளத்தை உணர்ந்த பாகன் தேரை பின்னெடுத்தான். அக்கணத்தில் அஸ்வத்தாமனின் அம்புகளால் கவசக்கோட்டை உடைந்து ஒரு வழி திறக்க அவர் அதனூடாக அப்பால் சென்றார். அவரை பூரிசிரவஸும் அஸ்வத்தாமனும் அம்புகளால் அரணிட்டு உள்ளிழுத்துக்கொண்டார்கள். சாத்யகி அவரை துரத்திவந்து மூடிக்கொண்ட கவசச்சுவரின் மேல் முட்டி நின்றான். “திற! திற! இழிமக்களே திறவுங்கள்!” என்று கூவினான்.

கவசப்படைக் காவலன் “மறுபக்கம் அவர்கள் மூவர், யாதவரே” என்றான். “உன்னை கொல்வேன். சங்கறுத்து உன்னை கொல்வேன்… திற!” என்று சாத்யகி தேர்த்தட்டில் ஓங்கி உதைத்தான். தேர்த்தூண்களை வில்லால் அறைந்தான். பின்னால் வந்த யுதிஷ்டிரர் “என்ன செய்கிறாய்? அறிவிலி… அங்கிருப்போர் மூன்று பெருவில்லவர்” என்றார். அவருக்குப் பின்னால் வந்த சதானீகன் “யாதவரே, உங்கள் பொறுப்பு நம் அரசரை காப்பது” என்றான். “ஆம்” என சாத்யகி தணிந்தான். தன்

உடல்மேல் சித்தம் எடையுடன் வந்து வந்தமைய கால் தளர்ந்து தேர்த்தட்டை பற்றிக்கொண்டு “ஆம்” என்றான்.

# கார்கடல் - 53

பார்பாரிகன் சொன்னான்: விந்தையான தனிமைகளால் மானுடர் நோயுறுகிறார்கள். தனிமைநோய் ஒரு பருவடிவ ஆளுமைபோல் உடனிருக்கிறது. உள்ளமும், உணர்வுகளும், எண்ணங்களும், அவற்றை இயற்றும் புலன்களும் கொண்டதாக. அதிலிருந்து தப்ப இயல்வதில்லை. அதனுடன் உரையாட முடியும். ஆகவே பூசலிட்டு அகற்ற அவர்கள் முயலக்கூடும். அதனுடன் இணைந்து தழுவி உளம்மயங்கவும் கூடும். எந்நிலையிலும் அது அகன்று செல்வதில்லை. அது நம்மிலிருந்து எழுந்து நமது இயல்புகள் அனைத்தையும் தானும் அடைந்து நம் பேருருவாகவே மாறிவிட்டிருப்பது. ஒரு போதும் நம்மால் அதை வெல்ல இயலாது.

நம்மை அதற்கு முற்றளிக்கலாம். அதன் காலடியில் தலை வைத்து ஓங்கிய கொலைவாளுக்கு கழுத்தை காட்டி ‘எந்தையே, இதோ என் கொடை’ எனலாம். முற்றளித்தவரை அது தன் உள்ளங்கைகளில் ஏந்திக்கொள்கிறது. ‘நீ என் மைந்தன்!’ என்கிறது. ‘உனக்கு அனைத்தையும் அளிப்பேன்’ என்கிறது. பல்லாயிரம் கைவிரித்து பெரும் படைக்கலங்களை ஏந்தி உடன் நிற்கிறது. நமக்கென களம் காண்கிறது. நம் எதிரிகளிடம் அச்சத்தை உருவாக்குகிறது. நமக்கு அணுக்கமானவரை நம்மேல் உளம் திரியச்செய்கிறது.

அன்னையென கனிவது அது. தந்தையென நம்மை காப்பது. தோழன் என உடனிருப்பது. நாம் விழைவதனைத்தையும் அளிக்கிறது. எண்ணம் செல்லும் ஒவ்வொரு இடத்திற்கும் ஏற்கெனவே சென்று நின்றிருக்கிறது. ஒவ்வொன்றையும் அள்ளி நம் முன்வைத்து 'இதோ! இதோ!' என்கிறது. அதன்பின் நம்மிடம் வினவுகிறது 'இன்னும் என்ன? இன்னும் எதுவரை?' எண்ணி ஏங்கி இறைஞ்சுகிறோம், திரும்பிவிடவேண்டும் என்று. நாம் அளித்தவற்றில் ஒரு துளியேனும் திரும்ப வேண்டும் என்று. நான் என எஞ்சும் ஒரு சிறு பகுதியையாவது. புன்னகையுடன் 'கொண்டவற்றை கொடுப்பதில்லை தெய்வங்கள்' என்று அது சொல்கிறது. 'கால வடிவானவை தெய்வங்கள், அறிக!' என்று நகைக்கிறது.

தோழரே, பேருருக்கொண்டவர்கள் தனித்தவர்கள். பெருங்கொடை பெற்றவர்கள் தனிமையால் நோயுற்றவர்கள். தெய்வஅருள் பெற்றவர்கள் தங்கள் வாழ்விடங்களைவிட பெரிதானவர்கள். ஆகவே புதுநிலம் தேடுபவர்கள். அடைந்தவற்றைவிட விரிந்தவர்கள். ஆகவே புதியவற்றை அறிபவர்கள். குருதிச்சுற்றத்திலும் குலப்பெருக்கிலும் விழாக்களத்திலும்கூட தனித்தவர்கள். தனித்தவர்கள் நோயுற்றவர்கள். நோயுற்றவர்கள் நோயுற்றவர்களுடன் மோதும் ஒரு பெரும் நோய்க்களம் இப்புவி. பசியற்றவர்கள் உண்ண முடியாதவர்களைக் கொன்று அங்கே வெறியாடுகிறார்கள். பெருந்தனிமைகள் சுழல்காற்றுகள்போல் இந்தப் பெருநிலமெங்கும் அலைந்துகொண்டிருக்கின்றன. ஒவ்வொன்றையும் அள்ளி இடம் மாற்றுகின்றன. எழுப்பப்பட்டவற்றை இடிக்கின்றன. இடிபாடுகளை அள்ளிக்குவித்து கோபுரங்களாக்குகின்றன. பெருந்தனிமைகள் கொண்டு இப்புவியில் நாற்களம் ஆடுகின்றது ஊழ்.

தன் தனிமை ஒரு நற்கொடை என எண்ணுகிறார்கள் இளமைந்தர். தான் தான் என தருக்கி நிமிர அதுவே வழிகோலுகிறது. பிறரை அப்பால் நின்று நோக்க, இளிவரல் கொள்ள, முற்றொதுக்கி தங்களுக்குள் ஆழ, தங்கள் ஆழங்களிலிருந்து ஒவ்வொன்றாக எடுத்து நோக்கி 'ஆம், இதுவும் நான்!' என்று பெருமிதம் கொள்ள அவர்களுக்கு அது வாய்ப்பளிக்கிறது. பின்னர் அத்தனிமை தன் ஆயிரம் கைகளால் தன்னைச் சூழ்ந்து கவ்விக்கொண்டிருப்பதை உணர்கிறார்கள். அதிலிருந்து மீள தன்னால் இயலாதோ என்று ஐயுற்ற பின் தன் வாயில்களில் ஒன்றை மெல்ல திறக்கிறார்கள். அதனூடாக ஐயத்துடன், தயக்கத்துடன் வெளியே எட்டிப்பார்த்து 'இங்குளேன்' என்கிறார்கள். 'அங்கெவர்?' என வினவுகிறார்கள். 'வருக!' என கைகாட்டுகிறார்கள். 'அருகணைக!' என்று கூவுகிறார்கள். 'எவர் அங்கே? எங்கிருக்கிறீர்?' என்று கதறுகிறார்கள். 'எவரேனும் இருக்கிறீர்களா?' என்று உளம் விம்முகிறார்கள்.

எவருமில்லை என அறிந்து அகம் கரைந்து விழிநீர் சிந்துகிறார்கள். எவருமில்லையே என வஞ்சம் கொண்டு பற்களைக் கடித்து மீண்டும் தங்களை இறுக்கிக்கொள்கிறார்கள். எவரும் தேவையில்லை என்று வீம்பு கொண்டு மீண்டும் தருக்கி எழுகிறார்கள். எவருமற்றவன் நான் என்று தனக்கே சொல்லிக்கொள்கிறார்கள். அதை ஊழ்க நுண்சொல்லென ஓராயிரம் முறை உரைத்து பெருகி எழுகிறார்கள். எவருமற்றவனாகிய நான் எனும் சொல்லிலிருந்து எவருக்குமற்றவன் நான் என சென்றடைகிறார்கள். ஏதுமற்றவனாக ஆகிறார்கள். பிற அனைவரையும் ஆக்கி புரந்து அழிப்பவன் என்று தன்னை சமைத்துக்கொள்கிறார்கள்.

மாமானுடர் இரக்கத்திற்குரியவர்கள். தெய்வங்களாடும் களத்தில் தெரியாமல் சென்று சிக்கிக்கொண்டவர்கள். மாமானுடர் புயல்களில் ஏறி பெருவிசை கொண்டுவிட்டதாக எண்ணித் தருக்கும் எளிய சருகுகள். மாமானுடர் தாங்கள் எதுவென்றே அறிந்திராத எதையோ கட்டும் பொருட்டு கல்லும் மணலுமென்றாகி தன்னை ஒப்புக்கொடுத்தவர்கள். அச்சிற்பியை உணர்ந்தாலும் அக்கைகளை அறியும் எளிமை அற்றவர்கள். மாமானுடர் இங்கு வென்று எழுந்து சொல்லில் நிறைபவர்கள். பிறிதெங்கோ முற்றிலும் தோற்றவர்கள்.

இப்புவி இங்கு வகுக்கப்பட்ட வாழ்க்கையை நினைவுகூர்வதில்லை. எல்லைகளை கடந்து சென்று பெருவீழ்ச்சிகளை அடைந்தவர்களை சொல்லில் நிலைநிறுத்துகிறது. அவர்களை நோக்கி எழும் பொருட்டு ஒவ்வொரு குழவிக்கும் ஆணையிடுகிறது. தன் எளிமையால் எல்லையுணர்ந்தவனுக்கு வானும் நீரும் ஒளியும் காற்றும் இன்னுணவுகளும் அளிக்கப்படுகின்றன. நல்லிசையும் நறுமணங்களும் கனிந்த சொற்களும் குளிர்ந்த தென்றலும் அவனை சூழ்ந்துள்ளன. தன் எல்லைக்கு அப்பால் ஓர் இலக்கை நோக்கிவிட்டவனுக்கு கடத்தலெனும் எளிய இன்பத்திற்கு அப்பால் ஏதுமில்லை. தனிமை அவனை நோக்கும் கணம் வரை மட்டுமே அவன் வாழ்கிறான். தனிமையை அறிந்தபின் அவன் தனிமையையே சுவை என, மணம் என, இசை என, தண்மை என, அழகென அறிகிறான். காற்றென, நீரென, ஒளியென, வானென, மண்ணென அவனைச் சூழ்ந்திருக்கிறது அது.

தனிமை கொண்டவன் நோயுற்றவன். தனிமையென உருக்கொண்டு மண்ணுக்கு அடியிலிருந்து எழுந்து வரும்

அக்கொடுந்தெய்வத்தை வணங்குக! ஆயிரம் கைகள் விரித்து, பல்லாயிரம் படைக்கலங்கள் ஏந்தி வரும் கருவிழிக் கன்னி அவள். குருதிச் சிவப்பு கொண்ட உதடுகளும் தண்துளியெனச் சொற்களும் இசையிமிழும் சிலம்புகளும் கொண்டவள். தென்றல் என தழுவுபவள். செவிகளில் சிரிப்பவள். துயில்கையில் முத்தமிடுபவள். கனவுகளில் காமம் விளையாடுபவள். வேர்களை தவம் செய்ய வைப்பவள் அவள். விதைகளை காத்திருக்கப் பணிப்பவள். மண்புழுக்களை ஒருகணமும் ஓயாது நெளிய வைப்பவள். ஆழத்து ஊற்றுகளில் தண்மை சேர்ப்பவள். அதற்கும் அப்பால் ஆழத்தில் அடங்கா பெருங்கனலென நிறைந்திருப்பவள். அவள் வாழ்க!

பார்பாரிகன் சொன்னான்: பூரிசிரவஸ் என்றும் உணர்ந்ததுதான் அத்தனிமை. ஆனால் அன்று புலரியில் அது இருளெனச் சூழ்ந்து, நீரெனச் செறிந்து, பாறையென இறுகி அவனை தன்னில் ஓர் வடுவென பதித்து அசைவிலாதாக்கி வைத்திருந்தது. புலரியில் எத்தனை பொழுது அங்கு நின்றிருந்தானென்று அவன் அறியவில்லை. குருக்ஷேத்ரத்தின் வெற்று நடுநிலத்திற்கு அப்பால் அவன் மெல்லிய அசைவொன்றை கண்டான். அது சாத்யகி என்று புலன்களுக்கு அப்பால் இருந்த தன்னுணர்வால் அறிந்தான். நோக்கு தொடும் அளவுக்கு ஒளியிருக்கவில்லை. ஆயினும் அவன் சாத்யகியின் நோக்கை உணர்ந்தான். அதன் பின்னரே தன் தனிமையை உணர்ந்து கலைந்தான். ஒரு சொல்லும் இல்லாத நிலையை அவன் அகம் அடைந்திருந்தது. சொற்களே மகிழ்வும் துயரும் என அவன் அறிந்திருந்தான்.

அப்பால் தனிமையின் திரையில் வரையப்பட்டு நின்ற புரவியை நோக்கி சென்று அதில் ஏறி அமர்ந்து அதன் கழுத்தை மெல்ல தட்டி வழக்கமான இடத்திற்கென உணர்த்திய பின்னர் மீண்டான். கடுந்துயில்போல் அவன் மேல் தனிமை பொழிந்து அழுத்தி உடல் எடைகொள்ளச் செய்தது. தசைகள் தளர, கைகால்கள் ஓய, அவன் புரவி மேல் படிந்தான். சீரான தாளத்துடன் கால்களை எடுத்து வைத்து புரவி சென்றுகொண்டிருந்தது. அவன் மீண்டும் தன்னை உணர்ந்தபோது விந்தையான ஓர் தனி எண்ணம் தன்னுள் எழுந்திருப்பதை கண்டான். காலையில் கலம் திறந்து நோக்குகையில் பூத்திருக்கும் முல்லை மொட்டுகள்போல. விந்தையும் விலக்கமுடியாத உண்மையுமான ஒன்று.

அவன் அதை குனிந்து நோக்கிக்கொண்டிருந்தான். நெடுநேரம் அவ்வெண்ணத்தின் விந்தையாலேயே அது முழுதுற உணர முடியாததாக இருந்தது. பின்னர் விலகி அதை உணர்ந்தபோது திடுக்கிட்டு சூழ்ந்திருந்த கௌரவப் பெரும்படையின் எப்பகுதியினரேனும் அதை உணர்ந்துகொள்கிறார்களா என்பதை நோக்கினான். பின்னர் நீள்மூச்சுவிட்டு அவ்வெண்ணத்தை ஒவ்வொரு சொல்லாக பகுத்தான். அனைத்து சொற்களும் ஒன்றுடன் ஒன்று இணைந்து ஒற்றை ஆணையென்றாகி அவன் முன் நின்றன. ‘விட்டுச்செல்க!’ எதை? இப்போரையா? இங்கிருக்கும் அனைத்து கடமைகளையும். இதுநாள் வரை கொண்டிருந்த வஞ்சங்களையும் விழைவுகளையும் பற்றுகளையும். இங்குள அனைவரையும். இவ்வுலகை. இதோ பல்லாயிரம் கோடி முகம் கொண்டு என்னைச் சூழ்ந்து அலைக்கும் காலத்தை. விட்டுச்செல்க! பிறிதொரு இடத்திற்கு. பிறிதொரு காலத்திற்கு.

ஒருபோதும் அப்படி ஓர் ஆணை தன்னுள்ளிருந்து முன்னர் எழுந்ததில்லை என்று உணர்ந்தான். ஒவ்வொரு காலையும் புவியில் பேரழகுகளால் ஈர்க்கப்படுபவனாகவே அவன் இருந்திருக்கிறான். புரவியேறி நகரின் புழுதி படிந்த தெருக்களினூடாக, குளிர்ந்த பனிப்படலங்களை சூடி நின்றிருக்கும் மலைகளை நோக்கியபடி செல்லும்போது இருத்தல்போல் இனிதான பிறிதொன்றில்லை என்றே உணர்ந்திருக்கிறான். இல்லையென்றாவதைக் குறித்து ஒருகணமும் எண்ணியதில்லை. விட்டுச்செல்வதைப்பற்றி ஒருசொல்லும் எழுந்ததில்லை அவனுள். ஆனால் எண்ணத்தொடங்கிய நாள் முதல் என்றும் அவனுடன் இருந்ததுபோல் தோன்றியது அப்போது.

விட்டுச்செல்க! எவருடைய ஆணை அது? மானுடரை ஆளும் தெய்வங்களின் ஆணையா? ஒவ்வொரு மனிதருக்கும் தெய்வங்களால் படைக்கப்பட்டு நிழலென்றும் கனவென்றும் உடனுறையும் தனித்தெய்வமா? அதற்கும் பூரிசிரவஸ் என்றே பெயர் என்கின்றன மலைநம்பிக்கைகள். அதற்கு பெயரில்லை, ஆனால் அவன் பெயரை அது மெல்ல மெல்ல தான் இழுத்து எடுத்துக்கொள்கிறது. அவனுடைய ஆடைகளில், படைக்கலங்களில், பீடங்களில், உண்கலங்களில் அது குடியேறுகிறது. ஆகவேதான் மறைந்தவனின் ஆடைகளையும் படைக்கலங்களையும் பீடங்களையும் அவனுடன் சேர்த்தே மண்மறைவு செய்கிறார்கள். அது தன்னுள்ளிருந்து எழுந்த ஆணை என்று அவன் உணர்ந்தான். எது எண்ணங்களாகவும் கனவுகளாகவும் அவனுள் விழிப்பிலும் கனவிலும் கணமொழியாது எழுந்துகொண்டிருந்ததோ அது.

அவன் அச்சொற்களை இருளில் கண்முன் என பார்த்தான். விட்டுச்செல்! விட்டுச்செல்! விட்டுச்செல்! அது தனக்குத்தானே என உரைத்துக்கொண்டிருந்தது. கூரைப் பனித்துளி சொட்டுவதுபோல. சூழ்ந்திருந்த அனைத்து ஒலிகளையும் தன் தாளத்திற்கு அது மாற்றியது. விட்டுச்செல்! விட்டுச்செல்! அந்த ஊழ்க நுண்சொல்லால் அவன் மெல்லிய உளமயக்கடைந்தான். அவனுள்ளிருந்த அனைத்து சலிப்புகளையும், சோர்வுகளையும், நம்பிக்கை இழப்புகளையும், கசப்புகளையும், ஆழத்துத் துயர்களையும் அது அகற்றியது. இனிய நினைவாக, மேலும் இனிய எதிர்பார்ப்பாக அது மாறியது. ஒவ்வொரு அடியாலும் ஒவ்வொரு கணத்தாலும் ஒவ்வொரு எண்ணங்களினூடாகவும் தான் அதை நோக்கி சென்றுகொண்டிருப்பதாக அவன் உணர்ந்தான். அதை நோக்கியன்றி பிறிதொரு வழியே இல்லை. புன்னகை முகமெங்கும் மலர அவனறிந்தான், தன்னை இளமையில் ஆட்கொண்டு, முழுதமூத்திச் சூழ்ந்துகொண்டு, பிறிதொன்று இலாதாக்கிய அப்பெருந்தனிமையிலிருந்து விடுதலை அவ்வாறு மட்டுமே நிகழ இயலும் என.

அவன் அஸ்வத்தாமனின் படைப்பிரிவை அடைந்தபோது முகம் மலர புன்னகை கொண்டிருந்தான். அஸ்வத்தாமன் "எங்கு சென்று வருகிறீர்?" என்றான். "எல்லைக்காவல்படை வரைக்கும் சென்றேன். இறுதியாக அனைத்தையும் ஒருமுறை நோக்கி மீண்டேன்" என்றான். "ஆம், அனைத்தும் ஒருங்கிவிட்டன. இன்னும் அரை நாழிகைப் பொழுது, புலரிமுரசு ஒலிக்கலாகும்" என்று அஸ்வத்தாமன் சொன்னான். "பிழை ஏதும் உண்டா, எங்கேனும் பழுதிருக்கிறதா என்று மீண்டும் ஏழு முறை நம் படை சூழ்கையை பார்த்தேன். சகடச்சூழ்கை மிக எளிதானது. எளிய சூழ்கைகளில் பிழை இருப்பது மிக மிக அரிது." பெருமூச்சுடன் தலையை அசைத்தபடி "இன்று எந்நிலையிலும்

அவர்கள் நம்மை உடைத்து உள்நுழைய முடியாது. ஜயத்ரதரை அர்ஜுனர் அணுகுவது மண்ணில் எந்த மாவீரனும் இயற்றிவிட இயலாதது” என்றான்.

பூரிசிரவஸ் “ஆம், நானும் அவ்வாறே எண்ணுகிறேன்” என்றான். “செல்க! மூன்றாவது மடிப்பில் தங்களுக்கான இடம். உங்கள் தேர் அங்கு சென்றுவிட்டது” என்றான் அஸ்வத்தாமன். பூரிசிரவஸ் தலைவணங்கி புரவியை விரைவுகூட்டி மூன்றாவது படைமடிப்பை நோக்கி சென்றான். அங்கு அவனுக்காக சலன் காத்து நின்றிருந்தான். “எங்கு சென்றிருந்தாய்?” என்று சிடுசிடுத்த முகத்துடன் கேட்டான். பூரிசிரவஸ் அருகே சென்று தலைவணங்கி “எல்லைக்காவல்மாடங்களை ஒருமுறை பார்த்துவருகிறேன், மூத்தவரே” என்றான். “காவல்மாடங்களில் பார்க்க என்ன இருக்கிறது? இன்னும் சற்று நேரத்தில் இங்கு போர் தொடங்க இருக்கிறது” என்று சலன் சொன்னான். “ஆம்” என்று பூரிசிரவஸ் சொன்னான். “இன்றுடன் இப்போர் முடிந்தால் நன்று, இளையோனே. நம் படைகள் சலித்துவிட்டன. நிலமக்களின் போர் இது, இதில் நாம் ஏன் தலைகொடுக்கிறோம் என்கிறார்கள்” என்றான் சலன்.

பூரிசிரவஸ் சினம்கொண்டாலும் ஒன்றும் சொல்லவில்லை. “நானும் அவ்வாறே எண்ணுகிறேன்” என்றான் சலன். “நிலத்தின் விரிவை நீ நம் மலைக்கு கொண்டுவந்தாய். நம் நாட்டில் இளையோர் நதிகளைப்போல என்றும் நிலத்தை எண்ணி ஏங்குபவர்கள். மூத்தோர் மலைமுடிகளை நோக்கி தவம்செய்பவர்கள்... நாம் மூத்தோரை மீறி நிலத்தில் பரவினோம். இன்று அதன்பொருட்டே அழிகிறோம்.” பூரிசிரவஸ் “ஆம்” என்றான். “முற்றிலும் வீணான ஒரு போர். அதில்

மேலும் வீணான ஓர் ஊடாட்டம் நம்முடையது. விண்ணுலகு சென்றால் நம் மூதாதையர் நம்மைக் கண்டு தலையில் அறைந்து சலித்துக்கொள்வார்கள்” என்றான் சலன். பூரிசிரவஸ் “ஆம்” என்றான். அப்பேச்சை அவன் தவிர்க்க எண்ணினான்.

அதை உணர்ந்த சலன் “உன் தேர் ஒருங்கியிருக்கிறது, சென்று ஏறிக்கொள்க!” என்றான். பூரிசிரவஸ் தேரில் ஏற படிகளில் கால்வைத்ததும் சலன் அவன் தோளைத்தொட்டு “செல்க!” என்றான். பூரிசிரவஸ் திரும்பிப்பார்த்தபோது சலன் மறுபக்கமாக திரும்பிக்கொண்டிருந்தான். சலன் தன்னை தொடுவது மிக அரிது என்பதை பூரிசிரவஸ் உணர்ந்தான். அன்று தொடவேண்டுமென்று மூத்தவருக்கு ஏன் தோன்றியது என எண்ணிக்கொண்டான். அவன் ஆவக்காவலன் அருகே வந்து “பொழுது அணைகிறது, இளவரசே” என்றான். “ஆம்” என்றபடி பூரிசிரவஸ் தன் தேரிலேறிக்கொண்டு ஆவக்காவலன் அளித்த வில்லை தரையில் ஊன்றி அதன் மேல் நுனியைப்பற்றி வளைத்து உடல்விசையை அதன்மேல் செலுத்தி நாணேற்றினான். மெல்லிய விம்மலோசையுடன் வில் நிமிர்ந்து நாணை இறுக்கியது. “ஆம்” என அவனுக்கு மட்டுமே கேட்கும் குரலில் அது முனகியது. “ஆம்” என்று அவன் சொன்னான்.

போர் தொடங்கிய சில கணங்களுக்குள்ளேயே பூரிசிரவஸ் உணர்ந்தான், அதுதான் அவன் ஈடுபடும் இறுதிப் போர் என. துரோணருக்கும் சல்யருக்கும் அரண் நின்று பாண்டவர்களின் கவசக்கோட்டையை தாக்கினான். அஸ்வத்தாமனின் இணை நின்று கோட்டைச்சுவர் பிளந்து வெளிவந்த அர்ஜுனனுடன் போரிட்டான். மீண்டும் மீண்டும் அவன் முன்னால் தோன்றிய அர்ஜுனன் அவனை அறைந்து கவசங்களை உடைத்தான். தேர்

சிதைந்து வெறும் தட்டென்றாகியது. வீசிய காற்றில் அவன் கவசங்களூடாக காற்று பீறிட்டு செவியை மூடியது. தன் கவசங்களுக்குள் குருதி ஊறி நிறைந்து வெம்மை கொண்டிருப்பதை அவன் உணர்ந்தான். ஆனால் அர்ஜுனனை நிகர் நின்று ஒரு நாழிகைப் பொழுது தன்னால் எதிர்க்கமுடியும் என்று கண்டுகொண்டான்.

எஞ்சவேண்டும் என்ற விழைவே இறுதியாக வில்லவனின் கையில் பற்றும் பிழை. அதையும் உதறிவிட்டால் அம்புகள் குறிபிழைப்பதில்லை என்று அவன் அறிந்தான். ஒருகணமும் ஒழியாமல் அர்ஜுனன் அனுப்பிய அம்புகள் அனைத்தையுமே அவன் அறைந்து வீழ்த்தினான். ஒருமுறைகூட நெஞ்சு தாழ்த்தி பின்னடையவில்லை. தன் அம்புகள் குறிபிழைக்காதெழுவதை உணர உணர மேலும் ஆற்றல்கொண்டான். அர்ஜுனனின் தோளிலைகளை உடைத்தெறிந்தான். கங்கணத்தை அறுத்தான். அவன் தொடைக்கவசத்தை உடைத்தான். மூன்று முறை அர்ஜுனன் ஊதப்படும் தழல் என உடல் வளைத்து சுழன்று அவன் பிறையம்பிலிருந்து தன் தலையை காத்துக்கொள்ள வைத்தான். அறைந்தறைந்து அர்ஜுனனை பின்னடையச் செய்து கவசப்படைகளுக்குள் மூழ்கி மறையச்செய்தான்.

ஒவ்வொரு வெற்றிக்குப் பின்னும் மேலும் மேலும் அவன் உளம் இறுகி சொல்லிழந்ததாயிற்று. வெற்றியின் பெருமிதமும் மகிழ்ச்சியும் முற்றிலும் அகன்றுவிட்டிருப்பதை உணர்ந்தான். அவ்வாறு வெற்றி ஒரு பொருட்டென தோன்றாமலான பிறகே வெற்றியை அத்தனை எளிதாக ஈட்டமுடிகிறது என்பதை புரிந்துகொண்டான். அவன் அம்புகளுக்கு முன்னால் அர்ஜுனன் விழிதிகைப்பதை அவன் அருகிலெனக் கண்டான். ஒருகணத்திலேனும் அர்ஜுனனின் உள்ளத்தில் அச்சத்தை

அவன் ஊட்டமுடிவதை அவன் உணர்ந்தான். அஸ்வத்தாமன் “ஆம், பால்ஹிகரே! உங்கள் இறுதிப் படியை ஏறிவிட்டீர்கள். இனி அர்ஜுனரும் அங்கரும் உங்களுக்கு நிகரானவர்களே. பரசுராமரும் துரோணரும் பீஷ்மரும் அமர்ந்த பீடம் அது. எழுக, தெய்வங்கள் மட்டுமே இனி உங்களிடம் நின்று பொருதமுடியும்!” என்று கூவினான். அச்சொற்கள் வேறெங்கோ வேறெதையோ நோக்கி ஒலிப்பதுபோல் இருந்தன.

புரவியில் பாய்ந்து வந்த பால்ஹிக படைத்தலைவனாகிய அசலன் “இளவரசே!” என்று கூவி அவனை நோக்கி பாய்ந்து வந்து தேரில் தொற்றி ஏறி “செல்க! அங்கு பாண்டவ மைந்தர் தங்கள் மூத்தவரை எதிர்கொள்கிறார்கள்…” என்றான். “அவருக்கு போரிடத் தெரியும்” என்று அவன் சொன்னான். “அல்ல. அவர்கள் எதிர்பாரா கணத்தில் விசையுடன் எழுந்து தாக்கி பால்ஹிகர்களின் வில்லவர் படைசூழ்கையை அழித்துவிட்டிருக்கிறார்கள். எக்கணத்திலும் அதே திறப்பினூடாக அர்ஜுனர் எழக்கூடும். எனில் தங்கள் மூத்தவரால் அங்கு நிற்க இயலாது. தாங்கள் அங்கு சென்று அவரை துணைக்க வேண்டுமென்று அரசரின் ஆணை” என்றான் அசலன். பூரிசிரவஸின் உள்ளத்திலெழுந்த எண்ணத்தை புரிந்துகொண்டு “அவ்வாணையை முரசினூடாக எழுப்ப வேண்டியதில்லை என்று அரசர் கருதுகிறார். அதை படைகள் அறிய வேண்டியதில்லை. நம் மூத்தவருக்கு அது இழுக்காகும். இயல்பாக நீங்கள் செல்வதுபோல் சென்று அவரைக் காத்து நிலைகொள்க!” என்றான்.

“ஆம்” என்று சொல்லி தேரை திருப்ப பூரிசிரவஸ் ஆணையிட்டான். அம்புகள் எழுந்தமைய கொந்தளித்துக்கொண்டிருந்த படைகளின் அலைகளினூடாக

அவனுடைய தேர் சென்றது. பாண்டவர்களின் கவசக்கோட்டை எட்டு இடங்களில் திறந்திருந்தது. சிகண்டியும், சகதேவனும், நகுலனும், திருஷ்டத்யும்னனும், சாத்யகியும், அர்ஜுனனும், பீமனும், சுருதகீர்த்தியும் கௌரவப் படைகளுடன் போரிட்டுக்கொண்டிருந்தனர். எட்டு கால்களில் ஊர்ந்து வந்து தாக்கும் சிலந்திபோல் மாறிவிட்டிருந்தது பாண்டவப்படை. ஒருகணத்தில் அதன் நான்கு கால்கள் மீண்டும் உடலுக்குள் புகுந்துகொள்ள கவசக்கோட்டை மூடி தொடர்ந்துசென்ற கௌரவர்களை தடுத்தது. உடனே வேறெங்கோ இரு வாயில்கள் திறக்க அர்ஜுனனும் பீமனும் அங்கிருந்து விசையுடன் வெளிக்கிளம்பினர். அவர்களுடன் துருபதனும் பாஞ்சாலர்களும் இருந்தனர்.

சுருதசேனனுடன் பால்ஹிகப் படை நின்று பொருதிக்கொண்டிருப்பதை அர்ஜுனன் கண்டான். அவனுக்குத் துணையாக பிரதிவிந்தியனும் சதானீகனும் போரிட்டனர். அப்போது சுருதசேனன் பின்னடையத் தொடங்கியிருந்தான். அவனுக்கு இருபுறமும் சதானீகனும் பிரதிவிந்தியனும் யௌதேயனும் நிர்மித்ரனும் நின்று போரிட்டுக்கொண்டிருந்தார்கள். சலன் வெறியுடன் கைநீட்டி “செல்க! செல்க!” என்று தன் பாகனுக்கு ஆணையிட்டுக்கொண்டிருந்தான். அவன் தேர் பாண்டவ மைந்தர்களை அறைந்து பின்செலுத்திக்கொண்டிருந்தது. ஆனால் பூரிசிரவஸ் உள்ளுணர்வால் பிழை ஒன்றை உணர்ந்தான். பாண்டவ மைந்தர்கள் பின்னடையவில்லை, பின்னடைவதுபோல் சூழ்ந்துகொள்கிறார்கள். “செல்க! விரைக!” என அவன் பாகனுக்கு ஆணையிட்டான். வில் நின்று துள்ள அம்பு தொடுத்தபடி சலனை நோக்கி சென்றான்.

மேலும் மேலும் பின்னடைந்து கவசகோட்டையின் விளிம்பு வரை சென்ற சுருதசேனன் எதிர்பாராத கணத்தில் முழு விசையுடன் தேரை முன் செலுத்தி பிறையம்பொன்றை எடுத்து தொடுத்து சலனின் வில்லை உடைத்தான். திகைத்து இன்னொரு வில்லுக்காக திரும்பிய சலன் அவர்களை குறைத்து எண்ணியிருந்தமையால் முற்றிலும் திரும்பி குனியவில்லை. அவன் தலை நீண்டு கழுத்து தெரிய, தேரொன்றின் பின்னாலிருந்து எழுந்த சதானீகன் பக்கவாட்டிலிருந்து விரைந்து வந்து பிறையம்பால் சலனின் தலையை கொய்தெறிந்தான். கையிலிருந்து வில் நழுவ பூரிசிரவஸ் திகைத்து பார்த்துக்கொண்டிருந்தான், சலனின் தலை காற்றில் எழுந்து சற்றே சுழன்று தேர்த்தட்டில் அறைந்து உருண்டு கீழே கிடந்த உடைந்த தேர்த்துண்டுகளின் மேல் விழுவதை. அவன் கூந்தல் முடிச்சுகள் அவிழ, தலைக்கவசம் உருண்டு அப்பால் தெறிக்க, விழித்த கண்களில் இறுதியசைவு கூடுவதை. உதடுகளில் எஞ்சும் சொல்லின் நெளிவு திகழ்வதை.

சலன் வீழ்ந்ததும் பால்ஹிகப் படை திகைத்து செயலற்றது. அக்கணத்தில் மேலும் வெறிகொண்டு ஒருங்கிணைந்த சதானீகனும் சுருதசேனனும் பிரதிவிந்தியனும் யௌதேயனும் நிர்மித்ரனும் இணைந்து அம்புகளால் அறைந்து பால்ஹிக இளவரசர்களை கொன்றனர். பால்ஹிக படைத்தலைவர் எழுவர் தலையறுந்து விழுந்தனர். பூரிசிரவஸ் வெறிக்கூச்சலிட்டபடி தன் வில்லைக் குலைத்து அம்பு தொடுத்து சுருதசேனனை தாக்கினான். அந்த அம்புகள் வானிலேயே சுருதசேனனால் சிதறடிக்கப்பட்டன. அவன் தன் முகத்தில் வழிந்த குருதியை கைகளால் வழித்துத் துடைத்தபின் பற்களைக் காட்டி நகைத்தபடி பின்னடைந்து பாண்டவர்களின் படைக்கோட்டைக்குள் நுழைந்துகொண்டான். கேடயங்கள்

இருபுறத்திலிருந்தும் எழுந்துவந்து சுவரென்றாகி அவனை முழுமையாக மறைத்தன. பூரிசிரவஸ் தேரிலிருந்து பாய்ந்து ஓடி சலனின் தலையை அணுகி குனிந்து பார்த்தான். அது பிறிதெவரோபோல் இருந்தது. அந்த முகத்திலிருந்தவனை அவன் முன்பு எப்போதுமே பார்த்திருந்ததில்லை.

# கார்கடல் - 54

ஏகாக்ஷர் சொன்னார்: போரில் ஒவ்வொருவரும் பிறிதொருவராக மாறிக்கொண்டிருப்பதை தொடக்கம் முதலே திருஷ்டத்யும்னன் பார்த்துக்கொண்டிருந்தான். ஆடைகளை உதிர்த்து, தோல்கழற்றி, ஊன்அகற்றி உள்ளிருந்து எழுபவர்கள்போல தோன்றினர் அனைவரும். ஒவ்வொருநாளும் அறிந்தவர்கள் உடலுக்குள் மாறிக்கொண்டிருந்தனர். இறந்தவர்கள் அனைவரும் இருப்பவர்களுக்குள் முளைத்தெழுந்ததுபோல. துயில்கையில் அவர்கள் மண்ணுக்குள் இறங்கி இருளுலகுகளில் ஆடி மீண்டும் எழுந்து வருவதுபோல. ஒருநாள் உணர்ந்தவற்றுக்கு மறுநாள் எப்பொருளும் இல்லை என்பதே படைக்களத்தின் நெறி என அவன் உணர்ந்தான்.

“இது தூயநீர். தழுவி குளிரச்செய்து தூய்மை அளிக்கிறது. இது குருதி. நீர்மையின் அனல். ஒவ்வொருவரையும் எரித்து உருக்கி மீட்டு வார்க்கிறது” என்று துருபதர் அவனிடம் சொன்னார். முதல் நாள் குருக்ஷேத்ரத்தை வந்தடைந்து ஆங்காங்கே அமைந்த பின்னர் அந்தியில் குறுங்காட்டில் முள்சூடி நின்றிருந்த கருவேல மரத்தின் அடியில் அமர்ந்து அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். துருபதர் மடியில் வாளை வைத்து

புழுதியில் கால்நீட்டி அமர்ந்திருந்தார். காற்றில் அவருடைய தாடியும் குழல்கற்றைகளும் பறந்துகொண்டிருந்தன. விழிகளை இருள் நிறைந்திருந்த குறுங்காட்டின்மேல் பதித்திருந்தார். “போர்க்களத்தை வந்தடைவது வரைதான் வஞ்சங்கள் விசையுடன் இருக்கும் என்று நூல்கள் சொல்கின்றன. போர்க்களத்தில் அங்குள்ள நெறிகளை நடத்தும் தெய்வங்கள் ஆள்கின்றன. அங்கு வந்தவர்களின் உள்ளங்களை ஆளும் தெய்வங்களும் படைக்கலங்களைக் கொண்டு விளையாடும் தெய்வங்களும் இணைந்துகொள்கின்றன. பின் அவையே அனைத்தையும் முடிவு செய்கின்றன. அவை வஞ்சங்களை அறிவதில்லை. அவற்றுக்கு நேற்றுகளும் நாளைகளும் இல்லை.”

“தன் வஞ்சத்தை நோன்பெனக்கொண்டவர், அதை முற்றவைத்து தவம் என்று ஆக்கிக்கொண்டவர் மட்டுமே பெருங்களத்தில் அதை ஈடேற்றுவர். மைந்தா, இப்பெரும்போர் இங்கு வந்த ஒவ்வொருவரையும் உருமாற்றிக்கொண்டிருக்கிறது, பழைய நகைகள் பொன்னுக்கு மீண்டு புது அச்சில் மறுவடிவு கொள்வதுபோல். இங்கு எவரும் நேற்றை நினைவுறுவதுபோல் தெரியவில்லை. விட்டுவந்த எதுவும் எவருடனும் இல்லை. எய்தும் கணக்குகளையும் நான் காணவில்லை. இங்கிருந்து மீள்வதைப் பற்றிய எண்ணம்கூட எவரிலும் இருப்பதாகத் தோன்றவில்லை” என்றார் துருபதர். அவன் அவருடைய நோக்கு பதிந்திருந்த குறுங்காட்டை தானும் நோக்கிக்கொண்டிருந்தான். அங்கிருந்து அஞ்சிய விலங்குகளின் ஓலங்களும் முரலல்களும் சருகுக்காலடிகளும் கேட்டுக்கொண்டிருந்தன. காற்று உடலில்லா விலங்கென இலைகளை உலைத்தபடி ஊடுருவி ஓடியது.

“எண்ணுக, நாம் இங்கு வந்தது மண்ணுக்காக அல்ல! பாஞ்சாலத்தின் ஐந்துநீர் பெருகும் களத்திற்கு அப்பால் நமக்கென்றொரு நிலம் இருக்க இயலாது. இருந்தாலும் அதை நம்மால் ஆள முடியாது. இப்போரால் நாம் வெற்றிச்சிறப்போ குடிப்பெருமிதமோ கொள்ள வேண்டியதில்லை. இப்பாரதவர்ஷத்தின் தொன்மையான ஐந்து ஷத்ரிய குடிகளில் ஒன்று நமது. நமது முன்னோர் ஆயிரம் நூல்களை சொற்களால் நிறைக்கும் வெற்றிகளையும் புகழையும் அடைந்துவிட்டிருக்கிறார்கள். நாம் இங்கு வந்தது வஞ்சத்தின் பொருட்டு மட்டுமே. என் குருதி கலந்த நஞ்சு நீ என உருவெடுத்து இக்களத்தில் நின்றுள்ளது. நான் உதிர்த்த விழிநீருக்கு நிகர்செய்யும் பொருட்டன்றி வேறு எதன்பொருட்டும் நீ நிலைகொள்ளவில்லை என்று உணர்க! ஒவ்வொரு காலையும் விழித்தெழுகையில் அவ்வஞ்சினத்தை இழுத்து உன் தலை மேல் முடி என சூடிக்கொள். உன் தெய்வம் என்று தலைமேல் கொள். உன் நிழலென்று உடனிறுத்திக்கொள்.”

“ஆம், ஒவ்வொரு நாளும் அது அகன்று அகன்று சென்றிருக்கும். ஒவ்வொரு முறையும் அறியாத முகம் கொண்டு நின்றிருக்கும். அனைத்துக்கும் அப்பால் அது கணந்தோறும் பொருளின்மை கொண்டிருக்கும். ஆயினும் நீ அதை இழந்தால் இப்போரை முற்றாக இழந்தவனாவாய். இங்கிருந்து நான் விண் நீங்குகையில் என் வஞ்சம் எஞ்சியிருக்குமெனில் எனக்கு பிறிதொரு பிறப்புண்டு. இவ்வஞ்சத்துடன் மறுபடியும் கருவுறைவேன் எனில் அது நீங்கா பெருந்துன்பம் சூடி எழும் வாழ்வென்றே அமையும்” என்று துருபதர் சொன்னார். “தந்தையென இப்புவியில் உனக்கு நான் ஆணையிடுவது இது ஒன்றே. மைந்தனென நீ எனக்கு அளிப்பதும்

பிறிதொன்றுமில்லை. பழிகொள்க! குருதியால் என் வஞ்சத்தைக் கழுவி தூய்மைசெய்க!” அவர் கலைந்து எழுந்தமைந்து தன் ஆடையை சீரமைத்துக்கொண்டார். அவர் விழிகளின் செவ்வொளி அரையிருளில் தெரிந்தது.

திருஷ்டத்யும்னன் “ஆம், தந்தையே. நான் ஒவ்வொரு நாள் விடியும்போதும் நாளின் இறுதி அணைவின்போதும் அவ்வஞ்சத்தையே எண்ணிக்கொள்கிறேன். அதில் விழித்து அதில் துயில்கிறேன். இந்தக் களத்தில் நூறு திட்டங்களுடன், நூறாயிரம் சொற்களுடன் அவையாடுகையில்கூட அடியில் அவ்வஞ்சம் நின்றுகொண்டுதான் இருக்கிறது. அவ்வஞ்சம் நிறைவேறாமல் இப்புவியிலிருந்து நான் அகலப்போவதில்லை” என்றான். துருபதர் பெருமூச்சுவிட்டு மிக மெல்ல தளர்ந்து “எண்ணுகையில் மிகமிகச் சிறிதென்றுதான் தோன்றுகிறது. படைமுன் என் சிறுமையை நிகழ்த்தியவன் இன்று என் மகளின் கொழுநன். அவனும் அவன் உடன்பிறந்தாரும் வெற்றிகொண்டு வாகை சூடுவதற்காகவே இங்கு உயிர் அளித்து போரிட வந்துள்ளனர் என் மைந்தரும் படையினரும். என் செல்வமும் படையும் இங்கு வந்து குவிந்திருக்கிறது. ஆனால் என் வஞ்சம் முழுக்க அவரிலேயே குவிந்திருக்கிறது” என்றார்.

“ஒவ்வொரு நாளும் நான் கேட்டுக்கொள்வதுண்டு, அவ்வஞ்சத்தின் உச்சம் என்ன என்று. அதற்கு விடை ஒன்றே. நான் அவராக முயன்றவன். அவரல்ல நான் என்று கண்டு பின்திரும்பியவன். என் கீழ்மையின் விளைவாகவே அவர் என் மேல் சீற்றம்கொண்டார். அனைத்தும் தொடங்குவது என்னிடமே. நான் வெறுப்பது என்னில் அக்கீழ்மை நிகழ்ந்த கணத்தைத்தான்.” துருபதரை நோக்காமல் திருஷ்டத்யும்னன்

சொன்னான் “ஆம், எப்போதுமே பெருவஞ்சங்கள் நம் கீழ்மையை நாம் நாணுவதிலிருந்தே தொடங்குகின்றன. மேலும் மேலும் வஞ்சம்கொண்டு நாம் மறைத்துக்கொள்வது நமது பிழைகளையே.” அவன் அவ்வாறே சொல்வான் என அறிந்திருந்தும் அவர் நடுக்கு கொண்டார். பின்னர் “நான் மறுக்கவில்லை” என்றார். “என் இயல்பென்று எழுந்த அச்சிறுமையைக் கண்டு இன்றும் உளம் குமட்டுகிறேன். ஆனாலும் என்னால் துரோணர் மீதான வஞ்சத்தை கடக்க இயலவில்லை.”

“ஏனெனில் நான் கொள்வதற்கு பிற இலக்கெதுவும் இப்புவியில் இல்லை” என அவர் சொன்னார். “நெடுங்காலமாக இவ்வஞ்சத்தை சுமந்தலைந்துவிட்டேன். என் உடனுறைத் தெய்வம்போல அது நின்றிருக்கிறது. அதற்கு என் ஊனுடலை, உயிரை, ஆத்மாவை அளிப்பேன் என்று சொல்லளித்துவிட்டேன். இனியொன்றும் செய்வதற்கில்லை.” துருபதரை நோக்கி திருஷ்டத்யும்னன் சொன்னான் “தந்தையே, தாங்கள் எனக்களித்த ஆணை இப்பிறவியின் என் இலக்கு. ஆயினும் ஒன்றுரைக்க விரும்புகிறேன், இந்த வஞ்சம் நிறைவேறும்போது நீங்கள் பிறவிநிறைந்து விண்ணுலகு ஏகப்போவதில்லை. அப்போது உங்கள் வஞ்சத்தால் மறைக்கப்பட்டிருக்கும் சிறுமை மேலெழுந்து வரும், உங்கள் கீழ்மையை நீங்கள் மேலும் கூர்வலியாக உணரவைக்கும் பிறிதொன்று இன்னும் ஆழத்திலிருந்து எழுந்து வரும்.”

துருபதர் தலை நடுங்கிக்கொண்டிருக்க அவனை நோக்கினார். “அது இப்புவியில் நீங்கள் பேரன்பு கொண்டிருப்பது துரோணரிடம் மட்டுமே எனும் உண்மை” என்றான் திருஷ்டத்யும்னன். துருபதர் வலக்கை இழுபட உடல்

அதிர்ந்தார். “எக்கணம் துரோணர் களம்படுகிறாரோ அக்கணத்தில் நீங்கள் அனைத்திலிருந்தும் விடுபடுவீர்கள். நெஞ்சுலைந்து விழிநீர் வார களத்தில் நின்றிருப்பீர்கள். இங்கு துரோணரன்றி பிறிதெவரும் உங்களுக்கு ஒரு பொருட்டல்ல என்று உணர்வீர்கள். பின்னர் அக்கடனை தீர்ப்பதற்காக மீண்டும் பிறந்தெழுவீர்கள். துரோணரின் உடன்குருதியினராக எங்கோ நீங்கள் மீண்டும் எழலாம். அல்லது துரோணரின் பிறவி எதிரியாக நிகழலாம்” என்றபின் அவரை நோக்காமல் “தெய்வங்கள் புன்னகைக்குமென்றால் ஒருவேளை அவரும் நீங்களும் தந்தை மைந்தன் என்றும் பிறப்பெடுக்கலாம்” என்றபடி எழுந்து குடில்களை நோக்கி நடந்தான்.

துருபதர் உடல் குறுக்கி கைகளைக் கோத்து தலை குனிந்து அமர்ந்திருந்தார். மரத்தடியிலிருந்து அகல்கையில் அவரிலிருந்து ஒரு மெல்லிய விம்மலோசை எழுந்தது என்று அவனுக்கு தோன்றியது. அல்லது மூச்சொலி. துயரமோ ஆறுதலோ நிலைமீளுதலோ எதுவோ ஒன்று.

அரவான் சொன்னான்: போர்மூண்ட பின்னர் துருபதர் ஒவ்வொரு நாளும் குறுகிக்கொண்டே சென்றார். ஒருகட்டத்தில் முன்பு துரோணரால் சிறுமையுற்று வஞ்சம்கொள்ள துடித்து கங்கைக்கரையினூடாக ஐந்துநீர்க்கூடல்களை நோக்கி சென்ற நோயாளியாகவே மாறினார். திருஷ்டத்யும்னன் அக்கதைகளை சூதர்கள் பாடி கேட்டிருந்தான். உடல் சிறுத்து, தசைகள் வற்றி, சிறு புழுவென மாறி, இரு விழிகள் மட்டும் அனலென்றெரிய, தூளியில் படுத்திருந்த துருபதரை ஏவலர்கள் தூக்கிக்கொண்டு சென்று ஐந்துநீர்க்கூடல்களிலும் முழுக்காட்டிக் கொண்டுவருவதன் சித்திரத்தை பலமுறை அருகென,

மெய்யென கண்டிருந்தான். ஒருமுறை இரவில் குடிலை இயல்பாகத் திறந்து மஞ்சத்தில் படுத்துக்கொண்டிருந்த துருபதரை கண்டபோது ஒருகணம் எவர் எனத் துணுக்குற்று பின்னர் அவர் அந்த வடிவை மீண்டும் சென்றடைந்திருக்கிறார் என்று தெளிந்தான்.

துருபதர் கருக்குழவிபோல் உடலை வளைத்து சுருண்டு படுத்திருந்தார். மூச்சு எழுந்து அமைந்துகொண்டிருந்த சீர்துயிலிலும் முகம் வஞ்சத்தின் வெறிமுனையில் சுழித்து நெளிந்துகொண்டிருந்தது. அவர் உதடுகளில் ஏதோ சொல் நிகழ்ந்துகொண்டிருப்பதுபோல் தோன்ற ஓசையிலாக் காலடிகளில் அணுகி குனிந்து அவரை பார்த்தான். அச்சொல் துரோணர் என்றிருக்கும் என்று அவன் எண்ணினான். அல்ல என்று தெளிந்தபோது பிறிதெது என ஐயுற்று முழந்தாளிட்டு அமர்ந்து மேலும் அருகே செவி கொண்டுவைத்தான். செவியால் அதை அறியமுடியாதென்று உணர்ந்து விழிநட்டு அவ்வசைவை நோக்கினான். அவன் அறியாத ஏதோ சொல். அவரும் அறியாததாகவே அது இருக்கக்கூடும்.

பின்னர் எழுந்து சலிப்புடன் வெளிவந்தான். திரும்பிப்பார்த்தபோது உடல் வற்றி, விழி எரிய, வஞ்சம் உடலெடுத்ததுபோல் அவர் அங்கு கிடப்பதை கண்டான். இக்களத்தில் கொல்லப்படுவது ஒன்றே அவர் வாழ்வுக்கு நிறைவளிக்கும். தெய்வங்களே, அவ்வஞ்சம் நிறைவேறிய பின்னர் இவர் கொல்லப்படுவதாக என்று வேண்டிக்கொண்டான். அன்று மீண்டும் வானோக்கி விண்மீன்கள் மேல் விழிநிலைக்கவிட்டான். காற்று சூழப் பறந்துகொண்டிருந்தது. அவன் களம்பட்ட கௌரவ மைந்தர்களை எண்ணிக்கொண்டிருந்தான். அவர்கள் எங்கிருந்தோ அவனை

நோக்கிக்கொண்டிருப்பது போலிருந்தது. அவர்களை ஏன் எண்ணினோம் என அவன் நிலைமீண்டபின் வியந்தான். திரும்பி தன் குடிலுக்குச் சென்றபோது வேறெதிலோ எண்ணம் தொட்டலைந்தபோது உணர்ந்தான், முற்றிலும் வஞ்சமற்ற அவர்களின் விழிகள் தனக்கு எவ்வகையில் பொருட்டு என்று.

துரோணர் மறுபக்கம் மாறிக்கொண்டிருப்பதை அவன் பார்த்தான். குருக்ஷேத்ரப் போர் தொடங்கிய பின்னர் பன்னிரண்டு முறை அவன் துரோணருடன் வில் கோத்தான். அவர் எதையும் அறியாதவர்போல, அங்கு நிகழும் அனைத்திற்கும் அப்பால் அமைந்திருப்பவர்போல தோன்றினார். எப்போதும் போர்க்களத்தில் அவரிடம் ஒரு புன்னகை இருந்தது. களச்சூழ்கைகளில் அவர் ஆணைகளை விடுப்பதில்லை. போரின்போது அவரிடமிருந்து வஞ்சினங்கள், சூளுரைகள் எழுவதுமில்லை. அவருடைய கைகளும் கண்களும் போரை நிகழ்த்த அதை அவர் அறியாதவர் போலிருந்தார். அவருடைய அந்த விலக்கமே அவருடன் பொருதுபவர்களை அஞ்சச் செய்தது. அவருடைய கண்களையும் முகக்குறிகளையும் நோக்கி கைகள் இயற்றப்போவதென்ன என்று எவராலும் உய்த்துணர இயலவில்லை. கைகளையும் அம்புமுனைகளையும் மட்டுமே நோக்கி அவருடன் போரிட வேண்டியிருந்தது. ஆனால் அப்போது மிக அருகே நின்று அவர் அப்போரை கூர்ந்து நோக்கிக்கொண்டிருப்பதாக தோன்றி சித்தம் பிரிந்து நிலையழிந்தது.

எப்போரிலும் எவரும் துரோணரை அம்பால் அறைய இயலவில்லை. களமெழுந்த பிறர் அனைவருமே தலைக்கவசங்கள் அணிந்திருந்தனர். துரோணர் மட்டுமே சுருட்டி தலைமேல் கட்டிய வெண்கூந்தலும் நீண்டு மார்பில்

தொங்கிய தாடியுமாக வெறும் தலையுடன் களத்திற்கு வந்தார். அது ஓர் அறைகூவலென்று தோன்ற அவருடன் போரிடும் ஒவ்வொருவரும் அவருடைய தலை நோக்கியே அம்புகளை எய்தனர். முதல் இரண்டு நாட்களிலேயே அவரது தலையை நோக்கி ஓர் அம்பு கூட சென்றடைய இயலாது என்பதை அர்ஜுனன் கண்டுகொண்டான். பிற அனைவருக்கும் வலை நடுவே வைத்த இரை என அத்தலை ஈர்ப்பு அளித்து அதை நோக்கியே அம்பு தூக்கச் செய்து உயிர் பலி கொண்டது.

திருஷ்டத்யும்னன் முதல் மூன்று முறை அவருடன் போர்புரிந்தபோது தன் அம்புகளால் அவர் கழுத்தை அறுக்க முயன்றான். அம்பு எடுப்பதற்குள், அவ்வெண்ணம் நெஞ்சில் எழுவதற்குள், அவர் அதை அறிந்துவிட்டிருந்தார். அவன் எடுத்த அம்பு நாணில் எழும்போது ஒருகணத்திற்கு முன்னரே அதை வெல்லும் அம்பு அவர் கையில் எழுந்து விண்ணில் பறந்துவிட்டிருந்தது. குழந்தைகளின் விளையாட்டில் ஈடுபடும் முதியவர் போலிருந்தார். அவனுடைய அம்புகளை அவருடைய அம்புகள் உடைத்து சிதறடித்தன. பலமுறை அவன் அம்பை உடைத்தபின் அவருடைய அம்பு வந்து அவன் வில்லையும் அம்பறாத்தூணியையும் சிதறடித்தது. அவனுடைய கவசங்களை அவர் பலமுறை உடைத்தெறிந்தார். பலமுறை அவன் பாகனை கொன்றார். தேர்ப்புரவிகளைக் கொன்று அவன் தேருடன் கவிழ்ந்துவிழச் செய்தார். வெற்று நிலத்தில் அவன் தப்பியோடியபோது அவன் காலடிபட்ட இடங்களிலெல்லாம் அவருடைய அம்புகள் வந்து தைத்து நின்று நடுங்கின.

தப்பி ஓடி தன் படையை அடைந்து பிறிதொரு தேரில் ஏறிக்கொண்டு திரும்பிப்பார்த்தபோது தான் வந்த வழியில் வரப்பில் நாணல்கள் செறிந்து நிற்பதுபோல் அவருடைய

அம்புகளின் நிரையை கண்டான். அவர் தன்னுடன் விளையாடுகிறார் என்று எண்ணி சீற்றம்கொண்டான். பின்னர் அறிந்தான், அவர் தன்னை கொன்றிருக்கக்கூடுமெனில் முதல்நாள் முதல் போரில் அவருக்கு நேர்நின்றபோதே அது நிகழ்ந்திருக்கும் என்று. அவர் தன்னை மைந்தனென்றும் மாணவன் என்றும் மட்டுமே கொள்கிறார் என்று அவன் அறிந்தான். போர்க்களத்தில் அவனுடன் பேசுகையில் எல்லாம் "பாஞ்சாலனே" என்று அவர் அழைத்தார். ஏழாவது முறை அவருடன் போரிடுகையில் அவர் "துருபதனே!" என அழைத்தபோது அவன் நெஞ்சு நடுங்கியது. "துருபதனே, செல்க! இங்கு எதுவும் நாம் அளிக்கும் பொருள் கொண்டதல்ல" என்று அவர் சொன்னபோது உடைந்த வில்லும், சிதைந்த அம்புத்தூளியும், சரிந்து நின்ற தேருமாக அவன் அவர் முன் பணிந்து உயிர்கோரும் நிலையில் இருந்தான்.

புன்னகையுடன் அவனை நோக்கி "செல்க!" என்று மீண்டும் சொல்லி துரோணர் தேரை திருப்பிக்கொண்டார். அன்று அவன் உணர்ந்தான், அவன் தன் உடலில் கொண்டிருப்பது துரோணரால் கொடையளிக்கப்பட்ட உயிரை என. முன்னரும் பலமுறை அது அவ்வாறு அளிக்கப்பட்டிருந்தது என்பதை அவன் தனக்குத்தானே உணர்ந்தான். அன்றிரவு தன் பாடிவீட்டில் புரண்டு படுத்தபடி அவன் துரோணரை எண்ணிக்கொண்டான். துரோணரின் குருகுலத்தில் அவன் வில் பயின்றபோது ஒவ்வொரு முறையும் அவன் தோள்களையும் கைகளையும் பிடித்து இலக்கை நோக்கி நிறுத்தி தலைக்குப்பின் தன் முகத்தை கொண்டுவந்து அவனுக்குள் இருந்து எழும் குரல் என "ஒன்றென குவிக! இதை வென்றபின் அடைவதொன்றுமில்லை என்று கொள்க! வெல்லாவிடில் எவர் முன்னும் தோற்கவில்லை என்றுணர்க! இங்குள்ள

அனைத்தையும் வெறும் விளையாட்டென மாற்றிக்கொள்பவனே வெல்கிறான்” என்று அவர் சொன்னார்.

அவன் ஒருமுறை அவரது கால்களைக் கழுவி பணிவிடை செய்துகொண்டிருக்கையில் “ஆனால் பெருவஞ்சங்களே பெருவீரர்களை உருவாக்குகின்றன என்கிறார்களே?” என்று கேட்டான். “அல்ல, பெருவஞ்சங்களை சுமந்தலைபவர்கள் வீரர்கள் அல்லர். அவை பாறைகள்போல் திரண்டு அவர்களின் ஐம்புலன்களையும் அடைத்துக்கொள்கின்றன. அறிக, வஞ்சத்தால் அல்ல, விலக்கத்தால் வீரர்கள் உருவாகிறார்கள்!” என்று துரோணர் சொன்னார். “ஆனால்…” என்று அவன் மீண்டும் சொல்ல “மைந்தா, பெருவீரர்களையும் யோகிகளையும் குறித்து சூதர்கள் பாடுகிறார்கள். பெருவீரர்களும் யோகிகளும் இவ்வுலகிலிருந்து துறந்து துறந்து சென்று அந்நிலையை அடைந்தவர்கள். சூதர்களோ இவ்வுலகிலிருந்து ஒருகணமும் அகல இயலாதவர்கள்” என்றார்.

சிரித்தபடி “பல்லாயிரம் ஆண்டுகளாக பாரதவர்ஷத்தில் இதுவே நிகழ்ந்துகொண்டிருக்கிறது. இங்கிருந்து அகலாதோர் இங்கிருந்து அகன்றோரை பாடிப் பாடி இவ்வுலகச் சொற்களில் நிலைநிறுத்துகிறார்கள். உணர்க, இங்குள்ள அனைத்து நூல்களிலும் யோகியரையும் வீரரையும் பற்றி எழுதப்பட்டுள்ள அனைத்துமே பிழையானவை! அவை அவர்களை இங்குள்ள வாழ்க்கையுடனும், இவையென நம்மைச் சூழ்ந்துள்ள அனைத்துடனும் தொடர்புபடுத்தும் பொருட்டு உருவானவை மட்டுமே. நாமறிந்தவற்றைக்கொண்டு அப்பாலுள்ளவற்றை புரிந்துகொள்ள முயற்சிக்கிறோம். அன்னத்திலும் பொன்னிலும் காமத்திலும் நிலத்திலும் நிறைந்திருக்கும் சொற்களைக் கொண்டு வெட்டவெளியின் விடுதலையை

விளங்கிக்கொள்வதற்கு மண்ணிலிருந்து எழுகின்றன தொல்பாடல்கள். பெரும்காவியங்கள் என்றாகி அவை அவைப்பீடம் கொள்கின்றன” என்றார்.

“அவை பயனற்றவையென்று கூறமாட்டேன். அவை இங்குள்ள மக்களுக்கு இவற்றுக்கெல்லாம் அப்பால் ஒன்று உள்ளதென்பதை ஒவ்வொரு கணமும் நினைவுறுத்திக்கொண்டிருக்கின்றன. இங்குள்ள அனைத்தும் அந்த அப்பால் உள்ள ஒன்றால்தான் மதிப்பிடப்படுகின்றன என்பதை கற்பிக்கின்றன. இப்பெருநிலம் இங்கு இவ்வாறு இவற்றில் ஆழ்ந்து உவந்து திளைத்தபடி அப்பால் அப்பால் என்று கனவுகொண்டிருக்கிறது. இவையனைத்திலிருந்தும் பிறந்துவிழும் இளமகவிடம் அக்கதைகள் சொல்கின்றன, இவையனைத்தினூடாக அறிக பிறிதொன்றை என. அப்பாலுள்ள ஒன்றே இவை என. ஒன்றொன்றாக தொட்டுச் சென்றடைக இவையெதுவும் அல்லாத அதை என. வெல்வது என்பது விடுதலையை சென்றடைவதே என. இயற்றியவன் இயற்றப்பட்டவற்றிலிருந்து முற்றாக விலகி நிறைவுகொள்கிறான் எனில் இங்கிருக்கும் எதிலும் இவற்றை இயற்றியோன் இல்லை. இவை அவனுடைய ஒரு தருணம் மட்டுமே. இவை அவனை நோக்கி சுட்டும் அடையாளம் மட்டுமே.”

துரோணருடன் இருக்கையில் திருஷ்டத்யும்னன் உணர்ந்த ஒவ்வாமை ஒன்று இருந்தது. கற்பிக்கையில் மயில் பீலிவிரிப்பதுபோல் பிறிதொருவராக மாறி அனைத்தும் அறிந்து, அறிந்த அனைத்தையும் அளிக்கும் பேரளி கொண்டு அவர் தோன்றினார். குறும்பலவின் நிழலில் அமர்ந்திருக்கும் தென்திசை முதல்வன் மானுட வடிவெடுத்ததுபோல. பின்னர்

அங்கிருந்து இறங்கி எளிய தந்தையாக, உலகுநாடும் அந்தணனாக உருக்கொள்கையில் தன் சொற்களில் இருந்து தன்னை மேலும் மேலும் விலக்கி அகன்றார். ஆசிரியனாக அன்றி வேறெவ்வகையிலும் அவரை எண்ணிக்கொள்ளக்கூடாதென்று அவன் தனக்கே ஆணையிட்டான். “பறக்கையிலேயே பறவை, பாய்கையில் மட்டுமே புரவி. ஆசிரியன் கற்பிக்கையில் மட்டுமே அவன்” என்று அவனிடம் கிருபர் சொன்னார். “அவரது காலடிகளை மட்டுமே நெஞ்சில் நிறுத்திக்கொள்க! ஆசிரியர் தன் அடிகளால் உன் அகம் அளந்து அப்பால் செல்பவர். அடிகளுக்கு அப்பால் ஆசிரியரை நோக்குபவன் கல்விக்கு கரையிடவே முயல்கிறான்.”

துரோணர் ஆசிரியரென்று களத்திற்கு வந்தார். ஒவ்வொரு நாளும் உருமாறி எளிய போர்வீரனாக ஆகிக்கொண்டிருந்தார். அவரை அவ்வாறு சீற்றமும் சிறுமையும் கொள்ளச் செய்வதற்காகவே கௌரவப் படையினர் அவரைச் சூழ்ந்து மன்றாடுகிறார்கள் என்று திருஷ்டத்யும்னனுக்கு தோன்றியது. துரோணர் கொண்ட மாற்றம் அவரின் ஒவ்வொரு அசைவிலும் வெளிப்பட்டது. அதை அந்தப் படைப்பெருக்கில் மிக அணுக்கமாக உணரக்கூடியவனாக அவனே இருந்தான். முதல் நாள் தேரில் தவத்தில் அமர்வதுபோல் அவர் களத்தில் தோன்றியபோதே காற்று படும் சுடரில் கருமை தோன்றி மறைவதுபோல் ஒரு சில அசைவுகளில் அவருள் இருந்த தந்தையும் அந்தணனும் தெரிந்து செல்வதை அவன் கண்டிருந்தான். பின்னர் போரின்போது ஆடி நோக்குகையில் நிழலும் அதிலெழுந்தாடுவதுபோல் அந்தப் பிறிதொரு துரோணர் அடிக்கடி தோன்றிக்கொண்டிருந்தார். பின்னர் அந்தப் பிறிதொருவரே நிலைத்து அவன் அறிந்த தென்திசை

முதல்வன் ஆடியின் ஆழத்தொலைவில் சிறு துளிச்சுருள் என மாறி அகன்றார்.

யுதிஷ்டிரரை சிறைகொள்ள வந்த அன்று அவன் கண்ட துரோணர் அந்தணர் திரிந்த ஷத்ரியர். ஷத்ரியனாக விரும்பும் அந்தணனும், வணிகம் செய்யும் ஷத்ரியனும், ஏவல் இயற்றும் வைசியனும், கட்டற்றவனாக கான் விரும்பும் சூத்திரனும், விலங்குகளைபோல் மாற விழையும் நிஷாதனும், மண்ணில் அகழ்ந்து புழுவென்று சுருண்டு கொள்ளும் விலங்கும், முட்டையென்றாகிச் சுருளும் புழுவும் தங்கள் நிலையிலிருந்து கீழிறங்குபவை என்ற தொல்நூல் கூற்று துரோணரால் ஒருமுறை அவனுக்கு கற்பிக்கப்பட்டது. அதை சொல்கையில் அவன் உள்ளத்தில் எழுந்த ஐயத்தை உணர்ந்தவராக அவன் கண்களை நோக்கி புன்னகைத்து அவர் சொன்னார் “ஆனால் எந்த இசைக்கலமும் அதன் வடிவால் அதற்குள்ளிருக்கும் காற்றுக்குள் ஓர் இசையை நுண்வடிவில் வைத்திருக்கிறது. எவ்விரலானாலும், எந்தக் குரல் நுழைந்தாலும் அதனுள் இருக்கும் அவ்விசையை மீட்ட முடியும். வீணை முழவாவதில்லை, முழவில் யாழெழுவதும் இல்லை.”

போர்க்களத்தில் துரோணர் தவமொழிந்து வஞ்சமும் வீம்பும் கொள்ளுந்தோறும் அவரை எதிர்ப்பது எளிதாவதை திருஷ்டத்யும்னன் உணர்ந்தான். முகம் நோக்கி வஞ்சினம் உரைத்து அவரை தாக்க முடிந்தது. வெறிகொண்டு தாக்கிச் செல்கையில் ஒருகணத்திலேனும் அவர் விழிகளுக்குள் சினம் மின்னி அணைவதை அவன் கண்டான். நூறு முறை சினம் எழுந்தணையும்போது ஒருமுறை அச்சமும் தோன்றி மறைவதை அவன் உணர்ந்தான். ஒவ்வொரு அறிதலும் அவனை ஆற்றல் கொண்டவனாக்கியது. போர் தொடங்கிய

நாள் முதல் அவன் துரோணரை தேடிச்சென்று தாக்கவில்லை. இயல்பாக இருவரின் விழைவும் ஒன்றையொன்று நாடியதுபோல் அவர்கள் களத்தில் சந்தித்துக்கொண்டனர். அவர்கள் வில்கோத்துக்கொண்ட மறுகணமே சூழ்ந்திருந்த அனைவரும் அவனை நோக்கலாயினர். இப்போது நிகழும் அது, இதோ இக்கணம் என எண்ணி காத்திருந்தனர்.

ஒவ்வொருமுறையும் அவன் அவரிடமிருந்து மீள்கையில் உடல் ஓயும் சலிப்பையும் விந்தையானதோர் நிறைவையும் அடைந்தான். மீண்டும் மீண்டும் என அவன் உள்ளிருந்து பிறிதொன்று நிமிர்ந்து எழுந்தது. ஆனால் விழைந்து திட்டமிட்டு அவன் அவரை நோக்கி செல்லவில்லை. அவரை அஞ்சுகிறேனா என்று தன்னுள் கேட்டுக்கொண்டான். இல்லை இல்லை என்று நூறு முறை மறுத்தாலும் ஆமென்று ஒரு ஒலியும் அவனுள் எழுந்துகொண்டேதான் இருந்தது. பின்னர்தான் அவன் அவரை எண்ணி, தேடிச் செல்லலானான். எட்டு முறை அவன் அவரை களத்தில் சந்தித்தான். ஒருமுறை அவரை விற்களால் அறைந்து பின்னடையவும் செய்தான். அன்று திரும்பி வருகையில் அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான் “ஆம், அது நிகழும்.” அச்சொற்கள் அவன் கொண்ட அனைத்து அக அலைச்சல்களையும் அணைத்து அவனை அமைதிப்படுத்தின. அம்பின் கூர்நுனியை கைவிரலால் வருடுவதுபோல் மெல்லிய கிளர்ச்சி ஒன்றை மட்டும் எஞ்சவைத்தன.

# கார்கடல் - 55

பார்பாரிகன் சொன்னான்: துரோணருக்கும் துருபதருக்கும் இடையேயான போர் மிக இயல்பாகவும் மிகமிக தற்செயலாகவும் நிகழ்ந்தது. அது நிகழாதொழிய இயலாதென்பதுபோல அது தொடங்கிய தருணத்திலேயே தோன்றியது. குருக்ஷேத்ரப் போர் தொடங்கிய நாள் முதலே அவர்கள் இருவரும் களத்தில் மோதிக்கொண்டேதான் இருந்தனர். பாறை மேலிருந்து காட்டுயானைமேல் கல் வீசி சீண்டுவதுபோல துருபதர் எப்போதும் பாதுகாப்பான இடத்தில் இருந்துகொண்டே துரோணரிடம் மோதினார். எந்நிலையிலும் பின்வாங்க இடம் வைத்திருந்தார். ஒவ்வொருமுறையும் தன்னைக் காக்கும் துணைப்படைகளை எச்சரிக்கையுடன் இருபக்கமும் நிறுத்திக்கொண்டார். ஒவ்வொரு போருக்குப் பின்னும் அவர்களில் பாதிபேர் உயிரிழக்கத்தான் அவர் மீண்டுவந்தார். மீண்டும் புதிய வீரர்களுடன் புதிய வஞ்சினத்துடன் கிளம்பிச்சென்றார்.

முதல் நாள் போருக்குக் கிளம்புவதற்கு முன் அவர் உடல் நடுங்கிக்கொண்டிருப்பதை திருஷ்டத்யும்னன் பார்த்தான். அவரால் படைக்கலங்களை கையில் ஏந்தமுடியவில்லை. அவருடைய தனிக்குடிலில் அவருக்கு கால்களில் இரும்புக்குறடைக் கட்டிக்கொண்டிருந்த ஏவலன் “அரசே” என்றான். அவருடைய கால்கள் நடுங்கியதனால் அவனால் தோல்பட்டையை முடிச்சிட இயலவில்லை. துருபதர் “ஆம்” என்றார். அருகே நின்றிருந்த திருஷ்டத்யும்னன் “தாங்கள் இன்று ஆசிரியரை எதிர்கொள்ள வேண்டியிருக்காது, தந்தையே. இன்று அவர்களை நாம் மதிப்பிடவே போகிறோம்… நமது நாள் வரும்” என்றான். எப்போதும் அவன் தன் உள்ளத்தை அணுக்கமாகத் தொடர்பவன் என அவர் அறிந்திருந்தார்.

அவ்வாறு அவன் வெளிப்பாடு கொள்கையில் உவகையடைவதும் அவர் இயல்பு. அன்று அவர் சீற்றம்கொண்டார். “நான் அஞ்சவில்லை...” என்றார். “நான் உயிருக்கோ மைந்தர்துயருக்கோ தயங்கவில்லை. இனி நான் இழப்பதற்கொன்றுமில்லை என்றே இங்கு வந்துள்ளேன்.”

“இல்லை, நான் தாங்கள் அஞ்சுகிறீர்கள் என எண்ணவில்லை” என்றான் திருஷ்டத்யும்னன். அவர் தளர்ந்து நீள்மூச்செறிந்து “உண்மையில் நான் உளம்கொள்ளா உணர்வுகளால் தவிக்கிறேன். என் வாழ்நாளெல்லாம் காத்திருந்த தருணம் அணைந்துள்ளது. இதற்கப்பால் எனக்கு வாழ்வில்லை. தோற்று நான் அழியக்கூடும். வென்று தருக்கினேன் என்றாலும் என் வஞ்சம் இல்லாத வாழ்க்கையை நான் தொடர முடியாது. இங்கே அனைத்தையும் உதறிவிட்டு கானேகுவேன். வடக்கிருந்து உயிர்விடுவேன். ஆம், ஐயமே வேண்டாம். இந்தக் களத்திற்குப் பின் எனக்கு வாழ்க்கை இல்லை” என்றார். “ஆனால் இந்தத் தருணம் என்னைவிட மிகப் பெரியது என்று உணர்கிறேன். இதன் முன் நான் சிறுதூசுபோல் அதிர்வுகொள்கிறேன்.”

திருஷ்டத்யும்னன் “தந்தையே, நாம் நம் எதிரிகளை தெரிவுசெய்யவேண்டும் என்று ஆசிரியர் துரோணர் ஒருமுறை சொன்னார். எதிரியளவுக்கே நம்மை பெரிதாக்குகின்றன நாம் வணங்கும் தெய்வங்கள். அறத்தின் தெய்வங்கள், வஞ்சத்தின் தெய்வங்கள், சிறுமையின், கீழ்மையின் தெய்வங்கள்” என்றான். துருபதர் நிமிர்ந்துநோக்கி “நான் கொண்ட வஞ்சம் கீழானது என எண்ணுகிறாயா?” என்றார். “ஆம், அதில் ஐயமே இல்லை எனக்கு. அனைத்து வஞ்சங்களும் கீழ்மையானவையே” என்றான் திருஷ்டத்யும்னன். துருபதர் “ஏன்?” என்றார்.

“அறநெறிகளைப் பற்றி என்னிடம் சொல்லவேண்டியதில்லை. நான் அனைத்தையும் கற்றிருக்கிறேன். எனக்கான விடை அவை எவற்றிலும் இல்லை.” திருஷ்டத்யும்னன் “அறநெறியின்பாற்பட்டு சொல்லவில்லை. மானுடனை மேம்படுத்தும் எதுவும் அவன் வாழ்வு நிகழும் களத்திற்கு அப்பால்தான் இருக்க முடியும். தொடர்ந்து தன் எல்லைகளைக் கடந்தே அவன் அங்கே சென்றடையமுடியும். வஞ்சம் கொண்டவர்கள் இறந்தகாலத்தின் பிணையில் இருக்கிறார்கள்” என்றான்.

துருபதர் பெருமூச்சுவிட்டு “ஆம்” என்றார். “ஆம்” என மேலும் சொன்னார். “ஆனால் நான் மாற்றி எண்ணப்போவதில்லை. இதோ இப்போது என் உள்ளம் கொந்தளித்துக்கொண்டிருக்கையில்கூட இவ்வுணர்வுகளால் எப்படி எச்சமில்லாமல் நிறைக்கப்பட்டிருக்கிறேன் என்பதையே உணர்கிறேன். இது இல்லையேல் நான் எவ்வளவு வெறுமை கொண்டிருப்பேன் என்றே எண்ணிக்கொள்கிறேன்.” முதல் நாள் களத்தில் துருபதர் துரோணரைச் சந்திக்க எண்ணவே இல்லை. அவரை ஒழியவேண்டும் என்றும் எண்ணவில்லை. ஆனால் ஒழிவார் என படையினர் எண்ணியிருந்தனர். ஒழியவேண்டும் என திருஷ்டத்யும்னன் விழைந்தான். அவர்களின் படைசூழ்கையில் அவர் துரோணரை சந்திக்க எந்த வாய்ப்பும் இல்லாமலிருந்தது. ஆனால் அவர்கள் வில்லுடன் சந்தித்துக்கொண்டார்கள்.

போர்முனையில் துருபதரைக் கண்டதும் துரோணர் புன்னகைத்து “நலமாக இருக்கிறாயா, பாஞ்சாலனே?” என்றார். “நீங்கள் அளித்த புண் என்னை நலமாக வைத்திருக்கிறது, அந்தணரே” என்றார் துருபதர். “என் உடலை, உள்ளத்தை

புண்படுத்தினீர்கள். என் நாட்டை வெட்டிப் பிளந்தீர்கள். என் வஞ்சத்திற்கு நிகர்செய்யும்பொருட்டே இங்கே வில்லுடன் களமெழுந்திருக்கிறீர்கள்." துரோணர் சிரித்து "வில்லின்றி நான் வாழ்ந்த நாளே இல்லை" என்றார். "ஆம், ஆனால் போருக்கு வில்லுடன் எழுந்தமையாலேயே என் கையால் அல்லது என் மைந்தன் கையால் தலைவெட்டி வீழ்த்தப்படும் வாய்ப்பை அளிக்கிறீர்கள். அதற்கு நான் நன்றிகொண்டிருக்கிறேன்" என்றார் துருபதர். வெறுப்புடன் நகைத்து "பார்ப்புப்பழி என் குடியைத் தொடருமென நான் இனி அஞ்சவேண்டியதில்லை" என்றார்.

துரோணர் அந்தச் சொல்லால் சினமடைந்தாலும் சிரிப்பை விரித்து "சொல்லுக்கு நிகராக வில்லும் பேசவேண்டும்..." என்று அவரை அம்பால் அறைந்தார். அப்போர் மூண்ட சற்றுநேரத்திலேயே துருபதர் அறிந்தார், துரோணர் எவ்வகையிலும் அவரால் எதிர்க்கப்பட உகந்தவர் அல்ல என்று. துரோணரின் உடலில் அவருடைய அம்புகளில் ஒன்றுகூட படவில்லை. ஆனால் அவருடைய வில்லும் அம்பறாத்தூணியும் உடைந்து விழுந்தன. கொடியும் கொடித்தூணும் உடைந்தன. பாகன் அவரை பின்னெடுத்துக் கொண்டுசென்றான். அவரை தொடர்ந்து வந்து அறைந்து கவசங்களை உடைத்து பாய்ந்தன துரோணரின் அம்புகள். படைத்திரளுக்குள் வந்த துருபதர் தளர்ந்து தேர்த்தட்டில் விழுந்துகிடந்தார்.

திருஷ்டத்யும்னன் தன் தேரிலிருந்து புரவியில் பாய்ந்தேறி அவர் அருகே சென்று இறங்கி "தந்தையே" என அழைத்தான். அவருடைய கவசங்களை கழற்றிக்கொண்டிருந்த மருத்துவஏவலர் "புண் பெரிதல்ல, இளவரசே. ஆனால் குருதியிழப்பு உள்ளது" என்றார். திருஷ்டத்யும்னன் "தந்தையே,

அவர் பாரதவர்ஷத்தின் பெருவீரர்களில் ஒருவர்” என்றான்.
“ஆம்” என்றபடி துருபதர் புரண்டார். “ஆனால் இப்போர் எனக்கு நம்பிக்கையை ஊட்டுகிறது. மெய், அவரை நான் அரைநாழிகைப் பொழுதுகூட எதிர்க்க இயலாது. ஒற்றை அம்பையேனும் அவர் உடலில் தைக்க எந்நாளும் என்னால் இயலாது. அவரை சினம்கொள்ளச் செய்யக்கூட இயலுமா என்று அறியேன். ஆனால் நான் ஒன்று அறிந்தேன், அவர் முன் என்னால் தயங்காமல் நிற்க முடிகிறது. அவரை நேருக்குநேர் நோக்கிய பின்னரும் என் வஞ்சம் அவ்வண்ணமே இருக்கிறது.”

அவன் முகத்தில் வந்த மாற்றத்தை நோக்கிவிட்டு துருபதர் தொடர்ந்தார். “உண்மை, நான் அஞ்சிக்கொண்டிருந்தது இதையே. அவர்முன் நின்றால் என்னில் அந்தப் பழைய தோழன் எழக்கூடும் என. இவையனைத்தும் வெறும்பொருள் கொண்டவையே என நான் எண்ணக்கூடும் என. அவரைக் கொல்ல என் வில் எழுமா என்றே ஐயம் கொண்டிருந்தேன். அதை இன்று உறுதிசெய்தேன். அவரை நோக்கி எழுந்த ஒவ்வொரு அம்பிலும் என் வஞ்சச்சொல் இருந்தது. அவரை நோக்கி அம்பெய்கையிலேயே நான் மெய்யான உவகையை அடைகிறேன். மைந்தா, இந்தப் போரில் அவரைக் கொன்றாலொழிய நான் நிறைவடைய மாட்டேன். அதை இன்று உறுதிசெய்துகொண்டேன்.” திருஷ்டத்யும்னன் சலிப்புடன் பெருமூச்சுவிட்டான். “இந்தப் போர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பொருளை அளிக்கிறது, இது எனக்கு அளிக்கும் மெய்மை ஒன்றே. நான் எவ்வண்ணம் உயிர்துறக்கவேண்டும் என முடிவெடுக்கும் நாற்களம் இது.”

அதன்பின் நாளும் அவர் தொடர்ந்து துரோணருடன் போரிட்டுக்கொண்டிருந்தார். இருவரும் முன்னரே

உறுதிசெய்துகொண்டதுபோல அறியாத விசைகளால் சுழற்றியடிக்கப்படுகையிலும் அவர்கள் சந்தித்துக்கொண்டார்கள். எதிர்கொண்ட முதற்கணமே எங்கோ நிறுத்திவிட்டிருந்த போரை தொடங்கினார்கள். ஒருகணத்தில் முன்னரே முடிவெடுத்திருந்ததுபோல துருபதர் பின்னடைந்து விலக துரோணர் வஞ்சினமோ வசையோ உரைக்காமல் உறைந்த முகத்துடன் திரும்பிச்சென்றார். “உங்களை அவர் கொன்றிருக்க முடியும்” என்று ஒருமுறை திருஷ்டத்யும்னன் சொன்னான். “ஆம், முதல்நாளே அவரால் என்னை கொல்லமுடிந்திருக்கும். ஆனால் அவர் கொல்லவில்லை. அன்று கொல்லாதொழிந்தமையால் இனி என்னை அவர் கொல்லப்போவதில்லை” என்றார் துருபதர். “ஏன்?” என்று அவன் கேட்டான். “அவர் அஞ்சுவது பழியை. அவர் என்னை கொன்றால் ஏதோ ஒன்று நிகர்செய்யப்படாதாகிறது. அவரைப்போன்ற ஒருவர் இப்பிறவியில் எக்கணக்கையும் எஞ்சவிட்டுச் செல்ல விரும்பமாட்டார்” என்றார் துருபதர்.

அதை திருஷ்டத்யும்னனால் புரிந்துகொள்ள முடியவில்லை. துருபதர் புன்னகைத்து “இப்புவியில் அவரை என்னளவு புரிந்துகொண்ட பிறர் இருக்கவியலாது…” என்றார். “பிறகு ஏன் போர்புரிகிறார்?” என்று திருஷ்டத்யும்னன் எரிச்சலுடன் கேட்டான். “அவர் அறிய விரும்புகிறார், அது யார் என. என் அம்பினாலா, அல்லது உன் அம்பினாலா?” துருபதர் கசப்புடன் புன்னகைத்து “அவர் சாகவிரும்புவது தன் மாணவனின் கையால். அதுவே அவருக்கு புகழ்சேர்ப்பது. அது தன்னாலன்றி தான் வெல்லப்படவில்லை என்று நிறுவும் என எண்ணுகிறார்” என்றார். திருஷ்டத்யும்னன் “அதுவே நிகழுமென எண்ணுகிறேன்” என்றான். “அவர் தன் முதல் மாணவனுக்கு ஏதோ நுண்சொல்லை அளித்திருப்பதாக சொல்லப்படுகிறது.

எங்ஙனம் அவரை அவன் கொல்லக்கூடும் என்னும் பொருள் அதில் ஒளிந்திருக்கிறதாம்” என்று துருபதர் சொன்னார். “அதை அவர் செய்யக்கூடுமென்றுதான் எண்ணுகிறேன்.”

ஆனால் ஒவ்வொருநாளும் துருபதர் தெளிந்துவந்தார். “ஒவ்வொரு போருக்குப் பின்னரும் நான் மேலும் ஆற்றல்கொண்ட வில்லவன் என்று உணர்கிறேன். மைந்தா, என் ஆசிரியர் அக்னிவேசர் அல்ல, துரோணரே. அவரிடம் நான் கற்றுக்கொண்ட அனைத்தும் இப்போரில் என்னுள் இருந்து உயிர்கொண்டு எழுகின்றன. இப்போர்கள் உண்மையில் என் பயிற்சிக்களங்கள்.” மெல்ல மெல்ல துரோணர் உருமாறி சீற்றமும் வஞ்சமும் கொண்டவராக ஆனபோது துருபதர் உவகை கொண்டார். “அவர் நெகிழ்கிறார். தனக்கெனக் கொண்டிருந்த கவசங்களை அவர் உதிர்த்துக்கொண்டிருக்கிறார். அது நன்று. எனக்கு மிக அணுக்கமானவராக ஆகிறார். அன்று குருகுலத்தில் இரு இளையோராக வில்லாடிய அகவையை நாங்கள் சென்றடையக்கூடும். அங்கு நின்று மீண்டும் சில அம்புகளை எய்துகொள்ளக்கூடும்” என்றார் துருபதர்.

யுதிஷ்டிரரை கைப்பற்றும்பொருட்டு துரோணர் வந்தபோது அவரை துருபதர் எதிர்த்து தடுத்தார். துரோணர் எய்த அம்புகளை தன் அம்புகளால் ஒடித்தெறிந்தார். முதல்முறையாக துரோணரின் நெஞ்சக்கவசத்தில் இடுக்கில் முதல் அம்பை தைத்து நிறுத்தினார். “அவருடைய குருதியை அறிந்தேன். மிகமிக இனியது. நாவில் எரிவது. அதை சுவைத்துக்கொண்டு இன்றிரவை கழிப்பேன். இப்போது தன் குடிலில் அந்தப் புண்ணில் மெல்ல விரலோட்டியபடி அவர் என்னைப்பற்றி எண்ணிக்கொண்டிருக்கிறார்” என்று துருபதர் நகைத்தார். கையில் மதுக்குடுவையுடன் “இன்று நான்

நெஞ்சுகரைய குடிப்பேன். கீழ்மகன்போல் களியாடுவேன். இன்று வெற்றியென்றால் என்ன என்று சுவையறிந்துவிட்டேன்” என்றார்.

அவன் தோளைப்பற்றி உலுக்கி வெறிகொண்டு விழித்த கண்களுடன் “அவரை என் அம்பு தாக்கமுடியும். அவரே அதை எதிர்பார்க்கவில்லை. அவர் கண்களில் அரைக்கணம் வந்துசென்ற அந்தத் திகைப்பு... அது போதும். தெய்வங்களே, மூதாதையரே, அதை காணும்பொருட்டு எனக்கு வாழ்நாள் அளித்தீர்கள். ஒருகணமேனும் வென்றுதருக்க எனக்கு வாய்ப்பளித்தீர்கள்” என்றார். குரல் உடைய அவர் விம்மி அழுதார். நெஞ்சை பற்றிக்கொண்டு பீடத்தில் அமர்ந்தார். “மூடா, மது. எரியும் பீதர்நாட்டு மது” என ஏவலனை அழைத்தார். அன்று வெளியே நடந்தபோது திருஷ்டத்யும்னன் ஏனோ இரு கைகளையும் இறுகப்பற்றி நெரித்துக்கொண்டிருந்தான். விண்மீன்களை அண்ணாந்து நோக்கி அவன் நெடும்பொழுது நின்றிருந்தான்.

முந்தைய போரில் அவர் துரோணருக்கு நிகராக ஒரு நாழிகைப் பொழுது நின்றிருந்தார். துரோணர் எரிச்சல்கொண்டிருக்கிறார் என உணர்ந்து மேலும் மேலும் அவரை சினம்கொள்ளச் செய்தார். “இக்களத்தில் என் பழியை நீங்கள் உங்கள் குருதியால் நிகர்செய்வீர்கள், அந்தணரே” என்று கூவினார். “விண்ணுக்குச் செல்கையில் உங்கள் தந்தையின் தீச்சொல்லைப் பெற்று இழிவடைவீர்கள்” என்றார். அவரை சீற்றம்கொள்ளச் செய்யும் சொற்களுக்காக தேடிக்கொண்டே இருந்தார். “இக்களத்தில் உங்கள் மைந்தன் களம்படுவான். அவன் தலைமேல் என் காலால் உதைப்பேன்” என்றபோது “கீழ்பிறப்பே!” என்று கூவியபடி துரோணர் அம்புகளால் அவரை

அறைந்தார். அவர் சிரித்தபடி அந்த அம்புகளை முறித்து அவர் நெஞ்சில் தன் அம்பை அறைந்து நாட்டினார்.

அன்றைய போரில் துரோணர் பாண்டவர்களின் படைக்கோட்டைக்குள் சிக்கிக்கொண்டபோது துருபதர் வீறுடன் எழுந்துசென்று துரோணரை தாக்கினார். தொலைவில் நின்று அவர்களின் போரைக் கண்டபோது இருவரும் ஒருவரே என்று ஒருகணத்தில் தோன்ற திருஷ்டத்யும்னன் வியந்து வில்தாழ்த்திவிட்டான். அது விழிமயக்கா என ஐயம்கொண்டு கூர்ந்து நோக்கினான். பின்னர் அது ஏன் என புரிந்துகொண்டான். துருபதரின் அசைவுகள் அனைத்தும் துரோணர் போலவே இருந்தன. வில்லெடுக்கும் கைசுழற்சி, நாணிழுத்துத் தொடுக்கும் நெளிவு, எய்தபின் மீளும் அசைவு அனைத்திலும் முற்றான ஒற்றுமை இருந்தது. அவர் துரோணரிடம் கற்றுக்கொண்டவை அவை. ஒவ்வொருநாளும் எண்ணத்தில் நிகழ்த்தி நிகழ்த்தி தீட்டிக்கொண்டவை. ஆனால் அங்கே களத்தில் ஒருவரோடொருவர் எதிர்கொண்டு நிற்கையில் அவர் விழிகளால் துரோணரை அணுவணுவாக உழிந்து உருமித் தொடர்ந்து ஒற்றி எடுத்து தன் உடலென்றாக்கிக் கொண்டிருந்தார்.

பின்னர் அவன் அறிந்தான் துரோணர் ஒரு படி பின்னடைந்துவிட்டிருப்பதை. நாளும் போரிட்டுப் போரிட்டு தன் வஞ்சத்தை உள்ளத்திலிருந்து எடுத்து வில்லிலும் அம்பிலும் மட்டுமென்றாக்க துருபதரால் இயன்றது. அவர் முகம் தெளிந்துவந்தது. சொற்களில் தெளிவு குடியேறியது. தனிமையிலிருக்கையில் அவர் இளங்காதலர்களுக்குரிய கனவுநிலை கொண்டிருப்பதை திருஷ்டத்யும்னன் கண்டான். மாறாக துரோணர் ஒவ்வொரு அம்புக்கும் வசைச்சொல்

உதிர்த்தார். அம்புகள் தவறினால் காலால் தேர்த்தட்டை உதைத்தார். அம்புபட்டு ஒருவன் வீழக்கண்டால் இதழ்வளைய புன்னகைத்தார். அவருக்கும் துருபதருக்குமான தனிப்போர் ஒரு நாழிகைப் பொழுது நீடித்தபோது மெல்ல சூழ நின்றிருந்தவர்கள் வில்தாழ்த்தி நோக்கத்தொடங்கினர்.

திருஷ்டத்யும்னன் அருகணைந்து துரோணர் மெல்ல மெல்ல பின்னடைவதை கண்டான். பின்னர் தான் பின்னடைவதை உணர்ந்து சீற்றம்கொண்டு அவர் அரிய அம்புகளால் அறைந்து துருபதரை பின்னடையச் செய்தார். அக்கணத்தில் திருஷ்டத்யும்னன் உட்புகுந்து தந்தையை காத்தான். துருபதர் பின்னடைந்து பிளந்த படைச்சுவரினூடாக அப்பால் சென்றார். துருபதர் வில்லைத் தூக்கி “வென்றேன்... வென்றுவிட்டேன்!” என்றார். அவருடைய தோளிலும் விலாவிலும் தைத்த அம்புகளிலிருந்து குருதி வழிந்தது. “கட்டு போட்டுக்கொள்க, தந்தையே!” என்றான் திருஷ்டத்யும்னன். “அவரை கொல்வேன்... இந்தக் களத்தில் என் வஞ்சத்தை நிறைவடையச் செய்வேன்!” என்று துருபதர் சொன்னார். திருஷ்டத்யும்னன் “இறையருள் கூடுக!” என்றான். துருபதர் தேர்த்தட்டில் கால்தோய அமர்ந்து “ஆம், நான் அறிவேன். அவரை அறுதியாக வெல்ல என்னால் இயலாது. இவ்வெற்றிகளை என் தெய்வங்கள் எனக்கு பரிசளிப்பதே அவரால் கொல்லப்படவேண்டும் என்பதற்காகத்தான்” என்றார்.

ஏகாக்ஷர் சொன்னார்: கர்ணனும் பீமனும் நிகழ்த்திய போரை திருஷ்டத்யும்னன் நோக்கி நின்றான். படைத்துணைகள் தேவையில்லை என்னும் நிலையை அவர்கள் இருவருமே அடைந்துவிட்டிருந்தார்கள். இரு ஒலிகள் ஒன்றுடன் ஒன்று

மோதிக்கொண்டதுபோல என்னும் விந்தையான ஒப்புமை அவனுள் தோன்றியது. பீமன் வென்று வென்று முன்செல்வதை அவன் கண்டான். அது கர்ணன் அளிக்கும் இடம்தானோ என ஐயுற்றான். எக்கணமும் அரவு சீறி படமெடுக்கக் கூடும். ஆனால் கர்ணனின் விழிகளை ஒரு கணம் நோக்கியபோது அவன் அறிந்தான், கர்ணனின் கையால் பீமன் உயிர்துறக்க மாட்டான் என. அவன் உள்ளத்தின் எடை அகன்றது. கர்ணனைக் கொல்ல பீமனால் இயலாதென்றும் அறிந்திருந்தான். அப்போரில் ஆர்வமிழந்து பின்னடைந்து “இழப்புகள் இன்றி பொருதுக... கௌரவப் படையில் ஒரு விரிசல்... நாம் தேடுவது அதையே. அதனூடாக உள்நுழைந்து செல்க...” என்று ஆணையிட்டான்.

“ஆலமரத்து வேர் பாறையில் நுழைவதுபோல” என்று அந்த திட்டத்தை அன்று காலை அவன் சொன்னபோது அர்ஜுனன் எந்த உணர்ச்சியும் இன்றி கேட்டிருந்தான். “ஒரு படையை எந்தப் பிழையும் இல்லாது கட்டமுடியாது. போர்க்களத்தில் அதில் இடைவெளிகள் விழும். விரிசல்கள் தோன்றும். கல்லை உடைப்பதற்குரிய வழி அதன் பரப்பில் எடைமிக்க கூடத்தால் ஓங்கி ஓங்கி அறைந்துகொண்டே இருப்பதுதான். அதில் விரிசல் விழுந்து உடைவு தோன்றுகையில் மட்டுமே அது அங்கே உடையக்கூடுமென நாம் அறிவோம். உடையத் தொடங்கியபின் அத்தனை அடிகளும் அவ்வுடைவை விரிவாக்குதலையே செய்யும். அறைக! விரிசல்களை உருவாக்கி உள்நுழைக! இன்று நம் வெற்றி அவர்களின் படைகளுக்குள் நுழைந்து மையத்தை சென்றடைவது மட்டுமே.”

யுதிஷ்டிரரின் அழைப்பு முழங்கக்கேட்டு திருஷ்டத்யும்னன் தன் தேரிலிருந்து புரவியில் பாய்ந்தேறி விரைந்தான். செல்லும்

வழியிலேயே கையசைவால் படைநகர்வுக்குரிய ஆணைகளை பிறப்பித்துக்கொண்டிருந்தான். அவனைக் கண்டதும் யுதிஷ்டிரர் “என்ன செய்கிறீர்கள்? எங்கிருக்கிறீர்கள்?” என்று சீறினார். “கூறுக, அரசே!” என்றான் திருஷ்டத்யும்னன். “நான் சாத்யகியை இளையவனிடம் அனுப்பினேன். அங்கே பாஞ்சஜன்யமோ தேவதத்தமோ ஒலிக்கவில்லை. என்ன ஆயிற்று என்று பார்த்துவரும்படி சொன்னேன்... அவனிடமிருந்தும் செய்தி இல்லை” என்றார் யுதிஷ்டிரர். எரிச்சலுடன் “அவருக்கு இங்கே உங்களைக் காக்கும் பொறுப்பு அளிக்கப்பட்டது” என்றான் திருஷ்டத்யும்னன். “ஆம், ஆனால் இந்தக் கவசக்கோட்டையே எனக்கு பாதுகாப்பு. கௌரவர் இன்று இளையவனை சூழ்ந்துகொள்ளக்கூடும். அவன் எடுத்துள்ள வஞ்சினம் அவர்களை அச்சுறுத்துகிறது என எண்ணுகிறேன்... செல்க, அவனுக்கு என்ன ஆயிற்று என்று நோக்குக!” என்றார். “அரசே, நானும் இங்கிருந்து சென்றால்...” என்று அவன் சொல்லத் தொடங்க “என்னுடன் என் மைந்தர் இருக்கிறார்கள். உடனே சென்று மீண்டு வருக... என் இளையோருக்குத் துணையாக நிலைகொள்க! இது என் ஆணை!” என்றார் யுதிஷ்டிரர்.

தலைவணங்கி திருஷ்டத்யும்னன் புரவியைக் கிளப்பி விரைந்துசென்றான். செல்லும் வழியெங்கும் சாத்யகி அவ்வழியே சென்ற தடயங்களை கண்டான். சாத்யகிக்கும் துச்சாதனனுக்கும் நடந்த போரைப்பற்றி ஒரு வீரன் ஓடிவந்து அவனிடம் சொன்னான். “யாதவரால் கதைவீச்சில் பெருந்தோளராகிய இளைய கௌரவரை வெல்ல இயலுமென எவருமே எதிர்பார்க்கவில்லை, இளவரசே. எட்டு சுற்றுகள் அப்போர் நிகழ்ந்தது. பொருதுவது பீமசேனரா என்றே நாங்கள் ஐயுற்றோம். இறுதியில் பாய்ந்தெழுந்து துச்சாதனரின் தலையை அறைந்தார். அவர் தலைசுழன்று விழ நெஞ்சை

மிதித்து அறைந்து தலைபிளக்க முயல்கையில் துரியோதனர் தன் கதையை வீசி அவர் கதையை உடைந்து தெறிக்கவைத்தார். பாய்ந்து பின்னடைந்து கேடயநிரைக்குள் மீண்டார். தம்பியர் இருவரால் துச்சாதனர் தூக்கி எழுப்பப்படுவதைக் கண்டு நாங்கள் வெற்றிக்கூச்சலிட்டோம். வெற்றி அணுகிக்கொண்டிருக்கிறது. இங்குள்ள ஒவ்வொரு வீரரும் பீமசேனரும் பார்த்தருமாக மாறிக்கொண்டிருக்கிறார்கள்.”

அவன் சென்றுகொண்டிருந்தபோது மேலும் மேலும் சாத்யகியின் வெற்றிகள் பற்றிய செய்திகள் வந்தபடியே இருந்தன. அவனுடன் வந்தபடி பாஞ்சாலத்து வீரன் ஒருவன் “கிருதவர்மருக்கும் யுயுதானருக்கும் நிகழ்ந்த போரை நாங்கள் படைக்கலம் தாழ்த்தி நின்று நோக்கினோம். அதை போர் என்று சொல்லலாகாது, அது ஒரு நடனம். இளைய யாதவர் வில்லேந்தி களம்நின்றதை நாங்கள் கண்டதில்லை. அவருடைய கைகளிலும் தோள்களிலும் நுண்வடிவில் வாழும் வில்லவரை அறிந்துமிருக்கிறோம். இன்று கண்டோம் கிருதவர்மரில் அவர் எழுவதை. அவரை எதிர்த்து யுயுதானரில் தோன்றினார் இளைய பாண்டவர். உயிர்தோழர்கள் இருவரின் போரென்று தோன்றியது. விழிமூடித் திறக்கையில் அவர்களேதானோ என ஐயம் எழுந்தது. உடல் உயிருடன் போரிடுகிறது என்று ஒரு வீரன் கூவினான்” என்றான்.

“பாஞ்சாலரே, இறுதியில் யுயுதானர் வென்றார். கிருதவர்மர் அம்புகளால் அறையுண்டு தேரில் விழ அவரை அவர்கள் பின்னிழுத்துச் சென்றனர். அது ஏன் என்று இப்போதுதான் நான் உணர்கிறேன். போர் முறுகுந்தோறும் கிருதவர்மர் இளைய யாதவரிலிருந்து தன்னை நோக்கி சென்றார். யுயுதானர்

தன்னிலிருந்து இளைய பாண்டவரை நோக்கி சென்றார். இறுதிக்கணத்தில் இளைய பாண்டவரால் கிருதவர்மர் வெல்லப்பட்டார்” என்றான் பாஞ்சாலத்து வீரன். “இங்கே ஒவ்வொரு படைக்கணுவிலும் நீங்கள் யாதவரின் போர்வெற்றியின் கதைகளையே கேட்பீர்கள். அங்கே நிகழ்ந்துகொண்டிருப்பது அவருடைய பேருருத் தோற்றம். அவர் துரோணரை வென்று புறந்தள்ளினார். காமரூபத்து இளவரசன் ஜலசந்தனை நெஞ்சு பிளந்து கொன்றார். அவரை எதிர்கொள்ள அஞ்சி பின்னடைகின்றனர் கௌரவர்கள்.”

“அவர் சீற்றம்கொண்டிருக்கிறார், பாஞ்சாலரே” என திருஷ்டத்யும்னனுடன் குதிரையில் விரைந்து வந்தபடி இன்னொரு முதிய வீரர் சொன்னார். “இவர்கள் அச்சீற்றத்தை கொண்டாடுகிறார்கள். வஞ்சம் அத்தகைய சீற்றத்தை அளிக்கும். பெருந்துயரும் அதன் விளைவான வெறுமையும் மேலும் சீற்றத்தை அளிக்கும். சீற்றம்கொண்டவருக்குள் எரியும் அனல் அவர்களின் ஆற்றலை அழித்துவிடும். போர்க்களத்தில் சீற்றம்கொள்பவர்கள் சாவை நோக்கி செல்கிறார்கள்.” திருஷ்டத்யும்னன் “அவர் தன் மைந்தர்களை இழந்திருக்கிறார்” என்றான். “ஆம், ஆனால் இங்கே இழக்காதவர் எவருமில்லை. இழப்புக்கெனவே இங்கு வந்தோம். வஞ்சம் கொள்ளவேண்டுமென்றால் ஒவ்வொருவரும் தன்னிடமே வஞ்சம் கொள்ளட்டும்” என்றார் முதிய வீரர். “அவரை பின்னால் இழுத்துவருக! அவர் அங்கே போர்புரியலாகாது. அவர் உயிர்விடக்கூடும். அல்லது உளம்கடந்து பெரும்பழிகளை ஈட்டிக்கொள்ளலும் ஆகும். அவரை பின்னிழுத்துக் கொண்டுவருக!”

திருஷ்டத்யும்னன் “ஆம்” என தலையசைத்து முன்னால் சென்றான். படைச்சுவருக்கு அப்பால் கூச்சல்களும் அலறல்களும் எழுந்தன. “அங்குதான் இருக்கிறார் இளைய பாண்டவர். அவரை சூழ்ந்துகொள்ள துரியோதனரும் துரோணரும் சல்யரும் அஸ்வத்தாமரும் சேர்ந்து முயல்கிறார்கள். வலப்பக்கம் சிகண்டியும் பீமனும் அதை தடுத்து நிறுத்துகிறார்கள். இடப்பக்கம் சாத்யகியும் சுருதகீர்த்தியும் அச்சூழ்கையை செறுக்கிறார்கள். நடுவே அங்கர் நின்று இளைய பாண்டவருடன் போரிட்டுக்கொண்டிருக்கிறார்” என்றான் படைத்தலைவன்.
“பொழுதணைந்துகொண்டிருக்கிறது... நாம் இன்னமும் செறுபோர் புரிந்தபடியே காலம் கடத்துகிறோம்” என்றான் திருஷ்டத்யும்னன். “இளைய பாண்டவர் பின்னடையட்டும். சூழ்ந்துகொள்பவர்களுடன் போரிடுவது பயனற்றது. பொழுது வீணாகும்... பொழுதே இன்று அவர் உயிர் ஈரும் வாளெனக் கொள்க!” என்றான் திருஷ்டத்யும்னன்.

கவசப்படைக் கதவைத் திறந்து அப்பால் கௌரவர்களுடன் அர்ஜுனன் பொருதிக்கொண்டிருந்த போர்முனை நோக்கி திருஷ்டத்யும்னன் எழுந்தான். அர்ஜுனன் கர்ணனை அம்புகளால் அறைந்து அறைந்து பின்னடையச் செய்தான். மறுபக்கம் சிகண்டி அம்புகளைத் தொடுத்தபடி கர்ணனை நோக்கி வர அவர்களுக்கிடையே போர் மூண்டது. சுருதகீர்த்தியை அம்புகளால் அடித்து பின்னடையச் செய்த அஸ்வத்தாமனை நோக்கி அர்ஜுனன் தன் அம்புகளை திருப்பியபோது பூரிசிரவஸ் நாணொலி எழுப்பியபடி களத்திலெழுந்தான். சதானீகனை அம்புகளால் அறைந்தபடி “என் தமையனின் குருதிக்கு நிகர்செய்ய வந்துள்ளேன். எடு உன் அம்புகளை...” என்று கூவினான். “உன் குருதியால் இன்று

அவருக்கு நீர்க்கடன் கழிக்கிறேன்” என்று அம்புகளால் சதானீகனை அறைந்தான். அந்த அம்புகளை எதிர்கொள்ள முடியாமல் சதானீகன் பின்னடைந்தான். அவன் தேர்த்தூண்களில் பூரிசிரவஸின் அம்புகள் தைத்து செறிந்து நின்றன.

சுருதகீர்த்தியும் சுருதசேனனும் இரு பக்கமும் எழுந்து சதானீகனை காத்தனர். ஆனால் பூரிசிரவஸ் சீற்றம்கொண்டிருந்தான். அவனுடைய அம்புகள் அவர்கள் மூவரையுமே திகைக்கச் செய்தன. சுருதகீர்த்தி தோளில் அம்புபட்டு தேர்த்தட்டில் விழுந்தான். அர்ஜுனன் அவ்வோசை கேட்டு திரும்பிநோக்கி நாணொலி எழுப்பியபடி பூரிசிரவஸை நோக்கி சென்றான். “ஆம், நான் பழிகொள்ளவேண்டியது உங்களைத்தான்… இவர்கள் உங்களிடமிருந்து எழுந்தவர்கள்” என்றபடி பூரிசிரவஸ் அர்ஜுனனை நோக்கி பாய்ந்து அணுகினான். இருவரும் அம்புகளால் சந்தித்துக்கொண்டார்கள்.

# கார்கடல் - 56



பூரிசிரவஸ் அர்ஜுனனை அம்புகளால் எதிர்க்கத் தொடங்கியபோதே திருஷ்டத்யும்னன் ஒன்றை உணர்ந்தான், ஒவ்வொருவரும் தங்கள் ஆழுளத்து எதிரியை நேரிலும் கற்பனையிலும் சந்தித்து போரிட்டுப் போரிட்டு தங்கள் திறன்களை தீட்டிக்கொண்டிருக்கிறார்கள். தங்கள் முதன்மை எதிரி அளவுக்கே ஒவ்வொருவரும் எழுந்துவிட்டிருக்கிறார்கள். போர் ஒரு பயிற்சிக்களம் என மாறி அனைவரையுமே அவர்கள் கொண்டுள்ள தடைகளிலிருந்து எழச் செய்திருக்கிறது. பூரிசிரவஸ் அர்ஜுனனை நிகர்நின்று எதிர்த்தான். முன்பு

ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு அம்புக்கும் அவனை பின்னடையச் செய்த ஒரு தடையை அவன் கடந்துவிட்டிருந்தான்.

ஒவ்வொரு வீரனும் தன் இயல்பால், தன்னுள் உறைந்திருக்கும் தெய்வங்களின் விழைவால் தனக்குரிய தடைகளை கொண்டிருக்கிறான். மேலும் மேலுமென தானே தன்னை கூர்செய்துகொண்டு செல்கையில் எதிர்நிற்பவர்களை முற்றிலும் அறியாதவனாக ஆகிவிடுவது அர்ஜுனனின் தடை. உளம் சீறி எழுந்து போர்புரிந்து விரைவிலேயே ஆற்றல் வடிந்து பின்னடைந்துவிடுவது சாத்யகியின் தடை. தன் இலக்குகளை ஒருகணமும் விழிகொண்டு நோக்காத மிகைநம்பிக்கை கர்ணனின் தடை. தன் அம்புகள் மேல் எந்தப் பார்வையுமில்லாது தொடுவான் நோக்கி விழிதிரும்பியிருப்பது பீஷ்மரின் தடை. தன் இயல்புக்கு மாறான ஒன்றை சூடி பிறிதொன்றை கரந்திருப்பது துரோணரின் தடை. ஒவ்வொரு தனிப்போரிலும் முழுப்போரையும் கூடவே எண்ணிக்கொண்டிருப்பது தன் உளத்தடை.

அத்தடைகளை உருவாக்கும் தனி இயல்புகளை அறிந்து கடந்து பின் தங்கள் படைக்கலங்களென பயிற்றுவித்து மேலும் முன்னெழுவதையே அவ்வீரர்கள் தவம் எனச் செய்திருந்தனர். பூரிசிரவஸ் தன்னை காவியங்களில் சொல்வடிவாக எழுந்த பெருவீரர்களில் ஒருவனாக கற்பனை செய்திருந்தான் என்று திருஷ்டத்யும்னன் அப்போது புரிந்துகொண்டான். அது இளையோரின் இயல்பு. வில் தொட்டெடுக்கையில் அவர்கள் அனைவருமே பரசுராமரோ, சரத்வானோ, பீஷ்மரோ, அர்ஜுனனோதான். ஆனால் வில்லினூடாக அவர்கள் தங்கள் கற்பனை சென்றடைந்த தொலைவிலிருந்து ஒவ்வொரு

பின்னடியாக எடுத்து அன்றாடத்திற்கு திரும்பி வருவார்கள். “ஒவ்வொரு பிழைத்த அம்பினூடாகவும் ஓர் அறிதலை அடைந்து தங்களில் வந்தமைவார்கள் வீரர்கள்” என்று ஒருமுறை துரோணர் சொன்னார். “தன்னில் தான் முற்றமைதலும் பிறிதொரு பயிற்சிதான்.”

பூரிசிரவஸ் தன் எல்லைகளைக்கண்டு அதை கடந்து சென்றதில்லை என்று தெரிந்தது. அவன் தன் முதிரா இளமையின் கற்பனைகளில் எழுந்து வெளிக்கடந்ததில்லை என ஒவ்வொரு அம்புக்கும் அவன் உடல் எழுந்தெழுந்து அமைந்தமை காட்டியது. விழிதிருப்பி மீள்வதற்குள் மின்னி சிந்தையைச் சென்றடையும் ஓரவிழிநோக்கில் அங்கே போரிட்டுக்கொண்டிருப்பவன் ஒரு சிறுவன் என்றே உளம் மயங்கியது. சிற்றுடலில் எழுந்தவன், சுவைமிக்க கனியொன்றுக்காகக் கல்லெறியும் இளையோன். தன் திறனை தானே கண்டு மகிழ்ந்து தருக்கும் இனிய அறிவின்மைகொண்டவன். ஆனால் அங்கு நிகழ்ந்த போரினூடாக கற்றுக்கொண்டு அவன் அக்கற்பனைகளில் இருந்த மாவீரனை நோக்கி பெரிதும் முன்னகர்ந்திருந்தான் என மேலும் நோக்கும்போது புரிந்தது. அவனிடமிருந்து சென்ற அம்புகள் விழிக்குத் தெரிந்த அவனிடமிருந்தல்ல என்று எண்ணத் தோன்றியது.

முதல் நாள் போரில் அவன் கைசுழன்று அம்பெடுத்து, நாணிழுத்து, தொடுத்து, எய்யும்போது களிப்பும் பதைப்பும் தவிப்பும் சினமும் என உணர்வுகள் அவன் முகத்தில் மாறி மாறி எழுந்துகொண்டிருந்தன. களத்தில் போர்புரியும் பல்லாயிரம் வீரர்களின் முகங்கள் அவ்வாறே தோன்றும். அரங்கில் ஆடும் கூத்தனின் முகத்தில் உணர்வுகள் மாறிச்

செல்வதுபோல. பல தருணங்களில் பித்தளைக்குமிழில் அருகிருக்கும் காட்சிகள் வண்ண மாற்றங்களாக அலைகொள்வதுபோல. ஆனால் மெல்ல மெல்ல பூரிசிரவஸின் முகம் மாறத்தொடங்கியது. இறுகி உணர்வுகள் உறைந்து, விழிகள் கூர்கொண்டு நிலைத்து, ஒற்றைச் சொல்லில் உதடுகள் அமைந்து, போரிடும் தெய்வச் சிலையென்று அவன் ஆனான். அவன் கைகள் மேலும் நெகிழ்ந்தன. வீச்சுகளின் வளைவுகளில் அழகு திரண்டது. அம்புகள் மேலும் இலக்கு கொண்டன. அவன் வெல்லற்கரியவனாக மாறிக்கொண்டிருந்தான்.

முன்னர் மூன்றுமுறை திருஷ்டத்யும்னன் பூரிசிரவஸுடன் நேர்ப்போரில் ஈடுபட்டிருந்தான். முதல் முறை பூரிசிரவஸை மிக எளிதாக அறைந்து கவசங்களை உடைத்து தன் முன்னிருந்து தப்பி ஓடச்செய்தான். மூன்றாம் முறை வில்லெடுத்து முதல் அம்பை எய்ததுமே தன் முன் நின்றிருப்பவன் பிறிதொருவன் என்று உணர்ந்தான். ஏழு அம்புகள் தன் தேர்த்தூண்களில் வந்து அறைந்ததும் எதிரில் அர்ஜுனன்தான் எழுந்துவிட்டானோ என்று ஐயம் கொண்டான். அன்று பூரிசிரவஸ் அவனை அம்புகளால் அறைந்து கவசங்களை உடைத்து பின்னடையச் செய்தான். தன் படைத்திரளுக்குள் திரும்பி வந்த பின்னர் அன்று நிகழ்ந்த போரை உளத்தில் திரட்டி தொகுத்துக்கொண்டபோது பூரிசிரவஸ் தன்னுடலில் பெண்மைக்கூறு ஒன்றை ஏற்றுக்கொண்டிருப்பதை அவன் அறிந்தான்.

கௌரவ வீரர்களில் அர்ஜுனனைப்போல் பெண்மை சென்று படிவதற்கு ஏற்ற உடல்கொண்டவன் அவன் ஒருவனே. பிற அனைவருமே பெருந்தோளர்கள், நிகர்நிலை கொண்ட உடல் கொண்டவர்கள். பூரிசிரவஸ் மலைமகன்களுக்குரிய மெல்லிய

சிற்றுடல் கொண்டிருந்தான். மெலிந்த சிவந்த சிறிய உதடுகளும், கூரிய மூக்கும், நீலமணிக் கண்களும் அவனை தொலைவில் நின்று நோக்குகையில் பெண்ணென்றே காட்டின. மலைக்குமேல் எங்கோ அவனுக்கு பேருடல்கொண்ட மைந்தனொருவன் இருக்கிறான் என்று திருஷ்டத்யும்னன் கேட்டிருந்தான். பால்ஹிகருடன் நிகர்நின்று மற்போரிட்டு தூக்கி அறையும் வல்லமைகொண்ட மைந்தன் அவன் என்று ஒற்றன் சொன்னபோது அவன் புன்னகைத்தான். அதை உணர்ந்து ஒற்றன் “அவள் அந்த மைந்தனைப்போலவே பெருந்தோள் கொண்டவள், அரசே” என்றான். “அவனுடைய கனவின் ஈடேற்றம்” என்று திருஷ்டத்யும்னன் சிரித்தபடி சொன்னான்.

பெண்மை படிந்த பூரிசிரவஸின் உடலில் அனைத்துத் தசைகளும் நீர்பட்டு இளகியவைபோல், நெருப்பு கொண்டு உருகியவைபோல நெகிழ்வு கொண்டன. அவை தங்களை ஆளும் சித்தத்திலிருந்து விடுபட்டு தங்களுக்குரிய அசைவை இயல்பாக நிகழ்த்தின. ஆகவே அவன் நிழலில் பெண் நடனமிட்டாள். அவன் அம்புகளை எடுக்கையிலும் தொடுக்கையிலும் மிகக் குறைவான ஆற்றலே தேவைப்பட்டது. எஞ்சிய விசையனைத்தும் அம்புகளில் எழுந்தது. “அம்பில் எழும் விசையென்பது அதற்கு உளம் செலுத்திய விசையில் உடல் எடையும் உறுப்புகளின் பிழையும் எடுத்துக்கொண்டது போக எஞ்சியது” என்று வில்நூல் கூற்றை துரோணர் சொன்னார். “உடலை பயிற்றுவதென்பது உடலில் இருந்து சித்தத்தை விடுவிப்பதே.”

பூரிசிரவஸின் அம்புகள் ஒவ்வொன்றும் அர்ஜுனனின் அம்புகளை அவற்றின் வான் வழியிலேயே அறைந்து தெறிக்கச்செய்தன. விழும்வளைவில் எதிரியின் அம்பைச்

செறுப்பவன் வில்தேர்ந்தவன். எழுவளைவிலேயே தன் அம்புகளால் அவற்றைச் சந்திப்பவன் வில்யோகி. அர்ஜுனனை அர்ஜுனனே எதிர்ப்பது போலிருந்தது அப்போர். அம்புக்கு அம்பு மேலும் மேலும் விசைகொண்டு அவர்கள் ஒருவரை ஒருவர் தாக்கினர். அர்ஜுனனின் அம்புகளின் கூர்முனையை தன் அம்புகளின் கூர்முனையால் தொட்டு வீழ்த்தினான். அவர்கள் கைகளிலிருந்து அம்புகள் தீப்பொறிகள்போல் சிதறிப் பரவிக்கொண்டிருந்தன. தொலைவிலிருந்து பார்க்கையில் அவர்களின் தேர்களைச் சுற்றும் அம்புகளாலான இரு வட்டங்களை காண முடிந்தது. அவ்விரு வட்டங்களும் விசையுடன் சுழலும் இரு இரும்பு வளையங்கள்போல தோன்றின. விளிம்புகள் உரசி பொறி எழுந்து பறக்க சூழ்ந்திருந்த அனைவரும் போரை நிறுத்திவிட்டு அவர்களிருவரும் பொருதுவதை நோக்கலாயினர்.

ஒருகட்டத்தில் அர்ஜுனனின் எந்த அம்பும் பூரிசிரவஸை அணுகமுடியாமலாயிற்று. பூரிசிரவஸின் அம்புகள் எவையும் அர்ஜுனனின் வளையத்தை கடக்காமலாயிற்று. இருவரும் ஒருவரை ஒருவர் அம்புகளினூடாக முற்றறிந்துகொண்டிருந்தனர். அம்புகள் வழியாக வில்லவர் ஒருவரை ஒருவர் அறிந்துகொள்வதற்கு நிகராக பிறிதொன்றில்லை என திருஷ்டத்யும்னன் எண்ணினான். அவை எச்சமின்றி அனைத்தையும் உரைத்துவிடுகின்றன. வேறெங்கும் இருவர் இத்தனை குறுகிய பொழுதில் இத்தனை ஆயிரம் எண்ணங்களை பரிமாறிக்கொள்வதில்லை. இத்தனை ஆயிரம் முறை ஒருவரை ஒருவர் முத்தமிட்டுக்கொள்வதில்லை. இத்தனை கூர்ந்து ஒருவரை ஒருவர் நோக்கிக்கொள்வதும் இல்லை. முழுமைகொண்ட

விற்போர் என்பது இருவர் ஒருவரோடொருவர் கூடுமாறிக்கொள்வது. ஒருவரே என்றாவது.

அர்ஜுனனின் உடலில் பெண் எழுந்த கணம் பூரிசிரவஸின் உடலில் ஆண் திகழ்வதை திருஷ்டத்யும்னன் கண்டான். அக்கணமே அது பெண்ணென்றாக அர்ஜுனன் ஆணென்றாகி மோதினான். ஒருவர் உடலின் வளைவு பிறிதொருவர் உடலின் நெளிவுடன் முழுமையாக இணைந்தது. ஒருவரின் சுழற்சி இன்னொருவரில் வட்டநிறைவை அடைந்தது. இருவரையும் ஒற்றையுரு என ஒரே நோக்கில் மட்டுமே பார்க்கமுடியும் என்றாயிற்று. அப்போர் அவ்வண்ணம் திகழுமெனில் எல்லையிலாக் காலம் வரை தொடர்வதொன்றே வழி என்று தோன்றியது. சூழ்ந்திருந்தோர் பொறுமையிழந்தனர். ஒரு பிழை, ஒரு மீறல் என ஏங்கத் தொடங்கினர். இதோ இதோ என விழிகள் தவித்தன.

ஆனால் அர்ஜுனன் பூரிசிரவஸ் தன்னை நோக்கி எழுவதைக்கண்டு உவகைகொள்ளத் தொடங்கினான். பூரிசிரவஸ் அர்ஜுனனை நோக்கி சென்று கொண்டிருப்பதை எண்ணி மகிழலானான். வஞ்சங்கள் மறைந்தன. சினம் இருந்ததோ என்று ஆயிற்று. சூழ்ந்திருந்த உருவங்கள் கரைந்தழிந்தன. காலம் பெருஞ்சுழியென அவர்களைச் சுற்றிலும் ஓடிக்கொண்டிருந்தது. இருவர் பெருங்காதலுடன் ஒருவரை ஒருவர் நோக்கி ஒன்றுமியற்றாமல் உளம்கரைந்து தன்னிலை விரிந்து அங்கு நின்றிருந்தனர்.

தந்தை மைந்தனையும் மைந்தன் தந்தையையும் ஒரே தருணத்தில் கண்டுகொள்ளும் அருங்கணம் போன்றது அது என்று திருஷ்டத்யும்னன் எண்ணினான். முழு வாழ்வும் ஒருகணமென நிகழ்கிறது. அதன்பின் அதுவரை

அவர்களுக்கிடையே நடந்துவந்த உறவாடல் முடிந்துவிடுகிறது. பின்னர் அவர்கள் ஒருவரோடொருவர் விழி நோக்கி பேசக்கூட இயலாது. முற்றிலும் ஒருவரை ஒருவர் தவிர்த்து எவரென்றோ ஆகி விலகிவிடவும் கூடும். ஆனால் ஒருவர் பிறிதொருவரை எண்ணி நிறைவுறுவார்கள். அனைத்தையும் அளித்து விடைபெறுவதற்கு தந்தைக்கு அதற்குப் பின் தயக்கமிருப்பதில்லை. அனைத்தையும் அளித்து பணிய மைந்தன் அதன் பின்னர் தயங்குவதில்லை.

அக்கணத்தில் இடப்பக்கத்திலிருந்து சாத்யகி வாளை உருவியபடி பூரிசிரவஸை நோக்கி பாய்ந்தான். அதை அவன் ஏன் செய்தான் என்று திருஷ்டத்யும்னன் திடுக்கிட்டான். கனவிலிருந்து மீண்டவன்போல் தத்தளித்த பூரிசிரவஸ் வில்லை தேர்த்தட்டில் வீசிவிட்டு வாளை உருவியபடி சாத்யகியை நோக்கி சென்றான். சாத்யகி நிலத்தில் விழுந்து கிடந்த இரு புரவிகளின்மேல் மிதித்து பூரிசிரவஸை நோக்கி செல்ல பூரிசிரவஸ் தன் தேரின் புரவியினூடாக கால் வைத்து தாவி வந்து நிலத்தில் குதித்து அவனை எதிர்கொண்டான். அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கியபடி வாளுடன் நின்றிருக்க மறுபக்கமிருந்து அஸ்வத்தாமன் வந்து அர்ஜுனனை எதிர்த்தான். அவர்களிருவரும் போர்புரிவதை விழிதிருப்பி நோக்கியபின் மீண்டும் பூரிசிரவஸை நோக்கிய திருஷ்டத்யும்னன் சாத்யகியின் முகம் அதே உணர்வைக் கொண்டிருப்பதைக் ண்டு உளம் அதிர்ந்தான்.

உச்சிவெயிலில் ஒளிவிடும் வாள்களுடன் சாத்யகியும் பூரிசிரவஸும் ஒருவரை ஒருவர் நோக்கியபடி ஓசையில்லா புலிக்கால் வைத்து ஒரு முழு வட்டம் சுற்றிவந்தனர். வியாஹ்ரவிருத்தம் நீரில் சுழி எனத் தோன்றும். அறியாமல்

மையம்நோக்கி குவிந்து செல்லும். ஒருவர் காலசைவே பிறிதொருவரிலும் நிகழ்ந்தது. ஒருவர் தோள் போலவே பிறிதொருவர் தோளும் அசைந்தது. பின்னொரு கணத்தில் எப்போதென்று விழியறியாத தருணத்தில் இரு வாள்களும் முட்டிக்கொண்டன. அந்த ஓசை தன்னை அதிரச்செய்தபோது திருஷ்டத்யும்னன் உணர்ந்தான், சாத்யகியை பொங்கச்செய்த உணர்ச்சி எது என. அஸ்வத்தாமனை அர்ஜுனனை நோக்கி பாயச்செய்ததும் அதுவே என.

திருஷ்டத்யும்னன் பெருமூச்சுடன் வில்தாழ்த்தி நின்றபடி அந்த வாட்போரை நோக்கினான். வாள்கள் நிகழ்த்திக்கொள்ளும் போரின் உச்சம் அது என்று தோன்றியது. பூரிசிரவஸின் வாள் சிறிய நாகம்போல் நெளிந்தது. சில தருணங்களில் சவுக்கென்றும் திரும்பி வருகையில் ஒளிக்கீற்றென்றும் உருக்காட்டியது. சாத்யகியின் நீண்ட எடைமிக்க வாள் நெகிழ்வில்லாத உறுதி கொண்டிருந்தது. ஒருமுறைகூட சாத்யகியின் வாளின் அடியை பூரிசிரவஸ் தன் வாளால் வாங்கவில்லை. வளைந்தும் தவழ்ந்தெழுந்தும் பின்னடி வைத்து விலகியும் விட்டில்போல் தாவி பின்னெழுந்தும் சாத்யகியின் வீச்சுகளை அவன் தடுத்தான். சாத்யகி தன் வீச்சுகள் தவறிச் சுழல்கையில் உருவாகும் நிலையழிவை மறுகையை நீட்டியும் வீசியும் நிகர்கொள்ளச் செய்தான். நிலத்தில் அமர்ந்து எழுந்து தாக்கும் கழுகின் சிறகுகள்போல் அவன் கைகள் விரிந்திருந்தன.

நாரையின் கால்கள்போல தவறாத தாளத்துடன் களத்தில் தாவியும் ஊன்றியும் நின்று சுழன்றும் பூரிசிரவஸின் கால்கள் நடனமிட்டன. எதிர்பாரா கணத்தில் தன் தலையை தானே ஏவும் நாரைபோல் எழுந்து சாத்யகியை வாளால் அறைந்தான்.

சாத்யகி ஒரு விழிக்கணத்தில் வலக்கையின் கவசவளைவால் பூரிசிரவஸின் அந்த வாள்முனையை வாங்கிக்கொண்டான். சாத்யகியின் வாளேந்திய கையில் தன் வாள் முனையால் கீறலிடுவதையே பூரிசிரவஸ் இலக்காகக் கொண்டிருப்பது தெரிந்தது. ஏன் அவன் சாத்யகியின் முகத்தையோ கழுத்தையோ இலக்காக்கவில்லை என்று ஒருகணம் வியந்த பின் திருஷ்டத்யும்னன் புரிந்துகொண்டான், சாத்யகியின்வாளின் நீளமே பூரிசிரவஸை தடுக்கும் எல்லை ஒன்றை வகுத்துவிட்டது என. அதை கடந்துவந்து சாத்யகியை தாக்குவது அவன் தன்னைத்தானே பொறியில் சிக்கவைப்பதுபோல.

சாத்யகி நாகங்களுக்கு இணையான விசைகொண்டிருந்தான். ஆடி திரும்பும் ஒளிக்கதிரின் விசை கொண்டது பூரிசிரவஸின் வாள் என்பது சூதர் பாடல். பூரிசிரவஸின் வாள் நாகநா என நீண்டு மீண்டும் மீண்டும் மீண்டும் சாத்யகியின் கைகளை குறிவைத்தது. இயல்பாக பூரிசிரவஸை எதிர்கொண்ட சாத்யகி எங்கோ ஒரு புள்ளியில் பொறுமையிழப்பதை காண முடிந்தது. நூறுமுறை வாள் சுழற்றியும் ஒருமுறைகூட அவனால் பூரிசிரவஸின் கவசத்தையேனும் தொட இயலவில்லை. பூரிசிரவஸ் சாத்யகியுடன் விளையாடுகிறான் என்றுகூடத் தோன்றியது. சாத்யகியின் உடலிலும் பெண்மையின் கரவும் நெகிழ்வும் உண்டு. அதுவே அவனை இளைய யாதவராகக் காட்டுவது. அப்போது அது முற்றாக வழிந்து அழிய அவன் பலராமரைப்போல் மாறிக்கொண்டிருப்பதை திருஷ்டத்யும்னன் கண்டான்.

வாளை முறுகப் பற்றி பற்களைக் கடித்து தசைகள் இறுகி அதிர ஓங்கிச் சுழற்றி சாத்யகி வெட்டினான். அப்போது அவன்

உரைத்த வசைச்சொற்களை திருஷ்டத்யும்னன் கேட்டான். காற்றை வாள் கிழிக்கும் ஓசை காதருகே ஒலித்தது. மீண்டும் மீண்டும் சாத்யகி ஓங்கி வெட்டினான். அவ்வெட்டு இலக்கு பிழைத்து உடைந்த தேர்த்துண்டுகளிலும் விழுந்து கிடந்த யானைகளின் உடலிலும் பட்டது. அதிலிருந்த விசையால் மரச்சிம்புகள் உடைந்து தெறித்தன. குருதியுடன் தசை துண்டாகி விழுந்தது. வாள் நுனியிலிருந்து செங்குருதி மணிமாலை சுழன்று வளைந்தது. குருதி குருதி என்று பூரிசிரவஸை தேடிச்சென்றது சாத்யகியின் வாள். அவன் தன் காப்புணர்வு அனைத்தையும் இழந்து வெறிகொண்டு பூரிசிரவஸை தாக்கி பின்னடையச் செய்தான்.

திருஷ்டத்யும்னன் என்ன நிகழக்கூடுமெனும் அச்சத்தை அடைந்தானோ அது அவன் எண்ணியதற்கு சற்று முன்னரே நிகழ்ந்தது. பூரிசிரவஸின் வாள் வாளின் பிடியைப் பற்றியிருந்த சாத்யகியின் விரல்களை மெல்ல தொட்டது. சாத்யகி பாம்புத்தொடுகை என விதிர்த்து வாளை உதிர்த்து பின்னடைந்தான். அவன் உடலெங்கும் வலிப்பு எழுவதை, கைகால்கள் ஒருபக்கமாக இழுபட்டு அதிர்வதை, வாய்கோணலாக அவன் தள்ளாடிச் சரிவதை திருஷ்டத்யும்னன் கண்டான். பூரிசிரவஸ் அக்கணம் சிறகு கொண்டவன்போல் கைவிரித்து பறந்து காற்றிலெழுந்து சாத்யகியின் கழுத்தை ஓங்கி வெட்டினான். நின்றபடியே மல்லாந்து உடல் வளைத்து சுழற்றி அந்த வாள்வீச்சை தடுத்த சாத்யகி துள்ளிப் பாய்ந்து அகன்றான்.

பூரிசிரவஸ் வெற்றுக் கைகளுடன் நின்றிருந்த சாத்யகியை மேலும் வெறிகொண்டு பாய்ந்து தாக்கினான். திருஷ்டத்யும்னன் “பால்ஹிகரே, வாட்போர் முடிந்துவிட்டது. அவரிடம்

படைக்கலமில்லை” என்று கூவினான். ஆனால் பூரிசிரவஸ் சொற்களுக்கு அப்பால் சென்றுவிட்டிருப்பதை அவன் விழிகளும் முகமும் காட்டின. முற்றிலும் பிறிதொருவர் அவனுடலில் குடியேறிவிட்டிருந்தார். அதுவரை இலாதிருந்த வஞ்சமும் சீற்றமும் முகத்திலும் உடலசைவுகளிலும் பெருகி எழ அவன் வாளை வீசி சாத்யகியை வெட்டினான். விழுந்து புரண்டு எழுந்தும், தாவி தேர்களுக்குள் பதுங்கியும் சாத்யகி அவன் வீச்சுகளிலிருந்து தப்பினான். ஏழுமுறை பின்னால் துள்ளிப் பாய்ந்து அவன் வாள்வீச்சை ஒழிந்தபோது இறந்துகிடந்த யானையொன்றின்மேல் தடுக்கி மல்லாந்து விழுந்தான்.

சிறகென கைகள் விரித்து கால்களை தூக்கிவைத்து நாரை பறந்தெழுந்தமைவதுபோல் அணுகிய பூரிசிரவஸ் உடைந்த வேலுடன் கையூன்றி எழுந்த சாத்யகியின் நெஞ்சை எட்டி மிதித்தான். அவன் வாள் மின்னி எழுந்தபோது சாத்யகியின் தலை துண்டுபட்டுவிட்டதென்றே திருஷ்டத்யும்னன் எண்ணினான். “நிறுத்துக!” என அலறியபடி அவன் வில்லெடுப்பதற்குள் அர்ஜுனனின் பிறையம்பு பூரிசிரவஸின் கையை வெட்டி வீசியது. என்ன நிகழ்ந்ததென்று திருஷ்டத்யும்னன் விழிகூட்டி நோக்கவில்லை. பூரிசிரவஸின் கை வாளைப் பற்றியபடி தெறித்து அப்பால் கிடப்பதை கண்டான். முதலில் அது அங்கே கிடக்கும் ஒரு வீரனின் கை என எண்ணினான். பின்னர் ஓர் அதிர்வை தன் உள்ளத்தில் அறிந்தான். சாத்யகி கையூன்றி தாவி அகன்றதைக் கண்ட பின்னரே அவன் பூரிசிரவஸின் கை அறுந்து கிடப்பதை உள்வாங்கிக்கொண்டான்.

தன் கை அறுபட்டதை முதலில் பூரிசிரவஸ் உணரவில்லை. தன் உடலில் சற்று நிலைகுலைவு உருவானதையே அவன் அறிந்தான். எழுந்து அகன்ற சாத்யகி தன் முன் கிடந்த பூரிசிரவஸின் கையை எடுத்து அவன் மேல் எறிந்தான். “கீழ்மகனே, இதோ உனக்கு இன்றைய உணவு” என நகைத்தான். அந்தக் கையை பற்றித் தூக்கி தன்முன் கொண்டுவந்து நோக்கியபோதுதான் பூரிசிரவஸ் அது தன் கை என்பதை முழுதுணர்ந்தான். வஞ்சத்துடன் பற்களைக் கடித்தபடி அதை அர்ஜுனன்முன் வீசி “இளைய பாண்டவரே, பிறிதொருவனுடன் போரிடுபவனை தாக்குவதுதான் உங்கள் அறமா?” என்றான். வாளை விரல்கள் இறுகப் பற்றியிருக்க, வெட்டுவாயிலிருந்து குருதி வழிந்தது. விழுந்த விசையில் இரு விரல்கள் துடித்து அகல வாள் நழுவியது. இறுகப் பற்றியிருந்த விரல்கள் ஒவ்வொன்றாக அதிர்ந்து அதிர்ந்து விடுபட்டு விரிய எதையோ கோருவதுபோல் அகன்றன.

அர்ஜுனன் “அவன் என் மாணவன், என் மைந்தனுக்கு நிகரானவன்” என்றான். பூரிசிரவஸ் ஏதோ சொல்ல எண்ணி பின்னர் ஏளனம் தெரிய நகைத்தான். அஸ்வத்தாமன் திகைத்து வில் தாழ்த்தி நிற்க அர்ஜுனனும் வில் தாழ்த்தி இளைய யாதவரிடம் பின்னடையலாம் என விழிகாட்டினான். பூரிசிரவஸ் தன் கையை பார்த்த பின் “இளைய பாண்டவரே, இப்புவி வாழ்க்கை இனி எனக்கில்லை. என் குடிக்குரிய முறையில் முற்றூழ்கத்தில் அமர்ந்து நுதல்மையத்தினூடாக உயிர்விடுவதற்கு எனக்கு ஒப்புதல் அளிக்கவேண்டும்” என்றான். திரும்பிக்கொண்டிருந்த தேரில் சுழன்ற அர்ஜுனன் திடுக்கிட்டு நோக்கி பின்னர் “ஆம், அவ்வாறே ஆகுக!. விண்ணுலகு ஏகுக, பால்ஹிகரே! அங்கு வந்து நாம் தோள்தழுவிக்கொள்வோம்” என்றான்.

பூரிசிரவஸ் தன் தேர்த்தட்டில் ஏறி அமர்ந்தான். கண்களை மூடி தலை தாழ்த்தி தன் மூலாதாரத்திலிருந்து கூரிய மூச்சை எடுத்து மேலும் மேலுமென கூர்தீட்டி மேலே கொண்டு சென்றான். அவனுக்குள் நிகழ்வதென்ன என்று திருஷ்டத்யும்னன் அறிந்திருந்தான். தாமரை தன் அனைத்து இதழ்களையும் ஒன்றோடொன்று அடுக்கி கூர் கொள்கிறது. அதனுள்ளிருந்து எழும் மூச்சு அம்பென கிளம்புகிறது. தவளையின் நாபோல் விரைவு கொண்டதாக, வைர மணி சிந்தும் ஒளிபோல் கூர்கொண்டதாக. அது அடுத்த தாமரையின் தண்டின் கீழ்முனையினூடாக மேலே கிளம்புகிறது. அதன் மையப்பீடத்திலுறங்கும் தெய்வங்களை கலைக்கிறது. அங்கிருக்கும் அனைத்தையும் தன்னுடன் சுருட்டி அள்ளிக்கொண்டு மேலும் கூர்கொண்டதாக வெளிப்படுகிறது. தாமரைகள் ஒவ்வொன்றும் மேலும் விசைகூட்ட நெற்றி மையத்திலெழும் ஆயிரமிதழ்த் தாமரையை வந்தடைகிறது.

அத்தருணத்தில் வீழ்ந்த யானைக்கு அப்பால் கையில் உடைந்த வேலுடன் நின்றிருந்த சாத்யகி தன் காலில் வாள் தடுக்குவதை உணர்ந்து குனிந்தான். அதை எடுத்ததுமே அவன் உளம் கொப்பளித்து எழுந்தது. “வீணன்! இழிமகன்!” என்று கூவியபடி விழுந்து கிடந்த தேர்மகுடங்களின்மேல் மிதித்து யானைச்சடலங்களினூடாக பாய்ந்து பூரிசிரவஸின் தேர்த்தட்டில் ஏறினான். திருஷ்டத்யும்னன் “யாதவரே, என்ன செய்கிறீர்கள்! நில்லுங்கள்!” என்று கூவினான். அர்ஜுனன் “சாத்யகி, நில்!” என்றபடி தேரிலிருந்து பாய்ந்திறங்கினான். அதற்குள் பூரிசிரவஸின் தலைமயிர்க் கொத்தை பற்றித்தூக்கி வாளை ஓங்கி “இதோ! என் மைந்தருக்காக!” என்று கூவியபடி வெட்டி அத்தலையை துண்டாக்கி இடக்கையில் தூக்கி தலைக்கு மேல் காட்டினான் சாத்யகி.

யோகமூச்சு வெட்டுப்பட பூரிசிரவஸின் உடல் விந்தையான முறையில் அசைவிலாது அப்படியே அமர்ந்திருப்பதை திருஷ்டத்யும்னன் பார்த்தான். தலை அகன்ற உடலின் சிறுதுடிப்பு கூட அதில் வெளிப்படவில்லை. கால்விரல்கள் ஒன்றையொன்று ஒட்டி செறிந்திருந்தன. கழுத்துத் தசைகள், தோள்கள் அனைத்தும் இனிதாக குழைந்து துயிலிலிருப்பவைபோல் தோன்றின. சாத்யகி அந்தத் தலையை நாற்புறமும் சுழற்றிக்காட்டி "என் மைந்தனின் குருதிக்காக! என் இளைய மைந்தன் சினியின் குருதிக்காக! தெய்வங்களே! மூதாதையரே! இது என் முதல் மைந்தனின் நிறைவுக்காக!" என்று கூவினான்.

அவன் கூச்சலுக்கு எத்திசையிலிருந்தும் மறுமொழி வரவில்லை. பாண்டவ வீரர்கள் செயலற்ற படைக்கலங்களுடன், வெறித்த விழிகளுடன், சொல் அமைந்த உதடுகளுடன் வெறுமனே நோக்கிக்கொண்டிருந்தனர். திருஷ்டத்யும்னன் "என்ன செய்துவிட்டீர், யாதவரே! பெரும்பழி சேர்த்துவிட்டீர்!" என்று கூவினான். சாத்யகி நோக்கு மறைந்த விழிகளுடன் உரக்க நகைத்தான். "ஆம்! இப்பழி இங்கு என்னை சேர்க! இப்பழி என் குலத்திற்கு புகழென்றாகுக! இப்பழி இனி என்னை எஞ்சிய வாழ்நாளெல்லாம் ஆற்றல் கொண்டவனாக்குக!" என்றபின் வலக்கையிலிருந்த வாளை ஓங்கி தேர்த்தட்டில் அறைந்தான். அது உடைந்து தெறிக்க நெஞ்சை தன் கையால் ஓங்கி அறைந்து "இதோ நின்றிருக்கிறேன். நான் சாத்யகி! இப்பழியை இறுதித்துளி வரை நானே கொள்கிறேன். என் கொடிவழிகள் இதை சுமக்கட்டும். என் மூதாதையருக்கு இது சென்றடையட்டும்" என்றான். வெறியுடன் துள்ளிச்சுழன்றபடி "தெய்வங்களே! இன்று அணைந்தது என் நெஞ்சு! இன்று எரியத்தொடங்குகிறது என்

சிதை! தெய்வங்களே! மூதாதையரே! வணங்குகிறேன் உங்களை. என் விழிநீரையும் சொற்களையும் ஏற்றுக்கொள்க!” என்று கூவினான்.

இளைய யாதவர் திகைத்து நின்றிருந்த அர்ஜுனனின் தேரைத் திருப்பி படைக்குள் கொண்டுசென்றார். அவ்வசைவால் உறைநிலையிலிருந்து மீண்ட கௌரவப் படைகளிலிருந்து “இளைய பால்ஹிகர் வாழ்க! மலைப்பெருவீரர் வாழ்க!” என்று வாழ்த்தொலி எழுந்தது. அவ்வொலி பெருகி அகல பாண்டவப் படைகளிலிருந்து எவரோ “பால்ஹிக மாவீரர் விண்ணுறுக!” என்று கூவ பாண்டவப் படைகளும் வாழ்த்தொலிக்கத் தொடங்கின. “பால்ஹிகர் வெல்க! விண்ணிறைந்த பெருவீரர் சிறப்புறுக! சோமதத்தர் வாழ்க! மலைமைந்தர் வாழ்க!” என்று இரு படைகளும் இணைந்து படைக்கலங்களை தூக்கி வீசி முழக்கமிட்டன. பலர் அழுதுகொண்டிருந்தனர். சிலர் தலைகுனிந்து நிலத்தில் அமர்ந்தனர். சிலர் ஒருவரோடொருவர் உடல்தழுவி விம்மினர்.

அங்கிருந்து அனைத்து திசைகளிலும் அத்துயர் உடல்களின் அசைவலையென விரிந்தகன்றது. தேர்மேல் நின்று சாத்யகி அதை பார்த்தான். சுழன்று சுழன்று நோக்கிய பின்னர் பற்களை இறுகக் கடித்து “ஆம், நான் இதை செய்தேன்! எவ்வகையிலும் வருந்தவில்லை! ஒருபோதும் இதன் பொருட்டு துயர்கொள்ளப் போவதுமில்லை” என்றான். பின் அந்தத் தலையை தேர்த்தட்டிலேயே வீசிவிட்டு இறங்கி நடந்து பாண்டவப் படைகளுக்குள் சென்றான். அவனைக் கண்டதும் தீய தெய்வமொன்று அணுகுவதுபோல் உணர்ந்து பாண்டவப் படையினர் பிளந்து வழிவிட்டனர். அவன் உடல் எவர் உடலையும் தொடவில்லை. அவன் சென்று மறைந்த

பின்னரும் பாண்டவப் படையில் அப்பிளவு அப்படியே நீடித்தது. அக்காற்றிலேயே அவனில் இருந்த ஏதோ ஒன்று எஞ்சியிருப்பதுபோல. அது தங்களைத் தொடுவதையே அஞ்சியவர்கள்போல.

பூரிசிரவஸின் உடலை திருஷ்டத்யும்னன் திரும்பிப்பார்த்தான். அப்போதும் அது பளிங்குச்சிலையென அசையாமல் தேர்த்தட்டில் அமர்ந்திருந்தது. தேர்ப்பாகன் அமரமுனையிலிருந்து எழுந்து சென்று அவ்வுடலின் காலைத் தொட்டு மெல்ல அசைத்தான். பின்னர் அதை தொடையைப்பற்றி சரித்து படுக்க வைக்க முயன்றான். வியப்புடன் அவன் சூழ நோக்கிய பின் கீழே இறங்கி மண்ணில் கிடந்த பூரிசிரவஸின் தலையை எடுத்து கால் மடித்து கோட்டிய வளைவுக்குள் வைத்தான். வெட்டப்பட்ட கையை எடுத்து அருகே வைத்தபின் அமரமுனையில் ஏறி தேரை திருப்பிக்கொண்டு சென்றான். மடியில் தலையும் வெட்டுண்ட கையுமாக முடிவடையா ஊழ்கத்துடன் தேரில் அமைந்திருந்தது பூரிசிரவஸின் உடல்.

# கார்கடல் - 57

பார்பாரிகன் சொன்னான்: கூட்டரே, அங்கே நிகழ்ந்துகொண்டிருப்பது வெற்று உணர்ச்சிகளின் கொந்தளிப்பு. போர்க்களத்தின் பின்புறத்தில் உடைந்த தேர்த்தட்டின் அடியில் படுத்திருந்த சோமதத்தரிடம் சென்று நிகழ்ந்தவற்றை சொன்னபோது அவர் அகிபீனாவின் மயக்கிலிருந்தார். சலனின் இறப்பு அவரை முற்றாக நிலையழியச் செய்து பித்தனென்றே ஆக்கிவிட்டிருந்தது. அச்செய்தி கேட்டு அலறி தேர்த்தட்டில்

விழுந்த அவரை பால்ஹிகநாட்டுப் படைவீரர்கள் அள்ளி கொண்டுசென்று படுக்கச் செய்தனர். “என் மைந்தனின் உடலை காட்டுக! என் மைந்தனின் உடலை காட்டுக!” என்று அவர் கூவினார். “ஆம், அரசே. உடல் வந்துகொண்டிருக்கிறது. இந்த இன்னீரை அருந்துக! சற்றே உடல்தேறுக!” என்றனர் ஏவலர்.

அவர் விடாய்கொண்டிருந்தார். அவர்கள் தன் வாயுடன் சேர்த்துவைத்த இன்னீரை எட்டி அருந்தினார். அருந்த அருந்த உள்ளனல் அவிய “இன்னும்! இன்னும்!” என்று சொல்லி அருந்தினார். அதில் கலந்திருந்த அகிபீனாவின் சாறு அவரை மயங்கச்செய்தது. அவருடைய கைவிரல்கள் ஒவ்வொன்றாக விடுபட்டன. தாடை விழுந்து வாய் திறந்தது. மூச்சு சிதறியபடி வெளியேற அவர் துயிலத்தொடங்கினார். ஏவலர் எழுந்து அகன்றுவிட அவர் அங்கே முனகியபடி புரண்டுகொண்டிருந்தார். “மலைநிலம்! மலைநிலம்!” என்று அவர் சொல்லிக்கொண்டிருந்தார். அப்போதுதான் பூரிசிரவஸின் இறப்பை அறிவிக்க தூதர் அவரைத் தேடி வந்தனர்.

அவர்கள் அவரை எழுப்பி அமரச்செய்தனர். “அரசே! அரசே!” என ஒருவன் அவரை உலுக்கினான். “அனைத்தையும் அவனிடம் சொல்க… இளையவன் இங்கில்லை. அறிந்திருப்பீர்கள் அவன் அஸ்தினபுரியின் அரசரின் அணுக்கன். இங்கே அடிக்கடி வரமுடியாதவன்… இங்கே அரசாள்பவன் மூத்தவனே” என்று அவர் சொன்னார். பின்னர் கண்களைத் திறந்து அவர்களை நோக்கி “நீங்கள் யார்?” என்றார். “அரசே, துயரச்செய்தி. இளைய பால்ஹிகர் பூரிசிரவஸ் சற்றுமுன் இளைய பாண்டவர் அர்ஜுனராலும் யாதவரான சாத்யகியாலும் கொல்லப்பட்டார்” என்றான் ஒருவன். சோமதத்தர் “அவனிடம் சொல்லுங்கள்…

மூத்தவன் முடிவெடுக்கவேண்டும். அல்லது இளையவன்” என்றார். பின்னர் “எனக்கு மேலும் சற்று இனிய மது” என்றார்.

தூதன் தன் குரலை கடுமையாக ஆக்கிக்கொண்டு “அரசே, தங்கள் மைந்தர் பூரிசிரவஸ் கொல்லப்பட்டார். அர்ஜுனராலும் சாத்யகியாலும் அவர் கைகள் வெட்டப்பட்டு தலைகொய்தெறியப்பட்டார்” என்றான். சிலகணங்கள் சிவந்த விழிகளால் சோமதத்தர் தூதனை நோக்கிக்கொண்டிருந்தார். “என்ன?” என்றார். அவன் மீண்டும் சொல்வதற்குள் “ஆம், அவ்வாறுதான் அது நிகழும்” என்றார். “நன்று, நன்று” என்றார். புன்னகையுடன் எழுந்து “நான் மீண்டும் கிளம்பி பால்ஹிகபுரிக்கே செல்கிறேன்” என்றார். “அரசே, இன்று நீங்கள் செய்யவேண்டிய சடங்குகள் உள்ளன. இன்னமும் போர் முடிவுறவில்லை” என்றான் தூதன். “நான் என்ன செய்யவேண்டும்? வஞ்சினம் உரைக்கவேண்டுமா? சாத்யகியை கொல்லவேண்டும் அல்லவா? இளைய பாண்டவரிடம் என் குடி தலைமுறை தலைமுறை என நீளும் வஞ்சத்தை சூடிக்கொள்ளவேண்டும் அல்லவா?”

அவர் சீற்றம்கொண்டார். “அறிவிலிகள்... இங்கே விரிநில மாந்தர் அனைவருமே முற்றிலும் அறிவிலிகள். இந்த அறிவிலி விரிநிலத்திலிருந்து இவர்களின் பித்துகளை அள்ளி அங்கே கொண்டுவந்தவன். அறிவீர்களா, அன்றெல்லாம் கீழிருந்து எந்த மானுடர் மேலே வந்தாலும் எங்கள் மூதாதையர் மலைப்பிளவுப் பாதையின் தொடக்கத்திலேயே கொன்று அங்கேயே எரித்துவிடுவார்கள். வெண்ணீறு என மாறினாலொழிய அவர்களுடன் தொற்றிக்கொண்டு வரும் தெய்வங்கள் அவ்வுடல்களிலிருந்து ஒழிவதில்லை என அறிந்திருந்தார்கள். அத்தெய்வங்கள் மலைச்சாரலில் அத்தனை

எட்டி மரங்களிலும் குடியேறி கசப்பு திரண்டு தொங்கிக்கிடக்கும். அங்கே ஆண்டுக்கொருமுறை கரிய கோழிகளை வெட்டி பலிகொடுத்து அவற்றை நிறைவடையச் செய்வோம். அவர்களை ஒருபோதும் நாங்கள் தொடுவதில்லை. அவர்களின் பொருட்களை நீரில் கழுவாமல் நாங்கள் ஏற்றுக்கொள்வதில்லை. அவர்களின் விழிகளோடு விழிநோக்கி சொல்லாடுவதும் இல்லை.”

“பின்னர் எங்கள் மூதாதையர் விரிநிலத்து மாந்தர் அந்தத் தெய்வங்களின் ஆலயங்களின் அடிவரை வரலாம் என்றும் அங்கேயே தங்கியிருந்தே வணிகம் செய்யவேண்டும் என்றும் பணித்தனர். அவர்கள் பதினெட்டு நாட்கள் அங்கே தங்கியிருந்த பின்னரே இங்கிருந்து சென்று அவர்களை சந்தித்தனர். அவர்களை சந்தித்த பின் வருபவர்கள் எங்கள் நகருக்கு வெளியே இருக்கும் மலைத்தெய்வங்களின் ஆலயமுகப்பில் ஏழு நாட்கள் தங்கிய பின்னரே எங்கள் நகருக்குள் நுழைய முடியும். நாங்கள் மலைத்தெய்வங்களால் பாதுகாக்கப்பட்டவர்கள். வெல்லமுடியாத ஆற்றலை அவர்களிடமிருந்து பெற்றவர்கள். பிழைகளுக்கு அவர்களால் நேரடியாக தண்டிக்கப்பட்டவர்கள். இந்த அறிவிலி… இந்த அறிவிலி…”

சோமதத்தர் உரக்க நகைத்தார். “அந்த நாளை நினைவுறுகிறேன். திரௌபதியின் மணத்தன்னேற்புக்குச் சென்றுவிட்டு திரும்பிக்கொண்டிருந்தோம். ஏன் அதற்கு நான் சென்றேன்? அவ்வாறு எங்கள் குடிகள் செல்லும் வழக்கம் இல்லையே? ஏன் சென்றேன் என்றால் மத்ரநாட்டரசரின் அழைப்பை ஏற்று. சௌவீரர்களின் அழைப்பை ஏற்று. ஏனென்றால் அவர்கள் விரிநிலத்திலிருந்து எழுந்துவந்து எங்கள்

நிலங்களை வென்று கொள்ளையிட்டுச் சென்றனர். அஸ்தினபுரியின் பாண்டவர்கள். வெல்லற்கரிய அவர்களின் வில்லவனையும் மல்லனையும் அஞ்சினோம். சௌவீரம்போல் நாங்களும் அழியக்கூடாதென்று எண்ணினோம். ஆகவே அங்கே சென்றோம். திரும்புகையில் அந்த முடிவை எடுத்தோம். பால்ஹிகக் கூட்டமைப்பு. அனைத்தும் இந்த அறிவிலியின் திட்டம்… அதன்பொருட்டு அவனை விண்ணுலகில் எங்கள் மூதாதையர் மென்மூங்கிலால் அறைவார்கள். அறிவிலி! அறிவிலி!”

அவர் கைகளை விரித்து கூச்சலிட்டார் “ஆற்றல்கொண்டவர்களாவோம் என்று அவன் சொன்னான். ஆற்றல் என்பது விரிநிலத்து மாந்தரிடமிருந்து பெற்றுக்கொள்வது என்று அவன் கருதினான்… ஆற்றலிருந்தால் இவர்கள் ஏன் இப்படி தெய்வங்களால் கைவிடப்பட்டார்கள் என நான் கேட்கவில்லை. நான் நூறுமுறை எண்ணிக்கொண்டேன். ஆனால் கேட்கவில்லை. இப்படி போரிட்டு குருதிச்சேறாக செத்துவிழ, தங்களவர்களை தாங்களே மிதித்துக் கூழாக்கும் களம் ஒருக்க இவர்களுக்குள் அமர்ந்து ஆணையிடுவது யார்? கீழுலகத் தெய்வங்கள். இருண்ட பேய்த்தெய்வங்கள். அந்தத் தெய்வங்களை அஞ்சி அல்லவா மலைவாயிலை மூடிக்கொண்டனர் எங்கள் முன்னோர்? அந்தத் தெய்வங்களை கொண்டுவந்து எங்கள் நகரில் குடியேற்றியவன் இந்த அறிவிலி.”

“எந்தத் தீமையும் அள்ளி அள்ளிக் கொடுத்து சித்தம் மழுங்கச்செய்யும்!” என்று சோமதத்தர் சொன்னார். பித்தனைப்போல் வெடித்து நகைத்து “வேண்டிய அனைத்தையும் அளிக்கும். செல்வங்களை. புகழை. நம்

அரண்மனைகளை வெற்று அணிப்பொருட்களால் நிறைக்கும். எத்தனை பொருட்கள். குத்துவாளின் பிடியில் எதற்கு அருமணிக் கற்கள்? காலில் அணியும் குறடுகளில் எதற்கு சித்திரச் செதுக்கல்கள்? ஆடைகளில் பொன்னூல்கள் சேர்க்கும் அழகுதான் என்ன? எத்தனை கீழ்மை! வெற்றுப்பொருட்கள். பிறிதொருவன் கொண்டிருப்பதனாலேயே நாமும் கொண்டிருக்கவேண்டும் என நம்மை எண்ணச் செய்பவை. அப்பொருட்களில் குடியேறியிருக்கின்றன இருண்ட தெய்வங்கள். நம் செவிகளில் அவை பேசுகின்றன. நம் உள் புகுந்து ஆணையிடுகின்றன. நீ என்னை கொள்க! என் வழியாகவே நீ அடையாளம் சூடுகிறாய். மகிழ்வென்பதை என் வடிவிலேயே அடைவாய். என்னை உடன் வைத்திருக்கையிலேயே வென்றவன் ஆவாய்" என்றார்.

"நாம் அவற்றை வாங்கி அடுக்கிக் கொள்கிறோம். நம் அரண்மனை முழுக்க நிறைக்கிறோம். அரிய விளைபொருட்களை விற்று அவற்றை வாங்குகிறோம். மலையாற்றின் கொடைகளான கனிகளை. பனிமலையடுக்குகளின் மென்மயிர் தோல்களை... அனைத்தையும் பொறுக்கிச் சேர்த்து அவர்களுக்கு கொடுத்து அந்த வீண்பொருட்களை கொள்கிறோம். அவை நம்முள் நிறைகின்றன. நம் எண்ணங்களை மயங்கச்செய்கின்றன. அவை நம்முள் வாழும் மூதாதையரைத் துரத்தி மலைகளில் ஏற்றிவிடுகின்றன. எளிய மலைவிலங்குகள் போன்றவர்கள் அவர்கள். முகர்ந்து நோக்கி வெருண்டு பின்னடி வைக்கிறார்கள். இவை என்ன என்று வினவி தவிக்கிறார்கள். அவற்றில் விழிகள் முளைக்கின்றன. அவற்றின் மின்னும் முனைகளில் எல்லாம் விழிகள். அவை அவர்களை அச்சுறுத்துகின்றன. அவர்கள் வெண்பனி மலைமுடிகளின்

மேல் ஏறிக்கொண்டு நம்மை துயரத்துடன் நோக்கிக்கொண்டிருக்கிறார்கள்.”

“அவர்கள் நம்மை இரவுகளில் தேடிவருகிறார்கள். பனி வெடிக்கும் ஒலியாக அவர்களின் காலடிகளை நான் கேட்டிருக்கிறேன். நாம் அவர்களை வெளியே தள்ளி கோட்டை கட்டியிருக்கிறோம். அவர்கள் உள்ளே நுழையாதொழியும்பொருட்டு இரவிலும் கொழுப்பெரியும் பந்தங்களால் ஒளி நிறைத்திருக்கிறோம். வேலேந்திய காவலரை விழித்திருக்கச் செய்கிறோம். கோட்டைகளுக்கு அப்பால் ஒழுகும் ஆற்றின் உருளைக்கல் பரவிய வெளியில் அவர்கள் அலைவதை நான் கண்டிருக்கிறேன். முகில்நிழல்கள் என நீர்ப்பரப்பில் அவர்கள் ஒழுகிச்செல்வதை கண்டிருக்கிறேன். அவர்கள் சொல்ல விழைந்த சொற்கள் காற்றில் வெற்றொலிச் சிதறல்களாக நிறைந்திருக்கின்றன. சாளரக்கதவுகளின் ஓசையாக திரைச்சீலைப் படபடப்புகளாக அவை ஒலிக்கின்றன. நாம் அவற்றை கேட்டதே இல்லை. எல்லாம் இந்த அழிவுக்காக... இப்படி குருதிக்கறையாக இந்தப் பாழ்நிலத்தில் வழிந்துகிடப்பதற்காக.”

“அந்த அறிவிலி! அந்த அறிவிலியால்தான்!” என்று கூவிய சோமதத்தர் எதிர்பாராத கணத்தில் பாய்ந்து அருகே கிடந்த வாளை எடுத்து தன் கழுத்தில் பாய்ச்சிக்கொள்ள முயன்றார். அதை ஒருவாறாக எண்ணியிருந்த ஏவலன் அவர் கைகளை பிடித்துக்கொண்டான். “அரசே! அரசே!” என ஏவலர் கூவினர். மேலும் படைவீரர் உள்ளே வந்தனர். “அரசே, இது முறையல்ல. நம் குடிக்கே இழிபெயராகும். மலைமக்கள் கோழைகள் அல்ல” என்று துணைப்படைத்தலைவன் கூவினான். மெல்ல தளர்ந்து மீண்டும் அமர்ந்த சோமதத்தர் “எனக்கு மேலும் அகிபீனா...

மேலும் மது… அவ்வண்ணமே நான் இறந்துபோகவேண்டும். என் சித்தம் எஞ்சவேகூடாது” என்றார். அவர்கள் கொண்டு வந்த அகிபீனா கலந்த மதுவை மீண்டும் மீண்டும் குடித்தபின் விழுந்து கைகால்களைப் பரப்பி தலையை அசைத்தபடி “ஆம், மலைக்குச் சென்றுவிடுவேன்… மீண்டும் மலைக்கே சென்றுவிடுவேன்!” என்றார். கண்களிலிருந்து நீர் வழிந்து காதுமடல்களை நிறைத்தது. “பனிமலைகள்… தூய வெண்பனிமலைகள்!” என அவர் சொல்லிக்கொண்டே இருந்தார்.

ஏகாக்ஷர் சொன்னார்: குருக்ஷேத்ரம் இறப்புகளால் கலங்கிவிட்டிருந்தது. ஒவ்வொருவரும் அந்த இறப்புகளை தங்களுக்கு அணுக்கமானதாக கருதினார்கள். ஆகவே அவற்றை தங்களிடமிருந்து விலக்க முயன்றார்கள். இளையோரின் இறப்பால் துரியோதனன் வெறிகொண்டு போரிட்டு பின் உணர்வுகள் குழம்பி தேர்த்தட்டில் நின்றிருந்தான். இலக்கில்லாமல் அம்புகள் எய்தபடி “செல்க! கொன்று மீள்க! ஒருவரையும் விடவேண்டியதில்லை…” என்று கூவிக்கொண்டிருந்தான். களமுகப்பிலிருந்து வந்த தூதன் பூரிசிரவஸின் இறப்புச் செய்தியை அவனிடம் சொன்னான். உடல்நடுங்க நின்றுகொண்டிருந்த துரியோதனன் “செல்க! இனி எந்த இறப்புச் செய்தியையும் என்னிடம் எவரும் சொல்லவேண்டியதில்லை! செல்க!” என்று கூச்சலிட்டான். அருகணைந்து “மூத்தவரே” என்று ஏதோ சொல்ல முயன்ற துச்சாதனனை நோக்கி கதையை தூக்கி “செல்… இனி என்னிடம் எவரும் பேசவேண்டியதில்லை…” என்று அவன் அலறினான். கதையைச் சுழற்றி தேர்த்தூணில் ஓங்கி அறைந்தான்.

துச்சாதனன் பின்னடைந்து தனக்குப் பின்னால் வந்த துச்சகனிடம் “அவரை பின்னால் அழைத்துசெல்க… இந்நிலையில் அவர் போர்புரிய இயலாது” என்றான். “அவரை நான் எப்படி அழைத்துச்செல்ல இயலும்?” என்றான் துச்சகன். “அவர் என் முகத்தை அறிந்திருப்பதாகவே தோன்றவில்லை.” பற்களைக் கடித்து தன் தேர்த்தூணில் அறைந்து “எதையாவது செய், மூடா” என்று சீறிய துச்சாதனன் “நாம் பிறப்பால் அறிவிலிகள். பற்றால் மேலும் அறிவிலிகளாக ஆகிறோம்” என்றான். மறுசொல் பேசாமல் பின்னடைந்த துச்சகன் சுபாகுவிடம் சென்று “மூத்தவரை பின்னணிக்கு அழைத்துச்செல்லவேண்டும் என்று இளையவர் ஆணையிடுகிறார், என்னால் ஏதும் செய்ய முடியவில்லை” என்றான். சுபாகு “பொறு, ஏதேனும் வழி இருக்கும்” என்றபின் சூழநோக்கி அப்பால் நின்றிருந்த குண்டாசியிடம் “இளையோனே, சென்று மூத்தவரை பின்னணிக்கு அழைத்துச்சென்று அமர வை… அவர் சற்று மது அருந்தி இளைப்பாறட்டும்” என்றான்.

குண்டாசி தன் மெலிந்த வளைந்த உடலுடன் தேர்த்தட்டில் நின்றிருந்தான். அவன் கையில் கதை கேலிப்பொருள்போலத் தோன்றியது. “ஆணை!” என்று சொல்லிவிட்டு அவன் துரியோதனனை நோக்கி சென்றான். “அவனா? அவன் மூத்தவரிடம் பேசியதே இல்லை. அவனை கண்டாலே அவர் சினவெறி கொள்வதுண்டு” என்றான் துச்சகன். “இன்று அவன் கொள்ளும் பொருள் பிறிதொன்று” என்றான் சுபாகு. துச்சகன் “அவனை நோக்குகையிலேயே என் நெஞ்சு பதைக்கிறது. மூத்தவரே, அவன் இக்களத்தில் செய்துகொண்டிருப்பதென்ன என்று அறிவீர்களா? நம் மைந்தர்களையும் உடன்பிறந்தாரையும் சிதையேற்றிய கைகள் அவனுடையவை. நம்மை நோக்கி

அவன் உள்ளூர நகைத்துக்கொண்டிருக்கிறான். நாம் களத்தில் விழுவதை நோக்கி மகிழவே இங்கே வந்து நின்றிருக்கிறான்" என்றான். சுபாகு "அவனுடைய பொருள் வேறு..." என்றான். துச்சகன் ஒருகணம் கூர்ந்து நோக்கிவிட்டு வாயில் படிந்திருந்த புழுதியை துப்பியபடி திரும்பி களமுகப்புக்கு சென்றான்.

குண்டாசி தன் தேரில் துரியோதனனை அணுகி அவன் தேர் அருகே நின்று "மூத்தவரே, தாங்கள் இன்று மிகவும் உளம்சோர்ந்திருக்கிறீர்கள்... வருக, சற்று இளைப்பாறுக!" என்றான். துரியோதனன் "நீயா? நீ களமுகப்பில் என்ன செய்கிறாய்?" என்றான். "நான் நாளும் போர்முனைக்கு வருகிறேனே" என்றான் குண்டாசி. "நீ பின்னணிக்குச் செல்க... இங்கிருக்காதே. பின்னடைந்துவிடு" என்றான் துரியோதனன். "நீங்களும் வாருங்கள்.. சற்று இளைப்பாறுங்கள்" என்று சொன்ன குண்டாசி துரியோதனனின் பாகனிடம் "தேரைத் திருப்பு. மூத்தவர் இன்று சற்று இளைப்பாறவேண்டும்" என்றான். பாகன் துரியோதனனை நோக்க அவன் ஒன்றும் சொல்லவில்லை. பாகன் தேரைத் திருப்பி கௌரவப் படையின் உள்ளே கொண்டுசென்றான்.

"அங்கே இளைய பாண்டவர் பீமன் பால்ஹிகப் பிதாமகருடன் போரிட்டுக்கொண்டிருக்கிறார், மூத்தவரே" என்று குண்டாசி சொன்னான். "நிகழ்ந்துகொண்டிருக்கும் போரை புரிந்துகொள்ளவே முடியாதபடி அனைத்தும் பலமுனை கொண்டுவிட்டிருக்கிறது. எவர் எவரிடம் போரிடுகிறார்கள் என்று போரிடுபவர்கள் அன்றி எவருக்குமே தெரியாத நிலை வந்துவிட்டிருக்கிறது." துரியோதனன் களைப்புடன் தேர்த்தட்டில் படுத்துக்கொண்டான். கண்களை மூடிக்கொண்டு "வீழ்ந்துகொண்டிருப்பதுபோல் உணர்கிறேன்" என்றான்.

குண்டாசி அவன் சொல்வதென்ன என்று புரிந்துகொள்ளாதவன்போல “தலைசுழன்றதென்றால் நீட்டிப் படுத்துக்கொள்வது நன்று” என்றான். “மீளமீள மது அருந்திக்கொண்டிருக்கிறேன். நான் உமிழ்வதெல்லாம் மதுவே” என்றான் துரியோதனன்.

குண்டாசி “மது இல்லையேல் போரிட இயலாது” என்றான். அவன் கை காட்ட மது கொண்டுவந்த ஏவலனை புரியாதவன்போல நோக்கியபின் துரியோதனன் “எங்கே அங்கர்? அங்கரை நான் அழைத்ததாக சொல்” என்றான். அருகணைந்த ஏவலன் “அவர் அங்கே போர்முனையில் பொருதிக்கொண்டிருக்கிறார், அரசே. அவருக்கும் சிகண்டிக்கும் போர் நிகழ்ந்துகொண்டிருக்கிறது” என்றான். “அவனை வரச்சொல். அவனை உடனே இங்கு வரச்சொல்” என்று துரியோதனன் கூவினான். ஏவலன் வெறுமனே நோக்கி நின்றான். தளர்ந்து மீண்டும் தேர்த்தட்டில் படிந்தவனாக “அங்கனின் வீரத்தை பெரிதும் நம்பினேன். இந்த மாயக் களத்தில் எவருடைய வீரமும் நம்புதற்குரியதல்ல என்று அறிந்தேன். இதோ பூரிசிரவஸை இழந்துள்ளேன். இனி எஞ்சுபவன் ஜயத்ரதன் ஒருவனே” என்றான் துரியோதனன்.

கையூன்றி எழுந்தமர்ந்து “இளையோனே, நீ அறிவாயா? பூரிசிரவஸைத்தான் நான் என் இளையவளின் கொழுநனாக எண்ணியிருந்தேன். அம்முடிவை எடுத்து அதை சொல்லாச் சொற்களால் அவனுக்கு உணர்த்தவும் செய்தேன். இறுதிக் கணத்தில் அம்முடிவை மாற்றிக்கொண்டேன். ஏனென்றால் சைந்தவன் மேலும் பெரிய நாட்டைச் சேர்ந்தவன் என்று நான் கணித்தேன். அவன் என்னுடன் இருந்தால் துவாரகையை அஞ்சவேண்டியதில்லை என எண்ணினேன்” என்றான். இல்லை

என்பதுபோல தலையை அசைத்து “இனிமேல் இக்கணக்குகளைச் சொல்லிப் பயனில்லை. ஆனால் நான் அவனுக்கு பெரும்பிழை ஒன்றை இழைத்தேன். அவன்மீது என் தங்கை உளம்கொண்டிருப்பதை அறிந்தும் அதை அறியாதவன்போல் நடித்தேன்…” என்றான். குண்டாசி “அதை அறியாதோர் எவருமில்லை” என்றான். “நான் அவனிடம் காட்டிய அன்பெல்லாம் இந்த தற்பிழை உணர்விலிருந்து எழுந்ததுதானா? இளையோன் என உளம்நிறைந்து நான் அவனை அணைத்துக்கொண்டதே இல்லையா?” என்றான் துரியோதனன்.

குண்டாசி “இதையெல்லாம் நாம் நம்மிடம் ஒருபோதும் கேட்டுக்கொள்ளக்கூடாது, மூத்தவரே” என்றான். “நான் என்னையே எண்ணிக்கொண்டிருந்தேனா? எனில் என் இளையோர்மேல் கொண்ட அன்பெல்லாம் பொய்யா? இளையோனே, ஒவ்வொரு பொய்யும் மெய்யாக ஒவ்வொரு மெய்யும் பொய்யென்றாக இந்தக் களம் குழம்பிக் கொந்தளிக்கிறது. வெளியே திகழும் வாழ்க்கை இங்கே முழுமையாகவே பொருளழிந்துள்ளது.” அவன் தலையை அசைத்துக்கொண்டு படுத்திருந்தான். “இதற்குள் கண்டடைய வேண்டும் என்ன பொருள் இவற்றுக்கெல்லாம் என. இந்தக் கொந்தளிப்புக்குள் இருந்து எடுக்கவேண்டும் அனைத்திற்குள்ளும் திகழும் மெய்யை.” குண்டாசி “பாற்கடல்!” என்றான். துரியோதனன் விழிதிறந்து குண்டாசியின் சிரிப்பை பார்த்தான். கன்னம் ஒடுங்கியிருந்தமையால் பற்கள் பிதுங்கி நீண்டிருக்க அவன் முகத்தில் பொறிக்கப்பட்டதாகத் தெரிந்தது அச்சிரிப்பு. துரியோதனன் கண்களை மூடிக்கொண்டான்.

“ஆம்” என தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். முனகலாக “ஆம்” என்றான். பின்னர் எழுந்துகொண்டு “பொழுதணைகிறது… இன்னும் சில நாழிகைகளே. ஜயத்ரதனை அவர்கள் கொன்றுவிடலாகாது… அவனையேனும் நான் இன்று மீட்டுக்கொள்ளவேண்டும்” என்றான். “தாங்கள் சற்று ஓய்வெடுக்கவேண்டும், மூத்தவரே” என்றான் குண்டாசி. “ஓய்வு போதும், இங்கே அமர்ந்திருந்தால் என் உடல் அமைதியடையாது” என்று துரியோதனன் கிளம்பினான். குண்டாசி அவனுடன் சென்று தன் தேரில் ஏறிக்கொண்டான். துரியோதனன் குண்டாசியிடம் “நீ போர்முனைக்கு வரவேண்டியதில்லை, இளையோனே” என்றான். “நான் இங்குதான் இருக்கவேண்டும், மூத்தவரே” என்றான் குண்டாசி. “இளையோனே, இன்று விகர்ணன் வீழ்ந்தான். அவர்கள் எவருக்கும் வேறுபாடு கருதவில்லை” என்றான் துரியோதனன். ‘கருதலாகாதென்பதே என் எண்ணம்…” என்றான் குண்டாசி.

துரியோதனன் திரும்பி ஒருகணம் அவனை நோக்கிவிட்டு “செல்க! செல்க!” என ஆணையிட்டபடி களமுனை நோக்கி சென்றான். குண்டாசி உடன்சென்றான். சாவின் ஓலங்கள் முழங்கிக்கொண்டிருந்த களமுகப்பை அடைவதற்கு முன்னால் தேரை விசையழியச்செய்து நிறுத்திய துரியோதனன் “நீ உன் உடன்பிறந்தாரையும் மைந்தரையும் சிதையேற்றும் பொறுப்பை ஏற்றுக்கொண்டாய் என்றார்கள்” என்றான். “ஆம்” என்று குண்டாசி சொன்னான். “அவர்களை அங்கே பார்க்கையில் மிக அணுக்கமாக உணர்கிறேன்.” அவன் சொல்வதென்ன என்று புரிந்துகொள்ளாமல் துரியோதனன் நோக்கினான். அவனே அவன் சொன்னதை புரிந்துகொள்ளாதவன்போல சிரித்த குண்டாசி “என் மைந்தரையும் அங்கே கண்டேன். அவர்களும் எனக்கு மிக அணுக்கமாகத் தோன்றினர். அவர்கள்

அனைவரையும் அங்கேதான் உளவிலக்கின்றி தொடுகிறேன். மூத்தவரே, என் மைந்தரை தோள்தழுவிக்கொண்டேன். அவர்கள் அத்தனை இனியவர்கள் என முன்பு அறிந்ததே இல்லை” என்றான்.

துரியோதனன் சீற்றத்துடன் ஏதோ சொல்ல வாயசைத்தபின் திரும்பி “படைமுகப்புக்குச் செல்க!” என ஆணையிட்டான். குண்டாசி அங்கேயே நின்றான். படைமுகப்பில் கர்ணனுக்கும் சாத்யகிக்கும் போர் நிகழ்ந்துகொண்டிருந்தது. சல்யருக்கும் சிகண்டிக்கும், கிருபருக்கும் துருபதருக்கும், பீமனுக்கும் துரோணருக்கும், கடோத்கஜனுக்கும் பால்ஹிகருக்கும் நடுவே போர் உச்சத்தில் இருந்தது. துரியோதனன் வானை நோக்கினான். பொழுதணைந்து கொண்டிருந்தது என ஒருகணமும் கதிரவன் அவ்வண்ணமே அசைவிலாது விண்ணில் நிற்பதாக மறுகணமும் தோன்றியது. “எழுக! படைகள் சூழ்ந்துகொள்க! அவர்கள் பின்னடையும் இடங்களில் முன்னரே நம் படைகள் சென்றமைக!” என ஆணையிட்டபடி அவன் போர்முகப்புக்குச் சென்றான்.

சாத்யகி பின்னடைந்து கவசப்படைக்குள் சென்றான். கர்ணன் திரும்பி பீமனை எதிர்கொண்ட தருணத்தில் கவசப்படை சுவர்பிளந்து எழுந்து சாத்யகி தோன்றினான். அவனை எதிர்பாராத துரியோதனன் திகைத்த இடைவெளிக்குள் ஏழு அம்புகளால் அவன் துரியோதனன் நெஞ்சில் அறைந்தான். கவசம் உடைந்த ஓசையை துரியோதனன் கேட்டான். முதல்முறையாக அம்பு வந்து தன்மேல் தைக்கும் ஓசை இனிதாக இருந்தது. மேலும் மேலும் அம்புகள் வந்து தன்னை அறைந்து வீழ்த்தவேண்டும் என்று விழைந்தான். அந்த மண்ணில் குருதிசிதற விழுந்துகிடக்க வேண்டும். அவன்

தன்னை அவ்வடிவில் பார்த்துவிட்டான். அவன் உள்ளம் முடிச்சுகள் அவிழ்ந்து எளிதாகியது. சாத்யகியின் அம்புகளை ஏற்றுக்கொண்டு அவனை நோக்கி சென்றுகொண்டிருந்தான். ஒவ்வொரு அம்புக்கும் அவன் சாத்யகியால் கொல்லப்பட்டான்.

சாத்யகி அன்று தன் முழுச் சீற்றத்துடன் இருந்தான். அவன் கண்களை துரியோதனனால் அருகிலென காணமுடிந்தது. விலங்குகளின் விழிகளிலிருக்கும் வெறிப்பு அங்கே குடியேறியிருந்தது. அவனிடம் துரியோதனன் மெல்லிய குரலில் சொல்லிக்கொண்டிருந்தான். "நீ செய்ததில் பிழையென ஏதுமில்லை. நீ தந்தை. நீ வெறும் தந்தை மட்டுமே. நீ தந்தையென நின்றிருக்கையில்தான் தெய்வங்களுக்கு உகந்தவனாகிறாய். இதோ என் நெஞ்சு. உன் அம்புகள் எழுக! என்னை பிளந்து செல்க! உன் குடியின்பொருட்டும் உன் மைந்தரின் பொருட்டும் என் குருதியை கொள்க!" சாத்யகி அம்புகளால் அறைந்து அறைந்து அவன் கவசங்களை உடைத்தான். தோளில் ஓர் உதை என அம்பு தைத்தபோது துரியோதனன் சற்றே அசைந்து நின்றான். அதற்குள் இருபுறத்திலிருந்தும் துச்சாதனனும் துச்சகனும் வந்து அவனை காத்தனர். அவர்கள் அம்புகளை பெய்தபடி முன்னேறிச் செல்ல சாத்யகி அவர்கள் இருவரையும் நின்று எதிர்த்தான். அவர்களின் உதவிக்கு சல்யரும் கிருபரும் இருபுறத்திலிருந்தும் வர அவன் பின்னடைந்து கவசக்கோட்டைக்குள் மறைந்தான்.

துச்சகன் துரியோதனன் அருகே வந்து "மூத்தவரே, தாங்கள் இயல்புநிலையில் இல்லை... செல்க! சற்றே ஓய்வுகொள்க! இப்போரை நாங்கள் வென்று கொண்டுவந்து சேர்க்கிறோம்... இன்னும் சிறுபொழுதுதான்" என்றான். பேரொலியுடன் கவசப்படை திறக்க அப்பால் அர்ஜுனன் வெளிப்பட்டு கர்ணனை

எதிர்கொள்வதை துரியோதனன் திரும்பி நோக்கினான். “அவர்கள் வெறிகொண்டிருக்கிறார்கள். நம்மை இடைவிடாது தாக்குகிறார்கள். நாம் அரியவர்களை இழந்துமிருக்கிறோம். ஆனால் அவையனைத்துமே நம் சூழ்கையை அவர்களால் உடைக்க இயலவில்லை என்பதனால்தான். இன்னும் இரு நாழிகையில் அந்தி எழும். இப்போர் முடியும்போது அர்ஜுனன் தன் கழுத்தை தானே வெட்டி களத்தில் விழுவான்” என்றான் துச்சகன். துரியோதனன் “ஆம், அது நிகழவேண்டும். நம் குடிக்கு மருகன் அவன். அவனை காக்கவேண்டும். அவனையேனும் நாம் காக்கவேண்டும். இல்லையேல் அரசன் என்று முடிசூடி இக்களத்தில் நான் நின்றிருப்பதில் பொருளில்லை” என்றான்.

முரசுகள் முழங்கத் தொடங்கின. துச்சகன் அதை செவிகொண்டதுமே முகம் மாறி அதை துரியோதனன் செவிகொள்ளலாகாது என எண்ணி “செல்க மூத்தவரே, இப்போரை எங்களிடம் விடுக!” என்றான். துரியோதனன் “முரசுகள் முழங்குகின்றன... இளையோர் வீழ்ந்திருக்கிறார்கள்... இளையோரில் வீழ்ந்தவர் எவர்?” என்றான். அப்பாலிருந்து சுபாகு புரவியில் பாய்ந்து வந்து தலைவணங்கி “மூத்தவரே, இளையோர் மூவர் பீமனால் கொல்லப்பட்டனர். சுவர்மனும் கண்டியும் திருதகர்மனும் வீழ்ந்தனர்” என்றான். துரியோதனன் பெருமூச்சுடன் “ஆம்” என்றான். உதடுகளை கடித்துக்கொண்டு நோக்கை விலக்கியபடி “குண்டாசி? அவன் என்ன ஆனான்?” என்றான். “அவன் இங்குதான் இருந்தான், மூத்தவரே” என்றான் துச்சகன். “நன்று, போர் தொடரட்டும். நம் படைகள் ஒருங்கிணைவை கைவிடாது முன்னெழட்டும்” என்றான் துரியோதனன். புரவியில் வந்த வீரன் ஒருவன் “குண்டாசி களம்பட்டார்... அவர் களம்பட்டதையே சற்றுமுன்னர்தான் கண்டோம். பீமசேனர் அவரை நோக்கி தன் கதையை

வீசியெறிந்து தலையை உடைத்தார். புரவிகளின் உடல்களுடன் விழுந்து கிடந்தார்” என்றான்.

துரியோதனன் அச்சொற்களை கேட்டதாகத் தோன்றவில்லை. “சாத்யகியை சூழ்ந்துகொள்க… அவன் உச்சவிசை கொண்டிருக்கிறான். அவனை அனைத்து வாயில்களிலும் எதிர்பார்த்து நில்லுங்கள்” என ஆணையிட்டான். துச்சாதனன் அவனுடன் சென்றபடி “நாம் சகடச்சூழ்கையின் கட்டமைப்பை சற்றும் கைவிடவில்லை, மூத்தவரே. உண்மையான இழப்புகள் அவர்களுக்கே” என்றான். துரியோதனன் தொடர்பற்றுச் சொல்பவன்போல “இன்று நான் எரிகாட்டுக்குச் செல்லவேண்டும், இளையோனே. குண்டாசிக்கு நான் என் கைகளால் அனலிடவேண்டும்” என்றான்.

# கார்கடல் - 58

யுதிஷ்டிரர் தேர்த்தட்டிலிருந்து தன் அகவையை மீறிய விசையுடன் பாய்ந்திறங்கி ஊடே நின்றிருந்த வீரர்களை கைகளால் உந்தி விலக்கி அர்ஜுனனின் தேரை நோக்கி ஓடினார். அவரை பற்ற முயன்ற வீரர்களை நோக்காமல் தேர்விளிம்பில் தொற்றி மேலேறி அர்ஜுனனின் இரு தோள்களையும் அள்ளித் தழுவி தன்னோடு அணைத்துக்கொண்டு அவன் கன்னங்களிலும் தலையிலும் முத்தமிட்டார். அவர் விழிகளிலிருந்து வழிந்த நீர் அவன் தோள்களில் சொட்டியது. விம்மலோசையுடன், மூச்சிளைப்புடன், உடைந்து தெறிக்கும் சொற்களுடன் அவர் கொந்தளித்தார். “மைந்தா! மைந்தா!” என்றார். “நான்! நான்!” என திணறினார்.

அவருக்குப் பின்னால் வந்து தேரிலேறிக்கொண்ட சகதேவன் யுதிஷ்டிரரின் தோளைத் தொட்டு “மூத்தவரே!” என்றான். அவர் அவனை நோக்கி சிரித்தார். “என் மைந்தன்! என் மைந்தன்!” என்று அர்ஜுனனைப் பற்றி உலுக்கினார். “படைவீரர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் உணர்வு வெளிப்பாடுகளை அரசர் தவிர்க்க வேண்டும்” என்று சகதேவன் சொன்னான். “ஆம்!” என்றபின் யுதிஷ்டிரர் பின்னடைந்தார். தன் தாடியில் பரவியிருந்த கண்ணீரை கைகளால் அழுத்தி துடைத்தபடி தலைகுனிந்தார். ஆனால் அர்ஜுனன் எந்த உணர்வு மெய்ப்பாட்டையும் காட்டவில்லை. அவன் முகம் சீற்றம்கொண்டவன்போல் தோன்றியது.

அந்த உணர்ச்சிகள் எதையும் அறியாதவர்போல இளைய யாதவர் தேரைத் திருப்பி படைகளுக்குள் கொண்டு சென்றார். மரச்சாலையில் குளம்படிகள் எடையுடன் ஒலிக்க புரவியில் வந்து கால்சுழற்றித் தாவி இறங்கிய பீமன் “வென்றுவிட்டோம்! இன்றொருநாள் கடப்போமா என்று நானே ஐயம் கொண்டிருந்தேன்! வென்றுவிட்டோம், மூத்தவரே!” என்று கையைத் தூக்கி கூவினான். அவனைத் தொடர்ந்து புரவியில் வந்து இறங்கிய நகுலன் “நமது படைகள் வெற்றிகொண்டாடத் தொடங்கிவிட்டன!” என்றான். “ஆம்! இன்றுதான் ஐயமிலாது நாம் வெற்றியை நோக்கி செல்கிறோம் என்பதை உணர்கிறோம்!” என்றான் சகதேவன்.

அர்ஜுனன் தன் வில்லையும் ஆவநாழியையும் காவலனிடம் அளித்துவிட்டு தேரிலிருந்து மறுபுறம் இறங்கி அப்பால் சென்றான். அவனது ஏவலன் புரவியுடன் அருகே வர அதில் தாவி ஏறி தட்டி கிளப்பி கொண்டுசென்றான். இளைய யாதவரும் இறங்கி தன் புரவியில் ஏறிக்கொண்டு அகன்றார்.

“இளையோன் புண்பட்டிருக்கிறானா?” என்று பதற்றத்துடன் யுதிஷ்டிரர் கேட்டார். “இல்லை, அவர் துயர் கொண்டிருக்கிறார்” என்று சகதேவன் சொன்னான். “ஏன் ஜயத்ரதனை கொன்றதனாலா? அவன் இப்போர்க்களத்தில் கொல்லப்படவேண்டியவன். நமது இளவரசனின் இறப்புக்கு முழுப் பொறுப்பேற்க வேண்டியவன்” என்றார் யுதிஷ்டிரர். “அவர் களம் விழுந்த எவருக்காகவும் துயருறுவதில்லை” என்று சகதேவன் சொன்னான். “இன்று அவருடைய அம்புகள் பட்டு கிருபர் தேர்த்தட்டில் விழுந்தார். அவருடைய புண்கள் ஆழமானவையாக இருக்கக்கூடுமென்று அஞ்சுகிறார்கள். அவரை துயருறச்செய்வது அதுதான்.”

யுதிஷ்டிரர் “ஆம், அவர்களிடையே விற்போர் நிகழ்ந்ததென்று அறிந்தேன்” என்றார். சகதேவன் “பெரும்பாலும் கிருபருடன் போர்புரிவதை மூத்தவர் தவிர்த்துவிடுவது வழக்கம். தனக்கு முதல் படைக்கலம் தொட்டளித்த ஆசிரியர் அவர் என்று மதிப்பு கொண்டிருக்கிறார். இன்று ஜயத்ரதனை கொன்றுவிட்டு வில்லுடன் திரும்புகையில் எதிரே கிருபர் பெரும்சீற்றத்துடன் வஞ்சினச் சொற்களை உரைத்தபடி வருவதைக் கண்டார். கிருபரிடம் ஒருபோதும் அத்தனை பெருவஞ்சம் வெளிப்பட்டதில்லை. கீழ்மகனே, மைந்தன் தலையை தந்தையின் கையில் அளிக்கிறாய் எனில் நீ மானுட உணர்வுகள் எதையும் அறியாத விலங்கு. அல்லது மண்ணுக்கடியிலிருந்து எழுந்த பெருநோய். நில், என் வில்லுக்கு எதிர்நில் என்று கூவியபடி அவரை தாக்கினார்” என்றான்.

“அர்ஜுனன் அவரை மிக எளிதில் வெல்ல முடியும்” என்று பீமன் சொன்னான். “ஆம், ஆனால் எப்போதும் அல்ல.

அத்தருணத்தில் கிருபர் உளம்தாளா வெறி கொண்டிருந்தார். அவருடைய வில்லாற்றல் அனைத்தும் கைகளிலும் கண்களிலும் குவியச்செய்தது அது. மூத்தவரோ தளர்ந்திருந்தார். போர் முடிந்துவிட்டதென்ற உணர்வை அடைந்த பின்னர் உளவிசையை மீட்டெழுப்பிக்கொள்வது எளிதாக இருக்கவில்லை. கிருபரின் அம்புகளால் அறைபட்டு அவருடைய கொடி உடைந்து தெறித்தது. தேர் மகுடம் உடைந்தது. அவர் உடலில் நான்கு கவசப்பகுதிகள் சிதைந்தன. அவர் வில்லடி படுவதை பார்த்து இருபுறத்திலிருந்தும் வந்து சூழ்ந்த படைவீரர்களை கைகாட்டி யாதவர் விலக்கிவிட்டார். போர் மேலும் எழ பார்த்தர் கிருபரால் கொல்லப்படுவார் என்றே தோன்றலாயிற்று" என்று சகதேவன் சொன்னான்.

"ஆனால் எங்கோ ஒரு புள்ளி உள்ளதென்று நானும் அறிந்திருந்தேன். ஏனெனில் அவருடன் வில்லாடி வளர்ந்தவன் நான்" என்று அவன் தொடர்ந்தான். "கிருபர் வஞ்சினங்களை கூவிக்கொண்டிருந்தார். மூத்தவர் உளம்தளரக் கண்டபின் மேலும் மேலும் இரக்கமற்ற சொற்களை சொன்னார். உன் குடியை அழிப்பேன், உன் கொடிவழியினர் நாடோடிகளாக இரந்தலையும்படி செய்வேன் என்றார். இறுதியாக உன் ஆசிரியனின் இறுதிச்சொற்களையும் வில்லால் பிளக்கிறேன். அவன் பெயர் இங்கே எஞ்சாமலாக்குவேன். விண்ணிலிருந்து அதை பார் என்றார். அச்சொற்கள் இளைய பாண்டவரை எண்ணியிராக் கணத்தில் பற்றியெரியச் செய்தன. ஆசிரியரே, அச்சொற்களில் ஒன்றை உங்கள் அம்பு தொடுமெனில் விண்ணிலிருந்து பேயுருக்கொண்டு மீண்டும் இறங்கிவருவேன் என்று கூவியபடி அவர் தன் அம்புகளால் கிருபரை அறையத் தொடங்கினார்."

ஆவக்காவலன் உளஎழுச்சியுடன் “ஆம் அரசே, அது உயிர்விசை மட்டுமே திகழ்ந்த போர். ஒவ்வொரு அம்புக்கும் விசை மேலெழுந்தது. அம்புகள் பட்டு கிருபரின் கவசங்கள் உடைந்தன. நெஞ்சிலும் விலாவிலும் வயிற்றிலும் அம்புபட்டு அவர் தேர்த்தட்டில் விழுந்தார். பிறையம்பை எடுத்து அவர் தலையை வெட்ட இளைய பாண்டவர் முயன்றபோது இளைய யாதவர் கைநீட்டி அதை தடுத்தார். கிருபரை அவர்கள் படைகளுக்குள் அழைத்துச்சென்றனர். அவர் விழிகளிலிருந்து மறைந்ததும் தெய்வங்களே என்று அலறியபடி இளைய பாண்டவர் தன் காண்டீபத்தை கீழே வைத்தார். அப்பொழுது அந்திமுரசு ஒலிக்கத்தொடங்கியது” என்றான்.

யுதிஷ்டிரர் “ஆசிரியர்களுக்கு எதிராக வில்லெடுப்பது துயரளிப்பதே. இந்தக் களத்தில் பிதாமகர்களையும் ஆசிரியர்களையும் உடன்குருதியினரையும் வென்று நின்றாகவேண்டுமென்று நமக்கு ஆணையிடுகின்றன தெய்வங்கள். இதற்கப்பால் நாம் எத்தகைய மானுடராக எழுவோம் என்பதை எண்ணிப்பார்க்கவே இயலவில்லை” என்றார். பீமன் “அந்தச் சிறு உளக்கலக்கம் நன்று. அது சற்று நேரம் நீடிக்கும். அதை சூடிக்கொண்டு மீண்டும் போருக்கெழ இயலாது. ஆகவே உள்ளிருந்து ஊறியெழும் பல்லாயிரம் சொற்களால் அதை கரைத்தழிப்போம். அறிந்த நெறிநூல்களையும் தொல்வழக்கங்களையும் நினைத்து நினைத்து எடுப்போம். புண் பொருக்காடி தழும்பாவதுபோல் அந்த உளநிலை நம்மில் உருமாறி அமையும். மேலும் தயக்கமற்றவர்களாக எழ முடியும் நம்மால். இன்னொரு முறை கிருபரை எதிர்கொண்டால் எந்த ஐயமும் இல்லாமல் அவர் நடுநெஞ்சில் தன் நீளம்பை பாய்ச்சி நிறுத்த அர்ஜுனனால் இயலும்” என்றான்.

“மந்தா!” என்று யுதிஷ்டிரர் துயருடன் அழைத்தார். பீமன் “என்ன பேசிக்கொண்டிருக்கிறோம்! இது வெற்றியின் தருணம்” என்றான். சகதேவன் “போர் நிறைவுற்றது, மூத்தவரே. அந்தி ஓய்வுக்கென படைகள் திரும்பிக்கொண்டிருக்கின்றன. தாங்கள் பாடிவீட்டுக்கு மீள்க! இன்று மிகவும் களைத்திருக்கிறீர்கள்” என்றான். யுதிஷ்டிரர் அர்ஜுனனின் தேரிலிருந்து பீமனின் கைபற்றி மெல்ல இறங்கினார். அவர் உடலில் மீண்டும் முதுமைக்குரிய நடுக்கமும் எச்சரிக்கையும் குடியேறின. ஏவலர்கள் தேரைத் திருப்பி அப்பால் கொண்டுசெல்ல படைவீரர்கள் யுதிஷ்டிரருக்குரிய புரவியை கொண்டுவந்து நிறுத்தினர். அதில் ஏறி அமர்ந்துகொண்ட யுதிஷ்டிரர் “இளையோனே, என்னுடன் வருக! இன்று என்ன நிகழ்ந்ததென்று சொல்க! இன்று முழுக்க நான் முரசொலிகளை சொற்களாக்கும் திறனை இழந்திருந்தேன். என் உள்ளம் இளையோனை மட்டும் எண்ணிக்கொண்டிருந்தது” என்றார்.

நகுலனும் சகதேவனும் அவருக்கு இருபுறமும் செல்ல சற்று பின்னால் பீமன் புரவி மேல் உடல் தளர்ந்து அமர்ந்து தலை திருப்பி அணிதிரண்டு பாடிவீடுகளுக்கு சென்றுகொண்டிருந்த படைவீரர்களை நோக்கிக்கொண்டிருந்தான். சகதேவன் “இன்று கௌரவர்களில் அனைவரையுமே ஒருமுறையேனும் பின்னடைந்து ஓடச்செய்தோம். நம்மால் வெல்லப்படாதவர் பால்ஹிகர் ஒருவரே” என்றான். “அவர் பின்னடைவது நமக்கும் இழுக்கு... அவர் நம் முன்னோரின் மானுடத்தோற்றம்” என்றார் யுதிஷ்டிரர். “இன்று கௌரவ மைந்தர் எழுபதுபேர் கொல்லப்பட்டார்கள். இளைய கௌரவர்களும் களம்பட்டனர்...” என்று சகதேவன் சொன்னான். யுதிஷ்டிரர் பெருமூச்சுடன் தலையசைத்தார்.

திருஷ்டத்யும்னன் புரவியில் எதிரே வந்து விரைவழிந்து வளைந்து அருகே அணுகி தலைவணங்கினான். "என்ன நிகழ்ந்தது, பாஞ்சாலரே? இன்று போரில் நிகழ்ந்த அனைத்தையும் சொல்க!" என்றார் யுதிஷ்டிரர். திருஷ்டத்யும்னன் "இன்று போர்முனைகளில் இதுவரை நிகழ்ந்தவற்றிலேயே விசைகொண்ட மோதல்கள் உருவாயின. ஒவ்வொரு தருணத்திலும் எண்ணியிராத ஒன்று நிகழ்ந்தது. இளைய பாண்டவர் பீமசேனர் அர்ஜுனனை காக்கும்பொருட்டு எழுந்தபோது அங்கநாட்டு அரசரால் தடுக்கப்பட்டார். அரைநாழிகைப் பொழுதுகூட அங்கர் முன் வில்லுடன் எவரும் நின்றிருக்க இயலாதென்பது அனைவரும் அறிந்ததே. ஆனால் அவர் இன்று நூறு அம்புகளால் அறைந்து அங்கரின் பொற்தேரின் கொடியையும் மகுடங்களையும் கவசங்களையும் உடைத்தெறிந்தார். அங்கரை அஞ்சி தேர்த்தட்டில் விழச்செய்து பின்னடைய வைத்தார். இன்று படையெங்கும் பேச்சென இருப்பது அதுவே" என்றான்.

யுதிஷ்டிரர் "நன்று... இளையோனின் ஆற்றலை ஒவ்வொருநாளும் புதியதாக அறிந்துகொண்டிருக்கிறோம்" என்றார். "அங்கர் வெல்லப்படக் கூடியவரே என்று இளைய பாண்டவர் நிறுவிவிட்டார். இனி இப்போரில் நாம் அஞ்சுவதற்குரியவரென எவருமில்லை" என்றான் திருஷ்டத்யும்னன். யுதிஷ்டிரர் "அவ்வாறு நம்புவது நமக்கு ஊக்கமளிப்பது. ஆனால் போர்க்களத்தில் அனைத்துத் தருணங்களிலும் தெய்வங்கள் ஒன்றுபோல இயல்வதில்லை. துரோணரும் அங்கனும் நம்மை முற்றழிக்கும் ஆற்றல்கொண்ட வீரர்கள் என்பதே உண்மை. உரிய முறையில் அவர்கள் உளம் கொள்ள வேண்டும். அவர்களை ஆளும் தெய்வங்கள்

அவர்களுடன் நின்றிருக்க வேண்டும். எதுவும் நிகழும் என்றெண்ணி களமெழுவதே வீரர்களுக்கு உகந்தது” என்றார்.

திருஷ்டத்யும்னன் அவர் அதை கூறுவார் என்று உணர்ந்திருந்தமையால் ஊக்கம் குன்றவில்லை. புன்னகையுடன் “இன்று களத்தில் சாத்யகி இயற்றிய போரும் நிகரற்றது. துச்சாதனரையும் துரியோதனரையும் வில்லாலும் கதையாலும் வென்றார். துரோணரை எதிர்த்து தோற்கடித்து திருப்பி அனுப்பினார். சல்யரையும் அஸ்வத்தாமரையும் களத்தில் வென்றார். பெருந்திறல்மிக்க வீரர்கள் பதினேழு பேரை களத்தில் கொன்றழித்தார். சாத்யகியின் உடலில் இளைய யாதவர் குடியேறி போரிடுவதாகவே கௌரவர் பலர் எண்ணினர். சிலரோ இளைய யாதவரே மாற்றுருக்கொண்டு களமிறங்கிவிட்டதாக எண்ணத்தலைப்பட்டனர். உண்மையில் போர்க்களத்தில் வில்லுடன் நின்று பொருதுகையில் சில அசைவுகளில், சில திரும்பல்களில் அவரிடம் இளைய யாதவர் தோன்றி மறைவதை நானே பார்த்தேன்” என்றான்.

“நேற்றும் இன்றும் கௌரவர்கள் போர்நெறிகளைக் கடந்து படைக்கலமிலாது அமர்ந்திருந்த இளைய யாதவர் மேல் அம்புகளை தொடுத்தனர். அவருடைய கவசங்களை உடைத்தனர். நேற்று அவர் உடலில் பதினெட்டு இடங்களில் புண்கள் இருந்தன என்று கேள்விப்பட்டேன். இன்று ஐந்து அம்புகள் அவருடலில் தைத்து நின்றிருப்பதை நானே பார்த்தேன். எங்கோ அவர் சீற்றம் கொண்டிருக்கக்கூடும். அதுவே சாத்யகியில் எழுந்திருக்கக்கூடும்” என்றான் திருஷ்டத்யும்னன். யுதிஷ்டிரர் “ஆனால் நமது படைவீரர்கள் சாத்யகியை போற்றி ஒரு வாழ்த்தொலிகூட எழுப்பவில்லை” என்றார். அதை எதிர்பார்த்திருந்தமையால் அனைவரும்

சொல்லடங்கினர். சற்று அப்பால் வந்துகொண்டிருந்த பாண்டவப் படைத்தலைவனாகிய வியாஹ்ரதத்தன் “படைகளால் ஏற்றுக்கொள்ள முடியாத ஒன்றை அவர் இயற்றினார்” என்றான்.

யுதிஷ்டிரர் “ஆம், ஊழ்கத்திலிருப்பவன் தலையை வெட்டுவதென்பது அரக்கர்களும் அஞ்சித் தயங்கும் ஒரு செயல். அதை அவன் ஏன் செய்தான் என்பதை எத்தனை எண்ணியும் என்னால் உய்த்துணர இயலவில்லை. ஆனால் மானுடரில் அவர்களறியாத சில எழுவதுண்டு” என்றார். “எதன் பொருட்டென்றாலும் அது எவ்வகையிலும் சொல்லி நிலைநிறுத்தகூடிய செயல் அல்ல” என்றான் வியாஹ்ரதத்தன். “அவர் பூரிசிரவஸின் தேரில் பாய்ந்தேறி கையிழந்து கண்மூடி அமர்ந்திருந்த அவர் குடுமியைப்பற்றித் தூக்கி வாளால் தலையை வெட்டி உயர்த்திக் காட்டிய அக்காட்சியை ஒவ்வொரு கணமுமென மீண்டும் காண்கிறேன். சூழ்ந்திருந்த அத்தனை கண்களிலும் அப்போது குடியேறிய சினத்தையும் கசப்பையும் என்னால் தனித்தனியாகவே இப்போது காண இயல்கிறது. ஒருபோதும் பாண்டவ வீரர்கள் அதை பொறுத்துக்கொள்ளப் போவதில்லை. ஷத்ரியர்கள் வருந்தலைமுறைகளிலும் அதை ஏற்க மாட்டார்கள்.”

சகதேவன் “ஷத்ரியர்கள்கூட சில மறுசொற்களை சொல்லிக்கொள்கிறார்கள். சாத்யகியை தேர்த்தட்டில் வீழ்த்தியபோது அவர் நெஞ்சில் காலால் உதைத்தார் என்றும் அது பிழையெனில் அதற்கு நிகர்ப்பிழையென இதை கருதலாம் என்றும் சிலர் சொல்வதை கேட்டேன். ஒரு மறுசொல்கூட உரைக்காமல் இதை மறுப்பவர்கள் அசுரரும் அரக்கருமே. அவர்களுடைய நெறிகளில் இச்செயலுக்கு எவ்வகையிலும்

இடமில்லை” என்றான். யுதிஷ்டிரர் “ஆம், அவர்கள் விலங்குகளைப்போல முற்றிலும் தங்கள் தெய்வங்களுக்கு தங்களை அளித்துக்கொண்டவர்கள். சொற்களால் தெய்வநெறிகளை மடைமாற்றிக்கொள்ளும் ஆற்றல் அவர்களுக்கில்லை” என்றார். சகதேவன் “இன்று நிகழ்ந்த ஒவ்வொன்றையும் மீள எண்ணிப்பார்க்கையில் வெறும் கசப்பே எஞ்சுகிறது, மூத்தவரே. நாம் அனைவருமே இங்கு வருவதற்கு முன்பு இலாத சிலராக மாறிவிட்டோம். அனைத்து வரம்புகளும் அழிந்துவிட்டிருக்கின்றன” என்றான்.

சீற்றத்துடன் “நெறிகளைப்பற்றி எனக்கு நீ கற்பிக்க வேண்டியதில்லை” என்று யுதிஷ்டிரர் சொன்னார். சகதேவன் “உங்களுக்குத்தான் மீளமீள கற்பிக்க வேண்டியிருக்கிறது” என்றான். “இங்கு இன்னமும்கூட நா முழுத்து நீங்கள் உரைக்கவில்லை. கூறுக, சாத்யகியின் செயலை நீங்கள் ஏற்கிறீர்களா? இல்லை எனில் அவரை அழைத்து நீங்கள் ஒரு சொல்லேனும் இடித்துரைக்கப் போகிறீர்களா?” என்று கேட்டான். “ஒரு வேளை உணவு விலக்களியுங்கள். ஓர் இரவு துயில் விலக்களியுங்கள். அல்லது ஆயிரம் படைக்கலங்களை தூய்மை செய்து அடுக்கும் பணியை அளியுங்கள். ஒரு சிறு தண்டனையேனும் நீங்கள் அவருக்கு அளித்தீர்கள் என்று படைகள் அறியட்டும்.”

யுதிஷ்டிரர் “இது போர்க்களம். முறையான அவை கூடி உசாவி இருபுறமும் கண்டு அனைத்து நெறிகளும் சூழ்ந்து முடிவெடுக்கும் தருணம் இங்கில்லை” என்றார். “இது வெறும் சொல். உங்களுக்கே தெரியும், ஊழ்கத்திலிருந்தவனின் தலையை வெட்டுவதென்றால் என்ன பொருள் என்று. அவர் மூலாதாரத்திலிருந்து எழும் மூச்சு அறுபட்டு நின்று துடிப்பதை

நான் பார்த்தேன். குலுங்கி புரண்டு சென்ற தேரில் அவர் உடல் அசையாமல் அமர்ந்திருந்தது. அதிலிருந்து மூச்சு வடிவான நுண்சொல் அகலவில்லை. அங்கே சிதையில் அவ்வுடல் நின்று துடிக்கும்” என்றான் சகதேவன். “ஐயமே இல்லை மூத்தவரே, இப்போரில் இதுவரை இயற்றப்பட்டதிலேயே கீழ்மை இது. பூரிசிரவஸ் நம் குடிக்கு எதுவும் பிழையியற்றவில்லை. நாம் எண்ணிக்கொதிக்கும் வஞ்சம் எதுவும் நமக்கு அவரிடமில்லை.”

யுதிஷ்டிரர் பேசுவதற்குள் சகதேவன் தொடர்ந்தான். “இப்போரில் அவர் சாத்யகியின் மைந்தரை கொன்றார். சாத்யகியின் நெஞ்சில் மிதித்தார். ஆனால் போர்க்களத்தில் இயற்றுவனவற்றுக்கு போர்க்களத்தின் நெறிகளே தண்டனையாக முடியும். பூரிசிரவஸை நாம் களத்தில் கொன்றது அதன்பொருட்டே. ஆனால் சாத்யகி இயற்றியது நம் குடிகள் எண்ணி நாணும் செயல். நம் கொடிவழிகள் பிழைநிகர் செய்தாக வேண்டிய கீழ்மை.” யுதிஷ்டிரர் “நான் சொற்களை இழந்துவிட்டேன். மந்தா, நீ கூறுக! நீ கூறுவதைப்போல் நான் செய்கிறேன். சாத்யகி பிழை இயற்றியுள்ளானா?” என்றார்.

பீமன் நகைத்து “நன்று, வழக்கமாக என் சொல்லுக்கு மாற்றாக அவனிடம் கேட்பீர்கள்” என்றபின் மேலும் நகைத்து “போரில் இயற்றலாகாத ஒன்று எண்ணியபின் வருந்துதல்” என்றான். பின்னர் “நாம் சாத்யகியைப்பற்றி பேசுகிறோம். அர்ஜுனன் செய்த பிழையை அச்சொற்களால் மூடிக்கொள்கிறோம்” என்றான். யுதிஷ்டிரர் “இளையோன் என்ன செய்தான்?” என்றார். “பூரிசிரவஸின் கையை அவன் வெட்டுகையில் பூரிசிரவஸ் சாத்யகியுடன் போர்புரிந்துகொண்டிருந்தான். பிறிதொருவனிடம் போர்புரிபவன் கையை வெட்டி எறிவது போர்முறையா?” என்றான் பீமன். திருஷ்டத்யும்னன் “நமக்கு அணுக்கரான

சாத்யகியைக் காப்பது நம் கடன். நாம் அவரை இழந்தால் படைக்கலத்தில் ஆற்றல்மிக்க வீரன் ஒருவனை இழக்கிறோம். ஆகவே மாற்று எண்ணம் ஏதும் பொருளற்றதே" என்றான்.

யுதிஷ்டிரர் "ஆம், சாத்யகி அர்ஜுனனுக்கு மைந்தனைப் போன்றவன். அவனைக் காக்க வில்லெடுக்காமலிருந்தால் நாம் இப்போது அர்ஜுனனை பழித்துக்கொண்டிருப்போம்" என்றார். "நாணொலி எழுப்பி அவரை தன்னுடன் போரிட அறைகூவியிருக்கலாமே? வசை கூவி அவரை போருக்கழைத்திருக்கலாமே? விழிதிரும்பி செவிஅணைந்து சித்தம் பிறிதொன்றில் குவிந்திருப்பவனை கை வெட்டி வீழ்த்தியவன் நமது இளையோன். நீங்கள் தண்டம் அளிப்பதென்றால் முதலில் அவனுக்கே அளிக்கவேண்டும்" என்றான் பீமன். யுதிஷ்டிரர் சலிப்புடன் "இதை என்னிடம் எவரும் சொல்லவில்லை. அவன் சோர்ந்திருந்தது அதனால்தானா?" என்றார். "அதனாலும்தான்" என்று சகதேவன் சொன்னான். "ஆனால் அதை பெரும்பிழையென நான் எண்ணவில்லை. ஒருகணம் தயங்கியிருந்தால் பூரிசிரவஸ் சாத்யகியின் கழுத்தை வெட்டியிருப்பார். அங்கு நெறியெண்ணப் பொழுதில்லை. அதை இயற்றியது அவரல்ல, அவர் கைகள். அதை ஆண்ட உணர்வு."

"அத்தகைய உணர்வுகளாலேயே சாத்யகியும் இயக்கப்பட்டான்" என்றான் பீமன். "இல்லை, கையறுந்து விழுந்ததுமே பூரிசிரவஸ் முற்றழிந்துவிட்டார் என்றாயிற்று. ஊழ்கத்தில் அமர்ந்து அவர் உயிர்விடுவதை அர்ஜுனர் ஒப்பிவிட்டார். அதன் பின்னரும் வாளெடுத்துப் பாய்வதென்பது கீழ்மையின் வஞ்சம் மட்டுமே. எதிர்நின்று பொருதி வெல்ல இயலாதவனின் வஞ்சம் அது." சகதேவனின் தோளில் கைவைத்து "இளையோனே, அவன் ஒரு

தந்தை. தந்தையென்று மட்டுமே நின்று அவன் அதை இயற்றியிருக்கலாம்” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “இங்கு மைந்தரை இழக்காத தந்தை எவர்? மைந்தரைக் கொல்லாத தந்தை எவர்?” என்று பீமன் கேட்டான். “நெறிகள் என்பவை மாறாத கொள்கைகள், மாறுமெனில் அவை நெறிகளல்ல என்று இளமையில் கற்றிருக்கிறோம். பின்னர் வாழ்நாள் முழுக்க நெறிகளை மாற்றுவதெப்படி என்றே சொல்சூழ்கிறோம்” என்றான்.

சீற்றத்துடன் யுதிஷ்டிரர் “நான் என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள்... நான் செய்யவேண்டியதுதான் என்ன?” என்றார். “தாங்கள் செய்வதற்கு ஒன்றுமில்லை, மூத்தவரே. இப்போரில் தாங்கள் வெறும் பார்வையாளர் மட்டுமே. அதற்கப்பால் ஆணையிடுவதற்கும் வழிகாட்டுவதற்கும் நெறியுரைப்பதற்கும் உரிய இடத்தில் இருப்பதாக தாங்கள் எண்ணிக்கொள்ள வேண்டியதில்லை. அது தங்களுக்கு வெற்றுத் துயரை மட்டுமே அளிக்கும். இறுதியில் அவைச்சிறுமையிலும் கொண்டு சேர்க்கும். ஆகவே அந்த உளச்சிக்கலில் இருந்து விடுபட்டிருங்கள்... அதைத்தான் நீங்கள் செய்யவேண்டும்” என்றபின் பீமன் புரவியைத் திருப்பி கடந்து சென்றான்.

யுதிஷ்டிரர் அவன் செல்வதை சில கணங்கள் நோக்கிவிட்டு “ஆம், அவன் சொல்வது முறையானது. நான் வெறும் பார்வையாளன் மட்டுமே. இங்கு நிகழும் எதிலும் எனக்கு எப்பங்களிப்புமில்லை” என்றார். எரிச்சலுடன் அவரை நோக்காமல் தலைதிருப்பி “இவையனைத்தும் தங்கள் பொருட்டே” என்று சகதேவன் சொன்னான். “ஆம், ஆகவே இவையனைத்திற்கும் நான் பொறுப்பேற்றுக்கொள்ளவும் வேண்டும். அதையும் மறுக்கவில்லை” என்று யுதிஷ்டிரர்

கூறினார். திருஷ்டத்யும்னன் “நான் பிறிதொரு செய்தியுடன் உங்களை பார்க்க வந்தேன்” என்றான். “இந்தப் போரை இவ்வண்ணமே இரவிலும் தொடரலாம் என்று நான் எண்ணுகிறேன்.”

“இரவிலா? இரவுப்போர் இங்கு வகுக்கப்பட்ட அனைத்து நெறிகளுக்கும் எதிரானதல்லவா?” என்றார் யுதிஷ்டிரர் திகைப்புடன். “சற்று முன்னர் நெறியுரைக்கும் இடத்தில் தாங்கள் இல்லை என்பதை கூறினீர்கள்” என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். யுதிஷ்டிரர் சீற்றத்துடன் “ஆனால் இது முறையல்ல. இரவுப்போரெனில் அது போரே அல்ல. இருளில் போரிடும் கலையறிந்தவர் பிறரை கொன்றுகுவிக்கும் நிகரிலாப் பூசல் அது. எவரால் எதன்பொருட்டு கொல்லப்படுகிறோம் என்று அறியாமல் இங்கு வீரர்கள் உயிர்விடுவார்கள். வண்ணங்களும் வடிவங்களும் குழம்பிப்போன வெளியில் நம்மவரை நாமே கொன்றுகுவிக்கவும்கூடும்” என்றார்.

“அரக்கர்களும் அசுரர்களும் இருளில் நோக்கும் விழி கொண்டவர்கள். நிஷாதர்களும் கிராதர்களும் அவ்வண்ணமே கண்களை தீட்டி வைத்திருப்பவர்கள். இரவு வேட்டைக்கென விழிகளை நெடுங்காலமாக பயிற்றுவித்து வந்தவர்கள் அவர்கள் என்று தாங்களும் அறிந்திருப்பீர்கள்” என்றான் திருஷ்டத்யும்னன். சினத்துடன் “அவர்களை முன்னிறுத்தி போர்புரியப் போகிறோமா என்ன? ஷத்ரியர்கள் பின்னணியில் நிற்கப்போகிறார்களா?” என்றார் யுதிஷ்டிரர். “எனது நோக்கம் அதுவே. இந்தப் போரை இன்றிரவு அவர்கள் நிகழ்த்தட்டும். எனில் இன்றோடு இப்போர் முடியும். இதுவரை படைசூழ்கையின் நுட்பங்களை அறிந்த ஷத்ரியர்களையே நாம்

முகப்பில் நிறுத்தியிருக்கிறோம். ஆனால் இந்தப் போர் அறுதியாக அரக்கர்களுக்கும் அசுரர்களுக்கும் நிஷாதர்களுக்கும் கிராதர்களுக்கும் நலம்பயக்கக் கூடியது. இதை அவர்களும் உணர்வார்கள். எனில் போரை இறுதியாக அவர்களே நிகழ்த்தி வெல்லட்டும். தங்களுக்கு அளிக்கப்பட்டதல்ல தாங்கள் ஈட்டியது இவ்வெற்றி என்ற எண்ணமும் அவர்களுக்கு உருவாகும்” என்றான்.

“இல்லை, இரவுப்போர் எவ்வகையிலும் ஏற்கக்கூடியதல்ல. எனது சொல் அதற்கு எழாது” என்றார் யுதிஷ்டிரர். சகதேவன் “மூத்தவரே, இங்கு அறுதியாக சொல்லவேண்டியவர் இளைய யாதவரே” என்றபின் திருஷ்டத்யும்னனிடம் “இளைய யாதவரிடம் இதைப்பற்றி பேசினீர்களா?” என்றான். “அவரிடம் நேற்றே இதைக்குறித்து பேசினேன். எதிரி உளம் சோர்ந்திருக்கும் தருணத்தில் எவ்வகையிலும் அவன் எதிர்பாராதபடி எழுந்து சென்று தாக்கி முற்றழிப்பதொன்றே இப்போரின் இறுதியாக இருக்க இயலும் என்றேன். அது இரவுப்போரெனில் மிக நன்று என்றும் சொன்னேன். அவர் மறுத்துரைக்கவில்லை.” கைநீட்டி உரத்த குரலில் “ஆனால் அவன் ஏற்கவில்லை” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “ஏற்கவில்லையெனில் மறுத்துரைத்திருப்பார்” என்றான் சகதேவன்.

“இரவுப்போர் பெரும்பிழை. இரவில் என்ன நிகழுமென்றே எவராலும் உரைக்க இயலாது. பகலில் விண்ணிலிறங்கும் தெய்வங்கள் அனைத்தும் இரவில் மறைந்துவிடும் என்கிறார்கள். கந்தர்வர்களும் கின்னரர்களும் இரவுக்குரியவர்கள். பாதாள நாகங்களும் இருள் தெய்வங்களும் இரவை ஆள்பவர்கள். இப்போரை நாம் அவர்களுக்கு

விட்டுவிடப்போகிறோமா?” என்றார் யுதிஷ்டிரர். “ஏற்கெனவே இப்போர் அவர்களால்தான் நிகழ்த்தப்படுகிறது” என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். “இன்றைய போரை கடோத்கஜன் நிகழ்த்தட்டும். இரவில் ஏழுமடங்கு ஆற்றல் கொள்பவர்கள் அவர்கள். அவன் வழிநடத்தும் இடும்பர் படை இத்தருணத்தில் சென்று அவர்களை அறையுமெனில் போர் நாளை புலர்வதற்குள் முடியும். இன்று பிறை நிலவு. படைக்கலங்களின் கூர் தெரியுமளவுக்கு ஒளியிருக்கும். அதுவே போதும் நமக்கு.”

யுதிஷ்டிரர் தளர்ந்து “இதற்கு நான் என்ன சொல்லவேண்டும், இளையோனே? நான் என்ன சொல்ல வேண்டும்? சொல்க!” என்றார். “தாங்கள் சொல்வதற்கு ஒன்றுமில்லை. இப்போர் நிகழத்தான் போகிறது” என்று சகதேவன் சொன்னான். “படைகள் அணிதிரும்பிவிட்டன. அனைவரையும் திரட்டி மறுபடியும் போருக்கு கொண்டுசெல்லவிருக்கிறோமா?” என்றார் யுதிஷ்டிரர். “இல்லை, படைகள் மீண்டும் அணிவகுப்பதற்கான அறைகூவல்களை விடுத்தால் எதிரிகள் எச்சரிக்கை கொள்வார்கள்” என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். “இன்று அவர்களின் பெருவீரர்கள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கான எரிசெயல்களை செய்ய துரியோதனர் தெற்குக்காட்டிற்கு சென்றிருக்கிறார். மைந்தனை இழந்த துயரிலிருக்கிறார் அங்கர். கிருபர் நோயுற்றிருக்கிறார். எதிர்த்தரப்பில் இன்று ஊக்கத்துடன் போரிட எவருமில்லை.”

“பிறை எழுகையில் நமது படைகள் கிளம்பட்டும். ஒரு நாழிகைக்குள் கௌரவப் படையை சிதறடிக்க முடியும். மூன்று நாழிகைக்குள் அவர்களின் பெருவீரர்கள் அனைவரையும் சுற்றி வளைத்துப் பிடித்து போரை முடிக்க இயலும்” என்று

திருஷ்டத்யும்னன் சொன்னான். “உங்கள் சொல் எழவேண்டும், அதற்காகவே வந்தேன்.” யுதிஷ்டிரர் தவிப்புடன் “இதற்கு நான் என்ன விளக்கம் கூற இயலும்? சொல்க, எந்த நெறியின்பாற்பட்டு இதை ஒப்ப இயலும்?” என்று கேட்டார். “அனைத்துச் செயல்களுக்கும் உரிய விளக்கங்களை அளிக்க அறிவுடையோரால் இயலும். இப்போர் இன்றுடன் முடியுமெனில் இரு தரப்பிலும் பல்லாயிரம் பேர் சாகாமல் தடுக்க முடியும். இரு தரப்பும் முற்றழியாது நிறுத்திவிட முடியும். அதை சொல்லுங்கள்” என்றான் திருஷ்டத்யும்னன்.

யுதிஷ்டிரர் சில கணங்கள் அவனை கூர்ந்துநோக்கிவிட்டு “உங்கள் அனைவர் உள்ளங்களிலும் நிறைந்திருப்பது என் மேலான இளிவரல்தான்” என்றார். திருஷ்டத்யும்னன் விழிகள் கனிய “அல்ல, அரசே. தங்கள் மீதான இளிவரல் அல்ல. இக்களத்தில் மூதாதையரின் சொல்லென, நெறிநூல்களின் வடிவென, தெய்வங்களின் முகம் என நீங்கள் நின்றிருக்கிறீர்கள். இதுவரை எதையெல்லாம் நம்பி வாழ்ந்தோமோ அவையனைத்தும் தாங்களென தெரிகின்றன. நாங்கள் இளிவரலும் சீற்றமும் கொண்டிருப்பது அவற்றின் மீதுதான்” என்றபின் தலைவணங்கி திரும்பிச்சென்றான்.

# கார்கடல் - 59

தென்சரிவில் இரண்டு தரப்பினரின் இடுகாடுகளும் அருகருகே இருந்தன. அங்கே புழங்குபவர்களின் கண்களுக்கு மட்டுமே அவை வெவ்வேறாக பிரிக்கப்பட்டிருப்பதை காணமுடிந்தது. தொலைவிலிருந்து பார்க்கையில் குறுங்காட்டுக்குள் பந்தங்கள் ஒழுகும் ஒளியும் சிதைகள்

வானளாவ எரிந்து நின்றிருக்கும் ஒளியும் பெருகி நிறைந்திருப்பதையும் அவற்றினூடாக மானுட நிழல்கள் பேருருக்கொண்டு அலைவதையும் மட்டுமே பார்க்கலாகும். சுபாகு சிதைகளின் அருகே நின்றிருந்தபோது சுஜாதன் புரவியில் வந்து இறங்கினான். “மூத்தவர் கிளம்பிவிட்டார்” என்றான்.

போர் தொடங்கிய சில நாட்களிலேயே சுஜாதன் முற்றாக மாறிவிட்டிருந்தான். எப்போதும் வாய்மூடாமல் பேசிக்கொண்டே இருப்பது அவன் இயல்பு. எதற்கும் அண்ணாந்து தலையை உதறிக்கொண்டு சிரிப்பான். தன்னுள் மூழ்கி, உதிரிச்சொற்களுடன் இருக்கும் அவனைக் காண்கையில் அவன்மேல் கரிய இருள்திரை ஒன்று வந்து மூடிக்கொண்டது போலிருந்தது. சுபாகு “சிதைகள் ஒருங்கியாயிற்றா?” என்று ஏவலனிடம் கேட்டபின் சுஜாதனிடம் “சென்று ஒருமுறை பார். அவர் நெடுநேரம் இங்கே நிற்கக்கூடாது. அனல் மூட்டிய மறுகணமே திரும்பிவிடவேண்டும்” என்றான்.

சுஜாதன் “ஆம்” என தலையசைத்து கிளம்புவதைக் கண்டதும் “நில்” என்றான் சுபாகு. “நீ சென்று குறுங்காட்டின் வாயிலில் நில். அவர்கள் அணுகும்போது என்னிடம் தெரிவி” என்றபின் தனக்குத்தானே என “நானே பார்த்துக்கொள்கிறேன்” என்றான். சுஜாதன் அதற்கும் எவ்வுணர்வையும் காட்டவில்லை. சிதைகளை நோக்கி செல்கையில் உடன்வந்த ஏவலனிடம் “இளையோன் இங்கே கிடக்கும் உடல்களை பார்க்கவேண்டியதில்லை” என்றான். ஏவலன் “ஆணை” என்றான். “போர்க்களத்தில் உடல்கள் மேல் நின்றுதான் போரிடுகிறோம். ஆனால் இங்கே சடலங்களைப் பார்ப்பது வேறு ஓர் நடுக்கை

அளிக்கிறது. மெய் சொல்வதென்றால் என்னால் இங்கே நிற்கவே இயலவில்லை” என்றான் சுபாகு.

பெரிய சிதையருகே கீழே குண்டாசியின் உடல் வெண்பட்டுத்துணியால் போர்த்தப்பட்டுக் கிடந்தது. அதை பார்த்ததுமே அது எவருடையது என்று தெரிந்தது. “இன்னும் சிதைமேல் ஏற்றவில்லையா?” என்று சுபாகு கேட்டான். “இல்லை, ஒரு சிறிய குழப்பம். அரசர் தன் இளையோன் குண்டாசியின் உடலுக்கு அனல்மூட்ட விழைவதாகவே செய்தி. முன்னர் இறந்த இளையோரின் உடல்களுக்கு அவர் அங்கிருந்தே அனல் கொடுத்தனுப்புவதுதான் வழக்கம்” என்றான் சுடலைப்பொறுப்பாளன். “ஆகவே குண்டாசியின் சடலத்தை மட்டும் தனியாக சிதையேற்றவேண்டும் என என் உதவியாளன் சொன்னான். தங்களிடம் ஒரு சொல் கேட்டுவிட்டுச் செய்யலாமென்று எண்ணினேன்.”

சுபாகு கீழே கிடந்த மற்ற உடல்களை பார்த்தான். அவர்களின் முகங்கள் வெண்ணிறத் துணியால் சுற்றிக்கட்டப்பட்டிருந்தன. அவன் அவர்களின் முகங்களை நினைவுகூர முயன்றான். பின்னர் “அவன் எங்களில் ஒருவன். இதுவரை மறைந்த கௌரவர்கள் அனைவருமே கூட்டாகவே சிதையேற்றப்பட்டனர். அவ்வாறே இவனும் சிதையேறட்டும்” என்றான். “ஆணை” என்றான் சுடலைப்பொறுப்பாளன். சுபாகு பெருமூச்சுடன் அப்பால் சென்று அங்கே பூரிசிரவஸுக்கு சிதை ஒருங்கிக்கொண்டிருப்பதை கண்டான். சலனின் உடல் மேலே ஏற்றி வைக்கப்பட்டிருந்தது. கீழே பூரிசிரவஸின் உடல் துணிக்குவியல்போல் வைக்கப்பட்டிருந்தது.

அங்கிருந்த சுடலைக்காவலன் சுபாகுவை அணுகி “இங்கே ஓர் ஐயம் நிலவுகிறது, இளைய அரசே” என்றான். “சொல்” என்று

அவன் சொன்னான். “அவர் உடலை தாங்கள் ஒருமுறை பார்க்கவேண்டும். அது விந்தையாக அமர்ந்துள்ளது.” சுபாகு “அமர்ந்திருக்கிறதா?” என்றான். “ஆம்” என்றான் சுடலைக்காவலன். “தாங்களே பாருங்கள்.” அவன் அங்கிருந்த பூரிசிரவஸின் உடலை சுட்டிக்காட்டிய பின்னரே அந்தக் காட்சியின் விந்தை சுபாகுவை வந்தடைந்தது. பூரிசிரவஸின் தலையில்லாத உடல் மலரமர்வில் அமர்ந்திருந்தது. “துணியை விலக்குக!” என்றான் சுபாகு. “இளையவரே” என சுடலைக்காவலன் தயங்கினான். “விலக்குக!” என்றான் சுபாகு.

துணியை விலக்கியபோது சுபாகு ஒருகணம் உளம் அதிர்ந்தான். பூரிசிரவஸின் உடல் கால்களை மடித்து இடக்கையை மடியில் வைத்து முதுகை நிமிர்த்தி ஊழ்கத்திலென அமர்ந்திருந்தது. மடியிலிருந்த அவன் தலை விழிமூடி ஊழ்கம் கொண்டிருந்தது. அருகே வெட்டுண்ட கையில் கட்டைவிரலை சுட்டுவிரல் வந்து தொட்டிருக்க சுழிமுத்திரை காட்டியது. சிலகணங்கள் நோக்கியபோது அவன் உடலில் தலை இல்லாமலிருப்பது எவ்வகையிலும் மாறுபாடாகத் தெரியவில்லை. மடியிலிருந்த தலையை கழுத்தின்மேல் அமர்ந்திருப்பதாக உள்ளம் எண்ணிக்கொண்டதா? அந்த முகத்தில் இருந்த ஆழ்ந்த நிறைவுதான் அவ்வாறு எண்ணச்செய்ததா?

“அவர் களத்தில் வீழ்ந்ததைக் கண்டவர் சொன்னார்கள் அப்போது கைவிரல்கள் விரிந்து எதையோ கோருவதுபோலத் தோன்றின என்று. உடலை தேரில் எடுத்துவைத்த தேரோட்டி அவை அதிர்ந்துகொண்டிருந்தன என்றான். ஆனால் தேரில் இங்கே கொண்டுவரும் வழியில் விரல்கள் இவ்வாறு சுழிமுத்திரையை சூடிக்கொண்டிருக்கின்றன” என்று

சுடலைக்காவலன் சொன்னான். சுபாகு “என்ன சிக்கல் என்றாய்?” என்றான். “பால்ஹிகக்குடியில் சோமதத்தர் மட்டுமே இப்போது உயிருடன் இருக்கிறார். இரு இளவரசர்களின் மைந்தர்களும் கொல்லப்பட்டுவிட்டனர். சோமதத்தர் எழுந்துநிற்கும் நிலையில் இல்லை. அனல்சடங்குகளைச் செய்ய அந்தணரையே அழைத்திருக்கிறோம்” என்றான் சுடலைக்காவலன்.

சுபாகு அவன் மேலே சொல்லக்காத்து நின்றான். “அந்தணர் அஞ்சுகிறார். சடலம் இவ்வாறு அமர்ந்திருக்க எரியூட்டுவது முறையல்ல என்கிறார். யோகியரின் சடலங்களை மட்டுமே அமரச்செய்து எரியூட்டுவது வழக்கம். யோகியரின் சடலங்களை இல்லறத்தார் எரிகடன் செய்து சிதையேற்றலாகாது” என்றான் சுடலைக்காவலன். “யோகியரின் சிதைக்கு அவர்களின் ஆசிரியர்களோ மாணவர்களோ எரியூட்டலாம். யோகி நாடோடி என்றால் அவர் மாணவர் என தன்னைக் கொண்டு எவரும் எரியூட்டலாம். ஆனால் இவர் யோகியல்ல, யோகம் முழுமையடையாமல் வெட்டுண்டு உயிர்நீத்த உடல். ஆகவே அனைவரும் அஞ்சுகிறார்கள்.”

சுபாகு பெருமூச்சுவிட்டான். சிரிக்கவேண்டும்போல் தோன்றியது. பின்னர் “நன்று, நான் எரியூட்டுகிறேன்” என்றான். “ஆனால்…” என சுடலைக்காவலன் சொல்லெடுக்க “பழி சேராது. சேருமென்றாலும் ஒருநாள் நீடிக்காது… நான் நாளையே உயிர்துறப்பேன்” என்றான் சுபாகு. “இளைய அரசே” என்றான் சுடலைக்காவலன். “அல்லது நாளை மறுநாள். இந்தக் களத்தில் இருந்து நான் உயிருடன் மீளப்போவதில்லை. என் இளையோரும் மூத்தோரும் மைந்தரும் மடிந்த இக்களத்திலிருந்து உயிருடன் மீண்டு நான் எதை

அடையமுடியும்?” என்ற சுபாகு. “அவருடைய மாணவன் என சொல்பூண்டு நானே அவர் சிதைக்கு எரியூட்டுகிறேன்” என்றான். “அவ்வண்ணமென்றால் அவரை தனியாகவே சிதையிலேற்ற வேண்டும்” என்றான் சுடலைக்காவலன். “செய்க!” என்றான் சுபாகு.

அவர்கள் சிறிய சிதை ஒன்றின்மேல் பூரிசிரவஸின் உடலை ஏற்றி அமரச்செய்தார்கள். தலையையும் கையையும் மடியில் வைத்தனர். சுபாகு அவன் விரல்களை நோக்கிக்கொண்டிருந்தான். இறந்தபின் அவ்விரல்கள் இரண்டும் சென்று தொட்டுக்கொண்டிருக்கின்றனவா? சுட்டிச்சுட்டி இவ்வுலகை அறியும் விரல் ஒன்று. அனைத்து விரல்களுடனும் இணைந்து இணைந்து அனைத்தையும் படைக்கும் இன்னொன்று. சுட்டுவதும் சுட்டப்படுவதும் தொட்டுக்கொள்ளும் முழுமை நிகழ்ந்துவிட்டதா என்ன? அவர்கள் உடல்மேல் அரக்கையும் நெய்யையும் பெய்தனர். விறகுத்துண்டுகளால் உடலை மூடி அதன்மேல் குந்திரிக்கக் கட்டிகளை வைத்தனர்.

பூரிசிரவஸின் முகத்தில் எப்போதும் இருக்கும் இளமை மேலும் துலங்கியிருப்பதாக சுபாகு எண்ணினான். அது தன் உள்ளத்தின் விழைவாக இருக்கும் என எண்ணிக்கொண்டாலும் அக்காட்சி மேலும் தெளிவுடன் எழுந்தது. அவன் உதடுகளில் இளஞ்சிறுவனுக்குரிய புன்னகை எப்போதும் உண்டு. அவனுக்கு அடர்ந்த மீசை முளைக்கவேயில்லை. பதின்ம அகவையருக்குரிய பூனைமயிர் மீசை. மேலுதட்டில் புகையெனப் படிந்து வாயின் விளிம்பில் மட்டும் சற்றே செறிந்து தொங்குவது. தாடியும் கன்னமயிரும் செறிவடையவில்லை. அவனுடைய மாறா இளமை அதனால்தான் போலும். மலைமக்களுக்கே அடர்ந்த தாடியும்

மீசையும் முளைப்பதில்லை. அவர்களின் நிறம் காய்ச்சிச் சுண்டி வெல்லமிட்ட பாலுக்குரியது. பால்பரப்பின் ஒளியும் கொண்டது.

அவர்களின் விழிகளின் கீழிமை சற்றே இழுத்துத் தைத்தது போலிருக்கும். "மலைமக்களுக்கும் பீதர்களுக்கும் கண்களை பிழையாக இழுத்துத் தைத்துவிட்டார்கள்" என அவன் ஒருமுறை சொன்னபோது பூரிசிரவஸ் சிரித்துக்கொண்டே "எங்கள் இரு கண்களும் நேராக அமைவதில்லை, சற்றே திரும்பியிருக்கும் அவை. நாங்கள் விரிந்த மலைப்பரப்பை முழுமையாகப் பார்க்கவேண்டும் என்பதற்காக மலைத்தெய்வங்கள் அவ்வாறு அமைத்தன என்பார் என் தாதை" என்றான். "ஆனால் உங்கள் கண்கள் நேராகவே உள்ளன" என்றான் சுபாகு. "ஆம், அதனால்தான் என்னால் முழு மலையையும் ஒருபோதும் பார்க்கமுடியவில்லை. என்னால் நிகர்நிலத்தில் நேராகவே பயணம்செய்ய இயல்கிறது" என்றான் பூரிசிரவஸ்.

அவன் விழிகள் அசைகின்றனவா? உதடுகள் உயிர்ப்பு காட்டுகின்றனவா? எத்தனை வெறியுடன் இறந்தவர்கள் இறக்கவேயில்லை என நம்ப விழைகிறது உள்ளம்? எண்ணி எண்ணியே அவர்களை மீட்டுவிடமுடியும் என்பதுபோல. இப்புவியில் நம்பவே முடியாத நிகழ்வு என ஒன்று உண்டு என்றால் இறப்புதான். இறப்பின்போது அனைத்தும் ஒரு நொடியில் அகன்றுவிட வெற்றுச்சடலம் மட்டும் குப்பையென கண்முன் கிடக்கும் என்பதுதான்.

சுடலைக்காவலன் "ஒருங்கிவிட்டது, இளைய அரசே" என்றான். சுபாகு சென்று சிதை அருகே நிற்க சுடலைக்காவலன் "போர் முதிர முதிர சிதைச்சடங்குகள் எளிதாகிவிட்டன, இளையவரே.

மும்முறை நீரையும் அரிசியையும் மலரையும் அள்ளி அவர் கால்களில் இடுங்கள். மும்முறை சுற்றிவந்து வணங்கிவிட்டு நெஞ்சில் அனலை இடுங்கள்” என்றான். குடியிலுள்ளவருக்கே புத்தாடையும் வாய்க்கரிசியும் குடமுடைத்தலும் பிறவும். யோகிகளை அமர்ந்த நிலையில் புதைக்கவேண்டும். ஆனால் பூரிசிரவஸ் யோகியும் அல்ல. எண்ண எண்ண ஒவ்வொன்றும் பொருளில்லாததாகத் தோன்றியது. ஆனால் அந்தப் பொருளில்லாச் சடங்குகளில் ஒன்றை மீறுவதற்குக் கூட எவருக்கும் துணிவு எழுவதில்லை.

அவன் சுற்றிவந்து வணங்கியதும் சுடலைக்காவலன் குந்திரிக்கத்தில் பொதிந்து நெய்யூற்றிய திரி சுற்றப்பட்ட கொள்ளியை அவனிடம் அளித்தான். அதை பந்தத்தில் காட்டியதும் பற்றிக்கொண்டது. “நெஞ்சிலிடுக!” என்றான் சுடலைக்காவலன். அவன் கொள்ளியை சிதை மையம் நோக்கி வீசினான். குந்திரிக்கம் பற்றிக்கொண்டது. நெய் நீலவண்ணமாக உடன் இணைந்துகொண்டது. சிதை உறுமியபடி, சீறியபடி, வெடித்தபடி பற்றிக்கொண்டது. பச்சைவிறகிலிருந்த மரக்கறை எரிந்தபோது மூச்சடைக்கவைக்கும் தைலநெடி எழுந்தது.

“செல்க, இளையவரே” என்றான் சுடலைக்காவலன். அவன் செல்வதற்காக திரும்பும் முன் இயல்பாக ஒருமுறை பூரிசிரவஸின் உடலை நோக்கினான். அனல் அதை மூடிவிட்டிருந்தது. செந்தழல்களின் கொப்பளிப்புக்கு அப்பால் அந்த உடல் அசைவதுபோலத் தெரிந்தது. தழலாட்டமும் புகையெழுச்சியும் உருவாக்கும் விழிமயக்கா என ஐயுற்று கூர்ந்து நோக்கியபோது மெய்யாகவே உடல் துடிப்பதை, கால்கள் துள்ள எழமுயல்வதுபோல் அசைவதை கண்டான்.

சுடலைக்காவலன் “அது வழக்கம்தான், இளையவரே” என்று அவன் தோளில் தொட்டு “செல்க!” என்றான். “எல்லா உடல்களும் இவ்வண்ணம் துள்ளுவதுண்டா?” என்றான். “எல்லா உடல்களும் அல்ல” என்றான் சுடலைக்காவலன்.

சுபாகு சுஜாதனின் குதிரையின் குளம்படிகளைக் கேட்டு துரியோதனன் வந்துவிட்டான் என எண்ணினான். அங்கே சென்றபோது சுஜாதனின் குதிரையின் அருகே இன்னொரு குதிரை நின்றிருப்பதை கண்டான். சுஜாதனின் உடலால் மறைக்கப்பட்டவன்போல யுயுத்ஸு நின்றிருந்தான். சுபாகு அருகே சென்றதும் யுயுத்ஸு தலைவணங்கினான். சுபாகு “அரசமுறையாக நீ இங்கு வரவில்லை என எண்ணுகிறேன்” என்றான். “இல்லை, ஆனால் யுதிஷ்டிரரிடம் சொல்லிவிட்டே வந்தேன்” என்றான் யுயுத்ஸு. “விகர்ணரும் குண்டாசியும் சிதையேறுகையில் நான் உடனிருக்கவேண்டும்… அவர்கள் அதை விரும்புவார்கள்.”

சுபாகு அவனை சில கணங்கள் கூர்ந்து நோக்கிவிட்டு “நன்று” என்றான். “ஆனால் சற்றுநேரத்தில் இங்கே மூத்தவர் வரப்போகிறார். நீ இங்கே வருவதற்கு அவர் ஒப்புதல் அளிக்கவில்லை.” யுயுத்ஸு “அவர் என்னை விரும்புவார் என்பதில் எனக்கு ஐயமே இல்லை” என்றான். “அவர் இன்றிருக்கும் நிலையில் அவருடைய உளநிலை குறித்து எவரும் எதுவும் சொல்லிவிட முடியாது” என்றான் சுபாகு. “நான் சொல்கிறேன், அவர் வந்து சிதைக்கு எரியூட்டுவதுவரை நீ அவர்முன் வரவேண்டியதில்லை. மரங்களுக்குப் பின்னால் மறைந்தபடி நில். அவர் இங்கே சற்றுநேரமே இருப்பார்…” என்றான். யுயுத்ஸு “நான் மறைந்து நிற்கும் இயல்பு

கொண்டவன் அல்ல. அவர் வாள் உருவி என்னை கொல்வார் என்றாலும் அவர் முன் நிற்கவே விரும்புவேன்” என்றான்.

சுஜாதன் ஓசைகளுக்காகத் திரும்பி “மூத்தவர் வந்துவிட்டார்” என்றான். சுபாகு சிதையை ஒருமுறை திரும்பி நோக்கியபின் யுயுத்ஸுவிடம் இறுதியாக ஏதோ சொல்ல நாவெடுத்து பின் தலையசைத்து அதை மறுத்துவிட்டு இடுகாட்டின் முகப்புக்குச் சென்றான். நான்கு புரவிகள் நீண்ட நிரையாக வந்தன. முதலில் வந்த காவலன் வெறுமனே “அஸ்தினபுரியின் அரசர் வருகை!” என்று அறிவித்தான். சுபாகு வரவேற்பதுபோல சென்று நின்றான். துரியோதனன் துச்சாதனன் தொடர்ந்து வர விரைவான நடையுடன் வந்தான். அவர்களுக்குப் பின்னால் ஏவலர் வந்தனர். அவன் உடல் வெளுத்திருப்பதுபோலத் தோன்றியது. கண்களுக்குக் கீழே தசை கருகிச்சுருங்கி மடிப்புகளாகத் தொங்கியது.

சுபாகு “அனைத்தும் சித்தமாக உள்ளன, மூத்தவரே” என்றான். துரியோதனன் தலையசைத்தான். அவன் விழிகள் உடனே யுயுத்ஸுவை பார்த்துவிட்டன. யுயுத்ஸு அருகே வந்து தலைவணங்கி “நான் இங்கிருக்கவேண்டும் என்று தோன்றியது, அரசே. விகர்ணரிடமும் குண்டாசியிடமும் விடைபெற்றுக் கிளம்பியவன் நான்” என்றான். துரியோதனன் ஒன்றும் சொல்லாமல் தலையசைத்தான். சுடலைப்பொறுப்பாளன் வந்து தலைவணங்கினான். சுபாகு “சித்தமாகிவிட்டனவா?” என்றான். “ஆம்” என்று சுடலைப்பொறுப்பாளன் சொன்னான். சுபாகு “செல்வோம்” என்றான்.

அவர்கள் நடக்க துச்சாதனன் “அனைவரும் ஒரு சிதையில்தானே?” என மெல்லிய குரலில் கேட்டான். “அப்படித்தான் வழக்கம்” என்றான் சுபாகு. துரியோதனன் நின்று

“அவனை பிறருடன் வைக்கவேண்டாம்…” என்றான். “அவன் நம்முடன் இருக்கவில்லை. அவன் அதை விரும்பமாட்டான்.” துச்சாதனன் “மூத்தவரே” என்று அழைக்க “எனக்கு அவன் அகம் தெரியும்… இளையோனே, அவன் சொல்லவேண்டிய சொற்களை நானே நூறாயிரம்முறை சொல்லிக்கொண்டவன்தான்” என்றான் துரியோதனன். துச்சாதனன் தலைவணங்கினான்.

சுபாகு சுடலைப்பொறுப்பாளனிடம் “குண்டாசியை மட்டும் எடுத்து தனிச்சிதையில் வையுங்கள். விரைவாக” என்றான். துரியோதனன் அங்கே நிரையாகக் கிடத்தப்பட்டிருந்த உடல்களை பார்த்தான். துச்சாதனன் “நம் மைந்தர்” என்றான். துரியோதனன் நோக்கை திருப்பிக்கொண்டான். சுபாகு “விரைவாக” என்றான். துரியோதனன் “ஜயத்ரதனின் சிதை எங்கே?” என்றான். துச்சாதனன் “அரசே, பிருஹத்காயரின் முதன்மை மாணவன் ஜயத்ரதரின் உடல் வேண்டும் என்று வந்து என்னிடம் கேட்டான். தந்தையையும் மைந்தனையும் சேர்த்து ஒரே இடுகாட்டில் புதைக்கவேண்டும் என்று சொன்னான். நான் ஒப்புதல் அளித்தேன்” என்றான்.

துரியோதனன் “அவன் இறப்புச்செய்தி அரண்மனைக்கு அறிவிக்கப்பட்டதா?” என்று கேட்டான். “ஆம். தூதன் சென்றுள்ளான். பறவைச்செய்தி சிந்துநாட்டுக்கும் சென்றிருக்கிறது” என்றான் துச்சாதனன். துரியோதனன் திரும்பி யுயுத்ஸுவை நோக்கி “நீ அங்கே போர்முனைக்கு வருகிறாயா?” என்றான். யுயுத்ஸு “ஆம்” என்றான். துரியோதனன் சினத்துடன் “ஏன், அங்கே வீரர்களுக்கா குறைவு? உன்னை எதற்காக அனுப்புகிறார்கள்?” என்றான். “யுதிஷ்டிரர் போர்முனைக்கு நான் வரலாகாதென்றே சொன்னார். வருவது என் கடன் என எண்ணினேன்” என்றான் யுயுத்ஸு. “உனக்கு

புண் ஏதும் படவில்லை அல்லவா?” என்றான் துரியோதனன். “இல்லை, மூத்தவரே” என்றான் யுயுத்ஸு.

அப்பால் புரவியின் குளம்படியோசை கேட்டது. “யார்?” என்றான் துரியோதனன். புரவி வந்து நிற்க அதிலிருந்து கிருதவர்மன் பாய்ந்திறங்கி அருகே ஓடிவந்தான். “அரசே, முதன்மைச் செய்தி…” என்றான். “உளவுச்செய்தி என்றால்…” என துச்சாதனன் தொடங்க “உளவுச்செய்திதான். ஆனால் உடனே அரசர் செவிகொள்ளவேண்டிய ஒன்று” என்றான். யுயுத்ஸு தலைவணங்கி விலகிச்சென்று சொல்கேட்காத தொலைவில் சிதைகளின் அருகே நின்றான். கிருதவர்மன் அருகணைந்து மூச்சிரைக்க “அவர்கள் இரவுத்தாக்குதலுக்கு ஒருக்கம்கூட்டிக் கொண்டிருக்கிறார்கள். எக்கணமும் அவர்களின் படைகள் நம் மேல் பாயக்கூடும்” என்றான்.

“இரவிலா? யுதிஷ்டிரர் அதற்கு ஒப்பினாரா?” என்றான் துரியோதனன். “அவருடைய ஒப்புதல் இன்றி நிகழாதல்லவா? இரவுத்தாக்குதல் நிகழப்போகிறது, அதில் ஐயமே இல்லை. நான் வரும் வழியில் காவல்மாடம் மீதேறி நோக்கினேன். மறுதரப்பிலிருக்கும் கிராதர்களும் நிஷாதர்களும் அசுரர்களும் அரக்கர்களும் ஒருங்கிணைகிறார்கள். பாணாசுரனின் மைந்தனும் சம்பாராசுரனின் மைந்தர்களும் இடும்பர்களும் கடோத்கஜனின் தலைமையில் அணிதிரள்கிறார்கள். இருளுக்குள் பந்தங்கள் எரியாமல் அப்படைநீக்கம் நிகழ்கிறது. ஆனால் அவ்வாறு அறிந்தபின் நோக்கினால் வெறும்விழிகளுக்கே அவர்களின் நிரைகள் தெரிகின்றன.”

“வாய்ப்புள்ளது, மூத்தவரே” என்று சுபாகு சொன்னான். “அவர்களின் இடத்தில் நான் இருந்தால் அதை செய்வேன். நாம் இழப்புகளால் சோர்ந்திருக்கிறோம். நமது மாவீரர்கள் இருவர்

இன்றைய போரில் தோற்று பின்னடைந்திருக்கிறார்கள். நமது படைகளில் பெரும்பாலானவர்கள் ஷத்ரிய வீரர்கள். அவர்களிடம் அரக்கர்களும் அசுரர்களும் நிஷாதர்களும் கிராதர்களும் மிகுதி. அவர்கள் இருளில் நோக்கு துலங்கும் பயிற்சிகொண்டவர்கள். பல தலைமுறைகளாக இருள்மறைவுக்குள் நின்று போரிடும் வழக்கத்தைக் கொண்டவர்கள். அவர்கள் படைகொண்டு வருவார்கள் என்றால் நாம் அழிவோம். இன்றோடு போர் முடியும்."

"இல்லை, யுதிஷ்டிரர் அதற்கு சொல்லளித்திருக்க வாய்ப்பில்லை" என்றான் துரியோதனன். "அரசே, அவரிடம் உகந்த விளக்கத்தை அளித்திருப்பார்கள். இந்தப் போர் இன்றே முடிந்தால் பல்லாயிரம்பேரின் உயிர் காக்கப்படும், ஆகவே சிறு அறமீறல்கள் பிழையல்ல என்று சொல்லியிருப்பார்கள். அவர் ஏற்றுக்கொண்டிருப்பார்." துரியோதனன் "என்ன செய்வது?" என்றான். உடனே உளம்சோர்வுற்று "என்ன நிகழுமோ அதுவே நிகழ்க! என்னால் இனி இயலாது" என்றான். சுபாகு "மூத்தவரே, நாம் அங்கரையும் ஆசிரியரையும் ஊக்கம்கொள்ளச் செய்து எழ வைப்போம். நமது படைகள் ஓய்வுகொள்ள வேண்டாம் என அறிவிப்போம். அனைத்து ஆணைகளும் உடனே சென்றாகவேண்டும். நீங்கள் படைக்குத் திரும்பாமல் வேறு வழியில்லை" என்றான்.

துரியோதனன் "நமது படைகளில் அரக்கரும் அசுரரும் இல்லையா?" என்றான். "ஆம், சிலர் உள்ளனர். அஸ்வத்தாமர் அவர்களை வரவழைக்க ஆணையிட்டிருக்கிறார்" என்று கிருதவர்மன் சொன்னான். "தண்டக நிலத்தின் அசுரர்தலைவன் ரிஷியசிருங்கனின் மைந்தன் அலம்புஷன் தன் படைகளுடன் நம்முடன் சேர்ந்திருக்கிறான். ஜடாசுரனும் அவன்

மைந்தனாகிய பிறிதொரு அலம்புஷனும் நம் படைகளுடன் உள்ளனர். பகனின் கொடிவழியில் வந்தவனாகிய அலாயுதன் தன் படைகளுடன் நமக்காக போரிட்டுக்கொண்டிருக்கிறான். அவர்கள் நம்மை போரில் வழிநடத்தக்கூடும்.”

சுபாகு “மூத்தவரே, தாங்கள் உடனே கிளம்புக!” என்றான். துரியோதனன் திடுக்கிட்டவனாக திரும்பி நோக்கி “ஆம்” என்றான். சுபாகு துரியோதனனை சிதைகளை நோக்கி அழைத்துச்சென்றான். உடன்பிறந்தாரின் உடல்கள் அடுக்கப்பட்ட பெரிய சிதையை நோக்கி நின்ற துரியோதனன் மெல்லிய தலைநடுக்கம் மட்டும் கொண்டிருந்தான். திரும்பி அப்பாலிருந்த சிறிய சிதையை நோக்கியபின் “அது குண்டாசி அல்லவா?” என்றான். “ஆம்” என்றான் சுடலைப்பொறுப்பாளன். “அவனையும் நம் உடன்பிறந்தாருடன் சேர்த்து சிதையேற்றுக!” என்றான் துரியோதனன். சுபாகு மறுசொல் இல்லாமல் விழிகளால் ஆணையிட இரு ஏவலர் ஓடிச்சென்று அங்கிருந்து குண்டாசியின் உடலைக் கொண்டுவந்து பெரிய சிதையில் வைத்தனர்.

துரியோதனன் சடங்குகளைச் செய்வதை அவர்கள் அமைதியாக நோக்கி நின்றார்கள். மெல்லிய முணுமுணுப்புகளாக பேச்சொலிகள் எழுந்தன. தழல் சிறகுகளை உதறிக்கொண்டு எழுந்து ஆடி நெளிந்து காற்றில் தழைந்து மேலும் படர்ந்து ஏறியது. சுபாகு “தாங்கள் கிளம்பலாம், மூத்தவரே” என்றான். துரியோதனன் தீயை சில கணங்கள் நோக்கி நின்றபின் திரும்பிச்செல்ல முனைந்து நின்று யுயுத்ஸுவை நோக்கி கைநீட்டினான். யுயுத்ஸு அருகே ஓடிவந்து நிற்க அவனுடைய மெலிந்த சிறிய தோள்களில் தன் எடைமிக்க கைகளை வைத்தான். அவன் விழிகள் சிவந்திருந்தன. ஆனால் விழிநீர்

வெளிப்படவில்லை. அவன் யுயுத்ஸுவிடம் ஏதேனும் சொல்வான் என சுபாகு எதிர்பார்த்தான். ஆனால் ஒன்றும் சொல்லாமல் துரியோதனன் நடந்து புரவிகளை நோக்கி சென்றான்.

சுஜாதனிடம் சுபாகு “நீயும் உடன்செல்க… நான் இங்குள பணிகளை முடித்துவிட்டு வருகிறேன்” என்றான். சுஜாதன் “இங்கே இனி பணிகள் ஏதும் இல்லை என நினைக்கிறேன். உங்கள் அருகமைவு மூத்தவருக்குத் தேவையாகும்” என்றான். ஒருகணம் எண்ணிவிட்டு மறுசொல் பேசாமல் சுபாகு யுயுத்ஸுவை பார்த்தான். “நீங்கள் செல்க மூத்தவரே, சிதை எரிந்து அணையும்வரை உடன்பிறந்தாருடன் நானும் இருப்பேன்” என்றான் யுயுத்ஸு. அவனை ஒருகணம் நோக்கிவிட்டு சுபாகு துரியோதனனுடன் சென்றான்.

துரியோதனன் “அசுரர்களையும் அரக்கர்களையும் என் அவைக்கு வரச்சொல்க!” என்றபடி நடந்தான். கிருதவர்மன் “அஸ்வத்தாமர் திட்டத்தை ஏறக்குறைய வகுத்துவிட்டார், அரசே. நாம் அவர்களை அவையெனக் கூட்டி சொல்லளிப்பதற்கு நமக்குப் பொழுதில்லை. அரக்கரும் அசுரரும் முகப்பில் நின்றிருக்கவேண்டும். ஷத்ரியப் படைகள் ஒவ்வொன்றுடனும் அரக்கரோ அசுரரோ ஒரு படைப்பிரிவு இணைந்திருக்கவேண்டும். அதற்கான ஆணைகளை அஸ்வத்தாமர் அனுப்பியிருப்பார்” என்றான். துச்சாதனன் “நாம் நேராகவே படைமுகப்புக்கு செல்லவேண்டியதுதானா?” என்றான். “ஆம், அவ்வாறுதான் உத்தர பாஞ்சாலரின் எண்ணம்” என்றான். “அவ்வாறே ஆகுக!” என்றான் துரியோதனன்.

அவர்கள் படைமுகப்பை நோக்கி புரவிகளில் விரைந்தார்கள். “அங்கர் படைமுகப்புக்கு சென்றுவிட்டிருக்கிறார். ஆசிரியரும்

படைமுகப்பை அடைந்துவிட்டிருக்கிறார். அஸ்வத்தாமரும் முகப்பை அடைவார்... நம்மை அவர்கள் கருதியதுபோல் எளிதாக வெல்ல முடியாது” என்று கிருதவர்மன் சொன்னான். “ஒலியை காட்சியாக ஆக்கும் சப்தஸ்புடக் கலை தேர்ந்தவர்கள் அவர்கள் மூவரும். இருளிலேயே அம்புகளைச் செலுத்தி அம்புகளை வீழ்த்த அவர்களால் இயலும்.”

துரியோதனன் புரவியின் கடிவாளத்தை இழுத்து நிறுத்தி “அத்தனை திறன்களும் உடையவர்கள் ஏன் தோற்றோடுகிறார்கள்? அவர்கள் காட்டுவதெல்லாம் வெறும் சொல்திறன் மட்டும்தானா?” என்றான். துச்சாதனன் “மூத்தவரே” என தடுக்க முயல கையால் அவனை தவிர்த்து “அவர்கள் கண்ணெதிரே ஜயத்ரதன் தலைகொய்யப்பட்டான். பூரிசிரவஸ் கை வெட்டப்பட்டு வீழ்ந்தான். பெருந்திறல்வில்லவனாகிய கர்ணனின் கண்முன் அவன் மைந்தர்கள் கொல்லப்பட்டார்கள். என்ன செய்தான் அவன்? வில் கையில் நிலைக்காத அந்த ஊன்குன்று அவனை ஏழுமுறை அம்பால் அறைந்து பின்னடையச்செய்து முகத்தில் உமிழ்ந்துவிட்டுச் சென்றான்” என்றான்.

“மூத்தவரே, போரில் அனைத்தும் நிகழும். இத்தருணத்தில் நாம் நம் சொற்கள் கட்டிலாது பெருகவிடக் கூடாது. அது நமக்கே இழப்பு” என்றான் துச்சாதனன். “இழப்பா? இனி என்ன இழப்பு? இனி என்ன எஞ்சுகிறது எனக்கு? சொல், இனி நான் வென்றடைய என்ன உள்ளது? நான் இப்போது போரிடுவது தன்மதிப்புக்காக மட்டுமே. அந்த அங்கநாட்டுக் கோழை தன்மதிப்பையும் இழந்து களத்திலிருந்து திரும்பி வந்திருக்கிறான்... அதை அவனிடம் கேட்காமலிருக்க என்னால் இயலாது.”

“என் சொற்களை உள்ளே அடக்கி அடக்கி பார்த்தேன். நான் சொல்லியாகவேண்டும். ஒருவேளை இன்று களத்தில் நான் விழுந்தால் அச்சொற்கள் என்னுடன் வரலாகாது… நான் அவனிடமும் ஆசிரியரிடமும் கேட்பேன். என்னை ஏன் அவர்கள் கைவிட்டார்கள் என்று. நான் நம்பிய அவர்களின் வீரம் பொய்யா என்று. அல்லது அவர்களின் அன்புக்கு நான் தகுதியற்றவனா என்று…” துரியோதனன் பற்களைக் கடித்து கைகளை வீசினான். “அவர்கள் என் இளையோரின் சிதைமுன் நின்று தற்பெருமை பேசுகிறார்கள். நாளை என் சிதைமுன் நின்று நெறியும் முறையும் பேசுவார்கள்… இன்று என்மேல் கொல்லும் வஞ்சம் இருப்பது பீமனின் உள்ளத்தில் அல்ல. இவர்களிடம்தான்.”

“வேண்டாம், மூத்தவரே” என்றான் துச்சாதனன். “அதோ வந்து நின்றிருக்கிறான் அங்கன். பொற்தேர் ஒளிவிடுகிறது… அவனிடம் கேட்டே தீர்வேன்” என்றபடி துரியோதனன் தன் புரவியைத் தட்டி மரப்பலகை பதிக்கப்பட்ட தேர்ச்சாலையினூடாக கர்ணனை நோக்கி சென்றான். “மூத்தவரே, நில்லுங்கள்…” என அவனுக்குப் பின்னால் எழுந்த துச்சாதனனிடம் “அவர் செல்லட்டும், மூத்தவரே” என்றான் சுபாகு. “என்ன சொல்கிறாய்?” என்றான் துச்சாதனன். சுபாகு “அவர் அச்சொற்களை உமிழட்டும்… இனி இப்போரில் ஊக்கமூட்டும் சொற்களுக்கு எப்பொருளும் இல்லை. ஒவ்வொருவரும் தங்கள் இறுதித் தளைகளையும் உடைக்கும் சொற்களுக்கே மதிப்பு” என்றான்.

# கார்கடல் - 60

துரியோதனன் புரவியில் பாய்ந்து சென்று படைமுகப்பை அடைந்து கர்ணனின் அருகே புரவியிலிருந்து இறங்கி மூச்சிரைக்க அவன் தேரை அணுகினான். அவனுக்குப் பின்னால் வந்த துச்சாதனன் அவனை கூவி நிறுத்தவேண்டுமா என எண்ணிக்குழம்பி தவிப்புடன் உடன் இறங்கி கூடவே சென்றான். தொடையில் அறைந்து வெடிப்பொலி எழுப்பிய துரியோதனன் உடைந்த பெருங்குரலில் “இங்கு ஏன் வந்து நின்றிருக்கிறீர்கள், அங்கரே? தாங்கள் தங்கள் பாசறைக்கே மீளலாம். கதிரவன் மைந்தருக்கு இரவில் என்ன வேலை? இன்று பகல் முழுக்க எனக்காக போரிட்டிருக்கிறீர்கள். பாண்டவ குலத்து இளையோனின் அம்புகளை ஏற்று உங்கள் உடல் களைத்திருக்கிறது. செல்க, சென்று மருத்துவம் செய்துகொள்ளுங்கள்! மதுவருந்தி ஓய்வெடுங்கள். நாளை இங்கு எவரேனும் எஞ்சினால் வந்து சேர்ந்துகொள்ளுங்கள். எங்களுக்காக நீங்கள் உங்களை வருத்திக்கொள்ள வேண்டியதில்லை” என்றான்.

அச்சொற்கள் கர்ணனை துணுக்குறச் செய்தாலும் அவன் உடனே தன்னை திரட்டிக்கொண்டான். அவன் விழிகள் துரியோதனனை வந்து தொட்டதுமே அவனது உணர்வுகள் என்ன என்று புரிந்துகொண்டான். அவன் சற்று விழி சுருங்க உதடுகள் அசைந்து அரைச்சொல்லொன்றை எழுப்ப முயன்றன. ஆனால் அவனால் பேசமுடியவில்லை. அவனை மறித்த துரியோதனன் “நீங்கள் சொல்லவிருப்பதென்ன என்று எனக்கு புரிகிறது. எனக்காக வந்திருக்கிறீர்கள். அங்கநாட்டுப் படையனைத்தையும் திரட்டிக்கொண்டு வந்திருக்கிறீர்கள். செஞ்சோற்றுக்கடன் தீர்ப்பதற்காக. நண்பன் என்று தோள்தழுவி என்னுடன் களத்தில் நின்றிருப்பதற்காக. இதோ அதை

உலகோர் அனைவரும் பார்த்துவிட்டார்கள். சூதர்கள் அனைவரும் பாடத்தொடங்கிவிட்டார்கள். பொற்றேரில் நீங்கள் களத்திற்கு வந்து நின்றதே ஒரு காவியத்திற்கு போதுமானது. முதல் நாள் போரில் வெல்லற்கரியவராக இங்கேயே நின்று பெருகியதும் காவியத் தருணங்களே. உங்கள் புகழ் நீடுவாழ்வதற்கு அதுவே போதும். செல்க!” என்றான்.

உரத்த குரலில் பெரிய கைகளை விரித்தபடி “இனி என்ன? இதோ எஞ்சியிருக்கும் இளையோருடன் நான் இக்களத்தில் நின்று அக்கீழ்மகன்களின் அம்பினால் உயிர்துறக்கிறேன். அது பிறிதொரு காவியம். அதைப் பாடும் சூதர்களுக்கு எங்கும் அவை அளிக்கப்படாது. அவர்களுக்கு பொன்னும் வெள்ளியும் ஈவதற்கு எவரும் இருக்கமாட்டார்கள். ஆயினும் அவர்கள் பாடுவார்கள். புறநகர்களின் மதுவிடுதிகளில், காட்டாளரின் குடியிருப்புகளில் முழவொலித்து அவர்கள் என்னை பாடுவார்கள். ஒலிக்கும் இடத்தை இருளச்செய்யும் மங்கலமழிந்த காவியம். நம்பிய ஆசிரியர்களாலும் தோழர்களாலும் கைவிடப்பட்டு ஓர் அறிவிலா அரசன் களத்தில் மடிந்ததை சொல்வது. அக்காவியம் உங்கள் புகழ்க்காவியத்துடன் கலக்காமலிருக்கட்டும். கிளம்புக!” என்றான்.

“நீங்கள் நிலைகுலைந்திருக்கிறீர்க்ள், அரசே” என்றான் கர்ணன். “ஆம், நிலைகுலைந்திருக்கிறேன். ஏனெனில் சற்று முன்னர் என் அணுக்கனாகிய இளையோனை அனலில் இட்டுவிட்டு இங்கு வந்தேன். அவன் எரியத்தொடங்குகையில் உணர்ந்துகொண்டேன், உங்கள் உள்ளம் என்னவென்று. அவன் உள்ளம் எப்போது திரிந்தது தெரியும் அல்லவா? அவர்கள் வாரணவதத்தில் எரிந்ததாக செய்தி வந்த அன்று. அன்று

முதல் அவன் எனக்கு தம்பியல்லாதானான். என்னை வெறுத்து அழித்து தன்னுள் எழுந்த எதையோ நிகர் செய்துகொள்ள துடித்தான். அது தன்னால் இயலாதென்று கண்ட பின்னர் தன்னையே அழித்துக்கொள்ளலானான். இன்று இதோ எலும்புக்குவையென சிதையிலிருந்து எரிகிறான். என் இளையோன். என் நெஞ்சில் வளர்ந்த மைந்தன். அவனில் எரிந்த அனலும் நானே… அவனிலிருந்து என்னை வெறுத்தவனும் நானே.”

“அங்கரே, அன்றுதான் உங்கள் விழிகளிலும் நான் ஒன்றை பார்த்தேன். அவன் விழிகளில் எழுந்த ஒன்று. அதுதான் உங்களை இத்தனை உளம் திரிபடையச் செய்திருக்கிறது. அவனும் நீங்களும் ஒன்றே. அவன் என்னை வெறுக்க எண்ணி இயலாதவனானான். நீங்கள் என்னை விரும்ப எண்ணி இயலாதான ஒருவர். இன்று இக்களத்தில் என்னை பழி தீர்க்கிறீர்கள். எதற்கு பழி தீர்க்கிறீர்கள் என்பதை நீங்களும் அறிவீர், நானும் அறிவேன். என் பிணம் மீது நின்று தருக்குங்கள். என் முகத்தில் உமிழ்ந்து உங்கள் அழல் களைந்துகொள்ளுங்கள். அதன் பின்னர் நீங்கள் உங்களை வெறுக்காமல் விண்ணுலகுக்கு ஏறிச்செல்ல முடியும்…” என்றான் துரியோதனன். “இத்தகைய பேச்சுகளுக்கான இடம் அல்ல இது, அரசே. நாம் சொற்களால் இங்கு ஒருவரை ஒருவர் புண்படுத்திக்கொண்டு அடையப்போவதென்ன? அவர்கள் இரவுத்தாக்குதலுக்கு வரக்கூடும் என்று அஸ்வத்தாமர் ஆணையிட்டதன் பேரில் இங்கு நான் வந்திருக்கிறேன். இன்றைய படைசூழ்கையை இன்னமும் நாம் வகுக்கவில்லை. எவ்வண்ணம் அவர்கள் எழப்போகிறார்கள் என்று அறிந்த பின்னரே அதை வகுக்க முடியும். அதற்கு குறைவான பொழுதே இருக்கிறது” என்றான் கர்ணன்.

“எத்தனை படைசூழ்கை அமைத்தாலும் அதில் நின்று போரிடுபவர் உளம் கொண்டாலொழிய அது வெற்றியென்று ஆவதில்லை” என்று துரியோதனன் சொன்னான். “இன்று பகல் முழுக்க நீங்கள் போரிட்டது வெற்றிக்காகவா? சொல்க!படைசூழ்கைக்கு உங்கள் பங்குதான் என்ன? அனைத்துப் போர்முனைகளிலும் ஏன் தோற்று பின்னடைந்தீர்கள்? பீமசேனனை வெல்ல இயலாத வில்லவரென்றால் பரசுராமரிடம் நீங்கள் பெற்றதுதான் என்ன? உங்கள் பேராற்றல் மிக்க அம்புகள் எங்கு போயின? அங்கரே, இன்று அந்திப்போருக்கு அவர்கள் ஏன் எழுகிறார்கள்? ஏனென்றால் பகல் போரில் உங்களை வென்று புறந்தள்ளியிருக்கிறார்கள். வில்லவனென்று ஒருபோதும் அறியப்படாத ஒருவனால் ஏழுமுறை அம்பால் அடித்து பின்னடையச் செய்யப்பட்டிருக்கிறீர்கள். இன்று அர்ஜுனன் வில்லுடன் எழுகையில் நீங்கள் அஞ்சிய முயலென சிதறி ஓடுவீர்கள் என்று அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்.”

கர்ணன் கொந்தளிப்புடன் கைதூக்க தன் கையசைவால் தடுத்து “அது உண்மை! அது உண்மை!” என துரியோதனன் கூச்சலிட்டான். “நீங்கள் அஞ்சுகிறீர்கள் என்று நான் எண்ணவில்லை. ஆம், அங்கர் அஞ்சமாட்டார் என்பதை பிற எவரையும்விட நான் அறிவேன். ஆனால் அங்கர் என்மேல் வஞ்சம் கொண்டிருக்கிறார் என்பதை நான் அறிவேன். என்னை பழி தீர்க்கவே களத்தில் நின்றிருக்கிறார் என்பதை தெள்ளிதின் அறிவேன்.” கர்ணன் “அரசே, நம் நட்பு எல்லைகடந்தது என்றாலும் சொல்லெடுப்பதற்கு ஓர் எல்லையுண்டு” என்று சீற்றத்துடன் கூவினான். “ஆம், எல்லையுண்டு. அதனால்தான் இதுநாள்வரை இச்சொற்களை நான் சொன்னதில்லை. இன்று இறப்பின் கணம் நெருங்கிக்கொண்டிருக்கிறது. இனி எனக்கு

எந்த அணுக்கமும் இல்லை. எவரிடமும் எனக்கு தயக்கமும் இல்லை. நீங்கள் என்னை கைவிட்டது வஞ்சத்தினால்தான். வஞ்சத்தினாலேயேதான். வேறில்லை. வேறெதுவும் இல்லை.”

“நான் அறிவிலி. நட்பும் அன்பும் நெறிகளும் நன்றியும் அனைத்தும் குருதிமுன் பொருளற்றவையாகுமென்பதை அறியாத அடுமடையன். குருதி மட்டுமே இக்களத்தை ஆள்கிறது. எந்நிலையிலும் என்னுடன் நின்று மடிந்து சிதையில் எரிபவர்கள் குருதியால் என்னுடன் கட்டப்பட்டவர்கள் மட்டும்தான். அச்சரடை அறுப்பதற்காக தன் வாழ்நாளெல்லாம் சொல்திரட்டி வஞ்சம் கூட்டியவன் அறுக்க இயலாத குருதியை களத்தில் சிந்தி தன் உடன்பிறந்தாருடன் கட்டித்தழுவி அங்கு எரிந்துகொண்டிருக்கிறான். அதையன்றி பிறிதெதையும் நான் நம்பியிருக்கலாகாது. அதையன்றி பிற அனைத்தையும் நம்பியதால்தான் யாருமின்றி இக்களத்தில் நின்றிருக்கிறேன். கைவிடப்பட்டவனாக, வஞ்சிக்கப்பட்டவனாக, இழிவடைந்தவனாக, தன்னந்தனியனாக நின்றிருக்கிறேன்.”

கர்ணன் உதடுகள் துடிக்க கைகளால் விஜயத்தை இறுகப் பற்றியபடி “அரசே, என் சொற்களை செவிகொள்ளுங்கள். இன்றேனும் நான் முழுதுளம் திறக்க ஒப்புக!” என்றான். “உளம் திறக்க உங்களால் இயலாது. வாழ்நாள் முழுக்க எப்போதேனும் எவரிடமேனும் உளம் திறந்திருக்கிறீர்களா? உங்கள் துணைவியரிடமோ மைந்தரிடமோ? உங்கள் உயிர்பகிர்வதாக நீங்கள் சொன்ன என்னிடமோ? நீங்கள் ஏன் களத்தில் பின்னடைகிறீர்கள் என்று அறியாமல் நான் இங்கு அரியணை அமர்ந்திருக்கவில்லை. உங்களை வந்து சந்தித்தது யார் என்றும் நீங்கள் அவர்களுக்கு அளித்த சொல்லுறுதி என்னவென்றும் நான் அறிவேன்” என்றான் துரியோதனன்.

“ஆம், நான் நன்கறிவேன். நீங்களே அதை என்னிடம் வந்து சொல்வீர்கள் என எதிர்பார்த்தேன். சொல்லமாட்டீர்கள் என பின்னர் உணர்ந்தேன். சொல்லாதொழிய உங்களுக்கு உரிமை உண்டு என என்னை அமைதிப்படுத்திக்கொண்டேன்.”

கர்ணன் நடுங்கத்தொடங்கினான். “முதலில் அதை ஒற்றர்கள் சொன்னபோது அவ்வாறு சொல்லளிக்கும் உரிமை உங்களுக்கு உண்டென்றும் அதை தடுக்கலாகாதென்றும்தான் என் ஆழம் சொன்னது. ஏனெனில் அளித்துப் பழகிய கைகள் உங்களுடையவை. அளிகொண்ட நெஞ்சத்தவர் நீங்கள். வாழ்நாள் முழுக்க நீங்கள் உளம் நிறைத்து வழிபட்ட ஒருவர் வந்து கேட்கும்போது இறுதித்துளிவரை அளிக்காமலிருக்க உங்களால் இயலாது. இதோ நின்றிருக்கிறான் என் இளையோன், உடனே திரும்பி இவனிடம் நான் சொன்னேன், எங்கு இறுதியாக வென்று நிமிர வேண்டுமோ அங்கு வென்றுவிட்டார் அங்கர் என்று. உடன் வென்று எழுந்தவன் நண்பனாகிய நானே என்று. ஆனால்...” என்றபின் குரல் மீண்டும் உடைந்து தழைய, விழிநீர் கோக்க துரியோதனன் சொன்னான் “என் உடன்பிறந்தார் ஒவ்வொருவராக களம்படுகையில் அவர்களுக்கு வில்வேலியென நின்றிருப்பீர்கள் என்று நான் நம்பிய நீங்கள் தோற்றுப் பின்னடைகையில் என்னால் பிறிதெதையும் எண்ண இயலவில்லை, அங்கரே. என்னை பொறுத்தருள்க!”

விழிநீரைத் துடைத்தபின் துரியோதனன் தொடர்ந்தான் “நீங்கள் அளித்த சொல் எதுவாயினும் ஆகுக! ஆனால் களத்தில் பின்னடையாதீர்கள். அளிகூர்ந்து இச்சொல்லை கொள்க, களத்தில் விழவேண்டாம்! நின்று பொருதுக! வேண்டுமென்றால் உயிர் கொடுங்கள். கதிரவன்போல் கைகள்கொண்ட வள்ளலுக்கு

அதுவும் உகந்ததே. அருள்கூர்ந்து இழிவடையாதீர்கள். உங்கள் இழிவால் ஏழுமுறை இழிவடைபவர்கள் நானும் என் தம்பியரும்” என்றபின் “திரும்புக!” என்று அருகே நின்ற துச்சாதனனிடம் சொல்லி புரவியை திருப்பினான். கர்ணன் பின்னால் அழைத்த குரலை அவன் கேட்கவில்லை. புரவி விரைய அவன் குழல்கற்றைகள் அவிழ்ந்து பறந்தன. அவன் உடல் தளர்ந்து நிலையழிய புரவியின் கழுத்தை பற்றிக்கொண்டான்.

விரைவுத்தேரில் அவனை நோக்கி வந்த அஸ்வத்தாமன் வளைந்து நிலைத்து உடன்வந்தபடி “அனைத்தும் ஒருங்கிவிட்டன, அரசே. அங்கருக்கும் தந்தைக்கும் எனக்கும் மட்டும்தான் இருளில் ஒலியால் போர்செய்யும் சப்தஸ்புடம் எனும் கலை தெரியும். ஆகவே எங்களுடன் அசுரர்களின் நிரை தேவையில்லை. பிற அனைத்துப் படைப்பிரிவுகளுடனும் அசுரர்கள் பிரிந்து இணைந்துகொள்ளும்படி அமைத்துவிட்டேன். அசுரர்களின் முழவோசை கேட்டும் ஒளியாணையைக் கண்டும் ஷத்ரியர்கள் போரிடவேண்டும். நிலவு கீழ்த்திசையிலுள்ளது. அது மேலெழுகையில் பாண்டவர்கள் தாக்குவார்கள் என்று எண்ணுகிறேன்” என்றான். “உங்கள் தந்தை இப்போரை ஏற்கிறாரா?” என்று துரியோதனன் கேட்டான். “ஆம், அவரிடம் பேசிவிட்டேன்” என்றான் அஸ்வத்தாமன்.

“நன்கு தெளிவுறுக! களமெழுந்தபின் அவர் நெறிபேசக்கூடும். எவரைக் கொல்வதென்றும் எவரைப் பேணுவதென்றும் அங்கு நின்று முடிவுகள் எடுக்கக்கூடும்” என்று துரியோதனன் சொன்னான். அதிலிருந்த சினக்குறிப்பை புரிந்துகொண்டு அஸ்வத்தாமன் சீற்றம்கொண்டு “தாங்கள் பேசுவது எனக்கு புரிகிறது. ஆனால் இப்போரை இங்கு முன்நின்று

நடத்திக்கொண்டிருப்பவர் தந்தை. அதை மறக்கவேண்டாம்" என்றான். "ஆம், மறக்கவில்லை. அவர் ஒவ்வொருநாளும் இங்கு புகழ்பெற்றுக் கொண்டிருக்கிறார். அவருடைய எதிரியை பலமுறை வென்றுவிட்டார். அவனுக்கு உயிர்க்கொடை அளித்து மேலும் பெருகிவிட்டார். பிறர் கொல்லப்பட்டால் அவருக்கென்ன?" என்றான் துரியோதனன். "நான் அவருடன் பேசியாகவேண்டும். உடனே பேசியாகவேண்டும்."

அஸ்வத்தாமன் குரல் மாறுபட்டு "வேண்டாம், பொறுங்கள்!" என்றான். துரியோதனன் புரவியை முடுக்கி படைகளினூடாக பாய்ந்து சென்று துரோணரை அணுகினான். அஸ்வத்தாமனும் துச்சாதனனும் அவனுக்குப் பின்னால் வந்தனர். சுபாகு மேலும் பின்னிலிருந்து விசைகூட்டி அருகே வந்து "அங்கரிடம் பேசுகையிலேயே உங்கள் நிலையை முற்றாக இழந்துவிட்டீர்கள், மூத்தவரே. அரசர் பேசும் சொற்களல்ல அவை" என்றான். "ஆம், இவை கீழ்மகன் பேசுபவை, கல்லாக் களிமகனோ காட்டு அசுரனோ பேசுபவை. அரசனாக நின்று சலித்துவிட்டேன். என் ஆழத்தில் நான் எவனோ அவன் எழட்டும். சில சொற்களை அவரிடம் சொல்லாமல் நான் செல்லலாகாது" என்றான் துரியோதனன். "அவை என் தம்பியருக்காக... அவற்றை அவர் செவிகொண்டே ஆகவேண்டும்." அஸ்வத்தாமன் துயருடன் தளர்ந்து புரவிமேல் அமர்ந்தான்.

குதிமுள்ளை அழுத்தி புரவியை கனைத்துப் பாயச்செய்து துரோணரை அணுகிய துரியோதனன் உரத்த குரலில் "ஆசிரியரே, இன்று இரவுப்போரிலும் உங்கள் முன் எழப்போகிறவன் உங்கள் அன்புக்குரிய மாணவனே. உங்களால் அவனை எதிர்க்க இயலாது எனில் எதற்கு இந்தப்

போர்க்கோலம்? செல்க, இப்போரை நாங்களே நடத்திக்கொள்கிறோம்!” என்றான். துரோணர் திடுக்கிட்டு “என்ன சொல்கிறாய்?” என்றார். துரியோதனன் “நான் சொல்ல விரும்பியது இதுவே. செல்க, இப்போரை நீங்கள் நடத்த வேண்டியதில்லை! நீங்கள் நடத்துவீர்கள் என்றால் ஒவ்வொரு கணமும் அர்ஜுனன் முன் நமது படைகள் ஆற்றல் இழந்து மடிவதையே நான் காணவேண்டியிருக்கும். செல்க, இப்போரை நாங்கள் நிகழ்த்துகிறோம்! நாங்கள் வென்றாலும் தோற்றாலும் அது எங்கள் இறுதிக்குருதி வரை போரிட்டதாகவே இருக்கும். எங்கள் மேல் அகல்வு கொண்டவரை நம்பி நெஞ்சுடைந்து களத்திலிறந்தால் வீண்பேயுருவாக விண்ணிலெழுவோம். செல்க!” என்று கூவினான்.

“நீ நிலைமறந்து பேசுகிறாய்!” என்று சினத்தை அடக்கியபடி துரோணர் சொன்னார். “நிலை என ஒன்று இப்போது எனக்கில்லை. இதோ என் இளையோனின் சிதையின் அருகிலிருந்து இங்கு வருகிறேன். என் தங்கைகொழுநன் இன்று களம்பட்டான். என் நெஞ்சுக்கினிய பூரிசிரவஸ் கொல்லப்பட்டான். இன்று களத்தில் இப்புவியில் இனியோரென நான் கருதிய அனைவருமே மறைந்துவிட்டார்களென்று உணர்கிறேன். அவர்களுக்கு அங்கரையும் உங்களையும்தான் வேலியென்று அமைத்திருந்தேன். வேலி நெகிழ்ந்து எதிரிக்கு இடம்கொடுக்கும் என்று நான் அறிந்திருக்கவில்லை.” துரோணர் சீற்றத்துடன் “நீ அறிவாய், முழு விசையுடன், சினத்துடன் நான் இன்று போரிட்டிருக்கிறேன்” என்றார். “வஞ்சம்கொண்டு எழுந்து அனைத்து நெறிகளையும் மீறிச்சென்று பொருதியிருக்கிறேன்.”

“இல்லை. நீங்கள் கொள்ளும் சீற்றம் எதிரியிடமல்ல, உங்களிடம்தான். உங்கள்மேல்தான். ஏனென்றால் உங்களால்

உங்கள் முதல் மாணவனை வெல்ல இயலவில்லை. அவனை நீங்கள் வென்றால் நீங்கள் அளித்த கல்வியை வெல்கிறீர்கள். நீங்கள் ஆசிரியரென தோற்கிறீர்கள். இங்கு களத்தில் உங்களுக்கு இருக்கும் உளப்போராட்டம் வீரனென வெல்வதா ஆசிரியனென வெல்வதா என்பதே. ஆசிரியரென்றே உங்கள் உள்ளம் உங்களை தேர்வு செய்கிறது. ஒருபோதும் உங்கள் முதல் மாணவனை நீங்கள் கொல்லப்போவதில்லை. முதல் மாணவனை என்ன, இளைய பாஞ்சாலனையே உங்களால் கொல்ல இயலவில்லை. நெஞ்சைத் தொட்டு சொல்லுங்கள், எத்தனை முறை திருஷ்டத்யும்னன் உங்கள் முன் வந்தான்? ஒருமுறையாவது அவனைக் கொல்லும் அம்பை அவன் முன் எடுத்தீர்களா? இல்லை, பொய்யுரைக்க வேண்டாம். உங்கள் விழிகளில் நான் காண்கிறேன், உங்களால் அவனை கொல்ல இயலாது. நீங்கள் கொல்லப்போவதில்லை."

குரல் தழைய "அவனை நான் கொல்கிறேன்" என்றார் துரோணர். "கொல்லமாட்டீர்கள். எந்நிலையிலும் அவனுக்கெதிராக உங்கள் பேரம்புகள் எழா. இதை அறியாத எவரும் இந்தப் படையில் இல்லை" என்று துரியோதனன் உரக்கக் கூவினான். "இன்று உங்கள் கையில் வில்லிருந்தும் ஏன் ஜயத்ரதன் களத்தில் விழுந்தான்? ஏன் பூரிசிரவஸ் கையறுந்து இறந்தான்? என் இளையோர் ஏன் மண்படிந்து கிடந்தனர்? உங்கள் உளம் எங்களுக்காக கனியவில்லை. உங்கள் உள்ளாழத்தில் நீங்கள் எங்களுடன் இல்லை. இன்றல்ல, மாணவனாக உங்கள் குருநிலையில் பயில வந்தபோதே நான் உணர்ந்த ஒன்று, நான் உங்கள் உள்ளத்தில் இல்லை என்பது. இந்தப் போரில் கௌரவர் வெல்வதனால் நீங்கள் அடையப்போவது எதுவும் இல்லை. போருக்குப் பின் மைந்தனுக்காக உத்தரபாஞ்சாலத்தை பேசி வாங்குவதற்கு

உங்களால் இயலும். கைம்மாறு செய்ய உங்கள் மாணவர்கள் உங்களுடன் நிற்பார்கள்” என்றான்.

துரோணர் கடும்சினத்துடன் வில்லை எறிந்து “அறிவிலி! இச்சொற்களுக்காக உன் நாவை அறுப்பேன்!” என்றார். “ஆம், இது ஒன்றைத்தான் எதிர்பார்த்தேன். இத்தனை வஞ்சக் கரவுடன் என் தரப்பில் நின்று போரிடுவதைவிட வில்லெடுத்து என்னை எதிர்த்து வாருங்கள். என் நெஞ்சக்குலை பிழுதெடுத்து வீசுங்கள். அதுவே உங்கள் மாணவனுக்கும் உகந்ததாக இருக்கும்” என்று சொன்னபடி நெஞ்சு நிமிர்த்தி துரோணருக்கு எதிராக சென்றான் துரியோதனன். “மூத்தவரே!” என்று தோள்பற்றிய துச்சாதனனை தட்டிவிட்டுவிட்டு “நீங்கள் என்னை கொல்லலாம். ஆனால் என் உள்ளத்தில் எழுந்த இந்தச் சொற்கள் உங்கள் ஆத்மாவை அறைந்தபடிதான் இருக்கும். உங்கள் ஆற்றலின்மையால் அல்ல, உங்கள் அன்பின்மையால் கொல்லப்பட்டவர்கள் என் இளையோரும் ஜயத்ரதனும் பூரிசிரவஸும். உங்கள் மாணவர்கள் வென்றெழ வேண்டுமென்று உங்களால் கைவிடப்பட்டவர்கள் அவர்கள்” என்றான்.

“இதோ எதுவும் நடவாதவர்போல் நீள்தாடியை நீவியபடி தேர்த்தட்டில் அமர்ந்திருக்கிறீர்கள். இந்த நடிப்பு எதற்காக? இது போர்! இங்கு ஒருகணத்தில் அனைத்தும் திரை கலைந்துவிடுகின்றன. உங்கள் தவமும் சீற்றமும் இருவகை நடிப்பென்று காட்டிக்கொடுத்துவிடுகின்றது உங்கள் தயக்கம்” என்றான் துரியோதனன். “என்னை இழிவு செய்யும்பொருட்டு இங்கு வந்திருக்கிறாயென்று எண்ணுகின்றேன். அவ்விழிவை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. செல்க!” என்றார் துரோணர். “எவருக்கும் இழிவு செய்ய நான் வரவில்லை. இங்கு நான்

வணங்கும் அனைவரும் என்னை இழிவு செய்வது எப்படி என்று சொல்லிக்கொண்டிருக்கிறேன்” என்று துரியோதனன் கூவினான். “சொல்லுங்கள்! உங்களை மீறி இன்றைய அழிவுகள் நிகழ்ந்ததென்றால் நீங்கள் கற்ற விற்கல்வியின் பொருள் என்ன? உளம்தொட்டுச் சொல்லுங்கள், இங்கே அஸ்வத்தாமன் அம்புபட்டு வீழ்ந்திருந்தால் உங்கள் நிலை இப்படியா இருந்திருக்கும்?”

அவன் அவரை நோக்கிச் சென்று நெஞ்சை நிமிர்த்தி “என் விழிதொட்டுச் சொல்லுங்கள் ஆசிரியரே, அஸ்வத்தாமனைக் கொல்வதில்லை எனும் சொல்லை நீங்கள் இளைய பாண்டவனிடமிருந்து பெற்றீர்களா இல்லையா?” என்றான். “ஆம், பெற்றேன்” என்றார் துரோணர். சினத்துடன் முன்னெழுந்து வந்த அஸ்வத்தாமன் “தந்தையே, என்ன இது! நீங்கள் வாழ்நாள் முழுக்க என்னைத் தொடரும் பெரும் சிறுமையை என்மேல் ஏற்றிவிட்டீர்கள்” என்றான். “ஆம், நான் தந்தை. தந்தையன்றி பிறிதேதுமில்லை. நாடும் கலையும் நெறியும் தெய்வங்களும்கூட என் மைந்தனுக்குப் பின்னரே எனக்கு ஒரு பொருட்டு. இப்போருக்கு எழுவதற்கு முன்னரே அவனிடம் சொல்பெற்றேன், ஒருபோதும் அவன் என் மைந்தனை கொல்லலாகாதென்று. ஒருநாள் அவர்கள் இருவரும் களம்நின்று போரிடுவார்கள் என்று எனக்குத் தெரியும். ஆகவே நான் அதை கோரிப்பெற்றேன்” என்றார் துரோணர்.

துரியோதனன் “அதற்கு மாறாக நீங்கள் அவனுக்கு அள்ளி அள்ளி அளித்துக்கொண்டிருக்கிறீர்கள் இக்களத்தில். எங்கள் உயிரை, உங்கள் இனியவர்களின் உயிரை, இந்தப் படைப்பிரிவின் அத்தனை பேரையும் கொடுத்துக்கொண்டிருக்கிறீர்கள். எங்கள் அத்தனை பேரையும்

அந்த அடியிலாத பெரும்பிளவில் அள்ளிப் போட்டுக்கொண்டிருக்கிறீர்கள்” என்றான். துரோணர் “இல்லை, அதற்கு நிகராக நான் எதுவும் அவனுக்கு சொல்லளிக்கவில்லை” என்று கூவினார். “இந்தப் பெரும்பழியை நீ என் மேல் சுமத்தலாகாது. நான் தந்தையென்றே இக்களத்தில் நிற்கிறேன். என் மைந்தனை காத்துக்கொண்டே போரிடுகிறேன். ஆம், பிற எவரையும்விட என் மைந்தன் எனக்கு முதன்மையானவனே. ஆனால் ஒருகணமும் இப்போரில் நான் எதையும் விட்டுக்கொடுக்கவில்லை. என் முழு ஆற்றலுடன் இக்களத்தில் நிற்கிறேன். நீயே அறிவாய் இந்த இரு நாட்களில் நான் இழைத்த அழிவு என்னவென்று.”

“நீங்கள் ஒரு பெருவீரனைக்கூட அவர்கள் தரப்பில் கொல்லவில்லை” என்று துரியோதனன் சொன்னான். “துருபதரையோ திருஷ்டத்யும்னனையோ பாண்டவர்களில் ஐவரில் ஒருவரையோ. ஏன் சாத்யகியையோ சிகண்டியையோகூட. ஆசிரியரே, பாண்டவ மைந்தரில் ஒருவர்கூட உங்கள் கைகளால் கொல்லப்படவில்லை. சாத்யகியிடம் தோற்று நீங்கள் பின்னடைந்த செய்தியை கேட்டதுமே எண்ணினேன், அது சாத்யகியின் வெற்றி அல்ல உங்கள் தோல்வி என்று. நீங்கள் தோற்றது உங்கள் உளவீழ்ச்சியின் முன்” என்றான். “சாத்யகியிடம் நான் தோற்கவில்லை” என்று துரோணர் சொன்னார். “அவனை அப்போதே நான் கொன்றிருக்க முடியும். ஆனால் அவன் விழிகளில் இருந்த நீர் என்னை தடுத்தது. அவன் தன் மைந்தருக்காக அழுதுகொண்டிருந்தான்.”

துரியோதனன் “எதுவானாலும் பின்னடைந்தீர்கள் என்பதே உண்மை. சாத்யகியிடம் துரோணர் தோற்றுவிட்டார் என்றால்

அவர்கள் எதைத்தான் இனி அஞ்சவேண்டும்?” என்றான். அஸ்வத்தாமன் உரத்த குரலில் ஊடே புகுந்தான். “அரசே, தந்தை அளித்த அச்சொல்லைப் பற்றி எனக்குத் தெரியாது. அச்சொல்லால் நூறுமுறை சிறுமைகொண்டு கீழ்மகனென நின்றிருக்கிறேன். இது என் வஞ்சம், இப்போரில் இனி நான் நெறியென்றும் அளியென்றும் எதையும் எண்ணப்போவதில்லை. எப்பழி கொண்டாலும் தயங்கப்போவதில்லை” என்றான். “மைந்தா!” என்றபடி அவன் சொற்களை தடுத்தார் துரோணர். “வஞ்சினங்கள் உரைக்காதே. வஞ்சினங்களுக்கப்பால் நிகழ்ந்துகொண்டிருக்கிறது இப்போர்” என்றார். அஸ்வத்தாமன் தளர்ந்து “என் வஞ்சம் ஒருநாளும் அழியாது. என் மேல் என் தந்தை சுமத்திய கீழ்மையை இறவாதொழிந்து பிறவாது நிலைத்து இந்நிலத்தில் நின்று நீக்கிக்கொண்டிருப்பேன்” என்றபின் தலைகுனிந்து கண்களை அழுத்தி விழிநீரைத் துடைத்து தேரைத் திருப்பி விரைந்து சென்றான்.

துரோணர் “நான் உன்னிடம் என்னதான் சொல்வது? இந்தப் போரில் நான் என் இறுதி அம்புடன் போரிடுவேன். இங்கு திருஷ்டத்யும்னனையும் துருபதனையும் கொல்வேன். இக்களத்தில் ஓர் அம்பையும் மிச்சம் வைக்கமாட்டேன். இதற்கப்பால் ஒரு சொல்லை உனக்கு நான் அளிப்பதற்கில்லை” என்றார். துரியோதனன் உடல் தளர்ந்து “சொற்கள் எதையும் நம்பும் நிலையில் நானில்லை. அனைத்துச் சொற்களிலிருந்தும் உயிரை உறிஞ்சிக்கொள்கிறது இக்களம். வெற்றுச் சொற்கள், வெற்றுத் திட்டங்கள், வெற்றுக் கனவுகள். வீண், இக்களத்தில் நான் கொண்ட அனைத்தும் வீணாகிக் கிடக்கின்றன” என்றபின் புரவியைத் திருப்பி விரைந்து சென்றான். துச்சாதனனும் சுபாகுவும் அவனை தொடர்ந்தனர்.

தொலைவிலிருந்து அவனை நோக்கி வந்த கர்ணன் தேரைத் திருப்பி எதிரே நின்று “அரசே, உங்கள் சொற்கள் எந்த அனலிலிருந்து எழுந்தன என்று எனக்குத் தெரியும். நான் ஒன்றே சொல்வதற்கிருக்கிறது” என்று உரத்த குரலில் சொன்னான். “ஆம், நான் அளித்த சொற்களுக்கு கட்டுப்பட்டிருக்கிறேன். ஆகவேதான் களத்தில் தோற்றேன். இம்முறை முழுதூக்கத்துடன் எழுவேன். இன்று பாண்டவர்களை களத்தில் வெல்வேன். அர்ஜுனனை இன்று கொல்வேன். இன்றே என் நச்சம்பை கையிலெடுப்பேன். இது என் ஆணை!” என்றான்.

துரியோதனன் “நான் உங்களை மீறிய சொல்லெதையும் உங்களிடமிருந்து பெற விரும்பவில்லை” என்றான். “இல்லை. இது என் உளம் எழுந்து நான் அளிப்பது. நானே சினந்து எடுக்கும் வஞ்சினம். இன்றைய போரில் நான் என் முழு அம்புகளுடன் வெளிப்படுவேன். இன்று பாண்டவர் களத்தில் தாங்கள் ஒருநாளும் காணாத பேரழிவை காண்பார்கள்” என்றான். துரியோதனன் திரும்பி நேர்விழியால் நோக்கி “இன்று உங்கள் அரவம்பு எழுமா?” என்று கேட்டான். “ஆம், எழும். ஐயமே வேண்டாம், இன்று அரவம்பு எழும்” என்றபின் கர்ணன் திரும்பிச்சென்றான்.

# கார்கடல் - 61

பார்பாரிகன் சொன்னான்: விந்தியமலைக்கு அப்பால், ஜனஸ்தானத்தை தலைநகராகக் கொண்டு அமைந்திருந்த நாடு அரக்கர்களின் தொல்நிலமாகிய தண்டகம். முன்பு அது தண்டகப்பெருங்காடு என அழைக்கப்பட்டிருந்தது. அங்கே

அரக்கர் குலத்தின் பதினெட்டு குடிகள் வாழ்ந்தார்கள். அவர்களை ஒருங்கிணைத்து ஆற்றல்மிக்க அரசு என்றாக்கியவர் தொல்லரக்க மன்னர் கரனும் அவருடைய இளையோராகிய தூஷணரும் திரிசிரஸும். இலங்கையை ஆண்ட அரக்கர்குலப் பேரரசர் ராவணனுக்கு உடன்குருதியர் அவர்கள். அலைகள் என எழுந்தும் பின் அமைந்தும் மீண்டும் எழுந்தும் கொண்டிருக்கும் அரக்கர்களின் வரலாற்றில் எழுந்த பேரலை அவர்களின் ஆட்சிக்காலம்.

இக்கதையை மூத்தோர் கூறுகின்றனர். பிரம்மனின் மைந்தர் புலஸ்தியர். அவரில் பிறந்த பிரஜாபதி விஸ்ரவஸ். விஸ்ரவஸ் அரக்கர்தெய்வமாகிய குபேரனை பெற்றார். குபேரன் மண்ணில் இருந்தும் கல்லில் இருந்தும் பொன்னில் இருந்தும் மூன்று அழகிய மகளிரை படைத்தார். மண்ணில் எழுந்தவள் மாலினி. கல்லில் பிறந்தவள் ராகை. பொன்னில் உருவானவள் புஷ்போஷ்கடை. அவர்கள் மண்ணால் ஆன பூமிகை என்னும் காட்டிலும் கல்லால் ஆன சிலாதலம் என்னும் காட்டிலும் பொன்னாலான ஹிரண்யம் என்னும் காட்டிலும் வாழ்ந்தனர். விஸ்ரவஸ் அவர்களின் காட்டுக்குச் சென்று அவர்களை மணந்து மைந்தர்களை பெற்றார். புஷ்போஷ்கடைக்கு ராவணனும் கும்பகர்ணனும் மைந்தனாகப் பிறந்தனர். மாலினியில் பிறந்தவர் விபீஷணர். ராகைக்கு கரனும் சூர்ப்பனகையும் பிறந்தனர்.

தன் ஏழு அகவை வரை கரன் அன்னையிடம் வளர்ந்தார். பின்னர் தந்தையிடம் சென்றுசேர்ந்தார். தந்தைக்குப் பணிவிடை செய்து மூன்று சொற்கொடைகளை பெற்றார். ஒருமுறை கேட்ட சொல்லை மறப்பதில்லை, ஒற்றை அம்பில் உள்ளத்தின் அனைத்துச் சொற்களையும் குவிக்க இயலும், உள்ளத்தில்

சொல் என ஆவநாழி ஓயாமலிருக்கும். “நீ உன் உள்ளம் ஒழியும் ஒருவரைக் காணும்போது ஆவநாழியும் ஒழிந்து அவரிடம் தோற்பாய்” என்றார் தந்தை. “தந்தையே, மானுடருக்கும் அரக்கருக்கும் அசுரருக்கும் உள்ளத்தில் சொல் ஓயும் தருணம் உண்டா?” என்றார் கரன். “ஆம், உள்ளத்தில் சொல் எழுவது மெய்மையென்னும் இலக்கு நோக்கி செல்வதற்காகவே. இலக்கில்லாச் சொற்களும் இல்லை, இலக்கடையும் சொற்களும் இல்லை. பல்லாயிரம்கோடிச் சொற்கள் இலக்கு பிறழ்ந்து உதிர்கின்றன. அச்சொற்களின் பூசலே உள்ளம் என்பது” என்றார் விஸ்ரவஸ்.

“உளம் ஓயும் கணம் அமைவது மெய்மையை நாடிச்சென்று அடையும்போது மட்டுமே” என்றார் விஸ்ரவஸ். “நாடாதோர்க்கு அது அருளப்படுமா?” என்றார் கரன். “மெய்மை அவர்களை நாடிவரவும்கூடும்” என்றார் விஸ்ரவஸ். “நான் நாடப்போவதில்லை. எனவே என் உள்ளத்தில் சொல்லும் ஆவநாழியில் அம்பும் ஒருபோதும் ஒழியாது” என்றார் கரன். அன்னை அவருக்கு அரக்கர்குலம் மீண்டெழவேண்டும் என்னும் கனவை அளித்தாள். “எழுவதனூடாகவே அரக்கர் வாழ்கிறார்கள். அமைவதன் மெய்மை அவர்களுக்குரியதல்ல” என்றாள் ராகை. விஸ்ரவஸின் குருதியில் ராகையின் நீர்ப்பாவைத் தோற்றமான அனுராகைக்குப் பிறந்தவர் தூஷணர். ராகையின் நிழலுருவான சுராகையை விஸ்ரவஸ் புணர்ந்து பெற்றவர் திரிசிரஸ். கரன் தன் பதினெட்டாவது அகவையில் அரக்கர்குலங்கள் வாழும் நிலத்தைத் தேடி தெற்கே சென்றார். விந்தியனைக் கடந்து தண்டகத்தை அடைந்தார்.

ராகையின் மைந்தன் கல்லால் ஆன உடல்கொண்டிருந்தார். அவரை எதிர்க்க எவராலும் இயலவில்லை.

தொல்லரக்கர்குடியின் அனைத்து மல்லர்களையும் வென்று அவர் அனைவருக்கும் தலைமைகொண்டார். அனைத்துக் குடிகளையும் தண்டகத்தில் ஓடும் மாலினி என்னும் நதியின் கரையில் கூடச்செய்து தனக்கு முடிசூடவைத்தார். அந்த இடம் பின்னர் ஜனஸ்தானம் என்னும் ஊராகியது. அதைச்சுற்றி மரங்களாலான பெருங்கோட்டை ஒன்றை அவர் அமைத்தார். உள்ளே மாளிகைகளும் கடைவீதிகளும் அமைந்தன. அரக்கர்குலம் அவர் தலைமையில் வெல்லற்கரியதாகியது. வெற்றியால் செல்வம் நிறைந்ததாக மாறியது. ஜனஸ்தானம் பெருநகரென வளர்ந்தது.

தூஷணர் நகர்க்காவலர். திரிசிரஸ் மலைக்காவலர். அவர்களால் தண்டகம் எதிரிகள் எண்ணவும் அஞ்சும் பெற்றியை அடைந்தது. அந்நாளில் அயோத்தியின் அரசமைந்தனாகிய ராகவராமன் தன் துணைவியுடன் தென்காடு புக்கு அங்கே பஞ்சவடி என்னும் காட்டுக்குள் குடியிருந்தார். கரனின் தங்கையான சூர்ப்பனகை அவரை சிறையெடுத்துவர முயன்று மூக்கும் முலையும் அறுக்கப்பட்டாள். சினந்தெழுந்த கரன் ராகவராமனுடன் போருக்குச் சென்றார். ஒழியா அம்புகளுடன் ராமனுக்கு எதிர்நின்று போரிட்டபோது ஒரு கணத்தில் தன் உள்ளத்தில் சொல்லும் ஆவநாழியில் அம்பும் இல்லாததை உணர்ந்தார். அவர் நெஞ்சு துளைத்துச் சென்றது ராகவராமனின் அம்பு.

தண்டகம் சிதைவுற்று பெருமையழிந்தது. மீண்டும் பலதலைமுறைக்காலம் பதினெட்டு அரக்கர்குடிகளும் சிதறிப்பரந்து மலைமக்களாக உருமாறி வறுமைகொண்டு வாழ்ந்தனர். நெடுங்காலம் அவர்களை பிற ஷத்ரிய அரசர்கள் வேட்டையாடி மேலும் மேலும் உள்காடுகளுக்குள் செலுத்தினர்.

அவர்கள் ஆண்ட ஆற்றுவழிகளின் மேல் கட்டுப்பாட்டை இழந்தனர். மலைவழிகளையும் பிறர் கைப்பற்றிக்கொண்டனர். பின்னர் அவர்களைப்பற்றிய அனைத்துச் சொற்களும் நினைவிலிருந்து அழிந்தன. ஷத்ரிய அரசர்களும் அவர்களால் காக்கப்பட்ட வணிகர்களும் அவர்களை அறியாதோர் ஆயினர்.

ஆனால் அவர்கள் மட்டும் தங்கள் இறந்தகாலத்தை அறிந்திருந்தனர். அவர்களின் நூற்றெட்டு ஊர்களிலும் கரனுக்கும் இரு இளையோருக்கும் கல்பதிட்டைகள் இருந்தன. மாதந்தோறும் ஊன்பலிகொண்டு அவர்கள் குடிகளை வாழ்த்தினர். ஆண்டுக்கொருமுறை அரக்கர்கோன் ராவணனுக்கும் இளையோருக்கும் ஊன்பலியும் பெருஞ்சோற்றுக்கொடையும் அளித்து விழவெடுத்தனர். அவர்களின் இளையோர் தங்கள் குலக்கதைகளைக் கேட்டு வளர்ந்தனர். பின்னர் அக்கதைகள் பெருகி வெற்றுக் கற்பனைகள் என்றாயின. இளையோர் அவற்றை இளமையின் மகிழ்ச்சிகளில் ஒன்றென எண்ணி கடந்துசென்றனர்.

அந்நாளில் ஒருமுறை அக்காட்டினூடாக ரிஷ்யசிருங்கர் என்னும் முனிவர் கடந்துசென்றார். அவர் விபாண்டகர் என்னும் முனிவரின் மைந்தர். அங்கநாட்டை அதன் பெரும்பஞ்சத்திலிருந்து மீட்டு அந்நாட்டை ஆண்ட ரோமபாதன் என்னும் அரசனின் மகள் சாந்தையை மணந்தவர். முனிவர்களும் வணங்கும் மாமுனிவர். தண்டகக் காட்டைக் கடக்கையில் வழிதவறி நீரில்லா வறண்ட நிலத்தினூடாக அலைந்து கற்பாறை ஒன்றின்மேல் அவர் நினைவிழந்து விழுந்துகிடந்தார். அங்கே அவரைக் கண்டடைந்த அரக்கர்குலமகள் ருதிரை அவரைத் தூக்கி தன் குடிலுக்கு கொண்டுவந்தாள். அவளுக்கு என்ன கைம்மாறு

செய்யவேண்டும் என கேட்ட முனிவரிடம் தனக்கு ஒரு மைந்தனை அளிக்கவேண்டும் என்றும், அவன் அரக்கர்குலத்தை முழுதாளவேண்டும் என்றும் அவள் கோரினாள்.

ருதிரைக்கு ரிஷ்யசிருங்கரில் மைந்தனாகப் பிறந்தவர் மாமன்னர் அலம்புஷர். அவர் வடக்கே அரக்கர்குடியை மீட்டெழுப்பிய பகாசுரரின் உதவியுடன் அரக்கர்குடியை ஒருங்குதிரட்டினார். பகாசுரரின் செல்வத்தைப் பெற்று தொன்மையான ஜனஸ்தானத்தை மீட்டுக் கட்டினார். இம்முறை மலைப்பாறைகளை அடுக்கி உருவாக்கப்பட்ட கோட்டையாக அது அமைந்தது. பகாசுரரின் படைகளை கடன்பெற்றுச் சென்று தங்கள் நீர்வழிகளையும் மலைப்பாதைகளையும் மீண்டும் கைப்பற்றி மலையுச்சிகளில் காவல்நிலைகளை அமைத்து உரிமைகொண்டார். மீண்டும் ஜனஸ்தானம் செல்வமும் பெருமையும் கொண்டது.

அசுரமன்னர் பகன் கொல்லப்பட்ட செய்தியை அறிந்ததும் அலம்புஷர் உளம்கொதித்தார். உடனே படைகொண்டு சென்று பழி தீர்க்கவேண்டுமென எழுந்தார். அமைச்சர்கள் அவரை சினம்காக்கச் செய்தனர். “பகாசுரரைக் கொன்றவர் எவர் என நாம் இன்னமும் முழுதறியோம். பாண்டவ இளையவரால் கொல்லப்பட்டார் என்கிறார்கள்… அவரை நாம் இப்போது தேடிக் கண்டடைய இயலாது” என்றனர். “எனில் அவர்களின் நகரமாகிய அஸ்தினபுரியை அழிப்போம்” என்றார் அலம்புஷர். “அரசே, அஸ்தினபுரியிலிருந்து அவர்கள் வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் அஸ்தினபுரிக்கு எதிரிகளாகவும்கூடும்… அவ்வண்ணம் நிகழுமென்றால் நாம் அஸ்தினபுரியுடன் இணைந்து சென்று அசுரமன்னர் பகனின் இறப்புக்கு பழியீடு செய்வோம்” என்றார் அமைச்சர்.

அலம்புஷர் காத்திருந்தார். அசுரமன்னர் பகனுக்கு அவருடைய நகரத்தின் நடுவே நடுகல் ஒன்றை நாட்டி நாள்தோறும் குருதிபலி கொடுத்தார். பழியீடு செய்து அவரைக் கொன்றவனின் குருதியில் நனைத்த ஆடையை கொண்டுவந்து அங்கே வைத்து வணங்குவதுவரை அந்த பலிக்கொடை நீடிக்கும் என்று வஞ்சினம் உரைத்தார். அஸ்தினபுரிக்கும் இந்திரப்பிரஸ்தத்திற்கும் இடையேயான பூசல்களை ஒவ்வொருநாளும் ஒற்றர்களினூடாக அறிந்துகொண்டிருந்தார். அஸ்தினபுரி படையெழுந்ததும் தாங்களும் சேர்ந்துகொள்வதாக செய்தி அனுப்பினார்.

படைகள் திரண்டுகொண்டிருக்கையில் இளைய யாதவரின் செய்தியுடன் பாணாசுரரின் மைந்தர் சக்ரரும் மேற்கு நிஷாதஅரசின் ஹிரண்யநாபனும் அவன் இளையோன் ஹிரண்யபாகுவும் ஜனஸ்தானத்திற்கு வந்தனர். "அரக்கர்க்கரசே, இதுவே நாம் ஒருங்கிணைவதற்கான முதன்மைத் தருணம். இப்போது எளிய பகைமைகளையும் வஞ்சங்களையும் சுமந்துகொண்டு உளம்பிரிவோமாயின் நம் கொடிவழிகள் நம்மை பழிக்கும்..." என்று சக்ரர் சொன்னார். "என் தந்தை இளைய யாதவருடன் போரிட்டு கையிழந்தார் என அறிந்திருப்பீர்கள். ஆனால் இன்று நாங்கள் யாதவர்களுக்கு மகற்கொடை கொடுத்த குடி என அறியப்படுகிறோம். எங்கள் குலமகள் உஷை இன்று துவாரகைக்கு அரசியாக அமர்ந்திருக்கிறாள்."

"இளைய யாதவருக்கு குருதியுறவுகொண்டவர்கள் அசுரர்கள் என பாரதவர்ஷமே இன்று அறியும்" என்று சக்ரர் தொடர்ந்தார். "இங்கு அவர் சொல் வாழுமென்றால் நாமும் வாழ்வோம். இனி அசுரர்களுக்கும் பிறருக்குமான போர்கள் இல்லை.

அசுரகுடியினருக்கும் பிறருக்குமான கூட்டில் புதிய அரசகுடிகள் இங்கே எழும். குடியால் அல்ல, ஆற்றலாலும் அறத்தாலும் அரசுகள் அமையும்…” மேற்கு நிஷாதஅரசின் ஹிரண்யநாபன் “புதிய அறம் ஒன்று இங்கே எழும். அதை சொல்லில் அமைத்த புதியவேதம் நிலைகொள்ளும். இது அதற்கான போர்… ஆகவேதான் இதில் அரக்கரும் அசுரரும் நிஷாதரும் கிராதரும் பாண்டவர்களின் பக்கம் அணிதிரண்டிருக்கிறார்கள்” என்றார்.

“ஆனால் என் வஞ்சம் இளைய பாண்டவரிடம்” என்று அலம்புஷர் சொன்னார். “அதை நாங்கள் அறிவோம். அதை கடந்து வருக என உங்களை அழைக்கவே நேரில் வந்தோம்” என்றார் சக்ரர். “இந்தப் போரில் பாண்டவர் தரப்பில் வந்துகூடியிருக்கும் அத்தனை நிஷாதருக்கும் கிராதருக்கும் அசுரருக்கும் அரக்கருக்கும் அவ்வண்ணம் பழைய பழியின் கதைகள் பலநூறு உள்ளன. நமக்கும் அவர்களுக்குமான போர் என்பது இந்த யுகத்தில் தொடங்கியது அல்ல. ஆனால் வரும் யுகத்தில் அது மறைவதற்கு வாய்ப்புள்ளது. அதன்பொருட்டு களமிறங்குவோம். அதை வென்று நம் கொடிவழியினருக்கு அளிப்போம்.”

அலம்புஷரின் அமைச்சர் “அவ்வண்ணம் மறையும் பகையா அது? நமது தெய்வங்கள் வேறு. நமது வேதம் வேறு. நமது மூதாதையர் வாழும் உலகம் முற்றிலும் வேறு” என்றார். “அமைச்சரே, நம் குடியில் பிறந்தவர்களே அவர்கள் வணங்கும் தெய்வங்களான வருணனும் இந்திரனும் யமனும் குபேரனும் என நூல்கள் சொல்கின்றன. வேள்வியில் அவிகொண்டு அவர்கள் தேவர்களாயினர். அரக்கர் குடியில் பிறந்த இடும்பியின் மைந்தர் கடோத்கஜர் இன்று அரசகுடி மங்கையை மணந்திருக்கிறார். அவர் குடியில் நாளைய

பெரும்புகழ்கொள்ளும் அரசகுடி எழும் என்கின்றனர் நிமித்திகர். நாமறிந்த காலம் கதைகளில் வாழ்வது. வரவிருப்பதோ தெய்வங்களின் கனவில் எழுவது...” என்றார் சக்ரர்.

அமைச்சர் “குருதி ஒருபோதும் எல்லைகளை மீறாது” என்றார். “இல்லை அமைச்சரே, குருதி கங்கையைப்போல. அது இணைப்பெருக்குகள் வழியாகவே ஆற்றல்கொள்கிறது. கிளைப்பெருக்குகளாக விரிந்து மண்ணாள்கிறது” என்றார் ஹிரண்யநாபன். “இங்குள்ள ஷத்ரியர் அனைவரின் குலவழியிலும் தொல்லரக்கரான விருஷபர்வனின் குருதி உள்ளது என்று உணர்க! அவர்களனைவரும் தொல்லன்னை சர்மிஷ்டையின் மைந்தர்கள் என்று நாம் அறிந்துள்ளோம்.” அமைச்சர் “அவையெல்லாம் கதைகள்” என்றார். “இவையும் கதைகளாகும். கதைகளே விதைகள், அவற்றிலிருந்தே வாழ்வு முளைத்தெழுகிறது” என்றார் சக்ரர்.

“நான் சொல்லிழந்துள்ளேன் சக்ரரே... என்ன முடிவெடுப்பதென்று அறியாதவனாகி விட்டேன்” என்றார் அலம்புஷர். அமைச்சர் “நாம் நம் தெய்வங்களிடமே கோருவோம்... அவர்கள் முடிவுசெய்க!” என்றார். “ஆம், அதுவே அரக்கர்களின் வழி” என்றார் அலம்புஷர். “மூதாதையர் நல்ல முடிவை எடுக்கட்டும்... எதிர்பார்த்திருக்கிறோம்” என்றபின் சக்ரரும் நிஷாத அரசர்களும் திரும்பிச்சென்றார்கள். அலம்புஷர் அமைதியிழந்து அரண்மனைக்குள் அலைந்தார். அமைச்சர் “நாம் நம் தெய்வங்களிடமே கோருவோம்... தெய்வங்கள் முடிவெடுத்தால் மட்டுமே நம் குடிகள் அச்சொல்லுக்கு கட்டுப்படும்” என்றார். “நம் முடிவு தலைமுறைத் தொடர்களுக்கு அப்பால் வருங்காலத்தைய மைந்தருக்கும்

உரியது. அதை நாம் எண்ணி எடுக்க முடியாது. எண்ணாது எடுக்கவேண்டுமென்றால் தெய்வமெழவேண்டும்.”

அமைச்சர் குடித்தலைவர்களை அழைத்து பெருங்குழு ஒன்றை கூட்டினார். அதன்படி மூதாதையருக்கு பெருஞ்சோற்றுக் கொடைவிழா ஒன்று ஒருங்கமைக்கப்பட்டது. அரக்கர்களின் குடிகள் மலைப்பாதைகளினூடாக எறும்புநிரைகளாக வந்து குழுமினர். ஊர்மையத்தில் அமைந்திருந்த மூதாதையர் ஆலயத்தில் அரக்கர்கோன் ராவணனுக்கும் தம்பியருக்கும் அவர்களின் குடிமூத்தவரான கரனுக்கும் தூஷணருக்கும் திரிசிரஸுக்கும் ஏழு முழுத்த எருமைகளை வெட்டிப் பலியிட்டு பூசைசெய்தனர். ஊனும் கள்ளும் அன்னமும் மலரும் படைத்து வணங்கினர். முழவுகள் “எழு எழு எழு” என முழங்கிக்கொண்டிருந்தன. கொம்புகள் “ஆகுக! ஆகுக!” என இறைஞ்சின.

முதற்பூசகரில் வெறியாட்டுகொண்டு எழுந்தார் அரக்கர்கோன் ராவணன். “என் மைந்தரே, நீங்கள் ஆழியும் சங்கும் ஏந்தியவனின் அடிபணிக! அவன் குடிகளென்றாகுக! அவனுடன் நின்றுபொருதுக! உங்கள் கொடிவழியினரில் அவன் ஆணை திகழ்க! உங்கள் வேதங்களில் அவன் சொல் முளைவிட்டு எழுக!” என்று ஆணையிட்டார். கும்பகர்ணனும் விபீஷணனும் பூசகரில் எழுந்து அவ்வாணையையே அளித்தனர். பின்னர் கரன் எழுந்தார். “ஆம், குருதி விரிந்தெழுக! மலைப்பனைபோல் நம் விதைகள் காடெங்கும் பரவுக! இந்நிலமெங்கும் நம் சொல்லே முளைவிடுக!” என்றார். தூஷணரும் திரிசிரஸும் அவர்களில் எழுந்து அவ்வாணையை மேலும் உரைத்தனர்.

அப்போது முதல் பூசகரில் எழுந்த ராவணப்பிரபுவை மீறி எழுந்தது பகாசுரரின் குரல். “என் வஞ்சம் அணையாது... என்

வஞ்சம் என்றுமிருக்கும். எனக்காக அளிக்கப்பட்ட சொல்லை ஒருபோதும் நான் கைவிடப்போவதில்லை.” மண்ணிலிருந்து துள்ளி எழுந்து வெறிகொண்டாடி கூச்சலிட்டார் பூசகர். “என் பழிக்கு மறுநிகர் இல்லை… எனக்களிக்கப்பட்ட சொல்லை நிறைவேற்றுங்கள்… இல்லையேல் இக்குடியை அழிப்பேன். இங்குள்ள விளைநிலங்களில் நஞ்சாவேன். கருவறைகளில் நோயாவேன். பசுக்களில் அனலென ஊறுவேன். என்னை நிறைவடையச்செய்க! என் பழியை நிகர்செய்க!”

பிற தெய்வங்கள் ஒவ்வொன்றாக விழுந்து மலையேற பகாசுரர் மட்டும் நின்று ஆடினார். இரு கைகளிலும் பந்தங்களை ஏந்திச் சுழன்றார். அவரை நோக்கி நின்றிருந்த அரக்கர்கள் தன்னுணர்வு கொண்டு “வஞ்சம் எழுக! பெருவஞ்சமே எழுக! ஆம், பழிநிகர் செய்வோம்! பழிநிகர் செய்ய உயிரளிப்போம்!” என தங்கள் கதைகளையும் விற்களையும் வாள்களையும் வேல்களையும் தூக்கி ஆட்டி கூச்சலிட்டனர். கைகூப்பியபடி எரிதழல்சூடி ஆடிக்கொண்டிருந்த பகாசுரரை நோக்கிக்கொண்டிருந்த அலம்புஷர் “ஆம்!” என தலைவணங்கினார்.

அலம்புஷரின் படைகள் கௌரவப் படைகளை சென்றடைந்தன. அங்கிருந்த மூன்று அலம்புஷர்களில் ஒருவர் கடோத்கஜரால் கொல்லப்பட்டார். ஜடாசுரரின் குலமைந்தரான இரண்டாமவர் சாத்யகியால் கொல்லப்பட்டார். அவர்கள் ஒவ்வொருவரும் உயிர்விடுகையில் அலம்புஷரைத் தேடி சக்ரரின் சொல் வந்தது. “இந்தக் களத்தில் வீணே உயிர்விடவேண்டியதில்லை, அரக்கர்க்கரசே. இங்கே பிற எவரும் வெல்லப்போவதில்லை. வெல்லும் சொல்லை நம்

குடிக்குரியதாக்குக! இன்னமும்கூட உங்களுக்கு வாய்ப்புள்ளது.” அலம்புஷர் “நான் சொல்லுக்கு கட்டுப்பட்டவன்” என சொல்லி அனுப்பினார். “மூன்று சொற்களுக்கு அரக்கர்குடியினர் கட்டுப்பட்டவர்கள். நெறிநூல்களின் சொற்களைவிட மும்மடங்கு மூதாதையர் சொற்களுக்கு. மூதாதையர் சொற்களைவிட மும்மடங்கு தான் உரைத்த சொற்களுக்கு. என் சொற்களுடன் இறுதிவரை களத்தில் நின்றிருப்பேன்.”

இரவுப்போருக்கு முடிவெடுக்கப்பட்டதும் சகுனியிடமிருந்து அவருக்கு அழைப்பு வந்தது. அவர் தன் இரு படைத்தலைவர்களுடன் சகுனியின் பாடிவீட்டுக்குச் சென்றபோது அங்கே அஸ்வத்தாமர் இருந்தார். அருகே காககுலத்து அரக்கனான அலாயுதனும் இருந்தான். காகச்சிறகுகள் கொண்ட தலையணியும் கரிய யானைத்தோலாடையும் அணிந்து கல்மணி மாலைகள் அணிந்திருந்த அலாயுதன் எழுந்து அவரை வரவேற்றான். அவனை பலமுறை சந்தித்திருந்தாலும் அலம்புஷர் அணுக்கம்கொள்ள விழைந்ததில்லை. அறியாமையும் ஆணவமும் கொண்ட இளைஞன் என்னும் உளப்பதிவே அவனைப்பற்றி இருந்தது. அலாயுதன் கன்னங்கரிய நிறமும், நரம்புகள் ஓடிய பெரிய கைகளும், முன்னுந்திய தாடையும், மின்னும் சிறிய விழிகளும்கொண்டு விலங்கியல்பைக் காட்டுபவனாக தோன்றினான். அவன் அலம்புஷரை வணங்கி “இன்று நமது நாள், அரக்கர்க்கரசே” என்றான். அலம்புஷர் “ஆம்” என்று மட்டும் சொன்னார்.

அஸ்வத்தாமர் எழுந்து வந்து அலம்புஷரை தோள்தழுவி வரவேற்று “வருக, அரக்கர்க்கரசே! இன்று நாம் அரக்கர்குலத்தவரை நம்பியே போரிடவேண்டிய நிலையில்

இருக்கிறோம்” என்றார். அன்று இரவுப்போர் நிகழக்கூடும் என்னும் சொல் படைகளிடையே புழங்கிக்கொண்டிருப்பதை அலம்புஷர் கேட்டிருந்தார். சகுனி “இன்றிரவு அவர்கள் தாக்குவார்கள் என உறுதியாகியிருக்கிறது. கடோத்கஜன் தலைமையில் அவர்கள் எழவிருக்கிறார்கள். இரவில் கடோத்கஜன் ஏழுமடங்கு ஆற்றல்கொண்டவனாக ஆவான் என்கிறார்கள். நாங்கள் இரவில் விழியற்றவர்கள் என அறிந்திருப்பீர்கள். உங்கள் விழிகளை எங்களுக்குக் கொடுங்கள்” என்றார். அலம்புஷர் “இருளில் நாங்கள் எங்கள் தெய்வங்களின் துணையையும் பெறுகிறோம்” என்றார். “உங்கள் இருவரின் படைகளும் பன்னிரு பிரிவுகளாகப் பிரிந்து களத்தில் நிற்கவேண்டும்… உங்களால் நாங்கள் வழிநடத்தப்படவேண்டும்” என்றார் அஸ்வத்தாமர்.

அலாயுதன் “நான் என் படைகளை ஒரே ஒரு சுடர்ச்செய்கை வழியாக அணிபிரித்துவிட முடியும்” என்றான். அலம்புஷர் “இன்றுதான் மூதாதையர் குறித்த நாள்போலும்” என்றார். “என் வஞ்சத்தை நான் இன்று தீர்க்கவேண்டும். இளைய பாண்டவர் பீமசேனரை இன்று கொன்று குருதிகொள்வேன். பகாசுரருக்கு அளித்த சொல்லை நிறைவுசெய்வேன்.” அவரை குறுக்கே மறித்த அலாயுதன் “நானும் பீமசேனரை கொல்வேன் என்று வஞ்சம் உரைத்து இங்கு வந்தேன்” என்றான். எரிச்சலுடன் விழிசுருக்கி “எதன்பொருட்டு?” என்றார் அலம்புஷர். “என் குடியின் மூத்தவராகிய பகாசுரரை பீமசேனர் அறைந்துகொன்றார்… குருதிப்பழி ஒருபோதும் தீர்க்கப்படாது விடப்படலாகாது என்றார் என் அன்னை. நான் அன்னைக்கு அளித்த சொல்லின்பொருட்டே இங்கு வந்தேன்” என்று அலாயுதன் சொன்னான். அலம்புஷர் ஏதோ சொல்ல வாயெடுத்த பின் விழிவிலக்கி அதை தவிர்த்தார்.

அஸ்வத்தாமர் “இன்று களத்தில் பீமசேனர் ஆற்றலற்றவர். உங்கள் கதைகள் அவரைத் தேடிச் செல்லட்டும். உங்களில் எவருக்கு பழிநிகர் செய்யும் வாய்ப்பை அருள்கின்றன தெய்வங்கள் என்று பார்ப்போம்” என்றார். அலம்புஷர் “நான் பீமசேனரைக் கொன்று பழி தீர்ப்பேன். என் சொல் இந்த இரவில் வெறியாட்டுகொண்டு எழும் தெய்வம்போல் நின்றுள்ளது” என்றார். “ஆம், இன்றுதான் என்று என் அகம் எழுகிறது” என்றான் அலாயுதன். “உங்கள் படைகள் களமெழுக!” என்று சகுனி ஆணையிட்டார். தலைவணங்கி அலம்புஷர் எழுந்தபோது அலாயுதனும் எழுந்துகொண்டான். சகுனியும் அஸ்வத்தாமரும் அவர்களுக்கு விடைகொடுத்தனர். அஸ்வத்தாமர் சில அடி உடன் வந்து “மன்னர் சிதைக்களம் சென்றிருக்கிறார். அங்கிருந்து படைமுகம் செல்வார். நீங்கள் அவரை அங்கே சந்திக்கலாம்” என்றார்.

அவர்கள் இருவரும் வெளியே வந்தனர். அலம்புஷர் தன் உடலின் எடைகூடி கணுக்கால்களை அழுத்துவதுபோல் உணர்ந்தார். ஆனால் அலாயுதன் உணர்வுக்கொந்தளிப்பு அடைந்திருந்தான். “இன்று போர் நிறைவுறும்... இன்றுடன் தெரியும் நாம் நூறு ஷத்ரியர்களுக்கு நிகரானவர்கள் என” என்றான். கௌரவப் படைகளுக்குள் சிறிய அகல்சுடர்கள் அலைவதை அலம்புஷர் பார்த்தார். இருளுக்குள் படைகள் இடம்மாறிக் கொண்டிருப்பதை உணரமுடிந்தது. கீற்றுநிலா முழுமையாகவே முகில்களுக்குள் அமைந்திருந்தது. அலாயுதன் “இரவுப்போருக்காகவே காத்திருந்தேன். இவர்களின் போர்நெறிகள் அனைத்தும் தங்களுக்குள் போர்புரிவதன் பொருட்டு இவர்கள் உருவாக்கிக் கொண்டவை. வெட்டவெளியில் வெளிச்சம் நிறைந்த பொழுதில் முறையாக முரசறைவித்து வஞ்சினம் கூறி படைநெறிகளின்படி

பொருதிக்கொள்கிறார்கள். இந்த அறிவின்மைக்கு நாம் ஏன் உடன்படவேண்டும் என்றே நான் உசாவிக்கொண்டிருந்தேன். காலில்லாதவர்களின் ஊரில் கைகளால் நடந்து போரிடும்படி நெறியிருக்கும்… அறிவின்மை… இன்றேனும் நாம் நமது வழிகளின்படி போரிடுவோம்…” என்றான்.

“இது அவர்களின் போர்” என்றார் அலம்புஷர். “மெய், ஆனால் இதற்குள் நாம் நமது போரை நிகழ்த்தும்பொருட்டே வந்துள்ளோம்” என்று அலாயுதன் சொன்னான். அலம்புஷர் “இல்லை, அவர்களின் போரில் ஊடுகலந்து போரிடவே நம்மால் இன்று இயலும். நம்மால் நேரடியாக பீமசேனரையோ பாண்டவர்களையோ வெல்ல இயலாது என்பதனாலேயே இங்கு வந்துள்ளோம்” என்றார். அலாயுதன் இளையோருக்கே உரிய முறையில் பொறுமையற்று தலையை அசைத்தான். “நாம் தோற்கடிக்கப்படுவது அவர்களால் அல்ல, நம்மை எதிர்க்க அங்கே சூழ்ந்திருக்கும் அரக்கர்களால்தான். நான் இரவில் பலமுறை விண்ணிலெழுந்து பாண்டவப் படைகளுக்குள் செல்ல முயன்றேன். இருளிலேயே பாண்டவரை கொன்று மீளமுடியுமா என்று பார்த்தேன். அங்கே காவலுக்கிருப்பவர்கள் இடும்பர்கள். காட்டுநாய்களை மோப்பம் பிடிக்கும் நாட்டுநாய்கள் அவர்கள்.”

அவன் தரையில் துப்பி “நான் இத்தருணத்திற்காகவே காத்திருந்தேன். இரவு என்னை பெருகிஎழச் செய்கிறது. இன்று நான் பாண்டவர்குலத்து வீணனை களத்தில் வீழ்த்துவேன். பகாசுரருக்காக பழிநிகர் செய்தேன் என என் குடியால் புகழப்படுவேன்” என்றான். அலைகளில் படகுபோல நிலைகொள்ளாமல் அசைந்த அவன் உடலை நோக்கியபின் அலம்புஷர் “விந்தைதான்… நான் மட்டுமே பகாசுரருக்காக

வஞ்சினம் உரைத்துள்ளேன் என எண்ணினேன்” என்றார். “அரசே, இங்கு மட்டும் ஏழு அரக்கர்குலத்து வீரர்கள் பகாசுரரின் பழியை ஈடுசெய்வதற்காக களம்புகுந்துள்ளனர்” என்றான் அலாயுதன். அலம்புஷர் “ஆனால் பகாசுரருக்கு நேரடிக் குருதிவழி என ஏதுமில்லை” என்றார். “ஆம், ஆனால் நாம் அனைவருமே ஒற்றைக்குருதி” என்றான் அலாயுதன். அவனுடைய பெரிய கைகள் ஒவ்வொரு சொல்லுக்கும் அசைந்தன. அவற்றைக் கொண்டு என்ன செய்வதென்று தெரியாதவன் போலிருந்தன அவன் அசைவுகள். கைகளை கோத்துக்கொண்டான். தலையை தடவினான். முகவாயை வருடிக்கொண்டான். மார்பில் கட்டிக்கொண்டு உடனே விலக்கினான்.

அலம்புஷர் தன்னைச் சூழ்ந்திருந்த கௌரவப் படைப்பெருக்கை நோக்கியபின் “நாம் மட்டும்தான் வஞ்சங்களை இப்படி பெருக்கிக்கொள்கிறோமா? வஞ்சத்தால் வாழ்கிறது நம் குடி என்பார்கள் மூதாதையர். ஆனால் இப்போது நோக்குகையில் நாம் வஞ்சங்களால் அழிகிறோமா என்னும் எண்ணம் ஏற்படுகிறது” என்றார். படைகளைச் சுட்டி “பார், இவர்கள் போரிட்டுக்கொண்டே இருக்கிறார்கள். போர்க்களத்திலிருந்து வஞ்சங்களை கொண்டுசெல்வார்கள் என்றால் இவர்களின் ஒவ்வொரு குடியிலும் பல்லாயிரம் வஞ்சினங்கள் உரைக்கப்படவேண்டும். ஒவ்வொரு வீரனுக்கும் ஆயிரம் வஞ்சங்களேனும் வந்து சேர்ந்திருக்கும். கொடுந்தெய்வங்களைப்போல அவர்களை அவை ஆட்டிவைத்திருக்கும். அவர்களால் வேறெதையும் எண்ணியிருக்க முடியாது. அறமோ நெறியோ அவர்களில் எழுவதற்கு வாய்ப்பில்லை” என்றார்.

அலாயுதன் “ஆம், நான் அதை எண்ணியதுண்டு. பீமசேனனால் கொல்லப்பட்ட மகதத்தின் அரசர் ஜராசந்தனின் கொடிவழியினர் அங்கே பாண்டவர்களுடன் நின்று போரிடுகிறார்கள்” என்றான். “இழிமக்கள், இறந்தவர்களின் உணர்ச்சிகளை மறந்து இருப்பவர்கள் வெற்றுஉடல்களென வாழ்கிறார்கள். விலங்குகளே வஞ்சமற்றவை. வஞ்சத்தை கற்றுக்கொண்ட விலங்கே மானுடன். அரக்கர்க்கரசே, நாம் வஞ்சங்களால்தான் குடிகளாக தொகுத்துக்கொள்கிறோம். குலங்களாக இணைகிறோம். வஞ்சமே நம் மூதாதையரை நம்முடன் இணைக்கிறது. நம் வழியாக நம் கொடிவழியினருக்கு சென்றுசேர்கிறது. வஞ்சச்சரடால் கோக்கப்பட்ட மணிகளே நாம் என்கின்றன தொல்லுரைகள்.” அவன் மீண்டும் ஓங்கி துப்பி “கீழ்மக்கள். விலங்குகளைப்போல் நுகர்வதே இன்பமென்று எண்ணுபவர்கள். இப்போருடன் இவர்கள் முற்றழிவார்கள் என்றால் களைகள் எரிந்தணைந்த மண்ணில் விளைகள் பெருகுவதுபோல் அரக்கர் குடி வளர்ந்தெழுந்து மண் நிறைக்கும்” என்றான்.

“ஆம், இவர்கள் போர்க்கள வஞ்சங்களை வளர்ப்பதில்லை. அவற்றை களத்தை ஆளும் தெய்வங்களுக்கு அளித்த பின் வெறுமையை மட்டுமே இங்கிருந்து பெற்றுக்கொண்டு மீள்கிறார்கள். எல்லா வெறுமையும் ஏதோ ஒரு மெய்மையின் புறவடிவம்தான். ஆகவேதான் இவர்கள் போர்க்களத்தை அறநிலம் என்றும் மெய்மையின் ஊற்று என்றும் புகழ்கிறார்கள்” என்றார் அலம்புஷர். “இவர்களிடமிருக்கும் அத்தனை மெய்மைகளும் வெவ்வேறு போர்க்களங்களிலிருந்து இவர்கள் பெற்றுக்கொண்டவை போலும். அந்நெறிகளால்தான் இவர்கள் மேலும் மேலும் ஆற்றல்கொண்டவர்களாக ஆகிறார்கள்.” அலாயுதன் “என்ன வீண்பேச்சு இது? இவர்களுக்கு

களத்தில் அச்சமும் ஐயமும் அன்றி நெறியென்று ஏதுமில்லை என அறியாதவரா நீங்கள்?” என்றான்.

“ஆம், களமெழுவதற்கு முன் நெறிகளை வகுத்துக்கொள்கிறார்கள். களம் அமைந்ததுமே நெறிகளை மீறுகிறார்கள். ஆனால் அந்நெறிகள் முந்தைய களங்களால் அடையப்பட்டவை. இக்களத்தில் அவை உடைபடுவது இயல்பே. ஆனால் இக்களத்தில் அவர்கள் அடையும் நெறி இன்னொரு பெரும்போர் வரை இவர்களை ஆளும்” என்று அலம்புஷர் சொன்னார். “அங்கே இளைய யாதவன் உருவாக்கும் சொல் என்பது இப்போரில் திரண்டெழும் நெறிகளால் உலகியலென வகுக்கப்படலாம். இங்கே அது பல்லாயிரம் தலைமுறைக்காலம் நின்று ஆட்சிசெய்யலாம்.”

“வீண்பேச்சு! வீண்பேச்சு!” என்று அலாயுதன் கூவினான். “இவர்கள் வஞ்சம் கொள்ளாதிருப்பது அனைத்தையும் மறந்துவிடுவதனால்தான். இவர்கள் பழிகளையும் பிழைகளையும்கூட மறந்துவிடுவது ஒன்றின்பொருட்டே, நிலம். நிலம் மட்டுமே இவர்களின் இலக்கு. நெறியெனக் கொள்வது அதை வெல்லும் வழிகளை மட்டுமே. அதை மறைக்கவே சொல்பெருக்குகிறார்கள். இவர்களை பலிகொண்டு நிறையாத குருதித்தெய்வமென ஆட்டிவைக்கிறது நிலம். நிலத்தை பகுத்துப்பெறுவதற்காக பெற்ற தந்தையை கொல்பவர்கள் இவர்களில் உண்டு. போரில் மைந்தரையும் தந்தையரையும் குடி முழுதையும் இழந்தாலும் கையளவு நிலம்பெற்றால் மகிழ்ந்து நிறைவுறும் கீழோர்” என்றான் அலாயுதன்.

“நாம் அவர்களிடமிருந்து அதைத்தான் கற்றுக்கொள்ளவேண்டுமா என்ன?” என்றார் அலம்புஷர். “என்ன சொல்கிறீர்கள்? நிலத்தையா? நிலத்தின்பொருட்டு நாம் நம்

குலநெறிகளை குருதிவஞ்சங்களை கைவிடவேண்டும் என்கிறீர்களா?” என்றான் அலாயுதன். “யானை பெரும்பசி கொண்டது, ஆகவே அது உணவையே ஊழ்கப்பொருளாகக் கொண்டுள்ளது என்று சொல்வார்கள். இவர்கள் நிலம்மீது கொண்டிருக்கும் பற்றும் வெறியும் இவர்களுக்குள் தெய்வங்கள் பொறித்ததாக இருக்கலாம். இவர்களின் தெய்வங்கள் இவர்களுக்கு பரவுக, எங்கும் நிறைக என ஆணையிடுகின்றன போலும்” என்றார் அலம்புஷர். “நோக்குக, இவர்களின் நெறிகளும் விழைவுகளும் எதுவானாலும் ஆகுக! இவர்கள் பாரதவர்ஷத்தை நிறைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு போருக்குப் பின்னரும் மும்மடங்கு ஆற்றல்கொண்டவர்களாக ஆகிறார்கள். பேரழிவுகள் இவர்களை பெருகச்செய்கின்றன. எண்ணிக் கொள்க, இப்பெரும்போருக்குப் பின் இவர்கள் மேலும் பொலிவடைவார்கள்! இந்நிலத்தை முற்றாக நிறைத்துப் பொங்கி வெளியேயும் செல்வார்கள்.”

“ஆனால் நாம் வஞ்சமெனும் தெய்வத்திற்கு குருதிபலி கொடுத்துக்கொண்டிருக்கிறோம்” என அலம்புஷர் சொன்னார். அவர் சொல்வது புரியாமல் எரிச்சலுடன் மேலே சொல்லவந்த அலாயுதனை கையமர்த்தித் தடுத்து “ஆம், நானும் அதன்பொருட்டே வந்தேன். இக்கணம் வரை என் தெய்வங்களின் மேல் ஐயமற்றவனாகவே இருந்தேன். ஆனால் இப்போது தனித்து நின்றிருக்கிறேன். துணையற்ற, உறவற்ற வெளியில் நிலைகொள்வதைவிட பெரிய வெறுமை தெய்வங்களற்ற வெளியில் நின்றிருப்பது” என்றார். உரக்க நகைத்து “நன்று, எவ்வெறுமையும் மெய்மையின் மறுவடிவே என்றுதான் சொல்லப்பட்டுள்ளது” என்றபின் தன் புரவி நோக்கி நடந்தார்.

# கார்கடல் - 62

அரவான் சொன்னான்: தோழர்களே, அரவுகளுக்குரியது விழியும் செவியும் ஒன்றாகும் ஸ்ரவ்யாக்ஷம் எனும் யோகம். காட்சிகளை ஒலியென்று அறியவும் ஒலிகளை காட்சிகளாக விரிக்கவும் அவர்களால் இயலும். நாகர்குலத்து அன்னை உலூபியிலிருந்து இளைய பாண்டவர் அர்ஜுனர் கட்செவி யோகத்தை கற்றுக்கொண்டார். நாகர்களால் அந்த நுண்ணறிதல் அங்கநாட்டு அரசர் கர்ணனுக்கு வழங்கப்பட்டது. கௌரவர்களும் பாண்டவர்களும் போர்புரிந்த அவ்விரவில் விழிகொண்டவர்களாக அங்கு திகழ்ந்தவர்கள் அவர்கள் இருவருமே. துரோணர் ஒலிகளைக்கொண்டு போரிடும் சப்தஸ்புடம் என்னும் கலையை அறிந்தவர். அதை அவரிடமிருந்து அஸ்வத்தாமர் அறிந்திருந்தார். அன்றைய இரவுப்போரில் ஷத்ரியப் படைகளில் அந்நால்வர் மட்டிலுமே நோக்குகொண்டவர்கள்.

அரசகுடியினர் அனைவருமே அந்நால்வருக்கும் பின் அணிநிரந்தனர். அர்ஜுனரின் தேருக்குப் பின்னால் பதினெட்டு ஒளிச்செய்தியாளர்களை நிறுத்தினார் திருஷ்டத்யும்னர். அர்ஜுனரின் கையசைவை, வில்லசைவை, அம்பெழு திசைகளை அருகே நின்று நோக்கி அவற்றை ஒளியசைவுகளென இருட்திரையில் நிகழ்த்துவது அவர்களின் பணி. பாண்டவர்களின் தரப்பிலிருந்த ஷத்ரியப் படையினர் அனைவருக்கும் அவ்வசைவுகளே ஆணையெனச் சென்றன. ஒவ்வொரு ஷத்ரியப் படைப்பிரிவிலும் அந்த ஒளியசைவுகளைக் கண்டு ஆணைகளைப் பெற்று

தங்களுக்குரிய ஆணைகளாக மாற்றும் இரண்டாம் நிலை ஒளிச்செய்தியாளர்கள் இருந்தனர். முதல் ஒளி நீலநிறத்திலும் இரண்டாவது ஒளி செந்நிறத்திலும் அமைந்திருந்தது. ஒவ்வொரு படைப்பிரிவிலும் இருளில் விழி துலங்கும் அசுரரோ அரக்கரோ நிஷாதரோ கிராதரோ படைமுகம்கொண்டு நின்றிருந்தனர்.

அவ்வண்ணமே கௌரவப் படைப்பிரிவுகளிலும் அரக்கர்களின் சிறு குழுக்கள் இருந்தன. அங்கநாட்டரசர் கர்ணனுக்குப் பின்னால் நாற்பத்தெட்டு ஒளிச்செய்தியாளர்கள் நின்று அவரது ஒவ்வொரு அசைவையும் ஆணையென்றாக்கி கௌரவப் படைகளுக்கு அளித்தனர். துரோணருக்குப் பின்னால் நால்வரும் அஸ்வத்தாமருக்குப் பின்னால் நால்வரும் ஒளிகளுடன் நின்றனர். கௌரவர்கள் மஞ்சள்நிற முதன்மை ஒளியையும் பச்சைநிற இரண்டாம் ஒளியையும் கொண்டிருந்தனர். தொலைவிலிருந்து பார்க்கையில் மின்மினிகள் சுழன்று பூசலிட்டுக்கொள்வதுபோல் குருக்ஷேத்ரம் தோற்றமளித்தது. போர் தொடங்குவதற்கு முன்னரே ஒளிகள் போரிடத் தொடங்கிவிட்டிருந்தன. ஏனென்றால் அவை அங்கிருந்தோரின் உள்ளத்துடன் நேர்தொடர்பு கொண்டிருந்தன.

இரு தரப்பினரும் இருளுக்குள் கருநாகம் சுருளவிழ்ந்து படமெடுப்பதுபோல அணிவகுத்து சூழ்கைஅமைத்து முகம்கொண்டனர். ஒருவரை ஒருவர் இருளுக்குள் உணர்ந்தபடி காத்து நின்றனர். “இருளுக்குள் யானையை எதிர்கொள்வதுபோல” என்று ஒருவன் சொன்னான். “ஆம், இருளெல்லாம் யானையென்றாகிறது” என்றான் இன்னொருவன். இருளுக்குள் எதிர்ப்படை நோக்குகொள்வதை அவர்களால் உணரமுடிந்தது. “அவர்கள் ஒவ்வொருவரின் நோக்கையும்

உணர்கிறேன். பகலில் இந்நோக்குகள் எழுவதில்லையே!” என்று ஒரு வீரன் கேட்டான். “பகலில் நாம் நோக்குகிறோம்” என்று ஒருவன் மறுமொழி சொன்னான். “இருளுக்கு ஒரு கரவொளி இருக்கிறது. கரியவை அனைத்தையும்போல அதுவும் வளைவுகளில் மின்னுகிறது” என்றான் ஒருவன். “எதற்காகக் காத்திருக்கிறோம்!” என ஓர் இளைஞன் எவரிடமென்றிலாது கேட்டான். “இப்போது நிலவு போரை வகுக்கவிருக்கிறது” என்றது ஒரு குரல்.

கருநிலவுக்கு முந்தைய நாள் ஆகையால் விழியால் காணமுடியாத பிறை அன்று எழுந்தது. அதை பொழுதுகணக்கிட்டு கணித்த நிமித்திகர்“பிறைநிலவு!” என அறிவிக்க பாண்டவர்களின் தரப்பிலிருந்து ஒற்றைப்போர்முரசு ஒலித்தது. கடோத்கஜன் தலைமைகொண்டு நடத்திய இடும்பர்களின் படையிலிருந்து நூற்றுக்கணக்கான முழவொலிகள் எழுந்தன. சிம்மவால் குரங்குக் கூட்டத்தின் ஓசைகள்போல அவை வானில் நிறைந்தன. குரங்குத்திரள் கிளைகளினூடாக எழுந்து அணைவதுபோல் ஒலிக்க பாண்டவப் படை இருளில் இருளலை என பெருகி வந்து இருள்வெள்ளமென நின்றிருந்த கௌரவப் படையை அறைய இரவுப்போர் தொடங்கியது. இரு படைகளும் இருளுக்குள் மோதிக்கொண்டபோது அம்புகளின் ஓசை மேலும் செவிகிழிக்கும் அரம்கொண்டு ஒலித்தது. யானைகளின் பிளிறல் மண்ணுக்கடியில் பாறைகள் புரள்வது போலிருந்தது. புரவிகளின் கனைப்பொலி உலோகத்தகடுகள் உரசுவதுபோலிருந்தது. வாள்வீச்சொலியை பற்களின் கூச்சமென, நாணிழுமும் ஒலியை நரம்புகளின் உலுக்கல் எனக் கேட்க முடிந்தது.

குருக்ஷேத்ரம் எத்தனை ஓசை நிறைந்தது என்பதை அப்போதுதான் அதுநாள் வரை அங்கு போர்புரிந்துகொண்டிருந்தவர்களே உணர்ந்தனர். அம்பை அம்பு அறைகையில் காட்டில் கிளைமுறியும் ஒலி. அம்புமுனை கவசங்களை அறைகையில் மணியோசை. அம்புமுனையை அம்புமுனை சந்திக்கையில் உலோகமணி கல்தரையில் உதிரும் கூரிய ஒலி. அம்புகளின் இறகுகள் அதிரும் ஓசை கழுகுச் சிறகொலிபோல், விசிறப்படும் பட்டுத்துணிபோல், உதறிக்கொள்ளும் புரவிவாலின் ஒலிபோல் வெவ்வேறு வகையில் எழுந்தது. தேர்ச்சகடங்கள் மரப்பலகைப் பரப்புகள் மேல் அதிர்ந்தன, இணைப்புகளில் திடுக்கிட்டன, உருண்டோடி தயங்கி முனகித் திரும்பின. அச்சுகளில் ஆணிகள் எண்ணைப்பிசின் பரப்பில் வழுக்கிச் சுழலும் ஓசையைக்கூட கேட்கமுடிந்தது. யானைச்சங்கிலிகளின் குலுங்கலில் எடை தெரிந்தது.

காற்று பல அடுக்குகளென்றாகியது. ஒலிகள் தங்கள் அடர்த்திகளுக்கேற்ப தங்கள் காற்றுவெளியை தெரிவுசெய்துகொண்டன. ஆவியும் எண்ணையும் நீரும் கசடும் ஒற்றைப் பளிங்குக் குடுவைக்குள் அடுக்கப்பட்டு தெரிவதைப்போல. புரவிக்குளம்புத் தாளங்கள், கனைப்புகள், ஆணைகள், செய்திக்கூவல்கள் ஓர் அடுக்கில் பெருகி அலைத்தன. சங்குகள், கொம்புகள், முழவுகள், சிற்றூதல்கள் வேறொரு காற்றில் நிறைந்து ஒன்றுடன் ஒன்று பின்னிப் பரவின. புண்பட்ட அலறல்கள், சாவுக்கூக்குரல்கள், வெறிக்கூச்சல்கள், எக்களிப்புகள், வலியமுகைகள் பிறிதொரு காற்றில் நிறைந்திருந்தன. குருக்ஷேத்ரமெனும் கலம் குலுக்கப்பட்டது, கவிழ்ந்தெழுந்தது, ஒளிகள் ஒன்றுடன் ஒன்று

ஊடுருவிக் கலந்தன. தோழரே, வண்ண ஒளிச்சரடுகளைக் கொண்டு முடைந்த பெரும்பாய்போல களம் தோன்றியது.

போர் தொடங்கிய சற்று நேரத்திலேயே இருளுக்குள் முட்டி மோதி போரிட்டுக்கொண்டிருந்த ஒவ்வொருவரும் தங்களை அறியாமலேயே செவியை விழியென மாற்றிக்கொள்ளத் தொடங்கினர். தொலைவில் தெரிந்த ஒளியாணைகளை மட்டுமே கண்டு, உடன் வந்த அரக்கர் குழுவினால் வழிகாட்டப்பட்டு போரிட்டனர். ஓசைகளுக்கும் அவ்வொளிகளுக்கும் இடையே ஒத்திசைவை கண்டுகொண்டதும் அவை ஒன்றாயின. போர் உளம்கூர்தலின் வெளி. உள்ளம் புலன்களை சமைக்கிறது. அங்கு ஒவ்வொன்றும் பிறிதொன்றால் நிரப்பிக்கொண்டு ஒத்திசைவை அடைகின்றன. இரு நாழிகைக்குப் பின் அங்கு போர்க்களத்தில் அத்தனை வீரர்களும் கட்செவி கொண்டவர்கள்போல் மாறினர். ஒளிபெய்யும் நடுப்பகலில் போர்புரியும் அதே இயல்புத்தன்மையுடன் அவர்கள் அம்புகளை எய்தனர், வேல்களை வீசினர். கதைகளையும் வாள்களையும் சுழற்றி ஒருவரோடொருவர் போரிட்டனர். தாங்கள் விழிநோக்கிழந்து செவிகளால் பார்த்துக்கொண்டிருப்பதையே அவர்கள் அறியவில்லை.

ஆனால் அவர்களைவிட மும்மடங்கு ஆற்றல் கொண்டிருந்தனர் நிஷாதர்களும், கிராதர்களும், அரக்கர்களும், அசுரர்களும். அவர்களிலேயேகூட இடும்பர்கள் விண்ணவருக்கு இணையான விசையும் கரவும் கொண்டிருந்தனர். நூலேணிகளில் என இருளில் கால்வைத்து ஏறி வானில் மறைந்தனர். இருள் அலைவுறும் இடியோசையுடன் மீண்டும் தோன்றினர். எட்டுத் திசைகளிலும் சூழ்ந்து பேரொலி எழுப்பி

நகைத்தனர். முழவுகளை முழக்கியபடி, உடல்களில் அறைந்து வெடிப்பொலி எழுப்பியபடி தலைக்குமேல் பறவைகளைப்போல் வந்து தாக்கினர். மண்ணில் விழுந்து முற்றாக மறைந்து போயினர். ஒவ்வொரு கௌரவ வீரனும் தனக்கு மிக அருகே இடும்பன் ஒருவன் இருப்பதுபோல் உணர்ந்தான். தன்னுடன் நின்ற படைவீரர்கள் தாங்களே தங்கள் சங்கறுத்து விழுவதைப்போல் விழுந்து துடித்து உயிர்விடுவதை அவர்கள் கண்டனர். மின்னி வந்த வாளுக்குப் பின்னால் கைகளோ உடலோ இருக்கவில்லை. சுழன்றறைந்து சென்ற கதை அதற்குள் தெய்வம் குடியேறி பறப்பதுபோல் தோன்றியது.

“எங்குளர்? இருளில் கரைந்துவிட்டார்களா என்ன?” என்று ஒருவன் கூவினான். “ஆம்! இருள் முழுத்து எழுகிறார்கள், இருளென்றாகி மறைகிறார்கள்!” என்றான் இன்னொருவன். “இருள் தசை புழுத்து எழுந்த நெளிவுகள்!” என்று ஒருவன் கூவினான். அவர்களின் வீசுகொக்கிகளில் சிக்கி கௌரவ வீரர்கள் இருண்ட வானில் எழுந்து சென்றனர். வானில் அலறி குருதி மழைத்துளி சிதற மண்ணில் அறைந்து விழுந்தனர். “முகில்களில் ஊர்கிறார்கள்!” என்று எங்கோ ஓர் அலறல் எழுந்தது. “வௌவால்கள்! கூகைகள்!” என எவரோ கூச்சலிட்டார்கள். “விழிகள்! விழிகளை நோக்கியே அம்புகள் எழுகின்றன! விழிகளைக் கொத்தி அணைத்துவிடுகின்றன!” விழிகளில் பாய்ந்த அம்புகளுடன் வீரர்கள் சுழன்று நிலையழிய அவர்களை பொதிந்து வீழ்த்தி மேலும் மேலுமென வந்து தறைத்தன அம்புகள். விழிநடுப்புள்ளியை நாடி வந்து தலைக்கவசத்தை உடைத்து உட்புகுந்தன எடைமிக்க எறிவேல்கள்.

அரக்கரும் அசுரரும் விண்ணிலெழுந்தமைந்து போரிட்டபோது நிஷாதரும் கிராதரும் உடலை மண்ணுடன் மண்ணென தழைத்து ஓசையில்லாது ஊர்ந்து வந்து எழுந்து போரிட்டனர். எண்ணியிராத இடங்களில் மண்ணிலிருந்து ஊற்று பீறிட்டெழுவதுபோல் அவர்கள் தோன்றினர். தரைக்கு அடியில் சென்றுவிட்டவர்கள்போல் அவர்கள் விழிகளில் இருந்து மறைந்துவிட்டனர். “அவர்கள் உரகங்களில் இருந்து பிறந்தவர்கள். நீரில் வாழ்பவை அவர்களின் தெய்வங்கள். ஓசையின்மையே அவர்களின் ஆற்றல்” என்று படைத்தலைவன் கூவினான். “வேல்களை தலைகீழாகப் பிடியுங்கள். விற்களை நிலம் நோக்கியும் தணியுங்கள். தரையில் எந்த அசைவெழுந்தாலும் தாக்குங்கள்.”

துரியோதனன் புரவியில் பாய்ந்து துரோணரை நோக்கிச்சென்று “ஆசிரியரே, இவர்கள் இப்போது தடுத்து நிறுத்தப்பட்டாக வேண்டும். இல்லையேல் இன்றுடன் நமது படை முற்றழியக்கூடும்” என்றான். “அவர்கள் தங்களின் ஆற்றலை காட்டட்டும். அதை புரிந்துகொண்ட பின்னரே அவர்களை நாம் வெல்லமுடியும்” என்றார் துரோணர். “இப்போதுதான் அவர்களின் சூழ்கையும் போர்முறையும் தெரியவருகிறது. இப்படையின் மையம் கடோத்கஜன். நான் அவனை சுற்றிவளைக்க முயன்றுகொண்டிருக்கிறேன்” என்றார். “அடிமரத்தை நாடி அதை முறிக்கவேண்டும். கிளைகளை வெட்டமுயல்வதில் பொருளில்லை…”

துரியோதனன் சீற்றத்துடன் “அவனை சுற்றிவளைக்க இயலாது, ஆசிரியரே. அவன் எங்குமிருக்கிறான். எண்ணுகையில் நமது படையில் பின்பகுதியில்கூட அவனிருக்கிறான் என்று தோன்றுகிறது. அங்கிருந்தும் அலறல்கள் எழுகின்றன…”

என்றான். "அவர்கள் சரடுகளினூடாக பறப்பவர்கள். ஆனால் அத்தனை சரடுகளுக்கும் மைய முடிச்சென்று ஒன்று இருக்கும். அவர்கள் இப்படையெங்கும் பரவி போரிடும் வடிவத்திலிருந்தே குறுக்கிச்சென்று அம்மையத்தை அடையமுடியும். வலைச்சரடினூடாக மையத்தை அடைந்து அதை தாக்குவோம்" என்று துரோணர் சொன்னார். "போர் இன்னும் நான்கு நாழிகைக்குள் முடிந்தாகவேண்டும், ஆசிரியரே. நம் படைகள் அழிந்துகொண்டிருக்கின்றன" என்றபின் துரியோதனன் திரும்பிச்சென்றான்.

கிராதர்களும் நிஷாதர்களும் அசுரர்களும் விழிகளைக் கொண்டு உடல்வடிவம் சமைக்கும் அக்ஷரூபம் என்னும் கலையை கற்றவர்கள். வேட்டைவிலங்கின் விழிமின் துளிகளை மட்டுமே இருளில் அவர்கள் பார்ப்பார்கள். அவ்விழிகளின் ஒளியையும், அவை அமைந்திருக்கும் உயரத்தையும், அவற்றுக்கிடையான தொலைவையும் கொண்டு அவற்றின் தலையை உள்ளத்தால் வரைந்தெடுப்பார்கள். அவற்றுக்குப் பின் உடலை முழுமை செய்து கொள்வார்கள். தலைதிருப்புகையில் விழிகள் கொள்ளும் கோண மாறுபாடு, விழிகளின் விரைவு, விழிகள் மேலெழுந்து தாழும் வளைவு என பன்னிரண்டு அசைவுகளைக் கொண்டு எதிரில் வருவது எவ்விலங்கு என்று கணித்து அவற்றின் உடலில் எப்பகுதியிலும் அம்பெய்ய அவர்களால் இயலும்.

அக்ஷரூபக் கலையின்படி களத்தில் எதிரிகளின் விழிகளே அசுரர்களுக்கு அனைத்தையும் காட்டித் தந்தன. பகல்போர்களில் முழுக் களமும், எதிரியின் முழுதுடலும் தெரிகையில் அவர்கள் ஆற்றலற்ற போர்வீரர்களாக இருந்தனர். அவ்வுடலில் இலக்கு தேர்வதற்குள் அவர்களின் விழிகள் மலைத்தன. உடல்களுடன்

உடல்கள் பின்னி, காட்சிகள் மேல் காட்சிகள் படிந்து கொந்தளிப்பு கொள்ளும் பெருவெளியில் இலக்கு தெரிவு செய்யத் தெரியாமல் அவர்கள் இழுத்த நாணில் அம்புடன் எப்போதும் தடுமாறினர். “உடல்களை இழுத்துப் பின்னி பாய் முடைந்ததுபோல் உள்ளது இப்போர்க்களம்” என்று இளைய கிராத இளவரசன் கம்றன் சொன்னது அவர்களுக்கிடையே புகழ்பெற்ற வரியாக இருந்தது. உடல்களின் வேர்ப்பின்னல், உடல்களின் முள்வேலி, உடல்களின் இலைத்தழைப்பு என அதை சொல்லிச் சொல்லி பெருக்கிக்கொண்டனர். அவ்வுடல்களை நோக்கி இலக்கின்றி அம்பெய்வதையே எப்போதும் இயற்றி வந்தனர்.

ஆனால் அவர்களை நாடிவந்த ஷத்ரியர்களின் அம்புகள் இலக்கு கொண்டிருந்தன. அவர்கள் அணிந்திருந்த யானைத்தோல் கவசங்களின் இடுக்குகளை, உடலின் நரம்பு முடிச்சுகளை, உயிர்நிலைகளை நாடியே அவை வந்தன. குருதி குடித்து நின்று அதிர்ந்தன. அவர்களை ஷத்ரியர்கள் கலைந்து முட்டிமோதி அதனாலேயே எளிய இலக்குகளென்றாகும் மான்கூட்டங்களும் பறவைத்திரள்களுமென்று எண்ணினர். இரு படையினரும் ஷத்ரியர்களுக்கு முன்னால் இழுத்துவிட வேண்டிய புதர்த் திரைகளாகவோ ஷத்ரிய விசைக்கு எதிரான சகடத் தடைகளாகவோதான் அவர்களை பயன்படுத்தினர். வேல்களாலும் வாள்களாலும் வெட்டிக்குவிக்கப்பட்டு, அம்புகளால் அறைந்து வீழ்த்தப்பட்டு, யானைகளாலும் புரவிகளாலும் மிதிக்கப்பட்டு எவராலும் அறியப்படாதவர்களாக விழுந்து குருக்ஷேத்ரத்தின் பிலங்களுக்குள் மறைவதே அவர்களின் போராக அமைந்திருந்தது. அவர்களைக் கொன்ற ஷத்ரியர்கள்கூட ஒருகணம் ஏறிட்டு தங்கள் இரைகளின் முகத்தை நோக்கவில்லை.

ஆனால் இருளுக்குள் அவர்களுக்கு இலக்குகள் நன்கமைந்தன. “இருள் தேவையற்ற அனைத்தையும் மறைத்துவிட்டது. தேவையானவற்றை மட்டும் தெரிவு செய்துகொள்ள இடமளித்தது. இருளில் நாம் மறைந்துகொள்கிறோம். நம்மை தாக்குபவர்கள் நாம் ஒளியில் தவிப்பதுபோல் இருளில் முட்டித் தவிக்கிறார்கள். நமக்கு இலக்கென்று வெட்டவெளியில் நின்றிருக்கிறார்கள்” என்றார் கிராதர் குலத்தலைவர் சம்புகர். “நம் தெய்வங்கள் அவர்களை ஏற்கெனவே இலக்கு வைத்துவிட்டன. குருதி அளிப்பது மட்டுமே நமது பணி…” அவர்கள் முதல்முறையாக போர்வெறி கொண்டனர். கொல்லுந்தோறும் பெருகும் அவ்வெறியை அவர்களில் பலர் முன்னர் அறிந்திருக்கவில்லை. அவர்களில் பலர் போர்க்களத்தில் நின்று பொருதியதே இல்லை. வேட்டைவிலங்கை கொன்றபின் எழும் துயரம் போர்க்களத்தில் இல்லை என்பதை அவர்கள் கண்டனர். அங்கே உயிர்விடும் விழிகளின் இறுதி ஒளி எழுந்து கொன்றவனின் உள்ளத்தில் கூரின் சுடர் என குடியேறுவதில்லை. அதை அணையச்செய்ய தெய்வங்களை வழிபட்டு எழுப்ப வேண்டியதில்லை.

கிராதர்களும் நிஷாதர்களும் அசுரர்களும் வேட்டைவிலங்குகள் இருளில் தங்களை காணாமலிருக்கும்பொருட்டு விழிகளை கிழே தாழ்த்தி இமைகளை பெரும்பாலும் மூடிக்கொள்ளும் வழக்கம் கொண்டிருந்தனர். அவர்களின் அம்புமுனைகள் கூர்தீட்டப்பட்ட பின்னர் கரி கலந்த அரக்கில் மூழ்க்கி எடுக்கப்பட்டு மின்னிலாதிருந்தன. அவர்களின் விற்களும் கவசங்களும்கூட கரிய அரக்கு பூசப்பட்டிருந்தன. கால்களில் அவர்கள் மரப்பட்டைகளைச் சதைத்து உருவாக்கப்பட்ட மென்மையான குறடுகளை அணிந்திருந்தனர். அவர்களின் விற்கள் நாணொலி எழுப்புவதில்லை. எனவே இருளில்

முற்றாக மறைந்து தடமின்றி எழுந்து வர அவர்களால் இயன்றது. கொன்று மீள்கையில் தாங்கள் வந்ததையும் கொன்றதையும் அவர்கள் மட்டுமே அறிந்தனர்.

மாறாக ஷத்ரியர்கள் மின்னும் கவசங்கள் அணிந்திருந்தனர். ஒலிக்கும் குறடுகளும் சுடர் சூடிய படைக்கல கூர்களும் கவச வளைவுகளும் கொண்டிருந்தனர். அவர்களின் அஞ்சித் திகைத்த விழிகள் வெறித்து “இங்குளோம்! இவ்வாறுள்ளோம்” என்று காட்டின. கிராதர்களும் நிஷாதர்களும் அசுரரும் அரக்கரும் கள்ளிச்செடிகளையும் காட்டுக்கற்றாழைகளையும் என ஷத்ரியர்களை வெட்டி வீழ்த்தினர். “இத்தனை எளிதாக நான் வேட்டையாடியதே இல்லை. விழிகள் ஒளிக்கு மயங்கிய எலிகளைப்போல் அம்புபட்டுச் சாகிறார்கள்” என்று கிராத குல இளவரசனாகிய பூதன் சொன்னான். “நெருங்கி காய்த்து குலை செறிந்து கிளைதாழ்ந்த மாமரக் கிளையில் கல்லெறிவது போலுள்ளது” என்று நகைத்தான் அசுரர்குடி இளவரசனாகிய காமிதன். சுழற்காற்றில் ஆலமரம் காயுதிர்ப்பதுபோல் ஷத்ரியர்கள் குருக்ஷேத்ரக் களமெங்கும் விழுந்தனர்.

அர்ஜுனனும் கர்ணனும் இருபுறத்திலிருந்தும் வழிகாட்டிய படைகள் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொண்டன. அவர்கள் இருவரும் ஒருவரோடொருவர் அம்பு கோத்துப் போரிட அப்போரின் நிழல்பெருகிய வானசைவுபோல பாண்டவ கௌரவப் படைகள் போரிட்டன. அர்ஜுனனின் ஆவத்தூளியிலிருந்து எழும் அம்பின் ஓசையை கர்ணன் கேட்டான். அதற்கு நிகரான அம்பெடுத்து இருளில் வந்த அதன் ஒலிச்சீற்றத்தை இரண்டென முறித்தான். கர்ணனின் நாண் இழுபடும் ஓசையிலேயே அவ்வம்பின் விரைவை அர்ஜுனன் அறிந்தான். முன்னவர்களின் அம்புகள் ஒன்றையொன்று தாக்கி

வீழ்த்த படையினர் எய்த விழியற்ற அம்புப்பெருக்கு அலை எழுந்து அலையை அறைந்து நுரை எழுப்பி சிதறுவதுபோல் படைகளின் தலைக்குமேல் கொந்தளித்தது. அம்புகள் பட்டு அலறிச் சரிந்தவர்களின் உடல்களிலும் குருதிக்குழம்பிலும் பிறர் முட்டித்தடுமாறினார்.

அப்பால் எரிந்த அறிவிப்பு விளக்குகளின் மெல்லிய ஒளியில் அனலென சுடர் கொண்டிருந்தது கர்ணனின் தேர். அவன் நெஞ்சக்கவசம் உருகும் பொன் என நெளிந்தணைவதை, அவன் குண்டலங்கள் இரு விண்மீன் துளிகள் என அசைவதை அர்ஜுனன் ஒருகணம் கண்டான். ஒருவரை ஒருவர் ஓர் அணுவிடையும் குறையாது எதிர்க்கும் அப்போரில் எப்போதுமென இருவரும் பிறராகி நின்று பொருதினர். அம்புகளால் கவ்விக்கொண்டு முடிவிலா சுழலொன்றில் சுற்றிவந்தனர். அந்த அம்புகளில் எழுந்தனர் நீத்தவர்கள், நினைவானவர்கள், நெஞ்சக்கதுப்பில் புதைந்து காத்திருந்தவர்கள். அபிமன்யு அர்ஜுனனின் அம்பில் எழுந்து கர்ணனை நோக்கி சீறிச் சென்றான். அவனை நோக்கி பாய்ந்து வந்தான் ஜயத்ரதன். ஏகலவ்யன் கர்ணனின் அம்பில் முழக்கமிட்டான். அர்ஜுனனில் இருந்து எழுந்து வந்தான் அரவான். பீஷ்மரும் பரசுராமரும் அங்கே போரிட்டனர். பின்னர் காற்றில் எழுந்த குந்தியை ராதை எதிர்கொண்டாள். அவர்களின் வஞ்சம் பிற அனைத்தையும் தன் படைக்கலமாகக் கொண்டு காற்றில் திகழ்ந்தது.

அவ்விரவுப்போர் கடோத்கஜனுக்கு உரியதாக இருந்தது என்று அரவான் சொன்னான். அவனை எதிர்க்க எவராலும் இயலவில்லை. துரோணர் சிலந்திவலையை இருளில்

தொட்டுணர்வதுபோல மெல்ல மெல்ல அவனுடைய தாக்குதலின் சுழிமையத்தை உய்த்துணர முயன்றார். தன் செவிவிழியால் அம்புகள் எங்கிருந்து எங்கு நோக்கி செல்கின்றன என்று கணித்தார். இடும்பர்கள் எத்திசையில் தாவி தாக்கி எவ்வண்ணம் நிலைமீள்கிறார்கள் என்று உணர்ந்து மெல்ல மெல்ல அந்த சுழிமையத்தை நோக்கி தன்னைச் சூழ்ந்திருந்த படைவீரர்களை கொண்டுசென்றார். சல்யரும் அஸ்வத்தாமரும் இருபுறத்திலிருந்தும் அவரை துணைத்தனர். தாக்குதலின் கொண்டாட்டத்திலிருந்த இடும்பர்கள் துரோணரின் பொறி கைகளை விரித்துச் சூழ்வதை உணரவில்லை. கௌரவப் படைவீரர்கள் கடோத்கஜனை அவனறியாமலேயே நெருக்கி ஒற்றைப் புள்ளியை நோக்கி கொண்டுசென்றனர்.

வளைகழை முனையில் எழுந்து வண்டெனத் தெறித்து இருளில் மிதந்து சென்று தூண்டில் முனைபோல் இறங்கி காந்தார தேர்ப்படைகளைத் தாக்கி உடைத்துச் சிதறடித்துவிட்டு துள்ளி இருளினூடாக எழுந்த இடத்திற்கே கடோத்கஜன் வந்திறங்கினான். தேர்மகுடங்களின்மேல் விண்ணிலிருந்து பெரும்பாறைகள் உதிர்வதுபோல் இறங்கி அவ்விசையிலேயே கதைகளால் அடித்து உடைத்து சிதர்களாக தெறிக்கச் செய்து, வில்லேந்திய வீரர்களையும் மழுவும் கதையும் பாசமும் ஏந்திய மல்லர்களையும் தலையுடைத்தும் உடல் சிதைத்தும் கொன்று, என்ன நிகழ்கிறது என்று அவர்கள் உணர்ந்து ஒருங்கிணைத்துக் கொள்வதற்குள் மீண்டும் கழை பற்றி ஏறி தன்னை தெறிக்கச்செய்து மையநிலைக்கே மீண்டு, ஒருவரோடொருவர் ஒலியிலா ஒற்றைச்சொல்லில் மீண்டு வந்ததை அறிவித்து, மறுபடியும் நாற்புறமும் தங்களை எய்துகொண்டனர் இடும்பர்.

பொறிகளை சிதறடித்தபடி சுழன்று செல்லும் அனலுருளை போலிருந்தது அவர்களின் வட்டம். அதன் மையத்தில் கடோத்கஜன் வந்திறங்கி நிலைகொண்டதும் எட்டுத் திசையிலிருந்தும் இடும்பர்கள் மீண்டு வந்து அங்கு தங்கள் உடல்களைப் பொழிந்துகொண்டு வளையமாயினர். “எவரும் இழப்பில்லை! செல்க!” என்று கடோத்கஜன் சொன்னதும் அவர்கள் மீண்டும் இருளில் எழுந்தனர். கடோத்கஜன் கழைவளைக்கவிருந்த கணத்தில் அங்கே துரோணர் தன் படைகளுடன் தோன்றினார். போர்க்கூச்சலிட்டபடி அசுரர்களால் நடத்தப்பட்ட கௌரவப் படைகள் அம்மையத்தை முழுமையாக சூழ்ந்துகொண்டன. “இலக்கு நோக்க வேண்டியதில்லை! இடைவெளியில்லாமல் அம்புகளால் அறையுங்கள்! விண்ணை நோக்க வேண்டாம்! விண் அவர்களின் மாயவெளி என்று உணர்க! அம்மையத்தின் மண்நிலையிலேயே அறைக! ஒருமுறையேனும் அம்மையத்தில் காலூன்றாமல் அவர்களால் எழ இயலாது” என்று துரோணர் கூவினார்.

பாஞ்சாலர்களும் விராடர்களும் இந்திரப்பிரஸ்தத்தின் வீரர்களும் பாண்டவப் படையின் முகப்பில் அரைவட்டமெனத் திரண்டு இருமுனைகளும் அகன்று துரோணரின் சூழ்கையை எதிர்த்து அது முழு வளையம் என்று ஆகாமல் தடுத்தனர். காந்தாரர்களும் உத்தரபாஞ்சாலர்களும் சைந்தவர்களும் கேகயர்களும் மகதர்களும் கோசலர்களும் கலிங்கர்களும் அங்கர்களும் வங்கர்களும் அடங்கிய கௌரவப் படை சீற்றத்துடன் அவர்களை அம்புகளால் அறைந்து விரித்து இடும்பர்களை முற்றாக வளைக்க முயன்றது. எழுந்து சென்ற அதே விசையில் மீண்டும் அங்கே வந்தாகவேண்டும் என்ற வடிவ ஒழுங்கு இடும்பர்களுக்கு எதிரியாக அமைந்தது. சுழன்றறைந்து குருதி சூடிய உடம்புடன் இருளிலெழுந்து

அவர்கள் சீறிப் பாய்ந்த அம்புகளால் நிறைந்திருந்த அந்தச் சுழிமையத்திற்குள்ளேயே வந்து விழுந்தனர். உடம்பெங்கும் அம்புகள் தைக்க அலறியபடி ஒருவர் மேல் ஒருவர் உதிர்ந்தனர்.

அவர்கள் மேல் வந்திறங்கிய கடோத்கஜனின் உடலில் துரோணரின் பதினெட்டு அம்புகள் வந்து தைத்தன. பேரெடை கொண்ட தன் உடல் மண்ணில் அறைந்து விழுந்ததுமே நிகழ்வதென்ன என்று அவன் தெரிந்துகொண்டான். நாணொலிக்க வில்நின்று வெறியாட்டுகொள்ள விழிகூட அசையாமல் கைமட்டும் சுழல போரிட்டுக்கொண்டிருந்த துரோணரை தொலைவிலேயே அவன் கண்டான். தன் பாசக்கொடியை துரோணரின் தேர் மேல் ஏவி அதனூடாக பறந்தெழுந்து சிலந்தியென அவர் தேர் மேல் இறங்கினான். தன் கதையால் துரோணரின் தேர்ப்பாகனின் தலையறைந்து கொன்றான். இன்னொரு அறையால் தலைகாக்க வளைந்தொழிந்த துரோணரின் தேர்த்தூணை உடைத்தான். மீண்டும் அவனுடைய கதை சுழன்று வருவதற்குள் துரோணர் தேர்த்தட்டிலிருந்து பின்னால் தாவி இறங்கி தன் வில்லுடன் ஓடி அங்கு ஊர்பவன் விழ தயங்கிச் சுழன்றுகொண்டிருந்த புரவியொன்றின்மேல் ஏறிக்கொண்டார். கடோத்கஜன் காற்றில் தாவி எழுந்து விழுந்துகிடந்த தேர்களினூடாக நிலையழிந்து கனைத்துச்சுழன்ற குதிரைகளின் மீதாக பாய்ந்து சென்று துரோணரை தாக்கினான்.

கடோத்கஜனின் கதையின் வீச்சை தவிர்க்க அம்புகளால் தொடர்ந்து அறைந்தபடி துரோணர் கௌரவப் படைகளுக்குள் பின்வாங்கிச் சென்றார். கடோத்கஜனின் கதை அவன் கையிலிருந்து நெடுந்தொலைவுக்கு எழுந்து வந்து அறைந்து

மீண்டது. நின்ற இடத்திலேயே கரைந்து எதிர்ப்புறத்தில் அவன் தோன்றினான். அவன் அறைகள் ஒவ்வொன்றும் சூழ்ந்திருந்தோர் காதுமடல்களை குளிரச்செய்யும் காற்றுவிசை கொண்டிருந்தன. துரோணர் புரவியிலேயே துள்ளி அகன்று அவன் கதை விசையைத் தவிர்க்க அந்த அறைகள் கௌரவர்களின் தேர்கள் மீதும் யானைகள் மீதும் புரவிகள் மீதும் பட்டு குருதி சிதறச்செய்தன. துரோணர் வெம்மைகொண்ட குருதிமழையில் நனைந்தார். இரவுக்காற்றில் குருதி குளிர நடுக்கு கொண்டார். அரக்கனின் விழிமின்களை அருகிலெனக் கண்டார். அம்பை எடுப்பதற்குள் அவை இரு மின்மினிகளென்றாகி அகல்வதை உணர்ந்தார்.

துரோணரின் புரவியின் மேல் கடோத்கஜனின் அடி விழ அது அலறவும் வாயிலாது தெறித்து அப்பால் விழுந்தது. அதற்கு அடியில் அவர் உடல் சிக்கிக்கொண்டது. கையூன்றி அவர் எழுவதற்குள் விண்ணிலிருந்து பாய்ந்து அவர் மேல் இறங்கினான் கடோத்கஜன். துரோணர் வானிலென அவன் முகத்தை கண்டார். அவன் கதாயுதத்தைச் சுழற்றி அவர் தலையை அறைந்துடைக்க முயன்றபோது இருளுக்குள் பாய்ந்து வந்த அலாயுதன் கடோத்கஜனை தன் கதாயுதத்தால் அறைந்து அப்பால் வீழ்த்தினான். இரு அரக்கர்களும் பேரொலியுடன் தங்கள் கதைகளை வீசி ஒருவரை ஒருவர் தாக்கிக்கொண்டனர். பொறி தெறிக்க மோதிச் சுழன்றெழுந்து மீண்டும் அறைந்தனர். உறுமல்களும், பெருமூச்சொலிகளும், பற்களைக் கடிக்கும் ஓசையும், தொடையிலறைந்து வஞ்சினம் காட்டும் ஓசையும் எழ அரக்கர்கள் இருவரும் மண்ணிலும் விண்ணிலுமென பொருதினர். இருளை மிதித்துத் தாவி விண்ணிலெழுந்து அங்கேயே அறைந்துகொண்டனர். மலையிலிருந்து பாறைகள் உதிர்வதுபோல் நிலத்தில் விழுந்து

சுழன்றெழுந்து மீண்டும் அறைந்தனர். நிகர்வீரர் போர்புரிவதைக் காண எழும் தெய்வங்கள் ஒவ்வொருவராக விண்ணில் தோன்றலாயினர்.

# கார்கடல் - 63

பார்பாரிகன் சொன்னான்: அலாயுதன் இடும்பர்கள் விண்ணிலிருந்து விழுந்தெழுந்து தாக்குவதை கண்டான். அவனுடைய படைவீரர்கள் ஆணையிடாமலேயே தங்கள் நீண்ட வேல்களை மேல்நோக்கி கூர் நின்றிருக்க பிடித்து கீழே விழும் இடும்பர்களுக்கு நேராகக் காட்டி அவர்களை குத்திப் புரட்டி குருதிக்கலத்திற்குள் உள்தசைகள் உடைந்து சிக்க சுழற்றி பிழுதெடுத்து வெங்குருதியுடன் தூக்கி ஆட்டினர். குருதி தங்கள் உடலில் சிந்த நடனமாடினர். களத்திற்கு வந்த அப்பதினான்கு நாட்களில் அவர்கள் முதல்முறையாக போரில் ஈடுபட்டனர். போரிடுபவனின் தனிப்பட்ட வஞ்சத்தை, அச்சத்தை, களிப்பை மீறி எழும் ஒற்றைப்பேருணர்வொன்றை முதல்முறையாக அறிந்தனர். அனைத்துப் போர்களையும் நிகழ்த்துவது அதுவே என்றும், மொழியிலும் கனவிலும் புகுந்துகொண்டு போரை ஆழத்தில் அழியாது வாழச்செய்வதும் அதுவே என்றும் அவர்கள் அறிந்தனர்.

அவனுடன் வந்த பன்னிரண்டாயிரம் படைவீரர்களில் எண்ணூறுபேர்தான் அப்போது உயிருடன் எஞ்சியிருந்தனர். அவர்களை எட்டு குழுக்களாகப் பிரித்து எட்டு ஷத்ரியப் படையினருக்கு வழிகாட்டுக்குழுக்களாக அனுப்ப சகுனி ஆணையிட்டிருந்தார். ஷத்ரியப் படைகள் நடுவே ஒளியாலான தொடர்புவலை இருந்தது. அசுரரும் அரக்கரும் தங்கள்

செவிகளுக்கு மட்டுமே பொருளென்றாகும் குறுமுழவொலிகளையும் சிற்றூதல் ஒலிகளையும் கொண்டிருந்தனர். அலாயுதனின் குடி உதட்டைக் குவித்து மெல்லிய சீழ்க்கை ஒன்றை எழுப்பி ஒருவரோடொருவர் தொடர்பு கொண்டது. அமைதியான அடர்காட்டில் வேட்டையாடுகையில்கூட அந்த ஓசை விலங்குகளை எச்சரிக்கை கொள்ளச் செய்வதில்லை. அதை பிறர் கேட்டால் சீவிடின் ஒலி சற்று சுதிகூடி எழுவதாகவே எண்ணுவார்கள். அவர்களின் குடியில் பிறந்து வளர்ந்து பிற குடிகளுடன் உரையாடலே இன்றி வாழ்பவர்களுக்கு மட்டுமே அது மொழியென்றாகியது.

அலாயுதனின் படைவீரர்கள் அனைவருமே வாய் குவித்து ஒலி எழுப்பியபடியேதான் போரிட்டனர். மிக அருகே கேட்கும் ஒலியுடன் தங்கள் ஒலியை அவர்கள் இணைத்துக்கொண்டனர். இணைந்து இணைந்து அவ்வோசை அங்கிருக்கும் அவர்களின் குடியை முழுமையாக ஒன்றாக்கி எழுந்தது. அதற்குள் ஒவ்வொருவரின் தனிக் குரலும் இணைந்தது. ஆனால் அவர்கள் அனைவருக்கும் மேலே எழுந்து தெய்வ ஆணை என அது அவர்களை ஆட்சி செய்தது. அந்தப் பொது ஒலியை உண்மையில் எழுப்புவது யார் என அவர்கள் அறிந்திருக்கவில்லை. அவர்கள் அது மண்மறைந்த மூதாதையர் வாழும் உலகிலிருந்து எழுவதாக நம்பினர். அவர்கள் எவரிடமும் இல்லாத பேரறிவும் நுண்நோக்கும் கொண்டிருந்தது அது. அவர்கள் ஒவ்வொருவரையும் நன்கறிந்துமிருந்தது.

களத்தில் அது எழுவதற்கு சற்று பிந்தும். தலைவனின் ஓசையே முதலில் எழும். பின்னர் அதனுடன் பிறருடைய

ஓசைகள் இணைந்துகொள்ளும். ஒவ்வொரு ஓசையும் முந்தைய ஓசையுடன் சற்றே விலக்கம் கொண்டிருக்கும். சேக்கேறுவதற்கு முன்னர் வானில் கலைந்து அலையும் பறவைகள்போல் அவ்வோசைகள் பூசலிடும். பின்னர் ஒரு கணத்தில் அனைத்து ஓசைகளும் ஒத்திசைந்து அந்த முழுமையோசை எழத் தொடங்கும். அது அத்தலைவனாலும் ஆள முடியாததாக, அங்கிருக்கும் எதனாலும் திசைதிருப்பவியலாததாக இருக்கும். அது எழுந்த பின்னர் அவர்கள் அதை தனித்தறிவதில்லை. ஏனென்றால் அப்போது அவர்கள் எவருக்கும் தனியுள்ளம் இருப்பதில்லை. வேட்டையோ போரோ முடிந்த பின் விண்ணில் தூக்கிச் சுழற்றிய சுழல்காற்று ஒன்றிலிருந்து விழுவதுபோல் ஒவ்வொருவராக அதிலிருந்து பிரிந்து மீண்ட பின்னர் நினைவிலிருந்து அதை மீட்டு எடுப்பார்கள். அப்போது நிகழ்ந்ததென்ன என்றோ எவ்வாறு நிகழ்ந்தது என்றோ அவர்களால் அறியமுடியாது. அது நிகழ்ந்தது என்று மட்டுமே அவர்கள் அறிந்திருப்பார்கள்.

குருக்ஷேத்ரப் போர்க்களத்தில் வந்த நாளில் அவர்கள் அந்த ஒலியை எழுப்ப முயன்றனர். அவர்கள் அதற்கு முன்பு அடர்காட்டுக்கு வெளியே போரிட்டதில்லை. போர் தொடங்கிய முதற்கணம் எழுந்த பெருமுழக்கம் புயல் வந்து புழுதியை அள்ளிச்செல்வதுபோல தங்கள் மொழியை கொண்டுசெல்வதையே கண்டனர். போரில் அவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாகவே நின்றனர். மூக்குத்திறனை இழந்துவிட்ட வேட்டைநாய்களைப்போல் முட்டிமோதித் தடுமாறினர். பின்னடைய இயலாமல் பின்னிருந்து வந்துகொண்டே இருந்த படைகளால் அவர்கள் களமையத்தின் அம்புப்பெருக்கை நோக்கி கொண்டுசெல்லப்பட்டார்கள்.

அம்புகள் பாய்ந்து ஒருவர்மேல் ஒருவரென விழுந்து தேர்ச்சகடங்களாலும் யானைக்கால்களாலும் அரைக்கப்பட்டு உடற்குவியலாக ஆனார்கள். அவர்களை பெரிய மூங்கில்கழைகளால் உந்தி களத்திலிருந்து பெயர்த்து உருட்டி ஒற்றைக் குவியலென எடுத்து வண்டிகளில் இட்டு தசைக்குப்பையாக பிலங்களுக்குள் போட்டனர் சுடலைக்காரர்கள்.

ஒவ்வொருநாளும் களத்தில் எஞ்சியவர்கள் எவ்வகையிலேனும் படைப்பின்னணியில் நின்றுவிட்டவர்களே. ஆகவே ஒவ்வொருமுறையும் அவர்கள் போர்முனையில் என்ன நிகழுமென்று அறியாமலேயே களத்திற்கு வந்தனர். தங்கள் திரள் குறைந்து மறைந்துகொண்டிருப்பதை அவர்கள் உணர்ந்தனர். அதைப்பற்றிப் பேசுவதற்கு அஞ்சினர். இரவுகளில் இருள் வந்து சூழ்ந்துகொள்ளும்போது மெல்லிய ஓசையாக இறந்தவர்கள் எழுந்து வந்து அவர்களருகே நின்றிருந்தனர். மெல்லிய வெம்மையாக, மூச்சுக்காற்றின் தொடுகையாக அவர்களை உணர்ந்தனர். அவர்களின் விழிகள் இருளுக்குள் மின்மினிகளாக செறிந்திருந்தன. துயில்கொண்டால் கனவில் அவர்கள் உடல்சூடி அருகணைந்து சொல்லாடினர். அப்போது அவர்களின் நிலத்தில் நீலமலைகளுக்கு அடியில் ஓசையிடும் மலையாறுகளின் கரையில் பசுங்காடு சூழ்ந்திருக்க அவர்கள் அமர்ந்திருந்தனர்.

அன்றிரவு அவர்கள் படைமுகப்புக்கு வருவது வரை அச்சமும் தயக்கமும்தான் கொண்டிருந்தார்கள். அலாயுதனின் கூரிய ஓசையை முதலில் கேட்ட படைவீரர்கள் கடுங்குளிர் கொண்ட மலைக்காற்று வந்து அணைத்துக்கொண்டதுபோல மெய்ப்பு கொண்டனர். அவர்களை அறியாமல் அவர்களுக்குள் இருந்து

எழுந்த சீழ்க்கையோசையை கேட்டு அச்சமும் கிளர்ச்சியும் அடைந்தனர். பின்னர் தங்கள் ஒலிகளால் பெருக்கொன்றை உருவாக்கி அதில் தாங்களும் ஒழுகினர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் தனி எண்ணமும் இலக்கும் களிப்பும் இருந்தது. ஆழத்தில் அவர்கள் ஒன்றென்று இணைந்தும் இருந்தனர். இடும்பர்களின் வேல்களால் குத்தப்பட்டோ கதைகளால் அறையப்பட்டோ அவர்கள் உயிர்விடுகையில் அக்கணத்திற்கு முன் அந்தப் பெரும்பெருக்கிலிருந்து அவர்கள் உதிர்ந்திருந்தனர். ஆகவே இறப்பவர்களை அப்பெருக்கு அறியவே இல்லை. நீரள்ளிய பள்ளம் நிறைவதென அவர்களின் இடத்தை அப்பெருக்கு அக்கணமே நிரப்பிக்கொண்டது.

போர் விசைகொண்ட சற்றுநேரத்திலேயே இடும்பர்களை வெல்ல அரக்கர்களால் மட்டுமே இயலும் என்று உணர்ந்துகொண்ட சகுனி நேரடியாக அலாயுதனிடமும் அலம்புஷரிடமும் ஆணையிட்டு அவர்களை மேலும் மேலும் முன்னே செலுத்தினார். கௌரவப் படையின் வலது எல்லையில் கர்ணன் போரிட்டுக்கொண்டிருக்க அவனைச் சூழ்ந்து சென்ற படைகளில் இருந்து மேலெழுந்துசென்ற அலம்புஷர் படைகள் இடும்பர்களை முழுமையாகவே தடுத்து நிறுத்திவிட்டன. இடது எல்லையில் துரோணரால் இடும்பர்களை எதிர்கொள்ள இயலவில்லை. சகுனி “இடது எல்லைக்குச் செல்க! இடும்பர்களை எதிர்கொள்க!” என்று அலாயுதனுக்கு ஆணையிட்டார். அலாயுதன் தன் படைகளுடன் துரியோதனனும் அஸ்வத்தாமனும் போரிட்டுக்கொண்டிருந்த படைமையத்திலிருந்து இடது எல்லை நோக்கி சென்றான்.

இடும்பர்களை விண்ணிலேயே அலாயுதனின் குலத்து அரக்கர்கள் கண்டுகொண்டார்கள். அவர்கள் இருளில் மறைந்த

பின்னரும் எஞ்சும் இருட்தடமும் அவர்களே என்று உணர்ந்திருந்தமையே அவர்களின் வெற்றியை அமைத்தது. அத்தடங்களை வேலாலும் வாளாலும் தாக்கினால் அந்த இடும்பன் அலறி அப்பால் விழுவதை அவர்கள் கண்டனர். அவர்கள் அங்கே களத்திற்கு வந்தபின்னர்தான் பிற மக்களை அணுக்கமாக கண்டு அறிந்தனர். ஷத்ரியர்கள் தங்களை ஒரு பொருட்டென எண்ணவில்லை என்பதை முதல்நாளிலேயே அறிந்தனர். ஒவ்வொருவரிடமும் ஒரு ஷத்ரியனாவது ஒருமுறையாவது "என்றேனும் ஒருநாள் உங்களை நாங்கள் போரில் கொல்வோம்" என்று சொல்லாமல் இருந்ததுமில்லை. அவர்கள் அனைவருக்குமே ஷத்ரியர்கள்மேல் ஒவ்வாமை எழுந்து வெறுப்பு என திரண்டிருந்தது. போரில் ஒரு ஷத்ரியன் விழக்கண்டால் அவர்களின் உள்ளம் மகிழ்ந்தது. ஒரு ஷத்ரியனை தங்கள் படைக்கலத்தால் வீழ்த்தினால் உவகைகொண்டாடினர். அன்றைய போர் தொடங்கியதுமே அவர்கள் எலிகளை வேட்டையாடுவதுபோல் ஷத்ரியர்களைக் கொன்று மகிழ்ந்தாடினர். ஆனால் மிக விரைவிலேயே அது அவர்களுக்கு சலிப்பூட்டியது. இடும்பர்களை எதிர்கொண்டபோதே அவர்கள் தங்களுக்குள் நிறைவை அடைந்தனர்.

இடும்பர்கள் தாங்களே என அவர்களின் அகம் அறிந்தது. தங்களுக்குத் தாங்களே போரிடுகையில் மட்டுமே போருக்குரிய தெய்வங்கள் மகிழ்கின்றன என உணர்ந்தனர். விண்ணில் இருள் முகில்த்து எழும் இடும்பன் ஒருவனைக் கண்டு தங்கள் நீள்கழியில் பாய்ந்தெழுந்து இருள்நிறைந்த வெளியில் அவனை சந்தித்து படைக்கலம் முட்டிக்கொண்டு போரிட்டு இறங்கி சுழன்று எழுந்து அறைந்து விழுந்து மீள எழுந்து பொருதி வென்று எழுகையில் அவர்களுக்குள் இருந்து மூதாதையர்

கொப்பளித்தனர். இடும்பர்களும் அவர்களையே நாடிவந்தனர். மிக விரைவிலேயே அக்களத்தில் போர் அரக்கர்களுக்குள் மட்டுமே நிகழ்வதென ஆகியது.

கடோத்கஜனுடன் கதைமுட்டிக்கொண்டு துள்ளி விலகி கொம்புநீட்டிச் சுற்றிவரும் காட்டெருமைகள்போல் சுழன்று வந்துகொண்டிருந்த அலாயுதன் மறுபக்கம் தன்னை நோக்கியபடி சுழன்றுவருவதும் தானே என்றுணர்ந்தான். அந்தக் காலடிகள், அந்தக் கையசைவு, அந்தக் கூர்நோக்கு அவனுடையதே. அவன் பாய்ந்த அக்கணமே கடோத்கஜனும் பாய இருவரும் இருளில் மிதித்து ஏறி விண்மீன் பெருகிக்கிடந்த கரிய வானில் சந்தித்துக்கொண்டனர். கதை தெறிக்க அறைந்து மூச்சொலியுடன் இறங்கி அக்கணமே மீண்டும் இருளில் ஏறினர். அறைதலும் தடுத்தலும் ஒன்றேயான சுழற்சி. கதைகள் முட்டிக்கொள்கையில் இருளில் பரவிய அதிர்வு யானைகளை விழிசுருங்கச் செய்தது. கடோத்கஜன் ஏழுமுறை பாய்ந்துவந்து அலாயுதனை அறைந்தான். ஏழு அறைகளும் ஏழு அறைகளால் நிறுத்தப்பட விண்ணுக்கும் மண்ணுக்கும் தாவி இறங்கிச் சுழன்றான். மேலும் மேலுமென விசைதிரட்டி இருவரும் அறைந்துகொண்டனர். பதினேழு அறைகள் ஒற்றை காலப்புள்ளியின் திகைப்பு மட்டுமே என்றான பின்னர் பதினெட்டாவது புள்ளியில் அவர்கள் காட்டில் ஓர் ஓடைக்கரையில் சந்தித்துக்கொண்டார்கள்.

கடோத்கஜன் அலாயுதனை தோளைப்பற்றி அழைத்துச்சென்றான். அவர்களின் காலடியில் ஓடை ஓசையிலாது பெருகி மிக ஆழத்தில் அருவியென விழுந்தது. அது புகையென மாறிச் சென்றடைந்த பரப்பு பச்சைநிறம்

செறிந்து நீலம்கொண்டதாக, முகில்புகை மூடியதாக அலைகளில்லாத நிகர்வெளியாக தொடுவான் வில் வரை நிரம்பியிருந்தது. “இளையோனே, நீ எவருக்காக போரிடுகிறாய்?” என்று கடோத்கஜன் கேட்டான். “என் குடித்தலைவனைக் கொன்றவனுக்கு எதிராக. நம் குருதி மூத்தோனின் பழியை ஈடுசெய்ய” என்று அலாயுதன் சொன்னான். கடோத்கஜன் “நாம் ஏன் இப்படி வஞ்சங்களால் அலைக்கழிக்கப்படுகிறோம்? அன்பின் பொருட்டு நாம் ஏன் போரிடுவதில்லை? இளையோனே, உலகப்பற்றின்பொருட்டு போரிட்டால்கூட அதுவும் நன்றல்லவா? நாம் வஞ்சம் சூட பழி தேடி அலைகிறோமா? அகழ்ந்து அகழ்ந்து சினங்களைத் தேடிச்சேர்த்துக் கொள்கிறோமா?” என்றான்.

அவன் கையை உதறி விலகி “நீங்கள் எதற்காகப் போரிடுகிறீர்கள், மூத்தவரே?” என்றான் அலாயுதன். “நீ வஞ்சம்கொண்டிருப்பவர் என் தந்தை. அவருக்காக பொருதிக் காத்துநின்றிருப்பது என் கடன். அவர்மீது நான் கொண்டுள்ள பேரன்பின்பொருட்டே களம்நிற்கிறேன்” என்று கடோத்கஜன் கூறினான். அலாயுதன் சினத்துடன் “அரக்கருக்கு மானுடர் தந்தையல்ல. இப்புவியாளும் பெற்றிகொண்ட அரக்கர்கள் மானுடரால் வஞ்சத்தால் வீழ்த்தப்பட்டவர்கள். அறிக, ஒருநாள் இப்புவிமேல் அரக்கர்களின் அரசு எழும்! அன்று பிரகலாதனும் விபீஷணனும்போல நீங்களும் குலவஞ்சகன் என்றும், நெறிபிழைத்து மூதாதையரின் பழி கொண்டவன் என்றும் அறியப்படுவீர்கள்” என்று சொன்னான். “ராகவராமனை வணங்கி அவன் ஆற்றலை துணைகொண்டதனால் வாழ்ந்தது அரக்கர்குலம். அவன் வாழ்த்துபெற்று பெருகியது வானரர்குடி. அவர்கள் அழிந்தது தங்களுக்குள் பூசலிட்டும் பகைமைகளை புளிக்கப் புளிக்கப் பெருக்கி நஞ்சாக்கி

உளம்நிறைத்துக்கொண்டும். தலைமுறைகளாக நிகழ்ந்த குலப்போரில் அழிந்தவர் நாம்” என்றான் கடோத்கஜன்.

“அடிபணிந்து ஆற்றல்பெறும் நிலையில் இல்லை அரக்கர். அவர்கள் இந்தத் தொல்பாறைகளைப்போல என்றுமிருப்பவர்கள். இப்புவி சுழல்காற்றில் சுருண்டு எழுந்து பறக்காமலிருக்க தெய்வங்கள் வைத்த எடை அவர்கள். முகில்கள் பாறைகளை மூடக்கூடும். நூறுமடங்கு பெரிதெனக் காட்டி விழிமலைக்கச் செய்யவும்கூடும். மூத்தவரே, பாறைகள் முகில்களால் கரைக்கப்படுவதில்லை” என்றான் அலாயுதன். “இனி அந்த மூதன்னைக்கதைகள் இங்கு வாழாது என்றறிக! தன்னிழிவை தற்பெருமையால் மறைத்துக்கொண்டு கதைகளில் வாழும் வாழ்க்கையிலிருந்து வெளியேறுக! இனியேனும் அரசியலை அறிந்துகொள்க!” என்று கடோத்கஜன் சொன்னான். “இனி ஒருபோதும் அரக்கர்கள் பிறரில்லாத நிலத்தை ஆளமாட்டார்கள். இனி எந்நிலமும் எவருக்கும் முழுதுரிமையாக இருக்காது. அதை அறிவுளோர் அறிந்துகொண்டுவிட்டனர். அந்த மெய்யை அறிந்தோருக்கும் அறியாதோருக்கும் இடையே நிகழ்வது இப்போர்.”

“எங்கள் மண், எங்கள் குருதி, அது எந்நிலையிலும் அழியாதது, எதையும் கடந்து ஓங்குவது. என் முன்னோரின் சொற்கள் அதை எனக்கு கற்பித்தன. என்றும் என் உள்ளம் அதிலிருந்து விலகாது” என்றான் அலாயுதன். அவன் தோளை கைநீட்டி தொடவந்த கடோத்கஜனை அவன் விலக்கி பின்னகர்ந்தான். கை நீண்டு நிற்க கடோத்கஜன் சொன்னான் “நான் கூறுவதை சற்றேனும் உளம்கொள்க! ஷத்ரியராயினும் அரக்கராயினும் அசுரரும் கிராதருமாயினும் பிறரைக் கலந்து அனைத்துத் திறன்களையும் உள்ளிழுத்துக்கொண்டு வேர்பரவி எழுபவர்களே

இனி கிளைவிரித்து உலகாள்வார்கள். எத்துணை ஆற்றல்கொண்டவர் எனினும் தனித்தமைவோர் அழிவையே சென்றடைவார்கள். இதோ தங்கள் தூயகுருதியின்பொருட்டு படைகொண்டெழுந்திருக்கும் இவர்கள் வெறும் பெயரென, நினைவென எஞ்சும் காலம் அணுகிக்கொண்டிருக்கிறது.”

சீற்றத்துடன் அலாயுதன் கைநீட்டியபடி முன்னகர்ந்தான். “நான் உங்கள் நெஞ்சுநோக்கிக் கேட்கிறேன், நீங்கள் எவருக்காக படைகொண்டு வந்திருக்கிறீர்கள்? நீங்கள் வந்திருப்பது இப்புவி முழுதாளும் வேட்கைகொண்ட யாதவர்களின் பொருட்டுதானே? ஷத்ரியர்களை வெல்ல யாதவர்களை துணைப்பதுதான் உங்கள் கடனா?” என்றான். “நீ எதன்பொருட்டு வந்தாலும் போரிடுவது ஷத்ரியர்களுக்காக. உன்னால் அவர்கள் வென்றால் இங்கு காட்டெரிபோல் பரவி மண்ணை கைப்பற்றி முழுதாள்வார்கள். அவர்களின் படைக்கலங்களால் அரக்கர்குலம் முற்றழியும். அரக்கர்களின் தொல்நிலங்கள் உருவழிந்து அவர்களின் நாடுகளென்றாகும். என் தந்தையும் அவரை ஆளும் மெய்யாசிரியனும் வென்றால் அரக்கர்களும் பிறரும் கலந்து ஒன்றென்றாகி இங்கு பொலிவார்கள். யாதவர் நிலமாள முடியும் என்னும் நெறியெழுந்தால் நாளை அரக்கரோ அசுரரோ நாடாள்வதும் அந்நெறியால் இயல்வதாகும். அந்நெறிக்கு எதிராக படைக்கலம் தூக்கியவர்களை காக்க நீ நின்றிருக்கிறாய்.”

“அறிக, அரக்கர் குருதி மானுடர் குருதியுடன் கலக்கத் தொடங்கிவிட்டது! இனி மானுடர்களில் அரக்கர் எழுவார்கள். அரக்கர்களில் மானுடம் திகழும். வெற்றிகொள்வீரன் நீ. எழும் ஒரு புது உலகுக்காக வருக! உன் வீரத்தை நாளை முளைத்தெழும் நம் குடிகள் புகழ்ந்து பாடுவார்கள்.

அறியாமையால் பிழை இயற்றாதொழிக!” என்றான் கடோத்கஜன். ஒரு கணத்தில் சினம் எரிந்தேற அலாயுதன் ஓங்கி கடோத்கஜனின் முகத்தில் துப்பினான். “அறிவிலி நீ. பெருவஞ்சகன் ஒருவனின் படைக்கலம் என ஆனவன்” என்று கூவினான். “நீயே என் முதல் எதிரி. உனைக் கொன்று உன் உடல்மேல் எழுந்து நின்று மூதாதையரை நோக்கி கூவுவேன், எந்தையரே, நீங்கள் விரும்பும் குருதிப்பலி இது, கொள்க என்று…”

கடோத்கஜன் தன் முகத்தை துடைத்தபடி கசப்பு நிறைந்த சிரிப்புடன் “இது சென்றகாலப் போர். இரணியனுக்கும் பிரகலாதனுக்கும், விபீஷணனுக்கும் கும்பகர்ணனுக்கும், வாலிக்கும் சுக்ரீவனுக்கும் இடையே நிகழ்ந்தது. இன்று அது முடிவடையப்போகிறது” என்றான். “நம்மால் எளிய காலவட்டத்திற்கப்பால் நோக்க இயல்வதில்லை. நம் தந்தையர் சொன்னவற்றையே மீள நாமும் சொல்கிறோம். காலம் கடந்து நோக்கும் விழிகொண்டவன் ஒருவனின் அடிபணிந்து அவன் சொல்லை ஏற்பதொன்றே நாம் இயற்றக்கூடும் நன்று. தந்தையர் சொல் மெய்மை, ஆனால் அதுவே முழு மெய்மை அல்ல. ஏற்பதற்கு நிகராகவே உடைத்தெழுவதும் நிகழும் குடிகளே வென்று இங்கு வாழ்கின்றன. நோக்குக, இதோ இப்பால் சம்பராசுரரின் குடியும் பாணாசுரரின் குடியும் படைகொண்டு நின்றிருக்கிறார்கள்! நிஷாதரும் கிராதரும் படைகொண்டு போரிடுகிறார்கள். எது அவர்களை இணைக்கிறதோ அது மேலும் ஆற்றல்பெற்றெழும். காலம்கடந்த நோக்கை பீலிவிழி எனச் சூடியவனின் அழியாச் சொல்.”

“செல்க… என் முன்னாலிருந்து செல்க… நான் பாய்ந்து உன் குருதிகுடிக்க முற்படுவதற்கு முன் அகல்க!” என்றான் கடோத்கஜன். “உன் தோற்றம் என் உள்ளத்தை உருக்குகிறது. என் உடன்பிறந்தான் நீ எனக் காட்டுகின்றன உன் தோள்கள். உன் விழிகள் எனக்கு என் மைந்தரை காட்டுகின்றன. இக்களத்தில் உன்னைக் கொன்றால் இதன் பொருட்டு ஏழு பிறப்பிலும் நான் துயருறுவேன். புரிந்துகொள்க, இப்போர் நமக்குள் நிகழலாகாது! இது ஷத்ரியர்களின் மாறாமைக்கும் எழுயுகத்தின் மாறும் தன்மைக்குமிடையே நிகழ்வது. அழியாச் சொல்லிலிருந்து அறச் சொல்லொன்று பிறக்கும்பொருட்டு நிகழ்வது. நாம் அதன் அறுவடையை கொய்பவர்கள் மட்டுமென நின்றிருப்போம்” என்று கடோத்கஜன் சொன்னான். “இழிமகனே!” என்று கூவியபடி பாய்ந்த அலாயுதன் கடோத்கஜனின் நெஞ்சில் எட்டி மிதித்தான்.

ஒரு கணத்திற்குள் அவ்வுரையாடல் நிகழ்ந்து முடிய இருவரும் கதைகளால் ஒருவரை ஒருவர் தாக்கிக்கொண்டு சுழன்றனர். அவர்களின் போரைக் காண வந்தமைந்தன போர்த்தெய்வங்கள். மத்தகங்களை ஆளும் கஜன், எருதுக்கொம்புகளில் குடியிருக்கும் ரிஷபன், மான்நெற்றிகளில் வாழும் மிருகன், முதலைவாலில் எழும் மகரன், துதிக்கைகளின் ஆற்றலான கரன், கரடிக்கைகளில் குடியிருக்கும் ஜாம்பன், குரங்குக்கால்களின் தெய்வமான மர்க்கடன், மலைப்பாம்புகளை கைகளாகக் கொண்ட பன்னகன். குரங்குப்பிடியை உடைத்தெழுந்தது எருது. முட்டி அதிர்ந்து பின்னடைந்து மீண்டும் பாய்ந்தன மத்தகங்கள். இறுகப்பற்றிய கரடியை வாலால் அறைந்து தூக்கி வீசியது முதலை. மான்கள் அறைந்துகொண்ட ஓசையில் காடு விதிர்த்தது. தழுவிப்

போரிட்டன துதிக்கைகள். ஒன்றென்றே ஆகி முறுகி நிலத்திலுருண்டன மலையரவுகள்.

இருவர் கதைகளும் தெறித்து அப்பால் சென்று விழ விலகி நிலத்தில் அறைந்து போர்க்கூச்சல் எழுப்பியபடி எழுந்து நெஞ்சில் அடித்துக் கூவியபடி அலாயுதன் கடோத்கஜனின் மேல் பாய்ந்தான். கடோத்கஜன் அவன் உடலை தன் உடலால் மோதித் தடுத்தான். பெருங்கைகளால் இருவரும் அறைந்துகொண்டனர். கால்களால், நெஞ்சினால் முட்டி ஓசையெழுப்பினர். இரு களிறுகள் கொம்பு கோத்து சுழற்றுவதுபோல் ஒருவரை ஒருவர் தோள்பற்றி இறுக்கி புரட்ட முயன்றனர். முதலைகள்போல் கால்களால் அறைந்தனர். காட்டெருமைகள்போல் தலைகளால் முட்டிக்கொண்டனர். ஒருவர் பற்களை இறுகக் கடித்த ஓசை பிறிதொருவருக்கு கேட்டது. ஒருவரின் எலும்புகள் உரசிக்கொண்ட ஓசையை இன்னொருவர் அறிந்தார். தசைகள் இறுகும் ஒலி அக்களமெங்கும் ஒலித்தது.

பின்னர் இருவரும் தெறித்து விலகி கால்களால் நிலத்தை அறைந்து எருதுகள்போல் சுரைமாந்தி மீண்டும் எழுந்து தாக்கினர். இருவரும் தழுவி நிலத்தில் விழுந்து உருண்டு அவ்வண்ணமே எழுந்தனர். ஓருடலாக இருளுக்குள் களமெங்கும் ததும்பினர். பின்னர் அலாயுதன் கடோத்கஜனை தலைக்குமேல் தூக்கி நிலத்தில் அறைந்தான். உடற்தசைகள் அதிர நிலத்தில் விழுந்த கடோத்கஜன்மேல் அவன் துள்ளி நெஞ்சுமேல் பாய கடோத்கஜன் கால்களைத் தூக்கி அவன் வயிற்றை மிதித்து அப்பாலிட்டு கையறைந்து எழுந்து அவன் மேல் பாய்ந்து இரு தோள்களையும் பற்றித் தூக்கி ஓங்கி முழங்கால்களால் அறைந்து அவன் விலா எலும்பை

உடைத்தான். அலாயுதன் இருமி குருதி துப்பி கடோத்கஜனை உந்தி புரண்டெழுந்து அப்பால் சென்றான். கடோத்கஜன் எழுவதற்குள் அலாயுதன் அவன் மேல் பாய்ந்து அருல் கிடந்த கதையை எடுத்து அவன் தலையை ஓங்கி அறைந்தான். கணநேரத்தில் ஒழிந்து புரண்டதால் அவ்வறை நிலத்தில் விழ மண் பொடியெழ அங்கொரு குழி உருவாயிற்று. கடோத்கஜன் வெட்டுண்டு விழுந்துகிடந்த களிறொன்றின் காலை எடுத்து அலாயுதனை அறைந்தான். அதை ஓங்கி வலக்கையால் அறைந்து அப்பால் சரித்த பின் நின்றிருந்த தேர்ச்சகடம் ஒன்றைத் தூக்கி கடோத்கஜனை அறைந்தான் அலாயுதன்.

எழுந்து விண்ணில் நெஞ்சு முட்டிக்கொண்டு இருவரும் மண்ணில் விழுந்தனர். அலாயுதன் தலை கடோத்கஜனின் தலையுடன் முட்டியது. ஒருகணம் கடோத்கஜனின் விழிகளை அலாயுதனின் விழிகள் சந்தித்தன. கடோத்கஜனின் நோக்கில் இருந்த தெளிந்த நிலையுறுதி அலாயுதனின் உள்ளத்தை அசைத்தது. என்ன நிகழ்ந்தது என அறியாமல் அவன் உடலெங்கும் தசைகள் ஒருகணம் தளர்வுற்றன. அந்த கண இடைவெளியில் கடோத்கஜன் அவன் வலக்காலையும் இடக்கையையும் பற்றித்தூக்கி சுழற்றி மண்ணில் அறைந்தான். மலைத்து அசைவிழந்த அவன் உடல்மேல் பாய்ந்து நெஞ்சின்மேல் அமர்ந்து தன் கைகளால் ஓங்கி அவன் தலையைப்பற்றி திருப்பி கழுத்தெலும்பை உடைத்தான். தசைக்குள் எலும்பு உடையும் ஓசை நீருக்குள் எனக் கேட்டது. மிகமிக மந்தணமாகச் சொல்லப்பட்ட ஒரு சொல் என.

அலாயுதனின் உடல் துடித்தது. கட்டைவிரல் விலகி அதிர, பற்கள் கிட்டிக்க, விழிகள் மேலேறி மறைய, கைவிரல்கள் விரிந்து விரிந்து நெளிய கழுத்துத்தசைகள் இழுபட்டு விதிர்க்க

அலாயுதன் அடங்கினான். அத்துடிப்பு தன் உடலிலும் குடியேற பற்களை இறுகக்கடித்து இரு கைகளையும் விரல் சுருட்டி மடித்து அமர்ந்திருந்தான் கடோத்கஜன். எலும்புகள் உடலெங்கும் உரசிக்கொள்ளும் ஓசை தலைக்குள் கேட்டது. பின்னர் குருதிக்குமிழிகள் கண்களுக்குள் மெல்ல மிதந்து கீழிறங்கத் தொடங்கின. அவன் எழுந்து திரும்பிப்பார்க்காமல் அகன்றான். அவர்களைச் சூழ்ந்து நின்றிருந்த இரு குடியின் அரக்கர்களும் திகைத்த விழிகளுடன் வெறுமனே நோக்கினர். எவரும் இறந்தவனுக்காக வாழ்த்தொலி எழுப்பவில்லை. எவரும் வெற்றிக்கூச்சலும் முழக்கவில்லை. கைகளிலிருந்து தளர்ந்த படைக்கலங்களை முறுகப்பற்றியபடி அவர்கள் நிலைமீண்டபோது மீண்டும் போருக்கு அழைக்கும் ஓசைகளை கேட்டனர். தளர்ந்த கால்களுடன், தாழ்ந்த தலையுடன் அவர்கள் பிரிந்து அகன்றனர்.

# கார்கடல் - 64

சஞ்சயன் சொன்னான்: அரசே, எவருடைய கண்களால் நான் பார்க்கிறேன் என்று தெரியவில்லை. நான் எங்கோ இக்கதையை ஓர் அரக்கர் கூட்டத்திற்கு சொல்லிக்கொண்டிருக்கிறேன். மறு சொற்றொடரை நாகர்களுக்கு சொல்கிறேன். ஆழ்ந்த கனவென அக்காட்சி திரும்புகையில் அரண்மனையில் காந்தாரப் பேரரசியிடம் சொல்லிக்கொண்டிருக்கிறேன். இப்போது இதை சொல்லும்போது நான் எங்கோ ஒரு வழிச்சாவடியில் வணிகர் நடுவே விழியிலாத சூதனாக அமர்ந்து இக்கதையை பாடுவதாக உணர்கிறேன்.

படைகளுக்கு மேல் இரும்புக்கவசம் இருளில் விண்மீன் ஒளியில் மின்னும் சுனைநீர்போல அலைகொள்ள பால்ஹிகர் சென்றுகொண்டிருப்பதை துரியோதனன் பார்த்தான். முதலில் அது என்ன அசைவென்று அவனுக்கு தெரியவில்லை. அப்பால் ஒரு செய்தி அறிவிப்பு பந்தம் எழுந்து சுழன்றபோது கோட்டுருவில் அது யானைமேல் செல்லும் பால்ஹிகர் என்று புரிந்துகொண்டு "பிதாமகரா! அவர் களம்காண வேண்டியதில்லை என்று சென்று சொல்" என்று கூவினான். "அவர் இரவில் நோக்கும் விழி கொண்டவரல்ல. ஒளிச்செய்திகளையோ ஒலிச்செய்திகளையோ கேட்டு போரிடவும் அறிந்தவர் அல்ல."

பால்ஹிகர் முகில்களின் மேல் கால்வைத்து நடப்பவர்போல் தோன்றினார். அங்காரகனின் கவசங்கள் கரியவையாக இருந்தமையால் அது முற்றாகவே இருளுக்குள் மறைந்துவிட்டிருந்தது. பால்ஹிகரை நோக்கியபின் கீழே நோக்கியபோது இருளின் புரளலாக யானை தெரிந்தது. இருளின் ஓர் அலைமேல் பால்ஹிகர் செல்வதுபோல. "அவர் படைமுகம் செல்லக்கூடாது... என் ஆணை" என்றான் துரியோதனன். சுபாகு புரவியில் ஏறிக்கொண்டு பாறைப்பகுதியின் ஆறுபோல முட்டிமோதிச் சுழன்ற கௌரவப் படையினூடாக பிளந்து சென்றான். வழிவிடும்பொருட்டு அவன் கூச்சலிட்டுப் பார்த்தான். ஆனால் எவ்வொலியும் எவர் செவிகளிலும் விழவில்லை என உணர்ந்தபின் வீரர்களை பிடித்துத் தள்ளியும் இடைவெளிகள் வழியாக சிட்டுக்குருவி என வளைந்து சுழன்றும் அவன் முன் சென்றான்.

விண்ணிலிருந்து அரக்கர்களும் அசுரர்களும் வௌவால்கள்போல் இறங்கி தாக்கி அலறல்களையும்

கூச்சல்களையும் எஞ்சவிட்டு மீண்டும் எழுந்தகன்றுகொண்டிருந்தனர். நிஷாதர்களும் கிராதர்களும் எய்த அம்புகள் குறி பிழைக்காது வந்து ஷத்ரியர்களை அலறி விழச்செய்தன. நீண்ட கழைகளை ஊன்றி விண்ணில் தாவி எழுந்து எடையுடன் இறங்கிய இடும்பர்கள் கையிலிருந்த நீண்ட சாட்டை நுனியில் கட்டப்பட்ட கூர்முனை கொண்ட இரும்புவட்டை வீசி வீரர்களின் கழுத்துகளை வெட்டி மீண்டும் கழைகளை ஊன்றி எழுந்தகன்றனர். கௌரவப் படைகள் அணிகுலைந்து ஒன்றையொன்று முட்டி நெருக்கி சில இடங்களில் விரிந்தகன்று குழம்பி அலைகொண்டிருந்தன. அவற்றின் நடுவே சுழியில் சிக்கிக்கொண்ட பெருங்கலம்போல் தயங்கியும் சுழன்றும் நிலையழிந்து நின்றிருந்தது அங்காரகன். அதைச் சூழ்ந்து கௌரவப் படை வட்டமிட்டது.

சுழிபிளந்து அங்காரகனை அணுகிய சுபாகு புரவி மேல் எழுந்து நின்று "பிதாமகரே! தாங்கள் பின்னடைய வேண்டுமென்று ஆணை! தாங்கள் போருக்கெழ வேண்டியதில்லை! பின்னடைக!" என்று கூறினான். பால்ஹிகர் தனது கதையைச் சுழற்றி அறைந்தபடி "மேலும்! மேலும்!" என யானையை முன்செலுத்த முயன்றுகொண்டிருந்தார். அங்காரகன் நான்கு அடி முன் சென்று சுழன்று திரும்பி மூன்றடி பின் வந்து மீண்டும் முன்சென்றது. பால்ஹிகரின் கதைச்சுழற்சியில் அவரைச் சூழ்ந்திருந்த கௌரவ வீரர்களே பெரும்பாலும் அறைபட்டு விழுந்தனர். தன் முன் சீறலொலியுடன் கதை உருளை கடந்து செல்ல சுபாகு தலைகுனிந்து அதிலிருந்து தப்பினான். உரத்த குரலில் "பிதாமகரே, தாங்கள் இப்போரை நிகழ்த்த இயலாது. செல்க! பின்திரும்பிச் செல்க!" என்று கூவினான். "பின் திரும்புக! அரசாணை! பின் திரும்புக!"

பின்னர் உணர்ந்தான், அப்போர் தொடங்கிய நாள் முதல் அவரிடம் எவருமே உரையாடியதில்லை என்று. ஒரு சொல்லும் உரைக்கப்படாதவராக, பிறரை நோக்கி ஒரு சொல்லும் உரைக்காதவராக அந்தப் பதினான்கு நாட்களும் அவர் குருக்ஷேத்ரக் களத்தில் இருந்தார். அவர் அறிந்தது புலரியில் ஒலிக்கும் போர்முரசின் அறைகூவலை மட்டுமே. அந்தியில் போர்முடிவுக்குப் பின்னரும்கூட பெரும்பாலான நாட்களில் அவர் கதைசுழற்றி போரில் மூழ்கித்தான் இருந்தார். சூழ்ந்திருந்த படைகள் விலகி பின்னடையத் தொடங்குகையில் அதைக் கண்டு அங்காரகனே முடிவெடுத்து பின்னடையத் தொடங்கும். தன் பாடிவீட்டை அடைந்ததும் அவர் யானையிலிருந்து இறங்கி எடை மிக்க கவசங்கள் குலுங்கி ஒலிக்க தன் குடிலுக்கு முன்னால் சென்று வெறுந்தரையில் கால் நீட்டி அமர்வார். ஒவ்வொரு முறையும் அந்த இடத்தை புதிதெனக் கண்டு துணுக்குறுபவர்போல் அவர் தோன்றுவார்.

யானை அவர் அருகிலேயே நின்றிருக்கும். அதை யானைக்கொட்டிலுக்கு கொண்டுசெல்ல முயன்றபின் அதன் மறுப்பை உணர்ந்து பாகர்கள் கைவிட்டனர். அங்காரகனை பாகர்கள் எவரும் அணுகவோ ஆணையிடவோ இயலவில்லை. அத்திரிகள் இழுக்கும் வண்டிகளில் அதற்கான உணவு கொண்டுவரப்பட்டது. உப்புநீர் நனைத்த வைக்கோலும், காட்டுத்தழையும், கிழங்குகளுடன் வேகவைத்து உருட்டிய புல்லரிசிச்சோற்றுக் கவளங்களும் அதன் முன் விரித்த ஈச்சைப்பாயில் குவிக்கப்பட்டன. அங்காரகன் உடலை அசைத்தபடி சீரான துதிக்கைச் சுழற்சிகளுடன் அவ்வுணவை உண்டது. அருகே பால்ஹிகருக்கும் கூடைகளில் அப்பங்களும், ஊன்துண்டுகள் நிறைந்த கொப்பரைகளும், மதுக்குடங்களும் கொண்டுவந்து வைக்கப்பட்டன. அவர்கள் இருவரும் உண்பதை

அப்பால் நின்று கௌரவப் படைவீரர்கள் பார்த்தனர். தொன்மையான வேள்விச்சடங்கு ஒன்றை பார்ப்பதுபோல் சிலர் அறியாது கைகூப்பினர்.

அங்கே பல்லாயிரம் பேர் சூழ்ந்திருந்த போதிலும்கூட அவர்களிருவரும் முற்றிலும் தனிமையில் இருப்பதை பலமுறை அங்கே நின்று சுபாகு பார்த்ததுண்டு. அவர்களிடையேகூட எதுவும் பேசப்படுவதில்லை. யானையிலிருந்து இறங்கியதுமே பால்ஹிகர் யானையையும் அறியாதவரானார். அவர் எப்போதுமே கவசங்களை கழற்றுவதில்லை என்பதை முதல்நாளுக்குப் பின் அப்படையில் அனைவருமே அறிந்திருந்தனர். தலைக்கவசத்தை உணவுக்குப் பின் மீண்டும் அணிந்துகொண்டு வெறுந்தரையில் கைகால்களை விரித்து அவர் படுத்திருக்கையில் அப்பால் நின்று நோக்கும்போது இரும்புக்கலங்கள் நீட்டி அடுக்கப்பட்டதாகவே தோன்றும். இரவில் பந்தங்களின் ஒளி கவசங்களின் வளைவுகளில் நெளிந்துகொண்டிருக்கும். பின்னிரவில் நிலவொளியில் நனைந்து அங்கே ஒரு நீர்ச்சுனை ஊறியிருப்பதுபோல் தோன்றும். அவர் குறட்டை விடுவதில்லை. துயிலில் புரண்டுபடுப்பதுமில்லை. அந்தக் கவசங்களுக்குள் அப்போது ஒரு மானுட உடல் இருப்பதாகவே தோன்றாது.

அங்காரகனும் கவசங்களை கழற்றுவதில்லை. அதன் இரும்புக் கவசங்கள் பிறிதொரு யானை அளவுக்கே எடை கொண்டவை. துதிக்கையின் அடுக்குக்கவசங்களை கழற்றாமல் உணவை அள்ளிச்சுருட்டி உண்ண பிற யானைகளால் இயல்வதில்லை. அங்காரகன் தன் துதிக்கையை சரித்து வளைத்து கவசங்களுடன் உண்ணவும் கற்றுக்கொண்டிருந்தது. அதன்

அசைவில் உலோகப் பொருட்கள் நிறைந்த வண்டி மேடுபள்ளங்களில் செல்வதுபோல் கவசத் தகடுகள் உராய்ந்து ஒலியெழுப்பின. அதன் காதுகள் அசைகையில் நுனிகளில் கட்டப்பட்ட மணியோசை வண்டிமாடுகள் செல்வதுபோல் கேட்டது. அங்காரகன் பால்ஹிகரைப் போலவே குரலற்றது. படைமுழுக்க பிற யானைகள் முழக்கமிடும்போதுகூட அங்காரகன் அவ்வொலியுடன் கலந்துகொள்வதில்லை. மலையுச்சிப் பாறைபோல விழியருகில் நெடுந்தொலைவில் இருப்பது. குளிர்ந்தது. அவ்வப்போது முழுமையாகவே வானில் மறைந்துவிடுவது.

முதல் இருநாட்களில் அவ்விருவரும் கௌரவப் படையினருக்கு பெருவிந்தையென இருந்தனர். மிக விரைவிலேயே அவ்விந்தையும் பழகியது. கதையுருளையிலிருந்து தெறித்த குருதி வழிந்து உறைந்து பிசுக்காகி, அரக்காகி, பொருக்காகி படிந்த கவசங்களுடன் மாபெரும் இரும்புப்பாவை என நின்றிருந்த அங்காரகன் சற்றும் அறியாமல் அவ்வழியாகச் செல்லலாயினர் படையினர். அவர்களின் உடலிலிருந்து அச்செய்தியை பெற்றுக்கொண்ட அத்திரிகளும் கழுதைகளும் புரவிகளும்கூட அதை ஒரு இரும்பு மண்டபம் என்றோ கற்பாறை என்றோ எண்ணியவைபோல் நடந்துகொண்டன. பறவைகள் இயல்பாக அதன்மேல் வந்தமர்ந்து எழுந்துசென்றன. எப்போதேனும் பாகர்கள் அருகே வந்து உணவு வைத்துச் செல்கையில் அதன் சிறிய விழிகளை அருகே கண்டு உளம் அதிர்ந்தனர். ஒருவன் அலறியபடி பின்னால் சரிந்து விழுந்து உடல்நடுங்கி எழுந்து அப்பால் சென்று மீண்டும் விழுந்தான். அவன் மீண்டும் உளம்மீளவே இல்லை. அங்காரகனுக்குள் வாழும் தெய்வத்தை அவன் கண்டுவிட்டான் என்றனர்.

பால்ஹிகர் முழுக் கவசத்துடன் காலையில் எழுந்தார். தலைக்கவசத்தையும் இடைக்கவசத்தையும் மட்டும் கழற்றி முகத்தைக் கழுவி காலைக்கடன் முடித்தார். உணவை உண்டு மீண்டும் கையுறைகளை அணிந்தபடி காத்திருந்தார். அங்காரகன் அந்தப் பெருங்கதையுருளையை தன் துதிக்கையில் சுருட்டித் தூக்கியபடி சீரான அசைவுகளுடன் வந்து அவர்முன் நின்றதும் ஏறி அமர்ந்துகொண்டார். அங்காரகன் செவிகளை மட்டும் அசைத்தபடி முரசொலிக்காக காத்திருந்தது. அதன் கவசங்களுக்கிடையே பாறைவெடிப்புக்குள் பொன்வண்டு என விழிகள் ஒளிகொண்டிருந்தன. படைநகர்வு தொடங்கியதுமே எறும்புகளால் இழுத்துச் செல்லப்படும் வண்டுபோல் நிரைக்குள் நுழைந்து படைமுகப்பை நோக்கி சென்றது. போர்முரசு எழுந்ததும் பிளிறலோ தலைகுலுக்குதலோ இல்லாமல் கதையைச் சுழற்றியபடி எதிரிப்படைக்குள் புகுந்து சென்றது. நீரில் மூழ்கும் இரும்புருளைபோல.

“அவர் போரிடவில்லை. இங்கு நிகழ்வது எதையும் அவர் புரிந்துகொள்ளவும் இல்லை. அவர் பிறிதொன்றை செய்து கொண்டிருக்கிறார். அவர் மானுட உயிர் என்பதையே அறிந்திருக்கவில்லை” என்று கௌரவப் படைவீரர்கள் சொன்னார்கள். “தொல்நிலத்தின் கொடுந்தெய்வம் ஒன்றை மானுட உடலில் ஏற்றி கொண்டுவந்திருக்கிறார்கள். லட்சம் தலைகளை உடைத்து குருதிபலி கொண்ட பின்னரே அது மண் நீங்கும்” என்று பாண்டவர் தரப்பில் கூறினார்கள். முதல் சில நாட்களுக்குப் பின்னர் எவ்வகையிலும் பால்ஹிகரை எதிர்கொள்ள இயலாதென்று பாண்டவப் படையினர் உணர்ந்தனர். பாண்டவப் படையில் பீமனும் கடோத்கஜனும் மட்டுமே அவரை சற்றேனும் எதிர்கொண்டு செறுத்தனர். அவர்களும் அவர் பெருங்கதையின் வீச்சை ஒழிந்தும்

தவிர்த்தும் களமாடி அவரை தாங்கள் எண்ணிய இடத்தில் நிலைகொள்ளச் செய்வதையே போர்முறையென்று கொண்டிருந்தனர்.

பீமனும் கடோத்கஜனும் பின்னடையும்போது பாண்டவப் படைகளுக்குள் புகுந்த அங்காரகன் கதை வீசி தேர்களையும் யானைகளையும் மானுடத் திரளையும் உடைத்துச் சிதைத்தழித்தபடி ஊடுருவிச்சென்று சுழன்று மீண்டது. அங்காரகனைப் பார்த்ததுமே படைவீரர்கள் சிதறி அகன்று வழிவிட, காற்றுச் சருகுகளை ஊதி விலக்குவதுபோல் வெற்றிடத்தை உருவாக்கியபடி அவர் பாண்டவப் படைகளுக்குள் சுழன்று வந்தார். யானைகளும் புரவிகளும்கூட இயல்பாக அகன்றோடி அவரை தவிர்த்தன. ஆனால் அணிநிறைந்த படை எங்கோ ஓரிடத்தில் சுழித்து அசைவிலாது சிக்கிக்கொள்ள நேர்ந்தது. அப்போது அதன் மேல் பறந்த கதை குருதி உண்டு விண்ணில் சுழன்றது. படைவீரர்கள் அஞ்சிச் சிதறி ஓடினர். வழி மூடிக்கொண்டபோது விழிமூடி உடலை இறுக்கி தலைகொடுத்து விழுந்தனர். சில தருணங்களில் ஆட்கொள்ளப்பட்டவர்கள்போல வீரர்கள் அப்பாலிருந்து படைக்கலங்களை எறிந்துவிட்டு “பிதாமகரே, என்னை கொள்க!” என கூச்சலிட்டபடி வந்து அவர்முன் மண்டியிட்டு தலையை அக்கதைக்கு அளித்து சிதறிவிழுந்தனர்.

தொலைவிலிருந்து போர்புரியும் பால்ஹிகரை பார்க்கையில் அக்கவசங்களுக்குள் ஒரு மானுட உடல் இருப்பதே தெரியவில்லை. அவர் தன் கதைச்சுழற்சியை எவ்வகையிலும் மாற்றிக்கொள்ளவில்லை. விசைகூட்டவோ குறைக்கவோ செய்யவில்லை. வென்று களிப்புறவோ, பின்வாங்கி சீற்றம் அடையவோ, இலக்கு தேடி செல்லவோ, தவறும் இலக்குகளை

குறிவைத்து தொடரவோ இல்லை. அந்த விலக்கமே பேரச்சத்தை உருவாக்குவதாக இருந்தது. அவர் படைகளை வழிநடத்தவில்லை. ஆனால் யானை சென்ற வழியே சென்றுமேயும் மான்கூட்டங்கள் என கௌரவப் படை அவரைச் சூழ்ந்து பின்தொடர்ந்தது. அவர் செல்லும் வழியை தங்களுக்கான திறப்பாக பயன்படுத்திக் கொண்டது. அவர் அனைத்து ஆணைகளுக்கும் அப்பாலிருந்தார்.

அவரிடம் எச்சொல்லும் சென்றடையாதென்று உணர்ந்தபின் சுபாகு புரவியை திருப்பி பின்னடைந்தான். எதிரில் வந்துகொண்டிருந்த துர்முகனை நோக்கி “எப்போதும் பிதாமகரின் இருபுறமும் கௌரவர்கள் ஐவர் நிலைகொள்க! அவர் இப்போது தனித்து பாண்டவப் படைக்குள் சென்றுவிடலாகாது. அவரை கிராதர்கள் சூழாது நோக்குக!” என்று ஆணையிட்டான். துர்முகன் தலைவணங்கி கைவீசி பிற உடன்பிறந்தாருக்கு ஆணையிட்டபடி பால்ஹிகரை நோக்கி சென்றான். சுபாகு புரவியில் திரும்பி துரியோதனனை வந்தடைந்தான். கர்ணனும் துரோணரும் அஸ்வத்தாமனும் மூன்று முனைகளில் பாண்டவர்களின் படையெழுச்சியைத் தடுத்து பின்னடையச் செய்துகொண்டிருந்தனர். கிராத படைத்தலைவரும் வெவ்வேறு முனைகளிலிருந்து எதிர்பாராத தருணத்தில் தோன்றி அவர்களை அறைந்து அக்கணமே அலையென பின்வாங்கி மறைந்து மீண்டும் தோன்றி தாக்கினர்.

துரியோதனனை அணுகிய சுபாகு “மூத்தவரே, பிதாமகரை எவ்வகையிலும் நம்மால் கட்டுப்படுத்த இயலாது. நம்மிடமிருந்து ஒரு சொல்லும் அவரை நோக்கி செல்வதில்லை” என்றான். ஒரு கணத்திற்குப்பின் அவன் சொல்வதை புரிந்துகொண்ட துரியோதனன் “ஆம், உண்மை.

நானும் அதை முன்னரே பலமுறை உணர்ந்திருக்கிறேன்” என்றான். பின்னர் “ஒன்று செய்க, அவரது யானையுடன் நம்மால் உரையாடமுடியும்! அங்காரகனிடம் கூறுக!” என்றான். “அங்காரகனிடமா?” என்று சுபாகு கேட்டான். “ஆம், அது நம் சொற்களை கேட்கும். பிதாமகர் நாமறியாத நிலத்திலிருந்து இங்கே எழுந்தவர். அங்காரகன் நம்முடன் குழவியாக இருந்து வளர்ந்தது. இங்கு பட்டத்து யானையாக பழகியது. அதனுடன் பேசுக! அதற்கு ஆணையிடுக! உளம் கொண்டால் அது கேட்கக்கூடும்” என்றான்.

“மூத்தவரே, அது மதம் கொண்டதுபோல் தோன்றுகிறது. சூழ மானுடர் இருப்பதையே உணராததுபோல் இருக்கிறது. அவர் முற்றமைந்து அதை ஆள்கிறார். தான் வாழும் விண்ணுலகிலிருந்து அதனுடன் பேசிக்கொண்டிருக்கிறார்” என்றான். “முறையிடுக! அதை நோக்கி ஓயாது பேசிக் கொண்டிரு. ஓரிரு சொற்களையேனும் அது ஏற்கக்கூடும். செல்க!” என்று துரியோதனன் சொன்னான். “இன்று இரவு பிதாமகர் இக்களத்திலிருந்து மீண்டாக வேண்டும். நாம் அவரை முன்னரே களமெழாது செய்திருக்க வேண்டும். பெரும்பிழை செய்துவிட்டோம் என்று என் உள்ளம் பதைக்கிறது. செல்க!” என்றான்.

அக்கணம் விண்ணிலிருந்து அவன் முன் இறங்கிய இடும்பன் ஒருவன் தன் இரு கைகளிலும் இருந்த நீண்ட வாள்களால் அவனை அறைந்தான். வில்லின் கணையால் இரு வாள்முனைகளையும் தடுத்து “பின்னடைக! பின்னடைக!” என்று பாகனுக்குச் சொல்லி தேரை பின்னடையச் செய்தபின் தன் வாளை உருவியபடி அவ்வரக்கனை எதிர்த்துப் போரிட்டான் துரியோதனன். ஒரு வாள் உடைந்து பிறிதொரு வாளை

துரியோதனன் மேல் வீசி எறிந்தான் இடும்பன். தலை தணித்து அதை தவிர்த்து தன் இடையிலிருந்த வேலை எடுத்து இடும்பனை நோக்கி எறிந்தான். இடும்பன் வௌவால்போல் ஒலி எழுப்பிச் சிதறி மல்லாந்து விழ பிறிதொரு இடும்பன் வந்திறங்கி கதையோடு அவனை நெருங்கினான். அவனிடம் கதையால் போரிடத் தொடங்கினான் துரியோதனன்.

சுபாகு தன் புரவியை திருப்பிக்கொண்டு விண்ணிலிருந்து இறங்கி பொருதி மீண்டு ஏறிச் சென்றுகொண்டிருந்த இடும்பர்களையும் மண்ணிலிருந்து முளைப்பதெனத் தோன்றிய கிராதர்களையும் ஒழிந்து விழுந்துகிடந்த பிணங்களின் மேல் தாவி நிலைகெட்டு சுழன்று கொண்டிருந்த யானைகளினூடாக வளைந்து பால்ஹிகர் போரிட்டுக்கொண்டிருந்த இடம் நோக்கி சென்றான். சங்கொலி எழக் கேட்டு திரும்பிப்பார்த்தபோது கடோத்கஜனும் கர்ணனும் எதிர்நின்று போரிடுவதைக் கண்டான். அவர்களின் அசைவுகளுக்கேற்ப விளக்கொளிகள் சுழன்று அப்போரை விண்ணில் ஒளியாடலென ஆக்கிக்கொண்டிருந்தன. பல்லாயிரம் நாகங்கள் செந்நா பறக்க படமெடுத்து சீறி, அறைந்து வால்பின்னி நெளிய இருளெல்லாம் நிறைந்து போரிடுவது போலிருந்தன அவை.

சுபாகு புரவியைத் தூண்டி பால்ஹிகரை நோக்கி சென்றான். பால்ஹிகரின் இருமருங்கும் நின்றிருந்த கௌரவப் படையினர் திரைபோல் மூடியிருந்த இருளுக்குள் இலக்கிலாது அம்புகளை தொடர்ந்து செலுத்தி அங்கிருந்து இடும்பர்கள் வந்திறங்காது செய்தனர். “பிதாமகரின் கதை சுழலும் எல்லைக்குள் நமது படைவீரர்கள் எவரும் செல்ல வேண்டியதில்லை… விலகுங்கள்!” என்று துர்முகன் ஆணையிட்டுக்கொண்டிருந்தான். சுபாகு பால்ஹிகரை அணுகி அங்காரகனின் செவியசைவுக்கு நேராக

சென்று நின்று “அங்காரகன் அறிக! அங்காரகன் அறிக! பின்னடைக! பின்னடைக!” என்றான். “மூத்தவரே, என்ன செய்கிறீர்கள்?” என்று துர்முகன் கூவினான். “அங்காரகனிடம் சொல்க! பின்னடையும்படி அதனிடம் ஆணையிடுக! இப்போர் அவருடையதல்ல என்று அதனிடம் விளக்குக!” என்று சுபாகு சொன்னான். “யானையிடமா?” என்று துர்மர்ஷணன் கேட்டான். “ஆம், நம்முடன் வளர்ந்தது அது. நம் மொழி அதற்கு தெரியும். சொல்க!” என்றபின் “அங்காரகன் அறிக! பின்னடைக! பின்னடைக! என்று சுபாகு கூறினான்.

அத்தருணத்தில் இரு யானைகளின் மேல் காகங்கள்போல் மொய்த்து ஊர்ந்து வந்த இடும்பர்கள் அதன் விலாக்களிலிருந்து சிறகுகொண்டு எழுந்து காற்றில் பாய்ந்து வந்து அங்காரகனை தாக்கினர். அங்காரகனின் துதிக்கையால் தூக்கி சுழற்றப்பட்ட பெருங்கதை அவர்களை அறைந்து சிதறடிக்க யானைகள் அலறி விழுந்தன. “பின்னடைக! பின்னடைக!” என்று சுபாகு சொல்லிக்கொண்டிருந்தான். யானையின் செவிகள் அவன் குரலை கேட்டதாகத் தோன்றவில்லை. “அம்புகள் ஓயவேண்டியதில்லை. அம்புகளால் வேலியிடுங்கள்!” என்று துர்முகன் கூவிக்கொண்டிருந்தான். அங்காரகன் கதையுடன் பாண்டவப் படையை அழுத்தி முன்னால் சென்றது. இடும்பர்கள் கூச்சலிட்டபடி வானில் எழ பாண்டவப் படையினர் இருளில் முட்டிமோதிச் சிதறினர். சிலர் கீழே விழுந்தனர். எழக்கூடாதென அவர்களுக்கு தெரிந்திருந்தும் எழுந்து தலையறையப்பட்டு உயிர்விட்டனர்.

தொலைவில் பீமனின் தேர் வருவதை சுழலும் விளக்கொளி அறிவித்தது. “பீமசேனர் இங்கு வருகிறார். அவர் பால்ஹிகரை எதிர்கொள்ளக் கூடாது. பின்னடையச் செய்யுங்கள்!” என்று

சுபாகு சொன்னான். ஆனால் தன்னெதிரில் வந்த இடும்பர்களை அறைந்து வீழ்த்தியபடி அங்காரகன் மேலும் முன்னடைந்தது. “இறையுருவே, செவி கொள்க! பின்னடைக! இப்போர் உனக்குரியதல்ல! பின்னடைக! பின்னடைக!” என்று சுபாகு கூவிக்கொண்டிருந்தான். ஒருகணம் யானையின் செவிகள் அசைவிழப்பதை அவன் கண்டான். மெய்யாகவே அது நிகழ்கிறதா என அவன் உள்ளம் துணுக்குற்றது. பின்னர் ஆம் என்று அவன் அகம் கொந்தளித்தது. “அங்காரகனே, அறிக! பின்னடைக! இப்போரிலிருந்து பின்னடைக!” என்று அவன் கைகளை வீசியபடி கூவினான்.

யானை தலைதிருப்பி அவனை பார்த்தது. அடுக்கடுக்காக அமைந்த இரும்புக்கவசங்களுக்கிடையே அதன் விழிகள் எங்கிருக்கின்றன என்று தெரியவில்லை. ஆயினும் சுபாகு அதன் பார்வையை உணர்ந்தான். “பின்னடைக, தேவா! பின்னடைக!” என்று இறைஞ்சிக் கூவினான். இரு கால்களையும் ஊன்றி உடலை முன்னும் பின்னும் அசைத்து புல்முனை நீர்த்துளிபோல் அசைந்தது அங்காரகன். பின்னர் அது முன்வலக்காலை பின்னெடுத்து வைத்தது. “பின்னடைகிறது! யானை பின்னடைகிறது!” என்று சுபாகு உவகையுடன் கூறினான். அங்காரகன் மேலும் மேலும் கால்களை எடுத்து வைத்து பின்னடைந்தது. கதாயுதத்தை நிலத்திலிட்டு இழுத்தபடி கௌரவப் படைகளுக்குள் புதைந்தது. சுபாகு “நான் அதை வழிநடத்தி கொண்டுசென்று படைப் பின்னணியில் அமரச்செய்கிறேன். யானை எழவில்லையென்றால் பிதாமகரும் போருக்கெழமாட்டார்” என்றான்.

புரவியில் ஏறி யானைக்குப் பின்னால் சென்றபடி அவன் கூவினான். “பெருகி வரும் எதிரிகளை இங்கு நின்று

எதிர்கொள்ளுங்கள். வந்துகொண்டிருப்பவர் பீமசேனர் என நினைவில் கொள்க! அவர் ஒலிகளை விழிகளாக்கும் திறனற்றவர். வழிகாட்டி வரும் இடும்பர்களை அறைந்து வீழ்த்துங்கள். அவர்களின் விளக்கடையாளங்களை நோக்கி அம்புகளை குறிவையுங்கள்.” சுபாகு புரவிமேல் எழுந்து யானையின் காதை நோக்கி “பின்னடைக! அங்காரகனே, பின்னடைக! பின்னடைக!” என்றான். யானை பின்னடைவதன் விசை மேலும் கூடியது. கௌரவப் படைகளின் முகப்பு மீண்டும் ஒன்றாக இணைந்து பால்ஹிகரை முழுக்க மூடிக்கொண்டது. தன் யானை பின்னடைவதைக்கூட உணராதவராக பால்ஹிகர் இருந்தார். யானையின் விழிகளின் மின்னை ஒருகணம் சுபாகு கண்டான். கண்டோமா என மறுகணம் ஐயுற்றான்.

மறுபக்கம் பாண்டவப் படைமுகப்பில் இடும்பர்களால் வழிகாட்டப்பட்டு பீமன் தோன்றினான். இரு இடும்பர்கள் ஓங்கி ஊன்றிய கழைக்கோல் வழியாக எழுந்து கௌரவப் படையின் முகப்பில் பாய்ந்திறங்க அவர்களுக்குப் பின்னால் பீமனின் தேர் விரைந்து வந்தது. நீளம்பொன்றை எடுத்து அவன் அங்காரகன் நெற்றி நோக்கி அறைந்தான். அம்பு அங்காரகனின் தலைக்கவசத்தின் மேல் மணியோசை எழுப்பியபடி அறைந்து உதிர்வதை சுபாகு கேட்டான். “பின்னடைக! இது உங்கள் போரல்ல! அங்காரகனே, பின்னடைக!” என்று அவன் கூவினான். மீண்டும் மீண்டும் பீமனின் அம்புகள் வந்து அங்காரகனை அறைந்தன. அங்காரகன் அவ்வம்புகளை பொருட்படுத்தாமல் பின்னடி வைத்து திரும்பிச் செல்வதற்காக திரும்பிய கணம் அம்பு ஒன்று வந்து அதன் கவச இடுக்குக்குள் நுழைந்தது. உரக்கப் பிளிறியபடி அங்காரகன் திரும்பியது.

“வேண்டாம், அங்காரகனே! வேண்டாம்! நில்லுங்கள், இறையுருவே! கரியே, நில்லுங்கள்!” என்று சுபாகு கூவினான். ஆனால் பிளிறலோசையுடன் மீண்டும் பெருங்கதையைத் தூக்கிச் சுழற்றியபடி பீமனை நோக்கி அங்காரகன் சென்றது. அங்காரகனின் கதையால் அறைபட்டு இடும்பர்கள் சிதறி விலகிய வழியினூடாக அது வெறிகொண்ட பிளிறலுடன் பீமனை நோக்கி சென்றது. போர்க்களத்தில் அதன் குரல் முதன்முறையாக எழுவதை சுபாகு கேட்டான். பீமன் தன் தேரிலிருந்து பாய்ந்திறங்கிய கணமே அங்காரகனின் பெருங்கதை பீமனின் தேரை அறைந்து துண்டுகளாக சிதறடித்தது. சூழ்ந்திருந்த இடும்பர்கள் சிதறி விலக கதை அப்பகுதியெங்கும் விம்மலோசை எழுப்பியபடி சுழன்றெழுந்தது. அது தொட்ட இடங்களெல்லாம் உடைந்து தெறித்தன. யானை ஒன்று குருதி சிதற சிதைந்து மண்ணில் விழுந்து துடிப்பதை சுபாகு கண்டான்.

பீமன் பாய்ந்து புரவியொன்றின் மேலேறி அங்காரகனை நோக்கி வந்தான். அங்காரகனின் கதைச்சுழற்சியை புரவியிலமர்ந்தபடி மிக எளிதாக ஒழிந்து அதை அணுகி கையிலிருந்த நீள்வேலை அதை நோக்கி எறிந்தான். அங்காரகனின் அலறல் கேட்டதுமே மீண்டும் கவச இடைவெளியினூடாக வேல் உள்ளே சென்றுவிட்டதென்பதை சுபாகு உணர்ந்தான். பீமன் புரவியில் பின்னடைந்து தன்னை நோக்கி வந்த இடும்பர்களிடமிருந்து பிறிதொரு நீள்வேலை வாங்கி ஓங்கி வீச அந்த வேலும் அங்காரகனின் அதே கவச இடைவெளியில் பாய்ந்தது. அங்காரகன் அலறியபடி உடலை ஊசலாட்டி தன்னைத்தானே சுழற்றியது. என்ன நிகழ்கிறது என்பதை சுபாகு புரிந்துகொண்டான். பகலில் விழிகளால் இலக்குகள் சிதறடிக்கப்பட்டு அங்காரகனின் கவசத்தை கடந்து

அம்புகள் செல்லாதொழிந்தன. இரவில் ஒலிகளையே இலக்காக்கி தாக்குவதனால் முதல் இலக்கு தற்செயலாகப் பட்ட அதே புள்ளிக்கு மீண்டும் மீண்டும் அம்புகளையும் வேலையும் செலுத்த பீமனால் முடிந்தது.

சுழலும் யானையின் உடலில் அந்த இலக்கை எப்படி அறிகிறான்? மீண்டும் ஒரு வேலால் பீமன் அங்காரகனை அதே இலக்கில் அறைந்தான். சுழலும் யானையை கவசங்களின் உரசல் ஒலியாக மட்டுமே பீமன் பார்த்துக்கொண்டிருக்கிறான். அவ்வொலியை மிக அருகிலென பார்க்க இயல்கிறது. ஒளியாலான இலக்குகள் தொலைவால் மங்கலடைகின்றன. ஒலியாலான காட்சிகளுக்கு அண்மையும் சேய்மையும் இல்லை. கைகளால் தொட்டு உணர்வதுபோல் இலக்குகளை அறிய முடிகிறது. மீண்டுமொரு வேல் அங்காரகனின் அதே இலக்கை தாக்க சுழன்று அலைபாய்ந்த யானையின் செவிப் பள்ளத்தில் புதைந்திருந்த ஏழு வேல்களை சுபாகு பார்த்தான். “அங்காரகனை காத்துக்கொள்க! சூழ்ந்துகொள்க!” என்று அவன் கௌரவர்களுக்கு ஆணையிட்டான். அவர்கள் தங்கள் விற்களுடன் அங்காரகனைச் சூழ்ந்து வந்து பீமனை தாக்கினர். பீமனைச் சூழ்ந்துவந்த ஷத்ரியர்கள் விற்களால் கௌரவப் படைகளை தாக்கினர்.

பீமன் அங்காரகனுடன் போர்புரிந்துகொண்டே எதிர்பாராத கணத்தில் புரவியிலிருந்து எழுந்து தாவி வந்து கதாயுதத்தால் துர்மர்ஷணனை அறைந்து கொன்றான். திகைத்துப் பின்னடைந்த துர்தர்ஷனையும் ஊர்ணநாபனையும் கொன்றான். சுபாகு பின்னடைந்து “விலகுக! விலகுக!” என்று கூவிக்கொண்டிருக்கையில் பாய்ந்து அங்காரகனின் அந்த செவிப் பள்ளத்தில் மீண்டுமொரு வேலால் அறைந்தான்.

அங்காரகனின் கையிலிருந்து பெருங்கதை நழுவி தரையில் விழுந்தது. சங்கிலி உருவி வளையங்களாகி அதன்மேல் பொழிந்தது. யானை உடலை முன்னும் பின்னும் ஊசலாட்டி துதிக்கையைச் சுருட்டி தலைகுலுக்கி உரக்க பிளிறியது. காற்றில் பாய்மரம் உலைவதுபோல் ஆடி கவசத்தின் இரும்புப் பலகைகளும் சங்கிலிகளும் உராய்ந்து எழுந்த குவியலோசையுடன் பக்கவாட்டில் விழுந்தது. கவசங்களின் எடையால் அந்த வீழ்வொலி நிலத்தை அதிரச் செய்தது. பீமன் பாய்ந்து அங்காரகனின் மேலேறி அதன் செவிப் பள்ளத்தில் பாய்ந்திருந்த வேலின்மேல் கதையால் ஓங்கி அறைந்து இறக்கினான்.

யானையின் உடலுடன் சேர்ந்து விழுந்து ஒரு கால் யானைக்கு அடியில் சிக்கிக்கொள்ள கையூன்றி எழ முயன்றுகொண்டிருந்த பால்ஹிகரை அணுகி தன் கதையால் அவர் தலையை ஓங்கி அறைந்தான் பீமன். தலைக்கவசம் உடைந்து தெறிக்க பால்ஹிகர் நிமிர்ந்து பீமனை பார்த்தார். மறுமுறை கதையைச் சுழற்றி பால்ஹிகரின் தலையை அறைந்து மண்டை ஓடு உடைந்து அகலச் செய்தான். மீண்டும் இருமுறை அறைந்து தலைக்கூழ் அப்பகுதியெங்கும் சிதறச் செய்தபின் தன் கதையை தலைக்குமேல் தூக்கினான். சூழ்ந்திருந்த இடும்பர்கள் தங்கள் படைக்கலங்களைத் தூக்கி வெற்றிக்குரலெழுப்ப அவ்வோசை பாண்டவப் படைகளுக்குள் பரவிச்சென்றது. சுபாகுவின் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. புரவியைத் தட்டி செலுத்த அவனால் இயலவில்லை. அவன் உணர்வுகளை புரிந்துகொண்டதைப்போல் புரவி பின்னடைந்து பாய்ந்து விலகி கௌரவப் படைகளுக்குள் புகுந்து ஓடியது. அவனைச் சூழ்ந்து “பிதாமகர் விண்புகுந்தார்! விண்ணேகுக மூதாதை! விண்திகழ்க

பெருந்தந்தை!” என வாழ்த்தொலிகள் எழுந்து பரவிக்கொண்டிருந்தன.

# கார்கடல் - 65

சஞ்சயன் சொன்னான்: அரசே, இது முன்னரே எழுதப்பட்டுவிட்ட கதை. இது ஒரு பெருங்காவியத்தின் வரிகள். அந்த ஆசிரியனாக அமர்ந்து அதை சொல்லிக்கொண்டிருக்கிறேன். அதன் வரிகளில் விழியோட்டிக்கொண்டிருக்கிறேன். அதை தனிப்பயணி என மலையடுக்குகள் சூழ்ந்த பாதையில் பாடிக்கொண்டு செல்கிறேன். அந்தத் தொல்கதைக்குள் அமர்ந்து இக்கதையை உங்களுக்கு சொல்லிக்கொண்டுமிருக்கிறேன்.

இருளில் அர்ஜுனன் மேலும் கைகளும் வில்லும் பெருகியவன் போலிருந்தான். அவன் அம்புகள் அனைத்து திசைகளிலிருந்தும் எழுந்து சீறல் ஓசையுடன் வந்து அறைந்தன. கர்ணன் அர்ஜுனனை எதிர்கொண்ட முதற்சில கணங்கள் அந்த ஓசைகளும் அரையிருளில் அவை மின்னி வந்த காட்சிகளும் ஒன்றுடன் ஒன்று இணையாமல் திகைத்தான். இரண்டு அம்புகள் அவன் தேர்த்தூணில் வந்து அறைந்தன. ஒன்று அவன் வலத்தோள் கவசத்தை அறைந்து ஓசையுடன் அப்பால் சென்று விழுந்தது. பிறிதொரு அம்பு முழங்கியபடி அவன் தலைக்கு குறி கொண்டு அணைய இயல்பாக உடல் திருப்பி அதை ஒழிந்து சுழன்றெழுந்தபோது அறியாக் கணமொன்றில் அவன் விழி முற்றாக மறைந்து செவி காட்சித் திறன் கொண்டது.

பின்னர் அக்களத்திலிருக்கும் அனைத்து அம்புகளையும் அவன் பார்த்தான். அனைத்து அம்புகளையும் தன் அம்புகளால் அறைய முடியுமென்பதை அறிந்தான். காட்சி விரைவானது. ஆகவே அது தான் காண்பவற்றை விரைந்து தொடுத்து மின்னிமின்னிப் பெருகும் புடவி ஒன்றைப் படைத்து சூழ நிறுத்தியது. ஓசை விரைவு குறைந்தது. ஆகவே ஓசைகளால் சமைக்கப்பட்ட உலகு தளர முடையப்பட்டதாக இருந்தது. அதில் ஒவ்வொரு அம்பும் தனி அடையாளம் கொண்டிருந்தது. தனக்கென ஒரு சொல் கொண்டிருந்தது. சீறியது, சலித்துக்கொண்டது, தேடியது, சென்றறைந்து எக்களித்தது, உதிர்கையில் நீள்மூச்செறிந்தது. விழுந்து கிடக்கையில் ஆமென தன்னை அமைத்துக்கொண்டது.

அர்ஜுனனை தன் செவிகளால் பார்த்தபோது பெருகும் அவன் கைகளை கண்டான். இருபுறமும் பதினாறு கைகள் கிளைபிரிந்து தனித்தனியாக இயங்க மறுபக்கம் இருந்து அவன் ஆவக்காவலனின் கைகளும் பெருகி அத்தனை கைகளுக்கும் அம்பு தேர்ந்து அளித்தன. காண்டீபம் துள்ளித் துள்ளி ஒன்றிலிருந்து ஒன்றெனப் பிறந்து பதினாறும் அதன் பன்னிரு மடங்கும் அதன் பன்னிரு மடங்குமென பெருகி ஒரு திரும்பலில் ஒன்றுடன் ஒன்று படிந்து மீண்டும் ஒன்றென்றாகி சுழன்று மீண்டும் எழுந்தது. அதை அறிய அறிய தானும் அவ்வண்ணமே பெருகுவதை கர்ணன் அறிந்தான். பெருகிப்பெருகி வானளாவி இருளில் நிறைந்து அவனும் அர்ஜுனனுடன் போரிட்டான். எப்போதும் எழும் அந்த உளப்பெருக்கு. அவன் நானே என்னும் எண்ணமாக அதை அவன் மாற்றிக்கொண்டிருந்தான். ஒருவருக்கு ஒருவர் ஆடிப்பாவை என உருவாக்கிப் பெருக்கி களம் நின்றிருக்கிறோம். அவன் தோள்கள், அவன் கைகள், அவன்

உடலின் அந்த நடனம். அவனுடைய அசைவின்மை நான். எனது அசைவு அவன்.

பின்னர் எங்கோ ஒரு புள்ளியில், அணுவிடையில், அதற்கும் குறைவான சிற்றணுவிடையில், மெல்லிய பூமுள்ளை நாவால் தொட்டறியும் நுண்ணிய அறிதலென ஒன்றை உணர்ந்தான். அது ஆணவமா, கசப்பா, விலக்கமா, அனைத்தாலும் உணர முடியாத பிறிதொன்றா? அவனால் அதை அத்தருணத்தில் வகுத்தறிய இயலவில்லை. ஆனால் அத்தனை போர்நடனத்திற்கு அடியில் அது என்ன என்று உள்ளம் தொட்டுத் தேடி தவித்துக்கொண்டும் இருந்தது. அது ஒரு தன்னுணர்வு மட்டுமே என்று ஒரு கணத்தில் எண்ணினான். அது ஒரு அச்சம் என்று அக்கணமே உருமாறியது. அது தன்னுணர்வு கரைவதைக் குறித்த அச்சமா என்ற ஐயமாக உருவெழுந்தது. அவன் தன் ஆவநாழியிலிருந்து அம்பொன்றை எடுத்து கூர் உணர்ந்து நாணிழுத்து எய்து அது விண்ணில் எழுந்த கணத்தில் அறிந்தான், அவ்வுணர்வே அந்த அம்பென்றாகி எழுந்தது என்று.

தன்னிலிருந்து அகன்று செல்லும் அதை பருப்பொருளென பார்த்தபோது அது என்னவென்று உணர்ந்தான். அது அவனை அர்ஜுனனிலிருந்து முற்றாகப் பிரித்தது. அர்ஜுனனைக் கொன்றாலொழிய தான் இல்லை என்று அவனுக்கு சொன்னது. அர்ஜுனன் அழிந்து பின்னர் எழுந்த தான் ஒன்றிலேயே தன்னால் முழுதமைய முடியுமென்று அறிந்தது. பின்னர் அவன் ஆவநாழியிலிருந்த அனைத்து அம்புகளும் அவ்வுணர்வை ஏற்று பற்றிக்கொண்டன. அவன் உடலுக்குள் எங்கோ எண்ணமென்றிருந்து, குருதிக்கசப்பென்று ஊறி, கால்விரல்களை அதிரச்செய்து, வயிற்றில் கொப்பளித்து, மூச்சில்

அனல்கொண்டு, கைவிரல்களை பதறச்செய்து, உதடுகளை உலரவைத்து, விழிகளை எரியச்செய்து, முகம் கனல நெற்றிப்பொட்டில் மோதி கூர்கொண்டது அது. கொல் கொல் கொல் கொல் கொல் என அது கூவிக்கொண்டிருந்தது. அவன் காற்றையும் வானையும் அச்சொல்லால் நிறைத்தது. கொல்க அவனை! கொன்றெழுக அவனை! கொன்று விஞ்சுக! கொன்று நிலைகொள்க!

அர்ஜுனனைக் கொன்று எஞ்சவேண்டுமென மட்டுமே உளம்கொண்டவனாக அவன் அம்புகளை அறைந்தான். இதோ இதோ என அவன் உடலிலிருந்து ஆயிரம் நச்சு நாகங்கள் எழுந்து படம் விரித்து அம்புகளை செலுத்தின. அவனை வந்தறைந்த அர்ஜுனனின் அம்புகளிலிருந்து தான் செலுத்திய அதே அம்புகள் அவை என உணர்ந்தான். சென்றவையே அவ்வடிவிலேயே மீள்கின்றன என்பதுபோல் அவனுடைய ஆவநாழியிலிருந்து கிளம்பியபோதிருந்த அதே வஞ்சத்துடன், அதே மாறா விசையுடன் அவை திரும்பி வந்தன. அத்தனை அம்புகளையும் நான் எனக்கே என செலுத்திக்கொள்கிறேனா? என் ஆவநாழியே அவன் தோளிலும் தொங்குகிறதா? இல்லை, நான் விஞ்சும் ஒரு துளி நஞ்சு கொண்டவன். அவனை ஏழுமுறை பொசுக்கும் கருநஞ்சு என் அம்புத்தூளியில் பொறுமையிழந்து நெளிகிறது.

ஆனால் அதை அவனால் தொடமுடியவில்லை. கை அதை நோக்கி செல்லவில்லை. எண்ண எண்ண கை நெளிந்து அகன்றதுபோல. நான் இன்னும் எண்ணவில்லை. எண்ணமென்றே ஆகாத வஞ்சமென்றிருக்கிறதா? அவன் உரக்க “கீழ்மகனே, உன்னைக் கொன்றாலன்றி தீராத தழல் இது” என்று கூவினான். சொற்களென எழுந்ததுமே அவ்வெண்ணம்

பருவடிவு கொண்டது. பருவிசையென கையை எடுத்துக்கொண்டது. அவன் கை சுழன்று ஆவநாழிக்குள் சென்று அரவம்பின் மேல் தொட்டது. அவன் தன் உடலுக்குள் குளிர்ந்த வேல் ஆழப்பதிந்து நின்றதுபோல் உணர்ந்தான். அவன் அரைக்கணத்திற்கும் குறைவாகவே செயலற்றிருக்கக்கூடும். அதற்குள் அர்ஜுனனின் ஏழு அம்புகள் வந்து அறைந்து அவனை தேர்த்தட்டில் வீழ்த்தின.

கர்ணனின் தேரை ஓட்டிய அவன் குலத்து இளையோனாகிய துருமன் கடிவாளங்களை இழுத்து பக்கவாட்டில் திருப்பி கர்ணனின் தோளில் இருந்த கவசத்தை முன்னால் காட்டச் செய்து மேலும் எழுந்த அம்புகளிலிருந்து அவனை காத்தான். தோள்கவசங்களை அறைந்து உதிர்ந்த அர்ஜுனனின் அம்புகள் அவனைச் சூழ்ந்து தெறித்தன. தேரைத் திருப்பி கர்ணனை மீட்டு அப்பால் கொண்டுசென்றபோது அவன் நோயுற்றவன்போல் நடுங்கிக்கொண்டிருப்பதை துருமன் கண்டான். “மூத்தவரே! மூத்தவரே!” என்று அவன் கூவினான். தாழ்ந்த குரலில் “செல்க! செல்க!” என்று கர்ணன் சொன்னான். பெருவிடாய் கொண்டவன்போல் தளர்ந்திருந்தது அவன் குரல். “மூத்தவரே” என்றான் துருமன். “செல்க, படைமுகம் செல்க!” என்றான் கர்ணன். துருமன் கடிவாளத்தை தளர்த்தி சவுக்கோசை எழுப்பி புரவிகளை முன்செலுத்தினான்.

அர்ஜுனனுக்கும் கர்ணனுக்கும் இடையே முன்பெனவே போர் மூண்டெழுந்தபோது துருமன் கர்ணனிடமிருந்த கை நடுக்கை பார்த்துக்கொண்டிருந்தான். கர்ணனின் கால்கள் தேர்த்தட்டில் வழுக்குவதுபோல் தோன்றின. ஒருகணம் அவன் விழுந்துவிட்டான் என்ற உணர்வையே துருமன் அடைந்தான்.

தன் விசை அனைத்தையும் திரட்டிக்கொண்டு கர்ணன் மீண்டும் எழுந்து அர்ஜுனனை தாக்கத் தொடங்கினான். அவர்களிடையே போர் கணம் குறையா நிகர்விசையுடன் நிகழ்ந்தபோது துருமன் முதற்கணம் ஆறுதல் அடைந்தான். இதோ எழுந்து அறைந்து வெல்வார், இதோ விஞ்சுகிறார், இதோ பேருருக்கொள்கிறார், இக்கணம் இப்போர் முடிவடையும், இன்னும் சில கணங்கள்... ஆனால் அவன் அகத்திலிருந்த அடுத்த ஐயம் எழுந்துவந்து அசைவிலா தூண் என முன்னால் நின்றது. அறியா விசையொன்றால் கர்ணன் கைபற்றி நிறுத்தப்படுவதை அவன் உணர்ந்துகொண்டிருந்தான். ஒருகணம்தான், ஆனால் அர்ஜுனனுடனான போரில் அதுவே பெரும் பின்னடைவாகிறது.

கர்ணனின் அம்புகள் எழுந்து அர்ஜுனன் பின்னடையத் தொடங்கியபோது நேர்மாறாக துருமனின் உள்ளம் சுருங்கிக்கொண்டிருந்தது. கர்ணனால் ஒருபோதும் பாண்டவ ஐவரையும் கொல்ல இயலாது என்று அவன் உறுதியாக உணர்ந்தான். அர்ஜுனனை கர்ணன் தன் அம்புகளால் அறைந்து அறைந்து பின்னடையச்செய்து பாண்டவப் பின்னணிப் படைகளின் மேல் அழுத்தி விசையழியச் செய்தான். அர்ஜுனனுக்குப் பின்னால் விழுந்து கிடந்த இரண்டு யானைகளின் உடலால் அவன் தேர் தடுக்கப்பட இளைய யாதவர் தேரைத் திருப்பி அர்ஜுனனை கர்ணனின் அம்புகளிலிருந்து அகற்ற முயன்றபோது மீண்டும் கர்ணனின் உடலில் அந்தத் துடிப்பு குடியேறுவதை துருமன் உணர்ந்தான். இழுத்துக்கட்டிய பாய்மரத்தில் காற்றதிர்வதுபோல் அதிர்வுகொள்ள வைத்தது அத்துடிப்பு. இக்கணம் இக்கணம் என்று அவன் உள்ளம் பொங்கியெழுந்தது. இதோ அர்ஜுனன் நச்சு தீண்டி விழப்போகிறான். இதோ போர் முடியப்போகிறது. இதோ அனைத்தும் அழியப்போகிறது. இக்கணம்! இக்கணத்தில்

நான் வாழ்கிறேன். மறுகணத்தில் இறந்தால்கூட இக்கணத்தை இனி எவரும் நினைவுகூரவில்லையென்றால்கூட இக்கணத்தில் வாழ்வதனூடாகவே இந்த யுகத்தை அறிந்திருக்கிறேன். ஆம் இக்கணம்!

ஆனால் மீண்டும் கர்ணன் தேர்த்தட்டில் உடல் தளர்ந்து அப்பால் சரிந்தான். அவன் தோள் சென்று தேர்த்தட்டில் ஒரு தூணை அறைந்தது. துருமன் வலப்புரவியை பிடித்திழுத்து தேர் அடைந்த அச்சரிவை தவிர்த்து அதை வளைத்து கொண்டுசெல்ல அர்ஜுனனின் அம்புகள் அவன் தோள்மேலும் தலைக்கவசத்தின் மேலும் அறைந்தன. தேர்த்தட்டின் அனைத்துப் பகுதிகளிலும் பொற்தகடுகள் மூடிய தூண்களை அம்புகள் வந்து அறைந்து பொறிபறக்கச் செய்தன. கர்ணன் நீள்மூச்சு விடுவதை துருமன் கேட்டான். அவன் புண்பட்டிருக்கிறான் என முதல் எண்ணம் எழுந்தது. உடனே பதற்றம்கொண்டு ஆடிகளில் நோக்கி அவ்வாறல்ல என உணர்ந்தான். தேரைத் திருப்பவா என எண்ணியபோது கர்ணன் மூச்சை இழுத்து மீண்டும் எழுவதை கண்டான். அவன் உள்ளத்தில் முதல் முறையாக கர்ணனின் மேல் ஒருதுளி வெறுப்பு எழுந்தது.

துருமன் கர்ணனை தன் தந்தை வடிவாகவே அறிந்திருந்தான். மறு எண்ணமில்லாத பணிவையே அவனிடம் கொண்டிருந்தான். அது குடிமூத்தான் என்பதனால் மட்டும் அல்ல. அவன் அறிந்த மானுடரில் முதன்மையானவன் கர்ணனே என்பதில் அவனுக்கு ஐயமிருக்கவில்லை. இளமைமுதல் அவன் கர்ணனைக் கண்டு வழிபட்டு வளர்ந்தான். கர்ணனின் தந்தை அதிரதரின் இளையோன் உக்ரரதரின் மூன்றாவது மைந்தன் அவன். அதிரதர்

உக்ரரதரைவிட பதினெட்டு அகவை மூத்தவர். அதிரதரின் தந்தை மகாரதரின் நான்காவது துணைவியின் மைந்தன் உக்ரரதர். அவர்களின் குடிக்கு மூத்தவராகிய அதிரதர் இளமையிலேயே உள்ளத்தால் முதியவராகிவிட்டவர். அங்கநாட்டில் தேர்ப்படையின் பகுதியாக அவர்களின் குடி இருந்தது. அச்சிறுநகரில் ஒருபோதும் படைப்புறப்பாடுகளை அறிந்திராத தேர்ப்படையில் அவர்களின் நான்கு தலைமுறைகள் வளர்ச்சியின்றி வாழ்ந்தனர். களத்தில் நின்று பொருதவோ நெடுந்தொலைவிற்கு தேர்களை கொண்டுசெல்லவோ தங்களால் இயலுமென்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

மகாரதர் இறந்ததும் அவரது முதற்துணைவி பார்ஸ்வையின் மைந்தனாகிய அதிரதர் அவர்கள் குடிக்கு மூத்தவரானார். தந்தையிடமிருந்து அமரத்தில் அமர்ந்து புரவிகளை சவுக்கால் அறைந்து ஓட்டுவது, அவற்றை காலையில் நீராட்டுவது, இலைகளால் உடலுருவி விடுவது, பயிற்சியோட்டம் அளிப்பது என்னும் எளிய பணிகளுக்கு அப்பால் அதிரதர் புரவிக்கலைகள் எதையுமே அறிந்திருக்கவில்லை. மூத்தவர் என்றே வளர்ந்தமையால் எப்போதும் கவலைகொண்ட பாவனையும் தற்பெருமையும் மேட்டிமைப்பேச்சும் அவரிடமிருந்தது. அங்கநாட்டின் புரவிக்கொட்டிலின் பொறுப்பாளராக அவர் ஆனபோது தன்னை தன்னைவிடப் பெரிய இடத்தில் நிறுத்திக்கொண்டார். மேலும் மிதப்பும் நடிப்பும் கொண்டவராக ஆனார். ஆனால் பெருமிதத்தால் சிறுத்து கேலிப்பொருளாவோர் உண்டு. பெருமிதத்தால் தங்களை வளர்த்து எண்ணியவாறே பெருகுபவரும் உண்டு. அதிரதர் புரவிக்கொட்டிலுக்கு பொறுப்பான பின்னரே புரவி நூல்களை பயிலத்தொடங்கினார். இரவும் பகலும் புரவிகளுடன் இருந்தார். கற்றவற்றை

கண்ணால் பார்த்தார். அவற்றை தன் குடியினருக்கு கற்பித்தார். ஒவ்வொரு நாளுமென அறிதல் பெருகி புரவிகளின் உள்ளறிந்தவரானார். தேரின் விசைகளை கடிவாளங்களால் உணர்பவர் என மாறினார்.

"அதிரதரின் கையில் தேர் ஒரு யாழ். கடிவாளங்கள் அதன் நரம்புகள். அவரது தேரில் ஊர்வது இனிய இசையொன்றின் ஒழுக்கில் செல்வது" என்று மன்னர் அவரை ஒருமுறை புகழ்ந்தார். தன் இளையோர், மைந்தர் அனைவரையுமே அதிரதர் அங்கநாட்டுப் படைகளுக்குள் கொண்டு வந்தார். அவரது ஏழு இளையவர்களுக்கும் மைந்தர்கள் பிறந்தனர். அவருக்கு மட்டும் மைந்தர்கள் அமையவே இல்லை. இளையோரின் மைந்தர்களையே தன் மைந்தர்கள் என்று அவர் கொண்டார். அவர்களுக்கு கற்பித்தார், பேணி வழிகாட்டினார். பின்னர் அவருக்கு யமுனையின் பெருக்கில் வந்த மைந்தன் ஒருவன் கிடைத்தபோது அதை தன் இளையோரின் மைந்தர் மீது கொண்டுள்ள பேரன்பின் கனிவென்றே கருதினார்.

"மைந்தர்கள் பிறக்காதவர்கள் உளம் சுருங்குகிறார்கள். பிற மைந்தர்களையெல்லாம் தனக்கு மறுக்கப்பட்ட மைந்தர்கள் என்றே எண்ணுகிறார்கள். அவர்கள் மேல் வெறுப்பும் அகல்வும் கொண்டு அகம் இறுகிவிடுகிறார்கள். இறுகிய அகம் என்பது விரல் மூடி குவிக்கப்பட்ட கைகள் போன்றது. மேலிருந்து அதில் ஈய நினைக்கும் தேவர்கள் தயங்கி தங்கள் கையை பின்னெடுத்துக்கொள்கிறார்கள். பிற மைந்தர் அனைவரையும் தனக்குப் பிறக்காத தன் மைந்தர் என்றே எண்ணி உளம் விரிபவன் கைகளை தெய்வத்தை நோக்கி விரித்து நீட்டுபவன். அந்த ஏந்திய கைகளுக்கு பரிசளிக்காதிருக்க தெய்வங்களால் இயலாது. என் இளையோன் மைந்தர் மீது நான் கொண்ட

பேரன்பினால் இம்மைந்தன் எனக்கு நீரன்னையால் அளிக்கப்பட்டான். இவன் நிழலில் என் மைந்தர் பெருகுவார்கள்” என்றார் அதிரதர்.

கர்ணன் தன் உடன்குருதியினர் அனைவருக்கும் இனியவனாக இருந்தான். அங்கநாட்டிலிருந்து அஸ்தினபுரிக்குச் சென்ற அதிரதர் தன் இளையோரையும் இளையோர் மைந்தரையும் அஸ்தினபுரிக்கு அழைத்துக்கொண்டார். ஒவ்வொருவரையும் பெருந்தேர் வல்லவர்களாக பயிற்றுவித்தார். கர்ணன் அங்கநாட்டுக்கு அரசனானதும் அரச குடியினருக்குரிய தலையணி உரிமை, இடைக்கச்சை உரிமை, மணியணியும் தகுதி ஆகியவற்றைப் பெற்று துருமனும் அவன் தந்தையும் குடிகளும் அங்கநாட்டுக்கு வந்தனர். அவர்களுக்கு அரசனும் தந்தையும் தெய்வ உருவுமாகவே கர்ணன் இருந்தான். கர்ணனுக்குத் தேரோட்டிகளாகவும் வில்துணைவராகவும் அதிரதரின் குலத்து மைந்தர்கள் அமைந்தனர். முதல்நாள் முதல் போர்க்களத்தில் ஒவ்வொருவராக மறைகையில் பிறர் அவ்வாய்ப்பு தனக்கு அமைகிறதென்றே எண்ணினர்.

அன்று கர்ணன் துருமனை நோக்கி “இளையோனே, இன்று நீ என் தேரை தெளி” என்று கூறியபோது தன் வாழ்வின் முதன்மைப் பெருந்தருணம் அமைகிறதென்று எண்ணி துருமன் தலைவணங்கி விழிநீர் கோத்தான். தேர்த்தட்டில் ஏறி அமர்ந்து அமரத்தை தொட்டு வணங்கி கடிவாளக் கற்றையை கையிலெடுத்தபோது “மூதாதையரே! தெய்வங்களே!” என்று உள்ளத்தால் கூவினான். ஒருவேளை இதுவே அந்நாளாக இருக்கக்கூடும். இத்தருணமே அதுவரை அவன் குலம் கொண்டுள்ள நீடுதவத்தின் விளைவென அமையலாம். இன்று

அங்கர் போர்வென்று அஸ்தினபுரியின் அரசனுக்கு முடிசூட்டி மீளலாம்.

அன்று களத்தில் கர்ணன் முழு ஆற்றலுடன் வெளிப்பட்டபோது துருமன் “இன்று என் இறைவனின் பொழுது. எழுகதிரவனின் தருணம்!” என்று உளம் எழுந்தான். ஆனால் அர்ஜுனனுடன் அவன் பொருதுகையில் கர்ணனிடம் உருவாகும் அறியாத தவிப்பொன்றை அவன் உணர்ந்தான். விசை கொண்டெழும் ஒன்று, அதை எதிர்த்து சற்றே மேலெழும் பிறிதொன்று என தேர்த்தட்டில் நின்று கர்ணன் நிலையழிவதை அவன் உணர்ந்துகொண்டிருந்தான். அவனுக்கு இருபுறமும் இருந்த ஆடிகளில் அவன் ஓரவிழிகள் கர்ணனை பார்த்துக்கொண்டிருந்தன. அவன் முகக்குறிகளால், கையசைவுகளால் ஆணைகளை பெற்றன. அவ்வொத்திசைவும் மெல்ல மெல்ல அணைந்து ஒருகணத்தில் அவனே தேர்த்தட்டில் நிற்பவனாகவும் ஆகி போர் புரிந்தான். தேர் உடலென்றாகி அதற்குள் உயிரென்று கர்ணனும் உளமென்று தானும் மாறிவிட்டதுபோல். அத்தேரே தயங்கியும் வளைந்தும் பாய்ந்தும் ஒழிந்தும் தன் போரை நிகழ்த்துவதுபோல்.

கர்ணன் பாண்டவ இளையோரையோ அர்ஜுனனையோ கொல்லக்கூடுமென்ற நம்பிக்கையை துருமன் இழந்துகொண்டே இருந்தான். ஆனால் அத்தருணத்தில் கர்ணன் மேலும் மேலுமென விசைகொண்டு உறுமி அர்ஜுனனை அம்புகளால் அறைந்து பின்னடையச் செய்துகொண்டிருந்தான். அர்ஜுனனின் தேர்மகுடம் உடைந்து தெறித்தது. அவன் தலைக்கவசம் சிதைந்தது. தோளிலைகள் ஒவ்வொன்றாக பறந்து அப்பால் விழுந்தன. அவன் தேர்த்தட்டெங்கும் கர்ணனின் அம்புகள் அறைந்து விழ ஏழுமுறை தேரில்

விழுந்தும் ஒருமுறை தேரிலிருந்து வெளியே தாவி ஓடி பிறிதொரு புரவிமேல் பாய்ந்து மீண்டும் தேர்த்தட்டில் வந்தமைந்தும் அர்ஜுனன் தன்னை காத்துக்கொண்டான். அவன் நெஞ்சிலும் தோள்களிலும் அம்புகள் பாய்ந்தறைந்தன. எக்கணமும் பேரம்பொன்றால் கர்ணன் அர்ஜுனனின் நெஞ்சு பிளக்கக்கூடும் என்று துருமனின் உளம் எண்ணினாலும் ஆழத்தில் பிறிதொரு குரல் அல்ல அல்ல என்று முணுமுணுத்தது.

அவனுள் அனைத்து முடிச்சுகளும் தளர்ந்து உள்ளம் முற்றமைந்துகொண்டே இருந்தது. கர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஒரே முகம் என்பதை இளமையிலேயே அவர்கள் அனைவரும் அறிந்திருந்தனர். அது ஏன் என்பதை ஒரு முணுமுணுப்பாக அவர்கள் குடிக்குள் பெண்டிர் பேசிக்கொண்டும் இருந்தனர். ஆனால் அந்தக் களம் என்பது ஒவ்வொருவரும் தன் உடன்பிறந்தாருக்கெதிராக நிகழ்த்தும் போர். கௌரவ பாண்டவ குடிகள் மட்டுமன்றி அங்கிருக்கும் அத்தனை ஷத்ரியருமே எவ்வகையிலோ உடன்குருதி உறவு கொண்டவர்கள். உடன்குருதியினரை கொல்வதே அக்களத்தின் வெற்றியின் உச்சமென்றாயிற்று. அவ்வெல்லையைக் கடந்தவனே அங்கு வெல்லவும் மீளவும் முடியுமென்று அமைந்தது. நூற்றுவரைக் கொல்வேன் என்று வஞ்சினம் உரைத்து பெரும்பகுதியினரின் குருதியாடி நின்றிருந்தான் பீமன். கொன்றவர்கள் நுண்ணிய எல்லைக்கோடொன்றை கடந்துசென்று பிறிதொருவர் ஆயினர். அவர்கள் எதை இழந்தனர் என அவர்களே அறிந்தனர். அவர்கள் தளரா போர்வல்லமையை ஈட்டினர்.

கர்ணனும் கொல்லக்கூடும் என்று துருமன் முன்னர் எண்ணியிருந்தான். கொல்வேன் என்று வஞ்சினம் உரைத்து அன்று காலை கர்ணன் எழுந்தபோது “ஆம்!” என்று அவனுளமும் பொங்கியெழுந்தது. உடல் மெய்ப்பு கொள்ள விழிநீர் படர்ந்தது. தேரில் எழுகையில் அன்று அது நிகழும் என்று எதிர்பார்த்தான். நான்கு முறை நகுலனையும் சகதேவனையும் கர்ணன் அக்களத்தில் எதிர்கொண்டான். ஒருமுறை பீமனை. இருமுறை யுதிஷ்டிரரை. ஒவ்வொரு முறையும் அம்புகளால் அவர்களை அறைந்து கொல்லும் தருணம் வரை சென்று இயல்பாக திரும்பிக்கொண்டு அவர்களை விடுவித்தான். ஒருமுறை யுதிஷ்டிரரிடம் “செல்க! இங்கு வீணாக தலைகொடுத்து அழியவேண்டாம். அந்தத் தலை குருதிபடிந்த இம்மண்ணில் உருளும் அளவுக்கு எடைகொண்டது அல்ல” என்று ஏளனம் உரைத்த பின்னரே எடுத்த அம்பை மீள வைத்தான். யுதிஷ்டிரர் கண்களில் சீற்றத்துடன் பற்களைக் கடித்து ஒரு கையில் வில்லும் இன்னொரு கையில் அம்பும் செயலற்றிருக்க நோக்கியபின் தலைகுனிந்து பாகனிடம் தன் தேரை திருப்பும்படி ஆணையிட்டார்.

கர்ணன் அர்ஜுனனுக்காக தன் இறுதி நஞ்சையும் திரட்டுவதாக துருமன் எண்ணினான். ஆனால் அர்ஜுனனுடனான போரில் இறுதித் தருணத்திலும் அவன் வில் தழைவதை கண்டான். நம்பிக்கையிழந்து அவன் அகம் தளர்ந்திருந்தபோது கர்ணன் மேலெழுந்து அர்ஜுனனை வென்று சென்றுகொண்டிருந்தான். அதை அறிந்ததும் அவன் உள்ளம் மீண்டும் எழுந்தது. ஒரு தருணத்தில் விழிகளுக்கும் செவிகளுக்கும் அப்பால் பிறிதொன்றால் அவன் கர்ணனை உணரத்தொடங்கினான். கர்ணனின் எண்ணங்களுக்கும் எடுத்த அம்புகளுக்கும் முன்பு

இருந்த தருணங்களையும் தயக்கங்களையும் தானென்று உணர்ந்தான். அம்புகளைக்கொண்டு அர்ஜுனனை அறைந்தறைந்து பின்செலுத்திக் கொண்டிருந்தான். அர்ஜுனன் அனைத்துக் கவசங்களும் சிதற இடைக்குமேல் கவசங்களே இல்லாத வெற்றுடலுடன் திகைத்தவன்போல் தன் தேரில் நின்றிருந்தான்.

பெருங்கூச்சலுடன் வஞ்சினச் சொல்லுரைத்தபடி கர்ணன் தன் நாகபாசத்தை எடுத்தான். உடல் கல்லென்றாகி அனைத்து அசைவுகளும் அழிய, அக்கணம் மட்டுமே முன்னால் விரிந்திருக்க துருமன் தேர்த்தட்டில் அமர்ந்திருந்தான். வில்லிலிருந்து கிளம்பிய நாகபாசம் எட்டு சிறகுகளை விரித்தது. நீல நச்சுத் துளியொன்றை அலகென சூடி முழங்கியபடி அர்ஜுனனை நோக்கி பாய்ந்தது. இளைய யாதவர் தேரை முன் தெளித்து விந்தையான முறையில் சற்றே முன்திருப்ப அதன் இடப்பக்கச் சகடம் மண்ணில் இறங்கி புதைந்து தேர் பக்கவாட்டில் கவிழ்வதுபோல் குடை சாய்ந்தது. அர்ஜுனனின் தலைக்கு மேலாக காற்றைச் சீவியபடி உறுமிச்சென்ற நாகபாசம் அப்பால் சுழன்று மேலெழுந்து ஏழுமுறை வட்டமிட்டு சிறகோசையுடன் மீண்டும் கர்ணனிடம் வந்தது. அதைப் பிடித்து கையிலெடுத்தபோது கர்ணனிடம் நீள்மூச்சொன்று எழுந்தது.

இளைய யாதவர் சவுக்கால் வலப்பக்கப் புரவியை அறைந்து தேரை முன்னெடுத்து மீட்டு வளைத்து அப்பால் கொண்டுசென்றார். மீண்டும் கர்ணன் நாகபாசத்தை ஏவுவான் என எதிர்பார்த்து, உடல் துடிக்க திரும்பி, கர்ணன் நின்றிருந்த கோலத்தைப் பார்த்து பெருமூச்சுடன் தானும் உளம் தளர்ந்தான் துருமன். பின்னர் அவன் உள்ளத்தில் அக்கணம் ஒவ்வொரு

தனியசைவாக விரியத் தொடங்கியது. அக்களத்தில் எங்கும் ஆழ்ந்த பிலங்கள் உண்டென்று அவன் அறிந்திருந்தான். அவற்றில் மென்மணல் பொருக்கு மூடியிருக்கையில் தேர்ச்சகடங்கள் ஆழ்வது பலமுறை நிகழ்ந்திருந்தது. எந்தத் திறன்கொண்ட தேராளியும் மறைந்திருக்கும் அந்த ஆழ்வெடிப்புகளை முன்னுணர இயலாது. எனினும் அத்தருணத்தின் ஒத்திசைவு அவனை உளம் வியந்து அமையச்செய்தது. தெய்வங்கள் அமைத்த ஒரு கணம். அல்லது அத்தேரின் அமரத்தில் தெய்வமே அமர்ந்திருக்கிறது.

அவன் விழிமலைக்க இளைய யாதவரை நோக்கிக்கொண்டிருந்தான். ஒருகணம் அறிந்தான் தன் தேரில் தன் வடிவில் அமர்ந்திருப்பதும் அவரே என. அத்தருணத்தில் அர்ஜுனனின் அம்பு எழுந்து வந்து அவன் தலையை கொய்தெறிந்தது.

# கார்கடல் - 66

கர்ணனின் தேர் போர்முனையிலிருந்து பின்னடைந்து சுழித்துக்கொண்டிருந்த இரண்டாம்நிரையை அடைந்து நின்றது. புரவியில் இருந்தபடியே அத்தேரின் புரவிக்கடிவாளங்களைப் பற்றி அதை செலுத்திவந்த அங்கநாட்டுத் தேர்வலனாகிய சக்ரன் அதை நிறுத்திவிட்டு சங்கு எடுத்து முழக்க மருத்துவஏவலர் வந்து தலை அறுந்து ஒருக்களித்து விழுந்துகிடந்த துருமனின் உடலை எடுத்து நிலத்திலிட்டனர். அவன் தலைக்காக தேரின் அடியில் நோக்கியபின் உடலை மட்டும் தூக்கி அப்பால் கொண்டுசென்றனர். தேர்த்தட்டில் தளர்ந்து அமர்ந்தவனாக கர்ணன் அதை வெறுமனே

நோக்கிக்கொண்டிருந்தான். சக்ரன் “புரவிகளை மாற்றவேண்டும், மூத்தவரே. இரு புரவிகள் கழுத்து அறுபட்டு குருதி வார்கின்றன” என்றான். கர்ணன் தலையசைத்தான்.

சக்ரன் மீண்டும் சங்கொலி எழுப்ப இரு புதிய புரவிகளுடன் ஏவலர் வந்தனர். நுகத்திலிருந்து புரவிகளை அவிழ்த்து அப்பாலிட்டனர். அவை மெல்லிய உடல்துடிப்புடன் அப்போதும் ஓடிக்கொண்டிருப்பவைபோல கால்களை அசைத்தன. வால் நிலத்தில் கிடந்து சுழன்றது. குருதி பெருகி மண்ணை நனைப்பதை இருளிலும் நோக்க முடிந்தது. புதிய புரவிகள் குருதிவார்ந்துகொண்டிருந்த புரவிகளைக் கண்டு விழியுருட்டி நீள்மூச்செறிந்தன. கால்தயங்க நின்ற அவற்றை அடித்து முன்செலுத்தி நுகத்தில் கட்டினர். அவை மூக்குவிடைத்து ஒன்றையொன்று முகர்ந்து நீள்மூச்செறிந்தன. புரவிகளை கட்டி முடித்ததும் “முடிந்தது, மூத்தவரே” என்றான் சக்ரன். கர்ணன் “ஆம்” என்றான். ஆனால் அசையாமல் அப்படியே அமர்ந்திருந்தான். “கிளம்புவதா?” என்றான் சக்ரன். கர்ணன் ஒன்றும் சொல்லவில்லை. அவன் கழுத்துத்தசை மட்டும் மெல்ல அசைந்தமைந்தது. சக்ரன் அவன் சொல்லுக்காக காத்திருந்தான்.

கர்ணனை நோக்கி தேரில் வந்து பாய்ந்திறங்கிய துரியோதனன் “என்ன நிகழ்ந்தது? அங்கரே, உங்கள் இலக்கு பிழைத்தது என்று அறிந்தேன்” என்றான். கர்ணன் நிமிர்ந்து நோக்கி பெருமூச்சுவிட்டான். “நீங்கள் அவனை உயிருடன் விட்டுவிட்டீர்கள் என்கிறார்கள். நாகபாசம் குறிபிழைக்க வாய்ப்பே இல்லை என்றார்கள்” என்றான் துரியோதனன். கர்ணன் நோயுற்றவன்போல தாழ்ந்த குரலில் “என்ன நிகழ்ந்தது என்று அறியேன். அவனுடைய மூத்தோரின் நற்செயல்களின்

பயன் வந்து அவனைக் காத்தது என்றே தோன்றுகிறது. அவன் தேரின் சகடம் பிலத்தில் ஆழ்ந்து தேர் சரிந்தது. என் அம்பு குறி தவறியது” என்றான். “அவர் இயற்றியதுதான் அது. ஐயமே இல்லை… அவர் தேரை பிலத்தில் இறக்கினார்” என்றான் துரியோதனன். “அவர் நோக்கவில்லை, அவர் விழிகள் தேர்ப்புரவிகளில் இருந்தன” என்று கர்ணன் சொன்னான். “அவர் நோக்காமல் இங்கு எதுவும் நிகழ்வதில்லை” என்றான் துரியோதனன்.

தேரில் அருகணைந்த துச்சாதனன் “மூத்தவரே, கடோத்கஜனின் படைகளை நம்மால் தடுக்க முடியவில்லை. நம் தரப்பின் அரக்கர்கள் ஒவ்வொருவராக கொல்லப்படுகின்றனர்” என்றான். துரியோதனன் கர்ணனிடம் “உங்கள் அரவம்பு எழுக… இன்றே அர்ஜுனன் களம்பட்டாகவேண்டும்” என்றான். கர்ணன் “அவன் ஊழ் அவனை காக்கிறது… என் ஊழ் என்னை தடுப்பதுபோல” என்றான். துரியோதனன் சினத்துடன் “எந்தப் போரும் ஊழுக்கு எதிரானதே. ஊழே வெல்லும் என்றால் நிமித்திகர்களே எவர் நாடாள்வது என்று முடிவெடுத்தால் போதும்” என்றான். கர்ணன் “நான் நிலைகுலைந்துள்ளேன். என் இலக்கு இன்றுவரை பிழைத்ததில்லை. அரவம்பு இலக்கு பிழைத்தது என்றால் அவனுடன் தெய்வங்கள் உள்ளன என்றே பொருள்” என்றான். “எனில் தெய்வங்களுடன் பொருதுவோம்” என்று துரியோதனன் கூவினான்.

மறுபக்கம் தேரில் அருகணைந்த கிருபர் “இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்? அர்ஜுனனும் பீமனும் முழுவிசைகொண்டு நம் படைகளை தாக்கிக்கொண்டிருக்கிறார்கள். விழியிழந்தவர்கள்போல் நமது படைகள் முட்டிமோதிக்கொண்டிருக்க அம்புகளால்

கொன்றுகுவிக்கிறார்கள்... சாத்யகியும் திருஷ்டத்யும்னனும்கூட தடுக்கவியலாதவர்களாக ஆகிவிட்டனர்... நம்மை வழிநடத்திய அரக்கர்கள் அழிந்துகொண்டிருக்கிறார்கள். நமது படைசூழ்கையை மீண்டும் ஒருங்கிணைக்க வேண்டியிருக்கிறது" என்றார். துச்சாதனன் "நம்மில் இரவுவிழி கொண்டவர் அங்கர் மட்டுமே. அவர் முன்னின்று நடத்தவேண்டும் இப்போரை" என்றான். துரியோதனன் "அங்கரே, நாங்கள் உங்களுக்கு அடைக்கலம். எங்களை காத்தருள்க!" என்றான். கர்ணன் பற்களைக் கடித்து விஜயத்தைத் தூக்கி "இது என் வஞ்சினம். நான் எழுகிறேன். அறிக, இப்போரில் பாண்டவர் ஐவரையும் வெல்வேன்! இன்று போர்முடிந்தால் அவர்கள் படைக்கலம் எடுக்கமாட்டார்கள்... இன்று என் அரவம்பு பலிகொள்ளும்!" என்றான்.

கிருபர் வாய்விட்டு நகைத்து "அங்கனே, சற்றுமுன் நீ போர்புரிந்ததை நான் என் விழிகளால் நோக்கினேன். உன் கைகள் சீறி எழுகின்றன. எதிர்ப்பைக் கண்டதும் மெல்ல மெல்ல தாழ்கின்றன. அந்தணர் சொல்லால் வீரர், வணிகர் சூழ்ச்சியால் வீரர், சூதர் கனவுகளில் வீரர் என்று கூற்று உண்டு. நீ உன் ஆணவப்பேச்சை நிறுத்தி ஊன்விழிகளால் களத்தை பார். அதன்பின் உன் ஆற்றலை உணர்ந்து எதிரியை கணக்கிட்டு களம்நின்று போரிடு" என்றார். கர்ணன் "என்ன சொன்னீர்?" என்று கூவியபடி கையில் அம்புடன் அவரை நோக்கி திரும்பினான். "என் வீரத்தை இழிவுசெய்வோர் எவரையும் எதிரி என்றே கருதுவேன்... எவரும் எனக்கு ஒரு பொருட்டு அல்ல" என்றான். "வீரமா? உனக்கா? எண்ணிப்பார், எத்தனை களங்களில் நீ தோற்றோடியிருக்கிறாய் என. அறிவிலி, விராடநாட்டுப் போரில் அர்ஜுனன் ஒருவனே உன்னை தோற்றுப் பின்னடையச் செய்தான். இங்கே பாண்டவர்

ஐவரும் சிகண்டியும் சாத்யகியும் திருஷ்டத்யும்னனும் கடோத்கஜனும் இணைந்து வந்துள்ளனர்…” என்றார்.

கர்ணன் உடல்பதற சொல்லிழந்து நின்றான். பின்னர் உடைந்த குரலில் “நச்சுநா கொண்ட அந்தணர் நீர். அவையமர்ந்து இழிசொல் உரைத்து இரந்துண்டு வாழும் கீழ்மகன். உயிருக்குத் துணிந்து இச்சொற்களை என்னிடம் சொன்னீர். உங்கள் உணர்வென்ன என்று புரிந்துகொள்கிறேன். அதற்குப் பெயர் அச்சம். அதற்கு அடிப்படை கோழையுள்ளம். பரிசில் பெற்று வாழும் பிறவிகொண்ட நீர் இங்கே எழும் அம்புகளைக் கண்டு அஞ்சிவிட்டீர். உயிர்பிழைத்து ஓடுவதைப்பற்றி திட்டமிடுகிறீர். பாண்டவர்கள் வென்றால் அவர்களுடன் சேர்ந்துகொண்டு அவர்களின் அவையிலமர்ந்து இழிசொல் உரைத்து இரந்துண்டு வாழ எண்ணுகிறீர். ஆகவே இங்கே அரசர் முன் அவர்களை புகழ்ந்து பேசுகிறீர்” என்றான். நாணிழுத்து ஓசையெழுப்பி “கேளுங்கள், இந்த நாணோசை இனி இந்தக் களத்தை நிறைக்கும். இன்றே அவர்கள் ஐவரையும் வெல்வேன். அந்த அரக்கப்பிறவியை களத்தில் கொல்வேன். ஆணை!” என்றான்.

கிருபர் “நீ சொன்னவற்றை இன்றுவரை செய்ததில்லை… செய்தபின் வா, உன் சொல்லை செவிகொள்கிறேன்” என்று திரும்பிச் சென்றார். கர்ணன் திரும்பி துரியோதனனிடம் “அரசே, இழிசொல் உரைக்கிறார். என் வீரத்தை களத்தில் இகழ்கிறார். இவருடைய உள்ளம் செல்லும் திசையை உணர்க!” என்றான். துரியோதனன் “இன்று இக்களத்தில் பெரும்பாலானவர்கள் எண்ணுவது அவருடைய சொற்களையே” என்றபின் தன் தேரை திருப்பினான். அத்தருணத்தில் நாணோசையுடன் அவர்களை நோக்கி வந்த அஸ்வத்தாமன் கர்ணனை நோக்கி “கீழ்மகனே, உன் நா எல்லை மீறியது என்று

கேட்டேன். சாகத் துணிந்து நீ சொல்லெடுத்திருக்கிறாய். அந்தணர்குலத்து ஆசிரியரை இழித்துரைக்க உனக்கு என்ன தகுதி? பேடியல்ல என்றால் எடு உன் வில்லை. இக்களத்திலேயே காட்டுகிறேன் நீ ஒரு வெற்றுச்சொல்வீரன் என்று. மண்ணில் இழையும் புழு நாகமென படமெடுக்க முயல்வதே உன் வீரம் என்று உனக்கே தெரியச் செய்கிறேன்... எடடா அம்பை" என்றான்.

கர்ணன் "நீ யார்? அந்தணனா? நிலம் விரும்பி வில்லெடுத்த நீ அந்தணனும் அல்ல. அந்தணக்கொடையாக மண்பெற்று ஆள்வதனால் ஷத்ரியனும் அல்ல. குலமிலாதவன் நீதான்... உன்னை கொன்றுவிட்டு உன் உடல்நோக்கி காறி உமிழ்கையில் சொல்கிறேன் நீ கேட்டதற்கு மறுமொழியை" என்று தன் வில்லை தூக்கினான். துச்சாதனன் பாய்ந்து கர்ணனின் தேரிலேறி வில்லை பற்றிக்கொண்டான். "மூத்தவரே, நாம் நமக்குள் போரிட்டுக்கொள்ளவா இந்தக் களத்திற்கு வந்தோம்? இங்கே நீங்கள் ஒருவருக்கொருவர் பாய்ச்சிக்கொள்ளும் ஒவ்வொரு அம்பும் சென்று தைப்பது என் தமையனின் நெஞ்சில் என்று உணருங்கள்." கர்ணனின் வில் தாழ்ந்தது. அஸ்வத்தாமன் "இவ்விழிமகனின் நாவை அறுக்காமல் நின்றிருந்தால் என் குலம் என்னை பழிக்கும். என் தந்தைக்கு முன் இழிவுகொண்டவன் ஆவேன்" என்றான்.

"இங்கே நாம் அனைவருமே நிலைகுலைந்திருக்கிறோம்... நாம் ஒவ்வொருவரும் தோற்றுக்கொண்டிருப்பதை உணர்கிறோம். அதுவே நம்மை கீழ்ச்சொல் பேசச் செய்கிறது" என்றான் துச்சாதனன். "எவர் சொன்னார் நான் தோற்றேன் என? எங்கு நான் தோற்றேன்? சொல்!" என்று அஸ்வத்தாமன் கூவினான். "தோற்றவன் இந்தச் சூதன்மகன். இவன் கூறிய அத்தனை

சொற்களும் வீண் என களத்தில் காட்டிவிட்டு தன் தம்பியர் அனைவரையும் களத்தில் பலியிட்டுவிட்டு இதோ வந்து நின்றிருக்கிறான்…” கர்ணன் “நீ வென்றவர்களின் பெயரை சொல்… இரந்து நாடுபெற்று ஆண்டு தருக்கும் கீழ்மகனே, சொல். நீ களத்தில் கொன்றவர் எவர்?” என்று கூவினான். அஸ்வத்தாமன் திகைத்தான். பின்னர் “கொல்கிறேன். இன்றே கொன்றுகுவிக்கிறேன்… நீ உன் விழிகளால் நோக்கு” என்றான். “சொல்லாதே, செய்துகாட்டு. அதன்பின் என் முன் எழு” என்றான் கர்ணன்.

அஸ்வத்தாமன் வில் தாழ்த்தி பெருமூச்சுவிட்டான். கர்ணன் “நான் உயிருடன் எஞ்சினால் உன்னைத் தேடி வருவேன். நீ இப்போது சொன்ன சொற்களுக்காக உன் நாக்கை அறுக்க எழுவேன்… இப்போது செல்” என்றான். அஸ்வத்தாமன் “நான் சொல்வதும் அதையே. உன் நாவுக்காக நான் வருவேன்… எண்ணிக்கொள்க!” என்றான். “மூத்தவரே, நீங்கள் களமெழுந்தாகவேண்டும். இக்களத்தில் விழிகொண்டோர் இன்று நீங்களும் உத்தரபாஞ்சாலரும் மட்டுமே. இருவரும் இங்கே போரிட்டுக்கொண்டிருந்தால் நம் படைகளை நாம் அர்ஜுனனின் அம்புகளுக்கு பலிகொடுக்கிறோம் என்று மட்டுமே பொருள்” என்றான் துச்சாதனன். கர்ணன் “ஆம், நான் ஐவருக்கும் இன்று குருதிச்சுவையை காட்டுகிறேன். அருள்க தெய்வங்கள்!” என்றபின் வில்லை எடுத்தபடி களமையம் நோக்கி சென்றான்.

சஞ்சயன் தொடர்ந்தான்: போர்க்களத்தில் இவ்வாறு தங்களுக்குள் பூசலிட்டுக்கொள்வதும் இழந்துகொண்டிருக்கும் அகவிசையை மீட்டுக்கொள்ளும் சூழ்ச்சியே. ஒருவரை ஒருவர் சிறுமைசெய்து சினமூட்டி அச்சினத்தை பகைவர்மேல்

திரட்டிக்கொண்டு களமெழுந்தனர். தளர்ந்த நரம்புகளை மீண்டும் முறுக்கிக்கொண்டனர். அவர்கள் அறிந்து அதை செய்யவில்லை, ஆனால் எதைச் செய்து எழவேண்டும் எனத் தவித்த அவர்களின் அகம் அதை கண்டுகொண்டது. கிருபரும் அஸ்வத்தாமனும் சினத்தால் விரல்நுனிகள் அதிர பற்கள் உரசும் ஒலி காதுகளில் ஒலிக்க களம் நோக்கி சென்றனர். தன் இளையோர் இறந்த உளத்தளர்விலிருந்து மீண்டு காலால் ஓங்கி தேர்த்தட்டை மிதித்து செல்க செல்க என ஆணையிட்டு கர்ணன் போர்க்களம் சென்றுசேர்ந்தான்.

அஸ்வத்தாமன் தொலைவிலேயே திருஷ்டத்யும்னன் முழுவீச்சுடன் கௌரவப் படையினரை வென்று பின்னடையச் செய்தபடி வருவதை கண்டான். நாணொலி எழுப்பியபடி சென்று அவனை எதிர்கொண்டான். கர்ணனிடம் சொல்ல எஞ்சியிருந்த சொற்கள் அவன் நாவிலிருந்து எழுந்தன. “கீழ்மகனே, நீ ஆண்மையற்றவன் என்று அறிந்திருந்தேன்... வில்லெடுத்து எளிய வீரரைக் கொன்று உன் ஆண்மையை நீ நிறுவமுடியாது... என் வில்லுக்கு எதிர் நில்” என்றான். மிகச் சரியாக பாஞ்சாலனிடம் எச்சொல்லை சொல்லவேண்டும் என தான் அறிந்திருப்பதை அவனே வியந்தான். எளிய வம்புகளுக்கு அவன் ஒருநாளும் செவிகொடுத்ததில்லை. ஆனால் ஒரு சொல்விடாமல் அனைத்தும் எவ்வகையிலோ உள்ளே சென்று சேர்ந்துள்ளன. அந்த ஆவநாழியை அவன் அறிந்ததே இல்லை. ஆனால் நா அறிந்திருந்தது. தேவையென்றபோது இயல்பாகச் சென்று உரியதைத் தொட்டு எடுத்தது. கொலைநச்சு கொண்டது. எரிந்து எரிந்து எழுவது.

இங்கே ஒவ்வொருவரும் ஒவ்வொருவரைப் பற்றியும் உரிய சொற்களை வைத்திருக்கின்றனர் என அஸ்வத்தாமன்

எண்ணிக்கொண்டான். தோழர்களுக்கு, உடன்பிறந்தாருக்கு, ஆசிரியர்களுக்கு, பிதாமகர்களுக்கு. ஒருகணத்தில் அந்தக் களத்தில் ஒவ்வொருவரும் பிறர்நோக்கி உமிழ்ந்த சொற்களை அவன் நினைவுகூர்ந்தான். நஞ்சுகொண்ட ஒரு சொல்லும் ஆவநாழியில் இல்லாத ஒருவர் இக்களத்தில் இருப்பாரா? யுதிஷ்டிரர் இருக்கக்கூடும். அதனால்தான் அவர் எதிரிகள் ஒவ்வொருவரையும் அஞ்சுகிறார். தன்னவர் ஒவ்வொருவரைப் பற்றியும் அச்சம்கொண்டிருக்கிறார். இந்தக் களத்தில் வஞ்சினம் என்றும் உளச்சோர்வென்றும் ஒரு இழிசொல்கூட உரைக்காதவர் அவர் மட்டுமே. இக்களத்தில் ஒருவர் கொல்லப்பட்டால் தெய்வங்கள் வருந்துமென்றால், கொல்பவரின் குடிமேல் தீராப் பழி சேருமென்றால் அது யுதிஷ்டிரர் மட்டும்தான்.

திருஷ்டத்யும்னன் அஸ்வத்தாமனின் சொற்களால் தன் சினத்தை எரித்து பெருக்கிக்கொண்டான். கைநீட்டி இளிவரலும் வெறுப்பும் நிறைந்த முகத்துடன் "அளிக்கொடையெனக் கிடைத்த நிலத்தை ஆளும் நீயா ஆண்மைகொண்டவன்? செல்க, இன்னும் சில ஷத்ரியர்களுக்கு மலம்கழுவிவிடுக! அவர்கள் அளிக்கும் மண்பொருக்குகளை கூட்டிவைத்து மன்னன் என்று அமர்க!" என்றான். அச்சொல் அதுவரை அங்கே பேசப்பட்ட அனைத்திலும் கீழ்மை என உணர்ந்து அஸ்வத்தாமன் உடல்நடுங்கினான். சிலகணங்கள் சொல்லே எழவில்லை. ஆனால் தான் அங்கே எதிர்பார்த்தது அதுவே என அவனுடைய அகம் அறிந்திருந்தது. அப்போரில் கௌரவர் வெல்லப்போவதில்லை என அகம் அறிந்திருந்தது. வஞ்சமென்றும் எதுவும் எஞ்சவில்லை. எரிந்தேறும் சினமில்லையேல் அக்களத்தில் வில்லுடன் எழ முடியாது.

“இழிமகனே, இதன்பொருட்டே உன் தலையை உதைத்து விளையாடுவேன். பேடி! நீ ஆண்மகன் என்றால் உன் நிலத்தை ஆண்டுகொண்டிருந்த என்மேல் படைகொண்டு வந்திருக்கவேண்டும்” என்று அஸ்வத்தாமன் கூவினான். அச்சொற்களில் கீழ்மை போதவில்லை என உணர்ந்த அகம் உடனே மேலும் சொற்களை அள்ளிக்கொண்டது. “நிலம் ஷத்ரியனுக்கு மனைவியைப்போல. தன் துணைவியை பிறன் பெண்டாள நோக்கியிருப்பவன் பேடி மட்டும் அல்ல, பேடியின் மைந்தனும்கூட.” திருஷ்டத்யும்னன் “கீழ்பிறப்பே...” என்று கூவியபடி அம்புகளால் அஸ்வத்தாமனை அறைந்தான். அதே வெறியுடன் அஸ்வத்தாமன் திருஷ்டத்யும்னனை அறைந்தான். ஒவ்வொரு சொல்லுக்கும் அவர்கள் வசைபாடிக்கொண்டார்கள். வசைகளே வில்லென்றாகி நாண் என உள்ளத்தை இழுத்து இறுக்கி அந்த அம்புகளை ஏவின.

அவர்கள் இருவரும் புரிந்த போர் அதன் இயல்கையின் எல்லையில் தொடங்கியது. எனவே ஒவ்வொரு அம்பும் உச்சவிசைகொண்டு சென்று எதிரியின் தேரை அறைந்தது. ஆனால் ஒவ்வொரு அம்பாக அவர்களை உளவிசை தளரச்செய்தது. அம்புகள் எழுந்தோறும் அகம் ஓய்ந்தனர். அஸ்வத்தாமன் அதுவரை திருஷ்டத்யும்னனை பார்க்கவில்லை என பார்வை மெல்ல மெல்லத் தெளிந்தபோது உணரத்தொடங்கினான். அவனுடைய தோற்றம் அணுக்கமாகத் தெரிந்தது. அவன் உடற்தசைகள், நரம்புப்புடைப்புகள், விழியலைவுகள், உதடுகளின் அசைவுகள். அவனை இக்கணம்தான் முதல்முறையாக பார்க்கிறேன். இதுவரை பார்த்திருந்த நூறாயிரம் வடிவங்களுடன் சென்று இணைத்துக்கொள்கிறேன். இத்தனை இனியவனாகவே அவன் முன்பும் இருந்திருக்கிறான். அவனை என் உடன்பிறந்தான்

என்றே என்றும் நான் உணர்ந்திருக்கிறேன்.
விழிமூடிவிடாமலிருந்தால் அவனை நோக்கி நான் அம்புகளை பெய்திருக்கப் போவதில்லை. என் கைகளால் இவன் இறந்தால் நான் என்னில் ஒரு பகுதியை கொன்றழிக்கிறேன்.

சினம்கொண்டிருக்கையில் பார்வையே முதலில் இல்லாமலாகிவிடுகிறது. பார்ப்பவை அனைத்தும் இலக்குகள் மட்டுமாக பிரிந்து சிதறிவிடுகின்றன. இன்னும் இன்னும் என உள்ளம் எழுகிறது. சினமும் உடலில் இருந்து ஒருவகை வெளியேற்றம் மட்டுமே. ஐந்து உடல்மலங்களைப்போல நுண்ணுருக்கொண்ட ஒன்று. வெளியேறும் மலம் உடலை தூய்மைப்படுத்துகிறது. வெளியேறவேண்டும் என்னும் அதன் துடிப்பே உந்துதலாக ஆகிறது. எத்தனை வெறியுடன், விசையுடன் அது உடலைவிட்டு நீங்குகிறது! வில்லில் இருந்து எழும் அம்புகளைப்போல. மலத்தை உமிழ்கிறது உடல். மலத்தை வீசியடிக்கிறது. மலம் உடலுக்குரியது அல்ல. அதை உடலைவிட மலம் நன்கறிந்திருக்கிறது. அது மண்ணுக்குரியது. மண் அதை மீண்டும் அமுதெனச் சமைக்கிறது. மலம் இழந்த உடல் வெறுமையை அல்ல நிறைவையே உணர்கிறது. மலமிருந்த இடத்தில் வந்தமைவது உடலுக்குள் வாழும் இனிமைகள். ஆகவேதான் மலவெளியேற்றம் மானுட உடலின் இன்பங்களில் ஒன்றென அமைந்திருக்கிறது.
முற்றொழியவேண்டும். ஒரு துளிகூட எஞ்சாமல்.
இச்சினமெனும் அழுக்கு நீங்கி நான் இங்கே எடையில்லாது நின்றிருக்கவேண்டும்.

அஸ்வத்தாமன் தன் வில்லை திருப்பிக்கொண்டு அப்பால் செல்ல அக்கணத்தை முன்பறிந்திருந்தவன்போல திருஷ்டத்யும்னன் உடல்தளர்ந்து தேர்த்தட்டில் அமர்ந்தான்.

அவன் நெஞ்சிலும் தோளிலும் தொடையிலும் கவசங்கள் உடைந்த இடைவெளிகளில் அம்புகள் தைத்திருந்தன. அவன் தேர் உடைந்து காற்று சீறிக்கொண்டிருந்தது. அவன் உளநிலையை அறிந்தவனாக பாகன் தேரை பின்னிழுத்து கொண்டுசென்றான்.

வில்லுடன் எழுந்த கர்ணன் படைப்பிரிவுகளினூடாக அர்ஜுனனை தேடிச்சென்றான். இரவுக்குள் பாண்டவப் படைகளும் கௌரவப் படைகளும் வெறிகொண்டு போரிட்டுக்கொண்டிருந்தன. முழுப் படையையும் நோக்கும் விழிகள் இல்லாமலாகிவிட்டிருந்தமையால் ஒவ்வொருவரும் ஒற்றை இலக்கை தெரிந்தெடுத்து அது ஒன்றே போர் என எண்ணி களம்நின்றனர். சல்யர் விராடருடன் போரில் ஈடுபட்டிருந்தார். விராடர் சல்யரின் அம்புகளை ஏற்று பின்னடைந்துகொண்டிருந்தார். வில்லைக் குலைத்தபடி எழுந்து சென்று ஒரே அம்பில் விராடரின் நெஞ்சை துளைக்கவேண்டும் என கர்ணனின் உள்ளத்தில் வெறியெழுந்தது. விஜயத்தை இறுகப்பற்றி அந்த எழுச்சியை அடக்கிக்கொண்டு “முன்னேறுக! முன்செல்க!” என்று தேர்ப்பாகனாக அமர்ந்த தன் குடியிளையோனாகிய சக்ரனிடம் சொன்னான். நூறுமுறை விராடரை கொன்றுகொன்று கணங்களினூடாக முன்னால் சென்றான்.

சாத்யகி தேரில் நின்றபடி பால்ஹிகனாகிய பூரியுடன் போரிட்டுக்கொண்டிருந்தான். நகுலன் சகுனியுடனும் கிருபர் சிகண்டியுடனும் போரிட்டனர். ஒவ்வொரு போரும் உச்சத்தில் நிகழ்ந்தது. கர்ணன் தன் உள்ளத்தால் ஒவ்வொருவருடனும் சென்று போரிட்டான். சிகண்டியின் தலையை வீழ்த்தி

தேர்ச்சகடத்தை அவர் உடல்மேல் ஓட்டிச்சென்றான். சாத்யகியை அம்புகளால் அறைந்து வீழ்த்தி அவன் தலையைக் கொய்து வானில் நிறுத்தினான். நகுலனை அம்புகளால் அடித்து தேர்த்தூணுடன் சேர்த்து பொருத்தினான். அவர்களின் குருதியில் நனைந்தான். தன் உடலெங்கும் மிதப்பென, விழி நனையச்செய்யும் கூச்சமென எழுந்த சினத்தை வெல்ல கைவிரல்களை இறுக்கிக் கொண்டான். பற்களைக் கடித்து மூச்சை இழுத்து வெளிவிட்டான். இச்சினம் அவனுக்குரியது. அவனை இப்போதே இக்களத்திலேயே கொல்வேன். ஆம், நான் அளித்த சொல்லால் ஆளப்படுகிறேன். இதோ அதை கடப்பேன். என் எல்லைகள் அனைத்தையும் கடப்பேன். முதல் எல்லை அச்சொல். என் தெய்வங்களின் முகத்தில் காறியுமிழ்வேன். இன்று அவன் குருதியாடாது திரும்பமாட்டேன். எழுக என் நச்சம்பு… என் வஞ்சத்தின் கடுங்கசப்பு!

அவன் தொலைவில் அர்ஜுனனை பார்த்தான். “செல்க, அர்ஜுனனை நோக்கி செல்க!” என ஆணையிட்டான். அந்த ஆணையால் சக்ரன் ஊக்கமடைந்தது தெரிந்தது. தேரை விசைகூட்டி அவன் அர்ஜுனனை நோக்கி சென்றான். ஆனால் துரோணருடன் போரிட்டுக்கொண்டிருந்த அர்ஜுனன் அவனை பார்ப்பதற்குள் இளைய யாதவர் தேரை பின்னாலிழுத்து பாண்டவப் படைகளுக்குள் கொண்டுசென்றார். பாஞ்சாலர்களின் வில்லவர் நிரை துரோணரை எதிர்கொண்டது. மறுபக்கத்திலிருந்து துருபதர் நாணொலி எழுப்பியபடி வந்து துரோணரை சந்தித்தார். “அர்ஜுனனை தொடர்க… அர்ஜுனனின் இடத்தை கண்டறிக!” என்று கர்ணன் ஆணையிட்டான். என் சினம்நிறைந்த கலம் தளும்புகிறது. ஒரு துளியும் சிந்தாமல் இதை காக்கவேண்டும். இது இன்று அவனை கொல்லும் விசையென்றாகி எழுக! நாகங்களே, என்னைச் சூழ்ந்தெழுக!

நச்சுப்படங்களின் நிழல் என்மேல் எழுக! வஞ்சம்கொண்ட நிலைக்காத வால்கள் எழுக! இமையா விழிகள் எழுக! பிளவுண்ட நாவுகள் எழுக!

அர்ஜுனன் மிக அப்பால் படைகளுக்குள் இருந்து வெளிப்பட்டான். “செல்க… அர்ஜுனனை எதிர்கொள்க!” என்று கர்ணன் தேர்ப்பாகனுக்கு ஆணையிட்டான். அவனுடைய தேர் அர்ஜுனனை நோக்கி செல்ல சிகண்டியும் சாத்யகியும் இருபுறமும் எழுந்து வந்து அவனை சந்தித்தனர். அவன் இருவரையும் அம்புகளால் எதிர்த்தான். சாத்யகி தேரில் விழுந்தான். சிகண்டி அம்புகளால் அறைபட்டு பின்னால் நகர்ந்தார். அவர் நெஞ்சில் அறைந்த கர்ணனின் வாளி அவரைத் தூக்கி அப்பாலிட்டது. வில்லுடன் திரும்பிய கர்ணன் அர்ஜுனன் மறைந்துவிட்டிருப்பதை கண்டான். விழிகளால் துழாவி இளைய யாதவர் அப்பால் தேரை கொண்டுசெல்வதைக் கண்டான். பாண்டவப் படை எழுந்து காட்சியை மூடியது. “அவனை நீங்கள் காக்க இயலாது, யாதவரே” என அவன் தனக்குள் கூவினான். “செல்க, அர்ஜுனனை தேடிச் செல்க!” என அவன் சக்ரனுக்கு ஆணையிட்டான்.

அவனுடைய தேர் படைமுகப்பினூடாகச் செல்கையில் எதிரில் சகதேவன் தேரில் தோன்றினான். “நில்லுங்கள் அங்கரே, உங்களை நேரில் சந்திக்கவென்று வந்தேன்” என்று நாணொலி எழுப்பியபடி கூவினான். “செல்க சிறுவனே, இது உன் போர் அல்ல” என்று சொல்லி அர்ஜுனனுக்காக விழிகளால் துழாவினான் கர்ணன். “ஆம், நான் சிறுவனே. பாண்டவ ஐவரில் நானும் என் இணைபிறந்தோனும் மட்டுமே உங்களை வெல்லாதுள்ளோம். அந்தப் புகழ் நாடியே வந்தேன்” என்றான்

சகதேவன். கர்ணனின் உள்ளே பொங்கிக்கொண்டிருந்த சீற்றத்தை அச்சொல் அவனை நோக்கி பீறிட்டெழச் செய்தது. “என்ன சொன்னாய்? யாரிடம் பேசுகிறாய் என அறிவாயா? உன் தலையை மண்ணில் உருட்டிவிட்டு மீள்வேன்” என்றான் கர்ணன். “உங்களைக் கொல்லும் தருணம் வந்தும் இரு மூத்தவரும் விட்டுவிட்டனர். எனக்கு அவ்வாய்ப்பை அவர்கள் அளித்திருக்கின்றனர்” என்றான் சகதேவன்.

கர்ணன் உறுமியபடி சகதேவனை அம்புகளால் அறைந்தான். அவன் எண்ணியதற்கு மாறாக சகதேவன் தன் அம்புகளால் கர்ணனை நிகராக எதிர்த்து நின்றான். அவன் அம்புகள் அனைத்தையும் விண்ணிலேயே அறைந்து வீழ்த்தினான். கர்ணனின் நெஞ்சக்கவசத்தை அவன் அம்புகள் வந்தறைந்து உடைத்தன. கர்ணன் அதன் பின்னரே தன் முழுஆற்றலையும் திரட்டி சகதேவனை தாக்கினான். அவன் தேர்ப்புரவிகளை கொன்றான். பாகனின் தலையை அறுத்தான். தேர்மகுடத்தையும் தூண்களையும் உடைத்தான். அவன் கவசங்களை சிதைத்தான். தேரிலிருந்து பாய்ந்திறங்கிய சகதேவன் அப்போதும் பின்னடையாமல் கதையுடன் கர்ணனை எதிர்க்கும்பொருட்டு பாய்ந்தான். கர்ணன் தன் கதையுடன் எழுந்து புரவிகள்மேல் பாய்ந்து அவனை அணுகி ஏழுமுறை சுழன்று பதினெட்டாவது அறையில் அவன் கதையை உடைத்தெறிந்தான். சகதேவன் தேர்ச்சகடம் ஒன்றை எடுத்து கர்ணனை அறையவந்தான். தன் கதையால் அதை உடைத்து வீசினான் கர்ணன்.

வெற்றுடலுடன் படைக்கலமில்லாத கைகளுடன் நின்ற சகதேவனிடம் “செல்க, நீ மாத்ரியின் மைந்தன்! அவளுக்கு காட்டில் உன்னை பரிசளித்தவன் எவன் எனத்

தெரியுமென்றால் அவனை எண்ணிக்கொள்க! ஒருவேளை அவன் கிராதனோ நிஷாதனோ என்றால் கீழ்பிறப்பினன் ஒருவனிடம் நிகர்நின்று பொருதிக் கொன்றேன் என்னும் பழி எனக்கு வரலாகாது என்று அஞ்சி உனக்கு உயிர்க்கொடை அளிக்கிறேன். ஓடி ஒளிந்துகொள்" என்றான். சகதேவன் நீர்வழியும் கண்களுடன் நோக்கி நின்றான். அவன் முகத்தில் மிக மெல்லிய நீரலைபோல் அர்ஜுனன் சாயல் வந்துசென்றது. "ஓடு கீழ்மகனே, நீ ஓடுவதைக் கொண்டு முடிவெடுக்கிறேன் காட்டில் உன் அன்னையைப் புணர்ந்தவன் எவன் என" என்றான் கர்ணன். சகதேவன் ஒருகணத்தில் குனிந்து தன் காலடியில் கிடந்த அம்பொன்றை எடுத்து தன் கழுத்தில் வைத்தான். கர்ணன் உரக்க நகைத்து "நன்று, நான் சொன்ன உண்மையால் உயிர்விட்டாய் என்று சூதர் பாடுக!" என்றான்.

சகதேவன் கையை தழைத்து தலைதாழ்த்தி விம்மினான். கர்ணன் மாறிய குரலில் "செல்க! செல்க, இளையோனே! சென்று ஓய்வுகொண்டு மீண்டும் களத்திற்கு வருக!" என்றான். திரும்பிக்கொண்டு "என் குருதிகண்டு மகிழும் வாய்ப்பு உனக்கு அமைக!" என்றபின் தேரைத் திருப்பி கொண்டுசெல்ல ஆணையிட்டான். அங்கிருந்து அகன்றபோது சொற்கள் அனைத்தும் ஒழுகி அகல மீண்டும் உடல்தளர்ந்து கைசோர்ந்து தேர்த்தட்டில் அமர்ந்தான். மிக அப்பால் அர்ஜுனனும் கிருபரும் போரில் ஈடுபட்டிருப்பதை கண்டான். வெறுமனே அவர்களின் தேரை நோக்கிக்கொண்டிருந்தான். தேர்முகப்பில் அமர்ந்திருந்தவனின் பீலிவிழியை அங்கிருந்தே காணமுடியும் என்று தோன்றியது.

# கார்கடல் - 67

பூரி குருக்ஷேத்ரத்திலிருந்து ஒருநாள் தொலைவிலிருக்கையில் சலன் களம்பட்ட செய்தியை முரசொலிகளிலிருந்து அறிந்துகொண்டான். குருக்ஷேத்ரத்தின் மையச்செய்திகள் அனைத்தும் முரசுத்தொடரொலி வழியாக பரவிப்பரவி நாடுகள்தோறும் சென்றுகொண்டிருந்தன. அந்த ஒலிகளுக்குமேல் பல்லாயிரம் பறவைகள் செய்திகளுடன் வானில் சென்றன. அவன் சலன் மறைந்த செய்தியைக் கேட்டு புரவியை இழுத்து நின்றுவிட்டான். அவனுடன் வந்துகொண்டிருந்த வீரர்கள் கடிவாளங்களை இழுத்து புரவிகளைத் திருப்பி அவனைச்சுற்றி ஒரு சுழலை அமைத்தனர். பூரி "மூத்தவர்!" என்றான். "பட்டத்து இளவரசர்!" என துணைப்படைத்தலைவன் திரிகரன் கூவினான். பூரி பெருமூச்சுடன் உடல்தளர்ந்தான்.

சற்றுநேரத்திலேயே வானிலிருந்து புறா சிறகடித்தபடி இறங்கியது. அதன் ஓசை அவர்கள் அனைவரும் அஞ்சும்படி உரக்க ஒலித்தது. அதை பிடித்து செய்தியைப் படித்த படைத்தலைவன் உத்தண்டன் "அதே செய்திதான், அரசே" என்றான். பூரி கடிவாளத்தைப் பிடித்து இழுத்து "செல்வோம்" என்றான். உத்தண்டன் "அந்திக்குள் சென்றுவிட முடிந்தால் நன்று. நாம் பட்டத்து இளவரசரின் எரிகடனில் பங்கேற்கவாவது இயற்றமுடியும்" என்றான். பூரி அவனை நோக்க அவன் "அரசர் அதற்குரிய உளநிலையில் இருக்க வாய்ப்பில்லை" என்றான். "ஆம்" என்ற பூரி "விரைக! விரைக!" என்று ஆணையிட்டான். புரவிகள் குளம்படித்தொகை முழக்கமென எழுந்து சூழ்ந்திருந்த காட்டின் ஆழங்களுக்குள் எதிரொலிகளாகப் பெருக விசைகொண்டு புதர்களை ஊடுருவிச்சென்றனர்.

அவன் பால்ஹிகபுரியில் இருந்தபோது நாளும் வந்துகொண்டிருந்த போர்ச்செய்திகளைக் கேட்ட பின்னரே துயிலச்சென்றான். நெடுநேரம் அச்செய்தியைப்பற்றி எண்ணிக்கொண்டிருந்த பின் துயின்றான். கனவில் அவன் போரில் ஈடுபட்டான். விடாய்கொண்டு விழிக்கும்போதெல்லாம் அறைச்சாளர வாயிலில் செய்தியுடன் புறா வந்து அமர்ந்திருந்தது. புலரியில் போர்ச்செய்திகளை அடுக்கி அவன்முன் கொண்டுவந்து வைத்த ஏவலன் வணங்கி அப்பால் நின்றான். முகம் கழுவுவதற்கு முன்னரே அவன் அவற்றை படித்தான். முதல்நாள் எண்பத்தேழு ஓலைகள் வந்தன. அனைத்தும் ஓரிரு வரிகள். துளித்துளியாக செய்திகள் இணைந்து பெரும்போர் ஒன்று அவன் உள்ளத்தில் உருவாகியது. பின்னர் வந்த ஒவ்வொரு எழுத்துக்கும் ஆயிரம் ஓலைகளின் பொருட்செறிவிருந்தது.

பன்னிரண்டாம் நாள் அவன் காலையில் முடிவெடுத்தான். “நாம் கிளம்பிச்செல்வோம்… நான் அங்கிருக்கவேண்டும் என விழைகிறேன்.” உத்தண்டன் “நம்மிடம் இனிமேல் படை என ஏதுமில்லை. இதற்குமேல் நம் படைகளை நகரிலிருந்து எடுத்தால் மலைக்குடிகளுக்கு நம் நகரை விட்டுவைத்தவர்களாவோம்” என்றான். “என்னுடன் இருபது வீரர்கள் மட்டும் வந்தால் போதும். நான் அங்கிருக்கவே விழைகிறேன்” என்றான் பூரி. “அரசர் உங்களை இங்கே பொறுப்பளித்துவிட்டுச் சென்றார். மூத்தவரின் ஆணையும் அதுவே” என்றான் உத்தண்டன். “ஆம், ஆனால் இத்தருணத்தில் நான் அங்கிருக்கவேண்டும் என விழைகிறேன்… இங்கே வீணில் இருக்கிறேன் என்று எனக்குப்படுகிறது” என்றான் பூரி. “இளையோன் இந்நகரை ஆளட்டும்.”

சோமதத்தரின் நான்காவது அரசி சைலையின் மைந்தனாகிய கிலனை பால்ஹிகபுரியின் அரசன் என முடிசூட்டி அமைச்சர்களிடமும் இளைய படைத்தலைவன் அக்ரசீர்ஷனிடமும் அவனைக் காக்கும் பொறுப்பை அளித்துவிட்டு பூரி கிளம்பினான். நகரிலிருந்து எழுந்து மலையுச்சியை அடைந்தபின் அவன் புரவியை நிறுத்தி திரும்பிப்பார்த்தான். தூமவதி, ஷீரவதி, பிரக்யாவதி, பாஷ்பபிந்து, சக்ராவதி, சீலாவதி, உக்ரபிந்து, ஸ்தம்பபாலிகை, சிரவணிகை, சூக்ஷ்மபிந்து, திசாசக்ரம் என்னும் மலைகளின் நடுவே அமைந்திருந்த அழகிய கோட்டை. அவன் அதைவிட்டு விழிவிலக்க ஒண்ணாதவனாக நோக்கி நின்றிருந்தான். அப்போதே அவனுக்குத் தெரிந்தது, அவன் மீளப்போவதில்லை என.

அவன் மீண்டும் கிளம்பும்போது உடன் வந்த உத்தண்டனிடம் “ஒற்றர்கள் என்ன சொன்னார்கள்? மூத்தவர்கள் இங்கு நின்று இவ்வண்ணம் மலைகளை திரும்பி நோக்கினார்களா?” என்றான். உத்தண்டன் “ஆம் இளவரசே, இரு இளவரசர்களுமே நோக்கினர். அரசர் நெடுநேரம் நின்று விழிநீர் பொழித்துவிட்டே சென்றார்” என்றான். பூரி “ஆம்” என்றான். அவன் உள்ளம் அச்சம் கொண்டதுபோல் நடுங்கிக்கொண்டிருந்தது. பின்னர் தலையை அசைத்தான். எதையோ உதறுபவனைப்போல. “அவர்கள் இதுவரை களத்தில் நலமாகவே இருக்கிறார்கள்” என அவன் எண்ணத்தை உணர்ந்தவன்போல் உத்தண்டன் சொன்னான். அப்படி அவன் தன் ஆழம் வரை வந்தது அவனுக்கு எரிச்சலை அளித்தது. அவன் மறுமொழி சொல்லாமல் நோக்கை விலக்கிக்கொண்டான்.

உச்சிப்பொழுதைக் கடந்து ஓடை ஒன்றை தாண்டிக்கொண்டிருந்தபோது பூரிசிரவஸ் களம்பட்ட செய்தி அணைந்தது. அதை எவ்வகையிலோ எதிர்பார்த்திருந்தவன்போல பூரி நிலைகுலையவில்லை. முரசொலியைக் கேட்டதும் புரவியை இழுத்து அவன் சற்றுநேரம் நின்றான். “செல்வோம்” என பெருமூச்சுடன் சொல்லி புரவியை கிளப்பினான். “அவருக்கும் தங்கள் எரிகடன் தேவையாகும்” என்றான் உத்தண்டன். “உறுதியாக இதை அரசர் தாளமாட்டார்.” பூரி ஒன்றும் சொல்லவில்லை. திரிகரன் “அவர் இறப்பை நோக்கி சென்றுகொண்டிருந்தார் என்று எனக்குத் தோன்றியது. அவர் நிகழ்த்திய அனைத்துக்கும் உரிய முடிவு களப்பலியே” என்றான். “வாயை மூடு” என்றான் பூரி. அவன் தன் புரவியை இழுத்து சற்று பின்னடைந்தான். “நாம் அந்திக்குள் சென்றுவிடமுடியுமா?” என்று பூரி கேட்டான். “தொலைவை மட்டும் நோக்கினால் இயலும். ஆனால் பாதை இப்போது எப்படி இருக்கிறதென்று தெரியவில்லை” என்றான் முன்னெட்டு சென்ற ஒற்றனாகிய உதிரன்.

அவர்கள் விசைகொண்டு புரவிகளை செலுத்தியபோதும்கூட குருக்ஷேத்ரத்தை அந்திக்குள் சென்றடைய இயலவில்லை. எண்ணியதைவிட விரைவாக இருள் சூழ்ந்துவர அதை வெல்ல எண்ணுவதுபோல் புரவிகளை முடுக்கினர். ஆனால் நெடுந்தொலைவு வந்துவிட்டிருந்த அவை கால்களைத்திருந்தன. குளிர்நிலத்தில் பழகிய அவற்றுக்கு நிகர்நிலத்தின் வெம்மை களைப்பூட்டுவதாக இருந்தது. “அவர்கள் எரியூட்டியிருப்பார்கள்” என்று உத்தண்டன் சொன்னான். “பேசாதீர்கள்” என்று பூரி சொன்னான். “அந்திக்குள் எரியூட்டவேண்டும் என்பது நெறி... நாம் சென்றடைய முடியாது” என்றான் உத்தண்டன் மீண்டும். “ஆம்” என்று பூரி சோர்ந்து

கடிவாளத்தை இழுத்தான். பின்னர் வெறியுடன் குதிமுள்ளால் குத்தி "செல்வோம்... செல்வோம்" என கூவியபடி பாய்ந்தான்.

அவர்கள் குருக்ஷேத்ரத்தை அணுகியபோது தொலைவிலேயே முழக்கத்தைக் கேட்டனர். "போர்!" என்று திரிகரன் கூவினான். "போர் இன்னும் முடியவில்லை!" பூரி "அந்திக்குள் போர் முடிந்தாகவேண்டுமென்பதே நெறி!" என்றான். "நெறிகளை எவர் பேணுகிறார்கள்? முதல்நாள் முதல் நெறிகள் ஒவ்வொன்றாக அழிந்துவருகின்றன" என்றான் உத்தண்டன். "ஆனால் போரை அந்திக்குப் பின் எவரும் நிகழ்த்த இயலாது... எவருக்கும் விழிதெளியாது. தன்னவரையே கொன்றுகுவிக்கலும் ஆகும்" என்றான் பூரி. "அந்திக்குப் பின் விழிதெளிபவர்கள் அசுரரும் அரக்கரும்... இப்போர் அவர்களுக்காக அமைக்கப்பட்டிருக்கலாம்" என்றான் உத்தண்டன். "இது அவர்களால் தொடங்கப்பட்டிருக்கவேண்டும். அவர்களின் தரப்பில் போரிடும் கடோத்கஜன் இன்றைய இரவுப்போரில் பேரழிவை உருவாக்குவான்."

பூரி "ஆம், அவர்களுக்காகத்தான்"என்றான். "நாம் போருக்குச் சென்றாகவேண்டும்... தந்தை இன்றைய போரில் கலந்துகொள்ளக்கூடும்." உத்தண்டன் "இன்று போருக்கெழும் நிலையில் அவர் இருக்க வாய்ப்பில்லை" என்றான். "அவரை நான் அறிவேன்... அவரால் அமைந்திருக்க இயலாது. இரு மைந்தரின் நினைவும் அவரை எழுப்பி களத்திற்கு கொண்டுசெல்லும்..." என்றான். உத்தண்டன் "ஆம், அவர் அத்தகையவரே" என்றான். "விரைக... படைத்தொடக்கம் அருகில்தான்" என்றான் பூரி. "நாம் இருளில் செல்கிறோம். அங்கே போர் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. நம்மை எவரென்று தெரியாமல் அவர்கள் தாக்கக்கூடும்" என்றான் உத்தண்டன்.

“நாம் நம்மை அறிவித்துக்கொண்டே செல்வோம். பந்தங்களால் நம்மை அடையாளம் காட்டுவோம். நம் குடிக்குறியை வீசிக்கொண்டே செல்வோம். அங்கே நம் படைவீரன் ஒருவனேனும் எல்லைக்காவல்மாடத்தில் இருக்கக்கூடும்.”

அவர்கள் பந்தங்களை வீசியபடியே சென்றனர். எக்கணமும் அங்கிருந்து அம்புகள் பறந்துவரக்கூடும் என எதிர்பார்த்தார்கள். பூரி “அம்புகளை நாம் எதிர்கொள்ள வேண்டியதில்லை. நாம் அம்புகளை செலுத்தினால், ஓர் அம்பு அங்கே சென்றால்கூட நம் மேல் அங்கிருந்து அம்புகள் கூட்டமாக வரத்தொடங்கிவிடும்…” என்றான். “ஆம், தேனீக்கூடு கலைவதுபோல” என்றான் உத்தண்டன். அவர்கள் நெருங்க நெருங்க பதற்றம் கொண்டார்கள். அறியாமலேயே விரைவழிந்தனர். அங்கிருந்து முதல் பந்த அடையாளம் எழுந்தது. “அது நம் அடையாளம்! நமது வீரன் ஒருவன் அங்கே இருக்கிறான்!” என்று உத்தண்டன் கூவினான். பூரி “ஆம், அவன் காவல்மாடத்திலேயே இருக்கிறான்” என்றான். அவர்கள் விசைகூட்டி முன்னால் சென்றனர். குளம்படிகளின் ஓசை இருளுக்குள் மேலும் உரக்க எழுந்தது.

அவர்கள் செல்லச்செல்ல எதிரில் வரும் குளம்படியோசையை கேட்க முடிந்தது. பூரி “நம்மவர்தான். நம் பந்தங்களின் ஒளியை ஏற்று வருபவர் நம்மவராகவே இருக்கமுடியும்” என்றான். அவர்கள் அணுகி வந்தபோது பால்ஹிகக்குடிக்குரிய சிறிய ஊதலோசை எழுந்தது. உத்தண்டன் அதற்கு மறு ஒலி எழுப்பினான். அவர்கள் அணுகி வந்து நின்றனர். உத்தண்டன் ஊதல் ஓசையுடன் அணுகினான். பின்னர் அங்கிருந்து அனைவரும் பூரியை நோக்கி வந்தார்கள். வந்தவர்களில் முதல்வனாகிய காவலர்தலைவன் வணங்கி “இளவரசரை

வணங்குகிறேன். பால்ஹிகக் குலத்தில் கார்வாக குடியினனாகிய என் பெயர் கருணன். இங்கே இரண்டாம்நிலைக் காவலர்தலைவன்" என்றான். பூரி அவனை வாழ்த்தி "இரவுப்போரா நிகழ்கிறது?" என்றான். "ஆம், இங்கே நிகழும் முதல் இரவுப்போர் இது. இருளுக்குள் போரிடும் ஆற்றல்கொண்ட இடும்பர்கள் கொலைவெறியாடிக்கொண்டிருக்கிறார்கள்" என்றான்.

பூரி "தந்தை?" என்றான். "குடிலில் ஓய்வெடுக்கிறார். உளம்சோர்ந்துவிட்டார்" என்றான் கருணன். "முற்பகலிலேயே பட்டத்து இளவரசரின் இறப்புச்செய்தி வந்துவிட்டது. அதன் பின்னர் இளையவரின் இறப்புச்செய்தி" என்றான் கருணன். "செல்வோம்" என்றபடி பூரி முன்னால் செல்ல கருணன் நிகழ்ந்தவற்றைச் சொல்லியபடி பின்னால் வந்தான். அவன் மெல்லிய குரலில் கூறிக்கொண்டிருந்தாலும் உடன்வந்த அனைவருக்கும் அது தெளிவாகவே கேட்டது. "இப்போரில் நாம் ஒருபோதும் முன்னணியில் நின்று பொருதவோ வெல்லவோ இல்லை… இங்கே நம் அம்புகள் பெரும்பாலும் செயலற்றன. இது நிகர்நிலத்து மக்களின் போர். இங்கே நமது அம்புகள் திகைத்து இலக்கழிந்தன" என்றான் கருணன். "இளவரசர்கள் இருவரும் தங்கள் எல்லைகளைக் கடந்து மாவீரர்கள் என களத்தில் எழுந்தனர். இளையவர் இங்கே மலையில் எழுந்த போர்த்தெய்வமென கௌரவர் படைகளின் ஏழு காவலர்களில் ஒருவராக நின்றிருந்தார்."

பூரிசிரவஸின் இறப்பும் அவன் உடல் எரிந்தமையும் சொல்லப்பட்டபோது பூரி புரவியை நிறுத்திவிட்டு விம்மலோசை எழ தலைகுனிந்தான். அவன் நெற்றி புரவியின் கழுத்தைத் தொடும்படி தாழ்ந்தது. "இளவரசே!" என அவன்

தோளை தொட்டான் உத்தண்டன். “உம் உம்” என முனகியபடி பூரி தன்னை மீட்டுக்கொண்டான். “இவ்வேளையில் நீங்கள் அரசரைச் சென்று பார்க்கவேண்டியதில்லை, இளவரசே” என்றான் உத்தண்டன். கருணன் “இல்லை, பார்ப்பதே நன்று என்று எனக்குப்படுகிறது. ஏனென்றால் அவர் பலமுறை இளவரசரின் பெயர் சொல்லி கதறியதை கேட்டோம். அவர் முன் இளவரசர் சென்று நிற்கட்டும். இளவரசரின் உடலை தன் கைகளால் தொட்டுத்தழுவி அரசர் உணரட்டும். இத்தருணத்தில் அவருக்கு ஆறுதல் என்று பிறிதொன்றில்லை. அவர் இங்கே உயிர்வாழ்வதற்கான குறிக்கோளும் அதுவே என உணர்வார்” என்றான். பூரி “ஆம், நான் அவரைச் சென்று பார்க்கவேண்டும்” என்றான். கருணன் “அவர் தளர்ந்திருக்கிறார். அவர் உங்களைப் பார்த்தால் கதறி அழக்கூடும். நெஞ்சோடு தழுவி மயக்கமுறக்கூடும். உணர்வுகள் கொந்தளித்து எழுமென்றாலும் அவை மெல்லமெல்ல அடங்கும். இளவரசே, உங்களைக் கண்ட பின் அவர் உளமாறி உறக்கம் கொள்வாரென்றால் நீங்கள் வந்தமை பயனுள்ளது எனக் கொள்ளலாம்” என்றான். பூரி “ஆம்” என பெருமூச்சுவிட்டான்.

காவல்மாடத்திலிருந்து இரண்டு பால்ஹிக இளையோர் இறங்கி வந்தனர். “இந்தக் காவல்மாடம் எங்களுக்குரியது. நாங்கள் போரில் புண்பட்டுள்ளோம். இங்குள்ள அத்தனை காவல்மாடங்களும் புண்பட்டவர்களால்தான் நடத்தப்படுகிறது” என்றான் கருணன். அதன் பின்னரே பூரி வந்தவர்கள் இருவரும் ஒற்றைக்காலில் வருவதை உணர்ந்தான். கையிடுக்கில் பொருத்தி ஊன்றிய கோல் அவர்களின் கால்களாக இருந்தது. ஒரு சிறு உளவிதிர்ப்புடன் கருணன் ஒற்றைக்கை மட்டும் கொண்டவன் என்பதை பூரி அறிந்தான். அவன் வந்தபோதும் தலைவணங்கியபோதும் இருந்த வேறுபாடு அதனால்தான்

என்று தெளிந்தான். உள்ளம் புறவுலகை முற்றாக விலக்கிவிட்டிருந்தது. அது முன்னரே சோமதத்தரை சென்றடைந்துவிட்டிருந்தது.

சோமதத்தர் குடிலுக்குள் துயில்கொள்வதாக காவலர்தலைவன் சொன்னான். கருணன் “நீங்கள் உள்ளே சென்று பார்க்கலாம், இளவரசே” என்றான். பூரி சில கணங்கள் தயங்கிவிட்டு தன் உள்ளத்தை ஒருக்கிக்கொண்டு மெல்ல குடிலுக்குள் சென்றான். அங்கே இழுத்துக்கட்டப்பட்ட மரநார்களாலான மஞ்சத்தூளியில் சோமதத்தர் துயின்றுகொண்டிருந்தார். வாய் திறந்திருக்க மூக்கு அண்ணாந்து துளைகளில் செறிந்த நரைமயிருடன் தெரிந்தது. பற்களின் அடிப்புறத்து மஞ்சள்காரை, கன்னங்களில் பரவியிருந்த மயிருதிர்ந்த நரைத்தாடி. மூச்சில் அவருடைய தொண்டை பதைத்தது. முகம் உயிரிழந்த உடல் என வெளிறியிருந்தது. சற்றுநேரம் நோக்கியபின் திரும்புவதற்காக அவன் அசைந்தபோது சோமதத்தர் “பூரி” என்றார். அவன் உடல் சிலிர்ப்படைய அங்கேயே நின்றான். “பூரி” என அவர் மீண்டும் சொன்னார்.

அவர் வாய் குழறியது. மெல்ல அசைந்து படுத்து சப்புக்கொட்டியபடி “நீங்கள் பூரியிடம் சொல்லலாம்” என்றார். “ஏனென்றால் என் பிற மைந்தர் இருவரும் அஸ்தினபுரிக்கு சென்றிருக்கிறார்கள்.” அவர் புன்னகைத்தார். “அஸ்தினபுரியிலே” என்றார். அவன் தன் கண்களிலிருந்து நீர் வழிவதை உணர்ந்தான். ஓசையில்லாமல் வெளியேறிவிடவேண்டும் என்று தோன்றியது. ஆனால் உடலை அசைத்தால் அவர் விழிப்புகொண்டுவிடக்கூடும் என்றும் அச்சமெழுந்தது.

“அஸ்தினபுரி!” என்று சோமதத்தர் சொன்னார். மீண்டும் முகம் மலர நகைத்து “அங்கே முதன்மையானவன் என் மைந்தன்… பூரிசிரவஸ்” என்றார். இருமுறை சப்புக்கொட்டிய பின் மீண்டும் நகைத்து “அவன் வாள்வீரன்” என்றார். அறியாமல் பூரி நீள்மூச்செறிந்தான். அந்த ஓசையைக் கேட்பதுபோல சோமதத்தர் துயிலிலேயே முகம்கூர்ந்தார். பின்னர் புன்னகையுடன் “அஸ்தினபுரி” என்றார்.

பூரி மெல்ல பின்கால் வைத்து வெளியே வந்தான். உத்தண்டன் அருகே வந்து “ஆழ்ந்து உறங்குகிறாரா?” என்றான். “ஆம்” என்று பூரி சொன்னான். “சிரிக்கும் ஒலி கேட்டது” என்றான் உத்தண்டன். “ஆம், தெய்வங்கள் நிகரீடு செய்கின்றன” என்றான் பூரி. உத்தண்டன் “கருணைகொண்டவை அவை, மலையை எடுத்துக்கொண்டால் மலைநிழலை திரும்ப அளிக்கின்றன” என்றான். பூரி அவனை பொருள்விளங்காதவனாக நோக்கி நின்றான். உத்தண்டன் தொலைவில் தெரிந்த போர்க்கொப்பளிப்பை நோக்கி “இன்று பதினான்காம்நாள் இரவு… இத்தனை வெறியுடன் இப்போர் இங்கு நிகழுமென எதிர்பார்க்கவே இல்லை…” என்றான். பூரி “இழப்புகளால் மேலும் வெறி ஏற்றிக்கொள்கிறார்கள்” என்றான். “கொண்டு வந்த வஞ்சங்கள் இப்போது ஒழிந்துவிட்டிருக்கும். புதிய வஞ்சங்களுக்கான இடம் பெருகியிருக்கும்” என்றான் உத்தண்டன்.

திரிகரன் “நம் இளவரசரைக் கொன்றவர்களுக்கு நாம் மறுமொழி அளிக்கவேண்டாமா?” என்றான். “போரில் கொல்வதற்கும் கொல்லப்படுவதற்கும்தான் வந்தோம்” என்றான் உத்தண்டன். “ஆம், நம் பட்டத்து இளவரசர் கொல்லப்பட்டது இயல்பே. போரில் அது நிகழும். ஆனால் இளையவரைக்

கொன்றது அவ்வாறல்ல. அவருக்கு இருமுறை அறத்தீங்கு இழைக்கப்பட்டது. சாத்யகியுடன் போரிட்டவரை பின்னிருந்து கைவெட்டி வீழ்த்தியவன் முதல் தீங்கை இழைத்தான். அதைக்கூட போர்க்களத்து மீறல் என்று கொள்ளமுடியும். சாத்யகியின் உயிர்காக்க செய்தாகவேண்டியிருந்தது என எண்ணி பொறுத்துக்கொள்ளலாம். ஆனால் படைக்கலம் தாழ்த்தி தேரில் அமர்ந்து உயிர்துறப்புக்காக ஊழ்கமியற்றியவரின் தேரிலேறி தலைவெட்டி எடுத்து வீசுவதென்றால்…” அவன் மூச்சிரைத்தான். மேலும் பேச விழைந்து சொற்களில்லாமல் தவித்து இருமுறை கனைத்தான்.

“இங்கே ஓசை வேண்டாம்” என அவன் தோளைப் பற்றினான் பூரி. “வெட்டப்பட்ட மூச்சு அவ்வுடலில் சிதைவரைக்கும் நின்றிருந்தது என்கிறார்கள். சிதையில் அவ்வுடல் துள்ளித்துடிக்க எழுந்து அகன்றது என்கிறார்கள். என் உள்ளத்திலிருந்து அக்காட்சி அகலவே இல்லை. இனி அதை எண்ணாமல் ஒருநாள்கூட நாம் வாழமுடியாது.” அவன் குரல் உரக்க எழுந்தது. “நாம் பழிநிகர் கொண்டாகவேண்டும். நம் குடியின் பெருமைக்காக அல்ல. மானுட அறமென ஒன்றின் மேல் நாம் கொண்டுள்ள நம்பிக்கைக்காக. இப்பெருந்தீங்கை இழைத்தவனை அறம் எழுந்துவந்து தலைகொய்யவில்லை என்றால் இங்கே எதை நம்பி வாழ்வர் மானுடர்? எங்கும் அனைத்தையும் மீறி நின்றாகவேண்டியதல்லவா அறம்?” என்றான் திரிகரன். உத்தண்டன் சொல்லெடுப்பதற்குள் “என்னை சொற்களால் மூடவேண்டியதில்லை. நாம் இக்களத்தில் அக்கீழ்மகனை சங்கறுத்துக் கொல்லாமல் மீள்வோம் என்றால் அறம் அழிந்துவிட்டதென்றே பொருள்” என்றான்.

உத்தண்டன் “நாம் இங்கே போரிடவே வந்துள்ளோம். நாம் உயிர்கொடுக்கவும்கூடும்” என்றான். “ஆனால் வஞ்சங்களை சுமந்துகொள்வதில் பொருளில்லை. ஏனென்றால் நாம் மலைமக்கள். இவர்களின் போர்களிலும் பூசல்களிலும் நமக்குப் பங்கில்லை. நாம் இவர்களின் நண்பர்களும் பகைவர்களும் அல்ல. இவர்களை அவ்வண்ணம் எண்ணிய பிழையை மட்டுமே இதுவரை இயற்றியிருக்கிறோம். அதன் விளைவாகவே நாம் இரு இளவரசர்களை இழந்தோம். இன்னும் அந்த மாயை நமக்குத் தேவையில்லை. முடிந்தால் நாம் நம் அரசருடன் இன்றே இங்கிருந்து மீள்வோம்” என்றான். திரிகரன் “நான் உடன்வரப்போவதில்லை. அந்த யாதவனுடன் போரிட்டு களத்தில் மடிகிறேன். திரும்பி வந்தால் என்னால் ஒருநாளும் ஆண் என வாழ இயலாது” என்றான். “அரசாணைக்கு நீர் கட்டுப்பட்டவர்” என்றான் உத்தண்டன். “எனில் என்னை கொல்க! நான் பழிநிகர் செய்யாமல் மீளமாட்டேன்” என்றான் திரிகரன்.

பூரி “உத்தண்டர் கூறியதே சரி என நான் எண்ணுகிறேன். இது நம் போர் அல்ல. நமது அறங்கள் எதற்கும் இங்கு இடமில்லை. இவர்களிடம் நாம் எந்த நெறியையும் எதிர்பார்த்திருக்கலாகாது. நமது பிழைக்காக இவர்கள்மேல் வஞ்சம்கொள்வதில் பொருளில்லை” என்றான். “மேலும் இவர்கள் நீர்ப்பாசி என நோக்க நோக்க பெருகிக்கொண்டே இருக்கிறார்கள். இவர்களுடன் வஞ்சம் கொண்டால் நாமும் அவ்வண்ணமே பெருகவேண்டும். நாம் மலைமக்கள், அவ்வாறு பெருகுபவர்கள் அல்ல. அங்கே மலைமுடியில் காலம் மிக மெல்லவே ஒழுகுகிறது. ஒவ்வொன்றும் மாற்றமின்மையில் உறைகின்றன. நாம் அங்கு வாழ்வோம். நம் பிழைக்கு இரு இளவரசர்களை அளித்தோம் என்றே கொள்வோம்” என்றான். திரிகரன் ஏதோ

சொல்ல நாவெடுக்க "உமது வாழ்க்கைக்கடன் என நீர் எண்ணுவதைத் தடுக்கும் உரிமை எனக்கில்லை. அதை நீர் இயற்றுக! நாங்கள் அரசருடன் இங்கிருந்து இப்படியே கிளம்பவிருக்கிறோம்" என்றான் பூரி.

திரிகரன் தலைவணங்கினான். பூரி "உத்தண்டரே, அரசருடன் நாம் உடனே கிளம்பியாகவேண்டும். உரியவற்றை இயற்றுக..." என்றான். "அரசரிடம் எப்பேச்சும் தேவையில்லை. அவர் துயிலிலேயே நம்முடன் வரட்டும். இப்போது அவருக்கு அளிக்கப்பட்டிருக்கும் அகிபீனா இருமடங்காக கொடுக்கப்படவேண்டும்" என்றான் உத்தண்டன். "ஆம், மருத்துவரிடம் சொல்க!" என்றான் பூரி. அப்போது உள்ளே உரத்த அலறலோசை எழுந்தது. "என்ன? என்ன?" என்று பூரி திகைத்து கூவி உள்ளே நோக்கி திரும்ப உள்ளிருந்து சோமதத்தர் உரத்த குரலில் "எங்கே? எங்கே?" என்று கூவியபடி வெளியே ஓடிவந்தார். அவர் பூரியை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. "என் வாள் எங்கே? எவர் என்னை இங்கே கொண்டுவந்தது? என் வாள்... என் வில்!" என்றார். "தந்தையே..." என்று பூரி அருகே சென்றான். "செல்க, என் தேர் ஒருங்குக! என் தேர் இக்கணமே ஒருங்குக!" என்றார் சோமதத்தர்.

"தந்தையே! நான் பூரி, உங்கள் மைந்தன். மலையிலிருந்து இப்போதுதான் வந்தேன்" என்றான் பூரி. "நீயா?" என சிவந்து கலங்கிய விழிகளால் நோக்கி சோமதத்தர் கேட்டார். ஆனால் அவனை முழுதுளம் கொண்டாரா என்று தெரியவில்லை. "உன் தமையன்கள் கொல்லப்பட்டார்கள். நீ இங்கே என்ன செய்கிறாய்? கிளம்புக... அந்த யாதவனின் குருதி உண்ணாமல் நாம் இனி பாடி திரும்பலாகாது" என்றார். "தந்தையே, நாம்..." என

பூரி சொல்லத் தொடங்க அவர் கைநீட்டி “ஒரு சொல்லும் தேவையில்லை. இது என் ஆணை. தந்தையென்றும் பால்ஹிக அரசன் என்றும் என் ஆணை. என் மைந்தர்களுக்காக. எங்கள் குடிமூதாதைக்காக பழிநிகர் செய்வதே பால்ஹிகர்களின் கடமை… கிளம்புக… அஸ்வமுகா, எங்கே என் தேர்?” என்றார். அவருடைய தேர்ப்பாகன் தொலைவிலிருந்து ஓடிவந்து வணங்கி “ஒருங்கியிருக்கிறது, அரசே” என்றான். “என் வில்லும் அம்புகளும் உள்ளனவா?” என்றபடி சோமதத்தர் இறங்கி முற்றத்தில் ஓடினார். பாகன் முன்னால் ஓடியபடி தன் சங்கை எடுத்து ஊத அவருடைய ஆவக்காவலனும் அணுக்கனும் படைக்கலங்களுடன் தேரை நோக்கி ஓடிவந்தனர்.

பூரி திகைத்து நின்றான். “அவர் நிலையழிந்திருக்கிறார். இவை அவருடைய ஆணைகள் என கொள்ளப்பட வேண்டியதில்லை. இளவரசே, அவரை நாம் எளிதில் இங்கிருந்து கொண்டுசெல்ல முடியும்… இன்னொரு குடுவை அகிபீனா கலந்த பீதர் மதுவை அவருக்கு அளிக்கச் சொல்கிறேன்” என்றான் உத்தண்டன். “அவர் தன் நாவால் ஆணையிட்டுவிட்டார்… அவர் எந்நிலையில் எதன்பொருட்டுச் சொன்னார் என ஆராய்வது மைந்தன் என என் பணி அல்ல” என்றான் பூரி. “இளவரசே, சொல்வதை கேளுங்கள். அவரால் இன்று களம்நிற்க முடியாது. அவர் இன்று போர்முனைக்குச் செல்வார் என்றால் கொல்லப்படுவார். அந்த யாதவன் அவரை கொல்வான். ஏனென்றால் வஞ்சத்தை விட்டுவைக்கலாகாதென்றே அவன் எண்ணுவான்” என்றான் உத்தண்டன். “ஆம், அவரைக் காத்து உடன் நிற்பதொன்றே நான் செய்யக்கூடுவது…” என்றான் பூரி. திரிகரன் “அவரில் எழுந்து ஆணையிடுவது நம் குலமூதாதையர். நமது குடித்தெய்வங்களின் குரல் அது… இவர்களைப்போல் நாம் குடிவஞ்சம் கொள்ளவேண்டியதில்லை.

கொடிவழிகளுக்கும் அதை பரப்பவும் வேண்டியதில்லை. ஆனால் இந்தக் களத்தில் நெறிமீறிக் கொல்லப்பட்ட என் தலைவன் பொருட்டு ஒரு வாளேனும் எழவேண்டும்…” என்றான்.

பூரி “நான் முடிவெடுக்க இயலாமல் குழம்பியிருக்கிறேன். தந்தையின் ஆணையுடன் நிலைகொள்க என்று மட்டுமே என் அகம் சொல்கிறது. அதை தலைக்கொள்கிறேன்” என்றான். உத்தண்டன் “தங்கள் ஆணை அதுவெனில் எங்கள் கடமை அது” என்றான். சோமதத்தர் தன் தேரிலேறிக்கொண்டார். நாணொலி எழுப்பியபடி போர்முனைக்கு தேரை கொண்டுசெல்ல ஆணையிட்டார். தேர் எழுந்து அப்பால் சென்றது. அவரைத் தொடர்ந்துசென்ற பால்ஹிகப் படையினரின் போர்முழக்கம் எழுந்தது. பூரி “எனக்கும் தேரும் வில்லும் ஒருங்குக… நான் தந்தையுடன் செல்கிறேன்” என்றான். “ஆணை” என்றபடி ஏவலர்கள் இறங்கி ஓடினார்கள். பூரி திரும்பி அந்தக் குடிலுக்குள் நோக்கினான். அங்கே எவரேனும் இருக்கிறார்களா? அந்த இருளுக்குள் நின்றபடி அவர்கள் தந்தையைத் தூண்டி களத்திற்கு அனுப்பியிருக்கிறார்களா? அவன் நெஞ்சு அறைந்துகொண்டது. இருளில் துழாவிக் களைத்த விழிகளை திருப்பிக்கொண்டபோது அங்கே அவர்களின் இருப்பை உள்ளம் வலுவாகவே உணர்ந்தது.

“தேர் ஒருங்கிவிட்டது, இளவரசே” என்று ஏவலன் வந்து சொன்னான். ஆவக்காவலன் வில்லுடனும் ஆவநாழியுடனும் ஓடிவந்து தேரிலேறிக்கொண்டான். தேர்ப்பாகனின் சவுக்கால் சுண்டப்பட்ட தேர் வந்து முற்றத்தில் நின்றது. பின்னால் திரிகரனுக்கும் உத்தண்டனுக்கும் தேர்கள் வந்தன. பூரி தேரில் ஏறிக்கொண்டு வில்லை வாங்கினான். “செல்க, தந்தைக்கு வலம்

நின்றாகவேண்டும்... விரைக!” என ஆணையிட்டான். தேர் விரைவுகொண்டது. குளிர்ந்த காற்று முகத்திலறைந்தபோது அவனுள் ஓர் எண்ணம் எழுந்தது, தந்தை கொண்ட அந்த உவகையை எப்போது துயரென்றும் வஞ்சமென்றும் மாற்றிக்கொண்டன தெய்வங்கள்? அவற்றின் கணக்குகள் என்ன?

# கார்கடல் - 68

சோமதத்தரின் தேர் விசைகொண்டு களமுகப்பு நோக்கி சென்றது. பூரி அதைத் தொடர்ந்து தன் தேர் செல்லும்படி ஆணையிட்டான். சோமதத்தரின் தேர் போரிட்டுக்கொண்டிருந்தவர்களை பிளந்து வகுந்தபடி சென்றது. பாம்புசென்ற புல்விரிவுத் தடம்போல தேரின் பாதை தெரிந்தது. அதனூடாக தன் தேரை விரையச்செய்தான் பூரி. சோமதத்தரின் தேரின் விரைவு பூரிக்கு வியப்பேற்படுத்தியது. தேரில் ஊர்பவரின் உளவிரைவை தேர்ச்சகடங்களும் கொள்கின்றன. ஒருகணம்கூட பிந்தக்கூடாதென்று ஏன் தோன்றுகிறது? ஒழுகும் கலத்தில் நீர் கொண்டுசெல்பவரைப்போல் ஏன் விரைவுகொள்கிறார்? சினமும் வஞ்சமும் அத்தனை விரைவாக ஒழுகிவிடக்கூடியவை என அவரே அறிந்திருக்கிறாரா?

அவரால் சாத்யகியை எதிர்கொள்ளமுடியாது என பூரி அறிந்திருந்தான். அவனும் அவரும் இணைந்தாலும்கூட சாத்யகியை எதிர்த்து வெல்லமுடியாது. அவர்களின் போர்முறைகள் வேறு. அங்கே மலைகளில் மிகமிக அரிதாகவே போர்கள் நிகழ்ந்தன. மலையிறங்கிவரும் தொல்குடியினர் சிலபொழுது ஊர்களை தாக்குவதுண்டு. அவர்களை எதிர்கொள்வதற்காகவே பால்ஹிகர்கள் போர்க்கலை

பயின்றார்கள். மற்றபடி அவர்கள் அறிந்த விற்கலை என்பது மலைச்சரிவுகளில் மான்களை வேட்டையாடவும் மேய்ச்சல் விலங்குகளை வேட்டையாட வரும் ஓநாய்களை எதிர்ப்பதற்கும் மட்டுமே. எதிரில் வில்லுடன் நில்லாத உயிர்களுடன் போரிடுவதற்கானது நம் முன்னோரின் விற்கலை என்று பூரிசிரவஸ் அதை ஏளனம் செய்வதுண்டு.

இரண்டு தலைமுறையினருக்கு முன் அவனுடைய முதுதந்தை பூரிசிரவஸ் மலைமக்கள் ஏன் ஊர்களை தாக்குகிறார்கள் என்பதை கண்டறிந்தார். கன்றுகளுக்கு நோய்வந்து இறந்தாலோ பனியால் விளைநிலங்கள் அழிந்தாலோ அவர்கள் வறுமைகொண்டு உணவில்லாமல் ஆகும்போது மட்டுமே அவர்கள் மலையிறங்கி வந்து ஊர்களை தாக்குகிறார்கள். அவர் மலைமக்களிடம் தூதர்களை அனுப்பி ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார். மலைகளில் உணவில்லாமல் ஆகுமென்றால் அவர்கள் மலையுச்சியில் மூன்றுநாட்கள் புகையிடவேண்டும். அவர்களுக்குரிய உணவு மலை அடிவாரத்தில் வைக்கப்பட்டு மேலே சிவப்புக்கொடி பறக்கவிடப்படும். இரவில் அவர்கள் வந்து எடுத்துச்செல்லலாம்.

அமைச்சர்கள் அத்திட்டத்திற்கு எதிர்ப்பு தெரிவித்தனர். “இதுவே எளிய வழியென அவர்கள் எண்ணக்கூடும். உணவை முழுமையாகவே நம்மிடமிருந்து பெற எண்ணக்கூடும்.” ஆனால் பூரிசிரவஸ் உறுதியாக இருந்தார். “மலைமக்களின் ஆணவம் உணவை அவ்வாறு கொள்வதை ஒருபோதும் ஏற்கச்செய்யாது. கொள்ளையிட்டு கொண்டுசெல்லும் உணவை அவர்கள் உண்பதுபோல் இவ்வுணவை மகிழ்வுடன் உண்ணமாட்டார்கள். உணவை நாம் அளித்த பின்னரும் கொள்ளையிடுவார்கள் என்றால் அதையும் அவர்களின் அகச்சான்று

ஏற்றுக்கொள்ளாது.” அவர் சொன்னதே நிகழ்ந்தது. மலைமக்கள் கொள்ளையிடுவது முற்றாக நின்றது. அடுத்த நூறாண்டுகளுக்குள் பன்னிருமுறை மட்டுமே அவர்களுக்கு உணவளிக்கவேண்டியிருந்தது.

மலைமக்களை பால்ஹிகர் தூயவர்கள் என நம்பினர். நிகர்நிலத்து மக்களைவிட தாங்கள் தூயவர்கள் என்பதனாலேயே உச்சிமலைமக்கள் தங்களைவிடத் தூயவர் எனக் கருதினர். அவர்கள் வெண்பனிநிறமும் நீலக்கண்களும் கொண்டிருந்தனர். பனியை போர்வையெனப் போர்த்திக்கொண்டு துயில்பவர்கள் அவர்கள் என தொல்கதைகள் கூறின. மலைக்குடிகளுக்கு உணவளிக்க பால்ஹிகர் விரும்பினர். ஆகவே மலையடிவாரங்கள் அனைத்திலும் மலைத்தெய்வங்களுக்கான ஆலயங்கள் கட்டப்பட்டன. அங்கே ஒவ்வொரு நாளும் சிறிதளவு உணவு பரிமாறப்பட்டு அவர்களுக்காக காத்திருந்தது. அதுவே சடங்கென்றாகியது. ஆண்டுக்கொருமுறை மலைமக்களுக்கு உணவூட்டும் விழாவென மாறியது. மலைவிருந்துக்கு மலைக்குடிகள் தங்கள் மயிராடைகளுடன், கொம்புத்தலையணிகளுடன், குலக்கோல்களுடன் வந்திறங்கினர். உண்டு, குடித்து, களியாடிச் சென்றனர். வரும்போது மலைக்கு மேலிருந்து மயிராடைகளையும் எலும்புச்செதுக்கு அணிகளையும் பரிசுகளாகக் கொண்டுவந்தனர். ஒளிரும் அருமணிகளை அள்ளிக்கொண்டுவந்து அளித்தனர். அவர்களுக்குப் பரிசாக வேட்டைக்கத்திகளையும் அம்புகளையும் அளித்தனர் பால்ஹிகர்.

மலைமக்கள் உணவுக்காக வருவது ஒழிந்ததும் பால்ஹிகர்களின் விற்கலையும் அழியலாயிற்று. ஆனால்

கீழிருந்து வணிகர் மேலே வரத் தொடங்கினர். அவர்களின் தடம்பற்றி கொள்ளையரும் சிறுபடையினரும் மேலே வந்தனர். அவர்களிடமிருந்து ஊர்களைக் காக்க இளையோருக்கு விற்கலை கற்றுக்கொடுக்கப்பட்டது. மத்ரநாட்டிலிருந்தும் சௌவீரத்திலிருந்தும் பயிற்சியாளர்களை வரவழைத்து விற்பயிற்சி அளித்தனர். ஆனால் பால்ஹிகர்களின் விற்கலை என்பது உயர்ந்த மலைமுடிகளின்மேல் ஒளிந்து அமர்ந்தபடி கீழே ஆழத்தில் அசைந்துவரும் இலக்கை நோக்கி அம்பைச்செலுத்துவதாகவே அமைந்தது. அல்லது புரவியில் விசையுடன் சரிவில் பாய்ந்திறங்கியபடி கீழிருந்து மேலே வருபவர்களை அம்புகளால் தாக்குவது. அவர்களின் இலக்குகள் பெரும்பாலும் பிழைப்பதில்லை. ஆனால் அவர்களால் மலையுச்சி நோக்கி அம்பு விட இயலாது. விண்ணில் பறக்கும் பறவைகளை வீழ்த்த முடியாது. பால்ஹிகர்களின் அம்புகள் ஒருபோதும் மேல்நோக்கி எழாது என்னும் சொல் மலைக்குடிகளிடையே புழக்கத்திலிருந்தது.

அவன் குடியில் பூரிசிரவஸ் மட்டுமே படைக்கலங்கள்மேல் ஆர்வம்கொண்டிருந்தான். வில்லுக்குமேல் வாளும் பயின்றான். சலன் தேவையான அளவுக்கே படைக்கலப்பயிற்சி எடுத்துக்கொண்டான். அவனுடைய படைக்கல ஆர்வம் சோமதத்தரை வியப்புறச் செய்தது. “நீ வேட்டைக்காரனாக வாழப்போகிறாயா என்ன?” என்று இளமைந்தனிடம் அவர் கேட்டார். “நான் நிலமிறங்கிச் செல்லப்போகிறேன். விரிந்திருக்கும் நிகர்நிலத்தில் என் நகரை அமைக்கவிருக்கிறேன்” என்றான் பூரிசிரவஸ். “நிகர்நிலமா? அங்கே நாமறியா நஞ்சுகள் நிறைந்துள்ளன. மைந்தா அறிக, வெண்மை அமுது! நீலமே நஞ்சு. கீழ்நிலத்தை நோக்கு, அது நீலத்தால் மூடப்பட்டுள்ளது. அங்கிருந்து வரும் காற்றில்

நோய்நஞ்சு உள்ளது. அங்கிருந்து வரும் அனைத்துப் பொருளிலும் நஞ்சுள்ளது என்று நம் முன்னோர் நமக்கு சொல்லியிருக்கிறார்கள்."

பூரிசிரவஸ் "ஆனால் இங்குள்ள நதிகள் அனைத்தும் அந்நிலத்தை நாடியே செல்கின்றன. அங்கேதான் அவற்றால் பரவமுடிகிறது. நாம் மலைமுகடில் இருந்தால் இப்படியே சுருங்கியிருப்போம். நாம் மூதாதையர் புதைத்து வைத்த விதை போன்றவர்கள். நாம் முளைத்தெழுந்தாகவேண்டும். கொடிவீசி அந்நிலத்தில் பரவி நிறையவேண்டும்" என்றான். சோமதத்தர் சீற்றத்துடன் "நதிகள்தான் மலையிறங்குகின்றன. இறங்குந்தோறும் அழுக்கடைகின்றன. இந்நதி அங்கு ஒழுகுகையில் அதன் நீரின் ஒரு மிடறை நீ அருந்தினால் உன் உடல் நஞ்சாகும்... அறிவிலி, உச்சிமலைப்பாறை அங்குதான் இருக்கும். அது மலையிறங்கும் கனவுடன் அமைந்திருக்கவில்லை. விண்ணுடன் உரையாடிக்கொண்டிருக்கிறது" என்றார். "தந்தையே, இந்த ஆறுகள் அனைத்தும் அந்த உச்சிமலைப்பாறையின் கனவுதான்" என்றான் பூரிசிரவஸ். "நான் உன் ஆசிரியனிடம் பேசுகிறேன். எங்கிருந்து நீ இந்த வீண் எண்ணங்களைக் கற்றாய் என நோக்குகிறேன்" என்றார் சோமதத்தர்.

பூரிசிரவஸ் வெறியுடன் படைக்கலம் பயின்றான். "படைக்கலங்களுக்கு உங்களை ஒப்புக்கொடுக்கிறீர்கள், மூத்தவரே" என்றான் பூரி. "இவ்வண்ணம் நம்மை அதற்கு அளித்தால் அது நம்மை வடிவமைக்கும் என்பார்கள்." பூரிசிரவஸ் "இவ்வுலகில் உள்ள ஏதேனும் ஒன்றுக்கு தன்னை ஒப்புக்கொடுக்காதோர் எவர்? வளைதடிக்கு நம்மை வழங்காமல் அது நம்மை நாடி திரும்பிவருமா என்ன?" என்றான். "ஆனால்

வளைதடி இங்குள்ளது. இந்த வாளும் வில்லும் இங்குள்ளவை அல்ல. அவை அங்கு வார்க்கப்பட்டவை, அவர்களின் உளச்சொற்களிலிருந்து எழுந்தவை. நான் வாளை கையிலெடுக்கையிலேயே அவற்றை ஆக்கிய உள்ளத்தின் எண்ணத்தையே தொடுகிறேன் என உணர்கிறேன்" என்றான் பூரி.

பூரிசிரவஸ் நகைத்து "உண்மை... ஆனால் அந்தச் சொல் அவன் நம்மை ஆள்வதற்குரியது மட்டும் அல்ல. அதிலேறிச் சென்று நாம் அவனை வெல்லக்கூடும். தன்னை தவமிருந்து அடைபவர்களுக்கு தெய்வமென்றாகி அருள்வதே சொல்லின் இயல்பு" என்றான். "அறிக, இவை சிறகுகள்போல! அனைத்துப் பறவைகளும் சிறகுகளை தவம்செய்து பயின்றே சூடிக்கொள்கின்றன. பின்னர் சிறகுகளில் ஏறி வானை வெல்கின்றன." எப்போதும் அங்கிருந்து கிளம்பும் முகத்தையே பூரிசிரவஸ் கொண்டிருந்தான் என பூரி நினைவுகூர்ந்தான். அக்களத்திலிருந்து அவன் பால்ஹிகபுரிக்கு மீண்டிருக்கமாட்டான். அவன் உள்ளம் தேடிக்கொண்டிருந்த பிறிதொரு இடத்திற்குச் சென்றிருப்பான்.

போர்முனையில் சோமதத்தர் தன் அம்புகளை ஏவியபடி இணைந்துகொண்டபோது அவருக்கு இணையாகச் சென்று நின்று அவனும் போரிடத் தொடங்கினான். திரிகரன் சோமதத்தரின் பின்புறம் காக்க அவருக்கு இடப்பக்கத்தை உத்தண்டன் காத்தான். அன்று சோமதத்தரின் அம்புகளில் விசை ஏறி ஏறி வந்தது. அவர் நிலத்திலிருந்து வண்டுகள்போல் ஊர்ந்து எழுந்த கிராதர்களை அம்புகளால் வீழ்த்தினார். வானிலிருந்து விழுந்து தாக்கிய இடும்பர்களை அவர்கள் மண்ணில் விழுந்து எழுவதற்கு முந்தைய கணத்தில் தாக்கிக் கொன்றார். பூரி ஒவ்வொரு முறை அவர் அம்புகள் சென்று

தைக்கும்போதும் உடல் அதிர்ந்தான். அறியாத மக்கள். கண்டிராத கரிய உடல்கொண்டவர்கள். அவர்களுக்கும் நமக்கும் என்ன பகைமை? அவர்கள் அன்னை வயிற்றில் பிறந்து முலையுண்டு வளர்ந்தெழுந்தது இப்படி எங்கள் அம்புகளில் சாவதற்கு என்றால் எங்களை ஆள்வது எந்த தெய்வம்? இந்த அறியா மக்களின் அம்புகளால் நாங்கள் வீழ்வதென்றால் மலைகளில் எங்கள் அன்னையரின் கருவை ஆள்கின்றனவா இவர்களின் தெய்வங்கள்?

போர்க்களத்தில் ஓயாதோடும் உள்ளம்போல் தடை பிறிதில்லை என பூரி உணர்ந்தான். அவன் நாணை தளரச்செய்தது அந்த எண்ணப்பெருக்கு. வில்லை வளைவதற்குள் நிமிரச்செய்தது. அம்புகளில் ஏறி குறிபிழைக்க வைத்தது. அவன் அம்புகள் ஒருமுறைகூட இலக்கை அடையவில்லை. ஒருதுளிக் குருதியைக்கூட சிந்தாமல் அவை இருண்ட வானில் இருந்து உதிர்ந்து மண்ணில் விழுந்தபடியே இருந்தன. இந்தக் காரிருள் என் விழிகளுக்கு அயலானது என்று அவன் சொல்லிக்கொண்டான். மலைகளில் வானம் எப்போதும் தன்னொளி கொண்டிருக்கும். அந்த வெளிச்சம் மலைச்சரிவுகளில் எப்போதும் இருக்கும். மெல்லிய விளிம்பாக பாறைகளை துலங்கச்செய்யும். ஓநாய்களின் பிசிர்மயிர்களை ஒளிரச்செய்யும். இங்கே கீழே நீரின் அடிவண்டல் என இருள் தேங்கிக்கிடக்கிறது. இருளில் புழுக்களென இந்த மக்கள். இவர்கள் ஒருவரை ஒருவர் கொன்று தின்றே வாழமுடியும். ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டே நெளியமுடியும்.

வெறிக்கூச்சலிட்டபடி சோமதத்தர் தன் தேரை முன்னெடுப்பதைக் கண்டு பூரி கைநீட்டி அவரைத் தொடரும்படி தன் பாகனுக்கு ஆணையிட்டான். சோமதத்தர் எதிரே வந்த

சாத்யகியை நோக்கி சென்றார். “நில்! நில்! இழிந்தவனே, நில்!” என்று கூவினார். “என் மைந்தனை நீ கொன்றாய். அதற்கு முன் நீ அறமென்பதைக் கொன்றாய்... உன்னைக் கொல்லாமல் களம்மீண்டால் நான் ஆண்மகனல்ல!” சாத்யகி திரும்பி நோக்கி ஏளனமாக நகைத்து “கள்வெறியில் இருக்கிறீர்கள் முதியவரே, செல்க!” என்றான். “கீழ்மகனே, கீழ்மகனே!” என வீறிட்டலறியபடி சோமதத்தர் தன் அம்புகளால் அவனை அறைந்தார். சாத்யகியின் தேரில் அவர் அம்புகள் சென்று தைத்தன. அவன் விழிகள் மாறுபட அதை உணர்ந்தவனாக தேர்ப்பாகன் அவன் தேரை சோமதத்தரை நோக்கி கொண்டுவந்தான். சாத்யகியின் அம்புகள் சோமதத்தரின் தேரின் தூண்களில் வந்து அறைந்து நின்றன. அவர் கவசங்கள் உடைந்தன.

“செல்க! செல்க!” என்று பூரி தன் பாகனை ஊக்கி அவர் அருகே சென்று நின்று தானும் சாத்யகியை தாக்கினான். சாத்யகி அவன் வந்ததையோ போரிடுவதையோ அறிந்திருப்பதாகவே தெரியவில்லை. ஆனால் அவன் கைகளிலிருந்து எழுந்த அம்புகள் மிக எளிதாக பூரியின் அம்புகளை முறித்தெறிந்தன. பூரி அதனால் சீற்றம்கொள்வதற்கு மாறாக உளம்சோர்வுற்றான். “தந்தையே, திரும்புக... நாம் நம் எதிர்ப்பை காட்டிவிட்டோம்” என்று அவன் கூவினான். “இது பொருந்தாப் போர்... இது நம் களமே அல்ல. தந்தையே, திரும்புக... தந்தையே!” ஆனால் அவன் சொற்கள் மேலெழவில்லை. சோமதத்தரின் தலைக்கவசம் உடைந்தது. அவர் நெஞ்சக்கவசமும் உடைய அதில் ஓர் அம்பு ஆழப்பாய்ந்தது. அவர் அலறிச்சரிய பின்னால் நின்றிருந்த திரிகரன் ஓலமிட்டபடி அம்பு தொடுத்துக்கொண்டு முன்னால் பாய்ந்தான். சாத்யகியின் பிறைமுனை அம்பு அவன் தலையை அறுத்தது. அவன் உடல் முன்னால் பாய்ந்து தேரிலிருந்து சாத்யகியின் முன் விழுந்தது.

சோமதத்தர் கூச்சலிட்டபடி தன் வில்லை மீண்டும் எடுத்து அம்புதேர்வதற்குள் அடுத்த அம்பால் அவர் தலையை சாத்யகி துணித்தான். அம்பு கடந்துசெல்ல சோமதத்தரின் தலை ஓசையுடன் தேர்த்தட்டில் விழுந்து நிலத்திற்குச் சரிந்தது. அந்த ஓசை பூரியின் நெஞ்சை அறைய அவன் உடல் உதறிக்கொண்டது. கைகால்கள் இழுத்து அகல அவன் தேர்த்தட்டில் மல்லாந்து விழுந்தான்.

பூரி விழித்துக்கொண்டபோது படைகளின் பின்னணியில் இருந்தான். பேரோசை அவனைச் சூழ்ந்திருக்க அவன் அதை ஒரு விழவுக்களம் என உணர்ந்தவனாக எழுந்துகொண்டு "என்ன நிகழ்கிறது? மலைமக்களா?" என்றான். மலையூட்டு விழாவின்போது மலைகளிலிருந்து தொல்குடிகள் மலைமாடுகளில் ஏறி கூச்சலிட்டபடி ஒரே பொழுதில் ஆற்றங்கரை நோக்கி இறங்குவார்கள். அவர்களைக் கண்டதும் ஊர் மக்கள் கைகளையும் படைக்கலங்களையும் வீசி கூவி ஆர்ப்பரிப்பார்கள். ஊளையோசைகளும் கூச்சல்களும் முரசொலிகளும் கொம்புகளும் குழல்களுமாக பால்ஹிகபுரி பெருமுழக்கமிடும். அவன் முன் அமர்ந்திருந்த உத்தண்டன் ஒன்றும் சொல்லவில்லை. அவன் முகத்தைப் பார்த்ததுமே உணர்ந்துகொண்ட பூரி எழுந்து நின்றான்.

உத்தண்டன் "நாம் இப்போதே கிளம்புவோம், இளவரசே" என்று சொன்னான். "நான் இங்கே கேட்டேன். இங்குள்ள முறைமைப்படி தந்தையருக்கு மைந்தர் எரிகடன் இயற்றவேண்டும் என்பதில்லை. அனைவருக்கும் ஒரே சிதை, அதை அரசரின் கையிலிருந்து வரும் நெருப்பே பற்றவைக்கிறது." பூரி ஒன்றும் சொல்லாமல் சிவந்த

கண்களால் வெறுமனே நோக்கினான். “இது நம் நிலம் அல்ல. இங்கே நாம் நம் சடங்குகளைச் செய்வதும் இயலாது. நீங்கள் தந்தையின் உடலுக்கு எரிகடன் இயற்ற இங்கே நீடிக்கவேண்டியதில்லை” என்று உத்தண்டன் தொடர்ந்தான். “நாம் இங்கிருந்து முடிந்தவரை விரைவாகக் கிளம்புவதே சிறந்தது. நம் முன்னோர் சொன்னதன் பொருள் என்ன என்று இன்றுதான் உணர்கிறேன். முன்னோர் இங்கே நிகர்நிலத்தில் நஞ்சு நிறைந்திருப்பதாகச் சொன்னார்கள். நோயின் நஞ்சு மட்டும் அல்ல அது. செயலெனும் தொடரின் நஞ்சு. இங்கே ஒன்றைச் செய்பவன் நூறில் சிக்கிக் கொள்கிறான். ஒருபோதும் சென்ற பாதையில் இருந்து அவனால் மீளமுடியாது. எண்ணிய எதையும் ஒழிய முடியாது. இங்கு எவரும் விடுதலையை உணரமுடியாது.”

“இங்கே ஒவ்வொருவரும் சிக்கிக்கொண்டிருக்கிறார்கள். விழைவுகளில், வஞ்சங்களில்... நாம் இதை அறியாது தொட்டுவிட்டோம். அதற்குரிய விலையையும் அளித்துவிட்டோம். இந்த நெருப்பு நம்மை முற்றெரிக்கும்வரை நாம் காக்கவேண்டியதில்லை. உலையில் இட்ட கையை பின்னிழுத்துக்கொண்டு விலகி ஓடி குளிர்நீரில் மூழ்கவைத்து நோய் அகற்றி மீள்வதே அறிவுடைமை. நம் நிலம் நமக்காகக் காத்திருக்கிறது. அங்கே சென்று நம் வாயில்கள் அனைத்தையும் மூடிக்கொள்வோம். இனி நிகர்நிலத்திலிருந்து ஒன்றும் அங்கே வந்துசேர வேண்டியதில்லை. பொன்னும் மணியும் அணியும் துணியும் எதுவும் நமக்குத் தேவையில்லை. ஒரு சொல்கூட இங்கிருந்து அங்கே எழவேண்டியதில்லை. நாம் மீளமுடியும். நம் முன்னோர் நமக்கு உருவாக்கி அளித்த வாழ்க்கை அங்கே நமக்காகக் காத்திருக்கிறது.”

இடையில் கைவைத்தபடி நின்ற பூரி நடுங்கிக்கொண்டிருந்தான். உத்தண்டன் “இளவரசே, இனி எண்ணுவதற்கு ஏதுமில்லை. இந்த மானுடரின் போரில் நாம் இயற்றுவதற்கு ஒன்றுமில்லை. இப்போரை இவ்வடிவில் இங்கே காண்பதுதான் நமக்கு திகைப்பளிக்கிறது. நிகர்நிலத்தில் எங்கும் எப்போதும் போர்தான் நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்றார்கள் நமது முன்னோர். அது உண்மை. நாம் வாழ்வது வேறொரு உலகில்” என்றான். “நான் சென்று புரவிகளை ஒருக்கும்படி ஆணையிடுகிறேன். இக்கணமே இங்கிருந்து கிளம்புவோம். இங்கு நின்றிருக்கும் ஒவ்வொரு கணமும் இந்த மண் நம்மை வேர்களால் பின்னி சிறைப்பிடித்துக்கொண்டிருக்கிறது.” பூரி ஒன்றும் சொல்லாததைக் கண்டு “நான் வீரர்களுக்கு ஆணையிடுகிறேன்” என்று அவன் திரும்ப பூரி தணிந்த குரலில் “அவர்கள் கிளம்பட்டும், நான் வர எண்ணவில்லை” என்றான்.

“இளவரசே” என்றான் உத்தண்டன். “எந்தை தன் மைந்தருக்காக பழிநிகர் செய்யச் சென்றார். எனில் அவருக்காக நன் பழிநிகர் செய்யவேண்டும் என்றே அவர் விரும்பியிருப்பார்” என்றான் பூரி. “இதென்ன பேச்சு…” என ஊடே புகுந்த உத்தண்டனை கையமர்த்தி பூரி சொன்னான் “எந்தை அதை விரும்பியிருப்பார் என தோன்றிவிட்டது. இல்லை என சொல்லி நிறுவுதல் எளிது. இக்களத்திலிருந்து நீங்கிய பின்னர் எந்தை அதை விரும்பினாரா எனும் ஐயம் எழுந்தால் என் வாழ்க்கை துயரும் சிறுமையும் நிறைந்ததாகிவிடும். நான் செய்வதற்குப் பிறிதொன்றுமில்லை, இங்கே நின்று பொருதி உயிர்விடுவதைத் தவிர. தந்தைக்காக பழிகொள்ள நான் வந்துள்ளேன் என அந்த யாதவனிடம் சொல்லும் ஒரு தருணமன்றி நான் எதிர்பார்க்க ஏதுமில்லை.”

உத்தண்டன் நீள்மூச்சுடன் உடல்தளர்ந்தான். “நீர் படைவீரர்களுடன் கிளம்புக! அங்கே என் இளையவனிடம் என் ஆணையைச் சொல்க! இனி பால்ஹிகநாடு நிகர்நிலத்துடன் எந்த உறவையும் கொள்ளலாகாது. அனைத்து வணிகப்பாதைகளும் பெரும்பாறைகளால் முழுமையாக மூடப்படவேண்டும். நிகர்நிலத்து மக்களிடமிருந்து பெற்ற அனைத்துப் பொருட்களும் அழிக்கப்படவேண்டும். பொன்னும் மணியும் முழுமையாகவே அரசக்கருவூலத்திற்கு அளிக்கப்படவேண்டும். முழுமையாக, எச்சமின்றி, பால்ஹிகபுரி நம் பழைய வாழ்க்கைக்கே திரும்பவேண்டும்.” உத்தண்டன் தலை வணங்கினான். “இது என் ஆணை, நானும் எந்தையும் என் இரு உடன்பிறந்தவரும் நம் குடியின் எந்தக் கதையிலும் சொல்லப்படலாகாது. எங்களுக்கு அங்கே நடுகல்லோ நினைவிடங்களோ கூடாது. ஆண்டுதோறும் அளிக்கப்படும் நீர்க்கடன்களில் எங்கள் பெயரை எங்கள் கொடிவழி வந்த எவரும் சொல்லலாகாது. இங்கே இவ்வண்ணம் நாங்கள் முற்றாக முடிந்துவிடவேண்டும்.”

உத்தண்டன் “என்ன சொல்கிறீர்கள்… இது…” என்று பதைக்க அவனைத் தடுத்து “இது என் ஆணை… நாங்கள் முற்றாக மறக்கப்பட்டாலொழிய பால்ஹிகபுரி மீண்டும் பழைய மலைவாழ்வுக்குத் திரும்பாது” என்றான். உத்தண்டன் “ஆனால்…” என சொல்லத் தொடங்க அதை உணர்ந்துகொண்டு “ஆம், மூத்தவர் கட்டிய கோட்டை அங்கிருக்கும்… அதையும் நகரையும் முழுமையாகவே கைவிடும்படி சொல்க! அங்கிருந்து நம் குடி ஆற்றின் கரையினூடாக மேலும் மலைச்சரிவில் ஏறிச்சென்று புதிய ஊர் ஒன்றை அமைத்துக்கொள்ளட்டும். அந்த ஊரிலிருந்து நோக்கினால் இன்றைய பால்ஹிகபுரி தெரியக்கூடாது. ஊரிலிருந்து நம் தொல்தெய்வங்களை மட்டும்

எடுத்துக்கொண்டு செல்லவேண்டும். சென்றபின் ஒருபோதும் இந்த நகருக்கு திரும்பலாகாது.”

“இருமுறை பெருவெள்ளமும் பனிப்பொழிவும் எழுந்தால் கோட்டை மண்ணுக்குள் சென்றுவிடும். ஒருதலைமுறைக்காலம் சொல்லொழிந்தால் நம் உள்ளத்திற்குள்ளும் மறைந்துவிடும்… கைவிடுக! சோமதத்தர் பிறக்கவே இல்லை எனக் கொள்க! அதற்குப் பின் நிகழ்ந்த காலத்தை முழுமையாகவே உதறிவிடுக… என் ஆணை இது.” உத்தண்டன் “நான் தங்களுடன் போருக்கு வந்து உயிர்விடவேண்டும் என விழைகிறேன். வீரனாக இதைக் கோரும் உரிமை எனக்கு உண்டு” என்றான். “ஆம், ஆனால் அதை நான் அளிக்கப்போவதில்லை. உமது சொற்களில்தான் என் ஆணை அங்கே எழவேண்டும்… கிளம்புக!” என்றான் பூரி. உத்தண்டன் கண்கள் நீர்நிறைந்திருக்க தலையில் மெல்லிய நடுக்கு ஓடிக்கொண்டிருக்க வெறுமனே நின்றான். “செல்க!” என்றான் பூரி. உத்தண்டன் தலைவணங்கி தளர்ந்த நடையுடன் புரவிக்காவலரை நோக்கி சென்றான்.

பூரி திரும்பி அப்பால் நின்ற ஏவலனை அருகழைத்து “என் தேர் ஒருங்கட்டும், நான் மீண்டும் களம்புகவிருக்கிறேன்” என்றான். ஏவலன் விரைந்தோடினான். பூரி தன் இடைக்கச்சையைக் கட்டி இறுக்கிக்கொண்டு காத்திருந்தான். தேர் வந்து நின்றது. பூரி அதில் ஏறிக்கொண்டு ஆவக்காவலனிடம் வில்லுக்காக கைநீட்டினான். அவன் தந்த வில் பலமுறை போருக்குச் சென்று மீண்டது. இறந்த வீரன் ஒருவனின் கையிலிருந்து எடுக்கப்பட்டது. ஆகவே அதில் ஈரக்குருதி வழுக்கியது. நன்று என பூரி புன்னகைத்துக்கொண்டான். “செல்க!” என்று ஆணையிட்டான். “போர்முனைக்குச் செல்க… யுயுதானரைச்

சென்று எதிர்க்கவேண்டும் நான்.” பாகன் அவனை திரும்பி நோக்கினாலும் சொல்லெடுக்காமல் தேரை போர்முனை நோக்கி ஓட்டிக்கொண்டு சென்றான்.

கடோத்கஜனின் படைகளின் தாக்குதல் உச்சவிசை கொண்டிருந்தது. கௌரவப் படை காற்றில் உலையும் காடு என கொந்தளித்துக்கொண்டிருந்தது. எங்கும் குருதியின் வீச்சம் நிறைந்திருப்பதை பூரி உணர்ந்தான். அதனூடாக தேரில் செல்கையில் விழிகளால் சாத்யகியை தேடிக்கொண்டிருந்தான். அவன் மேல் குருதித்துளிகள் மழைபோல பெய்துகொண்டிருந்தன. அவன் தலையிலிருந்து வழிந்து மூக்கு நுனையில் துளித்துச் சொட்டின. விண்ணிலிருந்து இடும்பர்களும் மண்ணிலிருந்து கிராதர்களும் தோன்றிக்கொண்டிருந்தனர். பின்னிரவு கடந்துவிட்டிருந்தபோதிலும்கூட காற்றில் வெம்மை இருந்தது. குருதியின், வியர்வையின் வெம்மை என பூரி எண்ணிக்கொண்டான். இந்தப் போரில் அவனை நான் சந்திக்காமல் உயிர்துறக்கலாகாது. தெய்வங்களே, அறியாத அரக்கன் ஒருவனால் நான் கொல்லப்படலாகாது. அவன் தொலைவிலேயே சகுனியுடன் போரிட்டுக்கொண்டிருந்த சாத்யகியை பார்த்துவிட்டான். தன் தேரை சாத்யகியை நோக்கி செலுத்த கையசைவால் ஆணையிட்டான்.

இரு கைகளும் சுழன்றுகொண்டிருக்க தேரில் வெறியாட்டெழுந்ததுபோல் போரிட்டுக்கொண்டிருந்த சாத்யகி பூரி அணுகுவதைக் கண்டான். அவன் முகத்தில் கசப்பு நிறைந்த சிரிப்பு எழுவதை பூரி கண்டான். அந்த இருளில் உண்மையில் முகம் நிழலுருவாகவே தெரிந்தது. ஆனால் அதிலும் உணர்ச்சிகள் எழுந்தன. உணர்ச்சிகளை மானுட

உள்ளம் அடையாளம் கண்டுகொள்கிறது. மிகச்சிறு அசைவுகளில். நிழலிலேயே ஒருவர் கொண்ட சினம் தெரிவதுபோல. இந்த எண்ணங்களே என்னை போரிலிருந்து விலக்குகின்றன. நான் இப்போது இவனிடம் சொல்லியாகவேண்டும். நான் பழிநிகர் செய்ய வந்துள்ளேன் என்று. பூரி சாத்யகியை நோக்கிச் சென்று தொடர்ந்து மூன்று அம்புகளை சாத்யகியை நோக்கி செலுத்தினான். அவற்றை திரும்பி நோக்காமலேயே காற்றில் உடைத்தெறிந்த சாத்யகி "செல்க!" என்று கூவியபடி கைகாட்டினான்.

"யாதவனே, என் தந்தையின் பொருட்டு உன்னிடம் பழிநிகர் செய்ய வந்துள்ளேன்" என்றான் பூரி. ஆம், சொல்லிவிட்டேன். இச்சொல்லை சொல்வதற்காகவே இப்புவியில் பிறந்தேன். இதுவரை எண்ணிப் பெருமிதம் கொள்ளும் எதையும் இயற்றியதில்லை. சாத்யகி சலிப்புடன் தலையை அசைத்தபடி அம்புகளால் அவனை அறைந்தான். அவன் கொடியையும் தேர்மகுடத்தையும் உடைத்தான். அவன் கவசங்களை உடைத்துவீசினான். அவனை அச்சுறுத்தி திருப்ப முயல்கிறான் என்று தெரிந்தது. பூரி மேலும் மேலும் அம்புகளை அவன்மேல் எய்தபடி அணுகிச் சென்றான். அம்பெல்லையைக் கடந்து அருகணைந்தான். சாத்யகி தேரைப் பின்னிழுத்து தன்னை போரிலிருந்து விலக்கிக்கொள்ள முயன்றான். பூரி "நில்... என்னிடம் போரிடு... உன் குருதியைக் கொள்ளவே வந்தேன்" என்றான்.

ஆனால் ஒரு சிறு அசைவில் அவனுக்கு சாத்யகியின் எண்ணம் தெரிந்துவிட்டது. அவன் கை எழுந்ததை, நீளம்பை தொட்டு எடுத்ததை, நாண் விலகி விரிய வில் முறுகி வளைந்ததை, விம்மலோசையுடன் அம்பு எழுந்து சற்றே

வளைந்து அணுகி தன் நெஞ்சில் இறங்கி மறுபுறம் சென்று தன்னை தேரின் மரத்தட்டுடன் சேர்த்து அறைந்ததை அவன் உணர்ந்தான். அந்த ஒருகணத்தில் அவன் தன் மலைநாட்டின் இனிய குளிரில் ஒளிநிறைந்த பனிமலை முகடுகளை நோக்கியபடி சரிந்திறங்கும் ஆற்றின் ஓசையைக் கேட்டபடி அமர்ந்திருந்தான். மலைநிழல் பிறிதொரு மலைநோக்கி சென்றது. மலை மலையைப் புணர்வது என்பார்கள் பால்ஹிகர்கள். பேருருவங்களின் புணர்வு. பெருங்காமம். நிழல்கொள்ளும் மலை அன்னை, ஒளிகொண்ட மலை தந்தை. புணர்ச்சிக்குப் பின் அன்னை ஒளிகொண்டு எழுந்தாள். கண்கூசும்படி ஒளி வானில் பரவியிருந்தது. மலைகளுக்கு மேலிருந்த வெண்பனி கூர்முனை என வானை நோக்கி நீட்டியிருந்தது. அங்கே ஒரு சொல்லும் இல்லை என்று அன்னையர் சொல்வதுண்டு. அங்கே சென்றவர்கள் முற்றாக சொல்லை இழப்பார்கள். ஒரு சொல்கூட இல்லாத வெறுமை. இனிய வெறுமை. தெய்வங்கள் திளைக்கும் வெறுமை.

# கார்கடல் - 69

ஏகாக்ஷர் சொன்னார்: சர்வதன் கடோத்கஜனின் வலப்புறம் நின்று போரிட்டுக்கொண்டிருந்தான். அன்று மாலை போர் தொடங்கும்போதே அவனிடம் பீமன் எந்நிலையிலும் கடோத்கஜனின் வலப்புற நிலையை ஒழியலாகாது, அவன் அம்புகள் உடனிருக்க வேண்டும் என்று ஆணையிட்டிருந்தான். சொல்சூழ் அவையிலிருந்து வெளிவந்து அவனை ஒருமுறை நோக்கியபின் சில அடிகள் முன்னால் சென்று வேறெங்கோ பார்த்தபடி பீமன் நின்றான். அது அவர் தன்னிடம்

பேசுவதற்கான அழைப்பென்பதை உணர்ந்து அருகே சென்று குரல் கேட்கும் தொலைவில் கைகட்டி நின்றான் சர்வதன். அவனை நோக்காமல் “இப்போர் முழுமையாக இடும்பனை நம்பி நிகழவிருக்கிறது” என்று பீமன் சொன்னான். மிகமிகத் தன்னணுக்கமுள்ள ஒன்றை சொல்கையில் உருவாகும் தத்தளிப்பு அவன் உடலில் வெளிப்பட்டது.

அதை உணர்ந்து உள்ளூர புன்னகைத்தபடி “ஆம், அவர்கள் இருளில் போரிடும் ஆற்றல் மிக்கவர்கள்” என்று சர்வதன் சொன்னான். “அரக்கர்கள் அனைவருக்குமே அத்திறன் உண்டு. இருளில் ஆற்றல்கொள்பவை குரங்குகளும் நாகங்களும். அவன் நாகங்களின் தலைவன்” என்றான் பீமன். பீமன் என்ன சொல்கிறான் என்பதை சர்வதன் புரிந்துகொண்டான். “போர் ஒருவனை மட்டுமே மையம் கொண்டிருக்கையில் முழுப் படையும் அவனுக்கெதிராக எழுவதற்கே வாய்ப்பு. இப்போர் இடும்பனை நாம் கர்ணன் முன் கொண்டுசென்று நிறுத்துவதுதான்” என்று பீமன் சொன்னான். “நமது படைகள் இவ்விரவில் பெரும்பாலும் விழியற்றவையாகவே இருக்கும். கிராதரும் நிஷாதரும் அசுரரும் தங்களுக்கான போரை தாங்களே வகுத்துக்கொள்வார்கள். இடும்பன் தன் படையுடன் தனித்து விடப்படுவான்.”

சர்வதன் “நான் துணையிருக்கிறேன், தந்தையே” என்றான். “உன் மூத்தவன் எனக்கு நிகரான இடங்கொண்டவன் என்று உணர்க! அவன் வலக்கையருகே உனது வில்துணை என்றுமிருக்க வேண்டும்.” சர்வதனின் உள்ளத்தில் எழுந்து அகன்ற ஐயத்தை உடனே உணர்ந்து பீமன் “அவர்கள் போரிடும் முறை நமக்கு புரியாது. வளையும் கழைகளிலும் எறிகயிறுகளிலும் தொற்றி விண்ணில் பறந்து விழுந்து போரிட்டு மீண்டு வந்தமைவது

அவர்களின் வழக்கம். வானில் அவர்கள் பேராற்றல் கொண்டவர்கள். ஆனால் அவர்களின் கால்கள் ஆற்றல் குறைந்தவை. இங்கு அவர்கள் மண்ணிறங்கும் அந்தக் கணத்தில் அவர்கள் முற்றிலும் செயலற்றவர்கள்” என்றான்.

சர்வதன் “ஆம்” என்றான். பீமன் “அவனை அவர்கள் இன்னமும் கூர்ந்து நோக்கவில்லை. அவன் வெல்லற்கரியவன் என்ற எண்ணத்திலேயே இருக்கிறார்கள். ஆனால் இன்று அவனால் கௌரவப் படை அழியத்தொடங்குகையில் ஒவ்வொரு விழியும் அவர்களை நோக்கும். அவன் ஆற்றலை முதலில் அஞ்சும். அச்சத்தின் கூர்மை அளப்பரியது, அது அனைத்து வழிகளையும் தேடும், ஊசிநுழையும் வழிகளையும் கண்டடையும். அவர்கள் அவனுடைய ஆற்றல் குன்றிய இடத்தை கண்டறிவார்கள். பறந்தெழுகையில், இறங்கித் தாக்குகையில் அவர்களை எதிர்கொள்ளல் அரிது. ஆனால் மீண்டு தங்கள் மையத்திற்கு அவர்கள் வந்திறங்கும்போது அங்கே அம்புகள் நிறைந்திருந்தால், அங்கே கதையுடன் காத்திருந்தால் அவர்களை வெல்ல இயலும். உன் பணி உன் தமையன் வந்து இறங்கும் இடத்தை அம்புகளால் வேலியிட்டுக் காப்பதே” என்றான்.

சர்வதன் தலைவணங்கினான். பீமன் “உன்னுடன் இளையோரில் பிறிதொருவனை அழைத்துக்கொள்க! இன்று நீங்கள் கௌரவத் தரப்பினரின் போரை எதிர்கொள்ள இயலாது. அப்போர் உங்கள் விழிகளுக்கு அப்பால் நிகழ்ந்துகொண்டிருக்கும். உங்களுக்கு இன்றைய கடன் இதுவென்றே கருதுக!” என்றபின் பெருமூச்சுவிட்டு கைகளை வீசி அசைந்து நடந்து சென்றான். அந்த நடையை தொலைவு வரை நோக்கிக்கொண்டு சர்வதன் நின்றான். ஒரு சிறு

மின்னலென அதில் கடோத்கஜனின் நடைச்சாயல் இருப்பதை அவன் உணர்ந்தான். இடும்பர்காட்டில் பிறந்த கடோத்கஜன் தந்தையிடமிருந்து பெற்ற நடையை கொண்டிருக்கிறார். அல்லது இடும்பர்காட்டிலிருந்து தந்தை தன் நடையில் ஒரு சாயலை மட்டும் பெற்றுக்கொண்டிருக்கிறாரா? அது இத்தருணத்தில் வெளிப்படுகிறதா?

அவனருகே வந்த சுதசோமன் "தந்தையின் ஆணை என்ன?" என்றான். "மூத்தவர் எழுந்து தாக்கி வந்திறங்கும் புள்ளியை வலம் இடமிருந்து காத்துக்கொள்ள நாமிருவரும் பணிக்கப்பட்டிருக்கிறோம்" என்றான் சர்வதன். சுதசோமன் "உண்மையில் நானும் அதை எண்ணினேன். அவர்கள் களமெங்கும் பரவினாலும் வந்திறங்கும் புள்ளி ஒன்றுதான். அது சுழிக்காற்றின் மையம்போல மெல்ல களத்தில் நகர்ந்துகொண்டிருக்கிறது. பகலில் அவர்கள் நமது படைக்குள் பரவி எழுந்து போரிட்டு மீண்டு கொண்டிருக்கையில் அதை கண்டறிவது மிகக் கடினம். மேலும் அச்சுழி எப்போதும் நமது படைப்பிரிவுகளுக்கு நடுவிலேயே அமைந்திருந்தது. இன்று அந்திப்போரில் அவர்கள் முகப்புப் படையாக நிற்கவிருக்கிறார்கள். இரவில் அவர்களின் அசைவுகள் பிறரின் அசைவுகளிலிருந்து முற்றாக தனித்தும் தெரியும். மிக எளிதில் அச்சுழிமையத்தை கண்டடைய முடியும்" என்றான்.

சர்வதன் "தந்தை கவலைகொண்டிருக்கிறார்" என்றான். சிரித்தபடி "வாய்ப்புண்டு" என்று சுதசோமன் சொன்னான். "படை கிளம்புவதற்கு முன்பு நிகழ்ந்த நிமித்திகர் களச்சூழ்கையில் மூத்தவர் விழக்கூடும் என்று சொல்லுரைக்கப்பட்டது." திகைப்புடன் "எப்போது?" என்று சர்வதன் கேட்டான். "உபப்பிலாவ்யத்தில் நிமித்திகர் சொற்கூடல் நிகழ்ந்தது.

மூதன்னை குந்திதேவியால் அவர்கள் வரவழைக்கப்பட்டிருந்தார்கள். அவ்வாறு நிமித்திகரிடம் சூழ்ந்துகொள்ளலாகாது, இறப்பு குறித்து எதுவும் உசாவப்படலாகாது என்று மூத்த தந்தை அறிவுறுத்தியிருந்தார். ஆகவே எவருக்கும் தெரியாமல் பேரரசி அதை அமைத்திருந்தார். உண்மையில் அன்னைக்குக்கூட இவை தெரியாது. அன்று தற்செயலாக அங்கு தந்தை சென்றார். நானும் உடன் செல்ல நேர்ந்தது. மைந்தரின் வாழ்வைப்பற்றிய வினாவை குந்திதேவி எழுப்ப நமது பிறவி ஓலைகளை நிமித்திகர் பெற்றுக்கொண்டனர். அன்னை நம் ஓலைகளை அளித்ததும் குந்திதேவி தன் அறையிலிருந்து மூத்தவர் கடோத்கஜனின் ஓலையை கொண்டுவந்து அளிக்கச் சொன்னார்" என்று சுதசோமன் தொடர்ந்தான்.

நிமித்திகர் ஓலைகளை எடுத்து நாற்களத்தில் வைத்து சோழிகளை உருட்டி கணித்து "இவருடைய குருதியிலிருந்து பேரரசு ஒன்று எழும். பாரதவர்ஷத்தை கலியுகத்தில் ஆளும் முதற்பேரரசாக அது அமையும். அவர்களின் குருதியிலிருந்து மேலும் அரசகுலங்கள் எழுந்து இம்மண்ணை நிரப்பும். ஆயிரம் மடங்கு உயிர்விசை கொண்ட விதைபோன்றவர் இம்மைந்தர். ஆயினும்..." என்றார். "சொல்க!" என்று அரசி கேட்டபோது இரண்டு சோழிகளை நீக்கி வைத்து "இவர் இப்போரில் களம்படக்கூடும்" என்று நிமித்திகர் சொன்னார். "எவ்வண்ணம்?" என்று குந்திதேவி கேட்டார். "அரசி, இறக்கும் முறை கருவில் பொறிக்கப்பட்ட பின்னரே உயிர்கள் மண்ணில் பிறக்கின்றன. இவருடைய கால்களில் என்றுமுள்ளது அந்த அச்சம். இவர் நாகத்தால் உயிர்துறப்பார்" என்றார்.

தந்தையின் வருகையறிவிப்பதற்காக நான் அருகே சென்று நின்றுகொண்டிருந்தேன். என்னை நிமிர்ந்து பார்த்து “யார்?” என்று பேரரசி கேட்டார். அவர் உடல் பதறிக்கொண்டிருந்தது. முகம் வியர்வை பூத்திருந்தது. நான் “தந்தை பீமசேனர் வருகை கோருகிறார்” என்றேன். “சற்று பொறுக்கச் சொல். நான் இங்கொரு சொல்சூழ்கையில் அமர்ந்திருக்கிறேன் என்று உரை” என்றார். மேலாடையால் முகத்தை துடைத்துக்கொண்டார். நான் வெளியே சென்று தந்தையிடம் தலைவணங்கி “பேரரசி ஒரு சொல்சூழ்கையில் இருக்கிறார். சற்று பொறுக்கும்படி கூறினார்” என்று சொல்லிக்கொண்டிருக்கையிலேயே தந்தையின் விழிகள் மாறின. “நிமித்திகர் உள்ளே இருக்கிறார்களா?” என்றார். நான் இல்லை என்று சொல்லலாமா என நாவெடுத்து ஆமென்று தலையசைத்தேன். என்னை இடக்கையால் தள்ளி விலக்கியபடி எடைமிக்க காலடியோசையுடன் தந்தை உள்ளே நுழைந்தார்.

கூடத்திற்குள் நுழைந்து “என்ன செய்கிறீர்கள் இங்கே?” என்று உரக்கக் கூவினார். அன்னை திகைத்து எழுந்து அப்பால் விலக பேரரசி “நான்! மைந்தா…” என்று திகைத்து சொல்லெடுத்தபடி எழுந்தார். தந்தை நிமித்திகர்களிடம் “சோழிகளையும் களவரைவையும் எடுத்துக்கொண்டு இக்கணமே கிளம்புக! இனியெங்கேனும் மைந்தர்நலம் உசாவும் பொருட்டு சோழியுருட்டினீர்கள் என்று அறிந்தால் உங்கள் தலைஅறைந்து வீழ்த்துவேன். உங்கள் குடி முழுதையும் அழிப்பேன்… செல்க!” என்றார். உடல் நடுங்கியபடி அவர்கள் தங்கள் சோழிகளையும் களவரைவுகளையும் சுருட்டி எடுத்துக்கொண்டு தோள்குறுக்கி புறம்காட்டாது வெளியே சென்றனர். சினத்துடன் இரு கைகளையும் முறுக்கி பற்கள் நெரிபடும் ஓசையுடன் “எவருக்காக இதை பார்க்கிறீர்கள்?” என்று தந்தை கூவினார்.

பேரரசி அதற்குள் உளம் மீண்டுவிட்டார். “என் பெயர்மைந்தருக்காக... என் மைந்தருக்காக” என்றார். “மைந்தர் களம்படுவார் என்றறிந்தால் இப்போரை நிறுத்திவிடுவீர்களா?” என்று தந்தை கேட்டார். பேரரசி தவிக்க “எவர் களம்பட்டாலும் குடி முற்றழிந்தாலும் இப்போரிலிருந்து பின்னடையமாட்டீர்கள். எனில் இதை எதற்காக பார்க்கிறீர்கள்? ஐயம் வேண்டாம், இப்போருக்குப் பின் நீங்கள் உயிருடன் இருப்பீர்கள். எண்ணிய வெற்றியை அடைந்து அதில் திளைப்பீர்கள்” என்றார். “என்ன சொல்கிறாய்?” என்று உரக்க கேட்டபடி கையை ஓங்கி அறைய வந்தார் பேரரசி. சற்றும் குன்றாமல் நின்று அவர் விழிநோக்கி “உங்கள் நலம் காக்கப்படும் என்கிறேன். உங்கள் சொல் இங்கே நிலைநிற்கும். உங்கள் குருதி நீடுவாழும். அதற்கப்பால் அழிவையும் விழிநீரையும் குருதியையும் கணக்கிடும் தேவை உங்களுக்கில்லை. அதை நாங்கள் பார்த்துக்கொள்கிறோம்” என்றபின் திரும்பிப்பார்க்காமல் தந்தை வெளியேறினார்.

பேரரசியின் முகம் வெளுத்து கண்களில் நீர் பரவியதை நான் கண்டேன். அவர் கால்பதறி தடுமாற தோளை அணுக்கச்சேடி பற்றிக்கொண்டாள். அவர் மெல்ல பீடத்தில் திரும்ப அமர்ந்தார். நான் திரும்ப ஓடி தந்தையை அடைந்தேன். அவர் விரைந்த காலடிகளுடன் நடந்துகொண்டிருந்தார். பின்னர் நின்று திரும்பிப்பார்க்காமல் “இறுதியாக நீ கேட்டதென்ன?” என்றார். நான் பேசாமல் நின்றேன். “அது இடும்பனின் பிறவிஓலை என்று எனக்குத் தெரியும். நிமித்திகர் சொல்லி முடித்தது அவன் வாழ்வைப்பற்றி என்றும் அறிவேன். சொல்க!” என்றார். நான் பேசாமல் நின்றேன். “சொல், அறிவிலி!” என்று திரும்பி நோக்கினார். “அவர் களம்படுவார் என்று நிமித்திகர் கூறினார்” என்றேன். அவர் உடலிலொரு நடுக்கு நிகழ்ந்தது. பின்னர் திரும்பிப்பார்க்காமல் விரைந்து நடந்து அகன்றார்.

சர்வதன் “அவ்வாறு ஏதோ சொல்லை பெற்றிருக்கிறார் என்று நானும் உணர்ந்தேன்” என்றான். சுதசோமன் “இக்களத்திற்கு வரும் அத்தனை அரசர்களும் நிமித்திகர்களின் சொல்சூழ்ந்த பின்னரே வந்திருக்கிறார்கள். பெரும்பாலும் களத்தில் சாவென்று நிமித்திகர்களால் சொல்லுரைக்கப்பட்டிருக்கிறார்கள். ஆயினும் முழுவிசையுடன் களம்நின்று பொருதுகிறார்கள். ஒருவர்கூட கேடயமும் கவசமுமின்றி களம் வந்ததில்லை” என்றான். சர்வதன் நகைத்து “நாம் இக்களத்தில் எஞ்சுவோமா? நிமித்திகர் சொல் என்ன?” என்றான். “தந்தையின் ஆணைக்குப் பின் எவரும் அதை பார்த்திருக்கமாட்டார்கள்” என்று சுதசோமன் சொன்னான். சர்வதன் “ஆம்” என்றான். “ஆனால் ஒருவர் பார்த்திருப்பார். உறுதியாக” என்றான் சுதசோமன். சர்வதன் அவனை கூர்ந்து பார்த்தான். “மூத்த தந்தை யுதிஷ்டிரர்” என்றபின் சுதசோமன் புன்னகைத்தான்.

கடோத்கஜன் களத்திற்கு தன் இடும்பர் படையுடன் வந்து நின்றபோது சர்வதனை திரும்பிப்பார்த்தான். “இளையோனே, இப்போரில் நீ ஆற்றுவதற்கொன்றுமில்லை என எண்ணுகிறேன்” என்றான். “இச்சுழிமையத்தை வில் கொண்டும் கதை கொண்டும் காக்கும்படி எனக்கு ஆணை” என்றான் சர்வதன். ஒருகணம் குனிந்து நிலத்தைப் பார்த்து “ஆம், ஒருவேளை அதற்கு தேவை இருக்கலாம்” என்ற பின் புன்னகைத்து “தந்தை என்னை முற்றறிந்திருக்கிறார்” என்றான். “தந்தையர் மைந்தரை அறிவார்கள்” என்றான் சர்வதன். சுருதசேனன் மறுபக்கத்தில் வந்து “நானும் உடனிருக்க வேண்டுமென்று ஆணை” என்றான். “மூவரா? தந்தை மிகையான எச்சரிக்கை கொண்டிருக்கிறார்” என்றான் சர்வதன். “அவர் அஞ்சிக்கொண்டிருக்கிறார்” என்றான் சுதசோமன். “அவர் அஞ்சி

அறிந்ததில்லை” என்றான் சுருதசேனன். “மைந்தரின்பொருட்டே தந்தையர் கோழைகளும், தன்னலமிகளும், சிறுமைகொண்டவர்களும் ஆகிறார்கள். அதை தெய்வங்கள் விரும்புகின்றன” என்றான் சர்வதன்.

கடோத்கஜன் “எங்கள் போர்முறை விளிம்புகள் கூரான படையாழி ஒன்று சுழன்று எழுந்து இறங்கிச் சுழன்று சுழல்விசையால் வெட்டி குருதிகொண்டு மேலெழுந்து மீண்டும் விரல்நுனிக்கு மீள்வது போன்றது. நாங்கள் ஆயிரத்துஎட்டு இடும்பர்கள் இணைந்து உருவாக்கியது இது. இதை ஆழிச்சூழ்கை என்கிறோம். ஆழியை ஏந்தும் சுட்டுவிரல் என இம்மையம் அமைந்துள்ளது. இதில் பன்னிரண்டு முறை இறங்குகையில் ஆறுமுறை இது சுழன்று இடம் மாறியிருக்கும்” என்றான். “நான் விழிகளால் உங்களை மட்டுமே தொடர்கிறேன், மூத்தவரே. உங்கள் கால்களை நான் நன்கு அறிவேன்” என்று சர்வதன் சொன்னான். கடோத்கஜன் புன்னகைத்து அவன் தோளைத் தட்டி “நோக்கி இரு... இன்று நீ பிறிதொரு போர்நிகழ்வை காண்பாய்” என்றான்.

வானில் பிறைநிலவு எழுந்ததும் போர்முரசின்றியே பாண்டவப் படை கௌரவப் படையை சென்று அறைந்தது. பல்லாயிரம் அறிவிப்பு விளக்குகள் படைமுழுக்க சுழன்று விழிகள் அறியும் மொழியொன்றை நிகழ்த்தின. ஒளியின் ஆணைகளுக்கேற்ப இருளென பெருகிக்கிடந்த பாண்டவப் படை அலைவு கொண்டது. அதன் பரப்பில் சிலிர்க்கும் கரிய கம்பிளிப்புழு என பல்லாயிரம் கைகள் எழுந்தன. கால்கள் ஆயிரங்களின் மடங்குகளில் பெருகின. அது சூடிய படைக்கலங்களின் முனைகள் மட்டும் ஒளிகொண்டிருந்தன. இரவின் வெளியில் மின்மினிப்படை திரண்டு எழுந்ததுபோல தோன்றியது. இருள்

முழக்கமிட அது கௌரவப் படையை தாக்கியது. இரு படைகளும் மோதிக்கொள்ளும் இடத்தில் இருளின் அலைவை காணமுடிந்தது. “இரு வேழங்கள் இருளில் மோதிக்கொள்வதுபோல” என்றான் சர்வதன். சுதசோமன் ஒன்றும் சொல்லவில்லை.

இடும்பர்கள் கழைகளுடன் சற்றே உடல் சாய்த்து காத்து நின்றனர். கடோத்கஜன் கௌரவப் படை முதலில் அடைந்த சிறிய பின்னடைவுக்குப்பின் முரசுகளால் ஆணையிடப்பட்டு விளக்குச்சுழற்சிகளால் வழிகாட்டப்பட்டு எழுந்து பாண்டவப் படையைத் தாக்குவதை நோக்கிக்கொண்டிருந்தான். “அங்கே அரக்கர்கள் தலைமைகொண்டிருக்கிறார்கள்” என்றான் சர்வதன். “எனில் நம் தாக்குதலை முன்னரே அறிந்திருக்கிறார்கள் என்று பொருள்.” சுதசோமன் கௌரவப் படையையே நோக்கிக்கொண்டிருந்தான். கடோத்கஜனின் ஆணைக்காக இடும்பர்கள் காத்திருந்தார்கள். மறுபக்கம் அரக்கர்களால் வழிகாட்டப்பட்ட கௌரவப் படை ஐந்து விரல்கள்போலப் பிரிந்து பாண்டவப் படையை எதிர்கொண்டது. கடோத்கஜன் அந்த ஒளிச்சுழல்கைகளை நோக்கிக்கொண்டிருந்தான். அந்த மொழியை உணர்ந்து படையமைவை காட்சியாக்கிக் கொள்கிறான் என சர்வதன் உணர்ந்தான்.

ஓர் இடும்பன் கழையில் தொற்றி மேலேறி உடனே இறங்கி கௌரவப் படையின் அமைப்பை விரைந்த கையசைவுகளால், விரல் முத்திரைகளால் கடோத்கஜனுக்குச் சொல்ல அவன் அதை ஆணை கலந்து தன் விரல்களால் சொல்ல இருபுறமும் நின்றிருந்தவர்கள் அதை விரலசைவுகளாலும் உடலாட்டத்தாலும் தங்கள் படையினருக்குச் சொன்னார்கள். அவர்கள் அதைக் கேட்டு அதே கையசைவுகளையும் விரல்

முத்திரைகளையும் திருப்பிக் காட்டினர். ஒலியும் ஒளியும் இன்றி அச்செய்தி அவர்களிடையே பரவியது. சர்வதன் அந்த அசைவுகளை நோக்கியபின் “தேனீநடனம்போல” என்றான். சுருதசேனன் புன்னகைத்து “நானும் அதையே எண்ணினேன், எறும்புகள் பேசிக்கொள்வதுபோல. ஒரு நொடியில்…” என்றான்.

சுதசோமன் கடுமையான தாழ்ந்த குரலில் “நாம் சொல்லெடுக்காமலிருந்தால் மட்டுமே இவர்களுடன் இணைந்துகொள்ள முடியும்” என்றான். சர்வதன் தலையசைத்தான். அவர்கள் அமைதியாக அந்த உடல்களினூடாக செய்தி ததும்புவதை நோக்கிக்கொண்டிருந்தனர். அவர்கள் ஒரு மாபெரும் குரங்குத்தொகை என்னும் எண்ணம் அவனிடம் இருந்துகொண்டே இருந்தது. அப்போது அவர்கள் பூச்சிகளைப்போல ஒற்றைஉள்ளம் கொண்டவர்கள் எனத் தோன்றியது. அவர்களின் உடலசைவுகள் நின்றபோது நீர்த்துளி என ஒவ்வொரு உடலிலும் ஒரு நிறைததும்பல் எஞ்சியிருந்தது. விரைந்து விழியோட்டி மொத்தமாக நோக்கியபோது அவர்கள் அனைவரும் இணைந்து ஒற்றைத் ததும்பல் என்றாகிவிட்டிருப்பது தெரிந்தது.

ஒவ்வொரு கணமும் எடைமிகுந்து அழுத்தியது. அவனால் நிற்க இயலவில்லை. ஆனால் கடோத்கஜன் அங்கே நிகழ்வதை அறியாதவன் போலிருந்தான். அவன் படையினரும் முற்றாக உறைந்துவிட்டிருந்தார்கள். மெல்ல சர்வதன் தன்னை எளிதாக்கிக்கொண்டான். என் பணி இங்கே காத்துநிற்பது மட்டுமே என தனக்கே சொல்லிக்கொண்டான். கடோத்கஜன் மிக மெல்லிய குரலில் உறுமியபோது அங்கிருந்த அனைவருக்கும் அது கேட்டது. தன் நெஞ்சில் ஓங்கி அறைந்து

தலையை அண்ணாந்து நீண்ட ஊளை ஒன்றை அவன் எழுப்பினான். அந்த ஊளையில் அனைத்து இடும்பர்களும் இணைந்துகொள்ள அது ஒலிநதி என பெருகிப் பெருகி சென்றுகொண்டே இருந்தது. பின்னர் சுழன்று விசைகொண்டு சுழியாகியது. அச்சுழற்சியால் தூக்கிச் சுழற்றப்பட்டதுபோல இடும்பர்கள் சுற்றிவந்தனர். விசைகொண்டு சுழன்று வந்த போக்கில் கடோத்கஜன் தன் கழையை ஊன்றிஎழுந்து வண்டுபோல் மேலே தாவிச் சென்றான். உடன் அவன் கழையும் வால் போலாகி சென்றது. சில கணங்களில் அங்கிருந்த இடும்பர்கள் அனைவரும் விண்ணின் இருளில் எழுந்து மறைந்தனர்.

சர்வதன் தன் தேரை அந்தச் சுழியின் விளிம்பினூடாக மெல்ல சுற்றி வரச்செய்தான். மறுமுனையில் வில்லேந்தியபடி சுருதசேனனும் சுற்றி வந்தான். சுதசோமன் வில்லுடன் அசைவிலாது நின்றான். அந்த ஆழி பறந்தெழுந்து சென்றிறங்கிய இடத்தை அங்கே நின்று நோக்கியபோது ஒரு கொந்தளிப்பாகவே உணரமுடிந்தது. விழிகளை மூடி ஒலியைக் கேட்டபோது அதில் ஒரு சுழியை உணர்ந்தான். திறந்து நோக்கியபோது இருளுக்குள் ஒரு கரிய சுழிப்பை கண்டான். அது உளமாயமா என வியந்து இமைகொட்டிப் பார்த்தான். பெரிய பாறை ஒன்று ஏரிநீர்ப்பரப்பில் விழுந்ததுபோல அங்கே அலையலையாக கௌரவப் படை விரிந்தகல நடுவே அந்த சுழி விரிந்துகொண்டிருந்தது. பின்னர் மீன்வலை இழுபடுவதுபோல அந்தச் சுழி சுருங்குவதை கண்டான். அங்கிருந்து இடும்பர்கள் எழுந்து வானில் பறந்து திரும்புகிறார்கள் என்பதை கண்டான். சுழலும் ஆழியிலிருந்து நீர்த்துளிகள் தெறிப்பதுபோல வாள்வட்டமாக, வீசப்படும் மணிமாலைபோல இடும்பர்கள் வானிலிருந்து வந்திறங்கினர்.

முதலில் வந்திறங்கியவன் கடோத்கஜன். மண்ணில் காலூன்றி வளைய பேருடல் ஒருகணம் அலைபாய இறங்கி நீண்ட வட்டமாக ஓடி அதன் மையம் நோக்கி வந்து வட்டத்திலிருந்து மீண்டும் கழையூன்றி எழுந்து பறந்து சென்றான். தொடர்ந்து இடும்பர்கள் வந்திறங்கி வளைந்த அலையென எழுந்து இருண்ட வானில் மறைந்தனர். சில கணங்களுக்குப் பின் அதை ஒரு சுழல்காற்று நிலத்தை ஊதி எழுந்து செல்வதுபோல உணரமுடிந்தது. ஒரு நோக்கில் மாபெரும் ஆழி ஒன்று வான்முதல் தரைவரை சரிந்திருப்பதுபோலத் தோற்றமளித்தது அது. மெல்ல சுழன்றுகொண்டே அது நகர்ந்து செல்ல சர்வதனும் உடன்பிறந்தாரும் அதை நீட்டிய விற்களுடன் தொடர்ந்தார்கள். முதல்முறை வந்திறங்கியபோது அவர்களின் உடல்களிலிருந்து குருதியும் நிணமும் தெறித்து அவர்களை நனைத்தது. அந்த மையத்து நிலம் வழுக்கும் சேறாலானதாக மாறியது. பின்னர் குருதித் துளிகளாலான சிறிய மழை எழுந்தது. மழைத்துளிகளை சுழற்றிச்செல்லும் சூறை என. அவன் உடல் குருதித்துளிகளால் நனைந்து குளிர் கொண்டது.

சற்று நேரத்தில் அச்சுழியை துரோணர் அடையாளம் கண்டுகொண்டார் என்பதை அவன் கௌரவர் தரப்பிலிருந்து அறிவிப்பு விளக்குகளின் ஒளிரும் சரடுகள் ஒன்றையொன்று தொடுத்துக்கொண்டு வலைபோல் விரிந்து அணுகுவதிலிருந்து புரிந்துகொண்டான். “சுழியை அணுகுகிறார்கள்” என்று அவன் சுதசோமனை நோக்கி கூவினான். சுதசோமன் கையசைக்க அவர்களை துணைக்கும்பொருட்டு இந்திரப்பிரஸ்தத்தின் வில்லவர்கள் பதினெண்மர் தங்கள் அம்புகளுடன் ஒருங்கி நிற்க சீரான விரைவில் துரோணரின் படை அணுகிவந்தது. அருகணையுந்தோறும் எரிந்துசூழும் காட்டெரி எனத் தோன்றியது. “அவர்கள் நம் அம்புவளையத்திற்குள் வரும்

வரை காத்திரு” என சுதசோமன் சொன்னான். “நாம் இங்கு காத்திருப்பதை அவர்கள் திரும்பமுடியாதபடி சூழ்ந்த பின்னரே அறியவேண்டும்.” சர்வதன் “ஆணை” என்றான்.

இடும்பர்கள் ஒரு சுழல் வீச்சென வந்தமைந்து எழுந்துசெல்ல இறுதியாக கடோத்கஜன் நிலத்தில் வந்து அமர்ந்ததுமே துரோணரின் படையிலிருந்து அம்புகள் வந்து அச்சுழியை அறையலாயின. அனைத்து அம்புகளுமே இடும்பர்களின் கால்களை நோக்கி குறிவைக்கப்பட்டிருந்தன. இடும்பர்கள் கால்களில் கவசமணிந்திருக்கவில்லை. அவர்களின் மெலிந்து சற்றே வளைந்த ஆமைக்கால்கள் வெவ்வேறு வகையில் வளைந்து நிமிரக்கூடியவையாக இருந்தன. கழைகளில் துள்ளி மேலெழவும் அதே விசையில் இறங்கவும் அக்கால்களின் குழைவே அவர்களுக்கு உதவியது. அம்புகள் அக்கால்களில் வந்தறைய இடும்பர்கள் அலறியபடி நிலைதடுமாறி கீழே விழுந்தனர். அவர்கள் மேல் மேலும் இடும்பர்கள் விழுந்தனர்.

சுதசோமன் கையசைக்க சுருதசேனனும் சர்வதனும் தங்கள் அம்புகளால் ஒரு வலைக்கூரை அமைத்து எழுந்து வந்தமைந்த அம்புகளை தடுத்தனர். சுதசோமன் தரையில் கால்மடித்து அமர்ந்து மேலே அம்புகளை தொடுத்தான். சுதசோமன் கையசைவால் ஆணையிட சர்வதன் ஒரு கணத்தில் பாய்ந்து இரு வீரரின் தோள்மேல் ஏறி நின்று துரோணரின் படைகளை நோக்கி அம்புகளை எய்தான். இந்திரப்பிரஸ்த வீரர்கள் ஒருகணம் இன்னொருவர் மேல் ஏறி அம்புதொடுத்து நிலத்திலமர இன்னொரு அணி மேலேறி அம்பு தொடுத்தது. அவ்வாறு அங்கிருந்து அம்புகள் எழும் என எதிர்பார்த்திராத துரோணரின் உத்தரபாஞ்சால வில்லவர்கள் திகைத்து கூச்சலிட்டனர். முதல் அணியின் வில்லவர்களை சர்வதனும்

வில்லவரும் வீழ்த்தினர். எஞ்சியவர்கள் பின்னடைய அவர்களின் அம்புகள் விசையிழந்தன. அவர்கள் தயங்கியதுமே மேலும் ஊக்கம்கொண்டு அம்புளால் இடைவிடாது அறைந்து பின்னடையச் செய்தனர் சுதசோமனும் சுருதசேனனும். கௌரவப் படைகளின் அம்புகளை முற்றாக செறுக்க ஒருகணத்தில் அவர்களால் இயன்றது.

"அவர்கள் மீண்டும் சுழியை அடையாளம் காண இயலாதபடி சிதறடிப்போம். அவர்கள் மீண்டும் சூழ்கை வகுத்து அணுகுவதற்குள் இடும்பர்கள் பேரழிவை உருவாக்கியிருப்பார்கள்" என்று சுதசோமன் சொன்னான். "அவர்களை அறைந்து வீழ்த்திக்கொண்டே இருப்போம்… அவர்களை இடும்பர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுபவை அவர்களின் கவசங்களே. கவசங்கள் அம்புகளை ஈர்ப்பதை அவர்கள் இன்னமும் அறிந்துகொள்ளவில்லை." சர்வதன் இருளுக்குள் மெல்லிய செந்நிற அலைவுகளாகத் தெரிந்த கௌரவப் படையினரின் கவசங்களை பார்த்தான். வில்லவனின் கவசத்தின் ஒளியிலிருந்து அவன் தேர்வலன் எங்கிருக்கிறான், புரவிகள் எங்குள்ளன என்று காணமுடிந்தது. மிக மெல்ல அவன் கவசங்களின் இடுக்குகளைக்கூட உள்ளம் நோக்கிஅறிந்தது. அவர்கள் இருளுக்குள் மறைந்திருக்க நோக்கு சென்றுவிரியும் வெட்டவெளியில் நின்றிருந்தனர் துரோணரின் வீரர்கள்.

## கார்கடல் - 70

சுழிமையம் நோக்கிச்சென்று இடும்பர்களைத் தாக்கும் தன் போரை துரோணர் மிகக் கூர்மையாக திட்டமிட்டு உகந்த

வில்லவர்களை முன்னிறுத்தி வலை ஒருக்கியிருந்தார். முன்னரே தங்கள் தாக்குதலை எதிர்பார்த்து பாண்டவர் சூழ்கை அமைத்திருப்பார்கள் என அவர் சற்றும் எண்ணாததால் பாண்டவ மைந்தர் ஏவிய அம்புகள் வந்துவிழுந்து தன் படைவீரர்கள் விழத்தொடங்கியதும் சற்றுநேரம் திகைத்தார். முதலில் அந்த அம்புகள் இடும்பர்கள் அருகிலிருந்து எங்கோ ஏவுவது என அவர் நினைத்தார். பின்னர்தான் அவை சுழியின் கரையிலிருந்து இருளில் எழுந்து இறங்குகின்றன என உணர்ந்தார். அத்தனை தொலைவில் இருந்து இலக்கு பிழைக்காமல் அம்புகள் வருகின்றன எனில் அங்கே அர்ஜுனனோ திருஷ்டத்யும்னனோ சாத்யகியோ இருக்கவேண்டும் எனத் தோன்றியது.

பின்னர்தான் அவர் பாண்டவ மைந்தரை நினைவுகூர்ந்தார். முதுமையால் அவர் இளையவரை நினைவுகூர எப்போதும் பிந்தினார். ஆகவே அவர்களை எண்ணாமலேயே எல்லாச் சூழ்கைகளையும் வகுத்தார். வில்லுடன் இளையோர் எதிரில் வரும்போதுகூட அவர்கள் போருக்கெழுந்திருக்கிறார்கள் என அவர் உள்ளம் எண்ணவில்லை. அவர்களின் அம்புகளில் சில அவருடைய கணிப்புகளைக் கடந்து தாக்கி உள்ளத்தை அதிரச்செய்யும்போது மட்டுமே அவர் அவர்களை வில்லவர் என உணர்வார். சீற்றம்கொண்டு அம்பெடுக்கையில் இருக்கும் விசை நாணிழுக்கையில் இல்லாமலாகும். அவர்களின் அம்புகள் எழுந்து தன்னை நோக்கி வருகையில் அவற்றை அறைந்து வீழ்த்தும்போதுகூட அவர்கள் ஆற்றும் பிழைகளை உள்ளம் கணக்கிடும். அரிதாக அவர்கள் பெருந்திறலுடன் வெளிப்படுகையில் மகிழ்வுறும்.

மைந்தரில் தந்தையர் வெளிப்படும் விந்தையை அவர் அப்போது வியந்துகொண்டிருந்தார். அம்புகளின் இயல்பிலிருந்தே பீமனின் மைந்தர் சுதசோமனும் சர்வதனும் தெரிந்தனர். பீமனின் மைந்தரின் அம்புகளில் தோள்வல்லமை இருந்தது. வந்தறைந்த அம்புகள் விசையால் ஆழ இறங்கி நடுங்கின. விசைமிகுதியால் அவை எப்போதுமே நேர்கோட்டுப்பாதையில் சீறி வந்தன. "அம்புகள் விசையால் ஆனவை, ஆனால் மிகையான விசையை அளித்தால் காற்றுக்குரிய தெய்வங்கள் சினம்கொள்கின்றன. பலனும் அதிபலனும் தங்களை நோக்கி அந்த அம்பு ஏவப்பட்டதாகவே எண்ணுகின்றனர். அந்த அம்புகளை அவர்கள் எதிர்நின்று ஊதி திசைமாற்றுகின்றனர். மிகைவிசை கொண்ட அம்பு கட்டற்றது. காற்றில் அது துள்ளி அதிர்ந்தபடி செல்வதை நீ காண்பாய். காற்றில் விரையும் அம்பின் தேவையற்ற ஒவ்வொரு அசைவும் திசைமாற்றுவதே" அவர் பீமனிடம் சொன்னார். அவன் எய்த அம்பு மரக்கிளை ஒன்றை ஒடித்து வீழ்த்தியிருந்தது.

அருகே அமர்ந்திருந்த அர்ஜுனனிடம் அவர் தொடர்ந்தார் "அறிக, சிறந்த அம்பு பலனை வழிபடுவது! அதிபலனின் வாழ்த்துக்களை பெற்றது. தவழும் குழவி தந்தைமேல் என அது பலனின் தலைமேல் ஏறிக்கொள்கிறது. அதிபலனின் தோளில் அமர்ந்திருக்கிறது. நீரலைகளின் மேல் அன்னம் என அது காற்றில் செல்கிறது. எழுவிசையில் துளியும் குறையாமல் இலக்கைச் சென்றடைகிறது. எதிர்க் காற்றும் எண்திசைக்காற்றுகளும் அதை குழப்புவதில்லை. நாண் விட்டெழும்வரைதான் அம்பு உன்னுடையது. உன் ஊழ்கத்தில் கனிந்த சொல்லை அது பெற்றுக்கொள்ளட்டும். அந்த அம்புக்குரிய தெய்வங்களிடம் அம்பை அளித்துவிடுக! அது தன்

வழியில் உன் இலக்கை நாடட்டும்.” அர்ஜுனன் விட்ட அம்பு மரக்கிளையை கடந்து சென்றது. ஒருகணம் தயங்கியபின் கிளை மெல்ல வெட்டுண்ட விளிம்புடன் மண்ணில் விழுந்தது. சுருதசேனனின் அம்புகளை அவர் அர்ஜுனன் என ஒருகணம் எண்ணி மறுகணம் சகதேவனை கண்டுகொண்டார்.

அவர் தேர்மேலும் கவசங்கள் மீதும் பாண்டவ மைந்தர்களின் அம்புகள் பட்டுத் தெறித்தன. நீளம்பு ஒன்று அவர் தோள்கவசத்தை உடைக்க அவர் நிலைதடுமாறி மீண்டார். அவருடைய புரவிகளில் ஒன்றின்மேல் நீளம்பு ஆழ்ந்திறங்கியது. அவர் தன் தேரை பின்னடையச்செய்து புரவியை மாற்ற ஆணையிட்டார். அப்போது அவருடைய படையினர் பாண்டவ மைந்தரின் அம்புகளால் தயங்கி பின்னடைய எண்ணிக்கொண்டிருந்தனர். துரோணரின் தேரின் பின்னகர்வை பின்வாங்குவதற்கான ஆணை என புரிந்துகொண்டு மொத்தப் படைவளையமும் விரிந்து அகன்றது. தேர்ப்பாகன் புண்பட்ட புரவியை அறுத்து விட்டுவிட்டு அருகே நின்ற இன்னொரு புரவியை கொண்டுவந்து கட்டும்பொழுதில் தன் படை பின்வாங்குவதைக் கண்ட துரோணர் “எழுக! எழுக! முன்னெழுந்து இடும்பர்களை தாக்குக!” என்று ஆணையிட்டார்.

ஆனால் அந்த ஆணை ஒளியென்று மாறி எழுந்தபோது உத்தரபாஞ்சாலர்களால் அதை உய்த்துணர முடியவில்லை. இயல்நிலையில் ஒளியாணையை மொழிப்படுத்திக்கொண்ட அகவுணர்வு இடர்நிலையில் கலைந்து பழகிப்போன ஆணைகளுக்காக தேடியது. ஆணை எழாதொழிய மேலும் படைகள் பின்னடைந்தன. துரோணர் சீற்றத்துடன் “எழுக... முன்னெழுந்து தாக்குக! அங்கே சிலர்தான்! முன்னெழுக!” என்று கூவினார். அவர் தன் தேரை விசையுடன் முன்னால்

செலுத்தியிருந்தால் அதுவே கண்கூடான ஆணையென எழுந்து உத்தரபாஞ்சாலப் படையினரை இடும்பர்களின் நடுச்சுழி நோக்கி செல்லவைத்திருக்கும். ஆனால் அவருக்கும் அந்தப் பதற்றத்தில் தன் ஒளியாணைகள் சென்றுசேரவில்லை என்பதனாலேயே உத்தரபாஞ்சாலர் பின்னடைகிறார்கள் என்பது புரியவில்லை. தன் ஆணைகள் உளம்கொள்ளப்படவில்லை என அவர் எண்ணினார். சினம் வெறியென்றாக "அறிவிலிகள்! முன்னேறிச் செல்க! பின்னடைவோர் கொல்லப்படுவார்கள்!" என்று கூவினார். காலால் தேர்த்தூணை ஓங்கி உதைத்தார்.

தன் சூழ்கை பின்னடைய அதை சொல்லால் ஆளமுடியாததை ஒரு தருணத்தில் தன் உடலுக்கும் உள்ளத்துக்குமான தொடர்பு அற்றுப்போய்விட்டதைப் போலவே உணர்ந்தார். அது அளித்த பதற்றத்தை அவரால் கடக்கமுடியவில்லை. அந்தச் செயலின்மையில் சுருதசேனனும் சுதசோமனும் சர்வதனும் அம்புகளால் அவருடைய படைகளை அறைந்து வில்லவர்களை வீழ்த்தினர். இடும்பர்களின் சுழிமையம் விலகி அப்பால் சென்றது. அங்கிருந்து இடும்பர்கள் பொங்கி எழுந்து அலையலையாக இறங்கி எடைமிக்க கதைகளால் அறைந்து தேர்களைச் சிதறடித்து வில்லவர்களை தலையறைந்து கொன்றனர். இடும்பர்கள் விண்ணிலிருந்து இறங்க அவர்களை அஞ்சி விலகிய கௌரவப் படைவீரர்களை பக்கவாட்டிலிருந்து பாண்டவ இளையோர் அம்புகளால் அறைந்து வீழ்த்தினர். இருள் பெருந்திரையாக மறைக்க அங்கிருந்து எழுந்த அம்புகள் நாகங்கள் என நெளிந்துவந்து அவர்களின் உயிர்களை கொய்தன.

கௌரவப் படை பின்னடைய இடும்பர்களின் சுழி இடம்மாறியது. வீழ்ந்த இடும்பர்களின் இடத்தை நிரப்பும் புதிய

இடும்பர்கள் வந்து சேர மீண்டும் விசையுடன் அரக்கர்கள் விண்ணிலெழுந்து கௌரவப் படையை தாக்கினார்கள். கௌரவர்கள் அவர்களால் சிதைத்து பரப்பப்பட்டு தனித்தனியாக முட்டி மோத அவர்களைக் கொன்று மேலெழுந்து இறங்கி மீண்டும் எழுந்து சென்றனர் இடும்பர். "வால்சொடுக்கிப் பாயும் வண்டுகள்... இவர்களை எதிர்கொள்ளும் படைக்கலம் ஷத்ரியர்களிடம் இல்லை" என்று சர்வதன் சொன்னான். அம்புகளை ஏவியபடி "துரோணர் மீண்டும் வரக்கூடும்... அவர் எழுகிறார் என்றே கொள்க!" என்று சுதசோமன் சொன்னான். "அவரால் போரிடவே இயல்கிறது. படைகளை நடத்த இயலவில்லை" என்றான் சர்வதன். "ஆம், ஆனால் அஸ்வத்தாமர் அரசரென அரியணை அமர்ந்தவர். ஆணையிடக் கற்றவர். தந்தையின் உதவிக்கு அவர் எழக்கூடும். சுழியின் அமைப்பை அவர்கள் அறிந்துகொண்டிருக்கிறார்கள் என்பதை எண்ணுக!" என்றான் சுதசோமன்.

"நாம் மேலும் படைகளை துணைக்கென அழைக்கவேண்டுமா?" என்றான் சுருதசேனன். "நம் படைகள் தந்தையரை பாதுகாத்துச் சூழ்ந்து நின்றிருக்கின்றன. இன்று நாகரான கர்ணன் மும்மடங்கு விசை கொண்டிருப்பார் என்கிறார்கள்" என்றான் சுதசோமன். அச்சொற்கள் அவர்களுக்கு மேலும் உளக்கூர்மையை அளித்தன. விழிகளால் மட்டுமே போரிடத் தடையாக இருந்த அனைத்தையும் சித்தத்திலிருந்து உரையாடல் அகற்றியது. கைகள் உள்ளத்தைவிட போரிடக் கற்றிருந்தன. அச்சூழலை அவை நன்கு கையாண்டன. கடோத்கஜன் வந்திறங்கி மேலே சென்ற சுழியைப் பாதுகாத்தபடி அவர்கள் மெல்லிய சுழற்சியாக சுற்றிவந்தபடி போரிட்டனர். மூன்றாவது முறை கடோத்கஜன் அங்கே வந்திறங்கியபோது அச்சுழியை நோக்கி விண்ணிலிருந்து

கரியபெரும்பாறைகள் பொழிவதுபோல் அரக்கர் கூட்டம் இறங்கத்தொடங்கியது. முதற்சில கணங்கள் எண்ணிக்கைக்கு மிகுதியான இடும்பர்களே அங்கு வந்திறங்குகிறார்கள் என்று சர்வதன் எண்ணினான். இறங்கியவர்கள் வலுவான கால்களும் மேலும் பெரிய உடலும் கொண்டிருந்ததை, அவர்கள் கதைகளால் இடும்பர்களை அறைந்து வீழ்த்துவதைக் கண்ட பின்னர்தான் அவர்கள் கௌரவர் தரப்பினர் என புரிந்துகொண்டான்.

“அலம்புஷரின் அரக்கர் குடியினர்!” என்று சுருதசேனன் கூவியதும்தான் என்ன நிகழ்கிறதென்று புரிந்துகொண்டு “ஆம், அவர்களின் கைகள் சற்று சிறியவை… கால்களில் கவசமணிந்திருக்கிறார்கள்!” என்று சுதசோமன் கூவினான். சுழி இரைவிழுந்த இடத்தில் மீன்கள்போல் இருளின் தேக்கத்தில் அசைவுகளாக கொதித்துக் குமிழியிட்டுக் கொப்பளித்தது. அந்த உடற்பெருக்கலைக்கொந்தளிப்பில் ஒவ்வொரு அரக்கரையாக அடையாளம் கண்டு சர்வதன் அம்புகளால் அறைந்தான். சில கணங்களுக்குள் இடும்பர்களையும் அலம்புஷரின் படைகளையும் பிரித்துக்கொண்டது அவன் உள்ளம். உளமறியும், சொல்லில் திரளும் அடையாளங்களுக்கு அப்பால் விழிமட்டுமே அறியும் அசைவுகளால் அவர்கள் வேறிட்டுத் தெரிந்தனர். அவர்களின் நெஞ்சக்கவசங்கள் எடைமிக்க இரும்பாலானவை. கால்களிலும் கைகளிலும் எருமைத்தோலுக்குள் கம்பிவலை வைத்த கவசங்கள். அவர்களின் கழுத்துக்களையோ விலாவையோ குறிவைக்க இயலாது. அவன் அம்புகள் அறைந்து வீணானதுமே அவர்களின் கையிடுக்குகளே சிறந்த இலக்குகள் என அவன் கண்டுகொண்டான்.

கை தூக்காமல் கதைசுழற்ற இயலாது. கதை ஒன்று உயர்ந்ததுமே அவன் விழிகள் உயரத்தைக் கணித்து கீழே அம்புகளை செலுத்தின. அவன் அம்புகளை தொடுத்த முறையில் இருந்தே அந்தத் திட்டத்தை சுதசோமனும் சுருதசேனனும் அறிந்துகொண்டார்கள். அவர்களின் உள்ளங்கள் வெவ்வேறு சுழற்சிகளில் இருந்தாலும் விற்களாலும் அம்புகளாலும் இணைக்கப்பட்டிருந்தன. நோக்கி எண்ணி புரிந்துகொள்ளாமலேயே அவர்கள் ஒரே வகையில் அம்புகளை எய்தனர். அவர்களின் அம்புகள் பட்டு அரக்கர்கள் அலறி நிலம் விழ, மேலிருந்து எருதுபோன்ற அமறல் ஓசையுடன் வந்திறங்கிய அலம்புஷர் கடோத்கஜனை கதையால் அறைந்தார். ஒரே அறையில் கடோத்கஜனின் தலையை சிதறடித்துவிடும் விசைகொண்டிருந்தார். ஆனால் கடோத்கஜன் நிலத்தில் நேராக ஊன்றாத கால்கள் கொண்டவன் என்னும் கணிப்பு அவரிடமிருக்கவில்லை.

உடலில் எஞ்சியிருந்த தன்னுணர்வால் கடோத்கஜன் தணிந்து ஒழிய இலக்கு பிழைத்த அவருடைய கதை காற்றை விம்மச்செய்தபடி சுழன்று அப்பால் சென்றது. அந்த ஒரு கணமே கடோத்கஜனுக்கு போதுமானதாக இருந்தது. கையூன்றி எழுந்து கதையுடன் சுழன்று அலம்புஷரின் இடையில் அறைந்தான். அலம்புஷரின் கவசங்களில் அந்த அறை விழுந்தமையால் ஓர் அடி பின்னெடுக்க நேர்ந்தமைக்கு அப்பால் அவருக்கு ஒன்றும் நிகழவில்லை. ஆனால் அவருடைய உடலில் ஓர் எச்சரிக்கை குடியேறி அவருடைய கதைவீச்சில் தயக்கமென, விசையிழப்பு என வெளிப்பட்டது. அதுவே கடோத்கஜனுக்கு நிகராக அவரை ஆக்கியது. இருவரும் கதைகளால் மோதிக்கொண்டபடி அச்சுழிமையத்தில் சுற்றிவந்து போரிட்டனர்.

அலம்புஷரின் படையினர் முழுமையாகவே சுதசோமனாலும் சர்வதனாலும் சுருதசேனனாலும் கொன்றழிக்கப்பட அலம்புஷர் தன் கொக்கிக்கயிற்றை வீசி அப்பால் எங்கோ இருந்த தேரொன்றில் தொடுத்துக்கொண்டு துள்ளி இருளில் மறைந்தார். நெஞ்சில் ஓங்கி அறைந்து போர்க்குரல் எழுப்பியபடி கடோத்கஜன் அவரை தொடர்ந்து சென்றான். கௌரவப் படைக்குள் அந்த இடத்தில் பெரும்போர் நிகழ்வதை சூழ நிகழ்ந்த உடல் அலைகளிலிருந்து சர்வதன் கண்டான். "அவரை சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள்!" என்று சர்வதன் சொன்னான். "அலம்புஷரின் படைகளும் இருளில் விழி துலங்குபவை. மூத்தவர் தனியாக அவர்கள் நடுவே சிக்கிக்கொண்டிருக்கிறார். நாம் துணைக்கு செல்ல வேண்டுமா?" என்றான். சுதசோமன் "இச்சுழியை காப்பதொன்றே நமது பணி" என்றான். "அவர்களின் போரில் நாம் நுழைய முடியாது. நமது படைக்கலங்களும் திறனும் அங்கே பயனற்றவை. அங்கே இடும்பர்களை செல்ல வைப்போம். அவர்கள் மட்டுமே அவரை காக்கமுடியும்..."

ஆனால் இடும்பர்களுக்கு ஆணையிடும் மொழி அவர்களுக்கு தெரியவில்லை. இடும்பர்கள் தங்கள் பழகிய சுழன்றெழுந்தமையும் முறையிலேயே கௌரவர்களை தாக்கி சிதறடித்துக்கொண்டிருந்தனர். கடோத்கஜன் மேல் விண்ணிலிருந்து இறங்கிய அலம்புஷரின் படையின் அரக்கன் ஒருவனை தொலையம்பை செலுத்தி சர்வதன் வீழ்த்தினான். "இங்கிருந்து மூத்தவர் போரிட்டுக்கொண்டிருக்கும் இடத்தை உய்த்துணர முடிகிறது. மேலிருந்து அங்கு அவர் மீதிறங்குகிறார்கள் அரக்கர்கள். அவர்களை விண்ணிலேயே வீழ்த்துவோம்" என்று அவன் கூவினான். "ஆனால் அம்புகள் இடும்பர்கள் மேல் படலாகாது..." என்றான் சுதசோமன். அவர்கள் இருவரும் தொலையம்புகளால் அலம்புஷரின் அரக்கர்களை

தாக்கினார்கள். ஆனால் மேலிருந்து விழுபவர்களை இலக்குகொள்வது எளிதாக இல்லை. பெரும்பாலான அம்புகள் இருளிலேயே புதைந்து சென்றன.

“அவர்கள் அணிந்திருக்கும் கவசத்தில் நமது அம்புகள் பட்டு செயலிழக்கின்றன. ஆனால் அவர்கள் விழும் ஒழுங்கை நம்மால் சற்று குலைக்க முடிகிறது. ஆகவே நிலையழிந்து பேரெடையுடன் மண்ணில் விழுகிறார்கள். அவர்கள் நிலைகுலைந்து எழுவதற்குள் இடும்பர்களால் தாக்க முடியும்… மூத்தவரே அலம்புஷரை பார்த்துக்கொள்வார்” என்றான் சுதசோமன். சர்வதன் “ஆனால் அவர் தனியாக அங்கிருக்கிறார். மேலும் மேலும் அலம்புஷரின் படையினர் அவரை சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் அனைவருமே இருளறியும் விழிகளும் பெருந்தோள்களும் கொண்டவர்கள்” என்று சொல்லி அங்கு பேரொலி எழுந்ததைக் கேட்டு நிறுத்தி “என்ன நிகழ்ந்தது? என்ன நிகழ்ந்தது அங்கே?” என்று கூவினான்.

இடும்பர்கள் அனைவரும் தங்கள் நெஞ்சில் அறைந்து குரலெழுப்பினர். “மூத்தவர் விழுந்தாரா? என்ன ஆயிற்று? இது எதைக் குறிக்கும் ஓசை?” என்று சுதசோமன் கூவினான். சர்வதன் “அவர்களின் மொழியும் உணர்வுகளும் முற்றிலும் மாறாக உள்ளன. அவர் மட்டுமே நமது குருதி. பிறர் நாமறியா தொல்குடியினர்” என்றான். இடும்பர்கள் ஒரு சுழியென வானிலெழுந்து சுழன்று சுழிமையத்தில் இறங்கினர். “மூத்தவர் எங்கே? மூத்தவர் எங்கே?” என்று சுதசோமன் கூவினான். விண்ணிலிருந்து விசையுடன் கடோத்கஜன் சுழியிலிறங்கி தன் கையிலிருந்த அலம்புஷரின் தலையைத் தூக்கி மேலெறிந்து அது கீழிறங்கியதும் தலையால் தட்டி அப்பாலிட்டான். அரக்கர் குடியினர் அத்தலையைப் பிடித்து தூக்கிக் காட்டி

ஒருவரோடொருவர் வீசிப்பிடித்தனர். நெஞ்சில் அறைந்து கூவினர்.

அலம்புஷரின் தலை இடும்பர்களின் கைகள் வழியாக வட்டமிட்டு வந்தது. மீண்டும் சுழி விசைகொள்ள கடோத்கஜனும் இடும்பர்களும் விண்ணிலெழுந்து இருளில் மறைய சுழிமையத்தில் விழித்த கண்களும் திறந்த வாயுமாக கிடந்தது. “அவர்கள் குடிவஞ்சம் எனும் நெறிகொண்டவர்கள். பகரின் குருதிவஞ்சத்திற்காக வந்தவர் இவர். இதோ இன்னொரு குடிவஞ்சம் சேர்ந்துள்ளது. இனி இது தலைமுறைகளில் ஏறி காலம் கடந்து செல்லும்” என்று சர்வதன் சொன்னான். “அவர்களின் குலமே முற்றழிவதுவரை இது நீடிக்கும். அவர்கள் இம்மண்ணில் பெருகலாகாது என்று எண்ணும் தெய்வத்தின் ஆணை இது. எந்த உயிரும் அதை வகுத்து இங்கு அனுப்பிய தெய்வத்தின் ஆணையை மீற இயலாது” என்றான் சுதசோமன். சுருதசேனன் “மூத்தவரே, இவ்வஞ்சமே அரக்கர்களை ஆற்றல் கொண்டவர்களாக்குகிறது” என்றான். “ஆம், நலிவுறுகையில் அவ்வஞ்சம் அவர்களால் தாளவியலா எடையாக மாறி அழிக்கிறது. காட்டில் பெருங்களிறுக்கு தந்தங்கள் அணியென்றும் படைக்கலன் என்றும் ஆகும். முதுமையில் அதன் தலையை மண்ணோக்கி இழுத்து கால்களில் நிற்கவியலாதாக்கி வீழ்த்தி உயிர்குடிப்பவையும் அவையே” என்றான் சுதசோமன்.

அப்பால் போர்முரசுகள் முழங்கின. அறிவிப்புகளின் ஓசைகள் அதிர்ந்ததிர்ந்து சுழல அவ்வோசையும் விளக்கொளியும் இணைந்து சொல்லொன்றை அமைத்தன. “என்ன செய்தி?” என்று சர்வதன் கூவினான். சுதசோமன் கைநீட்டி விளக்கொளியை தொட முயல்வதுபோல் அசைத்து,

தொட்டுத்தொட்டு வாசித்து “அங்கரும் இளைய தந்தை அர்ஜுனரும் போரிடுகிறார்கள்” என்றான். “அவரிடம் நாகஅம்பு உள்ளது. இரவில் அது ஏழு மடங்கு நஞ்சும் விசையும் கொண்டதாக இருக்கும்” என்று சர்வதன் சொன்னான். “எந்நஞ்சுக்கும் காப்பென்று அவருடைய தேரின் அமரத்தில் அமர்ந்திருக்கிறார் யாதவர்” என்றான் சுருதசேனன். “என்ன சொல்கிறது செய்தி? என்ன செயல் என்று நோக்குக!” என்று சர்வதன் கேட்டான். “நாகஅம்பு பிழைத்தது. அங்கரின் இளையோன் துருமன் வீழ்த்தப்பட்டான். அங்கர் பின்னடைகிறார்” என்றான் சுதசோமன்.

விண்ணிலிருந்து இடும்பர்கள் சுழல்நிரையென வந்திறங்கினார்கள். அவர்கள் ஒவ்வொருவரின் கையிலும் அரக்கர்களின் தலைகள் இருந்தன. ஊளையிட்டு உடலை அசைத்து நடனமாடியபடி அவற்றைத் தூக்கி வீசி பிடித்தனர். தலைகளினாலான ஒரு மாலை அச்சுழியில் ஒழுகிச் சுழன்றது. அலம்புஷர்களில் எஞ்சியவர்கள் வஞ்சமும் வெறியுமாக ஓலமிட்டபடி வந்திறங்க அவர்களை சுதசோமனும் சர்வதனும் சுருதசேனனும் அம்புகளால் அறைந்தனர். “அஸ்வத்தாமர் எழுவார் என்று எண்ணினேன்” என்றான் சுதசோமன். “அங்கர் பின்னடைந்ததால் அவர் அங்கு சென்றிருக்கலாம்” என்றான் சர்வதன். மீண்டும் இடும்பர்கள் விண்ணிலெழுந்து மறைய சுழி முழுக்க அலம்புஷரின் அரக்கர் குடியின் தலைகள் குவிந்து கிடந்தன. இறுதியாக நிகழ்ந்த சுழற்சி அவை மண்ணில் கிடந்த வளைவான அமைப்பிலேயே எஞ்சியிருந்தது.

முரசு வெறிகொண்டதுபோல் ஒலிக்கலாயிற்று. “என்ன நிகழ்கிறது?” என்று சர்வதன் கூவினான். “அங்கர் முழுவிசையுடன் எழுந்து தந்தையை தாக்குகிறார். அவருக்கும்

பீமசேனருக்குமிடையே போர் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. அது நிகர்நிலை அற்ற போர்... தந்தையால் அங்கரை எதிர்நின்று பொருத இயலாது" என்று சுதசோமன் சொன்னான். "இம்முறை அங்கர் நாகஅம்பை தந்தைக்கெதிராக எடுக்கக்கூடும்" என்றான் சர்வதன். அதை அக்கணமே தானும் எண்ணிய சர்வதன் திகைத்து "தந்தைக்கு அங்கே எவர் துணையிருக்கிறார்கள்?" என்றான். சுதசோமன் ஒளிஅசைவுகளை நோக்கி மின்னிச்செல்லும் ஆணைகளை தொட்டுத் தொட்டு வாசித்தறிய முயன்றான். பதைப்புடன் "ஒருமுறை எழுவது பிறிதொருமுறை எழுவதில்லை. ஒளியாணைகளை விழிவிசையால் தொடரமுடியவில்லை" என்றான். "அறிந்து சொல்க... தந்தை எந்நிலையில் இருக்கிறார் என்று சொல்க!" என்றான் சர்வதன்.

மேலிருந்து மீண்டும் விழுந்து எழுந்து பறந்தகன்றனர் இடும்பர். அவர்களை எஞ்சிய அலம்புஷ அரக்கர்கள் தாக்கிக்கொண்டே இருந்தனர். அவர்களை அம்புகளால் தடுத்துப்போரிட்டபடி துழாவித் துழாவி அவ்வொளி ஆணைகளை அறிய முயன்று சுதசோமன் சொன்னான் "அஸ்வத்தாமர் இளைய தந்தை அர்ஜுனரை எதிர்கொள்கிறார். சல்யரும் கிருபரும் இணைந்து சுருதகீர்த்தியையும் சதானீகனையும் தடுத்துவிட்டிருக்கிறார்கள். துரோணரால் திருஷ்டத்யும்னர் செறுக்கப்பட்டுவிட்டார். பாஞ்சாலர் சிகண்டி துரியோதனரை எதிர்கொள்கிறார்." சர்வதன் "அவ்வாறெனில் தந்தை தனியாக அங்கர் முன் சிக்கிக்கொண்டிருக்கிறார். இரவின் ஆற்றலும் வஞ்சத்தின் சீற்றமும் கொண்டிருக்கிறார் அங்கர்... அவரிடம் இருக்கிறது தடுக்கமுடியாத நஞ்சு" என்று கூவினான். "தந்தைக்கு துணையாக நாம் சென்றாக வேண்டும்... உடனே சென்று தந்தையின் இருபுறமும் நிற்கவேண்டும்."

“தந்தையின் ஆணை நாம் மூத்தவரைத் காத்து நின்றுகொள்ள வேண்டும் என்று, நாம் அதற்கு முழுமையாகவே கட்டுப்பட்டவர்கள்” என்றான் சுதசோமன். “மூத்தவருக்கு இப்போது இடரென ஒன்றுமில்லை… துரோணர் பின்னடைந்துவிட்டார். இச்சுழியில் வந்தறையும் அரக்கர்களும் இனி எவரும் இல்லை. நாம் தந்தைக்கு துணையெனச் செல்வதே இப்போது இயற்றக்கூடுவது” என்று சர்வதன் சொன்னான். “நாம் ஆணைகளை விலக்கிக்கொள்ள உரிமைகொண்டவர்கள் அல்ல” என்றான் சுதசோமன். விசையுடன் அவர்கள் நடுவே வந்திறங்கிய கடோத்கஜன் “செல்க, தந்தையின் வலமும் இடமும் நின்று காத்துக்கொள்க!” என்றான். சுதசோமன் நாவெடுப்பதற்குள் “இது என் ஆணை… செல்க!” என்றபின் கடோத்கஜன் மீண்டும் வானிலெழுந்தான். சர்வதன் “நாம் மூத்தவரின் ஆணைக்கு கட்டுப்பட்டவர்கள்” என்றான். “ஆம்” என்றான் சுதசோமன்.

அவர்கள் கலைந்து அலையடித்துக்கொண்டிருந்த பாண்டவப் படையினூடாகச் சென்றனர். நிலமாக இறந்த உடல்களின் பரப்பு விரிந்திருக்க அதன்மேல் வீரர்கள் அலறியபடி ஓடிக்கொண்டிருந்தனர். வானில் இளநீல ஒளி ஒன்று மின்னி மின்னி அணைந்துகொண்டிருந்தது. “பேரழிவு நிகழ்ந்திருக்கிறது… எவரால்?” என்று சர்வதன் கேட்டான். எதிரே கூச்சலிட்டபடி ஓடிய படைத்தலைவன் ஒருவனிடம் “என்ன நிகழ்கிறது? ஏன் இத்தனை அழிவு?” என்றான். “இளவரசே, அங்கர் வஞ்சத்தின் உச்சியில் எழுந்துள்ளார். அவருடைய அம்புகளுக்கு ஈடுசெய்ய இளைய பாண்டவர்கள் இருவராலும் இயலவில்லை. அங்கருக்குத் துணையாக அஸ்வத்தாமரும் துரோணரும் நின்றிருக்கையில் இங்கே பூச்சிக்கூட்டங்களைப்போல் வீரர்கள் விழுந்து சாகிறார்கள்…

இப்போர் தொடங்கிய பின்னர் இன்றுதான் பேரழிவு… கிராதரும் நிஷாதரும் இப்போருக்குப் பின் ஒருவரேனும் எஞ்சுவார்களா என்பதே ஐயம்தான்” என்றான். “ஏன்? அவர்கள் இரவுப்போர் அறிந்தவர்கள் அல்லவா?” என்றான் சர்வதன். “ஆம், ஆனால் இரவுக்குரியவை நாகங்கள்… இளவரசே, பாதாளத்தின் வாய் அங்கரின் ஆவநாழிக்குள் திறந்திருக்கிறது என்கிறார்கள்” என்றான் படைத்தலைவன்.

தொலைவிலேயே அவர்கள் கர்ணனின் கொடி பறப்பதை கண்டனர். அங்கே இருந்த அனலொளியில் அதன் பட்டுப்பரப்பு மென்மையாக ஒளிவிட்டுக்கொண்டிருந்தது. கர்ணனின் நாணொலி விம்மலோசையென, கொடிகள் பாறைகளில் அறையும் ஒலி என எழுந்தது. காற்றின் சீறலோசை ஒன்று இருளை நிறைத்திருந்தது. காட்சி நீர்ப்பாவைகளால் நிறைந்திருப்பதுபோல் நெளிந்து அலைகொண்டது. சுருதசேனன் “நோக்குக!” என்று கூவினான். அவன் சுட்டிக்காட்டிய திசையில் நோக்கிய சர்வதன் அங்கே இடைவெளியில்லாதபடி விழுந்து பரவிக்கிடந்த கிராதர்களின், நிஷாதர்களின் உடல்களினூடாக நெளிந்த நாகங்களை நோக்கினான். விழி அவற்றை நோக்கத் தொடங்கியதும் ஆயிரக்கணக்கான நாகங்களை அக்களமெங்கும் கண்டான்.

“எங்கிருந்து வருகின்றன இவை?” என்றான் சர்வதன். “நிலத்துக்கு அடியில் அரவுகள் நிறைந்துள்ளன. மானுடத்தின் வேர்கள் அவை” என்றான் சுருதசேனன். “அவற்றை மேலெழச்செய்யும் நுண்சொல் ஒன்று அவரிடம் இருக்கிறது.” அச்சொற்கள் செவியில் விழுந்த உடனே அதை சர்வதன் கேட்டு உணர்ந்தான். தலைக்குமேல் சென்று இறங்கிய அம்பு அரவுபோல் சீறியது. அவ்வொலி கேட்டு நிலத்தில்

நெளிந்துகொண்டிருந்த பாம்புகள் சீறி தலைதூக்கின. அம்புகளும் அரவுகளும் அவ்வோசையால் உரையாடிக்கொண்டன. அம்புகளின் நிழல்கள் அரவுகளுடன் சேர்ந்து நெளிந்தன. அம்பு சென்றபின்னரும் நிழல் அரவென அங்கே புளைந்து ஓடியது. அம்புகள் சீறிச் செல்லச்செல்ல குருக்ஷேத்ரத்தின் மண்ணில் கொப்புளங்கள் வெடித்து துளையெனத் திறக்க நாகங்கள் கிளைத்தெழுந்தபடியே இருந்தன.

# கார்கடல் - 71

துச்சாதனன் படைகளின் நடுவிலூடாக புரவியில் விரைந்துசென்றான். அவன் விழிகள் இருபக்கமும் துழாவி பதறிக்கொண்டிருந்தன. எதிரில் வந்த படைத்தலைவன் காஞ்சனனிடம் “மைந்தர்கள் எங்கே?” என்றான். அதன் பின்னரே தான் பன்மையில் கேட்டுவிட்டிருப்பதை உணர்ந்தான். படைத்தலைவன் குழம்பிய விழிகளுடன் “மைந்தர்கள்…” என்று தடுமாறினான். “என் மைந்தன் எங்கே?” என்று உள்ளில் எழுந்த வினா “ஆம், மைந்தர்கள் எங்கே போரிட்டுக்கொண்டிருக்கிறார்கள்?” என்றுதான் வெளியே வந்தது. ஆனால் அதற்குள் காஞ்சனன் புரிந்துகொண்டான். “இளவரசர் துருமசேனர் அங்கே சிறிய தந்தையருடன் போரிட்டுக்கொண்டிருக்கிறார்” என்றான். “உடன் சிறிய அரசர் சுபாகு இருக்கிறார்” என்று அவன் சேர்த்துக்கொண்டான்.

அவன் தன் ஆழத்தை புரிந்துகொண்டமை துச்சாதனனை சீண்டியது. ஆகவே திரும்பிப்பார்க்காமல் புரவியில் விரைந்தான். ஓசைகள் செவிகளை மூடியிருந்த

போர்க்களத்தில் புரவிக்குளம்படிகள் செவிகளை வந்தடைவதில்லை. ஆகவே போர்க்களத்தில் புரவியில் விரைவதென்பது முகில்களின் மேல் செல்வதுபோல தோன்றும். எப்போதும் அந்த விந்தையை அவன் அகம் விழைந்தது. அவனுடைய அந்த எளிய இன்பங்களை துரியோதனன் அவ்வப்போது ஏளனம் செய்வான். அது இளையவன்மேல் துரியோதனன் காட்டும் அன்பின் ஒரே வெளிப்பாடு என புரிந்துகொண்டிருந்த கௌரவர்கள் வெடித்துச் சிரிப்பார்கள். கோப்பைகளை ஒன்றினுள் ஒன்று என அடுக்கி வைப்பது, நீர் எங்கேனும் வழிந்திருந்தால் விரலால் கோடிழுத்து ஓடைகளாக ஆக்குவது, உலோகப் பொருட்களில் முகம் பார்த்தால் பற்களை இளித்து விழிகளை உருட்டி வேடிக்கை பார்ப்பது என துச்சாதனனால் செய்யாமலிருக்க இயலாத பல இருந்தன.

“அவன் கையில் அந்த வெள்ளிக்கோப்பையைக் கொடு… இன்று முழுக்க விளையாடிக்கொண்டிருப்பான். நாம் சென்று வேலையை பார்ப்போம்” என்று துரியோதனன் சொல்ல பிறர் உரக்க சிரிப்பார்கள். துர்மதன் கோப்பையை நீட்ட துச்சாதனன் நாணத்துடன் அதை வாங்குவான். அதை அருகே வைத்தபின் வேறெங்கோ விழிதிருப்பி அமர்ந்திருப்பான். அவர்கள் வெளியே சென்றதும் கோப்பையை எடுத்து தன் முகத்தை அதில் பார்த்து இளித்துக்காட்டுவான். கதவு திறந்து துர்மதன் எட்டிப்பார்த்து “ஆ, மூத்தவர் அசுரராக ஆகிவிட்டார்!” என்பான். அவனுடன் தலைநீட்டும் துச்சலனும் துச்சகனும் விந்தனும் அனுவிந்தனும் நகைப்பார்கள். ஆனால் பின்னர் துச்சகன் அவனிடம் “என்னாலும் கோப்பைகளில் முகம் பார்த்து பல்லிளிக்காமல் இருக்க இயல்வதில்லை, மூத்தவரே. இது நம்முள் வாழும் தெய்வங்களின் இயல்பா?” என்று கேட்டான்.

“கொன்றுவிடுவேன்... எழுந்து போடா” என்று துச்சாதனன் கூச்சலிட்டான்.

துச்சாதனன் புரவியின் கடிவாளத்தை இழுத்து நிறுத்தினான். நெஞ்சு தாளா துயரத்துடன் பெருமூச்சுவிட்டான். அவன் விழிகள் நனையவில்லை என்றாலும் விழிநீர் பெருக்கியதாகவே உணர்ந்தான். உதடுகளை கடித்துக்கொண்டு தன்னை இறுக்கி மெல்ல மெல்ல தளர்த்தி அவ்விடம் மீண்டான். களம்பட்ட உடன்பிறந்தாரின் முகங்கள் ஒவ்வொன்றாக எழுந்து எழுந்து வந்தன. எப்போது கண்களை மூடிக்கொண்டாலும் அவர்களின் முகங்களை பார்க்க முடிந்தது அவனால். களத்தில் வெறிகொண்டு போரிட்டுக்கொண்டிருக்கையில்கூட நடுவே ஒரு கனவின் அலை என அவர்கள் வந்துசென்றார்கள். சில தருணங்களில் அவன் களத்தில் இருப்பதையே மறந்து மீண்டு வந்து திகைத்தான். எப்போது தோன்றினாலும் அவர்கள் அனைவருமே துயர்மிக்கவர்களாக இருந்தனர். அவர்கள் அனைவர் விழிகளிலும் உதடுகளிலும் அவர்கள் ஒருபோதும் கொண்டிராத ஓர் உணர்வு இருந்தது.

துச்சாதனன் படைகள் நடுவே சென்றபோது அப்பாலிருந்து சுபாகு அவனை நோக்கி புரவியில் பாய்ந்து வந்து கடிவாளத்தை இழுத்து “மூத்தவரே, இங்கே ஏன் வந்தீர்கள்? அங்கே நீங்கள் அரசருக்குக் காவலாக நின்றிருக்கவேண்டிய பொழுதல்லவா இது?” என்றான். “அரக்கர்களின் படை விண்ணிலிருந்து பொழிகிறது. அவர்களை எதிர்கொள்ள முடியாமல் நமது படைகள் அழிந்துகொண்டிருக்கின்றன. அவனை கொல்ல என்ன முயற்சி எடுக்கப்போகிறார்கள்?” துச்சாதனன் “அவனை அங்கர் எதிர்க்கவேண்டும் என அரசர்

ஆணையிட்டிருக்கிறார். அங்கர் இப்போது பீமனை எதிர்த்துக்கொண்டிருக்கிறார். பீமனை அவர் இன்றே கொல்லக்கூடும்…” என்றான். சுபாகுவின் முகம் ஒருகணம் மாறி பின் மீண்டது. “நன்று” என்றான்.

துச்சாதனன் “நம் மைந்தர் இங்குதான் இருக்கிறார்களா?” என்றான். “ஆம், மைந்தர்கள் ஓரணியாகத் திரண்டு நின்றிருக்கிறார்கள்” என்றான் சுபாகு. அடுத்த வினாவை கேட்க நாவெழாமல் துச்சாதனன் திணற அவன் உடற்தசைகள் பேரெடையை தூக்க முயல்வதுபோல் அசைந்தன. சுபாகு “அவர்கள் ஒன்றாக நிற்கையிலேயே ஆற்றல்கொண்டவர்கள்… துருமசேனனால் தலைமை தாங்கப்படுகிறார்கள்” என்றான். துச்சாதனன் “நன்று” என்று சொல்லி உளம் சோர்ந்து “நான் பார்த்துச்செல்ல வந்தேன். போர் நிகழ்க!” என்றபின் கடிவாளத்தை இழுத்து புரவியை திருப்பினான்.

சுபாகு அப்போதுதான் அவன் உளநிலையை புரிந்துகொண்டான். “ஆம் மூத்தவரே, நீங்கள் எண்ணுவது சரிதான். பீமசேனரும் மைந்தரும் இன்று துருமசேனனை முதன்மை இலக்குகளில் ஒன்றாக கொள்ளக்கூடும். ஜயத்ரதரை அர்ஜுனர் கொல்வதாக சொல்லுறுதி எடுத்தபோது துருமசேனனைக் கொல்வதாக பீமனும் சொல்லுறுதி பூண்டார் என்றார்கள்” என்றான். துச்சாதனன் தொண்டைமுழை ஏறி இறங்க விழிகள் நீர்கோக்க திரும்பிக்கொண்டான். “ஏற்கெனவே இளையோரிடம் சொல்லியிருந்தேன். மீண்டும் சொல்கிறேன். அவர்கள் துருமசேனனை சூழ்ந்து நிற்பார்கள்” என்றான் சுபாகு. துச்சாதனன் பேச முயன்றான். தொண்டை அடைத்தமையால் அவன் குரல் எழவில்லை.

சுபாகு "அவர்கள் அவனைக் காத்துநின்றிருப்பார்கள்" என்றான். "ஆம்" என்றான் துச்சாதனன். பின்னர் "அவன் இன்று மட்டுமாவது பின்னணியில் நின்றிருக்கட்டும்... படைகளுக்குப் பின்னணியில். இன்று விடிவதற்குள்..." என்றான். "ஆம், இன்று விடிவதற்குள் வஞ்சினம் நிறைவேற்றுவதாக பீமன் சொன்னதாகவே சொன்னார்கள். நான் அதை எண்ணவில்லை. நான் அவனை படைப்பின்னணிக்கு அனுப்பிவிடுகிறேன்..." என்று சுபாகு சொன்னான். துச்சாதனன் "அதை உன் ஆணையாக சொல்... இல்லையேல் மூத்தவரின் ஆணையாக. நான் சொன்னதாக வேண்டாம்" என்றான். "அது எனக்குத் தெரியாதா? செல்க, நான் பார்த்துக்கொள்கிறேன்!" என்றான் சுபாகு.

துச்சாதனன் பெருமூச்சுவிட்டான். "நான் இதை சொல்வதைப்போல் கீழ்மை வேறில்லை. அதை நன்கறிவேன். இறந்தவர் அனைவரும் என் மைந்தரே. ஆனால்..." என்றான். அவன் தோளை தொட்ட சுபாகு "தந்தைக்கு மைந்தன் எப்பொருள் பெறுவான் என நான் அறியேனா என்ன? அவன் வாழ்வான், வெல்வான். அஞ்சாது செல்க, மூத்தவரே! நமக்கு எஞ்சும் மைந்தன் அவனே" என்றான். "நாம் வெல்வோம். துருமசேனன் கௌரவமுடி சூடுவான். அது தெய்வங்களின் ஆணை என தோன்றுகிறது." துச்சாதனன் "மெய்யாகவே எனக்கு அவன் அரசாளவேண்டும் என்று தோன்றவில்லை. அவன் அரசமகனாக வாழவேண்டும் என்றுகூட எண்ணமில்லை. எங்கேனும் அவன் உயிர்வாழ்ந்தால் மட்டும் போதும். நான் அவனை பார்க்கவேண்டும் என்பதுகூட இல்லை. அவன் இருந்தால் போதும்" என்றான்.

“அவன் வெல்வான், மண்ணாள்வான், சொல்லில் நீடுவாழ்வான். அஞ்சவேண்டாம், நம் குடித்தெய்வங்கள் உடனிருக்கும்” என்றான் சுபாகு. அவன் விழிகளிலும் நீர்மை மின்னுவதை துச்சாதனன் கண்டான். மீண்டும் பெருமூச்செறிந்தபடி அவன் திரும்பிச்சென்றான். ஓசையற்ற குதிரை நடை அவனுக்கு அப்போது அச்சமூட்டியது. நான் ஏற்கெனவே உயிரிழந்துவிட்டேனா? இப்போது சுபாகுவை நான் கண்டுபேசியது மெய்யாகவா அன்றி கனவிலா? மெய்யாக இப்படி நாணமில்லாது சென்று விழிநீர் விட்டு கேட்டு சொல்பெற என்னால் இயலுமா? இறந்த பின்னர் மானுடர் தன்னலம் கொண்டவர்களாக ஆகக்கூடுமா? அல்லது தசையழுகி எலும்பு எஞ்சுவதுபோல மானுடரிடம் எது பருமையோ அது மிஞ்சுமா?

அவனுக்குப் பின்னால் குரல் ஒலித்துக்கொண்டிருப்பதைக் கேட்டு துச்சாதனன் நின்றான். புரவியில் குழல்கற்றைகள் எழுந்து பறக்க துருமசேனன் அவனை நோக்கி விரைந்து வந்தான். புரவி விசையழியாது அவனை கடந்துசென்றது. திரும்பி அவனுக்கு நேர்எதிராக வந்து உரக்க மூச்சிரைத்தது. அதன் வியர்வையின் வாடை அந்தப் போர்க்கொந்தளிப்பிலும் தெரிந்தது. “தந்தையே, நீங்கள் இளைய தந்தையிடம் சொன்னது என்ன?” என்றான் துருமசேனன். “நான் ஒன்றும் சொல்லவில்லையே” என்று துச்சாதனன் சொன்னான். “இல்லை, நீங்கள் சொன்னது என்ன என்று நான் அறிவேன்... அதை உங்களால் வாயால் சொல்ல முடியவில்லை. உங்கள் நா கூசுகிறது. ஆனால் நான் அதை இயற்றவேண்டும் என ஆணையிடுகிறீர்கள்” என்று துருமசேனன் சொன்னான்.

“மைந்தா, நான் சொல்வதை நீ புரிந்துகொள்ளவேண்டும்… அளிகூர்ந்து என் சொற்களை நீ செவிகொள்ளவேண்டும்” என்றான் துச்சாதனன். “தந்தையே, சற்றுமுன் தந்தை சுபாகு என்னிடம் படைகளின் நடுவே சென்று ஒளிந்திருக்கும்படி ஆணையிட்டார்” என்றான் துருமசேனன். “நான்…” என துச்சாதனன் நாவெடுக்க “ஆம், அவர் சொன்னதற்குப் பொருள் அதுதான். படைகளின் நடுவே சென்று அணிநிலைகளை ஆளும்படி எனக்கு ஆணையிட்டார். உடனே எனக்குத் தெரிந்துவிட்டது, அவர் ஏன் சொல்கிறார் என. அக்கணமே என் கழையனை மேலேறி நோக்கச் சொன்னேன். நீங்கள் திரும்பிச்செல்வதை கண்டேன்” என்று துருமசேனன் சொன்னான். “உங்களிடம் நேரில் என் எண்ணத்தை சொல்லவேண்டும் என்பதனால்தான் ஓடிவந்தேன்.”

“ஆம், நான் சொன்னேன்” என்றான் துச்சாதனன். “பீமன் இன்று உன்னை கொல்வதாக சூளுரைத்திருக்கிறான்.” துருமசேனன் “உங்கள் நெஞ்சுபிளந்து குருதிகுடிப்பதாக சூளுரைத்திருக்கிறார்” என்றான். “நீங்கள் ஒளிந்துகொள்ள வேண்டியதுதானே? ஏன் களத்திற்கு வந்தீர்கள்?” துச்சாதனன் சீற்றத்துடன் “நான் ஒளிந்துகொள்வதா? அறிவிலி! இப்பிறவியில் என் கடன் என் தமையனுக்குப் பணிசெய்வதும் காவல்நிற்பதும் மட்டுமே” என்றான். துருமசேனன் “ஆம், அவ்வாறு சொல்லியே என்னை வளர்த்தீர்கள். என் தமையனுக்கு பணிசெய்பவனாக, காவல்நிற்பவனாக நான் வளர்ந்தேன். பிறிதொன்று அறிந்தவன் அல்ல. என் கண்ணெதிரே தமையன் கொல்லப்பட்டமைக்குப் பழிதீர்க்கவே அபிமன்யுவை கொன்றேன். களத்தில் அவன் தலையை அறைந்துகொல்கையில் எந்த இரக்கத்தையும் நான் கொள்ளவில்லை. நான் அதை செய்தாகவேண்டும். அது என் கடன்” என்றான்.

“ஆனால் அதன்பொருட்டு நான் வருந்தாமல் இல்லை… இளையவன், நான் என்றும் விழிக்குள் நோக்கி மகிழ்ந்த அழகன்… தந்தையே, அபிமன்யு எனக்கு என் ஆயிரம் உடன்பிறந்தாரில் ஒருவன் மட்டும் அல்ல, அவர்களில் முதல்வனும்கூட” என்றான் துருமசேனன். “இதோ எஞ்சும் தம்பியருக்கு மூத்தவனாக களம் நின்றுள்ளேன். தந்தையே, ஆயிரவரில் இனி எண்பதின்மரே எஞ்சியிருக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் உளம் சோர்ந்து களம்விட்டு மீளும் இளையோரிடம் நானும் தமையனும் சொல்வோம், இது நம் கடன் என. இங்கு களமெழுந்து உயிர்வைத்துப் போராடுவதற்கே நம் குடியும் குலமும் நாடும் நமக்கு ஆணையிட்டிருக்கின்றன. நாம் பிறந்தது அதன்பொருட்டே. கடமையில் உயிர்விடுபவர்களுக்குரிய விண்ணுலகை நாம் ஈட்டுகிறோம்… தந்தையே, இன்று என் உயிருக்கென அஞ்சி நான் ஒளிந்தேன் என்றால் என் வாழ்க்கைக்கு என்ன பொருள்?”

“ஆம், ஆனால்…” என்றான் துச்சாதனன். “இத்தனை இளையோர் இறந்தபின் நான் இந்தக் களம்விட்டு உயிருடன் மீளலாமா? சொல்க, உங்கள் உளம்தொட்டு கூறுக, அது அறமாகுமா?” துச்சாதனன் பேசாமல் நோக்கி நின்றான். “சொல்லுங்கள், தந்தையே. நான் இந்தக் களத்திலிருந்து உயிருடன் மீள்வேன் எனில் எவ்வகையிலேனும் அது பெருமையாகுமா?” துச்சாதனன் “நான் விழைவது என் செவியால் நீ மடிந்தாய் என்று கேட்கக்கூடாது என்று மட்டுமே” என்றான். “ஆனால் அச்சொல் உங்கள் செவிகளில் விழுவதுதானே அறம்?” என்றான் துருமசேனன். துச்சாதனன் முதுகெலும்பு சொடுக்குவதுபோல் உணர்ந்தான். “தந்தையே, இந்தப் பேரழிவுக்கு முதல் ஊற்று அரசரின் சொல், அடுத்தது உங்கள் செயல் அல்லவா?” என்றான் துருமசேனன். “ஆம்” என்றான் துச்சாதனன். “அதன்பொருட்டு

தன் மைந்தன் களம்பட்ட செய்தியை அவர் செவிபெற்றார். நீங்களும் அதை அடைந்தாகவேண்டும் அல்லவா? அதுவல்லவா அறத்தின் வழி?” துச்சாதனன் சில கணங்களுக்குப் பின் “ஆம்” என்றான்.

“தந்தையின் சொல்மீறிச் சென்றேன் எனும் பழி எனக்கு வரவேண்டியதில்லை… ஆகவே பணிந்து கோருகிறேன். நான் களம்சென்று போரிட்டு இன்றே மடிய என்னை வாழ்த்துக!” என துருமசேனன் தலைதாழ்த்தினான். துச்சாதனன் இரு கைகளும் கல்லால் ஆனவைபோல் அசைவற்றிருக்க வெறுமனே நோக்கினான். “வாழ்த்துக தந்தையே, அதுவே ஊழின் நெறி…” துச்சாதனன் பெருமூச்சுவிட அவன் நெஞ்சு ஏறியிறங்கியது. “வாழ்த்துக, தந்தையே!” என்றான் துருமசேனன். “நீ உன் அன்னையின் மைந்தன்” என்றான் துச்சாதனன். “நீ என்னைப்போல் இல்லை என்பதை எண்ண உளநிறைவே அடைகிறேன்.” அவன் தொண்டை இறுகியிருந்தது. சொற்களை முழு மூச்சுடன் உந்தி வெளியேற்ற வேண்டியிருந்தது. “இப்போரும் பேரழிவும் இல்லையேல் நீ இந்த யுகம் புகழும் அரசனாக எங்கோ நிலம்ஆண்டிருப்பாய். தெய்வங்கள் பிறிதொன்று எண்ணுகின்றன. தெய்வங்களின் ஆணையால் நான் அதற்கான கருவியாகிவிட்டேன்.”

அவன் கைகளை அசைத்து அவ்வெண்ணத்தை கலைத்தான். “எண்ண எண்ண அதுவே நெஞ்சை உடைக்கிறது. நான் வெறும் கூழாங்கல். அருமணி நீ. உன்னை என் பொருட்டு அழித்துவிட்டேன். நீ விண்புகுந்தால் நான் அதை எண்ணி எண்ணியே உருகிக்கொண்டிருப்பேன். தெய்வங்கள் கனியவேண்டும். ஓரிரு நாட்களுக்கு அப்பால் அப்பெருந்துயரை அவை எனக்கு அளிக்கலாகாது” என்றபின் “விண்ணேகுக,

மைந்தா! உனக்கு பேரியல்புகளை அள்ளி வழங்கிய தெய்வங்கள் அவற்றை திரும்பப்பெற்றுக்கொள்க! அவர்கள் மறுபிறப்பில் அவற்றை உனக்கு அளிக்கட்டும். அவற்றால் புகழும் முழுமையும் உனக்கு அமையட்டும்" என்றான். அவன் தலைதொட்டு வாழ்த்த வணங்கியபின் துருமசேனன் திரும்பிச்சென்றான்.

துச்சாதனன் மீண்டும் புரவியில் செல்லும்போது உடல் எடைகொண்டிருப்பதாக உணர்ந்தான். அங்கேயே விழுந்து துயில்கொண்டுவிட வேண்டும் என்று தோன்றியது. ஒரு சிறு துயில் அலையில் அவன் எங்கோ கொண்டுசெல்லப்பட்டான். ஓர் ஆற்றங்கரை. அங்கே அவன் இளையோருடன் நீர்விளையாடினான். விழித்துக்கொண்டதும்தான் அந்தக் கூட்டத்தில் அவன் இளைஞனாக இருந்ததை ஆனால் துருமசேனனும் மைந்தரும் அதே அகவையில் இளையோராக உடனிருந்ததை உணர்ந்தான். அங்கே அகவை இல்லை போலும் என எண்ணியபோது அவன் புன்னகைத்தான். அங்கே விரும்பிய அகவையை கொள்ளலாம். எனில் அவனும் துரியோதனனும் இளமையை விழைவார்கள். துருமசேனனும் லட்சுமணனும் முதுமையை விழைவார்கள் போலும். அவர்கள் சென்றடையாத தோற்றத்தை சூடிக்கொள்வார்கள்.

அவனைக் கண்டதும் துரியோதனன் "எங்கு சென்றாய்?" என்று சீறினான். "நான் மைந்தர்…" என்று சொல்ல வந்து விழுங்கிக்கொண்டான். துரியோதனன் "நானே எண்ணினேன். துருமசேனன் பாதுகாப்பாக இருக்கவேண்டும். அவன் படைமுகப்புக்கு செல்லக்கூடாது" என்றான். "ஆம்" என்றான் துச்சாதனன். போர்முரசுகளின் கதி மாறியது. துரியோதனன்

செவிகூர்ந்து “மந்தன் தப்பிவிட்டான்… இதோ அவனை அங்கர் கொல்வார் என எண்ணினேன். கொல்லும்போது நீ உடனிருக்கவேண்டுமே என எண்ணி திரும்பியபோதுதான் உன்னை பார்த்தேன்” என்றான். அணுகிவந்த ஏவலனிடம் “என்ன ஆயிற்று?” என்றான். “பீமசேனரை அங்கர் கொல்லும் தருணத்தில் கடோத்கஜர் பாய்ந்திறங்கினார். அவர்கள் பொருதிக்கொண்டிருக்கிறார்கள்” என்றான் ஏவலன்.

“நாம் அங்கருக்கு களத்துணை அளிக்கவேண்டும். அரக்கன் இருளில் ஏழுமடங்காக பெருகிவிட்டான் என்றார்கள். அவன்பொருட்டே அவர்கள் இன்று அந்திப்போர் ஒருக்கியிருக்கிறார்கள்” என்றான் துரியோதனன். துச்சாதனன் தேரிலேறி துரியோதனனை தொடர்ந்தான். கடோத்கஜனுக்கும் கர்ணனுக்கும் நடந்த போரில் அவர்களைச் சூழ்ந்து வந்து இறங்கிக்கொண்டே இருந்த இடும்பர்களை எதிர்த்து போரிட்டுக்கொண்டிருக்கையில் அவன் உள்ளம் பீமன் எங்கே சென்றான் என்றே எண்ணிக்கொண்டிருந்தது. “என்ன நிகழ்கிறது?” என்று அவன் கையசைவால் கேட்டான். “பீமன் எங்கே?” அணுக்கச்செய்தியாளன் அருகே வந்து “பீமசேனர் தெற்காக சென்றிருக்கிறார். நம் இளவரசர்கள் அவரை சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள்” என்றான்.

பின்னர் நெடுநேரம் அவன் எதையும் எண்ணவில்லை. சூழ்ந்து போரிட்டுக்கொண்டிருந்த இடும்பர்கள் மட்டுமே அவன் விழிகளிலும் உள்ளத்திலும் இருந்தனர். அவன் கர்ணனை நோக்கிக்கொண்டிருந்தான். அவ்விழிகளில் இருந்த வெறி அவனை அஞ்ச வைத்தது. அவன் ஒவ்வொரு முகங்களையாக பார்த்தான். அத்தனை முகங்களிலும் வெறி இருந்தது. ஒற்றைத்தெய்வம் அனைத்து உள்ளங்களிலும்

குடியேறிவிட்டதைப்போல. எவருக்கு எதிராக போரிடுகிறார்கள்! இது தெய்வங்களின் வஞ்சம் எனில் இந்தப் போர் மானுடருடன் அல்ல. அப்பாலும் நின்றுள்ளது பிறிதொரு தெய்வமே. தெய்வங்கள் தெய்வங்களுடன் போரிடும் இக்களத்தில் வெறும் கலங்களும் ஊர்திகளுமே மானுடர்.

கர்ணனை சூழ்ந்துகொண்டு கடோத்கஜன் போரிட்டான். தோன்றி அக்கணமே மறைந்தான். அவன் மேல் அம்புகள் தைக்க இன்னொருவன் இறந்து விழுந்தான். இருள் திரையென அங்கே சூழ்ந்திருக்க அதை இழுத்து இழுத்து போர்த்திக்கொண்டான். இரவுப்போரில் நாம் ஏன் விளக்குகளை கொளுத்திக்கொள்ளலாகாது என சகுனி கேட்டார். அந்த ஒளி அவர்களின் ஆற்றலை குறைக்குமே என்றார். "இல்லை, அந்த ஒளியால் நாம் அவர்களை பார்க்க முடியாது. அந்த ஒளிவட்டத்திற்கு அப்பால் வெளித்திருக்கும் இருளே அவர்களின் இடம். அவர்கள் நம்மை பார்க்க நாமே ஒளி அளித்ததாகவும் ஆகும்" என்று அஸ்வத்தாமன் சொன்னான். ஒளியே இருட்டைப் பெருக்கும் என்று துரோணர் சொன்னார்.

அறிவிப்புவிளக்குகளின் மெல்லிய ஒளியில் ஒருகணம் தெரிந்து மறைந்த கர்ணனின் முகம் துச்சாதனனை சிலிர்ப்படையச் செய்தது. அதில் இருந்த வஞ்சம், அது தன் முகத்தின் ஆடிப்பாவையா? இந்தக் களத்தில் அனைவருமே மைந்தரையும் இளையோரையும் மூத்தவரையும் தந்தையரையும் இழந்தவர்கள்தான். இருபுறத்திலும் அனைவரும் ஒருவர் எஞ்சியிராமல் இறந்தாலொழிய இவ்வஞ்சங்கள் மண்ணிலிருந்து அகலப்போவதில்லை. ஒருவேளை இப்போர் முடிந்து சிலர் எஞ்சினால் அவர்கள் சுமக்கப்போகும் பழிகள்தான் எவ்வளவு! எத்தனை சொற்கள்

அவர்களின் தலைமேல் கொடுந்தெய்வங்கள் என, குருதிகோரும் பேய்கள் என அமைந்திருக்கும்! அவர்களைப்போல் அளியர் எவர்?

செய்தியறிவிப்பாளன் புரவியில் வந்து அவன் தேருக்கு இணையாக விசையுடன் ஓடியபடி “செய்தி, அரசே” என்றான். துச்சாதனனின் கை தளர்ந்தது. “சொல்” என்றான். “இளவரசர் துருமசேனர் கொல்லப்பட்டார்.” அவன் வில்லைத் தாழ்த்தி தேர்த்தட்டில் அசைவிலாது நின்றான். “இளைய பாண்டவர் பீமசேனரால் அவர் தலை உடைக்கப்பட்டது” என்றான் அணுக்கச் செய்தியாளன். துச்சாதனன் ஏதேனும் வஞ்சினம் உரைக்கக்கூடும் என அவன் எதிர்பார்த்ததாகத் தோன்றியது. துச்சாதனன் வில்லை மீண்டும் எடுத்துக்கொண்டு “அவன் விண்ணில் நிறைவுகொள்க!” என்றான். செய்திஏவலன் தலைவணங்கி பின்னகர்ந்தான்.

ஆனால் தேர் முன்னெழுந்தபோது துச்சாதனன் உணர்ந்தான், அவனால் ஓர் அம்பைக்கூட தொடுக்க முடியவில்லை. பலமுறை அவன் அம்பை எடுத்தான். நாணில் கோத்தபின் மீண்டும் கையில் எடுத்துக்கொண்டான். பின்னர் சலிப்புடன் வில்தாழ்த்திக்கொண்டான். அப்போது வாழ்த்தொலிகள் வெடித்தெழுந்தன. “வீழ்ந்தான் கடோத்கஜன்! வீழ்ந்தான் இடும்பன்! வீழ்ந்தான் இருளுலாவி! வீழ்ந்தான் அரக்கன்!” துச்சாதனனை நோக்கி கைகளை விரித்தபடி தேரிலிருந்து பாய்ந்த துரியோதனன் “வீழ்ந்தான்! இனி நம் படைகளுக்கு இடரில்லை… அங்கரால் கொல்லப்பட்டான்” என்று கூவினான். “இளையோனே, அவன் உருவாக்கிய அழிவுகள் எவ்வளவு… நமது படைகள் எஞ்சியுள்ளனவா என்றே பார்க்கவேண்டியிருக்கிறது.”

“மூத்தவரே, துருமசேனன் களம்பட்டான்” என்றான் துச்சாதனன். துரியோதனன் ஒருகணம் திகைத்து “எப்போது?” என்றான். “சற்றுமுன்” என்றான் துச்சாதனன். “யாரால்?” என்றான் துரியோதனன். “பீமசேனனால்” என்றான் துச்சாதனன். அப்பாலிருந்து துரியோதனனை நோக்கி புரவியில் வந்த அஸ்வத்தாமன் “அரக்கன் வீழ்ந்ததை முரசுகள் கூவட்டும்… வெற்றிக்குரல் முடிந்தவரை உச்சத்தில் எழட்டும்… நம் படைகள் உளம் சோர்ந்திருக்கின்றன. இச்செய்தியால் அவர்கள் மீள்வார்கள்” என்றான். துரியோதனன் “ஆம், இளையோனே. மைந்தன் களம்பட்ட செய்தி இப்போது முரசில் ஒலிக்கவேண்டியதில்லை. நம் படைகள் வெற்றிக்கொண்டாட்டமிடட்டும்…” என்றபடி அஸ்வத்தாமனுடன் விரைந்தான். ஆணைகளை விடுத்தபடியே அவன் செல்வதை துச்சாதனன் நோக்கி நின்றான்.

புரவியில் ஏறி அவன் சென்றபோது எதிரில் சல்யரை கண்டான். “மத்ரரே, என் மைந்தன் துருமசேனன் களம்பட்டான்” என்றான். சல்யர் “கடோத்கஜன் கொல்லப்பட்டான் என செய்தி எழுகிறது… அவன் இறந்ததை இன்னொரு முறை உறுதிசெய்தாகவேண்டும்… அவர்கள் மாயக்காரர்கள்… அது அவன் உடலேதானா?” என்றார். “ஆம்” என்றான் துச்சாதனன். சல்யர் “நானே நேரில் பார்த்தாகவேண்டும்… இல்லையேல் என் உளம் அடங்காது” என்றபடி புரவியை தட்டினார். துச்சாதனன் அருகே சென்ற படைத்தலைவன் விகிர்தனிடம் “என் மைந்தன் களம்பட்டான்…” என்றான். “ஆம், அரசே. அவர் உடல் கொண்டுசெல்லப்பட்டுவிட்டது…” என்றபின் “கடோத்கஜர் இறப்பால் பாண்டவப் படை சோர்ந்துவிட்டது… இரவுப்போர் முடியவிருக்கிறது” என்றான்.

துச்சாதனன் புரவி தளர்நடையில் செல்ல அதன்மேல் தசைக்குவியல் என அமர்ந்திருந்தான். முரசுகளும் கொம்புகளும் ஒலிக்கத் தொடங்கின. முரசுகள் ஆணையிட கௌரவப் படை முழுக்க நெய்ப்பந்தங்களையும் விளக்குகளையும் கொளுத்தத் தொடங்கினர். ஒன்றிலிருந்து ஒன்றென பற்றிக்கொண்ட செஞ்சுடர்கள் வேங்கை பூத்த காடுபோல விழிகளை நிறைத்துப் பரவின. மறுபக்கம் பாண்டவர்களும் பந்தங்களையும் விளக்குகளையும் ஏற்றினர். புலரி எழுந்ததுபோல் கூரை என வானை மூடியிருந்த காலைப்பனியின் படலம் செவ்வொளி கொண்டது. அது ஒளியை திருப்பி அளிக்க போர்க்களம் செஞ்சாயத்தால் வரையப்பட்ட திரை ஓவியம்போல் விழிநிறைத்துப் பரந்தது.

கௌரவப் படைகளில் வெற்றிமுரசுகள் ஒலித்துக்கொண்டே இருந்தன. முழவுகளும் கொம்புகளும் முழக்கமிட ஊடே “வெற்றிவேல்! வீரவேல்! வெல்க அமுதகலக்கொடி! வெல்க குருகுலம்! வெல்க கௌரவப் பெரும்படை!” என்று கூச்சல்கள் பெருகிச் சூழ்ந்தன. காலைப்பனி அக்குரல்களை கார்வை கொள்ளச்செய்தது. துச்சாதனன் தன்னைச் சூழ்ந்து கொந்தளித்துக்கொண்டிருந்த மானுட உடல்களை பார்த்தான். அவனை அவர்கள் எவரும் அடையாளம் காணவில்லை. நீர்க்கொந்தளிப்பில் நெற்று என அவன் அலைக்கழிந்தான். கடிவாளத்தை இழுத்து புரவியை நிறுத்தி சூழ்ந்து அலையடித்த முகங்களை பார்த்தான். இளித்த பற்கள், வெறித்த நோக்குகள், சுழன்றடிக்கும் கைகள்.

அவன் நெஞ்சைக் கீறியபடி விம்மல் ஒன்று எழுந்தது. அதை அடக்க முயலுந்தோறும் அது விசைகொண்டது. பின்னர் பெருத்த கேவலோசைகளுடன் அவன் கதறி அழுதான்.

நெஞ்சில் வெறியுடன் ஓங்கி ஓங்கி அறைந்துகொண்டு “என் மைந்தா! என் மைந்தா! என் செல்வமே! என் தந்தையே! என் அரசே! என் தெய்வமே!” என்று கூவிக் கதறினான். அவன் அழுகையோசை அந்தக் கொந்தளிப்பின் நடுவே முழுமையாக மறைந்துவிட்டிருந்தது. அவன் அங்கே நின்று அழுவதை அவனன்றி எவருமே அறியவில்லை.

# கார்கடல் - 72

சுதசோமன் பீமனை நோக்கி விரைந்துசெல்ல அவனுடன் சர்வதனும் சுருதசேனனும் இருபுறங்களிலுமாக வந்தனர். பீமனை அறைந்து பின்னடையச் செய்துகொண்டிருந்தன கர்ணனின் அம்புகள். அவன் தேர் முழுக்க அம்புகள் தைத்து நாணல்கள் என செறிந்து நின்றிருந்தன. அவன் உடலெங்கும் அம்புகள் தைத்து அவன் போரிட்ட அசைவுகளுக்கேற்ப உதிர்ந்தன. சுதசோமன் சென்ற விரைவிலேயே தந்தையுடன் சேர்ந்துகொண்டு அம்புகளால் கர்ணனை அறைந்தான். மறுபக்கம் சர்வதனும் சேர்ந்துகொண்டான். சுருதசேனன் பீமனின் பின்புறத்தையும் வானையும் காத்து நின்றான். அவர்கள் வந்ததும் பீமன் சற்று ஆற்றல்கொண்டு அம்புகளால் அறைந்து கர்ணனை தடுத்து நிறுத்தினான்.

பீமனின் உடலில் இருந்து உடைந்த கவசங்கள் உதிர்ந்தன. அவனுடைய தேரில் இரண்டு புரவிகள் கழுத்தறுந்து தலைதொய்ந்து கிடந்தன. பாகன் தேரை பின்னெடுத்துச்செல்ல முயன்று புரவிகள் கால்கள் பின்னி தலைதாழ்த்தி நிலைகொள்ள சவுக்கால் அவற்றை அறைந்துகொண்டிருந்தான். தன்மேல் அம்புகள் படாமலிருக்க ஆமையோட்டுக் கவசம்

முழுமையாகவே தன்னை மூடும்படி அமரத்தில் குனிந்திருந்தான். கர்ணனின் பேரம்பு பீமனை அறையவிருக்கும் தருணம் என சுதசோமன் எண்ணினான். அவர்கள் இருவரும் அம்புகளால் ஒரு வேலியை உருவாக்கி கர்ணனை நிறுத்தினர். கர்ணனின் முகம் இருண்ட ஆலயக்கருவறைக்குள் மிக அப்பால் தெரியும் கதிர்முகத்தெய்வம்போல் உறைந்து எங்கோ திரும்பிய விழிகளுடன் தோன்றியது.

பீமன் தன் தேரிலிருந்து தாவி உடைந்து கிடந்த தேர்மகுடமொன்றில் மிதித்து நின்று கர்ணனுடன் போரிட்டான். அங்கே அம்புகள் வந்து மொய்க்க கீழே விழுந்து உருண்டு யானைச்சடலம் ஒன்றுக்குப் பின்னால் மறைந்து மீண்டும் எழுந்து வில்குலைத்தான். பீமனின் பாகன் தேரிலிருந்து இறங்கி வாளால் இரு புரவிகளின் நுகச்சரடை வெட்டி அவற்றை உதிர்த்துவிட்டு தன் முழு உடலாலும் சகடத்தை நெம்பி பக்கவாட்டில் தள்ளி தேரை தூக்கிவிட்டான். அதற்குள் படைகளின் பின்பக்கத்திலிருந்து கொக்கிகளை வீசி தேரை இழுத்து எடுத்தனர். இருவர் புதிய புரவிகளுடன் வந்து தேரில் அவற்றை கட்டினர். தேர்ப்பாகனிடம் “நீங்கள் விலகுக... புதிய பாகன் செல்லட்டும்” என்றான் படைத்தலைவன். “இது என் போர்!” என்றான் பாகன்.

தேரில் ஏறிக்கொண்டு அவன் அம்புத்திரைக்கு தலையை குனித்து முன்னால் வர பீமன் வந்து தேரில் தாவியேறிக்கொண்டான். பின்னிருந்து புதிய ஆவக்காவலன் அம்புகளை எடுத்து அளிக்க பீமன் புதுவிசை கொண்டு கர்ணனுடன் போரிட்டான். அம்புகளால் அறைந்தபடி பீமன் முன்னெழுந்து செல்ல சுதசோமன் போரிட்டபடியே சுருதசேனனிடம் “தந்தை அச்சமறியாதவர். அவரிடம்

பேசுவதில் பொருளில்லை... இப்போரை அவர் நெடுநேரம் நிகழ்த்தவியலாது. அங்கருடன் நின்று போரிடும் ஆற்றல் கொண்டவர் இளைய தந்தை அர்ஜுனர் மட்டுமே. செல்க, அவரை உடனே இங்கு துணைக்கு எழச் செய்க!” என்றான். சுருதசேனன் தலைதாழ்த்தியபின் தேரை பின்னடையச்செய்து அதிலிருந்து பாய்ந்திறங்கி புரவியில் ஏறி படையினூடாகச் சென்றான்.

கர்ணன் பீமனின் அந்த விசையை எதிர்பார்க்கவில்லை. முதலில் எழுந்த வியப்புக்குப் பின் அவன் சினம்கொள்வது தெரிந்தது. “விலகிச்செல், அறிவிலி... செல்!” என்று அவன் கூச்சலிட்டான். “இன்று உன் குருதியில் ஒரு துளி அருந்திவிட்டே செல்வேன், சூதன்மகனே” என்றான் பீமன். கர்ணனின் அம்புகளால் பீமனின் தேர்மகுடம் முன்னரே உடைந்திருந்தது. தூண்கள் சிதைந்து பின்னால் பறந்தன. பீமனின் உடலில் பெரும்பகுதி கவசங்களின்றி திறந்திருந்தது. சுதசோமன் திரும்பி நோக்கி “எங்கு சென்றான் அறிவிலி?” என்றான். சர்வதன் “தந்தையை பின்னடையச் செய்க, மூத்தவரே!” என்றான். “அவரிடம் எவர் சொல்வது!” என்று சுதசோமன் சொன்னான். “இளைய தந்தை எழுந்தாலொழிய இப்போர் முடிவுறாது” என்றான்.

சுருதசேனன் புரவியில் வந்து அருகணைந்து “மூத்த தந்தை அர்ஜுனர் அஸ்வத்தாமராலும் துரோணராலும் ஒரே தருணத்தில் மறிக்கப்பட்டிருக்கிறார். அவருக்குத் துணையாக சுருதகீர்த்தி மட்டுமே இருக்கிறார். சாத்யகியை சகுனியும் கிருபரும் சேர்ந்து மறித்திருக்கிறார்கள். திருஷ்டத்யும்னரை மூத்த தந்தை துரியோதனரும் இளையோரும் செறுக்கிறார்கள். எவரும் எங்கிருந்தும் விலகும் நிலையில் இல்லை” என்றான்.

சுதசோமன் “எவராவது வந்தாகவேண்டும்... உடனே வந்தாகவேண்டும்” என்றான். பீமன் உடலில் அம்புகள் தைத்துக்கொண்டே இருந்தன. ஒவ்வொரு அம்புக்கும் அவன் மேலும் சினம்கொண்டு முன்னேறினான்.

சர்வதன் “தந்தையே! தந்தையே” என்று கூவினான். பின்னர் சுதசோமனிடம் “தந்தையை நிறுத்துங்கள்... அவர் அம்புகளின் எல்லையைக் கடந்து அணுகுகிறார்” என்றான். சுதசோமன் ஒருகணம் உளம்தளர்ந்தான். கண்முன் அது நிகழவிருக்கிறதா? அதன்பொருட்டா அத்தனை விரைந்து வந்தோம்? சர்வதன் “ஏதாவது செய்யுங்கள், மூத்தவரே. அவரை பின்னெடுங்கள்” என்றான். “நாம் உயிர்கொடுப்பதொன்றே இப்போது செய்யக்கூடுவது” என்றபடி சுதசோமன் வில்லை இழுத்து அம்புகளைத் தொடுத்தபடி கர்ணனின் அம்புகளின் எல்லையை கடந்து உள்ளே சென்றான். கர்ணனின் அம்புகள் அவன் கவசங்களை அறைந்தன. அவை உடைந்து விழ அவன் நெஞ்சில் கர்ணனின் அம்பு பாய்ந்து அவனை தேரிலிருந்து தூக்கி வீசியது.

நிலத்தில் விழுந்து நெஞ்சில் நட்ட அம்புடன் துடித்துப் புரண்டு கீழே கிடந்த சடலங்களுடன் கலந்த சுதசோமனைக் கண்டு “மூத்தவரே...” என்று கூவியபடி சர்வதன் அம்புகளால் கர்ணனை அறைந்து முன்னெழுந்தான். “நீ பின்னால் செல்” என்று பீமன் கூவினான். “பின்னெழுக... இது என் ஆணை!” சர்வதன் “தந்தையே” என்றான். “பின்னால் செல்க!” என்றான் பீமன். சர்வதன் கண்ணீருடன் தேரை பின்தங்கச் செய்தான். கொக்கிச்சரடுகளை வீசி சுதசோமனின் உடலை இழுக்க பின்னணிப் படையினர் முயன்றனர். ஆனால் கர்ணனின் அம்புகளால் கொக்கிகள் அறைந்து வீழ்த்தப்பட்டன. சர்வதன்

தேரிலிருந்து இறங்கி குனிந்து ஓடி சுதசோமனை அடைந்தான். அவன் முதுகின் கவசத்தின் மேல் கற்கள் விழுவதுபோல் அம்புகள் அறைந்தன. சுதசோமனின் உதடுகள் அசைந்தன. சர்வதன் உடலை நீட்டி கையால் எட்டி கொக்கிக் கயிற்றைப் பற்றி சுதசோமனின் இடைக்கச்சையில் பொருத்தினான். கயிறு சுதசோமனை இழுத்துச்செல்ல அவன் “இளையோனே” என முனகினான்.

சர்வதன் கீழே படுத்தபடி நோக்கியபோது பறவைக்கூட்டங்களால் சூழப்பட்டவன்போல் அம்புகள் நடுவே நின்ற பீமனை கண்டான். அவன் உடலில் கவசங்களே இல்லை என்பதை உணர்ந்ததும் அவன் கண்களை மூடிக்கொண்டான். “தந்தையே! தந்தையே!” என்று அவன் கூவினான். கர்ணன் அம்பு ஒன்றை எடுத்து நாண் இழுத்து தொடுப்பதை அவன் அகத்தால் கண்டான். சூழ்ந்திருந்த பாண்டவப் படையினரின் அலறலோசைகள் சேர்ந்து எழுந்தன. பெரிய கரிய சுவர் ஒன்றால் பீமன் அனைத்து அம்புகளில் இருந்தும் காக்கப்பட்டதுபோல் உளமயக்கு எழ அவன் விழிதிறந்த அதே கணம் விண்ணிலிருந்து முழக்கமிட்டபடி கடோத்கஜன் கர்ணனுக்கும் பீமனுக்கும் நடுவே இறங்கினான்.

கர்ணன் அதை எதிர்பார்க்கவில்லை என்பதனால் வில் திகைக்க செயலிழந்தான். அந்த கணப்பொழுதே கடோத்கஜனுக்கு போதுமானதாக இருந்தது. அவன் கர்ணனின் தேர்மேல் பாய்ந்து அமரத்தின்மேல் இறங்கி அங்கே தேர்ப்பாகனாக அமர்ந்திருந்த கர்ணனின் உடன்குருதியினனான உக்ரசீர்ஷனை அறைந்து கொன்றான். தன் கவசங்களுடன் உடல்சிதைந்து குருதி தெறிக்க அவன் தேர்த்தட்டிலேயே விழுந்தான். கர்ணன் கையிலிருந்த அம்பால் கடோத்கஜனை குத்த அதை உடல்

வளைத்து ஒழிந்து கதையைச் சுழற்றி கர்ணனை அறைந்தான் கடோத்கஜன். கர்ணன் அதை தன் வில்தண்டால் தடுத்து அக்கணமே வாளை உருவிக்கொண்டு கடோத்கஜனை தாக்கினான். வாள்வீச்சை ஒழிந்து துள்ளி எழுந்து இருளில் மறைந்த கடோத்கஜன் மறுகணமே கர்ணனின் தேருக்குமேல் இறங்கி தேரின் மகுடத்தை அறைந்து உடைத்தான். கர்ணன் வில்குலைத்து அம்புதொடுப்பதற்குள் மீண்டும் பறந்தெழுந்து மறைந்தான்.

இருபுறத்திலிருந்தும் ஊளைகள் முழங்க இடும்பர்கள் கர்ணனைச் சுற்றி இறங்கினார்கள். அவர்களின் நீள்வேல்களும் கதைகளும் கர்ணனைச் சூழ்ந்து வந்த அங்கநாட்டு வில்லவர்களை கொன்றுவீழ்த்தின. அவர்கள் வில்லெடுத்து தொடுக்கும் அளவுக்கு தொலைவு இருக்கவில்லை. வாளாலோ கதையாலோ தாக்க இடும்பர்கள் நிலைகொள்ளவுமில்லை. உருவெனத் திரளா இருளுடன் போரிடுவதாகவே அவர்கள் உணர்ந்தனர். இருள் உருவெனத் திரிந்துவந்து தாக்கி மீண்டது. அவர்கள் அஞ்சிக் கூச்சலிட்டபடி பின்னடைந்தனர். ஒருவரோடொருவர் முட்டி மோதினர். அவர்களை மேலிருந்து வந்து தூக்கிக்கொண்டு மேலெழுந்தனர் இடும்பர். மேலிருந்து எடையுடன் நிலமறைந்து விழுந்தவை தங்கள் தோழர்களின் உடல்கள் என அவர்கள் கண்டனர். பின்னர் அவர்களின் தலைகள் வந்து அவ்வுடல்கள்மேல் விழுந்தன.

எதிர்பாராத கணத்தில் கர்ணனின் தேரின் பின்புறத்தில் தோன்றிய கடோத்கஜன் அவனை முதுகில் அறைந்து வீழ்த்தினான். வில்லுடன் தேரின் முகப்பை நோக்கி விழுந்த கர்ணன் அடுத்த அறை விழுவதற்குள் உருண்டு கையூன்றி எழுந்தான். மேலும் ஒரு அறை விழ அவன் துள்ளி கீழே

பாய்ந்தான். நீள்வேலால் கடோத்கஜனை தாக்க அவன் எழுந்து விண்ணுக்குள் மறைந்தான். சினத்துடன் கர்ணன் கூச்சலிட்டான். வெறுங்காற்றில் தன் வேலை வீசினான். அவனைச் சூழ்ந்து அங்கநாட்டு வில்லவர்களின் உடல்கள் மேலிருந்து விழுந்தன. அவன் கீழிருந்து கதை ஒன்றை எடுத்துக்கொண்டு விண்நோக்கி கைதூக்கி அறைகூவல் விடுத்தான்.

மேலிருந்து இறங்கிய இடும்பன் ஒருவன் அவனை அறைவதற்குள் நாகபடம்போல் விரைவுடன் திரும்பி அவனை தலையிலறைந்து வீழ்த்தினான். முகத்தில் தெறித்த அவன் தலைச்சேறுடன் துள்ளி எழுந்து மேலிருந்து விழுவதற்குள்ளாகவே இன்னொரு இடும்பனை அறைந்துகொன்றான். அப்பால் கழையில் எழ முயன்ற இடும்பன் ஒருவனை கதையை எறிந்து வீழ்த்தி பாய்ந்து சென்று நீள்வேலால் அவன் நெஞ்சில் குத்தி தூக்கிச் சுழற்றி அப்பாலிட்டான். அவன் கதையை எடுப்பதற்குள் விண்ணிலிருந்து இறங்கிய கடோத்கஜன் அவனை கதையால் அறைந்தான். மூன்று அறைகளையும் ஒழிந்து கதை நோக்கிப்பாய்ந்து அதை எடுத்துக்கொண்ட கர்ணன் கடோத்கஜனை அறைந்தான். அதை தவிர்த்து துள்ளி அப்பால் விலகி மீண்டும் விண்ணில் எழுந்து மறைந்தான் கடோத்கஜன்.

கர்ணனின் தேரை இழுத்து பின்னால் கொண்டுசென்றார்கள். அதில் இறந்து தொங்கிய புரவிகளை அகற்றி புதிய புரவிகளைக் கட்டி கர்ணனின் குடியிளையோன் சாந்தன் ஓட்டிக்கொண்டு வந்தான். கர்ணன் சரிந்துகிடந்த சிதைந்த தேர்களில் கால்வைத்து பாய்ந்தோடி தன் தேரிலேறிக்கொண்டான். விஜயத்தை எடுத்து அவன் நாணொலி

எழுப்பியதும் அகன்றுசென்று முட்டிமோதிக்கொண்டிருந்த அங்கநாட்டுப் படைவீரர்கள் பெருங்கூச்சலுடன் தங்களை ஒருங்கிணைத்துக்கொண்டு எழுந்தனர். வில்குலைத்து நாணொலி எழுப்பியபடி அவர்கள் உடையாத தேர்களில் ஏறி தங்களை நிரையாக்கிக்கொண்டு வந்து அவன் முன் கூடினர்.

கர்ணன் அம்புகளை வானோக்கி ஏவி இருளில் ஒரு கூரை என நிறுத்தினான். அம்புகள் பட்டு மேலிருந்து இடும்பர்கள் அலறியபடி விழுந்தனர். "விண்ணை முழுமையாக அம்புகளால் நிறையுங்கள்... அம்பு படாது ஒருவன்கூட கீழிறங்கலாகாது" என்று கர்ணன் ஆணையிட்டான். பின்னடைந்து படைநிரைக்குள் புகுந்து தன் உடலில் இருந்து அம்புகளை அகற்றி, புண்களுக்கு கட்டுபோட்டு புதிய கவசங்களை அணிந்து புதிய தேரில் மீண்டு வந்த பீமன் "எழுக! எழுந்து சூழ்க!" என தன் படையினருக்கு ஆணையிட்டுக்கொண்டு முன்னெழுந்து கர்ணனை தாக்கினான். கர்ணன் இருபுறங்களையும் அம்புகளால் செறுத்தபடி வானிலும் அம்புகளை செலுத்தி கௌரவப் படையை முற்றாகக் காத்தபடி முன்னெழுந்து வந்தான். அவனை பாண்டவர்களின் எந்த அம்பும் சென்றடையவில்லை. அவன் அம்புகள் பட்டு விண்ணிலிருந்து விழுந்த இடும்பர்களை வில்லவர்கள் அம்புகளால் மேலும் மேலும் அறைந்து சிதைத்தனர். தன் தேரின்மேல் விழுந்த இடும்பன் ஒருவனை வாளால் தலைவெட்டி அதை உதைத்து தெறிக்கச் செய்தான் கர்ணன். கௌரவப் படையினர் பெருங்கூச்சலிட்டு நகைத்தபடி எழுந்து வந்துகொண்டிருந்தார்கள்.

அரவான் சொன்னான்: தோழரே, அறிக! நான் போரை பார்த்துக்கொண்டிருக்கிறேன். எத்தனையோ யுகங்களுக்கு

அப்பால் என்றுமினி மீளமுடியாத காலத்தொலைவில் நிகழ்ந்து அணைந்துவிட்டிருக்கிறது அந்தப் போர். கர்ணனுக்கும் கடோத்கஜனுக்கும் நிகழ்ந்த களமோதலை கதிரவனுக்கும் இருளுக்கும் இடையேயான போர் என்று களம்பாடும் சூதர்கள் சொல்கின்றனர். ஒளி ஊடுருவுவது, கடந்துசெல்வது, எழுந்தணைவது. இருள் சூழ்ந்துகொள்வது, என்றுமிருப்பது, அலகிலாத விரிவுகொண்டது. இருளை ஒளி பல்லாயிரம் முறை வெல்லும். ஆனால் இருளே என்றுமிருக்கும்.

படைப்பு முதற்பொழுதில் இப்புடவியைச் சமைத்த பிரம்மன் இரு கைகளிலும் ஊடும் பாவுமென கடுவெளியில் இருந்து இருளையும் ஒளியையும் எடுத்துக்கொண்டான். இருளால் மண்ணை உருவாக்கினான். ஒளியால் அனலை உருவாக்கினான். ஒளியையும் இருளையும் கலந்து நீரை சமைத்தான். இருளால் யானையை உருவாக்கினான். ஒளியால் செம்பருந்தை உருவாக்கினான். இருளையும் ஒளியையும் கலந்து நாகங்களை படைத்தான். வேர்கள் இருளால், தளிர்கள் ஒளியால். விதைகள் இருளால், மலர்கள் ஒளியால். ஆற்றல் இருள். விசை ஒளி. சொல் இருள், பொருளே ஒளி. ஒன்றிலாது ஒன்றிலாது ஒன்றிலாது முடையப்பட்டு ஒன்றுடன் ஒன்று போரிட்டுக்கொண்டிருக்கின்றன அவை.

அரக்கர்களை மண்ணில் இருந்தும் அசுரர்களை வேர்களில் இருந்தும் படைத்தான் பிரம்மன். கந்தர்வர்களை அனலில் இருந்தும் தேவர்களை ஒளியிலிருந்தும் படைத்தான். மண்ணில் உடல்படைத்து அனலில் உளம்சமைத்து மானுடரை அமைத்தான். தேவரும் அசுரரும் மாளாப் போரில் ஈடுபட்டிருக்கின்றனர். அறிக, ஒவ்வொரு மானுடருக்குள்ளும் அப்போர் ஒவ்வொரு கணமும் என நிகழ்கிறது. ஆணவம்

அசுரர்களின் இயல்பு, விழைவு தேவர்களுக்குரியது. சினம் அசுரர்களை யாக்கிறது, சீற்றம் தேவர்களின் விசை. வஞ்சம் அசுரர்களுக்குரியது, வீறு தேவர்களுக்குரியது. வெற்றியில் தேங்கித் திளைக்கிறது ஆசுரம், வென்றபின் வெறுமைகொண்டு கடந்து செல்கிறது தேவம். மானுடர் இரு முனைகளில் ஓயாது ஊசலாடும் எளியோர்.

எண்ணிஎண்ணிப் பெருகுபவர்கள் இருளின் மைந்தர்களான அரக்கர்கள். ஆணவமும், சினமும், வஞ்சமும் அவர்களின் தலைகளும் கைகளுமாகின்றன. கடோத்கஜன் ஆயிரம் தலைகளுடன் விண்ணிலெழுந்தான். பல்லாயிரம் கதைகள் கௌரவப் படைகள் மேல் விழுந்தன. துரியோதனன் தன் படைத்தலைவர்கள் உடல் சிதைந்து இறப்பதைக் கண்டான். முதன்மைப் படைத்தலைவனாகிய சண்டஹஸ்தனின் உடல்சிதறிய குருதி அவன் முகத்தில் தெறித்தது. விழிதிகைத்து நோக்கிநிற்கையிலேயே துணைப்படைத்தலைவர்களான அலம்பலனும் உதயகீர்த்தியும் சாருசித்ரனும் உடல்சிதைந்து மண்ணில் பரவினர். வானிருளே கைகள் பூண்டு தாக்குவது போலிருந்தது. படைத்தலைவர்கள் அபீருவும் அமத்யனும் கிருமீளனும் அவன் உடன்பிறந்தான் கிருஷேயனும் கொல்லப்பட்டனர்.

விண்ணிலிருந்து அறைவிழுந்து துச்சகனின் தேர் உடைந்தது. இளையோனின் அலறல் கேட்டு துரியோதனன் "மைந்தா!" என்று கூவினான். துள்ளியெழுந்து மறைந்த கடோத்கஜனின் விழிகளின் ஒளியை ஒருகணம் கண்டான். "நோக்குக! இளையோனை நோக்குக!" என அலறியபடி அவன் தேரிலிருந்து தாவ முயல சரிந்த தேருக்கு அடியிலிருந்து துச்சகன் உடலை இழுத்து எடுத்துக்கொண்டு அப்பால் ஓடினான். அவ்வண்ணம்

துரியோதனன் தாவியதனால் அவன் தேர்மேல் விழுந்த அறையிலிருந்து தப்பினான். வெடித்துச் சிதறிய தேரின் துண்டுகள் அவன் உடலை அறைந்து விழுந்தன. அடுத்த அறையில் அவன் அருகே நின்றிருந்த யானை சிதறித் தெறித்தது. அதன் குருதியும் நிணமும் உடலெங்கும் வெம்மையுடன் பொழிய அதில் வழுக்கி அவன் விழுந்தமையால் அடுத்த அறை அவனை கடந்துசென்று நிலத்தில் பதிந்து மண்ணை எழுப்பியது. அவன் எழுந்து அந்தக் குழியில் கால்தடுக்கி விழுந்தமையால் அடுத்த அறையிலிருந்து தப்பினான். அவன் பாய்ந்து யானைச்சடலங்களிலும் தேர்உடைவுகளிலும் மறைந்து எழுந்து ஓடி பிறிதொரு தேரில் ஏறிக்கொண்டான். “அங்கரே, அந்த அரக்கனை தடுத்து நிறுத்துங்கள். இல்லையேல் நாம் எவரும் எஞ்சப்போவதில்லை” என்று கூவினான்.

கர்ணன் தன் அம்புத்தூளியிலிருந்து எடுத்த அம்பு நாகத்தின் உடல்கொண்டிருந்தது. அதை அவன் ஏவியபோது மண்ணில் விழுந்த அதன் நிழல் கணம் ஆயிரமெனப் பெருக தரையெங்கும் நாகங்கள் நிறைந்தன. உடல் நெளிய படமெடுத்து சீறின. விண்ணிலிருந்து விழுந்த இடும்பர்களை நோக்கி பாய்ந்துசென்று கால்களில் கவ்விச் சுற்றிக்கொண்டன. கடோத்கஜன் வானில் முகிலென பெருகியெழுந்தான். அவன் இரு கைகளையும் ஓங்கி அறைந்தபோது மின்னல்கீற்றுகளால் வான் கிழிந்து அதிர்ந்தது. செவி ரீங்கரிக்கும் பேரோசையுடன் இடித்தொடர் எழ நாகங்கள் அனல்பட்ட புல்தளிர்கள்போல பொசுங்கிச் சுருண்டு உருளைகளாகி மண்ணுடன் ஒட்டிக்கொண்டன. விண்ணிலிருந்து மழைக்கற்றை ஒன்று அவர்களை வந்து அறைந்து மூட அத்திரைக்குள் இறங்கிய

கடோத்கஜன் தன் கதையால் அங்கு நின்றிருந்த கௌரவப் படையை அறைந்துகொன்று குருதிவெறியாடி மீண்டான்.

“அங்கரே, அவனைக் கொல்க… இக்கணமே கொல்க. இன்னும் அரைநாழிகைப் பொழுது அவனைத் தாளாது நமது படை!” என்று துரியோதனன் கூவினான். கர்ணனைச் சூழ்ந்தது அரக்கனின் மாயை. நூற்றுக்கணக்கான யானைகள் பிளிறி, கொம்பு குலுக்கி, துதிக்கை சுழற்றியபடி வந்து அவனை சூழ்ந்துகொண்டன. துதிக்கைகளால் அவை தேர்களைத் தூக்கி மண்ணிலறைந்தன. கொம்புகளால் குத்தி தூக்கிச் சுழற்றி அப்பாலிட்டன. வீரர்களின் உடல்களை மிதித்து அரைத்து அக்குருதிச் சேற்றில் வழுக்கின. கர்ணனின் அம்புகள் கூரிய கொடுக்குகளுடன் குளவிக்கூட்டமாக எழுந்தன. அவை யானைகளின் செவிகளுக்குள் புகுந்துகொண்டன. கண்களைக் கொட்டி நஞ்சூட்டின. துதிக்கைகளுக்குள் புகுந்துகொண்டன.

அமறலோசையுடன் எருமைக்கூட்டமெனத் திரண்டு எழுந்தான் கடோத்கஜன். கர்ணனின் அம்புகள் அவற்றின் கொம்புகளுக்கு நடுவே பாய்ந்தன. கடோத்கஜனின் மாயை கருங்கரடிகளாக ஒன்றை ஒன்று தூக்கி முன்னால் வீசி தாவி வந்தது. பன்றிக்கூட்டங்களாக முட்டிமோதிப் பெருகி வந்தது. கூகைகளாக குழறலோசை எழுப்பியபடி சிறகடித்துச் சுழன்றது. கர்ணன் அம்புகள் ஓய்ந்து பின்னடைந்துகொண்டே இருந்தான். துரியோதனன் “அங்கரே, இவை உளமயக்குகள். அரக்கனின் மாயைகள்… இவற்றை எதிர்கொள்ள நம்மிடம் படைக்கலங்கள் இல்லை” என்று கூவினான். காண்டாமிருகங்கள் இருளிலிருந்து எழுந்துவந்து கௌரவத் தேர்களை உடைத்தெறிந்தன. முழுமையாகவே படைசூழ்கை கலைந்து சிதறி ஓடிய கௌரவர்களை பன்றிகள் தேற்றைகளால் கிழித்து வீசின.

எருமைகள் குத்தித் தூக்கி எறிந்தன. அவற்றுக்குமேல் மழை வீசி வீசி அறைந்தது. இடியோசையும் மின்னல்களும் அதிர்ந்தன. இடியை விழிகளால் காணமுடிந்தது. மின்னல் உடல் மேல் அதிர்வெனக் கடந்துசென்றது. இறந்துவிழுந்தவர்கள் இறந்து நெடுநேரம் கடந்தும் தாங்கள் இறந்துவிட்டதை அறியவில்லை. அது தீக்கனவு என்று விழித்துக்கொள்ளலாம் என்றும் நம்பினர். தலையுடைந்த உடல்கள் எழமுயன்று துள்ளின. வெட்டுண்ட துண்டுகள் திமிறிப்புரண்டன. அவர்களுக்குமேல் கனவு எடையுடன் உருண்டு சென்றது. கனவுருவாகிய யானை இத்தனை எடைகொண்டிருக்குமா என அவர்கள் மலைத்தனர்.

கர்ணன் விழிகளை மூடித்திறந்து அந்த மாயையிலிருந்து விலக முயன்றான். ஆனால் அது மாயை என மீளமீள உளம்நோக்கி கூவிக்கொண்டாலும் கண்முன் அது அவ்வண்ணமே திகழ்ந்தது. கண் மின்னும் எருமைகள், குருதித்துளிகள் சூடிய முடிமுட்கள் சிலிர்த்த பன்றிகள், கொம்புகளில் குடல்மாலைகள் வழுக்கும் யானைகள். அவனுடைய அம்புகள் அவற்றின்மேல் அறைந்து அறைந்து உதிர்ந்தன. பின்னிருந்து சகுனி “செல்க! அரக்கர் சிலரே அங்குள்ளனர்! சூழ்ந்துகொள்க...” என்று முரசொலித்துக்கொண்டே இருந்தார். “என்ன நிகழ்கிறது அங்கே? ஏன் அந்த நிலைகுலைவு? சூழ்ந்துகொள்க! சூழ்கையை மீட்டமையுங்கள்... அங்கே அழிவு நிகழ்கிறது... அஸ்வத்தாமரும் துரோணரும் துணைக்குச் செல்க!”

பதினெட்டு கைகளுடன் பேருருவ அரக்கன் ஒருவன் கால்களை அடிமரத்தூர்கள் என தூக்கிவைத்து களத்தில் நடந்தான். அவன்மேல் அம்புகளால் அறைந்து அறைந்து பின்னடைந்து

கொண்டிருந்த கர்ணன் எருமைத்தலையும் எட்டு கைகளும் கொண்ட பிறிதொரு அரக்கனை பார்த்தான். நான்கு எருதுத் தலைகள்கொண்ட இன்னொரு அரக்கன் களத்தில் குருதியாட்டமிட்டான். “அங்கே கடோத்கஜன் ஒருவனே உள்ளான்... இடும்பர்கள் பெரும்பாலும் சிதறிவிட்டிருக்கின்றனர். ஒருவன் மட்டிலுமே. அவனை சூழ்ந்துகொள்க... அவனை வெல்க!” என்று சகுனியின் முரசுக்குரல் ஒலித்தது. கைகளை விரித்து எட்டுச் சிறகுகளாக ஆக்கி அரக்கன் வானில் எழுந்தான். முதலைபோல மாபெரும் செதில்வால் கொண்டிருந்தான். அதைச் சுழற்றி அவன் களத்தை அறைந்தான். துடைப்பத்தால் சருகுகளை அள்ளிக் கூட்டி வீசுவதுபோல அவன் தேர்களையும் யானைகளையும் அறைந்து தெறிக்கச் செய்தான்.

“அங்கரே, நம் படைத்தலைவர்கள் அனைவரும் இறந்துவிட்டார்கள்... நமக்குத் துணை எவருமில்லை...” என்று துரியோதனனின் குரல் கேட்டது. “அங்கரே, அவனைக் கொல்க... அவனைக் கொன்று எங்களை காப்பாற்றுங்கள்!” என்று துச்சகன் கூவினான். கண்முன் பனைமரங்கள்போல் நடமாடிய மாபெரும் கால்களையே கர்ணன் கண்டான். பனைமரக் காடு. அசையும் காடு. அவனுடைய அம்புகள் அனைத்தும் வீணாயின. “அங்கே ஒருவன் மட்டுமே இருக்கிறான்... கடோத்கஜன் மட்டுமே உங்களை அழித்துக்கொண்டிருக்கிறான்...” என்று சகுனி கூவினார். கர்ணனின் தேர்மேல் அறை விழுந்தது. தேர் தூக்கி வீசப்பட்டதுபோல் தெறிக்க அதன் அடியில் கர்ணன் சிக்கிக்கொண்டான். அடியிலிருந்து அவன் உடனே தன்னை உருவிக்கொண்டு விலக தேரில் விழுந்த அறையால் அது உடைந்து உருக்குலைந்தது.

கர்ணன் பாய்ந்து கீழே கிடந்த சடலங்கள் நடுவே படுத்துக்கொண்டான். அப்பால் அவனுடைய வில்லும் அம்புத்தூளியும் கிடந்தன. அவன் புரவிகளும் தேர்ப்பாகனும் ஆவக்காவலனும் நசுங்கி குருதிக்கூழாகக் கிடந்தனர். அவன் தலைக்குமேல் பிளிறலோசையுடன் கால்கள் நடந்தன. வானிலென அரக்கர்களின் முகங்கள் தெரிந்தன. “அங்கரே” என்று துரியோதனன் அலறினான். கர்ணன் அறியாது கையூன்றி எழ உடைந்த தேரிலிருந்து பாய்ந்து துரியோதனன் ஓடுவதைக் கண்டான். துச்சகன் அப்பால் எங்கோ இருந்து “மூத்தவரே, பின்னணிக்கு வருக… இங்கே வந்துவிடுங்கள்” என்று கூவிக்கொண்டிருந்தான். பாய்ந்து தன் வில்லை எடுக்க எண்ணி கர்ணன் உடலை அசைத்தான். அவ்வசைவு நிகழ்ந்ததுமே அவனை அறைந்தது விண்ணிருள். அவன் உருண்டு அந்த அறையிலிருந்து தப்ப அங்கே கிடந்த உடல்கள் கூழாகி அவன் மேல் சேறெனத் தெறித்தன.

“அங்கே ஒருவனே இருக்கிறான்… அவன் ஒருவன் மட்டிலுமே உங்களைத் தாக்குகிறான். அவனை வெல்க… அங்கர் உடனே அவனைக் கொன்றெழுக!” என்று சகுனியின் முழக்கம் கேட்டுக்கொண்டே இருந்தது. அங்கே நூற்றுக்கணக்கான பெருங்கால்கள் நிலம் நடுங்க அலைந்தன. அறைபட்டு பூழி எழுந்துதெறிக்க வீரர்கள் அலறி சிதறி அழிந்துகொண்டிருந்தனர். இது விழிமயக்கா? உள்ளம்தான் மயங்கியதா? கர்ணன் தன் வில்லை நோக்கி மெல்ல மெல்ல முன்னகர்ந்தான். ஆனால் உடல் நகரவில்லை என்பதை உணர்ந்தான். மேலுமொரு முறை உள்ளத்தை உந்தியபோது மெல்லிய அசைவை உணர்ந்தான். ஒரு தசை அசைவு கொண்டிருக்கக்கூடும். மேலிருந்து உறுமலோசை எழுந்தது. கதை ஒன்று தாழ்ந்து வந்து அவன்மேல் பறந்து தேடியபடி அப்பால் சென்றது.

பின்னர் அவ்வரக்கன் நன்றாகக் குனிந்து சடலங்களை தேடத் தொடங்கினான். கதையால் ஒவ்வொரு உடலாக தூக்கிப்புரட்டினான். முகர்ந்தபடி வரும் கரிய கரடிபோல் அந்தக் கதை அணுகி வருவதை கர்ணன் கண்டான். விழிகள் அறியாது மூடியபோது ஒருசில கணங்களே ஆகிவிட்டிருந்தன என்று தோன்றியது. திடுக்கிட்டு கண்திறந்தான். விழிமூடியபோது அவன் அந்தக் கால்களை காணவில்லை, அந்த கதை சிறிதாக இருந்தது. அவன் மீண்டும் விழிமூடினான். ஓசைகள் வழியாக உணர்ந்தவை காட்சிகளென்றாக அங்கே கடோத்கஜன் மட்டும் நின்றிருப்பதைக் கண்டான். அவன் கதையால் நிலத்தில் இடைவெளியின்றி குவிந்திருந்த சடலங்களை அகற்றி தேடிக்கொண்டிருந்தான்.

சற்று அப்பால் தன் வில்லையும் அதற்கப்பால் ஆவநாழியையும் கர்ணன் கண்டான். கணம்கணமென எண்ணிக் கணக்கிட்டு விழிகளை மூடியபடியே பாய்ந்தெழுந்து தன் ஆவநாழியையும் வில்லையும் எடுத்துக்கொண்டு மேலும் பாய்ந்து உருண்டு சென்று அகன்று எழுந்து நின்று அதே விசையில் ஆவநாழியிலிருந்து அரவம்பை எடுத்து கடோத்கஜன் மேல் ஏவினான். கர்ணனின் அசைவைக் கண்டு கதையுடன் அவனை நோக்கிப் பாய்ந்த கடோத்கஜன் விண்ணில் இருக்கையிலேயே அவன் நெஞ்சை நாகவாளி தாக்கியது. உடல் அதிர்ந்து தசைகள் இழுபட்டு வலிப்புகொள்ள தூக்கிவீசப்பட்டவன்போல கடோத்கஜன் மல்லாந்து மண்ணில் விழுந்தான். நாகவாளி அவன் நெஞ்சில் கவ்வியபடி கிடந்து நெளிந்தது.

அம்புபட்ட கணமே கண்களைத் திறந்து நோக்கிய கர்ணன் விண்ணிலிருந்து மலை என கடோத்கஜன் விழுவதைக்

கண்டான். பனைமரத்தடிபோல் பருத்த கரிய நாகம் அவனைச் சுற்றிக்கட்டி அசைவிழக்கச் செய்திருந்தது. அவன் மேல் மேலும் ஒரு பேருருவ அரக்கன் விழுந்தான். அவன் மேல் இன்னொருவன் விழுந்தான். அவர்கள் அனைவரும் நாகங்களால் கட்டுண்டிருந்தனர். ஒருவர் மேல் ஒருவர் என அவர்கள் விழுந்துகொண்டே இருந்தனர். அவ்வதிர்வில் நின்றிருந்த தேர்கள் துள்ளின. தரை அதிர வீரர்கள் ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டனர். மேலிருந்து சுழன்றெழுந்த பூழியும் சருகுகளும் பொழிந்து அரக்கர்குவியலை மூடின. அவர்கள் விழுந்தமையால் கொந்தளித்த காற்று மெல்லமெல்ல அடங்க நெடுநேரமாகியது.

கர்ணன் வில்தாழ்த்தி நீள்மூச்செறிந்தான். துரியோதனனும் துச்சகனும் அவனை நோக்கி ஓடிவந்து இரு கைகளையும் பற்றிக்கொண்டனர். துரியோதனன் “ஒரு தீக்கனவு... இதிலிருந்து மீள்வோமா என்றே அஞ்சினேன், அங்கரே” என்றான். துச்சகன் “நம்மை முற்றழித்திருப்பான்!” என்றான். கர்ணன் ஒன்றும் சொல்லாமல் அவர்களின் கைகளை விலக்கி படைவிரிவு நோக்கி நடந்தான். விழிக்கு வேறுபாடு தெரிய திரும்பி நோக்கியபோது மண்ணில் கைவிரித்துக் கிடந்த கடோத்கஜனை கண்டான். அதுவரை விழிமாயத்தால் திகைத்து நின்றிருந்த கௌரவப் படையினர் வெற்றிமுழக்கமிடத் தொடங்கினர்.

# கார்கடல் - 73

ஓடும் புரவியின்மீது கால் வைத்து தாவி ஏறி விரைந்து திரும்பிய தேர்விளிம்பில் தொற்றி அதன் மகுடத்தின் மேலேறி பாண்டவப் படை முழுமையையும் ஒருகணம் நோக்கி

மறுபுறத்தினூடாக இறங்கி தன் புரவிக்கு வந்த திருஷ்டத்யும்னன் படைமுழுக்க பரவிக்கொண்டிருந்த தளர்வை உணர்ந்தான். அரக்கில் சிக்கிக்கொண்ட ஈக்கள்போல படைவீரர்கள் தங்கள் கைகால்களை இழுத்து அசைத்தனர். நிலத்தில் இருந்து விடுபட விழைபவர்கள்போல கால்களை தூக்கி வைத்து பின்னர் தளர்ந்து நிலத்தில் முழங்கால் படிய விழுந்து கையூன்றி தலைதாழ்த்தி அமர்ந்தனர். சூழ்ந்திருந்த போர்க்களத்தின் பேரோசையை கேட்டு அதன் பின்னர் தலையுலுக்கி வில்லையும் வாளையும் தூக்கி மீண்டும் போர்முழக்கமிட்டு எழுந்தனர். அந்தப் போர்க்கூச்சலும் கனவிலிருந்து எழுவதுபோல் தோன்றியது.

ஒருகணம் அங்கு பிறிதேதோ தெய்வஆற்றல் இறங்கியிருக்கிறதென்னும் எண்ணம் அவனுக்கு எழுந்தது. கௌரவர் தரப்பிலிருந்து எழுந்த அம்புகளில் ஏதேனும் நஞ்சு கலந்திருக்குமோ என்று எண்ணினான். மீண்டும் ஒருமுறை தேர்மகுடத்தின் மீதேறி தலை திருப்பி நோக்கியபோது கௌரவப் படைகளிலும் அதே தளர்வு தெரிவதைக் கண்டான். புரவி மேல் வந்தமர்ந்ததும் அவனுக்குத் தெரிந்தது அது எதனால் என்று. படைவீரர்கள் களமெழுந்து போரிடத்தொடங்கி ஒரு முழு நாளாகப் போகிறது. அவர்கள் மேல் உயிரச்சத்தையும் போர்வெறியையும் கடந்து துயில் படர்ந்து ஏறிக்கொண்டிருக்கிறது. அவன் குதிரையைத் தட்டி விசை கூட்டி முன் சென்று சாத்யகியை அணுகினான்.

அம்புகளை தொடுத்தபடியே பின்னடைந்து அம்பறாத்தூணி நிறைக்கப்படுவதற்காக நின்று திரும்பிய சாத்யகி அவனை கண்டு முகம்கூர்ந்தான். “யாதவரே, நாம் போரை நிறுத்திவிடுவதே நன்று. நம் படைகள் தளர்ந்து விழுகின்றன”

என்றான் திருஷ்டத்யும்னன். சாத்யகி “என்ன சொல்கிறீர்கள்? நாம் வென்றுகொண்டிருக்கிறோம். நமது படைகள் இப்போதுதான் முன்னெழுகின்றன” என்றான். சாத்யகியின் கண்களில் தெரிந்த வெறி ஒரு கணத்திற்குப் பின் துயில்மயக்கமாகத் தோன்றியது திருஷ்டத்யும்னனுக்கு. அவன் கனவில் பேசுவது போலவே இருந்தது. “யாதவரே, இனிமேலும் நாம் படைகளிடம் போரிடும்படி தூண்ட இயலாது. அவர்கள் துயிலில் மூழ்கிக்கொண்டிருக்கிறார்கள். வெறிகொண்டு நிலைமறந்து ஒருவரையொருவர் தாக்கிக்கொண்டால்கூட வியப்பதற்கில்லை” என்றான்.

“இல்லை! இப்போர் இதோ முடிகிறது! இன்று புலரி எழுகையில் இந்திரப்பிரஸ்தத்தின் கொடி இக்களத்தில் எழுந்து நிலைகொள்ளும்” என்ற சாத்யகி “எழுக! சூழ்ந்துகொள்க! வெற்றிவேல்! வீரவேல்!” என்று கூவியபடி அவனைக் கடந்து மீண்டும் களமுகப்பை நோக்கி சென்றான். திருஷ்டத்யும்னன் கடிவாளத்தைப் பற்றியபடி நின்று தன்னைச் சூழ்ந்து பாண்டவப் படைவீரர்கள் சேற்று விழுதில் புழுக்கள் நெளிவதைப்போல் அசைவதை பார்த்துக்கொண்டிருந்தான். அந்தத் துயில்தளர்வு நெடுநேரம் முன்னரே தொடங்கிவிட்டிருக்கிறது என்று அப்போது தெரிந்தது. அதை அதுவரைக்கும் அவனுடைய உள்ளம் பார்ப்பதை தவிர்த்துவிட்டிருந்தது. உள்ளம் தான் விரும்பியதையே பார்க்கும் திறன் கொண்டதென்பதை அவன் அறிந்திருந்தான். அத்துயிலை அவன் பார்ப்பதற்குக் கூட அவனில் துயில் எழுந்ததே அடிப்படையாக அமைந்திருக்கும்.

துயில்கொண்டிருக்கிறதா தன் உள்ளம்? அவ்வெண்ணம் எழுந்ததுமே தன் உள்ளத்தின் ஒரு பகுதி முன்னரே துயிலில்தான் இருக்கிறதென்பதை திருஷ்டத்யும்னன்

உணர்ந்தான். விழிப்புள்ளம் போர் உருவகங்களும் போர்த்திட்டங்களுமாக பெருகி அவை ஒன்றோடொன்று நன்றாக கோத்துக்கொண்டு விசையுடன் செயல்பட பிறிதொரு பகுதி வேறெங்கோ ஒன்றுடன் ஒன்று தொடர்பற்ற மாயக்காட்சிகளின் பெருக்காக இருந்தது. அந்த நிழலாட்டத்தின் மீதுதான் அவனுடைய சித்தம் செயல்பட்டுக்கொண்டிருந்தது. அது துயில்தான், கனவுருதான். அப்படியென்றால் சற்று முன்னர் இளைய யாதவர் பதினெட்டு பெருங்கைகளிலும் படைக்கலங்களுடன் தேர்த்தட்டில் எழுந்து கௌரவப் படைகளுடன் போரிட்டுக்கொண்டிருந்தது கனவு. அவருக்கெதிராக பதினெட்டு கைகளுடன் பெருகும் படைக்கலங்களுடன் எழுந்து வந்த பிறிதொரு இளைய யாதவரும் கனவே.

அதை அப்போது கனவென கண்டேனா, இப்போது எண்ணிக்கொள்கிறேனா? அன்றி என் முன் இப்போது நிகழ்ந்துகொண்டிருக்கிறதா? திருஷ்டத்யும்னன் திரும்பி அருகே அவனைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்த ஏவலனிடம் கைநீட்ட அவன் மதுக்குடுவையை கொண்டுவந்து அளித்தான். அதை சரித்து மதுவை அள்ளி முகத்தில் விட்டு கழுவிக்கொண்டு இரு மிடறு அருந்தினான். கண்கள் நனைந்தபோது சித்தம் தெளிவுகொண்டு கனவிலிருந்து மீண்டு விழிப்புநிலையின் தெளிவான எண்ணச்சரடுகளுக்கே வந்தது. ஆனால் அவையும் விரைவிலேயே முட்டிமோதி முடிச்சுகளாயின. இறுகி அசைவிழந்தன. என்ன நிகழ்கிறது? அவன் தன் தலையை கைகளால் தட்டித்தட்டி அகத்தை எழுப்ப முயன்றான். இருமுறை கண்களை மூடித்திறந்தான், கண் திறக்கும்போது அங்கே சூழ்ந்திருக்கும் களம் புதிய ஓவியமாக

எழும் என்று. அனைத்தும் தொடக்கத்திலிருந்து தெளிவுறும் என்று.

கடோத்கஜனுக்கும் கர்ணனுக்குமான போர் நடந்துகொண்டிருந்த இடத்தில் ஓலங்கள் எழுந்தன. அங்கிருந்து செய்தி ஏதும் வருவதை கேட்க முடியவில்லை. திருஷ்டத்யும்னன் தன் செய்தியாளனிடம் கையசைத்து என்ன நிகழ்கிறது என்று கேட்டான். அவனும் எச்செய்தியையும் அறியாதவனாகவே இருந்தான். அருகிலிருந்த தேரில் ஏறியபடி முன்செல்க என்று தேர்ப்பாகனுக்கு கைகளால் ஆணையிட்டான். தேர் முன்னடையும்தோறும் இருபுறத்திலும் நோக்கி என்ன நிகழ்கிறது என்று உணர முயன்றான். படையினர் அனைவரும் கால்களில் நாகங்கள் சுற்றிக்கொண்டவர்கள்போல் நடைபின்னினர். வாள்களையும் வேல்களையும் தரையிலூன்றி தள்ளாடி நின்றனர். ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டனர். அவர்களில் ஒரு சிலர் கால்கள் சேறாலானவைபோல குழைந்து துவள விழத்தொடங்கினர்.

விரைவில் பிறரும் விழுவார்கள் என்று அவனுக்குத் தோன்றியது. அருகிலுள்ளோர் விழும் அசைவை விழிகளால் நோக்கினாலே போதும், அவர்களின் உடல் அதுவரை உள்ளத்திடம் கொண்டிருந்த பணிவை இழக்கும். தசை தான் விரும்பியதை இயற்றும். “செல்க! செல்க!” என்று ஆணையிட்டு அவன் முன்னால் சென்றான். எதிரில் புரவியில் அவனை நோக்கி பாய்ந்துவந்த செய்திவீரன் இறங்கி விரைந்த குழூஉக்குறிச்சொற்களில் “இளவரசே, வலது எல்லையில் அங்கருக்கும் அரக்கர் குலத்து இளவரசருக்குமான போர் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. அரக்க இளவரசர் அங்கரை முற்றிலும் சூழ்ந்துகொண்டிருக்கிறார். அறியாத

போர்சூழ்கைகளால் அங்கரை திணறச் செய்கிறார். விண்ணில் இடியாகவும் மின்னலாகவும் எழுகிறார். மழை எனப் பெய்து திரை சமைக்கிறார். அதற்குள் புகுந்து சென்று அங்கரை தாக்கி நிலையழியச் செய்கிறார். அங்கரின் குலத்தைச் சேர்ந்த இளையோர் எழுவரை கொன்றுவிட்டார். அங்கர் பின்னடைந்துகொண்டிருக்கிறார்” என்றான்.

தொடர்ந்து வந்த பிறிதொரு செய்திஏவலன் அவனை அணுகிவந்து புரவியிலிருந்து இறங்காமலேயே கைகளை விரித்து “இளவரசே, துரோணரை பாஞ்சாலத்து அரசர் துருபதர் வெல்லும் நிலையிலிருக்கிறார். அம்புகளால் துரோணரின் கவசங்கள் அனைத்தையும் உடைத்துவிட்டார். எத்தருணத்திலும் ஆசிரியர் தேர்த்தட்டில் அம்புபட்டு விழுவாரெனத் தோன்றுகிறது. கௌரவப் படைவீரர்கள் ஆசிரியரின் காவலுக்கென வந்து சூழ்கிறார்கள். ஒவ்வொருவரையும் பாஞ்சாலத்து அரசர் தன் விசைமிக்க அம்புகளால் வீழ்த்திக்கொண்டிருக்கிறார்” என்றான். கைகள் காற்றில் நிலைக்க “இளவரசே, பாஞ்சாலத்து அரசரின் வடிவில் துரோணரின் தோற்றம் தெரிந்து மறைவதை நான் கண்டேன். துரோணரிடம் நாம் இதுவரை கண்ட அனைத்து வில்திறன்களையும் அரசரிடமும் காண முடிந்தது. அவர்கள் இடம்மாறிக் கொண்டதுபோல் இருக்கிறார்கள். வெற்றி எக்கணமும் நிகழும்” என்றான்.

இரு செய்திகளும் தன்னில் எந்த பரபரப்பையும் உருவாக்கவில்லை என்பதை திருஷ்டத்யும்னன் வியப்புடன் உணர்ந்தான். அவன் உள்ளம் நனைந்த கொடியென உடலுடன் ஒட்டிக் கிடந்தது. கைகளால் முன்செல்க என அவன் ஆணையிட்டான். அவ்வசைவு அவனுக்கு நினைவிருந்தது.

மீண்டும் நினைவெழுந்தபோது தேர் சற்று தூரமே முன்னகர்ந்திருந்தது. சில நொடிகள்தான், அதற்குள் அவன் பிறிதொரு உலகிற்கு சென்று விழி திகைத்து வாழ்ந்து பல்லாயிரம் உள்ளங்கள் என பெருகி சிதைந்து துணுக்குற்று தன்னை உணர்ந்தான். எங்கோ முளைத்து நீண்டு வந்து தன் தோளைத் தொட்ட தனது கையொன்றை பற்றி அதை கொடியெனக் கொண்டு ஏறி மீண்டும் நனவுக்கு வந்தான்.

அங்கே எண்ணுந்தோறும் தலைகள் பெருகும் அரக்கப் பேருருக்களை அவன் கண்டான். யானைப் பிளிறல்களிலிருந்தும் சிம்மக்குரல்களிலிருந்தும் புலிமுரலல்களிலிருந்தும் ஓநாயின் ஊளைகளிலிருந்தும் கூகைக்குழறல்களிலிருந்தும் காட்டருவியின் ஓசைகளிலிருந்தும் சுழற்காற்றின் முழக்கத்திலிருந்தும் ஒலிகளை சேர்த்தெடுத்த மொழியொன்றில் அவை உரையாடிக்கொண்டன. விண்மீன் வெளியெனப் பெருகும் விழிகள் கொண்டிருந்தன. ஒரு சுடர் ஓராயிரம் சுடராக பற்றிக்கொள்வதுபோல. விண்ணை எண்ணியபோது அவை சிறகு கொண்டன. மண்ணை எண்ணியபோது கால்கள் கொண்டன. நீரை எண்ணியபோது மீன்கள் என்றாயின. ஆழங்களை எண்ணியபோது அரவுருக்கொண்டன.

அத்தெய்வங்களை எதிர்த்து எழுந்து நின்று போரிட்டன நாகங்கள். தங்கள் சீற்றத்திற்கேற்ப படம் விரித்தன. வஞ்சத்திற்கு ஏற்ப வளைவு பெருகின. விழைவுகொண்டு தங்களைத் தாங்களே தழுவி சுருண்டுகொண்டன. மண்ணில் தலையறைந்தெழுந்து பத்தி விரித்தன. எண்ணியெண்ணி தலைகள் பெருக்கின. நூறு தலைகள் கொண்ட மாநாகங்கள். ஆயிரம் தலைகள் கொண்ட மாநாகங்கள். பல்லாயிரம்

தலைகள் கொண்ட நாகநாகங்கள். முடிவிலா தலைகள் கொண்ட விண்ணகநாகங்கள். விண் பிளந்து மோதிக்கொள்வதுபோல் அவற்றுக்கு நடுவே போர் நிகழ்ந்துகொண்டிருந்தது. ஊடே ஒளிரும் சிறகுகளுடன் கந்தர்வர்களும் தேவர்களும் பறந்துகொண்டிருந்தனர். பெருகும் விழிகளால் உலகை கணம் கணமெனப் பகுத்தனர் அரக்க தெய்வங்கள். இமையா விழியால் ஒற்றைக்கணமென காலத்தைத் தொகுத்தன நாகங்கள். ஒளிரும் அனைத்தையும் ஒன்றென்றாக்கினர் தேவர்கள்.

அங்கு போரிட்டுக்கொண்டிருந்த ஒவ்வொருவரும் ஒரு சொல் என அவன் அறிந்தான். விழிகளால் கண்டு அறியக்கூடும் சொல். அச்சொற்கள் ஒவ்வொன்றையும் அவன் முன்னரே அறிந்திருந்தான். இச்சொல் நான் நன்கறிந்தது. ஆனால் இவ்வுரு அன்றி பிறிதொரு வடிவில். இந்தத் தலையணிகளும் தோளிலைகளும் கவசங்களும் படைக்கலங்களுமின்றி. நாகச்சீறலென ஒலிக்கும் இச்சொல்லும் நான் அறிந்ததே. இதுவும் இதனருகே அதுவும் அப்பாலுள்ளதும் நான் அறிந்த சொற்களே. பின்னர் அவன் உணர்ந்தான், அவையனைத்துமே வேதச்சொற்கள் என. சொல்லில் நின்ற முன்னோர் பாடி நிறுத்திய தொல்வேதச்சொற்கள் அவை. அவை உதிர்ந்து, சிதறி, முளைத்துப் பெருகி, உருமாறி, வியனுருக்கொண்டு அங்கு நின்று பொருதின. அன்றி இவைதான் பிறிதொரு உருக்கொண்டு நால்வேதங்களில் சென்றமைந்தனவா? தங்கள் அணிகளை மாற்றி உடல் சுருக்கி ஒளி மட்டுமே என்றாகி நின்றனவா?

அது கனவென்று அவன் கனவுக்குள்ளும் அறிந்திருந்தான். ஆகவே அவ்வெண்ணங்களின் பொருளின்மையும் அப்போதே

அவனுக்கு தெரிந்திருந்தது. இவையனைத்தும் தொல்வேதச் சொற்கள். அசுரவேதமென்றும் நாகவேதமென்றும் விண்ணவரின் ஒலியிலா நுண்வேதமென்றும் பெருகிய முதல்வேதங்கள் இங்கு திரண்டு போரிடுகின்றன. மிகத் தொலைவில் அவன் வேய்குழல் ஓசையை கேட்டான். வண்டு முரல்வதுபோல் கீழ்சுதியில் அது சுழன்று கொண்டிருந்தது. அப்பேரோசைக்குள் எவ்வண்ணம் அந்த மெல்லிசை எனக்கு கேட்கிறது? ஏனெனில் இது கனவு. இது கனவுதான். இத்தருணத்தில் நான் விழித்தெழக்கூடும். விழித்தெழவும் அக்கனவில் அவ்வண்ணமே திளைக்கவும் அவன் ஒரே தருணத்தில் விழைந்தான்.

மிகத் தொலைவிலிருந்து மிக அண்மைக்கு வந்து முற்றாக சூழ்ந்துகொண்டது அவ்வேய்குழல் ஓசை. ஒளிரும் பட்டுநூலாக அவனை முற்றிலும் சுற்றி செயலற்றதாக்கிப் பிணைத்து, சிலந்தி பறந்தெழ உடன் செல்லும் வலைச் சரடென அதன் உடன் சென்றது. ஒவ்வொரு அரக்கப் பேருருவையும் நாகநெளிவையும் தொட்டுத் தொட்டு சுற்றி, பட்டுநூல் பெருக்கில் புழுக்களை என அனைவரையும் அது கட்டுண்டு அமையச் செய்தது. நூல்சுற்றி உறையென்றாக ஒவ்வொருவரும் துயில் கொண்டு கூட்டுப்புழுவென சொக்கி விழிதழைவதை அவன் பார்த்தான். அரக்க தெய்வங்கள் கால் பின்னி மெல்ல நிலத்தில் சரிந்தனர். அவர்களுக்கு மேல் நாகங்கள் விழுந்தன. பெருங்காதல் கொண்டவர்கள்போல் உடல் தழுவி ஒன்றென்றாகி அவ்வெளியெங்கும் அவர்கள் மெல்ல நெளிந்துகொண்டிருந்தனர். அவன் அந்தக் குழலோசையை கண்ணில் இளநீல ஒளிநெளிவெனக் கண்டான். மின்மினியொன்று பறந்து பறந்து இருள்வெளியில் ஓவியமொன்றை வரைவதுபோல. வரைந்த அவ்வோவியம்

விழிப்பாவையென நிற்க வரையப்பட்ட கணமே மறைந்துகொண்டிருந்தது. பின்னர் நினைவென்று எஞ்சியது.

அவன் விழித்து தலைதூக்கியபோது மார்பில் வாய்நீர் வழிந்திருந்தது. சற்று முன் கேட்ட மெல்லிய உறுமல் தன்னுடைய குறட்டையொலி என உணர்ந்தான். “செல்க! ஏழு பகுதிகளாக பிரிந்துகொள்க!” என்று திருஷ்டத்யும்னன் ஆணையிட்டான். “ஏழு வீரர்களுக்கும் எதிர்நிற்கும் நம்மவரை துணைக்கட்டும்… ஏழு முனைகளில் நம் போர் கூர்கொள்ளட்டும்!”' அதன் பின்னரே அவ்வாணையின் பொருளின்மையை அவன் உணர்ந்தான். அது ஏற்கெனவே நிகழ்ந்துகொண்டிருந்தது. அவ்வாணையை பலநூறு முறை சொல்லிச் சொல்லி அவன் நா பழகிவிட்டிருந்தது. ஆணைகள் பெரும்பாலான தருணங்களில் மீளமீள சொல்லப்படுகின்றன. சொல்பவனுக்கு மேலும் பொருள் அளிக்கும்படி அவை மாறுகின்றன. ஆணைகளை ஊழ்க நுண்சொற்களாகக்கொண்டு தலைவன் முதன்மை கொண்டெழுகிறான்.

அவன் போர்முகப்பை நோக்கி செல்கையில் பேரொலி எழுந்தது. தரையெங்கும் பல்லாயிரம் நாகங்கள் நிழலுருக்களாக தலை சொடுக்கி எழுவதுபோல அவனுக்கொரு விழிமயக்கெழ தேர்த்தூணைப் பிடித்து நின்றான். இருபுறமும் அவனை நோக்கி ஓடி வந்த செய்திஏவலர் கையசைவாலும் குரலாலும் “வீழ்ந்தார் அங்கர்! கர்ணன் வீழ்ந்தார்!” என்றார்கள். கௌரவப் படைகளிலிருந்து பொருளற்ற பெருமுழக்கம் எழுந்துகொண்டிருந்தது. “அங்கர் வீழ்ந்தார்! ஐயமில்லை, அரக்கர் மைந்தனால் அங்கர் கொல்லப்பட்டார்” என்று ஏவலன் கூவினான். “பொறு” என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். “விழி நோக்காத செய்தியைச் சொல்வதல்ல

செய்தியளிப்பவனின் பணி” என்றபின் செவிகூர்ந்து “நமது படைமுகப்பு ஏன் அத்தனை அமைதி கொண்டிருக்கிறது? ஏன் அங்கு ஓசை எதுவும் எழவில்லை?” என்றான்.

ஏவலன் அதை உணர்ந்து “அவ்வாறெனில்…” என்றான். போர்முகப்பிலிருந்து ஒற்றை முரசு முழங்கி “கடோத்கஜன் வீழ்ந்தான்!” என்று அறிவிக்கத் தொடங்கியது. “இடும்பர் இளவரசர்!” என்று அருகே வந்த படைத்தலைவன் உக்ரபாணன் சொன்னான். “அவரை வீழ்த்தலாகுமா! அதிலும் அவர் நூறு மடங்கு பெருகும் இவ்விரவில்! எவ்வாறு அவரை வீழ்த்த இயலும்?” தன் வில்லை எடுத்துக்கொண்டு “விரைக! விரைக!” என்று சொல்லி திருஷ்டத்யும்னன் தேர்ப்பாகனை ஊக்கினான். அவனுடைய தேர் பாண்டவப் படை நடுவே அமைந்த பலகைச் சாலையில் சென்று செறிந்த போர்வீரர் திரள் நடுவே முட்டித் தயங்க தேரிலிருந்து இறங்கி உடன் வந்த புரவியொன்றின் மேலேறி தள்ளாடி சரிந்து விழுந்துகொண்டிருந்த பாண்டவப் படைகளினூடாகச் சென்று அவன் போர்முகப்பை அடைந்தான்.

அங்கு பாண்டவப் படை உடல் செறிந்த காடுபோல் வளையமிட்டிருந்தது. “விலகுக! விலகுக!” என்று அவன் ஆணையிட்டான். அவனுடைய முகப்புக்காவலர் முட்டிமோதிக் கொண்டிருந்த வீரர்களை விலக்கினர். உள்ளே சென்றபோது அவன் தரையில் மல்லாந்து விழுந்து கிடந்த கடோத்கஜனை பார்த்தான். புரவிக்கடிவாளத்தை இழுத்து கழுத்தை தட்டி நிலைகுலைந்திருந்த அதை அமைதிப்படுத்தி மீண்டும் அப்பேருருவனை நோக்கினான். கைகால்களில் அணிந்திருந்த இரும்பு வளையங்கள் வானொளியில் மின்னி நாகக்குழவிகளோ என உளம்விதிர்க்கச் செய்தன. உடல் எங்கும் புண்ணோ குருதியோ தென்படவில்லை. “என்ன

ஆயிற்று?” என்று அவன் கேட்டான். அங்கே நின்றிருந்த படைத்தலைவனாகிய சாரதன் “அங்கரின் அரவம்பு அவரைத் தாக்கியது” என்றான். “அரவம்பா? மெய்யாகவா?” என்றான் திருஷ்டத்யும்னன்.

சர்வதன் புரவியிலிருந்து இறங்கி அவனை நோக்கி ஓடிவந்து “பாஞ்சாலரே, எங்களிடமிருந்து அகன்று அகன்று சென்றார் மூத்தவர்... நாங்கள் அங்கே உத்தரபாஞ்சால வில்லவர்களிடம் சிக்கிக்கொண்டோம்” என்றான். திருஷ்டத்யும்னன் “எவ்வண்ணம் வீழ்த்தப்பட்டார்?” என்றான். “அங்கர் தன் அரவம்பை ஏவினார் என்றார்கள்” என்றான் சர்வதன். “அரவம்பையா? அவருக்கெதிராகவா?” என்றான் திருஷ்டத்யும்னன் மீண்டும். “ஆம், அதை அவர் எடுக்காமலிருந்தால் அங்கர் கொல்லப்பட்டிருப்பார். அவர் ஒரு நிலையில் தன் அனைத்து கட்டுப்பாடுகளையும் இழந்தார். இக்களத்தில் முதன்முறையாக இன்றே அவர் உயிரச்சத்தை அடைந்திருப்பார்” என்று சர்வதன் சொன்னான். அவனுக்குப் பின்னால் வந்த சுருதசேனன் “நாகஅம்பை ஏவியதுமே ஒருகணமும் திரும்பிப்பார்க்காமல் தேரைத் திருப்பி தன் படைகளுக்குள் சென்றுவிட்டார்” என்றான். திருஷ்டத்யும்னன் பெருமூச்சுவிட்டான்.

சர்வதன் கடோத்கஜனை அணுகி குனிந்து நோக்கி அவன் கால்களைத் தொட்டு தலைவைத்து வணங்கினான். கௌரவப் படைகளுக்குள்ளிருந்து வெற்றிமுழக்கம் கேட்டுக்கொண்டிருந்தது. பாண்டவப் படைகள் அப்போதும் துயிலிலென ததும்பிக்கொண்டிருந்தன. “எவரும் இப்போது விழிப்பு நிலையில் இல்லை. சென்ற நான்கு நாழிகைகளாக இப்போர் துயிலுக்குள்தான் நிகழ்ந்துகொண்டிருக்கிறது” என்றான் சாரதன். சர்வதன் சுருதசேனனிடம் “உடனே சென்று

தந்தையிடம் சொல்க! இச்செய்தியை அவர் அறிந்திருப்பார் எனினும் செய்தியை நாம் சொல்வதே முறை” என்றான். திருஷ்டத்யும்னன் “அரசரிடம் நானே சொல்கிறேன். இறந்தவர் அரசமைந்தர் என்பதனால் முறையாக தெரிவிக்க வேண்டியுள்ளது” என்றபின் புரவியைத் திருப்பி படைகளினூடாகச் சென்றான்.

திருஷ்டத்யும்னன் புரவியில் பாண்டவப் படைகளினூடாகச் சென்று யுதிஷ்டிரரின் தேரை அணுகினான். யுதிஷ்டிரர் தேரிலிருந்து இரு வீரர்கள் கைகொடுக்க சகடத்தின் ஆரத்தைப் பற்றி கீழிறங்கி நின்று பதற்றத்துடன் மாறி மாறி என்ன நிகழ்ந்தது என்று வினவிக்கொண்டிருக்கையில் அவன் அவரை நோக்கி தலைவணங்கி “செய்தி, அரசே. பாண்டவ மைந்தரில் முதல்வரும் இடும்பர் குலத்து இளவரசருமான கடோத்கஜன் சற்று முன்னர் மண்பட்டார். கௌரவர்களின் படைத்தலைவரும் அங்கநாட்டு அரசருமான வசுசேஷணரின் நாகஅம்பினால் அவர் வீழ்த்தப்பட்டார்” என்றான். முன்னரே அதை அறிந்திருந்தாலும் அந்த முறையான அறிவிப்பு யுதிஷ்டிரரை அனைத்துப் புலன்களையும் தளரச்செய்து மெல்ல பின்னோக்கி சரிய வைத்தது. அங்கிருந்த இரு காவலர்கள் அவரை பற்றிக்கொள்ள மெல்ல தரையில் அமர்ந்தார். பின்னர் இரு கைகளாலும் தலையை பற்றிக்கொண்டு விழிநீர் உகுத்தார்.

திருஷ்டத்யும்னன் “இப்போரை இப்போது நிறுத்திவிடலாம் என்று நான் எண்ணுகிறேன், அரசே. நம் படைகள் அனைத்தும் துயில்மீதேறி தள்ளாடிக்கொண்டிருக்கிறார்கள். எதிரிப் படையினரும் அவ்வாறே” என்றான். யுதிஷ்டிரர் சீற்றத்துடன்

எழுந்துகொண்டு “இல்லை, இக்களத்தில் இப்போது நாம் பின்வாங்குவதென்பது நம் மைந்தனை விட்டுக்கொடுப்பதற்கு நிகராகும். மந்தனை அழை. அவன் களமிறங்கட்டும். உடன் நானும் செல்கிறேன். இப்போரில் என் தலை உருளினும் மைந்தனுக்காக நான் அம்பெடுத்தாகவேண்டும். அவனுக்காக நான் களம்நின்று போரிட்டு குருதி சிந்தியாக வேண்டும்” என்றார். “அரசே!” என்று சொல்ல யுதிஷ்டிரர் கைதூக்கி “மாறென ஒரு சொல்லும் தேவையில்லை. ஒருபோதும் போரை நிறுத்துவதற்கு உடன்பட மாட்டேன். போர் நிகழட்டும்!” என்று கூவினார்.

திருஷ்டத்யும்னன் சொல்லெடுக்கவில்லை. யுதிஷ்டிரர் முகம் வலிப்பு கொண்டதுபோல் இழுபட்டு அதிர, கைகால்கள் உதற திரும்பி உடன்நின்ற வீரர்களை நோக்கி “இது என் ஆணை! தொடர்க! போர் நிகழட்டும்! இடும்பனின் குருதிக்கு பழிநிகர் கொண்ட பின்னரே நாம் களத்திலிருந்து திரும்பவேண்டும்” என்றார். திருஷ்டத்யும்னன் அவருடைய சீற்றத்தை வெறுமைகொண்ட நெஞ்சுடன் நோக்கிக்கொண்டிருந்தான். உரத்த குரலில் “மந்தனிடம் எனது ஆணையை தெரிவியுங்கள். இப்பொழுதே போர் மீண்டும் விசைகொள்ள வேண்டும். நாம் நமது முழுப் படையையும் எழுப்பி அங்கனை அறையவேண்டும். அவன் அரவம்புக்கு முன் நாங்கள் ஐவரும் விழுந்தாலும் சரி. எங்கள் குல மூத்த மைந்தனின் குருதிக்கு நிகர் கொள்ளாது மீண்டால் நாம் ஆண்மகன்கள் அல்ல” என்றார் யுதிஷ்டிரர்.

திருஷ்டத்யும்னன் தலைவணங்கியபின் புரவியைத் திருப்பி படைகளினூடாகச் சென்றான். பெரும்பாலான பாண்டவ வீரர்கள் வில்லையும் வேலையும் தரையில் ஊன்றி

உடலெடையால் அதற்கு மேல் சாய்ந்து மெல்ல அசைந்தபடி நின்றுகொண்டிருப்பதை அவன் பார்த்தான். துயிலில் அவர்கள் ஒருவருக்கொருவர் குழறும் சொற்களால் பொருளற்று பேசிக்கொண்டனர். மிக அப்பால் “குருகுலத்து இளவரசர் விண்ணேகினார்! இடும்பர் குலத்து மைந்தர் விண்ணேகினார்! வெற்றிகொள் வீரர் விண்ணேகினார்! சிறப்புறுக! இடும்பர் குலம் சிறப்புறுக! குருகுலம் சிறப்புறுக! வெல்க மின்கொடி!” என கொம்புகளும் முழவுகளும் துணையெழ வாழ்த்தொலிகள் ஒலித்துக்கொண்டிருந்தன. ஆனால் அவற்றை அங்கிருந்தோர் கேட்டதாகத் தெரியவில்லை. புரவிக்கால் குளம்பொலி கேட்க பலர் திரும்பி அவனைப் பார்த்தாலும் எவர் விழிகளிலும் அறிமுகம் எழவில்லை.

சிரித்தபடி ஓடிவந்து அவன் புரவியின் கடிவாளத்தை பற்றிக்கொண்டான் பாஞ்சால்யன். “இங்கே என்ன செய்கிறீர்கள்?” என்று அவன் கேட்டான். “பூசனைக்குரிய அனைத்தும் ஒருங்கிவிட்டன. தந்தை காத்திருக்கிறார்” என்று பாஞ்சால்யன் சொன்னான். சத்ருஞ்சயனும் உத்தமௌஜனும் அவனை நோக்கி விரைந்து வந்தனர். “பிந்திவிட்டாய், இளையோனே. தந்தை பலமுறை கேட்டார்” என்றான். “இது எந்த இடம்?” என்றான். “நாங்களும் முதல்முறையாக இங்கே வருகிறோம். காம்பில்யத்தின் எல்லைக்காட்டுக்குள் இருக்கிறது இச்சிற்றாலயம். இங்கே நூற்றெட்டு ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் பூசனை செய்யப்படுகிறது” என்றான் சத்ருஞ்சயன். விரிகனும் குமாரனும் யுதாமன்யுவும் ஆலயமுகப்பில் நின்றிருந்தனர். ஜனமேஜயனும் சுரதனும் விறகுகளை உள்ளே கொண்டுசென்றனர். “இங்கே அரசகுடியினர் மட்டுமே நுழைவொப்பப்படுகிறார்கள்” என்றான் சத்ருஞ்சயன்.

கரிய பாறை ஒன்றில் குடையப்பட்ட சிற்றாலயத்தின் முன் ஈச்சையோலையால் பந்தல் போடப்பட்டிருந்தது. அதற்குள் இருந்து சத்யஜித் வெளியே வந்து “வருக, மூத்தவர் காத்திருக்கிறார்” என்றார். திருஷ்டத்யும்னன் குறடுகளைக் கழற்றிவிட்டு மேலாடையை இடையில் சுற்றிக்கட்டி உடல்குறுக்கி வணங்கியபடி உள்ளே சென்றான். “மூத்தவர் வரவில்லையா?” என்று திருஷ்டத்யும்னன் விரிகனிடம் கேட்டான். “இல்லை, அவர் குருதியால் பாஞ்சாலர் அல்ல என்றனர்” என்றான். “யார் சொன்னது?” என்று அவன் சீற்றத்துடன் கேட்க “தந்தை” என்றான் விரிகன். சத்யஜித் “மூத்தவரே, மைந்தன் வந்துவிட்டான்” என்றார். புலித்தோல் விரித்த பீடத்தில் அமர்ந்திருந்த முதியவரைக் கண்டு திருஷ்டத்யும்னன் திடுக்கிட்டான். “இவர்?” என்றான். “என்ன ஆயிற்று உங்களுக்கு? தந்தையை தெரியாதா?” என்று சுரதன் அவனருகே தாழ்ந்த குரலில் கேட்டான். “இல்லை... இவர்...” அவன் அவரை அடையாளம் கண்டான். அரண்மனையின் சுவரோவியங்களில் உள்ள முகம். “இவர் நம் தந்தையின் தந்தை... பேரரசர் பிருஷதர்...” என்றான். பிருஷதர் அவனை நோக்கி “அமர்க!” என்றார். “நீங்கள் தந்தை அல்ல” என்றான். “அமர்க!” என்றார் பிருஷதர். அவன் அவர் அருகே மான்தோல் இருக்கையில் அமர்ந்தான். அங்கே கைகள் கட்டப்பட்டு போடப்பட்டிருந்த பலிவிலங்கை அப்போதுதான் பார்த்தான். அது ஒரு மானுடன். “மானுடபலியா?” என்றபின் விழிதூக்கி கருவறையை நோக்கினான். அங்கே சிலையென அமர்ந்திருந்த அன்னைதெய்வத்தைக் கண்டு அலறியபடி எழுந்தான். திரும்பி பலிமானுடனின் முகத்தைக் கண்டு மீண்டும் அலறினான்.

அவன் உடல் தொய்ந்து தலைசென்று புரவியின் பிடரி மயிரில் முட்டிக்கொண்டது. எழுந்து கண்களை மூடித்திறந்து வாயில்

ஊறியிருந்த எச்சிலை இருமுறை துப்பினான். பெரும்கொடிமரத்தின்மீது அவன் உடல் கொடிக்கூறை என துடித்துப் பறந்து கொண்டிருந்தது. எங்கிருந்தோ காற்று விசையுடன் வீச இரு கைகளாலும் கொடிமரத்தைப் பற்றியபடி ஒவ்வொரு கணமும் கிழிந்து தெறித்துவிடுவோம் என்று அஞ்சியபடி அவன் பறந்துகொண்டிருந்தான். அவன் சூழப் பார்த்தபோது அங்கிருந்த அத்தனை வீரர்களும் நிலத்தில் அமர்ந்துவிட்டிருந்தனர். பின்னர் அவர்கள் ஆங்காங்கே படுத்து துயிலத்தொடங்கினர். திகைப்புடன் அவன் சூழ விழியோட்டி நோக்கியபோது அலையலையென பாண்டவ வீரர்கள் களத்திலேயே படுத்து துயிலத்தொடங்கிவிட்டிருந்ததை கண்டான்.

தனித்தனியாக அன்றி மொத்தமாகவே அவர்கள் அந்த முடிவை எடுத்தனர் என்று தோன்றியது. நோக்கி நிற்கவே பாண்டவப் படை காற்றில் புற்பரப்பு தழைந்து சரிவதுபோல குருக்ஷேத்ரத்தில் படுத்துப் பரவி துயிலத் தொடங்கியது. துஞ்சியவர்களும் துயில்பவர்களும் ஒன்றெனக் கலந்து உடல்களின் பரப்பென ஆகி களத்தை நிறைத்திருந்தனர். அவன் புரவியின் முதுகின் மேலேறி நின்று தொலைவில் பார்த்தபோது கண்ணெட்டும் தொலைவுவரை கௌரவப் படையும் நிலம் படிந்து துயின்றுகொண்டிருப்பதை கண்டான்.

# கார்கடல் - 74

பீமன் இடும்பவனத்தின் அடர்காட்டுக்குள் மரக்கிளைகளில் இலைச்செறிவுக்குள் கொடிகளை இணைத்துக்கட்டிய படுக்கையில் துயின்றுகொண்டிருந்தான்.

இடும்பர்களின் அந்தப் படுக்கை முறையை அவன் அங்கு வந்த பின்னர் கற்றுக்கொண்டிருந்தான். ஓர் எடைமிக்க மானுடன் கொடிகளில் துயில்வதற்கு எட்டு மெல்லிய கொடிகளின் இணைப்பே போதுமென்பது முதலில் அவனுக்கு திகைப்பாக இருந்தது. அதில் படுத்தால் சற்று நேரத்திலேயே உடல் வலிகொள்ளத் தொடங்குமென்று அவன் எண்ணினான். முதல் முறையாக அந்தக் கொடிப்படுக்கையை அவனுக்காக அமைத்த இடும்பனாகிய கிருசன் பெரிய பற்களைக் காட்டி "படுத்துக்கொள்ளுங்கள், மானுடரே" என்றான். பீமன் தயங்க அதில் எப்படி படுப்பது என்று அவன் காட்டினான்.

உடம்பில் எட்டு பகுதிகளில் அந்தக் கொடி முடிச்சுகள் அமையும்படி வைத்து அவன் படுத்தான். தொட்டிலில் படுத்திருக்கும் பேருருக்கொண்ட குழந்தைபோல் தோன்றினான். அந்த முடிச்சுகள் உடலில் இருந்து இடம் பெயராதபடி அவற்றை உடலின் அப்பகுதியுடன் தளர்வாக கட்டிக்கொண்டான். பின்னர் கைகளையும் கால்களையும் உதைத்தும் புரண்டும் அது எவ்வகையிலும் இடம்பெயராது என்பதை பீமனுக்கு காட்டினான். "எண்கணுக்கள் என இவற்றை சொல்வோம், மானுடரே. எட்டு கணுக்களுக்கு இடையே உள்ள உடலின் எடை முற்றாகவே நிகரானது" என்றான். பீமன் அக்கொடிப்படுக்கையில் படுத்துக்கொண்டதும் இடும்பனே முடிச்சுகளை அவன் கைகளிலும் கால்களிலும் கட்டினான். எடைமிக்க உடலானதால் எப்போதும் அவன் உடலில் விழுவதைப்பற்றிய எச்சரிக்கை இருந்துகொண்டிருக்கும். ஆகவே அவன் தசைகள் விதிர்த்தன.

ஆனால் நீட்டிப்படுத்ததும் எடையற்று நீரில் மிதந்துகொண்டிருப்பது போன்ற உணர்வை பீமன் அடைந்தான்.

சற்று நேரத்திலேயே அந்த முடிச்சுகள் அழுத்தத் தொடங்கி குருதியோட்டம் தடைபட்டு உடல் வலிகொள்ளுமென்று எதிர்பார்த்தான். ஆனால் இடும்பன் அவ்வுடலின் அமைப்பை கூர்ந்து கருதி சில கொடிகளை தளர்த்தி சில கொடிகளை இறுக்கி சரியாக அதைப் பொருத்திய பின் புன்னகையுடன் “துயில்க!” என்று கூறி கிளைகளை கடந்து சென்றான். மிதந்து கிடப்பதே துயிலை உருவாக்கியது. மேலும் மேலும் அழுந்தி தனக்குள் புகச் செய்தது. தன்னுள்ளே நிறைந்திருந்த குருதி ஒவ்வொரு குமிழியாக கீழிறங்கி அமைய உள்ளம் விசையிழந்து அமைதியான ஒழுக்காக ஆவதை அவன் உணர்ந்தான். ஒன்றுடன் ஒன்று முட்டி வெப்பம்கொண்ட அகச்சொற்கள் பிரிந்து தனித்தனியாக மாறின. ஒவ்வொரு சொல்லும் தனித்தபோது முற்றிலும் பொருளிழந்தன.

ஏனோ “உலோகம்” எனும் சொல் எஞ்சியிருந்தது. அது தனக்கு எவ்வகையில் பொருள் கொள்கிறது என்று அவன் வியந்தான். உலோகம் உலோகம் என ஓடிக்கொண்டிருந்து மயங்கியது அகம். பின்னர் விழித்துக்கொண்டபோது நெடுநேரம் ஆகிவிட்டிருந்தது. எழ முயன்றபோதுதான் தன் உடல் கொடிகளில் கட்டப்பட்டிருப்பதை, தரையிலிருந்து மிக உயரத்தில் தழைக்குள் கொடிப்படுக்கையில் படுத்திருப்பதை உணர்ந்தான். நெடும்பொழுது ஆகியிருந்தாலும் அவன் உடல் எவ்வகையிலும் வலி கொண்டதாக இருக்கவில்லை. காற்றில் மிதப்பதுபோல. அதன் பின் எப்போதும் அவன் கொடிச்சேக்கையில் தூங்குவதையே வழக்கமாக்கிக்கொண்டான். அவன் கைகளில் எப்போதும் கொடிச்சேக்கை நுண்வடிவிலிருந்தது. அவன் அமைக்கும் கொடிச்சேக்கை அவன் உடலுக்கு மிகச் சரியாக பொருந்தியது.

“எப்படி நீங்கள் அவ்வாறு மரக்கிளைகளுக்கு மேல் துயில்கிறீர்கள்?” என்று சகதேவன் ஒருமுறை கேட்டான். “மண்ணில் துயில்கையில் என் உடலின் எடை ஏதேனும் உறுப்புகளை உறுத்துகிறது. கீழே ஒரு கல் இருப்பினும் கூட அது தசைக்குள் புக முயல்கிறது. கிளைகளுக்குள் எட்டு கைகளால் தாங்கப்பட்டவனாக நான் விண்ணில் துயில்கிறேன். உடலின் எடையை எட்டாக பகுத்துவிடுகின்றன அச்சரடுகள்” என்று அவன் சொன்னான். பின்னர் சகதேவனின் தோளில் ஓங்கி அறைந்து நகைத்து “தூங்குதல் என்றால் அதுதான். மண்ணில் படுத்திருப்பதை துஞ்சுதல் என சொல்கிறார்கள்” என்றான். அவன் தன் அறைக்குள்கூட கொடிகளால் மஞ்சம் அமைத்திருந்தான். தன் உடலுக்குக் கீழே காற்று கடந்து செல்வதை உணர்ந்தாலொழிய அவன் அகம் முற்றிலும் கரைந்து துயிலில் ஆழ்வதில்லை. “நான் என் தந்தையின் கைகளால் தாங்கப்படுகிறேன். பலனாலும் அதிபலனாலும்” என்று அவன் சொன்னான். சகதேவன் “அது நன்று, பேரெடைகளைத் தாங்க காற்றால் மட்டுமே இயலும்” என்றான்.

மரக்கிளைகளினூடாக கடோத்கஜன் வரும் ஓசையை பீமன் கேட்டான். “தந்தையே!” என்று கூவியபடி பறந்துவந்து அவன் நெஞ்சின் மேல் விழுந்தான் கடோத்கஜன். எழுந்து அவன் வயிற்றின்மேல் அமர்ந்து “நான் பறந்து வந்தேன்! அங்கிருந்து பறந்து வந்தேன்!” என்றான். கைசுட்டி உள்ளம் விம்மி விம்மி எழ “அங்கிருந்து பறந்தேன்!” என்றான். “ஆம், தெரிகிறது” என்று சொல்லி அவனுடைய மயிரற்ற பெரிய தலையை கைகளால் வருடிய பின் “வருக!” என கைநீட்டி அழைத்தான். கடோத்கஜன் தன் பெரிய தலையை அவன் மார்பில் வைத்துக்கொண்டான். அவனுடைய உந்திய உதடுகளிலிருந்து எப்பொழுதும் சற்று வாய்நீர் கசிந்து மார்பில் வழிந்திருக்கும். அந்த ஈரத்துடன்

அவனை புல்கியபோது எப்போதும் எழும் உளக்கனிவை பீமன் அடைந்தான். அவன் தலையை வருடியபடி “முத்தம் கொடு. தந்தைக்கு முத்தம் கொடு” என்றான்.

“மாட்டேன்” என்று கடோத்கஜன் சொன்னான். “ஏன்?” என்றான் பீமன். “நீங்கள் என்னை வானத்திற்கு கொண்டுபோவதாக சொன்னீர்கள். அங்கே முகில்களில் தாவி ஓடலாமென்று சொன்னீர்கள்!” என்றான் கடோத்கஜன். “எப்போது?” என்று பீமன் கேட்டான். “நேற்று!” என்று கடோத்கஜன் சொன்னான். இறந்தகாலம் அனைத்தும் அவனுக்கு நேற்று என்பதனால் பீமன் சிரித்து “நான் எப்போது கூட்டிச்செல்வதாக உன்னிடம் சொன்னேன்?” என்றான். “நாளை!” என்றான் கடோத்கஜன். “நாளைதானே? இன்று ஏன் கேட்கிறாய்?” என்றான். கடோத்கஜன் விழிகளை உருட்டி எண்ணம் கூர்ந்து பின்னர் தெளிந்து மீண்டும் எழுந்தமர்ந்து வலக்கையைத் தூக்கி சுட்டுவிரலை நீட்டி “நாளை!” என்றான். அவன் உடல் முழுக்க ஒரு துடிப்பு நிகழ்ந்தது. “நாளை! நாளை!” என்றான். அச்சொல்லே அவனை அதிரச்செய்தது. “நாளை! வானில்!” என்றான். “ஆம், நாளை!” என்று பீமன் சொன்னான்.

“நாளை!” என்று கைவிரித்துக் கூச்சலிட்டபடி கடோத்கஜன் அவன் வயிற்றில் எம்பிக்குதித்தான். அவன் அகவையில் உள்ள அனைத்துக் குழவிகளுக்கும் நாளை எனும் சொல்லைப்போல் உளவிசையும் உவகையும் கொள்ளச்செய்யும் பிறிதொன்றில்லை என்று பீமன் எண்ணிக்கொண்டான். “நாளை! அங்கு! நாளை! வானில்!” என்று கடோத்கஜன் கூவினான். இரு கைகளையும் விரித்து பறப்பதுபோல் சிரித்து “முகில்களில்! நாளை! முகில்களில்!” என்றான். “ஆம். மண்டையன் நாளை முகில்களில் நீந்துவான்...” என்றான் பீமன். “நாளை நீ முகில்கள்

மேல் போவாய்தானே?” என்றான். “ஆம்” என்றான் கடோத்கஜன். “அப்படியென்றால் எனக்கொரு முத்தம் கொடு” என்றான் பீமன். “சரி” என அவன் வாயைத் துடைத்தான். “இல்லை, இல்லை, ஈரமுத்தம்” என்றான் பீமன். கடோத்கஜன் சிரித்தபோது மீண்டும் வாய் சொட்டியது. அவன் பீமனின் மார்பில் கையூன்றி தன் ஈரமான உதடுகளால் பீமனின் கன்னங்களில் முத்தம் அளித்தான். பீமனின் உடல் மெய்ப்பு கொண்டது. கடோத்கஜனை தன் இரு கைகளாலும் புல்கி அவன் கன்னங்களிலும் மயிரற்ற கலமண்டையிலும் வெறிகொண்டு முத்தமிட்டான்.

விழித்துக்கொண்டபோதுதான் பீமன் புரவியிலேயே தான் இருப்பதை உணர்ந்தான். அரைத்துயிலில் உடல் சற்றே எடை மிகுந்து கடிவாளத்துடன் சரிந்திருந்தது. “இளவரசே!” என்று அவன் அருகே சென்ற ஏவலன் அழைத்தான். நெடுங்காலப் பயிற்சியினால் அவன் உடல் புரவி மீதிருந்து சரியவில்லை. கண்களைக் கொட்டி உடம்பை இறுக்கித் தளர்த்தி “ஆம்” என்றான் பீமன். “இவ்விடம்தான்” என்று ஏவலன் சுட்டிக்காட்டினான். பீமன் நெஞ்சில் பேரெடை ஒன்று வந்து அறைந்ததுபோல் உணர்ந்து, ஒருகணம் செயலற்று, பின்னர் அகம் கலைந்தெழ, கைகால்கள் நடுக்குற, உடலில் வியர்வை எழுந்து வெப்பமாகப் பரவி உடனே குளிர்ந்து மூச்சு இறுகி நின்றிருக்க அந்நிலத்தை பார்த்தான். தரையெங்கும் பல்லாயிரம் நாகங்கள் நெளிந்து அகல்வதை கண்டான். “நாகங்கள்!” என்றான். “ஆம் இளவரசே, நாகஅம்பு” என்றான் பின்னால் வந்துகொண்டிருந்த படைத்தலைவன்.

அவன் உள்ளம் அதை பொருள் கொள்ளவில்லை. அவன் தரை முழுக்க நெளிந்து இரையுண்டவைபோல் விசையழிந்து

ஒன்றுடன் ஒன்று பின்னி நெளிந்து உழன்றுகொண்டிருந்த நாகங்களைப் பார்த்தபடி நின்றான். கடோத்கஜன் அலறியபடி "நாகங்கள்!" என்றான். பீமன் அவன் தோளைப்பற்றி "எங்கே?" என்றான். கடோத்கஜன் "நாகம்! நாகம்!" என்று அலறியபடி துடித்தான். பீமன் அவனைத் தூக்கி அப்பால் கொடி மீது அமரச் செய்தபின் அவன் உடலை கூர்ந்து பார்த்தான். இடும்பர்கள் நாகங்களை கூற்றென அஞ்சுபவர்கள் என்று அறிந்திருந்தான். இடும்பர் காட்டில் பச்சைப் பாம்புகளோ மரமேறும் பாம்புகளோ இல்லை. அவை நெடுங்காலமாக அவர்களால் தொடர்ந்து கொன்றொழிக்கப்பட்டுவிட்டன. கீழே உதிர்ந்த மரக்கிளைகளிலும் சருகுக்குவைகளிலும் மறைந்து சுருண்டு கிடந்த பல்லாயிரம் பாம்புகள் எதன் பொருட்டும் மரமேறக்கூடாதென்பதை கற்று தங்கள் தலைமுறைகளுக்கு ஊட்டியிருந்தன. இடும்பர்கள் எந்நிலையிலும் அங்கு கால்பதிப்பதும் இல்லை.

கடோத்கஜன் கைசுட்டி "நாகம்! நாகம்!" என்றான். அங்கு மெல்லிய கொடியின் தளிர்முனை வளைந்திருப்பதைக் கண்டு "மண்டையா, அது கொடித்தளிர். பாம்பல்ல" என்றபின் அதை கையால் ஒடித்துக் காட்டினான் பீமன். "நாகம்! நாகம்!" என்று கடோத்கஜன் மீண்டும் நடுங்கினான். அவன் அருகே கொண்டு சென்று அவன் முகத்தில் அதை தொடச்சென்றான். "நாகம்!" என்று அலறியபடி இலைத்தழைப்பிலிருந்து நழுவி கீழே விழப்போனான் கடோத்கஜன். பீமன் பாய்ந்து அவன் கையைப்பற்றி தன் உடலுடன் சேர்த்து எடுத்துக்கொண்டான். வெறியுடன் கைகால்களை உதைத்து "நாகம்! நாகம்!" என்று கடோத்கஜன் அலறினான். அவன் கைகால்கள் இழுத்துக்கொள்ள வாய் கோணலாக உடலில் வலிப்பு கூடியது. "மண்டையா! மண்டையா!" என்று கூவி அவனை உலுக்கினான்

பீமன். வாயிலிருந்து நுரை வழிய கடோத்கஜன் நினைவிழந்தான்.

அவனை தன் தோளில் தூக்கியபடி பீமன் இலைகளினூடாக பாய்ந்து சென்றான். இடும்பர் குடியின் அருகே இறங்கி “மருத்துவரே!” என்று கூவினான். மருத்துவம் செய்யும் உசவர் அங்கிருந்து ஓடிவந்து கடோத்கஜனை இரு கைகளாலும் வாங்கிக்கொண்டார். புல்படுக்கைமேல் படுக்க வைத்து அவன் தலையையும் கைகால்களையும் தொட்டுப்பார்த்தார். “அனைத்து நரம்புகளும் முடிச்சிட்டுள்ளன. இப்போது விழிப்படைந்தால் அவை மேலும் இறுகவே வாய்ப்பு. இவ்வண்ணமே துயில் கொள்ளட்டும்” என அவர் சொன்னதும் இருவர் குடிலுக்குள் இருந்து சில இலைச்சருகுகளை எடுத்துவந்து அனல் காட்டி அந்தப் புகையை சிறு விசிறியால் விசிறி கடோத்கஜனை ஆழ இழுக்கச்செய்தார்கள். புகை குடித்து மெல்ல மெல்ல கடோத்கஜன் உடல் தளர்ந்தான். இறுகப் பற்றியிருந்த கைகளில் விரல்கள் ஒவ்வொன்றாக விடுபட்டன. கால்கள் தணிந்து இருபுறமும் சரிந்து மூச்சு சீரடைந்தது. மயக்கத்திலும் வலிப்பு கொண்டு இறுகியிருந்த முகத்தசைகள் நெகிழலாயின.

“துயிலட்டும்” என்று மருத்துவர் சொன்னார். கடோத்கஜன் குழறலாக “நாகம்!” என்றான். “பாம்பைக் கண்டு அஞ்சியிருக்கிறான்” என்றார் உசவர். “அது பாம்பு அல்ல” என்று பீமன் சொன்னான். “பாம்பு என்பது அரிதாகவே பாம்பில் நிகழ்கிறது. பிற அனைத்திலும் தன்னை நிகழ்த்திக்கொள்ள இயலும் என்பது பாம்புகளின் இயல்பு. எங்கு வேண்டுமானாலும் அது தன் நஞ்சை வைத்திருக்கவும் இயலும். மானுடக் கைகளில் கூட நகங்களில் நஞ்சு எழுவதுண்டு. அன்னை கையில் நாகம் எழுந்து சீறி குழவியைக் கொத்தி கொன்ற

கதைகளும் உண்டு” என்றார் மருத்துவர். பீமன் மைந்தனின் முகத்தைப் பார்த்தபடி நின்றான். கடோத்கஜனின் வளைந்த கால்கள் அதிர்ந்துகொண்டிருந்தன. அங்கே நுண்வடிவ நாகங்கள் சுற்றிப்பின்னியிருப்பதாகத் தோன்றியது.

“உடல் இங்கு உள்ளது, இளவரசே” என்றான் படைத்தலைவன். அதை பார்க்கவேண்டியதில்லை என்று முதலில் பீமனின் உளம் எண்ணியது. ஆனால் ஒன்றும் சொல்லாமல் அவன் புரவியில் முன்னால் சென்றான். “விண்ணிலிருந்து பேரெடையுடன் விழுந்ததனால் சற்று சிதறிவிட்டிருக்கிறது” என்று இன்னொரு வீரன் சொன்னான். பீமன் வருவதைக்கண்டு அங்கு கூடியிருந்த இடும்பர்கள் தங்கள் கைகளால் அறைந்து ஒற்றைக் குரலில் நீள் ஊளையிட்டு துயரை அறிவித்தனர். பீமன் தன் உடலெங்கும் விதிர்ப்பு குடியேறுவதை உணர்ந்தான். நோக்க வேண்டியதில்லை திரும்புக என்று அவன் உள்ளம் ஆணையிட்டது. ஆனால் அவன் உடலிலிருந்து ஆணைகளைப் பெற்று புரவி முன்னால் சென்றுகொண்டே இருந்தது.

இடும்பர்கள் வளைந்த மெலிந்த கால்களை நிலத்தில் ஊன்றி அலையலையாக உடலை எழுப்பி நெஞ்சில் இரு கைகளாலும் அறைந்துகொண்டு தலையை மேலே தூக்கி ஊளையிட்டனர். அவ்வோசையின் அலையையே அவர்கள் உடலில் காண முடிந்தது. சூழ்ந்து அலையடித்த உடல்களின் அலைநடுவே இரு கால்கள் தெரிந்தன. பீமன் கடிவாளத்தை இழுத்து புரவியை நிறுத்தினான். சற்று முன்னால் சென்ற படைத்தலைவன் “தாங்கள் பார்க்கவிரும்பவில்லையென்றால்...” என்றான். “இல்லை” என்றபின் பீமன் இரு கால்களாலும் குதிமுள்ளை அழுத்தி புரவியை முன்செலுத்தினான். அது

உடலைச் சிலிர்த்து தலை சிலுப்பி நீள்மூச்சுவிட்டபடி எடையுடன் காலடியை எடுத்து முன்னால் சென்றது.

பீமன் கடிவாளத்தை விட்டுவிட்டு கால்சுழற்றி இறங்கி நிமிர்ந்த தலையுடன் கைகளை வீசியபடி கடோத்கஜனை நோக்கி சென்றான். அவன் அணுகியதும் இடும்பர்கள் அமைதி அடைந்து ஒருவரோடொருவர் உடல்ஒட்டி பின்னால் விலகி பெரிய வளையமென்றாயினர். அதன் நடுவே இரு கைகளையும் கால்களையும் விரித்து விண்ணை நோக்கி கடோத்கஜன் படுத்திருந்தான். கொடிப்படுக்கையில் படுத்திருப்பதுபோல் என்று பீமன் எண்ணினான். அவன் உடலெங்கும் நாகநஞ்சு ஏறியிருந்தமையால் நரம்புகள் புடைத்து கொடிகள் சுற்றி படர்ந்த கரும்பாறைபோல் உடல் தெரிந்தது. பற்கள் கிட்டித்திருக்க முகம் வலிப்பு கொண்டமையால் அவன் நகைப்பதுபோல் தோன்றியது. விழிகள் திறந்து வானை உறுத்திருந்தன. அருகணைந்து அவன் காலருகே நின்ற பீமன் "அனல் எஞ்சியுள்ளதா?" என்றான். "இல்லை. விரைவிலேயே குளிர்ந்துவிட்டது" என்று குனிந்து அமர்ந்திருந்த மருத்துவர் சொன்னார்.

பீமன் தன் உள்ளிருந்து குளிர்ந்த மூச்சை ஊதி வெளியேவிட்டான். கடோத்கஜனின் உடலை நோக்கியபடி மெல்ல சுற்றி நடந்தான். விழிகளால் அவன் கால்களிலிருந்து நெஞ்சினூடாக தலைவரை வருடினான். எதற்காக தயங்குகிறேன்? இத்தருணத்தில் நான் செய்யவேண்டியது முழங்காலறைந்து விழுந்து அவன் கால்களிலும் நெஞ்சிலும் தலையை அறைந்துகொண்டு கதறி அழவேண்டியதல்லவா? எதன் பொருட்டு இறுக்கிக்கொள்கிறேன்? எவருக்காக இதை நடிக்கிறேன்? கடோத்கஜனின் முகத்தை கூர்ந்து

நோக்கிக்கொண்டிருந்தபோது பீமனின் இடதுகால் மட்டும் துடித்து துள்ளிக்கொண்டிருந்தது. எக்கணமும் அறுந்து விழுந்துவிடுவோம் என்ற அச்சம் அவனுக்கு ஏற்பட்டது. எக்கணமும் பித்தனைப்போல் அலறியபடி நெஞ்சிலும் தலையிலும் அறைந்து கூவி அழுதபடி அங்கிருந்து அவன் ஓடக்கூடும். மண்ணில் தலையறைய விழுந்து தலையை புழுதியில் புரட்டியபடி பொருளழிந்த சொற்களைச் சொல்லி அலறக்கூடும். இரு கைகளையும் விரித்து விண்ணை நோக்கி அசைத்து தெய்வங்களிடம் முறையிடக்கூடும்.

தெய்வங்கள் விண்ணில் காத்து நின்றிருக்கின்றன. மானுடனின் ஆணவம் முறியும் தருணத்தில் அவை புன்னகைக்கின்றன. தெய்வங்களே, என்னை நோக்கி நீங்கள் புன்னகைக்கும் ஒரு தருணத்தை நான் அளிக்கப்போவதில்லை. ஒருபோதும் என்னை நீங்கள் இரக்கத்துடன் பார்க்கப்போவதில்லை. கை சுட்டி இதோ எளிய மானுடன் என்று உரைக்கப்போவதில்லை. ஒருதுளி விழிநீரையும் நீங்கள் பார்க்கப்போவதில்லை. பீமன் சற்று பின்னடைந்தான். சூழ்ந்து நின்றிருந்த இடும்பர்களைப் பார்த்தான். அவர்கள் எவர் விழிகளிலும் ஒருதுளி நீருமில்லை. இரு கைகளையும் விரித்து சற்றே உடல் குனித்து பெருங்குரங்குகளின் உடல்மொழி காட்டி அவர்கள் நின்றிருந்தனர். பீமன் தன் வலக்கையால் ஓங்கி நெஞ்சை அறைந்தான். பின்னர் தலை தூக்கி நீண்ட ஊளை ஒலியை எழுப்பினான். இடும்பர்கள் அனைவரும் தங்கள் நெஞ்சை அறைந்து அவ்வொலியை எழுப்பினர். நெஞ்சில் மாறி மாறி அறைந்துகொண்டு ஊளையொலிகளை இணைத்து ஒற்றைப்பேரொலியாக அவர்கள் மாற்றினார்கள். சுழன்று சுழன்று அடியிலா ஆழம் நோக்கி அருவியெனப் பொழிந்து சென்றது அவ்வலறல் ஓசை.

பீமன் தரையில் படுத்திருந்தான். அவன் உடலுக்கு அடியில் மண் நெகிழ்ந்து உள்ளிழுத்துக்கொண்டது. மென்சேற்றுக் கதுப்பென அது ஆகிவிட்டதுபோல. அவன் கைகளும் கால்களும் கல்லால் ஆனவை என எடைகொண்டிருந்தன. மேலும் புதைந்து இறங்கினான். இருபுறத்திலிருந்தும் சேற்றுப் பரப்பு பிதுங்கி வந்து அவன் உடலை மூடி ஒன்றுடன் ஒன்று இணைந்துகொண்டது. மேலும் அவன் அழுந்திச்சென்றபோது முகத்தையும் கண்களையும் மண் மூடியது. வாய்க்குள்ளும் மூக்குக்குள்ளும் மண் புகுந்தது. மூச்சுப்பைகளும் உணவுப்பைகளும் மணலால் நிறைந்தன. உடற்குகை முழுக்க மணல் சென்று நிறைந்து குருதியை உறைய வைத்தது. அனைத்து உறுப்புகளும் மண்ணாலானவை என மாறின. மணல் அவன் நெஞ்சத் துடிப்பை நிறுத்தியது. மூச்சு ஓட்டத்தை அணைத்தது. உடலெங்கும் அனலை மூடி புகைத்து அணைத்து குளிரச்செய்தது.

அவனை கல்லென்றாக்கியது அவ்வெடை. மீண்டும் மீண்டும் மண்ணில் ஆழ புதைந்து சென்றுகொண்டிருந்தான். மணலுக்கும் அவனுக்குமிடையே ஒரு சிறு தன்னுணர்வின் இடைவெளி மட்டுமே இருந்தது. மண்ணுக்கடியில் குளிராக இருந்தது. மெல்லிய புழுக்கள் அவன் உடலை நோக்கி நீண்டு வந்தன. சிவந்த குழவியின் விரல்கள் போன்ற புழுக்கள். அவை அவனை குளிரக் குளிர தொட்டன. பல்லாயிரம் தொடுகைகள். முலைதேடும் குழவிகளின் அழைப்புகள். அவன் மேல் மெல்ல மெல்ல சுற்றி கவ்விக்கொண்டன. அவன் உடலுக்குள் துளைத்திறங்கி ஆழச்சென்று அங்கிருந்த குருதி நனைந்த சேற்றில் கிளைவிரித்தன. நெளிந்து நெளிந்து இடைவெளியிலாது ஒன்றையொன்று பற்றிக்கொண்டு அவனை

முழுமையாக உண்டன. அவன் உடல் பெரிய வேர்ப்பின்னல் தொகையென்றாகியது. அது மண்ணைத் துளைத்து மேலெழுவதை அவன் பார்த்தான்.

முளைகள் மேலெழுந்து இலைவிட்டன. தண்டுகள் பருத்து செடிகளாகி கிளைகொண்டு எழுந்தன. மரங்களாகி கிளைகள் ஒன்றையொன்று பின்னி இலைத்தழைப்பு கொண்டு வெயிலில் செறிந்துபரவி சோலையென நின்றிருந்தன. அதன் மேல் குரங்குகள் துள்ளி விளையாடுவதை அவன் நோக்கினான். ஒன்றையொன்று பிடித்துத் தள்ளியபடி, வாய்திறந்து பற்கள் தெரிய கூச்சலிட்டு, ஒருவர் மேல் ஒருவர் தாவிப் பற்றியபடி, விளையாட்டில் தவறி கீழே விழும் குரங்கை அள்ளி கைபற்றித் தூக்கி மீண்டும் மேலெழுப்பி ஏளனம் செய்து கூச்சலிட்டபடி அவை களியாடிக்கொண்டிருந்தன. மயிரடர்ந்த பெரிய குரங்கை அவன் பார்த்துக்கொண்டிருந்தான். அது பிற அனைத்துக் குரங்குகளையும் தூக்கி வானில் வீசியது. துள்ளிப்பாய்ந்து அவற்றின் மேலிறங்கி அவற்றை விளையாட்டாக அடித்து வெற்றி வெற்றி என்று கூச்சலிட்டது. பற்கள் தெரிய இளித்து வானை நோக்கியபடி இரு கைகளாலும் மார்பை அறைந்து வெற்றி கொண்டாடியது.

அவன் விழித்துக்கொண்டபோது பாடிவீட்டிற்கு வெளியே புலரியின் மென்குளிரில் படுத்திருந்தான். அவனருகே மதுக்குடங்களும் அனலணைந்த அகிபீனாக்கலங்களும் சிதறிக்கிடந்தன. சற்று அப்பால் வேலுடன் காவல் வீரர்கள் அமர்ந்திருந்தனர். பீமன் விண்மீன்கள் நிறைந்த வானையே நோக்கிக்கொண்டிருந்தான். முகில்கள் வானில் நிறைந்திருந்தன. சில பகுதிகளில் வெறும் இருள் மட்டுமே நிறைந்திருந்தது. அவன் உள்ளம் துயர் நிறைந்து அசைவற்று பாறை

போலிருந்தது. ஒவ்வொரு எண்ணமும் சிதைந்து விழுந்தது. இத்தருணத்தில் தந்தையர் விழிநீர்விடுவார்களா? பிறிதொருவர் நோக்க அழாதவர்கள்கூட தனிமையில் அழுவார்கள் அல்லவா? என்னால் ஏன் ஒரு துளி விழிநீர்கூட அவனுக்காக சிந்த முடியவில்லை? தொல்லரக்கன்போல் உணர்வுகள் அற்றவனாக ஆகிவிட்டேனா? அல்லது விண்தெய்வங்கள்போல் அனைத்து உணர்வுகளையும் கடந்திருக்கிறேனா?

அவ்வெண்ணங்கள் பிறிதொரு ஒழுக்கென்று ஓட அசைவற்ற அவன் உள்ளத்தை சூழ்ந்து பதைத்துக்கொண்டிருந்தன சொற்கள். குரங்குகள். குரங்குகளைப்பற்றி இறுதியாக எண்ணினேன். நாகம் பற்றி. அந்த நாகஅம்பு! இப்போது எங்கிருக்கிறது அது? அதில் அமைந்த அந்தத் தொல்நாகம் எங்கிருக்கிறது? அதன் வாழ்நாள் இலக்கு முற்றிலும் பிழைத்துவிட்டது. எங்கு திரும்பிச்செல்லவிருக்கிறான் அவன்? வஞ்சத்துடன் செல்பவன் திரும்பிச் சென்றடைய ஓர் இடம் இங்கு எங்குமில்லை. விண்மீன்களுக்கிடையே அந்த இருளில் ஓர் அசைவென தெரிந்தது. அவன் கூர்ந்து பார்க்கையில் இருளின் முடிவின்மையை கண்டான். முகிலசைவா? ஓரவிழியால் தன் வலப்பக்கம் ஓர் நகர்வை அவன் கண்டான். “யார்?” என்று பதறிய குரலில் அழைத்தான்.

அங்கு ஓசையின்றி வந்து நின்றவனை அவன் அடையாளம் கண்டுகொண்டான். “பெரீந்தையே!” என அழைத்தபடி சிறுவனாகிய குண்டாசி அவனருகே அணுகினான். அவனுக்குப் பின்னால் சுஜாதன். “பெரீந்தையே, என்னை தூக்கு” என அவன் கைநீட்டினான். “நீயா?” என்று பீமன் கேட்டான். அவர்கள் கௌரவ மைந்தர்களான வாசவனும் வக்ரனும் என்று கண்டான். அப்பாலிருந்து கௌரவ மைந்தனாகிய சுராசதன்

“பெரீந்தையே, இங்கு நிறைய இடமிருக்கிறது. எவ்வளவு தொலைவு வேண்டுமானாலும் ஓட முடியும். இவர்கள் எவராலும் என்னை பிடிக்க முடியாது” என்று கூவினான். “பொய் சொல்கிறான், பெரீந்தையே” என்றபடி சுதமன் அவனுக்குப் பின்னால் வந்து நின்றான். “பெரீந்தையே, பெரீந்தையே, பெரீந்தையே” என்று சுதமன் சொன்னான். “நான் யானையை கொன்றேன்.” பீமன் சிரித்தபடி “யார், நீயா?” என்றான். அவனுக்குப் பின்னால் நின்ற அவனைவிடச் சிறியவனாகிய சுகீர்த்தி “ஆமாம்” என்று சொன்னான்.

உதானன் “பெரீந்தையே, என்னை யாருமே பிடிக்கமுடியாது” என அவன் ஆடைபற்றி இழுத்தான். “இவன் பொய் சொல்கிறான். இவனை நான் நூறுமுறை துரத்திப் பிடித்தேன்” என்றான் கவசன். “இல்லை! இல்லை!” என்று அவனை பிடித்துத் தள்ளினான் இன்னொருவன். அவன் பெயர் பீமனுக்குத் தெரியவில்லை. “பெரீந்தையே, பெரீந்தையே” என்று அனைத்துப் பக்கங்களிலும் ஓசை கேட்டது. கௌரவ மைந்தர்கள் எழுந்து வந்துகொண்டிருந்தனர். அவர்கள் ஒவ்வொரு முகத்தையாக தொட்டறிந்தான். ஒவ்வொருவரின் தோள்களையும், கண்களையும் நன்கறிந்திருந்தான். அவர்கள் நடுவே ஒளிரும் பெரிய மண்டையுடன் கடோத்கஜன் நின்றிருந்தான். மீண்டும் சிறுவனாகிவிட்டவன்போல். “இங்கே எப்படி வந்தாய்?” என்றான் பீமன். “தந்தையே, நான் இங்கேதான் இருக்கிறேன்” என அவன் சொன்னான். அவனருகே லட்சுமணன், துணையாக துருமசேனன். லட்சுமணன் “சொன்னால் கேட்கமாட்டார்கள், தந்தையே” என்றான்.

“பெரீந்தையே, இவன் எங்களைவிட பெரியவன். ஆனால் நாங்கள் அனைவருமாக சேர்ந்து இவனை பிடித்து

தூக்கிவிட்டோம்” என்றான் சுப்ரஜன். “பொய்! பொய் சொல்கிறான்! என்னை எவரும் பிடிக்கவில்லை” என்று கடோத்கஜன் பாய்ந்து அவனை பிடித்துத் தள்ளினான். அவர்கள் அனைவரும் கூச்சலிட்டபடி சிரித்துப் பாய்ந்து அவன் மேல் விழுந்தனர். கரிய உடல்கள் ஒன்றின் மேல் ஒன்று விழுந்து நெளிவுகளாயின. இரு தோள்களில் இருவரை தூக்கியபடி கடோத்கஜன் எழுந்தான். இருவர் சிரித்தபடி அவன் கால்களை பற்றி இழுக்க கடோத்கஜன் மல்லாந்து தரையில் விழுந்தான். மேலும் பலர் அவன் மேல் விழ அவர்கள் கட்டிப் புரண்டனர். குண்டலன் “பெரீந்தையே, அவனை வென்றுவிட்டோம்! அவனை வென்றுவிட்டோம்!” என்று கூவினான். கடோத்கஜன் தன்னைப் பற்றியிருந்தவர்களை உதிர்க்கும்பொருட்டு திமிறியபடி இரு இடைவெளிகளுக்கு நடுவே ஒளிமிகுந்த பற்களைக் காட்டி நகைத்து “நான் தோற்கவில்லை. இவர்கள் யாரும் என்னை பற்ற முடியாது” என்றான். பீமன் “விளையாடுங்கள்! விளையாடுங்கள், மைந்தர்களே!” என்றான். ஆனால் அவன் உள்ளிருந்து விம்மல் எழுந்தது. கண்ணீர் பெருகி காதுகளை நனைக்க அவன் பெரும்கேவல்களுடன் அழுதுகொண்டிருந்தான்.

# கார்கடல் - 75

அம்முறை துரோணரை நேருக்குநேர் எதிர்கொண்ட தருணத்திலேயே துருபதர் உணர்ந்தார், அது தன் இறுதிப் போர் என. ஒவ்வொரு முறை துரோணரை களத்தில் எதிர்க்கையிலும் வஞ்சமும் அதற்கு அப்பாற்பட்ட பேருணர்வொன்றும் எழுந்து அவர் உடலை அதிரச்செய்யும்.

சொற்கள் கலைந்தெழுந்து உள்ளம் பெருங்கொந்தளிப்பாக ஆகி ஒவ்வொரு அம்பிலும் ஒவ்வொரு சொல்லும் குடியேறி அகன்று அகன்று செல்ல இறுதியில் முற்றடங்கி வெறுமையும் தனிமையும் கொண்டு களத்தில் நின்றிருப்பார். போரிலிருந்து துரோணரே எப்போதும் பின்னடைந்தார். மிக இயல்பாக அப்பால் எதையோ கண்டு அதை எதிர்க்கும்பொருட்டு எழுபவர்போல.

துரோணரின் தேர் அவரை ஒதுக்கித் திரும்பும் கணத்தில் துருபதர் ஓர் உளஅசைவை உணர்வார். "நில்லுங்கள், துரோணரே! இக்கதையை முடித்துவிட்டுச் செல்லுங்கள்!" என்று பின்னால் நின்று கூவ எண்ணுவார். மேலும் மேலும் அம்புகளுடன் துரோணரை பின்தொடர்ந்து சென்று அறைய வேண்டும் என்று உளம் பொங்கும். இயல்பாக கை சென்று ஆவநாழியை தொடுகையில் அங்கு அம்பென எதுவும் எஞ்சவில்லை என்றுணர்ந்து திடுக்கிடுவார். தன் ஆவநாழியின் அம்புகளை முற்றறிந்த ஒருவரிடம் ஒவ்வொரு முறையும் சென்று தலைகொடுத்து போரிடுகிறோம். அவருடைய இறுதி அம்பும் தீர்ந்துவிட்டதென்று உணர்ந்தபின் துரோணர் ஓர் அம்பையும் எடுக்கவில்லை. மீண்டும் மீண்டும் அவருக்கு உயிர்க்கொடை அளித்து முற்றாக தோற்கடித்து திருப்பி அனுப்பினார்.

"என் முகத்தில் காறி உமிழ்கிறீர்கள்! என் நெஞ்சில் எட்டி உதைக்கிறீர்கள்! நீங்கள் எனக்கிழைத்த கீழ்மைகளின் உச்சம் இக்களத்தில் நீங்கள் எனக்களிக்கும் உயிர்க்கொடையே. ஆசிரியரே, என்னை கொல்க! உங்கள் அம்பொன்றால் என் நெஞ்சை பிளந்திடுக! இப்புவியில் நான் கொண்ட வஞ்சம் என் வாழ்க்கையை முற்றிலும் நிறைத்துவிட்டது. உங்கள் அம்பு

வந்து என் நெஞ்சைப் பிளந்து உட்செல்லுமெனில் அங்கு கொதிக்கும் அனலை அறிந்து உருகி நீராகும் என்று அறிக!" அவருடைய சொற்களின் பொருளின்மை அவரை கண்ணீர் மல்கச் செய்யும். ஒவ்வொரு முறை துரோணரிடமிருந்து திரும்புகையிலும் உடல் சோர்ந்து, தலை தளர்ந்து, விழிநீர் வழிய தேர்த்தட்டில் அமர்ந்திருப்பார்.

மறுமுறை துரோணரை சந்திக்கும் கணத்தைப் பற்றிய மெல்லிய கற்பனை எழுகையில் உள்ளிருந்து உயிர்த்துளி ஒன்று தோன்றும். அது வளர்ந்து மீண்டும் வஞ்சம் என்றாகி அவர் உடலை காற்று திரைச்சீலையை என ஊதி எழுப்பி நிறுத்தும். மறுமுறை இன்னும் கூரம்புகளுடன் இன்னும் பழிச்சொற்களுடன் அவர் முன் நிற்பேன். இன்னொரு முறை வெல்வேன். தெய்வங்கள் அறியட்டும், இவ்வாழ்நாளே இதன்பொருட்டே என. என் உளம் எரிவதை அறிந்து அவை கனியும் என்றால் அவரிடமிருக்கும் அம்புகளைவிட ஓர் அம்பை எனக்கு மிகுதியாக அளிக்கட்டும். ஓர் அம்பு போதும், அவர் நெஞ்சை சென்று தொடும் ஒற்றை ஓர் அம்பே என் வாழ்நாளை முழுமை செய்யும். தெய்வங்களே, ஒற்றை அம்பு! இதுநாள் வரை நான் அளித்த பெருங்கொடைகள், வேள்விகள், தன்னந்தனிமையில் இருளில் வீழ்த்திய விழிநீர், இறைத்து இறைத்து என் வழியை நிரப்பிய பல்லாயிரம் கோடி சொற்கள் அனைத்திற்கும் ஈடென நான் கேட்பது ஒற்றை அம்பை மட்டுமே.

அன்று அவர் அம்பறாத்தூணியில் அம்புகள் நிறைந்திருந்தன. ஏழு முறை கௌரவப் படைகளுக்குள் சென்று போரிட்டு புண்களுடன் மீண்டு சற்றே ஓய்வெடுத்து ஆவநாழியை நிறைத்தபின் அவர் களத்திற்கு வந்தார். அலம்புஷரின்

படைகளையும் அதன்பின் கேகயப் படைகளையும் எதிர்கொண்டு போரிட்டு பின்னடையச் செய்து திரும்பியபோது நேர்எதிரில் துரோணர் நின்றிருப்பதை கண்டார். எப்போதும் எத்தொலைவிலும் துரோணரின் அசைவை அவரால் முதற்கணத்திலேயே உணர முடியும். பெருந்திரளில் துரோணரன்றி பிற எவரையும் காணாதொழியும் நோக்கும் அவருக்குண்டு. அன்று துரோணர் இருளிலும் தனித்துத் தெரிந்தார். அவர் விழிகளின் சிறு மின்னை நோக்க இயன்றது. நாணொலி எழுப்பியபடி துருபதர் துரோணரை நோக்கி சென்றார்.

துரோணர் சலிப்புற்றவர்போல் தெரிந்தார். ஒவ்வொரு முறை துருபதரை நேரில் பார்க்கையிலும் நெடுநாள் பிரிவுக்குப் பின் அணுக்கமான ஒருவரை பார்க்கும் புன்னகை அவரிலெழ அதை அக்கணமே ஏளனமென மாற்றிக்கொள்வார். அவரை நகையாடும் சொற்கள் சிலவற்றை உதிர்ப்பார். எப்போதும் அவரை நோக்கி எழுப்பும் முதல் அம்பு துருபதரின் இடத்தோளை ஒரே புள்ளியில் வந்தறைந்து செல்லும். அவர்கள் குருகுலத்தில் சேர்ந்து பயிலும் காலத்தில் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்கையில் துரோணர் தன் வலக்கையால் அவர் இடத்தோளில் அறைவதுபோல் கைகாட்டுவார். அது ஒருவகை முகமன். அந்த அறையை மெய்யாகவே தோளில் உணர்ந்து துருபதர் சிரிப்பார். முதல் அம்பு தன் இடத்தோளில் கவசத்தில் மணியோசை என ஒலித்து உதிர்கையில் துருபதர் உளம்குன்றுவார். அதை உணர்ந்து அனைத்துச் சொற்களையும் திரட்டி தன்னை வஞ்ச விசை கொண்டவராக மாற்றிக்கொள்வார்.

போரிடுந்தோறும் பெருகுவது அவர்களின் சினம். மெல்லமெல்ல வெம்மைகொண்டு சிவக்கும் இரும்பென்று ஆவார் துருபதர். அவர் எழுந்து தாக்கத் தாக்க துரோணரின் புன்னகை மறையத் தொடங்கும். எங்கோ ஒருகணத்தில் ஓர் அம்பில் துரோணரின் விழிகளில் சீற்றம் எழுந்து உடனே அணையும். அதுவே தன் வெற்றி என்று துருபதர் உளமெழுவார். மீண்டும் மீண்டும் அந்தப் புள்ளியைத் தாக்கி சினமெழச்செய்ய முயல்வார். பலமுறை எழுந்து அணைந்த துரோணரின் சினம் மெல்லமெல்ல அனலாகும். அவர் தன் உதடுகளை உள்மடித்துக் கடிக்கும்போது அவர் எரியத் தொடங்கிவிட்டதை துருபதர் உணர்வார். பிறகு எழும் அனைத்து அம்புகளிலும் துரோணரின் சீற்றம் இருக்கும். ஆனால் அம்புகள் அவரை மெய்யான விசையுடன் வந்து அறையுந்தோறும் முகம் தளரத்தொடங்கும். விழிகள் அமைதிகொள்ளத் தொடங்கும். சில தருணங்களில் புன்னகைகூட அவர் உதடுகளில் எழும்.

அந்தப் புன்னகை தன்னை சீண்டுவதற்கே என துருபதர் எண்ணுவார். சீற்றம்கொண்டு தாக்கி மீண்டும் அவ்விழிகளில் சினம் எழுப்புவதற்கு முயல்வார். ஆனால் அவருடைய அம்புகள் பெருகுந்தோறும் துரோணரின் புன்னகை விரிந்துகொண்டே செல்லும். அவர் வாய்விட்டு நகைப்பதுகூட சில தருணங்களில் தெரியும். அது அவரை கொந்தளித்து எழச்செய்யும். அம்புகளால் துரோணரை அறைந்தபடி தாக்கு வளையத்தைக் கடந்து அருகணைவார். அவருடைய அம்புகளை மிக எளிதாக ஒழிந்தும் முறித்தும் களத்தில் நின்றிருக்கும் துரோணர் மிக இயல்பாக ஒரு தருணத்தில் திரும்பி பிறிதொரு இலக்கை நோக்கி அம்புவிட்டபடி செல்வார். உள்ளமும் ஆவநாழியும் ஒழிந்து துருபதர் நின்றிருப்பார்.

அம்முறை துருபதரின் நாணொலியைக் கேட்டதும் துரோணர் அதை எதிர்பாராததுபோல் திரும்பி நோக்கி எரிச்சலும் சீற்றமும் கொண்ட முகத்துடன் கைவீசி “விலகிச்செல், வீணனே. நான் அவ்வரக்கனை தேடிச் சென்றுகொண்டிருக்கிறேன்” என்றார். “நாம் மீண்டும் சந்திக்கப்போவதில்லை, துரோணரே. இம்முறை நம்மில் ஒருவரே மீளவிருக்கிறோம்” என்றபடி துருபதர் தொடர்ந்த அம்புகளால் துரோணரின் தேரை தாக்கினார். இயல்பாக எழுந்து அம்பு தொடுத்து துருபதரின் அம்புகளை முறித்து தெறிக்க வைக்கும் துரோணர் “விலகு! விலகிச்செல்! உன்னுடன் விளையாடுவதற்கு எனக்குப் பொழுதில்லை. என்னை களத்தில் வீழ்த்திய அவ்வரக்கனைக் கொன்று குருதிகொண்டே நான் மீள்வேன். வழி தடுக்காதே. உன்னைக் கொல்ல நான் விரும்பவில்லை. விலகு!” என்று கூவினார்.

அவர் கொண்ட அந்தப் பதற்றம் துருபதரை உவகைகொள்ளச் செய்தது. “ஆசிரியரே, என் கையால் இறந்தால் உங்களுக்கும் விடுதலை. இப்புவியில் உங்களைக் கட்டிவைக்கும் ஒரு சரடை அறுத்துவிடுகிறீர்கள். பிறப்பறுத்து விண்ணெழுவீர்கள்” என்றபடி உரக்க நகைத்து துரோணரை வில்லால் அறைந்தார். அந்த அம்புகளில் ஒன்று சென்று துரோணரின் நெஞ்சை அறைய சீற்றத்துடன் திரும்பி “அறிவிலி! அறிவிலிகளுக்கே உரிய நாணமின்மை கொண்டவன் நீ” என்று கூவியபடி அவர் தன் அம்புகளால் துருபதரை அறைந்தார். துரோணரின் அம்புகளில் இருந்த சினம் மேலும் மேலுமென துருபதரை கொந்தளிக்கச் செய்தது. ஆம்! ஆம்! ஆம்! என அவர் உள்ளம் பெருகி எழுந்தது. துரோணர் துருபதரின் கவசங்களை உடைத்தார். பிறிதொரு பேரம்பை எடுத்து “கடந்து செல்! இது என் இறுதிச்சொல்!” என்றார். “இறுதிக்கணத்தைக் கண்ட பின்னரே

இனி கடந்து செல்லப் போகிறேன்” என்றபடி அந்த அம்பை தன் அம்பால் முறித்தார் துருபதர். “உன் ஊழ் இதுவெனில் ஆகுக!” என்று சினத்துடன் சிரித்தபடி துரோணர் துருபதரை அம்புகளால் அறைந்தார்.

அந்த அம்புகள் வந்து தன்னைச் சூழ்ந்து தேர்த்தூண்களிலும் தேர்த்தட்டிலும் பதிந்து நின்று சிறகதிர ஒரு கணத்தில் துருபதர் உளம் மலைத்தார். அதன் பின் அவரால் அம்புகளை தடுக்க இயலவில்லை. அனைத்து திசைகளிலுமிருந்து வந்து அவர் தேர்த்தட்டை உடைத்து சிதறவைத்து எங்கும் நாணல் எனப் பெருகி நின்றன. கவசங்கள் சிதைந்தன. இருபுறத்திலிருந்தும் பாஞ்சாலப் படைத்தலைவர்கள் சிம்ஹறனும், கிரதனும், சம்புவும், கௌணபனும் வில்லேந்தி அம்பு பெய்தபடி வந்து அவருக்கு துணை நின்றனர். துரோணரின் அம்புகள் சம்புவையும் சிம்ஹறனையும் கொன்றுவீழ்த்தின. அப்பாலிருந்து சத்யஜித் பாய்ந்து வருவதை அவர் கண்டார். “நீ துணைவர வேண்டியதில்லை... செல்க!” என்று கூவினார். ஆனால் சத்யஜித் அம்புகளைத் தொடுத்தபடியே விரைந்து வந்தார். “செல்க! விலகிச்செல்க!” என்று துருபதர் கூவிக்கொண்டே இருந்தார்.

துரோணர் மேலும் மேலும் உருகி உருவழிந்து பிறிதொருவராக ஆகிக்கொண்டிருப்பதுபோல் தோன்றியது. அவருடைய அம்புபட்டு கிரதன் தேர்த்தட்டில் விழுந்தான். அரைக்கணம் அவனை நோக்கி அவர் திரும்புவதற்குள் இடப்பக்கம் கௌணபன் அலறி விழுந்தான். துருபதர் செயலற்று நின்றார். சத்யஜித் அவரை நோக்கி வந்துகொண்டிருக்க அவரை நோக்கி துரோணரின் வில் எழுவதை, அம்பு சென்று அவர் நெஞ்சை துளைத்து தேரிலிருந்து தூக்கி வீசுவதை துருபதர் கண்டார். “இளையோனே” என்று அலறியபடி அவர் தன் வில்லை எடுத்து

உடல் பற்றிஎரிவதுபோன்ற வெறியுடன் துரோணரை அம்புகளால் தாக்கினார். துரோணர் அந்த அம்புகளை தன் அம்புகளால் தடுத்து அவரை மெல்லமெல்ல பின்னடையச் செய்தார். துருபதர் தன் உடலெங்கும் தைத்து நின்றிருந்த அம்புகளுடன் தேரில் நின்று தள்ளாடினார். அவர் கவசத்திற்குள் வெம்மையுடன் ஊறிய குருதி வழிந்து கால்களை அடைந்து தேர்த்தட்டில் பரவி குளிர்ந்தது. அவர் கால் மாற்றியபோது குறடுகளில் வழுக்கியது.

துரோணரின் விழிகள் சுருங்கி கூர்கொண்டு துருபதர்மேல் நிலைத்திருந்தன. சினம்கொண்டு எழுந்து உச்சத்தில் இடமும்காலமும் மறந்து பின்னர் மெல்ல இறங்கி அச்சம்கொண்டு தனிமையை உணர்ந்து செயலற்றுக்கொண்டிருந்த துருபதரின் உள்ளம் அவ்விழிகளை அருகில் கண்டு எதிர்பாராதபடி களிப்படைந்தது. அவ்விழிகளில் இருந்த சினமும் வெறியும் அவர் ஒருபோதும் அறிந்ததல்ல. ஆசிரியரே, இதோ உங்களை பிறிதொருவராக்கிவிட்டேன். இனி உங்களை வெல்வது எளிது. என் அம்புகள் சென்றடையும் இலக்குகள் தெளிகின்றன. இந்தக் களத்தில் நான் உங்களை கொல்வேன். மெய், நீங்கள் நிகரற்ற வில்லவர். ஆனால் நீங்களும் கொல்லப்படக்கூடியவரே. ஏனென்றால் இதோ சினம்கொள்கிறீர்கள். இதோ எனது அம்புகள் உங்கள் ஆழத்தில் நீங்கள் கரந்து வைத்த அனைத்தையும் தேடி வருகின்றன.

அந்த உளஎழுச்சி மீண்டும் அவர் கைகளில் விசையை ஏற்றியது. துருபதர் அம்புகளால் அறைந்து துரோணரின் தோளிலைகளை உடைத்து தெறிக்கவிட்டார். நெஞ்சக்கவசத்தை உடைத்தார். துரோணரின் ஒவ்வொரு அம்பையும் விண்ணிலேயே முறித்தார். துரோணரின்

விழிகளில் அச்சம் மின்னிச் சென்றதைக் கண்டு இரு கைகளையும் விரித்து வெறிகொண்டு கூச்சலிட்டார். துரோணரின் கொடி உடைந்து மண்ணில் விழுந்தது. துரோணரின் புரவிகளில் ஒன்று அம்புபட்டு கனைத்து தலையை உதறியபடி நிலையழிய அவருடைய பாகன் தன் முதுகுக்கவசம் தெரிய குப்புற விழுந்து அதை இழுத்து தேரை நிலைமீட்க முயன்றான். அத்தருணத்தில் துருபதர் துரோணரின் ஆவக்காவலன் நெஞ்சில் அம்பால் அறைந்து அலறி பின்னால் விழச்செய்தார். திகைப்புடன் திரும்பிப்பார்த்த துரோணர் எடுத்த பேரம்பை அவர் கையிலேயே உடைத்து துண்டாக்கினார். துரோணர் அவர் தொடுத்த அடுத்த அம்பை ஒழியும் பொருட்டு தேர்த்தட்டில் முழங்கால் மடித்து அமர அவர் தன்முன் மண்டியிட்டு வணங்குவதுபோல் உணர்ந்து தன் அம்பால் அவர் தலைமுடி கட்டியிருந்த கொண்டையை வெட்டியெறிந்தார்.

துரோணர் பற்களைக் கடித்து உறுமியபடி அம்புகளை எடுத்து அவர் மேல் அறைய ஒவ்வொரு அம்பையாக விண்ணில் முறித்தபடி “இன்று குருதிகொள்வேன்! இன்று உங்கள் குருதிகொள்வேன்!” என்று துருபதர் கூவினார். துரோணரின் கைகள் நடுங்கின. அவர் அம்புகளை எடுத்து அறைந்துகொண்டே இருந்தார். அவருடைய அம்புகள் இலக்கிழப்பது பெருகிவந்தது. துருபதரின் அம்புகள் விசைகொண்டு இலக்கை சென்றடைந்தன. துரோணரின் நெஞ்சக் கவசத்தை உடைத்து மீண்டுமொரு அம்பால் துரோணரை அடிக்க நாணிழுத்தபோது துரோணரின் விழிகளை அருகிலெனக் கண்டார். அதில் இருந்த அந்நோக்குக்குரியவனை அவர் மிக நன்கு அறிந்திருந்தார். அவர் கைகள் ஒருகணம் தளர்ந்தன.

அவரிடம் துர்வாசர் சொன்னார் “பகைமை ஒரு நோன்பு. வஞ்சம் ஒரு தவம். அதனூடாக நாம் தெய்வங்களை விரைந்து அணுக இயலும். அசுரர்கள் அத்தவத்தினூடாகவே தெய்வத்தை அணுகி முழுமை பெற்றார்கள் என்று தொல்கதைகள் சொல்கின்றன. துருபதனே, வாழ்நாளெலாம் நீ உன் முதன்மைப் பகைவனையே நோற்றிருக்கிறாய். ஒருநாள் ஒருகணத்தில் நீ அவனென்றாவாய். அன்று விடுபடுவாய்.” குடிலின் தரையில் ஓங்கி அறைந்தபடி துருபதர் எழுந்தார். “இல்லை, இது என்னை சிறுமைப்படுத்தும் சொல். நான் வெறுக்கும் ஒருவனாக ஆவதல்ல எனது நோன்பு” என்று கூவியபடி கைகளை விரித்து அசைத்தார். “நான் கொன்று அழிப்பதற்கு வஞ்சம் உரைத்தவன். அவரில் ஒருதுளியும் எஞ்சலாகாதென்று எழுந்தவன்.”

துர்வாசர் புலித்தோல் இருக்கையில் மலரமர்வில் அமர்ந்திருந்தார். அவர் முகத்தில் எப்போதுமிருக்கும் அந்த கசப்பு கலந்த புன்னகை. அது கசப்பு அல்ல என்று துருபதர் அறிந்திருந்தார். அது ஏளனம். அவருடைய முகத்தசைகளின் தொய்வால் அது கசப்பெனத் தோற்றம் கொண்டது. எக்கணமும் பெருஞ்சினமாக வெடித்தெழும் ஒவ்வாமையிலிருந்து எழுவது அது. விடுபட்ட பின்னரும் மானுடர் நடுவே வாழ்வதன் வெளிப்பாடு. “நீங்கள் என்னை சினமூட்டும் சொல் அது என்று அறிந்திருக்கிறீர்கள். என்னை சிறுமை செய்கிறீர்கள்” என்றார் துருபதர். “எவரையும் சினமூட்டி நான் அடையவேண்டியதொன்றில்லை. எங்கும் உண்மையெதுவோ அதைக் கூற கடமைப்பட்டவன் நான். இங்கிருந்து செல்வது வரை...” என்று துர்வாசர் கூறினார். “நீ முதல் நாள் முதல் கணம் அவரைப் பார்த்ததும் பெருங்காதல் கொண்டாய். அவருக்கு அடிபணிந்து ஏவல் புரிந்தாய். அவரே என உன்னை எண்ணிக்கொண்டாய். அவரைச் சென்றடைய முடியும் என்று

நம்பியதனால் அவருக்கு நிழலென்றானாய். அந்த ஒருமையுணர்வால் அவரிடமிருந்து அனைத்தையுமே பெற்றுக்கொள்ள உன்னால் இயன்றது.”

“பின்னர் விடைகொண்டு வந்து முடிசூட்டிக்கொண்ட பின்னர் நீ ஒன்றை அறிந்தாய், நீ அவரல்ல என்று. தன் கலையின் பொருட்டு விழைவுகளை ஒடுக்கி தவமிருந்தவர் அவர். உன் குருதியின் தேவைகளை வென்று உன்னைக் கடக்க உன்னால் இயலவில்லை. ஆகவே எஞ்சிய நாளில் ஒவ்வொரு செயல் வழியாகவும் நீ அவரை துறந்தாய். உன்னிலிருந்து குருதியும் கண்ணீருமாக அவரை பிடுங்கி அகற்றினாய். அகற்ற அகற்ற எஞ்சுவதைக் கண்டு சீற்றம்கொண்டாய். இறுதியாக அவர் உன் முன் வந்து நின்றபோது அவரை சிறுமைப்படுத்தி துரத்தி உன்னை விடுவித்துக்கொண்டாய். அத்துடன் நீ முற்றிலும் உன்னில் எஞ்சி உன் உடல் கூறுவதை இயற்றி உன் மூதாதையர்போல் உழன்று உங்களுக்கு மட்டுமே உரிய விண்ணுலகை அடைவாய் என்று எண்ணினாய்.”

துருபதர் கால்தளர்ந்து மீண்டும் அமர்ந்தார். அவர் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. கைகளில் தலையை ஏந்திக்கொண்டார். எழாக் குரலில் “அது அரசருக்கு உகந்த வழியே. அப்பாதையில் சென்று வென்ற பலர் உண்டு. ஆனால் அரசே, நீ ஒரு அடி முன்னெடுத்து வைத்துவிட்டாய். ஒரு சொல் கூடுதலாக உரைத்துவிட்டாய். அந்த ஒரு துளி ஒரு விதையென எழுந்து பெருகி உன்னை எதிர்த்து வந்தது. நீ அவர்களுக்கிழைத்த வஞ்சம் அவர் உன்னை மறக்கலாகதென்பதற்காக அல்லவா? உன்னை ஒருபொருட்டெடன எண்ணாது எங்கோ தன் விற்தவத்துடன் அவர் தனித்திருந்தார் என்று உணர்ந்தமையால் அல்லவா? ஒரு குவளை பால்

மட்டும்தானா நான் உனக்கு என்று நீ அவரிடம் கேட்டாய்” என்றார் துர்வாசர்.

துருபதர் உரத்த குரலில் “இல்லை. இவ்வண்ணம் எதையும் விளக்கிக்கொள்ள இயலும். இதுவல்ல உண்மை. உண்மையை நீங்கள் பொய்யினூடாக சமைத்துக்கொள்ள எண்ணுகிறீர்கள்” என்றார். துர்வாசரின் விழிகள் அவர் மீது அசையாது பதிந்திருந்தன. துருபதர் மட்டும் கேட்கும் குரலில் அவர் சொன்னார் “எங்கோ அவர் உன்னை எண்ணிக்கொண்டிருக்கிறார் என்பதை நீ தனிமையில் உணர்ந்தாய். உன் படையெடுப்புகளில், அரசுசூழ்தல்களில், காமங்களில், சினங்களில் நாளெல்லாம் கழித்த பின்னர் உனக்கு மட்டுமென எஞ்சும் சிறு பொழுதில் முதலில் உன் எண்ணத்திலெழுவது அவர்தான். உன்னை எந்நிலையிலும் அவர் மறக்க இயலாதென்ற நிறைவை நீ ஒருதுளியேனும் உணர்ந்ததில்லையா? உன் வஞ்சம் பிறிதெங்கிருந்து எழுந்தது?”

மெல்ல நகைத்து துர்வாசர் சொன்னார் “அவர் பேருருக்கொண்டு எழுந்து உன்னை வென்று இழுத்து தன் காலடியில் இட்டார். நீ அளித்ததையே உனக்கு திருப்பி அளித்தார். எஞ்சிய வாழ்நாளெல்லாம் நீ தன்னை நினைக்கும்படி செய்தார். துருபதனே, நீ அர்ஜுனனால் அழைத்துச் செல்லப்பட்டு அவர் காலடியில் வீசப்பட்டாய். கையூன்றி நிமிர்ந்து அவர் விழிகளை பார்த்தபோது நீ அங்கு ஒருவனை கண்டாய். யார் அவன்? அவனுக்கெதிராகத்தான் நீ வஞ்சம் கொண்டாய். மைந்தரை ஈன்று வாழ்நாள் நோன்பொன்றை மேற்கொண்டாய். உன் படைக்கலப்புரையில் அத்தனை அம்புகளும் கூர்கொள்வது அவன் ஒருவனுக்காக அல்லவா?”

துரோணரின் அம்புகள் வந்துவந்து அறைந்து துருபதரை தேர்த்தட்டில் வீழ்த்தின. தொடையிலும் தோளிலும் இடையிலும் அம்புகள் தைக்க அவர் தேர்த்தட்டில் கால்மடித்து விழுந்து கையூன்றி எழமுயன்று குருதியில் வழுக்கி மீண்டும் எழுந்து அக்கண்களில் தெரிந்தவனை திகைப்புடன் பார்த்துக்கொண்டிருந்தார். அவனா? அவன்தானா? இறுதிப் பேரம்பை எடுத்து நாணேற்றி இழுத்து அவரை நோக்கிய துரோணர் துருபதரின் விழிகளில் பிறிதொருவனை கண்டுகொண்டார். நீயா என்று அவர் உதடுகள் பிரிந்து சொல்லெழுவதை துருபதர் கண்டார். துரோணர் தன் முழு விசையாலும் உடலை இழுத்து கையின் ஆற்றலென்றாக்கி நாணிழுத்து அம்பை செலுத்தினார். சீறிவரும் அந்த அம்பின் பிறை வளைவின் ஒளியை துருபதர் கண்டார். அது தன் தலையை அறுத்து வீசுவதை உணர்ந்தார். தன் தலை தேர்த்தட்டில் வந்து அறைவதன் ஓசையை அவர் கேட்டார். தன் உடல் சற்று அசைந்து மறுபக்கமாக விழுந்ததை, இரு கைகளும் விதிர்த்து வில்லையும் அம்பையும் கைவிடுவதை பார்த்தார். ஒருகணம் தன்னுடலையும் தலையையும் மாறி மாறி நோக்கிய பின் உடல் தளர்ந்து வில் தாழ்த்தி துரோணர் தேர்த்தட்டில் அமர்வதையும் நோக்கினார்.

அத்தருணத்தில் மறுபக்கம் விராடர் நாணோசை எழுப்பியபடி வந்து துரோணரை எதிர்கொண்டார். “கீழ்மகனே, என்னோடு போரிடு… நில்… என்னுடன் போரிடு” என்று விராடர் கூவினார். “என்னை கொன்றேன் என எண்ணாதே… இறந்தாலும் அழியாதது என் வஞ்சம்… நான் மீண்டும் வருவேன்” என நகைத்தார். துரோணர் திகைப்புடன் திரும்பி வெட்டுண்டு கிடந்த துருபதரின் தலையில் திறந்திருந்த விழிகளை நோக்கினார். அவ்விழிகளை சந்தித்து துருபதர் புன்னகைத்தார்.

விராடர் “எடு உன் வில்லை… நான் உன் குருதிக்கென வந்தவன்… இதோ இங்கு கிடக்கும் அத்தனை உடல்களில் இருந்தும் நான் எழுவேன்… எடு வில்லை!” என்று கூவியபடி அம்புகளை தொடுத்தார். அவருடைய கைகள் நடுங்கிக்கொண்டிருந்தன. மீதூறிப்போன மதுமயக்கும் துயில்நீப்பும் கலந்து அவரை பித்தன் என்றே ஆக்கியிருந்தன.

துரோணர் தன் ஆவநாழியிலிருந்து பிறையம்பு ஒன்றை எடுத்து குறிபார்க்காமலேயே தொடுத்து விராடரின் தலையை கொய்தெறிந்தார். தலை நிலத்தில் விழ விராடரின் உடல் நின்று அசைந்து பக்கவாட்டில் சரிந்தது. அதை திரும்பிப்பார்க்காமல் “செல்க! செல்க, அறிவிலி… விரைந்துசெல்க!” என்று துரோணர் பாகனை ஏவினார். பின்னர் வில்தாழ்த்தி கைகளில் தலையை வைத்து விழிமூடி அமர்ந்தார்.

# கார்கடல் - 76

திருஷ்டத்யும்னன் விராடர் களம்பட்ட செய்தியைத்தான் முதலில் அறிந்தான். காலைக் கருக்கிருளுக்குள் அனைத்து ஒளிகளும் புதைந்தடங்கின. கைகளால் தொட்டு வழித்தெடுத்துவிடலாம் என்பதுபோல் இருள் சூழ்ந்திருந்த அப்பொழுதில் படைவெளியில் இருந்த ஒவ்வொருவரையும்போல எங்கிருக்கிறோம் என்ன செய்கிறோம் என்பதையே மறந்தவனாக அவன் இருந்தான். படைக்களம் முழுக்க வெம்மையான ஆவி நிறைந்திருந்தது. குருதியிலிருந்தோ மானுட உடல்களிலிருந்தோ எழுவது. தெற்கிலிருந்து சிற்றலைகளாக அடித்த காற்று குளிராக

இருந்தது. அக்குளிரைக் கடந்து சென்றபோது வெப்பம் பிறிதொரு அலையாக வந்து செவிமடல்களை தொட்டது. எங்கும் நிறைந்திருந்த முழக்கமும் குருதிவீச்சமும் கலந்து அனைத்துப் புலன்களையும் நிறைத்திருந்தன.

குருதிவீச்சத்தை குளிராக உடலால் உணரமுடியும் என்பதுபோல், ஏற்ற இறக்கமின்றி கார்வை கொண்டு சூழ்ந்திருந்த ஓசையை இருளலைகளாக விழிகளால் பார்க்க முடியுமென்பதுபோல் தோன்றியது. தேர் வளைவொன்றில் திரும்பியபோது நோக்கும் நிலையும் முரண்பட திருஷ்டத்யும்னன் தடுமாறி தேர்த்தூணை ஒரு கையால் பற்றிக்கொண்டு வயிறு குமட்டி வாயுமிழ்ந்தான். இருமுறை உடல் துள்ள வாயுமிழ்ந்த பின்னர் கண்களை மூடி திறந்து எழுந்து நின்றபோது விரைந்து அணுகி வந்த வீரன் “இளவரசே, விராடர் களம்பட்டார்” என்றான். அவன் வாய்க்குள் கசப்பு நிறைந்திருந்தது. கண்களை இருமுறை மூடித்திறந்து “நன்று” என்றான். அச்சொல்லிலிருந்த பொருத்தமின்மையை உணர்ந்து “அவருக்கு விண்ணுலகம் அமைக! மைந்தருடன் அங்கு மகிழ்ந்திருக்கட்டும்!” என்றான்.

“அங்கே முரசுகள் முழங்கிக்கொண்டிருக்கின்றன. ஆனால் நமது படைகளிலிருந்து ஒற்றை வாழ்த்தொலி போலும் எழவில்லை. ஆகவேதான் படைத்தலைவர் தங்களைப் பார்க்க அனுப்பினார்” என்று வீரன் சொன்னான். திருஷ்டத்யும்னன் எரிச்சலுடன் “படைகள் என்ன நிலையிலிருக்கின்றன என்று பார்த்தாயல்லவா? எவரும் தன்னிலையில் இல்லை. இவர்களிடம் எந்த ஆணையையும் இப்போது நான் விடுக்க இயலாது. செல்க!” என்றான். பிறிதொருமுறை குமட்டி உமிழ்ந்துவிட்டு நெஞ்சு எரிவதை உணர்ந்து மெல்லத் தணிந்து

“சரி, சிறப்பு முரசொலி முழங்க ஆணையிடுகிறேன்” என்றான். அவன் தலைவணங்கித் திரும்பியபோது பிறிதொரு வீரன் புரவியில் அணுகுவதைக் கண்டான். தன் ஏவலரை கைசுட்டி அழைத்து “மறைந்த விராட அரசருக்காக சிறப்பு முரசுகள் முழங்கட்டும். நமது வீரர்கள் சிலரேனும் அவருக்கு வாழ்த்து முழக்கமிடச் சொல்க!” என்றான்.

ஏவலன் தலைவணங்கி புரவியில் திரும்பிச்செல்ல வீரன் அருகணைந்து இறங்கி “அரசே, பாஞ்சாலத்து அரசர் விண்ணடைந்தார்” என்றான். திருஷ்டத்யும்னன் சில கணங்களுக்குப் பின் குமட்டி அக்கசப்பை நாவெங்கும் உணர்ந்தபடி “யார்? எங்கு?” என்றான். “சற்றுமுன்னர் அவர் ஆசிரியர் துரோணருடன் பொருதினார். துரோணரை ஏழுமுறை தேர்த்தட்டில் விழவைத்தார். வென்றுவிடுவார் என்றெண்ணிய கணத்தில் தெய்வங்கள் பிறிதொன்று கருதின” என்று வீரன் சொன்னான். திருஷ்டத்யும்னன் காறி உமிழ்ந்துவிட்டு அணுக்க வீரனை நோக்கி நீர் என கைகாட்டினான். “செல்க, நானும் வருகிறேன்!” என்றான். வீரன் விழிகளைக் கண்டதும் அவன் எண்ணுவதென்ன என்று புரிந்துகொண்டு தன் வில்லையும் அம்பையும் எடுத்தபடி சீற்றத்துடன் “எந்தையைக் கொன்ற அம்முதுமகனை இக்களத்திலேயே கொல்வேன். அவன் குருதியாடி மீள்வேன்!” என்றான்.

“பொழுது எழவிருக்கிறது” என்று வீரன் சொன்னான். அவன் என்ன எண்ணினான் என்பது முகத்தில் தெரியவில்லை. சற்று முன் விராடருக்காக தான் உரைத்த சொற்களை நினைவுகூர்ந்து திருஷ்டத்யும்னன் அகத்தில் ஒரு தளர்வை உணர்ந்தான். “தந்தை விண்ணேகும்பொருட்டு முரசுகள் முழங்கட்டும். பாஞ்சாலத்து வீரர்கள் வாழ்த்தொலி எழுப்ப

வேண்டுமென்று நூற்றுவர் தலைவர் அனைவருக்கும் தனித்தனியாக ஆணை செல்லட்டும்” என்றான். தலைவணங்கி வீரன் சென்றதும் தேரை துருபதர் விழுந்த இடத்திற்குச் செலுத்தும்படி பாகனிடம் சொல்லிவிட்டு மெல்ல தேர்த்தட்டில் அமர்ந்தான். மீண்டும் நினைத்துக்கொண்டு எழுந்து தன்னைத் தொடர்ந்து வந்த ஏவலனிடம் “மூத்தவர் சிகண்டிக்கு செய்தி அறிவிக்கப்பட்டுவிட்டதா? அவர்தான் இனி நம் குடிக்கு தலைவர்” என்றான். ஏவலன் தலைவணங்கி திரும்பி விரைந்து புரவியிலேறிச் சென்றான்.

திருஷ்டத்யும்னன் மீண்டும் அமர்ந்தான். உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்தமையால் அமர இயலவில்லை. மீண்டும் எழுந்து நின்றான். எஞ்சிய படைவீரர்கள் எவருடன் எதற்கு பொருதுகிறோம் என்றறியாமல் போரிட்டுக்கொண்டிருந்தார்கள். இயல்பாக விழிதிருப்பி நோக்கியபோது அது போர் என்றே தோன்றவில்லை. கூத்தில் நிகழும் போர்நடிப்பு போலத் தெரிந்தது. அவர்கள் இருக்கும் அவ்வுலகில் காலம் அழுத்திச் சுருட்டப்பட்டிருக்கிறது. பொழுது சென்று கொண்டிருப்பதை அறியாதவர்கள்போல என்றென்றும் அவ்வண்ணமே என நின்று பொருதிக்கொண்டிருப்பவர்கள்போல் தோன்றினார்கள். அவன் தலை சுழன்று ஆழத்தில் விழும் உணர்வை அடைந்தான். மீண்டும் தொடையில் கையூன்றி தேரிலிருந்து வெளியே வாயுமிழ்ந்தான். இப்போர் இன்று முடிவதற்கு ஒரு வழியே உள்ளது, இக்களத்திற்கு வெளியிலிருந்து ஏதேனும் நிகழவேண்டும். தெய்வ ஆணைபோல. இறுதியில் தெய்வங்களிடம்தான் செல்லவேண்டியிருக்கிறது.

திருஷ்டத்யும்னன் துருபதரின் படுகளத்திற்குச் சென்றுசேர்ந்தபோது அங்கு பாஞ்சால வீரர்கள் பெரிய வளையமாகச் சூழ்ந்து நின்றிருந்தனர். ஆனால் எவரும் வாழ்த்தொலி எழுப்பவில்லை. தேர் அணுகும்போது திருஷ்டத்யும்னன் எழுந்து தேர்த்தூண்களை பற்றியபடி நின்று பார்த்தான். அவர்கள் ஒவ்வொருவரின் விழிகளிலும் விந்தையானதோர் இளிப்பு தென்பட்டது. முன்பொருமுறை ஐந்தாவது பிரயாகையின் கரையில் அடர்காட்டுக்குள் இருந்த ஆலயம் ஒன்றிற்கு அவன் தந்தையுடன் சென்றிருந்தான். தந்தை பிறர் அறியாத கொடுந்தெய்வங்களுக்கு பலிபூசனை செய்துகொண்டிருந்த காலம் அது. எழுயுகத்தின் தலைத்தெய்வமாகிய கலியின் பெண்வடிவமான கலிகையின் ஆலயம் அது என்று மிகப் பின்னர் அவன் அறிந்துகொண்டான்.

கல்லாலும் செங்கல்லாலும் கட்டப்பட்ட நீள்வட்ட வடிவமான அந்த ஆலயத்தின் கருவறைக்குள் கலிகை முழங்காலளவு உயரமான கரிய கற்சிலையாக அமர்ந்திருந்தாள். காகக்கொடியும் கழுதைஊர்தியும் வெறித்த கண்களும் சொல்லொன்று எழும்பொருட்டு சற்றே திறந்த உதடுகளுமாக. அந்த வெறிப்பில் ஒரு புன்னகை இருப்பதாகத் தோன்ற அவன் நடுங்கி அருகே நின்றிருந்த இளைய தந்தை சத்யஜித்தின் ஆடையை பற்றிக்கொண்டான். அவர் தன் கைகளால் அவனை முழங்காலொடு சேர்த்து “வணங்குக, மைந்தா!” என்றார். அவன் கைகூப்பி வணங்கியபின் விழிமூடிக்கொண்டான். பின்னர் திறந்தபோது மேலும் முகங்களைக் கண்டான்.

அந்த ஆலயத்திற்குச் சுற்றும் நூற்றெட்டு பெருஞ்சிலைகள் இருந்தன. அவர்கள் கலிகை அன்னையின் ஊர்திகளென மண்ணிலெழப்போகும் அரசர்கள் என்று அமைச்சர் சுமந்திரர்

சொன்னார். அவர்கள் கலிதேவனின் படைத்தலைவர்கள். ஒவ்வொரு சிலையும் ஒவ்வொரு விரல் முத்திரை காட்டிக்கொண்டிருந்தது. ஒன்றென்றும் இரண்டென்றும் மூன்று என்றும். பேரழிவென்றும் வெறுமையென்றும், அனலென்றும் புனலென்றும். ஆனால் அனைத்து விழிகளும் வெறித்து உள்ளிருக்கும் மையத்தெய்வத்தின் அதே ஏளன நகைப்பை கொண்டிருந்தன. ஒவ்வொரு முகத்திலும் அந்தச் சொல் இருப்பதை திருஷ்டத்யும்னன் கண்டான். தன் உளம் குழம்பி நிகழ்வதும் கனவும் ஒன்றுடன் ஒன்று கலந்து பிறிதொரு உலகில் இருப்பதை அவன் நெடுநேரமாக உணர்ந்துகொண்டிருந்தான். எனினும் அவ்விழிகளின் வெறிப்பும் உதடுகளின் இளிப்பும் சித்தத்தால் மோதி மாற்ற முடியாத வெளியுண்மைகள் என்றே தோன்றியது.

அவன் தேரிலிருந்து இறங்கியதும் அனைத்துப் படைகளும் விழிதிருப்பி அவனை பார்த்தன. எவரும் வாழ்த்துரைக்கவில்லை. அனைத்துக் கைகளிலும் படைக்கலங்கள் எழுந்தும் நீட்டியும் இருந்தன. அவன் செல்வதற்காக ஏவலர்கள் அவ்வீரர்களை உந்தி வழி உருவாக்கினர். அவன் எவரென்றே அவர்கள் உணரவில்லை என்று தோன்றியது. இடைவெளி வழியாகச் சென்று நோக்கியபோது வெறுந்தரையில் துருபதரின் உடல் குப்புறக் கிடந்ததைக் கண்டான். மண்ணை ஆரத்தழுவ முயல்வதுபோல. அப்பால் அவரது தலை அவ்வுடலுக்கு தொடர்பற்றதுபோல அண்ணாந்து வானை வெறித்துக்கொண்டிருந்தது. உதடுகள் விரியத் திறந்து, பற்கள் தெரிய, நகைப்பு சூடியிருந்தது. சற்று அப்பால் விராடரின் உடல் கருக்குழவிபோல் ஒருக்களித்து முழங்கால் மடித்து நெஞ்சோடு சேர்த்து சுருண்டுகிடந்தது. இரு

கைகளும் மடித்து மார்பில் வைக்கப்பட்டிருந்தன. அவருடைய தலை மண்ணை முத்தமிடுவதுபோல் குப்புறக் கிடந்தது.

அங்கிருந்த அனைவரும் அவ்விரு உடல்களையும் மகிழ்ந்து நோக்கிக்கொண்டிருப்பதாக தோன்ற திருஷ்டத்யும்னன் திரும்பி நோக்கி சீற்றத்துடன் "இங்கே ஏவலர்கள் எவருமில்லையா? உடல்களை முறைப்படி எடுத்து வைக்க தெரிந்தவர்கள் எங்கே?" என்றான். முதிய ஏவலன் ஒருவன் "ஆணைகளை எவரும் பிறப்பிக்கவில்லை" என்றான். அவன் விழிகளை பார்த்தபோது அங்கும் அதே வெறிப்பும் இளிப்பும் தெரிய திருஷ்டத்யும்னன் உளம் நடுங்கினான். படைத்தலைவன் "இங்கே ஆயிரத்தவர் தலைவன் யார்?" என்றான். அப்பால் நின்ற புரவியிலிருந்து கூடி நின்றவர்களை விலக்கி உள்ளே வந்த படைத்தலைவன் "வணங்குகிறேன், இளவரசே. என் பெயர் கூர்மன், இங்கு ஆயிரத்தவர் தலைவன்" என்றான். "தந்தையின் உடல் முறைப்படி தென்னிலைக்கு கொண்டுசெல்லப்படட்டும். விராடரின் படைத்தலைவர் ஒருவரை அழைத்து வந்து அவர்களின் முறைப்படி அவ்வுடலையும் தெற்கே கொண்டுசெல்ல ஒருக்கங்கள் செய்க!" என்று திருஷ்டத்யும்னன் சொன்னான்.

கூர்மன் "மூத்தவர் சிகண்டிக்கு செய்தி அறிவித்துவிட்டோம். இன்னும் சற்று நேரத்தில் அவர் இங்கு வருவார் என்று சொல்லப்பட்டிருக்கிறது" என்றான். "எனில் நன்று" என்று சொன்ன பின் திருஷ்டத்யும்னன் களைப்புடன் நீள்மூச்சுவிட்டு கால்களை நீட்டி வைத்து தன் தேரை நோக்கி நடந்தான். தேரின் பிடியைப்பற்றி உடலைத் தூக்கி தேர்த்தட்டு வரை கொண்டுசெல்ல அவனால் இயலவில்லை. மூன்று முறை கால்களால் எம்பியும் உடலின் எடைமிகுந்து அவனால்

மேலெழ இயலவில்லை. பின்னர் முழு மூச்சையும் திரட்டி தேரிலெழுந்து அமர்ந்தான். “செல்க!” என்று அவன் சொன்னான். அவன் எண்ணத்தை அறியாமல் தேர்ப்பாகன் திரும்பிப்பார்த்தான். “அரசரிடம் செல்க, மூடா!” என்று திருஷ்டத்யும்னன் உரக்க கூவினான். “அறிவிலி! ஒவ்வொன்றையும் சொல்லித் தெரியவேண்டுமா உனக்கு?” என்று கைகளை வீசி உடைந்த குரலில் கூச்சலிட்டான்.

தேர் எழுந்து விசைகொண்டு காற்று அவன் முகத்தில் மோதியபோது மீண்டும் ஆறுதல் அடைந்து தேர்த்தட்டில் அமர்ந்தான். உடலெங்கும் வியர்வை பூத்திருந்தது. இரு கைகளாலும் நெற்றியை பற்றிக்கொண்டபோது இரு புழுக்கள் ஒட்டியிருப்பதுபோல் இருபுறமும் நரம்புகள் அதிர்வதை உணரமுடிந்தது. கண்களை மூடியதும் குருதிக்குமிழிகள் வெடித்துச் சுழன்றன. உடலெங்கும் நரம்புகள் துடித்து பின்னர் மெல்ல அசைவழிந்துகொண்டிருந்தன. அவன் ஒற்றைச் சொல்லொன்றை சென்று பற்றிக்கொண்டான். அச்சொல் என்னவென்று அவன் அறியும்முன்னரே சித்தம் முழுதறிந்திருந்தது. தேர் உலுக்கலுடன் நின்று “அரசே! இளவரசே!” என்று பாகன் அழைத்தபோதுதான் அவன் தன்னிலை மீண்டான். எழுந்து கையுறைகளை இழுத்துவிட்டபடி படிகளில் கால் வைத்து இறங்கி யுதிஷ்டிரரின் தேரை நோக்கி சென்றான்.

யுதிஷ்டிரரின் தேரைச் சூழ்ந்து பாஞ்சால படைவீரர்கள் காவல் நின்றனர். அவர் இரு கைகளையும் வீசி ஆணைகளைக் கூவிக்கொண்டிருந்தார். அவரது ஆணைகள் எவையும் முழவொலிகளாகவோ கொம்பொலிகளாகவோ ஒளியசைவுகளாகவோ மாறி அங்கிருந்து எழுந்து பரவவில்லை

என்பதை அவர் உணரவில்லை. திருஷ்டத்யும்னன் அருகே சென்று தலைவணங்கினான். அவனை திரும்பிப் பார்த்து "என்ன நிகழ்கிறது?" என்று யுதிஷ்டிரர் கேட்டார். அவர் செய்தியை அறிந்திருக்கவில்லை என்று உணர்ந்து "விராடர் களம்பட்டார்" என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். பின்னர் "எந்தையும் சற்று முன் துரோணரால் கொல்லப்பட்டார்" என்றான். அச்செய்தி யுதிஷ்டிரரில் எந்த மாற்றத்தையும் உருவாக்கவில்லை. அவருடைய உள்ளம் அத்தருணத்திற்குரிய சொற்களைத் தேடி உழல்வதை அவனால் விழிகளில் காண முடிந்தது. "எந்தை பல்லாண்டுகளுக்கு முன் எடுத்த வஞ்சத்தை நிகழ்த்தினார். களத்தில் துரோணரை மண்டியிட வைத்தார். அதன் விளைவாக தன்னுயிர் அளித்தார்" என்று அவன் சொன்னான்.

அதற்குள் யுதிஷ்டிரர் உரிய சொற்களை கண்டடைந்திருந்தார். "ஆம், இப்பிறவியின் நோக்கத்தை நிறைவேற்றிவிட்டார். விழைந்ததை நோக்கி செல்வதென்பது ஒரு நோன்பு. அவர் வாழ்வு நிறைவடைக! உளமகிழ்வுடன் அவர் விண்ணேகுக! அங்கு மூதாதையருடனும் மைந்தருடனும் மகிழ்ந்திருக்கட்டும் அவர்" என்றார். திருஷ்டத்யும்னன் "மெய், அங்கு இளையோரும் மைந்தரும் முன்னதாக சென்று அவருக்காக காத்திருக்கிறார்கள்" என்றான். அச்சொற்களில் ஏளனம் உள்ளதா என்று உடனே அவனுக்குத் தோன்றியது. யுதிஷ்டிரர் அத்தகைய முறைமைச் சொற்களில் முழுதுளத்தால் ஈடுபடுபவர், அவருக்கு அவற்றின் உணர்வுகளில் ஐயமெழுவதில்லை. "விராடரும் நிறைவடைந்தார். இங்கு அவர் மைந்தர் தங்களை ஈந்து நம் வெற்றிக்கு வழிகோலினர். மைந்தரின் இறப்புக்கு வஞ்சம் தீர்க்கும் பொருட்டே அவர்

வாழ்நாள் கொண்டிருந்தார். அவரும் விண்ணில் மைந்தருடன் அமர்ந்திருக்கட்டும்” என்றார்.

திருஷ்டத்யும்னன் “அவர்கள் இருவரையும் தென்னிலைக்கு கொண்டுசெல்ல ஆணையிட்டுவிட்டேன்” என்றான். தென்னிலை எனும் சொல் யுதிஷ்டிரரை தொட்டு உலுக்க அவர் உரத்த குரலில் “என் மைந்தனை தென்னிலைக்கு கொண்டு சென்றிருக்கிறார்கள். பதினெட்டு பேர் அவனுடலை சுமந்துகொண்டு சென்றார்கள் என்று சற்றுமுன் ஏவலன் சொன்னான். என் குடியின் முதல் மைந்தன். அவன் குருதிக்கு அதோ படைகொண்டு வந்திருக்கும் அக்கீழ்மகன்கள் மறுமொழி சொல்லியாகவேண்டும். அவர்கள் தங்கள் குருதியால் தங்கள் கொடிவழிகளின் குருதியால் அதற்கு நூறு முறை நிகரீடு செய்யவேண்டும்” என்று கூவினார். பதறும் கைகளை நீட்டி “செல்க! அங்கன் இன்றே களத்தில் விழுந்தாகவேண்டும்!” என்றார்.

திருஷ்டத்யும்னன் “அவரை நமது படைகள் சூழ்ந்துகொண்டிருக்கின்றன” என்றான். “சூழ்ந்தால் மட்டும் போதாது. ஒவ்வொரு கணமும் எனக்கு செய்தி வந்தாகவேண்டும் என்று சொல்லியிருக்கிறேன். அவன் இக்களத்தில் கொல்லப்பட்டாகவேண்டும். இக்களத்தில் அவன் குருதியை என் விழிகளால் நான் பார்த்தாகவேண்டும். இது என் வஞ்சினம்! என் தெய்வங்களின் மேல் தொட்டு நான் ஆணையிடும் சொல் இது” என்றார். கண்ணீர் வழிய உடல் துடிக்க கைகளை வீசி “என் அன்னை இக்கணம் எவ்வண்ணம் உணர்வார் என்று என்னால் அறியமுடிகிறது. அவர் தொட்டணைத்து நெஞ்சோடு சேர்த்து இன்சொல் உரைத்த முதல் மைந்தன் இடும்பன். அவனைக் கொன்றவன் எங்கள்

குடிக்கு ஒருபோதும் அணையாத அனலொன்றை அளித்திருக்கிறான். அவன் அதற்கு ஈடு சொல்லியாக வேண்டும்…” என்றார். “செல்க! போர் தொடர்க! செல்க!” என்று கூச்சலிட்டார்.

திருஷ்டத்யும்னன் தலைவணங்கி தன் தேரை களம் நோக்கி திருப்ப ஆணையிட்டபோது தன் முன்னிருந்த தேர்த்தூணின் இரும்புக் கவச வளைவில் ஒரு மெல்லிய ஒளியை பார்த்தான். அங்கு வெவ்வேறு ஒளிகள் உலாவிக்கொண்டிருந்த போதிலும் கூட அதன் மின்னை பிறிதொன்றென அவன் உள்ளம் அறிந்தது. ஒரு சிறு பறவை சிறகடித்தெழுந்தது என தோன்றியது அது. திரும்பி வானை நோக்கியபோது அது புலரியின் முதற்கதிர் என்று உணர்ந்தான். தொலைவில் புலரியை அறிவித்து முரசுகள் முழங்கத் தொடங்கின. அன்று புலரிக்கு முன்னர் எழவேண்டிய முதற்காற்று வீசவில்லை என்று நினைத்துக்கொண்டான். கொடிகள் ஓய்ந்து கிடந்தன. பெரும்பாலான படைவீரர்கள் விழுந்து துயின்றுகொண்டிருந்த களத்தில் புலரிமுரசு எழுப்பிய ஒலி வழிதவறியதென அலைந்தது.

அதை எதிர்பார்த்திருந்தவர்கள்போல பாண்டவர் தரப்பிலும் கௌரவர் தரப்பிலும் படைக்கலங்களுடன் எஞ்சிய அனைவரும் போர் நிறுத்தி கைஓய்ந்தனர். எந்த ஆணையும் விடப்படாமலேயே ஒன்றிலிருந்து ஒன்று எனப் பிரிந்து இரு கரைகள் என மாறி அகலத் தொடங்கின படைகள். மறுபுறம் சகுனியின் முரசு முழங்கிக்கொண்டிருப்பதை அவன் கேட்டான். படைகளை மீண்டும் ஒருங்கிணைய அது ஆணையிடுகிறதென்று புரிந்துகொண்டான். புரவியில் அவனிடம் விரைந்து வந்த காவலன் “அரசே, நமது ஆணை

என்ன?” என்றான். “அவர்களின் படை என்ன செய்கிறதென்று பார்ப்போம். அதுவரைக்கும் நம்மிடமிருந்து ஆணைகள் எழவேண்டியதில்லை” என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். சகுனியின் ஆணை ஒலித்துக்கொண்டே இருக்க கௌரவப் படை முழுமையாகவே பின்னடைந்தது. வற்றும் எரியின் விளிம்பென அது உள்வாங்கி அகன்று செல்ல மானுட உடல்களால் ஆன பரப்பென குருக்ஷேத்ரம் தெளிந்து பரந்தெழலாயிற்று.

பாண்டவப் படைகளும் பின்னடைய போர்முகப்பிலிருந்து அர்ஜுனனும் நகுலனும் சகதேவனும் சாத்யகியும் பின்னோக்கி வரத்தொடங்கினர். திருஷ்டத்யும்னன் அர்ஜுனனின் தேரை நோக்கி சென்றான். அர்ஜுனன் தேர்த்தட்டில் அமர்ந்து காண்டீபத்தை ஆவக்காவலனிடம் அளித்துவிட்டு தன் கையுறைகளை கழற்றி அருகே வைத்துக்கொண்டிருந்தான். திருஷ்டத்யும்னனைக் கண்டதும் விழிகளால் ஒருமுறை சந்தித்துவிட்டு தலை தாழ்த்திக்கொண்டான். திருஷ்டத்யும்னன் இளைய யாதவரிடம் “துவாரகையின் அரசே, எந்தை களம்பட்டார். விராடரும் உடன் விழுந்தார்” என்றான். “ஆம், அவர்களுக்கு உகந்த இறப்பு” என்று இளைய யாதவர் மறுமொழி சொன்னார். பின்னர் ஒரு சொல்லும் உரைக்காமல் இரு தேர்களும் இணையாக ஓடின.

தேர் படைகளின் உள்ளடுக்கு நோக்கி சென்றதும் அப்பாலிருந்து பீமனின் தேர் வருவதை திருஷ்டத்யும்னன் பார்த்தான். தேர் நிற்பதற்குள்ளாகவே பீமன் அதிலிருந்து பாய்ந்திறங்கி வந்தான். “என் மைந்தனை தெற்கே அனுப்பிய பின் வருகிறேன்… யாதவரே அவனைக் கொன்றவனின் குருதி எனக்கு வேண்டும்… அவனை கொல்லாமல் இக்களம்விட்டு நான்

அகலப்போவதில்லை” என்று கூவினான். இளைய யாதவர் மறுமொழி சொல்லாமல் வெறுமனே நோக்கிக்கொண்டிருந்தார். “என் மைந்தனை அவன் கொன்று வீழ்த்தினான். அவனை களத்தில் நான் கொன்றாகவேண்டும். அக்குருதிக்கு நிகர் செய்யாது இப்புவியில் நான் உயிர் வாழ்ந்து பொருளில்லை. நான்…” என்று அவன் கைதூக்க “பொறுங்கள்” என்று இளைய யாதவர் சொன்னார். “வஞ்சினங்களை நாம் வணங்கும் தெய்வங்களுடன் இணைந்தே எடுக்க வேண்டும். நம் இயல்புக்கு மீறிய பெருவஞ்சினங்கள் நம்மை தோற்கடித்து இளிவரல் தேடித்தரும்.”

“அந்த சூதன்மகன் என் கண்முன் என் மைந்தனைக் கொன்று வீழ்த்தினான். இக்குடியின் முதல் மைந்தன் அவன்…” என்று பீமன் சொன்னான். “அதற்குரிய பழிநிகரை உங்கள் குடியிலிருந்தே செய்யலாம்” என்று சொல்லி அர்ஜுனனை கைகாட்டினார் இளைய யாதவர். பீமன் தோள்கள் தளர விசும்பல் ஒலியொன்றை எழுப்பி திரும்பிக்கொண்டான். கழுத்திலும் தோளிலும் அவன் தசை இறுகி நெளிவதை திருஷ்டத்யும்னன் கண்டான். அவன் இளைய யாதவரை நோக்கித் திரும்பி “இடும்பர் எனக்கு இளையவர். அவர் முகம் என் நெஞ்சை விட்டு அகலவில்லை” என்றான். “அவன் இறப்பு பிறிதொன்றை ஈடுசெய்கிறது” என்று இளைய யாதவர் அதே புன்னகை மாறா முகத்துடன் சொன்னார். “அவன் இறந்தாலொழிய ஈடு செய்ய முடியாத ஒன்று அது. அந்த ஈடு செய்யப்பட வேண்டுமென்று பெரும் வேண்டுதலொன்று தெய்வங்களிடம் ஒவ்வொரு கணமும் முன்வைக்கப்பட்டது. தெய்வங்கள் அதை செவி கொள்ளவில்லை.” சீற்றத்துடன் திரும்பி “யார்? யாருடைய வேண்டுதல்?” என்று உரக்க கேட்டான் பீமன். இளைய யாதவர் புன்னகைத்தார். பீமன்

தலையை அசைத்து தாள முடியாத வலியில் துடிப்பவன்போல் உடல் நெளிய நின்றபின் திரும்பி தன் தேரில் பாய்ந்து ஏறிக்கொண்டு கிளம்பிச்சென்றான். திருஷ்டத்யும்னன் ஏவலரிடம் “அவரைக் கொண்டுசென்று படுக்க வையுங்கள். அகிபீனா அளியுங்கள். அவர் துயிலட்டும்” என்றான். அவர்கள் பீமனைத் தொடர்ந்து சென்றனர்.

திருஷ்டத்யும்னன் “இடும்பனின் வீழ்ச்சி நம் படைகளை சோர்வடையச் செய்துள்ளது” என்றான். இளைய யாதவர் “அல்ல. நம் தரப்பு ஷத்ரியர்கள் இன்றொரு நாள் கடந்தால் உளம் தேர்வார்கள். இன்றைய போரில் இங்குள்ள ஷத்ரியர் எவருக்கும் அவன் ஈடல்ல என்பதை அவன் காட்டிவிட்டான். அவன் வாழ்ந்தால் இந்திரப்பிரஸ்தத்தின் அரசன் என அவனை அமரச்செய்யவேண்டும் என்னும் குரல் எழும். அவன் அதை விரும்பாது தன் நகருக்கே மீண்டால்கூட நாளை அவன் கொடிவழியினர் அவ்வாறு எழக்கூடும். இப்போரால் எழவிருக்கும் யுகத்தில் அரக்கர்கள் முதன்மை கொள்வார்களோ என்று ஷத்ரியரும் அந்தணரும் யாதவரும் ஐயம் கொண்டிருப்பார்கள். அரக்கர்களை நிகர்செய்யும் ஆற்றல் என்ன என்பதை இவ்விறப்பு காட்டியிருக்கிறது. இனி அவர்கள் உளம் அமைவார்கள்” என்றார். திருஷ்டத்யும்னன் நீள்மூச்செறிந்து “எழவிருக்கும் யுகத்தில் ஆளப்போகிறவர் எவர்?” என்றான். “கலியுகத்தில் கூட்டே வல்லமை எனப்படும்” என்றார் இளைய யாதவர்.

யுதிஷ்டிரர் விரைந்து வந்து தேரிலிருந்து இறங்கி அவனை நோக்கி ஓடி வந்தார். “போர் நின்றுவிட்டது. எவரது ஆணை இது? எழுந்து சென்று தாக்கவேண்டும் என்றல்லவா நான் ஆணையிட்டிருந்தேன்” என்றார். திருஷ்டத்யும்னன் “எவரது

ஆணையையும் கேட்கும் நிலையில் படைகள் இல்லை, அரசே. முன்னரே பெரும்பாலானவர்கள் நின்ற இடத்திலேயே விழுந்து துயில்கொள்ளத் தொடங்கிவிட்டிருந்தனர். எஞ்சியோர் இதோ படைக்கலங்களை தாழ்த்தி பின்னடைகிறார்கள். இந்த இரவுப்போர் முடிகிறது. இவர்கள் சற்றேனும் துயில்கொள்ளாமல் மீண்டும் இங்கு போர் நிகழாது" என்றான். யுதிஷ்டிரர் "இக்களத்திலிருந்து வெற்றி கூவி அவன் திரும்பிச்செல்வானெனில் நாம் அரசன் என்றும் அரச குடியினரென்றும் தருக்கி நிற்பதில் பொருளில்லை. காண்டீபமும் மந்தனின் கதையும் வெறும் களிப்பாவைகள் என்றே பொருள்" என்றார்.

யுதிஷ்டிரரின் முகத்தை கூர்ந்து நோக்கியபடி இளைய யாதவர் "என்ன இருந்தாலும் கடோத்கஜன் அரக்கன்" என்றார். "என்ன சொன்னாய்?" என்றபடி யுதிஷ்டிரர் முன்னெழுந்து வந்தார். "ஆம், அவன் அரக்க குடியினன். அவன் இறந்தாகவேண்டும். பழுத்த சருகு உதிர்ந்தேயாகவேண்டும் என்பதைபோல. அவன் குடியில் ஷத்ரியப் பண்புகள்கொண்ட புதிய மைந்தர் எழுந்துவிட்டார்கள். அவர்களிடமிருந்து புதிய அரச மரபுகள் தோன்றவிருக்கின்றன. மண்ணில் நடக்கும் ஆற்றலற்றவனும் மரக்கிளைகளில் இயல்பாக அமைபவனுமாகிய இவ்வரக்கன் முதுமைகொண்டு பயனற்றவனாகிப் படுத்து நோயுற்று இறப்பதைப்போல கீழ்மை பிறிதுண்டா? இன்று அரக்கர் குலத்துக்கு பெருமை சேர்த்து பெருங்காவியங்களில் சொல் பெற்று களம்பட்டிருக்கிறான். உகந்த இறப்பு இதுவன்றி வேறென்ன?" என்றார் இளைய யாதவர்.

"உன் சொற்களில் இருக்கும் நஞ்சு மட்டும் எனக்கு புரிகிறது, யாதவனே" என்றார் யுதிஷ்டிரர். விம்மலை மூச்சென ஆக்கி

“கொடு நஞ்சு… ஆலகாலம்” என்றார். “ஒவ்வொரு சொல்லிலும் இந்த யுகத்தை முடிக்கும் நஞ்சை நான் கொண்டிருக்கிறேன்” என்று இளைய யாதவர் சொன்னார். அப்பாலிருந்து படைத்தலைவன் வந்து “படைகள் முற்றாக விலகிவிட்டன” என்று திருஷ்டத்யும்னனிடம் சொன்னான். “படைகள் அமையட்டும். எந்த அறிவிப்பும் தேவையில்லை” என்று திருஷ்டத்யும்னன் ஆணையிட்டான்.

# கார்கடல் - 77

குருக்ஷேத்ரம் எங்கும் இடைவெளியே இல்லாமல் பரவி துயின்றுகொண்டிருந்த கௌரவப் படைவீரர்களின் நடுவே புரவியில் பெருநடையில் சென்றான் அஸ்வத்தாமன். புரவி குளம்புகளை எடுத்துவைத்துச் செல்வதற்கும் இடமில்லாதபடி மரப்பலகைப் பாதையின் மீதும் வீரர்கள் துயின்றுகொண்டிருந்தனர். சில இடங்களில் தயங்கி நின்று, உடலை கிளையிலிருந்து எழ விழையும் பறவைபோல் முன்பின் என உலைத்து பின் இடைவெளி கண்டு, தாவி எழுந்து முன்காலூன்றி பின்காலையும் அந்த இடத்திலேயே ஊன்றி நின்று மீண்டும் தாவிச் சென்றது அஸ்வத்தாமனின் பழகிய குதிரை. கீழே கிடந்த உடல்களில் பாதிக்கும் மேலானவை ஏற்கெனவே இறந்துவிட்டவை. எஞ்சியவை உயிர் மட்டும் தங்கியிருப்பவை. கூர்ந்து நோக்கியபோது அவற்றில் எந்த வேறுபாட்டையும் கண்டுபிடிக்க இயலவில்லை. இறந்த உடல்களும் விழி திறந்து பற்கள் தெரிய படைக்கலங்களை இறுகப் பற்றியபடி உணர்ச்சிக் குவியம் ஒன்றில்

உறைந்திருந்தன. துயிலும் முகங்களிலும் அதேபோல உணர்வெழுச்சி சிலைகொண்டிருந்தது.

சில கணங்களுக்குப் பின்னரே துயிலும் முகங்கள் மெல்ல மாறிக்கொண்டிருப்பதை அவனால் உணரமுடிந்தது. பலர் முனகியபடி திரும்பிப் படுத்தனர். ஓரிரு சொற்களை சிலர் உரைத்தனர். மெல்லிய விதிர்ப்பொன்று சில உடல்களில் குடியேறியது. ஆயினும்கூட துயின்றுகொண்டிருக்கிறான் போலும் என்று எண்ணிய ஒரு முகத்திற்குக் கீழிருந்த உடலில் இரு கால்களும் வெட்டுண்டிருப்பதை, உடலென்று எண்ணிய ஒருவன் அசைந்து மெல்ல முனகி புரண்டுபடுப்பதைக் கண்டு உள்ளம் திடுக்கிட்டபடியே இருந்தது. இத்தனை உடல்கள்! ஒவ்வொரு உடலும் குருதிக்குமிழி என தோன்றி அன்னை உடலை உறிஞ்சி உண்டு உயிர்பெற்று வளர்ந்து உலகுக்கு வந்தது. விழிதிறந்து வானை நோக்கி மகிழ்ந்தது. ஆடியோடி மண்ணை அறிந்தது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு தெய்வத்தால் ஊர்தி எனக் கொள்ளப்பட்டது. வெட்டிக்குவித்து அள்ளிக் கூட்டி கொண்டுசென்று அனலுக்கும் மண்ணுக்கும் அளித்தபின் அக்கணமே மறந்துவிடுகிறார்கள். அந்த தெய்வங்கள் காற்றில் நின்று துடிக்கின்றன. பின்னர் அவையும் மறந்து பிறிதொரு கரு புகுகின்றன.

அஸ்வத்தாமன் துரோணரின் குடிலை அடைந்ததும் அங்கு காத்து நின்ற ஏவலன் அருகே வந்து தலைவணங்கி “துயில்கிறார்” என்றான். அஸ்வத்தாமன் சற்று தயங்கினான். பின்னர் “நன்று, அவர் துயில் கொள்ளட்டும்” என்று புரவியை திருப்பினான். அதற்குள் குடிலுக்குள்ளிருந்து வெளிவந்த இன்னொரு காவலன் “ஆசிரியர் தங்களை அழைக்கிறார், அரசே” என்றான். “நான் வந்தது எப்படி தெரியும்?” என்று அவன்

கேட்டான். “தங்கள் புரவியோசை கேட்டு விழித்துக்கொண்டார்” என்றான். அஸ்வத்தாமன் புரவியை ஏவலனிடம் அளித்துவிட்டு இறங்கி கால்குறடுகளை அவிழ்த்துவிட்டு மெதுவாக நடந்தான். அந்தப் புரவியில் அவன் சற்று முன்னர்தான் முதல்முறையாக ஏறியிருந்தான். போர் முடிந்த பின்னர் தேரிலிருந்து இறங்கி அங்கு படைத்தலைவன் ஒருவன் கொல்லப்பட்டுவிட்டபின் களத்தில் நிலையழிந்து திரிந்துகொண்டிருந்த புரவியொன்றின் மேலேறி அவன் தந்தையை பார்க்க வந்தான். அவன் உள்ளத்தின் தாளத்தை தந்தை அறிந்திருக்கிறார். அந்தத் தாளம் எப்படி அவனிலிருந்து அப்புரவியின் குளம்புகளுக்கு செல்கிறது?

அவன் குடில் வாயிலில் நின்று “வணங்குகிறேன், தந்தையே” என்றான். அவர் “நீடுவாழ்க!” என எடைமிக்க குரலில் சொன்னார். அவன் குனிந்து உள்ளே சென்றபோது மரவுரி மெத்தைமேல் துரோணர் எழுந்து கால்மடித்து அமர்ந்திருந்தார். அவரது உடலில் கவசங்கள் கழற்றப்படாமல் இருந்தன. கையுறைகள் கூட உடலுடன் சேர்ந்து ஒட்டி பொருக்கடைந்து இருந்தன. அஸ்வத்தாமன் அவர் முன் பணிந்து வணங்கி சற்று அப்பால் அமர்ந்தான். அவர் எப்போதுமே அவனை நேர்விழி கொண்டு நோக்குவதில்லை. அவனிடம் பேசும்போது விழிதாழ்த்தி கைகளால் எதையேனும் செய்துகொண்டிருப்பார். அம்புகளை கூர்மைப்படுத்துவார். வில் திருத்துவார். அன்றி சுவடிகளை பொருளில்லாமல் அடுக்கியோ பிரித்தோ கட்டியோ விரல் உலாவிக்கொண்டிருப்பார். அவனிடமிருந்து எதையோ மறைக்க முயல்பவர்போல. பிழையோ இழிவோ ஆற்றிவிட்டவர்போல.

“சொல்” என்று துரோணர் சொன்னார். அஸ்வத்தாமன் “தாங்கள் அறிந்திருப்பீர்கள், முழுப் படையும் நின்ற இடத்திலேயே

விழுந்து துயின்றுகொண்டிருக்கிறது. இன்று உடல்கள் எவையும் களத்திலிருந்து அகற்றப்படவில்லை. ஒவ்வொரு உடலாக நோக்கி அகற்றுவதும் எளிதல்ல. புண்பட்டவர்கள் கூட களத்திலிருந்து கொண்டு செல்லப்படவில்லை. களம் அலறல்களும் முனகல்களும் நிரம்பி ஒலித்துக்கொண்டிருக்கிறது” என்றான். “ஆம், இங்கு படுத்திருக்கையிலேயே அந்த முழக்கத்தை கேட்க இயல்கிறது” என்று துரோணர் சொன்னார். “இன்று இனிமேல் ஒரு போரை நிகழ்த்த இயலாது. இன்று பகல் இவர்கள் இவ்வண்ணமே துயிலட்டும் என்று விட்டுவிடுவதே உகந்தது” என்று அஸ்வத்தாமன் சொன்னான். துரோணர் “அந்த முடிவை நான் எடுக்க இயலாது” என்றார்.

“தாங்கள்தான் எடுக்கவேண்டும். இப்போது இப்படைகள் அனைத்திற்கும் தாங்களே தலைவர்” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “இவர்களை எழுப்பி பாடிவீட்டுக்கு சென்று துயிலச் சொல்லக்கூட இன்று நம்மிடம் செய்திமுறை இல்லை. இன்னும் சற்று நேரத்தில் பொழுது விடிந்துவிடும். வெயில் எழுகையில் அவர்கள் விழித்தெழக் கூடும். விழித்தெழுபவர்கள் ஒவ்வொருவராக பாடிவீட்டுக்கு திரும்பட்டும். மதுவருந்தி படுத்து துயில்கொள்ளட்டும். எழுந்து செல்லாமல் கிடப்பவர்கள் புண்பட்டவர்களா உயிர்நீத்தவர்களா என்று முடிவு செய்து அவர்களை அங்கிருந்து அகற்றலாம். பின் மாலையில் களம் ஒழுங்கு செய்யப்படும்.” அவன் அவர் முகம் என்ன உணர்வுகொண்டிருக்கிறது என்று உய்த்தறிய முயன்றான். அவர் விழிகள் அலைபாய்ந்தன. கைவிரல்கள் காற்றில் எதையோ இயற்றின. என்ன சொல்லிக்கொண்டிருக்கிறார்? எவரிடம்? “நாம் இன்று பகல் முழுக்க போரிட இயலாது” என்று அஸ்வத்தாமன் சொன்னான்.

துரோணர் எங்கோ நோக்கி “எனில் இன்னொரு இரவுப்போரா?” என்றார். “இரவுப்போரல்ல, இது பேரழிவு. இது போரே அல்ல, அருங்கொலை. நமது படைகளின் பெரும்பகுதி இன்றுடன் அழிந்தது. எஞ்சியவர்களைக்கொண்டு நாம் பாண்டவர்களுடன் போரிடவே இயலாது. இப்போது இருக்கும் கணக்குகள் என்ன என்று தெரியவில்லை. ஆனால் வெறும் விழிநோக்கிலேயே நம்மைவிட இருமடங்கு பெரியது பாண்டவர்களின் படை எனத் தெரிகிறது. அரக்கன் நேற்றிரவு நம்மை சூறையாடிவிட்டான்” என்று அஸ்வத்தாமன் சொன்னான். துரோணர் வேறெங்கோ நோக்கி தலையசைத்தார். போரைப்பற்றி அவனுடன் பேசுவதை அவர் விரும்பவில்லை என்று தோன்றியது. ஆனால் அவன் அருகிலிருக்கும்போது மட்டும் அவர் முகத்திலிருக்கும் விழிக்கனிவும் முகப்பொலிவும் தெரிந்தது. அவன் எழுந்து செல்ல எண்ணினான். ஆயினும் அவரிடமிருந்து ஒரு சொல் எழவேண்டும் என்றும் தோன்றியது.

“தந்தையே, இப்போரை இப்போது நம்மால் முடித்துவைக்க இயலாது. இன்று இப்போர் நிகழ்வது களத்தில் நிகழ்ந்த கொலைகளில் இருந்து எழுந்த வஞ்சத்திற்காகவே. இது முழுமையாக ஓடிச் சுழன்று பின்னரே நிற்கும். ஆனால் இங்கு விழுந்து கிடக்கும் வீரர்களிடம் நமக்கொரு பொறுப்புள்ளது. இவர்களை நாம் துயில அனுமதிப்பதொன்றே இன்று செய்யக்கூடுவது. அதற்கு தங்கள் ஒப்புதலை கோரியே நான் வந்தேன்” என்றான். “என் ஒப்புதல் உண்டு” என்று துரோணர் சொன்னார். “அதை தங்கள் ஆணை என்று நான் அரசரிடம் சொல்லிக்கொள்கிறேன்” என்றான். “நன்று” என்று துரோணர் சொன்னார். அஸ்வத்தாமன் எழுந்துகொண்டு “நேற்று அரக்கர் இளவரசன் விழுந்தான். பீமன் உளந்தளர்ந்திருக்கிறார் என்ற செய்தி வந்திருக்கிறது” என்றான். துரோணர் “அல்லது அவன்

வஞ்சினம் பூண்டிருக்கலாம்” என்று சொன்னார். “ஆம், ஆனால் தன் மைந்தனைக் கொன்ற கர்ணனை ஒருபோதும் அவரால் வெல்லவோ பழியீடு செய்யவோ இயலாது. இன்று களத்தில் அவர் அதை உணர்ந்திருப்பார் எனில் மேலும் சோர்ந்து போர் மேல் நம்பிக்கை இழப்பார். அது நமக்கு வெற்றிதான்” என்றான் அஸ்வத்தாமன்.

துரோணர் “அவனும் கொன்றவனை விட்டுவிட்டு பிறிதெவரோ ஒருவன்மேல் பழிசுமத்தி அவனைக் கொன்று நிறைவடையலாம். அர்ஜுனனைப்போல” என்றார். அஸ்வத்தாமன் ஒருகணம் துரோணரின் விழிகளை சந்தித்து திரும்பிக்கொண்டான். அவன் உடல் நடுக்குகொள்ளத் தொடங்கியது. ஏன் என்று தெரியாமல் அங்கிருப்பதை ஒருகணமும் தன்னால் தாள இயலாது என்று அவனுக்குத் தோன்றியது. தலை வணங்கி அக்குடிலை விட்டு வெளியே வந்தான். குளிர்காற்று வந்து மூச்சை நிறைக்க ஆறுதலை உணர்ந்து நீள்மூச்செறிந்தான். இரு கைகளையும் விரித்து நெஞ்சை நிமிர்த்தி மேலும் மேலும் நன்மூச்சை இழுத்தபடி நடந்து புரவியிலேறிக்கொண்டான். காவலனிடம் “பிறிதெவரும் அவரை சந்திக்க வேண்டியதில்லை. ஒருநாழிகையேனும் அவர் துயில்கொள்ளட்டும்” என்ற பின் புரவியை கிளப்பிச்சென்றான்.

புரவியில் படைகளினூடாகச் சென்றுகொண்டிருக்கும்போது அஸ்வத்தாமன் தன் உள்ளம் நிலையழிந்து வெற்றுச்சொற்கள் பீறிட்டெழ பொருளிழந்த ஓலமாக இருப்பதை உணர்ந்தான். புரவி அவனை அறியாமலேயே விரைவுகொண்டது. உள்ளத்தின் விசையை புரவி எவ்வாறு அறிகிறது என்று உணர்ந்ததும் கடிவாளத்தை இழுத்து புரவியை நிறுத்தினான். தலையை சிலமுறை உதறிக்கொண்டு மெல்லிய ஒளி

எழத்தொடங்கிய கீழ்வானை பார்த்தான். என்ன நிகழ்ந்தது? அங்கு செல்வது வரை இக்கொந்தளிப்பு எனக்கு இருக்கவில்லை. இவ்வுளமழிதல் இங்கு துஞ்சியும் துயின்றும் விழுந்துகிடக்கும் மானுட உடல்களைக் கண்டுமல்ல. பிறிதொன்றினால் துயருறுகிறேன். துயரல்ல, சீற்றமும் கொள்கிறேன். அல்ல, இது பிறிதொன்று. இது ஓர் ஏமாற்றம். அல்ல, அதுவும் அல்ல. வெறும் கசப்பு. எவர் மீதென்றிலாத கசப்பு.

அவன் மீண்டும் புரவியைத் தட்டி கிளப்பியபோது தன்னிடமென கூரிய வினாவொன்றை எழுப்பிக்கொண்டான். தெளிவாக கண்முன் தெரிவதொன்றை தவிர்க்கும்பொருட்டு ஏன் இத்தனை உள ஓட்டங்கள்? எதன்பொருட்டு நிலைகுலைந்திருக்கிறது என் உள்ளம்? அவர் விழிகளில் தெரிந்த சிறுமை கண்டு. ஆசிரியர் என்றிலாது, அந்தணர் என்றிலாது, தந்தையென்றும் இலாது வெறும் போரில் திளைக்கும் சிற்றுயிராக அவர் ஆகியிருந்தார். எதிரிமேல் வஞ்சத்தை ஏளனமாகவும் வெறுப்பாகவும் மாற்றிக்கொண்டு அதில் அமர்ந்திருக்கிறார். அங்கிருப்பவர் பிறிதொருவர். நினைவறிந்த நாள் முதல் தந்தையென்றும் ஆசிரியரென்றும் தெய்வமென்றும் வணங்கிய மானுடரல்ல. அவன் இருமுறை மூச்சை இழுத்து விட்டபோது உள்ளம் சற்று ஆறுதல் கொண்டது. புரவி நடை சீரடைந்தது. இந்தக் களத்தில் சிலர் மேலெழுகிறார்கள். சிலர் கீழிறங்குகிறார்கள். சிலர் அறிகிறார்கள். சிலர் அறிந்ததை கைவிடுகிறார்கள்.

இதை நான் முன்னரே அறிவேன். இவரை இவ்வண்ணம் முன்னரே பலமுறை சந்தித்திருக்கிறேன். ஒவ்வொரு முறையும் இவரை உந்தி அகற்றி நான் உருவாக்கி என்

குகையறையில் நிறுவியிருந்த பிறிதொருவரைக் கொண்டு அங்கு நிறுத்தியிருக்கிறேன். என்றும் இவர் இவ்வாறே இருந்தார். பாஞ்சால போர்க்களத்தில் துருபதனை இழுத்து வந்து தன் காலடியில் அர்ஜுனன் வீழ்த்தியபோது அங்கே நின்றார். திரௌபதி அவை நடுவே சிறுமைகொண்டு நின்றிருந்தபோது அங்கு அமர்ந்திருந்தார். எத்தனையோ முறை இவரை பார்த்திருக்கிறேன். நான் நன்கு அறிந்தவர். நான் அறிந்தவரிலேயே மிக அணுக்கமானவர். அர்ஜுனனைத் தவிர்த்து எனக்கு மட்டும் அரிய கலைகளை கற்பிக்க முனைந்தவர். நான் கொல்லப்படலாகாது என அர்ஜுனனிடம் சொல்பெறுகையில் அர்ஜுனனை கொல்லமாட்டேன் என்னும் சொல்லை என்னிடமிருந்து பெறாதவர்.

புரவி சீராக ஓட தன் உடல் மெல்லிய வியர்வை கொண்டு குளிர்ந்துவருவதை உணர்ந்தான். நான் அஞ்சுவது இவரைத்தானா? நான் அவ்வுடலிலிருந்து இவ்வுடலை பெற்றுக்கொண்டிருக்கிறேன். அவ்வுள்ளத்தின் ஒரு துளியையே என் அகமென வளர்த்து வைத்திருக்கிறேன். எனில் இவரும் என்னுள் வாழ்கிறார். ஒரு தருணத்தில் எழுவார், எளிய வஞ்சங்களால் ஆட்டுவிக்கப்படுவார். இவரில் இருக்கும் ஒரு துளி என்னில் அழியாமல் எஞ்சும். அறிவதனைத்தும் அறிந்த பின்னரும் இவ்வுலகை கவ்விக்கொண்டிருக்கும் ஒன்று. அரிய ஆசிரியர்களின் அடிசூடி அமர்ந்து மெய்யறிந்த பின்னரும் இவ்வுலக வஞ்சங்களிலேயே என்றென்றுமென சிக்கிக்கொண்டது. ஒருபோதும் இங்குள பின்னல்களிலிருந்து விடுபட்டு விண்ணிலெழ இயலாதவராக அவரை ஆக்குவது. அவ்வண்ணம் ஒருவன் என்னுள் வாழ்கிறான் எனில் நான் கொண்ட கல்வியும் ஆற்றிய தவமும் எதன் பொருட்டு?

இவ்வெண்ணங்கள் இத்தருணத்தில் என்னை மேலும் சோர்வுறச் செய்கின்றன. உள்ளம் சோர்வுற விரும்பும்போது அதற்குரிய எண்ணங்களை உருவாக்கிக்கொள்கிறது. இனி வெறுமைக்கும் அங்கிருந்து கழிவிரக்கத்திற்கும் அங்கிருந்து ஆழ்ந்த செயலின்மைக்கும்தான் இது செல்லும். எதிரியின் முன் தலை தாழ்த்தி கொடுக்கும். இக்கழிவிரக்கத்தை விரட்ட நான் செய்ய வேண்டுவது ஒன்றே. என்னை தருக்கி நிமிரச்செய்ய வேண்டும். வெறிகொண்டு எதிரியை வெறுக்க வேண்டும். அதைத்தான் தந்தையும் செய்துகொண்டிருக்கிறாரா? அல்ல, அவரில் எழுந்தது வெறி அல்ல. அது ஒரு வகை களிப்பு. மிக மென்மையானது, எவருமறியாதது என்பதனாலேயே உண்மையானது. வெறியும் சினமும் எந்நிலையிலும் சற்றேனும் நடிப்பு கொண்டவை. ஏனென்றால் அவை பிறருக்கானவை. பிறர் காணவியலா இடத்தில் முழுமையாக அவை வெளிப்படுவதே இல்லை. இக்களிப்பு தனித்திருக்கையில் பேருருக் கொள்வது. தன் தெய்வம் மட்டுமே அறிவது.

அவன் துரியோதனனின் பாடி வீட்டை அடைந்ததை உணர்ந்தான். அங்கு துரியோதனன் துயின்றிருக்க மாட்டான் என்று எண்ணியிருந்தாலும் துச்சாதனனும் சகுனியும் கர்ணனும் அருகிருக்க குடில் முற்றத்தில் துரியோதனன் அமர்ந்திருக்கக் கண்டு திகைத்து கடிவாளத்தை பிடித்திழுத்தான். தொலைவிலேயே அவனை திரும்பிப் பார்த்துவிட்ட சகுனி புன்னகையுடன் கைசுட்டி ஏதோ சொன்னார். துரியோதனன் அவனை நோக்கி கைகாட்டி அருகே அழைத்தான். புரவி தயங்கி காலடி வைப்பதை உணர்ந்தான். எக்கணமும் அது திரும்பி விசைகொண்டு

ஓடத்தொடங்கிவிடும் என்று தோன்றியது. அதை குதிமுள்ளால் குத்தியும் கழுத்தில் கைகளால் தட்டியும் அவன் முன்செல்ல ஊக்கினான். புரவி சென்று நின்றதும் இறங்கி நடந்து காவலனின் வணக்கத்தை ஏற்று துரியோதனன் அருகே சென்று சகுனிக்கும் கர்ணனுக்கும் துரியோதனனுக்கும் தலை வணங்கிவிட்டு சிறிய பெட்டி மேல் அமர்ந்தான்.

சகுனி "இப்போர் எப்படி தொடரவேண்டும் என்பதைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறோம், பாஞ்சாலரே. உங்கள் வருகையை எதிர்பார்த்திருந்தோம்" என்றார். துரியோதனன் உரத்த குரலில் "இன்றைய பகல்போரை தவிர்த்துவிடுவோம் என்று அங்கர் எண்ணுகிறார். படைகள் துயின்றுகொண்டிருக்கின்றன, அவர்களை எழுப்பி போருக்கு செலுத்த இயலாதென்கிறார்" என்றான். "ஆம், நானும் அவ்வண்ணமே எண்ணுகிறேன். அது தந்தையின் ஆணையும்கூட" என்றான். ஆனால் துரியோதனனின் சொற்களிலேயே அவன் அந்த எண்ணம் கொண்டிருக்கவில்லை என உணர்ந்து உள்ளம் சலித்தான். "அவரிடம் நான் கூறுகிறேன். இப்போர் தொடர்ந்தாகவேண்டும். ஐயம் தேவையில்லை, இப்போர் இப்போதே தொடர்ந்தாக வேண்டும்" என்று துரியோதனன் சொன்னான். "அரசே" என்று தயக்கத்துடன் அஸ்வத்தாமன் கூற "அங்கு அவர்களின் படையில் நிஷாதரும் கிராதரும் முழுமையாக வீழ்ந்துவிட்டனர். நேற்று இரவு அங்கர் செலுத்திய நச்சுஅம்புகள் அவர்கள் அனைவரையும் மயங்கி விழவைத்திருக்கின்றன. அவர்களில் பெரும்பாலானவர்கள் இன்று உச்சிப்பொழுதுக்குள் எழுந்துவிடுவார்கள். மீண்டும் படைக்கலம் எடுத்து அவர்கள் போருக்கெழுவதற்கு முன்னர் நாம் அவர்களை முற்றழித்துவிடவேண்டும். ஆம், இன்று

உச்சிப்பொழுதுக்குள் போர் முடிந்துவிடவேண்டும்” என்று துரியோதனன் சொன்னான்.

அஸ்வத்தாமன் அவன் விழிகளை பார்த்தான். அதிலிருந்த உறுதியும் நம்பிக்கையும் அவன் உள்ளத்தில் ஒரு நடுக்கை உருவாக்கின. திரும்பி அவன் கர்ணனை பார்த்தான். கர்ணன் “அவர் கூறுவது உண்மை. என் அம்புகளின் மயக்கு இன்னும் சில நாழிகைக்கே நீடிக்கும்” என்றான். “ஆனால்” என்று அஸ்வத்தாமன் சொல்லெடுக்க துரியோதனன் எழுந்து கைநீட்டி “எல்லாச் சொற்களுக்கும் ஆனால் என்பதை உடன் சேர்த்துக்கொள்ளலாம். ஆம், நமக்கு பல தடைகள் உள்ளன. நமது படைகளை எழவைக்க இயலாது. ஆனால் அவர்கள் எழுந்தாகவேண்டும், போர்புரிந்தாகவேண்டும். அவர்களிடம் சொல்வோம் நாம் வெற்றிகொள்ளப் போகிறோம் என்று” என்றான். அஸ்வத்தாமன் என்ன சொல்வதென்று அறியாமல் அவன் முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தான். அது களிப்பில் வெறிப்பு கொண்டிருந்தது. விழிகள் எதையும் நோக்காதவைபோல துறித்து நின்றன.

அருகே நின்றிருந்த துச்சாதனனை விழிதூக்கி நோக்கி அடையாளம் காணாமல் விழிவிலக்கி உடனே திடுக்கிட்டு மீண்டும் நோக்கினான். அது துச்சாதனனேதான். ஆனால் முற்றிலும் பிறிதொருவனாகத் தெரிந்தான். என்ன ஆயிற்று அவனுக்கு? முகத்தில் புண்ணோ நெருப்போ பட்டு தோற்றமே மாறிவிட்டதா? ஆனால் முகம் எந்த மாற்றமும் இல்லாமல் இருந்தது. அவன் ஆழ்ந்து துயில்பவன் போலிருந்தான். அஸ்வத்தாமன் விழிகளை விலக்கிக்கொண்டான். அவன் முகம் கண்ணுக்குள் நின்றது. அவன் உள்ளம் திடுக்கிட்டது. இன்று துருமசேனன் களம்பட்டான். ஆம், மைந்தனை இழந்தவன்.

ஆனால் அந்த முகத்தில் துயரே இல்லை. முனிவர்களின் முகம். முலையூட்டும் அன்னையரின் முகம். அவன் மீண்டும் துச்சாதனனை நோக்கினான். மிகையாக அகிபீனா கொண்டுவிட்டானா? ஆனால் அது களிமயக்கு அல்ல. தெளிந்தவன் போலிருந்தான். தன்னுள் இருந்த பெருஞ்சுமை ஒன்றை அகற்றியவன்போல. நஞ்சை முழுக்க உமிழ்ந்துவிட்டவன்போல. அந்த மைந்தனிடம் அவன் அணுக்கம் காட்டியதை அஸ்வத்தாமன் கண்டதே இல்லை. அணுக்கம் காட்டக்கூட முடியாத அளவுக்கு அகம்குழைந்திருந்த உறவுபோலும் அது. எனில் அவன் இழந்ததுதான் என்ன?

“சற்று முன் நான் துயின்றுகொண்டிருந்தேன். அனைத்தையும் இழந்துவிட்டேன் என்று துயிலுக்குள் நான் ஓலமிட்டேன்” என்று துரியோதனன் சொன்னான். “யாரோ என்னைத் துரத்த வெறிகொண்டு தப்பியோடி கரிய சுவரொன்றில் முட்டி மல்லாந்து விழுந்தேன். அச்சுவர் பேருருக்கொண்டு எழுந்து என் முன்னால் நின்றது. அது கன்னங்கரிய கலிதேவனின் உருவம். நீ இன்று வெல்வாய் என் மைந்தா என்றது. இன்னும் ஒருபகல் உன் வெற்றிக்கு என்று எந்தை சொன்னார். அக்குரல் கேட்டு நான் விழித்துக்கொண்டேன். ஐயம் தேவையில்லை, இன்று உச்சிப்பொழுதுக்குள் கௌரவப் படை முழு வெற்றியை அடையும். இன்று களத்தில் பாண்டவர் ஐவரையும் கொன்று வீழ்த்துவோம்.” இரு கைகளையும் ஓங்கித்தட்டி வெறியுடன் நகைத்து “இன்று களத்தில் நான் முடிசூடுவேன். அவ்விழிமகன்களின் குருதியில் ஐந்துமுறை நீராட்டிய மணிமுடியை. ஹஸ்தியும் குருவும் பிரதீபரும் சூடிய முடியை... ஆம்! இது எந்தையின் ஆணை!” என்றான்.

இயல்பாகத் திரும்பி அஸ்வத்தாமன் சகுனியை பார்க்க சகுனி அவன் கண்களை சந்தித்தபின் வேறு பக்கம் திரும்பிக்கொண்டார். அஸ்வத்தாமன் முடிவெடுத்து உரத்த குரலில் "அரசே, உங்கள் கனவும் நம்பிக்கையும் நீங்கள் கையறு நிலையிலிருப்பதால் உருவாவதாக இருக்கலாம். தெய்வங்கள் அவ்வாறு மானுடருடன் ஆடுவதுண்டு" என்றான். கர்ணனும் சகுனியும் அவன் நேர் பேச்சைக் கேட்டு திடுக்கிட்டார்கள். ஆனால் துரியோதனன் மேலும் உரக்க நகைத்து கோணலாக இழுபட்ட உதடுகளுடன் "இதை நீங்கள் சொல்வீர்கள் என எனக்குத் தெரியும். என் கனவு எழுந்தபோதே நான் உணர்ந்தேன், என்னைச் சுற்றியுள்ள அனைவரும் அஞ்சிக்கொண்டிருக்கிறார்கள் என்று. அனைத்தும் முடிந்துவிட்டதென்ற எதிர்நம்பிக்கையை பிற அனைவரும் அடைந்துவிட்டார்கள் என்று. இவ்வெற்றி எனது நம்பிக்கையால், எனது தளரா ஊக்கத்தால், என் தெய்வத்தின் அருளால் மட்டுமே அடையப்படுவது. இன்று வெற்றியை காண்பீர்கள். ஐயம் வேண்டாம்" என்றான்.

"உத்தர பாஞ்சாலரே, இன்று முழு வெற்றி நிகழும். இச்சோர்வும் பின்னடைவும் உளத்தளர்வும் நம்பிக்கையிழப்பும் அனைத்தும் இன்றைய வெற்றியை நோக்கி நாம் செல்வதற்காகவே. தெய்வங்கள் நமது இறுதி எல்லையை காட்டுகின்றன. இதிலிருந்து எழுவாயெனில் வெற்றி உனக்கல்லவா என்று என் தெய்வம் என்னிடம் சொல்கிறது. எழுந்து காட்டுகிறேன். இன்று என் தெய்வத்தின் முன் நின்று காட்டுகிறேன். இன்று போர் நிகழ்ந்தாகவேண்டும். இப்பொழுதே என் படைகள் எழுந்தாகவேண்டும்" என்றான் துரியோதனன். அஸ்வத்தாமன் பெருமூச்சுடன் தளர்ந்து தலையசைத்து "நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் நமது படைகளை இப்பொழுது

எழுப்ப முடியாது என்றாவது புரிந்துகொள்ளுங்கள். இறந்தவர்களும் துயில்பவர்களும் வேறுபாடின்றி நிரம்பிக் கிடக்கிறார்கள்” என்றான்.

துரியோதனன் “அவ்வண்ணமே மறுபக்கமும் கிடக்கிறார்கள். நாம் நம்மவரை எழுப்பிவிட்டோமென்றால் விழுந்துகிடப்பவர்கள் மேல் சென்று வெற்றியை அடைவோம்” என்றான். “அந்த ஒரு சிறு வாய்ப்பை நானும் காண்கிறேன். அவர்களால் தங்கள் படையை எழுப்ப முடியவில்லை. நாம் நமது படையை எழுப்பிவிட்டோமெனில் அதுவே வெற்றிக்கான வழியாக அமையக்கூடும்” என்றான். அஸ்வத்தாமன் திகைப்புடன் திரும்பி சகுனியை பார்த்தான். சகுனியின் கண்களில் துரியோதனனின் கண்களில் தெரிந்த அதே வெறி மெல்ல தொடங்கிவிட்டிருப்பதை கண்டான். ஒருவரிலிருந்து ஒருவர் பற்ற வைத்துக்கொள்கிறார்கள் என்று தோன்றியது. சலிப்புடன் “எப்படி எழுப்புவோம்? நமது படையை இத்தருணத்தில் எழுப்ப நம்மால் இயலாது. முற்புலரி என்பது நித்ரா தேவியின் களம். மரங்களையும் மலைப்பாறைகளையும்கூட துயில வைக்கும் ஆற்றலை இப்பொழுதில் நித்ராதேவி பெறுகிறாள்” என்றான்.

“இன்னும் சற்று நேரத்தில் புலரும். கதிரொளி படுகையில் மட்டுமே நம் படைவீரர்கள் எழுவார்கள். அதற்குப் பின் அவர்களைத் தொகுத்தொரு அணிவகுப்பதற்கே இரண்டு நாழிகை ஆகிவிடும்” என்றான் கர்ணன். “அணிவகுக்க வேண்டியதில்லை. அவர்கள் எழுந்து அந்நிலையிலேயே போர் தொடங்கட்டும். அவர்கள் எழுந்து அவர்கள் விழுகையில் என்ன அணி இருந்ததோ அந்த அணியே இருக்கட்டும்” என்றான் துரியோதனன். “நேற்று அவர்கள் விழுகையில் நம்மிடம்

எச்சூழ்கையும் இல்லை. அரக்கனால் மத்தென கடையப்பட்டு வெறும் குழுக்களாகவும் ஒற்றை வீரர்களாகவும் சிதறிப்பரந்து இக்களத்தில் நின்றோம். இன்று வரும்போது நிலம் நிறைத்துக்கிடக்கும் உடல்களைப் பார்த்தபடி வந்தேன். புயலுக்குப்பின் சருகுகள்போல கிடக்கிறார்கள். எந்த ஒழுங்கும் இல்லை" என்றான் அஸ்வத்தாமன்.

துரியோதனன் "இன்று ஒழுங்கை என் தெய்வம் அமைக்கட்டும். இப்பதினான்கு நாளும் நாம் படைசூழ்கை அமைத்தோம். இன்று அதை தெய்வத்திற்கே விட்டுவிடுவோம். எழுந்து போர்புரியுங்கள் என்ற ஆணையை மட்டுமே அனுப்புவோம். இவர்கள் அனைவர் உள்ளத்திற்குள்ளும் புகுந்து அவர்களை ஒருங்கிணைக்கவைக்கும் என் தெய்வத்தை இன்று காண்போம். இன்றைய போர் முழுமையாகவே அவருக்கு விட்டுவிடப்படட்டும்" என்றான். கைகளை விரித்து பெருங்குரலில் "இன்று கலி தெய்வம் வென்றாகவேண்டும். பெருயுகம் ஒன்று எழவிருக்கிறது. அது என் தேவனின் யுகம்" என்றான். துரியோதனனின் முகமும் உடலும் முற்றாக மாறிவிட்டிருப்பதை அஸ்வத்தாமன் கண்டான். "அங்கரே" என்றான்.

கர்ணன் "அவர் கூறுவது ஒரு வாய்ப்பு என்றே எனக்கும் படுகிறது. இல்லையேல் அத்தனை ஆழ்ந்த நம்பிக்கை எழுந்திருக்காது அவருக்கு" என்றான். "எப்படி எழுப்புவோம் அவர்களை?" என்று அஸ்வத்தாமன் கேட்டான். கர்ணன் "அது எனக்குத் தெரியவில்லை. அவர்களில் வாழும் தெய்வம் அவர்களை எழுப்பட்டும். அரசரின் தெய்வம் களத்திலெழட்டும்" என்றான். சகுனி "அவர்களை எழுப்புவதற்கு ஒரு வழி உண்டென்று எனக்குத் தோன்றுகிறது" என்றார். அஸ்வத்தாமன்

வெறுமனே நோக்க "ஆம், தெய்வம் வழிகாட்டும் என்று எனக்குத் தெரியும். சொல்க!" என்று துரியோதனன் கூவினான். "இன்னும் சற்று நேரத்தில் புலரிக்காற்று வீசத்தொடங்கும்" என்று சகுனி சொன்னார். கர்ணன் உடனே அதை உணர்ந்துகொண்டு எழுந்து "ஆம், புலரிக்காற்று நம் படைகளை நோக்கியே வீசும். அது விசை மிக்கது. எப்போதும் அந்தி சரிவதற்கு முன்பும் கதிரெழுவதற்கு முன்பும் மண்ணை தெய்வமெழுவதற்காக தூய்மைப்படுத்த அக்காற்று எழுகிறதென்று சொல் உண்டு" என்றான்.

சகுனி "நமது படைகளின் தெற்கு எல்லையில் நாம் சென்று நிற்போம். அங்கிருந்து முரசொலியை எழுப்பினால் காற்று அதை நம் படைகளின் அனைத்துப் பகுதிகளுக்கும் கொண்டுசென்று சேர்க்கும். எழுக எழுக என்று அதுவே ஒவ்வொருவரின் செவிகளிலும் முழக்கும்" என்றார். கர்ணன் "ஆனால் இப்போதிருக்கும் துயிலில் அவர்கள் அதை கேட்பதற்கு வாய்ப்பில்லை. துயிலரசி செவிகளில் விழும் அனைத்தையும் பிறிதொன்றென விளக்கி அவர்கள் அகத்திற்கு காட்டும் ஆற்றல் கொண்டவள்" என்றான். "துயிலரசி உள்ளத்தை மட்டுமே ஆளமுடியும். உடல்களை உலுக்கி எழுப்புவோம்" என்றபடி சகுனி எழுந்தார். காலின் வலி முகம் சுளிக்க வைக்க துரியோதனனின் தோளைப் பற்றியபடி நின்று "தென்கிழக்குக் காவல்மாடங்களின் அருகே மேலும் நான்கு காவல்மாடங்களை இழுத்து வைப்போம். காவல்மாடத்திலிருந்து எரியும் மிளகுத்தூளை அக்காற்றில் கலந்து வீசுவோம். ஒவ்வொருவரின் மூக்குக்குள்ளும் அது சென்று அவர்களை தும்ம வைக்கும். உடலை உலுக்கி எழுப்பும். அப்போது நமது போர்முரசு ஒலிக்கட்டும்" என்றார்.

“விளையாடுகிறீர்களா? அவ்வாறு எழுப்பப்படும் வீரர்கள் எவ்வாறு போர்புரிவார்கள்? அவர்கள் கண்களிலும் அந்த எரிபொடியே நிறைந்திருக்கும்” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “ஆம், சற்று நேரம் அவர்களின் விழிகளிலும் எரிச்சல் இருக்கும். அதுவும் நன்று. யானைகளும் புரவிகளும்கூட வெறி கொள்ளும். நமக்குத் தேவை முதல் எழுச்சியின் விசைதான். முழுப் படையையும் எழுப்பவேண்டியதில்லை. முதல் படை எழுந்துவிட்டதென்றால் அதை உடலால் உணர்ந்து எஞ்சிய படையும் எழுந்துவிடும்” என்றார் சகுனி. “கீழ்மை” என்றான் அஸ்வத்தாமன். “அவர்கள் விழிப்பதற்குள் நமது படை கடந்து உள்ளே சென்றிருக்கும். நமது சகடங்களால் அறைபட்டு பெரும்பாலான கிராதர்கள் இறந்திருப்பார்கள்” என்று சகுனி சொன்னார். “இதைத்தான் நானும் எண்ணினேன். இது என் ஆணை!” என்று துரியோதனன் கூவினான்.

“அரசே, தந்தையின் ஆணை பிறிதொன்று. இன்று படைகள் போருக்கெழ வேண்டாம் என்று அவர் ஆணையிட்டார். அவ்வாணையுடன் நான் இங்கு வந்தேன்” என்றான் அஸ்வத்தாமன். “அரசன் என்ற வகையில் அவ்வாணையை நான் மீறுகிறேன்” என்றான் துரியோதனன். “அவர் நமது படைத்தலைவர்” என்றான் அஸ்வத்தாமன். “எனில் அவர் படைத்தலைவர் அல்ல என்று அறிவிக்கிறேன்” என்று துரியோதனன் சொன்னான். அவன் விழிகள் விரிந்து பித்துகொண்டு அலைந்தன. துச்சாதனனிடம் திரும்பி “செல்க! சென்று படைமுகப்புக்கு வரும்படி ஆணையிடுக! அவர் மறுத்தாரெனில் அவரை படைத்தலைவர் பொறுப்பிலிருந்து நான் நீக்கியிருக்கிறேன் என்று கூறுக! நமது படைகள் எழட்டும். ஒருகணமும் பிந்த வேண்டியதில்லை” என்றான்.

# கார்கடல் - 78

தலைக்குமேல் இருளில் வௌவால்கள் சிறகடித்துச் சுழன்றுகொண்டிருப்பதை திருஷ்டத்யும்னன் உணர்ந்தான். அங்கே போர் தொடங்கிய பின்னர் அவ்வாறு வௌவால்கள் களத்தில் எழுந்து சுழன்றதை அவன் உணர்ந்ததில்லை. எங்கும் குமட்டலெடுக்கச் செய்யும் உப்புவாடை நிறைந்திருந்தது. வியர்வையும் குருதியும் கலந்தது. காற்றில் அசைவே இல்லை. எப்போதும் இரவில் குருக்ஷேத்ரத்தை நிறைத்திருக்கும் வலிமுனகல்களும் அழுகைகளும் இல்லை. இருளுக்குள் படைப்பெருக்கு முற்றாக அடங்கி துயில்கொண்டிருந்தது.

பாண்டவப் படைகளின் நடுவே சிறு மரப்பெட்டி மீது கால்களை விரித்து கைகளை இருபுறமும் ஏவலர்களிடம் அளித்து அமர்ந்திருந்தான். ஏவலர்கள் அவன் உடலில் குருதிப் பிசினுடன் சேர்ந்து இறுகி ஒட்டியிருந்த தோல்பட்டிகளை அவிழ்த்து மெல்ல கவசங்களை விடுவித்தனர். கவசங்கள் ஆடைகளுடன் ஒட்டியிருந்தன. ஆடைகளை அம்புமுனைகள் தசைகளுடன் சேர்த்து தைத்திருந்தன. கவசங்களை கழற்றுவதில் அதற்குள் நன்கு தேர்ந்துவிட்டிருந்த ஏவலர் முதலில் அம்பு பதிந்திருந்த இடங்களைச் சுற்றி ஆடைகளைக் கிழித்து கவசங்களை அப்பால் எடுத்து வைத்தனர். கந்தகமருந்துடன் கலந்து உருக்கிய தேன்மெழுகில் முக்கி எடுத்த மரவுரியை வலக்கையில் வைத்துக்கொண்டு இடக்கையால் அம்பு முனைகளை தசையிலிருந்து பிடுங்கி எடுத்தனர். குருதி சற்றே வரவிட்டு இருமுறை மரவுரியால்

துடைத்தபின் மெழுகுடன் சேர்த்து புண்ணின் மேல் வைத்து துணியால் சுற்றி கட்டினர்.

அவன் உடலெங்கும் குருதி உலர்ந்து பொருக்கோடியிருந்தது. மரவுரியை தைலம் கலந்த நீரில் முக்கி அவன் உடலை அழுத்தித் துடைத்தனர் மருத்துவ ஏவலர். அவன் கையுறைகளை வாளால் கிழித்து அகற்றினர். உலர்ந்த புண்ணிலிருந்து அகல்வதுபோல் குருதியுடன் பொருக்கு பிரிந்து தோலுறைகள் அகல அவன் கைகள் வெளுத்து சுருங்கி தெரிந்தன. காலில் அணிந்திருந்த இரும்புக்குறடுகளை இரு ஏவலர் கழற்றினர். பின்னர் அக்குறடுகளை அருகிருந்த மரவுரியால் அழுந்தத் துடைத்து குருதிப் பொருக்குகளை நீக்கி நறுமணச் சுண்ணத்தால் கால்களைத் துடைத்து பின்னர் மீண்டும் குறடுகளை அணிவித்தனர். ஒவ்வொரு கவசத்தை கழற்றுகையிலும் அவன் வலியுடன் முகம் சுளித்தான். அம்புகள் பிடுங்கப்படும்போது மெல்ல முனகினான்.

அவன் உடலைத் துடைத்தபின் கவசங்களை மரவுரியால் துடைத்து உடைந்திருந்த பகுதிகளை அகற்றி புதியன சேர்த்து மீண்டும் அவனுக்கு அணிவித்தனர். தோல்பட்டிகளை இறுக்கி முடிச்சுகளைப் போட்டு கவசங்களை உரிய இடங்களில் பொருத்தினர். கவசங்கள் தசைகளின்மீது வலுவுடன் அறையாமலிருக்கும் பொருட்டு உள்ளே அழுத்தப்பட்டு தகடுகளாக மாறிய மரவுரிச் சுருள்களை உரிய இடங்களில் வைத்து இறுக்கினர். பின்னர் தலைமை ஏவலன் சற்றே விலகி தலைவணங்க திருஷ்டத்யும்னன் எழுந்து நின்று இரு கைகளையும் விரித்தான். புதிய கையுறைகளை அவன் கைகளில் அணிவித்தனர். விரல்களை விரித்து நீட்டி அவற்றை நோக்கியபின் அவன் அருகே தன் தேர்

ஒருங்கிக்கொண்டிருப்பதை பார்த்தான். அதன் ஓசை அத்தனை நேரம் கேட்டுக்கொண்டிருந்தது, அவன் அதை ஓடும் தேரின் ஒலியென எண்ணிக்கொண்டிருந்தான்.

புண்பட்டிருந்த புரவிகள் அகற்றப்பட்டு புதிய புரவிகள் கட்டப்பட்டிருந்தன. அவற்றின் உடலில் தோல்பட்டைகளும் நுகமும் உரிய முறையில் பொருந்தியிருக்கிறதா என்று பாகன் இழுத்தும் அசைத்தும் நோக்கிக்கொண்டிருந்தான். இரு ஏவலர்கள் சகடங்களை ஆய்ந்து அச்சாணி உரிய முறையில் சுழல்கிறதா என்று நோக்கினார்கள். இறுகிய சகடம் தேரில் அசைவுகளை மிகுதியாக்கும். இறுக்கமற்ற சகடம் பள்ளங்களில் தேரை நிலைகுலையச் செய்யும். இரண்டுக்கும் நடுவில் ஓரிடம் அவர்கள் உள்ளத்தில் இருந்தது. ஒவ்வொரு முறை தேரை சீரமைக்கையிலும் மீண்டும் மீண்டும் இறுக்கி அதை ஒருக்கிக்கொண்டே இருப்பது தேர்வலர்கள் வழக்கம். போருக்கு எழும் வீரர் தேர்த்தட்டில் அமர்ந்த பின்னரும், அமரத்தில் ஏறி அமர்ந்து பாகன் கிளம்பலாமா என்று கேட்ட பின்னரும் அவர்கள் சகடத்தையும் அச்சையும் சீர்நோக்கிக்கொண்டிருப்பார்கள். ஒருகணம் இன்னும் ஒருகணம் என்று தேர்ப்பாகனிடம் கோருவார்கள்.

திருஷ்டத்யும்னனை நோக்கி புரவியில் வந்திறங்கிய சாத்யகி “நாம் இன்று வெறும் நாற்களச்சூழ்கைதான் அமைக்கப்போகிறோமா?” என்று கேட்டான். திருஷ்டத்யும்னன் “ஆம்” என்று உரைத்து திரும்பிப்பார்த்தான். அருகே நின்ற ஏவலன் குறிப்பை உணர்ந்து தன் கையிலிருந்த அம்பை நீட்டினான். அதை தலைகீழாகப் பிடித்து தரையில் கோடுகளை வரைந்து சூழ்கையை சாத்யகிக்கு காட்டினான் திருஷ்டத்யும்னன். சாத்யகி குனிந்து சற்று கூர்ந்து

நோக்கியபின் தலையசைத்தான். பொழுது சற்று ஒளிகொள்ளத் தொடங்கிவிட்டிருந்தது. இருமுறை கௌரவப் படைகளிலிருந்து முரசொலி எழுந்தது. “அவர்கள் தங்கள் படைகளை எழுப்பிக்கொண்டே இருக்கிறார்கள்... எப்பொழுது வேண்டுமென்றாலும் கௌரவப் படை எழுந்து வந்து நம்மை தாக்கக்கூடும்” என்று சாத்யகி சொன்னான்.

“நமது படைகள் ஒருங்கிவிட்டனவா?” என்றான் திருஷ்டத்யும்னன். “பெரும்பாலானவர்கள் இன்னும் துயிலெழவில்லை. உண்மையில் இது போர்க்களம் என்றே தோன்றவில்லை. நேற்று பகலிலிருந்து களம்பட்ட அனைவர் உடல்களும் சிதறி பரந்து கிடக்கின்றன. இன்றைய போர் அவ்வுடல்களின்மீது நின்றே நிகழ்த்தப்படவுள்ளது” என்ற சாத்யகி கோணலாக நகைத்து “பிணங்களின்மேல் காபாலிகர் நடனமிடுவார்கள் எனக் கேட்டிருக்கிறேன். போர்கள் நிகழ்ந்தனவா என கேட்டுப்பார்க்க வேண்டும்” என்றான். திருஷ்டத்யும்னன் “நாம் ஒருங்கியிருக்கவேண்டும். எக்கணமும் அவர்கள் நம்மை தாக்கக்கூடும். நேற்று அவர்கள் நமக்கு பேரிழப்பை உருவாக்கியிருக்கிறார்கள். நாம் உளம் சோர்ந்திருப்போம் என்று கருதி அச்சோர்வைக்கொண்டு வெல்ல திட்டமிடுவார்கள். இன்னும் அரைநாழிகைக்குள் நமது படைகள் அனைவரும் எழுந்தாகவேண்டும்” என்றான். சாத்யகி “பலமுறை போர்முரசு ஒலித்தாகிவிட்டது. நூற்றுவர்வரை படைகளை எழுப்பும்பொருட்டு ஆணைகளை கொண்டு சேர்த்துவிட்டேன். ஆனால் எவர் துயில்கிறார்கள், எவர் இறந்திருக்கிறார்கள் என்றுகூட பிரித்தறிய முடியாத இந்தக் களத்தில் எப்படி படைகளை எழுப்புவது?” என்றான்.

திருஷ்டத்யும்னன் சலிப்புடன் தலையை அசைத்து “போர் நிகழட்டும். சகடங்களும் புரவிக்குளம்புகளும் கால்களும் மிதித்துச் செல்லும்போது தங்களை உயிருடன் இருப்பதாக உணர்பவர்கள் எழுந்துகொள்வார்கள்” என்றான். பின்னர் சிரித்து “பிறிதொன்றையும் செய்வதற்கில்லை… எழுந்து சாவதா கிடந்தே சாவதா என அவர்கள் முடிவெடுக்கட்டும்” என்றான். சாத்யகி “இன்று நீங்கள் ஆற்றப்போவதென்ன என்று பாண்டவப் படையே காத்திருக்கிறது” என்றான். திருஷ்டத்யும்னன் முகம் மாறினான். “பிறவிப்பொறுப்பு…” என்றான் சாத்யகி. திருஷ்டத்யும்னன் “பிறப்பிலேயே பெரும்பாலும் வாழ்க்கை முடிந்துவிடுகிறது அனைவருக்கும்” என்றான். சாத்யகி “நான் என் வாழ்க்கையை தெரிவுசெய்தேன்” என்றான். திருஷ்டத்யும்னன் அவனை கூர்ந்து நோக்கி “என்ன வேறுபாடு?” என்றான். சாத்யகி திகைப்புடன் நோக்கினான். “நாம் நம்மை படைக்க பலிபீடங்களை கொண்டிருக்கிறோம். எனக்கு அது தந்தையால் அளிக்கப்பட்டது. நீர் அதை ஈட்டிக்கொண்டீர்.”

சாத்யகி “ஆம்” என்றான். தலையசைத்து “எண்ணிப்பார்க்கலாகாது” என்று சொல்லி தலைவணங்கிவிட்டு கிளம்பிச் செல்ல திருஷ்டத்யும்னன் பாகனிடம் “என் தேரை போர்முனைக்கு கொண்டு செல்க!” என்று ஆணையிட்டபின் திரும்பிப்பார்த்து ஏவலரிடம் புரவிக்காக கைகாட்டினான். ஏவலர் அவனருகே கொண்டுசென்ற புரவியில் ஏறிக்கொண்டு படைகளினூடாகச் சென்றான். பாண்டவப் படை பெரும்பகுதி நிலம்படிந்து கிடப்பதை கண்டான். ஆங்காங்கே சிலர் எழுந்து அமர்ந்து சூழ்ந்திருந்த இளவெயிலில் கண்கள் கூச முகம் பொத்தி குனிந்திருந்தனர். அவர்களின் விழிகளிலிருந்து நீர் வழிந்தது. அதை கைகளால் துடைத்தபோது உறைந்த குருதி கரைந்து அது புதுச்சோரி என தெரிந்தது. சிலர் குளம்படி

ஓசையைக் கேட்டு உடல் விதிர்க்க திகைத்து நோக்கினர். எவரும் உளநிலை தெளிவுடன் இல்லை என்பதை அவன் உணர்ந்தான். படைகளினூடாகச் சென்று யுதிஷ்டிரரின் நிலையை அடைந்தபோது அங்கு நகுலனும் சகதேவனும் நின்றிருப்பதை கண்டான். யுதிஷ்டிரர் தேர் மறைவில் கவசங்களை அணிந்துகொண்டிருந்தார்.

புரவியிலிருந்து அவன் இறங்கியதும் சகதேவன் "உளவுச்செய்தி வந்துள்ளது. அவர்கள் நம்மை தாக்கவே எண்ணுகிறார்கள்" என்றான். "புலரி எழுந்துவிட்டது" என்று திருஷ்டத்யும்னன் சொன்னான். "அவர்களும் நம்மைப்போலவே நிலம்படிந்து துயின்றுகொண்டிருக்கிறார்கள். நம்மைப்போலவே தங்களது படைகளை முரசுகொட்டி எழுப்ப முயன்றுகொண்டிருக்கிறார்கள். இப்போது எவர் முதலில் எழுவார்கள் என்பதுதான் எவர் படைகொண்டு வருவார்கள் என்பதை முடிவு செய்கிறது." யுதிஷ்டிரர் தேருக்குப் பின்னாலிருந்து புதிய கவசங்களுடன் வந்து "பாஞ்சாலனே, இன்றைய போர் உன்னுடையது. நேற்று உன் தந்தை களம்பட்டதற்கு இன்று நீ பழிநிகர் செய்தாகவேண்டும். இங்குள்ள அத்தனை படைவீரர்களும் அதை எதிர்பார்க்கிறார்கள். உன் குடிதெய்வங்களும் மூதாதையரும் விண்ணில் காத்திருக்கிறார்கள்" என்றார்.

திருஷ்டத்யும்னன் "ஆம், என் கடன் அது" என்றான். "துரோணர் படைமுகப்பில் எழுவாராயின் நமது வில்லவர் இருவர் உனக்கு துணை வருவார்கள். சாத்யகியையும் சுருதகீர்த்தியையும் நீ சேர்த்துக்கொள். அவரைச் சூழ்ந்துகொண்டு தாக்கு. அவருக்கு படையுதவிக்கு வர இன்று அங்கு அங்கனும் அஸ்வத்தாமனும் மட்டுமே உள்ளனர். அங்கனை அர்ஜுனன் எதிர்கொள்ளட்டும்.

அஸ்வத்தாமனை மந்தன் எதிர்கொள்ளட்டும். இன்றைய நாளே துரோணர் களம்பட்டாகவேண்டும். இல்லையேல் இப்போர் முடிவுறவில்லை என்றே பொருள்” என்றார். திருஷ்டத்யும்னன் தலைவணங்கினான். அவன் வஞ்சினம் ஏதேனும் உரைப்பான் என்று எதிர்பார்த்தவர்போல் யுதிஷ்டிரர் முகம் நோக்கி நின்றார். அந்த அமைதியை உணர்ந்து திருஷ்டத்யும்னன் தலைதூக்கி "பழிநிகர் கொள்ளவே நான் பிறந்திருக்கிறேன், அரசே. நன்குணர்ந்திருக்கிறேன். இது என் நாள்” என்றான்.

“நமது படைகளை எழுப்பவேண்டும்” என்று சகதேவன் சொன்னான். யுதிஷ்டிரர் "ஏன்?” என்றார். “அரசே, அனைவரும் துயில்கொண்டிருக்கிறார்கள்” என்றான் சகதேவன். “வெயில் எழவிருக்கிறது” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “அவர்களை வெயிலே எழுப்பும்.” திருஷ்டத்யும்னன் “இளையவர் பீமசேனர் எழுந்துவிட்டாரா?” என்றான். “எழுந்துவிட்டார்” என்றான் சகதேவன். யுதிஷ்டிரர் “அவன் தென்காட்டுக்குச் சென்று அகிபீனா உண்டு படுத்தான். ஆனால் அரைநாழிகைகூட துயில்கொள்ளவில்லை. நான் சென்று அவனிடம் பேசலாம் என்று எண்ணினேன்... வேண்டாம் என இவன் தடுத்துவிட்டான்” என்றார். திருஷ்டத்யும்னன் “அரசியிடம் செய்தி சொல்லப்பட்டதா?” என்றான். “ஆம், நேற்றே தூதன் சென்று உரைத்துவிட்டான்” என்றான் சகதேவன். யுதிஷ்டிரர் "நம் குடியில் களம்படும் மூன்றாவது மைந்தன் கடோத்கஜன். ஆனால் அன்னைக்கு அவனே முதல் பெயர்மைந்தன். செய்தி அறிந்தால் உளம்தாங்கமாட்டார்கள் என எண்ணினேன். ஆனால் ஒரு சொல்லும் உரைக்காமல் வெறித்த விழிகளுடன் கேட்டிருந்தார்கள், பின்னர் எழுந்து உள்ளே சென்றுவிட்டார்கள் என்று தூதன் சொன்னான்” என்றார்.

“ஒன்றும் உரைக்கவில்லையா?” என்று திருஷ்டத்யும்னன் கேட்டான். “அவன் களம்படுவான் என அன்னைக்குத் தெரிந்திருக்கும்… அவனுக்கு அரசகுருதியில் மணம்புரிந்து வைத்ததேகூட அதன்பொருட்டே என இப்போது தோன்றுகிறது” என்றார் யுதிஷ்டிரர். “நான் எண்ணிப்பார்த்தேன், கடோத்கஜன் இக்களத்தில் இவ்வாறு இறப்பதே நன்று. அக்குடி முற்றாக மாறிவிட்டது. அவர்களின் குடியின் இறுதி அரக்கர்கள் இக்களத்தில் மடிந்தவர்கள்… இன்று பாரதவர்ஷத்தின் மாவீரனாக சூதர்கள் பாட அவன் விண்ணேகினான்.” திருஷ்டத்யும்னன் சலிப்புடன் எழுந்துகொண்டு “நான் களத்திற்குச் செல்கிறேன்” என்றான். “உன் வஞ்சினம் வெல்க!” என்றார் யுதிஷ்டிரர். திருஷ்டத்யும்னன் தலைவணங்கி விடைபெற்றான்.

புலரிவெயில் ஒளிகொண்டு மெல்ல நிமிர்ந்துகொண்டிருந்தது. நிழல்கள் குறுகி தங்கள் பொருட்களை நோக்கி சென்றுகொண்டிருந்தன. திருஷ்டத்யும்னன் தன் புரவியில் படைமுகப்பிற்கு வந்து நின்றான். எங்கும் பூத்திருந்த ஒளி அவனை உளமெழச் செய்தது. புலரிவெளிச்சத்தைப் பார்த்து நெடுநாட்களாயிற்று என்று எண்ணினான். ஒளி ஒரு நீர்மைபோல் முகில்களின் இடைவெளிகளினூடாக நீண்ட சட்டங்களாகி போர்க்களத்தில் விழுந்திருந்தது. களம் நிறைத்து படுத்திருந்த உடல்களின் ஆவி அதில் பொற்புகை என மெல்ல நெளிந்தது. பல்லாயிரம் சிறு பூச்சிகள் அவ்வொளியில் அனல்பொறிகளென சுடர்கொண்டு சுழன்றன. அருகிருந்த காடுகளிலிருந்து பறவைக்கூட்டங்கள் வானில் தங்களை விசிறிக்கொண்டு அலைகளாகச் சுழன்று பின் ஐயம் தணிந்து கீழிறங்கி விழுந்துகிடந்த உடல்கள் மேல்

எழுந்து அமர்ந்து கொத்தி சிறகடித்து குரலெழுப்பி ஒளி துழாவி மீண்டும் வந்தமர்ந்தன.

இறப்பின் வெளிக்கு மேல் எரிந்து நின்றிருந்தது எனினும் ஒளி அவையனைத்திற்கும் அப்பாற்பட்ட பிறிதொன்றென்றே தோன்றியது. துஞ்சியும் துயின்றும் கிடந்திருந்த ஒவ்வொருவரையும் வானிலிருந்து வந்து தொட்டு எழுப்ப முயலும் கைகள். அங்கிருந்தோர் விழித்துக்கொண்டால் கனவின் அரைமயக்கில் அச்சாய்ந்த ஒளிப்பாதைகளினூடாக நடந்து விண்ணிலேறிவிட முடியும். எத்தனை தூயது ஒளி. நெருப்பு என்றும் தூயது என்கிறார்கள். நெருப்புக்கும் புகையுண்டு. கெடுமணமும் உண்டு. ஒளியே தூயது. மண்ணைக் கட்டும் எதுவும் ஒளிக்கு இல்லை. காலமில்லை, தொலைவில்லை. அது இங்குள்ளதே அல்ல. ஐம்பெரும்பருக்களுக்கும் அயலானது. அது விண்ணுக்குரியது. ஆனால் அது தொட்டாலொழிய இங்குள்ள எதற்கும் உருவில்லை, வண்ணம் இல்லை. இங்குள்ள அழகனைத்தும் ஒளியின் மாறுதோற்றங்களே. ஒளி நாம் அறிந்திருப்பது அல்ல. நாமறிவது ஒளியின் விழித்தோற்றத்தை மட்டுமே. விழியும் பருப்பொருளே. அங்கே விண்ணில் விழிகளுக்கு அப்பாற்பட்ட சிதாகாயத்தில் ஒளி பிறிதொன்று. அது பிரம்மம்.

அவன் தானிருக்கும் இடத்தையும் பொறுப்பையும் மறந்து அவ்வொளியின் வடிவங்களை பார்த்துக்கொண்டிருந்தான். முகில்களின் விளிம்புகள் கண் கூசும் அளவுக்கு வெண்ணிற எரி சூடியிருந்தன. காலை காலை என்று உள்ளம் கூத்திட்டது. காம்பில்யத்தின் தெருக்களில் புலரியில் எழும் ஒளியில் புரவிச் சாணமும் யானைப் பிண்டமும் எழுப்பும் மெல்லிய நீராவி அலையுறும். புரவியில் தெருக்களினூடாகச் செல்கையில்

எங்கும் பசுஞ்சாணத்தின் மணமே நிறைந்திருக்கும். ஆலயமுகப்புகள், இல்லமுகப்புகள் எங்கும் சாணியைக் கரைத்து தெளித்திருப்பார்கள். ஆற்றை நோக்கி இறங்கும் சரிவில் கொட்டில்களிலிருந்து அவிழ்த்து விடப்பட்ட பசுக்கள் கூட்டம் கூட்டமாக இறங்கிச் சென்றுகொண்டிருக்கும். அவற்றைச் சூழ்ந்து பறக்கும் சிற்றுயிர்கள் மின்மினிகள் என வெயிலில் ஒளிவிடும்.

நாளும் புலரியில் எழுவதை அவன் தவிர்க்கக்கூடா நோன்பாகக் கொண்டிருந்தான். காம்பில்யத்தின் அரச குடியினர் எவரும் புலரியில் எழுவதில்லை. துருபதர் இரவு துயில்வதற்கு நெடுநேரமாகும். அவை கூடி அமைச்சர்களை அனுப்பிய பின்னர் அணுக்கர்களுடன் நாற்களமாட அமர்வார். இரவெல்லாம் அவருடன் அமர்பவர் அமைச்சரான பத்ரர். ஒவ்வொரு வெற்றியும் மேலும் வெல்வதற்கான வெறியையும் ஒவ்வொரு தோல்வியும் இன்னும் இன்னும் என வஞ்சத்தையும் உருவாக்கும். உடல் தளர்ந்து கைகளிலிருந்து காய்கள் நழுவுவது வரை ஆடிக்கொண்டிருப்பார். எனவே அவர் புலரியொளியை பார்ப்பதே இல்லை. திருஷ்டத்யும்னன் அரிதாகவே மது அருந்துவான். எனவே அவை கூடி முடிந்ததுமே துயின்று முதற்பறவை ஒலியிலேயே எழுந்துவிடுவான். எழுந்ததுமே முதல் எண்ணம் ஆற்றின் குளிர்நீரொழுக்குதான்.

காலைஒளி விரிந்த ஆற்றில் நீராடுவது அன்றைய நாள் முழுக்க உவகையை அளித்துவிடுகிறது என்று துரோணர் முதல்நாளிலேயே அவனிடம் சொன்னார். துரோணரின் குருநிலையில் முதல்ஒளி நோக்கி நீரள்ளி விட்டு அதர்வ வேதம் உரைத்து எழுகையில் அன்றைய கல்வி பெரும்பாலும்

முடிந்திருக்கும். அதன் பின்னர் நூல்பயில்தலும் காடுகளுக்குள் உலாவுதலும் தோழர்களுடன் உரையாடுவதும் அவரவர் விருப்பப்படியே நிகழும். “புலரியில் எழும் தெய்வங்கள் மானுடரிடம் சொல்கின்றன, இங்குள்ள அனைத்தும் புதியவை என்று. நோக்கு விழிதொட்டு விலகும் கணத்திலேயே இங்கு ஒவ்வொன்றும் பழையதாகிக்கொண்டிருக்கிறது. மலர்கள் வாடத்தொடங்கிவிடுகின்றன பனித்துளிகள் உதிரத்தொடங்கிவிடுகின்றன. முகில்கள் எரிந்து எழுகின்றன. புதிய உலகு புதிய எண்ணங்களுடன் நம்முன் வருகிறது. புதிய கனவுகளை அளிக்கிறது. புலரியில் எழுபவன் ஒவ்வொரு நாளும் புதியவனாக பிறந்தெழுகிறான்.”

துரோணர் என்றும் கூரிய அம்பின் ஒளியைப் பார்த்தபடி கண்விழித்தார். அவருடைய மஞ்சத்திற்கு அருகே கூர்மின்னும் அம்பு வைக்கப்பட்டிருக்கும். அவன் முன்னரே சென்று குடில்வாயிலில் நின்றிருப்பான். அவர் மெல்லிய குரலில் தன் ஆசிரியர்களின் பெயர்களைச் சொன்னபடி விழித்தெழுவார். கண்களைத் திறக்காமல் கைநீட்டி அந்த அம்பை எடுத்து கண்ணெதிரே கொண்டுவந்து விழிதிறந்து அதன் ஒளியை சிலகணங்கள் நோக்கி நுண்சொற்களால் அதை வாழ்த்தியபின் எழுந்து அவனை நோக்குவார். ஒருமுறை அவன் அதைப்பற்றி அவரிடம் கேட்டான். “படைக்கலத்தில் விழிதிறக்கிறீர்கள், ஆசிரியரே, நான் பிறிதெவரும் இவ்வாறு செய்வதை கேள்விப்பட்டதே இல்லை.” துரோணர் புன்னகையுடன் மலர்களை நோக்கி நடந்தபடி “பிறிதெதை நோக்கவேண்டும் என எண்ணுகிறாய்?” என்றார். “இந்த மலர்களை. இளந்தளிர்களை” என்று அவன் சொன்னான். “அந்தணர் சுடரொளியை நோக்குவர். துர்வாசர் மெல்லிய இறகுகளை முதலில் நோக்குவார்.”

"அம்பு ஒரு அகல்சுடர் அல்லவா?" என்றார் துரோணர். "அழகிய மலரிதழ். இளந்தளிரின் கூர் அம்புக்கு உண்டு. இறகின் மென்மையும் அம்பிலுண்டு." அவன் அவரை நோக்கிக்கொண்டு நடந்தான். "அம்பு வெறும் படைக்கலம் அல்ல. அது ஒரு கருவியென இங்கே தோன்றியது. மானுடனைக் காத்தது, உணவூட்டியது, அவன் கையும் நாவும் கண்ணும் நகமும் பல்லும் ஆனது. அவன் குடிபெருகச் செய்தது. அவனுடன் உறக்கிலும் விழிப்பிலும் இருந்தது. அதை தவமென இயற்றினர் நம் முன்னோர். தவம் சென்றுபடியும் செயல் கலையாகிறது. கலை அழகை உருவாக்குகிறது. அழகின்பொருட்டு அது சுற்றிலும் தேடுகிறது. தொட்டுத்தொட்டு அனைத்து அழகுகளையும் அறிந்து அதை தான் நடிக்கிறது" என்று துரோணர் சொன்னார். "கலை முதிர்கையில் அது வேதமாகிறது. கலை என்பது நிகழ்வு. நிகழ்வின் நெறிகளை மட்டும் தொட்டுச் சேர்த்தால் அது சொல். சொல்லிச் சொல்லி கூர்கொண்ட சொல் வேதம்."

குருக்ஷேத்ரக் களத்தில் ஒவ்வொரு நாளும் கருக்கிருளிலேயே எழுந்து அவைசூழ்ந்து களம் வந்து முதலொளியிலேயே படைக்கலம் எடுத்து வெற்றிமுழக்கமிட்டு போர்நிகழ்த்தத் தொடங்கினாலும் ஒரு நாளும் புலரியாடவில்லை. இக்களம் வந்தபின் இதுவே முதல் புலரி. அச்சொல் எழுந்ததுமே அவன் மெய்ப்பு கொண்டான். புலரி, முதற்புலரி. இனி ஒரு புலரி இல்லை எனில் இதன் மதிப்பு என்ன? அருமணிகள் புலரியின் சிறு துளிகள். இது அருமணிகளின் பெருங்கடல். அவன் மீண்டும் மீண்டும் மெய்ப்பு கொண்டான். வாழ்ந்த ஒவ்வொரு கணத்தையும் அங்கு நின்று நினைவுகூரமுடியும் எனத் தோன்றியது. அவன் உடல் குளிரில் நடுங்கியது. குளிர்தான், கொடிகள் எழுந்து பறக்க தென்காற்று வந்து அவனை தழுவிச்

சுழன்றது. மணிகள் ஓசையிட்டன. குதிரைகள் கனைத்தன. காற்று மேலும் விசைகொண்டு கடந்துசெல்ல கவசங்களுக்குள் காதில் ஓசை சீறியது.

அக்கணம் கௌரவப் படைகளில் இருந்து அலை எழுவதுபோல் ஓசை புறப்பட்டது. வில்லையும் அம்பையும் கையிலெடுத்தபடி அவன் திரும்பி நோக்க கௌரவப் படையின் தென்கிழக்கு மூலையிலிருந்து மறுஎல்லை நோக்கி ஓர் அலை சுருண்டு செல்வதை கண்டான். படையினர் எழுந்தமர்ந்து ஓலமிட்டனர். தலையை பற்றிக்கொண்டு குனிந்தும் எழுந்தும் அவர்கள் தவிப்பதைக் கண்டு திகைத்து கண்கள்மேல் கை வைத்து நோக்குகூர்ந்தான். கொடுந்தெய்வமொன்றின் மூச்சுக்காற்று அவர்கள் மேல் பட்டதுபோல. அல்லது அனலெழுந்து பரவுகிறது. சகுனியின் போர்முரசு நடைமாறி வெறிகொண்டு ஒலிக்கத் தொடங்கியது. எழுந்தவர்கள் அவ்வொலியை கேட்டனர். ஒருவரோடொருவர் முட்டி மோதினர். பின்னர் தென்கிழக்கு மூலையிலிருந்து கௌரவப் படை நெளிந்து ஓர் அலையென்றாகி எழுந்துவந்து பாண்டவப் படையை தாக்கத் தொடங்கியது. நீண்ட ஆடை ஒன்றின் ஒரு மூலையைப் பற்றி இழுப்பதுபோல எனத் தோன்றியது.

பாண்டவப் படையின் முகப்பில் மிகச் சிலரே எழுந்து நின்றிருந்தனர். பலர் படைக்களத்தில் அமர்ந்திருந்தனர். கௌரவப் படை வந்து அறைந்து எழுந்தவர்களின் தலைகளை கொய்தெடுத்தது. மிதிபட்டு அலறியவர்களை வேல்களால் குத்தி சுழற்றியிட்டனர். திருஷ்டத்யும்னன் தன் இடது கால் துடித்துக்கொண்டிருக்க வில்லை இறுகப் பற்றியபடி பாண்டவப் படையை பார்த்துக்கொண்டிருந்தான். அவர்களை எழுப்புவதற்கு எந்த வழியுமில்லை. பிறிதொன்று அங்கு நிகழவேண்டும்.

விண்ணிலிருந்து அவர்கள் அனைவர் கனவுக்குள்ளும் சென்று முழங்கும் முரசொலியுடன் தெய்வமொன்று எழவேண்டும். தன் விழிகள் கற்பனையை நனவெனக் காட்டுகின்றனவா என்று ஐயுறும்படி பாண்டவப் படை பின்வாங்கி சுருண்டு பின்னர் ஓர் அலைவளைவென்றாகி எழுந்து வந்து கௌரவப் படையை எதிர்கொள்வதை கண்டான்.

பல்லாயிரம் படைவீரர்கள் களத்தில் விழுந்து துயின்றுகொண்டிருந்த நிலையிலிருந்தே வேல்களையும் வாள்களையும் விற்களையும் எடுத்தபடி களம் புகுந்தனர். தேர்களிலும் புரவிகளிலும் ஏறிக்கொண்டனர். யானைகளையும் அத்திரிகளையும் பற்றி வழிநடத்தினர். எந்த ஆணையுமிலாது பாண்டவப் படை முந்தைய நாள் போர் முடியும்போதிருந்த அதே சூழ்கையை தான் அடைவதை அவன் கண்டான். அச்சூழ்கை ஒரு நுண்வடிவென அவர்களுக்குள் இருந்தது போலும். அச்சூழ்கையிலேயே அவர்கள் துயில்கொண்டிருந்தார்கள். அவர்கள் உலவிய அக்கனவுகளிலும் அச்சூழ்கை இருந்தது. விழித்து எழுந்த கணமே மறுஎண்ணமின்றி அச்சூழ்கையில் தங்களிடத்தில் சென்று அமைந்தனர்.

திருஷ்டத்யும்னன் தன் கையை உயர்த்தி “தாக்குங்கள்! எழுந்து போரிடுங்கள்! பின்னடைய வேண்டாம்! ஒருகணமும் தயங்க வேண்டாம்! வெற்றி நம்முடையதே! வெற்றிவேல்! வீரவேல்!” என்று ஆணையிட்டபடி பாண்டவப் படைகளின் முகப்பில் நின்று கௌரவர்களை எதிர்கொண்டான். இரு படைகளும் ஊடுகலந்து போரிடத் தொடங்கியபோது சில கணங்களிலேயே அந்தப் போர் முந்தையநாள் அந்தியில் நிகழ்ந்ததன் நீட்சி

என்று தோன்றியது. நடுவே ஓர் இரவு கடந்து சென்றதே மறந்துவிட்டதுபோல.

படைமுகப்பில் துரோணரின் தேர் எழுந்து அணுகுவதை திருஷ்டத்யும்னன் கண்டான். எதிரே இருந்து எழுந்த காலை ஒளியில் அவருடைய தாடி அனல்விழுதுகளென சுடர்ந்து நெளிந்தது. அவருடைய கவசங்களில் செம்மை தளும்பியது. அவர் தொடுத்த அம்புகள் மின்னி மின்னி எழுந்து வந்து பாண்டவப் படைகளை அறைந்தன. அவன் தன்னை மறந்து அவரையே நோக்கிக்கொண்டிருந்தான். அவருடைய பறந்து சுழன்ற கைகளை. விழிதாழ்த்தி அவர் கால்களை பார்த்தான். பின்னந்தியில் அவர் துயில்கொள்கையில் அக்கால்களை அவன் மெல்ல வருடிக்கொண்டிருப்பான். அழுத்துவது அவருக்கு பிடிக்காது. மெல்லிறகால் என நீவிவிடவேண்டும். அவன் உள்ளத்தால் அக்கால்களை வருடினான். பின்னர் தன் வில்லைக் குலைத்து நாணேற்றி முதல் அம்பை அவரை நோக்கி தொடுத்தான்.

# கார்கடல் - 79

முதல் அம்பிலேயே துரோணர் தன் முழு ஆற்றலையும் காட்டினார். அந்த நீளம்பு சென்று அறைந்த பாஞ்சால வில்லவன் தேரிலிருந்து தெறித்து பின்னால் சென்றுவிழ அவனை நிலத்துடன் குத்தி நிறுத்தி ஆடியது அது. பாஞ்சால வீரர்கள் ஒருகணம் திகைத்த பின்னர் வெறியுடன் கூச்சலிட்டபடி துரோணரை நோக்கி பாய்ந்தார்கள். துரோணர் அன்று முற்றிலும் வேறொருவராக எழுந்திருந்தார். அவர் பற்கள் தெரியச் சிரிப்பதை திருஷ்டத்யும்னன் கண்டான்.

அவருடைய கைகளில் இருந்து எழுந்த அம்புகளில் முன்பெப்போதும் இல்லாத விசை இருந்தது. அவை சென்று அறைந்த தேர்கள் சிம்புகளாக தெறித்தன. புரவிகளின் உடலில் பாய்ந்த அம்புகள் மறுபக்கம் செந்நிற மீன் என முனைநீட்டின. மத்தகம் ஒன்றில் சென்று தறைத்த அம்பு அந்த யானையை தூண்கள் சரிந்த கல்மண்டபம் என அசையச்செய்து பக்கவாட்டில் சரித்தது.

“செல்க… சூழ்ந்துகொள்க!” என்று கூவியபடி திருஷ்டத்யும்னன் துரோணரை தாக்கினான். அவனுள் அத்தனை நாண்களும் தளர்ந்து அவிழ்ந்துகிடந்தன. அங்கே தலைகொடுத்து விழப்போவதாகவே தோன்றியது. “கொல்க! ஆசிரியரல்ல அவர், நம் அரசரின் குருதிகுடித்த பேயுரு. நம் குலக்கொழுந்துகளை கொன்றழித்த அரக்கன்… கொல்லுங்கள்… கொன்று முன்னேறுங்கள்!” என்று திருஷ்டத்யும்னன் கூவினான். அக்கூச்சலை அவனுள் உறைந்த புண்கள் ஏற்றுவாங்கி எரிந்தேறின. அவன் நரம்புகள் அமிலம் கொண்டன. தசைகள் முறுக்கேறி துடிக்க அவன் நீளம்புகளை எடுத்து துரோணரை அறைந்தான். “கொல்லுங்கள்! கொன்றுசெல்லுங்கள்!” என கூவிக்கொண்டே இருந்தான்.

துரோணரை எதிர்த்து அம்புகளை பெய்தபடி “எந்தையின் குருதிக்கென வந்துள்ளேன்… நீ அந்தணன் என்றால் இரந்துபெறுக உன் உயிரை!” என்று கூவினான். “பொன்னுக்கும் மண்ணுக்கும் விழைவுகொண்டு வேதச்சொல் துறந்த கீழ்மகன் நீ. உன் குருதியிலாடிய என் அம்பை உருக்கி வேள்விக்கரண்டி செய்வேன். எங்கள் நாட்டு வேள்விகளில் பன்னீராயிரம் முறை அவியில் நெய்யூற்றி அது உனது கடன் கழிக்கும்… கீழ்மகனே, எழுக உன் ஆண்மை… உனது தெய்வங்களால்

கைவிடப்படுவதை நீ காண்பாய்...” என்று திருஷ்டத்யும்னன் கூவினான்.

அந்த ஒவ்வொரு பழியுரையும் அவன் சினத்தை மேலும் மேலும் கிளர்த்தி உச்சவெறிகொண்டு எழச்செய்தது. அதனூடாக அவன் தன்னை பெருக்கிக்கொண்டான். கைகளாயிரம் விழிகள் பல்லாயிரமென களத்தில் எழுந்தான். ஆனால் பிறிதோரிடத்தில் அவனுள் உள்ளம் சுருண்டு பின்னடைந்துகொண்டே இருந்தது. “நேற்று உன் தந்தையைக் கொன்ற அம்பின் உடன்பிறப்பு என் ஆவநாழியில் உள்ளது. உன்னை அந்த அம்பால் கொல்கிறேன். உன் குடியில் எஞ்சிய மைந்தனை என் மைந்தன் கொன்றழிப்பான். கீழ்பிறப்பே, நீ யார்? அனலிடைப் பிறந்தவன் என்றால் என் அம்புக்கு எதிர்நில். காட்டரக்கர் வீசிச்சென்ற மைந்தன் என்றால் தப்பி ஓடு” என்று துரோணர் கூவினார்.

அந்தக் குரலில் இருந்த வெறியிலிருந்து திருஷ்டத்யும்னன் ஒன்றை உணர்ந்தான், அவரும் தன்னைப்போலவே உள்ளம் சுருண்டுவிட்டிருக்கிறார். சொல்லிச்சொல்லி அனலை ஏற்றிக்கொள்கிறார். அது அவனுக்கு மேலும் ஊக்கத்தை அளித்தது. “நான் இக்களத்தில் உன்னை கொல்வேன். இரந்து பெற்ற மண்ணை ஆளும் உனது மைந்தனை நாளை கொல்வேன். பாஞ்சாலம் விடுதலைகொள்ளும்... எங்கள் மண்சூடிய இழிவு அகலும்” என்று திருஷ்டத்யும்னன் கூச்சலிட்டான். “இரந்து பெற்ற மண்ணை ஆளும் அந்த நெறியிலா அந்தணனால் கறைபடிந்த மண்ணை உனது குடியின் குருதிகொண்டு கழுவுகிறேன்...”

அஸ்வத்தாமனைப் பற்றிய குறிப்பு துரோணரை உச்சவெறிகொண்டு எழச்செய்தது. “ஆணிலியே, கீழ்மகனே” என்று கூவியபடி அவர் மேலும் மேலும் அம்புகளால்

திருஷ்டத்யும்னனை தாக்கினார். அவன் அந்த அம்புகளை அம்புகளால் முறித்தான். அவருடைய கவசங்கள் மேல் அம்புகளால் அறைந்தான். அவருடைய தேர்ப்புரவிகளில் ஒன்றின் கழுத்தை அறுத்தான். அவனுடைய வெறிக்கு இடம்கொடுத்து அவர் மேலும் மேலும் பின்னடைந்தார். அவர் பின்னடைவது இயல்பாக இல்லை என உணர்ந்தாலும் அவனை அது கிளர்ச்சிகொள்ளச் செய்தது. அவரை அறைந்து கவசங்களை உடைத்தான். அவர் இருமுறை அவன் அம்புகளிலிருந்து தப்ப தாவிப் பின்னடைந்து தேரிலிருந்து தொங்கிச்சுழன்று மேலெழுந்தார். ஒரு புள்ளியில் அவன் உள்ளம் அதுவே எல்லை என உணர்ந்த கணமே அவருடைய அம்பு வந்து அவனை அறைந்தது. அவன் அந்த அதிர்வில் நிலைகுலைந்த கணம் மேலும் மேலும் அம்புகள் வந்து அவன் கவசங்களை பிளந்தன.

பாகன் தேரை பின்னெடுக்க "மூடா! முன்னேறு... முன்னேறு... இன்றே இவனைக் கொன்று திரும்புவேன்" என்று திருஷ்டத்யும்னன் கூவினான். தேரைத் திருப்பவா வேண்டாமா என பாகன் தயங்க "முன்னேறு... முன்னேறு" என்று திருஷ்டத்யும்னன் அவனை உதைத்தான். பாகன் தேரை முன்னெடுத்த கணத்தில் பிறையம்பால் அவன் தலையை அறுத்தெறிந்தார் துரோணர். புரவிகளில் ஒன்று வெட்டுண்டு சரிந்தது. பிற புரவிகள் நிலையழிய தேர் சரிந்தபடி சென்றது. அவன் தாவுவதற்குள் வில்லின் நாண் அறுந்தது. அவன் ஆவக்காவலன் அலறியபடி விழுந்தான். அவன் தன் கதையை எடுத்துக்கொண்டு அலறியபடி முட்டிமோதிய புரவிகளின் முதுகில் கால்வைத்து தாவி நிலத்தில் இறங்கிய கணம் அவன் கழுத்தருகே துரோணரின் மெல்லிய அம்பு ஒன்று தைத்தது.

திருஷ்டத்யும்னனின் உடல் குளிர்கொண்டது. அத்தனை நரம்புகளும் இழுத்துக்கொண்டு அதிர செவிகளில் மூளலோசையை கேட்டான். மூக்கில் முடிபொசுங்கும் கெடுமணம் எழுந்தது. கண்களில் தெரிந்த காட்சிகள் வண்ண அலைகளாயின. அவன் கையை ஊன்றி எழ முயன்றான். அவ்வெண்ணத்தை அவன் உடல் அறியவேயில்லை. அச்சத்துடன் அவன் தன் உடலை உள்ளத்தால் உலுக்கினான். கால்களையும் கைகளையும் அறைந்து கொண்டான். உடல் பிணமெனக் குளிர்ந்துகிடக்க அதில் சிக்கிக்கொண்ட மெல்லிய ஆடைபோல் சித்தம் தவித்துப் பறந்தது. துரோணர் கொக்கி அம்பு ஒன்றை ஏவி அவன் கவசத்தில் அதை சிக்கவைத்தார். அதனுடன் இணைந்த சரடைப்பற்றி இழுத்து அவனை அருகில் கொண்டு சென்றார். கையால் சரடைப்பற்றிச் சுழற்றி தன் தேர்த்தூணில் கட்டினார்.

திருஷ்டத்யும்னன் சிக்கிக்கொண்டதைக் கண்டு வில்லுடன் வந்த பாஞ்சால வீரர்களை அம்புகளால் அறைந்து அறைந்து வீழ்த்தியபடி தேரைப் பின்னிழுத்து கொண்டுசென்றார். அவன் தேர்க்காலில் கட்டப்பட்டு தரையில் இழுபட்டு உடன்சென்றான். தன் உடல் உடைந்த சகடங்கள்மேலும் விழுந்துகிடந்த உடல்கள் மீதும் முட்டி மோதி எழுந்தமைந்து செல்வதை அவ்வுடலுக்குள் இருந்தபடி அவன் பதைப்புடன் நோக்கிக்கொண்டிருந்தான். “துரோணரே, என்னை கொல்லுங்கள்... என்னை கொல்லுங்கள்! வீரனுக்குரிய இறப்பை எனக்கு அளியுங்கள்!” என்று அவன் கூவினான். அவன் நா அச்சொற்களை அறியவில்லை. அவனால் தன் மூச்சையே அசைக்க முடியவில்லை. “என்னை கொல்க! என்னை கொல்க!” என அவன் கூவிக்கொண்டே இருந்தான்.

அப்பால் சிகண்டியின் சங்கொலி எழுந்ததை துரோணர் கேட்டார். “பாஞ்சாலர் சிகண்டி!” என எவரோ கூச்சலிட்டார்கள். வாய்விட்டு நகைத்தபடி துரோணர் திரும்பி சிகண்டியை எதிர்கொண்டார். “ஆசிரியரே, இது முறையல்ல. தாங்கள் இயற்றக்கூடும் செயலல்ல இது… அவனை விட்டுவிடுங்கள்!” என்று சிகண்டி கூவினார். “அவன் தன் சொற்களின் பொருளென்ன என்று உணரட்டும். இது ஒரு நல்ல ஊழ்கம்” என்று துரோணர் கூவி நகைத்தார். சிகண்டி அவரை நீளம்புகளால் அறைந்தார். அத்தனை அம்புகளையும் துரோணர் தன் அம்புகளால் எதிர்த்து உடைத்தெறிந்தார். அவருடைய அம்புவளையத்திற்குள் ஓர் அம்பைக்கூடச் செலுத்த சிகண்டியால் இயலவில்லை. துரோணரின் தேர் முன்னெழுந்து செல்ல தேர்க்காலில் இழுபட்ட திருஷ்டத்யும்னனின் உடல் துவண்டு துணிச்சுருள்போல அலைக்கழிந்தது.

“ஆசிரியரே, இது அறமல்ல. இதன் இழிவு உங்களை என்றும் தொடரும்… வேண்டாம். அவனை விட்டுவிடுங்கள்!” என்று சிகண்டி அழுகையுடன் கூவினார். “அறத்தை நீ எனக்குக் கற்பிக்கிறாயா? கீழ்மகனே, உன் அறத்தின் சான்றென அங்கே கிடக்கிறார் குருகுலத்துப் பிதாமகர்” என்று துரோணர் சொன்னார். சிகண்டி “அதன் கதை முழுக்க நீங்களே அறிவீர்கள், ஆசிரியரே. இது அதுவல்ல. கீழே கிடப்பவன் உங்கள் மாணவன், உங்கள் உளமைந்தன்” என்றார். அச்சொல் துரோணரை மேலும் சினம்கொள்ளச் செய்தது. “அச்சமிருந்தால் ஓடிவிலகு, ஆணிலி. இளையோன் உயிருக்கெனக் கெஞ்சி பேடியருக்கும் பழிசேர்க்காதே” என்றார்.

சிகண்டி பன்றிபோல் உறுமலோசை எழுப்பியபடி வில்குலைத்து அம்புகளால் அவரைத் தாக்கியபடி முன்னெழுந்தார். அவருடைய அம்புகள் அவர் உடலெங்கும் தைத்தன. தலையைத் தாழ்த்தி முகத்தை நீட்டி அணுகிய அவர் சிலிர்த்த முட்பன்றி எனத் தோன்றினார். அவருடைய அம்புகளால் துரோணரின் தேர்த்தூண்கள் உடைந்தன. அவருடைய கவசங்கள் தெறித்தன. வில் உடைந்தபோது துரோணர் பாய்ந்து பின்னடைந்து பிறிதொரு வில்லுடன் எழுந்தார். சிகண்டி அவருடைய வெறியால் மிக அருகே வந்துவிட்டிருந்தார். அவருடைய அம்புகளின் விசையால் துரோணரின் தேர் அசைந்தது. துரோணர் அந்த அணுக்கத்தால் சற்று நிலையழிய சிகண்டி அவர் வில்லை முறித்தார். ஆவக்காவலன் தலையறுந்து விழுந்தான். தேர்ப்பாகன் நெஞ்சில் பாய்ந்த அம்புடன் சரிய துரோணர் பாய்ந்து ஓடி இன்னொரு தேரிலேறிக்கொண்டார்.

சிகண்டி குனிந்து தேர்க்காலில் கட்டுண்டிருந்த திருஷ்டத்யும்னனை விடுவிக்க முயன்றபோது அவர் கைகளை துரோணர் அம்புகளால் அறைந்தார். சிகண்டியின் நெஞ்சிலும் தோளிலும் துரோணரின் அம்புகள் பாய்ந்தன. சிகண்டி தேரிலிருந்து தரையில் விழுந்து சடலமொன்றை அள்ளி தன்மேல் இட்டுக்கொண்டார். அதன்மேல் அம்புகள் வந்து தறைத்து நின்றன. அப்பாலிருந்து கொக்கிக் கயிற்றை வீசி சிகண்டியை பற்றி இழுத்து எடுத்தனர். அவர் உடலில் இருந்து குருதிவழிய நினைவழிந்திருந்தார். துரோணர் அம்புகளைத் தொடுத்து பாஞ்சாலர்களை அப்பால் நிறுத்தியபடி திருஷ்டத்யும்னனை எவரும் அணுகாமல் காத்து நின்றார்.

தொலைவில் பாண்டவ முரசுகள் ஒலித்தன. “பாஞ்சாலத்து இளவரசனைக் காக்க படைகள் எழுக! முதன்மை வில்லவர் களம்புகுக!” இருபுறத்திலிருந்தும் சுருதகீர்த்தியும் சாத்யகியும் அம்புகளை பெருக்கியபடி துரோணரை நோக்கி வந்தனர். துரோணர் தன் அம்புகளால் சுருதகீர்த்தியின் அம்புகளை தடுக்க அவரை வலமிருந்து சாத்யகி தாக்கினான். அம்புகள் எழுந்து எழுந்து அறைய, காற்றுவெளியெங்கும் உலோகமின்னொளிகள் மணியோசையுடன் நிறைந்திருக்க துரோணர் மெல்ல சுருதகீர்த்தி அர்ஜுனனுக்கு நிகரானவன் என்று உணர்ந்தார். இளமையின் கட்டின்மை அவனை மேலும் விசைகொண்டவனாக ஆக்கியது. அவருடைய எந்த அம்பும் அவனை சென்றடையவில்லை. அவன் செலுத்திய அம்புகளால் அவர் தேர் உடைந்துகொண்டிருந்தது.

அவனுடன் போரிட்டுக்கொண்டிருக்கையில் மெல்ல மெல்ல இளமை என்றால் என்ன என்று துரோணர் உணர்ந்தார். அர்ஜுனனைப்போன்ற தெய்வத்தன்மைகொண்ட வில்லவனே எனினும் அவன் வில்லின் கணக்குகளை உய்த்துணர முடியும். கரை உயர்ந்த நிகர்நிலத்துப் பெருநதிபோன்றவன் அவன். சுருதகீர்த்தி மலையிறங்கும் காட்டாறு. ஒவ்வொரு கணமும் அவன் புதிதெனத் திகழ்ந்தான். அனைத்து வழிகளினூடாகவும் பெருக்கெடுத்தான். ஒவ்வொரு அம்பினாலும் அவன் அவரை திகைக்கச்செய்தான். அவர் முதலில் சாத்யகிக்கும் அவனுக்கும் தன் விழிகளையும் உள்ளத்தையும் பகிர்ந்து அளித்திருந்தார். மெல்ல மெல்ல அவருடைய முழுதுளமும் அவனை நோக்கி திரும்பியது. இரு கைகளாலும் அவனை அவர் எதிர்கொண்டார்.

அவர் அவனை அம்புகளால் புரிந்துகொள்ள முயன்றார். ஒவ்வொரு அம்பும் ஒரு வினா என எழுந்தது. ஆனால்

ஒவ்வொரு விடையும் முன்பிலாததாக வந்தது. அவற்றிலிருந்து அவனைச் சென்றடையும் வழியை அவரால் தொகுத்துக்கொள்ள இயலவில்லை. அவர் உள்ளம் அதனால் சீற்றம்கொண்டது. சலியாத அம்புகளால் அவனை அறைந்தார். பின்னர் உணர்ந்தார், அவன் உள்ளம் செயல்படும் ஒழுங்கை கண்டடைவதற்கு முயன்றமையாலேயே அவர் தோற்றுச்சரிகிறார் என. அவன் உள்ளத்தில் எந்த ஒழுங்கும் இல்லை. அவனைச் சென்றடைவதற்குரிய வழியை தானாகவே உருவாக்கிக் கொள்ளவேண்டியதுதான் இயல்வது. அவர் தன் அம்புப்பெருக்கில் தான் உருவாக்கிக்கொண்ட ஒழுங்கு ஒன்றை தொட்டறிய முயன்றார். ஆற்றுப்பெருக்கை பாறைகளினூடாகக் கடக்கையில் விழி சமைத்துக்கொள்ளும் காலடிப்பாதை என. பல்லாயிரம் அம்புகளினூடாக ஒரு நீள் சரடு சென்று அவனை தொட்டது.

அவர் உள்ளம் எக்களிப்படைந்தது. அதனூடாக அவர் அவன் உருவாக்கிய அம்புவளையத்தை உடைத்து உட்புகுந்தார். அவனை அறைந்து நிலைகுலையச் செய்தார். அவன் கவசங்கள் உடைந்தன. அவன் திகைத்து பின்னடைய அவர் உள்ளம் எக்களிப்பில் எழுந்தது. அத்தனை இளையோரும் துவாரகையின் யாதவனே. இதோ நான் அவனை வென்றுவிட்டிருக்கிறேன். நான் உன்னை வென்றேன். யாதவனே, ஒருகணமும் முன்பிலாதபடி திகழும் உன் மாயத்தை வென்றுவிட்டிருக்கிறேன். என் முதுமையின் தொலைவைக் கடந்து உன்னை வந்தடைந்துவிட்டேன். இதோ இதோ இதோ. அக்கணத்தை பயன்படுத்திக்கொண்டு சாத்யகி அவரை அறைந்தான். அவருடைய தேர்ப்பாகன் அம்புபட்டு விழ புரவிகளில் ஒன்று சரிந்தது. சாத்யகி தேரிலிருந்து பாய்ந்திறங்கி தலைகுனிந்தபடி ஓடி தன் வாளால்

திருஷ்டத்யும்னன் கட்டப்பட்டிருந்த சரடை வெட்டி அறுத்து அவனைத் தூக்கித் தன் தோளிலிட்டபடி தேரை நோக்கி ஓடினான். துரோணர் அதை வெறுமனே நோக்கிக்கொண்டிருந்தார். அவர் கைகள் சுருதகீர்த்தியை நோக்கி அம்புகளை செலுத்திக்கொண்டிருந்தன. சாத்யகி திருஷ்டத்யும்னனுடன் தேரிலேறிக்கொண்டு பின்னடைய கவசப்படை எழுந்து வந்து அவன் தேரை மூடிக்கொண்டது.

தேர்த்தட்டில் முழங்காலிட்டு விழுந்த சுருதகீர்த்தியின் தலைக்கவசத்தை துரோணர் உடைத்தார். “இளையோனே, சென்று சொல் உன் தந்தையிடம். வில்லுடன் அவனை நோக்கி வந்துகொண்டிருக்கிறேன் என்று. அவனிலெழுந்து அவனை முந்திய உன்னை இதோ வென்றிருக்கிறேன். உனக்கு உயிர்க்கொடை அளித்திருக்கிறேன். செல்க, உன் தந்தையிடம் சொல்க, அவனுக்கு நான் உயிர்க்கொடை அளிக்கப்போவதில்லை என!” என்றார் துரோணர். அவருடைய அம்புகள் அறைந்து அறைந்து சுருதகீர்த்தியை தேர்த்தட்டிலிருந்து எழமுடியாமலாக்கின. அவன் பாகன் தேரை பின்னுக்குக் கொண்டுசென்று மையப்படைக்குள் புதைந்துகொண்டான். நாணொலி எழுப்பியபடி துரோணர் அர்ஜுனனை நோக்கி சென்றார்.

அர்ஜுனன் தொலைவிலேயே துரோணரின் நாணொலியை கேட்டான். “பார்த்தா, ஆசிரியர் முழுவிசையுடன் எழுந்திருக்கிறார்” என்று இளைய யாதவர் சொன்னார். “எதிர்கொள்க… இன்றே அதற்குரிய நாள்!” அர்ஜுனன் நாணொலி எழுப்பியபடி துரோணரை நோக்கி சென்றான். அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் அணுகுவதைக் கண்டு இரு

தரப்பின் வீரர்களும் வாழ்த்தொலி எழுப்பி படைக்கலங்களை வீசினர். சங்குகளும் முழவுகளும் முழங்கின. அவர்களின் விரைவுக்கு மேல் எழுந்தது அவர்களின் உள்ளம். உள்ளத்திலிருந்து தெறித்தவை என இரு அம்புகள் வானிலெழுந்து ஒன்றை ஒன்று முட்டிக்கொண்டன. ஒன்றை ஒன்று நுனிக்கூர் தொட்டு அறிந்தன. இரு பொருட்கள் தொட்டுக்கொள்வதிலேயே குறைந்த இடத்தில். விண்ணவரே உணருமளவுக்கு சிறுபுள்ளியில். குறைந்தஅளவு தொட்டுக்கொள்வனவே முழுமையாக உணர்கின்றன போலும்.

அரசே, நான் இப்போது அவர்களின் போரின் உச்சநிலையையே காண்கிறேன். அது உச்சநிலையிலேயே தொடங்கியது. ஓர் அணுவும் முன்னகர இயலாது அங்கேயே நிகழ்ந்துகொண்டிருக்கிறது. சரபஞ்சரம் என்று நூலோர் சொல்லும் அம்புவலைக்கூடு. அதற்குள் அவர்கள் இருவரும் கைகள் சிறகுகளாக வீச பறந்து சுழன்றுகொண்டிருக்கிறார்கள். அர்ஜுனன் தன் ஒவ்வொரு அம்பை எடுக்கும்போதும் அதை அவர் முதலில் கற்பித்த தருணத்தை நினைவுகூர்ந்தான். அந்தச் சொற்கள், அவ்விழிகள், அப்பொழுதின் தண்மை, அதன் ஒளி. ஒவ்வொன்றும் அத்தருணத்தில் முழுமை கொண்டன. அதன்பொருட்டே அந்த முதல் தருணத்தில் எழுந்திருக்கின்றன. அவன் சிட்டுக்குருவி அலகுகொண்ட அம்புகளால் அவர் நரம்புகளை அடித்தான். மீன்கொத்தி அம்புகளால் அவர் குருதிக்குழாய்களை உடைக்க முயன்றான். வாத்துஅலகு கொண்ட அம்புகளால் அவர் தசைகளை வெட்ட முயன்றான். ஒவ்வொரு அம்பு எழுவதற்குள்ளும் அதற்கான மறு அம்புகள் எழுந்தன. சிட்டு சிட்டால் வீழ்த்தப்பட்டது. மீன்கொத்தி மீன்கொத்தியால். வாத்து வாத்தால்.

அக்கணம் அவன் அறிந்தான், கங்கைக் கரையின் முற்புலரியில் கருக்கிருளின் குளிரில் நீராடும்போதும் ஈர மரவுரியுடன் திரும்பும்போதும் அவர் அம்புத்தொழில் கற்பித்த கணங்களிலேயே அப்போர் தொடங்கிவிட்டிருந்தது என்று. தன்னிடம் உரைத்த ஒவ்வொரு சொல்லுக்கும் அவர் மறு சொல் ஒன்றை உட்கரந்திருந்தார். ஒவ்வொரு சூழ்கைக்கும் மறுசூழ்கை வைத்திருந்தார். அவன் அறிந்த ஒவ்வொன்றும் முன்னரே அவரிடமிருந்தது. அவரைக் கடந்து அவன் அறிந்த ஒன்றில்லை. தன்னைக் கடக்க ஒப்பும் ஆசிரியர் எவர்? அவர் தன்னை ஏற்கெனவே கடந்தவராக இருப்பார். துரோணரின் அம்புகள் அவனிடம் நீ நீ நீ என்று சொல்லிச் சென்றன. நீ என் மைந்தன். நீ என் மாணவன். நீ என் இனியன். நீ எனக்கு அணுக்கன். அவன் அந்த அம்புகளுக்கு நிகர் நின்றான். அணுவிடையும் குன்றாதிருந்தான். ஆனால் அவற்றின்முன் அவன் தோற்றுக்கொண்டும் இருந்தான்.

தன்னை வெல்வது எது என அவன் ஓர் மெல்லிய எண்ணமென உணர்ந்தான். அதனுடன் முழுத் தன்னிலையும் வெகுண்டெழுந்து போராடியது. அதனூடாக அதை ஆழ நிறுவிக்கொண்டது. அவர் அந்த அம்புகளை அவனுக்களித்தபோது அவன் அவரை பணிந்தான். அந்தப் பணிவாலேயே அவன் தோற்றுக்கொண்டிருந்தான். அவன் அடுத்த அம்பை எடுத்தபோது தன் உள்ளமெங்கும் சீற்றத்தை நிறைத்துக்கொண்டான். அந்த அம்பை துரோணர் முறித்து வீசியபோது அது சீற்றமல்ல, வெறும் நடிப்பே என்று உணர்ந்தான். அவரை வசையுரைத்தால், சிறுமைசெய்யும் ஒரு சொல் உள்ளத்திலூறி நாவிலெழுந்தால் வெல்வேன். அவன் அம்புகள் ஒவ்வொன்றும் எழுந்து சீறிச்சென்று அவர் அம்பின் முன் தலைவணங்கிக்கொண்டிருந்தன.

அவன் ஆழம் அவரை வெறுத்த தருணங்களுக்காக துழாவியது. துருபதரை இழுத்துச்சென்று காலடியில் கிடத்தியபோது அவரிலெழுந்த அப்புன்னகை, ஏகலவ்யனின் கட்டைவிரலை கேட்டுப் பெற்றேன் என்றபோது அவரிலிருந்த விலக்கம், அஸ்தினபுரியின் அவையில் திரௌபதி சிறுமை செய்யப்பட்டபோது அவரிலிருந்த அமைதி. அவன் உள்ளம் தொட்டுத்தொட்டுச் சென்றது. அபிமன்யுவின் அம்புதுளைத்த உடல் அருகே எனத் தெரிந்தது. அதன் மேலிருந்த அம்புகளில் பெரும்பாலானவை அவருடையவை என்று உடலை ஒருக்கிய பாஞ்சாலத்து முதியவன் சொன்னான். ஒரு நடுக்குபோல அவனில் வஞ்சம் எழுந்தது. பற்களைக் கடித்தபடி அவன் எடுத்த அம்பு அதிர்ந்தது. ஆனால் அதை நாணில் இழுத்தபோது அவரை பழிக்கும் சொல் அவன் நெஞ்சில் எழவில்லை. சோர்ந்து எழுந்த அம்பு துரோணரின் அம்பின் அறைவாங்கி சிதறிவிழுந்தது.

துரோணரின் முகத்தில் எக்களிப்பை அவன் கண்டான். அவர் சிரித்துக்கொண்டிருந்தார். மெய்யாகவா? அது சிரிப்பேதானா? அச்சிரிப்பை அவர் முகத்தில் அவன் முன்னர் கண்டதே இல்லை. இது துருபதன் காலில் விழுந்தபோது எழுந்த சிரிப்பு அல்ல. அதில் துயரமும் இருந்தது என அப்போது தெரிந்தது. இது வெறும் சிரிப்பு. வேறேதோ அறியாத் தெய்வம் ஒன்று அந்த முகத்தில் குடியேறியிருக்கிறது. அவன் அதை நோக்கி உளம் மலைத்தான். அவன் கைகளிலெழுந்த அந்தச் சிறிய தளர்வினூடாக துரோணர் உட்புகுந்தார். அவனை அவர் அம்புகளால் அறைந்தார். அவன் கவசங்களை உடைத்தார். தேர் உடைந்து சிதறிக்கொண்டிருந்தது. தலைக்கவசம் உடைய இளைய யாதவர் தேரை பின்னடையச் செய்தார். அவன் அவரை திகைத்து நோக்கிக்கொண்டிருக்க அவன் கைகள்

அவருடன் போரிட்டன. அவன் அம்புவளையத்தைக் கடந்துவந்த துரோணரின் அம்பு அவன் தோளிலும் விலாவிலும் பாய்ந்தது. அவன் தன் குருதியின் மணத்தை உணர்ந்தான். அவன் உடல் வழியாக குருதி வெம்மையுடன் வழிந்தது.

இளைய யாதவர் தேரைத் திருப்பி மேலும் பின்னடையச் செய்தார். “நில், உன் மைந்தனுடன் செல்ல உன்னை அனுப்புகிறேன்” என்று துரோணர் கூவினார். “நீ கற்றவற்றை எல்லாம் இன்று கண்டேன். இனி உன்னிடம் இருப்பவை என்ன என்று காட்டு.” வெறியுடன் நகைத்து அவர் கூச்சலிட்டார். “அறிவிலி… நீ காடுமலை ஏறிச்சென்று அடைந்த அம்புகள் எங்கே? அவற்றின் திறமென்ன என்று எனக்கு காட்டு…” அர்ஜுனன் தன் உள்ளத்தில் அம்புபட்டதுபோல் உணர்ந்தான். அவர் விழிகளை கூர்ந்து நோக்கினான். அவன் நோக்கை சந்தித்து கரவுமறைந்து அவை திரும்பிக்கொண்டன. அவன் அவருக்குள் புகுந்து ஆழத்திலிருந்த ஒன்றை கண்டான். அக்கணமே அம்பை எடுத்து அவர் நெஞ்சில் அறைந்தான். அதன் விசையால் பின்னடைந்த துரோணர் ஆவநாழியிலிருந்து அம்பு ஒன்றை எடுத்து அவன்மேல் ஏவினார். இடிமுழக்கத்துடன் மின்னொளிச் சிதறல்களுடன் எழுந்த அது பிரம்மாஸ்திரம் என அவன் உணர்ந்தான். தேரிலிருந்து இறங்கி அப்பால் பாய்ந்தான். எரியுமிழ்ந்து தேரை ஓங்கி அறைந்தது அது.

எரிந்த தேருடன் இளைய யாதவர் புரவிகளை அறைந்து அறைந்து ஓட்ட அவை தேரை இழுத்தபடி சுழன்றன. தழல்கொழுந்துகள் எழுந்து வெடித்து நீலச்சுடருடன் கொப்பளித்தன. அர்ஜுனன் பாண்டவப் படையின் விளிம்பில் ஒதுங்கி நின்றிருந்த தேரை நோக்கி ஓடினான். அவனை

நோக்கி மீண்டும் வந்த படைப்போன்அம்பு அவன் நின்ற மண்ணை அறைந்து வெடித்தெழுந்தது. செம்புழுதித் திரைக்கு அப்பால் அவன் ஓட எரியும் தேருடன் அவனை நோக்கி வந்த இளைய யாதவர் "இதில் ஏறிக்கொள்... இந்தத் தழலே உனக்குக் கவசம்" என்றார். அவன் அதில் பாய்ந்தேறிக்கொள்ள மீண்டுமொருமுறை மண்ணை அறைந்து இடியோசை முழக்கியது முதலோன்வாளி. துரோணர் "நில்... பேடியே, நில்" என்று கூவினார். "அமர்ந்துகொள்க... அனலைக் கடந்து அந்த அம்பு வரவியலாது" என்று இளைய யாதவர் சொன்னார். அவன் தழல்களின் நிழலில் அமர்ந்தான்.

அனல்வெம்மையால் கனைத்தபடி தேரை இழுத்துக்கொண்டு முன்னேறி விரைந்தன புரவிகள். பாண்டவப் படை அனல் கண்டு விலகி விட்ட வழியினூடாக ஓடி முழங்கால் மடிந்து விழுந்தன. தேரைச் சூழ்ந்துகொண்டது அனல். நகுலனும் சகதேவனும் தங்கள் தேர்களில் அந்தத் தேர் நோக்கி விரைந்தனர். தேர் மேலுமொருமுறை வெடித்து கொழுந்தாடியது. பாண்டவப் படைக்குள் நுழைந்ததும் இளைய யாதவர் பாய்ந்து விலக உடன் பாய்ந்து அர்ஜுனனும் அப்பால் சென்றான். தேரில் எழுந்த அனல் உறுமலோசையுடன் நின்று எரிந்தது. ஏவலர் ஓடிவந்து புரவிகளை சரடுகளை வெட்டி விடுவித்தனர். புன்னகையுடன் அதை நோக்கிநின்ற இளைய யாதவரை நோக்கியபடி அர்ஜுனன் நின்றான்.

# கார்கடல் - 80

ஆவக்காவலரை நோக்கி "எனது ஆவநாழியை..." என்று சொன்னபடி திரும்பிய அர்ஜுனன் தன் கால்களுக்குக் கீழே

நிலம் இழுபட்டதுபோல் உணர்ந்து மண்ணை நோக்கி சென்றான். நெடுந்தொலைவு கீழிறங்கிக்கொண்டே இருக்கும் உணர்வு அவனுக்கு ஏற்பட்டது. மண் சுவர்போல் எழுந்துவந்து அவன் முகத்தை அறைந்தது. ஒருகணம் நினைவிழந்திருக்கக்கூடும். இளைய யாதவரும் சகதேவனும் சேர்ந்து அவனை மெல்ல தூக்கி அமரச்செய்வதை அவன் உணர்ந்தான். நகுலன் கொண்டுவந்த நீரை அவன் முகத்தில் அள்ளி வீசினார் இளைய யாதவர். அவன் விழித்துக்கொண்டு "ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை" என்றபடி எழுந்தான். சகதேவன் "துயில்நீப்பு" என்றான்.

இளைய யாதவர் "ஆம், துயில் இல்லாதவனுக்கும் துயில்நீப்பின் களைப்பு உண்டு" என்றார். அவர் முகத்திலிருந்த புன்னகையை திடுக்கிட்டு ஒருகணம் திரும்பிப்பார்த்த பின் அர்ஜுனன் உரக்க நகைத்தான். "அந்த அம்பின் விசை உன் உடலில் இன்னமும் எஞ்சியிருக்கிறது. இங்குள்ள அனைவரையும் அது அதிரச்செய்திருக்கும்" என்று இளைய யாதவர் சொன்னார். "நம் உடல் நீர்ப்பை. உள்ளே நீர் நலுங்கிக்கொண்டே இருக்கிறது. மண்ணில் பரவவும் விண்ணில் திரளவும் விழைகிறது. அந்த அம்பு நம் நீர்மையை நிலையழியச் செய்துவிட்டது."

அர்ஜுனன் கைகளை நீட்டி தலைக்குமேல் குவித்து முதுகெலும்பை நிமிர்த்தியபடி "எனது ஆவநாழியை நிரப்புக!" என்றான். "மீண்டும் அவரை எதிர்கொள்ளச் செல்கிறாயா?" என்று இளைய யாதவர் கேட்டார். "ஆம், அவரை எதிர்கொண்டே ஆகவேண்டும். தனது ஆவநாழியிலிருந்து அவர் விசை மிக்க அம்புகளை எடுத்துக்கொண்டே இருக்கிறார். இன்று அவரையும் அங்கரையும் எதிர்கொள்ளாது இங்கு நாம்

போர் நிகழ்த்தவே இயலாது” என்றான் அர்ஜுனன். “அவர் முன் எவரும் தனித்துச் செல்லவேண்டாம். மைந்தர்கள் அவரிடமிருந்து அகன்றே நிற்கட்டும்” என்று சகதேவன் சொன்னான். “அவர் இன்று மைந்தர்கொலை செய்யும் உளநிலையில் இருக்கிறார்.”

அப்பாலிருந்து செய்திஏவலன் பாய்ந்து வந்து புரவியிலிருந்து இறங்கி அணுகி அர்ஜுனனை வணங்கி “ஆசிரியர் பேரழிவை உருவாக்கிக்கொண்டிருக்கிறார், இளவரசே. விசை மிக்க புதிய அம்புகளை அவர் எடுக்கிறார். நாகத்திரள்போல் நூறு புகைச்சுருள்களுடன் வரும் காலாஸ்திரம். அனல் கக்கி வரும் ஆக்னேயாஸ்திரம். சுழல்களை உருவாக்கியபடி வரும் வாருணாஸ்திரம்…” என்று அவன் சொன்னான். “இடியோசைபோல் வெடிப்பவை, மண்ணிலும் காற்றிலும் அனல் பரப்புபவை. சற்று முன் மூன்று அம்புகளை அவர் அறைந்தார். நமது படைவீரர்கள் அனைவரும் நிலநடுக்கம் உருவானதைப்போல் உணர்ந்தனர். பலர் உடல் நடுக்குற்று கீழே விழுந்தனர். பல்லாயிரக்கணக்கானோர் வாயுமிழ்ந்து இன்னமும் விழி ஒருமை கூடாதவர்களாக கிடக்கிறார்கள்.”

அர்ஜுனன் “இப்போது அவரை யார் எதிர்கொள்கிறார்கள்?” என்றான். “இளவரசர்கள் சுருதகீர்த்தியும் சர்வதரும் இருபுறத்திலாக நின்று அவரை தாக்கினார்கள். இப்போது அவர் முன் எவருமில்லை” என்று செய்திக்காவலன் சொன்னான். “செல்வோம்” என்றபடி அர்ஜுனன் தன் தேரை நோக்கி சென்றான். புதிய புரவிகளுடன் வந்து நின்ற தேர்க்காவலன் அவனை தலைவணங்கி மேலேறுவதற்கான படியை வைத்தான். அர்ஜுனன் அதில் தாவி ஏறிக்கொண்டதும் அருகணைந்து கடிவாளக்கற்றையை இடக்கையால் பற்றி

வலக்கையால் அமரத்தின் இருக்கையை தொட்டபடி இளைய யாதவர் கேட்டார் “அவரிடம் போர்புரிவதெப்படி என்று அறிவாயா?” அர்ஜுனன் “அவருக்குள் நுழைவதற்கான சிறு பழுது ஒன்றை சென்ற முறை கண்டேன் என்று நினைக்கிறேன்” என்றான். “ஆம், நமது எதிரியை நாம் வெல்வது நாம் அறிந்த அவருடைய சிறுமை ஒன்றினூடாகவே. ஒவ்வொரு சிறுமையும் ஒரு விரிசல். ஒரு திறந்திட்ட வாயில். ஒரு சிறுமையினூடாக பல்லாயிரம் சிறுமைகளை அம்பெய்து அம்பெய்து கண்டுபிடிக்க முடியும்.”

“வளைதேடும் நாகங்கள்போல் நமது சித்தம் எதிரியின் ஆளுமையில் முட்டி முட்டித் தவிக்கிறது. பல்லாயிரம் அம்புகள் சென்று அறைந்து வீணாகி உதிர்கையில் ஒன்று எப்படியோ உள்ளே செல்கிறது. அது அறிந்த வழியை பிறிதொன்று சென்று பெரிதாக்குகிறது. வழிகள் திறக்க திறக்க அவர் வீழ்ச்சியடைகிறார். நீ முதல் நுழைவுக்கான வழியை மட்டுமே கண்டடைந்திருக்கிறாய். அது அவரை நீ எதிர்த்து நிற்பதற்கான ஓர் அடித்தளம் மட்டுமே. அதனூடாக களத்தில் அவர் மேல் ஓர் அம்பை நீ செலுத்த இயலும்” என்று இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனன் “ஆம்” என்றான். இளைய யாதவர் “பார்த்தா, ஒருவரை நீ வெல்கிறாய் எனில் அதன் பொருள் அவரைவிட ஒரு அணுவளவேனும் நீ முழுமையாக மேலெழுந்திருக்கிறாய் என்பதே. உன் ஆசிரியரைவிட நீ உயர்ந்தாலொழிய இக்களத்தில் அவரை கொல்ல இயலாது” என்றார்.

அர்ஜுனன் “நான் அவரைவிட சிறியவன். அவரது காலடியில் அமர்ந்து அவர் கொடையென அளித்தவற்றைப் பெற்று எழுந்தவன். ஆகவே ஒரு நிலையிலும் அவரை என்னால்

கடந்து எழ இயலாது. இக்களத்தில் நான் உணர்ந்தது அதைத்தான். என் அம்புகள் அதனாலேயே அவர் அம்புகளுக்கு முன் மடிந்தன” என்றான். இளைய யாதவர் புன்னகை விரிய “ஆனால் நீ எங்கு அவரைவிட மேலானவன் ஆனாய் என்று அவர் அறிவார்” என்றார். அர்ஜுனன் விழிகள் சுருங்கி கூர்ந்து நோக்க “அதைத்தான் அவர் தன் வாயால் சொன்னார். தன்னிடமிருந்து கிளம்பிய அந்த மாணவனை அவர் அறிவார். ஆனால் அதற்குப் பின்னர் மேலெழுந்து நீ பெற்றதென்ன எனும் திகைப்பு அவரில் உள்ளது. அதை இக்களத்தில் காட்டு என்று அறைகூவினார். அது என்ன என்று அறியும் தவிப்பே அச்சொல்லில் உள்ளது” என்றார் இளைய யாதவர்.

“யாதவரே, நான் அவரிடமிருந்து எழுந்து விலகி அலைந்து தவம்புரிந்து பெற்றவை பல உண்டு. அவரிடமிருந்து நான் உளவிலக்கம் கொண்டதே மேலும் கற்கும்பொருட்டு ஊழ் என்னை உந்தியதால்தான் என எண்ணியதுமுண்டு. ஆனால் இன்று அறிகிறேன், எவையுமே அவரிலிருந்து அகன்று நான் அறிந்தவை அல்ல. அவர் அளித்த அடித்தளத்தின் மீது நான் அமைத்துக்கொண்டவையே அனைத்தும். மூவிழியனின் மலையுச்சியில் நான் பெற்ற பாசுபதம்கூட” என்றான். “உன்னில் ஒரு துளியேனும் எஞ்சுவதென ஏதுமில்லையா?” என்றார் இளைய யாதவர். “எதையும் என்னால் உணர இயலவில்லை” என்று அர்ஜுனன் சொன்னான். “எனில் செல்க! களமெழுந்து அவருடன் பொருதுகையில் அவர் அளித்த ஒவ்வொன்றையும் திருப்பிக்கொடு. அவரை நோக்கி எழும் ஒவ்வொரு அம்பும் முன்னர் உனக்கு அவர் அளித்ததாக இருக்கட்டும். பிறிதொரு முறை அதை நீ கையிலெடுக்கக் கூடாது. ஆசிரியரே இதோ இதை உங்களுக்கு அளிக்கிறேன். இதை மீளப்

பெற்றுக்கொண்டு என்னை வாழ்த்துக என்று உரைத்து அம்பு தொடு.”

“ஒவ்வொரு அம்பாக செல்லட்டும். எய்து எய்து உன் ஆவநாழி முற்றொழியட்டும். அவர் அளிக்காத ஒரு அம்பு உன்னிடம் எஞ்சுமெனில் அதைக்கொண்டு நீ அவரை வெல்ல இயலும்” என்று இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனன் “அதன் பின் என்னிடம் எஞ்சுவதென்ன? அவர் அளித்தவற்றால் நிறைந்திருப்பவன் நான்” என்றான். “அனைத்து மாணவர்களும் ஆசிரியர்களின் கொடையால் நிறைந்தவர்களே. ஆயினும் ஆசிரியர் அளிக்காத ஒன்றிலிருந்தே அவர்கள் தன்னைக் கண்டு எழ இயலும். அதனூடாகவே முழுமை கொள்ளவும் கூடும். இது தவமென்று எண்ணுக!” என்று இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனன் தலைவணங்கி தன் காண்டீபத்தை எடுத்துக்கொண்டான்.

அர்ஜுனன் தேரில் சென்றுகொண்டிருக்கையிலேயே எதிரில் வந்த செய்திக்காவலன் “இளவரசே, துரோணர் பேரழிவை உருவாக்கிக்கொண்டிருக்கிறார். பன்னிரு மாயஅம்புகளால் அவர் களத்தை அறைந்தார். விண்ணிலிருந்து மலைகள் என பாறைகள் நம் படைகள் மேல் விழுந்தன. மண் அதிர்ந்து பெரும்குழியென்றாகி அங்கே நீர் பெருகிக்கொண்டிருக்கிறது. இறந்த உடல்கள் அனைத்தும் உடல் அதிர்ந்து செவிகள் வெடித்து குருதி வழிய முகம் வலித்து கிடக்கின்றன. அவருக்கு எதிர் நிற்க இயலாமல் நம் வீரர்கள் அனைவரும் பின்னடைந்துவிட்டனர். இப்போது வில்லவர் எவராலும் எதிர்க்கப்படாமல் அவர் களம் நின்று பொருதிக்கொண்டிருக்கிறார்” என்று கூவினான்.

“திருஷ்டத்யும்னர் என்ன செய்கிறார்?” என்று அர்ஜுனன் கேட்டான். “அவர் இன்னும் எழவில்லை. உடலில் ஆழ்ந்த புண்கள் உள்ளன. கட்டுகள் போட்டு அகிபீனா அளித்து படுக்க வைத்திருக்கிறார்கள். நம் இளவரசர்கள் சுருதகீர்த்தியும் சுதசோமரும் சர்வதரும் புண்பட்டு பின் கொண்டு செல்லப்பட்டிருக்கிறார்கள். சாத்யகி சற்று முன்னர் களத்தில் புண்பட்டு வீழ்ந்தார். சிகண்டி தன்னினைவின்றி மருத்துவர் நடுவே கிடக்கிறார்” என்றான் செய்திக்காவலன்.

இளைய யாதவர் “இளையவர் மீண்டும் எப்போது அவரிடம் போருக்கு சென்றார்கள்?” என்றார். “களமுகப்பில் எவருமில்லை என்று கண்டு சர்வதரும் சுதசோமரும் சுருதசேனரும் சேர்ந்து அவரை எதிர்த்தனர். அரைநாழிகை பொழுதுகூட அவர் முன் நிற்க இயலவில்லை. அவர் எடுத்த மாய அம்பினால் யானை துதிக்கையால் தூக்கிச் சுழற்றப்பட்டதுபோல் சர்வதர் சென்று பின்னணியிலெங்கோ விழுந்தார். இரு கைகளாலும் தலையையும் காதுகளையும் அழுந்த பற்றிக்கொண்டு சுதசோமர் தேர்த்தட்டில் விழுந்து தன் தலையை ஓங்கி அறைந்துகொண்டு மயங்கினார். சுருதசேனர் வாயிலும் மூக்கிலும் செவியிலும் குருதி வழிய தேரிலிருந்து தாவி கீழே விழுந்து நினைவழிந்தார்” என்று செய்திக்காவலன் சொன்னான்.

இளைய யாதவரை நோக்கி “செல்க! முன்செல்க!” என்று வெறியுடன் அர்ஜுனன் கூவினான். “உன் போர்த்திட்டத்தை வகுத்துவிட்டாயா?” என்று இளைய யாதவர் கேட்டார். “எனது திட்டம் ஒன்றே. யாதவரே, நான் என் எஞ்சும் துளியை அவர் முன் வைக்கப்போகிறேன். அது என் ஆணவம் எனில் ஆணவம். நஞ்செனில் நஞ்சு. கீழ்மை எனில் கீழ்மை. அவர் காலடியை விழிசூடியே இன்றும் புலரி எழுகிறேன். ஆனால்

அவரை விஞ்சிச்சென்றுவிட வேண்டுமென்ற ஆணவத்தாலேயே அவரிலிருந்து விலகி எழுந்தேன். அத்துளியை பெருக்கிக்கொள்ள வேண்டுமென்பதனாலேயே மலைகளிலும் பாலை நிலங்களிலும் அலைந்தேன். அவருக்கு மேல் என அடுக்கி வைக்கவே அரிய அம்புகளை பெற்றேன். அந்த ஆணவத்தைக்கொண்டு அவர் முன் நிறுத்துகிறேன். அது ஒன்றே என்னில் எஞ்சி நிற்பது" என்று அர்ஜுனன் கூவினான்.

இரு புறத்திலும் நகுலனும் சகதேவனும் தேரில் அவனை பின்தொடர்ந்து வந்தனர். சகதேவன் "இளையவரே, அவர் அரிய அம்புகள் எடுத்துக்கொண்டிருக்கிறார். அவருடன் தாங்கள் தனித்துப் போரிட வேண்டாம். தங்கள் சகடக்காவலென நாங்களிருவரும் வருகிறோம்" என்றான். அர்ஜுனன் "வருக!" என்று கைகாட்டிவிட்டு படைகளினூடாகச் சென்றான். ஆனால் சற்று நேரத்திலேயே முரசுகள் ஓசையிடத் தொடங்கின. "அங்கரை எதிர்கொள்க! பீமசேனர் தனித்திருக்கிறார்! அங்கரை எதிர்கொள்ள நம் படைகள் எழுக!" அர்ஜுனன் திரும்பி சகதேவனிடம் "நீங்களிருவரும் சென்று மூத்தவருக்கு துணை நில்லுங்கள். அங்கரால் அவர் வீழக்கூடாது" என்றான். நகுலன் "நாங்கள்…" என்று ஏதோ சொல்ல "இது என் ஆணை. செல்க! சென்று அவருக்கு துணை நில்லுங்கள்!" என்றான் அர்ஜுனன்.

சகதேவன் "சகடக்காவலர்கள் இருவரும் இன்றி தாங்கள் ஆசிரியர் முன் சென்று நிற்பது நன்றல்ல. தாங்கள் தனியர். இருபுறத்திலிருந்தும் சுழன்று வந்து தாக்கும் அம்புகளை அவர் கொண்டிருக்கிறார்" என்றான். அர்ஜுனன் "நான் எஞ்சியுள்ள இளமைந்தரை கூட்டிச்செல்கிறேன். செல்க!" என்றான். தலைவணங்கி நகுலனும் சகதேவனும் சென்றபின் அர்ஜுனனின் தேர் முன்னால் சென்றது. அர்ஜுனன் தேரில்

நின்றபடியே கையசைத்து தன்னைத் தொடர்ந்து வந்த ஆணைக்காவலரிடம் “எஞ்சும் மைந்தர்கள் என்னுடன் எழுக! இருவர் உடன் எனக்கு ஆவக்காவலராக வருக!” என்றான். ஏவலர்கள் அவனிடமிருந்து விலகிச்சென்றனர். மிகத்தொலைவில் வெண்குடைபோல் புகை எழுந்து விண்ணில் கவிந்தது. பின் அது காற்றால் கரைத்து உருவழித்து அள்ளிச்செல்லப்பட்டது. அதன் பின்னரே செவி நடுக்குறும் அதன் வெடியோசை எழுந்தது. ஒருகணம் கழித்து வெட்டுண்ட கால் ஒன்று பெருந்தொடையுடன் வந்து அவர்களின் தேர் மகுடத்தில் விழுந்து குருதிச்சேற்றில் வழுக்கி கீழே உதிர்ந்தது.

அர்ஜுனன் “போரில் இதுகாறும் எவரும் இத்தகைய அம்புகளை எடுத்ததில்லை… இது மானுடருடன் போரிடவேண்டிய அம்பு அல்ல” என்றான். இளைய யாதவர் “தோளிலும் நாணிலும் நம்பிக்கை இழக்கும்போது இத்தகைய பேரம்புகள் எழுந்து வருகின்றன. பார்த்தா, அவரைக் கொல்லும் அம்பு உன் தோளிலிருந்து மட்டுமே விசையேற்றுக் கொண்டிருக்கவேண்டும்” என்றார். ஆணைக்காவலன் விரைந்தோடி வந்து “அரசமைந்தர்கள் நிர்மித்ரரும் சர்வதரும் மட்டுமே இங்கிருக்கிறார்கள். சதானீகர் பீமசேனருடன் துணை நின்று போரிடுகிறார். பிரதிவிந்தியர் தந்தையுடன் நின்றிருக்கிறார்” என்றான். “எனில் அவர்கள் வரட்டும். அவர்கள் உடன் வருக!” என்றபடி அர்ஜுனன் மேலும் விரைவைக் கூட்டி முன்னால் சென்றான். “சர்வதர் களைத்திருக்கிறார்… புண்பட்டிருக்கிறார்” என்றான் ஆணைக்காவலன். “வேறு வழியில்லை” என்றான் அர்ஜுனன்.

அர்ஜுனனின் தேர் துரோணரை அணுகியபோது பின்னணியில் இருந்த படைப்பெருக்கிலிருந்து விசைகொண்ட தேர்களில்

நிர்மித்ரனும் சர்வதனும் வந்து அவனுடன் இணைந்துகொண்டனர். “இருவரும் என் இரு பக்கங்களையும் காத்துக்கொள்க! நான் அறியாத அம்புகள் எவையேனும் இரு திசைகளிலுமிருந்து என்னை அணுகுமென்றால் அவற்றை அறைந்து வீழ்த்துக! முன்னால் வரவேண்டாம். ஆசிரியரின் அம்பு எல்லைக்குள் நுழையவேண்டாம்” என்று அர்ஜுனன் ஆணையிட்டான். அம்புகளை விடாது தொடுத்தபடி சென்று துரோணரின் போர்வளையத்திற்குள் நுழைந்தான். அவனுடைய சகட ஓசை உரக்க எழ அஞ்சி கூச்சலிட்டு சிதறி ஓடிக்கொண்டிருந்த பாண்டவ வீரர்கள் கூச்சலிட்டனர்.

அப்பால் நாண் துடிக்க அம்புகளை செலுத்தி பாண்டவப் படையை கொன்று வீழ்த்திக்கொண்டிருந்த துரோணர் அதை கேட்டார். திரும்பி உரக்க நகைத்தபடி “மீண்டு வந்துள்ளாயா? எடு உன் அரிய அம்புகளை. எடு, மூடா” என்று கூவினார். கைசுட்டி தன் முன் கருகி புகைந்து கொண்டிருந்த களத்தை காட்டி “இதைப்போல் என் களத்தை எரியவைக்கும் அம்பிருந்தால் எடு!” என்று கூவினார். அவரைச் சூழ்ந்து கிடந்த மானுட உடல்கள் ஒன்றுகூட முழுவடிவில் இல்லையென்பதை அர்ஜுனன் கண்டான். ஆயிரம் வாள்களால் கொத்தி துண்டுகளாக்கி வானிலிருந்து அள்ளி வீசப்பட்டதுபோல் கிடந்தன கைகளும் கால்களும் நெஞ்சுகளும் தலைகளும். அவன் உடல் குளிர்ந்து செயலழிந்தது. உள்ளம் விசைகொண்டு எழுந்து உடற்தசைகளை அறைந்தது. அவன் விலங்குபோல வெறிக்கூச்சலிட்டான்.

ஆவநாழியில் கைவிட்டெடுத்த முதல் அம்பை அர்ஜுனன் நினைவுகூர்ந்தான். கிருபரின் பயிற்சிநிலைக்கு படைக்கலப் பூசனை நாளில் வந்த துரோணரை கால்தொட்டு வணங்கி

எழுந்தபோது அவர் புன்னகையுடன் குனிந்து அவனுக்கு அளித்த முதல் அம்பு அது. அவன் அதன் முனையை தொடப்போக "அம்புமுனையை விழிகளாலேயே தொடவேண்டும்" என்று அவர் சொன்னார். அர்ஜுனன் அம்பை நாணில் பொருத்தி இழுத்துச் சிரித்தபடி சுழன்று மூன்று திசையிலும் இலக்குகளுக்காக தேடினான். அங்கு நின்றிருந்த குந்தியும் திருதராஷ்டிரரும் பீஷ்மரும் படைத்தலைவர்களும் உரக்க நகைத்து அஞ்சுவதுபோல் கைகாட்டி பின்னடைந்தனர். திருதராஷ்டிரர் "குறி பார்க்கிறானா? மைந்தா, இதோ என்னை குறி பார். என் நெஞ்சுக்கு வருக உன் அம்பு!" என்று சிரித்தபடி தலையை அசைத்தார்.

அர்ஜுனன் திரும்பி பீஷ்மரை நோக்கி அம்பை ஏவினான். கிளை உலுக்கி எழுந்து செல்லும் சிறிய பறவைபோல் அது அவரை நோக்கி செல்ல அவர் சிரித்தபடி வலக்கையால் அந்த அம்பை காற்றிலேயே பற்றி கையிலெடுத்தார். "நீங்கள் அளித்த முதல் அம்பு, பெரும்பாலும் இலக்கடைந்துவிட்டது, துரோணரே" என்றார். "தந்தை நெஞ்சில் உதைக்காமல் தாவ இயலுமா?" என்றார் கிருபர். துரோணர் உரக்க நகைத்து இன்னொரு அம்பை அவனிடம் கொடுத்து "இது இன்னும் பெரியது... இதை ஏவுக!" என்றார். அவ்விரண்டாவது அம்பை அவன் துரோணரை நோக்கி செலுத்த அவர் அதை கையால் பற்றினார். கிருபர் புன்னகையுடன் "நன்று. ஆசிரியரின் நெஞ்சை நோக்கி முதல் அம்பை எய்பவன் அவரைக் கடந்து செல்வான்" என்றார்.

அந்த இரண்டாவது அம்பு கையில் திகழ்வதை அர்ஜுனன் அறிந்தான். அவர் சொன்னவை ஒவ்வொரு சொல்லாக அம்பென எழுந்துகொண்டிருந்தன. அவர் உரைத்த கொள்கைகள், தோள்தொட்டு வில்நிறுத்தி தழுவியதுபோல்

அவனுக்குப் பின்னால் நின்று செவியிலெனச் சொன்ன மந்தணங்கள், அந்திக் கருக்கிருளில் அருகிருத்தி மரவுரியால் அவனையும் தன்னையும் போர்த்தி செவியில் உரைத்த நுண்சொற்கள். இருளுருகி ஓடும் கங்கையில் நீந்துகையில், தலைதுவட்டுகையில், ஆடை பிழிந்து உலர்த்துகையில், வீசும் புலரிக்காற்றில் உடல் நடுக்குற திரும்பி வருகையில், முதற்புலரி ஒளியில் குடில் முற்றத்தில் அமர்ந்து சொல்லாய்கையில் அவர் கூறிய ஒவ்வொரு அம்பையும் அவரை நோக்கி அவன் எய்தான்.

ஆசிரியரே, இது உங்களுக்கு. ஆசிரியரே, இவற்றை கொள்க! இனி இவை என்னில் எஞ்சவேண்டியதில்லை! ஆசிரியரே, இதோ என் கடன்கள் ஒவ்வொன்றையும் தீர்க்கிறேன். ஆசிரியரே, தாங்கள் அளித்த ஒவ்வொன்றும் இதோ மீள்கின்றன. உங்களுக்குள் இருந்து என்னை இழுத்து அகற்றுக! அவ்விடத்தில் இந்த அம்பை நிறைத்துக்கொள்க! நூறு அம்புகள். ஒவ்வொரு அம்பும் வினாவாகி எழுப்பிய பல்லாயிரம் பல்லாயிரம் அம்புகள். ஒவ்வொரு விடையும் வளர்ந்து பெருகிய பல இலக்கம் அம்புகள். அம்புநிலம், அதில் வாழ்ந்தேன். அம்புவானம், அதில் எழுந்தேன். அம்புகளின் காடு. அம்புகள் இலைகளௌன எழுந்த மரத்தடியில் ஊழ்கம் செய்தேன். ஆசிரியரே, இவற்றை உங்களால் எளிதில் முறித்தெறிய இயலும். எஞ்சுவதொன்று உண்டு. நீங்கள் மறுமொழி இயற்ற முடியாத வினா அது. நீங்கள் ஒருபோதும் அறிந்திராத அர்ஜுனனை காட்டும் அம்பு.

அவன் துயில்கையில் அருகணைந்து குனிந்து செவிகளில் அவர் சொன்ன அம்புகள். அவன் கனவுக்குள் எழுந்து அவர் கற்பித்த அம்புகள். அவன் அகன்றிருக்கையில்

அஸ்வத்தாமனுக்கு மட்டுமென அவர் கற்பித்தவை. அப்போது அவன் அங்கிருக்க வேண்டுமென ஆழுளம் விழைய அவ்விழைவை தொட்டெழுப்பி அவன் அங்கு செல்லாமலேயே எங்கிருந்தோ உணர்ந்துகொண்டவை. அவர் உடலசைவுகளில், கைக்கரவுகளில் இருந்து கற்பதறியாமலே அவன் கற்றுக்கொண்டவை. தன்னிடம் உள்ளதென்றே அவன் அறிந்திராதவை. என்று வந்தது, எங்கிருந்தது, எவரிடம் இருந்து பெற்றது என்று அறியாமல் எழுபவை. ஆசிரியரே, இவை ஒவ்வொன்றும் உங்களுக்குரியவை. உங்களுக்குள் இவை இருப்பதையும் நீங்கள் அறிந்திருக்க வாய்ப்பில்லை. ஒவ்வொன்றும் நீங்கள் உங்களை அறியும் கணங்கள் என்று அமைக!

துரோணர் அவ்வம்புகளை முதலில் புன்னகையுடன், பின்னர் எரிச்சலுடன், பின்னர் மெல்லிய சலிப்புடன் எதிர்கொண்டார். அறியா அம்புகள் முன் சற்றே திகைத்தார். வியப்புற்று, பின் சீற்றமடைந்து, பின்னர் சினம் பெருக உடல் துடிக்க அவற்றை அறைந்து வீழ்த்தினார். அர்ஜுனன் தன் ஆவநாழியில் கைவிட்டு திகைத்து அசையாமல் நின்றான். “எடு அதை. எய்து வீழ்த்து. இதோ அத்தருணம்!” என்று துரோணரை கைசுட்டி இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனனின் உடல் கண்ணுக்குத் தெரியா சரடுகளால் கட்டுண்டதுபோல் அசைவிழந்து அதிர்ந்தது. துரோணர் உரக்க நகைத்தபடி “அவ்வளவுதானா? இனி எஞ்சுவது ஒன்றில்லையா? நீ கற்றது பிறிதென்ன?” என்று கூவினார். வெறியுடன் நகைத்தபடி “மூடா, இதோ என்னில் எஞ்சியுள்ளது நீ அறியாத ஓர் அம்பு. எந்த ஆசிரியனும் தனக்கென கரந்துவைக்கும் ஒரு துளி. இந்த அம்பின் பெயர் என்னவென்று இன்னமும் தெய்வங்கள் முடிவு

செய்யவில்லை!” என்று அவனை நோக்கி அம்பொன்றை எய்தார்.

அர்ஜுனனின் தேருக்கடியில் பாய்ந்து சென்று பேரோசையுடன் வெடித்து தேரை மண்ணிலிருந்து ஆளுயரத்திற்குத் தூக்கி அப்பால் வீசியது அது. இளைய யாதவர் தேரிலிருந்து மறுதிசை நோக்கி பாய்ந்தெழுந்து அப்பால் சென்று கால் பதித்து விழுந்து சுழன்றெழுந்தார். தேருடன் அர்ஜுனன் விழுந்து அதன் முறிவுகளுக்கு அடியில் சிக்கிக்கொண்டான். அவனை நோக்கி வில்லுடன் பாய முற்பட்ட நிர்மித்ரனை துரோணர் அம்பால் அறைந்து தூக்கி அப்பாலிட்டார். சர்வதனை அறைந்து மண்ணில் வீழ்த்தினார். பேரம்பொன்றை எடுத்து அர்ஜுனனை நோக்கி குறிவைத்து “இது என் மூதாதையரும் அறியாதது. இது என்னை ஆக்கிய தெய்வங்களும் அறியாதது. இதை மண்ணில் எவரும் எதிர்கொள்ள இயலாது. எய்தபின் நானே தடுக்க இயலாது” என்றபின் விலங்குபோல் ஓசையிட்டபடி அதை அவனை நோக்கி எய்தார்.

இளைய யாதவர் “அஸ்வத்தாமன் என்று கூவு! அஸ்வத்தாமன் என்று கூவு!” என்று அர்ஜுனனை நோக்கி குரலெழுப்பினார். அர்ஜுனன் “அஸ்வத்தாமன்! அஸ்வத்தாமன்!” என்று கூறினான். அந்த அம்பு தேரை மீண்டும் தாக்கி தூக்கி அப்பால் வீச அதிலிருந்து உதிர்பவன்போல் அர்ஜுனன் நிலத்தில் விழுந்தான். அவன் கவசங்களைக் கட்டிய தோல்பட்டைகளும் ஆடைகளும் தீப்பற்றிக்கொண்டன. அவன் பாய்ந்து ஓடி குருதிச் சேற்றில் விழுந்துருண்டு அதை அணைத்தான். பொசுங்கி புகையெழுந்த உடலுடன் அவன் பாண்டவப் படைவிரிவை நோக்கி ஓட துரோணர் தன் முகத்தில் படிந்த புழுதியை உதடுகுவித்து துப்பிவிட்டு வில்லைத் தூக்கியபடி மறுபுறம்

திரும்பிக்கொண்டார். தேரை கைவிட்டுவிட்டு இளைய யாதவர் அவர் செல்வதை நோக்கி இடையில் கைவைத்து நின்றார்.

# கார்கடல் - 81

அர்ஜுனன் மண்ணில் விழுந்து புரண்டு கூச்சலிட அவனை நோக்கி ஓடிவந்த மருத்துவ ஏவலர் “அவர் உடலின் அனலை அணையுங்கள்... நீர்! நீர் எங்கே?” என்று கூவினார். இடப்பக்கமிருந்து நகுலனும் வலப்பக்கமிருந்து சகதேவனும் அவனை நோக்கி ஓடிவந்தனர். சகதேவன் அர்ஜுனனை அணுகி குனிந்தான். நகுலனிடம் “நீர் கொண்டுவருக! நீர்!” என்று கூச்சலிட்டார் ஏவலர். நகுலன் அக்கணமே திரும்பி அருகே நின்றிருந்த வெண்புரவியின் கழுத்தை தன் உடைவாளால் வெட்டி அதை கால்பற்றி கவிழ்த்துத் தூக்கி குடம்போலச் சரித்து செங்கொப்புளங்களுடன் உப்புமணம் கொண்ட வெம்மையுடன் ஊறிக்கொட்டிய குருதியை அர்ஜுனனின் மேல் ஊற்றினான். “நன்கு ஊற்றுக... அனைத்து இடங்களிலும்!” என்று முதிய மருத்துவர் காதரர் ஓடிவந்தபடியே கூவினார். “கவசங்கள் மேலும் ஊற்றுக... அவை அனல்கொண்டு பழுத்திருக்கும்.” வெம்மையேறிய கலத்தில் விழுந்ததுபோல் குருதி புகைந்து ஓசையிட்டது. கீழே கிடந்த குதிரைகளின் உடல்களில் அசைவிருந்தவற்றை எல்லாம் தூக்கி வெட்டி அவன் மேல் குருதிபொழியச் செய்தனர்.

அனல் அவிந்ததும் அர்ஜுனன் முனகியபடி ஏதோ சொன்னான். அவன் உடலெங்கும் மயிர் பொசுங்கியிருந்தது. அவன் தாடியின் ஒரு புறம் கருகி கன்னத்துடன் ஒட்டியிருக்க குழல் கற்றைகள் எரிந்து சுருண்டிருந்தன. இமைப்பீலிகள்கூட கருகி

மறைந்திருந்தன. முகத்தோல் சிவந்து அழன்று கழுத்திலும் காதுக்குப் பின்னும் கொப்புளங்கள் எழுந்துகொண்டிருந்தன. அவனை தொடப்போன மருத்துவ உதவியாளரை நோக்கி முதிய மருத்துவர் காதரர் “கருதுக! மிகக் கருதுக! கைகள் சிவந்த தோலில் பட்டுவிடலாகாது. தோல் வழன்றுவிடக்கூடாது” என்றார். “பட்டு அல்லது இலை. வேறெதிலும் அவர் உடல் படக்கூடாது… பட்டு கொண்டுவருக… ஓடிச்சென்று பட்டு கொண்டுவருக!” இரு ஏவலர் விரைவதற்குள் சகதேவன் நிலத்தில் கொடிக்கம்பம் சரிய விழுந்து பரவியிருந்த பட்டுக்கொடியை எடுத்துவந்தான். அர்ஜுனன் உடல் அளவுக்கே அது பெரிதாக இருந்தது.

காதரர் அர்ஜுனனை மெல்லப்புரட்டி அதில் இட்டுத் தூக்கி அப்பால் கொண்டுசென்றார். அதற்குள் மருத்துவப்பொருட்களுடன் சகடம் அணுகி வந்தது. அதிலிருந்த கொப்பரையில் மூலிகைகள் சேர்த்து வற்றவைத்த குழம்புடன் கலந்த தேன்விழுது நிறைந்திருந்தது. அதை மயிற்பீலிகளால் தொட்டு அவன் முகத்திலும் கழுத்திலும் தோளிலும் பூசினர். “குருதி நன்று… தேனும் ஒரு குருதியே” என்றார் காதரர். அர்ஜுனன் தேன்குருதி விழுதால் மூடப்பட்டு கருமைகொண்டான். ஏவலர் அவன் கவசங்களைக் கழற்றி அகற்றி உள்ளிருந்த ஆடைகளை மெல்ல கிழித்தெடுத்தனர். ஆடை பொசுங்கி உடலுடன் ஒட்டியிருந்தது. காதரர் “மெல்ல, தோல் உடன் வந்துவிடலாகாது. தோலுடன் ஆடை இணைந்திருந்தால் அவ்வண்ணமே விடுக… பொருக்காக பின்னர் எழட்டும்” என்றார். கைகால்கள் நடுங்க குனிந்து நோக்கிய சகதேவனிடம் “கவசங்களிருந்தமையால் உடல் முற்றிலும் வெந்து போகாது தப்பினார்… கவசங்களை உடலுடன் இணைத்த மரவுரிப்பஞ்சுகள் காத்தன” என்றார்.

இளைய யாதவர் மெல்லிய நடையில் ஓசையிலாமல் வந்து அவன் அருகே இடையில் கைவைத்து கூர்ந்து நோக்கியபடி நின்றார். அவர் நோக்கு பட்டதனால் என அர்ஜுனனின் விழியிமைகள் அதிர்ந்தன. முகம் சொல்லுக்கெழுவதுபோல் அசைவுகொண்டது. கண்களைத் திறந்து இளைய யாதவரை சில கணங்கள் நோக்கினான். மீண்டும் இமைகள் மூடின. துடிப்பு கொண்டு திறந்தன. அவன் சகதேவனிடம் “மூத்தவர் எப்படி இருக்கிறார்?” என்றான். “அங்கர் முன்னிருந்து அவர் அம்புகள் பட்டு பின்வாங்கிவிட்டார்” என்றான் சகதேவன். “அங்கரை இப்போது எவர் எதிர்கொள்கிறார்?” என்றான் அர்ஜுனன். சகதேவன் “இப்போது அவரை எவரும் எதிர்கொள்ளவில்லை, மூத்தவரே…” என்றான்.

அவனை சொல்விளங்காததுபோல் சற்றுநேரம் பார்த்த பின் அர்ஜுனன் உரக்க “கர்ணன் நம் படைகளை…” என்றபடி கையூன்றி எழமுயன்று கையில் வலியை உணர்ந்து திரும்பப் படுத்தான். “ஆம் மூத்தவரே, கர்ணனும் துரோணரும் எந்தத் தடையுமிலாதவர்களாக நமது படைகளை சூறையாடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களிடமிருந்து விலகி ஓடுவதொன்றையே போரென இப்போது நிகழ்த்திக்கொண்டிருக்கிறோம்” என்று சகதேவன் கசப்புடன் சொன்னான். “அத்தனை விசை மிக்க அம்புகளை இதுவரை எவரும் களத்தில் எழுப்பவில்லை. அவை அம்புகளே அல்ல, அனல்குவைகள், நச்சுப்பெருக்குகள். நம் படைகள் எரிந்தழிகின்றன” என்று நகுலன் சொன்னான்.

அர்ஜுனன் மெல்லிய விதிர்ப்புடன் நினைவுகூர்ந்து “நிர்மித்ரன், சர்வதன்… அவர்களிருவரும் என்ன ஆனார்கள்?” என்றான். “இருவரும் அனல் பட்டு தோல் வெந்திருக்கிறார்கள்.

இருவருக்கும் நினைவு மீளவில்லை. செய்தி அறிந்து அரசர் அங்கு சென்றிருக்கிறார்” என்று சகதேவன் கூறினான். “யாதவரே, என்ன நிகழ்கிறது? இன்றுடன் இப்போர் முடிவடைந்துவிடுமா?” என்று அர்ஜுனன் கேட்டான். இளைய யாதவர் “போர் முடிவுற வேண்டுமெனில் நீங்கள் ஐவரும் இறக்க வேண்டும். ஐவரும் ஐவர் மைந்தரும் இன்னும் உயிருடன்தான் எஞ்சுகிறீர்கள்” என்றார். “ஆனால் முயல்களைப்போல் படைப்பிரிவுகளுக்குப் பின்னால் வந்து பதுங்கிக்கொண்டிருக்கிறோம். உலர்ந்த நாணல் போலிருக்கிறது இப்படை. அதை எரித்தழித்தபடி வந்துகொண்டிருக்கிறார்கள். நெடும்பொழுது இங்கு இவ்வண்ணம் ஒளிந்திருக்க இயலாது” என்று அர்ஜுனன் சொன்னான்.

“உனது அம்புகள் என்ன ஆயின?” என்று இளைய யாதவர் கேட்டார். “நீ உன்னிடம் எஞ்சுவது என எதையும் உணரவில்லையா?” என்றார். அர்ஜுனன் விழி தாழ்த்தி “எஞ்சியது இருந்தது. அது எப்போரிலும் படைக்கலமென நான் எடுக்கவேண்டியதல்ல என்று உணர்ந்தேன்” என்றான். இளைய யாதவர் புன்னகையுடன் அவனை பார்த்துக்கொண்டிருக்க அவன் விழிகளை மூடி பெருமூச்சுவிட்டான். சகதேவன் “இனி என்ன செய்வது?” என்றான். “அவரை நாம் களத்தில் வென்றாகவேண்டும். இல்லையேல் இன்றுடன் போர் முடியக்கூடும். எப்பொழுதிலும் துரோணர் படையணிகளை கடந்துவந்து நம் ஐவரில் ஒருவரை சிறைபற்றக்கூடும். பலமுறை மூத்தவரை பிணைகொள்ள அவர் முயன்றிருக்கிறார். அவரைப் பிணைத்து திருஷ்டத்யும்னனைப்போல் தேர்க்காலில் கட்டி இழுத்தாரெனில் அதன் பின் நாம் இப்புவி முழுதையும் வென்றாலும் இழிவு குறைவதில்லை.”

இளைய யாதவர் “போருக்கென எழுந்தபின் எதிரியை களவெற்றியால் மட்டுமே கடக்க இயலும். ஒவ்வொருவரிடமும் எஞ்சியிருக்கும் ஆற்றலென்ன என்று பாருங்கள். அவற்றைக்கொண்டு அவரை எதிர்த்து நில்லுங்கள்” என்றார். சகதேவன் தலையசைத்து “எங்கள் எவரிடமும் அவரை எதிர்கொள்ள எந்த அம்பும் இல்லை. மூத்தவரிடம் இல்லாத அம்பு எதையும் நாங்கள் எப்போதுமே கொண்டிருக்கவில்லை. அவரை நம்பியே களம்புகுந்தோம்” என்றான். பின்னர் கசப்புடன் “இனி ஒன்றே செய்வதற்குள்ளது, ஆட்கொண்டு, பலி பெற்று, குடி முற்றழித்து, நெஞ்சில் ஆடும் அக்கொடுந்தெய்வத்தை எதிர்கொள்ள பூசகர் அம்முறையையே நாடுகிறார்கள். சென்று வணங்கி அதனிடமே அதை வென்று அகற்ற நாம் செய்ய வேண்டியதென்ன என்று கேட்பது. ஆசிரியர் என துரோணர் அவரே உளம் கனிந்து நமக்கு வாழ்வளித்தால் மட்டுமே இனி மீட்சி” என்றான்.

இளைய யாதவர் “அவர் அதை முன்னரே அளித்துவிட்டார். நாம் இப்போரை தொடங்குவதற்கு முன்பு அவரைப் பணிந்து அச்சொல்லை பெற்றுவிட்டோம்” என்றார். திடுக்கிட்டவனாக சகதேவன் திரும்பிப்பார்த்தான். “அவர் அன்று சொன்ன சொற்களை நினைவுகூர்க!” என்றார் இளைய யாதவர். சகதேவனின் விழிகள் மாறின. அர்ஜுனன் கையூன்றி எழுந்தமர்ந்து “ஆம், அச்சொற்களை நான் நினைவுகூர்கிறேன். ஆனால்…” என்றபின் திகைப்பில் சற்றே வாய் திறந்து உறைந்து பின்னர் மீண்டு “அஸ்வத்தாமனா?” என்றான். “ஆம், ஆனால்…” என்றபின் உரக்க “வேண்டாம், அது எளிதல்ல. ஆசிரியரின் அனைத்து ஆற்றல்களும் கொண்டவன் அவன். அதற்கப்பால் அவன் ஈட்டிக்கொண்ட சில பேரம்புகளும் அவனிடம்

இருக்கக்கூடும். அவனை உடனே வெல்வது நம்மால் இயலாது" என்றான்.

"முழுமையாக அஸ்வத்தாமனை வெல்ல இப்புவியில் எவராலும் இயலாதென்று உணர்க!" என்று இளைய யாதவர் சொன்னார். "ஏனென்றால் அவனில் கூர்கொண்டிருப்பது துரோணர். துரோணரின் அலைபாய்தல்கள் இல்லாத துரோணர் அஸ்வத்தாமன். மைந்தரில் தந்தையின் பிழைகள் பெருகி எழுவதுண்டு. பிழைகளை திருத்திக்கொண்டு தந்தையின் அகம் திகழ்வதுமுண்டு." தயக்கத்துடன் "அவ்வாறெனில்..." என்று சகதேவன் சொல்ல "மாளவர்களின் யானை ஒன்று உள்ளது... அதன் பெயர் அஸ்வத்தாமன்" என்று இளைய யாதவர் சொன்னார். அவரது திட்டத்தை புரிந்துகொண்டு இருவரும் அமைதி அடைந்தனர். சகதேவன் "அதை கொன்று அவரிடம் அஸ்வத்தாமர் இறந்துவிட்டாரென்றும் உரைக்கலாம். ஆனால் அவர் அதை ஏற்கப்போவதில்லை. களத்தில் மிக எளிய செயல் அது. ஒரு தூதனை அனுப்பி அஸ்வத்தாமன் எங்கிருக்கிறான் என்று நோக்கினால் மட்டும் போதும். ஒரு முரசொலியே போதும்" என்றான்.

இளைய யாதவர் "நமக்குத் தேவை கால்நாழிகைப் பொழுது" என்றார். "அவர் வில்தாழ்த்தி அமைந்தால் போதும்..." சகதேவன் "அதை அவரே உரைத்தார். அம்பு முனைகளை ஒன்றுடன் ஒன்று பொருத்தி கள நிமித்தம் நோக்கும் கலை வழியாக அவர் அதை உணர்ந்திருந்ததாக சொன்னார்." இளைய யாதவர் "அஸ்வத்தாமனை நகுலனும் சகதேவனும் சாத்யகியும் இணைந்து களத்தில் மறு எல்லை நோக்கி அகற்றிக்கொண்டு செல்க! அங்கிருந்து செய்தி வர அரை நாழிகைப்பொழுதேனும் ஆகும்" என்றார். "ஆனால்..." என்று மீண்டும் சொல்லெடுத்த

சகதேவனிடம் “அவர் நகுலனையோ பார்த்தனையோ நம்ப மாட்டார். நீ சொன்னால் நம்பக்கூடும்” என்றார். பின்னர் “ஒருவேளை உன்னையும் நம்பாமலாகலாம். முழுமையாக இப்புவியில் அவர் நம்புபவர் ஒருவரே” என்றார்.

அர்ஜுனன் “மூத்தவர் பொய்யுரைக்க மாட்டார்” என்றான். சகதேவன் “ஆம், அப்பழியை நாம் அவருக்கு அளிக்கலாகாது” என்றான். இளைய யாதவர் “அவர் பொய்யுரைக்கலாகாது என்பதன் பொருட்டே அந்த யானையை கொல்கிறோம். அவர் உரைப்பது அஸ்வத்தாமனெனும் யானையின் இறப்பையே” என்றார். சகதேவன் சொல்லெடுக்க முயல இடைமறித்து “அஸ்வத்தாமன் களம்பட்டான் என்றுரைத்த பின் துரோணர் செவிகொள்ளா கீழ்ஒலியில் மாளவர்களின் யானையாகிய அஸ்வத்தாமன் என்று அவர் சேர்த்துக்கொள்ளட்டும். அது பொய்யல்ல” என்றார். சகதேவன் மெல்ல நகைத்து “பொய்யையும் மெய்யையும் அறிபவை நெடுந்தொலைவில் உள்ள தெய்வங்கள் அல்ல, ஒவ்வொருவரின் உள்ளத்தில் அமைந்தவை” என்றான்.

நகுலன் உரக்க “பிறிதொரு வழியில்லை” என்றான். இளைய யாதவர் “அஸ்வத்தாமனின் இறப்பை அவர் யுதிஷ்டிரரின் நாவிலிருந்து கேட்பாரெனில் அம்பு தாழ்த்தி தேர்த்தட்டில் அமர்வார். அவ்வாறல்ல என்று அவருக்கு செய்தி வந்து சேர அரைநாழிகைப் பொழுதாகும். அது போதும் அவரை வென்றெழுவதற்கு. இத்தருணத்தில் பார்த்தன் செய்வதற்கு பிறிதொன்றில்லை” என்றார். “சற்று முன் அவரை வெல்ல பிறிதொரு வழியை உரைத்தீர்கள், யாதவரே” என்றான் அர்ஜுனன். “ஆம், அவரைவிட மேலெழுந்து வெல்லும்படி சொன்னேன். அது உன்னால் இயலவில்லை. எனவே

அவரைவிட கீழே இழிந்து கொல்லும்படி இப்போது சொல்லுகிறேன். கொன்றே ஆகவேண்டுமெனில் இவ்விரண்டு வழியே உள்ளது" என்றார் இளைய யாதவர்.

அர்ஜுனன் இரு கைகளையும் கோத்து முறுகப் பற்றியபடி வெறுமனே அவரை நோக்கி அமர்ந்திருந்தான். "அவரை கொன்றோமெனில் இப்போரில் வெல்வோம். இதுவரை நாம் கொன்ற அனைவரையும் அவ்வெற்றியால் நிறைவுறச் செய்வோம். இங்கு தோற்றோமெனில் பீஷ்மரை வீழ்த்தியதும் நமக்கு பழியென்றேயாகும். பாதி வழி சென்ற பின் மீள்வது முழுச் செலவின் துயரையும் இழிவையும் ஏற்றுக்கொள்வதே" என்றார் இளைய யாதவர். அர்ஜுனன் "ஆனால் அவர் என் ஆசிரியர்" என்றான். "இப்போது அவர் உன் ஆசிரியர் அல்ல. அவர் கற்பித்த அனைத்தையும் நீ திருப்பி அளித்துவிட்டாய். அவருடைய ஒரு சொல்லும் உன்னிடம் இல்லை" என்று இளைய யாதவர் சொன்னார். "அவரை கால் தொட்டு வணங்காமல் என் நாட்களை நான் தொடங்கியதில்லை" என்று அர்ஜுனன் சொன்னான். "முதல் நாள் முதல் அம்பை எடுக்கையிலும் அவர் காலை என் அகம் வணங்கியது."

புன்னகை விரிய "இறுதி அம்பைத் தொடுக்கையிலும் அவ்வாறே அவர் கால் உன் நெஞ்சில் நிற்கட்டும்" என்று இளைய யாதவர் சொன்னார். "பார்த்தா, இந்தக் களத்தில் அடையும் அனைத்து தத்தளிப்புகளும் வெறும் ஆணவம் என்றுணர்க! பீஷ்ம பிதாமகரை வீழ்த்திய பின்னர் நீ அஞ்சும் பழியென இப்புவியில் வேறொன்று உள்ளதா?" சகதேவன் "ஆம் மூத்தவரே, நாம் இனி எதன் முன்னும் தயங்கி நிற்க வேண்டியதில்லை. உடல் பொசுங்கி வெறும் தசைக்குவியலென இக்களம் நிறைத்து படுத்திருக்கும் நமது

படைவீரர்களின் பொருட்டே நாம் இனி எழவேண்டும். இவர்கள் அனைவரும் நம் அம்புகளையும் ஆற்றலையும் நம்பி இங்கு வந்தவர்கள். அவர்களுக்கு நாம் செய்யும் கடன் ஒன்றுண்டு” என்றான்.

அர்ஜுனன் எரிச்சலுடன் கைவீசி “என்ன சொல்கிறாய்? மூத்தவர் இதற்கு ஒப்புவாரா?” என்றான். “அவர் ஒப்புவார்” என்று சகதேவன் சொன்னான். “என்ன சொல்கிறாய்?” என்று பற்களை இறுக்கியபடி அர்ஜுனன் கேட்டான். “இதுவரை எதற்கும் அவர் ஒப்புதல் அளிக்காமலிருந்ததில்லை. அறுதியாக அவரை ஆளும் ஒன்றே பிற அனைத்தையும் வென்று நிற்கிறது. பல்லாயிரம் முறை துணியால் சுற்றப்பட்டிருந்தாலும் உள்ளிருக்கும் கூர்வாள் ஒருகணத்தில் வெளிவந்துவிடுமென்று ஒரு காவியச்சொல் உள்ளது” என்றான் சகதேவன். அர்ஜுனன் “இதை நீயே அவரிடம் சொல்” என்றான். “நான் சொல்கிறேன். என் சொற்களை அவர் செவிகொள்வார்” என்ற பின் சகதேவன் புன்னகைத்து “அவருக்கு ஒவ்வாதனவற்றை நான் சொன்னால் பிறிதொருவருடன் உசாவுவார்” என்றான்.

“அவரே இங்கு வந்துகொண்டிருக்கிறார்” என்று இளைய யாதவர் சொன்னார். “செய்தி வந்ததா?” என்று சகதேவன் கேட்டான். “அவர் தன் மைந்தரைப் பார்க்கச் சென்றிருக்கிறார். துரோணரால் உடல் வெந்து கிடக்கும் தன் மைந்தரை பார்த்த பின் அவர் பிறிதெங்கும் செல்லமாட்டார். சினமும் அழுகையுமாக இங்குதான் வருவார்” என்று இளைய யாதவர் சொன்னார். தொலைவில் தேரின் ஓசை கேட்டது. சகதேவன் புன்னகையுடன் “ஆம், இங்குதான் வந்துகொண்டிருக்கிறார். தேரோசையிலேயே அவருடைய சீற்றம் தெரிகிறது” என்றான்.

யுதிஷ்டிரர் குதித்து இறங்கி ஓடி அவர்களை நோக்கி வந்தார். “யாதவனே, நாம் என்ன செய்யப்போகிறோம்? இவ்வண்ணம் நம் மைந்தரை அனலில் வேகவிடப்போகிறோமா? நாங்கள் வில்லெடுத்தது எங்களுக்காக அல்ல, உனக்காக. உன் ஆற்றலை நம்பியே இங்கே போர்புரிகிறோம். எங்களை கைவிட்டுவிட்டாயா? எங்கள் தோல்வியிலிருந்து எழுந்து நீ எங்கே செல்லமுடியும்?” என்றார். அர்ஜுனனை அணுகி “பார்த்தா, அரிய அம்புகள் கொண்டிருக்கிறாய் என்று உன்னை நம்பினேன். நீ அருகிருந்தும் என் மைந்தர் அங்கே வெந்துகிடக்கிறார்கள். நீ இங்கே கிடக்கிறாய். நான் நம்பியவர்கள் எல்லாம் என்னை கைவிட்டால் எங்கு செல்வேன்? இந்தக் களத்தில் நான் அழிந்தால் தாழ்வில்லை, என் மைந்தர்கள் வெந்துகிடக்கிறார்கள். என்னால் என் மைந்தர் அழியவிருக்கிறார்கள்” என்றார்.

இளைய யாதவர் “அரசே, நாம் துரோணரை கொன்றாகவேண்டும்” என்றார். “ஆம், கொன்றே ஆகவேண்டும். இன்று. இன்னும் ஒரு நாழிகைக்குள். இனி அவருடைய அம்பால் நம் படைகள் உருகி அழியக்கூடாது. நம் மைந்தர்கள் இறந்துவிடக்கூடாது” என்று யுதிஷ்டிரர் கூவினார். “அரசே, அவரை வெல்ல உங்கள் இளையவரால் மட்டுமே இயலும். ஆகவே இவரை களம்கொண்டு சென்றேன். இவர் ஆவநாழியிலுள்ள அனைத்து அம்புகளும் ஒழிந்தன. இவரால் அவரை எதிர்கொள்ள முடியவில்லை” என்றார் இளைய யாதவர். “ஆம்” என்று யுதிஷ்டிரர் தளர்ந்தார். “அவரை எதிர்கொள்ள முடியாது. ஆசிரியர் கடல், மாணவர் அலைகள் என்பார்கள்.” இளைய யாதவர் “ஆசிரியரை மாணவர் வெல்லும் தருணங்கள் உண்டு” என்றார். “ஆசிரியரை கடந்துசெல்லவேண்டும். பெருமையால், இயலாதெனின்

சிறுமையால்.” யுதிஷ்டிரர் “எவ்வண்ணமேனும் அவரை கொன்றாகவேண்டும்… உடனே கொன்றாகவேண்டும்” என்றார். “உங்கள் இளையவரால் அவரை மீறி மேலெழ இயலவில்லை. கீழிறங்கி வெல்லும் வழி ஒன்று உள்ளது. அதை சொல்லிக்கொண்டிருந்தேன்.”

“என்ன?” என குரல் தாழ விழி சுருங்க யுதிஷ்டிரர் கேட்டார். “அரசே, நீங்கள் நினைவுகூர்வீர்கள் என நினைக்கிறேன். நாம் போருக்கு முன் சென்று பிதாமகரையும் ஆசிரியர்களையும் வணங்கி சொல்கொண்டோம். அப்போது ஆசிரியர் உரைத்தது என்ன?” யுதிஷ்டிரர் சிலகணங்கள் கூர்ந்து நோக்கியபின் “யானை தன் உணவை நிறுத்திக்கொள்ளும் ஒரு தருணம் உண்டு என்றார் ஆசிரியர்” என்றார். “ஆம், யானை தன் உணவை நிறுத்திக்கொள்ளும் தருணம்… அது எப்போது?” அருகே நின்றிருந்த நகுலன் “தீரமுடியாத நோய் கொள்ளும்போது. அல்லது தாளவொண்ணா துயர் அணுகும்போது” என்றான். “அதையே அவரை வெல்லும் வழி என கொள்ளலாம். அவர் தன் போரை தானே நிறுத்திக்கொள்ளவேண்டும் என்றால் அவர் நோயுறவேண்டும். அது நம்மால் இயலாது. துயருறவேண்டும். அது நம்மால் இயலும்.”

“எவ்வண்ணம்?” என யுதிஷ்டிரர் கேட்டார். “நீங்கள் உள்ளூர உணர்ந்துவிட்டீர்கள், அரசே” என்றார் இளைய யாதவர். “அவரை பெருந்துயர் கொள்ளச்செய்வது ஒன்றே.” யுதிஷ்டிரர் ”ஆனால் நம்மால் அஸ்வத்தாமனை எளிதில் வெல்லமுடியாது…” என்றார். “வெல்லவே முடியாதென்றே கொள்க!” என்றார் இளைய யாதவர். “ஆகவே நாம் பிறிதொரு அஸ்வத்தாமனை கொல்வோம். அவன் இறப்பை அறிவிப்போம்.” யுதிஷ்டிரர் “யார்?” என்றார். “மாளவர்களின் யானை” என்றார் இளைய

யாதவர். “அது இத்தருணத்திற்காகவே அப்பெயருடன் பிறந்து வளர்ந்து இக்களம் வரை வந்துள்ளது.” யுதிஷ்டிரர் “ஆனால்…” என்றார். “நீங்கள் அந்த யானையின் இறப்பை களத்தில் அறிவிக்கவேண்டும்” என்று இளைய யாதவர் சொன்னார். “தன் மைந்தனின் இறப்பு அது என துரோணர் எண்ணினால் அது நம் பிழை அல்ல.” யுதிஷ்டிரர் பெருமூச்சுவிட்டார். “அது கருதாப் பிழை என்றே கருதப்படும். பழி என்றல்ல.”

“ஆற்றுவதை அறிந்திருப்பதே பழியை அளிப்பது, எனக்கு சொல்நெறியை கற்பிக்கவேண்டியதில்லை” என்றார் யுதிஷ்டிரர். “வேறு வழியில்லை மூத்தவரே, நம் படைகள் பொசுங்கி அழிகின்றன. இன்னும் சற்றுபொழுதில் நாம் எஞ்சுவோமா என்றே தெரியவில்லை” என்றான் சகதேவன். நகுலன் அருகணைந்து “எங்களுக்காக அல்ல, நமது படைகளுக்காக, மைந்தருக்காக” என்றான். யுதிஷ்டிரர் எண்ணியிராக் கணத்தில் “நான் சொல்கிறேன்” என்றார். சகதேவன் சற்று திகைத்து பின் “அதனால் உங்கள் உள்ளம் எத்தனை துயருறும் என அறிவோம்” என்றான். “இல்லை, என் உள்ளம் சற்றும் துயருறவில்லை. உண்மையில் துயருக்காகவும் ஒவ்வாமைக்காகவும் நான் என் உள்ளத்தையே கூர்ந்து நோக்கினேன். அது குளிர்ந்து அசைவிழந்து கிடக்கிறது. துரோணர் களம்படுவார் என்றால் நாம் தப்பிவிடக்கூடும் என்னும் எண்ணம் ஆறுதலையே அளிக்கிறது” என்றார் யுதிஷ்டிரர்.

பின்னர் இளைய யாதவரிடம் “நான் அனைத்தையும் இழந்துவிட்டேனா, யாதவனே?” என்றார். “சில திரைகளை கிழித்துக்கொண்டு எழுகிறீர்கள்” என்றார் இளைய யாதவர். “நான் நெறிபிழைப்பதில் மகிழ்வுறுபவனாகவும் ஆகக்கூடும்…”

என்றார் யுதிஷ்டிரர். “அது நிகழாது...” என்று இளைய யாதவர் சொன்னார். “கடந்துசெல்வதெப்படி என்று கற்றுக்கொள்வீர்கள். அரசே, இப்புவியில் மானுடர் கற்றுக்கொள்ளும் அனைத்து அறிதல்களையும் கடந்துசெல்லும் வழி என்னும் ஒற்றை சொல்லில் வகுத்துவிடலாம்.”

“ஆம்” என யுதிஷ்டிரர் நீள்மூச்செறிந்தார். “நாம் கடந்துசென்றுகொண்டே இருக்கிறோம்.” நகுலனிடம் திரும்பி “உன் உளமென்ன, இளையோனே?” என்றார். “மூத்தவரே, இனி என்னால் உங்கள் சங்கையே அறுக்கமுடியும். இளைய யாதவரையே முதுகில் குத்தி வீழ்த்த முடியும். இக்களத்தில் இனி நான் செய்யக்கூடாதது என ஏதுமில்லை” என நகுலன் சொன்னான். முகம்சுளிக்க வலிப்பென கழுத்துத் தசைகள் இழுபட “நான் இப்பிறவியில் இயற்றக்கூடிய கீழ்மையின் எல்லையை சற்றுமுன் சென்றடைந்தேன். நின்றிருந்த புரவியின் கழுத்தை வெட்டி அதன் குருதியால் மூத்தவரின் உடல் அனலை ஆற்றினேன். அஸ்வமேதம் என ஏன் வைத்தார்கள் என்று இன்று புரிகிறது. தான் ஊரும் பட்டத்துப்புரவியை வெட்டி தெய்வங்களுக்கு அளிப்பவன் இங்குள்ள அனைத்தையும் கடந்துசெல்கிறான். பின்னர் அவன் இங்கே அஞ்சுவதற்கும் இழப்பதற்கும் ஏதுமில்லை” என்ற நகுலன் வாயில் ஊறிய மிச்சிலை துப்பிய பின் திரும்பிச்சென்றான்.

# கார்கடல் - 82

வெடியோசைகள் எழுந்து எதிரொலித்துக்கொண்டிருந்த களத்தில் திருஷ்டத்யும்னனை அகற்றி உள்ளே கொண்டுசெல்ல

முயன்றுகொண்டிருந்தனர் மருத்துவர். பீமன் தன் தேரிலிருந்து இறங்கி திருஷ்டத்யும்னனை நோக்கி ஓடினான். சாத்யகி திருஷ்டத்யும்னன் மேல் அருகே கிடந்த தேர்ப்பலகை ஒன்றை எடுத்து வைத்தான். அருகே பற்றி எரிந்துகொண்டிருந்த தேர் வெடித்து எரிய பீமன் உடல் தாழ்த்தி ஒழிந்து அருகே அணைந்தான். அவர்களுக்கு அருகே வந்து விழுந்த துரோணரின் எரிவாளி வெடித்து நான்கு புறமும் வீரர்களின் உடல்கள் உடைந்து தெறித்தன. புகையும் புழுதியும் கலந்து குடையென எழுந்து சுருண்டு சிவந்த மரம்போல் வானில் பறந்து காற்றில் அள்ளிச் சிதறடிக்கப்பட்டு முகில்களை நோக்கி எழுந்தன. அவர்களின் மேல் மண்ணும் புழுதியும் பொழிய உடல் வளைத்து நிலம் நோக்கி குனிந்து அதிலிருந்து தப்பினர்.

கற்களும் சிதைந்த தசைச் சிதர்களும் உடல் உறுப்புகளும் அவர்கள் மேல் விழுந்தன. மருத்துவர் திருஷ்டத்யும்னனை மரவுரியால் மூடி மேலும் உள்ளே இழுத்துச்சென்றனர். பீமன் தன் தோள் மேல் விழுந்த சிதைந்த கையொன்றை பற்றி எடுத்து நோக்கிய பின் அப்பால் எறிந்துவிட்டு உதட்டில் படிந்த புழுதியை துப்பியபடி அருகணைந்து "யுயுதானரே, என்ன நிகழ்கிறது இங்கே?" என்றான். இருமியபடி "நேற்று நம் மைந்தன் அவர்களை அழித்தான். இன்றுடன் இவர் நம் படையை முற்றழித்துவிடுவார் போலும்" என்று கூவினான். சாத்யகி "பார்த்துக் கொள்ளுங்கள்... நான் படைமுகப்புக்குச் சென்று நம் படைகளை ஒருங்கிணைத்து பின்னிழுக்க முயல்கிறேன்" என்றபின் எழுந்து புழுதிக்குவைக்குள் ஓடி அகன்றான். மருத்துவ ஏவலர் "இங்கிருந்து மேலும் அகற்றவேண்டும். வெந்த உடலில் புழுதி ஆழப் பதிந்தால் மிகத் தீங்கு" என்றார்.

மாபெரும் கரிய போர்வையைத் தூக்கி அவர்கள்மேல் மூடியதுபோல இருள் பரவியது. யானைத்தோல் கூடாரக் கூரை என வானம் அண்மையில் வளைந்திருந்தது. கருமைக்குள் நூற்றுக்கணக்கான செம்மலர்கள் என துரோணரின் வாளிகள் வெடித்தன. அலறல்கள் நீருக்குள் என கேட்டன. நிலம் அதிர பீமன் மல்லாந்து விழுந்தான். அவன்மேல் மேலும் சிலர் விழுந்தனர். யானை ஒன்று அலறியபடி தன்னைத்தான் சுழன்றது. கையூன்றி எழுந்தபோது பீமனின் உடலுக்குள் நீர்மை குலுங்கிக்கொண்டிருந்தது. மருத்துவ ஏவலர் திருஷ்டத்யும்னனின் உடலில் கொக்கிச் சரடை தொடுக்க அதை உள்ளிருந்து பாண்டவப் படையினர் இழுத்தனர். அவன் மேலும் மேலும் அப்பால் கொண்டுசெல்லப்பட்டான்.

பீமன் கண்களை மூடிக்கொண்டு அந்தப் புழுதியாலான இருளை தன்னுள் இருந்து அகற்றினான். ஒலிகளாலேயே களத்தை அறிந்தான். எதிர்த்திசையில் ஓடி அங்கிருந்த இடைவெளியினூடாக பாய்ந்தான். விழிதிறந்தபோது அவன் விட்டுவந்த பகுதி பெரிய குடைபோல் புழுதியால் மூடப்பட்டிருந்தது. அதற்குள் நெருப்பு எரிந்து தழலாட நிழல்கள் எழுந்து புழுதியாலான வானில் அசைந்தன. உள்ளிருந்து வில்லுடன் நகுலனும் சகதேவனும் ஓடிவந்தனர். சகதேவன் பீமனை நோக்கி “மூத்தவரே, இளையவர் மீண்டும் துரோணரை எதிர்க்கக் கிளம்பியிருக்கிறார்… நாம் அனைவரும் இணைந்து அவருக்கு படைத்துணை அளிக்கவேண்டும் என மூத்தவரின் ஆணை” என்றான். செம்புழுதி அவர்களை மூடியிருந்தது. நகுலன் இருமி துப்பிக்கொண்டிருந்தான். “அவரிடம் அனலம்புகள் நிறைந்திருக்கின்றன… அவனால் அவரை எதிர்க்கமுடியாது” என்றான் பீமன்.

பீமன் சகட ஓசை கேட்டு திரும்பிப்பார்த்தான். இளைய யாதவர் ஓட்டிய தேரில் வில்லேந்தியபடி வந்த அர்ஜுனனை நோக்கி பீமன் திகைத்தான். கன்னங்கரிய சேற்றில் மூழ்கி எழுந்தவன் போலிருந்தான். “என்ன ஆயிற்று? இளையோனே!” என்று கூவினான். “எரிக்கு மருந்து… புரவிக்குருதி” என்றான் அர்ஜுனன். தேர் விசையழிய அவன் “பாஞ்சாலர் எங்கே?” என்றான். “படைப்பின்புலத்திற்குள் இழுத்துச்சென்றுவிட்டார்கள்.” அர்ஜுனன் “உயிர் எஞ்சுமா?” என்றான். “வாய்ப்பில்லை. நினைவு எழவில்லை. உடல் முற்றாகவே வெந்துள்ளது. புழுதியில் இழுபட்டு குருதியும் புண்ணும் சேறாகிவிட்டிருக்கின்றன. தொடைகளில் வெள்ளெலும்பு தெரிகிறது.” அப்பால் சாத்யகியின் கொம்போசை எழுந்தது. “யாதவர் படைகளை ஒருங்கு திரட்ட முயல்கிறார். ஆனால் நம் படைகளின் செவிப்புலன்கள் முற்றாகவே அழிந்துவிட்டிருக்கின்றன. வெடியோசைகள் உடற்குகைக்குள் எதிரொலித்துக்கொண்டே இருக்கின்றன” என்றான் பீமன்.

வலப்பக்கமிருந்து விரையும் தேரில் அவர்களை நோக்கி வந்த யுதிஷ்டிரர் செவிகளை கைகளால் பொத்தியபடி உடல்நரம்புகள் புடைக்க “என்ன நடக்கிறது இங்கு? இளைய யாதவனே, இத்தகைய மாயங்கள் எதற்கும் இப்போரில் இடமில்லையென்றல்லவா போருக்கு முன்னெழுந்த சொல்?” என்றார். பீமன் திரும்பி “போருக்கு முன்னெழுந்த சொற்கள் இங்கு முறையாக பேணப்படுகின்றனவா என்ன?” என்றான். யுதிஷ்டிரர் தத்தளித்து திரும்பிப் பார்க்கையில் பிறிதொரு அம்பு சென்று விழுந்து வெடிக்க வீரர்களின் உடல்களும் புரவிகளின் உடல்களும் தேர்களின் மரத்துண்டுகளும் வானில் சிதறி நாற்புறமும் வளைந்து சென்று விழுந்தன. புகைமுகில்களை நோக்கிய பின் “இது போரே அல்ல! இது

தெய்வங்களின் தீச்சொல்லுக்கு நிகரானது. இது எவ்வகையிலும் அறமல்ல. நான் நேரில் சென்று அவர் முன் நிற்கிறேன். என் நெஞ்சு காட்டி நிற்கிறேன். இது அறமல்ல ஆசிரியரே என்று அவரிடம் கூறுகிறேன்” என்றார்.

பீமன் “அனைத்து நெறிகளையும் கடந்து உங்களை சிறைகொண்டு செல்ல மும்முறை முயன்றவர் அவர். இதோ துருபதரின் மைந்தனை தன் தேர்க்காலில் கட்டி இழுத்தார். அவன் உடலை சற்றே உயிர் எஞ்சியிருக்க மீட்டுக்கொண்டு வந்திருக்கிறோம்” என்றான். அர்ஜுனனை திரும்பிப் பார்த்த பின் யுதிஷ்டிரர் “தேர்க்காலிலா?” என்று கேட்டார். “ஆம், தேர்க்காலிலேதான். இப்போது களத்திலிருக்கும் துரோணர் நாம் அறிந்தவரே அல்ல. அவர் முகத்தில் தெரியும் நகைப்பைப் பற்றி வீரர்கள் சொன்னார்கள். அது அவரில் பிறிதொரு தெய்வம் குடியேறியதால் எழுந்தது என்கிறார்கள்” என்றான் பீமன். யுதிஷ்டிரர் “துண்டுகளாக சிதறிக்கிடக்கிறார்கள் நம் படைவீரர்கள். எந்த உடலையும் தனித்தனியாக மீட்க இயலாதென்றனர்” என்றார். செவிகளைப் பற்றியபடி “என் தலைக்குள் முழக்கம் நிறைந்திருக்கிறது. என்னால் நிலைகொள்ள இயலவில்லை” என்று சொல்லி தேர்த்தட்டில் அமர்ந்தார்.

இளைய யாதவர் “பீமசேனரே, துரோணரை நாம் இப்போதே வென்றாக வேண்டும். அரைநாழிகைக்குள். அதாவது மேலும் ஐம்பது அம்புகளை அவர் ஏவுவதற்குள். அதற்குப் பிந்தினால் இங்கு படைகளுமிருக்காது, பாண்டவ ஐவரும் மைந்தரும்கூட எஞ்சமாட்டார்கள்” என்றார். “என்ன செய்வது அதற்கு?” என்றபின் சீற்றத்துடன் பற்களைக் கடித்தபடி திரும்பிய பீமன் அர்ஜுனனை நோக்கி பொருளில்லாத கோபம் பெருக

“இவனால் என்ன செய்ய முடியும்? அதோ மறு எல்லையில் அங்கன் நமது படைகளை அழித்துக்கொண்டிருக்கிறான். அவனுக்கு எதிர் நிற்க இயலாமல் சிகண்டியும் சாத்யகியும் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். இவன் அங்கனிடமும் தோற்றவன். இங்கே இவர் முன்னாலிருந்தும் ஓடிவந்தவன்” என்றான்.

சகதேவன் “மூத்தவரே…” என்றான். “அப்பால் போ!” என அவனை நோக்கி கூச்சலிட்டான் பீமன். “இவனால் அவரை கொல்ல இயலாது… இவனால் அங்கனையும் வெல்ல இயலாது. அதை கண்ணெதிரே கண்டோம். இவன் வில் ஆற்றல் மிக்கது. உள்ளம் ஒவ்வொருவர் முன்பும் முன்னரே மண்டியிட்டுவிடுகிறது.” சினத்துடன் உடலெழுந்த அர்ஜுனனை கையசைவால் இளைய யாதவர் தடுக்க யுதிஷ்டிரர் “இவன் அவரை கொல்வான். அவ்வாறு நிமித்திகர்கள் சொல்லியிருக்கிறார்கள்” என்றார். பீமன் வெறுப்புடன் பல்தெரிய நகைத்து “அதாவது நிமித்த நூலை நோக்கிய பின்புதான் களம் புகுந்தீர்கள், இல்லையா?” என்றான். யுதிஷ்டிரர் விழிதாழ்த்தி “மெய், என்னால் நோக்காமலிருக்க இயலவில்லை. நான் கடையன். ஆனால் இவன் தன் ஆசிரியனை கொல்வான் என்று கண்டேன்” என்றார்.

இளைய யாதவர் “ஆசிரியனை கொல்லாதவனுக்கு தனது மெய்மை சிக்குவதில்லை என்பார்கள்” என்றபின் உரக்க நகைத்து அர்ஜுனனைப் பார்த்து “செல்க, உன் ஆசிரியனின் நெஞ்சுக்கு அம்புகளை செலுத்துக!” என்றார். அர்ஜுனன் “அதற்கு எனக்கு தயக்கமேதுமில்லை, யாதவரே. அத்தயக்கம் எனக்கு சற்றேனும் வரக்கூடாதென்பதற்காகத்தான் போலும் தெய்வங்கள் அவரை இத்தனை கீழிறங்கச் செய்கின்றன. இதோ

என் குடியினர் இறுதிச்சடங்குக்கும் உடல் எஞ்சாமல் குருதிச்சிதறல்களாக கிடக்கிறார்கள். இப்போது என் ஆசிரியரின் முகத்தில் காண்பது நானறிந்த ஆசிரியரை அல்ல. அக்கீழ்மகனின் சிரிப்பை நோக்கி அம்பெய்வதற்கு எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை" என்றான். "பிறகென்ன, எழுக!" என்று இளைய யாதவர் சொன்னார். "ஆனால்..." என்றபின் "என்னிடம் எஞ்சுவது ஒற்றை அம்பு" என்றான் அர்ஜுனன்.

மீண்டும் வெடியோசை எழ அவர்கள் மேல் புழுதியும் சிதைந்த உடற்தசைகளும் துண்டுபட்ட உறுப்புகளும் பொழிய அவர்கள் குனிந்து நிலம்படிந்தனர். அர்ஜுனன் உடலெங்கும் புழுதிமூட அமர்ந்திருந்தான். நிமிர்ந்து உடலையும் ஆடைகளையும் சீரமைத்த பின்னர் இளைய யாதவர் "எழுக!" என்றார். அர்ஜுனன் அசைவிலாதிருந்தான். "எழுக, இதுவே தருணம்!" என்றார் இளைய யாதவர். அர்ஜுனன் உடலில் படிந்த புழுதி அவன் மேலிருந்த தேன்மெழுக்கில் நனைந்து சேறாகிக்கொண்டிருந்தது. பீமன் "அவரை இவன் நேர்நின்று வெல்ல இயலாது, யாதவரே. இவனை இவ்வாறு போருக்கு அனுப்புவது பெரும்பிழை" என்றான். "நாமனைவரும் சென்று சூழ்ந்துகொள்வோம். நேருக்குநேர் நின்று போரிடுவோம். அவரை நாம் கொன்றால் நம் படைகள் உயிர் பிழைப்பர். நம்மை அவர் கொன்றால் இப்போர் நின்றுவிடும்" என்றான்.

"அவரை நாமனைவரும் சேர்ந்தாலும் வெல்ல இயலாது" என்றார் இளைய யாதவர். "அவருடைய அம்புகளுக்கு மாற்று அம்பு நம் எவரிடமும் இப்போதில்லை." பீமன் தளர்ந்து "எனில் நாம் முற்றாக அழிவதுதானா ஒரே வழி?" என்றான். உடனே வீம்புகொண்டு "அதுவே ஊழ் எனில் செல்வோம். அவர் அம்புகளால் களம்படுவோம். அது ஆண்மை. இங்கே புகைக்கும்

புழுதிக்கும் நடுவே ஒளிந்து நின்றிருக்கும் கீழ்மையால் எப்பொருளும் இல்லை” என்றான். உறுதியான குரலில் “நாம் வென்றாகவேண்டும்” என்றார் இளைய யாதவர். “எப்படி?” என்றான் பீமன். இளைய யாதவர் “அவர் சற்றேனும் தளரவேண்டும். வில் தாழ்த்தி அமரவேண்டும். அன்றி அவரை வெல்ல இயலாது. அதற்கு ஒரு வழி மட்டுமே உள்ளது” என்றார். “சொல்க!” என்று பீமன் முன்னெழுந்தான். “எதுவாயினும் இனி நமக்கு வேறுவழி இல்லை… இந்தக் கொலைக்களத்தில் இனி நெறிகளே இல்லை.”

“முன்னர் யுதிஷ்டிரர் சென்று வணங்கியபோது அவரே உரைத்தது அந்த வழி” என்று இளைய யாதவர் சொன்னார். அப்பேச்சை அப்போது புதிதாகக் கேட்பதுபோல யுதிஷ்டிரர் விழி அதிர்ந்து நோக்கை விலக்கிக்கொண்டார். “அதை அவர் நம்மிடம் சொன்னதனாலேயே இப்போது நாம் அதைச் செய்வதை அவர் ஏற்கிறார் என்றுதான் பொருள்” என்றார் இளைய யாதவர். குழப்பத்துடன் அவரையும் அர்ஜுனனையும் பார்த்தபடி “என்ன?” என்று பீமன் கேட்டான். “யானை உணவுண்பதை நிறுத்திக்கொள்வதைப் பற்றி சொன்னார்” என்ற இளைய யாதவர் பீமன் பேசுவதற்குள்ளாகவே “தன் மைந்தன் இறந்தால் பின்னர் அவர் வாழமாட்டார். அக்கணமே அம்பு தாழ்த்தி வில் வைத்து அமர்வார். அவர் வில் ஒருமுறை தாழ்ந்தால் போதும். அவர் நெஞ்சறுத்து உயிர் பறிக்க பார்த்தனால் இயலும்” என்றார்.

“ஆனால் அஸ்வத்தாமனை கொல்வது அவரைக் கொல்வதைவிட கடினம். தன் அனைத்து அம்புகளாலும் அவர் அவனுக்கு காவலிட்டிருக்கிறார்” என்று பீமன் சொன்னான். “மேலும் அர்ஜுனன் அவனை கொல்வதில்லை என்று தன்

ஆசிரியருக்கு சொல்லளித்திருக்கிறான். அவன் அளித்த சொல் நம்மையும் ஆள்வதே.” சகதேவன் உரக்க “சொற்கள் அனைத்தும் காற்றில் பறக்கும் தருணம் இது. தொல்நூலின் சொற்களின்படியா அவர்கள் நடந்துகொண்டிருக்கிறார்கள்? இதோ எழும் அனல் போர்நெறியா என்ன?” என்றான். பீமன் அவனை நோக்கிய பின் “ஆம், நாம் அஸ்வத்தாமனை சூழ்ந்துகொள்வோம். இக்களத்திலேயே அவனை கொல்வோம்” என்றான்.

“அஸ்வத்தாமனை கொல்வதும் நம்மால் இயல்வதே” என்றார் இளைய யாதவர். “ஆனால் ஒரு நாழிகைக்குள் அல்ல. இன்று அந்திவரைக்கும் கூட ஆகலாம். முதலில் கௌரவர்களின் பெருவீரர்களிடமிருந்து அவரை தனியாக பிரித்துக்கொண்டு வரவேண்டும். நம் தரப்பினரின் அனைத்து வீரர்களும் அவரை சூழ்ந்துகொள்ள வேண்டும்.” பீமனை கூர்ந்து நோக்கி “ஆனால் மைந்தன் சூழ்ந்துகொள்ளப்பட்டதை அறிந்து தன் கையிலிருக்கும் எரியம்புகளுடன் துரோணர் வருவாரெனில் அது இயல்வதல்ல” என்றார் இளைய யாதவர். “ஆம்” என்று பீமன் தளர்ந்தான். அவர் முகத்திலிருந்து விழிவிலக்கியதுமே அவர் விழிகள் தன்னுள் எழ அவருள் ஓடும் எண்ணத்தின் நுனியை சென்று தொட்டு விழிதூக்கி அவர் முகத்தை சில கணங்கள் நோக்கிய பின் “தாங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள், யாதவரே?” என்றான்.

“அஸ்வத்தாமன் இறந்தான் எனும் செய்தி அவர் செவிக்குச் சென்று விழுந்தால் போதும். அஸ்வத்தாமன் எனும் பெயரில் அவர் மைந்தன் மட்டும் இருக்க வேண்டியதில்லை” என்றார் இளைய யாதவர். “அஸ்வத்தாமன் எனும் பெயர் பிற எவருக்குமில்லை. அது அவர் தன் மைந்தனுக்கிட்ட விந்தைப்

பெயர். அது இங்கு அனைவருக்கும் தெரியும்” என்றான் பீமன். “அதே விந்தையுணர்வுடன் முன்பொரு யானைக்கும் அப்பெயரிடப்பட்டது” என்றார் இளைய யாதவர். பீமன் ஒருகணம் கழித்தே புரிந்துகொண்டு ஓர் அடி எடுத்து இளைய யாதவரை அணுகி “ஆம், அந்த யானையை நான் அறிவேன். விழிநோக்கு குறைந்தது. இளஅகவையிலேயே புண்பட்டு மானுடர் மேல் ஐயமும் வெறுப்பும் அடைந்தது. ஆகவே எப்போதும் எரிச்சலுடன் நிலைகொள்ளாதிருக்கும். இப்போது மாளவப் படைகளில் உள்ளது அந்த யானை. இருமுறை இக்களத்திலேயே அதை எதிர்கொண்டிருக்கிறேன்” என்றான்.

“அதை கொல்ல உங்களால் இயலுமல்லவா?” என்று இளைய யாதவர் கேட்டார். கைதூக்கி “அரை நாழிகை போதும்” என்றான் பீமன். “அதன் விழிப்பிழையை நான் நன்கு அறிவேன். அதற்கு போக்குகாட்டி எழுந்து அணுகி தலை அறைந்து பிளப்பேன்.” இளைய யாதவர் “அவ்வண்ணம் நிகழ்க! களத்தில் பார்த்தன் துரோணருடன் நின்று போரிடுகையில் அஸ்வத்தாமன் இறந்தான் எனும் செய்தியை உங்கள் தூதர் வந்து அறிவிக்கட்டும். நமது படைமுரசுகள் முழங்கட்டும். அஸ்வத்தாமன் கொல்லப்பட்டான் எனும் கூச்சலும் வாழ்த்தொலிகளும் எழட்டும். வெற்றிக்கூச்சல் நமதாகவும் வாழ்த்தொலிகள் கௌரவர்களுடையதாகவும் தோன்றட்டும்” என்றார். ஐயத்துடன் “அது அத்தனை எளிதென்று எண்ணுகிறீரா, யாதவரே?” என்றான் பீமன். “நாம் களத்தில் செய்த போர்சூழ்ச்சிகள் பல. அதிலொன்றே இது என துரோணர் எண்ணுவார்.”

“ஆம், நீங்களோ உங்கள் இளையோரோ சொன்னால் அவ்வண்ணமே எண்ணுவார். சொல்லவேண்டியவர் உங்கள்

மூத்தவர் யுதிஷ்டிரர். அவர் சொன்னால் ஆசிரியர் நம்புவார்.” யுதிஷ்டிரர் எதிர்பாராத சீற்றத்துடன் “நான் எந்நாவால் இதுவரை பொய்யுரைத்ததில்லை” என்றார். மூச்சுவாங்க கைகளை வீசி “இல்லை, இதற்கு நான் உடன்படமாட்டேன். இது என் அறுதி முடிவு… இதற்கு எவ்வகையிலும் நான் துணைநிற்கமாட்டேன்” என்றார். அத்தருணத்தில் அதை அறிந்தவராகத் தோன்றினார். “என் நாவில் அச்சொல் எழாது… ஆம், என்னால் இயலாது.” மூச்சிரைக்க “பொய்யுரைத்து வென்ற நாட்டை ஆளவேண்டுமா நான்? என் குருதியினருக்கு அதைவிடப் பெரிய இழுக்கென ஏதுள்ளது? அது என்னால் இயலாது” என்றபோது அவர் குரல் உடைந்தது. அழுவதுபோல் முகம் நெரிபட “என்னை அவ்விழிவுக்கு செலுத்தவேண்டாம், இளையோனே” என்றார்.

பீமன் “இக்களத்தில் இதுவரை முற்றிலும் அறம்நின்றுதான் நாம் போரிட்டோமா? அறவழுவுக்கு நீங்கள் ஒப்புதலே அளிக்கவில்லையா?” என்றான். “ஒவ்வொன்றுக்கும் ஒரு நெறியை நாம் கண்டடைந்திருக்கிறோம். அவ்வண்ணமே இப்போதும் காண்போம்.” சீற்றத்துடன் கைநீட்டி “மந்தா!” என கூவி யுதிஷ்டிரர் நடுங்கினார். இளைய யாதவர் “அரசே, இன்னும் ஒரு நாழிகைப் பொழுதுக்குள் ஆசிரியர் களம்படவில்லையெனில் நாம் எஞ்சப்போவதில்லை. உங்கள் இளையோர் எஞ்சமாட்டார்கள். மைந்தர்கள் வாழமாட்டார்கள். இக்களத்தில் பாண்டவர் என ஒருவரும் எஞ்சமாட்டார்கள். உங்களை நம்பி வந்த இக்குடிகள் அனைத்தும் முற்றழியும். நோக்குக!” என கை சுட்டிய இடத்தில் வானளாவ எழுந்த புகைத்தூண்கள் காட்டின் அடிமரங்கள் என நின்றிருந்தன. அச்சத்துடன் நிமிர்ந்து பார்த்து சொல்லமைந்து நின்றார் யுதிஷ்டிரர். “இன்னும் இவ்வண்ணம் நூறு அம்புகள்

செலுத்தப்படுமெனில் இங்கு எவர் எஞ்சுவார்?” என்றார் இளைய யாதவர்.

“ஆனால் அதன் பொருட்டு பொய் சொல்வதென்றால்…” என்று சொன்ன யுதிஷ்டிரர் நெடுந்தொலைவு தன்னுள் ஓடிச் சென்று நின்று மூச்சிரைக்க முடிவெடுத்து விழிநீர் வழிய “இல்லை. நான் பொய் சொல்லப்போவதில்லை. எந்நிலையிலும் அதை சொல்லப்போவதில்லை” என்றார். பீமன் சலிப்புடன் “நீங்கள் எதை நிறுவிக்கொள்ள முயல்கிறீர், மூத்தவரே? எவருக்கு முன்?” என்றான். யுதிஷ்டிரர் கைகளை நெஞ்சில்கூப்பி உடல்குனித்து “நான் எதையும் நிறுவவில்லை. இந்தக் களத்தில் கீழ்மகனாக, சிறுமையாளனாக நின்றிருக்க எனக்கு இனி எத்தயக்கமும் இல்லை. நான் அஞ்சுவது இதை அல்ல” என்றார். “மைந்தா, நான் இந்தப் பொய்யை சொல்லப்போவதில்லை. இதை எங்கேனும் நிறுத்தியாகவேண்டும். சற்றுமுன் நகுலனிடம் பேசியபோது நான் இதை உணர்ந்தேன். வரும் வழியில் என் உள்ளம் கொந்தளித்துக்கொண்டிருந்தது. நீங்கள் பேசிக்கொண்டிருக்கையில் நெஞ்சில் கதையால் அறைபட்டதுபோல் ஓர் உண்மையை தெளிந்தேன்.”

“கீழ்மை எதுவும் தனித்து அணைவதல்ல. ஒரு கீழ்மை நம்மை சற்றே தாழ்த்துகிறது. அங்கே மேலும் கீழ்மை வந்தமைகிறது. ஒரு சிறு கீழ்மைக்கு இடமளித்தவன் அத்தனை கீழ்மைகளுக்கும் ஒப்புதல் அளிக்கிறான். அறுதியாக நாம் முற்றிலும் பிறிதொருவராக, நம்மால் எவ்வகையிலும் ஏற்றுக்கொள்ள இயலாத ஒன்றைச் செய்தவராக மாறி நின்றிருப்போம்” என்றார் யுதிஷ்டிரர். “இதோ நின்றிருக்கிறான், என் இளையோன் நகுலன். இப்புவியில் புரவிக்கிணையாக எதையுமே கருதாதவன். தன் தெய்வத்தை புரவியில்

கண்டுகொண்டவன். இனி அவனால் ஒரு புரவியை உளம்நிறைந்து தொட இயலுமா? அன்னையின் கையை மகவு என அதை இனி புரவிகள் ஏற்றுக்கொள்ளுமா? புரவியை இழந்தபின் இனி அவனுக்கு இந்தப் புவியில் அடைவதற்கு ஏதுள்ளது?”

நகுலன் இறுகிய முகத்துடன் நின்றான். மிக அப்பால் சாத்யகியின் கொம்போசை எழுந்து மன்றாடிக்கொண்டிருந்தது. இளைய யாதவர் “நான் இனி ஒன்றும் சொல்வதற்கில்லை” என்றார். பீமன் “நமக்கு வேறு வழியில்லை. அஸ்வத்தாமன் எனும் யானை இறக்கட்டும். அச்செய்தி பாண்டவர்களால் களத்தில் அறிவிக்கப்படட்டும். களத்தில் தன் முன் நிற்கும் துரோணரிடம் அதை உறுதி செய்யும் பொறுப்பை நாம் அரசருக்கே விடுவோம். அவர் இங்கு சொன்ன முடிவை அங்கு நின்றும் எடுக்கட்டும். தன் மைந்தரையும் குடியினரையும் படையினரையும் கைவிட்டு பொய் சொல்லா நெறியையே தலைக்கொள்ள அவர் முடிவெடுக்கிறார் எனில் அவ்வண்ணம் ஆகுக! இக்களத்தில் அவர் சொல்லின்பொருட்டு இறப்பது நமக்கு பெருமையே. அன்றி நம்மை காக்க வேண்டுமென்னும் பொறுப்பை அவர் எடுத்துக்கொண்டாரெனில் நாம் வெல்வோம், வாழ்வோம்” என்றான்.

“இது என்ன? என்னை பேரிடருக்கு முன் நிறுத்துகிறீர்கள்!” என்று யுதிஷ்டிரர் கூவினார். “ஆம் மூத்தவரே, நாங்கள் வாழ்வதும் இறப்பதும் உங்கள் சொல்லால் முடிவெடுக்கப்படட்டும். அதுவே உகந்தது” என்றான் பீமன். “ஆம், அதை செய்வோம்” என்றபின் இளைய யாதவரிடம் சகதேவன் “இனி சொற்கள் வேண்டியதில்லை, யாதவரே” என்றான். அர்ஜுனனிடம் “ஏறிக்கொள்க, தனஞ்ஜயா!” என்றார் இளைய யாதவர்.

அர்ஜுனன் தன் தேரில் மீண்டும் ஏறிக்கொள்ள அவர் கையூன்றி தாவி அமரத்திலேறி அமர்ந்து கடிவாளத்தை எடுத்துக்கொண்டார். மெல்லிய சீழ்க்கை ஒலியால் புரவிகளை விதிர்த்து செவி பின்னடையச்செய்து பிறிதொரு சீழ்க்கை ஒலியால் அவற்றை முன்னோட்டிச் சென்றார். பீமன் யுதிஷ்டிரரிடம் “இதுவரைக்கும் முடிவுகளின் பொறுப்பு எதையும் தாங்கள் ஏற்றுக்கொண்டதில்லை, மூத்தவரே. இம்முறை அதை சூடுங்கள்” என்றபின் தன் தேரை நோக்கி சென்றான்.

# கார்கடல் - 83

அர்ஜுனன் தேரில் தலைதாழ்த்தி அமர்ந்திருக்க இளைய யாதவர் அவனை நோக்கி “உன் உள்ளம் இன்னும் விசைகொள்ளவில்லை” என்றார். “யாதவரே, நான் அந்த யானையை பற்றி எண்ணிக்கொண்டிருந்தேன்” என்றான். இளைய யாதவர் “ஆம், நானும் எண்ணினேன்” என்றார். “அதற்கும் எனக்கும் ஒரே அகவை. அஸ்வத்தாமனும் நானும் இணையகவை கொண்டவர்கள்” என்றான் அர்ஜுனன். “எங்களுக்கிடையே அது எவ்வண்ணமோ வந்துவிட்டது.” இளைய யாதவர் சொல் என்பது போல நோக்கினார். “நெடுங்காலம் முன்னர், நானும் அவரும் ஆசிரியரின் குருநிலையில் சாலைத்தோழர்களாக பயின்றபோது…” என அர்ஜுனன் தொடர்ந்தான். “அன்று நான் அவர் மேல் போட்டியுணர்வும் காழ்ப்பும் கொண்டிருந்தேன். எனக்கு அளிக்காத எதையோ அவருக்கு ஆசிரியர் அளிக்கிறார் என்ற ஐயத்தால் ஒவ்வொரு கணமும் துடித்துக்கொண்டிருந்தேன்.”

“அஸ்வத்தாமருக்கும் எனக்கும் முதல் நெடும்போர் அன்று கங்கைக்கரையில் நிகழ்ந்தது” என அர்ஜுனன் சொன்னான். “அதுவரை நூறுமுறை ஓங்கி தாழ்த்திய வில். ஆயிரம் முறை இலக்கடையாது உள்ளத்திலேயே அமைந்த அம்புகள். போர் எவ்வண்ணம் தொடங்கியது என நினைவில்லை. ஆசிரியருக்கு பணிவிடைகள் செய்வதில் நான் முன்னிற்பதனால் அவன் சினம்கொண்டான். ஆனால் நீராடச் செல்கையில் அதை ஆசிரியரின் சிறுமை என காட்டினான். அரசகுடியினருக்கு பணிவிடை செய்ய ஆசிரியர்களுக்கும் தெரியும் என்றான். அச்சொல்லால் சீண்டப்பட்டேன். நாங்கள் போரிட்டோம். அவனை கொல்லும்பொருட்டு அம்பு ஒன்றை எடுத்தேன். அதை எய்தபோது நடுவே ஓர் யானைக்குட்டி நீரிலிருந்து எழுந்தது. அதன்மேல் அம்பு பாய்ந்தது.”

“அந்த யானையின் பெயர் அஸ்வத்தாமன் என பின்னர் அறிந்தேன்” என்றான் அர்ஜுனன். “பிறந்ததும் குதிரைக்குட்டிபோல ஒலியெழுப்பியமையால் முதுமாதங்கர் அதற்கு அஸ்வத்தாமன் என்று பெயரிட்டிருந்தனர். அன்றுவரை மானுடரிலிருந்து அன்பை மட்டுமே அறிந்துவந்தது அந்த வேழம். மானுடரிலிருந்து முதல் புண்ணைப் பெற்றதும் அதன் உள்ளம் திரிந்துவிட்டது. அந்தப் பிழையை நிகர்செய்யும்பொருட்டு நான் யானைமுகக் கடவுளுக்கு நோன்பிருந்தேன். நோன்புகள் என்பவை உண்மையில் நமது பிழைகளை நாமே கடக்கும்பொருட்டு எண்ணிக்கொள்பவை மட்டுமே. அந்நோன்பினூடாக நான் அதை முற்றாக மறந்தேன். அந்த யானை பெருஞ்சினமும் கட்டின்மையும் கொண்டதாக வளர்ந்தது. பின்னர் வேண்டுமென்றே அதை மாளவ அரசனுக்கு கொடையாக அஸ்தினபுரியில் இருந்து அளித்தனர் என தெரிந்துகொண்டேன்.”

“யாதவரே, இதோ அதை கொல்லப்போகிறார் மூத்தவர். அதை நான் கொல்லத்தொடங்கி ஐம்பதாண்டுகள் கடந்துவிட்டன. ஒவ்வொரு நாளுமெனக் கொன்று இதோ கொன்று முடிக்கவிருக்கிறேன்” என்றான் அர்ஜுனன். “ஆம், ஊழால் அனைத்து உயிர்களும் பின்னப்பட்டிருக்கின்றன” என்றார் இளைய யாதவர். “உன் ஆவநாழியில் அந்த இறுதி அம்பு ஒருங்கியிருக்கிறதல்லவா?” அர்ஜுனன் “அதை நான் எடுத்தால் என்னிடம் அம்பென ஏதும் எஞ்சாது. காண்டீபத்தை கீழே வைத்துவிடவேண்டியிருக்கும்” என்றான். “சுனையை முற்றிறைத்தாலொழிய புதிய நீர் ஊறுவதில்லை” என்றார் இளைய யாதவர். “அது அரியது… மிக மிக கூரியது. யாதவரே, தளிர்க்கொடி முனைபோல் மென்மையானது. ஒருபோதும் நெஞ்சத்து இருளிலிருந்து நான் வெளியே எடுக்காதது. அதை எடுத்துவிட்டால் அதன்பின் நான் எஞ்சமாட்டேன். அது என் இறப்பு” என்றான் அர்ஜுனன். உரக்க நகைத்தபடி இளைய யாதவர் சொன்னார் “பார்த்தா, இறக்காதவர் பிறப்பதில்லை.”

அர்ஜுனன் மேலும் சொல்லெடுக்காமல் அமர்ந்திருந்தான். தேர் படைகளினூடாகச் சென்றது. புகை சூழ்ந்திருந்த போர்முகப்புக்குள் நுழைந்தது. அர்ஜுனன் இருமி துப்பினான். அவன் விழிகளை புகை மறைத்தது. “என்னால் இயலாதென்றே தோன்றுகிறது, யாதவரே” என்றான். “எனில் உயிர்விடுக! நீ செய்வதற்கு வேறொன்றில்லை” என்றார் இளைய யாதவர். “யாதவரே, அஸ்வத்தாமன் என்னும் யானையை நான் வென்ற மறுநாள்தான் என்னை பரத்வாஜ குருநிரையின் முதன்மை மாணவனாகவும் தன் கலையனைத்திற்கும் வழித்தோன்றலாகவும் ஆசிரியர் அறிவித்தார்” என்று அர்ஜுனன் சொன்னான். “ஒருபோதும் எனக்கு நிகராக இன்னொருவனை அவர் வைக்கப்போவதில்லை என்றார். என்னை தன்

வடிவமாகவே கண்டு வணங்குக என ஆணையிட்டார். எனக்கு எதிராக சொல்லப்படும் ஒவ்வொரு சொல்லும் அவரை நோக்கியே, என் மேல் எழும் ஒவ்வொரு வில்லும் அவருக்கு எதிராகவே என வஞ்சினம் உரைத்தார்.”

“அதற்கு முன் உன்னிடம் சொல்பெற்றுக்கொண்டார்” என்றார் இளைய யாதவர். “ஆம், ஒரு தருணத்திலும் நான் அவர் மைந்தனை கொல்லலாகாது, எதன் பொருட்டும் என்று ஆணையிட்டார். அவர் குரல் நடுங்கியதை உணர்கிறேன். ஒருவேளை மானுடர் கற்பனைக்கே அப்பாற்பட்ட பெரும் அறப்பிழையை அஸ்வத்தாமர் செய்தாலும் என் வில் எழலாகாது என்றார். அவர் குரலை சொல் சொல்லென நினைவுறுகிறேன். அத்தனை பெரிய நாள் அது என அன்று எண்ணியிருக்கவில்லை. நாளை என் குலத்துக்கும் உனக்கும் பெரும்பழியை அவன் அளித்தாலும், உன் பிதாமகர்களையும் அன்னையரையும் உடன்பிறந்தாரையும் மைந்தர்களையும் உன் கண்ணெதிரே அவன் கொன்றாலும் உன் கை அவனை கொல்லக்கூடாது… அவர் விழிகளை நினைவுகூர்கிறேன். நான் மூதாதையரும் மும்மூர்த்திகளும் ஆணையிட்டாலும் மீறமாட்டேன் என அவருக்கு சொல்லளித்தேன்.” அர்ஜுனன் “யாதவரே, அன்று அவர் விழிகளில் பிறிதொருவரை கண்டேன். அவர்தான் இதோ அனைத்து அறங்களையும் மீறி களம்நின்றிருக்கும் ஆசிரியர்” என்றான். “வந்தடைந்துவிட்டாய்…” என களம் நடுவே தேரை கொண்டுசென்று நிறுத்தினார் இளைய யாதவர்.

துரோணரை நோக்கி சென்றபோது அர்ஜுனன் தன்னுள்ளிருந்து ஒரு புதிய ஆற்றல் எழுவதை உணர்ந்தான்.

அவர் முன்னிருந்து தோற்று தேர் எரிய விலகிச் சென்றபோது அவர் வெல்லமுடியாதவர் என்றும் அவர் முன் முற்றாக தோற்றுவிட்டதாகவும் அவன் உணர்ந்தான். ஆனால் மீண்டும் அணுகியபோது எரிச்சலும் கசப்பும் முற்றாக விலகி உள்ளம் அமைதி கொண்டது. அவன் அவருடைய புதிய விழிகளையே எண்ணிக்கொண்டிருந்தான். எத்தனை பழகிய நோக்கு! எத்தனை ஆயிரம் முறை எண்ணத்தில் எழுந்தது! அதை அழுத்தி அழுத்தி ஆழத்தில் செலுத்திக்கொண்டுவிட்டிருக்கிறான். இங்கு இவ்வண்ணம் எழுந்து தோன்றுவதற்காகவே அவை அங்கே இருந்திருக்கின்றன. இதோ இக்களத்தில் வில்கொண்டு நின்றிருப்பவர் என்னுள் இருந்து எழுந்தவரா என்ன?

அவன் தேர் போர்முனைக்கு சென்று நின்றது. நகுலனும் சகதேவனும் அவனுக்கு சகடத்துணையாக வந்தனர். ஆனால் சூழ்ந்திருந்த புகைமூட்டத்தால் அவர்கள் அகற்றப்பட்டார்கள். விழுந்து எரிந்துகொண்டிருந்தனர் பாண்டவப் படையினர். தேர்கள் கொழுந்தாடி வெடித்துக்கொண்டிருந்தன. புழுதியும் புகையும் சூழ்ந்து காற்றில் அலைப்புண்டன. வாழ்த்தொலிகளை எழுப்ப எவரும் அங்கிருப்பதாக தெரியவில்லை. மிக அப்பால் சாத்யகியின் ஆணைகள் வானில் அலைந்து வீணாகி சிதறிக்கொண்டிருந்தன. எந்த ஓசையும் இல்லாமல் அவர்கள் போர்முகம் கொண்டனர். தெய்வங்கள் நோக்குகின்றனவா விண்ணிலிருந்து? இப்புகைப்பரப்புக்குள் கந்தர்வர்கள் உலவுகின்றனரா?

அவனைக் கண்டதும் தொலைவிலிருந்தே துரோணர் உரக்க எக்காள ஒலி எழுப்பினார். பற்கள் தெரிய நகைத்தபடி “செல்க! செல்க!” என்று கைசுட்டி ஆணையிட்டார். வில்லும் குடுவையும் கொண்ட கொடி காற்றில் எழுந்து பறக்க அவருடைய தேர்

அவனை நோக்கி வந்தது. அவன் காண்டீபத்தை ஊன்றியபடி அவரை கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தான். அவருடைய விழிகளை சந்திக்க விழைந்தான். அவை அணுகி அணுகி வந்தன. நோக்கு மட்டுமென திகழ்ந்து இரு புள்ளிகளாகி ஒருகணத்தில் விழிக்கூரை அவன் விழி சந்தித்தது. அவன் மெய்ப்பு கொண்டான். சற்று நேரத்தில் கொல்லப்படவிருப்பவர் அவர் என்பது அக்கணமே அவனுள் உறுதியாகியது.

சூழ்ந்திருந்த வீரர்கள் அவர்கள் போரிடுவதை அறியவில்லை. புகையால் புழுதியால் அனலால் அவர்கள் மூடப்பட்டிருந்தனர். அவர்கள் பிறிதெவரும் இல்லாத விரிந்த வான்வெளியில், சூழ்ந்த வெறுமைக்குள் நின்றுகொண்டிருந்தனர். பிற விழிகள் அறியாத போர். அது மெய்யாகவே நிகழ்கிறதா? அன்றி தன் அகத்துக்குள், கனவின் ஆழத்திலா? என்றும் அது அங்கு அவ்வண்ணம் நிகழ்ந்துகொண்டே இருந்ததா? இது இங்கு முடியப்போவதில்லையா? கனவில் எழும் அம்புகள் எவரையும் கொல்வதில்லை. எனில் அவை ஏன் எழுகின்றன? அவை சென்று தைப்பது எவரை?

முதல் அம்பை எடுத்து அவரை நோக்கி தொடுத்த கணமே அவன் உணர்ந்தான், அவனுக்கு அந்நம்பிக்கை ஆற்றலை அளித்தது அவன் ஒன்றை கரந்திருக்கிறான் என்பதுதான். ஒன்றை கரந்திருப்பவன் பிறர் அறியாத படைக்கலமொன்றை கொண்டவன். ஆகவே பிறரைவிட ஆற்றல் மிக்கவன். நீங்கள் என்னை முழுதறியவில்லை என்று இவ்வுலகனைத்திடமும் சொல்லும்போது மட்டுமே மானுடன் தன் ஆற்றலின் உச்சத்தை அடைகிறான் போலும். வருக! வருக, ஆசிரியரே! நீங்கள் அறியாத ஒருவனிடம் போரிட வந்திருக்கிறீர். கரவினூடாக உங்களைக் கடந்த ஒருவனிடம். அணுகுக! அணுகுக! அவர்

அவன் அம்புவட்டத்திற்குள் வந்ததும் அவன் நாணிழுத்து முதல் அம்பை தொடுத்தான். அவருடைய அம்பு எழுந்து அதை முறித்தது. அந்த ஒலியுடன் இணைந்தே அடுத்த அடும்பு வந்து அவன் தேர்க்குவைமுகடை அடித்தது.

தான் தொடுத்த ஒவ்வொரு அம்பும் தன்னுள் வாழ்ந்த அக்கரவிலிருந்து எழுந்தது என அர்ஜுனன் அறிந்திருந்தான். ஆகவே ஒவ்வொன்றிலும் துரோணர் அறியாத ஒன்று கூடியிருந்தது. ஒரு திரும்பல், ஓர் அசைவு, ஒரு துள்ளல், ஒரு சிறு முழக்கம். அது துரோணரை எச்சரிக்கை கொள்ளச்செய்தது. அவனை நோக்கி அவர் எய்த அம்பு வெடிப்போசை எழுப்பியபடி மேலெழ அக்கணமே அதை தன் அம்பால் விண்ணிலேயே வெடித்துச் சிதற வைத்தான். விண்மீன்கள் தெறிப்பதுபோல் வானெங்கும் தீப்பொறிகளை பரப்பியபடி அது ஒளிர்ந்து கருகி அடங்கியது. சீற்றம் கொண்டு பற்களைக் கடித்தபடி, உறுமியபடி, பொறுமையிழந்து கூச்சலிட்டபடி துரோணரும் மேலும் மேலும் அம்புகளை அவன் மேல் எய்தார். ஒவ்வொரு அம்பையும் அவன் மண்ணுக்கு வருவதற்கு முன்னரே அறைந்து தெறிக்கவிட்டான். அவர் அவன் ஆவக்காவலனை கொன்றார். அவனுடைய தேர்மகுடமும் கொடியும் உடைந்தன. அவர்களின் போரைக் கேட்டு மெல்ல எழுந்து சூழ்ந்தனர் பாண்டவப் படையினர்.

பின்னர் துரோணர் மெல்ல பின்னடைந்தார். அது மேலும் ஆற்றல் கொண்ட அம்புகளை எடுப்பதற்காகவே என்று அவன் உணர்ந்தான். அவருடைய விழிகள் தன் முகத்தை துழாவுவதை அறிந்தான். அவன் கொண்ட அந்த ஆற்றல் என்ன என்று அவர் எண்ணுகிறார். அவன் கரந்திருப்பது ஒன்று உண்டென்று கண்டுகொண்டிருக்கிறார். அவருடைய அத்தனை

அம்புகளையும் அந்தக் கரவின் எதிர்பாராத தன்மை பொருளிழக்கச் செய்தது. ஓர் அணுவிடை திசை மாற்றியது. ஒரு கணம் பிந்த வைத்தது. ஒரு துளி ஆற்றல் குறையச் செய்தது. அந்த அணுக்கணத்தின் துளித்துமியில் புகுந்து அவரை அவன் வென்றுகொண்டிருந்தான். முற்றிலும் நிகர்நிலைகொண்ட போர் என்றே சூழ்ந்திருந்தவர்கள் எண்ணினர். அவர்கள் அறிந்திருந்தனர், அம்புகள் நிகழ்த்தும் அந்த உரையாடலில் ஒரு சொல் அவனிடம் மிகுந்திருப்பதை.

துரோணர் மெல்ல அந்த தன்னம்பிக்கை நிறைந்த சிரிப்பை அடக்கி விழிகூர்ந்தார். தொங்கிய இமைகளிலும் மடிந்த உதடுகளிலும் மீண்டும் முதுமை வந்து படிந்தது. ஆனால் அவன் அறிந்த அந்தக் கனிவும் மென்மையும் அங்கு முற்றாகவே தென்படவில்லை. கற்பிக்கையில் மட்டுமே அவை அவர் முகத்தில் எழுகின்றன. சொல்திரள்கையில் மட்டுமே அவர் ஆசிரியர். அப்போது அவரில் புதிய எண்ணங்கள் எழுகின்றன. ஆயிரம் கைகளால் தன் மாணவரின் தலை தொட்டு வாழ்த்துகிறார். முலையூட்டும் அன்னையென, தலையில் மைந்தரை தூக்கி வைத்திருக்கும் தந்தையென, நெஞ்சிலேற்றி விளையாடும் மூதாதையென, உடலெங்கும் முளை எழுந்து காடாகிச் சூழும் நீத்தோரென மாறுகிறார். கரவின்றி அளிக்கிறார். எல்லையின்றி வாழ்த்துகிறார். இதோ வில்லெடுத்து என்னை எய்பவர் பிறிதொருவர். அச்சமும் தனிமையும் கொண்டவர்.

தன் அம்புகளால் அவருடைய அம்புகளை அறைந்து ஒவ்வொரு கணமாக எதிர்கொள்கையில் அவன் அவருடைய வீச்சும் விசையும் மிகுந்துகொண்டிருப்பதை உணர்ந்தான். எதிர்நிற்பவரின் விசை மிகுவது நன்று. அது அதில் வீழ்ச்சியும்

உண்டென்பதற்கான சான்று. எழுதலும் விழுதலுமின்றி நிகழ்ந்துகொண்டிருக்கும் வில்திறனே வெல்லற்கரியது. இவர் சினம் கொள்கிறார். எனில் எழும் அம்பை கணக்கிடுகிறார், தவறும் அம்பைக் கண்டு உளம் பதைக்கிறார். நிகழ்வனவற்றில் இல்லை அவருடைய உள்ளம். அது முன்னால் ஓடிக்கொண்டிருக்கிறது. நிகழில் நின்றிருப்பதே யோகம். முந்துவதும் பிந்துவதுபோலவே பிழைதான். பிழைகள் ஆற்றலை அழிக்கின்றன. பிழையின்மையே யோகம். வெல்லமுடியாதவன் யோகி மட்டுமே. பிற அனைவரும் வில்லில் இருந்து வானுக்கு எழும் அம்புகள் போல. அவர்கள் எத்தனை விசைகொண்டிருந்தாலும் விழுந்தாகவேண்டும். யோகி ஒளி. அவன் சென்றுகொண்டே இருப்பவன்.

அவர் உள்ளத்தின் ஒரு நுனி வேறெங்கோ இருக்கிறது. காற்றில் பறக்கத் துடிக்கும் பட்டின் ஒரு முனை முட்கூரில் சிக்கிக்கொண்டதுபோல். அது என்ன? அந்தணன் எனப் பிறந்த இவரை மண்விழைவென வந்து பற்றிக்கொண்ட தெய்வம் எது? இங்கு இவ்வாறு ஆட்டிவைப்பதுதான் என்ன? மைந்தன்மேல் கொண்ட பற்றா? ஆனால் மானுடருக்கு மைந்தர் விலங்குகளுக்கு குழவிகள்போல் இயல்பான குருதிநீட்சி அல்ல. பொருளேற்றப்பட்ட சொற்கள் அவர்கள். அவருக்கு அஸ்வத்தாமன் யார்? அவன் அவருடன் கணம்கணமென போரிட்டுக்கொண்டிருந்தான். அவனுள் விலகிநின்று அவரை கூர்ந்து நோக்கிக்கொண்டும் இருந்தான். ஒருபோதும் அப்படி அவரை அணுகியறிய முயன்றதில்லை. அவருக்கு இனியவனாக கால்வருடி பணிசெய்து குருநிலையில் இருந்தபோதும்கூட. இருளுக்குள் அவர் குரல்மட்டுமே ஒலிக்க கங்கைக்கு செல்லும்போதுகூட.

ஓர் அம்பு அவரை கடந்து செல்ல துரோணர் உடல் வளைத்து எழுந்து பிறிதொரு அம்பால் அவனை அறைந்தார். அது முழக்கமிட்டபடி வந்து தன் தேர்த்தூணை உடைத்து தேர் முகடை சரியவைத்தபோது அக்கணத்தில் அவ்வசைவில் உடைத்து திறக்கப்பட்டதுபோல் அவன் ஒன்றை உணர்ந்தான். இளமையில் எங்கோ, சிறுவன் என வாழ்ந்த தொடக்க நாளில் உள்ளத்தில் பட்ட ஒரு வடுவிலிருந்தே அனைத்தும் முளைத்தெழுந்துள்ளன. அவருடைய ஆற்றல்களுக்கு அதுவே ஊற்று. எனில் அந்த ஆற்றலுக்கு எல்லை வகுப்பதும் அதுவே. விதையிலிருந்து பெற்ற நஞ்சிலிருந்து பெருமரங்களும் விடுதலை கொள்ள இயல்வதில்லை. அதுவே நிலம் மீதான பற்று. அதுவே மைந்தன் மேலான சார்பு. அதுவே இப்புவியில் கட்டி நிறுத்தும் தளை.

“இன்று உங்களை விடுபடச்செய்கிறேன், ஆசிரியரே” என்று அவன் கூவினான். துரோணரின் கை அதிர்வதை, விழி துடித்து அமைவதை அவன் கண்டான். “இன்று உங்கள் தளைகளை அறுக்கிறேன். ஆம், இன்று உங்களை முற்றாக விடுவிக்கிறேன்!” என்று மீண்டும் மீண்டும் கூவினான். உதடசைவாகவே அவரை சென்றடைந்த அச்சொல் அவரை நிலையழியச் செய்வதை உணர்ந்து உரக்க நகைத்தபடி மீண்டும் மீண்டும் சொன்னான். “நீங்கள் எனக்களித்த அத்தனை சொற்களுக்காகவும் இதை நான் உங்களுக்கு திருப்பி அளிக்க வேண்டும். இது என் கொடை! ஆசிரியரே, இதைப் பெற்று என்னை வாழ்த்துக! இது என் பரிசில்.” அவன் அவர் விழிகளை நோக்கி கூச்சலிட்டான் “இன்று விடுதலைகொள்வீர், ஆசிரியரே! என்னை அதற்கென்றே இயற்றினீர்!”

துரோணர் “என்ன சொல்கிறாய், அறிவிலி? என்ன சொல்கிறாய்?” என்றார். “இதன் பொருட்டே என்னை மைந்தனுக்கு நிகராக வளர்த்தீர்கள். இதன்பொருட்டே எனக்கு வில்லளித்தீர்கள். ஆசிரியரே, இங்கிருந்து உங்களை விடுவிப்பது நான். அங்கு உங்களை அன்னமும் நீரும் அளித்து நிலைநிறுத்துவது அவன். புத் எனும் நரகுலகுக்கு செல்லாது உங்களைக் காப்பவன் அவன். புவி எனும் நரகத்திலிருந்து உங்களை மீட்பவன் நான்!” துரோணர் அவன் உளச்சொற்களை துளி மிஞ்சாமல் கேட்டார் “கீழ்மகனே! அறிவிலி!” என்று கூவியபடி அவனை அம்புகளால் மேலும் மேலும் அறைந்தார். அவனைச் சூழ்ந்து கூகைகள்போல், பருந்துகள்போல் கூச்சலிட்டபடி சென்றன அம்புகள். பன்றிகள்போல், எருதுகள்போல் உறுமின. சிம்மக்குரல் எழுப்பின. நரிகளைப்போல் ஊளையிட்டன.

அப்போது தொலைவில் முரசொலி எழுந்தது. அவ்வோசையைக் கேட்டதுமே துரோணரின் வில் நின்றது. கைகள் நடுங்க வில் நின்று அதிர்வதை காணமுடிந்தது. பாண்டவர் தரப்பிலிருந்து “வீழ்ந்தார் அஸ்வத்தாமர்! அஸ்வத்தாமர் வீழ்ந்தார்! விண்ணேகினார் அஸ்வத்தாமர்!” என்று திரளொலிகள் எழுந்தன. அர்ஜுனன் உரக்க நகைத்து “ஆம், இதோ களம்பட்டார் உங்கள் மைந்தர். இனி விண்ணிலிருக்கும் உங்களுக்கு நீர்க்கடன் அளிக்கவேண்டியவனும் நானே!” என்றான். உடல்பதற அங்குமிங்கும் நோக்கியபடி துரோணர் தேரில் நின்றார். கௌரவப் படையின் ஒலிகள் எழுந்தன. “பரத்வாஜ குடியின் அஸ்வத்தாமர் களம்பட்டார்! உத்தரபாஞ்சாலர் களம்பட்டார்! துரோணாசிரியர் மைந்தர் வீழ்ந்தார்! வெல்க மாவீரர்! விண்ணேகுக பெருவில்லவர்!” துரோணர் கால்கள் தளர தேரின் தூணை பற்றிக்கொண்டார்.

“ஆசிரியரே, உங்கள் மைந்தர் களம்பட்டார். அஸ்வத்தாமர் மூத்தவர் பீமசேனரால் கொல்லப்பட்டார். கதையால் தலையறைந்து கொல்லப்பட்டார்! இதோ முழங்குகின்றன முரசுகள்! இதோ கேளுங்கள் கூக்குரல்களை!” என்றான் சகதேவன். “இல்லை. அவனைக் கொல்ல பீமனால் இயலாது” என்றபின் தன் தேரை திருப்பி அப்பால் நின்ற யுதிஷ்டிரரை நோக்கி சென்றார் துரோணர். “யுதிஷ்டிரா, நீ சொல். ஒருபோதும் பொய்யுரைக்காத உன் நாவால் கூறுக, அஸ்வத்தாமன் களம்பட்டானா?” என்றார். யுதிஷ்டிரர் ஒருகணம் அவரை நோக்கிய பின் நாவால் உதடுகளை நனைத்து மூச்சிழுத்து “ஆம் ஆசிரியரே, அஸ்வத்தாமன் பீமனால் கொல்லப்பட்டான்” என்றார்.

தன் கையிலிருந்த அம்பை கீழே வீழ்த்தி, வில்லை மடியில் வைத்து தேர்த்தட்டில் காலோய்ந்து அமர்ந்து கண்களை மூடினார் துரோணர். “ஒரு கணம்தான்! இதோ இக்கணம். பார்த்தா, அவர்கள் செய்தி உணர்ந்து மறுஅறிவிப்பு எழுப்புவதற்குள் உன் வில் எழுக!” என்று இளைய யாதவர் சொன்னார். அர்ஜுனன் தன் ஆவநாழிக்குள் கைவிட்டபோது ஒற்றை அம்புமட்டுமே அங்கே எஞ்சுவதை உணர்ந்தான். அவன் உடல் மெய்ப்பு கொண்டது. அதை எடுத்தபோது இருமடங்காகியது. நாண் இழுத்துப் பூட்டியபோது பத்துமடங்கெனப் பெருகியது. துரோணரின் நெஞ்சை நோக்கி குறிவைத்துச் செலுத்தியபோது நூறு சிம்மங்களின் ஓசையை எழுப்பியபடி சென்று சென்று அவர் நெஞ்சில் அறைந்தது.

துரோணரின் கவசம் இரண்டாக உடைந்து விழ அவர் நெஞ்சில் ஆழ இறங்கி நின்று சிறகதிர்ந்தது அர்ஜுனனின் அம்பு. துரோணர் மல்லாந்து தேர்த்தட்டில் விழுந்தார். கால்கள்

இழுத்து துடித்தன, கைகள் தேர்த்தட்டில் கிடந்து அதிர்ந்தன. ஒருகணம் அவர் எழ முயல்வதுபோலத் தோன்ற அர்ஜுனன் இயல்பாக தன் ஆவநாழியை நாடி கையை கொண்டுசென்று அது நிறைந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். அதன் எடை மிகுந்தபடியே வந்தது. தோள் தாளாமலாக அவன் ஆவநாழியைக் கழற்றி தேர்த்தட்டிலிட்டான். அவன் நோக்கி நிற்க அது பெருகிக்கொண்டிருந்தது. அவன் அவருக்கு திருப்பி அளித்த அம்புகள் அனைத்தும் அதற்கே மீண்டு வந்தன. அவன் வில்லை தேர்த்தட்டில் இட்டு இரு கைகளையும் கூப்பினான். விழிகள் நிறைந்து முகத்தில் வழிந்து நெஞ்சில் சொட்ட நின்றான்.

சூழ்ந்திருந்த படைகள் சொல்லவிந்து விழிகளாக மாறி நின்றிருந்தன. அத்தருணத்தில் படைகளுக்குப் பின்னாலிருந்து புரவியில் விரைந்தோடிவந்த திருஷ்டத்யும்னன் அதே விசையில் குதித்து துரோணரின் தேர்த்தட்டில் ஏறினான். “என்ன செய்கிறான்! அடேய் அறிவிலி, நில்!” என்று யுதிஷ்டிரர் கூவினார். “அவனை தடு... நகுலா, அவனை பிடி... இளையோனே, அவனை அம்புதொடுத்து வீழ்த்து!” திருஷ்டத்யும்னன் தோல்பட்டையால் கொண்டையாகக் கட்டப்பட்ட தலைமுடியை தன் கையால் பற்றி வலக்கையிலிருந்த வாளால் ஓங்கி அவர் தலையை வெட்டி தூக்கி எடுத்தான். அதை மேலே காட்டியபடி “துருபதரின் வஞ்சம்! இதோ துருபதரின் வஞ்சம்! பாஞ்சாலத்தின் வஞ்சம் இதோ! பழி கொண்டது பாஞ்சாலக்குருதி! பழி கொண்டது பிருஷதனின் குருதிமரபு!” என்று கூவினான்.

பாண்டவப் படையிலிருந்து முதிய வீரன் ஒருவன் “கீழ்மகன்!” என்று கூவி திருஷ்டத்யும்னனை நோக்கி ஓங்கி துப்பினான்.

“இழிமகனே, உனக்கும் உன் குலத்திற்குமாக இது!” என்று கூவியபடி ஓடிவந்து தன் கழுத்தை வாளால் வெட்டிக்கொண்டு முகம் திரும்ப கால்கள் மடிந்து உடல் முன்படிந்து விழ துடித்தான். “கீழ்மகனே, கீழ்மகனே” என்று கூவியபடி இன்னொரு வீரன் அவ்வண்ணமே ஓடிவந்து தன் தலை கொய்து வீழ்ந்தான். “பழிகொள்க! உன் குடி அழியா பழிகொள்க!” என்று கூவியபடி மேலும் மேலும் பாண்டவ வீரர்கள் வந்து தலைகொடுத்து விழுந்தனர். திகைத்து நின்ற திருஷ்டத்யும்னன் “ஆம், நான் பழிகொள்கிறேன்! இப்பழியை நானே கொள்கிறேன்! நான் இதன்பொருட்டே பிறந்தேன். எந்தை என்னை ஈன்றதும் வளர்த்ததும் இதற்காகவே!” என்று கூவினான்.

அர்ஜுனன் தேர்த்தட்டில் அமர்ந்து தன் தலையை இரு கைகளாலும் அழுந்தப் பற்றிக்கொண்டான். யுதிஷ்டிரர் தேரில் நினைவிழந்து சரிய நகுலன் பாய்ந்து அவரை பற்றிக்கொண்டான். திருஷ்டத்யும்னன் வெட்டுண்ட தலையைத் தூக்கி தன் முகத்திலும் மார்பிலும் குருதியை வீழ்த்தியபடி அமலையாடினான். “நான் காலன்! நான் ருத்ரன்! நான் காளன், சண்டன், பிரசண்டன்!” என்று ஆர்ப்பரித்தான். “என் குடி அழிக! என் கொடிவழி முற்றழிக! என் முன்னோர் பழிசூடுக! என் தெய்வங்கள் எரிந்தெழுந்து அகல்க! நான் நாணவில்லை. இது எந்தைக்காக என் கடன்!” என்று கூவினான். துரோணரின் தலையை தூக்கி வீசிவிட்டு தேரிலிருந்து இறங்கி தன் புரவிநோக்கி சென்றான்.

# கார்கடல் - 84

துரியோதனன் அந்தக் கணத்தை பின்னரும் பலமுறை எண்ணி எண்ணி வியந்தான். மச்சர்களுடன் நிகர் நின்று பொருதிக்கொண்டிருந்தபோது எண்ணம் ஏதும் இன்றி அவன் வில் தாழ்த்தி செயலிழந்தான். உள்ளத்தில் ஒரு சொல் எஞ்சவில்லை. உடலெங்கும் ஒரு விதிர்ப்பு கடந்து சென்றது. வானில் இடியிடிக்கையில் அரண்மனையின் சிற்றறைகளுக்குள் கார்வை முழங்குவது போன்று அவனுள் அலைகொண்டு அடங்கியது. என்ன அது என தன்னுணர்வு கொண்டபோது இடத்தொடை துடிக்கத்தொடங்கியது. அதிர்ந்துகொண்டிருந்த கையில் வில் நடுங்கியது. பற்கள் இறுக கிட்டித்திருந்தன. கண்கள் கலங்கி நீரணிந்திருந்தன.

என்ன என்ன என்று அவன் உள்ளம் பதறி எழ, தொலைவில் “ஆசிரியர் துரோணர் வீழ்ந்தார்! பரத்வாஜரின் மைந்தர் துரோணர் களம்பட்டார்! விண்புகுந்தார் நல்லாசிரியர்! துரோணர் முழுமை கொண்டார்! புகழ்பெறுக துரோணரின் பெயர்! நீடுவாழ்க துரோணரின் குடி!” என்று வாழ்த்தொலிகள் பரவி அணுகி வந்தன. முதல் கணம் அந்தச் செய்தி செவியில் விழுந்ததுமே எழுந்தது ஒரு தளர்வுதான். அது விந்தையானதோர் நிறைவை ஒத்திருந்தது. நெடுநாள் எதிர்பார்த்திருந்த செய்தியொன்று வந்தடைந்ததுபோல். எதிர்பார்த்திருந்தேனா, இதையா, என்று பிறிதொரு உள்ளம் வியந்தெழ அப்பால் ஓர் உள்ளம் செயலற்று அந்த உளக்கொந்தளிப்பை வெறுமனே நோக்கிக்கொண்டிருக்க துரியோதனன் தேர்த்தூணை பற்றிக்கொண்டான். மெல்ல பின்னடைந்து தேர்த்தட்டில் அமர்ந்து வில்லை மடியில் வைத்துக்கொண்டான்.

அவனுடைய பாகன் தேரை பின்னுக்கிழுத்து கௌரவப் படைகளுக்குள் கொண்டுவர கவசப்படை வீரர்கள் முன்னெழுந்து அரணமைத்து அவனை படைமுகப்பிலிருந்து விலக்கினார்கள். புரவியில் வந்து இறங்கிய துச்சாதனன் மூச்சிரைக்க “மூத்தவரே!” என்றான். அவனை வெற்று விழிகளால் திரும்பிப்பார்த்தபின் நோக்கு திருப்பிக்கொண்டான் துரியோதனன். துச்சகன் அவனைத் தொடர்ந்து வந்திறங்கி “ஆசிரியர் களம்பட்டார்!” என்றான். துரியோதனன் வில்லை ஓங்கி தேர்த்தட்டில் எறிந்துவிட்டு எழுந்தான். “அஸ்வத்தாமரிடம் இன்னமும் முறைப்படி செய்தி சொல்லவில்லை. நானே சென்று சொல்கிறேன். இக்கணமே” என்று தேரிலிருந்து பாய்ந்திறங்கி புரவிக்கு கை காட்டினான்.

துச்சாதனன் திகைத்து நோக்க புரவியில் வந்திறங்கிய சுபாகு “பொறுங்கள், மூத்தவரே! ஒருகணம் பொறுங்கள்!” என்றான். துரியோதனன் “இதற்கு பழிநிகர் கொள்ளவேண்டியவர் அஸ்வத்தாமர். அஸ்வத்தாமரிடம் சென்று செய்தி சொல்கிறேன். இக்களத்தில் ஆசிரியரின் குருதிக்கு நிகராக ஐவரின் குருதியை கொள்ளுங்கள்… பழி வெல்லுங்கள் என்று கேட்கிறேன்” என்றான் துரியோதனன். சுபாகு “பொறுங்கள். ஒருகணம் பொறுங்கள். எதுவாயினும் எண்ணிச்செய்வோம்” என்றான். “என்ன எண்ணுவதற்குள்ளது? இனி எண்ணிச்செய்ய பொழுதில்லை நமக்கு… ஆசிரியரின் பலி நமக்காக… பழிகொள்ளும் பொறுப்பும் நமக்குரியதே” என்று துரியோதனன் கூவினான்.

“ஆசிரியர் துரோணர் எவ்வாறு கொல்லப்பட்டார் என்பதை நீங்கள் இன்னமும் முழுதறியவில்லை, மூத்தவரே” என்று சுபாகு சொன்னான். “பேடியை முன்னிறுத்தி பிதாமகரை

வீழ்த்தியதைப் போலவே இக்கொலையையும் புரிந்திருக்கிறார்கள் பாண்டவர்கள்.” துரியோதனன் திகைத்து “அறப்பிழையாகவா? நெறி மீறியா கொன்றனர் ஆசிரியரை? அர்ஜுனனா அதை செய்தான்?” என்றான். “ஆம், அஸ்வத்தாமர் கொல்லப்பட்டாரெனும் பொய்ச்செய்தியை ஆசிரியரிடம் சொன்னார்கள். பீமன் அஸ்வத்தாமரை கொன்றுவிட்டான் என முரசறைந்து அறிவித்தார்கள். மைந்தன் மடிந்தான் என ஆசிரியர் உளம் உடைந்து வில் தாழ்த்தி தேரில் அமர்ந்திருக்கிறார். அத்தருணத்தில் அர்ஜுனன் அம்பெய்து அவர் நெஞ்சை பிளந்திருக்கிறான்” என்றான் சுபாகு.

“அர்ஜுனனா? அவருடைய முதல் மாணவன் அல்லவா அவன்?” என்றான் துரியோதனன். சுபாகு “வஞ்சத்தால் வீழ்த்தப்பட்டார், நேர்நின்று வெல்லப்படவில்லை என்பது ஆசிரியருக்குப் பெருமைதானே? அதை முதல் மாணவன் அன்றி எவர் அளிக்க முடியும்?” என்றான். “கீழ்மை!” என்றான் துரியோதனன். “ஆசிரியர் அதை எவ்வண்ணம் ஏற்றார்? அஸ்வத்தாமரைக் கொல்ல பீமனால் இயலாதென்று அறியாதவரா அவர்?” சுபாகு “ஆம், ஆனால் யுதிஷ்டிரர் தன் வாயால் அதை சொன்னால் நீங்களாயினும் நம்பியிருப்பீர்கள்” என்றான். பெருமூச்சுடன் துரியோதனன் “இந்தக் களத்தில் ஒவ்வொருநாளும் கொல்லப்படுவது அறம்தான். இப்போருக்குப் பின் எவருக்கும் சொல்ல எதுவும் எஞ்சப்போவதில்லை” என்றான்.

“அதன்பின்னர் நிகழ்ந்தது மேலும் கீழ்மை” என சுபாகு தொடர்ந்தான். “திருஷ்டத்யும்னன் தேரில் பாய்ந்தேறி அவர் நெஞ்சில் உதைத்து தலையை வெட்டி முடிபற்றிச் சுருட்டி மேலேற்றிக் காட்டி கூச்சலிட்டு அமலையாடியிருக்கிறான். அவர் தலையை தூக்கி களத்தில் வீசியிருக்கிறான். தரையை

நிறைத்துக்கிடந்த உடல்களிலிருந்து அவர் தலையை சற்றுமுன்னர்தான் எடுத்தார்கள்.” துரியோதனன் வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தான். அச்சொற்கள் அவன் உள்ளத்தை அடையவில்லை என்று தோன்றியது. சுபாகு “முழுச் செய்தியையும் அஸ்வத்தாமர் இன்னமும் அறிந்திருக்க வாய்ப்பில்லை. அவர் சிகண்டியை எதிர்த்து போரிட்டுக்கொண்டிருக்கிறார். அவரிடம் செய்தியின் முழுமையை அறிவிக்க எவரும் செல்லவேண்டியதில்லை என்று சொல்லிவிட்டு நான் வந்தேன்” என்றான்.

துரியோதனன் வெறுமனே உதடுகளை அசைத்தான். “மூத்தவரே, அவர் பழிநிகர் கொள்ளும் வெறியை அடைவார் எனில் நமக்கு நன்று. பாண்டவத் திரளுக்கெதிராக தன் அரிய படைக்கலங்களுடன் எழுவாரெனில் நாம் வெல்வோம். ஆனால் இது உளச்சோர்வின் நாள். நோக்குக! நமது படைகள் முழுமையாகவே சோர்ந்து கால் தளர்ந்து நின்றிருக்கின்றன. உத்தர பாஞ்சாலத்தின் படைகளின் பெரும்பகுதி அழிந்தும்விட்டது. உளச்சோர்வு திரளிலிருந்து தனிஉள்ளத்திற்கு எளிதில் முனைகொள்ளக்கூடியது. தலைவனில் சுழிமையமென எழும் விசை அது. ஒருகணச் சோர்வில் அஸ்வத்தாமர் அம்பெடுத்து தன் கழுத்தில் தானே வைத்துக்கொண்டாரெனில் நாம் பிறிதொரு பெருந்தீரனையும் இழந்தவர்களாவோம்” என்று சுபாகு சொன்னான்.

துச்சாதனன் “ஆம், அதற்கும் வாய்ப்புள்ளது. இப்போருக்கு அஸ்வத்தாமர் எழுந்ததே தந்தையின் ஆணையினால்தான். அவருக்கு இப்போரில் அடைவதற்கு என எதுவுமில்லை. இங்கு தீர்த்துக்கொள்ள வேண்டிய வஞ்சங்களும் ஏதுமில்லை. மூத்தவரே, அவர் உத்தரபாஞ்சால நிலத்தின் மேலும்

பற்றுகொண்டவர் அல்ல. தந்தையின்பொருட்டே அங்கே முடி சூடி இருக்கிறார். அனைத்தையும் துறந்து காடேகும் விழைவுகொண்டவர். உள்ளத்தால் அவர் முனிவர் என்கிறார்கள்” என்றான். “அனைத்திற்கும் மேலாக நெடுநாட்களாக அவர் கொடுங்கனவுகளால் துயருறுகிறார்” என்று துச்சகன் சொன்னான். “என்னிடம் அவர் தனியாக அதை சொல்லியிருக்கிறார். இப்போர் மைந்தர்களின் அழிவில் முடியுமென்றும் ஆகவே எந்நிலையில் போரை நிறுத்திக்கொண்டாலும் இரு குடியினருக்கும் அது நலம் பயக்குமென்றும் சொன்னார். இப்போரில் அவர் சினம் மீதூறி இளமைந்தரை கொல்லக்கூடும் என அஞ்சுகிறார். மூத்தவரே, பலமுறை கனவில் அந்த அறிவிப்பு அவருக்கு வந்துவிட்டது. அவர் அஞ்சிக்கொண்டிருப்பது தன்னுடைய பெருஞ்சினத்தைத்தான். அவர் உள்ளம் மேலும் போருக்கு எழாமல் ஒழியவே வாய்ப்பு மிகுதி.”

மூச்சின் ஒலியில் துரியோதனன் “பிறகென்ன செய்வது?” என்றான். “மூத்தவரே, இத்தருணத்தில் நன்கு உளம் தெளிந்து சொல் கூர்கொண்டுள்ள ஒருவர் சென்று அஸ்வத்தாமரிடம் செய்தியை சொல்லட்டும். எவ்வண்ணம் உரைக்கவேண்டுமோ அவ்வண்ணம் கூறவேண்டியுள்ளது. நாம் வெற்றுணர்ச்சிகளையே வெளிப்படுத்துவோம். அவை நம்மை மீறி சொற்கொந்தளிப்பாகவே வெளிப்படும்” என்றான் சுபாகு. துரியோதனன் “இக்களத்தில் இப்போது உளம் தெளிந்தவர் யார் உள்ளனர்?” என்றான். சுபாகு “கிருபர் எந்நிலையிலும் கலங்கா உளம்கொண்டவராகவே இருக்கிறார். இப்போரில் எந்த அழிவும் இன்று வரை அவரை உளம் தளரச்செய்யவில்லை. அவர் வேள்வி இயற்றும் அந்தணரின் ஊழ்கநிலை கொண்டு போரிட்டுக்கொண்டிருக்கிறார் என்று சொல்கிறார்கள்” என்றான்.

“அவர் அஸ்வத்தாமரை இளமையிலேயே அறிந்தவர், தோள் சுமந்து வளர்த்தவர். அவர் சென்று உரைக்கட்டும் அஸ்வத்தாமரிடம்.” துரியோதனன் “ஆம், அவர் உகந்தவர்” என்றான். “ஆனால் தாங்கள் எவரிடமேனும் பேசியாகவேண்டும். எனவே தாங்கள் சென்று கிருபரிடம் உரையுங்கள். தங்கள் உணர்வுகளை அவர் அடையட்டும்” என்று சுபாகு சொன்னான்.

“ஆம், அதுவே வழி” என்றபின் துரியோதனன் கையூன்றி தாவி குதிரையிலேறிக்கொண்டான். அதை தூண்டி நிலம்பரவி இடையின்றி விழுந்து கிடந்த உடல்களை கடந்து தாவி அவன் விரைந்து செல்ல அவனைத் தொடர்ந்து துச்சாதனனும் சுபாகுவும் சென்றனர். துச்சாதனன் திரும்பி துச்சகனிடம் “களத்தை ஒருக்குக! களம் பின்னடையக்கூடாது” என்றபின் முன்னால் சென்றான். துச்சகன் அவர்கள் செல்வதை நோக்கியபின் கைதூக்கி “முன்னேகுக! ஒருங்குசேர்க! அணிகுலையாதமைக!” என ஆணையிட்டான். மிக அப்பால் கர்ணனின் முரசொலிகள் கேட்டுக்கொண்டிருந்தன.

துரியோதனனும் இளையோரும் கிருபர் போரிட்டுக்கொண்டிருந்த இடத்தை அடைந்தபோது ஏற்கெனவே முரசொலிகளினூடாக செய்தியை அறிந்து கிருபர் வில்தாழ்த்தி பின்னடைந்திருந்தார். துரியோதனன் புரவியிலிருந்து பாய்ந்திறங்கி கிருபரை நோக்கி செல்லும்போதே மீண்டும் உணர்வெழுச்சி கொண்டு கைகள் விரிய உரத்த குரலில் “ஆசிரியரே! மூத்த ஆசிரியர் களம்பட்டார். வஞ்சத்தால் வீழ்ந்தார்! கீழ்மையால் வெல்லப்பட்டார்!” என்று கூவினான். கிருபர் வில்லையும் அம்பறாத்தூணியையும் தேர்த்தட்டில்

வைத்துவிட்டு படியினூடாக கால்வைத்து மெல்ல இறங்கி "என்ன நிகழ்ந்தது?" என்றார். "பாண்டவ வீணர்கள் ஆசிரியரை கொன்று வீழ்த்தினார்கள். ஆசிரியரே, நெறிமறந்து அனைத்து எல்லைகளையும் கடந்து அவரை கொன்றார்கள்" என்று துரியோதனன் சொன்னான். "இக்களத்தில் இதைப்போல் ஒரு கீழ்மை இதுவரை நிகழ்ந்ததில்லை."

இடையில் கைவைத்து நின்று எழாக் குரலில் "சொல்க!" என்றார் கிருபர். "ஆசிரியரே, அஸ்வத்தாமர் களம்பட்டார் எனும் பொய்ச்செய்தியை அவருக்கு உரைத்திருக்கிறார்கள். அஸ்வத்தாமன் என அவர்கள் சொன்னது மாளவனின் யானையை. அதைக் கேட்டு ஆசிரியர் உளம் அழிந்து வில் தாழ்த்தியபோது அர்ஜுனன் நீளம்புகளால் அவர் நெஞ்சை துளைத்தான். துருபதன் மைந்தன் தேரில் பாய்ந்தேறி அவர் நெஞ்சில் உதைத்து வீழ்த்தி வாளால் தலையை அறுத்து தூக்கி வீசி பந்தாடினான். குருதி உடலெங்கும் வீழ்த்திக்கொண்டு அமலை கொண்டாடினான்" என்றான் துரியோதனன். கிருபர் "யார் கூறியது அஸ்வத்தாமன் கொல்லப்பட்டான் என்று?" என்றார். "அனைவரும்! அனைவருமே கூறியிருக்கிறார்கள்" என்று துரியோதனன் சொல்ல அவனுக்குப் பின்னால் நின்ற சுபாகு "யுதிஷ்டிரர் தன் வாயால் கூறியிருக்கிறார்" என்றான்.

துரியோதனன் "ஆம்! சொன்னவன் சொல்பிழைக்காதவன் என புகழீட்டிய யுதிஷ்டிரன். கீழ்மையின் உச்சத்தில் நின்றிருக்கிறான் இங்கு… ஆசிரியரே, இக்களத்தில் இன்று முழுமையாக தோற்றுவிட்டவன் அவனே" என்றான். "அவன் சொன்னாலன்றி மூத்த ஆசிரியர் அதை நம்பியிருக்க மாட்டார்" என்ற கிருபர் இரு கைகளையும் விரித்து "இனி இக்களத்தில் உடைந்து சரிய ஏதேனும் எஞ்சியுள்ளதா என்ன?" என்றார்.

“அவர்கள் அறத்தின் முன் தங்களை முற்றாகவே வீழ்த்திக்கொண்டு பல நாட்களாகிவிட்டன. பிதாமகரை வீழ்த்த பேடியை துணைக்கொண்டபோதே அனைத்துச் சொற்களையும் அவர்கள் கடந்துவிட்டார்கள். இரவுப்போர் புரிய முடிவெடுத்தபோது அரக்கர்களாகவே ஆகிவிட்டார்கள்” என்று துரியோதனன் கூவினான். “இனி அவர்களை நாம் எவ்வகையிலும் வெல்லலாம். அனலிடலாம். புனல்பெருக்கை உருவாக்கலாம். நச்சு பரப்பலாம். நோய்கொண்டு நிரப்பலாம். வஞ்சமும் பொய்மையும் புன்மைச்செயல்கள் அனைத்தும் இங்கே ஏற்கப்பட்டுவிட்டன.”

நெஞ்சில் அறைந்தபடி துரியோதனன் கூவினான் “ஆசிரியரே, எவ்வகையிலேனும் இப்புவிமீதிருந்து அழித்து மறைக்கப்படவேண்டிய பெருந்தீங்குகளென பாண்டவர்கள் இதோ மாறிவிட்டார்கள். அவர்களில் பீமன் கொடியவன் என்று இன்றுவரை எண்ணியிருந்தேன். அவனது கீழ்மை அவனாலேயே வெளிப்படுத்தப்படுவதென்பதனால் சற்று கள்ளமற்றது என்று இன்று தோன்றுகிறது. அறச்சொற்களை முகத்திலணிந்து நின்றிருக்கும் யுதிஷ்டிரனே இக்களம் கண்ட கீழ்மைகளின் உச்சம். ஆசிரியரே, இக்களத்தில் யுதிஷ்டிரர் கொன்று வீழ்த்தப்பட்டால் வெல்வது நாம் மட்டுமல்ல, நமது தந்தையர் சொல்லும்தான்.” துரியோதனன் விழிகள் உறுத்து நிற்க நெஞ்சில் மீண்டும் மீண்டும் அறைந்தபடி கூச்சலிட்டான் “ஆசிரியரே, ஒன்று கொள்க! யுதிஷ்டிரன் இங்கே வென்றால் பிறிதொரு யுகம் பிறக்கிறது. இருளின் காலம். கீழ்மையின் காலம். எங்கும் எதுவும் நிலைகொள்ளாத பிறிதொரு யுகம்.”

துரியோதனன் வெறியுடன் கைகளை வீசினான். அவன் வாய் இழுபட உதடுகளின் ஓரம் நுரை எழுந்தது. “இத்தனை நாள்

இங்கு நிமித்திகர் கூறிக்கொண்டிருந்தார்கள் இனி எழுவது கலியுகம் என்று. இருளின் இறையெழும் காலம் என்று. ஆகவே நான் மகிழ்ந்தேன் என் தெய்வம் எழுகிறது என. என் இறையின் அருளால் நானே வெல்வேன் என்று கற்பனை செய்தேன். இன்று உணர்கிறேன் மெய்யாகவே கலியுகம் எழுவது யுதிஷ்டிரன் வெல்லும்போதுதான். எழும் கலியுகத்தில் அவனையே அறச்செல்வன் என முன்னிறுத்துவார்கள். அவனுடைய வெற்றியை அறத்தின் வெற்றியென்று புனைந்துரைப்பார்கள். கலியுகத்தில் அறமின்மை அறத்தின் மாற்றுரு பூண்டுதான் எழும். அறமென தன்னை எதிர்ப்பவருக்கும் அறம்கடந்த தன்னலமே என தன்னவருக்கும் அது முகம் காட்டும். ஆசிரியரே, அதை எவரும் பேசி வெல்லமுடியாது. விளக்கி அகற்ற முடியாது. சொல்லுக்கு அடங்காத ஒன்றை வெல்ல தெய்வங்களாலும் இயலாது.”

“ஆசிரியரே, அவன் காட்டுவது என்ன? உயர்ந்த நெறிகளைக் கொண்ட சொற்களை கூறலாம், ஆனால் இடரெழும் உச்சநிலைகளில் மேலும் சொற்களைப் பெய்து அந்நெறிகள் அனைத்தையும் கடந்து செல்லலாம். ஒரு குற்றவுணர்வுநடிப்பால் அதை முற்றாக மறக்கலாம். அடைந்தவற்றில் ஒருதுளியைக் கொண்டு அங்கு வந்தடைந்த வழியில் இயற்றிய அனைத்துக்கும் பிழையீடு செய்யலாம். அறமென்பதும் நெறியென்பதும் எதிரில்லாதபோது காட்டும் தன்நடிப்புகளே என்று அவன் உலகுக்கு காட்டியிருக்கிறான். அவை வெறும் அழகுச்சொற்கள் மட்டுமே, அறுதி வரை உடன் நின்றிருக்கும் கட்டுகளல்ல என்று அவன் நிறுவிவிட்டிருக்கிறான். இனி எழவிருக்கும் யுகத்தில் படைவீரர்கள் பீமனைப் போலிருப்பார்கள், வஞ்சத்தால் அடையும் விழியின்மையையே ஆற்றலெனக்

கொண்டிருப்பார்கள். அரசர்கள் அர்ஜுனனைப்போல் கொல்லும் கூர்மையை மட்டுமே சென்றடைவார்கள். நெறிகற்றோர் யுதிஷ்டிரனைப்போல அனைத்தையும் சொல்லி நிறுவும் வெறும் நாவலராகவே எஞ்சுவார்கள்.”

“கலியுகம் இம்மூவரையே தங்கள் முற்காட்டாக கொள்ளப்போகிறது. ஆசிரியரே, இத்தருணத்தில் அவர்கள் மூவரும் கொன்றொழிக்கப்படுவது நமக்காக அல்ல. நாமும் கொன்றழிக்கப்படக்கூடும். ஒரு வீரன் கூட கௌரவர் தரப்பில் எஞ்சாமலாகவும் கூடும். ஆயினும் அவர்கள் அழிக்கப்படவேண்டும். அது நம் தலைமுறைகளின் நன்மைக்காக. எழும் யுகத்தில் சற்றேனும் நெறியும் அறமும் விளங்க வேண்டும் என்பதற்காக. அது உங்கள் கடமை. அஸ்வத்தாமரின் கடமையும் அதுவே” என்றான் துரியோதனன். அவனை மீறி எழுந்த அச்சொற்களை முழுதுற அவனே உணர்ந்து திகைத்துச் சொல்லிழந்து இளையோரை நோக்கியபின் “நான் வேறொன்றும் சொல்வதற்கில்லை…” என்று உடைந்த குரலில் சொல்லி கைகூப்பினான்.

கிருபர் நிலைமாறாத விழிகளுடன் தாழ்ந்த ஒலியில் “அஸ்வத்தாமனுக்கு சொல்லப்படவில்லையா?” என்றார். “இல்லை. தாங்களே சென்று அஸ்வத்தாமரிடம் சொல்லுங்கள். தங்கள் சொற்களிலிருந்து அவர் அதை முறையாக அறியவேண்டும். நாங்கள் வெற்றுணர்ச்சிகளால் அவரை கிளர்ந்தெழச் செய்துவிடுவோம். ஆம், அவரும் உளம் கிளர வேண்டும். ஆனால் தன் கடமையையும் இப்புவிக்கு தான் ஆற்ற வேண்டிய பணியையும் அவர் உணர வேண்டும். வெற்று உணர்வெழுச்சியாக அவர் எழக்கூடாது, வெல்லும்

விசைகொண்டிருக்கவேண்டும். அதைச் சொல்லி நிகழ்த்த தங்களால் மட்டுமே முடியும்” என்று சுபாகு சொன்னான்.

கிருபர் புன்னகைத்து “அவனிடம் நாராயணாஸ்திரம் உள்ளது என்று அறிவீர்களா?” என்றார். “ஆம், அறிந்துள்ளோம்” என்றான் சுபாகு. “அதன் வரலாற்றை அறிவீர்களா?” என்று கிருபர் கேட்டார். சுபாகு “முன்பொருமுறை துரோணர் வேள்வியில் விண்ணின் நீர்வெளியில் பள்ளிகொண்ட பெருமானை அழைத்து எழுப்பினார். அவரிடமிருந்து அவர் பெற்றது அந்த அம்பு. அது இப்புவியிலுள்ள அனைத்து அம்புகளையும்விட நூறு மடங்கு ஆற்றல்கொண்டது. அதை அவர் தன் மைந்தனுக்கு அளித்தார். இப்புவியை முற்றழிக்கும் ஆற்றலை அவ்வண்ணம் அவருக்கு அளித்தார் என்று அறிந்துள்ளேன்” என்றான்.

கிருபர் “அம்புகளின் பெயர்களை நோக்குக! பிரம்மம், இந்திரம், வைஷ்ணவம், காலம், வாருணம், பினாகம், ஆக்னேயம், வாயவம், சைவம், பாசுபதம், நாராயணம்... இவை அனைத்தும் இங்குள்ள வெவ்வேறு மெய்வழிகள் என்று உணர்க! ஒவ்வொரு மெய்வழியும் எண்ணித்தொடமுடியாத தொன்மை கொண்டது. ஒன்றுக்குப் பிறிதொன்று இளையது அல்ல. ஒன்றை பிறிதொன்று இணைத்துக்கொள்கையிலேயே பிறிதொன்றைவிட பெரிதாகிறது. அனைத்து ஆறுகளும் கடல்சேர்வதுபோல் அவையனைத்தும் மெய்மைப் பெருவிரிவையே சென்றடைகின்றன என்கிறது உபநிடதம்” என்றார். “தாங்கள் அறிந்த மெய்மையை தொல்முனிவர் அனைத்திலும் கண்டடைந்தனர். அனைத்திலும் வெளிப்படுத்தினர். சொல்லில் அது வேதம். கல்லில் அது சிலை. வில்லில் அது அம்பு. எண்ணிறந்த பொருட்களில்

எண்ணிறந்த வடிவில் அது நின்றுள்ளது. ஒன்றில் அதை கண்டடைவது யோகம், எங்குமென அறிந்தமைவது ஞானம்.”

“நாராயணம் என்பது நீர்வெளியில் இருந்து எழுந்த மெய்மை என்று தெளிக!” என்று கிருபர் தொடர்ந்தார். “இங்கு அசைவிலாதவையும் ஊர்வனவும் விரைவனவும் பறப்பனவும் அனைத்தும் குடிகொள்ளும் நாமறியா பெரும்பரப்பே கடல். புவி நனவெனில் கடல் கனவும் ஆழமும் கடந்த முடிவிலியும் ஆகும். கடலறிந்து மானுட உள்ளத்திற்கு அளித்த மெய்மையே நாராயணம். அது சொல்லில் நாராயணவேதம். கல்லில் அது நாராயணன் என்னும் சிலை. சுழி அவன் ஆழி. கடலோசை அவன் சங்கு. அலை அவன் கதை. கௌரவரே, எழும் ஒளியே அவன் கையில் தாமரை. நாராயணமே அஸ்வத்தாமனிடம் நுண்சொல் என தந்தையால் அளிக்கப்பட்டது.”

“அது பாற்கடல். அமுதையும் நஞ்சையும் எடுக்கும் உரிமை அவனுக்குரியது” என்று கிருபர் தொடர்ந்தார். “நான் சென்று அவனில் இச்சினத்தை விதைத்தேன் என்றால் அவனில் எழுவது ஆயிரம்தலைகொண்டு மும்மடிப்பாக சுருண்டிருக்கும் முடிவிலோனின் நஞ்சாகவே இருக்கும்.” துரியோதனன் “ஆம், இன்று எழவேண்டியது அதுவே. அவர்கள் அழிக்கப்பட்டாகவேண்டும். ஆசிரியரே, அதைத்தான் சொல்லிக்கொண்டிருந்தேன். இன்று பொய் பொய்யென்றும் தீமை தீமை என்றும் தன்னலம் தன்னலமே என்றும் நின்றுள்ளது. அவை மெய்யென்றும் நன்மையென்றும் அறமென்றும் மயங்கி நின்றிருக்கும் காலம் எழலாகாது. நாராயணம் நச்சுருக்கொண்டு எழுந்து அவர்களை அழிக்கட்டும். நம் மைந்தரை, கொடிவழிகளை அது காக்கட்டும்” என்றான்.

“அழிவை உருவாக்குபவனுக்கு நிகராகவே சொல்லிக் கிளப்புபவனும் தெய்வங்கள் முன் பொறுப்பேற்க வேண்டும்” என்றார் கிருபர். “ஆம், ஆனால் இந்தக் களத்தில் நினைத்தற்கரிய கீழ்மை இயற்றிய பாண்டவர்களுக்கெதிராக நாராயணத்தை எழுப்புகிறோம். அஸ்வத்தாமர் இறையம்பைச் சூடவேண்டிய தருணம் இது” என்று துரியோதனன் சொன்னான். “இது இனிமேல் இரு குலங்களுக்கிடையே, இரு நாடுகளுக்கிடையே நிகழும் போரல்ல. இது எழுயுகத்தில் சற்றேனும் அறம் எஞ்சவேண்டும் என எண்ணுபவர்களுக்கும் எவ்வகையிலேனும் வெல்வதே இலக்கென்று எண்ணுபவர்களுக்கும் இடையேயான போர். நீங்கள் இங்கு என்ன செய்தாலும் தெய்வங்களால் வாழ்த்தப்படுவீர்கள்.”

கிருபர் “ஆம்” என நெடுமூச்செறிந்தார். “ஆனால் நீ தெளிவுகொண்டிருப்பதுபோல் நான் உறுதிகொண்டிருக்கவில்லை. அறமும் அல்லதும் ஏற்கெனவே முற்றாக கலந்துவிட்டன. இந்த குருக்ஷேத்ரம் மந்தரமலையால் பாற்கடல் என கடையப்படுகிறது. எழுவது அமுதா நஞ்சா என்றே இங்குள்ள எவருக்கும் தெரியாது” என்றார். “எனக்கு நான் செய்யவேண்டியதில் முழு நம்பிக்கை வரவில்லை. எவர் எதிரி என்றும் எவர் நட்பென்றும் அறியாமல் வில்லேந்தியிருக்கிறேன், அரசே. களமெழுந்துவிட்டமையால் போரிடுகிறேன், அவ்வளவே.” பேச நாவெடுத்த துரியோதனனை அடக்கி “இக்களத்தில் அவன் நாராயணத்தை எடுப்பானென்றால் அழிவது பாண்டவர்கள் மட்டுமே என எவர் உறுதிசொல்வார்கள்?” என்றார். துரியோதனன் திகைக்க “ஒருவேளை கௌரவர்களும் அழியலாம். படைக்கலமேந்தி இந்தக் களத்தில் வந்த அனைவரும் அழியக்கூடும்” என்றார் கிருபர்.

துரியோதனன் உரத்த குரலில் “அவ்வாறு அழிய நேர்ந்தாலும் அது நன்றே” என்று கூவினான். “இங்கு அறம் முற்றழிந்துவிட்டது. தொல்மூதாதையர் சொல் சொல்லெனத் திரட்டி எடுத்த நெறிகள் அனைத்தும் பொருளிழந்துவிட்டன. இனி நாம் எஞ்சினால் என்ன, முற்றழிந்தால் என்ன? இங்கு பரவியிருப்பது ஒரு கொடுநோய். இது அவர்களிலிருந்து எழுந்துள்ளது. ஆம், நம்மையும் தொற்றியுள்ளது. நாமும் முற்றழிவோம். இக்களத்திலிருந்து அந்நோய் தொற்றிய ஓர் உயிரும் வெளிச்செல்லலாகாது. அனைவரும் முற்றழிந்தாலும் சரி, இச்செயலால் வென்றோம் எனத் தருக்கி அவர்கள் இங்கிருந்து சென்றார்கள் எனில் இப்புவியில் இனி மானுடர் நம்பி பற்றிக்கொண்டிருப்பதற்கு ஒன்றுமே இல்லை. அதன் பின் தெய்வங்கள் வந்தமர இங்கு ஒரு பீடமும் எஞ்சாது. ஆசிரியரே, இது உங்கள் கடன்.”

கிருபர் “என் கடனை நான் எவ்வண்ணம் முடிவெடுப்பது?” என்றார். “செயலின் விளைவுகளை முற்றிலும் உணரமுடியவில்லை. அவை நினைப்பெட்டா தொலைவில் எங்கோ உள்ளன. முந்தையோர் சொல் ஒன்றே இத்தருணத்திற்கு வழிகாட்டியென அமைவது. அதுவோ பின்னால் எங்கோ மறைந்துவிட நெடுந்தொலைவு விலகி வந்துவிட்டிருக்கிறோம். இங்கே எவருக்கும் செய்வதென்ன என்று உளத்தெளிவில்லை. விலங்குகள்போல் உள்ளிருந்து எழும் உயிரியல்பால் போரிடுகிறார்கள். எண்ணுபவர்கள் வஞ்சங்களை பெருக்கிக்கொள்கிறார்கள்” என்றார். துரியோதனன் அவர் கைகளை பற்றிக்கொண்டான். நெகிழ்ந்த குரலில் “ஆசிரியரே, நான் இங்கு வரும்வரை கொண்டிருந்த உணர்ச்சிகள் வேறு. நீங்கள் கூறியதுபோல விலங்குணர்வும் வஞ்சமும் மட்டுமே என்னிடமிருந்தன. ஆனால் இங்கே

உங்களிடம் பேசிய சொற்கள் என்னைக் கடந்து எழுந்தவை. அவற்றை திரும்பிப் பார்க்கையில் என்னை ஆளும் மூதாதையர் குரலென்றே உணர்கிறேன்” என்றான்.

“ஆம், அவை நெடுந்தொலைவிலிருந்து எழுந்து என்னை வந்தடைகின்றன. நான் முற்றிலும் உளம்தெளிந்து நின்று அவற்றை கேட்கிறேன். இது காலச்சுழி. இதில் வென்று மிகுந்தெழுவது பாண்டவர்கள் உருவாக்கிய அறமயக்கங்களாக இருக்கலாகாது” என்றான் துரியோதனன். “அரசே, அறப்பிழை தொடங்கியது நீ அவையில் பெண்ணை சிறுமை செய்தபோது என உணர்கிறாயா?” என்றார் கிருபர். “ஆம், ஆனால் அது அறப்பிழை. ஆசிரியரே, அறப்பிழைகள் நமக்கு நெடுங்காலம் பின்னால் உள்ளன. சென்ற யுகங்களிலிருந்து நம்மை வந்தடைந்தவை அவை. அறமும் அல்லதும் தெளிந்திருந்தபோது விழைவால், ஆணவத்தால், வஞ்சத்தால் அறத்தை மீறிச்சென்றவர்கள் அன்றிருந்தனர். என்னிலெழுந்தவர்கள் அவர்களே. ஹிரண்யனும் ராவணனும் கார்த்தவீரியனும்.”

“ஆசிரியரே, அவர்கள் அறமென எழுந்த தெய்வப்பேருருக்களால் அழிக்கப்பட்டனர். ஆனால் இவர்கள் அறமிலிகள் அல்ல. இவர்கள் வருயுகத்தின் வடிவங்கள். அறமயக்கங்களை உருவாக்குபவர்கள். நூல்துணையும் தெய்வத்துணையும் கொண்டு அழிவை நிகழ்த்துபவர்கள். இவர்களை எதிர்த்து இனி தெய்வமும் எழப்போவதில்லை. கலியுகத்தில் வேதம் காக்க விண்ணளந்தோன் எழமாட்டான் என்கின்றன நூல்கள். இவர்களை இன்று வென்றாகவேண்டும். ஒருவேளை நாராயணம் அஸ்வத்தாமரின் கைக்கு வந்ததே இக்கடன் முடிக்கத்தானோ என்னவோ?” என்றான் துரியோதனன்.

கிருபர் நீள்மூச்சுவிட்டு “ஆம், எவ்வகையிலாயினும் இதை அவனிடம் சொல்ல வேண்டும். நீங்கள் எவரும் சொல்வதைவிட நான் கூறுவதே உகந்ததென்று தோன்றுகிறது. அவன் முடிவெடுக்கட்டும், அல்லது அந்த நாராயணமே முடிவெடுக்கட்டும்” என்றார்.

# கார்கடல் - 85

கிருபர் தனியாக தேரில் சென்று அஸ்வத்தாமன் போரிட்டுக்கொண்டிருந்த களத்தை அடைந்து இறங்கியபோது தொலைவில் அம்புகள் பறவைக்கூட்டங்கள்போல் சிறகோசையுடன் வானை நிறைத்திருப்பதை கண்டார். சகுனியும் அஸ்வத்தாமனும் இணைந்து மறுபுறம் முழு ஆற்றலுடன் போரிட்டுக்கொண்டிருந்த சிகண்டியை எதிர்கொண்டிருந்தனர். கிருபர் வருவதை சகுனிதான் முதலில் பார்த்தார். முன்னரே துரோணர் களம்பட்டிருந்த செய்தியை அவர் அறிந்திருந்தமையால் தன் பாகனுக்கு கையசைவால் ஆணையிட்டுப் பின்னடைந்து தேரிலிருந்து இறங்கிக்கொண்டு விழிகளை இமைத்தும் தலையை உலுக்கியும் தன்னிலையை மீட்டார். புண்பட்ட காலை நீட்டி வைத்து மெல்ல தேர்ச்சகடத்திலேயே அமர்ந்தார்.

கிருபர் தேரிலிருந்து இறங்கி சகுனியை நோக்கி சென்று “காந்தாரரே, நான் என் மருகன் அஸ்வத்தாமனிடம் சொல் உரைக்க வந்தேன், செய்தியை அறிந்திருப்பீர்கள்” என்றார். “ஆம், தாங்களே செய்தியை உரைக்கவேண்டுமென்று எனக்கும் தோன்றியது… என்னால் இங்கிருந்து அகலமுடியவில்லை” என்றார். “அவன் இன்னும் அறிந்திருக்கவில்லையா?” என்று

கிருபர் கேட்டார். “இல்லை. சிகண்டி எத்துணை ஆற்றல் மிக்கவர் என்பதையே ஒவ்வொரு கணமாக உணர்ந்துகொண்டிருந்தோம் இருவரும். அவருடைய அம்புகள் எங்கள் உள்ளத்தில் ஒரு சொல்லும் எழாதபடி ஆக்கிவிட்டன. நாகத்தால் உற்று நோக்கப்படும் தவளைபோல் இத்தனை பொழுது மயங்கியிருந்தோம். உண்மையில் தங்கள் தேரொலியே என்னை மீட்டது” என்று சகுனி சொன்னார்.

கிருபர் “நான் சென்று எதிர்கொள்கிறேன். சிகண்டியை என்னால் தடுக்க இயலும்” என்றார். சகுனி “ஆசிரியரே, சிகண்டி தன் முதலெதிரியை நாளும் எண்ணி ஊழ்கம் செய்து பயின்றவர். பெரிய எதிரிகளைக் கொள்பவர் அவரளவுக்கே பெரிதாகிறார் என்பதற்கான சான்று அவர். சில தருணங்களில் எதிர்நின்று பொருதுபவர் பீஷ்ம பிதாமகரேதானோ என உளம் மயங்கினேன். அம்புகளின் விசையும் கோணமும் மட்டும் அல்ல. அந்த ஆணிலியுடலில் பேராண்மை மிக்க பீஷ்மரின் அசைவுகள் எழுவதை என் விழிகளால் கண்டேன்” என்றார். கிருபர் “ஆம், நானும் அவரில் பீஷ்மரை கண்டேன்” என்றார். சகுனி “பீஷ்மரை எதிர்த்துப் போரிட்டவர்களிடம் கேட்கவேண்டும், அவரில் சிகண்டி எழுந்த தருணங்கள் உண்டா என” என்றார் சகுனி. பின்னர் திரும்பி கண்களைச் சுருக்கி அஸ்வத்தாமனை நோக்கி “பீஷ்மரில் எழுபவள் அம்பையாகவும் இருக்கக்கூடும்…” என்றார்.

கிருபர் அப்பேச்சை கடக்க எண்ணினார். அதற்குள் அஸ்வத்தாமன் ஓர் அடித்தொலைவுக்கு தன் தேரை பின்னடையச் செய்து பேரம்பொன்றை எடுத்து தேர்ச்சகடத்தின் விசையுடன் தோல்பட்டையால் இணைக்கப்பட்டிருந்த பெருவில்லை வளைத்து நாண்பூட்டி அதை சிகண்டியை

நோக்கி எய்தான். இடியோசையுடன் எழுந்து அனல் விரித்து சுழன்று சென்று சிகண்டியை தாக்கியது அந்த அம்பு. அது எழும் கணத்திலேயே தேரிலிருந்து பாய்ந்து அப்பால் விழுந்து எழுந்து ஓடி பிறிதொரு புரவி மேல் ஏறிக்கொண்டார் சிகண்டி. அவருடைய தேர் நிலத்திலிருந்து விண்ணுக்கு தூக்கிவீசப்பட்டு எரிந்து தழல்கொண்ட துண்டுகளாக தெறித்து நிலத்தில் விழுந்தது. புரவிகளின் உடல்கள் தசைச்செதில்களாக மாறி வானிலிருந்து பொழிந்தன. நாணொலி எழுப்பியபடி மேலும் மூன்று பேரம்புகளால் படைகளை சிதறடித்தான் அஸ்வத்தாமன்.

"இனி சிகண்டி எழ நெடும்பொழுதாகும். இதுவே தருணம்" என சகுனி சொன்னார். சிகண்டி படைகளுக்குள் ஓடி மறைய அஸ்வத்தாமன் பிறிதொரு பேரம்பை எடுத்து வில்லில் பொருத்த கிருபர் "அஸ்வத்தாமா" என்று கூவி அழைத்தபடி அஸ்வத்தாமனின் தேரை நோக்கி சென்றார். கையில் அம்பு நிலைக்க அஸ்வத்தாமன் திரும்பிப்பார்த்தான். பாண்டவப் படைகள் ஒருங்கு திரண்டு கோட்டையென மாறுவதை ஒருகணம் பார்த்தபின் "சொல்லுங்கள், மாதுலரே" என்றான். அதன் பின்னரே தொலைவில் முழங்கிக்கொண்டிருந்த முரசொலி அவன் காதில் பட்டது. முகம் இறுக "தந்தையா?" என்றான். "ஆம்" என்று கிருபர் சொன்னார். "யார்?" என்று அஸ்வத்தாமன் கேட்டான். "அர்ஜுனன். அதன் பின் திருஷ்டத்யும்னன்" என்று கிருபர் சொன்னார்.

அஸ்வத்தாமன் "ஆம்" என்றபின் வில்லையும் அம்பையும் தேர்த்தட்டில் வைத்துவிட்டு தேரின் படிகளினூடாக இறங்கி கிருபரை நோக்கி வந்தான். "உன்னிடம் உண்மையை உரைக்கும்பொருட்டு அரசர் என்னை இங்கு

அனுப்பியிருக்கிறார்” என்றார் கிருபர். அஸ்வத்தாமன் கண்கள் இடுங்க நோக்கினான். “அஸ்வத்தாமா, இறுதியாகப் போரிட்டபோது உன் தந்தை அனைத்து நெறிகளையும் மீறினார். பிறிதொருவராக மாறி களத்தில் நின்றார். மானுடருக்கு எதிராக ஒருபோதும் கைக்கொள்ளலாகாதென்று நூல்கள் விலக்கிய அனலம்புகளையும் இடியம்புகளையும் மின்னம்புகளையும் ஏவி பாண்டவப் பெருந்திரளை அழித்தார். வெந்த உடல்களின் கெடுநாற்றத்தாலேயே நமது படையினர் பின்னடைந்தனர் என்கிறார்கள்.”

“துருபதனை அவர் கொன்றார். அவர் மைந்தன் திருஷ்டத்யும்னனை தேர்க்காலில் கட்டி இழுத்தார்” என்று கிருபர் தொடர்ந்தார். “ஷத்ரியனை தேர்க்காலில் கட்டி இழுப்பதென்பது ஏழு தலைமுறைக்கு நீளும் பெரும்பழியை சேர்ப்பது. அரக்கர் அதை செய்ததுண்டு, அந்தணர் அதை இயற்றுவது இதுவே முதல்முறை. திருஷ்டத்யும்னனை சாத்யகி காப்பாற்றினான். அவன் உடல்வெந்து அமிலநீராடியவன்போல் கிடந்தான். எதிர்த்துவந்த அர்ஜுனனை அவர் அனலால் எரித்தார். பாண்டவ மைந்தர்களையும் உடல் வெந்து விலகியோடச் செய்தார்.” அஸ்வத்தாமன் “அறிந்தேன்” என்றான்.

“அஸ்வத்தாமா, பீஷ்ம பிதாமகரை வென்றது போலவே ஒரு வஞ்சத்தால்தான் உன் தந்தையும் வீழ்த்தப்பட்டிருக்கிறார். அவர்களுக்கும் வேறுவழியில்லை. உன் தந்தையை அரைநாழிகைக்குள் கொல்லவில்லை என்றால் படையுடன், குடியுடன் அவர்கள் வெந்து வெறும் தசைக்குழம்பென குருக்ஷேத்ரத்தில் பரவியிருப்பார்கள்” என்றார் கிருபர். “சொல்க!” என்று சொல்லி தலைகுனிந்து நிலம்நோக்கினான்

அஸ்வத்தாமன். “மருகனே, உன் மேல் துரோணர் கொண்டிருந்த பேரன்பை அறிந்திருப்பாய். மாளவர்களின் படையிலிருந்த அஸ்வத்தாமன் எனும் யானை பீமனால் கொல்லப்பட்டது. அச்செய்தியை அஸ்வத்தாமன் இறந்துவிட்டான் என்ற சொற்களால் பாண்டவர்கள் உன் தந்தையிடம் சொன்னார்கள்.”

அஸ்வத்தாமன் கை நீட்டி கிருபரைத் தடுத்து “யார் சொன்னது? யுதிஷ்டிரர் சொன்னாரா?” என்று கேட்டான். “ஆம்” என்று கிருபர் சொன்னார். அஸ்வத்தாமனின் நீட்டிய கை அசைவிலாது நின்றது. “யுதிஷ்டிரன் சொல்லியிராவிட்டால் தந்தை நம்பியிருக்கமாட்டார்” என்று கிருபர் தொடர்ந்தார். “உன் தந்தை செயலிழந்து வில் தாழ்த்தி தேர்த்தட்டில் அமர்ந்தார். அர்ஜுனன் அரிய அம்பொன்றால் அவர் நெஞ்சை பிளந்தான். அவர் தேர்த்தட்டில் விழுந்த பின்னர் தேரில் பாய்ந்தேறிய திருஷ்டத்யும்னன் அவர் நெஞ்சில் உதைத்து முடி பற்றி தூக்கி வாளால் கழுத்தை வெட்டி தலையை துண்டாக்கி எடுத்தான். அதை பிறருக்கு காட்டி அமலையாடினான். இழிசொல்லுரைத்து தூக்கி களத்தில் வீசினான்.”

அஸ்வத்தாமனின் உடலில் மெல்லிய அசைவொன்று நிகழ்ந்தது. “அதைக் கண்டு பாண்டவர்களே களத்தில் சொல்லிழந்து நின்றனர். அர்ஜுனன் வேண்டாம் பாஞ்சாலரே என்று உளம் உடைந்து கூவினான். அங்கிருந்த மூத்த வீரர்கள் அனைவரும் உரக்க அழுது கண்ணீர்விட்டனர். பாண்டவ வீரர்களில் மூத்தவர் எழுவர் திருஷ்டத்யும்னன் மேல் தீச்சொல்லிட்டபடி வந்து தலைகொடுத்து வீழ்ந்தனர். பாண்டவப் படையிலிருந்து ஆசிரியர் வெல்க, பரத்வாஜரின் மைந்தர் சிறப்புறுக என்று வாழ்த்தொலி எழுந்த பின்னரே நமது படைகளும் வாழ்த்தொலிக்கத் தொடங்கின” என்றார் கிருபர்.

அஸ்வத்தாமன் இரு கைகளையும் முறுக்கி பற்களைக் கடித்து குனிந்து நின்றான். பின்னர் “ஆசிரியரே, அவன் தந்தையை நோக்கி எய்த அந்த அம்பின் பெயரென்ன?” என்றான். கிருபர் “நான் அதை அறிவேன். அது ஸ்வம் என்று அழைக்கப்படுகிறது. மிகச் சிறிய அம்பாக ஒரு வீரனுக்கு கிடைக்கும் என்கிறார்கள். ஒரு சிறு புழு வடிவில், அல்லது ஒரு துரும்பு அளவிற்கு. அதை முதலில் பார்க்கையில் பேரழகு கொண்டிருக்கும். காலையொளியில் வைரம்போல் சுடர்விடும். சுட்டுவிரலால் அதை தொட்டெடுத்தால் நறுமணம் கொண்டிருக்கும். அதை தன் ஆவநாழிக்குள் அவன் வைத்துக்கொள்ள வேண்டும். அது எப்போதும் அங்கிருக்கும், ஆனால் ஆவநாழியை வெளியே கொட்டி தேடினாலும் அதை கண்டடைய இயலாது. அது அங்கிருப்பதையே உணராமலும் போகக்கூடும், என்றோ ஒருநாள் கைபோனபோக்கில் துழாவுகையில், பிறிதொன்றுக்கெனத் தேடுகையில் அதைத் தொட்டு திடுக்கிட்டு கைவிலக்கிக் கொள்வான்.”

“அனைத்து அம்புகளும் ஒழிந்தபின் ஆவநாழியில் அது தோன்றும்” என கிருபர் தொடர்ந்தார். “ஒருமுறை அதற்கு இடமளித்துவிட்டால் பின்னர் அதை மீளக் கண்டடைந்து தன்னிலிருந்து விலக்குவது எளிதல்ல. அதற்கு நீடுநாள் தவம் தேவையாகும். முழுக்கக் கனிந்த தவத்தால்கூட ஒருவேளை அதைக் கடக்க இயலாமலும் ஆகும். அம்பறாத்தூணிக்குள் அறியாது வளர்கிறது. ஆவநாழியிலிருந்து எழும் ஒவ்வொரு அம்பையும் அது நோக்கிக்கொண்டிருக்கிறது. வெல்லும் அம்புகளில் துள்ளுகிறது. வீழும் அம்புகளில் துவள்கிறது. ஒவ்வொரு வெற்றிக்குப் பின்னரும் இருமடங்கு வளர்கிறது. ஒவ்வொரு தோல்விக்குப் பின்னரும் மும்மடங்கு வளர்கிறது. தொடும்போது நூறு மடங்காகிறது. எடுக்கையில் ஆயிரம்

மடங்கு. ஏவுகையில் பல்லாயிரம் மடங்கு. அது வெற்புகளை உடைத்தழிக்கும் ஆற்றல் கொண்டது. பெருங்கடல்களை அனலாக்கும் நஞ்சு கொண்டது. அத்தனை தெய்வங்களும் அஞ்சும் பேராற்றல் கொண்டது.”

அவர் விழிகளை நோக்காமல் “அத்தகைய ஒன்று என்னிலும் உள்ளது. நாளும் வளர்வது, இன்மையென்று இருப்புணர்த்தி உடனமைவது” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “அதன் பெயர் நாராயணாஸ்திரம். தந்தை எனக்கு அதை அளித்தார். ஒரு இளங்காலை வேளை. அர்ஜுனன் எங்கள் குருநிலையிலிருந்து கிளம்பி சௌவீரநாட்டுப் படையெடுப்புக்கு சென்றிருந்தான். நான் அவருடன் தனித்திருந்தபோது என் செவிகளில் அந்த அம்பை நுண்சொற்களாக உரைத்தார். தந்தையே இது என்னை இப்புவியில் எப்போதைக்குமென கட்டிப்போட்டுவிடுமல்லவா என்று கேட்டேன். ஒருபோதும் இதிலிருந்து மீண்டு நான் என் மூதாதையரிடமும் என்னை ஆளும் தெய்வங்களிடமும் சென்றுசேர முடியாதல்லவா என்றேன். ஆம், ஆனால் மண்ணில் உன்னை எவரும் வெல்லமுடியாதவனாக்கும், எந்நிலையிலும் அழிவற்றவனாக்கும் என்று தந்தை சொன்னார்.”

“மைந்தா, நான் என் விற்கலையின் முழுமையால் கற்றுக்கொண்டது. இது கடல் எனில் நான் பிறருக்கு அளித்த அனைத்தும் துளிகளே. இது உன்னிடமிருக்க எங்கும் நீ தலைவணங்க நேராது. எந்த அவையிலும் எவரும் உன்னை தனக்கு கீழென்றோ நிகரென்றோ கொண்டு கூட ஒரு சொல்லுரைக்க மாட்டார்கள் என்றார் தந்தை” என்றான் அஸ்வத்தாமன். “அவர் குரல் இடறியதை நினைவுறுகிறேன். அஸ்வத்தாமா, உன் தந்தை அவைகளில் அறிந்த சிறுமையை

உன் வாழ்நாளில் ஒருபோதும் அடையமாட்டாய். ஆனால் நீ கூறியதுபோல் இது இப்புவியில் உன்னை என்றென்றுமெனத் தளைத்திடும் காப்பு. நீ விழையாவிடில் இதை இப்போதே உதறிவிடலாம். உன் விழைவின் பொருட்டு மட்டுமே இது உன்னுடன் வரவேண்டும் என்றார்.”

“அவர் என்னிடம் சொன்னபின் அதை என்னால் மறக்கவியலாது என உணர்ந்துகொண்டேன். ஆசிரியரே, நாட்கணக்கில் ஆண்டுக்கணக்கில் என் நெஞ்சினுள் மூச்சு ஓடுவதுபோல அச்சொல் ஓடிக்கொண்டிருந்தது. அவர் அதை நாராயணாஸ்திரம் என்று சொன்னார். ஆழம் அசைவிலாதிருக்க அலைகள் கொந்தளித்துக்கொண்டே இருப்பது. அகன்று எங்கோ இருக்க கணந்தோறும் வந்து அறைந்துகொண்டே இருப்பது. பேரமைதியின் ஓயாத ஓசை. நான் அதை அஞ்சினேன், ஆனால் அதற்கு முற்றாக அடிபணிந்தேன். பின்னர் அது என்னை ஆளத் தொடங்கியது” என்று அஸ்வத்தாமன் சொன்னான்.

“ஆம், அதை நான் அறிவேன்” என்று கிருபர் சொன்னார். “உன்னை நானே நேரில் வந்து சந்திப்பது அதை அஞ்சியே.” அஸ்வத்தாமன் “ஆசிரியரே, என்னிடம் உள்ள இந்த நாராயணாஸ்திரம் கடல். இப்புவி என்பது ஆழி தன் உள்ளங்கையில் ஏந்தியிருக்கும் ஒரு சிறு துளியே என்று அறிவீர். வைரத்தில் ஒளித்தொலைவு மடிந்து சுருண்டிருப்பதுபோல இதற்குள் முடிவிலா விசை அமைந்துள்ளது. இப்புவியையே அழிக்கும் ஆற்றல் கொண்டது. குருக்ஷேத்ரம் இதற்கு புயல்முன் புல்முனை நீர்த்துளி” என்று அஸ்வத்தாமன் சொன்னான். “இது என்னை ஆளும் கொடுந்தெய்வம். என்னை பீடமாகக் கொண்டு எழுந்து

பேருருக்கொண்டு இன்று என்னை தன் படைக்கலமாகச் சூடி நின்றுள்ளது.”

“ஒவ்வொருவரும் அவ்வாறு பிறிதொன்றால் ஆளப்படுகிறார்கள்” என்று கிருபர் சொன்னார். “கைவிட்டு எழுந்து சென்ற அம்புகளை நாம் ஆளவியலாது. ஆனால் அனைத்து அம்புகளுக்கும் நாம் பொறுப்பேற்றே ஆகவேண்டும். அர்ஜுனனின் செயல்பற்றி நான் உன்னிடம் சொல்லவந்ததும் இதுவே.” அஸ்வத்தாமன் தத்தளிப்புடன் “ஆசிரியரே, இக்களத்தில் பல்லாயிரம் முறை என் கையில் அந்த அம்பு தட்டுப்பட்டது. ஒவ்வொரு முறையும் அந்த அம்பைத் தவிர்த்தே பிறிதொன்றை எடுக்கிறேன். என்னிடமிருந்து எழும் ஒவ்வொரு அம்பிலும் அந்த அம்பின் துளி உள்ளது” என்றான். கிருபர் “நீ பழிநிகர் செய்தாகவேண்டும், அது மைந்தனின் கடன். ஆனால் நினைவுறுக, பழியை மாத்திரை குறையாமல் எண்ணி அமைத்துள்ளன தெய்வங்கள்! அதற்குப் பழிநிகர் செய்யும்போது வஞ்சத்திலோ விசையிலோ விளைவிலோ ஒரு மாத்திரை மிகுந்தால்கூட நீ அதை பழி எனக் கொள்வாய். அது உன்னை துரத்தத் தொடங்கிவிடும்” என்றார்.

அஸ்வத்தாமன் பெருமூச்சுவிட்டு “நான் என்ன செய்யவேண்டும், ஆசிரியரே?” என்றான். “திருஷ்டத்யும்னன் பழிநிகர் செய்தது சரியானதே. ஆனால் வில்தொட்டு தன்னிடம் அளித்த நல்லாசிரியனின் தலையை தூக்கி வீசியவன் தெய்வங்கள் வகுத்த எல்லையை மீறிவிட்டான். தன் ஆசிரியனைக் கொன்ற அர்ஜுனன் பழிசூடிவிட்டான். ஆசிரியருக்கு முன் பொய்யுரைத்த யுதிஷ்டிரனும் பீமனும் இளையோரும் பிழைசெய்தவர்கள். அவர்களை கொல்க! அவர்கள்பொருட்டு போருக்கெழுபவர்களை கொல்க!

அப்பால்கடந்து செய்யும் ஒவ்வொரு செயலும் எண்ணும் ஒவ்வொரு எண்ணமும் உன் பழிக்கணக்கில் அமையும் என்பதை கருத்தில் கொள்க!" என்றார் கிருபர்.

ஆனால் அஸ்வத்தாமன் பழிநிகர் என்னும் சொல் வேறெங்கோ சென்று தொட கொந்தளிப்படைந்தான். பற்களைக் கடித்து "இப்போது அறிகிறேன், எந்தை எனக்கு ஏன் அளித்தாரென்று. இவ்வாறு கீழ்மையுற்று களம்படுவோம் என்று அவர் அறிந்திருந்தார். அதன் பொருட்டு பழிநிகர் கொள்ளவே இதை அளித்திருக்கிறார்" என்றான். அவன் சிவந்து சினம் மிகுந்தபடியே சென்றான். "நான் அவராக நின்று எண்ணியதே இல்லை. ஏனென்றால் உடலுடன் அவர் இங்கிருந்தார். இன்று அவர் ஒழிந்த இந்நிலத்தில் அவரென எஞ்சியிருப்பவன் நானே. மாதுலரே, அவர் கொண்ட சிறுமைகளின் நிரையை தொட்டுத்தொட்டு எழுகிறது என் உள்ளம். பரத்வாஜரின் குருகுலத்திலிருந்து இதோ வஞ்சத்தால் வீழ்த்தப்பட்டு தலைவெட்டி வீசப்பட்டு களத்தில் கிடப்பது வரை. அவருடைய அனலுக்கு நான் பொறுப்பேற்கவேண்டும். முதன்மையாக இங்கு என் கடன் அதுவே."

தன் ஆவநாழியை இயல்பாக நாடிய கை திடுக்கிட "இங்கிருக்கிறது... ஆசிரியரே, அது மட்டுமே என் ஆவநாழியில் எஞ்சியிருக்கிறது. நான் அதை நாணில் தொடுக்கும் பொழுது அணைந்துவிட்டது" என்றான். கிருபர் "மருகனே, நன்கு எண்ணி இயற்றவேண்டிய செயல் அது. செயல்முந்தினால் நீ அடைவது பெரும்பழி" என்றார். ஆனால் அஸ்வத்தாமனின் நெற்றியில் நீலநரம்புகள் புடைத்தன. "இல்லை ஆசிரியரே, எந்தையின் விழிகள் ஒவ்வொரு தருணமாக நினைவிலெழுகின்றன. ஷத்ரிய அவைகளில் அவர் தோள்குறுகி அமர்ந்திருப்பார்.

பீஷ்மரை ஒட்டியே இருக்கை அமைத்துக்கொள்வார். ஷத்ரியர் எவரேனும் சிறுமைசெய்து பேசிவிடக்கூடும் என்பதனாலேயே சொல்லடக்கிக் கொள்வார். மாதுலரே, எத்தனை அவைகளில் அனல்கொண்டு அமர்ந்திருந்தாரென்றால் தவம் பொலிந்து பிறந்த தன் மைந்தனை அந்தணனல்ல ஷத்ரியன் என்று அறிவிக்கக் துணிந்திருப்பார்! வஞ்சம் சூடி நிலம் வென்று என்னை அரியணை அமர்த்தியிருப்பார்!”

“அவர் இழந்தவை பல. என்னை ஷத்ரியன் என்று ஆக்கியதை ஏற்க முடியாமல் என் அன்னை அவரை பிரிந்தார். அவருடைய முகத்தையே மறந்து பிறிதொருவரென்றானார். அதன் பின்னரும் இதோ ஷத்ரியக் கீழ்மகன் ஒருவனால் வஞ்சத்தால் நெஞ்சுபிளக்கப்பட்டிருக்கிறார். பிறிதொருவனால் தலைவெட்டப்பட்டு கொல்லப்பட்டிருக்கிறார்.” சொல்லச்சொல்ல உணர்ச்சி மீதூற அவன் விழிநீர் பெருக்கினான். பற்களை இறுகக் கடித்து முகம் வலிப்புகொள்ள மூச்சு சீறும் ஒலியில் சொன்னான் “அவர்களை அவர் தன் நெஞ்சிலேற்றி வைத்திருந்தார். அர்ஜுனனை தன் முதல் மாணவனென்று அறிவித்தார். பாஞ்சாலனை தன் மைந்தனென்றே நடத்தினார். அம்புதொட்டு நிமித்தம் நோக்கக் கற்ற அவருக்குத் தெரியாதா இவர்கள் இயற்றப்போவது என்ன என்று? ஆசிரியர் என தன் மெய்மையனைத்தையும் அள்ளி அவர்களுக்கு அவர் ஏன் அளித்தார்?”

“இல்லை ஆசிரியரே, பழிநிகர் செய்யவில்லையென்றால் தந்தை என் மேல் நிறைவு கொள்ளமாட்டார். இவர்களை முற்றாக அழிக்கவேண்டும்... இதோ தன் ஆசிரியனை மாணவர்கள் கொன்றதை வெற்றிக்குரலெழுப்பிக் கொண்டாடும் ஒவ்வொருவரும் மண்ணிலிருந்து முற்றாக

அழிக்கப்படவேண்டியவர்களே. இவர்களின் குடிகள், குருதிவழிகள், எழும்தலைமுறைகளும் அழிக்கப்படவேண்டியவர்களே.” அஸ்வத்தாமன் உடல் நடுக்கு கொள்ள தொடங்கியது. “இப்போது உணர்கிறேன், எந்தை விண்ணில் எரிவிண்மீன் என நின்றிருக்கிறார். இடியோசைகள் என அவருடைய வஞ்சக் குரல் கடுவெளியை நிறைத்துள்ளது. நான் எவருமல்ல, அவருடைய தொடர்ச்சி மட்டுமே. அவர் இங்கே விட்டுச்சென்றவற்றுக்காக மட்டுமே நான் இங்கு இருக்கிறேன்.”

“உன் சினத்தை ஆள்க... உன் நலன் கருதி தந்தையென நின்று இதை சொல்லவேண்டியவன் நான்” என்றார் கிருபர். “ஆழிவாளியின் விசை என்ன என்று இன்னமும் நீ அறிய மாட்டாய்... அது கௌரவர்களையும் முற்றழிக்கக்கூடும். இப்புவியையே அழிக்கக்கூடும்” என்று கிருபர் சொன்னார். “அழியட்டும்... நான் அந்த அம்பை எந்தையின் வஞ்சத்தின் படைக்கலம் ஆக்குகிறேன். அவர் விழைவது குருக்ஷேத்ரமே முற்றழிவதுதான் என்றால் அது நிகழட்டும். இப்புவியே வெந்தழிவதுதான் என்றால் அதுவே ஆகுக... இங்குளோர் அவருக்கு இழைத்தமைக்காக இப்புவியை அழிக்கும் உரிமையும் அவருக்குண்டு” என்றான் அஸ்வத்தாமன். கிருபர் “எஞ்சும் பழியும் மிஞ்சும் விழைவுமே இப்புவியில் மானுடரை கட்டிப்போடுவன. பெருவிழைவு சூடற்க! கொடும்பழி ஆற்றுதலும் ஒழிக...” என்றார்.

“இப்புவியில் எஞ்சுகிறேன்... என் பழி தீருமட்டும் இங்கே வாழ்கிறேன்” என்று அஸ்வத்தாமன் கூவினான். “எண்ணிச் சொல்... நீ சொல்வதை இங்கே ககனவெளியில் சூழ்ந்திருக்கும் எந்த ஒரு தெய்வம் கேட்டு விழியொளிர்ந்தாலும் அக்கணமே

தீராத் தீயூழில் சிக்கியவனாகிறாய். மைந்தா, மானுடருக்கு தெய்வங்கள் அளிக்கும் தீச்சொற்களில் கொடியது உணர்வழியாமல் நீடுவாழியாவது மட்டுமே…” அஸ்வத்தாமன் “என் தந்தையின் வஞ்சம் இப்புவியினும், இங்கு சூழும் காலத்தினும் பெரிதென்றால் அவர்பொருட்டு இங்கே நீடுவாழி ஆகிறேன். அவ்வஞ்சம் சுமந்து வடமலைகளைப்போல் நின்றிருக்கிறேன்!” என்றான். கிருபர் அறியாது கைகூப்பிவிட்டார். “வேண்டாம்… எண்ணவும் திகைக்கச் செய்கிறது அது. பெரும்பழி ஈட்டி அதற்கு ஈடுசெய்ய ஒண்ணாமல் புவியில் நீடுவாழியாவது… வேண்டாம், மைந்தா” என்றார்.

அஸ்வத்தாமன் அவர் உணர்வுகளுக்கு மிக அப்பாலிருந்தான். “என் ஊழ் அதுவென்றால் ஆகுக! எந்தைக்கு நான் ஆற்றும் கடன் அதுவென்றால் அது எனக்கு உகந்ததே… மாதுலரே, இங்கு வாழ்ந்த மைந்தர்களில் தந்தைக்கு எண்ணித்தொடமுடியா பெருங்கொடை அளித்தவன் நான் என்றே ஆகுக!” என்றான். கிருபர் ஏனென்றறியாமல் மெய்ப்புகொண்டார். அவர் விழிகளிலிருந்து நீர் வழிந்தது. பலமுறை பெருமூச்சுவிட்டு மெல்ல உளம்அடங்கி “இனி ஊழ் நடத்துக உன்னை!” என்றார். “உன் தந்தையை நான் நன்கறிவேன். இவையனைத்தையும் அறிந்தவராக அவர் இருக்கிறார் என்றும் அறிவேன். அஸ்வத்தாமா, நீர்வெளியம்பை நீ எடுப்பாய் எனில் உன் தந்தையிடமும் ஒரு சொல் கேட்டுக்கொள்.”

“அவர் எண்ணம் என்ன என்பதை நான் நன்கறிவேன்… அவர் சொல் ஒவ்வொருநாளும் செவியில் விழுந்தபடி இருக்கத்தான் நான் வாழ்ந்திருக்கிறேன்” என்றபின் அஸ்வத்தாமன் தலைவணங்கி கிருபரின் வாழ்த்துக்காக காத்திருக்காமல் தன்

தேரை நோக்கி சென்றான். கிருபர் சொல்லணைந்தவராக அவனை நோக்கிக்கொண்டிருந்தார். “எழுக உத்தரபாஞ்சாலப் படைகள்! ஆசிரியர் களவீழ்ச்சிக்கு பழிநிகர் கொள்ள எழுகிறார் அஸ்வத்தாமர்!” என சகுனியின் முரசொலி அறைகூவிக்கொண்டிருந்ததை கேட்டார். திரும்பி தன்னைச் சூழ்ந்து அலையடிக்கும் படைகளை நோக்கினார். காற்றில் சுடர் அணைவதுபோல் அந்தக் களமே இல்லாமலாகிவிடக்கூடும் என அவர் நன்கறிந்திருந்தார். ஆனால் அவருக்கு எந்த உணர்வும் ஏற்படவில்லை. துயரமோ எழுச்சியோ கொள்ளும் திறனை தன் உள்ளம் முற்றாக இழந்துவிட்டது என்று அவருக்குத் தோன்றியது.

பார்பாரிகன் சொன்னான்: அங்கு மெல்ல மெல்ல வஞ்சம் திரண்டெழுவதை நான் காண்கிறேன். ஒவ்வொருவரும் துரோணரின் களவீழ்ச்சியையும் அதிலிருந்த வஞ்சகத்தையும் உணர்ந்துகொண்டிருந்தனர். சொல்லிச் சொல்லி பெருக்கினர். எண்ணி எண்ணி பன்மடங்காக்கினர். அவர்களின் அச்சங்களை, ஐயங்களை, துயர்களை, வஞ்சங்களை அந்தச் சீற்றம் இழுத்து தானாக்கிக் கொண்டு வளர்ந்தது. அஸ்வத்தாமனிடமிருந்து அது அவர்களுக்கு பற்றிக்கொண்டதோ என்று ஒருகணம் தோன்றியது. அவர்களிடமிருந்து குவியம்கொண்டு அவனைச் சென்றடைகிறது என்று மறுகணம் தோன்றுகிறது.

தன் தேரிலேறிக்கொண்டு வில்லை நோக்கி விழிதிருப்பிய அஸ்வத்தாமன் திடுக்கிட்டான். அது உலையில் வைத்து பழுக்கக் காய்ச்சியதுபோல் ஒளிகொண்டிருந்தது. வெட்டியிட்ட தசைத்துண்டு என உயிர்கொண்டு துள்ளிக்கொண்டிருந்தது. அவன் குனிந்து அதை நோக்கி கைநீட்டுவதற்குள்ளாகவே

பாய்ந்தெழுந்து அவன் கையை வந்தடைந்தது. சீறிப்பாய விழையும் புரவி என அவன் கையிலிருந்து அது துள்ளியது. கடிவாளம் பற்றி அதை நிறுத்துபவன்போல அவன் நாணை இழுத்தான். உடலை எழுப்பி நாணேற்றிக்கொண்டு “செல்க!” என அவன் ஆணையிட்டதும் பாகன் சாட்டையால் புரவிகளின்மேல் சொடுக்க அவை மூச்சொலி சீற முன்கால்களை அறைந்து துள்ளி பாய்ந்தெழுந்தன. தேர் சகட ஓசை விசைகொண்ட முழவுத்தாளமென ஒலிக்க முன்சென்றது.

தொலைவில் பாண்டவப் படையின் விரிவை அஸ்வத்தாமன் கண்டான். “எழுக! எழுக!” என அவன் கைவீச அந்த ஆணையை முழவுகளும் முரசுகளும் பெருக்கி அவன் தலைக்கு மேலிருந்த வானில் பேருருக் கொண்டு எழச்செய்தன. அஸ்வத்தாமன் அர்ஜுனனின் தேரை கண்டான். அதன் அமரமுனையில் அமர்ந்திருந்த இளைய யாதவரின் பீலியை நீலச்சுடர் என அறிந்தான். இருபுறமும் பீமனும் நகுலனும் நின்றிருந்தனர். அப்பால் சகதேவனால் காக்கப்பட்ட யுதிஷ்டிரரின் தேர் தெரிந்தது. அவன் தன் வில்நாணைச் சுண்டியபோது அதுவரை அவன் கேட்டிராத பேரொலி எழுந்தது. விண்ணளாவ உடல்கொண்டு எழுந்த புரவி ஒன்றின் கனைப்பு போலிருந்தது அது.

அவ்வோசை கேட்டு பாண்டவப் படையினர் அஞ்சி பின்னடைந்தனர். யானைகள் செவி நிலைத்து உடல் விதிர்க்க புரவிகள் திகைத்து நின்றன. அந்தப் புரவிக் கனைப்பொலி அஸ்வத்தாமனை மெய்ப்பு கொள்ளச்செய்தது. தன் தேர் மண்ணிலிருந்து எழுந்து விண்ணில் ஊரத்தொடங்கிவிட்டதுபோல் உணர்ந்தான். “எந்தையே, இதோ உங்கள் வஞ்சம்! எந்தையே, இதோ உங்களுக்கான பழிநிகர்!”

என்று அவன் கூவினான். “எந்தையே, எழுக! எந்தையே, உங்கள் சொல் எழுக!” ஆனால் அவனைச் சூழ்ந்திருந்த வானம் சொல்லின்மைகொண்டு இறுகி புலப்படாப் பாறை போலிருந்தது. அவன் உள்ளம் இன்மையெனச் சுருங்கிவிட்டிருந்தது. “எந்தையே! எந்தையே! எழுக உங்கள் சொல்! எந்தையே!” என்று அஸ்வத்தாமன் கூவினான்.

வில்லின் புரவிக்கனைப்பொலி மேலும் மேலும் உரத்தது. வெறிகொண்ட புரவி. விண்ணுருவப் பெரும்புரவி. அவன் அந்த அறைதலோசையால் முன்னெடுத்துச் செல்லப்பட்டான்.

# கார்கடல் - 86

துரோணர் வீழ்ந்ததும் படைகள் எழுப்பிய வாழ்த்தொலி பொய்யென்று ஒலித்தது. முழவேந்தியவர்களும் கொம்பூதியவர்களும் எழுதிவைத்து படிப்பவர்கள்போல் கூவினர். ஆனால் அவ்வோசை செவிகளில் விழ விழ அவர்களின் வெறி மிகுந்தது. “வீழ்ந்தார் எரிவில்லவர்! மண்பட்டார் திரிபந்தணர்!” என வசைச்சொற்களும் எழத்தொடங்கின. ஆனால் யுதிஷ்டிரரையும் பாண்டவர்களையும் அந்த வாழ்த்தொலிகள் சோர்வுறச்செய்தன. அவ்வொலியால் அள்ளிக்குவிக்கப்பட்டவர்கள்போல் அவர்கள் படைகளுக்குப் பின்புறம் ஒருங்கிணைந்தார்கள். அர்ஜுனனின் தேரை நோக்கி யுதிஷ்டிரர் வந்து இறங்கினார். சகதேவனும் நகுலனும் வந்திறங்கினர்.

ஒருவரும் பேசிக்கொள்ளவில்லை. தேர்த்தட்டில் வில்லை மடியில் வைத்து தலைகுனிந்து அர்ஜுனன் அமர்ந்திருந்தான்.

யுதிஷ்டிரர் “என்ன இது? வசைகூவுகிறார்கள்!” என முனகிக்கொண்டார். பின்னர் “வசையினூடாக வெறுப்பை திரட்டிக்கொள்கிறார்கள். வெறுக்காமல் இத்தருணத்தை கடந்துசெல்ல முடியாதுபோலும்” என்றார். இளைய யாதவர் இறங்கி புரவிகளின் நெகிழ்ந்திருந்த கடிவாளங்களையும் நுகக்கட்டுகளையும் சீர்படுத்தினார். சகடத்தை சுற்றிப்பார்த்து அச்சாணியை கையால் அறைந்து இறுக்கினார். நகுலன் இடையில் கைவைத்து நின்று சுற்றிலும் சிதறிக் கிடந்த பாண்டவப்படை கொடிகளை ஆட்டி கூச்சலிட்டுக்கொண்டிருந்ததை பார்த்தான். பின்னர் புரவிமேல் ஏறி அகன்று சென்று படைகளை ஒருங்கிணைக்க முயன்றான். இடையிலிருந்த கொம்பை எடுத்து ஊதி ஆணைகளை இட்டான்.

அர்ஜுனன்தான் முதல்முதலாக அந்த ஓசையை கேட்டான். அவன் திடுக்கிட்டு திரும்பிநோக்கி “அஸ்வத்தாமர் எழுகிறார்!” என்றான். சூழ ஒலித்துக்கொண்டிருந்த வாழ்த்தொலிகள் கூச்சல்கள் நடுவே அந்த ஓசையை மற்றவர்கள் கேட்கவில்லை. யுதிஷ்டிரர் சற்று அப்பால் புரவியில் நின்றுகொண்டிருந்த நகுலனை நோக்கி “வா இங்கே” என்று கூவினார். தேவையற்ற சீற்றத்துடன் “விரைந்து வா!” என்று கைகாட்டினார். இளைய யாதவர் புரவிகளை மெல்ல தட்டியபடி நின்றார். சகதேவன் மட்டுமே அர்ஜுனன் சொன்னதை கேட்டான். “நான் அவரைப்பற்றித்தான் எண்ணிக்கொண்டிருந்தேன், மூத்தவரே” என்றான். அர்ஜுனன் “அவர் இப்போரில் இதுவரை முழுதுளத்துடன் கலந்துகொள்ளவில்லை. நாம் அறிந்த அவருடைய அம்புகள் ஆற்றல்மிக்கவை. நாமறியா அம்புகள் அவரிடமுண்டு” என்றார்.

நகுலன் வந்திறங்க யுதிஷ்டிரர் “அறிவிலி, உன்னிடம் நான் மைந்தரைச் சென்று பார்க்கச் சொன்னேன்” என்றார். “அங்கிருந்துதான் வந்தேன்” என்றான் நகுலன். மேலும் சீற்றத்துடன் “இத்தனை பொழுது அங்கே என்ன செய்தாய்?” என்றார் யுதிஷ்டிரர். நகுலன் “மைந்தரின் அனல்புண்ணுக்கு மருத்துவம் செய்யப்படுகிறது. அவர்கள் நினைவழிந்திருக்கிறார்கள்” என்றான். யுதிஷ்டிரர் பற்களைக் கடித்து “உம்” என்றபின் எதையோ உதறுவதுபோல தலையை அசைத்தார். நகுலன் “அவர்களின் தோல்கள் முற்றாக வெந்துவிட்டன. நினைவழிந்திருப்பது மிகுதியாக அகிபீனா அளிக்கப்பட்டமையால். அது நன்று, நினைவிருந்தால் அந்த வலியை தாளமுடியாது என்றார்கள் மருத்துவர்கள்” என்றான்.

சகதேவன் “இப்போது தெளிவாகக் கேட்கிறது!” என்றான். யுதிஷ்டிரர் விழிகளைச் சுருக்கி “என்ன?” என்றார். “அஸ்வத்தாமரின் படைகள் எழும் ஓசை…” என்றான் சகதேவன். யுதிஷ்டிரர் அச்சத்துடன் திரும்பி “யாதவனே, அவனிடம் இவ்வுலகையே அழித்துவிடும் ஆற்றல்கொண்ட அம்புகள் உள்ளன என்று சொல்லக்கேட்டிருக்கிறேன்” என்றார். இளைய யாதவர் “ஆம், உள்ளன” என்றார். “யாதவனே, என் இளையவனுக்கு நீயே காவல்!” என்றார் யுதிஷ்டிரர். அர்ஜுனன் “என் செயலுக்கு எதிர்வினையாக வரும் எதையும் நான் எதிர்கொள்ளத்தான் வேண்டும், அதற்கு நான் ஒருக்கமே” என்றான். யுதிஷ்டிரர் பரபரப்புடன் “எண்ணினால் பீமனும் பெரும்பிழை செய்திருக்கிறான். அவன் தனியாகச் சென்று சிக்கிக்கொள்ளப் போகிறான். நகுலா, அவன் உடனே இங்கு வந்தாகவேண்டும். முழவு ஒலிக்கட்டும்” என்றார்.

நகுலன் தலைவணங்கி விலக சகதேவனிடம் "நாம் ஐவரும் ஓரிடத்தில் இருக்கவேண்டும். நம்மை அவன் தனித்தனியாக எதிர்கொள்ளக் கூடாது. நாம் இளைய யாதவன் விழிதொடும் தொலைவில் இருக்கவேண்டும்" என்றார். "எங்கே பாஞ்சாலன்? அவனை நாம் காக்கவேண்டும். அஸ்வத்தாமனின் வஞ்சம் அவன்மேல்தான் முதலில் எழும்... நகுலனிடம் அவனையும் உடனே இங்கு வரச்சொல்லி முழவொலிக்க ஆணையிடுக!" ஓர் ஏவலன் தலைவணங்கி நகுலனை நோக்கி ஓட யுதிஷ்டிரர் "நாம் நம் பிழைக்கு விலையளிக்கப்போகிறோம். தெய்வங்கள் நம்மை விடப்போவதில்லை... மூதாதையர் நம்மை பொறுத்துக்கொள்ள மாட்டார்கள்" என்றார். "என்ன பிழை செய்தோம்?" என்று சகதேவன் பற்களைக் கடித்தபடி கேட்டான். "பிழைசெய்யாமலா இங்கே வந்து எலிகளைப்போல் ஒளிந்திருக்கிறோம்? நெஞ்சுவிரித்து நாம் ஏன் களத்தில் நிற்கவில்லை? எவரை அஞ்சுகிறோம்?" என்றார் யுதிஷ்டிரர்.

சகதேவன் உரத்தகுரலில் "முதன்மைப்பிழை ஆற்றியவர் நீங்கள்" என்றான். யுதிஷ்டிரர் ஒருகணம் அவனை நோக்கிவிட்டு "அதை நான் எண்ணியிருக்கவில்லை என நினைத்தாயா? ஆம், நீங்கள் இயற்றியவை பிழைகள். நான் ஆற்றியது பழி. என் குடிகளும் கொடிவழிகளும்கூட ஈடுசெய்யவேண்டியது. பிறவி பல கடந்து நான் விண்ணுலகு செல்வதற்கு முன் நிகர்செய்தாக வேண்டியது. அதை எண்ணி இனி துயருறுவதில்லை என்று நான் எண்ணிவிட்டேன்" என்றபின் இளைய யாதவரிடம் "யாதவனே, இக்களத்தில் போருக்கு வந்தபோது என்னை இப்புவியிலேயே அறமறிந்து ஒழுகுபவன் என எண்ணிக்கொண்டிருந்தேன். இந்நிலத்தில் என் தேர் சகடம் தொடாது நீந்துவதுபோலவே உணர்ந்தேன். இன்று சற்றுமுன் தேரில்வருகையில் மண்ணின் ஒவ்வொரு

பள்ளமும் கல்லும் தடையும் என் உடலை அறைந்து திடுக்கிட வைத்தன. என் சகடங்கள் நிலத்தில் உருளத்தொடங்கிவிட்டன" என்றார்.

"அது நன்று" என்று இளைய யாதவர் புன்னகைசெய்தார். "அரசனின் தேர்ச்சகடங்கள் மண்ணில் மட்டும்தான் உருளவேண்டும்." யுதிஷ்டிரர் "என் இளையோர் இப்பழியை சுமக்கவேண்டியதில்லை. அவர்களையும் பாஞ்சாலனையும் காத்துநிற்க! நீ எவர் என என் கனவில் அறிந்திருக்கிறேன். உன்னை அடிபணிந்தபின் எவரும் எதையும் அஞ்சவேண்டியதில்லை" என்று யுதிஷ்டிரர் சொன்னார். "என்னை காக்கும்பொருட்டு இனி உன்னிடம் அல்ல எந்த தெய்வத்திடமும் நான் கோரப்போவதில்லை. தெய்வ அருளுக்குரிய அனைத்துத் தகுதிகளையும் இழந்துவிட்டவன் நான். இக்களத்தில் அஸ்வத்தாமனின் அம்புகளால் எரித்தழிக்கப்படுவேன் என்றாலும் அதில் பிழையில்லை." இளைய யாதவர் "நீங்கள் அவனால் எரித்தழிக்கப்பட மாட்டீர்கள், அரசே" என்றார். "ஏனென்றால் நீங்கள் ஏற்கனவே எரிபுகுந்து மீண்டவர்."

யுதிஷ்டிரர் துயருடன் "தவம்பெற்று பேறடைந்தபின் மண்ணுக்கு வந்த எவரும் அப்பேறால் நலமடைந்ததில்லை. அது விண்ணுக்குச் செல்லும் பாதை மட்டுமே" என்றார். "எத்தனை முனிவர்களின் கதைகள்! ஆயினும் நான் மீண்டுவந்தேன். என் இளையோருக்காக." இளைய யாதவர் வாய்விட்டு நகைத்து "ஒவ்வொருவரும் இங்கே ஒவ்வொருவரால் கட்டப்பட்டுள்ளார்கள்" என்றார். பின்னர் அர்ஜுனனை நோக்கி "பார்த்தா, ஒருவர் எதன்பொருட்டு அறம்பிழைப்பாரோ அதுவே அவரை புவியில் கட்டியிருக்கும்

தளை என்றுணர்க!” என்றார். அர்ஜுனன் “நாம் களமெழவேண்டியதுதான். அவர் நம்மை அணுகிக்கொண்டிருக்கிறார்” என்றான். இளைய யாதவர் “அரசர் சொன்னதே சரி, இனி இன்றையபோரில் நாம் இணைந்து நின்றாகவேண்டும்” என்றார். அர்ஜுனன் “அதனால் என்ன பயன்?” என்றான். இளைய யாதவர் “ஒருவர் பொருட்டு காக்கப்பட்டாலும் நாமனைவரும் தப்பக்கூடும் அல்லவா?” என்றார்.

பீமன் புரவியில் வந்து இறங்கினான். அவன் களைத்துச் சலித்திருந்தான். யுதிஷ்டிரர் பரபரப்புடன் “மந்தா, நீ இளைய யாதவருடன் நின்றிரு. எதன்பொருட்டும் தனித்துச் செல்லாதே. அறைகூவல்கள் இழிவுபடுத்தல்கள் எவற்றையும் பொருட்டெனக் கருதவேண்டாம். இது என் ஆணை” என்றார். பீமன் மறுமொழி சொல்லாமல் அர்ஜுனனிடம் “வருகிறானா?” என்றான். “ஆம்” என்று அர்ஜுனன் சொன்னான். பீமன் மேலும் பேசாமல் கைகளைத் தூக்கி அலுப்பறுத்தான். அவன் எலும்புகளின் ஓசை கேட்டது. “மந்தா, நான் சொன்னதை நீ செவிகொள்ளவில்லை” என்றார் யுதிஷ்டிரர். எதிர்பாராத எரிச்சலுடன் பீமன் “மூத்தவரே, பதுங்கி இருப்பதற்காக நான் படைக்கு வரவில்லை. உயிரை எண்ணிஎண்ணிப் போரிடவும் இல்லை” என்றான்.

“நீ அறிவிலாது பேசுகிறாய். நீ இன்றிருக்கும் நிலை என்னவென்று அறிவாயா?” என்று யுதிஷ்டிரர் கூவினார். “நன்கறிவேன், நம் படைகளை அவன் முற்றழிப்பான் என்கிறார்கள். அவர்கள் நடுவே இறந்து கிடக்கவே விரும்புவேன். ஓடி ஒளிந்து உயிர்தப்புவதற்கல்ல” என்றான் பீமன். “மந்தா, இது வெறும் ஆணவம்” என்று யுதிஷ்டிரர்

சொன்னார். “ஆணவமா? இனி என்ன ஆணவம் எஞ்சியிருக்கிறது? வெற்றுவிலங்குக்கு ஆணவம் உண்டா என்ன?” என்றான் பீமன். முகத்தில் புழுதி படிந்திருப்பதுபோல கையால் உரசித்துடைத்து காறித்துப்பினான். “அவன் என்னை கொல்வான் என்றால் எனக்கு உகந்ததை இயற்றுகிறான். நான் பிழையீடு செய்து விண்ணேகுவேன்” என்றான். “மந்தா, நீ உளம்தளர்ந்திருக்கிறாய்...” என்றார் யுதிஷ்டிரர்.

“ஆம், உள்ளம் என்று ஒன்று இத்தனை எடைகொண்டு என்னை அழுத்தியதே இல்லை” என்றான் பீமன். “நான் தூக்கி வளர்த்த கௌரவமைந்தரை கொன்றிருக்கிறேன். பிதாமகரின் தலையை அடித்து உடைத்திருக்கிறேன். அப்போது உள்ளூர அறிந்ததெல்லாம் ஒரு கல்லின் உணர்வின்மையை மட்டுமே. ஆனால் இன்று வெறும் தசைக்குவையாக உணர்கிறேன்.” மீண்டும் நிலத்தில் துப்பி “அந்த யானை என்னிடம் போருக்கு எழவில்லை. அது என்னை பார்க்கவே இல்லை. களத்தில் அஞ்சி நிலையழிந்து சுற்றிக்கொண்டிருந்தது” என்றான். சகதேவன் “அது களத்திற்கு வந்துவிட்டது” என்றான். பீமன் “அது மானுடர்மேல் நம்பிக்கையை இழந்துவிட்டிருந்தது. அதன் ஐயத்தை நான் உறுதிசெய்தேன்” என்றான். சகதேவன் குரல்தாழ்த்தி “நமக்கு வேறுவழியில்லை” என்றான். பீமன் வெடித்து உயர்ந்த குரலில் “எத்தனை வேறுவழிகளை நோக்கினோம்? சொல், எத்தனை வழிகளில் முயன்றோம்?” என்றான்.

யுதிஷ்டிரர் “அதை இப்போது சொல்கிறாயா? உன் முன்னால்தான் முடிவெடுக்கப்பட்டது, அப்போது சொல்லியிருக்கவேண்டும் நீ” என்றார். “அப்போதும் இப்போதும் அதை நான் செய்திருக்கக் கூடாதென்று சொல்லவில்லை.

செய்யாவிட்டாலும் நான் இழிசெயல் செய்தவன். செய்தமையால் அதை உறுதிசெய்திருக்கிறேன். களம்பட்ட ஆசிரியர் எழுந்து வந்தால் நான் மட்டுமே விழிநோக்கி பேசமுடியும். ஆம் ஆசிரியரே, நான் பீமன். வெறும் விலங்கு. ஒருபோதும் பிறிதொன்றாக என்னை சொல்லிக்கொள்ளாதவன் என்பேன். ஆசிரியர் என் தலையைத் தொட்டு குழலை வருடி சொல்வார் ஆம், மைந்தா. இப்பிறவியில் இவ்வாறு ஆனாய். உன் பிழைகளை புழுவென இழிவிலங்கென நூறுமுறை பிறந்து ஈடுசெய்தபின் ஒருநாள் விடுதலைகொள்வாய் என" பீமன் குரல் இடறியது. "அவர் அறிவார் என்னை... அவர் எனக்கு கதைதொட்டு அளித்தார். அதைக்கொண்டு நான் இன்று அவரை கொன்றேன்."

"நீ..." என சொல்லமுயன்ற யுதிஷ்டிரரை கையமர்த்தி பீமன் உரத்த குரலில் "அந்த யானைமேல் விழுந்ததும் அவர் மீதான அடிதான்!" என்றான். "நீ உளம் கலங்கியிருக்கிறாய்!" என்றார் யுதிஷ்டிரர். 'யாதவனே, ஏதேனும் சொல்க! இதென்ன, ஒவ்வொருவரும் பித்தர்கள்போல பேசிக்கொண்டிருக்கிறார்கள்! உத்தரபாஞ்சாலனின் அம்புகளுக்கு முன் தலைகொண்டுசென்று வைப்பார்கள் போலிருக்கிறது இவர்களின் சொற்களைக் கேட்டால்" என்றார். தேரில் வந்திறங்கிய திருஷ்டத்யும்னன் "அரசே, உத்தரபாஞ்சாலர் நம்மைத் தேடி வந்துகொண்டிருக்கிறார். எதிர்ப்படும் படைகளை வில்லால் அறைந்து சிதறடித்துக்கொண்டிருக்கிறார். இன்னும் சற்றுநேரத்தில் அணுகிவிடுவார்" என்றபின் திரும்பி பீமனிடம் "நம் படைசூழ்கை என்ன?" என்றான். "சற்றுமுன் மூத்தவரே சொன்னார், சென்று தலைகொடுத்தல். அதுமட்டும்தான்" என்றான் பீமன்.

திருஷ்டத்யும்னன் எரிச்சல் கொண்டு “தலைகொடுத்தல் என்னும் எண்ணம் வந்தாலே தலைகொடுத்ததுபோலத்தான். எனில் எவருக்காக இப்போர்? இத்தனை மானுடர் உயிரிழந்தது எதன்பொருட்டு? இவர்களுடையதும் அந்த அந்தண ஆசிரியனுக்கு நிகரான உயிர்தான். உடலில் உயிரை ஆள் நோக்கி அளந்து ஊற்றவில்லை தெய்வங்கள்” என்றான். பீமன் அமைதியிழந்தவனாக தலையை திருப்பிக்கொண்டான். குளம்போசை ஒலிக்க புரவியில் வந்திறங்கிய சாத்யகி “என்ன நிகழ்கிறது இங்கே? அரசே, நான் நெடுநேரமாக முரசொலியால் வினவிக்கொண்டிருக்கிறேன். நாம் படைமுகம் கொள்வதற்குரிய சூழ்கை என்ன? நம் படைகள் முற்றாகச் சிதறிப்பரந்துவிட்டிருக்கின்றன. இங்கே இன்றிருப்பவை சிறு சிறு வீரர்குழுக்கள். கௌரவர்களும் உளம்சோர்ந்திருப்பதனால் இப்போது நாம் எஞ்சியிருக்கிறோம்” என்றான்.

படபடப்புடன் கைகளை வீசியபடி “ஆனால் இது இவ்வண்ணமே தொடரவேண்டுமென்பதில்லை. எக்கணமும் அஸ்வத்தாமர் இங்கே வரலாம். அவருடைய சீற்றத்தையும் ஆற்றலையும் கண்டால் கௌரவப்படை எழும். எனில் நமக்கு முற்றழிவே” என்றான். “நமது படைகள் இருக்கும் உளநிலை அவர்களின் படைக்கலங்களுக்கு முன்னால் தலைகொண்டு சென்று வைத்து உயிர்விட சித்தம் கொண்டிருக்கிறது.” திருஷ்டத்யும்னன் “தலைவர்களின் உளநிலையும் அதுவே” என்றான். சாத்யகி அவனை முற்றாகவே தவிர்த்து யுதிஷ்டிரரிடம் “அரசே, படைசூழ்கைக்கு ஆணையிடுக!” என்றான். யுதிஷ்டிரர் “நான் படைசூழ்கை வகுக்க வல்லவன் அல்ல.... என்னால் சொல்லக்கூடுவதொன்றே, என் இளையோர் இளைய யாதவரின் விழிநீழலில் நின்றிருக்கவேண்டும்” என்றார்.

சாத்யகி “இளையவரே, ஆணையிடுக!” என்றான். அர்ஜுனன் விழிதாழ்த்தி அமர்ந்திருக்க சாத்யகி இளைய யாதவரிடம் “அரசே, சொல்க! நான் செய்யவேண்டியதென்ன?” என்றான். சகதேவன் “அவர் ஒரு சொல்லும் உரைக்கப்போவதில்லை. இது நமது போர்” என்றான். பீமன் “நான் செல்கிறேன். இங்கு நின்றிருந்தால் என் நரம்புகள் உடைந்துவிடும்” என்றான். “மந்தா, நான் சொன்னதை நீ மறந்துவிட்டாய்!” என்றார் யுதிஷ்டிரர் “ஆம், மறந்துவிட்டேன். மூத்தவரே, அஸ்வத்தாமன் படைக்கலம் கொண்டுவந்தால் நான் என் தலையை அளிப்பேன். ஐயமே வேண்டாம். அவனுக்கு தலைக்கடன் கொண்டிருக்கிறேன்” என்றபின் கைகளை வீசியபடி நடந்து அகன்றான். “சகதேவா, அந்த அறிவிலியிடம் சென்று சொல்” என்று யுதிஷ்டிரர் கூவினார். சகதேவன் ஒன்றும் சொல்லாமல் வேறுதிசை நோக்கி நின்றிருக்க யுதிஷ்டிரர் தன் தலையில் ஓங்கி அறைந்துகொண்டு உரக்க கூச்சலிட்டார். “நான் என்ன செய்யவேண்டும் என்கிறீர்கள்? நான் சென்று உயிர்கொடுக்கிறேன். நான் சென்று அவன் முன் நெஞ்சுகாட்டுகிறேன். போதுமல்லவா?”

சாத்யகி “நீங்கள் ஏன் உயிர்கொடுக்கவேண்டும்? இவன் செல்லட்டும்... நெறிமீறி ஆசிரியரின் தலையை அறுத்த இச்சிறுமையாளன் செல்லட்டும்” என்றான். திருஷ்டத்யும்னன் ஒருகணம் திகைத்து பின் சினவெறிகொண்டு கையை ஓங்கியபடி முன்னால் பாய்ந்தான். “வாயை மூடு! கீழ்மகனே, என்னடா சொன்னாய்? சிறுமையாளனா? எவன்? யோகத்திலமர்ந்திருந்த மலைமகனின் தலையை அறுத்த நீயா பேசுகிறாய்?” என்றான். “ஆம், அவன் தலையை அறுத்தேன். அவனால் கொல்லப்பட்ட என் பத்து மைந்தர் விண்ணுலகில் உளம் ஆறவேண்டும் என்பதற்காக... அவன் எனக்கு எவருமல்ல.

நீ மடியிருத்தி சொல்லும் வில்லும் தந்த ஆசிரியனை தலையறுத்தவன்... உன்னால் அழியவிருக்கிறது இப்படை... இக்குலமே குருதிகொடுக்கப்போகிறது உன் பழிக்காக.”

திருஷ்டத்யும்னன் கூச்சலிட்டபோது தொண்டை உடைந்து குரல் அடைத்துக்கொண்டது. “ஆம், ஆசிரியனை கொன்றேன். அவர் மைந்தனையும் முடிந்தால் கொல்வேன். அன்றி அவன் தேரடியில் அம்புபட்டு விழுவேன். துளியும் எனக்கு வருத்தமில்லை. நான் எனக்கு உகந்ததையே செய்தேன். எந்தைக்காகவே நான் பிறந்தேன். இதோ எதன்பொருட்டு உத்தர பாஞ்சாலன் வருகிறானோ அதே உணர்வே எனக்கும்...” சாத்யகி “நீ ஆண்மகன் என்றால் அவரை எதிர்த்து கொன்றிருக்கவேண்டும். நெஞ்சில் அம்புபாய்ந்தவரின் தலையை வெட்டி பழிதீர்க்கிறாயா, கீழ்மகனே?” என்றான். சகதேவன் “போதும்... செவிகூசுகின்றது. நிறுத்துங்கள்” என்றான். யுதிஷ்டிரர் ‘யாதவனே, இவர்களின் சொற்களை நிறுத்துக... போதும் இந்தக்கீழ்மை” என்றார். இளைய யாதவரும் அர்ஜுனனும் அச்சொற்களை கேட்டதாகவே தெரியவில்லை.

திருஷ்டத்யும்னன் “ஆம், நான் நெஞ்சில் அம்புபாய்ந்த முதியவரை கொன்றேன். நீ என்ன செய்தாய்? கையறுந்து ஊழ்கத்தில் அமர்ந்தவனை கொன்றாய்... உன் குடிக்கே உரிய கீழ்மையை செய்தாய்... நீ ஆணென்றால் எடு வில்லை. உன் குடியை ஷத்ரியர் எவ்வண்ணம் நடத்துவார்கள் என்று காட்டுகிறேன்” என்றான். யுதிஷ்டிரர் திரும்பி நகுலனிடம் “என்ன செய்கிறாய் அங்கே? அறிவிலி... நிறுத்து இவர்களை...” என்று கூச்சலிட்டார். சாத்யகி “உன் உள்ளத்து இருள் வெளிவந்துள்ளது. நீயா குலம் பற்றி பேசுகிறாய்? யாதவர்களின் ஆண்மையைப் பற்றி தெரிந்தாகவேண்டும் என்றால் உன்

உடன்பிறந்தாளிடம் கேள். ஐந்து மடங்கு மறுமொழி சொல்வாள்…” என்றான். “அறிவிலி… வாயை மூடு!” என்று யுதிஷ்டிரர் கூவி நிற்கமுடியாமல் தேர்த்தட்டை பற்றிக்கொண்டார்.

“முதலில் இந்தக் கீழ்மகனின் இழிந்த நாவை நிறுத்த ஆணையிடுங்கள். உங்கள் சொற்களை அவன் ஒரு பொருட்டெனக் கருதுகிறானா என்று பாருங்கள். அதன்பின்னர் என்னிடம் நெறிபேசலாம்” என்று கூவியபடி சாத்யகி யுதிஷ்டிரரை நோக்கி அடிக்கச் செல்பவன்போல சென்றான். “நீங்கள் கேட்டு நிற்பது உங்கள் குடியை கீழ்மைசெய்பவனின் சொற்களை. ஆணிலிகளுக்குரிய நாணமின்மையுடன் நின்றிருக்கிறீர்கள். நான் உங்கள் அடிமை அல்ல. உங்களுக்காக பணிபுரிய வந்தவனும் அல்ல. உங்களுக்காக என் மைந்தரை இழந்தவன்.” யுதிஷ்டிரர் தலையைப் பற்றியபடி பின்னடைந்து உடைந்த தேரின் முகடொன்றில் அமர்ந்து முழங்கால்களில் முகம் வைத்துக்கொண்டார். திருஷ்டத்யும்னன் வாளை உருவி சாத்யகியை நோக்கி வீச அதை ஒழிந்து தன் வாளுறையால் அவன் வாளை அறைந்து தெறிக்கவிட்ட சாத்யகி “ஆணிலி என்றதும் உனக்கு சினம் வருகிறதா? இழிமகனே” என்றான்.

திருஷ்டத்யும்னன் கைகள் நடுங்க விழிகள் நீர்கொள்ள நின்று தவித்தான். சாத்யகி தொண்டை நரம்புகள் புடைக்க கூச்சலிட்டான். “நீ ஆணென்றால் சென்று சொல் அஸ்வத்தாமனின் அம்புகளால் அழியவிருக்கும் பாண்டவப்படைகளிடம், நீ அவர்களுக்காக உயிர்கொடுப்பாய் என்று. நெஞ்சு விரித்துச் சென்று அவன் அம்புகள் முன் நின்று செத்து விழு… உன்னை சாவிலிருந்து காத்தமைக்காக நானும் வந்து அந்த அம்புகள் நடுவே விழுகிறேன்.” சாத்யகி நிலத்தில்

ஓங்கித் துப்பினான். “நீ ஏன் துரோணரை கழுத்தறுத்தாய் என்று அறியாதோர் எவர் இங்கே? உன் தந்தைக்காகவா? தந்தைக்காக நீ கொண்ட உணர்ச்சிகளை விஞ்சியது உன் உள்ளம்கொண்ட சிறுமை. சொல் கீழ்மகனே, அவர் உன்னை தேர்க்காலில் கட்டி இழுக்காவிட்டால் நீ அவரை அவ்வண்ணம் வெட்டியிருப்பாயா? நீ ஆடிய அமலை உன் ஆணவத்திற்காக, உன் தந்தைக்காக அல்ல. இல்லை என்றால் சொல். உன் தந்தைமேல் ஆணையிட்டுச் சொல்!”

திருஷ்டத்யும்னன் தவித்து திணறி பின்னர் “நீ முதலில் செல்... யோகத்தில் அமைந்தவனை வெட்டிய பழிக்காக சென்று உன் மூதாதையர் முன் சங்கறுத்துவிழு” என்றான். அந்தத் தளர்வு சாத்யகியை மேலும் வெறிகொள்ளச் செய்தது. “ஆம், யோகத்திலமர்ந்தவனைத்தான் வெட்டினேன். மேலும் வெட்டுவேன். அவன் என் எதிரி...” என்றான். திருஷ்டத்யும்னன் எங்கோ எதையோ சென்று தொட்டு ஒருகணத்தில் ஆற்றல்கொண்டான். தாழ்ந்த அழுத்தமான குரலில் “நீ ஆணையிட்டுச் சொல், அவன் உன் எதிரி என்று. சொல், அவன் உன் எதிரியா? அவன் உனக்கு உன் மைந்தர்களைவிட அணுக்கமானவன். உன் அகம்பகிர்ந்துகொண்டவன்... இல்லை என்றால் சொல்” என்றான். கையை நீட்டியபடி முன்னால் சென்று “அவனை நீ ஏன் கொன்றாய் என உள்ளம் தொட்டுச் சொல். சொல் கீழ்மகனே, உன் தெய்வங்களை எண்ணி ஆணையிட்டுச் சொல்!”

சாத்யகி சொல்லிழந்தான். திருஷ்டத்யும்னன் உளம் தளர்ந்து தோள் தொய்ந்து முழங்கால் வளைய விழப்போனான். பின் ஓங்கி நெஞ்சில் அறைந்து அழுகைக்குரலில் “அனைத்துப் பழிகளையும் நானே சுமக்கிறேன். ஆம், எவரும் என் பொருட்டு

சாகவேண்டியதில்லை. நான் சென்று அவன் முன் நிற்கிறேன்” என்றான். அவன் விம்மியழத் தொடங்க யுதிஷ்டிரர் உடைந்தகுரலில் “நான் என்ன செய்யவேண்டும், யாதவனே?” என்றார். அர்ஜுனன் “முன்னரே சொல்லிவிட்டீர்கள் மூத்தவரே, நாம் யாதவரைச் சார்ந்தே நிற்போம். நமக்கு வேறுவழியில்லை” என்றான். யுதிஷ்டிரர் “ஆம், நாம் அவனை நம்பியே இங்கு நின்றிருக்கிறோம்” என்றார். “அவர் ஏந்திய அந்த மந்தர மலையே நமக்கும் குடையாகுக!”

சாத்யகி “அது என்ன ஓசை!” என்றான். “குதிரைக்கனைப்பு!” என்றான் திருஷ்டத்யும்னன். இளைய யாதவர் “அது அஸ்வத்தாமனின் வில்லின் ஓசை. அதில் வடவைநெருப்பு குடியேறிவிட்டிருக்கிறது” என்றார். யுதிஷ்டிரர் “ஆம், நிமித்திகக் கூற்றின்படி இந்தக் களத்தில் வடநெருப்பின் கனைப்பொலி எழும்” என்றார். திருஷ்டத்யும்னன் ஒருகணத்தில் விசைகொண்டு எழுந்து குரலும் உடலசைவும் முற்றாக மாறுபட “நான் நமது படைகளை ஐவிரல்குவிகை சூழ்கையில் நிறுத்துகிறேன். நம்மால் செய்யக்கூடுவது இப்போது அது ஒன்றே. நமது அனைத்துப்படைகளும் இப்புள்ளியில் வந்து இணையட்டும். நம் முழுவல்லமையாலும் அவரை எதிர்ப்போம்” என்றான். சாத்யகி “அங்கரை சிகண்டியும் சுருதகீர்த்தியும் எதிர்த்து நின்றிருக்கிறார்கள். கிருதவர்மனை சுருதசேனன் எதிர்க்கிறான்… நான் சென்று துரியோதனனையும் இளையோரையும் நிறுத்துகிறேன். இளையவரே, அனைத்துவிசையாலும் ஆசிரியர் மைந்தரை எதிர்கொள்க!” என்று கூவியபடி தன் தேர் நோக்கி ஓடினான்.

இளைய யாதவர் புன்னகையுடன் அர்ஜுனனிடம் “நாம் கிளம்பலாம் அல்லவா?” என்றார். யுதிஷ்டிரர் “என்ன இது,

யாதவனே? இவர்கள் கக்கிய இந்நஞ்சு எங்கிருந்தது?” என்றார். “அணுக்கமானவர்களிடையே திரள்வது, அன்புக்கு அடியில் தேங்கியிருப்பது” என்ற இளைய யாதவர் புரவிமேல் கைவைத்து அமரத்தில் பாய்ந்தேறிக்கொண்டு சவுக்கால் தொட்டார். புரவிகள் கனைத்தபடி முன்னெழுந்தன. “யாதவனே, மந்தன் உடனிருக்கட்டும்… அவன் நம்முடனே இருக்கட்டும்” என்று யுதிஷ்டிரர் சொன்னார். இளைய யாதவர் புன்னகையுடன் “அவரைக் காக்கும் தெய்வங்கள் முற்றிலும் வேறு” என்றார். தேர் எழுந்து முன்னால் சென்றபோது அர்ஜுனன் “எதன்பொருட்டு இந்த உளநாடகம், யாதவரே!” என்றான். “உமிழ்வனவற்றை நாம் அகற்றிவிடுகிறோம்” என்றபின் வாய்விட்டு நகைத்து “தெய்வங்களுக்கு முன்னால்தான் மானுடர் மிகச்சிறப்பாக நடிக்கிறார்கள்” என்றார்.

# கார்கடல் - 87

அஸ்வத்தாமன் அணுகி வருந்தோறும் புரவிக்கனைப்பொலி பெருகிப் பெருகி வந்தது. அது நான்குபுறங்களிலும் இருந்து எழுந்து அவர்கள் அனைவரையும் சூழ்ந்தது. சகதேவன் அச்சத்துடன் “மூத்தவரே…” என்றான். யுதிஷ்டிரர் “யாதவனே, நாங்கள் என்ன செய்யவேண்டும்?” என்று கூவினார். “காத்திருப்போம்” என்றார் இளைய யாதவர். அர்ஜுனன் “அவர் போர்முகம் கொண்டு வருகையில் அமைந்திருந்தேன் என்னும் பெயர் எனக்குத் தேவை இல்லை…. நாம் முன்னெழுந்து செல்வோம்” என்றான். யுதிஷ்டிரர் சீற்றத்துடன் “அறிவிலி… அவன் சொல்வதை கேள். உன் எண்ணத்தை இங்கே எவரும் கோரவில்லை” என்றார்.

அர்ஜுனன் “எழுக! முன்னெழுக!” என்று கூவினான். இளைய யாதவர் தேரை முன்னெடுக்க யுதிஷ்டிரர் “யாதவனே...” என்றார். “நான் பாகன், வீரனின் ஆணைக்கு கட்டுப்பட்டவன்” என்றார் இளைய யாதவர்.

யுதிஷ்டிரர் “வேண்டாம்... அந்தப் புரவிக்கனைப்பொலியே அச்சமூட்டுகிறது” என்றார். சகதேவன் “அவர் கொண்டிருக்கும் அம்புகள் என்ன என்று தெரிந்த பின்னர் எழுவோம், யாதவரே” என்றான். பீமன் “எதை அஞ்சுகிறீர்கள்? உங்கள் பழியின் வடிவென எழுந்து வருகிறதா அந்த வாளி? அவ்வண்ணம் என்றால் அதன் முன் ஆண்மையுடன் சென்று பணிவதே முறை. ஆம், நாம் பெரும்பழி செய்தவர்கள். வேறெவ்வண்ணமும் நம்மை கற்பனையில் வடிவமைத்துக்கொள்ள வேண்டியதில்லை” என்றான். “மந்தா, நீ உன் வாயை மூடு... இனி நீ பேசினால் என்னால் பொறுத்துக்கொள்ள இயலாது” என்றார் யுதிஷ்டிரர். நகுலன் “அது புரவிக்கனைப்பொலி அல்ல” என்றான், “ஊழித்தீ எழுகையில் புரவிக்கனைப்பொலியாகவும் பரவுகையில் யானைப்பிளிறல் போலவும் அமைகையில் சிம்மக்குரல் எனவும் ஒலிக்கும் என்று நூல்கள் சொல்கின்றன.”

அர்ஜுனனின் தேர் முன்னால் செல்ல யுதிஷ்டிரர் கண்ணீருடன் “என்ன நிகழவிருக்கிறது? இன்றுடன் நம் குடி அழிகிறதா?” என்றார். சகதேவனிடம் “அவனை எவ்வண்ணமேனும் தடு... செல்க... அவனை தடுத்து நிறுத்துக!” என்று பதறினார். சகதேவன் முன்னால் செல்ல “வேண்டாம்... அவனுடன் செல்லாதே... இங்கேயே நில்” என்றர். “மந்தா, நீ செல்... உன் இளையோனுடன் நில்” என்றபின் “வேண்டாம், உனக்கும் விற்கலை தேர்ச்சி இல்லை. நீ ஒன்றும் செய்ய முடியாது”

என்றார். “மூத்தவரே, ஏதேனும் செய்யமுடியும் என்றால் இளைய யாதவரால் மட்டுமே… அவரிடம் நம்மை அளித்து காத்திருப்போம்” என்றான் சகதேவன். யுதிஷ்டிரர் “எவரேனும் அப்படி காத்திருக்க இயலுமா? வருவது குடியழிவு… பெருந்தழல்…” என்றார். “ஆம், தெய்வத்திற்கு தன்னை அளித்து முற்றாக உளம் இன்றி அமர்ந்திருக்கும் அடியார் எவர்? அவ்வண்ணம் உளமடங்கியோருக்கு துயர் என ஏதேனும் உண்டா?” என்றான் பீமன். “மந்தா” என யுதிஷ்டிரர் கூவினார்.

அஸ்வத்தாமன் தோன்றுவதற்கு முன்னரே அவனை அவர்கள் கண்டுவிட்டிருந்தார்கள். அவன் வந்த வழியில் அலறல்களும் கூச்சல்களும் எழுந்தன. புயல்காற்று காட்டை விலக்கி வகுந்து அணைவதுபோல அவன் படைநடுவே வரும் வழி தெரிந்தது. யுதிஷ்டிரர் “தெய்வங்களே, மூதாதையரே, காத்துகொள்க… பிழை பொறுத்து எங்களுடன் நிலைகொள்க!” என்று கூவினார். பீமன் விழிசுருக்கி நோக்கியபடி நின்றான். சகதேவன் அறியாமல் தன் வில்லை எடுத்தபடி முன்னே செல்ல நகுலனும் தொடர்ந்தான். “என்ன செய்கிறாய்? அறிவிலி, நில்” என்று யுதிஷ்டிரர் கூவினார். “இங்கே நின்றிருப்பது என்னை கூசவைக்கிறது. நான் மூத்தவருடன் நின்றிருக்கவேண்டும்” என்றபடி சகதேவன் முன்னால் செல்ல நகுலன் தொடர்ந்தான். “நீ செல்… மந்தா, நீயும் செல்” என்று யுதிஷ்டிரர் சொன்னார். “அதனால் எப்பயனும் இல்லை” என்றான் பீமன்.

அஸ்வத்தாமன் இடிவிழுந்து எரிந்துகொண்டிருக்கும் மரம் என தேரில் தோன்றினான். அவன் தேரின் புரவிகள் வெறிகொண்டவைபோல பற்களை இளித்து கழுத்துக்களை வெவ்வேறு கோணங்களில் தூக்கி திமிறிக்கொண்டிருந்தன. அவற்றின் குளம்புக்கால்கள் தரையை ஓங்கி ஓங்கி அறைந்தன.

தரையின் அதிர்வில் தேர்களிலிருந்து புழுதி உதிர்ந்தது. யானைகள் அஞ்சி உடலதிர பிளிறலோசை எழுப்பி பின்னடைந்தன. அஸ்வத்தாமனின் உடலின் ஒளி எதனால் என பீமன் உடனே கண்டடைந்தான். அது அவன் தலையில் இருந்த அருமணி ஒன்றிலிருந்து எழுந்தது. அது நெய்க்குடம் வெடித்து எரிவதுபோல சுடர்விட்டது. அந்த ஒளியில் அவன் குழல்கற்றைகள் தழல்களாயின. முகம் கனலென்று சீற, தாடி கொழுந்துவிட்டு பறந்தது. . அவன் விழிகளும் இரு மணிகளென எரிந்தன.

"அது அவன் தந்தை அளித்த மணி" என்று யுதிஷ்டிரர் சொன்னார். "அந்தச் சிரோமணியுடன் அவன் பிறந்தான் என்று நிமித்திகர்கள் சொல்லி கேட்டிருக்கிறேன். அது ருத்ரமணி. அனல்வண்ணனின் நுதல்விழி மண்ணில் எழுந்தது. அவனை காலருத்ரனாக ஆக்கும் ஆற்றல் கொண்டது. இளையோனே, சிவவடிவென எழுந்து வருகிறான். அவனை எதிர்கொண்டு வெல்ல எவராலும் இயலாது. அவனிடம் சென்று அடிபணிவது ஒன்றே நாம் செய்யக்கூடுவது..." பீமன் "அடிபணிந்து என்ன சொல்வது? அறப்பிழை செய்தோம், பொறுத்தருள்க என்றா? அவனால் கொல்லப்படுவோம் என்றால் அதுவே நாம் விண்ணேகும் வழி... அதுவே நிகழ்க!" என்றான். யுதிஷ்டிரர் "நான் என்ன செய்வேன்! தெய்வங்களே! மூதாதையரே..." என்று கூவினார். அஸ்வத்தாமனின் தேர் மலைமேலிருந்து பாறை உருண்டு விழுவதுபோல் அணைந்தது. விழிகளை மின்னல் ஒன்று நிரப்ப வெண்ணிறவிழியின்மையால் அனைவரும் திசையழிந்தவர்களானார்கள். அவர்களைச் சூழ்ந்தது செவிகளை முற்றழித்த இடியோசைத்தொடர்.

பார்பாரிகன் சொன்னான்: அஸ்வத்தாமன் தன் உடல் ஒளிகொண்டிருப்பதை தேரின் உலோகப்பரப்பில் விழுந்த தன் பாவையின் செந்நிற மின்னில் இருந்தே உணர்ந்தான். ஒருகணம் தன்னுடன் பிற எவரோ இருப்பதாகவே அவனுக்குத் தோன்றியது. வலப்பக்கமும் இடப்பக்கமும் அவனை அனல்வண்ண ருத்ரர்கள் சூழ்ந்திருந்தனர். அவர்கள் நின்று கொழுந்தாடினர், மாபெரும் நாவுகள் என. பின்னர் அவன் தன் நெற்றியில் சூடிய தலைமணியின் ஒளியே அது என புரிந்துகொண்டான். அவன் உள்ளம் பெருகி எழுந்தது. சிவசிவசிவ! சிவமே யாம்! சிவமே யாம்! சிவமே யாம்! என அவன் அகம் கூவி ஆர்ப்பரித்தது. ஹரஹரஹர மகாதேவ்! அழிப்பவனே, பெருந்தேவனே! முழுமுதலே, மூவிழியனே! இதோ நான். இதோ நீ!

அவன் பிறந்தபோதே அந்தத் தலைமணி அவன் நெற்றியில் இருந்தது என்று கதைகள் சொல்லின. அவன் அன்னை குனிந்து பிறந்த மைந்தனைப் பார்த்தபோது நெற்றியில் இருந்த சிறிய பள்ளத்தை நோக்கி “என்ன ஆயிற்று? எவர் நகமேனும் பட்டதா?” என்றாள். அது நகக்கீறல் போலவும் தோன்றியது. “அல்ல, அன்னையே. அது மைந்தரின் பிறப்பியல்பு” என்றாள் வயற்றாட்டி. துரோணரிடம் அவன் அளிக்கப்பட் போது “என்ன இது, மைந்தனேதானா? நான் ஏதோ குதிரைக்குட்டி பிறந்துள்ளது என்றல்லவா எண்ணினேன்?” என்று நகைத்தபடி குனிந்து நோக்கி “இது என்ன? நெற்றியில்? செந்தூரம் அணிவித்தீர்களா? அவ்வழக்கம் உண்டா?” என்றார். “அது அவர் தலையில் பிறப்பிலேயே இருந்தது. குழவிகளுக்கு அவ்வண்ணம் பிறப்புத்தடங்கள் பல அமைவதுண்டு” என்றாள் வயற்றாட்டி.

நிமித்திகரை வரவழைத்து நோக்கச் செய்தார் துரோணர். “அந்தணரே, இம்மைந்தன் சிவக்கூறு. சூரியனின் கதிர்பட்ட வைரம். இது அவன் நுதல்விழி” என்று நிமித்திகர் சொன்னார். “பதினெட்டு நாட்களில் இது மறைந்துவிடும். ஆனால் எப்போதும் இருந்துகொண்டுமிருக்கும்… இவரை வெல்ல மண்ணில் எவராலும் இயலாது. என்றும் குன்றா இளமை இவர் தோள்களில் திகழும்.” துரோணர் நிலையழிவுடன் சற்று தயங்கி “ஆனால்…” என்றார். அவர் கேட்க வருவதை உணர்ந்த நிமித்திகர் “ஆம், அழிக்கப்பிறந்தவர்” என்றார். “எவரை?” என்றார் துரோணர். “அதை நாம் அறிய இயலாது. அது மேலும் பல்லாயிரவர் பிறவிநூல்களுடன் தொடர்புள்ளது” என்று முது நிமித்திகர் சொன்னார். தந்தை அவனிடம் அதை ஒருமுறை சொன்னார். “ஒவ்வொருவருக்கும் பிறவிப்பணி ஒன்றுள்ளது. உன் பணி உன் நெற்றியில் உறங்கெரி வடிவில் உறைகிறது.”

அஸ்வத்தாமன் எப்போதுமே அந்த எரிநெற்றியை தன்னில் உணர்ந்திருந்தான். சினமெழுகையில் இரு புருவங்களுக்கு நடுவே ஒரு எரிகுளம் உருவாவதுபோல். உடலெங்கும் அதன் வெம்மை பரவுவதுபோல. அது தன்னை முற்றாக நிலை மாற்றுவதை கண்டான். கல்வியும் பிறவிப்பண்புகளும் அகன்று வெற்றுவிலங்கு என நின்றிருக்கச் செய்தது அது. அவன் அர்ஜுனனிடம் இறுதியாக அம்புகோத்துக்கொண்ட அந்நாளில் அவனுக்கென எழுந்த அர்ஜுனனின் அம்புபட்டு அந்த யானைக்குழவி அலறியபடி நீரில் விழுந்ததைக் கண்டபோது அவனுக்குள் அந்த அனல் முற்றணைந்தது. அவன் உடல் குளிர்கொண்டு நடுங்கிக்கொண்டிருந்தது.

அவன் அன்று மாலை அந்த யானையைக் காண கொட்டிலுக்குச் சென்றிருந்தான். அவன் காலடியோசை கேட்டு

அது அஞ்சி ஓலமிட்டது. “அது மிக அஞ்சியிருக்கிறது, உத்தமரே. எவரும் அருகணைய இயலாது” என்றார் யானைக்கொட்டில் காவலரான சூர மதங்கர். அவன் யானையை நோக்கியபடி நின்றான். அதன் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது, நீர்ப்பரப்பில் காற்று விழுவதுபோல. “இதற்கு பெயர் என்ன?” என்றான். மதங்கர் தயங்கினார் “ஏன்?” என்றான் அஸ்வத்தாமன். “அதாவது…” என அவர் மேலும் தயங்க அருகே நின்றிருந்த இளம் மதங்கன் “தங்கள் பெயர்தான்… இதுவும் இளமையில் குதிரைபோல் கனைத்தது” என்றான். அவன் தன் உடல்மேல் ஒரு குளிர்ந்த அறை விழுந்ததுபோல் அதை உணர்ந்தான். பற்கள் கிட்டித்துக்கொண்டன. விழிகள் நீர்கோக்குமளவுக்கு உடல் விதிர்ப்பு கொண்டு கூசியது. அங்கிருந்து உடனே திரும்பி விட்டான்.

அதன்பின் அந்த எரியை அவன் அஞ்சினான். தன் ஊழ்கமனைத்தைக்கொண்டும் அதை அணைக்கவே முயன்றான். அம்பு பயில்தலையே அவன் தன் ஊழ்கச்செயல் என கொண்டிருந்தான். மிகக்கூரிய அம்புகளால் மிகமிக நுண்ணிய இலக்குகளை அடித்து அடித்து தன் அகத்தை தீட்டிக்கொண்டே சென்றான். அதை மறந்தான், கடந்து அப்பால் சென்றான். ஆடியில் அவன் தன்னை நோக்கிக்கொள்வதே இல்லை. விழிமூடாமல் நீர்ப்பரப்பை நோக்கி குனிவதுமில்லை. ஆயினும் என்றேனும் அவன் தன்னை அறியாது மென்பரப்பில் நோக்கிக் கொண்டால் அவன் விழிகள் நுதல்மையத்தையே நாடின. அங்கே சிறிய குழியாக அந்தத் தலைமணியை அவன் உணர்ந்தான். நெஞ்சு திடுக்கிட விழிவிலக்கிக்கொண்டான். அதிலிருந்து தனக்கு மீட்பில்லை என பின்னர் அறிந்துகொண்டான்.

அவன் உத்தரபாஞ்சாலத்தின் அரசனாக அரியணை அமர்ந்த அன்று அவன் தந்தை ஓர் அருமணிகட்டிய சரடை அவனிடம் அளித்தார். அது இளஞ்செம்மை நிறத்தில் எளிய கல்போல தோன்றியது. “இது உன் அன்னைவழி தாதை சரத்வான் உன் அன்னைக்கு அளித்தது. மைந்தன் பிறந்தால் அவனுக்குரியது என அவர் கூறியிருந்தார். எங்களுக்கு எவ்வகையிலும் இது பயனற்றது என்பதனால் குடுக்கைக்குள் இருந்து எடுத்து நோக்கியதே இல்லை. உன் அன்னை இதை அஞ்சினாள். இது உன்னை அறத்திலிருந்து வழுவச்செய்யும் என்று அவளுக்கு ஐயம். அருமணி சூட அந்தணர்க்கு உரிமை இல்லை. நீ ஷத்ரியன் ஆவதை அவள் வெறுக்கிறாள்” என்றார். அவன் ஒன்றும் சொல்லவில்லை. “உனக்குரியது இது. இதைச்சூடுக!” என்றார் துரோணர். “இது துவாரகையின் சியமந்தகத்திற்கு நிகரானது. பிறிதொன்றிலா அருமணி அரசர்களுக்கு பெருமை சேர்ப்பது.”

அவன் அந்த அருமணியை சூடியபடி மணிமுடி சூட்டிக்கொண்டான். அதை ஆராய்ந்த மணிதேருநர் “அரசே, இது செந்நிற மணி. ஷாத்ர குணம் கொண்டது. மண்வெல்வது, குருதி கோருவது, ஒருபோதும் விழைவடங்காதது. இதற்கு நிகராக பொற்குவைகளும் மணித்திரள்களும் வைக்கப்பட்டாகவேண்டும்” என்றார்கள். பூசகர்கள் “இது ருத்ரமணி. இதை சிவ வடிவெனக் கண்டு நாளும் பூசை செய்யவேண்டும். மலரும் நீரும் அன்னமும் கொண்டு நிறைவுசெய்யவேண்டும்” என்றார்கள். ருத்ரமணி உத்தர பாஞ்சாலத்தில் ஆலயம் ஒன்றில் வைக்கப்பட்டது. அதற்கு மூவேளை பூசெய்கை நிகழ்ந்தது. ஒவ்வொரு கருநிலவு நாளிலும் அவனே சென்று அதை வணங்கி மீண்டான்.

போருக்கென எழுந்தபோது அவன் தந்தையின் தூதுடன் வந்த மாணவனாகிய சுதமன் "ஆசிரியர் தாங்கள் தந்தை அளித்த தலைமணியை அணிந்து வரவேண்டுமென விழைகிறார்" என்றான். அஸ்வத்தாமன் திடுக்கிட்டான். "ஆனால் அது இங்கே பூசனைத்தெய்வமாக உள்ளது" என்றான். "அதைத்தான் ஆசிரியர் சொன்னார், பூசனைத்தெய்வம் படைக்கலமாகும் தருணம் இது என உங்களிடம் சொல்லும்படி சொன்னார்." அவன் அமைச்சர்களிடம் கேட்டான். "ஆம் அரசே, காவல்தெய்வமெனத் திகழும் அருமணிகளை போர்க்களத்தில் சூடிச்செல்லும் மரபுண்டு. அவற்றில் எழும் தெய்வம் நம் குடியை காக்கும்" என்றார் அமைச்சர். அவன் அதை தன்னுடன் கொண்டு வந்தான். ஆனால் எங்கும் அணிந்துகொள்ளவில்லை.

குருக்ஷேத்ரத்தில் அவன் போருக்கெழுந்தபோது துரோணர் "அந்தத் தலைமணியை அணிந்துகொள்" என்றார். அவன் பேசாமல் நின்றான். "அது உனக்கு காவல்" என்றார். பின்னர் "உன்னைக் காக்க அதனால் மட்டுமே இயலும்" என்று சேர்த்துக்கொண்டார். அவன் மீண்டும் பேசாமல் நின்றிருக்க "இது என் ஆணை" என்றார். அவன் முதல்நாள் போரில் தலையில் அதை அணிந்திருந்தான். ஆனால் எளிய கல் எனத் திகழ்ந்த அது எவர் விழிகளையும் கவரவில்லை. அவனே இருநாட்களில் அதை முற்றாக மறந்துவிட்டிருந்தான். கிருபர் மட்டுமே ஒருமுறை அதை நோக்கினார். "அது ருத்ரமணி அல்லவா?" என்றார். "ஆம்" என்றான். "அதில் ருத்ரன் எழாமலேயே இப்போர் முடிவடைக!" என்றார்.

ஏகாக்ஷர் சொன்னார்: அரசி, நான் களத்தில் பெருந்தழல் என எரிந்தெழும் அஸ்வத்தாமனை காண்கிறேன். அவனைக்

கண்டு அஞ்சி பாண்டவப் படைகள் சிதறி விரிந்தகல எதிரில் காண்டீபத்துடன் அர்ஜுனன் மட்டும் நின்றிருந்தான். அவனை துணைக்க தேரில் வந்த நகுலனும் சகதேவனும் அவ்வனலுரு கண்டு அஞ்சி பின்னடைந்தார்கள். அஸ்வத்தாமன் வெறிக்குரலில் "சொல்லும் வில்லும் அளித்த ஆசிரியனை வஞ்சத்தால் வீழ்த்தியவன் எவன்? ஆண்மையிருந்தால் நான் எனச்சொல்லி அவன் எழுக!" என்றான். அர்ஜுனன் "நான்! நான் அதை செய்தேன்" என கைதூக்கி கூவினான். "இந்த காண்டீபத்தால் அவரை நான் கொன்றேன். என் குலக்கொடி அடைந்த அவைச்சிறுமைக்கு அவரும் பொறுப்பே என்பதனால். என் ஆசிரியனின் மெய்வேதம் இங்கு திகழ அவர் தடை என்பதனால்" என்றான்.

"அறப்பிழையால் நிலை நிறுத்தப்படுவதா உன் வேதம்?" என்றான் அஸ்வத்தாமன், "உன் குலத்திற்கு இழைக்கப்பட்ட சிறுமையை பிறருக்கு சிறுமையிழைத்தா நீ நிகர்செய்வாய்? கீழ்மகனே, உன் குடிக்கு தீராப்பழி சேர்ந்தது இப்போது... எடு வில்லை. உன்னை அறம் எரித்தழிப்பதை நான் காட்டுகிறேன்." அர்ஜுனன் காண்டீபத்தைத் தூக்கி "ஆம், நாம் இறுதியாக இக்களத்தில் எதிர்நிற்கிறோம். ஓங்கிய வாளும் இலக்குநோக்கப்பட்ட அம்பும் தாம் மறப்பதில்லை" என்றான். "பேசாதே" என்றபடி அஸ்வத்தாமன் அவனை அனலம்பால் அறைந்தான். அதை நீரம்பால் அர்ஜுனன் முறித்தான். சிம்மத்தை யானை எதிர்கொண்டது. கூகையை செம்பருந்து. இடியை சிதறடித்தது புயல். மின்னலை மூடியது முகில். அவர்களின் போர் எரிந்து எரிந்து எழுந்தது. அர்ஜுனனின் கை எழுந்தது.

“அழிக உன் குலம்! அழிக உன் குடி!” என்று கூவியபடி அஸ்வத்தாமன் நாராயணாஸ்திரத்தை எடுத்தான். அவன் கைவிரல்கள் அலைமுத்திரை கொண்டபோதே ஆழிவாளி எழுகிறதென்பதை அனைவரும் கண்டனர். விண்ணில் இடித்தொடர் எழுந்தது. மின்னல் சாட்டைகள் சுழன்று சுழன்று ஒளிர்ந்தன. அவர்களை எரியும் புகைமுகில்களும் முற்றாகச் சூழ்ந்தன. அஸ்வத்தாமன் “விண்ணில் இருக்கும் எந்தையே, இதோ உங்கள் வஞ்சத்திற்காக.... உங்கள் அழல் அவிக! உங்கள் விழைவென எழுக இவ்வாளி!” என்று கூவினான். அவன் கையில் அலையம்பு எழுந்தபோது அங்கிருந்த அனைவரும் விழிமயங்கினர். அவர்களின் கண்முன் காற்று சிற்றலைகளாகியது. கண்களை மூடி செவிகளை பொத்திக்கொண்டு தலை தாழ்த்தி அவர்கள் கூச்சலிட்டனர். பலர் மயங்கி விழுந்தனர். செவிகள் உடைந்து குருதி வழிய, மூச்சுத் திணறி துடித்தனர். மூக்கிலும் வாயிலும் குருதி பெருக விழுந்து வலிப்பு கொண்டனர். நிலத்தில் தலையை அறைந்து அறைந்து ஓலமிட்டனர்.

நுண்சொல்லை உரைத்து அஸ்வத்தாமன் நாராயணவாளியை எடுத்ததும் இளைய யாதவர் உரக்க “அனைவரும் படைக்கலங்களை கைவிடுக! தேர்களில் இருந்தும் விலங்குகளிலிருந்தும் இறங்குக! நிலத்தில் மண்டியிடுக...” என்று கூவினார். அவர் சொற்களை நகுலனின் கையசைவால் அறிந்து திருஷ்டத்யும்னனின் முரசுகள் வானில் நிறைத்தன. படைவீரர்கள் தேர்களிலிருந்தும் புரவிகளில் இருந்தும் யானைகளில் இருந்தும் மண்ணில் பாய்ந்தனர். வேல்களையும் விற்களையும் அம்புத்தூளிகளையும் வீசினர். “சிறு படைக்கலம்கூட எஞ்சக்கூடாது.... இது ஆணை. சிறு படைக்கலம் கூட எஞ்சலாகாது” என முரசுகள் ஆணையிட்டன.

குறுவாட்களையும் கத்திகளையும் பொய்நகங்களையும் கொக்கிப்பிடிகளையும்கூட எடுத்து வீசினர். கைமுட்களையும் கால்கூர்களையும் அகற்றினர். அவை உலோக ஓசையுடன் மண்ணில் சிதறின.

யுதிஷ்டிரர் படைக்கலங்களை வீசிவிட்டு நிலத்தில் குப்புற விழுந்தார். அப்பால் நகுலனும் சகதேவனும் விழுந்தனர். அர்ஜுனன் காண்டீபத்தை வீசிவிட்டு ஓடிச்சென்று மண்ணில் முழந்தாளிட்டான். இளைய யாதவர் கடிவாளங்களை வீசிவிட்டு வெறுங்கையுடன் நின்றார். யுதிஷ்டிரர் பீமன் கையில் கதையுடன் அசைவிலாது நிற்பதை கண்டார். “மந்தா, அறிவிலி, என்ன செய்கிறாய்?” என்று அவர் கூவினார். “நகுலா, அவனிடம் சொல். படைக்கலங்களை வீசிவிட்டு மண்ணில் விழச்சொல்” என்று கதறினார். நகுலன் “அவர் ஆசிரியருக்கு தலைகொடுக்க துணிந்துவிட்டார், மூத்தவரே” என்றான். “மந்தா! அறிவிலி... படைக்கலம் துறந்து மண்ணில் விழு... இது என் ஆணை! மந்தா!” என்று யுதிஷ்டிரர் கண்ணீருடன் அலறினார்.

செம்மண் புயல் சுழித்தெழுவதுபோல வந்தது நாராயணாஸ்திரம். ஆனால் அது தொட்ட தேர்களெல்லாம் அனல்கொண்டு கொழுந்துவிட்டன. கொடிகள் சருகுகள்போல் பற்றிக்கொண்டன. உலோகத் தேர்மகுடங்கள் மெழுகென உருகி உருவழிந்தன. படைக்கலங்கள் அனைத்தும் வெயிலில் புழுக்கள்போல உருகி நெளிந்தன. வெங்காற்றின் சுழலுக்குள் செம்மண் சுழிப்பு. அதன் உச்சியில் புழுதியும் புகையும் இணைந்த வளையம். அச்சுழிப்புக்குள் ஆயிரம் சிறு மின்னல்கள் அதிர்ந்தன. உச்சியில் இடியோசை எழுந்து எதிரொலிகளாக பெருகியது. அச்சுழிப்பின் மையம்

அனல்தூணாலானது. காற்று வளையம் பற்றி எரிந்த தேர்களை தூக்கிச் சுழற்றி மேலெழுப்பி மண்ணில் வீசியது.

“ஆசிரியர் துரோணரை வாழ்த்துக... ஆசிரியர் அடிபணிக!” என்று இளைய யாதவரின் ஆணை எழுந்தது. படைவீரர்கள் அனைவரும் திரண்ட பெருங்குரலில் “ஆசிரியர் வாழ்க! பரத்வாஜர் மைந்தர் வாழ்க! எந்தையே, சொல்லளித்த வள்ளலே, விண்வாழும் மெய்வடிவனே, எங்கள்மேல் சினம் ஒழிக! எங்கள் பிழைகளை பொறுத்தருள்க!” என்று கூவினர். அர்ஜுனன் கைகூப்பி கண்ணீருடன் தலைகுனிந்து அமர்ந்திருந்தான். திருஷ்டத்யும்னனும் நிலத்தில் தலைசேர்த்து கண்களை மூடி உதடுகளை இறுக்கி உள்ளத்தால் “ஆசிரியரே, பொறுத்தருள்க! ஆசிரியரே, உங்கள் மாணவனுக்கு அருள்க!” என்று கூவிக்கொண்டிருந்தான். பீமன் மட்டும் கதையை தோளில் வைத்து இடையில் மறுகை ஊன்றி நிமிர்ந்த தலையுடன் வெறித்து நோக்கியபடி நின்றான்.

“மந்தா! மந்தா!” என யுதிஷ்டிரர் கூவினார். அவரை புழுதிப்புயல் சூழ்ந்துகொண்டது. அவர் கண்களும் வாயும் புழுதியால் நிறைந்தன. மூச்செங்கும் புழுதி நிறைய அவர் ஓங்கி இருமினார். அவர் செவிகளை கொதிக்கச் செய்தபடி, புருவத்தையும் தாடிமயிர்ப் பிசிறுகளையும் பொசுக்கியபடி அனல் கடந்து சென்றது. “மந்தா! என் மைந்தா!” என்று கூவியபடி அவர் பீமன் நின்றிருந்த திசை நோக்கி ஓடினார். கால் தடுக்கி விழுந்து எழுந்து மீண்டும் ஓடினார். புயல்சுழிப்பு களமெங்கும் சுழன்று மெல்ல விசை அவிந்து இளைய யாதவரை அணுகி அவர் காலடியில் மெல்லிய புழுதிச்சுழிப்பாக மாறி அணைந்தது. குழியானையின்

கூடுபோன்ற அந்தச் சின்னஞ்சிறிய மென்புழுதிக்குழியை நோக்கியபடி புன்னகையுடன் இளைய யாதவர் நின்றிருந்தார்.

யுதிஷ்டிரர் “மந்தா!” என்று கூவியபடி பீமனை நோக்கி சென்றார். அவன் தலைமயிர் பொன்னிறமாக ஒளிவிடுவதைக் கண்டு திகைத்து நின்றார். அது எரிதழல் எனக்கண்டு “மந்தா!” என்று கூவியபடி அருகே ஓடினார். அவன் உடல் மெல்லிய நீலநிறத் தழலால் மூடப்பட்டிருந்தது. அவன் தோலாடை எரிந்து கரிப்படிவாக தெரிந்தது. தோல்பட்டைகள் எரிய நெகிழ்ந்து இறங்கிய கவசங்கள் உருகி நெளிவும் வழிவும் குமிழ்வுமாக புகைவிட்டுக்கொண்டிருந்தன. அவன் எதையும் அறியாதவன்போல அஸ்வத்தாமனை நோக்கிக்கொண்டிருந்தான்.

யுதிஷ்டிரர் “மந்தா…” என கூவியபடி அவனை அணுகி அவன் கைகளை தொடப்போனார் “தொடவேண்டாம்” என்று இளைய யாதவர் சொன்னார். “அவர் உடலில் நுண்ணனல் கூடியிருக்கிறது… நீங்கள் அதை தாளமாட்டீர்கள்.” இளைய யாதவரை நோக்கி ஓடிய யுதிஷ்டிரர் “யாதவனே, என் மைந்தன்… என் இளையோன்” என்று கண்ணீருடன் கூவினார். “அஞ்சவேண்டாம், அவரை அது ஆற்றல்கொண்டவராக்கும். அது ஆசிரியரின் நல்வாழ்த்து. இக்களத்தில் துரோணர் உளம்குழைந்து வாழ்த்தியது அவரைத்தான்” என்றார் இளைய யாதவர்.

அரவான் சொன்னான்: குருக்ஷேத்ரக்களத்தில் இருந்து தேரைத் திருப்பி விரைந்த அஸ்வத்தாமனைத் தொடர்ந்து சென்றனர் பதினொரு ருத்ரர்கள். அனல்போல் எரிந்த உரு

கொண்டவர்கள். அஸ்வத்தாமனின் ஆடிப்பாவை என்றே வடிவம் எடுத்தவர்கள். சினம் கொண்ட ரைவதன், சூலம் ஏந்திய அஜன், புலித்தோல் அணிந்த பவன், நுதல்விழிகொண்ட பமன், உடுக்கொலிக்கும் வாமன், நாகம் அணிந்த உக்ரன், சடை விரித்த வ்ருஷாகபி, மான் ஏந்திய அஜைகபாத், மழு சூடிய அஹிர்புத்ன்யன், மண்டையோட்டு மாலையுடன் பஹுரூபன், சாம்பல் மூடிய மஹான்.

"மீண்டு செல்... மீண்டுமொருமுறை அந்த அம்பை ஏவுக.... நாங்கள் அழிக்கிறோம் இவ்வுலகை" என்றான் அஜன். "எங்கள் சினம் ஆறவில்லை. நாங்கள் களமெழுந்தாகவேண்டும்" என்றான் பவன். "உன் தந்தையால் நாங்கள் கட்டுண்டோம்... எங்களை விடுவித்து போர்க்களம் மீள்க!" என்றான் அஜைகபாத். "இனி எங்களுக்கு தருணம் இல்லை" என்றான் வாமன். "உன் சினம் கொண்டு எழுக! உன் வஞ்சத்தால் களம் மீள்க!" என்றான் உக்ரன். "உன் தந்தையைக் கடந்து செல்க... உனக்காக வில்லெடுத்து நிலைகொள்க!" என்றான் பஹுரூபன்.

அஸ்வத்தாமன் அவர்களை மாறிமாறி பார்த்தான். பின்னர் தன் வில்லை தேரில் ஓங்கி அறைந்து வீசியபின் 'செல்க... விலகிச்செல்க!" என்று தன் பாகனுக்கு ஆணையிட்டான். அவனுக்குப் பின்னால் பாண்டவப்படைகளின் உவகைக்கூச்சல்கள் முழக்கமாக எழுந்து அலைபெருகிக்கொண்டிருந்தன. அவன் தேர்த்தட்டில் இறுகிய உடலுடன் வெறித்த நோக்குடன் நின்றிருந்தான்.

# கார்கடல் - 88

சஞ்சயன் சொன்னான்: அரசே, குருக்ஷேத்ரக் களத்தில் பொடியும் புகையும் மெல்ல அடங்கிக்கொண்டிருப்பதை இப்போது பார்க்கிறேன். முகில்கள் பெய்தொழிந்து வான் வெளுப்பதுபோல் அங்கே ஒவ்வொரு வீரராக தோன்றுகிறார்கள். அதுவரை அங்கு படைகள் மோதிக்கொண்டிருந்தன. அப்படைகளுக்குள் ஒவ்வொரு வீரனும் பிறிதொரு வீரனை விழியால் நோக்காது தன்னந்தனிமையில் போரிட்டுக்கொண்டிருந்தான். சூழல்வெளிக்க தன்னைச் சூழ்ந்து ஒரு பெருங்களம் இருப்பதை, பல்லாயிரம் பேர் படைக்கலங்களுடன் முட்டிமோதுவதை, மேலும் பல்லாயிரம் பேர் உடல் சிதைந்தும் தலையறுந்தும் இறந்தும் உயிரெஞ்சியும் நிலம் நிறைத்து விழுந்துகிடப்பதை அப்போதுதான் பார்த்தவன்போல் ஒவ்வொரு படைவீரனும் திகைப்பதை பார்க்கிறேன். அத்தனை பொழுது எவரிடம் போரிட்டுக்கொண்டிருந்தோம் என்று அவன் அகம் மலைக்கிறது. தன்னந்தனியாக அப்பெருந்திரளுடன் மோதிக்கொண்டிருந்தேனா என அவன் வினவிக்கொள்கிறான். அத்தனை பொழுது தன்னிடம் போரிட்டுக்கொண்டிருந்த அந்த எதிரிவீரன் யார் என்று எண்ணி எண்ணி உளம் அழிகிறான். அவன் எங்கிருந்தெழுந்தான்? சூழ்ந்திருந்த அப்பெருந்திரளில் இருந்தானா? அன்றி தன்னுள்ளிருந்தே எழுந்தானா?

வாள் தாழ்த்தி, வில் நிலத்திலூன்றி, வேல்களை கைவிட்டு, சூழ விழியோட்டியபடி சொல்லழிந்த உதடுகளுடன் நின்றிருக்கிறார்கள் கௌரவர்களும் பாண்டவர்களும். அந்தப் படைக்களத்தில் முதல் சொல் எழுவதுபோல் முரசொலிகள் முழங்கத்தொடங்கின. துரோணர் களம் பட்டார் எனும் செய்தியை அப்போதுதான் அவர்களில் பலர் உணர்கிறார்கள்.

அன்று நிலம் சேர்ந்தவர்களின் நிரையை முரசுகள் இருதரப்பிலிருந்தும் அறிவிக்கின்றன. அவர்கள் முதலில் தாங்கள் எந்தத் தரப்பை சேர்ந்தவர்கள் என்பதையே உணரவில்லை. தன்னியல்பான எழுச்சியால் படைக்கலங்களைத் தூக்கி மாண்டவர்களுக்கு வாழ்த்தொலி எழுப்பினர். துரோணருக்கு பாண்டவர் தரப்பும் கௌரவர் தரப்பும் வாழ்த்தொலி எழுப்பின. ஒலிகள் கலங்க களம் பட்ட அனைவருக்கும் அனைவரும் வாழ்த்தொலி எழுப்பினர். தாங்களே கொன்று தாங்களே வாழ்த்திக்கொண்டனர். அவ்வாழ்த்தொலிகளின் பொருளை உளம் உணராதவர்கள் போல. அவ்வாழ்த்தொலிகளை அவர்கள் தாங்கள் உயிருடன் எஞ்சியதன் பொருட்டே எழுப்பிக்கொள்பவர்கள் போல.

இருதரப்பிலும் படைகள் மிகவும் குறைந்துவிட்டிருந்தன. இருதரப்புப் படைவீரர்களும் நின்றிருக்க இடமில்லாது உடல்களின் நடுவே இடைவெளிகளில் கால் வைத்து தள்ளாடினார்கள். பின்னர் அந்தி முரசு ஒலிக்கத்தொடங்கியது. உண்மையில் இன்னும் கதிரவன் மேற்கே முற்றழியவில்லை. முழுவட்டமென புகைக்கும் முகில்களுக்கும் அப்பால் ததும்பிக்கொண்டிருந்தது கதிர்முகம். களம் புழுதியால் இருண்டும் பின்னர் காற்றால் வெளுத்தும் குருதியால் செம்மை பெருக்கியும் ஒளி கண்கூச விரிந்தும் திகழ்ந்துகொண்டிருந்தது. எவர் முடிவெடுத்ததென்றறியாமல் ஓர் அந்தி முரசு முழங்கத்தொடங்கியதும் பிற முரசுகளும் முழங்கின. கௌரவர்களும் பாண்டவர்களும் இருபக்கமும் பிரிந்து தளர்நடைகளில் தங்கள் பாடிவீடுகளுக்கு திரும்பத்தொடங்கினர். அவர்கள் இறந்த உடல்களின்மேல் தாவினர். உடல்களின் இடுக்குகளில் கால்களையும் வேல்களையும் ஊன்றினர். பின்னர் வேறுவழியில்லாமல் உடல்கள் மீது நடக்கலாயினர்.

மென்மையான உயிர் விதிர்க்கும் தசைகள். அவர்களின் உடலில் உறையும் ஒன்றை பதறச்செய்தன அக்கால்தொடுகைகள். அரசே, உயிருடல்மேல் தொட கால்கள் கொள்ளும் கூச்சம் எந்த தெய்வத்தின் ஆணை? வைத்த கால் அதிர எடுத்து மீண்டும் பிறிதொரு உடல்மேல் வைத்து தாவிச்சென்றுகொண்டிருந்தனர். பின்னர் அவர்கள் அரியதோர் கனவு நிலையை அடைந்தனர். நிலமென மாறி பரந்துகிடந்த மானுட உடல்களின் மீது என்றும் அவ்வாறே அவர்கள் நடந்துகொண்டிருப்பதுபோல் உணர்ந்தனர். சிற்றகவையில் மூதாதையரின் நெஞ்சிலும் வயிற்றிலும் நடந்தது போல். வான் மழை பெய்து நெகிழ்ந்த மண்ணில் பாய்ந்து களித்தது போல். உழுது புரட்டி நீர் சேர்த்து மரமோட்டி விரித்திட்ட சேற்றுவயல்கள் மேல் துழாவி நடந்தது போல். பெருவெள்ளம் வற்றியபின் கங்கைக்கரைச்சேற்றில் களியாடுவது போல். எவ்வகையிலும் எண்ணவியலாத உவகையொன்றை அவர்கள் அடைந்தனர். ஒருவரை ஒருவர் நோக்கி கூச்சலிட்டபடி பொருளற்ற வார்த்தைகளை உரக்கக் கூவியபடி அவர்கள் விழுந்துகிடந்த உடல்களின் மேல் நடனமிட்டுச் சென்றனர்.

அக்களிப்பு எளிதில் பரவுவது. அரசே எண்ணம் அனலென பரவும். எண்ணமில்லா பித்து காற்றெனப் பரவும். சிலர் வெறியோலமிட்டனர். சிலர் ஈட்டிகளையும் வேல்களையும் வில்களையும் தலைக்குமேல் தூக்கி அமலையாடினர். அவர்கள் முகங்களில் வெறிப்பா இளிப்பா என்று வியக்கவைக்கும் நகைப்பொன்று தோன்றியது. எங்கும் பற்களும் துறித்த கண்களும் தெரிகின்றன. அவர்களின் சிரிப்புடன் கீழே மல்லாந்துகிடந்த பல்லாயிரம் துறித்த கண்களில், உயிர் பிரியும் கணத்து வலிப்பில் உறைந்த முகங்களில், இளித்துத் திறந்த வாய்களில் பதிந்திருந்த சிரிப்பும் இணைந்துகொண்டது.

இங்கிருந்து பார்க்கையில் பல்லாயிரம் சிரிப்புகளுக்கு அவர்கள் நின்றாடுவதைப்போல் தோன்றுகிறது. அந்நிலமும் சிரிப்பது போல். அச்சிரிப்பை நான் இதற்கு முன்னரும் பலமுறை கண்டிருக்கிறேனா? எப்போதும் இவ்வண்ணமே இச்சிரிப்பு திகழ்ந்திருக்கிறதா? ஓசையற்ற சிரிப்பை போல் வந்தறைந்து நெஞ்சை நிறைப்பது பிறிதொன்றில்லை. ஆலயச் சிற்பங்களின் சிரிப்பு அது. கருவறையமர்ந்த கொடுந்தெய்வத்தின் பொருள்கடந்த சிரிப்பு.

சஞ்சயன் சொன்னான், அமலையாடி பாடிவீட்டுக்குத் திரும்பும் அவ்வீரர்களின் மீது மேலும் மேலுமென வானம் தெளிந்துவருகிறது. இன்றைய போர் முடிந்தது, அரசே. இது பதினைந்தாவது நாள் போர். பதினைந்து காலகட்டங்கள். பதினைந்து கொடுங்கனவுகள். அரசே, அறமும் மறமும் தங்கள் எல்லை கண்டு திகைத்த பதினைந்து நாடகங்கள். பதினைந்து யுகங்கள் அவை.

திருதராஷ்டிரர் இருகைகளையும் தலைக்குமேல் குவித்து தசைக்குமிழிகளென விழிகள் துடித்தலைய விழிநீர் பாய்ந்து மார்பில் வழிந்துகொண்டிருக்க விம்மல் ஓசை எழுப்பினார். அது நீள்மூச்செ‌ன மாற “தெய்வங்களே! மூதாதையரே!” என்றார்.

ஏகாக்ஷர் சொன்னார்: அரசி, இப்போது துரியோதனனின் பாடிவீட்டுக்கு முன்னால் சிறுமுற்றத்தில் இருண்டு வரும் அந்தியில் செவ்வொளி அலையும் பந்தங்களின் அருகே அங்கரும் துச்சாதனனும் சகுனியும் சல்யரும் மட்டும் அமர்ந்திருக்கிறார்கள். இருகைகளையும் விரல்கோத்து முழங்கால் மேல் வைத்து, தலை கவிழ்ந்து,

முடிச்சுருள்கள் கலைந்து முகம் மீது அலைய துரியோதனன் அமர்ந்திருக்கிறான். அவனுக்கு முன் கர்ணன் மார்பில் கைகளைக்கட்டி விழிகளைத்தழைத்து நிலம் நோக்கி அமர்ந்திருக்கிறான். சல்யரும் சகுனியும் தங்கள் எண்ணங்களுக்குள் மூழ்கி ஏதோ சொற்களை உரைப்பவர்கள்போல உதடுகள் அசைய அமர்ந்திருக்கிறார்கள்.

தன் புண்பட்ட காலை மெல்ல அசைத்து நீக்கி வைத்து முனகலோசை எழுப்பிய சகுனி "இங்கு இன்னமும் போர் முடியவில்லை" என்றார். அவர் அதை தன்னிடமே சொல்லிக்கொண்டார். துரியோதனன் விழிதூக்கி அவரை பார்த்தான். "துரோணர் களம் படுவார் என்பதை நாம் முன்னரே அறிந்திருக்க வேண்டும்" என்று சகுனி சொன்னார். "தன் மாணவனை அவர் கொன்றிருந்தாரெனில் அது இதுநாள் வரை இங்கு வாழ்ந்து, சொல்தவமும் விரல்தவமும் இயற்றி, விற்கலை ஒன்றை இப்புவியில் நிறுவியதை அவரே அழித்துவிட்டுச் செல்வது போல. எந்த ஆசிரியனும் சென்று சேரும் இடர் அது. தன்னை வெல்ல வைப்பதா, தான் வளர்த்தெடுத்த கலையை நிலைநிறுத்துவதா என்பது. பெரும் ஆசிரியர்கள் தன் கலையை நிலைநிறுத்தி விடை கொள்ளவே விழைவார்கள். துரோணரும் அதையே செய்தார். அர்ஜுனன் வடிவில் அவரது விற்கலை இங்கு நிற்கும். அவர் வாழ்ந்தது முழுமையடையும். அர்ஜுனனை வெல்லக்கூடியவர் அவர், வஞ்சத்தாலேயே அவர் வீழ்ந்தார் என்பது களத்தில் நிறுவப்பட்டமையால் அவர் தோற்கவும் இல்லை" என்றார்.

துரியோதனன் தாழ்ந்த குரலில் "இவ்வண்ணம் எதையேனும் சொல்லி நிறுவி அதை நாமே ஏற்றுக்கொள்வதில் என்ன பயன் உள்ளது? நம் தரப்பில் பெருவில்லவர்களில் ஒருவர்

இன்றில்லை. அது மட்டுமே உண்மை” என்றான். “அவர் நமது படைகளை வெல்ல வைத்தார். அரசே, பாண்டவர் தரப்பில் அவர் உருவாக்கிய அழிவென்ன என்று சற்று முன்னர்தான் காவல் மாடத்தில் ஏறி நின்று பார்த்தேன். அவர்களில் இன்று எஞ்சியிருப்பவர் மிகச்சிலரே. இன்னொரு நாள் போரில் நமது முழுவிசையையும் திரட்டி தாக்குவோமெனில் அவர்கள் எஞ்சப்போவதில்லை” என்றார் சகுனி. துரியோதனன் விழிதூக்கி நோக்க சகுனி சொன்னார். “நோக்குக, நம் தரப்பின் முதன்மை வீரர் இன்று நம்முடன் இருக்கிறார்! ஒருவேளை இவ்வெற்றி அவருக்குரியதென முன்னரே தெய்வங்கள் வகுத்திருக்கும் போலும். ஆகவேதான் பீஷ்மரும் துரோணரும் களம் பட்டார்கள். அங்கர் கையால் பாண்டவர்கள் கொல்லப்படவும் உனக்கு மணிமுடி சூட்டப்படுவும் ஊழ் பாதை வகுத்துள்ளது. நாம் இன்னும் போரிட இயலும்.”

“அரசே, சல்யரும் கிருபரும் உடனிருக்க அங்கர் படையெழுந்தாரெனில் உடல் வெந்து உளம் சிதறி நைந்துகிடக்கும் பாண்டவர்களை வெல்ல நமக்கு ஓர் புலரியும் அந்தியும் மட்டும் போதும். ஐயம் வேண்டாம், நாளை பொழுது நாம் போர் முடித்து வெற்றியுடன் பாடிவீடு திரும்புவோம்” என்றார் சகுனி. துரியோதனன் விழி திருப்பி கர்ணனை பார்த்தான். கர்ணன் “ஆம், நான் படைத்தலைமை கொள்கிறேன். என்னுடன் நீங்கள் இருந்தால் போதும். வெற்றியை ஈட்ட என்னால் இயலும்” என்றான். “அர்ஜுனன் இன்று புண்பட்டு திரும்பிச் சென்றிருக்கிறான். அவன் உடல் வெந்துவிட்டதென்கிறார்கள். அவன் உளம் நலிவுற்றிருக்கும். நாளை போருக்கு அவன் எவ்வண்ணம் எழுவான் என்று தெரியவில்லை என்று நமது உளவுச்செய்திகள் சொல்கின்றன. அங்கர் உளம் கொண்டாரெனில் நாளையே பாண்டவப்

படைகளை முற்றழிக்க இயலும்” என்றார் சகுனி. “நாம் வெல்வோம். ஐயமே வேண்டாம், நாம் இக்களத்தில் வெல்வோம். அது எந்தையின் வெற்றி. இது இனிமேல் கதிர்விரித்தெழும் சூரியனின் போர்” என்று கர்ணன் சொன்னான்.

“பிறகென்ன? ஐயம் களைக! இந்தத் தெய்வம் நமக்கான வெற்றியை இறுதி எல்லைக்கோட்டுக்கு அப்பால் வைத்துள்ளது. அரசே எந்த்த் தெய்வமும் நற்கொடையை எளிதில் அளித்துவிடுவதில்லை என்று கொள்க! நீ கோருவதென்ன? பாரதவர்ஷத்தின் முதன்மை மணிமுடி. மும்முடி சூடி ஆள ஐம்பத்தாறு மன்னர்கள் கோலூன்றி அமர்ந்த விரிநிலத்தை கோருகிறாய். அதை அளிப்பதற்கு முன் தெய்வங்கள் கோருமல்லவா, நீ எதுவரை செல்வாய் என்று? இறுதிக்கணம் வரை நின்றிருப்பாயா என்று? ஆம் என்று அவர்களிடம் சொல்லி செயலில் காட்டுவோம். அரசே, நாளை பதினைந்து நாள் போரையும் மறந்து அன்றெழுந்ததுபோல் வில்லேந்தி முடி ஒளிர கவசங்கள் மின்ன சென்று களம் நிற்க! தெய்வங்கள் பார்க்கட்டும், துரியோதனன் ஒருபோதும் மானுடரிடம் தோற்பதில்லை என்று” என்றார் சகுனி. அவர் குரல் ஓங்கியது.

“தெய்வங்கள் தங்கள் அடியவனை நோக்கி அவனுக்கு முற்றிலும் நிகரான, அவன் தன் முழு ஆற்றலால் எழுந்தாலொழிய கடந்து செல்ல இயலாத மானுட எதிரிகளை அனுப்புகின்றன. வஞ்சத்துடன் பகைமையுடன் கீழ்மைகளுடன் அவன் போரிடும்படி செய்கின்றன. மானுடரால் வெல்லப்படக்கூடிய ஒருவனுக்கு தங்கள் அருங்கொடையை அளிப்பதில்லை என்று அவை முடிவு செய்துள்ளன. எந்த மானுடரும் எவ்வகையிலும் வெல்ல முடியாத ஒருவனைக்

கண்டே விண்ணிழிந்து வந்து அவை கைவிரித்து நெஞ்சோடு தழுவிக்கொள்கின்றன. வேண்டும் வரம் அளித்து புவித்தலைமை என நிறுத்துகின்றன. நீ வெல்ல இயலாதவனென்றுணர்க! அரசே, இதோ இப்போரில் எத்தனை பேர் களம்பட்டனர்! பீஷ்மரும் துரோணரும் வீழ்ந்தனர். ஜயத்ரதரும் பகதத்தரும் விழுந்தார்கள். பிதாமகர் பால்ஹிகர் களம்பட்டார். இளையோன் பூரிசிரவஸ் மறைந்தான். நீ எஞ்சியிருக்கிறாய். இன்னமும் வெல்லப்படாதவனாக தலை தருக்கியிருக்கிறாய். இதுவே சான்றல்லவா, நாளை நாம் வெல்வோம். நாமே வெல்ல இயலுமென்று தெய்வங்களுக்கு நாளை காட்டுவோம்" என்றார் சகுனி.

துரியோதனன் எழுந்து இருகைகளையும் விரித்து "ஆம், அதுவே என் முடிவு. இன்று ஆசிரியர் களம் பட்ட செய்தியை நான் அறிந்த அக்கணம் என் உள்ளம் கொண்ட உணர்வென்ன என்று நானே கூர்ந்துநோக்கிக்கொண்டிருந்தேன். அடிவிழுந்தோறும் சீறி படமெடுக்கும் அரவுபோல் என்னை உணர்ந்தேன். என் கொடியில் ஆடும் அரவை நான் கண்முன்னிலெனக் கண்டேன். என் தன்முனைப்பும் சினமும் தணியவில்லை. இந்த இழப்பே இருமடங்கு சீற்றத்துடன் எழுவதற்கான ஆணை என்றுதான் என் அகம் சொல்கிறது. சோர்வூட்டும் சொற்கள் எனக்கு சுற்றும் ஒலித்துக்கொண்டிருந்தபோதுகூட என் அகத்தில் ஒருபகுதி கல்லென உறைந்தே இருந்தது. மாதுலரே, என் உணர்வுகளையே சொல்லாக்கியிருக்கிறீர். ஆயினும் உங்கள் சொற்களுக்கு அப்பால் ஒன்றை சொல்ல விரும்புகிறேன். நான் வணங்கும் தெய்வங்களே என்னை கையொழிந்தாலும் சரி, உளம் சோரப்போவதில்லை. என் தெய்வமே வில்லெடுத்து எனக்கெதிராக வந்து நின்றாலும் சரி, களம் நில்லாதொழியப்போவதில்லை" என்றான்.

“இச்சொற்களையே மூதாதையர் உன்னிடமிருந்து எதிர்பார்க்கிறார்கள். உன் தெய்வங்கள் உன் நாவில் இவை எழக் காத்திருக்கின்றன. கூரிய சொற்கள் திகழும் நாவு வாயை வேள்விக்குளம் என்றாக்குகிறது, தெய்வங்கள் அங்கே அவி கொள்கின்றன என்று அசுர வேதம் சொல்லுண்டு” என்று சகுனி சொன்னார். “ஆம், மீண்டெழுவோம். நாளை புலரியில் அங்கர் தலைமை கொள்ள போர் தொடரட்டும்” என்று துரியோதனன் ஆணையிட்டான். “இளையோனே, உடனே இச்செய்தி நம் படைகளில் முரசறைவிக்கப்படட்டும்.” துச்சாதனன் தலைவணங்கினான். “நாம் பீஷ்ம பிதாமகரை வணங்கி சொல்கொள்வோம்” என்றார் கிருபர். “துரோணர் களம் பட்ட செய்தி அவருக்கு சென்று சேர்ந்திருக்க வாய்ப்பில்லை” என்றார் சல்யர். “ஆம், அரசர் ஆணையிடாது எச்செய்தியும் அவருக்கு செல்ல வேண்டியதில்லை என்று முன்னரே சொல்லப்பட்டிருக்கிறது” என்றார் சகுனி.

ஏகாக்ஷர் தன் காய்களை கலந்து மீண்டும் ஏழாகப் பகுத்து “அரசி நாளை போர் தொடரும். இதுவரை நிகழ்ந்த போர் அனைத்தும் இன்றிரவோடு முற்றாக மறக்கப்படும். ஏழு முறை மடித்து ஏழாயிரம் முறை இறுக்கி சுற்றிக் கட்டி இருண்ட ஆழத்திற்கு அனைத்து நினைவுகளும் தள்ளப்படும். நாளை கதிர்மைந்தனின் நாள்” என்றார். காந்தாரி இருகைகளையும் கூப்பி “ஆம்” என்றாள். பிற அரசியர் நீர்மின்னும் கண்களுடன் நோக்கி நின்றிருந்தார்கள்.

பார்பாரிகன் சொன்னான்: கூட்டரே, அந்தி எழுந்து படையெங்கும் பந்தங்கள் ஒளி பெற்றுவிட்டிருந்த பொழுதில் மூன்று தேர்களில் துரியோதனனும் கர்ணனும் சல்யரும்

சகுனியும் கிருபரும் பீஷ்மர் அம்புப்படுக்கையில் கிடந்த படுகளத்தின் முகப்பிற்கு வந்து சேர்ந்தனர். அங்கு நெய்ப்பந்தங்கள் படபடத்து காற்றிற்கு ஆடும் ஓசை மட்டுமே கேட்டுக்கொண்டிருந்தது. மிகத்தொலைவில் கௌரவப்படைப்பெருக்கு பாடிவீடுகளில் அமைந்துகொண்டிருக்கும் ஓசை முழக்கமெனச் சூழ்ந்திருந்தது. புண்பட்ட யானைகளும் புரவிகளும் பிளிறிக்கொண்டும் கனைத்துக்கொண்டும் இருந்தன. ஆனால் அச்சூழல் தன்னை போர்க்களத்திலிருந்து வெட்டி அகற்றிக்கொண்டிருந்தமையால் அவ்வொலிகளுக்கும் முற்றாக அகன்று அதை வெறும் பின்னணிக் கார்வையென மாற்றிக்கொண்டுவிட்டிருந்தது.

முதல் தேரிலிருந்து துரியோதனனும் கர்ணனும் இறங்கி நின்றனர். தேரிலிருந்து சகுனி தன் புண்பட்ட காலை மெல்ல நீட்டி வைத்து உடல் சரித்து நடந்துவந்தார். கிருபரும் சல்யரும் இன்னொரு தேரிலிருந்து இறங்கினர். அவர்கள் அணுகும் செய்தி சென்றதும் பீஷ்மரின் படுகளத்திற்கு காவல் நின்றிருந்த மருத்துவ ஏவலர்களான சாத்தனும் ஆதனும் வந்து துரியோதனனைப் பணிந்து முகமன் உரைத்தனர். பிறிதொரு மருத்துவ ஏவலன் உள்ளே சென்று முதிய மருத்துவர் வஜ்ரரை செய்தி அறிவித்து வெளியே கூட்டிவந்தான். துரியோதனன் வஜ்ரரிடம் “எவ்வண்ணம் இருக்கிறார்?” என்றான். “அவ்வண்ணமே” என்று அவர் மறுமொழி சொன்னார். திரும்பி கர்ணனை நோக்கி “வருக!” என்றபின் துரியோதனன் உள்ளே சென்றான்.

அப்பாலிருந்த ஒளி கடந்து வந்தமையால் அம்புப் படுக்கையின் மீது பீஷ்மர் காற்றில் மிதந்தவர்போல் கிடப்பதாகத் தெரிந்தது. அம்புகளும் நிழல்களும் கலந்து பின்னி வலையாக மிதந்து

வானில் நின்றிருக்கும் எண்கால் சிலந்தியென அவரை துரியோதனன் எண்ணினான். அருகணைந்து அவர் கால்களில் தலைவைத்து வணங்கினான். உரத்த குரலில் “பிதாமகரே, நாளை போரில் அங்கர் களமிறங்குகிறார். கௌரவப்படை முன்பினும் விசைகொண்டு பாண்டவரை தாக்கவிருக்கிறது. நாளை வெற்றியென என் நெஞ்சு கூறுகிறது. என்னையும் அங்கரையும் நம் படையினரையும் வாழ்த்துக!” என்றான். பின்னர் “பிதாமகரே, ஆசிரியர் துரோணர் இன்று களம்பட்டார். அர்ஜுனனால் அவர் வஞ்சக்கொலை செய்யப்பட்டார்” என்றான்.

பீஷ்மர் அதை உணர்ந்ததுபோல் தெரியவில்லை. இமைகள் அசைவற்றிருந்தன. சற்றே திறந்த உதடுகள் உலர்ந்து விரிசலிட்டிருந்தன. கிருபர் சென்று வணங்கியபின் பீஷ்மரின் காதருகே முழந்தாளிட்டு “பிதாமகரே, துரோணர் களம்பட்டார்” என்றார். பீஷ்மரின் முகத்தில் உயிரசைவு தென்படாமையால் மீண்டும் சற்று வாயை அணுக்கமாக்கி “பிதாமகரே, அறிக! ஆசிரியர் துரோணர் களம் பட்டார்! ஆசிரியர் துரோணர் பாண்டவ இளையவன் அர்ஜுனனால் கொல்லப்பட்டார்!” என்றார். பீஷ்மரின் இமைகள் அசைந்தன. “ஆம்” என்று உதடுகளிலிருந்து ஓசை எழுந்தது. மேலும் ஒரு சொல்லுக்காக அவர்கள் காத்து நின்றிருந்தனர். பின்னர் கிருபர் எழுந்து சென்று சொல்லின்றி பீஷ்மரை கால் தொட்டு வணங்கி பின்னடைந்தார். சல்யரும் சகுனியும் பீஷ்மரின் கால்தொட்டு வணங்கி மீண்டனர்.

கர்ணன் முன்னால் சென்று பீஷ்மரின் காலில் தலைவைத்து “வாழ்த்துக, பிதாமகரே! நான் களத்தலைமை கொள்ள உங்கள் ஒப்புதலை அளியுங்கள்” என்றான். பீஷ்மரின் உதடுகள் அசைந்தன. இருபுறங்களிலும் அம்புக்கூர்கள் மேல் அமைந்த

கைகளில் விரல்கள் நடுக்குற்றன. உடலெங்கும் உயிர்ப்பின் மெல்லிய அசைவொன்று கடந்து சென்றது. கர்ணன் மீண்டும் இருமுறை அவர் கால்களில் தலைவத்து வணங்கினான். அவன் எழுந்த கணம் பீஷ்மரின் குரல் ஒலித்தது. “புகழ் சூடுக!” கர்ணன் முகம் மலர்ந்து மீண்டும் தலைவணங்கினான். அச்சொல் அவர் முகத்திலிருந்துதான் எழுந்ததா என்று திகைப்புடன் துரியோதனன் கூர்ந்து நோக்கினான். பின்னர் சகுனியை பார்த்தான். கர்ணன் “விழைந்த சொல்லை பெற்றுவிட்டேன். செல்வோம் ”என்றான். மீண்டும் அவர்கள் பீஷ்மரை வணங்கி படுகளத்திலிருந்து வெளியே நடந்தனர். அவர்களுக்குப் பின்னால் பீஷ்மர் “ஆம், துரோணரே” என்றார். துணுக்குற்றுத் திரும்பிய துரியோதனன் அதை எவர் சொன்னதென்று அறியாமல் மாறி மாறி நோக்கியபின் நடந்தான்.

அரவான் சொன்னான்: துரியோதனனிடமிருந்து விடைகொண்டு தன் பாடிவீட்டுக்கு கர்ணன் திரும்பும்போது தனக்குப்பின்னால் ஆயிரம் இருண்ட சுருள்களாக நாகமொன்று நெளிந்தெழுவதைக் கண்டான். விழிதிருப்பி நோக்கினால் அது மறைந்துவிடும் என்றறிந்தவனாக அவ்விருக்கும் உணர்வையே அதுவெனக் கொண்டு தளர்நடையில் பாடிவிட்டுக்குச் சென்று நின்றான் .அங்கிருந்த இரு காவலர்களும் எழுந்து தலைவணங்கினர். “மஞ்சம் ஒருக்குக!” என்று அவன் சொன்னான். “உணவு ஒருங்கியுள்ளது” என்று ஏவலன் கூற “இன்று எதுவும் தேவையில்லை” என்றான். “போருக்குப்பின் உணவொழிவது நன்றல்ல, வழக்கமுமல்ல” என்று இன்னொரு ஏவலன் சொன்னான். கைவீசி அவனை தவிர்த்துவிட்டு கர்ணன் பாடிவீட்டுக்குள் நுழைந்தான்.

நார் மரவுரியை தூண்களில் இறுக்கிக் கட்டிய மஞ்சம் அவனுக்காக ஒருக்கப்பட்டிருந்தது. அவன் சிறிய மரப்பெட்டியில் அமர்ந்ததும் இரு ஏவலர் வந்து கால்குறடுகளைக் கழற்றி கவசங்களையும் ஆடைகளையும் அகற்றினர். அவன் எழுந்து நின்றபோது மென்மரவுரிக் குச்சத்தால் அவனுடலை வீசித்துடைத்து புதிய மரவுரி அணிவித்தனர். அவன் கையுறைகள் குருதியுடன் சேர்ந்து தோல் பொருக்கென ஒட்டியிருந்தன. அவற்றை வாளால் கிழித்து அகற்ற வேண்டியிருந்தது. கையுறை படிந்திருந்த இடத்தை அவன் கை நிறம் மாறி பிறிதொரு உடல் அவ்வுடலுக்குள் ஒளிந்திருப்பது போல் தோன்றச்செய்தது. அவர்கள் அவன் கைகளை நீரால் கழுவினர். மணலால் கால்களை தூய்மை செய்தனர்.

கர்ணன் மஞ்சத்தில் படுத்துக்கொண்டு அவர்கள் வெளியேறும்படி கையசைத்தான். அவர்கள் ஓசையில்லாது வெளியே சென்று குடிலின் படலை மெல்ல மூடினர். வெளியே இருந்து வந்த பந்த ஒளி மறைந்ததும் உள்ளே இருள் செறிந்தது. பின்னர் இருள் வெளிறலாயிற்று. இருளலைகள் உடலெனத் திரள ஒரு நாகம் அவன் கால்மாட்டிலிருந்து எழுந்து ஏழு தலைவிரித்து நின்றது. கர்ணன் வெறுமனே அதை பார்த்துக்கொண்டிருந்தான். அதன் கண்கள் மின் கொண்டன. நாக்கு சீறலோசையுடன் பறந்தது. “என் வஞ்சம் இலக்கு தவறியது” என்று அது கூறியது. “அறிக, இலக்கு தவறும் வஞ்சங்கள் ஏழு மடங்காகும்! எண்ணி எண்ணிப் பெருகி ஏழாயிரம் மடங்காகும். என் நஞ்சு நுரைகொள்கிறது…”

கர்ணன் அதன் இமையா விழிகளை பார்த்துக்கொண்டிருந்தான் “உன்னுடன் இங்கிருப்பேன். உன் ஆவநாழியை ஒழியாது

நிறைப்பேன்” என்றது மணிகர்ணன். “உன்னை உணராத நாளில்லை” என்று கர்ணன் சொன்னான். “தட்சனது மைந்தனின் அவ்வஞ்சத்தை நான் விழுங்கினேன்” என்றபோது நாகத்தின் முகத்தில் ஒரு சிரிப்பை அவன் பார்த்தான். “தன் உற்றாரை தானே விழுங்கி செரித்து வளர்வது நாகங்களின் இயல்பென்று அறிந்திருப்பாய்.” அது சீறி நகைத்தது. “நான் பிற நாகங்களை மட்டுமே உணவாகக்கொள்ளும் அரசநாகம். நான் உண்டவர்கள் அனைவரும் என்னுள் விதையென்றாகி பெருகி நிறைந்துள்ளனர். என் தலையென நீ காண்பவை நான் உண்ட பெருநாகங்கள்.”

பின்னர் அது குனிந்து அவன் நெஞ்சின் மேல் தன் முழு எடையையும் வைத்து முகத்தருகே வந்தது. “துயில்க! இன்று இரவு உன் கலத்தில் என் நஞ்சு புளித்து நுரை கொண்டு நிறையும்.” பின்னர் பின்விலகி வளைந்து படம் சொடுக்கி அவன் உதடுகளில் ஓங்கி கொத்தியது. கர்ணனின் உடல் விதிர்ப்பு கொண்டது. நரம்புகள் உடைபட்டு புடைத்தெழ வலிப்பு எழுந்து வாயில் நுரை பெருகி ஒழுக அவன் துடித்துக்கொண்டிருந்தான். பின்னர் மெல்ல தசைகள் இளகி நரம்புகள் நெகிழ உடல் தளர்ந்து மஞ்சத்தில் படுத்தான். விழிகள் மூடி சீரான மூச்சு ஒலிக்கலாயிற்று. அவன் உடலிலிருந்து உள்ளம் மெல்ல நழுவி இருண்ட ஆழத்தில் கரிய துளியென சொட்டியது. அங்கே பல்லாயிரம் கோடி நாகங்கள் அலைகளென கொப்பளிப்பென கொந்தளிப்பென சுழிப்பென நிரம்பி பரந்திருந்தன.

**[கார்கடல் நிறைவு]**